ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# நாச்சியார் திருமொழி வ்யாக்யானம்

(ஆண்டாள் அருளிய திருமொழிக்குப் பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிய வ்யாக்யானத்துடன் அதற்கு ஸுதர்சனா இயற்றிய எளியநடை விவரணத்தோடும், பதவுரை, அரும்பதவுரை முதலானவற்றோடும் கூடியது)

மூன்றாம் பதிப்பு




கிடைக்குமிடம் & பதிப்பாசிரியர்

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், MA.,B.L.,

அட்வகேட்,

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம், ஆசிரியர்

3B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 17.

*Published by*

**SRI BHASHYAKARA PUBLICATION**

A Unit of Sri Bhashyakara Charitable Trust,

48, Bazullah Road, T.Nagar, Chennai - 600 017.

Tel : 28344493, 43502028, 9840520569

விலை ரூ.150 | 2006 | தபால் கூலி தனி

**Printed at :**

**RNR PRINTERS & PUBLISHERS**

No. 19, Thandavarayan Street,

Triplicane, Chennai - 600 005.

©: 2844 1856

## நாச்சியார் திருமொழி வ்யாக்யானம்.

## (ஸுதர்சனரின் எளிய நடை விவரணத்துடன்)

### அணிந்துரை.

ஸ்ரீ வைஷ்ணவ பூர்வாசார்ய க்ரந்தங்கள், அருளிச் செயல்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை மணிப்ரவாள நடையில் அருளிய வ்யாக்யானங்களின் எளிய தமிழ் நடை விளக்கங்கள் ஆகியவற்றைக் கடந்த ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக நாம் அச்சிட்டு ஸ்ரீ ஸூக்தி மாலா, ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுகளாக அளித்து வருவது ஸ்ரீ வைஷ்ணவவுலகம் நன்கு அறிந்ததே. அந்த வரிசையில் நமது வெளியீடுகளில் ஒன்றான 'வார்த்தாமாலை' (ஸுதர்சனரின் விவரணத்துடன் கூடியது) என்னும் நூலின் இரண்டாவது பதிப்பு 2001ம் ஆண்டு சென்னை ஸ்ரீ பாஷ்யகார சாரிடபுள் ட்ரஸ்டின் நிர்வாகியான ஸ்ரீ சதுர்வேதி ப்ரஸன்ன வேங்கடாசார்ய ஸ்வாமியால் அச்சிட்டுத் தரப்பெற்று நம்மால் வெளியிடப்பட்டது. ஸ்ரீ சதுர்வேதி ப்ரஸன்ன வேங்கடாசார்ய ஸ்வாமி ஸ்ரீ வைஷ்ணவ சமயப் பிரசாரங்களைச் செய்வதோடல்லாமல், வைணவத் தொலைக்காட்சி நிறுவ முயலுதல் முதலான பணிகளையும் செய்துவருகிறார். நம்மிடம் அளவுகடந்த பக்தியும் ஈடுபாடும் கொண்ட இவர் நமது சில வெளியீடுகளுக்குத் தேவைப்படும் காகிதத்தை அளித்து உதவியுள்ளார். தற்போது ஆண்டாள் அருளிய நாச்சியார் திருமொழிக்குப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானமும், அதற்கு ஸுதர்சனரின் எளிய தமிழ் நடை விவரணமும் அடங்கிய நூலின் மூன்றாவது பதிப்பு உயர்ந்த காகிதத்தில் போட்டோ ஆப்செட் முறையில் அச்சிடப்பட்டு 28-07-06 அன்று அவரால் வெளியிடப் பட்டுள்ளது. இதன் முதல் பதிப்பு ஜய வருடம் சித்திரை திருவாதிரையிலும், இரண்டாம் பதிப்பு ப்ரபவ ஐப்பசித் திருமூலம் 27-10-87 அன்றும் வெளியிடப்பட்டு அனைத்துப் பிரதிகளும் தீர்ந்துவிட்டன. இம் மூன்றாம் பதிப்பை வெளியிட உதவிய ஸ்ரீ சதுர்வேதி ப்ரஸன்ன வேங்கடாசார்ய ஸ்வாமிக்கு நமது மங்களாஶாஸனங்களையும், பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அவரது பணி மேலும் சிறப்புற நடைபெற, திருவரங்கம் திவ்ய தம்பதிகளைப் பிரார்த்திக்கின்றேன்.

வ்யய ஆடி 12.
28-7-2006.

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
ஸுதர்சனர்.

# இப்பதிப்பின் முன்னுரை.

(ஸு॰தர்சனர்)

---

ஸ்ரீஸூக்திமாலா 10-வது மலராக நாச்சியார்திருமொழி வ்யாக்,யானம், பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு முதலானவற்றோடு ஜயஹு சித்திரை திருவாதிரையில் முதல் பதிப்பாக வெளியிடப்பட்டது. அதன் முகவுரையும் அடுத்த படி கொடுக்கப்படுகிறது.

பெரியவாச்சான்பிள்ளை அருளிய நாச்சியார்திருமொழி வ்யாக்,யானம் மிகவும் ஆழ்ந்த பொருளுடையதாய், பல விடங்களில் பொருளுணர அரியதாயிருப்பதாகப் பல அன்பர்கள் தெரிவித்தமையால், எளிய நடையில் அமைந்த விவரணத்தோடு அதே வ்யாக்,யானம் இரண்டாவது பதிப்பாக, இன்று வெளியிடப்படுகிறது.

தி,வ்யப்ரப,ந்த, வ்யாக்,யானங்களைக் காலக்ஷேப முறையில் கேட்பது என்னும் வழக்கம் முற்காலத்தில் மிகுதியாக நடைபெற்று வந்தது. இக்காலத்தில் சென்னை போன்ற சில மஹாநகரங்களிலேயே சில விடங்களில் இத்தகைய காலக்ஷேபங்கள் நடைபெறுகின்றன, அங்கும் நாலாயிர திவ்யப்ரபந்தம் முழுவதையும கேட்பது அரிது. ஆசையுடையவர்களாக உலகெங்குமிருப்பவர்கள் அனை வரும் தி,வ்யப்ரப,ந்த, வ்யாக்,யானங்களின் அருமை பெருமைகள் அனைத்தையும் அறியலாம்படி அந்த வ்யாக், யானங்களின் ஒருபதத்தையும் விடாமல் விவரணம் எழுதி அச்சிட்டு வெளியிடுவது ஸு॰தர்சனத்தின் தொடக்கத்திலேயே எந்தையாரால் தொடங்கப்பெற்று, திருப்பல்லாண்டுக்கும். திருப்பாவைக்கும் எளிய நடையில் விவரணங்கள் வெளியிடப்பெற்றன.

இந்த விவரணங்களோடு மூலமான வ்யாக்,யானத்தையும் சேர்த்து வெளியிட்டால் லோகோபகாரமாகும் என்னும் கருத்தாலே, எந்தையார் காலத்திற்குப்பின் ஸு॰தர்

சனத்தில் விவரணத்தோடு கூடிய திவ்யப்ரபந்த வ்யாக்யானங்கள் நம்மால் தொடர்ந்து வெளியிடப்பெற்று நிறைவடைந்தபின் தனிப்புத்தகமாகவும் வெளியிடப்பெற்றன. இம்முறையில் இதுவரையில் முதல் 'நான்கு திருவந்தாதிகளுக்கு வ்யாக்யானங்களும், இருதிருமடல்களுக்கும், திருவெழுகூற்றிருக்கைக்கும், திருமாலைக்கும் வ்யாக்யானங்களும் வெளிவந்துள்ளன. அடுத்தபடி திருச்சந்தவிருத்த வ்யாக்யானம் இவ்வண்ணமே வெளியிடப்படவிருக்கிறது.

ஆண்டாளின் ப்ரதமப்ரபந்தமான திருப்பாவைக்கு எந்தையாரால் எளியநடை விவரணம் வெளியிடப்பெற்றது. இப்போது அடியேனால் பதிப்பிக்கப்பட்டுள்ள ஆண்டாளின் சரமப்ரபந்தமான நாச்சியார்திருமொழியின் இவ்விரண்டாவது பதிப்பில் எளியநடை விவரணத்தோடு கூடிய பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்துடன் அத்திருமொழி வெளியிடப்படுகிறது. மற்ற திவ்யப்ரபந்தங்களுக்கும் விவரணங்களோடு வ்யாக்யானங்கள் வெளிவரும்படி ஆண்டாளும், அரங்கனும் அருள்வாராக.

ப்ரபவ-௵
ஐப்பசியில் திருமூலம்
27-10-87

அடியார்க்கடியன்,
ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.

## மூன்றாம் பதிப்பின் முகவுரை

இந்த மூன்றாம் பதிப்பு ஆப்செட் முறையில்
அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளது.

வ்யய - வைகாசி
விசாகம் - 28.7.2006

ஸுதர்சனர் கிருஷ்ண
ஸ்வாமி அய்யங்கார்

## முதற்பதிப்பின் முகவுரை

❋

அஸ்மத்தாதபாதர்களான ஸ்ரீ உ. வே. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிகளால் ஆரம்பிக்கப்பட்ட ஸ்ரீஸூக்திமாலைத்தொடரில் இது பத்தாவது மலராக மலர்கின்றது. 1. பரந்தரஹஸ்யம் மாணிக்கமாலை முதலிய ரஹஸ்ய க்ரந்தங்கள், 2. ஸ்தோத்ர ரத்ன சது:ச்லோகி ஜிதந்தே வ்யாக்யானங்கள். 3. திருப்பல்லாண்டு வ்யாக்யானம். 4. முதல் திருவந்தாதி வ்யாக்யானம். 5. பெருமாள் திருமொழி வ்யாக்யானம். 6. திருமாலை வ்யாக்யானம், 7. திருவாசிரியம் பெரிய திருவந்தாதி வ்யாக்யானங்கள். 8 (நாயனாராச்சான்பிள்ளையருளிய) சது:ச்லோகீ வ்யாக்யானம். 9 கத்ய வ்யாக்யானங்கள் ஆகியவை முதல் ஒன்பது மலர்களாகும். மாலாகாரவம்ஶ்யரான தாமே தொடுத்த நவமான இம்மலர்களை நாராயணனுடைய திருவடிகளில் ஸமர்ப்பித்தபிறகு ஜ்ஞான பக்திவைராக்யாதி குணகணபூஷிதரான அஸ்மத்ஸ்வாமிகள் திருநாட்டுக்குச் சென்றவருஷம் எழுந்தருளினார்கள். தமக்குப் பின்னும் பகவத்பக்திமணம் கமழும் பற்பல வண்ணமலர்கள் மலர்ச்சிபெற்று வெளிவருவதற்கும் ஏற்பாடுகள் செய்துள்ளார்கள். அவ்விதமாக முதலில் வெளிவருவது நாச்சியார் திருமொழி என்னும் இப்பத்தாவது மலராகும். இந்நாச்சியார் திருமொழியை அருளிய ஆண்டாளுடையவும் அதற்கு வ்யாக்யானமருளிய பெரியவாச்சான்பிள்ளையுடையவும் பெருமைகளை வாய்படைத்த பலன் பெறுவதற்காகப் பேசுவோம் சிறிது.

தேஹத்தையே ஆத்மாவாக நினைத்திருப்பவர்களான ஸம்ஸாரிகளுக்கும், ஆத்மஸ்வரூபத்தை அறிந்தவர்களான ரிஷிகளுக்கும் மிகவும் வாசி (வித்தியாசம்) உண்டு. ஸ்வயத்னத்தால் புருஷார்த்தத்தைப் பெறவிருக்கும் ரிஷிகளுக்கும், பகவானாலே மயர்வறமதிநலமருளப் பெற்ற ஆழ்வார்களுக்கும் நெடுவாசியுண்டு. பகவதனுபவத்தை ஆசைப்பட்ட ஆழ்வார்களுக்கும், பகவத் ஸம்ருத்தியை ஆசைப்பட்ட பெரியாழ்வாருக்கும் நெடுவாசியுண்டு. பகவத்ஸம்ருத்தியை ஆசைப்பட்ட பெரியாழ்வாருக்கும் பாகவத ஸம்ருத்தியை ஆசைப்பட்ட

ஆண்டாளுக்கும் அம்மாதிரியே நெடுவாசியுண்டு ஆழ்வார்கள் எம்பெருமானாலே மயர்வற மதிநலமருளப் பெற்றார்கள். இவள் எம்பெருமானுக்கு மயர்வற மதிநலமருளினாள், ஸம்ஸாரத்தில் உறங்கிக்கிடந்தவர்களான ஆழ்வார்களை ஸர்வேஶ்வரன் எழுப்பினான். பள்ளியுணர்த்தும் பிரானாகிய தொண்டரடிப்பொடியாழ்வாரும், முதலில் நாராயணனாலே உணர்த்தப்பெற்று, பின்பு அவனை உணர்த்தினார்.

"அவரைப் பிராயம் தொடங்கி என்றும்
ஆதரித்தெழுந்த என் தடமுலைகள்
துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத்
தொழுதுவைத்தேன் ........"

என்கிறபடியே பிறந்ததிலிருந்தே கேசவனைக் காமுற்றவளாயிருந்து அவனை எழுப்பினாள் இவள், ஆழ்வார்கள் இளைய பெருமாளைப் போன்றவர்கள். பெரியாழ்வார் ஸ்ரீபரதாழ்வானுக்கு ஒப்பானவர், ஆண்டாளும் மதுரகவிகளும் ஸ்ரீ ஶத்ருக்னாழ்வானை ஒப்பர்கள். ஆழ்வார்களும், இளையபெருமாளும் பகவதனுபவத்தை ஆசைப்பட்டார்கள். ஸ்ரீபரதாழ்வானும், பெரியாழ்வாரும் பகவத்ஸம்ருத்தியை ஆசைப்பட்டார்கள். ஸ்ரீஶத்ருக்னாழ்வானும், ஆண்டாளும், ஸ்ரீமதுரகவிகளும் பாகவதஶேஷத்வத்திலே நிலைநின்றவர்கள். மேலும் புருஷன் புருஷனைக்கண்டு காமுறுவதிற்காட்டில், ஸ்த்ரீ புருஷனைக் கண்டு ஸ்நேஹிக்கை பள்ளமடையாகையாலே ஆழ்வார்களுடைய பக்தியைக் காட்டில் பதின்மடங்கு அதிகமாக அன்பை உடையவளாயிருப்பாளிவள். "பதின்மருடைய ஜ்ஞானமும் ஸ்த்ரீதனமாக இவள் பக்கலிலேயிறே குடிகொண்டது; பத்துப்பேர்க்கு ஒரு பெண்பிள்ளையிறே" என்று ஜநந்யாசார்யர் அருளிச்செய்தார்.

இப்படிப்பட்ட பெருமையையுடைய நாச்சியாரால் அருளிச்செய்யப்பட்ட இத்திருமொழிக்கு மற்ற திவ்யப்ரபந்தங்களுக்கு அருளியதைவிட அதிவிலக்ஷணமானதொரு வ்யாக்யா



னத்தை அருளியுள்ளார் பரமகாருணிகரான பெரியவாச்சான் பிள்ளை, இவ்வியாக்யானத்தை ஸேவித்த ரஸிகமஹான்கள்

"गोदागभीरवचसां परमार्थभावं जानाति कृष्णगुरुरेव किमत्र चित्रम् ।
यत्कृष्ण एव सुविचार्य निरूढभावां गोदां प्रियामभिमतामुररीचकार ॥"

[ஸ்ரீகோதாதேவியின் ஆழ்ந்த திருவாக்குகளின் உண்மைக் கருத்துக்களை க்ருஷ்ணஸூரியே அறிகிறார். இதில் என்ன ஆச்சர்யம்! ஏனெனில்: தன்னிடத்தில் ஈடுபட்டவளும், தனக்கு மிகவினியவளுமான கோதையை நன்கு சோதித்து, அக்கிருஷ்ணனேயன்றோ ஏற்றுக்கொண்டார்] என்று அருளிச்செய்துள்ளார்கள். "*கண்ண! நின் தனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே*" என்று கலிகன்றியாலே நியமிக்கப்பட்ட கண்ணன், ஸ்ரீஜயந்தியன்றே மறுபடியுமோர் கண்ணனாக அவதரித்து, கலிகன்றியின் அவதாரமாகக் கார்த்திகையில் கார்த்திகைநாளில் காசினியோர் தாம் வாழ அவதரித்தகலிகன்றிதாஸரிடம் கவிப்பொருள்களைக் கற்று உலகுய்ய வெளியிட்டருளினார் என்பதன்றோ மஹான்களின் முடிபு. ம்ருஷ்டாந்நத்துக்குக் கிருமிகேசங்கள் போலே லேககபரிசோதக ப்ரமாதத்தாலே இவ்வியாக்யானத்தில் பற்பல பாடப்பிறழ்வுகள் ஏற்பட்டுள்ளன. ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் ஜ்ஞானஶீலவயோவ்ருத்தரான ஸ்ரீ உ. வே. கோவிந்தாசார்யஸ்வாமிகள் அவற்றில் பலவற்றை ஓலைச்சுவடிகளைக் கொண்டு திருத்தியுள்ளார்கள். அத்திருத்தங்களும் மற்றும் சிலவும் இப்பதிப்பில் இடம் பெற்றுள்ளன. அவை பின் வருமாறு:—

"நீரிலே நின்றயர்க்கின்றோம்" [நாச்-திரு-3-7] என்னும் பாசுர வ்யாக்யான பங்க்திகள் பின்வருமாறுகாண்கின்றன:—

"'ஆர்வமுனக்கேயுடையோம்' என்கையாவதென்? ஒரு உக்தி அமையுமோ? அதின் கார்யமும் பலிக்கவேண்டாவோ?" என்றான். "அது நாங்கள் வேண்டோமோ? (அம்மனைமார்காணிலொட்டார்) பிறரைப் பரிஹரிக்கவேணுமென்றிருந்தோ

மித்தனைகாண்!" என்றார்கள். *"நானும் நீங்களும்* பட்டுக்களும் உடுத்து மாஃப்ரீதியோடேபோய் உங்களகங்களிலே புக்கிருந்து விளையாடவன்றோ வேண்டியிருப்பது, பட்டுத்தர நெஞ்சு இசைகிறதில்லை. அத்தை இசைவித்துத்தரவேணும்" என்றான். "நீ நெஞ்சொழியத் தந்தாலும் அமையும் எங்களுக்கு" என்றார்கள்.

ரஸகநமான இந்த ஸ்ரீஸூக்திகளில் மஹான்கள் காட்டும் ஒரு சிறு திருத்தமாவது:—"நானும், நீங்கள் பட்டுக்களும் உடுத்து......" என்பது. உள்ள பாடத்தை ஸேவித்தால் "நானும் நீங்களும் பட்டுக்களும் உடுத்து..." என்னும் வாக்கியத்தில் "நானும் நீங்களும்' என்னும் பதங்கள் 'உடுத்து' என்னும் பதத்துடன் அந்வயிப்பதாகவே தேறிநிற்கும். "நானும், நீங்கள் பட்டுக்களும் உடுத்து..." என்னும் பாடத்தில் 'நீங்கள்' என்னும் பதம் மட்டும் 'உடுத்து' என்பதுடனும் 'நானும்' என்னும் பதம் 'வேண்டியிருப்பது' என்பதுடனும் அந்வயிப்பதாகத் தேறும். கண்ணனுக்கும் ஆய்ச்சியருக்கும் கீழே நடந்திருக்கும் ஸம்வாதத்தைக் காணும்போது முந்திய பாடத்தில் ரஸமில்லையென்பதும், பிந்திய பாடத்திலேயே ரஸமுள்ளதென்றும் தெளிவாகும். 'ஆர்வமுனக்கே உடையோம்' என்னும் வெறும் வாய்வார்த்தையால் என்ன பயன்? அன்பினாலுண்டாகும் ஸம்ஶ்லேஷமும் நடக்கவேண்டாவோ?' என்று கேட்கிறான் கண்ணன். 'அதை நாங்களும் விரும்புகிறோம். ஆயினும் எங்கள் தாய்மார்கள் உன்னுடன் நாங்கள் ஸம்ஶ்லேஷிப்பதைக் கண்டால் பொறுக்கமாட்டார்கள். அதினாலேயே வாளாவிருக்கிறோம்' என்றார்கள் ஆய்ச்சிகள். அவர்களுடைய இவ்வுக்திசாதுர்யத்துக்குச் சளைத்துவிடுபவனன்றே கண்ணபிரான், அவன் சொல்லுகிறான்:—"நானும் 'நீங்கள் பட்டுடுத்து வீடுபோய் விளையாடவேண்டும்' என்றே விரும்புகிறேன். ஆனால் என் செய்வது? என் கல்நெஞ்சு அதற்கு ஒப்பமாட்டேனென்கிறதே" என்று. இவ்வுக்திப்ரத்யுக்திகளைக் காணும்போது, 'நானும் நீங்களும் பட்டுகளும் உடுத்து, என்னும் பாடம் சரியன்று என்பதும், 'நானும், நீங்கள் பட்டுக்



களும் உடுத்து' என்னும் பாடமே சரியானது என்பதும் ரஸிகர்களுக்குப் புலனாகும்.

*'சுவரில் புராண நின்'* [1-4] என்னும் பாட்டின் தமிழ் அச்சுப்பிரதி வியாக்கியானத்தில் '(புராணம்) பழையதாகப் பிரிந்தாரைச் சேர்த்துப் போருமவனன்றோ நீ' என்று காண்கிறது. '*புராணம்*-பழையதான, *சுவரில்*-சுவர்களில்' என்று பதவுரையும் எழுதியுள்ளனர். இங்கு (புராணம்) என்று பிரித்து ப்ரதீகமெடுத்திருப்பதும், அதைச் சுவருக்கு விசேஷணமாக்கிப் பொருளுரைத்திருப்பதும் வியாக்கியானத்திற்கும் ஒட்டாது. ரஸமுடையதுமன்று, (புராண!) என்று ஸம்போதனமாகவே (விளியாகவே) கொள்ளவேண்டும். 'புராண!—(பிரிந்தாரைச் சேர்ப்பதில்) பழையவனே!' என்று பதவுரை. 'சிவனும் பார்வதியும் போலே பிரிந்து வருந்துமவர்களைச் சேர்த்துவைக்கும் பழக்கம் உனக்கு நெடுங்காலமாக உண்டன்றோ' என்று பாவம்.

நாலாம் திருமொழியில் 'பழகுநான்மறை' [4-10] என்னும் பாட்டின் வ்யாக்யான பங்க்திகள் பின்வருமாறு காண்கின்றன:— "(பழகு நான்மறையின் பொருளாய்) அபௌருஷேயமான வேதங்களின் அர்த்தம் இவனேயிறே. அல்லாதவை ஏகவிஜ்ஞாந ந்யாய ஸித்தம். *ஶமதமாத்யுபேதமன்று.* (மதமொழுகு வாரணம்)..." என்று இதில் "பழகு நான்மறையின் பொருளாய்" என்றதுக்கு எல்லா வேதங்களிலும் வேத்யன் (அறியப்படுமவன்) — வாஸுதேவனே என்றும், அவனையொழிந்த சேதநாசேதநங்கள் "*ஏக விஜ்ஞாநேந ஸர்வவிஜ்ஞாநம்*" (ஒன்றையறிந்தால் எல்லாம் அறிந்ததாகும்) என்று ச்ருதி ப்ரஸித்தமான ந்யாயத்தாலே ஶரீரியாய், காரணனாய், விசேஷ்யனான அவன் ஸித்திக்கும்போதே ஸித்தித்து விடுகின்றன என்றும் பொருள்பட இரண்டு வாக்கியங்களை அருளியுள்ளார் ஆச்சான்பிள்ளை. அதற்குமேலேயுள்ள '*ஶமதமாத்யுபேதமன்று*' என்னும் வாக்யம் ப்ரதீகத்தக்கும் ப்ரகரணத்திற்கும் பொருந்தாமலும் பொருள்பட மாட்டாமலும் நிற்கிறது, இதை எப்படியாவது பொருந்தவிடவேணுமென்று பார்த்த அரும்பதவுரைகாரர் "ப்ரஹ்மஜ்ஞாநத்தாலே ஸகல ஜ்ஞாநமுமுண்டாகையாலே, *ஶமதமாத்யுபேதனாய்க்*

கொண்டு சேதநாசேதநங்களைத் தனித்தனியே அறியவேண்டுவதில்லை; ஆகையாலே சேதநாசேதநஜ்ஞாநம் *ஶமதமாத்யுபேதமன்று* என்கிறது" என்று எழுதிவைத்தார். இது ஸர்வாத்மநா அஸங்கதமாயுள்ளது. 'அல்லாதவை ஏகவிஜ்ஞாநந்யாயஸித்தம்' என்னும் முந்தியவாக்யத்தின் கர்த்ருபதமான 'அல்லாதவை' என்னும் பதத்தால் சொல்லப்படும் சேதநாசேதநங்களே '*ஶமதமாத்யுபேதமன்று*' என்னும் பின் வாக்யத்திலும் கர்த்ருபதமாயிருக்கலாமேயொழிய. சேதநாசேதந ஜ்ஞாநம் இங்கு கர்த்ருபதமாயிருக்கத் தகுதியில்லை. 'அல்லாதவை' என்னும் பதமே சேதநாசேதநஜ்ஞாநத்தைக் குறிக்கலாமேயென்னில்;—'அர்த்தம் *இவனேயிறே*. அல்லாதவை...' என்று 'இவன்' எனப்படும் ஈச்வரனுக்கு ப்ரதிகோடியாய் எடுக்கப்படும் 'அல்லாதவை' சேதநாசேதநங்களாகுமேயொழிய தத்விஷயஜ்ஞாநமாகமாட்டாது. ஆகையால், 'அல்லாதவையான சேதநாசேதநங்கள் *ஶமதமாத்யுபேதமன்று*' என்று சொல்லுவதாகவே தேறிநிற்கும். இது மூலத்திற்குச் சிறிதும் ஸம்பந்தமில்லாமலும் பொருந்தாமலுமுள்ளது. அரும்பதவுரைகாரர் விவரித்திருக்கிறபடியே பொருள்கொண்டாலும் இவ்வாக்யம் இவ்விடத்தில் அஸ்வரஸமாயுள்ளதென்பது ரஸிகர்களுக்கு விளங்கும்.

இங்கு உண்மைப்பாடம் யாதென்னில்; 'அல்லாதவை ஏகவிஜ்ஞாநந்யாயஸித்தம் (*மதமொழுகுவாரணம்*) *ஶமதமாத்யுபேதமன்று*...' என்பதே. (மதமொழுகு வாரணம்) என்பதற்குப் பின்னிருக்கவேண்டிய '*ஶமதமாத்யுபேதமன்று*' என்னும் வாக்யம் லேககப்ரமாதத்தால் அசற்கு முன்னால் எழுதப்பட்டுப் பல சுவடிகளிலும் நிலைத்துவிட்டது. திருந்தியபாடத்தில், '*ஶமதமாதி*குணங்கள் நிறைந்ததொரு வஸ்துவையோ எம்பெருமான் ரக்ஷித்தருளியது? *ஶமதமாதி*களற்றதான *மதமொழு*கும் யானையையன்றோ உஜ்ஜீவிக்கச்செய்தது. என்ன நீர்மை. என்ன நீர்மை.' என்னும் அழகான பாவம் கிடைக்கிறது! ஆகையால், இதுவே சுத்தபாடமாயிருக்கத்தகும். ஓலைச்சுவடிகளைப் பெரியோர்கள் ஆராய்ந்து பார்க்கவேண்டும்.



இங்கு ப்ராஸங்கிகமாக, ஒரு சுலோகத்தின்கீழ் (அல்லது பாசுரத்தின்கீழ்) இருக்கவேண்டிய வ்யாக்யானபங்க்திகள், தவறாக முன்பின் சுலோகத்தின்கீழ் (அல்லது பாசுரத்தின்கீழ்) கூட எழுதப்பட்டுவிடுகின்றன என்பதற்கு இரண்டு உதாஹரணங்கள் காட்டுவோம்.

ஜிதந்தே ஸ்தோத்ரம் நாலாவது சுலோகமான "*ஸம்ஸார ஸாகரம் கோரம் அநந்தக்லேஶபாஜநம்* I *த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:* II" [மஹான்கள் உன்னையே உபாயமாக அடைந்து. கணக்கற்ற துக்கங்களுக்குப் பிறப்பிடமாய், மிகக் கொடிதாயிருக்கும் ஸம்ஸாரக்கடலைத் தாண்டுகிறார்கள்] என்னும் ஶ்லோகவ்யாக்யானத் தொடக்கத்தில் "ஜநிஸ்திதிலயங்களுக்கு ஆச்ரயமாகையும், ஸஹகாரிநைரபேக்ஷ்யமுமிறே பகவல்லக்ஷணம். அது இச்லோகத்தில் சொல்லுகிறது" என்னும் வாக்கியங்கள் காணப்படுகின்றன, இவை "*ஏகஸ் த்வமஸி லோகஸ்ய ஸ்ரஷ்டா ஸம்ஹாரகஸ் ததா*" [உலகிற்கு ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்பவன் ஸஹாயாந்தரத்தை எதிர்பாராத நீயொருவனேயாவாய்] என்று தொடங்கும் முந்திய சுலோகத்தின் வ்யாக்யானக் கடைசியிலேயே இருக்கவேண்டுமென்பது தெளிவு ஸ்ரீஸூக்திமாலைப் பதிப்பில் சுத்தமாக அச்சிடப்பட்டது. பெருமாள் திருமொழி [1-11] அவதாரிகையில் காணப்படும் '*புவோ பூத்யை*' என்று தொடங்கும் ச்லோகம். இதற்கு மொழிபெயர்ப்புப்போலேயிருக்கும் 'வன்பெருவானகமுய்ய' என்னும் முந்தியபாட்டின் வ்யாக்யானக் கடைசியிலிருக்கவேண்டுமென்பது தெளிவு. அஸ்மத்தாதபாதர்கள் அந்யபரராயிருந்தமையாலும். அடியேன் சென்னையிலிருந்ததாலும் இது நம் பதிப்பிலும் தவறாக அச்சிடப்பட்டுவிட்டது. பிறகு திருத்தப்பட்டது- '*ஶமதமாத்யுபேதமன்று*' என்னும் வாக்யமும் இப்படித் தவறி முன்னால் எழுதப்பட்டதாகவே இருக்கத்தகும்.

'மன்னு பெரும் புகழ்' [நாச்-திரு 5-1] வியாக்கியானத்தில் பின்வரும் பங்க்தி உள்ளது;— '[பெரும்புகழ்] குணங்களுக்கு

அவதியுண்டென்னுமது என் பக்கல் ஏறிப்பாயாதென்னும் நானிழக்கிறேனோ.' இவ்வாக்கியம் பொருள்படாமலுள்ளது. இங்கு சரியான பாடம்,—"(பெரும்புகழ்) குணங்களுக்கு *அவதி*யுண்டென்றும் அது என்பக்கல் ஏறிப்பாயாதென்றும் நானிழக்கிறேனோ?' என்பதே. "ஏறிப்பாயாதென்றும்தான் இழக்கிறேனோ" என்று பாடாந்தரம். 'ன்று' என்னும் எழுத்துக்களை 'ன்னு' என்று உச்சரிக்கும் வழக்கினால் இங்கு பாடப் பிறழ்வு ஏற்பட்டுள்ளது.

"அன்றுலகம்" [நாச்-திரு 5-10] வியாக்யானத்தின் கடைசியில் பின்வரும் வாக்யங்கள் காணப்படுகின்றன:—" (இன்குற்று நின்றும் துரப்பன்) ஓட்டுவன், ஓட்டியிருத்துவன். இருத்திச்செய்கிறாளல்லவிறே இவள். ஆனால் என்சொல்லுகிறதென்னில்: நான் முடிவன்; பின்னை இங்கு நின்றும் புறப்பட்டுப்போமித்தனைகிடாய்; நானுளேனாய்ச் சோலை நோக்கித் தரவேணுமே; நான் முடிந்தால் பின்னை உனக்கிருப்பில்லை கிடாய் என்கிறாள்". இவற்றில் "ஓட்டுவன். ஓட்டியிருத்துவன். இருத்திச்செய்கிறாளல்லவிறே இவள்" என்னும் வாக்கியங்கள் பரஸ்பரவிருத்தமாய்ப் பொருள்படமாட்டாமல் நிற்கின்றன. ப்ரகரணத்திற்கும் பொருந்தவில்லை. பின்வரும் விவரணத்தோடும் ஒட்டவில்லை, *ஸ்ரீரங்கம் ஸ்ரீ உ. வே. கோவிந்தாசார்யஸ்வாமிகள்* ஓலைச்சுவடிகளை ஆராய்ந்து காட்டும் திருத்தம் பின்வருமாறு;— "(இங்குற்று நின்றும் துரப்பன்) ஓட்டுவன். ஓட்டுவன ஓட்டி இருத்துவன *இருத்திச்செய்கிறாளல்லவிறே* இவள் ஆனால்..." 'துரப்பன்' என்னும் பதத்திற்கு 'ஓட்டுவன்' என்று முதலில் ஶப்தார்த்தம் அருளிச்செய்தார். அதற்கு மேல் 'ஓட்டுவது எப்படி?' என்னும் கேள்வி எழ, 'ஒருதடியையெடுத்துக்கொண்டு அவற்றைத் துரத்துவேன்' என்று இங்கு பொருளன்று ஓட்டவேண்டியவைகளை ஓட்டி, இருத்தவேண்டியவைகளை இருத்திச்செய்யக்கூடிய வலிமையுடையவளல்லள் இவள். அப்படியானால் 'ஓட்டுவன்' என்றதுக்கு என்ன பொருளெனில்; 'நான் என்னையே முடித்துக்



கொள்வதன் மூலம் உன்னை இங்கிருந்து துரத்திவிடுவேன்' என்பது இவள் நிலைக்குத் தகுந்த பொருள்" என்று அருளிச்செய்கிறார் பரமரஸிகரான பெரியவாச்சான்பிள்ளை. பல நூறு வருஷங்களுக்கு முன்னாலிருந்த அரும்பதவுரைகாரருக்கும் இங்கு தவறான பாடமே கிடைத்திருக்கிறது. "*ஓட்டியிருத்துவன்*—ஓட்டிவிடுவன் என்றபடி. *இருத்திச்செய்கிறாளல்ல*—இருந்து செய்கிறாளல்லவென்றபடி" என்று ஏதோ ஒருவிதமாகப் பொருளெழுதி வைத்திருக்கிறார்.

இங்கு உண்மைப் பாடம் பிறழ்ந்த வழியையும் விளக்குவோம். ஓலைச்சுவடிகளில் 'ன்' போன்ற மெய்யொற்றுக்களை, 'ன' என்றே எழுதுவார்கள், மேலே புள்ளி வைப்பதில் உள்ள சிரமத்தாலே; காற்புள்ளி (,) அரைப்புள்ளி (;) முழுப்புள்ளி (.) முதலான குறிகளும் இடுவதில்லை. ஆகையால் மேலேகண்ட வாக்யம் "ஒடடுவன ஒடடுவன ஒடடி இருததுவன இருததிசசெய்கிறாளலலவிறே இவள' என்று எழுதப்பட்டிருக்கும், இங்கு 'ஓட்டுவன்' என்பது இரண்டு தடவை எழுதியிருப்பது தவறென்று நினைத்துச் சுவடியெழுதுபவர்கள் சிலர் ஒன்றை எடுத்துவிட்டு "ஓட்டுவன், ஓட்டி இருத்துவன், இருத்திச் செய்கிறாளல்லவிறே இவள்" என்று திருத்தித் தவறாக அன்வயித்ததால் ஏற்பட்டதே இப்பிறழ்ந்த பாடம் என்பது தெளிவு.

'வாரணமாயிரம்' [நாச் திரு 6] ப்ரவேசத்தில், '*ஸ்வப்நேऽபி யத்$_3$யஹம் வீரம்*' [ரா-ஸு 84-21] என்னும் சுலோகத்தை வியாக்கியானம் செய்யுமிடத்தில் '(*ஸ்வப்நேऽபி யத்$_3$யஹம் வீரம்*) ஸ்வப்நத்திலே கண்டாலும் து:க்கநிவர்த்*தராக்க* வல்லராய்த்து' என்று பாடம் காண்கிறது. 'து:க்கநிவர்த்தகராக வல்லராய்த்து' என்பதே சரியான பாடம்.

அப்பிரவேசத்திலேயே கடைசியில் 'இஜ்ஜந்துக்கள் கிடந்து உறங்காநிற்கச்செய்தே, ஸர்வேச்வரன் தான் உணர்ந்திருந்து, கர்மாநுகுணமாகச் சில பதார்த்தங்களை ஸ்ருஷ்டித்து, ஸ்வப்நத்திலே அநுபவிப்பிக்கும் என்று சொல்லாநின்றதிறே.

அப்பொதுவான நிலையன்றிக்கே, தன்னை அனுபவிக்க வேணுமென்று இருக்கிருளாகையாலே, இவள் அநுபவிக்கவேணுமென்று பார்த்து, *இருந்தபடிகளில்* ஒன்றும் குறையாதபடி பாணிக்ரஹண பர்யந்தமாக ஸ்வப்நத்தில் அனுபவிப்பிக்க அநுபவித்துத் தான் அனுபவித்தபடியைத் தோழிக்குச் சொல்லி தரிக்கிருளாயிருக்கிறது' என்னும் வாக்கியங்களுள்ளன. இதில், 'இருந்தபடிகளில்' என்னும் பதம் அஸ்பஷ்டமாகவேயுள்ளது. ஓலைச்சுவடிகளில் உள்ள உண்மைப்பாடம் 'இவள் அனுபவிக்கவேணுமென்று *பாரித்திருந்தபடிகளில்* ஒன்றும் குறையாதபடி பாணிக்ரஹண பர்யந்தமாக......" என்பதே, 'பாரித்திருந்த' என்னும் வார்த்தையில் 'ரி' என்னும் எழுத்து 'ர்' ஆக மாறியதால் ஏற்பட்ட பாடப்பிறழ்வு இது. பாரித்திருந்தபடிகளாவன:—தோரணம் நாட்டுவது, மந்திரக் கோடியுடுத்துவது, மணமாலை சூட்டுவது, காப்பு நாண் கட்டுவது, கைத்தலம் பற்றுவது, தீவலஞ்செய்வது, அம்மி மிதிப்பது, பொரிமுகந்தட்டுவது, மஞ்சனமாட்டுவது முதலான இவளுடைய மனோரத ப்ரகாரங்கள், இவைகளில் ஒன்றும் குறைவில்லாதபடி பகவான் அநுபவிப்பித்தான் என்றபடி. "பார்த்து இருந்தபடிகளில்" என்னும் பாடத்தில் இப்பொருள் தெளிவாகத் தோற்றுது. ஆகையால், "*பாரித்திருந்தபடிகளில்*" என்பதே சரியான பாடமாயிருக்கத்தகும்.

'நாளை வதுவை' [6-2] வியாக்கியானத்தில் "திருவடி ராம விஜயத்தை விண்ணப்டஞ்செய்யக் கேட்டபோது, பிராட்டி ஹர்ஷத்தாலே விக்கி வார்த்தை சொல்லமாட்டாதே இருந்தாள்; அவளுக்கு ஓடுகிற *ப்ரீதியாலே* சிறிது அகஞ்சுரிப்படுத்த வேணுமென்று '*கிம் த்வம் சிந்தயஸே தேவி*' என்றான்" என்று பாடம் காண்கிறது, '*ப்ரீதியாலே*' என்பதற்கு பதிலாக '*ப்ரீதியிலே*' என்றிருக்க வேண்டுமென்பது தெளிவு.

'கடலில் பிறந்து' [7-2] வியாக்கியானத்தில் '(நற்சங்கே) இருகரையராயிருப்பார்கள் *உனக்கு ஒப்போ?* அவர்கள் குற்றத்தையும் குணத்தையும் கணக்கிட்டுச் செய்யுமவர்கள்



உனக்கொப்பாகமாட்டார்களிறே' என்று மூன்று வாக்கியங்கள் காண்கின்றன, ஓலைச்சுவடிகளில் '(நற்சங்கே) இருகரையராயிருப்பார்கள் *உனக்கொப்பாவார்களோ?* குற்றத்தையும் குணத்தையும் கணக்கிட்டுச் செய்யுமவர்கள் உனக்கொப்பாகமாட்டார்களிறே' என்று இரண்டு வாக்கியங்களாக உள்ளன. திருந்திய பாடத்தின் வாக்யஜைசவி, உள்ள பாடத்தினுடையதைவிட சுவையுடைத்தாயுள்ளதென்பது ரஸஜ்ஞர்களுக்கு விளங்கும்.

'விண்ணீலமேலாப்பு' [8-1] வியாக்கியானத்தில் 'கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோரச்சோர்வேனை' என்னுமிடத்தில் '*கிமர்த்தம் தவ நேத்ராப்யாம்*' என்று வேறு சிலர் சொல்லவொண்ணுதே தானே சொல்லுகிருள்' என்று பாடம் காண்கிறது, '*சொல்லவேண்டாதே*' என்பது சரியான பாடம்.

'நாறு நறும்பொழில்' [9-6] வியாக்கியானத்தில் '*நூறுதடா நிறைந்த வெண்ணெய்* என்று பெண்பிள்ளை ப்ரார்த்தித்துவைத்தாள்; கொடுத்தாளாகச் சொல்லக்கேட்டிலோம்; ப்ரார்த்தித்தவற்றை இறுக்கை அஸ்ஸந்தானஜாதர்க்கு பரமிறே என்று தாம் அமுது செய்வித்தருளினாராம்' என்று உள்ளது. பாசுரத்தில் 'நூறுதடாவில் வெண்ணெய்' என்றும் 'நூறுதடா நிறைந்த அக்காரவடிசில்' என்றுமுள்ளதேயொழிய, 'நூறு தடா நிறைந்த வெண்ணெய்' என்றில்லை. ஓலைச்சுவடிகளில் '*(நூறுதடாநிறைந்த)* பெண்பிள்ளை ப்ரார்த்தித்து வைத்தாள்...' என்றிருக்கிறது. 'வெண்ணெய் *என்று*' என்பது அதிகம். (நூறு தடா நிறைந்த) என்பது ப்ரதீகம். இப்பாடம் பாசுரத்திற்குப் பொருந்தியுள்ளது.

இப்பாசுரத்திலேயே, 'நிரபேக்ஷனுகையாலே *இவளிடுகிற* த்ரவ்யத்தில் தாரதம்யம் பாராநுய்த்து' என்றொரு வாக்யம் காண்கிறது. ஓலைச்சுவடிகளில் காணும் 'நிரபேக்ஷனுகையாலே, இவன்—இடுகிற த்ரவ்யத்தில் தாரதம்யம் பாராநுய்த்து' என்னும் பாடம் ரஸவத்தரமானது. இவளிடுகிற த்ரவ்யத்

தில் மட்டுமன்றிக்கே, நிரபேக்ஷனை இவன் எவர் இடுகிற த்ரவ்யத்திலும் தாரதம்யம் பாராதவனன்றோ.

'இன்று வந்து' [9-7] வியாக்கியானத்தில் '(இன்றித்யாதி) நான் ப்ரார்த்தித்திருக்கிற இன்று வந்து என் இரப்பு *மாருமைக்கு* ஒன்று செய்தானாய் விடுகையன்றிக்கே. தனக்கு இதொழியச் செல்லாமையுடையவனைக் கொண்டுவந்து' என்று பாடமுள்ளது. ஓலைச்சுவடிகளில் 'மாருமைக்கு' என்றவிடத்தில் '*மருமைக்கு*' என்றுள்ள பாடம் சிறக்கும். மருமைக்கு—மறக்காமைக்கு. இப்பாட்டிலேயே அடுத்தபடியாக '(அமுதுசெய்திடப்பெறில்) இத்தனை நூறுதடாவில் வெண்ணெயும் நூறு தடாநிறைந்த அக்காரவடிசிலும் அமுதுசெய்திடப்பெறில்; இவளுக்குப் பேறிதுவே; பின்னையும் அவனுக்குக் கொடுக்குமித்தனை' என்னும் பங்க்திகள் உள்ளன. இங்கு உண்மைப் பாடம் '(இத்தனையும்) நூறு தடாவில் வெண்ணெயும் நூறு தடா நிறைந்த அக்காரவடிசிலும். (அமுதுசெய்திடப்பெறில்) இவளுக்குப் பேறிதுவே; பின்னையும் அவனுக்குக் கொடுக்குமித்தனை' என்பதாகும். முதலிலுள்ள (அமுதுசெய்திடப்பெறில்) என்பது ப்ரக்ஷிப்தமாகவோ. அல்லது முந்திய வ்யாக்யான வாக்யத்துடன் சேர்ந்ததாகவோ இருக்கவேண்டும். ப்ரதீகமாயிருப்பது தவறு.

'*கோவைமணாட்டி*' [10.3] என்னும் பாட்டின்கீழ் "(பாவியேன்தோன்றி) இத்தைக் காற்கட்டும்படி அவன் ஸ்வபாவம் அந்யதாகரித்தது என்னைத் தோற்றிக்கிடீர்; பெரியாழ்வாரும் ஸர்வேச்வரனுமாய் *ரஹஸ்யங்களுண்டாய்ப்* போருகிற காலங்களில் இவையெல்லாமில்லைகிடீர்" என்று உள்ளது. "ரஹஸ்யங்களுண்டாய்" என்றவிடத்தில் "*ரஸங்களுண்டாய்*" என்பது சிறந்தபாடம்.

"பொல்லாக்குறளுருவாய்" (11-5) வியாக்கியானத்தில் "(குறளுருவாய்) கோடியைக் காணியாக்கினாற்போலே பெரிய வடிவழகையெல்லாம் *இவ்வடிவழகிலே* அமைத்து அனுபவிக்கலாம்படி அடக்கினபடி" என்றவிடத்தில் "...*இவ்வடிவிலே* அமைத்து..." என்பது சரியானபாடம்.



"*கைப்பொருள்கள்*" [11-6] என்னும் பாட்டில் "அந்வயத்தில் தரித்தும் வ்யதிரேகத்தில் *தரியாமையும்* இவளுக்கு ஸத்தாப்ரயுக்தமாய்த்து" என்ற பாடம் தவறு. "அந்வயத்தில் தரித்து வ்யதிரேகத்தில் *தரியாமை* இவளுக்கு ஸத்தாப்ரயுக்தமாய்த்து" என்பது சுத்தபாடம். "அந்வயத்தில் *தரிப்பும்* வ்யதிரேகத்தில் *தரியாமையும்*" என்றுமிருக்கலாம். அங்கேயே 'ஸாதநாநுஷ்டாநம்பண்ணிப்பலம் விளைத்தல், ப்ரபலகர்மப்ரதிருத்தமாய் நிற்கச் செய்கையன்றிக்கே கைபுகுந்து வர்த்திக்கிற தேசம்" என்ற ஸூக்தியில் "...*நிற்றல்* செய்கையன்றிக்கே..." என்பது சுத்தபாடம்.

"மற்றிருந்தீர்கட்கு" [12-1] அவதாரிகையில் "'என் தசையை அறியாதே சில சொல்லுகிற உங்களுக்கும் *எனக்கும்* வார்த்தை சொல்ல ப்ராப்தியில்லை; உங்கள் வார்த்தையைச் செவிசாய்த்துக் கேட்கைக்கும் எனக்கு ப்ராப்தியில்லை' என்கிறாள்" என்று பாடமுள்ளது. "ஊமையரோடு செவிடர் வார்த்தை" என்ற பாசுர ஸ்ரீஸூக்தியைத் திருவுள்ளத்திற் கொண்டு அவதரித்தது இந்த அவதாரிகை. 'எனக்கும்' என்பது அபபாடம். '*எனக்கு*' என்பது சுத்தபாடம். 'உங்களுக்கும்' என்றவிடத்திலுள்ள 'உம்மை' (சகாரம்) அந்வயமில்லாமல் தனியே நிற்கிறது என்று கருதிய சிலர் அருகிலுள்ள 'எனக்கு' என்னும் பதத்தில் ஓர் உம்மையைச் சேர்த்திருக்கிறார்கள். உண்மையில் அவ்வும்மை அடுத்த வாக்யத்திலுள்ள கேட்கைக்கும் என்னும் பதத்தோடு அந்வயிக்கிறது.

"*தந்தையும் தாயும்*" [12-3] பாசுர வ்யாக்யானத் தொடக்கத்தில் "பழிவிளைந்தால் பழிபரிஹரிக்கை பணியுடைத்து. நீங்கள்தான் பழி பரிஹரியாமலிருக்க வல்லவர்களல்லிகோள். இனி அதுவும் பிறக்கக்கொள்ளப்பின்னை நின்றும் இருக்குப்படாதே ஏற்கவே பரிஹரிக்கப் பாருங்கோள்" என்று உள்ளது. '*நின்று மிறுக்குப்படாதே*' என்பது சுத்தபாடம். அப்பாசுரத்திலேயே "[காவலும் கடந்து] க்ஷுத்ரபாஷாணங்கள் கிடக்கமேலே நீர்போமாப்போலே, நீர் வெள்ளமானால் மலைமேலே ஓடும். அப்படியே இட்ட ஆணையை ஒன்றாக

நினையாமைக்கு ஹேது கௌதூஹலத்தின் மிகுதியிறே' என்று பாடமுள்ளது. முன் வாக்யத்திற்குச் சேர்ந்திருக்கும் "அணையை" என்பது சிறந்தபாடமாகும்.

"ஆர்க்கும் என் நோய்" [12-6] என்னும் பாசுரத்தின் வ்யாக்யானத்தில் "[கௌந்தேய ப்ரதிஜாநீஹி] இவ்வர்த்தத்தில் நம்மைப் பார்த்திருக்க வேண்டுவதில்லைகாண்; நீ ப்ரதிஜ்ஞை பண்ணு. *'ப்ரதிஜ்ஞாம் குரு' என்கிறபடியே நம்மை அறியாயோ நீ*" என்று பாடமுள்ளது. இங்கு "*'ப்ரதிஜ்ஞாம் குரு' என்கிறபடியே. [மே] நம்மை அறியாயோ நீ*" என்பது சுத்தபாடம். [ப்ரதிஜா நீஹி] என்னும் பதத்துக்கு 'ப்ரதிஜ்ஞை பண்ணு' என்று பொருள்கொள்ளலாமோ என்னும் கேள்வியெழ '*ப்ரதிஜ்ஞாம் குரு* என்னும் எம்பெருமானுடைய கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை அப்பொருளுக்கு ப்ரமாணமாகக் காட்டுகிறார்— "'*ப்ரதிஜ்ஞாம் குரு*' என்கிறபடியே" என்னும் வாக்யத்தாலே. அடுத்த வாக்கியம் [மே] என்னும் பதத்தை விவரிப்பது. அச்சுப் பிரதியில் ஒரு முற்றுப்புள்ளியும் ப்ரதீகமும் விடப்பட்டுள்ளது தவறு. அப்பாசுரத்திலேயே மேலே, "பகவத்ஸமாச்ரயணம் பண்ணினாரில் முன்பு கைவந்தபடி திரிந்தார்களேயாகிலும், அவன் திருவடிகளிலே தலைசாய்த்தவாறே இவைதானே *ஸவாஸநமாகக் கழிந்து நிற்றலன்றிக்கே. உகவாதார்மேலே ஏறிடுதலன்றியே தன்மேலே ஏறிட்டுக்கொள்ளுதல் செய்யுமித்தனை.* 'உரஸா ப்ரதிஜக்$_{3}$ராஹ' போலே" என்று பாடமுள்ளது. "...*இவைதானே ஸவாஸநமாகக் கழிந்து நிற்றல், அன்றிக்கே உகவாதார் மேலே ஏறிடுதல், அன்றியே தன்மேலே ஏறிட்டுக் கொள்ளுதல் செய்யுமித்தனை*" என்பது சுத்தபாடம்.

"சஞ்சைக்காய்ந்த கருவில்லி" [13-3] வியாக்கியானத்தில் "(கருவில்லி) *ஆண்பிள்ளையன்றியே* பெண்பிறந்தாரை நலிகைக்கு வில்போலேயிருக்கிற புருவத்தையுடையவன்" என்று பாடமுள்ளது. "(கருவில்லி) *ஆண்பிள்ளை*. அன்றியே, பெண்பிறந்தாரை நலிகைக்கு வில்போலேயிருக்கிற புருவத்தையுடையவன்" என்பது சுத்தபாடம். '*கரு*—பெரிய, *வில்லி*—வில்லை அடக்கியாள்பவன்' என்று பொருள்கொண்டு, அதன் தாத்பர்யார்த்த$_{2}$மாக 'ஆண்பிள்ளை' என்று முதற்பொருள் அருளிச்செய்



தார். 'கருமையுடைய புருவமாகிற வில்லை உடையவன்' என்னும் பொருள்கொண்டு 'அன்றியே' என்று தொடங்கி இரண்டாவது பொருளை அருளிச்செய்கிறார், "கருமை பெருமையாய், பெரிய வில்லி என்று முந்தினது" என்ற அரும்பதவுரைக்கும் இப்பாடமே பொருந்தும்.

"நடையொன்றில்லா" [13-6] வியாக்கியானத்தில் "'எம்பெருமான் நந்தகோபாலா எழுந்திராய்' என்று அவர்கள் பேற்றுக்குப் பரிகரமாக நினைத்திருப்பதும் இவரை, [நந்தகோபாலன் கடைத்தலைக்கே நள்ளிருட்கண் என்னை உய்த்திடுமின்] என்றாற்றாமை கரைபுரண்டால் பொகடச்சொல்லுவதும் அவர் வாசலிலே" என்று பாடமுள்ளது. "*...என்று ஆற்றாமை கரைபுரண்டால்*" என்பது சுத்தபாடம்.

"வெற்றிக் கருள" [13-7] பாசுர வியாக்கியானத்தில் தமிழ்ப் பிரதியில்

"(வேம்பேயாக) வேப்பும் கருப்புமாக வளர்க்கையன்றிக்கே, வெறும் வேப்பேயாக வளர்த்தாள், அவன் வேம்பானது வளர்த்த பொல்லாங்கு என்றிருக்கிறாள்.

"*அவனை இன்னாதாகிறதென்னென்னில்; இவளன்றோ இப்படி வளர்த்தாள்.* 'அவன் வாராதொழிகிறான்; இழவு உன்னது; நடுவே பெற்றதாயை இன்னாதாகிறதென்?' என்ன (சூற்றமித்யாதி..." என்று வியாக்கியானபாடம் காண்கிறது. இந்த 'என்றிருக்கிறாள்' என்றதற்குப்பிறகு புது பாராவாக ஆரம்பித்திருப்பது தவறு; அப்பாராவின் முதல் வாக்யத்திலுள்ள 'என்னில்' என்னும பதமும் அதிகம். "(வேம்பேயாக) வேம்பும் கருப்புமாக...என்றிருக்கிறாள்; *அவனை இன்னாதாகிறதென்? இவளன்றோ இப்படி வளர்த்தாள்.*" என்பது சுத்தபாடம்.

"வெளிய சங்கு" [14-9] வியாக்கியானத்தில் "(வெளிய சங்கித்யாதி) ச்யாமமான திருமேனிக்குப் பரபாகமான வெண்மையை உடைத்தாய், கடல்போலே ஒப்பின்றிக்கேயிருக்கிற ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை உடையனாயிருக்கிறவன். 'கையிலோர்

சங்குடை மைந்நிறக்கடல்' என்னக்கடவதிறே'' என்று பாடம் காண்கிறது. இங்கு ''(வெளிய சங்கித்யாதி) கடல் போலே ச்யாமமான திருமேனிக்குப் பரபாகமான வெண்மையை உடைத்தாய், ஒப்பின்றிக்கேயிருக்கிற...'' என்பதே சுத்தபாடம். 'கடல்போலே ஒப்பின்றிக்கே இருக்கிற' என்று சங்குக்கு விசேஷணமாயிருப்பது சுவையுடையதன்று, ''மைந்நிறக்கடல்'' என்று மேலே எடுத்திருக்கும் ப்ரமாணத்திற்குச் சேர ''கடல் போலே ச்யாமமான திருமேனி'' என்றே அருளியிருப்பர்.

''பருந்தாள்'' [14-10] என்னும் கடைசிப் பாசுர வியாக்கியானத்தில் ''பருத்துப் பெரிய காலையுடைத்தாய்; சரீரம் பெருத்ததனையும் பாடாற்ற அரிதாயிருக்குமிறே; அப்படிப்பட்ட ஆனையானது தன் நிலமல்லாத வேற்று நிலத்திலே புக்கு முதலையின் வாயிலே அகப்பட்டு இடர்ப்பட்ட அதினுடைய ஆர்த்தத்வநி செவிப்பட்ட அநந்தரம்...' என்று பாடம் காண்கிறது. இங்கு ''...வாயிலே அகப்பட்டு இடர்பட, அதினுடைய ஆர்த்தத்வநி...'' என்று சுத்த பாடமாகும். உள்ள பாடத்தில் ''அப்படிப்பட்ட ஆனையானது'' என்றது அந்வயிக்காது.

நிற்க; இப்பாடசோதனங்களில் பெரும்பான்மையானவை ரஸிகமஹாசயர்களால் ஆதரிக்கப்பெறுமென்று நம்புகிறோம். இரண்டோரிடங்களில் அபிப்ராயபேதமிருந்தால், உள்ள பாடத்தையே ஆதரித்துக்கொள்வது. ஸ்ரீஸூக்திமாலா மற்ற மலர்களைப்போலவே இம்மலரும் ப்ரமாணத்திரட்டு, பதவுரை, அரும்பதவுரை முதலான நறுமணங்களுடன் மலர்ந்துள்ளது. அத்துடன் (கலிகோ பைண்ட் செய்யப்பட்டு) நல்ல நிறமும் பெற்று மிளிர்கின்றது. சென்ற மலரைப்போலவே இம்மலரும் எம்பெருமானார் திருவவதரித்த சித்திரையில் செய்யதிருவாதிரை நாளிலே வெளியிடப்பெற்றது. இப்படியே நன்னிறமும் நறுமணமும் பெற்ற மலர்கள் பலபலவும் மலரும்படி பகவானும் பாகவதோத்தமர்களும் அருள்புரிவார்களாக.

இங்ஙனம்,

ஜய—ஸ்ரீ தொண்டரடிப்பொடி

சித்திரையில் திருவாதிரை ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பிள்ளைலோகம் ஜீயர் அருளிச்செய்த

# நாய்ச்சியார் திருமொழித் தனியன் வ்யாக்யானம்

திருக்கண்ணமங்கையாண்டான் அருளிச்செய்த தனியன்

அல்லிநாட் டாமரைமே லாரணங்கி னின்றுணைவி
மல்லிநா டாண்ட மடமயில்—மெல்லியலாள்
ஆயர் குலவேந்த னாகத்தாள் தென்புதுவை
வேயர் பயந்த விளக்கு

பதவுரை:— அல்லி — இதழ்களுடைய, நாள் தாமரை மேல்—அப்போதலர்ந்த தாமரைப்பூவில், ஆர்—பொருந்தியிராநின்ற, அணங்கின் — தெய்வப் பெண்ணான பெரிய பிராட்டியார்க்கு, இன் துணைவி—இஷ்டஸகியாயும், மல்லி நாடு—மல்லிநாட்டை, ஆண்ட—(குணத்தாலே ஈடுபடுத்தி) ஆளாநின்ற, மடம் மயில்—அழகிய மயில்போன்றவளாயும், மெல் இயலாள் — மென்மைத்தன்மையுடையவளுமான ஆண்டாள், ஆயர் குலம் வேந்தன்—இடைக் குலத்திற்குத் தலைவனான கண்ணபிரானுடைய, ஆகத்தாள்—திருமேனியிற் பொருத்தமுடையவளாயும், தென் புதுவை வேயர்—அழகிய ஸ்ரீவில்லிபுத்தூரிலே வேயர்குலத்துதித்தவரான பெரியாழ்வாராலே, பயந்த—பெறப்பட்ட, விளக்கு—விளக்காயும் இராநின்றாள்.

**அவ:—** (அல்லிநாட்டாமரை) இதுதான் நாய்ச்சியார் திருமொழித் தனியனாக அநுஸந்தி4க்கப்படுமதாயிருக்கும்; இதில்—ஆண்டாளுடைய ஐஶ்வர்யம் தொடக்கமாக ஆபி4ஜாத்ய பர்யந்தமான வைப4வம் சொல்லுகிறது.

**வ்யா:— (அல்லிநாட்டாமரைமேல் ஆரணங்கின் இன்றுணைவி)** தாதும் வண்டுமுடைய தாமரைநாட்பூவை வாஸஸ்த2ானமாகவுடையவளாய், அப்ராக்ருத ஸ்வப4ாவையான பெரியபிராட்டியார்க்கு இஷ்டமான ஸகி2யாய். "மண் மகளும் திருவும் நிழற்போல்வனர்" 1 "**छायामिवाभ्युदयिनी-**

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத்க்ருஷ்ணஸூரயே நம:

ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி தா3ஸன் இயற்றிய

# நாய்ச்சியார் திருமொழித் தனியன் வ்யாக்2யான விவரணம்

*அவதாரிகை:—* நாய்ச்சியார் திருமொழித் தனியனை இது—நாத2முனிகளுடைய சிஷ்யரான திருக்கண்ணமங்கையாண்டானால் அருளிச்செய்யப்பெற்றது. இத்தனியனில் ஆண்டாளுடைய புருஷகாரத்தன்மையையும், ஐஶ்வர்யத்தையும், ஸௌந்த3ர்யத்தையும், எம்பெருமானோடுள்ள ஆநுரூப்யத்தையும், நற்குடிப் பிறப்பையும் அருளிச்செய்கிறார்.

*வ்யா:— (அல்லி நாள் தாமரைமேல் ஆரணங்கின் இன் துணைவி)* தா4துக்களும் வண்டுகளுமுடைய அன்றலர்ந்த தாமரைப்பூவை இருப்பிடமாக உடையவளாய், ப்ரக்ருதி ஸம்ப3ந்த4த்திற்கு எதிர்த்தட்டான தன்மைகளை உடையவளான பெரியபிராட்டியாருக்கு இனிய தோழியாய். "மண் மகளும் திருவும் நிழல் போல்வனர்" [திருவிருத்தம் 3] என்றும்,

1. "உத்பு2ல்ல பங்கஜதடாகமிவோபயாதி
ஸ்ரீரங்க3ராஜமிஹ த3க்ஷிணஸவ்யஸீம்நோ: |
லக்ஷ்மீம் விஹாரரஸிகாமிவ ராஜஹம்ஸீம்
ச2ாயாமிவாப்4யுத3யிநீமவநீஞ்ச தஸ்யா: ||"
[ர-ஸ்த 1-63]



**मवनीञ्च तस्याः**" (ச2ாயாமிவாப்4யுத3யிநீமவநீஞ்ச தஸ்யா:)
2. "**एवंभूतभूमि**" (ஏவம்பூ4தபூ4மி) என்னக்கடவதிறே. ஆகையால் ஸமஸகி2யாயிருக்கை. ஸாக்ஷாத் லக்ஷ்மிக்கு ஸகி2யாயாய்த்து இவளிருப்பது. **(மல்லிநாடாண்ட மடமயில்)** அவளோட்டைச் சேர்த்தியால் வந்த செல்வம். "உடனமர் காதல்மகளிர் திருமகள் மண்மகள் ஆயர்மடமகள் - ஆளும் உலகமும் மூன்றே" "துணைவி, மயில்" என்கை

---

[இங்கு, மலர்ந்த தாமரைகளையுடைய தடாகம் போன்றுள்ள ஸ்ரீரங்க3நாத2னை ஆஶ்ரயிக்கக்கடவேன். வலது பக்கத்திலும், இடது பக்கத்திலும் எழுந்தருளியிருக்கும் விளையாட விருப்பமுள்ள அன்னப்பேடை போன்றுள்ள திருமகளையும், மேன்மேல் வளர்ந்துவரும் அவளுடைய நிழல்போன்றுள்ள பூ4மிப் பிராட்டியையும் அடையக்கடவேன்.] என்றும்,

2. "ஏவம்பூ4தபூ4மிநீளாநாயக!" [ஶரணாக3தி க3த்3யம் 5]

[பெரியபிராட்டியைப் போலேயிருக்கும் பூ4மிநீளாதே3விகளின் நாயகனே!] என்றும் பூ4மிதே3வியைப் பெரியபிராட்டியாருக்கு நிழல்போன்ற தோழியாக அருளிச்செய்தார்களன்றோ. பெரிய பிராட்டியாருக்கு கு3ணங்களில் ஒத்த தோழியாய் இருப்பவளன்றோ பூ4மிப்பிராட்டியின் அவதாரமான இவ்வாண்டாள். இவ்வளவால், பெரியபிராட்டியாரைப்போலே இவ்வாண்டாளும் புருஷகாரபூ4தை எனக் காட்டப்பட்டது. *(மல்லி நாடாண்ட மடமயில்)* செல்வத்திற்கு அதி4தே3வதையான பெரிய பிராட்டியாரோடு சேர்ந்திருப்பதால் இவளுக்குண்டான செல்வத்தைச் சொல்லுகிறது. "உடனமர் காதல் மகளிர் திருமகள் மண்மகள் ஆயர்மடமகள் — ஆளும் உலகமும் மூன்றே" [திருவாய் 1-9-4] என்று ஆழ்வார் அருளிச்செய்தபடியே, பரநிலையில் அவளோடு சேர்த்தியாலே மூவுலகையும் — [கீழ், மேல், நடு என்று மூவகைப்பட்டிருக்கும் அனைத்துலகையும்]—ஆளும் பெருமை பெற்றிருக்கும் இவள், அவதாரநிலையில் மல்லிநாட்டை ஆள்பவளானது வியப்பன்றே. இத்தால் இவளுடைய ஐஶ்வர்யம் சொல்லப்பட்டதாயிற்று. *(மடமயில்)* அழகிய மயில் போன்றவள். "துணைவி, மயில்" என்கை

யாலே—ஒருத்திக்கு ஸகி2யுமாய், ஒரு தே3ஶத்துக்கு ஶிகி2யுமாயிருக்குமவளாய்த்து. இவள்தான் * பேடைமயிலிறே. புனமயிலாய்க் காட்டுமயிலாயிருக்கையன்றிக்கே நாட்டு மயிலாயிருந்து, தன் கு3ணத்தாலே நாடாக ஈடுபடும்படி பண்ணி அத்தை ஆளுமவள் என்கை. "மயில்" என்று அளகபா4ரத்தையும் பெண்மையையுமிட்டுப் பேசுகிறது. இதுதான் பராபி4மாநத்தில் ஒதுங்கி வளருமிறே; இவளும் பட்டர்பிரானபி4மாநத்தே வளருமவளாய்த்து. **(மெல்லியலாள்)** ம்ருது3ஸ்வபா4வை என்றபடி. "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள் தங்குமேல் என்னாவி தங்கும்" என்னும்படி விஶ்லேஷாஸஹமான மார்த்த3வம். **(ஆயர்குல வேந்தனாகத்தாள்)** அந்த மார்த்த3வ

---

யாலே பெரியபிராட்டியாருக்கு ஸகி2யுமாய் (தோழியுமாய்) மல்லி நாட்டிற்கு ஶிகி2யுமாய் (மயிலுமாய்) இருப்பவள் என்றதாயிற்று. "பேடை மயில்" [பெரியாழ்-திரு 3-3-3] என்று சொல்லப்பட்டாளன்றோ இவள். "புனமயிலே" [திருப்பாவை 11] என்கிற காட்டுமயிலாயிராமல், நாட்டுமயிலாயிருந்து தன் கு3ணத்தாலே நாடெல்லாம் ஈடுபடும்படி செய்து மல்லி நாடாண்ட மயிலானவள் என்று கருத்து. "மட" என்கையாலே மடம், அச்சம், நாணம், பயிர்ப்பு முதலான பெண்மைக்குரிய கு3ணங்கள் நிறையப்பெற்றிருப்பவள் என்கிறது. "மயில்" என்று இவளுடைய அளகபா4ரத்தின் அழகு, மயில் தோகையினுடைய அழகுபோல் இருக்குமென்று காட்டுகிறது. பெண்களுக்கு இருக்கவேண்டிய ஸௌந்த3ர்யத்தைப் பரிபூர்ணமாகப் பெற்றிருப்பவள் என்றும் உணர்த்துகிறது. மயிலானது சிலரால் அபி4மானிக்கப்பட்டு வளருவதுபோலே, இவளும் பட்டர்பிரானாலே அபி4மானிக்கப்பட்டு வளர்கின்றவள் என்றும் உணர்த்துகிறது. *(மெல்லியலாள்)* மென்மையை இயல்பாக உடையவள். "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள் தங்குமேல் என்னாவி தங்கும்" [நாச்-திரு 8-7] என்று தானே அருளிச்செய்தபடி, எம்பெருமானோடு பிரிவைப் பொறுக்கமுடியாத மென்மையைச் சொல்லுகிறது. *(ஆயர்குலவேந்தன் ஆகத்தாள்)* "பொன்னாகம் புல்குதற்கு"



ஸ்வபா4வத்தாலே பிரிவாற்றமாட்டாமல், ஆயர்குல வேந்தனை க்ருஷ்ணனுடைய * பொன்னாகம் புல்கியிருக்குமவளாய்த்து. *கொம்மை முலைகள் இடர்தீரவிறே கோவிந்தனைத் * தழுவி முழுசியிருப்பது. இனி ஆபி4ஜாத்யத்தாலும் அநுரூபை என்கிறது — **(வேயர் பயந்த விளக்கு)** என்கிறத்தாலே. * வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் கோதையிறே. குலப்ரதீ3பையாயிருக்கை. * ஆயர்குலத்தினில் தோன்றும் மணிவிளக்குக்கு அநுரூபமாயிறே * வேயர் பயந்த விளக்கும் இருப்பது. ஸ்ரீகோ3பஜந்மத்தை ஆஸ்தா2நம்பண்ணின குடியிறே. ஆகையால் குலத்திலும் ஸத்3ருஶையாயிருக்கை. "அல்லி நாள் தாமரைமேல்" என்று தொடங்கி இவளுடைய ஐந்து ஆகாரத்தையும்

---

[நாச்-திரு 8-4] என்கிறபடியே, அந்த இயல்பான மென்மையாலே பிரிவு பொறுக்கமாட்டாமல், ஆயர்குலவேந்தனை கண்ணனுடைய பொன்மார்பை அணைத்திருக்குமவளாயிற்று. "கொம்மை முலைகள் இடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல்" [நாச்-திரு 13-9] "தழுவி முழுசிப் புகுந்து" [நாச்-திரு 13-5] என்று தானே அருளிச்செய்தாளன்றோ. இனி,நற்குடிப் பிறப்பாலும் எம்பெருமானுக்குத் தக்கவள் என்கிறது–*(வேயர் பயந்த விளக்கு)*என்னும் பகுதியாலே. "வேயர் தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன்' [பெரியாழ்திரு5-4-11] என்று தம்மைக் குறிப்பிட்டுக்கொண்ட பெரியாழ்வார்க்குத் தாம் திருமகள் என்பதை "வேயர்புகழ் வில்லிபுத்தூர்க்கோன் கோதை"[நாச்-திரு6-11] "விட்டுசித்தன் கோதை" [நாச்-திரு 14-10] முதலான பலவிடங்களில் காட்டினாளன்றோ. "ஆயர்குலத்தினில் தோன்றும் மணிவிளக்கு" [திருப்பாவை 5] என்று அவன் ஆயர்குலத்திற்கு விளக்கம் தரும் விளக்காயிருப்பதுபோலே, வேயர் பயந்த விளக்கான இவளும் வேயர்குலத்திற்கு விளக்கம்தரும் விளக்காய் இருக்கிறபடி. தமப்பனாரைப் போலே இவளும் கோ3ப ஜன்மத்தை (ஆயர்குடிப் பிறப்பை) ஏறிட்டுக்கொள்ளுகையாலே, ஆயர்குடிக்கும் வேயர்குடிக்கும் குலத்திலும் ஒற்றுமை விளங்குகிறது. "அல்லிநாள் தாமரைமேல்" என்னும் இத்தனியனால் இவளுடைய புருஷகாரத்வம், ஐஶ்வர்யம், ஸௌந்த3ர்யம், பிரிவாற்றாமை, நற்குடிப்பிறப்பு

சொல்லுகையாலே, இவளுடைய ஸத்3ருஶவைப4வம் அநுஸந்தி4க்கப்பட்டதாய்த்து. "முன்னவள், தென்புதுவை தெரிவைத் திருமகள், தாரணியென்பவள், நாரணன்றனுருவுக்கு இனியவள், ஊரரங்கமென்னுஞ் சீர்மையவள் பருவப் பணிமொழி யென்னைப் பணிந்தருளே." 1.

**(மற்றொரு தனியன்)**

**கோலச் சுரிசங்கை மாயன்செவ் வாயின் குணம்வினவும்**
**சீலத் தினள்தென் திருமல்லி நாடி செழுங்குழன்மேல்**
**மாலைத் தொடைதென் னரங்கருக் கீயு மதிப்புடைய**
**சோலைக் கிளியவள் தூயநற் பாதந் துணைநமக்கே.**

**பதவுரை:**— **கோலம் சுரிசங்கை**—அழகையும் சுரியையுமுடைய ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை நோக்கி, **மாயன்**—கண்ணபிரானுடைய, **செவ்வாயின் குணம்**—சிவந்த திருவத4ரத்தின் அதிஶயத்தை, **வினவும் சீலத்தினள்**—கேட்கும் தன்மையுடையவளும், **தென்** — தென் திசையிலுள்ள, **திருமல்லி நாடி**—திருமல்லி நாட்டிற்குத் தலைவியும், **செழும்**-செழுமை தங்கிய, **குழல்மேல்** — (தனது) திருக்குழற்கற்றையில் (சூட்டப்பெற்ற) **மாலைத் தொடை** — கலம்பக மாலையை, **தென் அரங்கருக்கு**—அழகிய மணவாளனுக்கு, **ஈயும் மதிப்பு உடைய** — ஸமர்ப்பிக்கும்படியான மேன்மையுடையவளும், **சோலை கிளி அவள்**—சோலையில் வளரும் கிளிபோல் இனிய மொழியையுடையவளுமான அவ்வாண்டாளுடைய, **தூய நல் பாதம்** — பாவனமும் போ4க்3யமுமான திருவடிகள், **நமக்கு**—நமக்கு, **துணை**—தஞ்சம்.

---

என்னும் ஐந்து ஆகாரங்களையும் சொல்லுகையாலே, அவனுக்குத் தகுதியுள்ள இவளுடைய பெருமை அநுஸந்தி4க்கப்பட்டதாயிற்று. "முன்னவள், தென்புதுவை தெரிவைத் திருமகள், தாரணியென்பவள், நாரணன்றனுருவுக்கு இனியவள், ஊர் அரங்கமென்னும் சீர்மையவள் பருவப் பணிமொழி என்னைப் பணிந்தருளே" என்னும் முன்னோர் சந்தை இங்கு அநுஸந்தி4க்கத்தக்கது. 1.



**அவ:**— **(கோலச்சுரிசங்கை)** இதில் ப4க3வத் ப்ரத்யாஸந்நரைக் குறித்து தத்3போ4க்3யதையை ப்ரஶ்நம் பண்ணும் படியையும், தத்3தே3ஶவாஸத்தாலுண்டான ப்ராஶஸ்த்யத்தையும், ப4ர்த்ருவஶீகரணஹேதுவான வால்லப்4யத்தையும் சொல்லி, ஏவம்வித4ாகாரையான ஆண்டாள் திருவடிகள் அநங்யக3திகளுக்குத் துணை என்கிறது.

**வ்யா:**— **(கோலச்சுரிசங்கை)** "கோலப்பெருஞ்சங்கே" என்றும், "சுரியேலுஞ் சங்கும்" என்றும், "சுரிசங்கு" என்றும் சொல்லப்படுகிற அழகையும் சுரியையுமுடைத்தான சங்கை. **(மாயன் செவ்வாயின் குணம் வினவும் சீலத்தினள்)** * பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்காகையாலே * மதுசூதன் வாயமுதம் பன்னாளும் உண்டிறே

---

**இரண்டாவது தனியன் வ்யாக்2யான விவரணம்**

*அவ:*— "கோலச் சுரி சங்கை" என்று தொடங்கும் இரண்டாவது தனியனில், (1) எம்பெருமானுக்கு அந்தரங்கனான பாஞ்சஜன்யாழ்வானைக் குறித்து அவனது பவளவாயின் இனிமையைக் கேட்கும் தன்மை; (2)அவன் வாழும் தேசத்தில் வசிப்பதால் உண்டான பெருமை; (3) இவள் சூடிக்களைந்த மாலையைச் சூட அவன் ஆசைப்படும்படியாக இவள் அவனை வசீகரித்து இனியவளாயிருக்கும் பெருமை ஆகியவற்றைச் சொல்லி, இத்தகைய பெருமைகளையுடைய ஆண்டாளுடைய திருவடிகள் புகலொன்றில்லாத நமக்குத் தஞ்சம் என்கிறது.

*வ்யா:*— *(கோலச் சுரி சங்கை)* "கோலப் பெரும் சங்கே" [நாச்-திரு 7-3] என்றும், "சுரியேலும் சங்கும்" [ ] என்றும், "சுரிசங்கு" [திருவாய் 7-3-1] என்றும் சொல்லப்படுகிற அழகையும் சுரியையும் உடைய சங்கை. *(மாயன் செவ்வாயின் குணம் வினவும் சீலத்தினள்)* "பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கு" [நாச்-திரு 9-9] "மதுசூதன் வாயமுதம் பன்னாளுமுண்கின்றாய்" [நாச்-திரு 7-5] என்று தானே அருளிச்செய்கையாலே, மாயன் செவ்வாயின் குணமறிந்தவனான பாஞ்சஜன்யாழ்வானை, அச்செவ்வாயின் இனிமையைக் கேட்கிறாள். "வெண்சங்கம் ஊதிய வாய்" [முதல்திரு 37]

போருவது. " வெண்சங்கமூதிய வாய் ", " சங்கம் வாய் வைத்தான் " என்னும்படியிறே சங்கு வாய்வைப்பது. அத்தாலே—வாய்விடாத சாதியைக் கேட்கிருள். மாயன் செவ்வாயின் கு3ணம் வினவுகையாவது :— "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ" என்னும்படியான கு3ணம். "பாலொடு நெய்தயிரொண் சாந்தொடு சண்பகமும் பங்கயம் நல்ல கருப்பூரமும் நாறிவரக் கோலநறும் பவளச் செந்துவர்வாய்" என்றிறே இவள் திருத்தமப்பனர் அருளிச்செய்தது. "மாயன்" என்றது—ஸௌந்த3ர்யஶீலாதி3களால் ஆஶ்சர்யபூ4தனை க்ருஷ்ணன் என்றபடி. ஆயமாய(வ)ன் - ஆயன்மாயோனிறே. வினவுகையாவது -* விருப்புற்றுக்கேட்கை. சீலத்தினளாவது - இதுவே ஸ்வபா4வமாயிருக்குமவளென்கை.

---

"சங்கம் வாய் வைத்தான்" [பெரியதிரு 6-7-8] என்று இவன் சங்கம் வாய்வைக்கும்படியை மற்றை ஆழ்வார்களும் அருளிச்செய்தார்களன்றே. வாய்விடாத சாதியைச் சேர்ந்த சங்கத்தை, மாயன் செவ்வாயின் கு3ணத்தை வாய்விடச் சொல்லுகிருள். மாயன் செவ்வாயின் கு3ணம் வினவுகையாவது - " கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ ? திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ ?" [நாச்-திரு 7-1] என்று அவனுடைய வாய்ச்சுவையும் நாற்றமும் எப்படியிருக்கும்? என்று வினவுதல். " பாலொடு நெய் தயிரொண் சாந்தொடு சண்பகமும் பங்கயம் நல்ல கருப்பூரமும் நாறிவரக் கோல நறும் பவளச் செந்துவர்வாய்" [பெரியாழ்திரு 1-5-9] என்றல்லவோ இவளுடைய திருத்தமப்பனரான பெரியாழ்வாரும் மாயன் செவ்வாயின் பெருமையைப் பேசினர். "மாயன்" என்றது—அழகு, நீர்மை முதலானவற்ருல் அனைவர்க்கும் ஆஶ்சர்யத்தை விளைக்கும் கண்ணன் என்றபடி. " ஆயமாயன் " [திருவாய் 4-3-4] " ஆயன் மாயோன் " [திருவாய் 9-9-2] என்று சொல்லப்பட்டானன்றே இவன். வினவுகையாவது— " விருப்புற்றுக் கேட்கின்றேன் " [நாச்-திரு 7-1] என்று தானே அருளிச்செய்தபடியே ஆசையோடு கேட்கை. ***(சீலத்தினள்)*** இப்படிக் கேட்கையே இயல்பாக இருப்பவள்.



**"सर्वगन्धस्सर्वरसः"** **(ஸர்வக3ந்த4ஸ்ஸர்வரஸ:)** என்னும் வஸ்துவோடே ஸர்வகாலாநுப4வாபேக்ஷை இவளுக்கு ஸ்வபா4வம் என்றபடி. **(தென்திருமல்லிநாடி)** இவளுக்கு ஸ்வபா4வம் நாட்டு நலத்தாலே வந்தது; கோஸல தே3ஶத்திலுள்ளார்க்குப்போலே. "திருமல்லிநாடி" என்று - அதுவே நிரூபகமாம்படியான அதிஶயத்தையுடையவள். **(தென் திருமல்லிநாடி)** தெற்குத்தி3க்கிலேயாய் த3ர்ஶநீயமாயிருக்கிற திருமல்லிநாடி. ஸ்ரீ வில்லிபுத்தூரையடுத்தணித்தான நாட்டுக்கு "திருமல்லிநாடு" என்றிறே திருநாமம். இனி பு4ர்த்ரு வால்லப்4யத்தைச் சொல்லுகிறது. **(செழுங் குழல்மேல் மாலைத் தொடை தென்னரங்கருக்கீயும் மதிப்பு**

---

**3. ஸர்வக3ந்த4ஸ் ஸர்வரஸ:** [சா2ந் 3-14-2]

[( பரமபுருஷன் ) எல்லா நறுமணங்களையுமுடையவன்; எல்லா நற்சுவைகளையுமுடையவன்.] என்று எல்லா நற்சுவைகளும், எல்லா நறுமணங்களும் கொண்ட எம்பெருமாளுேடு எப்போதும் அநுப4விக்க விரும்புவது இவளுக்கு இயல்பு என்று கருத்து. *(தென் திருமல்லிநாடி)* இவளுக்கு இந்த இயல்பு இந்த நாட்டில் பிறப்பாலே வந்த நலமாகும். கோஸல தே3ஶத்திலுள்ளார்க்கு ராமானுப4வத்தில் விருப்பம் இயல்பாக இருப்பதுபோலே, இந்நாட்டில் பிறந்தார்க்கு க்ருஷ்ணுனுப4வத்தில் விருப்பம் இயல்பானது என்பதைப் பெரியாழ்வாரிடமும் இவளிடமும் காணலாம். *( திருமல்லிநாடி )* " மல்லிநாடாண்ட மடமயில் " "திருமல்லிநாடி" என இரண்டு தனியன்களிலும் சொல்லுகையாலே, இந்த நாட்டையிட்டே நிரூபிக்க வேண்டிய பெருமையுடையவள் இவள் என்று உணர்த்துகிருர். *(தென் திருமல்லிநாடி)* தெற்கு தி3க்கிலே இருப்பதாய், அழகியதான மல்லிநாட்டைச் சேர்ந்தவள். 'தென்' என்னும் சொல்—தெற்கு தி3க்கையும் அழகையும் குறிக்கும். ஸ்ரீவில்லிபுத்தூரும், அதை அடுத்துள்ள நாடும், திருமல்லிநாடு என்று பெயர்பெற்றவையன்றே. இனி, நாயகனை எம்பெருமானுக்கு இவள் இனியவள் என்று காட்டுகிருர் மேலே—*(செழுங்குழல் மேல்மாலைத்தொடை தென்னரங்கருக்கீயும் மதிப்புடைய சோலைக்*

**டைய சோலைக்கிளி)** என்று. மாலைத்தொடை-பெரியாழ்வார் கட்டின கலம்பகன் மாலைத்தொடையை. **(தென்னரங்கருக்கீயும்)** * ராமஸீதோபநீதங்களான ஹேமாம்போ4ஜங்களை விரும்பிச் சாத்தியருளுமவர்க்கு. பெரியாழ்வார் கட்டின மாலையைச் சூடிக்கொடுத்தது வடபெருங் கோயிலுடையானுக்கன்றோ; பெரியபெருமாளுக்கன்றே யென்னில் : "ஆராமஞ் சூழ்ந்தவரங்கம்" என்றும், "தலையரங்கம்" என்றும் எல்லாத் திருப்பதிகளையும் அவயவமாகவுடைத்தாய், அகி2ல தி3வ்யதே3ஶ ப்ரதா4நமாயிருக்கையாலும், திருமணம்புணர்ந்ததும் அழகியமணவாளப் பெருமாளையாகையாலும், இனித்தான் கண்வளர்ந்தருளுகிற ஆகாரமும் ஒத்து போ4க3ஸ்தா2னமுமாயிருக்கையாலும், த4ர்மைக்யத்தாலும், அப்படிச் சொல்லலாமிறே.

---

***கிளி)*** என்று. மாலைத்தொடை—பெரியாழ்வார் கட்டின கதம்ப மாலையை. ***(தென்னரங்கருக்கீயும்)*** "ஹேமாம்போ4ஜை:— ராமஸீதோபநீதை:" [ர-ஸ்த. ] என்று ஸ்ரீரங்க3ராஜஸ்தவத்தில் ப4ட்டர் அருளிச்செய்தபடியே, பெருமாளும் பிராட்டியும் ஸமர்ப்பித்த பொற்றாமரைகளை விரும்பிச் சாத்திக் கொள்ளும் பெரியபெருமாளுக்கு அளிக்கும். பெரியாழ்வார் கட்டின மாலையை ஆண்டாள் சூடிக்கொடுத்தது ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ள வடபெருங்கோயிலுடையானுக்கன்றோ; பெரிய பெருமாளுக்கல்லவே. அப்படியிருக்க "தென்னரங்கருக்கீயும்" என்பானென் ? என்னில் : "ஆராமம் சூழ்ந்தவரங்கம்" [சிறிய-திரு 70] என்றும், "தலையரங்கம்" [இர-திரு 70] என்றும் திருவரங்கமானது எல்லாத் திருப்பதிகளையும் தன்னுடைய சுற்றுப்புறச் சோலைகளாக உடையதாய், எல்லா தி3வ்யதே3ஶங்களுக்கும் ப்ரதா4னமாயிருக்கையாலும், ஆண்டாள் திருமணம் புரிந்தது அழகியமணவாளப்பெருமாளையேயாகையாலும், பெரியபெருமாளைப்போலே வடபெருங்கோயிலுடையானும் ஶயனத் திருக்கோலமாய். போ4க3ஸ்தா2னம் என்பது தோற்ற இருப்பதாலும், இருவருக்கும் திருமேனி வேறுபட்டிருந்தாலும் அத்திருமேனிகளுக்கு அந்தர்யாமியான த4ர்மி



ஸ்ரீமாலாகாரர் மகளாகையாலே, "அரங்கமாலை" என்னும்படியான மாலுக்கு மாலையை வழங்கினாள். இப்போதும் இது நம்பெருமாள் ஆருந்திருநாள் ஆனையேற்றத்தினன்று அநுப4வஸித்3த4ம். "அங்கவனோடுமுடன்சென்றங்கானைமேல்" என்றிறே இவளபேக்ஷையிருப்பது. தென்னரங்கருக்கீயும் மதிப்புடைமையாவது- பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதுஞ்சோராமேயாள்கின்ற எம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்க்குச் சூடிக்கொடுத்த மதிப்பிறே. 4. **"स्वोच्छिष्टायां स्रजि निगलितं या बलात्कृत्य भुङ्क्ते" (ஸ்வோச்சி2ஷ்டாயாம் ஸ்ரஜி நிக3ளிதம் யா**

---

ஸ்வரூபம் ஒன்றேயாகையாலும் "தென்னரங்கருக்கீயும்" என்றதில் குறையில்லை. ஸ்ரீமாலாகாரரான பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையாகையாலே, "அரங்கமாலை" [திருக்குறு 12] என்று சொல்லப்படும் மாலுக்கு மாலையை வழங்கினாள். இப்போதும் நம்பெருமாள் ப்3ரஹ்மோத்ஸவங்களில் ஆறும் திருநாள் ஆனைவாஹனத்தன்று ஆண்டாள் தென்னரங்கருக்கு மாலை வழங்கும் இவ்வைப4வம், நாமும் கண்டு அநுப4விக்கும்படி நடைபெறுகிறது. "அங்கவனோடுமுடன் சென்றங்கானைமேல்" [நாச்-திரு6-10] என்று ஆனைவாஹனத்தில் அவனோடு கூடியிருக்கவன்றோ இவள் ஆசைப்பட்டது. ***(தென்னரங்கருக்கீயும் மதிப்புடைய)*** "பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதும் சோராமே ஆள்கின்ற எம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்" [நாச்-திரு 11-3] என்னும் பெருமையையுடைய திருவரங்கச் செல்வனார்க்குச் சூடிக் கொடுத்த மதிப்பன்றோ இவளுடையது.

**4. நீளாதுங்க3ஸ்தநகி3ரிதடீஸுப்தமுத்3போ3த்4ய க்ருஷ்ணம்**
**பாரார்த்2யம் ஸ்வம் ஶ்ருதிஶதஶிரஸ்ஸித்3த4மத்4யாபயந்தீ|**
**ஸ்வோச்சி2ஷ்டாயாம் ஸ்ரஜி நிக3ளிதம் யா ப3லாத்க்ருத்ய பு4ங்க்தே**
**கோ3தா3 தஸ்யை நம இத3மித3ம் பூ4ய ஏவாஸ்து பூ4ய:||**
**[பட்டர் அருளிய திருப்பாவைத் தனியன்]**

[யாதொரு ஆண்டாள் நப்பின்னைப் பிராட்டியினுடைய ஓங்கிப் பணைத்திருந்துள்ள திருமுலைத்தடங்களாகிய மலைத்

**ப3லாத்க்ருத்ய பு4ங்க்தே)** என்று, *சூடிக்களைந்தனசூடுமித் தொண்டர்படியாய்த்து *அண்டர்கோன் அணியரங்கன் படியும். அவன் தான் பரமப்ரணயியிறே. **(மதிப்புடைய சோலைக்கிளி)** பெரியாழ்வார்திருமகள் என்னும் மதிப்பையுடைய கிளி. * கிளிமொழியாளிறே "எல்லேயிளங் கிளியே" என்றுளே இவளும். பெரியாழ்வார், *தேனும் பாலுமமுதுமாய திருமால் திருநாமத்தாலே வளர்தெடுத்த கிளி. மெய்ம்மைப் பெருவார்த்தை கற்பித்தாரும் இவரே

---

தாழ்வரையிலே உறங்குபவனுய், தன்னுலே சூடிக்களையப் பெற்ற மாலையிலே கட்டப்பட்டவனுயிருக்கும் க்ருஷ்ணனுகிற ஸிம்ஹத்தை உணர்த்தி, நூற்றுக்கணக்கான வேத3ாந்த வாக்யங்களினுல் ஸித்3தி4க்கிற தன்னுடைய பாரதந்த்ர்யத்தை அறிவித்து ப3லாத்கரித்து அநுப4விக்கிருளோ, அப்படிப்பட்ட ஆண்டாளின் பொருட்டு மறுபடியும் மறுபடியும் இந்த இந்த 'நம:' என்கிற உக்திகள் ஆகவேண்டும்.] என்று ப4ட்டரும் அருளிச்செய்தாரன்றே. "அண்டர்கோன் அணியரங்கன்" [அமலனுதி 10] எனப்பட்ட அவனுடைய தன்மை "சூடிக்களைந்தன சூடுமித்தொண்டர்களோம்" [திருப்பல்-9] எனப்பட்ட தொண்டர்கள் தன்மையை ஒத்தது. ஆண்டாளிடம் ஆராத காதலுடைய பரமப்ரணயியாகையாலே இது பொருத்தமன்றே. *(மதிப்புடைய சோலைக்கிளி)* பெரியாழ்வார்திருமகள் என்கிற மதிப்பையுடைய மல்லிநாட்டுச் சோலைக்கிளி. "கிளிமொழியாள்" [திருவாய் 4-8-5] என்று சொல்லப்பட்ட ஸீதையையொத்தவளன்றே இவள். "எல்லே இளங்கிளியே" [திருப்பாவை-15] என்று அழைத்தாளன்றே இவளும். கிளியைத் தேனும் பாலும் அமுதும் ஊட்டி வளர்ப்பதுபோலே, "தேனும் பாலுமமுதுமாய திருமால் திருநாமம்" [பெரியதிரு 6-10-6] எனப்பட்ட திருமால் திருநாமத்தாலே பெரியாழ்வார் வளர்த்தெடுத்த கிளியன்றே இவள். "மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்" [நாச்-திரு 11-10] என்கிறபடியே கிளிக்கு வார்த்தை கற்பிப்பதுபோலே, இவளுக்கு மெய்ம்மைப் பெருவார்த்தை [சரமஶ்லோகம்] கற்பித்தவரும் பெரியாழ்வாரேயன்றே. "திருமாலைப்



யிறே வளர்த்தெடுப்பார்க்கும் காலிலே வணங்க வேணடும்படியான கிளி. **5. "शुकतातं" (ஶுகதாதம்)** என்னுமாபோலே பெற்றவர்களை விஞ்சியாய்த்து ஶுகமிருப்பது. சோலைக்கிளி—ஆழ்வாராஶ்ரமத்திற்கிளி. இத்தால் - பராபி4மாநத்தே வளர்ந்தமை தோற்றுகிறது. **(அவள் தூய நற்பாதம்)** ஏவம்வித4ாகாரையாய், பாவநத்வ பே4ாக்3யத்வங்களையுடையவள் திருவடிகள். "அல்லியம் பூமலர்க்கோதாய்! அடிபணிந்தேன்" என்றும், "செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி" என்றும்-ஶேஷஶேஷிகள் இருவர்க்கும் தந்தாம் ஸ்வரூபாநுகு3ணமாக இழியும்

---

பாடக்கேட்டு வளர்த்ததனுல் பயன்பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினுளே" [திருநெடு-14] என்கிறபடியே வளர்த்தெடுத்தவர்களுக்கும் காலிலே விழுந்து வணங்கவேண்டும்படியான கிளியன்றே இவள்.

**5. வ்யாஸம் வஸிஷ்டநப்தாரம் ஶக்தே: பௌத்ரமகல்மஷம்|**
**பராஶராத்மஜம் வந்தே3 ஶுகதாதம் தபோநிதி4ம் ||**
*[ஸஹஸ்ரநாமாவதாரிகா ஶ்லோகம்]*

[வஸிஷ்ட மஹரிஷியின் பிள்ளையின் பேரரும், ஶக்திமஹரிஷியின் பேரரும், பராசரரின் பிள்ளையும், ***சுகரின் தந்தையும்***, குற்றமற்றவருமான வியாஸரை வணங்குகிறேன்.] என்கிறபடியே ஶுகப்3ரஹ்ம ருஷியைப்போலே பெற்றவர்களை விஞ்சியிருப்பது இந்த சோலைக்கிளியும். *(சோலைக்கிளி)* ஆழ்வாருடைய ஆஶ்ரமத்தில் வாழும் கிளி. இத்தால் கிளியைப்போலே ஒருவருடைய அபி4மானத்திலே ஒதுங்கி வளர்ந்தமை தோற்றுகிறது. *(அவள் தூய நற்பாதம்)* இத்தகைய பெருமையுடையவளாய், பிறரைப் பரிசுத்தப்படுத்தும் தன்மையும் இனிமையும் உடையவளுடைய திருவடிகள். "அல்லியம்பூ மலர்க்கோதாய்! அடி பணிந்தேன்" [பெரியாழ்-திரு 3-10-2] என்று ஶேஷபூ4தர்களுக்கும். "செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி" [நாச்-திரு 6-8] என்று ஶேஷியான எம்பெருமானுக்கும் முறையே ஶேஷத்வ ஸ்வரூபத்திற்கும் ப்ரணயித்வ ஸ்வரூபத்திற்கும் அநுகு3ணமாக இழியும் துறையாயிருக்கும் பிராட்டியுடைய திருவடிகள். ஆகையாலே, "தூய" என்கிறது. அத்திருவடிகள்தாம்

துறையாயிருக்கும் திருவடிகள். அது தான் * பாடகஞ் சேர் மெல்லடியாயிருக்கும். "பாடகக்காலிணை தானே பரமபதம் தருமே." திருவடிகள் இங்கிருக்கும் நாளைக்குத் துணையாய், மேல் வழித்துணையாய், அதுக்குமேலே கைங்கர்யத்துக்குத் துணையாய், கைங்கர்யவர்த்த$_4$கமுமாயிருக்கும். " பண்டேனமாயுலகை-திருவடியே துணையல்லால் துணையிலேன் " இவளும் * ஞாலப்பொன்மாதிறே. ஆகையால் * கோலத்திருவடிகளோபாதி * ஞாலப்பொன் மாதான ஆண்டாள் திருவடிகளும் உத்$_3$தே$_3$ஶ்யமென்றதாய்த்து.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.
பிள்ளைலோகம் ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

"பாடகம் சேர் மெல்லடி"[பெரியதிரு 4-8-7] "பாடகக் காலிணை தானே பரமபதம் தருமே" [ ] என்கிறபடியே அழகு, மென்மை, மோக்ஷஹேதுத்வம் முதலான நன்மைகளை உடையதாகையாலே "நல்" என்கிறது. (*துணை நமக்கே*) புருஷகாரபூ$_4$தையான பிராட்டியுடைய திருவடிகள் இங்கிருக்கும் நாளைக்குத் துணையாய், அர்ச்சிராதி$_3$க$_3$தியிலும் வழித்துணையாய், பரமபத$_3$த்திலும் ப$_4$க$_3$வத் கைங்கர்யத்திற்குத் துணையாய். அக்கைங்கர்யத்தை வளர்ப்பதுமாய் இருக்கும். " பண்டேனமாயுலகை யன்றிடந்த பண்பாளா என்று நின்று தொண்டானேன் திருவடியே துணையல்லால் துணையிலேன் ", [பெரிய-திரு 7-4-6] என்று எம்பெருமானுடைய திருவடிகள் உபாயமாகவும், கைங்கர்யத்தை ஏற்பதாகவும் துணையாயிருப்பதுபோலே இவளுடைய திருவடிகள் புருஷகாரமாயும் கைங்கர்யத்தை வளர்ப்பதாயும் நமக்குத் துணையாயிருக்குமன்றோ. " ஞாலப் பொன் மாது " [திருவிருத்தம் 40] என்று கூறப்படுபவளன்றோ இவள். ஆகையால், " கோலத் திருவடிகள் " [ ] என்று சொல்லப்படும் திருவடிகளைப்போலே ஞாலப் பொன் மாதான ஆண்டாள் திருவடிகளும் நம்மனைவர்க்கும் உத்$_3$தே$_3$ஶ்யம் என்றதாயிற்று.

தனியன் வ்யாக்$_3$யான விவரணம் முற்றிற்று.
ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.
பிள்ளைலோகம் ஜீயர் திருவடிகளே ஶரணம்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆண்டாள் அருளிச்செய்த
# நாய்ச்சியார் திருமொழிக்கு
# பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்$_2$யாந அவதாரிகை

## பெரியவாச்சான்பிள்ளை தனியன்

ஸ்ரீமத் க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே।
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணும் ஸுலப$_4$: ஸ்ரீத$_4$ரஸ்ஸதா$_3$

a ப்ராபகஸ்வீகாரமும் பண்ணி, b ப்ராப்யத்தையும் நிஷ்கர்ஷித்தாராய் நின்றது கீழ்; இந்த ப்ரதிபத்தியிறே இத்தலைக்கு வேண்டுவது; c இத்தலையில் கண்ணழிவற்றிருந்தது; d அவன் பக்கலிலே அபி$_4$நிவேஶம் கரைபுரண்டிருந்தது; அநந்தரம் அபி$_4$நிவேஶாநுரூபமாகப் பெற்றுக்கொடு நிற்கக் d$_2$ கண்டதில்லை; e இத்தலையிலே ஒரு ஹேதுவைக் கொள்ளி

---

## நாய்ச்சியார் திருமொழி வ்யாக்$_2$யான விவரணம்

*[ஸ்ரீ. க்ருஷ்ணஸ்வாமி அய்யங்கார், 'ஸுத$_3$ர்ஶனம்' ஆசிரியர்.]*

### அவதாரிகை

திருப்பாவையில் " உன்றன்னைப் பிறவி பெருந்தனைப் புண்ணியம் யாமுடையோம் " [திருப்பாவை 28] என்று உபாயமாக எம்பெருமானைப்பற்றி, "உனக்கே நாமாட்செய்வோம்" [திருப்பாவை 29] என்று அவனுகப்புக்கான கைங்கர்யமே ப்ராப்யம் என்று அறுதியிட்டுநின்றாள் ஆண்டாள். சேதனனுக்குப் பேற்றுக்கு வேண்டியது இந்த நினைவு மாத்திரமேயாகும். அது ஆண்டாளிடம் குறைவற்றிருந்தது. எம்பெருமானிடமும் இவளைப் பெறவேண்டும் என்கிற ஆர்வம்

---

## நாய்ச்சியார் திருமொழி வ்யாக்$_2$யாந அரும்பத விளக்கம்

**அவதாரிகை:**—a (ப்ராபகஸ்வீகாரமும்) என்றது—"புண்ணியம் யாமுடையோம்"என்றத்தைப்பற்ற. b(ப்ராப்யத்தையும் நிஷ்கர்ஷித்தார்) என்றது - "உனக்கே நாமாட்செய்வோம்"என்றத்தைப்பற்ற. c...i ப்ரதிபத்தி அமையுமாகில் காமன் காலிலே விழுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (இத்தலையில் கண்ணழிவு இத்யாதி$_3$). d$_2$(கண்டதில்லை)

லிறே அது பக்வமாய்ப் பெறுகிறேமென்று ஆறியிருக்க லாவது; f அதுக்கு அங்ஙனென்றின்றிக்கேயிருந்தது இனி, பரிக்$_3$ரஹித்த ஸாத$_4$நம் ப$_2$லத்தோடு வ்யபி$_4$சாரமில்லாதபடி ஸித்$_3$த$_4$மாயிருந்தது; g இங்ஙனேயிருக்கச் செய்தே ப$_2$லிக்கக் காணுமையாலே h யுக்தாயுக்த நிரூபண க்ஷமமல்லாதபடி கலங்கி, அபி$_4$மத விஷயத்தைப் பிரிந்தார் திரியட்டும் கூடுகைக்கு மடலெடுக்குமாபோலே, பிரிந்தாரைக் கூட்டிப் போருகையே ஸ்வப$_4$ாவமாக உடையானொருவன் என்னுமிதுவே பற்றுசாகக் i காமஸமாஶ்ரயணம் பண்ணிப் பெறுகையிலே உபக்ரமிக்கிருள்.

---

கரைபுரண்டிருந்தது. இப்படி இருவரிடமும் குறையில்லாமல் இருந்தபோதிலும் எம்பெருமான் ஆண்டாளை ஏற்றுக்கொள்ள வில்லை. இப்படி அவன் தன்னை ஏற்றுக்கொள்ளாமல் இருப்ப தற்குக் காரணம் என்ன? என்று ஆராய்ந்தாள். தான் அவனைத் தவிர, கர்மயோக$_3$ம் முதலான ஸாத$_4$நாந்தரங்களைப் பற்றியிருந் தால், 'அவை நிறைவேறின பின்பு அவனைப் பெற்றுவிடுவோம்' என்று ஆறியிருக்கலாம். தான் அப்படியொரு உபாயாந்தரத் தைப் பற்றுமையாலே அப்படி ஆறியிருக்க முடியவில்லை. தான் பற்றின ஸாத$_4$நமான எம்பெருமானே ப$_2$லனைத் தவருமல் விளைக்கும் ஸித்$_3$தே$_4$ாபாயமாய் இருந்தான். இப்படியிருந்தும் பேறு உண்டாகக் காணுமையாலே 'இன்னது செய்யலாம். இன்னது செய்யக்கூடாது' என்று ஆராயமுடியாதபடி கலங்கி விட்டாள் ஆண்டாள். காதலர்கள் ஒருவரையொருவர் பிரிந் தால், இந்தப் பிரிவினுலுண்டான கலக்கத்தாலே மறுபடியும் கூடுவதற்கு மடலெடுப்பதாகிற ஸ்வரூபத்திற்குத் தகாத செயலைச் செய்வதுபோலே, இவளும் தே$_3$வதாந்தர ஸமாஶ்ர யணமாகிற ஸ்வரூபத்திற்குத் தகாத செயலைச் செய்கிருள் "தையொரு திங்களும்" என்று தொடங்கும் முதல்திருமொழியில்.

---

ஆகையாலே விழுகிருள் என்று வாக்யத்தைப்பூரிப்பது. ஆகையாலே c (இத்தலையில் கண்ணழிவற்றிருந்தது) என்று கூட்டுவது. e,f இந்த ப்ரதிபத்தியுண்டானதுகொண்டு கண் ணழிவில்லையாகவேணுமோ ? என்ன, உபாயஸ்வீகர்த்தா வான இவன் ஸ்வப$_4$ாவத்தாலும், ஸ்வீக்ருதமான உபாயஸ்வ ப$_4$ாவத்தாலும் கண்ணழிவில்லாமையை இரண்டுவழியாலே ஸாதி$_4$க்கிருர் (இத்தலையில் இத்யாதி$_3$ வாக்யத்$_3$வயத்தாலே.)



j பெருமாளையல்லது அறியாத திருவயோத்$_4$யையிலுள்ளார் அவர்க்கு நன்மையையெண்ணி 6. "सर्वान् देवान् नमस्यन्ति" (ஸர்வாந் தே$_3$வாந் நமஸ்யந்தி) என்று-தே$_3$வதைகள் காலிலே விழுந்தார்களிறே ; இவ்வஸ்துதன்னைப் பரத$_3$ஶையிலும்

---

எத்தனையோ தே$_3$வதைகள் இருக்கக் காமனை ஆஶ்ரயிப்பானேன்? எனில் பிரிந்த காதலர்களைக் கூட்டிவைப்பதையே இயல்வாக உடையவன் என்கிற பெருமை இவனுக்கே உள்ளதொன் ருகையாலே, இதையே பற்றுசாகக்கொண்டு காமதே$_3$வனுகிற மன்மத$_2$னை ஆஶ்ரயித்து, எம்பெருமானைப் பெறுவதற்கான முயற்சியைத் தொடங்குகிருள்.

இப்படிக் கலக்கத்தாலே மற்ற தெய்வங்களை ஆஶ்ரயித்த வர்கள் உண்டோ? எனில், ராமபிரானையல்லது அறியாதிருந்த அயோத்திவாஸிகள்,

6. ஸ்த்ரியோ வ்ருத்$_3$த$_4$ாஸ் தருண்யஶ்ச
ஸாயம் ப்ராத: ஸமாஹிதா: ।
ஸர்வாந் தே$_3$வாந் நமஸ்யந்தி
ராமஸ்யார்த்தே$_2$ யஶஸ்விந: ॥ [ரா-அ 2.52]

---

g.d.h (இங்ஙனேயிருக்கச்செய்தேயும ப$_2$லிக்கக் காணுமை யாலே-அவன் பக்கலிலே அபி$_4$நிவேஶம் கரைபுரண்டிருந்தது; அநந்தரம் அபி$_4$நிவேஶாநுரூபமாகப் பெற்றுக்கொடு நிற்கக் கண்டதில்லை ; ஆகையாலே யுக்தாயுக்தநிரூபண க்ஷமமல் லாதபடி கலங்கி) என்று வாக்யங்களைப் பின்முன்னுகை யோஜித்துக்கொள்வது n இதுக்கு நியாமகம்,— மேலே (ப 18,19) 8. (யௌ ச காசித்) என்கிற வாக்யத்திலே, (ப்ரேமத்தாலே வந்த மருட்சி படுத்துகிறபாடிறே இது) என்று—அபி$_4$நிவேஶமே கலக்கத்துக்கு ஹேதுவென்றி ருக்கையாலே.

j இப்படி கலக்கத்தாலே தே$_3$வதாந்தர ஸமாஶ்ரயணம் பண்ணின பேருண்டோ? என்ன (பெருமாளை இத்யாதி$_3$) இக்கலக்கத்தாலே தே$_3$வதாந்தர ஸமாஶ்ரயணம் பண்ணி

வேண்டேனென்ற திருவடி, 7. "नमोऽस्तु वाचस्पतये" (நமோऽஸ்து வாசஸ்பதயே) என்றானிறேk; 'கீழ் நாம் l செய்து நின்ற நிலை இது, mதவிர்ந்தது இது' என்று அறியாதபடி கலங்கினாருடைய m$_2$ வ்யாபாரம் இருக்கும்படியிறேm$_3$ இது. n8. "ययौ च काचित् प्रेमान्धा" (யயௌ ச காசித் ப்ரேமாந்த$_4$ா) என்கிற ப்ரேமத்

---

[(அயோத்தியிலுள்ள) ஸ்த்ரீகளும், வயோதி$_4$கர்களும், பெண்களும் காலையும் மாலையும் கூடியிருந்து (தே$_3$வஶத்ருக்களை வென்று) புகழ்படைத்த ராமனுக்காக எல்லா தே$_3$வர்களையும், வணங்குகிறார்கள்.] என்கிறபடியே அவருக்கு நன்மையை விரும்பி எல்லா தே$_3$வதைகள் காலிலும் விழுந்தார்களன்றோ. "பா$_4$வோ நாந்யத்ர க$_3$ச்ச$_2$தி" என்று ராமனிடம் உள்ள ஆராத காதலாலே, 'பரமபத$_3$நாத$_2$னையும் பெறவிரும்ப மாட்டேன்' என்ற அநுமன்,

7. நமோऽஸ்து வாசஸ்பதயே [ரா·ஸு 32-14]
[வாசஸ்பதிக்கு நமஸ்காரம்] என்று ராமன்கார்யத்திற்காக தே$_3$வதா ஸமாஶ்ரயணம் பண்ணினானன்றோ. அதுபோல்—"இதுவரை நாம் எம்பெருமானையே உபாயோபேயமாகப் பற்றி, மற்ற தெ$_3$ய்வங்களையும், உபாயங்களையும் பற்றுவதைத் தவிர்ந்திருந்தோம்." என்று அறியாதபடி கலங்கின இவள் செய்யத்தகாத காமஸமாஶ்ரயணத்தையும் செய்கிறாளன்றோ.

8. யயௌ ச காசித் ப்ரேமாந்த$_4$ா தத்பார்ஶ்வமவிலம்பி$_3$தம் । [வி·பு 5.13-19]
[அன்பினால் அறிவு மழுங்கியவளான ஓர் ஆயர்சிறுமி கண்ணனுக்கருகில் விரைவில் வந்தாள்] என்கிறபடியே. பெருங்காதலால் உண்டான மயக்கம் இப்படிப் படாதபாடு படுத்துமன்றோ.

---

னதுக்கு உதா$_3$ஹரணம். k ('வாசஸ்பதயே' என்றானிறே) என்ற அநந்தரம் ஆகையாலே, (கீழ் நாம் செய்தது இது நின்றநிலை இது) என்று கூட்டுவது. l (செய்து நின்ற நிலை) யாவது ஸர்வேஶ்வரனையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் ஸ்வீகரித்து நின்ற நிலை என்றபடி. m (தவிர்ந்தது இது) என்றது—தத்$_3$வ்யதிரிக்த ப்ராப்யப்ராபகாப$_4$ாஸங்களைத் தவிர்ந்தது என்றபடி. n ஆனால் அஜ்ஞானம் த்யாஜ்யமன்றோ



தாலே வந்த oமருட்சி படுத்துகிற பாடிறே இது. p9. "रजो रागात्मकं विद्धि" (ரஜோ ராக$_3$ாத்மகம் வித்$_3$தி$_4$) என்கிறபடியே ஸத்வநிஷ்ட$_2$ரான ஸாத்விகரோடே சேர்ந்து ப$_4$க$_3$வத்ஸமாஶ்ரயணம் பண்ணக்கடவதாயிருக்க, ஸாத்விகாக்$_3$ரேஸரரான பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்தவள், ரஜோகு$_3$ணப்ரசுரரான தே$_3$வதைகள் காலிலே விழும்படியென்? என்னில்; அநபாயிநியான பிராட்டி பெருமாளளவிலுண்டான நித்யஸம்ஶ்லேஷார்த்த$_2$மாக 6.(ஸர்வாந் தே$_3$வாந் நமஸ்யந்தி) என்று எல்லா தே$_3$வதைகள் காலிலே விழுந்தாற்போலவும், இவளுடைய திருத்தமப்பனாரான நம்மாழ்வார் "தெய்வங்காள்" என்று தே$_3$வதை

---

பரமஸாத்விகரான பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்த இவ்வாண்டாள், ஸத்வகு$_3$ணத்திலே ஊன்றிநிற்கும் ஸாத்விகர்களோடு சேர்ந்து எம்பெருமானை ஆஶ்ரயிக்கவேண்டியிருக்க,

9. ரஜோ ராக$_3$ாத்மகம் வித்$_3$தி$_4$ த்ருஷ்ணாஸங்க$_3$ஸமுத்$_3$ப$_4$வம் [கீ$_3$தை 14-7]

[*ஆண் பெண் அன்புக்குக் காரணமாகவும்* விஷயங்களில் ஆசைக்கும், புத்ரமித்ராதி$_3$களிடத்தில் பற்றுக்கும் உத்பத்தி ஸ்தா$_2$நமாகவும் *ரஜோகு$_3$ணத்தை அறிவாயாக*] என்கிற ரஜோகு$_3$ணம் மிக்க காமன் காலிலே விழுவது எப்படிப் பொருந்தும்? எனில்; முன் (பக்கம் 17) எடுத்த ஆறாவது ப்ரமாணத்தில் சொன்னபடியே என்றும் பிரிவில்லாத பிராட்டியும் பெருமாளுமான சேர்த்தி நித்யமாய்ச் செல்லவேணுமென்று அயோத்தி நக$_3$ரமக்கள் எல்லா தே$_3$வதைகள் காலிலும் விழுந்தாற்போலவும், "அஞ்சுகுடிக்கொரு சந்ததி" [உபதேசரத்தினமாலை 24] என்று ஆழ்வார்கள் அனைவர்க்கும் அபி$_4$மான புத்ரியான இவ்வாண்டாளுடைய தந்தையரில் ஒருவரான நம்மாழ்வார், "தெய்வங்காள்" [திருவாய் 5-4-8] என்று

---

என்ன? (யயௌ ச இத்யாதி$_3$) o p (மருட்சி படுத்துகிற பாடு) என்கிறதென்? பு$_3$த்$_3$தி$_4$பூர்வமாக ஆஶ்ரயிக்கிறாள் என்றாலோ? என்ன, அருளிச்செய்கிறார் (ரஜோ ராக$_3$ாத்மகம் இத்யாதி$_3$) க$_4$டகத்வேந விழும்படியாய்த்து என்றபடி.

களை முன்னிட்டாற்போலவும், இவளும் அயர்த்துக் கலங்கினபடி. இப்படிப்பட்ட கலக்கத்தாலே, பிரிந்தாரைக் கூட்டுமென்னும் இதுவேகொண்டு காமஸமாஶ்ரயணம் பண்ணுகிறாள். p$_{2}$ தன் உடலை அழியமாறி நின்றிறே இவன்தான் பிரிந்தாரைச் சேர்ப்பது. q இதுதான் இவளுடைய ப்ராப்ய த்வரையிருக்கிறபடி. r அதாவது - பெரியாழ்வார், ப்ராப்யருசியாலே ஒரு கருமுகை மொட்டாகிலும் வடபெருங்கோயிலுடையானுடைய திருக்குழலிலே வெடிக்கவேணும் என்று கருமுகையை ஶுஶ்ரூஷியா

---

எம்பெருமானைப் பிரிந்த கலக்கத்தாலே தே$_{3}$வதைகளை முன்னிட்டாற்போலவும் இவளும் எம்பெருமானைப் பெருமையாலே அறிவு மழுங்கிக் கலங்கி "அவனை எப்படியாவது பெற்றுவிட வேண்டும்" என்னும் (ப்ராப்ய) த்வரையாலே காமனின் காலிலே விழுகிறாள். இப்படிப்பட்ட கலக்கத்தாலே, 'பிரிந்த காதலர்களைக் கூட்டிவைப்பவன்' என்கிற ஒரே காரணத்தாலே, மற்ற தெய்வங்களெல்லாமிருக்க, காமனை ஆஶ்ரயிக்கிறாள். தன் உடலை அழித்துக்கொண்டாவது பிரிந்த காதலர்களைக் கூட்டி வைப்பவன் இவன் என்பது குமாரஸம்ப$_{4}$வக் கதை$_{2}$யில் ப்ரஸித்$_{3}$த$_{4}$மன்றோ. ஆக, ப்ராப்ய த்வரையாலே அறிவு கலங்கி, காமன் காலிலே விழுகிறாள் என்றதாயிற்று. இவளுடைய காமஸமாஶ்ரயணம் எந்த அளவிற்குச் சென்றதென்றால்; பெரியாழ்வார் 'பூக்கிற பூவெல்லாம் வடபெருங்கோயிலுடையானுடைய திருக்குழலுக்கேயாகவேணும்' என்று ப்ராப்ய ருசியாலே எம்பெருமானுக்காகத் திருநந்த$_{3}$வனம் சமைத்து, பூச்செடிகளைப் பேணுவதிலே ஈடுபட்டிருப்பது போலே, இவளும் "மத்தநன்னறுமலர் முருக்கமலர்கொண்டு" [நாச்-திரு 1-3] என்று 'ஊமத்தம்பூக்களும், முருக்கம்பூக்களும் காமன் காலுக்கேயாகவேணும்' என்று கருதி, ஊமத்தஞ்செடி

---

q ஸர்வேஶ்வரனைப் பெறவேணும் என்கிற த்வரையாலே க$_{4}$டகனை காமஸமாஶ்ரயணம் பண்ணுகிறாள் வேணுமாகில்; "மத்தநன்னறுமலர் முருக்கமலர் கொண்டு" (3) என்று— மதமத்தை முதலானவற்றை ஶுஶ்ரூஷிக்கிறதென்? என்ன (இதுதான் இத்யாதி$_{3}$). r மேல் "அதாவது" இத்யாத்$_{3}$யுப



நிற்பர். இவளுடைய ப்ராப்யத்வரையிருக்கும்படி, — காமன் காலிலே ஒரு s மதமத்த மலராகிலும் முருக்கம் மொட்டாகிலும் வெடிக்கவேணுமென்று s மதமத்தம் முருக்கு இவற்றை ஶுஷ்ரூஷியாநிற்கும். t க$_{4}$டகருகந்ததே தேடியிடவேணுமிறே.

அவதாரிகை முற்றிற்று.

---

செடி முருங்கச்செடி ஆகியவற்றைப் பேணுவதிலே போது போக்கும்படியான அளவிற்குப் ப்ராப்ய த்வரை விஞ்சியவளானாள்.

அவதாரிகை விவரணம் முற்றிற்று.

---

பாத$_{3}$நானுகு$_{3}$ணமாக, கீழே காம ஸமாஶ்ரயணத்துக்கு அடி ப்ராப்யத்வரையே என்றவோபாதி, மதமத்தை முதலானவற்றை ஶுஶ்ரூஷிக்கையும் ப்ராப்யத்வரா கார்யமென்று இங்ஙனே வகையிட்டு அருளிச்செய்வார். t ஆனால் கருமுகை முதலான ஶ்லாக்$_{4}$ய புஷ்பங்களை இடாதே, இத்தை இடுவானென் என்ன அருளிச்செய்கிறார் (க$_{4}$டகா இத்யாதி$_{3}$).

ப்ரவேஶே — a,b (திருப்பாவையிலே —ப்ராப்யத்தையும் நிஷ்கர்ஷித்து-ப்ராபகஸ்வீகாரமும் பண்ணினாராய் நின்றது) என்று வாக்யத்தை அங்வயித்துக் கொள்வது. c ப்ரதிபத்தியே அமையுமாகில் காமன்காலிலே விழுவானென்? என்ன அருளிச்செய்கிறார் (இத்தலையில் கண்ணழிவு இத்யாதி$_{3}$). d$_{2}$ (கண்டதில்லை) ஆகையாலே விழுகிறாள் என்று வாக்யத்தைப் பூரிப்பது. e எத்தனை அபி$_{4}$நிவேஶமுண்டானாலும். 14. (தத் தஸ்ய ஸத்$_{3}$ருஶம் ப$_{4}$வேத்) என்று-அவன் கை பார்த்திருக்குமதொழிய இப்படி கலங்கி காமஸமாஶ்ரயணம பண்ணவேண்டும ஹேதுவேது? என்ன; உபாயாந்தரபரிக்$_{3}$ரஹமில்லாமையாலும, பரிக்$_{3}$ரஹித்த உபாயத்துக்குப் ப$_{2}$ல வ்யபி$_{4}$சாரமில்லாமையாலும் கலங்கிப்பண்ணுகிறாள் என்னுமத்தை அருளிச்செய்கிறார் (இத்தலையிலே ஒரு இதயாதி$_{3}$) j இப்படிக்கலங்கி இதரஸமாஶ்ரயணம் பண்ணினவர்களுண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (பெருமாளையல்லது இத்யாதி$_{3}$) k m$_{2}$, m$_{3}$, "ஸமுத்$_{3}$ரதரணம் பண்ணும்போது 7. (நமோஸ்து

## முதல் திருமொழி—முதற்பாட்டு

தையொரு திங்களுந் தரைவிளக்கித்
தண்மண் டலமிட்டு மாசிமுன்னாள்
ஐயநுண் மணற்கொண்டு தெருவணிந்து
அழகினுக் கலங்கரித் தநங்கதேவா
உய்யவு மாங்கொலோ வென்றுசொல்லி
உன்னையு மும்பியை யுந்தொழுதேன்
வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
வேங்கட வற்கென்னை விதிக்கிற்றியே.

**பதவுரை:—தையொரு திங்களும்**-தைமாஸம் முழுவதும், **தரை**—அவன் வரும் இடத்தை, **விளக்கி**—அலங்கரித்து,

---

**வாசஸ்பதயே)**என்றானிறே திருவடி; (வ்யாபாரம் இருக்கும்படி யிறே இது)''என்று பூரிப்பது. m$_3$ இது-காம ஸமாஶ்ரயணம். n கலக்கம் த்யாஜ்யமன்றோ? என்ன, ப்ரேமகார்யமான கலக்கம் உபாதேயம் என்கிறார் (**யயௌ ச காசித் இத்யாதி$_3$**). pகலக்கத்தின் அவதி$_4$ எவ்வளவு? என்ன அருளிச்செய்கிறார் (ரஜோ ராக$_3$ாத்மகம் இத்யாதி$_3$) p$_2$ காமன்தான் பிரிந்தாரைக் கூட்டுமோ ? என்ன அருளிச்செய்கிறார் (தன் உடலை இத்யாதி$_3$) தன் உடலை அழிய மாறுகையாவது—ஹிமவத் பார்ஶ்வத்திலே ருத்$_3$ரன் தபஸ்ஸு பண்ண, ஹிமவான் தன் புத்ரியான பார்வதியை ஶுஶ்ரூஷிக்கவிட, தே$_3$வர்கள் இவன் தபஸ்ஸை அழிக்கைக்குக் காமனை ப்ரேரிக்க, அவன், தன்னை த$_3$ஹிப்பானென்ன; ‘ஆனாலும் இத்தனை யும் செய்யவேணும்’ என்ன, தன்னை அழியமாறி ருத்$_3$ரனை யும் பார்வதியையும் கூட்டின் ப்ரஸித்$_3$தி$_4$. s மதமத்தை—ஊமத்தைவிஶேஷம். t இப்படி அதிப்ரவணையானவள் நல்ல புஷ்பம் தேடியிடாமல் இத்தை இடுவானென்? என்ன அருளிச்செய்கிறார் (க$_4$டகர் இத்யாதி$_3$)

**அரும்பதவிளக்கத்தின் அவதாரிகை முற்றிற்று.**



**தண்**—குளிர்ந்து அழகாயிருந்துள்ள, **மண்டலம்**—மண்ட$_3$லாகாரமான கோலத்தை, **இட்டு**—இட்டு, **மாசி**—மாசி மாதத்தில், **முன்னாள்** — முதல்பக்ஷத்தில், **ஐய**—அழகியதாய், **நுண்** — நுண்ணிதான, **மணல்கொண்டு**—மணலைக் கொண்டு, **தெரு**—அவன் வரும் தெருவை, **அழகினுக்கு**—கேவலம் அழகுக்காகவே, **அணிந்து**-அழகுபெறும்படி, **அலங்கரித்து**—அலங்காரம்பண்ணி, ‘**அநங்கதேவா**—மன்மத$_2$னே !, **உய்வுமாங்கொலோ என்று**—உஜ்ஜீவிக்கக்கூடுமோ’ என்று, **சொல்லி**—சொல்லி, **உன்னையும் உம்பியையும்**—உன்னையும், உன் தம்பியான சாமனையும், **தொழுதேன்**—; **வெய்யது**—வெவ்வியதான, **தழல் உமிழ்**—நெருப்புப்பொறிகளைச் சிந்தாநின்றுள்ளதாய், **ஓர்**—ஒப்பற்றதான, **சக்கரம்**—திருவாழியை, **கை**—திருக்கையிலேயுடைய, **வேங்கடவற்கு** — திருமலையில் எழுந்தருளியிருக்கிறவனுக்கு, **என்னை,—, விதிக்கிற்றி**—அந்தரங்க$_3$ கைங்கர்யம் பண்ணும்படி விதி$_4$க்கவேணும்.

**வ்யா:— முதற்பாட்டு.** (தையொரு திங்களும்) **மார்கழி மாஸம் ஒருமாஸமும் நோன்புநோற்றார்களாய் நின்றதிறே; இனி தை ஒருமாஸமும் அவன் வரும் ஸ்த$_2$லத்தை அலங்கரித்து.** (தையொரு திங்களும்) a“**செங்கண்மால் எங்கண்மால்**

---

## வ்யாக்$_2$யான விவரணம்

1\. *அவ:*— முதற்பாட்டில் காமனையும் அவன் தம்பி சாமனையும் தான் ஆஶ்ரயிக்கும்படியை விவரிக்கிறாள்.

*வ்யா:*— *(தையொரு திங்களும்)* திருப்பாவையில் மார்கழி மாதம் முழுவதும் நோன்பு நோற்றார்களன்றோ. இனி, தை மாதம் முழுவதும் காமன் வருமிடத்தை அலங்கரிப்பதைச் சொல்லுகிறாள். *(தையொரு திங்களும்)* “செங்கண்மால் எங்கள் மால் என்றநாள் எந்நாளும் நாளாகும்” [மூன்றாம் திரு-17]

---

அரு:— முதற்பாட்டு. **(தையொரு இத்யாதி$_3$)** a ஸ்வாபதே$_3$ஶத்தை உட்கொண்டு வ்யாக்$_2$யாதாவின் ஈடுபாடு (செங்கண்மால் இத்யாதி$_3$) செங்கண்மாலான ஸர்வேஶ

என்ற நாளெந்நாளும் நாளாகும்'' என்று 'ஸர்வேஶ்வரன் 'நம்பக்கலிலே ஆபி4முக்2யம் பண்ணினுன்' என்று b அறிவ தொருநாள் c உண்டாகில் காலத்ரயமும் அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லாநிற்குமிறே. d இப்படி 'ஒருநாளையாநுகூல்யம் மிகை' என்றிருக்கும் விஷயத்தைப்பற்றிவைத்திறே இவன்காலிலே ஒருமாஸமாகத் துவளப்பார்க்கிறது.

---

என்கிறபடியே எம்பெருமான் 'நம்மிடம் இச்சேதனன் அன்பு செலுத்தினுன்' என்று அநுஸந்தி4க்கும்படி ஒருநாள் உண்டாயிற்ருகில், சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்னும் மூக்காலமும் நல்ல நாளாய்ச் சிறப்படையுமன்ருே. இப்படி ''ஒரு நாள் அன்பு செலுத்துவதும் அதி4கம்'' என்று நினைக்கவைக்கும் எம்பெருமானைப் பற்றிவைத்தன்ருே 'அவனைப் பெறவேண்டும்' என்னும் த்வரையாலே இக்காமனுடைய காலிலே ஒரு மாஸமெல்லாம் துவளப் பார்க்கிருள். *(தரைவிளக்கி)* காமன் வருமிடத்தை அலங்கரித்து. திருக்கண்ணமங்கையாண்டான் திருக்கண்ணமங்கைக் கோயிலிலே ஸ்வயம் ப்ரயோஜனமாகச் செய்த இக்காரியத்தைக் காமன் விஷயத்தில் செய்கிருள். எம்பெருமானுக்கே உரிய கோயிலிலே கைங்கர்யம் செய்வது இயல்பான குடியிலே பிறந்த இவள் இக்காரியம் செய்யும்படியாயிற்று. ப4க3வத்கைங்கர்யம் பண்ணுவதற்கு ஸாத4னமாக இவள் செய்யும் இந்த ஸ்த2லஶுத்3தி4 பெரியாழ்வார் வடபெருங்கோயிலிலே கைங்கர்யம் பண்ணுகைக்காக ஸ்த2லஶுத்3தி4 பண்ணுவதுபோலேயாயிற்று.

---

வரன், ''எங்கள் - நம்பக்கலிலே, இச்சேதனன், மால் - வ்யாமோஹத்தையுடையவன்'' என்று அறிவதொருநாளுண்டாகில்''என்று ஈஶ்வரனுடைய அநுஸந்த4ாநமாக்கிஞல் வாக்யம் ஸங்க3தமாம். b (அறிவதொருநாள்) என்றது—அநுஸந்தி4ப்பதொருநாள் என்றபடி. c(உண்டாகில்)என்கிற யதி3ஶப்3த3ம் சேதனனுக்கு ஈஶ்வரவிஷயத்தில் ஆபி4முக்2ய தௌ3ர்லப்4யத்தைப்பற்ற. d ப4க3வத்ஸமாஶ்ரயணம் ஸுலகம், காமஸமாஶ்ரயணம் து3ஶ்ஶகம் என்னுமத்தை அருளிச்செய்கிருர் (இப்படி ஒருநாளை இத்யாதி3)



(தரை விளக்கி) e திருக்கண்ணமங்கையாண்டானைப்போலே இதுதானே ப்ரயோஜநமாய்ச் செல்லுகிறபடி. f ஸர்வேஶ்வரனுக்கு அஸாத4ாரணமான ஸ்த2லங்களிலே புக்குப் பரிசர்யை பண்ணிப்போரும் குடியிலே f2 பிறந்தவளிறே. g ப4க3வத்கைங்கர்யம் பண்ணுகைக்கு g2ஸ்த2லஶுத்3தி4 பண்ணுகிறபடியிறே இது.

(தண்மண்டலமிட்டு) குளிர்ந்து த3ர்ஶநீயமான மண்ட3லத்தையிட்டு. * தொழுதெழுதும் என்னுமிது மிகையான விஷயத்தைப்பற்றி வைத்து, இங்கே h மண்ட3ல பூஜை பண்ணு

---

*(தண்மண்டலமிட்டு)* குளிர்ந்து அழகான மண்ட3லாகாரமான கோலத்தையிட்டு. ''தொழுது மாமலர் நீர் சுடர் தூபம் கொண்டு எழுது மென்னுமிது மிகையாதலின்'' [திருவாய் 9-3-9] என்கிறபடியே 'தொழுது எழுவோம்' என்று கூறுவதையும் அதி4கமாக நினைக்கும் எம்பெருமானைப்பற்றிய இவள், அவனைப் பெருத ஆற்ருமையாலே மண்ட3லபூஜையே 1. மண்ட3லமிடுவதையே; 2. ஒரு மண்ட3லம் பூஜை செய்வதையே) செய்கிருளன்ருே. *(மண்டலமிட்டு)* வட்டமாகக் கோடிட்டு. வைஷ்ணவர்களுக்குத் தகாத வ்ருத்த ஹானியை (1. தே3வதாந்தர ஸமாஶ்ரயணமாகிற ஒழுக்கமின்மையை; 2. வட்டத்திற்கு ஹானியை) அனுஷ்டி2க்கும்போதும், ஞானம் கனிந்த நலமான ப4க்தியாலே இவள் செய்கையாலே அந்த வ்ருத்தஹாநியே ஸத்3வ்ருத்தமாய் (1. நல்லொழுக்கமாய்; 2. நல்ல வட்டமாய்)

---

f2 (பிறந்தவளிறே) ''இப்போது காமனுக்குப் பரிசர்யை பண்ணுகிருள்'' என்று பூரிப்பது. e,f ''தரைவிளக்கி'' என்றதுக்கு க்ஷேபத்திலே தாத்பர்யங்கள் அருளிச்செய்கிருர். (திருக்கண்ணமங்கையாண்டான் இத்யாதி3 வாக்யத்3வயமும்) g 'இது ப்ரயோஜனமோ? கைங்கர்யமன்ருே ப்ரயோஜநம்' என்ன அருளிச்செய்கிருர் (ப4க3வதி3த்யாதி3) g2 ஸ்த2லஶுத்3தி4-சாடு. கைங்கர்யத்துக்கு ஸாத4நமென்றபடி; திருவாராத4நத்துக்குப் பூர்வப4ாவியான ஸ்த2லஶுத்3தி4யென்று த்4வநி. h மண்ட3லபூஜை-சாடு. வ்ருத்தாகாரமாகப் பண

கிருளிறே ஆற்றுமை. (மண்டலமிட்டு) i வ்ருத்தஹாநியை அநுஷ்டி$_2$யாநிற்கச்செய்தே, இவள் செய்கையாலே அதுதானே i$_2$ ஸத்$_3$வ்ருத்தமாயிருக்கிறபடி. (தண்மண்டலமிட்டு மாசி முன்னாள்) ஒரு ப்ரயோக$_3$ம் பண்ணும்போது ஒருமண்ட$_3$லம் ஸேவிக்கவேணுமிறே, அதுக்குப் ப$_2$லவ்யாப்தி உண்டாம்போது. அதுக்காக மண்ட$_3$லஸேவை பண்ணுகிருள். (தண்மண்டலமிட்டு) இம்மண்ட$_3$லத்தில் செய்தறியாததொன்றிறே இவள் செய்கிறது. (மாசிமுன்னாள்) மாசி முற்கூறு-முதல் பதினைந்து. ஒரு j பக்ஷத்திலே நின்று அநுஷ்டி$_2$க்கவேணுமே. (ஐயநுண் மணல்கொண்டு தெருவணிந்து) k ஐயதாய், அவன் ஸௌகுமார்யத்துக்குச் சேரும்படி நுண்ணிதான மணலைக்

அமைகிறபடி. *(தண்மண்டலமிட்டு மாசிமுன்னாள்)* 'ஒரு ப$_2$லனைப் பெறுவதற்கு நோன்பு நோற்கும்போது ஒரு மண்ட$_3$ல காலம் நோன்பு நோற்ருல்தான் ப$_2$லம் உண்டாகும்' என்னும் நியமம் உண்டன்ருே. அதற்காக இவள்செய்யும் மண்ட$_3$லஸேவை இதுவே போலும்! *(தண்மண்டலமிட்டு)* இந்த பூ$_4$மண்ட$_3$லத்தில் எங்கும்எவரும் செய்தறியாததொன்றன்ருே இவள் செய்வது. எம்பெருமானைப் பெறவேண்டும் என்னும் கலக்கத்தாலே காமன் காலிலே விழுவார், இம்மண்ட$_3$லத்தில் இவள் தவிர எவரும் இல்லையன்ருே. *(மாசிமுன்னாள்)* மாசியில் பூர்வ (ஶுக்ல)பக்ஷமாகிற முதல் பதினைந்துநாள். ஒரு பக்ஷத்திலே (1. பூர்வபக்ஷத்திலே; 2. ஒரு பக்கத்திலே) நின்று அநுஷ்டி$_2$க்க வேண்டுமே. 'அநுஷ்டி$_2$ப்பதுதான் எதை? எனில் *(ஐயநுண் மணற்கொண்டு தெருவணிந்து)* அழகனை காமனுடைய அழகுக்குத் தக்க அழகையுடையதாய், மென்மைமிக்கவனை அவனுடைய மென்மைக்குத் தக்கபடி (காலை உறுத்தாதபடி) நுண்ணியதான மணலைக்கொண்டு அவன் வரும் தெருவை

ணுகை-அர்த்த$_2$ம்;தே$_3$ஶமெல்லாம் பூஜிக்கை-த்$_4$வநி. i வ்ருத்தஹாநி—இதர ஸமாஶ்ரயணமாகையாலே வ்ருத்தஹாநி; i$_2$ப$_4$க்திகார்யமாகையாலே ஸத்$_3$வ்ருத்தம். j பக்ஷம்-சாடு; பூர்வபக்ஷம்-அர்த்த$_2$ம்; ஒரு பார்ஶ்வம்-த்$_4$வநி. k ஐ-அழகு; அச்ச$_2$தை; ஐயதாய் - மார்த்த$_3$வமாய்; ம்ருது$_3$வாயென்றபடி.



கொண்டு. தெருவணிந்து-அவன் வரும் தெருவை அலங்கரித்து. (அழகினுக்கலங்கரித்து) வேருெரு ப்ரயோஜனத்துக்காக வன்றிக்கே இதுதானே ப்ரயோஜநமாக அலங்கரிப்பாரைப் போலே அலங்கரித்து. 'இப்படி ஸாத$_3$ரமாக ஆஶ்ரயிக்கிறது நீ என்பக்கல் என் கண்டு?' என்ன; (அநங்கதேவா) உன்னை அழியமாறியும் பிரிந்தாரை நீ சேர்க்கும் ஸ்வப$_4$ாவத்தைக்கண்டு. (உய்யவுமித்யாதி$_3$) l பேறு தப்பாதென்று அத்$_4$யவஸித்திருக்கலாவதொரு விஷயமன்றே பற்றிற்று; m விநாஶத்தை விளைப்பதான செயலைச்செய்திறே "உஜ்ஜீவிக்கலாம்" என்று பார்க்கிறது. n ப$_2$லத்துக்கு வ்யபி$_4$சாரமில்லாத ஸாத$_4$நத்தைப் பரிக்$_3$ரஹித்து வைத்திறே ப$_2$லம் n$_2$ பாக்ஷிகமான விஷயத்திலே

அலங்கரித்து. *(அழகினுக்கலங்கரித்து)* ஒரு பயனுக்காக அலங்கரிப்பதாகில், அப்பயனிலும் நெஞ்சு செல்லுமாகையாலே அலங்காரம் குறைவுடையதாகவேயிருக்கும். அப்படியல்லாமல் அலங்கரிப்பதனுலுண்டான அழகைக்காண்பதற்காகவே ஸ்வயம் ப்ரயோஜனமாக அலங்கரிப்பவர்களைப்போலே அலங்கரித்து. "இப்படி ஆர்வத்தோடு என்னை நீ ஆஶ்ரயிப்பது என்னிடம் என்ன கு$_3$ணத்தைக்கண்டு?" என்று மன்மத$_2$னுக்குக் கருத்தாகக் கொண்டு சொல்லுகிருள்-*(அநங்கதேவா)* உன் உடல்போனுலும் அதைப் பொருட்படுத்தாமல் பிரிந்தாரைச் சேர்ப்பதையே இயல்பாகக்கொண்ட உன் கு$_3$ணத்தைக் கண்டு உன்னை ஆஶ்ரயிக்கிறேன் என்கிருள். சிவனையும் பார்வதியையும் சேர்த்து வைக்கும் முயற்சியிலே சிவனுல் எரிக்கப்பட்டு உடல் அழிந்து 'அநங்க$_3$ன்' (தேஹம் இழந்தவன்) என்று பெயர்பெற்ற செய்தியை நினைக்கிருள். *(உய்யவுமாங்கொலோ...தொழுதேன்)* ஆங்கொலோ? என்கையாலே, தனக்குப் பேறு ஸித்$_3$தி$_4$ப்பதில் ஐயம் இருப்பதைக் காட்டுகிருள். இவள் பற்றுகிற தெய்வம் ஸர்வஶக்தியுடையதல்லாமையாலே "பேறு தப்பாது" என்று உறுதி

l "ஆங்கொலோ" என்று ஸம்ஶயிப்பானென்? என்ன அருளிச்செய்கிருர் (பேறு தப்பாது இத்யாதி$_3$) m சஶப்$_3$த$_3$த்திலே நோக்காகத் தாத்பர்யம் (விநாஶத்தை இத்யாதி$_3$)

விழுகிறது. (என்று o சொல்லி) உஜ்ஜீவிக்கலாமென்னுமாசை யாலே. (உன்னையும் உம்பியையும் தொழுதேன்) ததீ$_3$ யரோடேகூட அவனை உபாஸித்துப் போந்த வாஸனையாலே. p10. "स भ्रातुश्चरणौ गाढं निपीड्य रघुनन्दनः"(ஸ ப்$_4$ராதுஶ்சரணௌ க$_3$ாட$_4$ம் நிபீட்$_3$ய ரகு$_4$நந்த$_3$ந:) என்னுமாபோலே, தம்பி முன்னாகப் பற்றுகிருள். காமன் தம்பி-சாமன்; சாமனையும் உன்னையும் தொழுதேனென்கிருள். 11 "नमोऽस्तु रामाय सलक्ष्मणाय"

---

யுடன் இருக்கமுடியாதே. "பேறு தப்பாது" என்று உறுதியுடன் இருக்கக்கூடிய எம்பெருமானைப் பற்றியிருக்கும் இவளன்றோ ப்ராப்யத்வரையாலே கலங்கி, "பேறு உறுதியாகக் கிடைக்கும்" என்று சொல்லமுடியாத காமன் காலிலே விழுகிருள். ஸ்வரூபத்திற்கு அழிவு உண்டாக்கும் தே$_3$வதாந்தர ஸமாஶ்ரயணம் செய்தன்றோ ஸ்வரூபத்தைப்பெறப் பார்க்கிருள். *(என்று சொல்லி)* "உய்வு பெறலாமோ?" என்னும் ஆசையாலே. *(உன்னையும் உம்பியையும் தொழுதேன்)* எம்பெருமானை ஆஶ்ரயிக்கும்போது அவனடியார்களோடுகூட அவனைத் தொழுது போந்த பழக்கத்தாலே, தம்பியான ஶ்யாமனோடு கூடக் காமனைத் தொழுகிருள்.

10\. ஸ ப்$_4$ராதுஶ்சரணௌ க$_3$ாட$_4$ம் நிபீட்$_3$ய ரகு$_4$நந்த$_3$ந:।
ஸீதாமுவாசாதியஶா ராக$_4$வஞ்ச மஹாவ்ரதம் ॥[ரா-அ31-2]

[ரகு$_4$குலத்தை உகப்பிப்பவனும், மிகுந்த கீர்த்தியை உடையவனுமான அந்த லக்ஷ்மணன், தமையனின் திருவடிகளை நன்ருகப் பிடித்துக்கொண்டு, ஸீதையையும், (ஆஶ்ரிதஸம்ரக்ஷணமான) பெரிய வ்ரதத்தையுடைய ராக$_4$வனையும் பார்த்துச் சொன்னுன்.] என்று ஸீதாப்பிராட்டியை முன்னிட்டுக்கொண்டு பெருமாளைப் பற்றிய இளையபெருமாளைப்போலே தம்பியான சாமனை முன்னிட்டுக்கொண்டு காமனைப் பற்றுகிருள்.

---

n$_2$ பாக்ஷிகம்-ப$_2$லித்தல் விப$_2$லித்தல்; ஸந்தே$_3$ஹமென்றபடி.
l, n "பேறுதப்பாது" என்ற வாக்யவிவரணம் (ப$_2$லத்துக்கு இத்யாதி$_3$) o "சொல்லி" என்றது-ஆசையாலேயென்றபடி.
p காமனையேயன்றிக்கே அவன் தம்பியைத் தொழுததுக்குத்



(நமோऽஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய) என்னுமாபோலே. (தொழுதேன்) "தோள் அவனையல்லால் தொழா" என்னும் குடியிலே பிறந்திருக்கச் செய்தேயிறே இப்படி இவள் கையிழந்தது. 12. "कृतापराधस्य" (க்ருதாபராத$_4$ஸ்ய) இத்யாதி$_3$ - தீரக்கழிய அபராத$_4$ம் பண்ணினபின்பு ஓரஞ்ஜலி நேராமற் போகாது என்ருனிறே திருவடி - * க்ருதாபராத$_4$ர்க்குங்கூடக் கார்யகரமாவதொன்றிறே அஞ்ஜலி. ஏதுக்காகத்தான் இப்படி தொழுகிறது? என்ன (வெய்யதோர் இத்யாதி$_3$) ஸ்ரீவைகுண்ட$_2$த்

---

11\. நமோऽஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய
தே$_3$வ்யை ச தஸ்யை ஜநகாத்மஜாயை
[ரா-ஸு 13-60 ஹநுமத்$_2$வாக்யம்]

[லக்ஷ்மணனுடன் கூடிய ராமனுக்கு நமஸ்காரம்; ஜநகராஜன் திருமகளான அந்தப் பிராட்டிக்கும் நமஸ்காரம்.] என்று இளையபெருமாளை முன்னிட்டுக்கொண்டு பெருமாளைப் பற்றிய அனுமனைப்போலே, "உன்னையும், உன் தம்பியான சாமனையும் தொழுதேன்" என்கிருள். *(தொழுதேன்)* "தோள் அவனையல்லால் தொழா" [முதல்திரு 64] என்னும் குடியிலே பிறந்த இவளன்றோ இப்படித் தகாத விஷயத்தைத் தொழுது கையிழந்தாள்.

12\. க்ருதாபராத$_4$ஸ்ய ஹி தே நாந்யத் பஶ்யாம்யஹம் க்ஷமம்।
அந்தரேணாஞ்ஜலிம் ப$_3$த்$_3$த்$_4$வா லக்ஷ்மணஸ்ய
ப்ரஸாத$_3$நாத் ॥ [ரா-கி 32-17]

[(ராமனிடம்) அபராத$_4$ம் செய்த உனக்கு, கைகூப்பி லக்ஷ்மணனை உகப்பிப்பதைத் தவிர வேறு பிராயச்சித்தத்தை நான் காண்கிறேனல்லேன்.] என்கிறபடியே 'பரிபூர்ணமாகக் குற்றமிழைத்தவர்கள் அதற்குப் பரிஹாரமாக ஓர் அஞ்ஜலி செய்தே தீரவேண்டும்' என்ருனன்றோ அனுமன். குற்றமிழைத்தவர்களுக்கும் அக்குற்றத்தைப் போக்கி இஷ்டத்தை நிறைவேற்றித் தருவதன்றோ அஞ்ஜலி. "நீ எதற்காக என்னை இப்படித் தொழுகிருய்" என்று காமனுக்குக் கருத்தாகக் கொண்டு சொல்லுகிருள் மேலே—*(வெய்யதோர்......வேங்கடவற்கு)* ஸ்ரீவைகுண்ட$_2$த்திலே நித்யஸூரிகளுக்குத் தலைவனை

திலே நித்யஸூரிகளுக்கு ஓலக்கம் கொடுத்துத் தன் செருக்குத் தோற்ற இருக்கக்கடவன், "ஸம்ஸாரிகளும் இப்பேற்றைப் பெற்று வாழவேணும்" என்று அங்கு நின்றும் போந்து முதல்பயணம் எடுத்துவிட்டு, ஆஶ்ரிதவிரோதி$_4$ நிரஸநஶீலனை திருவாழியாழ்வானைக் கையிலே உடையனாய்க்கொண்டு திருமலையிலே வந்து நிற்கிறவனுக்கு, அக்கையும் திருவாழியுமான சேர்த்தியழகைக் காணவேணுமென்று ஆசைப்படுகிற என்னை அவனுடனே சேர்த்துவிடவல்லையே? q அவனே அண்ணியனாய் வந்து நின்றான்; எனக்கு அவனையொழியச் செல்லாமையுண்டாயிருந்தது. இனி சேர்த்துவிடவல்லையே? இப்போது "வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை" என்றதுக்குக் கருத்து - உகவாதாரை அழியச்செய்கைக்கும், உகப்பார்க்குக் கண்டுகொண்டிருக்கைக்கும் இதுதானே பரிகரமாயிருக்கை. r "கூராராழி வெண்சங்கேந்தி-வாராய்" என்றிறேயிருப்பது. 1.

---

யிருந்து காட்சி கொடுத்துக்கொண்டு, தன்பெருமை தோற்ற இருப்பவன் "ஸம்ஸாரிகளும் இப்பெரும்பயனைப்பெற்று வாழவேண்டும்" என்று பரமபத$_3$த்திலிருந்து கீழே இறங்கி முதல் பயணம் எடுத்துவிட்டபோது, அடியார்களுடைய விரோதி$_4$யைப் போக்கும் இயல்புடைய திருவாழியாழ்வானைக் கையிலேயுடையனாய்க்கொண்டு திருமலையிலே வந்துநிற்கிற திருவேங்கடமுடையானுக்கு. (என்னை விதிக்கிற்றியே) 'அக்கையும் திருவாழியும் சேர்ந்திருக்கும் அழகைக் காணவேணும்' என்று ஆசைப்படுகிற என்னைஅவனோடு சேர்த்துவிட வல்லவன் என்னும் நினைவாலேயே தொழுகிறேன். "அவனே அருகில்வந்து நிற்கிறான், நானோ அவனைப் பிரிந்தால் த$_4$ரிக்கமாட்டாதவளாயிருக்கிறேன். இந்நிலையில் நீயே என்னை அவனிடம் சேர்த்துவிடவேணும்" என்று கருத்து. இப்போது "வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை"

---

தாத்பர்யாந்தரம் (ஸ ப்$_4$ராதுர் இத்யாதி$_3$) q"வேங்கடவற்கு என்னை" என்கிற பத$_3$ங்களுக்குத் தாத்பர்யம் (அவனே இத்யாதி$_3$) நாயகியானவள் அழகுக்குடலாகவே சொல்லுமதொழிய, "வெய்யதோர் தழலுமிழ்" என்கிறதுக்குக் கருத்தென்னென்று ஶங்காபி$_4$ப்ராயம். r இரண்டுக்கும் பரி



## முதல் திருமொழி—இரண்டாம் பாட்டு

வெள்ளைநுண் மணற்கொண்டு தெருவணிந்து
வெள்வரைப் பதன்முன்னந் துறைபடிந்து
முள்ளுமில் லாச்சுள்ளி யெரிமடுத்து
முயன்றுன்னை நோற்கின்றேன் காமதேவா,
கள்ளவிழ் பூங்கணை தொடுத்துக்கொண்டு
கடல்வண்ண னென்பதோர் பேரெழுதி
புள்ளினை வாய்பிளந் தானென்பதோர்
இலக்கினிற் புகவென்னை எய்கிற்றியே.

பதவுரை:— காமதேவா—, வெள்ளை—வெளுத்து, நுண்—நுண்ணிதாயிருந்துள்ள, மணல்கொண்டு-மணலைக்கொண்டு, தெரு—அவன் வருகிற வழியை, அணிந்து—அலங்கரித்து, வெள்வரைப்பதன் முன்னம் — கிழக்கு வெளுப்பதற்கு முன்னே, துறை—நீர்த்துறைகளிலே சென்று, படிந்து—முழுகி, முள்ளும்—முள், எறும்பு முதலியவும், இல்லா—இல்லாத, சுள்ளி — விறகுகளை, எரிமடுத்து—அக்$_3$நியிலே

---

என்று சக்கரத்தாழ்வானுக்கு விஶேஷணமிடுவதற்குக் கருத்தென்ன? எனில்: எதிரிகளை அழிக்கும் ஆயுத$_4$மாகவும், அநுகூலர்க்குக் காணத்தக்க ஆப$_4$ரணமாகவும் இருக்கும் இந்த இரண்டு தன்மைகளும் தனக்கு உத்$_3$தே$_3$ஶ்யமாயிருக்கின்றன. என்று கருத்து. "கூராராழி வெண்சங்கேந்தி......வாராய்" [திருவாய் 6-9-1] என்று ஆழ்வாரும் அருளினாரன்றோ. "கூராராழி" என்கையாலே ஆயுத$_4$மாயிருக்கும் தன்மையும், "ஏந்தி" என்கையாலே ஆப$_4$ரணம்போலே அழகாய் இருக்கும் தன்மையும், தனக்கு உத்$_3$தே$_3$ஶ்யமாயிருக்கிறது என்று காட்டிய நம்மாழ்வாரைப்போலே. "வெய்யதோர் தழலுமிழ்" என்று ஆயுத$_4$மாய் இருக்கும் தன்மையும். "சக்கரக்கை" என்று ஆயுத$_4$மாயிருக்கும் தன்மையும் தனக்கு உத்$_3$தே$_3$ஶ்யமாயிருக்கிறது என்று காட்டுகிறாள். 1.

---

கரமாயிருக்குமோ? என்ன அருளிச்செய்கிறார் (கூராராழி இத்யாதி$_3$) கூராராழி என்கையாலே—விரோதி$_4$நிரஸநமும், "ஏந்தி" என்கையாலே—அழகும் தோற்றுகிறது. 1.

போட்டு, முயன்று—முயற்சிசெய்து, உன்னை—உன்விஷயமாக, நோற்கின்றேன் — வ்ரதமநுஷ்டி$_2$யாநின்றேன் ; கள் அவிழ் — மது ஒழுகாநின்றுள்ள, பூ — புஷ்பங்களாகிற, கணை—அம்புகளை, தொடுத்துக்கொண்டு—, கடல்வண்ணன்—கடல்போன்ற திருநிறத்தையுடையவன், என்பது—என்று சொல்லப்படுவதான, ஓர் இலக்கினில்—ஒரு லக்ஷ்யத்திலே, புக—புகும்படியாக, என்னை—, எய்கிற்றி — எய்யவேணும்

வ்யா :— இரண்டாம் பாட்டு — ( வெள்ளை நுண்மணல் இத்யாதி$_3$ ) ஸத்வப்ரசுரனான ஸர்வேஶ்வரனோட்டை ஸம்ப$_3$ந்த$_4$த்தாலும் தே$_3$வதையினுடைய ஸௌகுமார்யத்தாலுமாக, வெளுத்து நுண்ணிதாயிருந்துள்ள மணலைக்கொண்டு அவன் வரும் வழியை அலங்கரித்து. (a வெள்வரைப்பதன் முன்னம் துறைபடிந்து ) " நாட்காலே நீராடி " என்று அவனை நோக்கிக் குளித்த வாஸநையாலே கிழக்கு வெளுப்பதற்கு முன்னே நீர்நிலைகளிலே முழுகி, b"கீழ்வானம் வெள்ளென்று"

---

2. *அவ:*— தான் நோன்புநோற்கும் படிகளை விரிவாகப் பேசி, " என்னை எம்பெருமானிடம் சேர்ப்பிக்கவேணும் " என்கிறாள்.

*வ்யா:— (வெள்ளை நுண்மணற்கொண்டு தெருவணிந்து)* ஸத்வகு$_3$ணமே வடிவெடுத்த எம்பெருமானோடு ஸம்ப$_3$ந்த$_4$த்தாலே. அவனுக்குரிய வெள்ளைமணலைக்கொண்டு ரஜோகு$_3$ணம் மிக்க இவன் வரும் தெருவையும் அலங்கரிக்கிறாள். இவன் மென்மைமிக்கவளுகையாலே காலில் உறுத்தாதபடி நுண்ணிய மணலைக்கொண்டு, அவன் வரும்வழியை அலங்கரிக்கிறாள். *(வெள்வரைப்பதன்முன்னம் துறைபடிந்து)* "நாட்காலே நீராடி" [திருப்பாவை 2] என்று அவனைக் குறித்து நோன்புநோற்கும் போது குளித்த பழக்கத்தாலே, இவனைக் குறித்து நோன்பு நோற்கும்போதும் கிழக்கு வெளுப்பதற்கு முன்னே நீர் நிலைகளில் முழுகுகிறாள். "கீழ்வானம் வெள்ளென்று"[திருப்பாவை-8]

---

அரு:—இரண்டாம் பாட்டு—(வெள்ளை இத்யாதி$_3$)a வெள்வரை-கிழக்கு வெளுக்கை. b "வெள்வரைப்பதன் முன்னம்" என்கிற பத$_3$த்துக்கு வாஸநை ( கீழ்வானம். இத்யாதி$_3$ )



என்று-அவனைக்குறித்து நோற்குமிடத்து "துணுக்குத்துணுக்கு" என்னுமித்தையிறே இவனை நோக்கிச் செய்கிறது. (துறைபடிந்து) ஸ்ரீ ப$_4$ரதாழ்வான் ராமவிரஹம் ஆறுகைக்குச் செய்யுமத்தையாய்த்து இவன்பக்கலிலே செய்கிறது. 13. "कथं स्वपररात्रेषु सरयूमवगाहते" (கத$_2$ம் ந்வபரராத்ரேஷு ஸரயூமவக$_3$ாஹதே)யிறே. (முள்ளுமித்யாதி$_3$) c எறும்பும் மற்றொன்றுள்ளவை இல்லாமையேயன்றிக்கே முள்ளுமின்றிக்கேயிருக்கிற, சுள்ளியுண்டு - இளவிறகு, அத்தை அக்$_3$நியிலே

---

என்று அவனைக்குறித்து நோற்கும்போது 'கிழக்கு வெளுத்துவிட்டது' என்று பதறினாற்போலே, இவனைக்குறித்து நோன்பு நோற்கும்போதும் பதறுகிறாள். *(துறைபடிந்து)*

13. அத்யந்த ஸுக$_2$ஸம்வ்ருத்$_3$த$_4$: ஸுகுமார: ஸுகே$_2$ாசித: ।
கத$_2$ம் ந்வபரராத்ரேஷு ஸரயூமவக$_3$ாஹதே ॥[ரா-ஆ16-30]

[மிகவும் ஸுக$_2$த்திலே வளர்ந்தவனும், ஸுகுமாரனும், ஸுக$_2$த்திற்கே தகுந்தவனுமான ப$_4$ரதன், பின் இரவுகளிலே எப்படித்தான் ஸரயூநதி$_3$யில் குடைந்தாடுகின்றானோ?] என்கிற படியே ஸ்ரீப$_4$ரதாழ்வான் ராமனைப் பிரிந்த விரஹதாபம் ஆறுவதற்காக ஸரயூநதி$_3$யில் குளித்ததுபோலே, கிருஷ்ணனைப் பிரிந்த விரஹதாபம் ஆறுவதற்குக் குளிக்கவேண்டியவள், காமனைக் குறித்து நோன்பு நோற்பதற்கு அங்க$_3$மாகக் குளிக்கிறாளன்றோ ப்ராப்யத்வரையாலே கலங்கி. *(முள்ளுமில்லாச் சுள்ளி எரிமடுத்து)* முள்ளும் என்கிற சகாரத்தாலே (உம்மையாலே) எறும்பு முதலானவற்றைக் கூட்டுகிறாள். சுள்ளியாவது—இளம்விறகு. அது எறும்பு முதலான பிராணிகள் இல்லாததாக இருந்தால்தான் ஹோமத்திற்குத் தக்கதாகும். அத்துடன் நில்லாமல், மென்மைமிக்க காமனைக் குறித்து நோன்பு நோற்கையாலே முள்ளுமில்லாத சுள்ளியைத் தேடி ஹோமம் செய்கிறாள். *(எரிமடுத்து)* சுள்ளியை அக்$_3$நியிலே ஹோமம்செய்து; ஸமித்தை அக்$_3$நியிலே நன்றாக ஹோமம் செய்

---

c"முள்ளும்" என்கிற *சஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம்* (எறும்புமித்யாதி$_3$)

யிட்டு. ஸமித்தை அக்$_3$நியிலே போர மடுத்ததனையும் க்ருஷ்ணனைப் போர அணைக்கலாம் என்றிருக்கிறாள். பெரியாழ்வார் ப$_4$க$_3$வத்ஸமாராத$_4$ந ரூபமாகச் d செல்லும் அக்$_3$நிஹோத்ர ஹோமத்துக்கு வேண்டுவன எடுத்துக் கைநீட்டக் கடவளிறே இப்போது இது செய்கிறாள். (முயன்று) 14. "तत्तस्य" (தத் தஸ்ய) என்னும்படியே அவனேயென்று அறுதியிட்டிருக்கக் கடவ நான், இப்போது அவனைப் பெறுகைக்கு உன்காலிலே விழுந்து படுகிற யத்நமெல்லாம் கண்டாயே! (உன்னை) நான் பற்றியிருக்கும் விஷயந்தான் இன்னதென்னுமிடமறிதியே?

---

தால், அதன் பயனாகக் கண்ணனை நன்றாக அணைக்கலாம் என்று நினைக்கிறாள்போலும். பெரியாழ்வார் திருநந்த$_3$வன கைங்கர்யம் முதலான அந்தரங்க$_3$ கைங்கர்யங்களுக்கு முரணில்லாத காலங்களிலே எம்பெருமானுக்கு ஆராத$_4$னமாக நடத்தும் ஸ்வயம் ப்ரயோஜனமான அக்$_3$நிஹோத்ர ஹோமத்திற்கு உபகரணங்களை எடுத்துக்கொடுக்கும் பழக்கமுடைய ஆண்டாளன்றோ, இப்போது அறிவுகலங்கி எம்பெருமானைப் பெறுவதற்குக் காமனைக் குறித்து ஸாத$_4$னானுஷ்ட$_2$ானம் செய்கிறாள். (*முயன்று*)

14. ஶரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரப$_3$லார்த்த$_3$ந: ।
மாம் நயேத்$_3$ யதி$_3$ காகுத்ஸ்த$_2$ஸ் தத் தஸ்ய
ஸத்$_3$ருஶம் ப$_4$வேத் ॥ [ரா-ஸு 39-30]

[ஶத்ருக்களின் ப$_3$லத்தை ஒழிப்பவரான ஸ்ரீராமபிரான் லங்கையை ப$_3$ாணங்களாலே கலங்கச்செய்து என்னை அழைத்துப்போவாராகில், அப்படிச்செய்வது அவருக்கே தகுந்ததாகும்.] என்கிறபடியே, அவனை அடைவதற்கும் அவனே உபாயம் என்று உறுதிபூண்டிருக்கவேண்டிய நான், இப்போது அவனைப் பெறுவதற்காக உன்காலிலே விழுந்து செய்கிற முயற்சியெல்லாம் கண்டாயே! (*உன்னை நோற்கின்றேன்*) நான் பற்றியிருக்கும் விஷயம் எல்லாப்படியாலும் சிறந்த பரமபுருஷனே என்பதை அறிவாயல்லவா; அவனைப் பற்றியிருக்கிற நானன்றோ

---

d செல்லும்—நடத்தும். கைங்கர்யபரராயிருக்கிற பெரியாழ்வாருக்கு ஹோமஸமாராத$_4$னையில் யோக்$_3$யதையில்லாவிட்டாலும் வர்ணஸாம்யத்தைப் பற்றச் சொல்லுகிறது.



அவனைப் பற்றியிருக்கக்கடவ நானன்றோ உன் காலிலே விழுந்து துவளுகிறேன். 'அதுண்டு; அதுக்கு நான் செய்ய வேண்டுவதென்?' என்ன; (கள் அவிழித்யாதி$_3$) இனிச் சாணையில் ஏறிடவேண்டாவாய்த்து, "ஶிதை:" என்கிறபடியே. மது$_4$ விரியாநின்றுள்ள புஷ்பப$_3$ாணங்களைத் தொடுத்துக்கொண்டு, கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவனுடைய e திருநாமத்தை அம்பிலே எழுதிக்கொண்டு என்னுதல்; f ஹ்ருத$_3$

---

அவனைப் பெறாத ஆற்றாமையாலே உன்காலிலே விழுந்து துவளுகிறேன் "அதிருக்கட்டும்; அதற்கு நான் என் செய்வது?" என்று காமன் கேட்க, பிற்பாதியாலே பதில் கூறுகிறாள் — (*கள்ளவிழ்...எய்கிற்றியே*) "*ஶிதை:*" [ ] என்கிற மற்ற அம்புகளைப் போலே அடிக்கடி சாணையிலிட்டுத் தீட்டவேண்டாத பூங்கணைகளை உடையவனன்றோ நீ என்கிறாள். (*கள்ளவிழ் பூங்கணை தொடுத்துக்கொண்டு*) தேன் ஒழுகாநிற்கும் மலர் அம்புகளைத் தொடுத்துக்கொண்டு. (*கடல் வண்ணனென்பதோர் பேரெழுதி*) கடல்போலே கண்டார் களைப்பை ஆற்றும் வடிவழகை உடையவனுடைய திருநாமத்தை உன்னுடைய அம்பிலே எழுதிக்கொண்டு. அம்பிலே "கடல்வண்ணனை ஆண்டாள் ஆசைப்பட்டாள்" என்று எழுதி, அக்கடல்வண்ணன்மேல் எய்தால், இவ்வம்பின் பெருமையாலே அவன் தன்னை அங்கீ$_3$கரித்துவிடுவான் என்று நினைக்கிறாள். அன்றிக்கே "பேரெழுதி" என்றது—"கடல்வண்ணன்" என்னும் பெயரை உன் நெஞ்சிலே எழுதிக்கொண்டு—என்கிறதாகவுமாம். "கடல்வண்ணனோடே ஆண்டாளைச் சேர்க்கவேணும்" என்று நெஞ்சிலே இவன் ஸங்கல்பித்துவிட்டால் அவன் தன்னை அங்கீ$_3$கரித்துவிடுவான் என்று நினைக்கிறாள்.

---

e (திருநாமத்தை அம்பிலே எழுதிக்கொண்டு) என்ற பக்ஷத்தில், 'ஶ்ரமஹரமான வடிவையுடைய உன்னை இன்னாள் ஆசைப்பட்டாள்' என்று எழுதிக்கொண்டு, அவனுக்கு இவ்வழியாலே என்பக்கலிலே ப்ராவண்யத்தை உண்டாக்கி, பின்னை அவனோடே என்னைச் சேர்க்கவேணும் என்று இவ்வளவாகத் தாத்பர்யம் விவக்ஷிதம். f (ஹ்ருத$_3$யத்திலே

யத்திலே எழுதிக்கொண்டு என்னுதல். ப3காஸுரனுடைய வாயைக் கிழித்து விரோதி4நிரஸநஶீலனாயிருக்கிறவன் பக்க லிலே நான் சென்று சேரும்படி பண்ணவல்லையே? 15. "भर्तारं परिषस्वजे" (ப4ர்த்தாரம் பரிஷஸ்வஜே) நான் அவனை அணைக்கும்படி பண்ணவல்லையே? 2.

## முதல் திருமொழி—மூன்றும் பாட்டு

மத்தநன் னறுமலர் முருக்கமலர்
கொண்டுமுப் போதுமுன் னடிவணங்கி,
தத்துவ மிலியென்று நெஞ்செரிந்து
வாசகத் தழித்துன்னை வைதிடாமே,
கொத்தலர் பூங்கணை தொடுத்துக்கொண்டு
கோவிந்த னென்பதோர் பேரெழுதி,
வித்தகன் வேங்கட வாணனென்னும்
விளக்கினிற் புகவென்னை விதிக்கிற்றியே.

---

*(புள்ளினை வாய் பிளந்தான் என்பதோர் இலக்கினில் புக வென்னை எய்கிற்றியே)* கொக்கின் உருவில் வந்த ப3காஸுரனுடைய வாயைக் கிழிப்பதன்மூலம், தான் விரோதி4களை அழிப்பதை இயல்வாகக் கொண்டவன் என்பதைக் காட்டிக்கொண்ட எம் பெருமானிடத்திலே நான் சென்று சேரும்படி செய்வாயா?

15. தம் த்3ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணும்
ஸுக2ாவஹம் |
ப3பூ4வ ஹ்ருஷ்டா வைதே3ஹீ ப4ர்த்தாரம் பரிஷஸ்வஜே ||
[ரா-ஆ 94-18]

[எதிரிகளை அழித்தவரும், மஹர்ஷிகளுக்கு ஸுக2த்தை அளிப்ப வருமான ராமபிரானைப் பார்த்து, விதே3ஹராஜபுத்ரியான சீதை ஆநந்த3ங்கொண்டவளாய் உளளானள். தன் கணவரான அவரை நன்கு தழுவிக்கொண்டாள்.] என்று விரோதி4களை அழித்த அவனை அணைத்துக்கொண்ட ஸீதாப்பிராட்டியைப் போலே நானும் அவனை அணைக்கும்படி செய்யவல்லாயோ? 2.

---

எழுதிக்கொண்டு) என்ற பக்ஷத்தில், 'இன்னானோடே இவளைச் சேர்ப்பிக்கவேணும்' என்று ஹ்ருத3யத்திலே ஸங்கல்பித்துக்கொண்டு என்றபடி. 2.



பதவுரை:—**மத்தம் நல் நறுமலர்**—ஊமத்தையினுடைய நல்ல மலர்களையும், **முருக்கமலர்**—பலாசம்புஷ்பங்களையும், **கொண்டு**—கையிற்கொண்டு, **முப்போதும்**—காலை மாலை உச்சியாகிற மூன்றுபோதிலும், **உன்**—உன்னுடைய, **அடி**—அடிகளிலே, **வணங்கி**—தண்டனிட்டு, **தத்துவமிலி**—இவன் ஸத்யம் தப்பினவன், **என்று**—, **நெஞ்செரிந்து**—நெஞ்சு கொதித்து, **வாசகத்து**—வாயாலும், **அழித்து**—, **உன்னை**—, **வைதிடாமே**—வையாதபடி, **கொத்து**—கொத்துக்கொத்தாக, **அலர்**—மலர்கின்ற, **பூங்கணை**—புஷ்ப பா3ணங்களை, **தொடுத்துக்கொண்டு**—, **கோவிந்தனென்பது**—கோ3விந்த3னென்று சொல்லப்படுவதான, **ஓர்**—ஒரு, **பேர்**—பேரை, **எழுதி**—நெஞ்சிலே எழுதிக்கொண்டு, **வித்தகன்**—வியக்கத் தக்கவனாய், **வேங்கடவாணன்**—திருமலைக்கு நிர்வாஹகன், **என்னும்**—என்று சொல்லப்படுகிற, **விளக்கினில்**—விளக்கிலே, **புக**—புகும்படி, **என்னை விதிக்கிற்றி**—என்னை நியமிக்கவேணும்.

வ்யா:—மூன்றும் பாட்டு. (a மத்தமித்யாதி3) ரஜோகு3ண ப்ரசுரனாயிருக்கையாலே, அதுக்கு அநுரூபமாம்படி மத3கரமான புஷ்பங்களைக்கொண்டு. b மத3மத்தையினுடைய நன்றான செவ் விப்பூ, முருக்கம்பூ இவற்றைக்கொண்டு. திருத்துழாய் பறிக்கும் குடியிலே பிறந்தவளிறே இப்போது இவனுக்கு

---

3. *அவ:—* நான் நெஞ்செரிந்து உன்னை வையாமல் இருக்கவேண்டுமானால், நீ என்னை வேங்கடவனோடு சேர்த்து விடவேணும் என்கிறாள்.

*வ்யா:—* *(மத்த நன்னறுமலர் முருக்கமலர் கொண்டு)* காமன் ரஜோகு3ணம் மிக்கவனாயிருக்கையாலே, அதற்குத் தக்கபடி காமத்தைத் தூண்டும் மணம் மிக்க ஊமத்தம்பூ, முருக்கம்பூ ஆகிய பூக்களைக்கொண்டு. பரமஸாத்விகமான திருத்துழாய் பறிக்கும் குடியிலே பிறந்த இவளன்றோ இப்போது இவனுக்கு

---

அரு:—மூன்றும் பாட்டு. (மத்தமித்யாதி3) a,b மத்தமலர்-மத3மத்தம்பூ.

இவை தேடுகிருள். (முப்போதும் உன் அடி வணங்கி) ஒரு போது தொழுகைதானும் மிகையாம்படியான விஷயத்தைப் பற்றிவைத்திறே இவனை த்ரிஸந்தி$_4$யும் ஆஶ்ரயிக்கிறது! c "காலை மாலை கமலமலரிட்டு நீர் – மாலை நண்ணித் தொழு தெழுமின்" "கள்ளவிழும் மலரிட்டு நீரிறைஞ்சுமின்" "விண்டு வாடா மலரிட்டு நீரிறைஞ்சுமின்" "பூசித்தும் போக்கினேன் போது" என்று காலக்ஷேபார்த்த$_2$மாகவும் ஸ்வயம் பே$_4$ாக்$_3$யமாகவும் ப$_4$க$_3$வத்கைங்கர்யம் பண்ணும் குடியிலே பிறந்தவள்கிடீர் இப்படி இவனை ஆஶ்ரயிக்கிருள்! (d தத்துவ மிலியித்யாதி$_3$) உன் ஸ்வரூபம் அழியாமே நோக்கிக்கொள்ளப்பார்கிடாய். இவனை ஆஶ்ரயித்தால் பெறுவதொரு ப$_2$ல மில்லையென்று, "இவன் பொய்சொல்லி" என்று நெஞ்சு

---

ரஜோகு$_8$ணம் மிக்க இப்பூக்களைத் தேடியிடுகிருள். *(முப்போதும் உன் அடி வணங்கி)* "ஒருபோது தொழுவதுகூட பேற்றைப் பெறுவதற்குத் தேவையில்லை" என்று நினைக்கும் எம்பெருமானைப் பற்றிய இவளன்றோ, காலை மாலை உச்சியாகிற மூன்று காலங்களிலும் இவனை ஸாத$_4$நமாக ஆஶ்ரயிக்கிருள். "காலை மாலை கமலமலரிட்டு நீர் மாலை நண்ணித் தொழுதெழுமினோ" [திருவாய் 9-10-1] "கள்ளவிழும் மலரிட்டு நீர் இறைஞ்சுமின்" [திருவாய் 9-10-2] "விண்டு வாடா மலரிட்டு நீர் இறைஞ்சுமின்" [திருவாய் 9-10-3] "பூசித்தும் போக்கினேன்போது" [நான்முகன் திரு 63] என்று போதுபோக்காகவும், ஸ்வயம் ப்ரயோஜனமாகவும் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்யும் குடியிலே பிறந்தவளன்றோ இப்படி ஸாத$_4$நாநுஷ்ட$_2$ானம் செய்து இவனை ஆஶ்ரயிக்கிருள். *(தத்துவமிலியென்று)* என்று தொடங்கும் இரண்டாவது அடியாலே "நல்லவனென்று இது வரையில் பெயரெடுத்த நீ, தீயவனென்று பெயர் வராதபடி உன் பெயரைக் காப்பாற்றிக் கொள்வாய்" என்கிருள். *(தத்துவமிலியென்று நெஞ்செரிந்து)* "இவனை ஆஶ்ரயிப்பதால் ஒரு ப$_2$லனும் கிடைக்கவில்லை" என்னும் காரணத்தாலே, "இவன் பொய் சொல்லி" என்று நெஞ்சு கொதித்து. *(வாசகத் தழித்துன்னை வைதிடாமே)* அந்தக் கொதிப்பானது

---

c தாத்பர்யாந்தரம் (காலை மாலையித்யாதி$_3$) d தத்துவம்-



கொதித்து, அதுதான் நினைவுமாத்ரமாகையன்றிக்கே வாயாலே அழித்துப் பலருமறியும்படி உன்னை வைதிடாமே. (கொத் தலரித்யாதி$_3$) 16. "शरवर्षं ववर्ष ह" (ஶரவர்ஷம் வவர்ஷ ஹ) என்று கொண்டு நூறும் பத்தும் ஆயிரமுமாகப் பெருமாள் திருச்சரங்கள் தொடுத்துவிடுமாபோலே, நீயும் கொத்துக் கொத்தான புஷ்பங்களைத் தொடுத்துக்கொண்டு எங்களுடைய ரக்ஷணத்துக்கு முடிசூடியிருக்கிறவனுடைய திருநாமத்தையும் நெஞ்சிலே எழுதிக்கொண்டு. (e வித்தகன் வேங்கடவாணன்) பரமபத$_3$த்திலே நித்யஸூரிகள் ஓலக்கங்கொடுக்க இருக்கக்

---

நெஞ்சோடு நில்லாமல் வாய் வழியாகவும் புறப்பட்டுப் பலரும் அறியும்படி நான் உன்னை வைதிடாமல். "தருமமறியாக் குறும்பனை — பொருத்தமிலியை" [நாச்-திரு 14-6] "புறம் போலுள்ளும் கரியானை" [நாச்-திரு 14-7] "ஏலாப்பொய்களுரைப்பானை" [நாச்-திரு 14-3] 'பெண்ணின் வருத்தமறியாத பெருமான்' [நாச்-திரு 13-1] என்று அவனை வைவதுபோலே உன்னையும் வைய நேரும் என்று ப$_4$யமுறுத்துகிருள். (கொத் *தலர் பூங்கணை தொடுத்துக்கொண்டு*)

16. ததோ ராமோ மஹாதேஜா த$_4$நுராத$_3$ாய வீர்யவாந் ।
ப்ரவிஶ்ய ராக்ஷஸம் ஸைந்யம் ஶரவர்ஷம் வவர்ஷ ஹ ॥
[ரா-யு 94-18]

[அதற்குப்பிறகு மஹாதேஜஸ்வியும் வீர்யவானுமான ராமன் வில்தாங்கி ராக்ஷஸ ஸைந்யத்தினுள் நுழைந்து *சரமழை பொழிந்தான்.*] என்கிறபடியே பத்தும் நூறும் ஆயிரமுமாக ஸ்ரீராமபிரான் அம்புகளைக் கொத்துக் கொத்தாகத் தொடுத்து விடுவதுபோலே, நீயும் கொத்துக் கொத்தான புஷ்ப ப$_3$ாணங்களைத் தொடுத்துக்கொண்டு. *(கோவிந்தன் என்பதோர் பேரெழுதி)* எங்களை ரக்ஷிப்பதற்காக கோ$_3$விந்த$_3$பட்டாபி$_4$ஷேகம் செய்துகொண்டிருக்கிறவனுடைய கோ$_3$விந்த$_3$ நாமத்தையும் உன் நெஞ்சிலே அல்லது அம்பிலே எழுதிக்கொண்டு. *(வித்தகன் வேங்கடவாணன்)* பரமபத$_3$த்திலே நித்யஸூரிகளுக்குக் காட்சி

---

உண்மை; e வித்தகன் - ஸமர்த்த$_2$ன். d தத்துவமென்று-க$_4$டகரூபமாதல்; ஸத்யவாதி$_2$த்வமாதல்.

கடவ அவன், அவ்விருப்பைவிட்டு, கானமும் வானரமும் வேடரும் ஓலக்கங்கொடுக்கத் திருமலையிலே வந்து நிற்கிற விஸ்மயநீயன். "மிகுமதத்தேன் வி ண் ட மலர்கொண்டு விறல்வேங்கடவனையே கண்டு வணங்கும் களிறு" என்றும், "வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கென்று எப் பொழுதும் கைநீட்டும் யானையை" என்றும்—திருவிளக்கிடுவ னவும் திருவாராதநம் பண்ணுவனவும் இவையிறே. f *சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி யந்தூபந்தராநிற்கவே அங்கு, அதிற்காட்டில் இது பே$_4$ாக்$_3$ய மாயிறே இங்குவந்து அவன் நிற்கிறது. (வேங்கடவாண னென்னும் விளக்கினில்) பரமபத$_3$த்திலே ஸ்வரூபம் மைத்துப் போலேயிருப்பது ; திருமலையிலே வந்து நின்றபின்பாய்த்து

---

கொடுத்துக் கொண்டிருக்கக் கூடிய வல்லமையுடையவன் அவ் விருப்பைவிட்டு,"கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம்' [நான்முகன் திரு 47] என்கிறபடியே வனவிலங்குகளுக்கும், குரங்குகளுக்கும், வேடர்களுக்கும் காட்சி கொடுத்துக்கொண்டு திருமலையிலே வந்து நிற்கும் வியக்கத்தக்கவனுனன். "மிகுமதத் தேன் விண்ட மலர்கொண்டு விறல் வேங்கடவனையே கண்டு வணங்கும் களிறு " [மூன்றாம்திருவ 70] என்றும். "வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கென்று எப்பொழுதும் கைநீட்டும் யானையை" [நான்-திருவ 46] என்றும் வனவிலங்குக ளன்றோ திருவேங்கடமுடையானுக்குத் திருவிளக்கு இடுவன வாகவும், திருவாராத$_4$னம் பண்ணுவனவாகவும் பணிபுரிகின்றன. "சூட்டு நன்மாலைகள் தூயன ஏந்தி விண்ணோர்கள் நன் னீராட்டி அந்தூபம் தராநிற்கவே அங்கு " [திருவிருத்தம் 21] என்கிறபடியே அங்கு நித்யஸூரிகள் பரமவிலக்ஷணமாகத் திருவாராத$_4$நம் செய்யாநிற்க, அதைக் காட்டிலும் இதை உகந்தன்றோ இங்கு வந்து அவன் பொருந்திநிற்கிறது.

---

f நித்யஸூரிகள் ஆராதி$_4$க்கிறத்தை விட்டு வருகைக்கு ஹேதுவென்? என்ன, அருளிச்செய்கிறுர் (சூட்டுநன்மாலை இத்யாதி$_3$) 3.



ஸ்வரூபகு$_3$ணங்களுக்கு ப்ரகாஶமுண்டாய்த்து. குன்றத்திலிட்ட விளக்காய்த்தே. * வேடார் திருவேங்கடம் மேயவிளக்கிறே. திருமலையிலே பொருந்தினபின்பிறே உஜ்ஜ்வலனாய்த்து. 3.

## முதல் திருமொழி—நாலாம் பாட்டு

சுவரில் புராணநின் பேரெழுதிச்
    சுறவநற் கொடி(க்)களுந் துரங்கங்களும்,
சுவரிப் பிணுக்களுங் கருப்புவில்லும்
    காட்டித்தந் தேன்கண்டாய் காமதேவா,
அவரைப் பிராயந் தொடங்கியென்றும்
    ஆதரித் தெழுந்தவென் தடமுலைகள்,
துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத்
    தொழுதுவைத் தேனொல்லை விதிக்கிற்றியே.

பதவுரை:— புராண—பழையவனே! சுவரில்—சுவர்க ளிலே, நின்—உன்னுடைய. பேர்—பெயர்களை, எழுதி— வரைந்து, சுறவம்—சுருவென்னும் மத்ஸ்யங்களெழுதின, நல்—நல்ல, கொடிகளும்—துகிற்கொடிகளையும், துரங்கங் களும்—குதிரைகளும், கவரி—சாமரங்களையுடைய, பிணுக் களும்—பெண்களும், கருப்பு வில்லும்—கரும்பாகிற வில்லை யும், காட்டித் தந்தேன் கண்டாய் — உனக்கு உரித்தாம்படி பண்ணினேன் கிடாய்; அவரைப் பிராயம் தொடங்கி— பா$_3$ல்யம் தொடங்கி, என்றும்—என்றும் ஒருபடிப்பட,

---

*(வேங்கட வாணனென்னும் விளக்கினில்)* பரமபத$_3$த்தில் மங்கி யிருந்த ஸ்வருபகு$_3$ணங்கள் திருமலையிலே வந்துநின்ற பின்பே விளக்கம் பெற்றன என்கிருள். திருமலைக்கு வந்தபின்பு கு$_3$ணஸமூஹம் குன்றிலிட்ட விளக்காயிற்று என்றபடி. " வேடார் திருவேங்கடமேய விளக்கே" [பெரியதிரு 4-7-5] என்று திருமலையிலே பொருந்திய பின்பே விளங்காநின்ருன் என்ருரன்றோ திருமங்கையாழ்வார். *(விளக்கினில் புகவென்னை விதிக்கிற்றியே)* அந்த விளக்கில் புகும்படியாக என்னை நியமிக்க வேணும் என்கிருள். 3.

ஆதரித்து—விரும்பி, எழுந்த—கிளர்ந்த, என்—என்னுடைய, தடம்—பருத்த, முலைகள்—முலைகளை, துவரைப்பிரானுக்கே—த்$_3$வாரகாநாத$_2$னை கண்ணனுக்கே என்று, சங்கற்பித்து—ஸங்கல்பித்துக்கொண்டு, தொழுது வைத்தேன் — தொழுதேன் ;· ஒல்லை—சீக்கிரமாக, விதிக்கிற்றி—விதிக்கவேணும்.

வ்யா:—நாலாம் பாட்டு. (சுவரிலித்யாதி$_3$) a தன் த்வரையாலே ஒன்றைச் செய்கிறாளித்தனைபோக்கி, க்ருஷ்ணனை ஸ்மரித்தவாறே இவனை மறக்கக்கூடுமே ; அதுக்காக அவன் பெயரை ஒரு பி$_4$த்தியிலே எழுதிவைக்குமாய்த்து. " எழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி " என்கிறதெல்லாம் இவன் விஷயத்திலேயாய்த்து இவளுக்கு. (a$_2$ புராண) பழையதாகப் பிரிந்தாரைச் சேர்த்துப் போருமவனன்றோ நீ. (சுறவநற் கொடிகளும்) க$_3$ருட$_3$த்$_4$வஜனோடே வாஸநை பண்ணிப்

---

4. *அவ:*— தன் ஆற்றாமையை விவரிக்கிறாள்.

*வ்யா:*— *(புராண ! சுவரில் நின் பேரெழுதி) (புராண)* பிரிந்தாரைக் கூட்டுவிப்பவன் என்று பழங்காலத்திலிருந்து பெயர்பெற்றிருப்பவனே ! *( சுவரில் நின் பேரெழுதி )* சுவரில் உன்னுடைய பெயரை எழுதி. தன் ப்ராப்ய த்வரையாலே காமனை ஆஶ்ரயிக்கிறாளேயொழிய, கண்ணனை நினைத்தவுடன் இவனை மறந்துவிடும் இயல்புடையவளன்றோ ; அப்படி மறக்காமைக்காக ஒரு சுவரிலே அவன் பெயரை எழுதிவைத்துக் கொள்ளுகிறாள். " எழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன்போது' [நான்-திருவ 63] என்று எம்பெருமான் விஷயத்தில் போதுபோக்குக்கு உறுப்பாகச் செய்வதெல்லாம், இவன் விஷயத்திலேயாயிற்று இவளுக்கு. *(சுறவநற் கொடிகளும்)* சுறு மீனுகிற மகரத்தைக் கொடியாக உடைய மகரத்$_4$வஜனுகையாலே, மகரக்கொடிகளை இவனுக்கு நெஞ்சாலே ஸமர்ப்பிக்கிறாள். க$_2$ருட$_3$த்$_4$வஜ

---

அரு:— நாலாம் பாட்டு. (சுவரிலித்யாதி$_3$) a உபாஸ்ய விஷயம் நெஞ்சிலேயிராதோ, காமன் பேரை எழுதவேண்டு



போருமது தவிர்ந்து, மகரத்$_4$வஜனை நினைக்கும்படியாய் வந்து விழுந்தது. " சுறவம் " என்று — ஒரு மத்ஸ்யவிஶேஷம். (a$_3$ துரங்கங்களும்) க்ருஷ்ணனுடைய தேர்பூண்ட புரவிகளை நினைத்திருக்குமது தவிர்ந்து, இவனுடைய குதிரைகளை நினைத்திருக்கிறாள். (கவரிப் a$_4$ பிணைக்களும்) விமலாதி$_3$களை ஸ்மரிக்குமது தவிர்ந்து, இவனுக்குச் சாமரமிடுகிற ஸ்த்ரீகளையாய்த்து நினைக்கிறது. (கருப்புவில்லும்) "சார்ங்கமென்னும் வில்லாண்டான்" என்னுமது தவிர்ந்து, கருப்புவில்லையாய்த்து நினைக்கிறது. " பிணை " என்று - பெண்பேர். (காட்டித் தந்தேன் கண்டாய்) இவள் தன்னெஞ்சிலே படிந்தவற்றை நமக்கு அறிவித்தாளென்று நீ பு$_3$த்$_3$தி$_4$பண்ணியிருகிடாய்.

---

னோடே பழகியிருப்பது தவிர்ந்து மகரத்$_4$வஜனையே நினைக்கும்படியாயிற்று இவள் நிலை. " சுறவம் " என்று சுறுமீனைக் குறிக்கிறது. *( துரங்கங்களும் )* பிரிந்தாரைச் சேர்ப்பதற்கு உறுப்பாக ஸஞ்சரிக்கலாம்படி உனக்குக் குதிரைகளையும் என் நெஞ்சாலே ஸமர்ப்பித்தேன். கண்ணனுடைய தேரில் கட்டப்பட்ட குதிரைகளை நினைக்கவேண்டிய இவள், இவனுடைய குதிரைகளை நினைக்கும்படியாயிற்று. *(கவரிப்பிணைக் களும்)* சாமரம் வீசும் பெண்களையும் உனக்கு நெஞ்சாலே ஸமர்ப்பித்தேன் என்கிறாள். " பிணை " என்று பெண்ணின் பெயர். எம்பெருமானுக்குச் சாமரம் வீசும் விமலை முதலானோரை நினைத்திருக்கும் இவள். அதைவிட்டு இவனுக்குச் சாமரம் வீசும் ஸ்த்ரீகளை நினைக்கும்படியாயிற்று. *(கருப்புவில் லும்)* உனக்கு வில்லாயிருக்கும் கரும்பையும் என் நெஞ்சாலே ஸமர்ப்பித்தேனென்கிறாள். " சார்ங்கமென்னும் வில்லாண்டான் " [திருப்பல்லாண்டு 12] என்று திருப்பல்லாண்டு ஸேவிப்பதை விட்டுக் காமனுடைய கரும்பு வில்லை நினைக்கும் படியாயிற்று. *(காட்டித் தந்தேன் கண்டாய்)* " இவள் தன் நெஞ்சிலே நமக்கு ஸமர்ப்பிக்கவேண்டுமென்று தோற்றினவற்றை நமக்கு அறிவித்தாள் " என்று, நீ நினைத்திருப்பாயாக என்கிறாள். எம்பெருமானுக்குத் திருவாராத$_4$னம் ஸமர்ப்பிக்கும்

---

வானென் ? என்னில் (தன் த்வரையித்யாதி$_3$) b,c வாஹநாதி$_3$

b வாஹநாதி3கள் ஸமாராத4நகாலத்திலே கண்டருளப்பண்ணும் வாஸநையாலே இங்குச் செய்கிறுள். c ஸவிபூ4திகனுயிருக்கு மவனை உபாஸித்துப் போந்த வாஸநை. (காமதேவா) அபி4மத விஷயத்தைப் பெறுகைக்கு, வயிற்றிலே பிறந்த உன் காலிலே விழும்படியன்றோ என் த3ஶை. (d அவரைப்பிராயந் தொடங்கி) e17. "बाल्यात् प्रभृति सुस्निग्धः" (பா3ல்யாத் ப்ரப்4ருதி

---

போது, வாஹனம், கொடி, சாமரம் முதலான உபகரணங்களை ஸமர்ப்பித்துப் போந்த பழக்கத்தாலே இவனுக்கும் அவற்றை ஸமர்ப்பிக்கிறுள். வாஹனம் முதலான பரிகரங்களோடு (செல்வங்களோடு) கூடியிருக்கும் அவனைத் திருவாராத4னம் செய்து போந்த பழக்கத்தாலே பரிகரங்களோடு கூடிய இவனுக்கு ஆராத4நம் செய்கிறுள் என்றும் கொள்ளலாம். *(காமதேவா)* நான் விரும்பும் கண்ணனைப் பெறுவதற்கு, காமர் தாதையான அவனுடைய பிள்ளையாகையாலே எனக்கும் பிள்ளையான உன்காலில் விழும்படியன்றோ என் நிலை ஆகி விட்டது என்கிறுள். *(அவரைப் பிராயம் தொடங்கி)*

17. பா3ல்யாத் ப்ரப்4ருதி ஸுஸ்நிக்3தே4ா
லக்ஷ்மணோ லக்ஷ்மிவர்த்த4ந:।
ராமஸ்ய லோகராமஸ்ய
ப்4ராதுர் ஜ்யேஷ்ட2ஸ்ய நித்யஶ:॥ [ரா-பா3 18-27]

[ப4க்திப்பெருஞ்செல்வம் நிறைந்தவனை லக்ஷ்மணன், எல்லா உலகையும் ஆநந்தி3க்கச்செய்பவனும், தன் தமையனுமான ராமனிடம் *சிறு வயது* முதல் எப்போதும் மிகவும் *அன்பு பூண்டவனுயிருந்தான்.*] என்று சிறு வயது முதற்கொண்டு

---

களைச் சொல்லுகிறது—ப4க3வத்3விஷயத்தைப் போலே ஸமாராத4னோபகரணமாகவாதல் ; ஸவிபூ4திகனுகவாதல் ; இவற்றையருளிச்செய்கிறுர்; (வாஹநாதி3களித்யாதி3 வாக்யத்3வயத்தாலே) a2 புராணம்-பழமை. a3 துரங்கம் - குதிரை. a4 பிணு-பெண். d அவரை-விதை; பிராயம்-பருவம். **(அவரைப் பிராயம்)** அவரைவிதைப் பருவம் தொடங்கி. e "பிராயந் தொடங்கி - அவரை - என்றும் - ஆதரித்து" என்று அந்வயித்து அருளிச்செய்கிறுர் **(பா3ல்யாத்ப்ரப்4ருதீத்யாதி3)** g முன்



ஸுஸ்நிக்3த4:) என்று - பருவம் நிரம்பாதவளவே தொடங்கி; (என்றுமாதரித் தெழுந்தவென் தடமுலைகள்) என்றுமொக்க அவனை ஆத3ரித்து, அவ்வாத3ரமே எருவாக வளர்ந்து, போ4க்தாவால் உண்டறுக்கவொண்ணுதபடியிருக்கிற முலைகளை. (f துவரைப் பிரானுக்கே சங்கற்பித்து) * பதினுருயிரம் பெண்களுக்கும் g முன்னேட்டுக் கொடுத்தவன் வேணுமாய்த்து இவற்றுக்கு h ஆடல்கொடுக்கைக்கு. (i தொழுது வைத்தேன்) j அவனுக்கென்று ஸங்கல்பித்தால், பின்னை அவன் கு3ணங்களோபாதி உபாஸ்யமாமித்தனையிறே. (ஒல்லை விதிக்கிற்றியே) என் ஆற்றுமை இருந்தபடி கண்டாயே! இனி இம்முலைகளில் செவ்வியழிவதற்குமுன்பே சேர்க்கவல்லையே. 4.

---

அன்புபூண்ட இளையபெருமாளைப்போலே பருவம் நிரம்புவதற்கு முன்பே அவனை அணைய ஆசைப்பட்டபடி. *(என்றும் ஆதரித்து எழுந்த என் தடமுலைகள்)* என்றுமே அவனிடம் அன்புபூண்டு, அவ்வன்பே எருவாக வளர்ந்து, அதை அநுப4விக்க உரியவனை அவனும் அநுப4வித்து முடிக்கமுடியாதபடி பெருத்துள்ள திருமுலைத் தடங்களை. *(துவரைப் பிரானுக்கே சங்கற்பித்து)* "பதினுருமாயிரவர் தேவிமார்" [நாச்-திரு 7-9] என்கிறபடியே பதினுருயிரம் பெண்களையும் அநுப4விப்பதில் முன்நிற்கும் அப்பெருமானே வேணுமாயிற்று, இத்தடமுலைகளை அநுப4விப்பதற்கு. *(தொழுது வைத்தேன்)* இத்தடமுலைகளைத் தொழுது வைத்தேன். அவனுக்கென்று ஸங்கல்பித்து வைத்தபின்பு அவனுடைய கு3ணங்களைப்போலே இவையும் உபாஸிக்கத்தக்கவையாகின்றனவன்றோ. ஆகையாலே இவற்றைத் தொழுதுவைக்கக் குறையில்லை. *(ஒல்லை விதிக்கிற்றியே)* என்னுடைய ஆற்றுமை இருந்தபடி கண்டாயே! இனி இம்முலைகள் வாடுவதற்கு முன் அவனோடு சேர்ப்பாயாக. 4.

---

ஞேட்டுக்கொடுக்கை-முந்தி ஸம்ஶ்லேஷிக்கை. h ஆடல்-அநுப4வம், f துவரை-த்3வாரகை. i தொழுதுவைத்தேன் - முலையைத் தொழுதேன். j முலையைத் தொழலாமோ? என்ன அருளிச்செய்கிறுர் **(அவனுக்கென்றித்யாதி3)** 4.

## முதல் திருமொழி—ஐந்தாம் பாட்டு

வானிடை வாழுமவ் வானவர்க்கு
　　மறையவர் வேள்வியில் வகுத்த அவி,
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
　　கடப்பதும் மோப்பதுஞ் செய்வதொப்ப,
ஊனிடை யாழிசங் குத்தமற்கென்று
　　உன்னித் தெழுந்தவென் தடமுலைகள்,
மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
　　வாழகில் லேன்கண்டாய் மன்மதனே.

**பதவுரை:— மன்மதனே**—, **வானிடை**—ஸ்வர்க்க$_3$லோகத்திலே, **வாழும்**—இருக்கிற, **அ**—விலக்ஷணமான பிறப்பையுடைய, **வானவர்க்கு** — தே$_3$வர்களுக்காக, **மறையவர்**—இங்குள்ள ப்$_3$ராஹ்மணர்கள், **வேள்வியில்** — தம்முடைய யாக$_3$ங்களிலே, **வகுத்த**—உண்டாக்கின, **அவி**-ஹவிஸ்ஸை, **கானிடை**—காட்டிலே, **திரிவது ஓர்**—ஸஞ்சரிப்பதொரு, **நரி**—நரியானது, **புகுந்து**—ப்ரவேஶித்து. **கடப்பதும்**—அத்தைத் தனக்காக்கிக் கொள்வதையும், **மோப்பதும்**—வாசனை முகர்வதையும், **செய்வதொப்ப**—செய்வதுபோலே, **ஊனிடை**—தன் திருமேனியிலே, **ஆழி** — திருவாழியையும், **சங்கு**—ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும் ( திருக்கைகளிலே ) உடைய, **உத்தமற்கு என்று** — புருஷோத்தமனுக்காக, **உன்னித்து எழுந்த**—கிளர்ந்தெழுந்த, **என்**—என்னுடைய, **தடம்**—பெருத்த, **முலைகள்**—முலைகளானவை, **மானிடவர்க்கென்று**—மநுஷ்யர்களுக்கு என்கிற, **பேச்சு** — ஶப்$_3$த$_3$ம், **படில்**—நாட்டில் உண்டாமாகில், **வாழகில்லேன் கண்டாய்**—உயிர் வாழமாட்டேன்.

---

5. ***அவ:***—வேறொருவனுக்கு ஆக்குவதாக ஒரு பேச்சு நாட்டில் நடையாடினாலும் நான் உயிர்வாழமாட்டேன் என்கிறாள்.

***வ்யா:— (வானிடை வாழும் அவ்வானவர்க்கு)*** **பே$_4$ாக$_3$பூ$_4$மியான ஸ்வர்க்க$_3$த்திலே வாழ்கின்றவர்களாய், சிறந்த பிறப்பை**



வ்யா:— அஞ்சாம் பாட்டு. (வானித்யாதி$_3$) பே$_4$ாக$_3$பூ$_4$மியிலே வர்த்திக்கக்கடவராய், விலக்ஷண ஜந்மாக்களாயிருக்கிற தே$_3$வர்களுக்கு. a 18. **“ देवान् भावयतानेन ते देवा भावयन्तु वः। परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥ ”** (தே$_3$வாந் ப$_4$ாவயதாநேந தே தே$_3$வா ப$_4$ாவயந்து வ: । பரஸ்பரம் ப$_4$ாவயந்த: ஶ்ரேய: பரமவாப்ஸ்யத$_2$ ॥) என்கிறபடியே - இங்குள்ள ப்$_3$ராஹ்மணர் தே$_3$வர்களை உபாஸிக்கக்கடவர்களாகவும், அவர்கள் இவர்களுடைய அபேக்ஷித ஸம்வித$_4$ாநம் பண்ணக்கடவர்களாகவும் ஈஶ்வரன் அடியிலே பார்த்து வைத்ததொரு பார்வை

---

யுடைய தே$_3$வர்களுக்கு. (*மறையவர் வேள்வியில் வகுத்த அவி... செய்வதொப்ப*)

18. ஸஹ யஜ்ஞை: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।
அநேந ப்ரஸவிஷ்யத்$_4$வம் ஏஷ வோऽஸ்த்விஷ்டகாமது$_4$க் ॥
தே$_3$வாந் ப$_4$ாவயதாநேந தே தே$_3$வா ப$_4$ாவயந்து வ: ।
பரஸ்பரம் ப$_4$ாவயந்த: ஶ்ரேய: பரமவாப்ஸ்யத$_2$ ॥

**[கீ$_3$தை 3-10 & 11]**

[ஸ்ருஷ்டிகாலத்தில் ஸர்வேஶ்வரன் யஜ்ஞங்களோடு கூடப் பிரஜைகளை ( ஜீவராசிகளை ) ஸ்ருஷ்டித்துப் பின்வருமாறு சொன்னான்;— “இந்த யஜ்ஞத்தினால் நீங்கள் வ்ருத்$_3$தி$_4$யடையுங்கள். இது உங்களுக்கு இஷ்டகாமங்களை அளிக்கட்டும். இந்த யஜ்ஞத்தால் தே$_3$வர்களை ஆராதி$_4$யுங்கள். அந்த தே$_3$வர்கள் உங்களை வளரச்செய்யட்டும். இப்படி ஒருவரையொருவர் த்ருப்தி செய்வித்துக்கொண்டு மேலான நன்மையைப் பெறக்கடவீர்கள்.”] என்கிறபடியே கர்மபூ$_4$மியான இவ்வுலகில் உள்ள அந்தணர்கள், தே$_3$வர்களை யாக$_3$ம் செய்து ஆராதி$_4$க்க வேணுமென்றும், அந்த தே$_3$வர்கள், இவர்களுக்கு மழை முதலானவற்றைப் பொழிவித்து விருப்பங்களை அளிக்கவேண்டுமென்றும், ஸர்வேஶ்வரன் ஸ்ருஷ்டிகாலத்திலேயே ஸங்கல்

---

**அரு:**—ஐந்தாம் பாட்டு. **(வானித்யாதி$_3$)**a ஸர்வேஶ்வரனை விட்டு தே$_3$வதாந்தரங்களை இவர்கள் ஆராதி$_4$ப்பானென் ? என்ன அருளிச்செய்கிறார் **( தே$_3$வாந் ப$_4$ாவயதேத்யாதி$_3$ )**

யுண்டிறே; ஆகையாலே ப்$_3$ராஹ்மணர் தந்தாமுடைய யாக$_3$ங்களிலே உண்டாக்கின ஹவிஸ்ஸை, மநுஷ்யரில்லாத காட்டிலே ஸஞ்சரிப்பதொரு க்ஷுத்$_3$ர பதா$_3$ர்த்த$_2$ங்கள், அவர்களுக்கு அது யோக்$_3$யமாகாதபடி தூ$_3$ஷிக்குமாபோலே. (ஊனிடையித்யாதி$_3$) வெறும்புறத்திலே ஆலத்திவழிக்க வேண்டியிருக்கிற அழகிய திருமேனியிலே திருவாழியையும் ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும் த$_4$ரித்திருப்பானுமாய், அவ்வழகு தன்னைப் பிறர்க்கு என்றிருக்கையாலே உத்தமனாயிருக்கிறவனுக்கு என்று அநுஸந்தி$_4$த்து, அவ்வநுஸந்தா$_4$நமே நீராக வளர்ந்த என் முலைகள், நானுமறியாதிருக்க, அவனுமறியாதிருக்க மநுஷ்யமாத்ரமாயிருப்பார்க்கு என்று நாட்டிலே இங்ஙனே ஒரு ஶப்$_3$த$_3$ம் பரிமாறுமாகில், எனக்கு ஸத்தையில்லை கிடாயென்கிறாள். b பிறர்க்காயிருக்குமிருப்பு ஸத்தயா பா$_3$த$_4$கமா

---

பித்து வைத்திருக்கிறானன்றோ. அதை அடியொற்றி அந்தணர் தாம் செய்யும் யாக$_3$ங்களில் தே$_3$வர்களுக்காக ஸித்$_3$த$_4$ப்படுத்தி வைத்திருக்கும் ஹவிஸ்ஸை, மனிதரில்லாத காட்டிலே திரிவதொரு நரி யாக$_3$சாலையிலே புகுந்து, (அந்த ஹவிஸ்ஸைத்) தனக்காகக் கொள்வதும், மோந்து பார்ப்பதும் செய்து, அது தே$_3$வர்களுக்குத் தகாததாம்படி கெடுப்பதுபோலே. (*ஊனிடை...... வாழகில்லேன் கண்டாய்*) (*ஊனிடை ஆழிசங்கு உத்தமற்கு*) வெறுங்கையோடிருந்தாலே த்$_3$ருஷ்டிதோ$_3$ஷம் வாராதபடி ஆலத்திவழிக்க வேண்டியிருக்கும் அழகிய திருமேனியில், திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜன்யத்தையும் ஏந்தியிருப்பவனாய், அதனாலுண்டான பேரழகைத் தன் அடியார்க்கே ஆக்கி வைத்திருப்பவனாகையாலே உத்தமனாய் இருப்பவனுக்கு. (*என்று உன்னித் தெழுந்த என் தடமுலைகள்*) அவனுக்கென்றே அநுஸந்தி$_4$த்து, இந்த அநுஸந்தா$_4$னமாகிற நீராலே பெருத்து வளர்ந்த என் முலைகள். (*மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் கண்டாய்*) நானும் அறியாதிருக்க, அவனும் அறியாதிருக்க, "ஒரு ஸாமான்ய மனிதனுக்கு இவற்றை உரிமையாக்குவது" என்று நாட்டில் ஒரு பேச்சு ஏற்பட்டு, அது என் காதில் விழாவிட்டாலும் நான்வாழமாட்டேன் கிடாய் என்கிறாள்.

---

ஸத்தயா பா$_3$த$_4$கம் என்றது- அஜ்ஞாதத$_3$ஶையிலும் பா$_3$த$_4$க



யிருந்தபடி. c "ராவணன் மாயாஶிரஸ்ஸைக் காட்டினபோது, இதர ஸ்த்ரீகளோபாதி த$_4$ரித்திருந்ததுக்குக் கருத்தென்?" என்று ஜீயரைக்கேட்க; "இவளுடைய ஸத்தைக்கு ஹேது— பெருமாள் ஸத்தையாய்த்து; அதுக்கு தை$_3$வமறிய ஒருகுறையில்லாமையாலே த$_4$ரித்திருந்தாள்; இவள் ஸத்தைக்கு ஹேது- d ப்ரதிபத்த்யப்ரதிபத்திகளல்ல. அத்தலையில் ஸத்தையாய்த்து" என்று அருளிச்செய்வர். (மந்மதனே) வயிற்றிலே

---

"உனக்கே நாமாட்செய்வோம்" [திருப்பாவை-29] என்னும் உறுதியுடைய இவளுக்கு, பிறர்க்காயிருக்குமிருப்பு பற்றிய பேச்சு—இவள் காதில் விழாவிட்டாலும், ஏற்பட்டமாத்திரத்தில் பிராணஹாநியை விளைப்பதாயிருக்கிறது. "ராவணன் ஸீதாப் பிராட்டியிடம் ராமபிரானுடையதுபோன்ற மாயாஶிரஸ்ஸைக் காட்டினபோது, பிராட்டி உலகத்திலுள்ள ஸாமான்ய ஸ்த்ரீகளைப்போலே அழுதாளேயொழிய உயிரை விடவில்லையே. இது பிராட்டியினுடைய அன்பிற்குப் பொருந்துமோ?" என்று நம்பிள்ளை நஞ்சீயரைக் கேட்க; "பிராட்டி உயிர் த$_4$ரித்திருந்தது பெருமாளிடம் அன்பில்லாமையாலன்று; பெருமாள் உண்மையில் உயிர் த$_4$ரித்திருந்தமையாலே இவளும் உயிர்த$_4$ரித்திருந்தாள்; பெருமாளுடைய ஸத்தைக்கு (த$_4$ரிப்பிற்கு) தெய்வமறிய ஒரு குறையில்லாமையாலே இவளும் த$_4$ரித்திருந்தாள். இவளுடைய த$_4$ரிப்பிற்கு, பெருமாள் உயிருடன் இருக்கிறார் என்னும் நினைவும், இவளுடைய த$_4$ரியாமைக்கு அந்நினைவின்மையும் காரணமல்ல; பெருமாளுடைய ஸத்தையே இவளுடைய ஸத்தைக்குக் காரணம்" என்று நஞ்சீயர் அருளிச்செய்தார். அது போலே 'ஆண்டாளைப் பிறர்க்காக்குவது' என்னும் பேச்சு நாட்டில் ஏற்பட்டாலும், அது ஆண்டாளுக்கு ஸத்தையைக் குலைப்பதாய் இருக்கிறது. (*மன்மதனே*) வயிற்றில்

---

மென்றபடியாய், தத்ப்ரதிகோடித்வேந ப$_4$க$_3$வத்$_3$விஷயம் அஜ்ஞாந த$_3$ஶையிலும் ஸத்தயா தா$_4$ரகமென்று விவக்ஷித்து, இதுக்கு ஸம்வாத$_3$மாக ஓர் ஐதிஹ்யம் அருளிச்செய்கிறார் (b, c) (ராவணனித்யாதி$_3$) d ப்ரதிபத்த்யப்ரதிபத்தி-உண்டு இல்லை என்கிற வசநமாத்ரம் என்றபடி

பிறந்த உன் காலிலே விழவேண்டும்படியன்றே என் ஆற்றுமை. 5.

## முதல் திருமொழி—ஆறும் பாட்டு

உருவுடை யாரிளை யார்கள்நல்லார்
ஓத்துவல் லார்களைக் கொண்டுவைகல்
தெருவிடை யெதிர்கொண்டு பங்குனிநாள்
திருந்தவே நோற்கின்றேன் காமதேவா!
கருவுடை முகில்வண்ணன் காயாவண்ணன்
கருவிளை போல்வண்ணன் கமலவண்ணத்
திருவுடை முகத்தினிற் றிருக்கண்களால்
திருந்தவே நோக்கெனக் கருள்(ளு)கண்டாய்.

**பதவுரை:—** **காமதேவா**—, **உருவுடையார்**—அழகிய வடிவையுடையவராய், **இளையார்கள்**-யுவாக்களாய், **நல்லார்**-நல்ல நடத்தையுடையவராய், **ஓத்து**—காமசாஸ்திரத்தில், **வல்லார்களை**—புலமை மிக்கவர்களை, **கொண்டு**—முன்னிட்டுக் கொண்டு, **வைகல்**—நாள்தோறும், **தெருவிடை**—அவன் வரும் வழியிலே, **எதிர்கொண்டு**—எதிரேசென்று, **பங்குனி**—பங்குனிமாஸத்தில், **நாள்**—பெரிய திருநாளிலே, **திருந்த**—தெளிந்திருந்து, **நோற்கின்றேன்**—, **கருவுடை**—க$_3$ர்ப்ப$_4$த்தையுடைய, **முகில்**—காளமேக$_4$ம் போன்ற, **வண்ணன்**—நிறமுடையனாய், **காயா**—காயாம் பூப்போன்ற, **வண்ணன்**—திருநிறத்தையுடையனாய், **கருவிளைபோல்** — காக்கணம் பூப்போன்ற, **வண்ணன்**—பளபளப்பையுடையவனுடைய, **கமலவண்ணம்**—செந்தாமரைமலரின் நிறம்போன்ற காந்தியையுடைத்தான, **திருவுடை முகத்தினில்**—திருமுகமண்டலத்திலுண்டான, **திருக்கண்களால்**—திருக்கண்களாலே, **எனக்கு**-என்விஷயத்தில், **திருந்த** — அவன் விஶேஷகடாக்ஷம் பண்ணும்படியாக, **நோக்கு அருள்**-நீ கடைக்கணிக்கவேணும்.

---

பிறந்த உன்காலில் விழும்படியன்றே என் ஆற்றுமை இருக்கிறது. 5.



அவ:— ஆறும் பாட்டு. 19. "मच्चित्ता मद्गतप्राणाः बोधयन्तः परस्परं" (மச்சித்தா மத்$_3$க$_3$தப்ராணு: பே$_3$ாத$_4$யந்த: பரஸ்பரம்) என்கிறபடியே—ஸத்வநிஷ்ட$_2$ர் ப$_4$க$_3$வத்$_3$கு$_3$ணுநுப$_4$வம் பண்ணி பே$_3$ாத$_4$யந்த: பரஸ்பரம் பண்ணுகைக்கு ஸாத்விகரைக் கூடக்கொண்டு இழியுமாபோலே, ரஜோகு$_3$ணப்ரசுரனுனவனை ஆஶ்ரயிக்கைக்கு அதிலே தே$_3$ஶிகரைக்கொண்டு இழிகிறள்.

வ்யா:— (a உருவுடையாரித்யாதி$_3$) b வடிவுடையவராய், யுவாக்களாய், b$_2$ வ்ருத்தவான்களாய், c காமஸூத்ரம் கண்ணழிவறக் கைவந்திருப்பவராயிருக்கிறவர்களை முன்னுகக்கொண்டு.

---

6. *அவ:—*

19. மச்சித்தா மத்$_3$க$_3$தப்ராணு: பே$_3$ாத$_4$யந்த: பரஸ்பரம் ।
கத$_2$யந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥
[கீ$_3$தை 10-9]

[என்னிடத்தில் நெஞ்சு செலுத்தியவர்களாகவும்,என்னைப் பற்றி நிற்கும் ப்ராணனை உடையவர்களாகவும், (என் கு$_3$ணங்களை) ஒருவருக்கொருவர் அறிவித்துக்கொண்டும் (என் சேஷ்டிதங்களைச்) சொல்லிக் கொண்டுமிருப்பவர்களாகவும், என்னைச் சொல்லியும் கேட்டும் ஆநந்தி$_3$க்கிறுர்கள்.] என்கிறபடியே—ஸாத்விகர்கள் ப$_4$க$_3$வானுடைய கு$_3$ணங்களை அநுப$_4$வித்து ஒருவருக்கொருவர் சொல்லி த$_4$ரிப்பதற்காக மற்ற ஸாத்விகர்களைக் கூட்டிக்கொண்டு ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் இழிவதுபோலே, ரஜோகு$_3$ணம் மிக்க காமனை ஆஶ்ரயிப்பதற்கு, காமஶாஸ்த்ரம் வல்லவர்களைக் கூட்டிக்கொண்டு நோன்பு நோற்கையிலே இழிகிறுள்.

*வ்யா:— (உருவுடையார்...ஓத்துவல்லார்களைக் கொண்டு)* நல்ல வடிவழகுடையவர்களாய், யௌவநவயஸ்ஸை உடையவர்களாய், காமஶாஸ்த்ரத்தில் சொன்ன ஒழுக்கமுடையவர்களாய், வாத்ஸ்யாயன மஹர்ஷியின் காமஸூத்ரத்தைக் கசடறக் கற்றவர்களாயிருப்பவர்களை முன்னிட்டுக்கொண்டு. (வைகல்

---

அரு:— ஆறும் பாட்டு. ( உருவுடையாரித்யாதி$_3$ )
a,b உரு-அழகும் உடம்பும். c ஓத்து-வாத்ஸ்யாயநஶாஸ்த்ரம்,

(d வைகல் தெருவிடை யெதிர்கொண்டு) நாள்தோறும் அவன் வருகிற வழியிலே எதிர்கொண்டு. (பங்குனிநாள்) பெரியதிருநாளிலே கலங்காதே தெளிந்திருந்து, உன்னை ஆஶ்ரயிக்கும்படியன்றோ எனக்குண்டான த்வரை. செய்ய வேண்டுவதென்னென்னில்—(கருவுடைமுகில்வண்ணன்) நீர் கொண்டெழுந்த காளமேக$_4$ம்போலேயிருக்கிற. வடிவையுடையவன். எல்லாம் பட்டும் பெறவேண்டும்படியன்றோ அவன் வடிவு படைத்தபடி. (காயா வண்ணன) நெஞ்சிலே e இருள் படுகைக்கு. (f கருவிளைபோல்வண்ணன்) கண்டார் கண்ணுக்கு

---

தெருவிடை எதிர்கொண்டு) தினந்தோறும் காமன் வருகிற வழியிலே எதிர்கொண்டு. *(பங்குனி நாள்)* காமனுக்குப் பெரிய மஹோத்ஸவம் நடக்கும் பங்குனி மாஸத்திலே, அவனுக்குரிய பண்டிகை நாளிலே. *(திருந்தவே நோற்கின்றேன்)* ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தை நினைத்த மாத்திரத்தில் கலங்கும் நான் உனக்கு நோன்பு எடுக்கும்போது கலங்காதே தெளிந்திருந்து உன்னை ஆஶ்ரயிக்கும்படியன்றோ ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தில் எனக்குண்டான த்வரை *(காமதேவா)* எம்பெருமானைத் தொழும்போது வேதம் வல்லார்களைக்கொண்டு தொழுவதுபோலே, உன்னைக் குறித்து நோன்பு நோற்கும்போதும் காமஶாஸ்த்ரம் வல்லார்களைக்கொண்டு நோற்கையாலே நீ எனக்கு அவஶ்யம் கார்யம் செய்யவேண்டும் என்று கருத்து. "நான் செய்ய வேண்டியது என்ன?" என்று காமன் கேட்பதாகக்கொண்டு பிற்பாதியிலே பதில் உரைக்கிறாள்— *(கருவுடை முகில்வண்ணன்)* நீர்கொண்டெழுந்த கார்மேகம்போலே இருக்கிற திருநிறத்தையுடையவன். படாதனபட்டு நோன்பு நோற்றுவது பெற வேண்டும்படியன்றோ அவன் வடிவழகு இருப்பது. *(காயா வண்ணன்)* காயாப்பூப்போன்ற நிறமுடையவன். நெஞ்சிலே உள்ள கொந்தளிப்பைப் போக்கி அஞ்ஜனமையிடும் திருமேனியையுடையவன் என்று கருத்து. *(கருவிளைபோல் வண்ணன்)* காக்கணம் பூப்போன்ற காந்தியை உடையவன்.

---

d வைகல்-காலம் f கருவிளை-காக்கணம். b$_3$ வ்ருத்தவான்கள்-காமதந்த்ரத்திற்சொன்ன ஆசாரங்களையுடையார். e இருள்



g நெய்த்திருக்கைக்கு. (கமலவண்ணத் திருவுடையித்யாதி$_3$) கமலத்தினுடைய நிறம்போலே இருக்கிற காந்தியையுடைத்தான திருமுகத்திலுண்டான் திருக்கண்களாலே, h சோலை பார்ப்பாரைப் போலே பார்க்கையன்றிக்கே, அவன் விஶேஷ கடாக்ஷம் பண்ணும்படியாக அருள்கிடாய். நம் ஆற்றாமைக்காக நோக்கினுகையன்றிக்கே, தன் ஆற்றாமை தீரும்படி நோக்கினும்படியாகப் பண்ணுகிடாய். 6.

## முதல் திருமொழி—ஏழாம் பாட்டு

காயுடை நெல்லொடு கரும்பமைத்துக்
கட்டி யரிசி யவலமைத்து
வாயுடை மறையவர் மந்திரத்தால்
மன்மத னேயுன்னை வணங்குகின்றேன்,
தேசமுன் னளந்தவன் திரிவிக்கிரமன்
திருக்கைக ளாலென்னைத் தீண்டும்வண்ணம்
சாயுடை வயிறுமென் தடமுலையும்
தரணியில் தலைப்புகழ் தரக்கிற்றியே.

---

கண்டார் கண்ணுக்குக் குளிர்ந்திருக்கும் என்று கருத்து. *(கமலவண்ணத்திருவுடை ... அருள்கண்டாய்)* முற்கூறிய திருமேனியை உடையவனுடைய திருமுகமண்டலத்திலிருப்பதாய், தாமரையினுடைய நிறம்போன்ற ஒளியுடையதான திருக்கண்களாலே அவன் எனக்கு விஶேஷகடாக்ஷம் பண்ணும்படியாக அருள்வாயாக. *(திருந்தவே நோக்கு அருள்)* சோலையைப் பார்ப்பதுபோலே மொத்தமாகப் பார்ப்பது போராது. ஒவ்வோரவயவத்தையும் தனித்தனியே உற்றுப்பார்க்கும்படி செய்யவேணும். அன்றிக்கே, நம் ஆற்றாமை தீருவதற்காக நோக்குகையன்றிக்கே, தன் ஆற்றாமை தீரும்படி நோக்குவதே திருந்த நோக்குவதாகவுமாம். 6.

---

படுகை-மையுண்டாகை. g நெய்த்திருக்கை-குளிர்ந்திருக்கை. h சோலைபார்க்கை-ஸமுதா$_3$யேந பார்க்கை. அப்படியன்றியே தனித்தனியே உற்றுப்பார்க்குமாபோலே அவன் என் அவயவங்கள்தோறும் தனித்தனியே உற்றுப்பார்க்கும்படி நீ அருளவேணும் என்றபடி. 6.

**பதவுரை:— மன்மதனே—, காயுடை** நெல்லொடு— பசுங்காய் நெல்லும், **கரும்பு**—கரும்பும், **அமைத்து**-படைத்து, (அத்தோடே கூட) **கட்டி**—கருப்புக்கட்டியும், **அரிசி**—பச்சரிசியும், **அவல்**—அவலும், **அமைத்து**—சமைத்து, **வாயுடை**— நல்ல ஸ்வரத்தையுடையராய், **மறையவர்**—காமஶாஸ்த்ரத்தில் வல்லவர்களுடைய, **மந்திரத்தால்** — மந்த்ரத்தாலே, **உன்னை**—(என் பிள்ளையான) உன்னை, **வணங்குகின்றேன்**— ஆஶ்ரயிக்கிறேன்; **முன்**—(ஸ்வர்க்க$_3$மத்$_4$ய பாதாளமென்கிற மூன்று லோகங்களும் மஹாப$_3$லியால் அபஹரிக்கப்பட்ட) முன் காலத்திலே, **தேசம்**—ஸகலலோகங்களையும், **அளந்தவன்**—திருவடிகளாலே அளந்துகொண்டவனாய், **திரிவிக்கிரமன்**—த்ரிவிக்ரமாவதாரம் செய்தருளினவன், **திருக்கைகளால்**—(தன்) திருக்கையாலே, **என்னை**—, **தீண்டும்வண்ணம்**- ஸ்பர்சிக்கும்படி பண்ணி, **சாயுடை**—ஒளியையுடைத்தான, **வயிறும்** — வயிறும், **மெல்** — மார்த்த$_3$வத்தையுடைத்தாய், **தடம்**—பருத்திருந்துள்ள, **முலையும்**—ஸ்தநங்களும், **தரணியில்**—லோகத்திலே, **தலைப்புகழ்**—நிலைநின்ற புகழை, **தரக்கிற்றி**—பெறும்படி செய்யவேணும்.

**வ்யா:— ஏழாம் பாட்டு.** (a காயுடையித்யாதி$_3$) **ரஜோகு$_3$ணப்ரசுரனாயிருக்கையாலே அவனுக்கு ஆமவை தேடுகிறாளாய்த்து. b பால்மாறுத பசுங்காய் நெல்லோடேகூட, கரும்பு,**

---

7. *அவ:—* திரிவிக்கிரமன் திருக்கைகளால் என்னை ஸ்பர்ஶிக்கும்படியான பெரும்புகழை எனக்குத் தரவேணும் என்கிறாள்.

*வ்யா:— (காயுடை ... வணங்குகின்றேன்)* ரஜோகு$_3$ணம் மிக்கவனாகையாலே அவனுக்குத் தகுந்த உபஹாரங்களை (காணிக்கைகளை)த் தேடியிடுகிறாள். *(காயுடை நெல்லொடு)* பால்மாறுத பசுங்காய் நெல்லோடே கூட *(கரும்பமைத்து)*

---

**அரு:—** ஏழாம் பாட்டு. (**காயுடையித்யாதி$_3$**) a, b காயுடை நெல்லு - பசுங்காய் நெல்லு ; c கட்டி-கருப்புக்கட்டி.



**c கருப்புக்கட்டி, பச்சரிசி, அவல் என்கிற இவற்றைச் சமைத்து, d நல்ல ஸ்வரத்தையுடையராயிருக்கிற மறையவருண்டு - அதில் தே$_3$ஶிகராயிருக்குமவர்கள்; அவர்களுடைய d$_2$ மந்த்ரத்தாலே, d$_3$ வயிற்றிலே பிறந்தவனென்று பாராதே, உன்னை ஆஶ்ரயிக்கிறேன்.** (தேசமித்யாதி$_3$) **வரையாதே எல்லாரையும் அடியிலே விஷயீகரித்தவன் திருக்கையாலே என்னை.** (e சாயுடை வயிறும் என் தடமுலையும் - தீண்டும் வண்ணம்) **f ஒளியையுடைத்தான வயிற்றையும், அவன்தனக்கும் உண்டறுக்கவொண்ணாதபடியான முலையையும் திருக்கைகளால் தீண்டும் வண்ணம் - அவன் ஸ்பர்ஶிக்கும்படி பண்ணி.** (தரணியில் g தலைப்புகழ் தரக்கிற்றியே) **லோகத்திலே h சால நிலைநிற்பது ஒரு புகழிறே ; அத்தைத் தரவல்லையே நான் பெறும்படி. 7.**

---

கரும்பைப் படைத்து. *(கட்டியரிசியவலமைத்து)* கருப்புக் கட்டி (வெல்லக்கட்டி), பச்சரிசி, அவல் என்கிற இவற்றைச் சமைத்து. *(வாயுடை மறையவர் மந்திரத்தால்)* நல்ல ஸ்வரத்தையுடைய காமஶாஸ்த்ரம் வல்லவர்களுடைய மந்த்ரத்தாலே. *(மன்மதனே உன்னை வணங்குகின்றேன்)* காமிகளுடைய மனத்தைக் கலக்குமவனே! நீ வயிற்றில் பிறந்தவனென்றும் பாராமல் உன்னை ஆஶ்ரயிக்கிறேன். *(தேசமுன்னளந்தவன்... திரிவிக்கிரமன்)* முன்னொரு காலத்தில் மஹாப$_3$லியால் உலகங்கள் அபஹரிக்கப்பட்டபோது, உயர்ந்தார் தாழ்ந்தார் என்னும் வாசி பாராமல் எல்லாரையும் திருவடிகளாலே தடவிக்கொடுத்தவனுடைய திருக்கைகளாலே தடவிக்கொடுக்கும்படி செய்யவேணும் என்று கருத்து. *(சாயுடை வயிறும் என் தடமுலையும் ... தீண்டும் வண்ணம்)* ஒளியையுடைய என் வயிற்றையும், அவனாலும் அநுப$_4$வித்து முடிக்கமுடியாத பெருமையுடைய என் முலைகளையும் திருக்கைகளால் தடவிக்கொடுக்கும்படிசெய்து. *(தரணியில் தலைப்புகழ் தரக்கிற்றியே)*

---

d வாய்-ஸ்வரம். e,f சாய்-ஒளியும், அழகும்; d$_2$ மந்த்ரம்-காமஶாஸ்த்ரம். d$_3$ வயிற்றிற்பிறக்கை-க்ருஷ்ணனுடைய பிள்ளையாகையாலே தனக்கும் பிள்ளையென்கிறாள். g,h தலைப்புகழ்- அவன் திருக்கையால் தீண்டுகையே நிலைநின்ற புகழ். 7.

## முதல் திருமொழி—எட்டாம் பாட்டு

**மாசுடை யுடம்பொடு தலையுலறி**
**வாய்ப்புறம் வெளுத்தொரு போதுமுண்டு**
**தேசுடைத் திறலுடைக் காமதேவா !**
**நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள்கண்டாய்,**
**பேசுவ தொன்றுண்டிங் கெம்பெருமான்**
**பெண்மையைத் தலையுடைத் தாக்கும்வண்ணம்**
**கேசவ நம்பியைக் கால்பிடிப்பா**
**ளென்னுமிப் பேறெனக் கருள்(ளு)கண்டாய்.**

**பதவுரை— தேசுடை** — பிரிந்தாரைச் சேர்க்கையால் வந்த ஒளியையும், **திறலுடை**—அவர்கள் விரோதி$_4$யைப் போக்குகைக்குரிய மிடுக்கையுமுடையனாய், **எம்பெருமான்**—எனக்கு ஸ்வாமியான, **காமதேவா**—மன்மதனே, **மாசுடை**—அழுக்குப்படிந்த, **உடம்பொடு**—உடம்போடுகூட, **தலை**—தலைமயிரை, **உலறி**—விரித்துக்கொண்டும், (தாம்பூ$_3$ல த$_4$ாரணமில்லாமையாலே) **வாய்ப்புறம்** — உதடுகள், **வெளுத்து**—வெளுத்தும், **ஒருபோது**—ஒரேவேளை, **உண்டும்**—பு$_4$ஜித்துக்கொண்டும், **நோற்கின்ற**—நோற்கிற, **நோன்பினை**—இந்த நோன்பை, **குறிக்கொள்கண்டாய்**—நீ எப்போதும் நினைவில் வைக்கவேணுங்காண் ; **இங்கு**—இப்போது, **பேசுவது**—சொல்லவேண்டுவது, **ஒன்று உண்டு**—ஒன்றுளது ; **பெண்மை**—என்ஸத்தை, **தலையுடைத்தாக்கும் வண்ணம்**—தலைமைபெறும்படியாக, **கேசவன்** — கேசியென்னும் அஸுரனை நிரஸித்தவனாய், **நம்பியை**—கல்யாண கு$_3$ணங்களால் பூர்ணனாயிருக்கிறவனுக்கு, **கால்பிடிப்பாள்** — கால் பிடிக்குமவள், **என்னும்** — என்கிற, **இப்பேறு** — இந்தப் புருஷார்த்த$_2$த்தை, **எனக்கு**—, **அருள்கண்டாய்**—க்ருபை பண்ணவேணும்.

---

உலகத்தில் நெடுங்காலம் நிலைநிற்கக்கூடிய பெரும்புகழை எனக்குத் தருவாயா ? என்கிறாள். 7.



வ்யா:—எட்டாம் பாட்டு. (a மாசு இத்யாதி$_3$) b ஸ்நானத்தை யொழியச் செல்லாதபடியான உடம்பு மாசேறும்படி பண்ணி, "சுரும்பார் குழல்கோதை" என்னும்படியான மயிர்முடியை யுடையவள் அத்தைப் பேணாதே, போ$_4$க்$_3$யத்$_3$ரவ்யங்களைக் c கொடுத்து; 'இன்னம் ஒருகால் காணலாமோ?' என்னும் நசையாலே, d ஸத்தை கிடக்கவேண்டுமளவாய்த்து உஜ்ஜீவிப்பது; e இவ்வழியாலே ஒருகால் மீளாதே நோற்கின்ற

---

8. *அவ:—* ஸ்வரூப ப்ராப்தமான எம்பெருமானுடைய திருவடிக் குற்றேவலை எனக்கு அருள்வாய் என்கிறாள்.

*வ்யா:—* (*மாசுடை உடம்பொடு*) ஸ்நானம் செய்யாமல் இருக்கமுடியாத ஆசாரத்தையுடைய என் உடம்பு எம்பெருமான் பிரிவால் ஸ்நானமில்லாமலிருக்கையாலே அழுக்குப் படிந்ததாயிற்று. (*தலையுலறி*) "சுரும்பார் குழற்கோதை" [நாச்-திரு 9-10] என்னும்படியான மயிர்முடியையுடையவள் தலைமயிரை விரிக்கும்படியாயிற்று. (*வாய்ப்புறம் வெளுத்து*) எப்போதும் தாம்பூ$_3$லமிட்டுச் சிவந்திருக்கும் உதடுகள், தாம்பூ$_3$லம் முதலான போ$_4$க$_3$ த்$_3$ரவ்யங்களை விலக்கியிருக்கையாலே உதடுகள் வெளுத்து விட்டன. (*ஒருபோது உண்டும்*) எம்பெருமானைப் பிரிந்தால் உணவு வேண்டியிராமையாலே உணவை அடியோடு ஒதுக்க முற்பட்டவள் "காமனை ஆச்ரயிப்பதினாலே ஒருகால் அவனைக் காணமுடியுமோ" என்னும் ஆசையினாலே உயிர் த$_4$ரிக்கவேண்டியதற்காக ஒருவேளை உண்ணும்படியாயிற்று. (*நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள் கண்டாய்*) இம்முறையிலே இடைவிடாமல் நான் நோற்கின்ற நோன்பை நீ நெஞ்சில் கொள்ளவேணும். "நோற்கின்ற" என்னும் நிகழ்காலம் இடைவிடாமல் நோற்கின்றமையைக் காட்டுகின்றது.

---

அரு:— எட்டாம் பாட்டு. (மாசு இத்யாதி$_3$) a,b மாசு-அழுக்கு ஏறும்படி; ஸ்நாநத்தையொழித்து ஏறும்படி. உலறல்-காய்தல்; உலறி-உதறி-விரித்து என்றபடி. c கொடுத்து-புறத்திலே கொடுத்தென்றாய், தாம்பூ$_3$லத்தை விட்டு. d ஸத்தை-ஸ்த்ரீத்வம். e "நோற்கின்ற" என்கிற வர்த்தமாந

நோன்பைக் குறிக்கொள்கிடாய். 20. "ऋणं प्रवृद्धमिव मे' (ருணம் ப்ரவ்ருத்3த4மிவ மே) என்று-நெஞ்சிலே இது எப்போதும் பட்டுக் கிடக்கவேண்டுங்கிடாய். (f தேசுடைத்திறலுடை) " பிரிந்தாரைச் சேர்க்கவல்லே" என்கிற ப்ரஸித்3தி4யால் வந்த புகழையும், அவர்கள் விரோதி4யைப் போக்குகைக்கீடான மிடுக்கையுமுடையவனன்றோ நீ! (பேசுவதொன்றுண்டு இங்கெம்பெருமான்) நான் சொல்லுவதொன்றுண்டு, எனக்கு ஸ்வாமியானவனே! (பெண்மையித்யாதி3) என்

---

20. கோ3விந்தே3தி யதா3க்ரந்த3த்

க்ருஷ்ணா மாம் தூ3ரவாஸிநம்|

ருணம் ப்ரவ்ருத்3த4மிவ மே

ஹ்ருத3யாந்நாபஸர்ப்பதி || [பா4ர·உத்3யோ 47-22]

[த்3ரௌபதி3யானவள் வெகு தூரத்திலிருந்த என்னைக் குறித்து 'கோ3விந்தா3!' என்று கூக்குரலிட்டது, (வட்டியினுல்) வ்ருத்3தி4யடைந்த கடனைப்போல் என்னுடைய ஹ்ருத3யத்திலிருந்து அகலுகிறதில்லை.] என்கிறபடியே த்3ரௌபதி3யின் கூக்குரல் அவனுடைய நெஞ்சை எப்போதும் புண்படுத்தியிருந்தது போலே, என்னுடைய இன்நோன்பு உன் நெஞ்சில் எப்போதும் நீங்காமல் கிடக்கவேணும் என்று கருத்து. *(தேசுடைத் திறலுடைக் காமதேவா)* "பிரிந்தாரைச் சேர்க்க வல்லவன்" என்னும் ப்ரஸித்3தி4யால் வந்த ஒளியையும், அவர்களுடைய விரோதி4யைப் போக்குவதற்குறுப்பான ப3லத்தையும் உடையவனன்றோ நீ! *(பேசுவதொன்றுண்டிங்கெம்பெருமான்)* எனக்கு ஸ்வாமியானவனே! இப்போது நான் சொல்லவேண்டியது ஒன்றுண்டு. அது என்ன? என்பதைப் பாசுரத்தின் எஞ்சிய பகுதியாலே தெரிவிக்கிருள். — *(பெண்மையைத் தலையுடைத்தாக்கும் வண்ணம்)* என்னுடைய ஸத்தை பெருமைபெறும் வழி அதுவே. பெண்மை என்று ஸ்த்ரீயின் தனிக் குணமான பாரதந்த்ரியத்தைச் சொல்லுகிறது. அதுவே தனது ஸத்தைக்குக் காரணம் என்று இருப்பவளாகையாலே "பெண்மை"

---

தாத்பர்யம் (இவ்வழியாலே ஒருகால் மீளாதேயென்று) 8.

f தேசு - ஒளி; திறல் · மிடுக்கு.



ஸத்தை தலைமை பெறுவதொரு ப்ரகாரம். (கேசவன் நம்பியித்யாதி3) விரோதி4 நிரஸநஶீலனாய், கல்யாணகு3ணங்களால் பூர்ணனாயிருக்கிறவனே. (கால் பிடிப்பாளென்னும் இப்பேறெனக்கு அருள்கண்டாய்) நான் ஸ்வரூபாநுரூபமான பேற்றைப் பெறும்படி பண்ணுகிடாய். முலையாலே அணைக்கவென்றோ தான் ஆசைப்பட்டது? முதலடியே பிடித்து அடிமை செய்யத் தேடுகிருள். 8.

## முதல் திருமொழி—ஒன்பதாம் பாட்டு

தொழுதுமுப் போதுமுன் னடிவணங்கித்

தூமலர் தூய்த்தொழு தேத்துகின்றேன்

பழுதின்றிப் பார்க்கடல் வண்ணனுக்கே

பணிசெய்து வாழப் பெறுவிடில்நான்,

அழுதழு தலமந்தம் மாவழங்க

ஆற்றவு மதுவுனக் குறைக்குங்கண்டாய்

உழுவதோ ரெருத்தினை நுகங்கொடுபாய்ந்து

ஊட்டமின் றித்துறந் தாலொக்குமே.

பதவுரை:— முப்போதும்-முக்காலங்களிலும், தொழுது-(மனத்தாலே) உன்னைத்தொழுது வணங்கி — தலையாலே வணங்கி, உன் — உன்னுடைய, அடி — அடிகளிலே, தூ-

---

என்னும் பத3த்திற்கு ஸத்தை என்று உரையிடப்பட்டது. ஸத்தை பெருமை பெறும் வழிதான் என்ன? எனில்— *(கேசவன் நம்பியைக் கால்பிடிப்பாள் என்னும் இப்பேறு)* கேசி முதலான விரோதி4களை அழிக்கும் இயல்புடையவனாய், கல்யாணகு3ணங்களால் நிறைந்திருக்கிறவனுடைய திருவடிகளைப் பிடித்துவிடுகையாகிற கைங்கர்யம் செய்வதாகிற இந்தப் புருஷார்த்த2மே அது. *(இப்பேறு எனக்கு அருள் கண்டாய்)* சென்ற பாசுரத்தில் சொன்னதுபோலே முலையாலே அணைப்பதற்கு மாத்திரம் நான் ஆசைப்படவில்லை, முதலடியே பிடித்து (1. முதலில் இருந்து, 2. முதலான திருவடிகளைப் பிடித்து) அடிமை செய்யவே ஆசைப்படுகிறேன். நான் என் ஶேஷத்வ ஸ்வரூபத்திற்குத் தக்கதான இப்பயனைப் பெறும்படி நீ எனக்கு அருள்வாய். 8.

பரிஶுத்$_3$த$_4$மான, **மலர்**—புஷ்பங்களை, **தூய்**—பணிமாறி, **தொழுது**—ஸேவித்து, **ஏத்துகின்றேன்**—ஸ்தோத்ரம் பண்ணுகின்றேன்; **பார்**—பூ$_4$மியைச் சூழ்ந்திருக்கும், **கடல்**—கடல் போன்ற, **வண்ணனுக்கு** — திருநிறத்தையுடையவனுக்கு, **பழுதின்றி** — பழுதில்லாமல், **பணிசெய்து** — கைங்கர்யம் பண்ணி, **நான்**—, **வாழப்பெறுவிடில்**—வாழப்பெறுவிட்டால், **அழுது அழுது** — பலகால் அழுது, **அலமர்ந்து**—தடுமாறி, **அம்மா**—அம்மா என்று கூப்பிட்டுக்கொண்டு, **வழங்க**—ஸஞ்சரிக்க, **உனக்கு**—, **அது**—, **ஆற்றவும்**— மிகவும், **உறைக்கும் கண்டாய்**—உறைக்குங்கிடாய; **உழுவது ஓர் எருத்தினை**—ஏருழுகிற ஓர் எருதை, **நுகங்கொடு பாய்ந்து**—நுகத்தடியாலே தள்ளி, **ஊட்டமின்றி**—தீனியில்லாமல், **துறந்தால் ஒக்கும்**—நீக்கிவிடுவதை ஒக்கும்.

**வ்யா:— ஒன்பதாம் பாட்டு.** (தொழுது இதயாதி$_3$) **a ஸத்வநிஷ்ட$_2$ராயிருப்பார்—ஸமாராத$_4$ந காலங்களிலே a$_2$ அவகா$_3$ஹநம் பண்ணி, ஸமாராத$_4$நம் தலைக்கட்டினவனந்தரம் திருவடிகளிலே விழுந்து, "நான் தொடங்கின ஸமாராத$_4$நம் தலைக்**

---

9. *அவ:*— தனக்கு அருள்செய்யாவிடில் அவனுக்கு வரும் அனர்த்த$_2$த்தைக் கூறுகிருள்.

*வ்யா:— ( தொழுது முப்போதும் உன் அடிவணங்கித் தூமலர் தூய்த்தொழுது ஏத்துகின்றேன் )* ஸாத்விகர்கள் எம்பெருமானுக்குத் திருவாராத$_4$நம் பண்ணும்போது நன்கு ஈடுபட்டுத் திருவாராத$_4$னம்பண்ணி, அது முடிந்தவுடன் திருவடிகளிலே விழுந்து "நான் தொடங்கின திருவாராத$_4$நத்தை

---

**அரு:-** ஒன்பதாம பாட்டு **(தொழுது இத்யாதி$_3$)**a தொழுது ஸ்தோத்ரம் பண்ணுகிறது எப்படியிருக்கிறது? என்ன அருளிச்செய்கிருர் (ஸத்வநிஷ்டரித்யாதி$_3$) a$_2$ அவகா$_3$ஹநம்-நன்ருகப் பண்ணுகை. "தூமலர் தூய்த்தொழுது" என்கிற விடத்தில், "தொழுது" என்றது - ஆராதி$_4$த்தென்றபடி



கட்டினேன்; திருவுள்ளத்துக்குப் பாங்கானபடியே போது போக்கியருளவேணும்" என்று ஸ்தோத்ரரூபமானவற்றை விண்ணப்பஞ்செய்யுமாபோலே, அவற்றையெல்லாம் இவன் பக்கலிலே செய்கிருள். (பழுதின்றி) "வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்" என்கிறவதில் ஒரு பழுதின்றிக்கே. (பாரித்யாதி$_3$) பார்சூழ்ந்த கடல்போலேயிருக்கிற வடிவையுடையவனுக்கே அடிமை செய்து வாழப்பெறுதொழியில். நான் அழுதழுது b தடுமாறி இழவோடே ஸஞ்சரித்துக் காலக்ஷேபம் பண்ணுமது உனக்கு உறைக்குங்கிடாய். c ஆற்றவும்-மிகவும். 21. "आदाय सुकृतं तस्य सर्वं गच्छेदरक्षितः" (ஆத$_3$ாய ஸுக்ருதம் தஸ்ய ஸர்வம் க$_3$ச்சே$_2$த$_3$ரக்ஷித :) ஶரணாக$_3$தனை

---

நிறைவுபடுத்தினேன்! திருவுள்ளத்திற்குப் பாங்கானபடியே போதுபோக்கியருளவேணும்" என்று சில ஸ்தோத்ரங்களை விண்ணப்பம்செய்வதுபோலே, இவளும் அவற்றையெல்லாம் இவன் விஷயத்திலே செய்கிருள். மூன்று காலங்களிலும் மனம் மெய் மொழி என்னும் முக்கரணங்களாலும் உன்னை ஆஶ்ரயிக்கின்றேன் என்கிருள். *( பழுதின்றி )* "வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" [திருவாய் 3-3-1] என்கிறபடியே செய்யவேண்டிய அடிமையில் ஒரு குறையுமில்லாமல். *( பார்க்கடல் வண்ணனுக்கே பணிசெய்து வாழப்பெறுவிடில் )* பார் எனப்படும் பூ$_4$மியைச் சூழ்ந்திருக்கும் கடல்போலேயிருக்கிற வடிவை உடையவனுக்கே அடிமைசெய்து வாழப்பெருதொழியில். *(நான் அழுது அழுது அலமர்ந்து அம்மா வழங்க)* நான் இடைவிடாமல் அழுது, தடுமாறி 'அம்மா' என்று கூப்பிட்டுக்கொண்டு ஸஞ்சரித்துப் போதுபோக்கிஞல். *(ஆற்றவும் அது உனக்கு உறைக்கும் கண்டாய்)* அதன் ப$_2$லன் உனக்கு வலிதாக ஏற்படும் கிடாய். ஆற்றவும்—மிகவும்.

**21.** விநஷ்ட: பஶ்யதஸ் தஸ்ய ரக்ஷிண: ஶரணாக$_3$த:।
ஆத$_3$ாய ஸுக்ருதம் தஸ்ய ஸர்வம் க$_3$ச்சே$_2$த$_3$ரக்ஷித: ॥
[ரா-யு 18-30]

---

b அம்மா-இழவாலே அம்மா! என்றழைத்து, வழங்க-ஸஞ்

நோக்காவிட்டால், இவனுடைய பாபப$_2$லத்தை அவன் அநுப$_4$வித்து, அவனுடைய ஸுக்ருதப$_2$லம் இவன் பக்கலிலே வருவதாகச் சொல்லாநின்றதிறே; அப்படியே உன்னைக் குறித்து நான் பண்ணின ஆஶ்ரயணத்துக்குப் ப$_2$லமின்றிக்கே யொழியுமாகில், அது உனக்குப் பொல்லாதாங்கிடாய். அவன் தான் தன்னை ஆஶ்ரயித்தார்க்கு d அங்கக்காரனாய் நின்றிறே அவர்களைச் சேர்ப்பது; 'நம்மையும் உம்மையும் சேர்த்தான்; இவன் நல்ல அங்கக்காரனாயிருந்தான்' என்று e அவன்

---

[ரக்ஷகனான அவன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அவனால் ரக்ஷிக்கப்படாமல் அழிந்துபோன ஶரணாக$_3$தன் அந்த ரக்ஷகனுடைய எல்லாப் புண்ணியங்களையும் தான் எடுத்துக்கொண்டு (புண்யலோகத்திற்குச்) செல்வான்.] என்கிறபடியே ஶரணமடைந்தவனை ரக்ஷிக்காவிடில், அவனுடைய பாபத்தின் ப$_2$லத்தை ஶரணமடையப்பட்டவன் அநுப$_4$விக்கவேண்டி வரும் என்றும், ஶரணமடையப்பட்டவனுடைய புண்ணியத்தின் ப$_2$லம் ஶரணமடைந்தவனுக்கு வந்துவிடுமென்றும் ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றனவன்றோ. அப்படியே ஶரணமடைந்த என்னை நீ ரக்ஷிக்காவிடில், பாபம் வருவதும் புண்ணியம் குறைவதுமாகிற பெரிய தீமைகள் உனக்கு ஏற்படும் என்று கருத்து. இப்படி இவனை நோக்கி இவள் சொல்லுவானேன்? எனில்: தன்னை அடைந்தவர்களுக்கு அங்கக்காரனாய் (எதிர்த்து விரோதி$_4$களை அழித்தும் ரக்ஷிக்கும் ஶூரனாய்) நின்று காதலர்களைச் சேர்ப்பவனன்றோ. அவன் எப்படி அநங்க$_3$ன் (அங்க$_3$மில்லாதவன்) ஆனான்? எனில்: சிவ பார்வதிகளைச் சேர்த்தபோது, "நம்மையும் உம்மையும் சேர்த்த இவன் நல்ல அங்கக்காரனாயிருந்தான்" என்று சிவன் பார்வதியைப்

---

சரிக்க. c ஆற்ற-மிக. d அங்கக்காரன்-எதிர்த்து வெட்டியும் ரக்ஷிக்கும் ஶூரன். f ஆனால் அவனுக்கு அங்கமில்லையே என்ன அருளிச்செய்கிறார் (அவனுடைய த்$_3$ருஷ்டித்யாதி$_3$) e அவன் கொண்டாட-ருத்$_3$ரன் கொண்டாட. g ஊட்டம் - தீனி. 9.



கொண்டாட, f அவனுடைய த்$_3$ருஷ்டிதே$_3$ாஷத்தாலேயிறே இவன் அநங்க$_3$னாய்த்து. (உழுவதோரெருத்தினை இத்யாதி$_3$) எருத்தைக்கொண்டு தன் ஜீவநார்த்த$_2$மாகக் கார்யங்கொண்டு, அநந்தரத்திலே அத்தை ஒன்றாலே தள்ளி, g அதுக்கு ஜீவநமிடாதே துரத்துமாபோலே இருப்பதொன்றுகிடாய் நான் வருந்தினத்துக்கு ஒரு ப$_2$லமின்றிக்கேயொழியுமாகில். 9.

## முதல் திருமொழி—பத்தாம் பாட்டு

கருப்புவில் மலர்க்கணைக் காமவேளைக்
கழலிணை பணிந்தங்கோர் கரியலற
மருப்பினை யொசித்துப்புள் வாய்பிளந்த
மணிவண்ணற் கென்னை வகுத்திடென்று,
பொருப்பன்ன மாடம்பொ லிந்துதோன்றும்
புதுவையர் கோன்விட்டு சித்தன்கோதை
விருப்புடை யின்றமிழ் மாலைவல்லார்
விண்ணவர் கோனடி நண்ணுவரே.

பதவுரை:— **கருப்பு வில்**—கரும்பாகிய வில்லையும், **மலர்க்கணை**—புஷ்பபா$_3$ணங்களையும் உடையவனாய், **காமவேளை**—யாவரையும் விஷயபோ$_4$க$_3$த்திலே மூட்டுகிற மன்மத$_2$னை, **இணை**—ஒன்றுக்கொன்று ஒப்பான, **கழல்**—கழல்களணிந்த அடிகளை, **பணிந்து**—வணங்கி, **அங்கு**—கம்ஸன் ஸபை$_4$ வாசலிலே நிறுத்தப்பட்ட, **ஓர்**—ஒப்பற்ற, **கரி**—குவலயாபீடம் என்கிற யானையானது, **அலற**—வீறிடும்படியாக, **மருப்பினை**—அதன் கொம்பை, **ஒசித்து**—

---

பார்த்துக் கொண்டாட, அவனுடைய த்$_3$ருஷ்டி தோ$_3$ஷத்தாலேயன்றோ நெற்றிக்கண்ணால் எரிக்கப்பட்டு, இவன் அநங்க$_3$னானது. (*உழுவதோர்......ஒக்குமே*) ஒரு மனிதன் தன் வயிறு வளர்ப்பதற்காக ஒரு மாட்டை ஏரிலே பூட்டி உழச்செய்து வேலை வாங்கிக்கொண்டு, கார்யம் ஆனவுடன் அதற்குத் தீனியிடாமல் நுகத்தடியாலே அதை அடித்துத் துரத்துவது போலேயிருக்கும், நான் ஶ்ரமப்பட்டு உன்னைக் குறித்து நோன்பு நோற்றதற்குப் ப$_2$லமில்லாமல் போகுமாகில். 9.

முறித்து, **புள்**—ப$_3$காசுரனுடைய, **வாய்**—வாயை, **பிளந்த**–கிழித்துப்பொகட்டவனுய், **மணி** — நீலரத்நம் போன்ற, **வண்ணற்கு** — வடிவழகையுடையவனேடே, **என்னை**—, **வகுத்திடு என்று**—சேர்த்துவிடவேணும் என்று, **பொருப்பு அன்ன**—மலைகளைச் சேரவைத்தாற்போலிருக்கிற, **மாடம்**—மாளிகைகள், **பொலிந்து**—நிறைந்து, **தோன்றும்**—தோற்ரு நின்றுள்ள, **புதுவையர்** — ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு, **கோன்**—நிர்வாஹகரான, **விட்டுசித்தன்**—பெரியாழ்வார் திருமகளான, **கோதை** — ஆண்டாளுடைய, **விருப்புடை**—விருப்பமடியாகப் பிறந்த, **இன்**—இனிய, **தமிழ்மாலை**—தமிழ்த்தொடைகளை, **வல்லார்**—பாடவல்லவர்கள், **விண்ணவர்கோன்** — அயர்வறுமமரர்களதிபதியுடைய, **அடி**—திருவடிகளை, **நண்ணுவர்**—கிட்டப்பெறுவர்.

**வ்யா:—பத்தாம் பாட்டு.** (a கருப்புவில்லித்யாதி$_3$) **''சார்ங்கமென்னும் வில்லாண்டான்'' என்றும், ''சரங்களாண்ட தண்டாமரைக்கண்ணனுக்கன்றி என்மனம் தாழ்ந்து நில்லாது'' என்றும், இதெல்லாம் இவனுடைய வில்லையும் அம்பையுஞ் சொல்லி, இவன்காலிலே விழும்படியாய் வந்து விழுந்தது.**

---

10. *அவ:—* இப்பதிகத்திற்குப் ப$_2$லம் சொல்லித் தலைக்கட்டுகிருர்.

*வ்யா:— ( கருப்புவில்......பணிந்து )* **'' சார்ங்கமென்னும் வில்லாண்டான்'' [திருப்பல்லாண்டு12] என்றும், ''சரங்களாண்ட தண்டாமரைக் கண்ணனுக் கன்றி என்மனம் தாழ்ந்து நில்லாதே'' [பெரியதிரு 7-3-4] என்றும், எம்பெருமானுடைய வில்லையும் அம்பையும் சொல்லி அவன் காலிலே விழவேண்டியவுள் இவனுடைய வில்லையும் அம்பையும் சொல்லி இவன் காலிலே விழும்படியாயிற்று. இவளுடைய ப்ராப்யத்வரை படுத்தும் பாடு இது.**

---

**அரு:—** பத்தாம் பாட்டு. **(கருப்பு இத்யாதி$_3$)** a ''காமவேள் '' காமம் - விஷயபே$_4$ாக$_3$மாய், அதுக்கு ப்ரவர்த்தகனை மங்மத$_2$ன். வேள் - மங்மத$_2$ன்.



(அங்கோர் கரி அலற) ''குவலயாபீட$_3$மானது b பிளிறி எழும்படியாக அதின் c கொம்பை d அநாயாஸேந முறித்து, ப$_3$காஸுரனை வாயைக் கிழித்து, வைத்த கண் மாருதே கண்டு கொண்டிருக்கவேண்டும்படியான வடிவழகையுடையவனேடே என்னைச் சேர்த்துவிடு'' என்று– e மலைகளைக் கொடுவந்து சேர வைத்தாற் f போலேயிருக்கிற மாடங்கள் g ஸுஸம்ருத்$_3$த$_4$மாய்க் கொண்டு தோன்ருநின்றுள்ள ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு

---

*(அங்கோர் கரியலற மருப்பினையொசித்து)* கம்ஸனின் ஸபை$_4$ வாசலில் நிறுத்தப்பட்டதாய், உருவத்தாலும் ப$_2$லத்தாலும் ஒப்பற்றதான குவலயாபீட$_2$மானது பிளிறி எழும்படியாக அதினுடைய த$_2$ந்தத்தை விளையாட்டாக முறித்து. *(புள்வாய் பிளந்த)* கொக்கின் உருக்கொண்டு வந்த ப$_2$காஸுரனின் வாயைக் கிழித்து; இவ்விரண்டாலும் அநிஷ்டநிவர்த்தகத்வம் சொல்லப்பட்டது. இனி. ஸ்வயம் ப்ரயோஜனமான வடிவையும் உடையவனென்கிருள் மேலே — *( மணிவண்ணற்கு )* கண்ட கண் மாருமல் கண்டுகொண்டிருக்கவேண்டும்படியான நீலமணி போன்ற வடிவழகையுடையவன். இப்படி விரோதி$_4$ நிரஸனம் செய்பவனுகவும், வடிவழகையுடையவனுகவும் இருப்பதால், உன் காலில் விழுந்தாவது அவனைப் பெற வேண்டியிருக்கிறது என்று கருத்து. *(என்னை வகுத்திடு என்று)* 'அநிஷ்ட நிவர்த்தகனுகையாலே ப்ராபகனுகவும், மணிவண்ணனுகையாலே ப்ராப்யனுகவும் இருக்கும் அவனேடே என்னைச் சேர்த்துவிடு' என்று. இனி இப்படிக் கூறியவள் யார் என்று காட்டுகிருள்—*(பொருப்பன்ன மாடம்......கோதை)* மலைகளைக் கொண்டுவந்து வரிசையாக வைத்தாற்போலேயிருக்கும் மாடமாளிகைகள் நிறைந்து விளங்குகிற ஸ்ரீவில்லிபுத்தூரில் இருப்பவர்களுக்குத் தலைவரான ''ஸ்ரீ விஷ்ணுசித்தர்'' என்னும் திருநாமத்தையுடைய பெரியாழ்வாரின் திருமகளான

---

b பிளிறி-கூப்பிட்டு; c மருப்பு-கொம்பு; d ஒசித்தல்-ஒடித்தல்; e பொருப்பு-மலை; f அன்ன - ஒத்த; g பொலிவு - அழகு;

நிர்வாஹகரான பெரியாழ்வார் திருமகளாருடைய h விருப்ப மடியாகப் பிறந்த இனிய தமிழ்த்தொடை வல்லார்கள். (விண்ணவர் இத்யாதி$_3$) ஸாத்விகாக்$_3$ரேஸரரான பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்துவைத்து ப$_4$க$_3$வல்லாப$_4$த்துக்காக மட லெடுப்பாரோபாதி காமன் காலிலே விழவேண்டும்படியான இவரைப் போலன்றிக்கே, இப்ரப$_3$ந்த$_4$ம் கற்றவர்கள் ஸம்ஸா ரத்தை விட்டு, நித்யாநுப$_4$வம் பண்ணுகிற நித்யஸூரிகளோடே i ஒரு கோவையாய் அநுப$_4$விக்கப்பெறுவர்கள். 10.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

முதல் திருமொழி முற்றிற்று.

---

ஆண்டாளே — என்று. இனி இத்திருமொழியை அநுஸந்தி$_4$ப் பவர்களுக்குப் ப$_2$லம் சொல்லுகிருள் — (*விருப்புடை......... நண்ணுவரே*) ஆண்டாள் ப்ராப்யத்வரையாலே சொன்ன இனிய தமிழ்ப் பாமாலைகளை அர்த்த$_2$த்தோடு அநுஸந்தி$_4$க்க வல்லவர்கள் பரமபத$_3$நாத$_2$ன் திருவடிகளையடைவர். (*மாலை வல்லார் விண்ணவர்கோன் அடி நண்ணுவரே*) ஸாத்விகர்களில் தலைவரான பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்தவளாயிருந்தும், எம்பெருமானைப் பெறுவதற்காக மடலெடுக்க முற்பட்ட நம்மாழ்வாரையும், திருமங்கையாழ்வாரையும் போலே, காமன் காலில் விழுகையாகிற அதிப்ரவ்ருத்தியைச்செய்த இவளைப் போலல்லாமல், இப்பத்துப் பாசுரமும் அர்த்த$_2$த்தோடு அநு ஸந்தி$_4$ப்பவர்கள், தாம் ஓர் அதிப்ரவ்ருத்தியைச்செய்யாமலே இந்த ஸம்ஸார ஸம்ப$_3$ந்த$_4$ம் நீங்கப் பெற்று, "*வானவர்க்காவர் நற்கோவையே*" [திருவாய் 4-2-11] என்கிறபடியே பரமபத$_3$ நாத$_2$னை நித்யானுப$_4$வம் செய்கிற நித்யஸூரிகளோடு வேறுபாடின்றி அவனை அநுப$_4$வித்துக் கைங்கர்யம் செய்யும் பேறு பெறுவர்கள். 10.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி த$_3$ாஸன் இயற்றிய
முதல் திருமொழி வ்யாக்$_2$யான விவரணம்
முற்றிற்று.

---

h விருப்பு - ஆசை; i நண்ணல் - கிட்டல். 10.



# இரண்டாம் திருமொழி நாமமாயிரம் ப்ரவேஶம்

அவ:— இப்படி இவர்கள் பண்ணின ஆஶ்ரயணத்தை அநுஸந்தி$_4$த்து, " தங்களைப் பெறுகைக்கு நாம் வருந்த வேண்டும்படியிருக்குமவர்கள், நம்மைப் பெறுகைக்குத் தாங்கள் வருந்துகையாவதென்? அதுதன்னிலும் நம் காலிலே விழுகையன்றிக்கே, நம்மைப் பெறுகைக்கு ஒரு தே$_3$வதாந்த ரத்தின் காலிலே துவளும்படி நாம் பிற்பாடரானேமே! அழகிதாகக் காரியம் பார்த்தோமே!" என்று தன் பிற்பாட்டை அநுஸந்தி$_4$த்துத் a திருவுள்ளம் நொந்து; b திருவாய்ப்பாடியில் b$_2$ பொதுவானுர் வர்ஷார்த்த$_2$மாக இந்த்$_3$ரனுக்குக் கொடுபோ யிடுகிற சோற்றைக்கண்டு, "நாம் பிறந்து வளருகிற ஊரிலே

---

# இரண்டாம் திருமொழி வ்யாக்$_2$யான விவரணம்

நாமமாயிரம் ப்ரவேஶம்

இப்படி இவர்கள் பண்ணின காம ஸமாஶ்ரயணத்தைக் கண்ட கண்ணன் மிகவும் வருத்தமுற்ருன். "இவர்களைப் பெறுவதற்கு நாம் வருந்தி முயற்சி செய்யவேண்டிய பெருமை பெற்றவர்கள் நம்மைப் பெறுவதற்குத் தாங்கள் வருந்தி முயற்சி செய்யும்படி ஆய்விட்டதே! அதிலும் நம் காலில் விழுந்து முயற்சி செய்யாமல், நம்மைப் பெறுவதற்கு ஒரு தே$_3$வதாந்த ரத்தின் காலில் விழவேண்டும்படி நாம் பிற்பட்டு விட்டோமே! நாம் கார்யம் செய்யும் லக்ஷணம் நன்ருயிருக்கிறது!" என்று தான் இவர்களை ரக்ஷிக்கப் பிற்பட்டதை நினைத்து, க$_3$ஜேந்தி ராழ்வானை ரக்ஷிக்கப் பிற்பட்ட காலத்திற்போலே நெஞ்சு கலங் கினுன். திருவாய்ப்பாடியில் இந்திரனையும் இஷ்ட தெய்வமாகக் கொண்ட ஆயர்கள் மழைக்காக இந்திரனுக்கு மலையாகக் குவித்த சோற்றைக் கண்டு "நாம் பிறந்து வளர்கிற

---

அரு:—நாமமாயிரம் ப்ரவேஶம். a (திருவுள்ளம் நொந்து) 'ஆனைக்கு உதவினுற்போலே வந்து உதவினுன்' என்று பூரிப்பது: b தே$_3$வதாந்தரஸமாஶ்ரயணம் அஸஹ்யமா யிருக்குமோ? என்ன (திருவாய்ப்பாடியில் இத்யாதி$_3$) b$_2$பொது

சிலர் ஒன்றை தே₃வதாந்தரத்துக்கு ஆக்குவதாவதென் !'' என்று அதுவும் பொறுக்கமாட்டாதே "மலையின் முன்னே கொடுபோய்க் குவியுங்கோள்'' என்று சொல்லி, தான் மலையாயிருந்து ஜீவிக்குமவன், தனக்கு அஸாத₄ாரணைகளான இவர்கள், தன்னைப் பெறுகைக்குக் காமஸமாஶ்ரயணம் பண்ணும்போது பொறுக்கமாட்டானிறே; c ஒரு ஸாத₄நாநுஷ்டா₂னத்தாலேயாதல், அன்றிக்கே c₂ இதர ஸமாஶ்ரயண முக₂த்தாலேயாதல், தன்னைப்பெற வருந்துமதுவும் பொறுக்க மாட்டாதவன் நேர்கொடு நேரே காமன் காலிலே விழுந்தால் பொறுக்கமாட்டானிறே; அத்தாலே திருவுள்ளம் தளும்பி ஆனைக்கு உதவினாற்போலே கடுகவந்து முகங்காட்ட; அவர்களும்

---

ஊரிலே உள்ள சிலர் ஒரு பொருளை மற்ற தெய்வங்களுக்கு ஆக்குவதாவது!'' என்று அச்செயலைக் கண்டு பொறுக்காமல், "இச்சோற்றையெல்லாம் கோ₃வர்த்த₄ன மலையின் முன்னே கொண்டுபோய்க் குவித்து அதற்கு இடுங்கள்'' என்று சொல்லி, அம்மலைக்கு அந்தர்யாமியாய் ஒரு பூ₄த உருக் கொண்டு அவ்வளவு சோற்றையும் உண்டவன், தனக்கே உரியவர்களான இவர்கள் தன்னைப் பெறுவதற்குக் காம ஸமாஶ்ரயணம் பண்ணுவதைப் பொறுக்கமாட்டானன்றோ. தன்னைக் குறித்துக் கர்ம ஜ்ஞாந ப₄க்தி யோக₃ங்கள் முதலான ஸாத₄நாநுஷ்டா₂னம் செய்வதன் மூலமோ, ஒரு தே₃வதைக்கு அந்தர்யாமியாயிருக்கும் தன்னை உபாஸிப்பதன் மூலமோ தன்னைப்பெற முயல்வதைப் பொறுக்கமாட்டாதவன், நேருக்கு நேரே காமன்காலிலே விழுவதைப் பொறுக்கமாட்டானன்றோ. அதனால் திருவுள்ளம் மிகக் கலங்கி க₃ஜேந்த்₃ரனுக்கு உதவினாற்போலே விரைவில் வந்து இவர்களுக்கு முகம்காட்டினான் கண்ணன். அவன் இப்படித் தங்களைப்

---

வானார் என்றது-இடையரை. c ஸ்வாபதே₃ஶத்தைப் பற்ற அருளிச்செய்கிறார் (ஒரு ஸாத₄நாநுஷ்டா₂நேத்யாதி₃) ஸாத₄நாநுஷ்டா₂நம்—தே₃ஶவாஸாதி₃கள், ஸ்வக₃தஸ்வீகாரம், மடலெடுக்கை முதலானவை. c₂ இதர ஸமாஶ்ரயணம்—தே₃வதாந்தர்யாமித்வேந அக்₃நீந்த்₃ராதி₃ தே₃வதைகளைக் குறித்துப்



இருந்து அந்யபரதை ப₄ாவித்துச் சிற்றிலிழைக்க; அதுதானும் இறந்த - d காமஸமாஶ்ரயணத்திலே ஒருவகையிறே; அத்தை அழிப்பதாக உத்₃யோகி₃க்க; இவர்களும் பலவகையாலும் 'வேண்டா' என்ன, நடுவே இவனும் 'வேணும்' என்ன; இப்படிகளாலே நடுவே யொரு மஹாப₄ாரதம் ப்ரவ்ருத்தமாய், அனந்தரம் e ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாய், f விஶ்லேஷாந்தமான படியைச் சொல்லிற்றுகிறது.

## இரண்டாம் திருமொழி — முதல் பாட்டு.

நாமமாயிர மேத்தநின்ற நாராயணாநர னேயுன்னை
மாமிதன்மக னாகப்பெற்றா லெமக்குவாதை தவிருமே
காமன்போதரு காலமென் றுபங்குனிநாள்கடை பாரித்தோம்
தீமைசெய்யுஞ் சிரீதராவெங்கள் சிற்றில்வந்து சிதையேலே.

---

பாடுபடுத்தியதைக் கண்ட ரோஷத்தாலே இவர்களும் அவனுக்கு முகம்காட்டாமல் சிற்றிலிழைப்பது என்னும் காமஸமாஶ்ரயணத்திற்கு உறுப்பான காரியத்தைச் செய்வதுபோல் ப₄ாவித்துக்கொண்டிருந்தார்கள். இவனும் சிற்றில் எனப்படும் அவர்கள் இழைத்த கோலத்தை அழிக்கத் தொடங்கினான். "இதை அழிக்கவேண்டா''என்று அவர்கள் பலவகையாக அவனை வேண்டினார்கள். எவ்வளவு வேண்டியும் "நான் அழிக்கவே செய்வேன்'' என்றான் இவன். இவ்வண்ணமாக இவனுக்கும் அவர்களுக்கும் மஹாப₄ாரதம் போன்ற ஒரு போராட்டம் நடைபெற்று, அதற்குப்பின் "எம்மைப்பற்றி மெய்ப்பிணக் கிட்டக்கால்''[2-9] என்கிறபடியே இவன் அவர்களை அணைக்கையாகிற ஸம்ஶ்லேஷம் உண்டாகி, அதுவும் எல்லா ஸம்ஶ்லேஷங்களையும்போலே விஶ்லேஷம் எனப்படும் பிரிவிலே தலைக்கட்டின படியைச் சொல்லுகிறது இத்திருமொழி.

---

பண்ணும் கர்மாநுஷ்டா₂நம். d(காமஸமாஶ்ரயணத்திலே ஒரு வகையிறே) என்றது-அதுபோலே அவனுக்கு அநிஷ்டம் என்றபடி. e (ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாய்) என்றது "மெய்ப் பிணக்கிட்டக்கால்''(2-9) என்றத்தைப்பற்ற. f மேலே *கோழியழைப்பதன் முன்ன(3)மாகையாலே (விஶ்லேஷாந்தமான படியைச் சொல்லிற்றுகிறது) என்றபடி.

பதவுரை:— **நாமமாயிரம்**—(ஸூரிகள்) ஆயிரம் திரு நாமங்களையும் சொல்லி, **ஏத்த**—ஸ்தோத்ரம் பண்ணும்படியாக, **நின்ற**—(நித்யவிபூ4தியிலே * ஏழுலகும் தனிக்கோல் செல்ல) வீற்றிருக்கும், **நாராயணா**—நாராயணனே! **நரனே**—சக்ரவர்த்தித் திருமகனாய்த் திருவவதரித்தவனே! **மாமி**—எங்கள் மாமியாரான யசோதைப் பிராட்டி, **உன்னை**—(முன்பே தீம்பனான) உன்னை, **தன்**—தனனுடைய, **மகனாகப் பெற்றால்**—பிள்ளையாகவும் பெற்றால், **எமக்கு**—எங்களுக்கு, **வாதை** — நலிவுபடுகையினின்றும், **தவிருமே** — தப்பப் போமோ? **காமன்**—மந்மத2னானவன், **போதருகாலம் என்று**—வருங்காலம் என்று, **பங்குனி நாள்**—பங்குனி மாஸத்தில், **கடை**—அவன் வரும் வழியை, **பாரித்தோம்**—கோடித்தோம்; **தீமை செய்யும்**—தீம்புகளைச் செய்யுமவனாய், **சிரீதரா**—பெரிய பிராட்டியாரைத் திருமார்விலேயுடையவனே! **வந்து**—நாங்கள் விளையாடுமிடங்களில் வந்து, **எங்கள்** — எங்களுடைய, **சிற்றில்** — சிறு வீடுகளை, **சிதையேல்** — சிதையாதேகொள்.

**வ்யா:— முதற்பாட்டு.** (நாமமாயிரம் இத்யாதி3) **உஸ்தநந்த4யப்ரஜை நோவுகொண்டால் அதுக்காகத் தான் குடிநீர் குடிக்கும் தாயைப்போலே, நரநாராயணரூபத்தாலே வந்து இச்சேதனர்க்காகத் தான் தபஸ்ஸு பண்ணின இத்தை அநு**

---

1. *அவ:—* "பங்குனி மாதமாகையாலே காமன் வரும் வழியில் நாங்கள் சிற்றில்களை இழைத்துக் கொண்டிருக்க, எம்மை நலிவதற்காகவே யசோதையின் மகனாய்ப் பிறந்த நீ எங்கள் சிற்றில்களைச் சிதைப்பது தகாது" என்கிறார்கள்.

*வ்யா:— (நாமமாயிரம் ஏத்த நின்ற நாராயணா நரனே)* கைக்குழந்தைக்கு நோய் வந்தால் அதற்காகத் தான் மருந்து குடிக்கும் தாயைப் போலே, சிஷ்யனும் ஆசார்யனும் இருக்க வேண்டிய இருப்பை இவ்வுலகிலுள்ள சேதனர்க்குக் காட்டுவதற்காக, நரன் நாராயணன் என்னும் இரு அவதாரங்களையெடுத்து வந்து ப3த3ரிகாச்ரமத்திலே தவம் புரிந்ததைக்



**ஸந்தி4த்த தே3வஜாதி, "தேவரீர் என்ன காரியஞ்செய்து தலைக்கட்டுகைக்காக இப்படி தபஸ்ஸு பண்ணியருளுகிறது?" என்று ஸ்தோத்ரம் பண்ணும்படியாக நின்ற நிலையைச் சொல்லிற்றாகவுமாம். b அன்றிக்கே, "நாமமாயிரமேத்த நின்ற நாராயணா" என்று பிரித்து, 22. "तद्विप्रासो विपन्यवः" (தத்3 விப்ராஸோ விபந்யவ:) என்கிறபடியே அஸ்ப்ருஷ்டஸம்ஸாரக3ந்த4ரான நித்யஸூரிகள் ஸ்தோத்ரம்பண்ண உப4யவிபூ4தியுக்த**

---

கண்ட தே3வர்கள் "தேவரீர் என்ன காரியத்தைச் செய்து முடிப்பதற்காக இப்படித் தவம் புரிகிறீர்?" என்று ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லி ஸ்தோத்ரம் பண்ணும்படியாக நின்ற நரநாராயணவதாரங்களைக் கூறுவதாகவும் கொள்ளலாம். அப்படியல்லாமல் "நாமமாயிரம் ஏத்த நின்ற நாராயணா" என்று—

22. தத்3 விஷ்ணோ: பரமம் பத3ம் ஸதா3 பஶ்யந்தி ஸூரய: |
திவீவ சக்ஷுராததம் ||
தத்3 விப்ராஸோ விபந்யவோ ஜாக்3ருவாம்ஸஸ் ஸமிந்த4தே|
விஷ்ணோர்யத் பரமம் பத3ம் ||
[ருக்3வேத3ம் அஷ்டகம் 1-2-7; ஸாமவேத3ம் 3.18.2.4]

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபத3த்தை நித்யஸூரிகள் எப்போதும் பார்க்கிறார்கள். அப்பரமபத3ம், எல்லாவற்றையும் பிரகாசிப்பிப்பவனும், ஆகாயத்திலிருப்பவனும், உலகிற்கெல்லாம் கண்ணாயிருப்பவனுமான ஸூர்யன்போல் ப்ரகாசமுள்ளது. விஷ்ணுவினுடைய யாதொரு பரமபத3மிருக்கிறதோ, அதில் மேதா4விகளும், துதிப்பதையே ஸ்வபா4வமாக உடையவர்களும், ஜாக3ருகர்களாயிருப்பவர்களுமான நித்யஸூரிகள் பிரகாசிக்கின்றனர்.] என்கிறபடியே ஸம்ஸார ஸம்ப3ந்த4மற்ற நித்யஸூரிகள் ஸ்தோத்ரம் பண்ணும்படியாக புவனியும் விண்ணுலகுமாகிற லீலாவிபூ4தியையும் நித்யவிபூ4தியையும் தனிக்கோல் செலுத்திக்கொண்டு நித்யவிபூ4தியிலே எழுந்தருளியிருக்கும் பரமபத3நாத2னையும், "நரனே" என்று—

---

அரு:— முதற்பாட்டு. (**நாமமாயிரமித்யாதி3**) "நாமமாயிரமேத்த, நரநாராயணனாய் நின்றவனே" என்னுதல்; b ஏத்த நாராயணனாய் நின்றவனே என்னுதல்.

ஞய்க்கொண்டு நித்யவிபூ4தியிலேயிருக்கும் இருப்பைச் சொல்லிற்ருகவுமாம். (c நரனே) d 23 "ज्ञातुमेवंविधं नरं"(ஜ்ஞாதுமேவம்-வித4ம் நரம்) என்கிறபடியே — அங்குநின்றும் போந்து சக்ரவர்த்தித் திருமகனுய் நிற்கும் நிலையைச் சொல்லுகிறது. (e உன்னை இத்யாதி3) f அளவுடையரான நித்யஸூரிகள் தன்னை யுள்ளபடியெல்லாம் அறிந்து ஸ்தோத்ரம்பண்ண, தன் ஐஶ்வர்யமெல்லாம் தோற்றும்படி பரமபத3த்திலேயிருக்கும் இருப்பைச் சொல்லிற்று; அங்குநின்றும் போந்து, "அறிவுடையார், அறிவில்லாதார்'' என்று வாசியின்றிக்கே, இருந்ததே குடியாக எல்லாருமொக்கத் தன்னுடைய ஶீலாதி3கு3ணங்களுக்குத் தோற்று நெஞ்சுளுக்கி,

23. ஏததி3ச்சா2ம்யஹம் ஶ்ரோதும்
பரம் கௌதூஹலம் ஹி மே।
மஹர்ஷே! த்வம் ஸமர்த்தோ2஽ஸி
ஜ்ஞாதுமேவம்வித4ம் நரம்॥ [ரா-பா3 1-5]

[மஹரிஷியே! இவ்விஷயத்தை நான் கேட்க விரும்புகிறேன். எனக்கு ஆவல் அதி4கமாக உள்ளது. இப்படிப்பட்ட மனிதனை அறிய நீர் வல்லவராயிருக்கிறீர்.] என்கிறபடியே அப்பரமபத3த்தினின்றும் வந்து சக்ரவர்த்தித் திருமகனுய் அவதரித்து நிற்கும் நிலையையும் சொல்லுவதாகவும் கொள்ளலாம். எல்லாம் அறிந்தவர்களான நித்யஸூரிகள் தன்னை உள்ளபடி ஸ்வரூப ரூப கு3ண விபூ4திகள் எல்லாவற்றையும் அறிந்து ஸ்தோத்ரம்பண்ண, தன்னுடைய செல்வச் செழிப்பெல்லாம் விளங்கும்படி பரமபத3த்திலே இருக்கும் இருப்பை "நாமமாயிரமேத்தநின்ற நாராயணு" என்று சொல்லிற்று.

d 23. "एतदिच्छाम्यहं श्रोतुं परं कौतूहलं हि मे। महर्षे त्वं समर्थोऽसि ज्ञातुमेवंविधं नरम्॥" (ஏததி3ச்சா2ம்யஹம் ஶ்ரோதும் பரம் கௌதூஹலம் ஹி மே। மஹர்ஷே த்வம் ஸமர்த்தோ2஽ஸி ஜ்ஞாதுமேவம்வித4ம் நரம்॥). f இரண்டாமர்த்த2விவரணம் (அளவுடையரான இத்யாதி3) c,e "நரனே" என்று வைத்து, "உன்னை மாமிதன் மகனுக" என்று க்ருஷ்ணுவதாரத்தைச் சொன்னது - த4ர்ம்யைக்யத்தைப்பற்ற.



24 "रामो रामो राम इति" (ராமோ ராமோ ராம இதி) என்றும், 25 "बाला अपि क्रीडमानाः" (பா3லா அபி க்ரீட3மாநா:) என்றும் சொல்லுகிறபடியே ஏத்தும்படியாக வந்து அவதரித்து நிற்கும் படியைச் சொல்லிற்று; அவைபோலன்றிக்கே, g அவற்றின் கார்யமான h தீம்பாலே பெண்களை ஒடியெறிந்து, தான்செய்தது விலக்காதபடியாகப் பண்ணிச் செய்ததடையப் பொறுக்கும்

அங்கிருந்து இந்த லீலாவிபூ4திக்கு வந்து 'அறிவுடையார், அறிவில்லாதார்' என்னும் வேற்றுமையில்லாமல் அயோத்தியில் உள்ளார் அனைவரும் தன்னுடைய ஶீலம் முதலான கு3ணங்களில் ஈடுபட்டு நெஞ்சைப் பறிகொடுத்து—

24. ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமப4வந் கதா2:।
ராமபூ4தம் ஜக3த்3பூ4த் ராமே ராஜ்யம் ப்ரஶாஸதி॥
[ரா-யு 131-102]

['ராமன், ராமன், ராமன்' என்றே குடிகளுடைய பேச்சுகளிருந்தன. ராமன் ராஜ்யம் ஆளும்போது உலகம் முழுவதும் ராமமயமாயிருந்தது.] என்றும்,

25. பா3லா அபி க்ரீட3மாநா: க்3ருஹத்3வாரேஷு ஸங்க4ஶ:।
ராமாபி4ஷ்டவஸம்யுக்தா: சக்ருரேவ மித2: கதா2:॥
[ரா-அ 6-16]

[வீட்டுவாயில்களில் கூட்டங்கூட்டமாக விளையாடும் பிள்ளைகளும், ராமனைப் புகழ்ந்துபேசும் பேச்சுக்களையே பேசிக்கொண்டு இருந்தனர்.] என்றும் சொல்லுகிறபடியே தன்னையே துதிக்கும்படியாக அவதரித்து நிற்கும்படியை "நரனே" என்று சொல்லிற்று. இனி அடுத்த அடியாலே—அந்தப் பரமபத3த்தில் இருப்புப்போலவும், ஸ்ரீராமாவதாரம் போலுமல்லாமல், அந்த ஶீலம் முதலான கு3ணங்களாலே உண்டான தீம்பாலே பெண்களைப் படாதபாடு படுத்தி, தான் என்ன செய்தாலும் தப்பமுடியாதபடியாகவும், செய்ததையெல்லாம் பொறுக்கும்படி

g (அவற்றின் கார்யமான) என்றது—ஶீலாதி3கு3ண

படியான ப்ராப்தியையும் முன்னிட்டுக்கொண்டுவந்து வர்த்திக்கிறபடியைச் சொல்லுகிறது. i முன்பே தீம்பனுயிருக்கிற நீ, அதுக்குமேலே ஒரு மைத்துனமை முறையை ஏறிட்டுக் கொண்டு நலியப்புக்கால் எங்களால் நலிவுபடாதிருக்கப் போமோ? நாங்கள் இங்ஙனே நலிவுபட்டுப்போமித்தனையன்றே முடிய. (எமக்கு) 26 "पुंसां दृष्टिचित्तापहारिणं" (பும்ஸாம் த்$_3$ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்கிறபடியே-வன்னெஞ்சரையுங் கூட அழிக்குமது பிறப்பே அப$_3$லைகளாயிருக்கிறவர்களால் பொறுக்கப்போமோ? என்று, அவன் தீம்புகளுக்குப் பொறுக்கவொண்ணுமை தோற்றச்சொன்னுர்கள் இவர்கள்; 'நானோ? நீங்களன்றே முன் தீம்புசெய்திகோள்; நான் நினைவற்றிருக்க

---

யாகவும் உறவை முன்னிட்டுக்கொண்டு அவதரித்த க்ருஷ்ணுவதாரத்தைச் சொல்லுகிறது—(*உன்னை ...... தவிருமே*) ஏற்கனவே தீம்பு செய்பவனுயிருக்கும் நீ, அதற்கு மேலே மாமியின் மகன் என்னும் உறவு முறையையும் ஏற்படுத்திக்கொண்டு எங்களைத் துன்புறுத்தப் புகுந்தால் நாங்கள் துன்பமடையாமல் இருக்க முடியுமோ? நாங்கள் கடைசிவரையில் இப்படித் துன்பப் பட்டுக்கொண்டே காலத்தைக் கழிக்கவேண்டியதுதான் போலும்! (*எமக்கு*)

26. ரூபௌதா$_3$ர்யகு$_3$ணை: பும்ஸாம் த்$_3$ருஷ்டிசித்தாபஹாரிணம் [ரா-அ 3-29]

[வடிவழகு, வண்மை, கு$_3$ணங்கள் முதலியவற்ருல் ஆண்களின் கண்ணையும் நெஞ்சையும் அபஹரிக்கும் ராமனை.] என்கிறபடியே வலிய நெஞ்சையுடைய ஆண்களையும் ஈடுபடுத்த வல்ல உன் கு$_3$ணங்கள் அப$_3$லைகளான பெண்களாகப் பிறந்த எங்களை உருக்காமல் இருக்குமோ? என்று கருத்து இப்படி அவனுடைய தீம்புகளைத் தாங்கள் பொறுக்க முடிவதில்லை என்று இவர்கள் சொன்னவுடன், 'நானோ தீம்பு செய்தேன்? நீங்களல்லவா முதலில் தீம்பு செய்தீர்கள்; நான் உங்களைப் பற்றிய எண்ணமே இல்லாமலிருக்க, என் வரவை எதிர்

---

கார்யமான என்றபடி. h வாதை-தீம்பாலேயாதல்; i அழ



என் வரவைக் கடாக்ஷித்துச் சிற்றிலிழைத்து வைத்திகோள்' என்றான்; "அதுவோ! அதுவாகில் உன்னுடைய வரவை யுத்$_3$தே$_3$ஶித்துச் செய்தோமல்லோங்காண்; காமன் வருங்காலமென்று, அவன் வரும் மாஸத்திலே எங்கள் வாசல்களை அலங்கரித்தோம்; நாங்கள் உன் வரவைக் கடாக்ஷித்துச் செய்யுமவர்களல்லோம், j உன்னைச் சேர்ப்பார் வரவைக் கடாக்ஷித்துச் செய்யுமவர்கள்காண் நாங்கள்; ஆனபின்பு அது அந்யார்த்த$_2$ம்" என்றுர்கள்; "ஆகில் என்னதும் அந்யார்த்த$_2$ம்" என்று, சிற்றிலை அழிக்கப்புக்கான். "எங்களை ஆராக நினைத்திருந்தாய்? பிராட்டிபரிகரமான எங்கள் பக்கல் அவை செய்யப்போமோ?" என்றுர்கள்; அவள் புருஷகாரமானல் தங்களை நலியவொண்ணுது என்னுமத்தைப்

---

பார்த்துச் சிற்றில் இழைத்து வைத்தது நீங்களன்றே" என்றுன் கண்ணன். அதற்கு பதில் கூறுகிறுர்கள் மூன்றும் அடியில் — (*காமன்......பாரித்தோம்*) "நாங்கள் உனக்காகவா சிற்றில் இழைத்தோம்? காமன் வரும் காலம் என்று அவன் வரும் பங்குனி மாஸத்திலே எங்கள் வாசல்களை அலங்கரித்து வைத்தோமேயொழிய உன் வரவை எதிர்பார்த்துச் சிற்றில் இழைக்கவில்லையே" என்கிறுர்கள். "உன்னோடு எங்களைச் சேர்க்கும் காமன் வரவை எதிர்பார்த்து எங்கள் வாசல்களை அலங்கரித்துவைத்தோமேயொழிய உன் வரவை எதிர்பார்த்துச் செய்யவில்லை. ஆகையால் நாங்கள் சிற்றில் இழைப்பது வேறொருவர்க்காக' என்றுர்கள். "அப்படியானல் நான் செய்கிற கார்யமும் வேறு சிலர்க்காக" என்று சொல்லிக்கொண்டு அவர்களுடைய சிற்றில்களை அழிக்கத் தொடங்கினுன் கண்ணன். அது கண்ட இவர்கள் (*சிரீதரா எங்கள் சிற்றில் வந்து சிதையேலே*) என்கிறுர்கள். அதாவது—எங்களை யாராக நினைத்து இக்காரியம் செய்கிறுய்? பெரிய பிராட்டியார்க்குத் தோழிகளான எங்கள் சிற்றிலை நீ அழிக்கலாமோ? என்று, 'புருஷகாரமாகப் பெரியபிராட்டியாரைப் பற்றியவர்கள் தாங்கள்' என்று தங்களைத் துன்புறுத்த வொண்ணு

---

காலேயாதல். jஹார்த்த$_3$ப$_4$ாவம்(உன்னைச்சேர்ப்பாரித்யாதி$_3$)

பற்றச்சொன்னுர்கள்; 'அத்தனேயோ ! அவளோடே நமக்கு ஒரு ஸம்ப$_3$ந்த$_4$ம் நீங்களே சொன்னிகோளே; நான் ஸ்ரிய:பதி யல்லலேனுே? நான் செய்ததுக்கு நிவாரகருண்டோ ?' என்று அதுதன்னேயே வழியாகக்கொண்டு அழிக்கப்புக்கான்; (தீமை இத்யாதி$_3$) k பிராட்டியோட்டை ஸம்ப$_3$ந்த$_4$ம் எங்கள் பேற்றுக்கு உடல் என்று நினேத்திருந்தோம் நாங்கள்; அது அங்ஙனன்றிக்கே எங்கள் இழவுக்கு உடலாம்படி ஶிக்ஷித்துவிட்டாளாகில், எங்கள் சிற்றிலே அழியாதே அவள்தன்னுடைய சிற்றிலேப் போய் அழி என்கிருர்கள். 1.

## இரண்டாம் திருமொழி — இரண்டாம் பாட்டு.

இன்றுமுற்றும் முதுகுநோவ விருந்திழைத்தவிச் சிற்றிலே
நன்றுங்கண்ணுற நோக்கிநாங்(ெ)க(ா)ளு மார்வந்தன்னேத் தணிகிடாய்
அன்றுபாலக ஞகியாலிலே மேற்றுயின்றவெம் மாதியாய்!
என்றுமுன்றனக் கெங்கண்மேலிரக் கமெழாததெம் பாவமே.

---

மைக்குக் காரணத்தைச் சொன்னுர்கள். அது கேட்ட கண்ணன் "என்னேச் சிரீத$_4$ரன் என்றன்றே சொன்னீர்கள். அந்த ஸ்ரீதே$_3$விக்கும் நாத$_2$னுன நான் செய்வதைத் தடுப்பார் உண்டோ ?" என்று அவர்கள் வார்த்தையையே பற்றிக் கொண்டு சிற்றிலே மேலும் அழிக்கத் தொடங்கினுன். அதைப் பார்த்துச் சொல்லுகிருர்கள் — *(தீமை செய்யும் சிரீதரா எங்கள்......சிதையேலே)* பிராட்டியோடுள்ள உறவு எங்களுக்குப் பயனேப் பெற்றுத்தரும் என்று நினேத்திருந்தோம் நாங்கள். அது அப்படியாகாமல் நாங்கள் பயனே இழப்பதற்கு உறுப்பாம்படி அவள் உனக்குக் கற்பித்துவைத்துவிட்டாளென்ருல், நீ எங்கள் சிற்றிலே அழிக்காதே; அவள் சிற்றில் இழைக்குமிடத்திற்குச் சென்று அதை அழிப்பாயாக என்கிருர்கள். 1.

---

k "சிரீதரா" என்றதுக்கு, "தீமைசெய்யும்" என்ற பத$_3$த்துக்குச் சேரத் தாத்பர்யம் அருளிச்செய்து "எங்கள் சிற்றில் வந்து சிதையேல்" என்றதுக்கு ஶேஷமாகத் தாத்பர்யாந்தரம் (பிராட்டியோட்டை இத்யாதி$_3$) 1.



பதவுரை:— **இன்றுமுற்றும்** — இன்றைப் பொழுதெல்லாம், **முதுகுநோவ** — முதுகு நோகும்படி, **இருந்து**— ஸ்த$_2$ாவர ப்ரதிஷ்டை$_2$போலேயிருந்து, **இழைத்த**—வருத்த முற்றுச்செய்த, **இ**—இந்த, **சிற்றிலே**—, **நாங்களும்**—, **நன்று**—நன்ருக, **கண்**—கண்கள், **உற நோக்கி**—இலக்கில் தைக்கும்படி பார்த்து, **ஆர்வந்தன்னே**—எங்களாசையை, **தணிகிடாய்**— தணியும்படி பண்ணுகிடாய்; **அன்று**—மஹா ப்ரளயம் வந்த காலத்திலே, **பாலகனுகி** — ப$_2$ாலகனுய்க் கொண்டு, **ஆலிலேமேல்** — ஓராலந்தளிரிலே, **துயின்ற**— கண்வளர்ந்தருளியவனுய், **எம்**—எங்களுக்கு, **ஆதியாய்**— காரணபூ$_4$தனுனவனே ! **உன்றனக்கு**—உனக்கு, **எங்கள் மேல்**—எங்கள் விஷயத்தில், **என்றும்**—எக்காலத்திலும், **இரக்கமெழாதது** — இரக்கமுண்டாகாததற்குக் காரணம், **எம்**—எங்களுடைய, **பாவம்**—பாபமேயாம்.

வ்யா:— **இரண்டாம் பாட்டு**. (இன்று a முற்றும்) ஒரு பகலாயிருக்கச்செய்தேயும் **அதுதான் ஆயிரமூழியாய் நெடுகித்** தோற்றினபடி. (bமுதுகுநோவ) **உன்னேப்போலே 27."बहु स्याम्"**

---

2. *அவ :—* "நாங்கள் அரும்பாடுபட்டு அழகாக இழைத்திருக்கும் இச்சிற்றிலே அழிக்காதே" என்கிருர்கள்.

*வ்யா:— (இன்று முற்றும்)* "ஒரு பகல் ஆயிரமூழியாலோ" [திருவாய் - 10-3-1] என்ருற்போலே இவர்கள் சிற்றில் இழைத்தது ஒரு பகலாயிருந்தபோதிலும், அதுவே ஆயிரம் கல்ப காலமாக நீண்டு தோற்றுகிறபடி. *(முதுகு நோவ)*

27. **தைத$_3$க்ஷத ப$_3$ஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி தத்தேஜோऽஸ்ருஜத । [சா$_2$ந் 6-2-3]**

[அந்தப் பரப்$_3$ரஹ்மம் (நானே) பலவாக ஆகக்கடவேன்' என்று ஸங்கல்பித்தது; **அது தேஜஸ்ஸை ஸ்ருஷ்டிசெய்தது.]**

---

அரு :— இரண்டாம் பாட்டு. ( இன்று இத்யாதி$_3$ ) a"முற்றும்"-முழுவதும். b முதுகுநோவ-ஶரீரத்தை நொந்து

(ப$_{3}$ஹு" ஸ்யாம்) என்று ஒரு வருத்தமற ஸ்ருஷ்டித்து, 'இது தனக்கு நாம் நேர்ந்ததோ பெருத்துக் கிடக்கிறது?' என்று த$_{4}$ரித்திருக்கலாவதொன்றல்லகாண்! மெய்யே நொந்து ஸ்ருஷ்டித்ததுகாண். (முதுகு நோவ)c சிற்றிலழிக்கை தவிர்ந்து முதுகைப்பிடிக்குமென்று பார்த்து "முதுகுநோவ" என்கிறார்களாய்த்து. d கடக்கநின்று காலாலே சிற்றிலையழியாதே, கிட்டிநின்று கையாலே தீண்டுமாகிலாகாதோ? என்றிருக்கிறார்கள். e முதல்தன்னிலே அப$_{3}$லைகள்; அதுக்குமேலே விரஹது$_{3}$ர்ப$_{3}$லைகள், க்ருஷ்ணன் திருக்கண்களாலே நெஞ்சூடுருவ ஏவுண்டு நிலையும் தளர்ந்திருப்பர்கள்; இனி வெண்ணெய்

---

என்று உன்னைப்போலே ஸங்கல்ப மாத்ரத்தாலே ஸ்ருஷ்டி செய்ததாயிருந்தால் "இதைச் செய்ய நாம் அப்படி என்ன பாடுபட்டுவிட்டோம்? போனால் போகிறது" என்று ஆறியிருக்கலாம். இது அப்படியல்லாமல் மெய்யாகவே (உண்மையாகவே) மெய் (*ஶரீரம்*) வருந்தி நாங்கள் படைத்ததாகையாலே, நீ அழிப்பதுகண்டு ஆறியிருக்க இயலாது என்று கருத்து. (*முதுகு நோவ*) முதுகில் உள்ள வலியைச் சொன்னால், கண்ணன் சிற்றில் அழிப்பதை விட்டுத் தங்களுடைய முதுகைப் பிடிப்பான் என்று நினைத்து "முதுகு நோவ" என்கிறார்கள். எட்டி நின்று காலாலே சிற்றிலையழிக்காமல், கிட்டி நின்று கையாலே முதுகைத் தீண்டினால் நல்ல, தாயிற்றே என்று நினைக்கிறார்கள். இவர்கள் முதன்முதலில் பிறப்பாலே அப$_{3}$லைகள் (ப$_{3}$லமற்ற பெண்கள்); அதற்கு மேல் விரஹத்தால் மெலிந்தவர்கள்; அத்தோடு "நெஞ்சூடுருவ ஏவுண்டு நிலையும் தளர்ந்து" [நாச் திரு-13-3] என்கிறபடியே நிலைதளர்ந்திருப்பவர்கள். மேலும், வெண்ணெய் விழுங்கி

---

என்னுதல்; *ஶரீரம்* நோவ என்னுதல். c ஹார்த்த$_{3}$ப$_{4}$ாவம் அருளிச்செய்கிறார் (சிற்றிலழிக்கை தவிர்ந்து இத்யாதி$_{3}$) d விவரணம் (கடக்க நின்று இத்யாதி$_{3}$) e சிற்றிலிழைக்கும் காட்டில் முதுகு நோவப் பல ஹேது அருளிச்செய்கிறார் (முதல் தன்னில் இத்யாதி$_{3}$) அன்றிக்கே "இருந்து"



விழுங்கி வளர்ந்தவர்களாகையாலே பொறுக்கமாட்டார்களிறே. (இருந்து) காற்றைப் பிடித்து ஓரிடத்திலேயிருத்தினாற்போலே யிருப்பதொன்றிறே இவர்களை யோரிடத்திலேயிருத்துகையாவது. (இழைத்த) f நெஞ்சொழியப் பண்ணுகிற வ்யாபாரம் சால அரிதிறே. (இச்சிற்றிலை) இதுதான் இருந்தபடி கண்டாயே; நீயழிப்பது இத்தைப் பார்த்தன்றோ; இதிருந்தபடியால் சேதநராயிருப்பார் இத்தை அழியார்களிறே; முதலிலே g நீதானே அழியாயே.

'நான் இத்தையழித்தால் உங்களுக்கு வருவதென்?' என்ன; நாங்கள் இதில் பட்ட வருத்தங்கண்டாயே? நாங்கள் இத்தை

---

வளர்ந்து மென்மைமிக்கவர்களாகையாலே பொறுக்கமாட்டார்களன்றோ. ஆகையாலே "முதுகு நோவ" என்கிறார்கள். (*இருந்து*) கண்ணனைப் பிரிந்து, இருந்த இடத்தில் இருக்கவொட்டாமல் அலையும் இவர்களை, ஓரிடத்திலே இருத்தி வைப்பது, காற்றைப் பிடித்து ஓரிடத்திலே இருத்தி வைப்பது போலே செயற்கரிய செயலன்றோ. (*இழைத்த*) நெஞ்சு கண்ணனிடத்திலே சென்றிருக்கும்போது சிற்றிலிழைத்தது அதைவிடச் செயற்கரிய செயலன்றோ. (*இச்சிற்றிலை*) இச்சிற்றில் அமைந்திருக்கும் அழகைப் பார்த்தாயா? இதைப் பார்த்தபின்பன்றோ நீ அழிக்க வேண்டும். இதைப் பார்த்துவிட்டால் அறிவுடையவர்கள் இதை அழிக்கமாட்டார்களே. ஆகையால் பேரறிவுடைய நீயும் அழிக்க மாட்டாயே.

"நான் இச்சிற்றிலை அழிப்பதால் உங்களுக்கு என்ன குறை?" என்று கண்ணன் திருவுள்ளமாக, கூறுகிறார்கள்— (*நன்றும் கண்ணுற நோக்கி*) நாங்கள் முதுகு நோவ வருந்தி இழைத்த சிற்றிலன்றோ இது. நீ இதை அழித்து விட்டால் நாங்கள் ஒரு முறையாவது நன்றாகக் கண்ணாரப் பார்க்க

---

என்றதுக்குத் தாத்பர்யமாதல். f நெஞ்சொழிய – நெஞ்சு அவனிடத்திலேயிருக்க. g நீதானே-பரமசேதநனான நீதானே.

ஒருகால் க ண் ணு லே பார்த்துக்கொள்ளக்கிடையாது என்கிறுர்கள். அதுவென் ? நீங்கள் இழைக்கிறபோதே பார்த்தன்றே இழைத்தது? என்ன; அவயவங்கள் தோறும் பார்த்தோமித்தனை யல்லது அவயவியாகப் பார்க்கப்பெற்றிலோமே; நாங்கள் அழகிதாகக் கண்கள் தைக்கப்பார்க்கிடுக ; நான்கண்டு த்ருப்தனேனேயென்ன ; (நாங்களும் h ஆர்வந்தன்னைத்தணிகிடாய்)நாங்களும் ஒருகால் கண்டு எங்கள் அபி$_4$நிவேஶங்கெடுங்கிடாய். ‘எனக்கு இத்தனை கருத்துண்டோ? பரமப்ரயோஜநம் வேணுமென்றிருக்கைக்கீடான அறிவு எனக்குண்டோ ? i நான் பா$_3$லனல்லேனே ?’ என்றுன் ; (அன்றித்யாதி$_3$) j உனக்குப் பருவம் நிரம்புவதுக்கு முன்னேபிடித்துப் பணியாய்த்திறே எங்களை முடிக்கை. (அன்று பாலகனுகி ஆலிலைமேல் துயின்ற)

---

முடியாமல் போய் விடுமே என்கிறுர்கள். “அது எப்படி ? நீங்கள் இழைக்கிறபோதே பார்த்தல்லவோ இழைத்தீர்கள்” என்று கண்ணன் கூற — “இழைக்கும்போது ஒவ்வொரு அவயவமாகப் பார்த்தோமேயொழிய, முழுவதும் இழைத்த பின்பு நன்ருகக் கண்ணுர ஒரு முறை கூடப் பார்க்கவில்லையே. அப்படி நாங்கள் பார்க்கும்படியாக அருள் புரியவேணும்” என்ருர்கள்; “நான் நன்ருகப் பார்த்து மகிழ்ச்சி அடைந்துவிட்டேனே அது போதாதோ ?” என்று கண்ணன் கேட்கக் கூறுகிருர்கள் — *(நாங்களும் ஆர்வம் தன்னைத் தணிகிடாய்)* நாங்களும் ஒரு முறை கண்டு, எங்கள் ஆர்வம் தணியும்படி நீ செய்யலாகாதோ? என்கிருர்கள். “நான் சிறுவனுயிற்றே; பரோபகாரமே பரம ப்ரயோஜனம் என்று அறிவதற்குறுப்பான அறிவு எனக்கு இல்லையே” என்று கண்ணன் கூற பதில் கூறுகிருர்கள் — *(அன்று பாலகனுகி ஆலிலைமேல் துயின்ற எம் ஆதியாய்)*

---

h ஆர்வம்-ஆசை. i,j பா$_3$லனல்லேனே ? என்ன; உன் பா$_3$ல்யமேயன்றே பா$_3$த$_4$கமாய்த்து என்கிருர்கள் (உனக்குப் பருவம் இத்யாதி$_3$) “நான் பா$_3$லனல்லேனே ; ஆகையாலே அழிக்கை தவிரேன்” என்ருன் என்று வாக்யத்துக்குத் தாத்பர்யம். “என்றும் உன்தனக்கு எங்கள் மேலிரக்கமெழாதது” என்றது சேரவேணுமிறே.



ஆலந்தளிருக்குள்ளே அடங்குவதொரு வடிவைக்கொண்டு, அதிலே ஸகலலோகங்களையும் வைத்து, பவனுன ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளி, யஶோதைப் பிராட்டிதொட்டிலில் பண்ணும் வ்யாபாரமடைய அதிலே பண்ணி, அங்ஙன் உணர்ந்து நோக்குகைக்கு ஒரு தாயுமின்றிக்கே, துள்ளி விழில் ஒரு வெள்ளம் ஆபத்தாயிருக்கிறதோரிடத்திலே ஸப்ரமாத$_3$மான செயலைச்செய்து அன்று எங்களை முடித்தாய் ! (ஆதியாய்) எங்கள் ஸத்தாஹேதுவையன்றே நீ அழிக்கப்புக்கது.

(என்றுமித்யாதி$_3$) அன்று அங்ஙனே முடிக்கப்பார்த்தாய்; இன்று இங்ஙனே எங்கள் சிற்றிலை அழியாநின்ருய். ஆக, நாங்கள் விஷயமானுல் என்றுமொக்குமிறே உனக்கு

---

நீ குழந்தையாயிருக்கும்போதே எங்களுக்கு ப$_4$யத்தை விளைக்கும் காரியத்தைச் செய்து எங்களை அழிப்பது உன் காரியமாயிருந்தது என்கிருர்கள். அதாவது—அப்போது முளைத்த ஓர் ஆலந்தளிர்க்குள்ளே, அதற்குள் அடங்கும்படியான வடிவைக் கொண்டு, அவ்வடிவிலே எல்லா உலகங்களையும் அடக்கிக் கொண்டு கண் வளர்ந்தருளி,யஶோதை$_3$ப் பிராட்டியின் தொட்டிலில் பண்ணும் செயலையெல்லாம் அதிலும் செய்து, அங்கு போலே பரிவுடன் ரக்ஷிப்பதற்கு ஒரு தாயும் இல்லாத நிலையில், துள்ளிவிழுந்தால் வெள்ளத்தில் விழவேண்டும்படி பேராபத்தாயிருக்குமிடத்தில் எங்களுக்குப் பெரும் ப$_4$யத்தை விளைக்கும் செயலைச் செய்து அன்று எங்களை முடித்தாய். *(ஆதியாய்)* எங்கள் ஸத்தைக்குக் காரணமான உன்னையேயன்றே நீ அழிக்கப்பார்த்தது. ஆதி$_3$ — ஸத்தாகாரணம். இப்படிச் சிறு குழந்தையாயிருக்கும்போதே எங்களுக்கு ப$_4$யத்தை விளைத்து முடிக்கப் பார்த்தவன், சிறுவனுயிருக்கும் இப்போது சிற்றிலையழித்து முடிக்கப்பார்ப்பது வியப்பன்று என்று கருத்து.

*(என்றும்......எம்பாவமே)* ஆலிலையில் கிடந்த அன்று அப்படி எங்களுக்கு ப$_4$யத்தை விளைத்து முடிக்கப்பார்த்தாய். இன்று இப்படி எங்கள் சிற்றிலை அழிக்கிருய். ஆக, எங்கள்

எங்கள் பக்கல் k க்ருபை பிறவாமைக்கு; l ஜக3த்3ரக்ஷணத்திலே தீ3க்ஷித்திருக்கிற உனக்கு க்ருபையில்லையென்னவொண்ணு திறே; அதுக்கடி—எங்கள் பாபமிறே. 28. "ममैव दुष्कृतं? किञ्चित्" (மமைவ து3ஷ்க்ருதம் கிஞ்சித்). 2.

---

விஷயத்தில் என்றுமே நீ கருணையற்றவனுகவே இருக்கிருய். *(இரக்கம் எழாதது எம் பாவமே)* உலகைக் காப்பதற்கே கங்கணம் கட்டிக்கொண்டிருக்கும் உனக்குக் கருணை இல்லை என்று கூற முடியாது. அது எங்கள் விஷயத்தில் செயல் படாததற்குக் காரணம் எங்கள் பாபமேயாகும்.

28. மமைவ து3ஷ்க்ருதம் கிஞ்சிந்மஹத3ஸ்தி ந ஸம்ஶய: ।
ஸமர்த்த2ாவபி தௌ யந்மாம் நாவேக்ஷேதே பரந்தபௌ ॥
[ரா-ஸு 38-48]

[ஸமர்த்த2ர்களும், எதிரிகளைத் துன்புறுத்துமவர்களுமான ராம லக்ஷ்மணர்கள் என்னைக் கணிசியாமலிருப்பதிலிருந்து எனக்குப் பெரியதோர் பாபமுள்ளதென்பதில் ஸந்தே3ஹமில்லை.] என்ற பிராட்டியைப்போலும்,

164. ந மந்த2ராயா ந ச மாதுரஸ்யா
தோ3ஷோ ந ராஜ்ஞோ ந ச ராக4வஸ்ய ।
மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்
வநப்ரவேஶே ரகு4நந்த3நஸ்ய ॥ [ரா-அ ?]

[ராக4வன் வனம் சென்றதற்கு மந்த2ரையினுடையவும், என் தாயினுடையவும், தந்தையுடையவும், ராமனுடையவும் தோ3ஷம் காரணமன்று; என் பாபமே காரணமாயிற்று.]என்ற ப4ரதாழ்வானைப் போலவும் தங்கள் பாபமே இதற்குக் காரணம் என்று நொந்துகொள்கிருர்கள். 2.

---

k இரக்கம்—க்ருபை. l "துயின்ற" என்ற பத3த்தைக்கடாக்ஷித்து "பாவமே" என்கிற அவத4ாரணத்துக்குத் தாத்பர்யம் (ஜக3த்3ரக்ஷணத்திலே இத்யாதி3) 2



## இரண்டாம் திருமொழி — மூன்ரும் பாட்டு.

குண்டுநீருறை கோளரீ!மத யானைகோள்விடுத் தாய்!உன்னைக்
கண்டுமாலுறு வோங்களைக்கடைக் கண்களாலிட்டு வாதியேல்
வண்டல்நுண்மணல் தெள்ளியாம்வளைக் கைகளால்சிர மப்பட்
தெண்டிரைக்கடல் பள்ளியாய்!எங்கள் சிற்றில்வந்து [டோம்
சிதையேலே.

பதவுரை:— **குண்டு**—மிகுந்த ஆழத்தையுடைத்தான, **நீர்**!—ப்ரளயநீர்க்கடலிலே, **உறை**—கண்வளர்ந்தருளுமவனுய், **கோள்**—மிடுக்கையுடைய, **அரி**—ஆண் சிங்கம் போன்றவனுய், **மதம்**—மத3ங்கொண்ட, **யானை**—க3ஜேந்த்3ராழ்வானுக்கு வந்த,**கோள்**—நலிவை, **விடுத்தாய்!**—போக்கினவனே! **உன்னை**—(இப்படி அடியார் துயர் தீர்த்த) உன்னை, **கண்டு**—பார்த்து, **மாலுறுவோங்களை**—ஆசைப்படும் எங்களை, **கடைக்கண்களால் இட்டு**—கடைக்கண்களால் பார்த்து, **வாதியேல்**—நலியாதொழிய வேணும்; **யாம்**—நாங்கள், **வண்டல்**—வண்டலிலுள்ள, **நுண்**—சிறிதான, **மணல்**—மணலை, **தெள்ளி**—தெளித்து, **வளை**—வளையல்களணிந்த, **கைகளால்**—கைகளைக்கொண்டு, **சிரமப்பட்டோம்**—கஷ்டப்பட்டோம்; **தெண்**—தெளிந்த, **திரை**—அலைகளுடைய, **கடல்**—பாற்கடலை, **பள்ளியாய்**—படுக்கையாக உடையவனே! **எங்கள் சிற்றில் வந்து சிதையேலே**—.

வ்யா:—மூன்ரும் பாட்டு. (குண்டுநீருறைaகோளரீ) ஆழத்துக்கு எல்லையில்லாத ஏகார்ணவத்திலே ஸ்ருஷ்ட்யுந்முக2

---

3. *அவ*:— சிற்றில் சிதைப்பதையும், கடைக்கண்களால் எங்களை நலிவதையும் நிறுத்தவேணும் என்கிருர்கள்.

*வ்யா*:— *(குண்டு நீருறை a கோளரீ)* எல்லையில்லாத ஆழத்தையுடைய ப்ரளய ஜலத்திலே இவ்வுலகைப் படைப்பதன் பொருட்டு ஶயனித்திருப்பவனுய், ஸ்ருஷ்டிக்கப்படும் பொருள்களுக்கு ஒரு துன்பமும் வாராதபடி எவராலும் வெல்ல முடி

---

அரு:— மூன்ரும் பாட்டு. (குண்டுநீரித்யாதி3) a கோள்-மிடுக்கு.

ஞய்க்கொண்டு சாய்ந்தருளி, ஸ்ருஜ்யபத$_3$ார்த்த$_2$ங்களுக்கு ஒரு நலிவு வாராதபடி அநபி$_4$ப$_4$வநீயனுயிருக்கிறவனே! (மதயானை b கோள்விடுத்தாய்) ஸ்ருஷ்டித்து விட்டால் வரும் ப்ரதிப$_3$ந்த$_4$ங்களைப் போக்கும்படி சொல்லுகிறது;—ஸ்ரீக$_3$ஜேந்த்$_3$ராழ்வானுக்கு முதலையால் வந்த நலிவைப் போக்கினவனே! (உன்னையித்யாதி$_3$) என்றுமொக்க து$_3$:க்க$_2$நிவர்த்தகனுய்ப் போரும் நீ, உன்னைக்கண்டு பிச்சேறியிருக்கும் எங்களை; c உன்னைக் $c_2$ காணவேண்டியிராதாருடைய து$_3$:க்க$_2$த்தைப் போக்கிறுய்; உன்னைக் கண்ணுலே கண்டு பிச்சேறியிருக்கிற எங்களுக்கு க்லேஶத்தை விளையாநின்றுய். தங்களுக்கு

---

யாத ப$_3$லத்தையுடைய ஆண் சிங்கம் போன்றவனுய் ரக்ஷிப்பவனே! ஸ்ருஷ்டித்ததற்குப் பின்பு, அடியார்களுக்கு ஏற்படும் விரோதி$_4$களை அழித்து ரக்ஷிக்கும் எல்லா இடங்களுக்கும் உபலக்ஷணமாக க$_3$ஜேந்த்$_3$ர ரக்ஷணத்தைக் கூறுகிறது மேலே — (*மதயானை கோள் விடுத்தாய்*) க$_3$ஜேந்த்$_3$ராழ்வான் தன்னைப் பற்றினவன் என்பதையே பார்த்து, அவன் விலங்கு என்பதையோ. அதிலும் மத$_3$ங்கொண்டவன் என்பதையோ கணிசியாமல், அவனுக்கு முதலையால் வந்த துன்பத்தைப் போக்கினவனே! அவனுக்கு முதலையால் வந்த நலிவைப் போக்கினதுபோலே, எங்களுக்கு உன்னுல் வரும் நலிவையும் போக்கவேணும் என்கிருர்கள் மேலே — (*உன்னைக்கண்டு மாலுறுவோங்களை*) என்றும் எல்லாருக்கும் துன்பத்தைப் போக்கும் நீ, உன்னைக்கண்டு மயங்கியிருக்கும் எங்களுடைய துன்பத்தைப் போக்கவேண்டாமோ? உன்னைக் காணவேண்டும் என்னும் ஆசையே இல்லாத பொருள்களைப் படைத்து, அவைகளுக்கு ஏற்படும் துன்பத்தைப் போக்கி ரக்ஷிக்கிருய். உன்னைக் கண்ணுலே கண்டு மயங்கியிருக்கிற எங்களுக்குத் துன்பத்தை விளைக்கிருய். இது எப்படிப் பொருந்தும்?

---

b கோள்-சிறை. c "குண்டுநீர்" என்றத்தைப் பற்ற அருளிச்செய்கிருர் (உன்னைக்காண இத்யாதி$_3$) $c_2$ காண வேண்டியிராதார் - ஸ்ருஷ்டிக்கு முன்பு ஆத்மாக்கள் காணவேண்டியிராதார்.



அவன் பக்கலுண்டான ப்ரேமந்தோற்றத் தாங்களே சொன்ன வாறே, அவனும் தங்கள்பக்கல் தனக்குண்டான ஸ்நேஹம் தோற்றும்படி கடைக்கண்ணுலே பார்த்தான்; நீ உன்னுடைய அபாங்க$_3$வீக்ஷணத்தாலே எங்களை நலியாதே, d முழுக்கப் பார்க்கவல்லையே? 'வந்த அநர்த்த$_2$மென் உங்களுக்கு?' என்ன; (வண்டல் நுண்மணலித்யாதி$_3$) நாங்கள் பட்ட ப்ரயாஸத்தைப் பாராய்;—வண்டலுள்ளவிடந்தேடி, அதிலே நுண்ணிய மணல் தேடி, அதுதன்னைத் தெள்ளி, து$_3$ர்ப்ப$_3$லைகளாயிருக்கிற நாங்கள், e வளைகொண்டு $e_2$ பாடாற்றுகையே தொடங்கி அரிதாயிருக்கிற கைகளைக்கொண்டு f க்லேஶப்பட்டோம். இவர்கள்

---

"உன்னைக்கண்டு மாலுறுவோங்களை" என்று தங்களுக்கு அவனிடமுள்ள பேரன்பு வெளிப்படும்படி தாங்களே வார்த்தை சொன்னவுடன், அவனும் அவர்களிடம் தனக்குள்ள அன்பு தோற்றும்படி கடைக்கண்களாலே பார்த்தான். "இப்படிக் கடைக் கண்களாலே பார்த்து எங்களைச் சித்ரவதை$_4$ செய்யாமல், முழுக்கண்களாலும் பார்த்து எங்களை முடித்துவிடு என்கிருர்கள் மேலே—(*கடைக்கண்களால் இட்டு வாதியேல்*) கடைக்கண்களாலே கள்ளத்தனமாகப் பார்த்து எங்களைச் சித்ரவதை$_4$ செய்வதைக் காட்டிலும், முழுக்கண்நோக்காகிற மழையைப் பொழிந்து திணறும்படிசெய்து எங்களை முடித்துவிடுவது நல்லது என்று கருத்து. "நீங்கள் இப்படிச் சொல்லும்படி உங்களுக்கு என்ன துன்பம் வந்துவிட்டது?" என்று கண்ணன் கேட்கக் கூறுகிருர்கள் மேலே — (*வண்டல்......... சிரமப்பட்டோம்*) நாங்கள்பட்ட ஶ்ரமத்தைப் பாராய். வண்டல் உள்ள இடம் தேடிச்சென்று, அதிலே நுண்மைமிக்க மணலைத் தேடி எடுத்து அதைக் கைகளாலே தெளித்து ஶ்ரமப்பட்டோம். (*வளைக்கைகளால்*) ஏற்கனவே அப$_3$லைகளாய்

---

d முழுக்கப்பார்க்கவல்லையே - முடிக்கவல்லையே என்றபடி. e (வளைக்கை) அவன் ஸ்பர்ஶித்த வளையாகையாலே பாடாற்றலாயிருக்கும்; அந்த வளையும் இப்போது த$_4$ரிக்கைக்கு ஶக்தியின்றியிலேயிருக்கிற கையைக்கொண்டு. அப்படியிருக்கச்செய்தேயும் வளையை த$_4$ரித்துக்கொண்டு செய்தோம் என்றபடி. f சிரமம்-இளைப்பு. $e_2$ பாடாற்றுகை-

இப்படி சொல்லச்செய்தேயும் இத்தையழிக்க ஒருப்பட்டான்; (தெண்டிரையித்யாதி$_3$) திருப்பாற்கடலிலே வந்து சாய்ந்தது உன்னுடைய சிற்றிலழியாமைக்கே; எங்கள் சிற்றிலை அழிக்கிறதென்? ஐ உன் சிற்றில்போலே நெருப்பும் காற்றுமாகக்கொண்டு இட்ட சிற்றிலன்றுகாண்! வண்டல் நுண் மணல் தெள்ளியிட்ட சிற்றில்காண்! இது உபாதே$_3$யங்காண். எங்கள் சிற்றிலை அழியாதே இன்னம் அங்கேபோய் உன் சிற்றிலை நோக்குகிடாய். அந்தக் கடற்கரை அழியாதபடி நினைப்பிடுதல்; அத்தைக் ஈ கரைகட்டுதல் செய்யப்பாராய். 3.

---

உன்னைப்பிரிந்து மேலும் து$_3$ர்ப$_3$லைகள் (ப$_3$லமற்றவர்கள்) ஆகிவிட்ட நாங்கள் வளையை த$_4$ரிப்பதற்குக் கூட வலிமையற்ற இக்கைகளாலே; நீ தொட்ட வளைகளாகையாலே அவற்றைக் கழற்ற மனமில்லாமல் அணிந்துகொண்டு இத்தனை ஶ்ரமப் பட்டோம் என்கிறார்கள். இவர்கள் இப்படிச் சொன்ன பின்பும் சிற்றிலையழிக்க முற்பட்டான். அதுகண்டு சொல்லுகிறார்கள் மேலே—(*தெண்டிரை.........சிதையேலே*) திருப்பாற்கடலிலே நீ வந்து பள்ளிகொண்டது நீ படைத்த சிற்றிலான உலகம் அழியாமல் ரக்ஷிப்பதற்குத்தானே. அப்படியிருக்க எங்கள் சிற்றிலைமாத்திரம் அழிப்பது நியாயமா? "*வாயோரக்$_3$நி:, அக்$_3$நேராப:*"[தை-ஆ 1-2] என்று நீ படைத்த சிற்றில்போலே நெருப்பும் காற்றுங்கொண்டு கட்டின சிற்றிலன்று எங்களுடையது. வண்டல் நுண்மணல் தெள்ளி இழைத்த சிற்றிலல்லவோ இது. இது கைக்கொள்ளத் தக்கதேயொழிய அழிக்கத்தக்கதோ? எங்கள் சிற்றிலை அழிக்காமல், திருப்பாற்கடலுக்குச் சென்று உன் சிற்றிலான உலகை ரக்ஷிப்பது நல்லது. அந்தக் கடற்கரை அழியாதபடி பார்த்துக்கொள்ளும் கார்யத்தையோ, அந்தக் கடற்கரை அழியப்புக்கால் கரை கட்டும் காரியத்தையோ செய்வதை விட்டு, எங்களுடைய சிற்றிலை அழிக்கும் காரியத்தைச் செய்யாதே என்கிறார்கள். 3.

---

து$_3$:க்க$_2$ம் ஆறுகை. ஐ"எங்கள் சிற்றில்"என்றதுக்கு வாஸனை (உன் சிற்றில்போலே இத்யாதி$_3$) ஈ கரைகட்டுகை-ஸேதுகட்டுகை. 3.



## இரண்டாம் திருமொழி — நாலாம் பாட்டு.

**பெய்யுமாமுகில் போல்வண்ணா!உன்றன் பேச்சுஞ்செய்கையுமெங்களை**
**மையலேற்றி மயக்கவுன்முகம் மாயமந்திரந் தான்கொலோ**
**நொய்யர்பிள்ளைக ளென்பதற்குன்னை நோவநாங்களுரைக்கிலோம்**
**செய்யதாமரைக் கண்ணினாய்!எங்கள் சிற்றில்வந்து சிதையேலே.**

பதவுரை:— **பெய்யும்** — பொழியாநின்றுள்ள, **மா**— கருத்த, **முகில்போல்**—மேக$_4$ம்போன்ற, **வண்ணா**—திருநிறத்தையுடையவனே! **உன்றன்**—உன்னுடைய, **பேச்சும்**— தாழ்ந்த பேச்சுக்களும், **செய்கையும்**—தாழ்ந்த செயல்களும், **எங்களை**—அப$_3$லைகளான எங்களை, **மையலேற்றி**—பிச்சேற்றி, **மயக்க** — அறிவுகெடுக்கைக்கு, **உன்முகம்** — உன்னுடைய முகம், **மாயமந்திரந்தான் கொலோ**—சொக்குப் பொடியோ? **செய்யதாமரை**—செந்தாமரை மலர்போன்ற, **கண்ணினாய்**— திருக்கண்களை உடையவனே! '**நொய்யர்**—இவர்கள் மிகப் புல்லியர், **பிள்ளைகள்** — பா$_3$லைகளாயிருந்தார்கள், **என்பதற்கு**—என்று பிறர் சொல்லுவதற்கு பயந்து, **நாங்கள்**—, **உன்னைநோவ**—நீ வருந்தும்படி, **உரைக்கிலோம்**—சொல்லுகின்றிலோம்; **எங்கள் சிற்றில் வந்து சிதையேலே**—

**வ்யா:**— **நாலாம் பாட்டு** (பெய்யுமாமுகிலித்யாதி$_3$) ஒரு வர்ஷுகவலாஹகம் மின்னிமுழங்கி வில்லிட்டு ஸஞ்சரிக்குமாபோலேயாய்த்துப் பெண்கள் முன்னே ஶ்ரமஹரமான வடிவோடே ஸஞ்சரிக்கிறபோதிருக்கிறது. இவர்கள் தன் வடிவிலே

---

4. *அவ:*— உன்முகமாகிற சொக்குப்பொடியைப் போட்டு எங்களை மயக்கி எங்கள் சிற்றிலை அழிக்காதே என்கிறார்கள்.

*வ்யா:*—(*பெய்யு மாமுகில்போல் வண்ணா*) மழைபொழியும் கார்காலமேக$_4$மானது, மின்னி முழங்கி இந்திரன் வில்லோடு ஸஞ்சரிப்பதுபோலேயிருக்கிறது,— நீ உன்னுடைய கறுத்த, கண்டார் களைப்பை ஆற்றும் திருமேனியில் திருவாப$_4$ரணங்

தோற்று, ஈடுபட்டமை தோற்ற வார்த்தை சொன்னவாறே, அதுவே அவகாஶமாக "அடியேன் குடியேன்" என்றுற் போலே சில தாழ்வுகள் சொல்லுவது, விரல்கவ்வுவதாய்க் கொண்டு சிலவற்றைச்செய்யப்புக்கான்; அதிலே துவக்குண்டு அறிவுகெட்டு—(உன்றன் பேச்சும் செய்கையும் எங்களை a மையலேற்றி மயக்க உன் முகம் மாயமந்திரந்தான் கொலோ) உன்தாழ்ந்த பேச்சுக்களும், வ்யாபாரங்களும் எங்களைப் பிச்சேற்றி அறிவுகெடுக்க உன்முகம் b அம்மான் பொடியோ? என்கிறார்கள்.

---

களைச் சாத்திக்கொண்டு பெண்கள் முன்னே ஸஞ்சரிப்பது. இவர்கள் தன்னுடைய வடிவழகிற்குத்தோற்று, தங்கள் ஈடுபாடு விளங்கும்படியாக இப்படி வார்த்தை சொன்னவுடன் அதையே பற்றிக்கொண்டு, "அடியேன், குடியேன்" என்றுற் போலே தன்னைத் தாழ்த்திச் சொல்லுவதும், விரல்களைக் கடிப்பதுபோன்ற சில செயல்களைச் செய்வதுமாக ஆனான் கண்ணன். அதிலே ஈடுபட்டு அறிவுமழுங்கிச் சொல்லுகிறார்கள் மேலே—(*உன்றன் பேச்சும்.........மாயமந்திரந்தான் கொலோ*) உன்னுடைய தாழ்வைக்காட்டும் பேச்சுக்களும், செயல்களும் எங்களை மயக்கி அறிவு மழுங்கப் பண்ணுகின்றன. இதற்குக் காரணமான உன்னுடைய முக௱ம் அம்மான் பொடியோ? என்கிறார்கள். [பிள்ளைகளைப்பிடிப்பவன் ஒரு பொடியைப்பிள்ளை மேல் தூவுவான் என்றும், அந்தப்பிள்ளை "அம்மான் அம்மான்" (மாமா, மாமா) என்று சொல்லிக்கொண்டு அவன் பின்னே போய்விடும் என்றும், இந்தப் பொடிக்கு அம்மான்பொடி என்று சொல்லுவது உண்டு என்றும் உலகவழக்கு உண்டு; இந்த உலகவழக்கையொட்டி அம்மான்பொடி என்கிறது.]

---

அரு:—நாலாம் பாட்டு. (பெய்யும் இத்யாதி$_{3}$) a மையல்-பிச்சு. b (அம்மான் பொடி) "பிள்ளை அபஹரிப்பார், ஒரு பொடியைப் பிள்ளைமேலே பொகட்டால், அந்தப்பிள்ளை 'அம்மான், அம்மான்' என்று அவன் பின்னே போம்" என்று ஒரு ப்ரஸித்$_{3}$தி$_{4}$யுண்டு; அத்தைச் சொல்லுகிறது.



அது ஏதாகிலென்? c இனிச் செய்யலாவதுண்டோ? என்றான்; என்? இனிச் செயலற்றுப்போகவேணுமோ? நீ நெடுநாள் கூடி வ்யாபரித்துப் பண்ணினத்தையடைய நாங்கள் ஒரு d உக்தியாலே அழித்து உன்னை e மறுமுட்டுப்பெறுதபடி பண்ணலாய்த்திறே; அது செய்கிறிலோம். அது செய்தாலென்? என்னில்; (f நொய்யரித்யாதி$_{3}$) "ப$_{3}$ாலனென இவன் தங்களையொழியச் செல்லாமையுடையனாய்த் தங்கள் திரளிலே வந்து புகுரப்புக்கால், 'இவன் புகுந்திடுவானுக்கு' என்றிருந்தால், இவர்களுக்கு என்ன சேதமுண்டு? இவன் புகுர வேண்டா என்று இங்ஙனே விலக்குவதே! இவர்கள் சாலப் புல்லியராயிருந்தார்கள்; ப$_{3}$ாலராயிருந்தார்கள்" என்று நீ உள்ளே புகுந்து பண்ணும் மர்மம் அறியாதார் சொல்லா

---

"அது எந்தப் பொடியாவது ஆகட்டும். அதில் அகப்பட்டுக் கொண்ட நீங்கள் என்ன செய்யமுடியும்?" என்றான் கண்ணன். "ஏன், எங்களால் செய்யமுடியாமலில்லை. நீ இவ்வளவுநாள் எங்களுக்குச் செய்ததையெல்லாம் அழிக்கும்படி நாங்கள் ஒரு வார்த்தை சொல்லி உன்னை வெளியில் தலைகாட்டமுடியாதபடி செய்துவிடுவோம். ஒரு காரணத்தாலே அதை நாங்கள் செய்யாமல் இருக்கிறோம்" என்கிறார்கள் மூன்றும் அடியாலே. அக்காரணம் தான் என்ன? எனில் (*நொய்யர் பிள்ளைகள் என்பதற்கு*) "ப$_{3}$ாலனென கண்ணன் இவர்களைவிட்டு உயிர் த$_{4}$ரிக்கமுடியாமையாலே, இவர்கள் கூட்டத்திலே வந்து புகத்தொடங்கினால் 'புகுந்துவிட்டுப் போகட்டும்' என்று இருந்தால் இவர்களுக்கு என்ன சேதம் வரும்? 'புகாதே' என்று இவனை இப்படி விலக்குகிறார்களே. இவர்கள் மிகவும் புன்மை மிக்கவர்களாயிருந்தார்கள். சிறுபிள்ளைகளாய் இருந்தார்கள்" என்று நீ

---

c (இனிச்செய்யலாவதுண்டோ? என்றான்) என்றது—என் கையிலே அகப்பட்டபின்பு இனிப் போக்கடியுண்டோ? என்றான் என்றபடி. d உக்தி-மர்மோக்தி. e மறுமுட்டுப்பெறுதபடி - புறம்பு விலைசெல்லாதபடி. f நொய்யர் - புல்லியர்.

நிற்பர்கள். (நோவ-உரைக்கிலோம்) எங்களுக்கு ஓர் d உக்தி மாத்ரம் ; உன்னை e மறுமுட்டுப் g பெறாதபடி பண்ணலாம்; அது செய்கிறிலோம். பின்னையும் அழிப்பதாக ஒருப்பட்டது மாறாதேயிருக்கச்செய்தேயும் ஸாத3ரமாகப் பார்த்தான் ; (செய்யதாமரைக்கண்ணினாய! எங்கள் சிற்றில் வந்து சிதையேலே ) கண்ணாலே எங்கள் h அபி4ஸந்தி4யைக் குலையாதேகொள்; காலாலே எங்கள் சிற்றிலை அழியாதேகொள். 4.

---

உள்ளே புகுந்து மறைமுகமாக எங்களைப் படுத்தும்பாட்டை அறியாத ஊரார் எங்கள்மேல் அபவாத3ம் சொல்லுவார்கள்; *(நோவ உரைக்கிலோம்)* நாங்கள் ஒரு சொல் சொன்னாலே போதும்; உன்னை வெளியில் தலைகாட்டமுடியாதபடி செய்து விடுவோம். முற்கூறிய காரணத்தாலே அதைச் செய்யாமல் இருக்கிறோம் என்கிறார்கள். இவனிடம் அன்புடைமையே நோவ உரைக்காமைக்கு உண்மைக் காரணமாயிருந்தபோதிலும், இவனை ப4யமுறுத்துவதற்காக இப்படிக் காரணத்தை ஏறிட்டுச் சொல்லுகிறார்கள். கண்ணன் உண்மைக் காரணத்தை அறிந்தவனாகையாலே, இவர்களை அன்போடு பார்த்துக் கொண்டு சிற்றிலை அழிக்கத் தொடங்கினான். அதைக்கண்டு சொல்லுகிறார்கள் மேலே — *(செய்ய தாமரைக் கண்ணினாய்! எங்கள் சிற்றில்வந்து சிதையேலே)* உன் கண்ணாலே நாங்கள் காமனுக்குச் சிற்றிலிழைப்பதில் கொண்டிருக்கும் உறுதியைக் குலைத்து விடாதே; காலாலே எங்கள் சிற்றிலையழிக்காதே என்கிறார்கள். 4.

5. *அவ:*—நீ எங்கள் சிற்றிலை அழித்தாலும் எங்களுடைய நெஞ்சம் உன்னிடமே ஈடுபடுகிறது என்கிறார்கள்.

---

f,g(பெறாதபடி பண்ணலாம்)''நொய்யர் பிள்ளைகளென்பதற்கு உன்னை நோவ நாங்களுரைக்கிலோம்'' என்று பூரிப்பது. ''உன்னை நோவ உரைத்தால், எங்களை, 'பிள்ளைகள், நொய்யர்-புல்லியர்' என்பர்கள்; அதுக்காகநோவச்சொல்லமாட்டோம்'' என்று ஸப்3தா3ர்த்த2ம். h அபி4ஸந்தி4—அந்யபரதை. 4.



## இரண்டாம் திருமொழி—ஐந்தாம் பாட்டு.

வெள்ளைநுண்மணற் கொண்டுசிற்றில் விசித்திரப்பட
வீதியாய்த்
தெள்ளிநாங்க ளிழைத்தகோல மழித்தியாகிலு
முன்றன்மேல்
உள்ளமோடி யுருகலல்லா லுரோடமொன்று
மிலோங்கண்டாய்
கள்ளமாதவா! கேசவா! உன் முகத்தனகண்க ளல்லவே.

பதவுரை :— கள்ளம் — கபடச் செய்கைகளையுடைய, மாதவா—கண்ண பிரானே! கேசவா—கேசவனே, (நாங்கள்—) வெள்ளை நுண்மணல் கொண்டு — வெளுத்துச் சிறுத்த மணல்களைக்கொண்டு, வீதிவாய்—தெருவிலே, விசித்திரப் பட—(அனைவரும் கண்டு) ஆச்சரியப்படும்படி, தெள்ளி இழைத்த — தெளித்து இழைத்த, சிற்றில் — சிறு வீடுகளாகிற, கோலம் — கோலத்தை, அழித்தி ஆகிலும்—நீ அழித்தாயாகிலும், (அதற்காக), உள்ளம்—(எங்களுடைய) நெஞ்சானது, ஓடி—உடைந்து, உருகல் அல்லால்—உருகுமத்தனையொழிய, உன் தன் மேல்—உன் மேலே, உரோடம் ஒன்றும் இலோம் — சிறிதும் கோபமுடையோமல்லோம் ; உன் முகத்தன — உன் முகத்திலுள்ளவை, கண்கள் அல்லவே—கண்களன்றோ?.

வ்யா:— அஞ்சாம் பாட்டு. (வெள்ளை நுண் மணல் கொண்டு) நிலவைப் பரப்பினாற்போலே வெளுத்து, அது தன்னிலும் பருக்கைப்படில் பொகட்டுப்போம் து3ஶ்ஶீல தே3வதையாகையாலே, அச்ச2மான மணலைக்கொண்டு, அது

---

*வ்யா:—(வெள்ளை நுண்மணற்கொண்டு தெள்ளி)* நிலவைப் பரப்பினாற்போலே வெளுத்ததாய், நுண்ணியதான மணலைக் கொண்டு தெளித்து. பருக்கைக்கல் இருந்தால் காலில் உறுத்தும் என்று கோபித்துக்கொண்டு போய்விடும் தாழ்ந்த கு3ணமுடைய தே3வதையாகக் காமன் இருக்கையாலே, ஶுத்3த4மான வெள்ளைமணலையும் பருக்கைக்கல் இல்லாதபடி

தன்னைத்தெள்ளி. (சிற்றில் விசித்திரப்பட) விசித்ரஸ்ருஷ்டி பண்ணவல்லேன் நான் என்றிராதேகொள்; நாங்களும் வல்லோங்காண். (வீதி a வாய்-நாங்கள் b இழைத்த கோலம்) தெருவிலே நாங்கள் இழைத்த அழகிய சிற்றிலை அழித்தாயாகில். இது இருந்தபடி கண்டாயே; இத்தைக் கண்டால் அழிப்பாரில்லையிறே; c நீ தானே அழியாய் எனகிறார்கள். நான் அழித்தால் தான் நீங்கள் செய்வதென்? என்றான்; (உன்றனித்யாதி$_3$) நீ அழித்தாயாகிலும், 'ஒருவன் சிற்றிலை அழித்தபடியென்!' என்று அதுக்கு ஹ்ருத$_3$யமழிந்து உடைநலைப்படுமதுபோக்கி d ரோஷமென்று பேரிடலாவதொன்றுமில்லை. e நெஞ்சு வேவா

---

ஆராய்ந்து நுண்ணிய அந்த மணலைக்கொண்டு தெளித்துச் சிற்றில் இழைக்கிறார்கள். *(சிற்றில் விசித்திரப்பட)* "விசித்திரமான ஸ்ருஷ்டியைச் செய்யவல்லவன் நானே என்று நினைத்து இறுமாந்திராதே; எங்களுக்கும் விசித்திரமான சிற்றிலை இழைக்கத் தெரியும்" என்று கண்ணனைப் பார்த்துச் சொல்லுகிறார்கள். ***(வீதிவாய் நாங்கள் இழைத்த கோலம் அழித்தியாகிலும்)*** தெருவிலே நாங்கள் இழைத்த அழகிய சிற்றிலாகிற கோலத்தை நீ அழித்தாயானாலும் *(விசித்திரப்பட கோலம்)* இதன் அழகைப் பார்த்தாயா. இதைக் கண்ணால் பார்த்துவிட்டால் எவராலும் அழிக்கமுடியாதே. இதைக் கண்ணால் பார்த்துவிட்டு நீ அழி என்கிறார்கள். *(அழித்தியாகிலும்)* இதைக் கண்ணால் பார்த்துவிட்டால் உண்மையில் கல் நெஞ்சனான நீயும் இதை அழிக்கமாட்டாய் என்று கருத்து. "நான் அழித்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்?" என்று கண்ணன் கேட்கக் கூறுகிறார்கள்—*(உன்றன்மேல்...கண்டாய்)* நீ சிற்றிலை அழித்தாயாகிலும் "இவன் சிற்றிலையழிக்கும் அழகு இருந்தபடியென்!" என்று அதற்கு நெஞ்சழிந்து உருகிப்போவோமேயொழிய, கோபம் சிறிதும் எங்களுக்கு ஏற்படாது. உண்மையில் இவர்களுக்கு ரோஷம் எனப்படும் கோபம் இல்லையோ? எனில்; இவன்

---

அரு:—அஞ்சாம் பாட்டு. (வெள்ளை இத்யாதி$_3$) a வாய்-இடம்; b இழைத்தல்-இடுதல். c "ஆகிலும்" என்ற யதி$_3$ ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம் (நீதானே இத்யாதி$_3$) d உரோடம்-ரோஷம்.



நிற்கச் சொல்லும் வார்த்தையிறே இது. இவர்கள், தங்கள் அகவாயில் இழவுதோற்றச் சொல்லச்செய்தேயும், பின்னையும் தான் கொண்ட f கோட்பாடு விடாதிருக்க, அதுதன்னையும் மறைத்து, ஸ்ரிய:பதியான செருக்குத்தோற்ற அங்கேயிங்கே ஸஞ்சரிப்பது, புறம்பே அந்யபரதை ப$_4$ாவிப்பது, குழலைப் பேணுவதாகப் புக்கான்; அத்தையறிந்து — (கள்ள மாதவா கேசவா உன்முகத்தன g கண்களல்லவே) h பாவீ! h$_2$நீயும்

---

படுத்தும் பாட்டைக் கண்டு உள்ளே நெஞ்சு எரிந்தபோதிலும் அதை மறைத்து ஒப்புக்கு வார்த்தை சொல்லுகிறார்கள். உண்மையில் இவர்கள் நெஞ்செரிந்து வார்த்தை சொல்லுகிறார்கள் என்று அறிந்திருந்தும் இவர்களுடைய சிற்றிலையழிப்பது என்னும் உறுதி தளராமல் இருந்தான் கண்ணன். ஆனாலும் அவ்வுறுதியையும் வெளியில் தெரியாதபடி மறைத்து லக்ஷ்மீநாத$_2$னகிற க$_3$ர்வம் தோற்ற, அங்குமிங்குமாக ஸஞ்சரிப்பது, வேறு எதையோ பார்ப்பது போலிருப்பது, கேஶபாஶங்களைச் சீர்திருத்துவது முதலான காரியங்களைச் செய்யப்புகுந்தான். அதையறிந்து கூறுகிறார்கள் மேலே— *(கள்ள மாதவா...கண்களல்லவே)* பாவீ! இதைக் கண்டபின்பன்றோ நீ அழிக்கிறாய். உன் முகத்திலிருப்பவை கண்களல்லவோ? நீ மாத$_4$வனாய், புருஷகாரபூ$_4$தையான பிராட்டியோடு சேர்ந்திருப்பது எங்கள் பேற்றுக்கு உதவும் என்று நினைத்தோம். அதுவே உன்னுடைய க$_3$ர்வத்திற்கு உறுப்பாயிற்று. நீ கேஶவனாய் அழகிய கேஶபாஶங்களோடு இருப்பது நாங்கள் அநுப$_4$விப்பதற்கு உறுப்பு என்று நினைத்தோம். அதுவே, நீ குழலைப்பேணி அந்யபரன் (வேறு காரியத்தில் ஈடுபட்டிருப்பவன்) போலே வேஷம் போடுவதற்கு

---

e ரோஷமில்லையோ? என்ன அருளிச்செய்கிறார் (நெஞ்சு இத்யாதி$_3$) f கோட்பாடு - கோலுபாடாய், உத்$_3$யோக$_3$ம்.

g,h,i (கண்களல்லவே) வினவாய், ஸம்ஶயமாதல்; தேற்றமாய், நிஶ்சயமாக வேறென்றுதல்; i இத்தை அருளிச்செய்கிறார் (கண்ணென்று பேராய்இத்யாதி$_3$) h$_2$,h$_3$(நீயும் இத்தைக்

இத்தைக்கண்டன்றே அழிக்கிறாய் ; உன்முகத்தன கண்க ளல்லவோ ? இவை தண்ணளிக்கு உறுப்பு என்று நினைத் திருந்தோம். அது அங்ஙனன்றிக்கே b$_2$பீலிக்கண், மாலைக் கண்ணேபாதியாய்த்தோ? i கண் என்று பேராய், கண்டாரை முன்னடியிலே விழவிட்டுக்கொள்வதொரு வலையிறே. "கண் ணென்னும் நெடுங்கயிறு" என்னக்கடவதிறே. 5.

## இரண்டாம் திருமொழி—ஆறும் பாட்டு.

முற்றிலாதபிள் ளைகளோம்முலை போந்திலாதோமை
நாடொறும்,
சிற்றில்மேலிட்டுக் கொண்டுநீசிறி துண்டுதிண்ணென
நாமது,
கற்றிலோம்கட லையடைத்தரக் கர்குலங்களை முற்றவும்,
செற்றிலங்கையைப் பூசலாக்கிய சேவகா!எம்மை வாதியேல்.

பதவுரை :— கடலை அடைத்து—ஸேதுப$_3$ந்த$_4$ம் பண்ணி, அரக்கர் குலங்களை முற்றவும்—ராக்ஷஸருடைய குலங்களை முழுவதும், செற்று — களைந்தொழித்து, இலங்கையை — லங்கையை, பூசல் ஆக்கிய—யுத்$_3$த$_4$பூ$_4$மியாக்கிய, சேவகா—

---

உறுப்பாயிற்று. உன் முகத்திலுள்ள கண்கள் எங்களுக்குக் கருணை புரிவதற்கு உறுப்பு என்று நினைத்திருந்தோம், அதுவே மாலைக்கண்போலவும் பீலிக்கண்ணாகிற மயில்கண்போலவும் பயனற்றதாகிவிட்டதுபோல் தோன்றுகிறது. கண் என்று பேராய், கண்டவர்களை அக்கணத்திலேயே விழச்செய்யும் வலையாயல்லவோ இருக்கிறது. இப்படி எல்லாமே கள்ளமா யிற்றே என்கிறார்கள். "கண் என்னும் நெடுங்கயிறு" [நாச்-திரு 14-4] என்று இவளே சொல்லப்போகிறாளன்றோ. 5.

---

கண்டன்றோ அழிக்கிறாய்) என்கையாலே — கண்ணானல் நல்லத்தைக் கண்டுகொண்டிருக்கைக்கு உடலொழிய அழிக்கைக்கு உடலல்லவாகையாலே (பீலிக்கண்ணோபாதி யாய்த்தோ?) என்று இதுவும் ஒரு தாத்பர்யாந்தரம்போலே தோற்றுகிறது. 5.



வீரப்பாடு உடையவனே ! முற்றிலாத பிள்ளைகளோம்— முற்றாத இளம் பிள்ளைகளாய், முலை போந்திலாதோமை— முலையும் கிளரப்பெறாத எங்களை, நாள் தொறும் — நாள் தோறும், சிற்றில் மேல் இட்டுக்கொண்டு—சிற்றில் விஷய மாக ஒரு வியாஜத்தை வைத்துக்கொண்டு, நீ சிறிது உண்டு— நீ செய்யும் செயல்களுக்குக் கருத்தொன்று உண்டு; அது திண்ணென நாம் கற்றிலோம் — அவற்றை நாங்கள் அழகிதாக அப$_4$யஸித்தோமல்லோம்; எம்மை வாதியேல்— எங்களை (நீ) துனபப்படுத்தவேண்டா.

வ்யா:— ஆறும் பாட்டு. (a முற்றிலாத பிள்ளைகளோம்) 'இன்னது செய்தான்' என்று பிறர்க்குச் சொல்லவொண்ணாத படி சிலவற்றைச் செய்யத்தொடங்கினான்; அத்தைக்கண்டு, சிலசெய்தாயாமித்தனையோ வேண்டுவது? அதுக்கு எதிர்த் தலையில் பருவமறிந்து கொள்ளவேண்டாவோ? b உன் நினைவ றிகைக்கு ஈடான பருவமல்ல ; உள்ள பருவத்துக்குத் தக்க

---

6. அவ:— சிற்றில் அழிப்பது என்ற பெயரில் நீ வேறொன் றைக் கருதுகிறாய். அதை நாங்கள் கற்கவில்லை என்கிறார்கள்.

வ்யா:— (முற்றிலாத பிள்ளைகளோம்) இன்னது செய்தான் என்று பிறர்க்குச் சொல்ல முடியாதபடி சில காமுக வ்யா பாரங்களைச் செய்யத் தொடங்கினான் கண்ணன். அதைக் கண்டு "சில காரியங்கள் செய்தால் எதிர்த்தலையில் அதற்குத் தக்க பருவம் உள்ளதா என்று அறிந்து செய்யவேண்டாமா? உன் நினைவை அறியலாம்படியான முற்றின பருவத்தை யுடையோ மல்லோம் நாங்கள். அதிலும் உள்ள பருவத்துக்குத் தக்க அறிவும் இல்லாத பிள்ளைகளாயிருக்கிறோம் நாங்கள். (முலைபோந்திலாதோமை) இப்படிப் பருவமும் அறிவும் இல்லா விடினும் காமரஸம் அநுப$_4$விக்கலாம்படி முலை எழுந்திருந்தா

---

அரு:— ஆறும் பாட்டு. (முற்றித்யாதி$_3$) a முற்றிலாத- இளைய. b "முற்றிலாத, பிள்ளை" என்று இரண்டும் இள மைக்கு வாசகமாகையாலே பே$_4$த$_3$ம் அருளிச்செய்கிறார்

அறிவுமில்லை ; c ஆனாலும் பே4ாக3யோக்3யதையுண்டாகப் பெறிலுமாமிறே; அதுவுமில்லையிறே; ப்ராமாதி3கமாகவும் ஒரு செயலைச் செய்துவிடுகையன்றிக்கே, என்றுமொக்க "சிற்றில்" என்றொரு வ்யாஜத்தையிட்டுக்கொண்டு நீ d செய்கிறதுக்கு ஒரு கருத்துண்டு-ஒரு e ஸ்வாபதே3ஶமுண்டு; f அதுவாகாதே நாங்கள் அழகிதாக அப்4யஸித்திலோம். அறிந்தவற்றே இவர்கள் அறியாதிருந்தபடி. நீ நினைக்கிறவை நாங்கள் அறிகைக்கு கு3ருகுலவாஸம் பண்ணிற்றிலோம்; "நீங்கள் கற்றிலிகோளாகிலும் நான் கற்றேனிறே" என்று மேலிட்டு நலியத்தொடங்கினான்- ; (கடலையித்யாதி3)

---

லாவது நீ இச்செயல்களைச் செய்யலாம். அதற்கும் தகுதியில்லாதபடி முலை கிளரப் பெருதவர்களாயன்றோ நாங்கள் இருக்கிறோம். (*நாடொறும்*) ஏதோ தவறிப்போய் ஒரு முறை தவறுசெய்து விடுபவனல்லவே நீ. நாள்தோறும் இச்செயலைச் செய்கிறாயன்றோ. (*சிற்றில்...சிறிதுண்டு*) சிற்றிலையழிப்பது என்கிற ஒரு வ்யாஜத்தை ஏறிட்டுக்கொண்டு நீ செய்கிற கார்யத்திற்கு ஓர் உட்கருத்து உண்டு. அதாவது எங்களோடு ஸம்ஶ்லேஷிக்க நினைக்கிறாய். (*திண்ணென நாமது கற்றிலோம்*) அச்செயலை நாங்கள் நன்கு கற்கவில்லை. நீ அறிந்த காம ஶாஸ்த்ரம் நாங்கள் அறியவில்லை. அதை அறிவதற்கு ஒரு கு3ருகுலவாஸம் பண்ணிக் கற்கவுமில்லை என்று கருத்து. "நீங்கள் கற்கவில்லையானாலும் நான் கற்றிருக்கிறேனே" என்று சொல்லிக்கொண்டு இவர்களை ப3லாத்காரமாக அணைப்பது முதலான செயல்களைச் செய்து துன்புறுத்தத் தொடங்கினான் கண்ணன். அதுகண்டு கூறுகிறார்கள் — (*கடலை......சேவகா*)

---

(உன் நினைவித்யாதி3)c முலைபோந்திலாதோமைக்கு அர்த்த2ம் (ஆனாலும் இத்யாதி3) நாயகனுடைய நினைவறிந்து பரிமாறுகைக்கு ஈடான அறிவில்லாத பருவத்திலும் பே4ாக3 யோக்3யதையுண்டிறே நவோடை4க்கு. d "சிறிதுண்டு" செய்கிறதுக்கு என்று அத்4யாஹார்யம்; e ஸ்வாபதே3ஶம்-ஸம்ஶ்லேஷம். f அதுவாகாதேயென்று — ஸங்கேத வசநம்.



இதுக்கு முன்பு ஒருவர் g தலையழித்தறியாக் கடலை அடைத்து, இதுக்கு முன்பு ஒருவர் மேலிட்டறியாத ராக்ஷஸ ஜாதியைப் பக்கவேரோடே கிழங்கெடுத்து, சிலர் எடுத்துவிட்டு வந்து பொரக் கணிசியாத ஊரைப் பூசலாம்படி பண்ணி, அத்தால் வந்த ஆண்பிள்ளைத்தனத்தை உடையையாயிருக்கிறவனே! (எம்மை வாதியேல்) எங்கள் பக்கல் பூசலை விளையாதேகொள். ப்ரதிகூலர் திரண்டவிடத்தே செய்யுமவற்றை அநுகூலர் திரண்டவிடத்திலேயும் செய்யாதேகொள். h அது ஒருத்திக்காகச்செய்த செயலன்றோ ; அது இப்போது i அவள்தன்னோடாய்த்தோ ? 6.

---

இதற்கு முன்பு எவராலும் அணை கட்டப்படாத கடலை அடைத்து, இதற்கு முன்பு எவராலும் வெற்றிகொள்ளப் படாத அரக்கர்குலங்களைப் பூண்டோடே அழித்து, இதற்கு முன்பு எவரும் படையெடுத்துவந்து சண்டையிடத் துணியாத இலங்கையைப் போர்க்களமாக்கிய ஆண்பிள்ளைத் தனத்தை உடையவனே! (*எம்மை வாதியேல்*) எங்களிடம் போர் புரியாதே. எதிரிகளான ஆண்பிள்ளைகளிடம் செய்யவேண்டிய காரியத்தை அன்புள்ள பெண்களிடமா செய்வது? நீ அச்செயலைச் செய்தது ஸீதாபிராட்டியாகிய ஒரு பெண் பிள்ளைக்காகவன்றோ. அவளுடைய விரோதி4களைப் போக்கினாற்போலே எங்களுடைய விரோதி4களையும் போக்கவேண்டியிருக்க, எங்களைத் துன்புறுத்தலாமோ? இது எங்கள் கோ3ஷ்டி2யில் சேர்ந்த அவளோடு போர் புரிவதுபோலல்லவோ இருக்கிறது என்கிறார்கள். 6.

7. *அவ:—* ஒரு பெண்ணுக்காக அணை கட்டின நீ எங்கள் சிற்றிலைச் சிதைக்கலாமோ? என்கிறார்கள்.

---

g தலையழிக்கை—செருக்கழிக்கை. h "கடலையடைத்து" இத்யாதி3க்குத் தாத்பர்யாந்தரம் (அது ஒருத்திக்காக இத்யாதி3) அதாவது-அவளோபாதி எங்கள் விரோதி4களையும் அழியச் செய்யவேண்டியிருக்க எங்களை நலியலாமோ? என்றபடி. i தாங்களும் பிராட்டிமாராகையாலே (அவள்தன்னோடு) என்கிறது. 6.

## இரண்டாம் திருமொழி—ஏழாம் பாட்டு

**பேதநன்கறி வார்களோடிவை பேசினுல்பெரி தின்சுவை**
**யாதுமொன்றறி யாதபிள்ளைக ளோமைநீநலிந் தென்பயன்?**
**ஓதமாகடல் வண்ணு!உன் மணவாட்டிமாரொடு சூழறும்,**
**சேதுபந்தம் திருத்திஞய்!எங்கள் சிற்றில்வந்து சிதையேலே.**

பதவுரை:— **பேதம்**—(உன் பேச்சின்) வாசியை, **நன்கு அறிவார்களோடு**—நன்ருக அறிய வல்லவரோடு, **இவை**—இப்பேச்சுக்களை, **பேசினுல்** — பேசினுல், **பெரிது இன் சுவை**—மிகவும் போ$_{4}$க்$_{3}$யமாயிருக்கும்; **யாது ஒன்றும் அறியாத**—எவ்வகையான பொருளையும் அறியமாட்டாத, **பிள்ளைகளோமை**—சிறு பெண்களான எங்களை, **நீ நலிந்து என் பயன்**—நீ வருத்தமுறுத்துவதனுல் என்ன பயன்? **ஓதம்**—திரைக்கிளப்பத்தையுடைய, **மா கடல்** — பெரிய கடலையொத்த, **வண்ணு**—திருநிறத்தையுடைய கண்ணபிரானே! **சேது பந்தம் திருத்திஞய்**—திருவணை கட்டினவனே! **உன் மணவாட்டிமாரொடு சூழறும்**—உன்னுடைய பத்தினிகளின் மேல் ஆணை, **எங்கள் சிற்றில் வந்து சிதையேல்**—.

**வ்யா:— ஏழாம் பாட்டு.** a (பேதநன்கித்யாதி$_{3}$) **சில வார்த்தைகளைச் சொல்லுகிருன்—சொல்லப்புக்க வார்த்தையினுடைய ப$_{3}$லன் b**வேறென்றினுடைய **ப$_{3}$லத்தைப் ப$_{3}$லிப்பதாகச் சொல்லத் தொடங்கிஞன்; நீ சொல்லுகிறவற்றினுடைய கருத்தறிவாரோடே சொன்ஞலன்ருே உனக்கு இத்தால் ப்ரயோஜநமுள்ளது;** எங்களோடு சொன்ஞல் **என்ன ப்ரயோஜநமுண்டு?** (பெரிதின்சுவை) **வார்த்தை வாசியறிவாரோடே சொன்ஞலன்ருே உனக்கு ப்ரயோஜநமுள்ளது; அவர்கள் ஒன்றுக்குப் பத்தாக** மர்மத்திலே **சொல்லுவார்களே; அது உனக்கு மிகவும் இனிதாயிருக்குமிறே.** (யாதுமொன்றறியாத இத்யாதி$_{3}$) ''தண்ணீர்'' **என்ருல் தண்ணீரே கொண்டுவரும்படி** ப$_{3}$ாலைகளாயிருக்கிற **எங்களை நெருக்கிஞல் உனக்கென்ன** ப$_{3}$லமுண்டு? **இவர்கள் இப்படி தங்கள்** c ஈடுபாடு **தோற்ற வார்த்தை** சொன்னவாறே, **வடிவு இட்டு மாறிஞற்போலே இரட்டித்தது;** (d ஓதமாகடல்வண்ணு) **நம் வடிவிலே துவக்**

---

*வ்யா:— (பேதம் நன்கு அறிவார்களோடு............இன் சுவை)* இரு பொருள் படும்படியாகச் சில வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கிஞன் கண்ணன். வெளிப்படையாக ஒரு பொருளாய், மர்மம் அறிந்தவர்களுக்கு உட்பொருள் வேருயிருக்கும் வார்த்தைகள் அவை. "நீ சொல்லுகிற வார்த்தைகளுடைய கருத்து அறிபவர்களோடே இவற்றைப் பேசிஞல் உனக்குப் பயனுண்டு. எங்களோடு சொன்ஞல் என்ன பயனுண்டு? *(பெரிது இன்சுவை)* உன் வார்த்தைகளிலுள்ள பொருள்களையெல்லாம் அறிபவர்களிடம் இவ் வார்த்தைகளைச் சொன்ஞல், மர்மம் அறிந்த அவர்கள் இதே போன்ற பல பொருள்படும் பதில் வார்த்தைகளை ஒன்றுக்குப் பத்தாகச் சொல்லுவார்கள். அது உனக்கு மிகவும் இனிய சுவையை அளிப்பதாய் இருக்கும். "கருத்தறியாத எங்களிடம் சொல்லி எங்களை நலிவதால் என்ன பயன்?" என்கிருர்கள் மேலே—*(யாதுமொன்றறியாத.........என் பயன்)* "தண்ணீர்" என்று நாயகன் நாயகியைக் கேட்டால் மர்மம் அறிந்த நாயகி, "நாயகன் ஸம்ஶ்லேஷத்தை விரும்புகிருன்" என்று புரிந்து கொள்வாள். சிறு பிள்ளைகளான எங்களைப் போன்றவர்களிடம் "தண்ணீர் கொண்டுவா" என்ருல் நாங்கள் தண்ணீரைத் தானே கொண்டுவருவோம். இத்தகைய எங்களிடம் இத்தகைய மர்மமான வார்த்தைகளைச் சொல்லித் துன்புறுத்துவதால் உனக்கு என்ன பயன் ஏற்படும்? இவர்கள் இவ்வண்ணமாகத் தாங்கள் கண்ணனிடம் நலிவுபட்டது தோன்ற வார்த்தை சொன்னவுடன், உலையிலிட்டுக் காய்ச்சி எடுத்து வைத்த பொன் ஒளி விஞ்சுவது போலே இரு மடங்கு ஒளியுள்ளவஞஞன். அதைக் காட்டுகிருர்கள் மேலே—*(ஓதமாகடல்வண்ணு)* திரைக்

---

அரு— ஏழாம் பாட்டு. (பேதம் நன்கித்யாதி$_{3}$) a பேதம் நன்கறிவார் — அவன் சொல்லுகிற வார்த்தையின் பே$_{4}$த$_{3}$த்தை நன்ருக அறிவார்; பேதம்-பே$_{4}$த$_{3}$ம். b வேறென்றினுடைய-ப$_{4}$ாவகர்ப்ப$_{4}$மான. c ஈடுபாடு-நலிவுபாடு. d ஓதம்-

குண்டார்கள்; நாம் செய்தது விலக்கமாட்டார்களென்றுச் சிற்றிலை அழிக்கப்புக்கான்; (உன் மணவாட்டிமாரொடு e சூழறும்) உனக்கு நல்லாரோடு சூழறுங் கிடாய் இத்தை அழிப்பாயாகில். உனக்கு இது அழிக்கவேணுமோ? புறம்பே எத்தனையிடங்கிடக்கிறது? இவர்களும் அவனுக்கு மர்மஞ்சொல்லுகிறார்களாய்த்து. f ஏகதாரவ்ரதனாயிருக்கிறவனை 'உனக்கு எத்தனைபேர் கிடக்கிறது எங்களையொழிய' என்கை சால மர்மமிறே. இப்படி இவர்கள் ஆணையிடச்செய்தேயும் அழிக்கப்புக்கான்; (g சேதுபந்தம் திருத்தினாய் இத்யாதி) மிடுக்குக்கிடான

கிளர்த்தியையுடைய பெரிய கடல் போன்ற திருநிறத்தை உடையவனே! என்று அவ்வடிவிலே ஈடுபடுகிறார்கள். "நம் வடிவிலே ஈடுபட்டுவிட்டார்கள். நாம் செய்வதை விலக்க மாட்டார்கள்" என்று எண்ணிச் சிற்றிலையழிக்கப் புகுந்தான்; அதை ஆணையிட்டு விலக்குகிறார்கள் மேலே. (*உன் மணவாட்டிமாரொடு சூழறும்*) உனக்கு இனியவர்களான உன்னுடைய பத்நிகள் மேல் ஆணை! இதையழிக்காதே. உனக்கு இதை அழித்துத்தான் தீரவேண்டும் என்பதில்லையே; எதையாவது அழித்துத்தான் தீரவேண்டுமென்றால் வெளியில் எத்தனையோ இடம் இருக்கிறதே அழிப்பதற்கு என்கிறார்கள். மேலே "சேது பந்தம் திருத்தினாய்" என்று சொல்லுவதிலிருந்து ராமனைக வைத்துப் பேசுகிறார்கள் என்று விளங்குகிறபடியால், ஏகதாரவ்ரதனான அவனைக் குறித்து "மணவாட்டிமாரொடு" என்று மர்மமான வார்த்தை சொல்லுவதாகவும் கொள்ளலாம். ஒரே மனைவி என்னும் விரதமுடையவனிடம் "உன்னுடைய மணவாட்டிமாரின் மேல் ஆணை" என்று பல மனைவிகள் இருப்பது போலே வார்த்தை சொல்லுவது சிறந்த மர்மோக்தியன்றோ. இப்படி இவர்கள் ஆணையிட்ட பின்பும் சிற்றிலை அழிக்கப்புகுந்தான். அது கண்டு சொல்லுகிறார்கள் மேலே, — (*சேது பந்தம் திருத்தினாய்*) பலதனைப்

திரை; மா - பெருமை. g சேது-அணை; பந்தம் - கட்டல்; அணைகட்டினாயென்றபடி. e சூழறுகை — ஆணையிடுகை. f,g "சேதுபந்தம் திருத்தினாய்" என்றத்தைப்பற்ற (ஏகதார



பிறப்பையுடையையுமாய், பருவம் நிரம்பினபின்பு *கானவெண்கும் குரங்கும் பரிகரமாகக்கொண்டு கடலிலே இத்தனை h மணலொழுக்கப் பட்ட பாடெல்லாமறிதியே; அவ்வோபாதி போராதோ அபலைகளான நாங்கள் இதிற்பட்ட வருத்தம். அவஶ்யம் i உனக்கு அழிக்கவேணுமாகில் j உன்னுடைய சிற்றிலைப் போய் அழியென்கிறார்கள். 7.

## இரண்டாம் திருமொழி—எட்டாம் பாட்டு

வட்டவாய்ச்சிறு தூதையோடு சிறுசுளகுமண லுங்கொண்டு,
இட்டமாவிளை யாடுவோங்களைச் சிற்றிலீடழித் தென்பயன்?
தொட்டுதைத்து நலியேல்கண்டாய்சுடர்ச் சக்கரங்கையில்
ஏந்தினாய்!
கட்டியுங்கைத் தால்இன்னாமை யறிதியேகடல் வண்ணனே.

பிறப்பிலேயே உடைய க்ஷத்திரிய ஜாதியில் பிறந்தவனாய், பருவம் நிரம்பிய பின்பு "கான எண்கும் குரங்கும் முசுவும் படையா" [பெரிய திரு 6-10-6] என்கிறபடியே கரடி, குரங்கு முதலானவற்றைத் துணையாகக் கொண்டு கல்லையும் மணலையுங்கொண்டு கடலை அணைகட்டுவதற்குப் பட்ட பாடெல்லாம் அறிபவனாயிற்றே. அபலைகளான நாங்கள் நுண்மணலைக் கொண்டு இச்சிற்றில் இழைப்பதற்குப் பட்ட பாடு அதை விடக்குறைந்ததோ? (*எங்கள் சிற்றில் வந்து சிதையேலே*) வலிய வந்து எங்கள் சிற்றிலை அழிக்காதே. எதையாவது அவஶ்யம் அழிக்கவேண்டும் என்று உனக்குத் தோன்றினால், உன்னுடைய சிற்றிலான ஸேதுபந்தத்திற்குச் சென்று அதை அழித்துக்கொள் என்கிறார்கள். 7.

வ்ரதன்) என்றது. g "சேதுபந்தம் திருத்தினாய்" என்றது-கீழுக்கும மேலுக்கும் ஶேஷமாயிருக்கிறது. i பஹுவசநத்தைப்பற்ற அருளிச்செய்கிறார (உனக்கு அழிக்க இத்யாதி) h (மணலொழுக்க) என்று ஆஶ்வாகச் சொன்னது— தங்களுடைய பெருவருத்தம் தோற்றுகைக்காக. j அவன் சிற்றில் - ஸேது. 7.

**பதவுரை:— சுடர் சக்கரம்** — ஒளிபொருந்திய ஸுத$_{3}$ர்ஶநாழ்வானை, **கையில் ஏந்தினாய்** — திருக்கையில் த$_{4}$ரித்திரா நின்ற கண்ணபிரானே! **கடல்வண்ணனே!—; வட்டம் வாய்**—வட்டவடிவான வாயையுடைய, **சிறு தூதையோடு**—சிறிய பானையோடு, **சிறு சுளகும்**—சிறிய முச்சிலையும், **மணலும் கொண்டு** — மணலையுங்கொண்டு வந்து, **இட்டமா**—இஷ்டப்படி, **விளையாடுவோங்களை** — விளையாடுகிற எங்களுடைய, **சிற்றில்**—சிற்றிலை, **ஈடழித்து**—மறுபடியும் உபயோக$_{3}$ப்படாதபடி அழிப்பதனால், **என்ன பயன்—; தொட்டு**—கையால் தொட்டும், **உதைத்து**—காலால் உதைத்தும், **நலியேல் கண்டாய்**—ஹிம்ஸியாதொழிகிடாய்; **கைத்தால்**—நெஞ்சு கசந்துபோனால், **கட்டியும்**—கருப்புக் கட்டியும், **இன்னாமை**—ருசியாது என்பதை, **அறிதியே**—அறிவாயன்றோ?.

**வ்யா:— எட்டாம் பாட்டு.** (a வட்டவாயித்யாதி$_{3}$) **இவற்றினுடைய b விசித்ரஸந்நிவேஶமிருந்தபடி கண்டாயே; இவற்றைக் கொண்டு எங்களுடைய இச்சை$_{3}$க்கு ஒருவரால் ஒரு ப்ரதிஹதி பண்ணவொண்ணாதபடி விளையாடுகிற எங்களை, ஓரவயவி**

---

8. *அவ:—* "கற்கண்டானாலும் நெஞ்சு கசந்து விட்டால் சுவையாய் இராது என்று அறிவாயாக" என்கிறார்கள்.

*வ்யா:— (வட்டவாய்...........என்பயன்?)* இவற்றினுடைய விசித்திரமான அமைப்பு இருந்தபடியைப் பார்த்தாயா. மணலை வைத்துக்கொள்வதற்கு வட்டமான வாயை உடைய சிறிய பானை; அதிலிருந்து நுண்மணலைப் புடைத்து எடுப்பதற்காக ஏற்பட்ட சிறு சுளகு; புடைத்து எடுத்த நுண்மணல்—ஆகிய இவை எவ்வளவு அழகாய் இருக்கின்றன என்பதைப் பாராய். இவற்றைக்கொண்டு எங்கள் இஷ்டத்திற்கு எவராலும் தடைசெய்யமுடியாதபடி விளையாடுகிற

---

**அரு:— எட்டாம் பாட்டு.** (வட்டவாயித்யாதி$_{3}$) a சிறு தூதை — சிறிய பானை. சிறுசுளகு—முச்சில். b தூதை முதலானவை ஒன்றுபோல் ஒன்றிராமையாலே (விசித்ர



**யாக்கிக்காணவொண்ணாதபடி. மறுமுட்டுப் பெறாதபடி அழிக்கிற இத்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? நீ இத்தை அழித்தால், cபிறர் பு$_{3}$த்$_{3}$த்$_{4}$யதி$_{4}$நமாகப் பரிஹரிக்கவல்ல பருவமோ எங்களது? ப்ரயோஜநத்துக்கு ஒரு ப்ரயோஜநமுண்டோ? இது தானேயன்றோ ப்ரயோஜநமென்று வாராத் தொட்டான்; வாராய்; எத்தனைபேரைத் தொட்டுவந்தாயென்று தெரியாது; நீங்கள் எங்களைத் திண்டவேதே! என்ன, சிவட்கென்றார்கள்; ஆகில் 'சவியுங்கோள்' என்னாக் காலாலே உதைத்தான்; அந்த ஸ்பர்ஶத்தாலே துவளா, (நலியேல் கண்டாய்) என்கிறார்கள். 'என்னுடைய ஸ்பர்ஶம் உங்களுக்கு நலிவாய்விட்டதோ? நான் ஈஶ்வரனல்லேனோ?' என்ன, வைஶ்வரூப்யங்காட்டினாற்போலே, தி$_{3}$வ்யாயுத$_{4}$ங்களை த$_{4}$ரித்துக்காட்டி "கூராராழி வெண்சங்**

---

எங்களுடைய சிற்றிலை, மறுபடியும் உருவாக்கிக் காணமுடியாதபடி அடியோடு அழிப்பதினால் உனக்கோ பிறர்க்கோ என்ன பயன் உண்டு? நீ இதை அழிப்பதால் பிறரிடம் சொல்லி அவர்களைக்கொண்டு நீ அழிக்காதபடி தடுக்கக் கூடிய வயது வந்தவர்களோ நாங்கள்? என்று கருத்து. "பயனுக்கு ஒரு பயன் உண்டோ? சிற்றில் அழிக்கிற இதுவே எனக்கு ஸ்வயம்ப்ரயோஜனமன்றோ" என்று சொல்லிக்கொண்டு அவர்களைத் தொட்டான். அது கண்டு "வாராய்! நீ எத்தனை பேரைத் தொட்டு வந்தாய் என்று தெரியாது! அத்தகைய நீ எங்களைத் தொடுவதாவது" என்று முகம் சிவந்து கோபித்தார்கள். "நீங்கள் என்ன திட்டினாலும் கவலையில்லை" என்று அவர்களைக் காலாலே உதைத்தான். அதனாலே துவண்டு (*தொட்டு உதைத்து நலியேல் கண்டாய்*) என்கிறார்கள். தொடுவது உதைப்பது முதலான தீம்புகளைச் செய்யாதே என்றபடி. "நான் தொட்டால் உங்களுக்குத் துன்பமாகி விட்டதோ. நான் ஈஶ்வரனன்றோ?" என்று கூறி அர்ஜுனனுக்கு விஶ்வரூபம் காட்டினாற்போலே ஶங்க$_{2}$ சக்ரங்களை

---

ஸந்நிவேஶமென்கிறது) c (பிறர்) என்று அவனைச் சொல்லி, உன் பு$_{3}$த்$_{3}$த்$_{4}$யதீ$_{4}$நமாக-உனக்கு இஷ்டமாகச் செய்யத்தக்க பருவமல்ல என்றபடி. வேறு சிலர் அறியாதபடி பரிஹரிக்க

கேந்தி-வாராய்" என்று எல்லாரும் ஆசைப்பட்டிருக்கிற இது உங்களுக்குப் பொல்லாதோ? என்ருன்; அழகிது; ஆனுலும் (d கட்டியும் e கைத்தால் இன்னுமை அறிதியே கடல் வண்ணனே) f கருப்புக்கட்டியேயானுலும் நெஞ்சு e கைத்தால் இன்னுதென்னுமிடம் அறிதியே, கடல்வண்ணனே? "கடல் வண்ணன்" என்கிற இவ்விஶேஷணமிட்டதுக்குக் கருத்து-கண்டுவிடுமதுக்கு மேற்படச் செய்யலாவதில்லை; ஒரு கை அள்ளி முகத்தைக்கழுவுதல், குடித்தல் செய்யவொண்ணுதே கடலில் நீர்; அப்படியேயன்றே நீ என்கை நினைவு. 8.

## இரண்டாம் திருமொழி— ஒன்பதாம் பாட்டு.

முற்றத்தூடு புகுந்துநின்முகங் காட்டிப்புன்முறு வல்செய்து,
சிற்றிலோடெங்கள் சிந்தையுஞ்சிதை க்கக்கடவையோ
கோவிந்தா,
முற்றமண்ணிடந் தாவிவிண்ணுற நீண்டளந்துகொண்
டாய்எம்மைப்
பற்றிமெய்ப்பிணக் கிட்டக்கால்இந்தப் பக்கம்நின்றவர்
என்சொல்லார்?

---

த₄ரித்துக் காட்டி. "கூராராழி வெண்சங்கேந்தி வாராய்" [திருவாய்6-9-1]என்று அன்புடையார் அனைவரும் காண ஆசைப் பட்டிருக்கிற இவ்வடிவம் உங்களுக்குக் கசக்கிறதோ? என்ருன். "நன்ருய் இருக்கிறது! ஆனுலும், நெஞ்சு கசந்துவிட்டால், கற்கண்டும் கசந்துவிடும் என்று அறிவாயல்லவா? என்கிருர்கள் மேலே—(*கட்டியும்..........அறிதியே*) கரும்புக் கட்டியேயானு லும் நெஞ்சு கசந்துவிட்டால் சுவையாய் இராது என்பதை நீ அறிவாயல்லவா என்கிருர்கள். "நீ எங்களுக்கு அப்படி ஆகி விட்டாய்" என்னும் கருத்து விளங்கும்படி (*கடல் வண்ணனே*) என்று கூப்பிடுகிருர்கள். (*கடல் வண்ணனே*) கண்ணுல் காண லாமேயொழிய, ஒரு கை அள்ளி முகத்தைக் கழுவவோ குடிக் கவோ முடியாதபடி இருப்பதன்றே கடல் நீர். நீயும் அப் படி எங்களுக்கு ஆகிவிட்டாய் என்று கருத்து. 8.

---

வல்ல பருவமோ? என்றபடி. யாதுமொன்றறியாத பிள்ளை களிறே. d,f கட்டி-கருப்புக்கட்டி. e கைத்தால்-கசந்தால். 8.



பதவுரை:— கோவிந்தா—கண்ணபிரானே! **முற்ற மண் இடம் தாவி**—(ஒரு திருவடியினுல்) பூ$_4$மண்ட$_3$லம் முழுவதை யும் தாவியளந்து, **விண் உற நீண்டு**—பரமபத$_3$த்தளவும் ஓங்கி, **அளந்து கொண்டாய்**—(மற்றெரு திருவடியினுல் மேலுலகங்களை) அளந்துகொண்டவனே!. **முற்றத்தூடு**—(நாங்கள் ஏகாந்தமாய் விளையாடுகிற) முற்றத்திலே, **புகுந்து**—நுழைந்து, **நின் முகம் காட்டி**—உனது திரு முகத்தை (எங்களுக்குக்) காண்பித்து, **புன் முறுவல் செய்து**-புன்சிரிப்பு சிரித்து, **சிற்றிலோடு எங்கள் சிந்தையும்**—எங்கள் சிற்றிலையும் நெஞ்சையும், **சிதைக்கக் கடவையோ**—அழிக்கக் கடவாயோ? (அவ்வளவோடு நில்லாமல்,) **எம்மைப் பற்றி**-எங்களைப் பற்றி, **மெய்ப் பிணக்கு இட்டக்கால்**-அணைத்துக்கொண்டால் **இந்த பக்கம் நின்றவர்**-அருகில் நிற் பவர்கள், **என் சொல்லார்**—என்ன சொல்லமாட்டார்கள்?.

வ்யா:— ஒன்பதாம் பாட்டு. (a முற்றத்தூடு புகுந்து) 'இவன் கோலுகிறபடி சாலப்பொல்லாதாயிருந்தது; இவன் கண்வட்டத்திலே நிற்கில் தீம்புசெய்கை தவிரான்; அதிற் காட்டில் மறைய நிற்கை நன்று' என்று எல்லாரும் திரண்டு, 29. "समेत्य मन्त्रयित्वा तु सर्वे सङ्गतबुद्धयः" (ஸமேத்ய மந்த்ரயித்வா

---

9. *அவ:*— கண்ணனேடு ஸம்ஶ்லேஷம் பிறந்தபடியைச் சொல்லுகிருர்கள்.

*வ்யா:*— (*முற்றத்தூடு புகுந்து*) "இவன் சிறுமிகளாகிற நம்மிடம் தகாததான ஸம்ஶ்லேஷத்தை எதிர்பார்க்கிருன். இவன் கண்காண நின்ருல் தீம்பு செய்யாமல் இருக்கமாட்டான். ஆகையால் இவன் கண்காண நிற்பதைக் காட்டிலும் மறைந்தி ருப்பது நல்லது என்று எல்லோரும் கூடி,

29. ஸமேத்ய மந்த்ரயித்வா து ஸர்வே ஸங்க$_3$தபு$_3$த்$_3$த$_4$ய: |
ஊசுஶ்ச மநஸா ஜ்ஞாத்வா வ்ருத்$_3$த$_4$ம் த$_3$ஶரத$_2$ம்
ந்ருபம் || [ரா-அ 2-20]

---

அரு:—ஒன்பதாம் பாட்டு. (முற்றத்தியாதி$_3$) a ஊடு-நடு.

து ஸர்வே ஸங்க$_3$தபு$_3$த்$_3$த$_4$ய:) என்கிறபடியே ஸமயம்பண்ணி,
‘அது செய்யுமிடத்து எல்லாரும் திரளப்போவோமாகில் இவன்
அடியொற்றிக்கொண்டு வரும்’ என்று பார்த்து, ஒருவரொரு
வராகப்போய், பஞ்சலக்ஷங்குடியிலுள்ளார் எல்லாரையும்
கொள்வதொரு முற்றத்திலேபுக்குக் கதவுகளையும் தலைவாசல்
தொடங்கி அடைத்துக் கணையங்களையும் ஏறிட்டு. இவனுக்குப்
புகுர வழி இல்லாதபடி பண்ணிக்கொண்டிருந்தார்கள் ; இவ
னுக்குப் புகுருகைக்கு வழிதேடவேண்டாவிறே;—இட்ட இலச்
சினை அழியாதிருக்க வெண்ணெய் குடிபோமாபோலே, நினை
வின்றிக்கேயிருக்கத் தாங்கள் அவன் கையிலே அபஹ்ருதைக
ளானார்கள் ; இம்முற்றத்திலே தங்கள் திரளின் நடுவேவந்து
நிற்கக் கண்டார்கள் ; “நாம் இவனை மறைத்துப்போந்தோம்
என்றிருந்தோம் ; அழகிதாயிருந்தது ; இவன் நமக்கு முற்
பட்டுக்கொடு நின்றான், என்செய்தோமானோம் ? இ வ ன்

---

[குடிகள் அனைவரும் கூடி ஆலோசித்து ஒரே முடிவுக்கு வந்த
வர்களாய், த$_3$ஶரத$_2$னைக் கிழவனென்று மனத்தால் சிந்தித்து
அறிந்து அவனிடம் உரைத்தார்கள்.] என்றாற்போலே நிச்ச
யித்து, ‘அப்படி மறைந்து போகும்போது எல்லாரும் ஒன்
றாகப் போனால் இவன் அடியொற்றிக்கொண்டு பின் தொடர்ந்து
வருவான்’ என்று நினைத்து, ஒவ்வொருவராகப் போய் ஆய்ப்
பாடியிலுள்ள ஐந்து லக்ஷம் குடியிலுள்ள எல்லாப் பெண்க
ளுக்கும் இடம் அளிக்கும் ஒரு முற்றத்திலே புகுந்து வாசற்
கதவு முதல் கொல்லைக் கதவு வரை எல்லாக் கதவுகளையும்
சாத்தித் தாழ்ப்பாள்களையும் இட்டு இவனுக்கு உள்ளே புக
வ ழி யி ல் லா ம ல் செய்துகொண்டிருந்தார்கள். ஆனால்
ஸர்வாந்தர்யாமியான இவனுக்கு உள்ளே புக ஒரு வழிதேட
வேண் டி யதில்லையே. இ ட் ட கு றி ய ழி யா ம ல் இருக்க,
வெண்ணெயைக் களவு காணவல்லவனன்றோ இவன். அதே
போலே இவர்கள் எதிர்பாராமல் இருக்க, இவன் கையிலே
அகப்பட்டார்கள். இந்த முற்றத்திலே தங்கள் கூட்டத்தின்
நடுவிலே வந்து நிற்கக் கண்டார்கள். “நாம் இவனுக்குத் தெரி
யாமல் மறைந்து வந்ததாக நினைத்தோம் ; இவன் நமக்கு



கையிலேயகப்பட்டோம்; இனி இவனுக்குத் b தென்பட்டோமா
காமல் கழியும் விரகேதோ ?” என்று பார்த்து, ஒருபோக்குக்
காணமல் லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டார்கள் ; (நின்முகங்
காட்டி) எல்லாரையும் தனித்தனியே முகத்தையெடுத்து,
‘ஏன் ? வந்தோமிறே; பிற்பட்டோமே; கூடவரப்பெற்றிலோமே;
எவ்வழியே வந்திகோள் ; கால்கள் நொந்ததிறே’ என்றாற்
போலே சிலவற்றைச் சொன்னான் ; ‘நம் நினைவு தப்புவதே !’
என்று தங்கள் தோல்வியை அநுஸந்தி$_4$த்து லஜ்ஜித்தார்கள்;
(புன்முறுவல் செய்து) அத்தையறிந்து ஸ்மிதம்பண்ணினான்.
‘நாம் இவனுக்குத் தோற்று லஜ்ஜித்தோமானமை அவன்
அறியலாகாது ; புறம்பே அந்யபரரானோமாவோம்’ என்று
அங்கேயிருந்து சிற்றிலிழைக்கப் புக்கார்கள் ; ‘இங்கே நம்

---

முன்னால் வந்து நிற்கிறான். நாம் மறைந்து வந்தது அழகாயி
ருக்கிறது ! என்ன காரியம் செய்தோம் ? இவன் கையிலே
அகப்பட்டுவிட்டோமே. இனி இ வ ன் கண் காணமல்
தப்பும் வழி என்ன ?” என்று ஆலோசித்து ஒரு வழியும்
காணமல் வெட்கமடைந்து தலை கவிழ்ந்து நின்றார்கள். அந்
நிலையைச் சொல்லுகிறது “ முற்றத்தூடு புகுந்து ” என்று
தொடங்கி. *(நின்முகம் காட்டி)* ஒவ்வொரு பெண்ணையும்
கவிழ்ந்து கிடக்கிற தலையைத் தூக்கி நிமிர்த்தி, தனித்தனியே
ஒவ்வொருவரிடமும் “வந்துவிட்டோம்; பார்த்தீர்களா; உங்க
ளுக்குப் பிந்திவிட்டோமே; கூடவரும் பேறு பெற்றிலோமே;
எந்த வழியாக வந்தீர்கள்; இவ்வளவு தூரம் நடந்த கால்கள்
நொந்திருக்குமே; ” என்றாற்போலே ஒவ்வொரு வார்த்தை
யைச் சொன்னான். ‘ நாம் எண்ணியது நடக்கவில்லையே ! ’
என்று தங்கள் தோல்வியை நினைத்து வெட்கம் அடைந்தார்
கள். *(புன்முறுவல் செய்து)* அதையறிந்து வெற்றி தோற்றப்
புன்முறுவல் செய்தான். “நாம் இவனுக்குத் தோற்று வெட்க
மடைந்ததை இவன் அறியக் கூடாது. வேறு ஒரு காரியத்
தில் ஈடுபட்டிருப்பதைப் போலே பா$_4$வித்திருப்போம் ” என்று
அங்கிருந்து கொண்டே சிற்றிலிழைக்க ஆரம்பித்தார்கள்.

---

b தென்படுகை - தோற்றுகை ; இளிம்புபடுகையும்.

ஸந்நிதி$_4$யிலேயிருந்து அந்யபரதை பண்ணுவதே!' என்று சிவிட்கென்று, நினைக்கைக்கு நெஞ்சுங்கூடாதே வ்யாபரிக்கைக்குக் கையுங்கூடாதபடியாகச் சிலவற்றைச் செய்தான்; (சிற்றிலோடு இத்யாதி$_3$) உனக்குத்தான் பசுமேய்க்கையன்றோ பணி; பெண்களை நலிகையும் பணியோ? ஸ்வாஸநமாக அழிக்கக் கடவையோ? (முற்றமண்ணித்யாதி$_3$) ஒன்றை வாங்கப்புக்கால் கொடுத்தவர்களைக் குழியிலே தள்ளுமவனன்றோ நீ க்ஷணத்திலே. * இறைப்பொழுதில் பாதாளங்கலவிருக்கை கொடுக்குமவனிறே. 'இனியென் பழிகேட்பது!, கெட்டோம்! இதுக்குமேல் கேட்பதில்லையிறே!' என்ன, பரியட்டங்களையும் கழித்து, பெண்களுக்கு உடம்புகொண்டு, தாய்மார் முன்பு நிற்கவொண்ணாதபடி பண்ணினான்; (எம்மைப்

---

"இங்கே நமக்கு முன்னேயிருந்து வேறு காரியம் செய்வது போல் வேஷம் போடுவதே!" என்று கோபம் கொண்டு, சிற்றில் இழைப்பதற்கு இவர்களுடைய நெஞ்சும் ஒத்துழைக்காமலும், கையும் செயல் புரியாமலும் இருக்கும்படி சில காரியங்களைச் செய்தான். அதுகண்டு சொல்லுகிறார்கள் மேலே — (*சிற்றிலோடு...கோவிந்தா*) கோ$_3$விந்த$_3$னை உனக்குப் பசு மேய்ப்பதன்றோ காரியம். பெண்களைத் துன்புறுத்துவதும் இப்போது உன் காரியமாகிவிட்டதோ? சிற்றிலைச் சிதைப்பதோடல்லாமல், மேலும் சிற்றில் இழைக்கவொண்ணாதபடி சிந்தையையும் (நெஞ்சையும்) சிதைப்பது நியாயமா? (*முற்ற......அளந்து கொண்டாய்*) தனக்கு ஒன்றைக் கொடுத்தவர்களைப் படுகுழியில் தள்ளுபவர்களைப்போலே, உனக்கு மூவடி மண்கொடுத்த மாவலியை அக்கணத்திலே பாதாளத்தில் தள்ளினவனன்றோ நீ. "இறைப்பொழுதில் பாதாளம் கலவிருக்கை கொடுத்துகந்த எம்மான்" [பெரியாழ்திரு 4-9-7] என்று சொல்லப்பட்டவனன்றோ என்றார்கள். "இனி இதைவிட என்ன பழி கேட்பது? பழியின் உச்சநிலையைப் பெற்றுவிட்டோம். இதற்கு மேல் சொல்லக்கூடிய பழி இல்லையே!" என்று நினைத்து அவர்களுடைய துகிலைப் பறித்து, உடம்பை அணைத்துத் தாய்மார்கள் முன்பு நிற்க முடியாதபடி பண்ணினான். அதைச் சொல்லு



c பற்றி d மெய்ப்பிணக்கிட்டக்கால்) "உங்களுக்கு இது சால அஸஹ்யமாயிருந்ததோ? நம்மோடே அணைகை பொல்லாதோ? எத்தனையேனும் யோகி$_3$களும் நம்முடம்புடனே அணையவன்றோ ஆசைப்படுவது; உங்களுக்குப் பொல்லாதோ?" என்ன; "எங்களுக்கும் அழகிது, ஆனாலும் (இந்தப்பக்கம் நின்றவர் e என் சொல்லார்) அவர்கள் தோற்றிற்றுச் சொல்லார்களோ?" இத்தால்-ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமானபடி சொல்லுகிறது. "f ஆண் பெண்ணாய் வார்த்தை சொல்லிற்றாகையன்றிக்கே, பெண் தனக்கே, அதுக்குமேலே f$_2$ ஒரு மென்மை பிறந்து வார்த்தை

---

கிறது மேலே— (*எம்மைப் பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால்*) எங்களை வலிந்து பற்றி உடம்பை அணைத்துக் கொண்டால் என்றபடி. "உங்களுக்கு இது மிகவும் பொறுக்கவொண்ணாததாய் இருந்ததோ? நம்மோடு அணைவது கசக்கிறதோ? பெரிய முனிவர்களெல்லாம் என் உடம்போடு அணைவதற்கன்றோ ஆசைப்படுகிறார்கள். உங்களுக்கு வேண்டியதில்லையோ?" என்றான். அதற்குமேல் கூறுகிறார்கள்— (*இந்தப் பக்கம் நின்றவர் என் சொல்லார்*) எங்களுக்கும் வேண்டியது தான்; ஆனாலும் நம்மை இந்நிலையில் பார்க்கும் அருகிலுள்ளவர்கள் அபவாத$_3$ம் சொல்லமாட்டார்களா? என்கிறார்கள். இத்தால் கண்ணனோடு ஸம்ஶ்லேஷம் நடந்தமையைக் குறிப்பிடுகிறார்கள். "ஆண்களான ஆழ்வார்கள் நாயகிபா$_4$வத்தை ஏறிட்டுக்கொண்டு பேசும்போது 'ஒரு நான்று தடி பிணக்கே' [திருவாய் 6-2-7] என்றும், 'பந்தும் கழலும் தந்து போகு' [திருவாய் 6-2-1] என்றும், 'என் சினம் தீர்வன் நானே' [பெருமாள் திரு 6-8] என்றும் வன்மையோடு வார்த்தை சொல்லுவது போலல்லாமல், இவள் இயற்கையிலேயே மென்மை

---

c பற்றி-பிடித்து. d மெய்ப்பிணக்கு-கலவி. e,f "என் சொல்லார்" என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (ஆண்பெண்ணித்யாதி$_3$) f ஆண்பெண்ணானவர்கள் - ஆழ்வார்கள். f$_2$ மென்மைபிறந்து என்கிறது—"ஒருநான்று தடிபிணக்கே" என்றும், "பந்தும் கழலும் தந்துபோகு" என்றாற்போலே. பா$_4$வகா$_3$ர்ப்ப$_4$மாகத் தன இசைவுகள் கடி$_2$நமாயிராதே.

சொல்லுகிறதென்னுமிடம் தோற்றியிருக்கிறபடி காணும்" என்று பிள்ளைதாமும் வித்$_3$த$_4$ராய் அருளிச்செய்தருளின வார்த்தை. 9.

## இரண்டாம் திருமொழி—பத்தாம் பாட்டு.

**சிதைவாயமுத முண்டாய்!எங்கள் சிற்றில்நீசிதை யேலென்று,**
**வீதிவாய்விளை யாடும்ஆயர் சிறுமியர்மழ லைச்சொல்லை,**
**வேதவாய்த்தொழி லார்கள்வாழ்வில்லி புத்தூர்மன்விட்டு**
**சித்தன்தன்,**
**கோதைவாய்த்தமிழ் வல்லவர்குறை வின்றிவைகுந்தம் சேர்வரே.**

**பதவுரை:—சீதை**—பிராட்டியினுடைய, **வாய் அமுதம்**—அத$_4$ராம்ருதத்தை, **உண்டாய்** — பருகினவனே ! **எங்கள் சிற்றில் நீ சிதையேல் என்று**—'நாங்கள் இழைக்கும் சிற்றிலை நீ அழிக்காதொழியவேணும்' என்று, **வீதி வாய்**—வீதியிலே, **விளையாடும்** — விளையாடாநின்ற, **ஆயர் சிறுமியர்**—இடைப் பெண்களுடைய, **மழலைச் சொல்லை** —இளம் பருவத்துக்குரிய மெல்லிய சொல்லை(உட்கொண்டு), **வேதம் வாய்**-வேத$_3$த்தை உச்சரிக்கின்ற வாயையுடையவர்களும், **தொழிலார்கள்**—வைதி$_3$கதொழில்களைச் செய்பவருமான பரமைகாந்திகள், **வாழ்** — வாழுமிடமான, **வில்லிபுத்தூர்**—ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு, **மன்**—தலைவரான, **விட்டுசித்தன்தன்**—பெரியாழ்வாருடைய(திருமகளான), **கோதை**—ஆண்டாளுடைய, **வாய்**—திருவாக்கில் நின்று அவதரித்த, **தமிழ்**—தமிழ்ப்பாசுரங்களை, **வல்லவர்**—ஓதவல்லவர்கள், **குறைவு இன்றி** — குறைவில்லாமல், **வைகுந்தம் சேர்வர்**—பரமபத$_3$ம் சேரப்பெறுவர்.

---

மிக்க பெண்ணுகையாலும், அதற்குமேலே ஸம்ஶ்லேஷத்தாலே ஒரு மென்மை பிறந்திருக்கையாலும், மிக்க மென்மையுடன் வார்த்தை சொல்லுகிருள் என்பது தோற்றியிருக்கிறபடி கண்டீரே" என்று நம்பிள்ளை இவ்விடத்தில் ஆஶ்சர்யப்பட்டு வார்த்தை அருளிச்செய்வாராம். 9.

---

"இந்தப்பக்கம் நின்றவர் என்சொல்லார்" என்று தனக்கு ஸம்ஶ்லேஷத்திலுண்டான இசைவை மார்த்த$_3$வம் தோற்றச் சொல்லுவதே! என்றபடி. 9.



வ்யா:— பத்தாம் பாட்டு. (*சீதைவாயமுதமுண்டாய்*)
30. "ईषदुन्नम्य पास्यामि रसायनमिवोत्तमम्।" (ஈஷது$_3$ந்நம்ய பாஸ்யாமி ரஸாயநமிவோத்தமம்) என்கிறபடியே பருவம் நிரம்பினவளோடே இத்தீம்புகள் செய்தாலன்றே உனக்கு ப்ரயோஜநமுள்ளது; உன் நினைவறிந்து பரிமாறுகைக்கு அளவில்லாத எங்கள் சிற்றிலை வந்து சிதையாதேகொள்—என்று. (a வீதிவாய் இத்யாதி$_3$) எல்லாரும் திரளுமிடத்திலே மறைக்க வேண்டுமவை மறைக்க அறியாதே பரியட்டங்களை இட்டுவைத்து, ஸ்வைரமாக விளையாடுகிற பருவம் நிரம்பாத இடைப்பெண்களுடைய நிரம்பா மென்சொல்லை. (b வேதவாய் இத்யாதி$_3$)

---

10. *அவ:*— இப்பத்தையும் அநுஸந்தி$_4$ப்பவர்களுக்குப் ப$_2$லம் சொல்லித் தலைக்கட்டுகிருர்.

*வ்யா:— (சீதை வாயமுதமுண்டாய்)*

30. **கதா$_3$ நு சாருபி$_3$ம்பே$_3$ாஷ்ட$_2$ம் தஸ்யா: பத்$_3$மமிவாநநம் ।**
**ஈஷது$_3$ந்நம்ய பாஸ்யாமி ரஸாயநமிவோத்தமம் ॥**
[*ரா-யு* 5-13]

[அந்த தே$_3$வியினுடைய தாமரைபோன்ற திருமுகத்தைச் சிறிது நிமிர்த்தி, கொவ்வைக்கனி போன்ற அழகிய திருவத$_4$ரத்தை, மேலான ரஸாயனத்தைப்போலே என்று நான் பருகப் போகிறேன்?] என்கிறபடியே பருவம் நிரம்பின ஸீதா பிராட்டியோடே இத்தகைய செயலைச் செய்தால் உனக்குப் பயனுண்டு. சிறுமிகளாகிற எங்களிடம் இவற்றைச் செய்து என்ன பயன் ? என்கிருர்கள். (*எங்கள் சிற்றில் நீ சிதையேல் என்று*) "உன் நினைவறிந்து பரிமாறுவதற்குத் தக்க பருவமும் அறிவும் இல்லாத எங்களுடைய சிற்றிலை வலிய வந்து அழிக்காதே!" என்று. (*வீதிவாய்...மழலைச் சொல்லை*) எல்லோரும் கூடுகிற வீதி நடுவிலே, மறைக்கவேண்டிய அவயவங்களை மறைக்கவும் அறியாமல் வஸ்திரங்களைத் தாறுமாருக உடுத்துக் கொண்டு இஷ்டப்படி விளையாடும் பருவம் நிரம்பாத இடைப் பெண்களுடைய சிறுபிள்ளைப் பேச்சை. (*வேதவாய்...வல்லவர்*)

---

அரு:— பத்தாம் பாட்டு. (*சீதை இத்யாதி$_3$*) a வீதி-தெரு. வாய்-இடம். மழலை-இளமை. b வாய்-ஸ்வரம்.

வாயால் உச்சரிப்பதடங்கலும் வேத3ஶப்33மாகையாலே, செய்வ தடங்கலும் வைதி3கக்ரியையாயிருக்கிற ப்3ராஹ்மணர் வர்த்திக்கிற ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு ப்ரதா4நரான பெரியாழ்வார் திருமகளுடைய c ப4க3வத்3நுப4வம் "वाचःक्रमवर्तित्वात्" (வாச:க்ரமவர்த்தித்வாத்) வழிந்து புறப்பட்ட சொல்லை அப்4யஸிக்கவல்லவர்கள் ; அணைத்த அநந்தரம் 'இந்தப்பக்கம் நின்றவர் என் சொல்லார்' என்னுதல், அன்றிக்கே, காமன் காலிலே விழுதல் செய்யவேண்டாதே, அணைத்த அநந்தரம் அருகு நிற்பாருமெல்லாம் * பணியாவமரரான நித்யஸித்3த4ரேயாம்படியான தே3ஶத்திலே போய்ப் புகப்பெறுவர்கள். 10.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.
இரண்டாம் திருமொழி முற்றிற்று.

---

வாயால் உச்சரிப்பதெல்லாம் வேத3ஶப்33மாகையாலே செய்யும் காரியங்களெல்லாம் வைதி3கமான காரியங்களாய் இருக்கும் அந்தணர்கள் வாழ்கிற ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத் தலைவரான விஷ்ணுசித்தன் என்னும் பெரியாழ்வாருடைய திருமகளான கோதையினுடைய திருவாயில் இருந்து படிப்படியாக அவதரித்ததாய், ப4க3வத்3நுப4வம் வழிந்து புறப்பட்ட சொல்லாயிருப்பதான இப்பத்துப் பாசுரங்களையும் அர்த்த2த்தோடு கற்க வல்லவர்கள். *(குறைவின்றி வைகுந்தம் சேர்வரே)* ஆண்டாளைப் போலே அணைத்தவுடன், "இந்தப் பக்கம் நின்றவர் என் சொல்லார்" என்று ப4யந்து வார்த்தை சொல்லுகையாகிற குறைவின்றியும், காமன் காலிலே விழவேண்டிய குறைவின்றியும், அணைத்தவுடனே அருகில் நிற்பவர்களெல்லாம் "பணியாவமரர்" [திருவாய் 8-3-6] எனப்படும் நித்யஸூரிகளாயிருக்கும்படியான ஸ்ரீவைகுண்ட2த்தையடைந்து அநுப4விக்கப்பெறுவர்கள்.

ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி தா3ஸன் இயற்றிய
இரண்டாம் திருமொழி வ்யாக்2யான விவரணம் முற்றிற்று.

---

c (கோதைவாய் இத்யாதி3) கோதை வாயாலே சொல்லப்பட்ட தமிழென்று விஶேஷித்தது—நினைத்துச் சொல்லுகையன்றிக்கே ப4க3வத்3நுப4வம் வழிந்த சொல் என்றபடி. 10.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.



## மூன்றாந் திருமொழி—கோழியழைப்பதன் ப்ரவேஶம்

அவ:— "தொட்டுதைத்து நலியேல் கண்டாய்" என்னும்படியாக வந்து ஸ்பர்ஶித்து, அநந்தரம், "எம்மைப்பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால்" என்னும்படியே இருவரும் இரண்டு உடம்பாயிருக்கையன்றிக்கே ஒருடம்பென்றே ப்ரதிபத்தி பண்ணலாம்படி ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாய், அப்படி வ்ருத்தமான ஸம்ஶ்லேஷந்தான், உகாய்ந்து பொருந்துமாபோலே பிரிந்து கூடாவிடில் இரண்டு த4ர்மியும் அழியுமளவாக,

---

## மூன்றாம் திருமொழி வ்யாக்2யான விவரணம்

### கோழியழைப்பதன் ப்ரவேஶம்

"தொட்டுதைத்து நலியேல் கண்டாய்" [2-8] என்று ஆய்ச்சிகள் கூறும்படி அவர்களைத் தொட்டு அடுத்தபடியாக "எம்மைப் பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால்" [2-9] என்று கூறும்படி. இருவரும் இரண்டு உடம்பாயிருக்கும் நிலைபோய் ஒருடம்பு என்றே நினைக்கும்படி இருவருக்கும் ஸம்ஶ்லேஷம் நடந்தது. இப்படி நடந்த கூடலாகிற ஸம்ஶ்லேஷம், குயவன் பானை பண்ணும்போது பானையின் இரு பகுதிகளையும் சிறிது காயவைத்து ஒன்று சேர்ப்பது போலவும், கருமான் இரும்புப் பாத்திரம் செய்யும்போது இரு பகுதிகளையும் பழுக்கக்காய்ச்சி ஒன்று சேர்ப்பது போலவும். இவர்களையும் பிரிவாலே காயவைத்து மறுபடி கூட்டாமல், எப்போதும் கூடினபடியே

---

அரு:— கோழி ப்ரவேஶே. உகாய்ந்து பொருந்துமது - ம்ருத்3ப4ாண்ட3மாதல்; இரும்பாதல்; பொன் முதலானவை; அதாவது - ம்ருத்3ப4ாண்ட3ம் மணைந்தறுத்தவுடனே கொட்டினல் அழியும், காய்ந்து கொட்டினல் நீரந்த்4ரமாகப் பொருந்துமாபோலேயும், இரும்பு முதலானவை மழுவெழக்காய்ந்தால் நீரந்த்4ரமாகப் பொருந்துமாபோலேயும், இவர்களும் கூடினவாறேயிருந்தால் உங்மஸ்தகரஸமாய் அழிவர்கள்; பிரிந்து கூடினல் நன்ருகக் கூடி த4ரிப்பர்கள்.

இத்தை அநுஸந்தி$_4$த்து, இவர்களுடைய ப$_3$ந்து$_4$வர்க்க$_3$மானது சிறு பெண்களை இழக்கவொண்ணுது, இப்படி பிறந்து நின்ற பின்பு இனி போக்கடியென்? என்று பார்த்து, இவர்களைக் கொண்டுபோய் நிலவறைகளிலே அடைக்க ; அவர்களும், பிரி வாற்றமாட்டாமே, 31. "उपवासकृशां दीनां" (உபவாஸக்ருஶாம் தீ$_3$நாம்) என்று சொல்லுகிறபடியே ஆற்றுமையெல்லாமுடைய ராய், இவனும், 32. "न मांसं राघवो भुङ्क्ते" (ந மாம்ஸம் ராக$_4$வோ பு$_4$ங்க்தே) என்றும், 33. "नैव दंशान्न मशकान्" (நைவ த$_3$ம்ஶாந் ந மஶகாந்) என்றும் பெருமாள் கடித்த

---

இருந்தால் ஆனந்த$_8$ம் தலைமண்டையிட்டு நாயக நாயகிகள் இருவரும் அழிந்துவிடுவர்கள் என்னும் நினைவாலே இவர்க ளுடைய உறவினர்கள் 'பெண்களுக்கு இந்நிலை ஏற்படாம லிருக்க வழி என்ன?' என்று ஆராய்ந்து. கண்ணனிடமிருந்து இவர்களைப் பிரிப்பதற்காக இவர்களைக் கொண்டுபோய் நில வறைகளிலே அடைத்துவைத்தார்கள். அவர்களும் பிரிவு பொறுக்கமாட்டாமல்,

31. உபவாஸக்ருஶாம் தீ$_3$நாம் நி:ஶ்வஸந்தீம் புந: புந: ।
த$_3$த$_3$ர்ஶ ஶுக்லபக்ஷாதௌ$_3$ சந்த்$_3$ரரேக$_2$ாமிவாமலாம் ॥
[ரா-ஸு 15-19]

[பட்டினியால் மெலிந்தும், வருந்தத்தக்கவளாகவும், மறுபடி யும் மறுபடியும் பெருமூச்சு விடுபவளாகவுமிருக்கும் ஸீதா தே$_8$வியை, சுக்லபக்ஷத்தின் தொடக்கத்தில் அழுக்கற்று விளங்கும் சந்திரகலையைப்போலே ஹனுமான் பார்த்தான்.] என்கிறபடியே சீதாப்பிராட்டிக்கு விளைந்த ஆற்றுமை அனைத் தையும் உடையவர்களானுர்கள். கண்ணனும்,

32...34. ந மாம்ஸம் ராக$_4$வோ பு$_4$ங்க்தே ந சாபி மது$_4$ ஸேவதே ।
நைவ த$_3$ம்ஶாந்ந மஶகாந் ந கீடாந் ந ஸரீஸ்ருபாந் ।
ராக$_4$வோऽபநயேத் க$_3$ாத்ராத்
த்வத்$_3$க$_3$தேநாந்தராத்மநா ॥
[ரா-ஸு 36-41, 42]



தும் ஊர்ந்ததும் அறியாதேயிருந்தாற்போலேயிருந்தது ; அதுக்கு அடியென்? என்னில், 34. "त्वद्गतेनान्तरात्मना" (த்வத்$_3$க$_3$தேநாந்தராத்மநா) 'பரகாய ப்ரவேஶம் பண்ணியிருப் பார்க்கும் ஒன்று தெரியுமோ? தமக்குணர்த்தியுண்டாகிலன்றே அவை அறியவல்லராவது' என்னும்படியாய், இவர்கள் ஒருகால் உறங்காதிருக்கில், 35 "अनिद्रस्सततं" (அநித்$_3$ரஸ்ஸததம்) என்னும்படியாய், இத்தலை 36 "ऊर्ध्वं मासान्न जीविष्ये" (ஊர்த்$_4$

---

[(தே$_8$வி! உம்மிடத்தில் ஈடுபட்டிருக்கும் திருவுள்ளத்தையுடைய ராமபிரான் மாமிசம் உண்பதில்லை; மது$_4$ அருந்துவதில்லை : (ஶரீரத்தில் ஊரும்) ஈக்களையும், கொசுக்களையும். புழுக்களையும் பாம்புகளையும் ஶரீரத்திலிருந்து தள்ளுவதில்லை.] என்கிறபடியே ஸ்ரீராமபிரான் தன்மேல் கடித்ததும். ஊர்ந்ததும் அறியாமல் இருந்ததுபோலே இருந்தான். இப்படி இருந்ததற்குக் கார ணத்தை மேலே எடுத்த பிரமாணத்தில் "*த்வத்$_8$க$_8$தேநாந்த ராத்மநா*" [உன்னிடம் ஈடுபட்டிருக்கும் திருவுள்ளத்தை உடையவர்] என்று அநுமன் காட்டினுன். பரகாய ப்ரவேஶம் (ஒருவர் மற்ருெரு உடம்பில் நுழைந்திருப்பது) பண்ணியிருப் பவர்களுக்குத் தம் உடம்பில் உணர்ச்சி இல்லாமலிருப்பது போலே, நாயகியிடம் நெஞ்சைப் பறிகொடுத்த நாயகனுக்குத் தன் உடம்பில் எதையும் உணர முடியாதன்றே. நாயகி ஒரு பொழுது உறங்கவில்லையென்றால்,

35. அநித்$_3$ரஸ் ஸததம் ராம: ஸுப்தோऽபி ச நரோத்தம: ।
ஸீதேதி மது$_4$ராம் வாணீம் வ்யாஹரந் ப்ரதிபு$_3$த்$_4$யதே ॥
[ரா-ஸு 36-44]

[(ஸீதையைப் பிரிந்த) ராமன் எப்போதும் தூக்கமற்றவராகவே இருக்கிறுர்; நரஶ்ரேஷ்ட$_8$ரான அவர் தூங்கினுலும் 'ஸீதே!' என்னும் அழகிய சொல்லை உச்சரித்துக்கொண்டே விழித் தெழுகிறுர்.] என்கிறபடியே எப்போதும் உறங்காமல் இருப்ப வனன்ருே இவன். இவள்,

36. ஜீவிதம் த$_4$ாரயிஷ்யாமி மாஸம் த$_3$ஶரத$_2$ாத்மஜ! ।
ஊர்த்$_4$வம் மாஸாந்ந ஜீவேயம் ஸ்த்யேநாஹம்
ப்$_3$ரவீமி தே ॥ [ரா-ஸு 38-67]

வம் மாஸாந்ந ஜீவிஷ்யே) என்னில்; 37. "न जीवेयं क्षणमपि" (ந ஜீவேயம் க்ஷணமபி) என்கிறபடியே ஒரு க்ஷணமும் ஜீவிக்கமாட்டாதபடியிறே அவன்படி. இப்படி இரண்டு தலைக்கும் ஆற்றாமை கரைபுரண்டிருக்க, பெண்களுடைய த3சையை அநுஸந்தி4த்த பித்ராதி3கள் "இவர்களை நாம் முடிய நிரோதி4க்கில் இழக்குமத்தனையாயிருந்தது; நாமே சேர்த்துவிட்டோமாகவொண்ணாது; இனி இங்ஙனே ஒரு வழியிடுவோம்; பெண்கள் வரலாப4த்திற்காகப் பனிநீராட என்றென்றுண்டு செய்து போருவது; அத்தை இவர்கள் செய்வார்கள்; தங்கள்

---

[ஆர்யபுத்திரரே! நான் என் உயிரை ஒருமாதகாலம் த4ரித்து நிற்பேன்; ஒரு மாதத்திற்குமேல் உயிர்வாழமாட்டேன் என்று ஆணையிட்டு உமக்குச் சொல்லுகிறேன்.] என்று கூறினால், அவன்—

37. சிரம் ஜீவதி வைதே3ஹீ யதி3 மாஸம் த4ரிஷ்யதி।
ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்॥
[ரா-ஸு 66-10]

[ஸீதை ஒரு மாஸம் த4ரித்திருப்பாளாகில், வெகுகாலம் பிழைத்திருந்தவளாகிறாள்; கறுத்த கண்களையுடைய அவளைவிட்டு ஒரு க்ஷண நேரமும் நான் பிழைத்திருக்கமாட்டேன்.] என்று சொல்லும்படி ஒரு கணமும் இவளைப் பிரிந்து ஜீவிக்கமுடியாத தன்மையுடையவனாயிருப்பானன்றோ. இப்படி ஆய்ச்சியருக்கும், கண்ணனுக்கும் பிரிவாற்றாமை கரைபுரண்டிருந்தது. பெண்களுடைய இந்நிலையை அநுஸந்தி4த்த தகப்பன், தாய் முதலான உறவினர்கள் "இவர்களை நாம் கடைசிவரையில் கண்ணனோடு கூடமுடியாமல் தடுத்துவிடுவோமானால், இவர்களை இழக்க வேண்டிவரும். நாமே கண்ணனோடு சேர்த்துவிட்டால், இவர்களுக்கு மிகவும் இடம்கொடுத்ததாகிவிடும். ஆகையால் இப்படி ஒரு வழிசெய்வோம். அதாவது—பெண்கள் தக்க கணவனை அடைவதற்காகப் பனிநீராடுவது என்று ஒரு வழக்கமுண்டு. அதைச்செய்வதற்கு நாம் இவர்களை அனுமதிப்போம். இவர்கள் நினைத்தபடி கிருஷ்ண ஸம்ஶ்லேஷமும் கிடைக்கும்.



நினைவிலே bயதுவும் ப4லிக்கிறது. நாம் இதுதன்னை அறிந்தோமாகாதொழிகிறோம்" என்று இவர்கள் தாங்கள் தங்களிலே ஸமயம் பண்ணியிருக்க; அவனும்—பிரிந்தபோது தொடங்கி இவர்களிடையாட்டம் ஆராயுமதுவேயிறே அவனுக்குப் பணி, ஆகையாலே தான் பிரிந்தபின்பு பிறந்தவையடைய பஞ்சலக்ஷம் c குடிக்காட்டில் பெண்களுக்குத் தனித்தனியே ஆளிட்டு ஆராய்ந்து ஊரில் d பிறந்த விசேஷங்களும், e பிறக்கிறவையும், f பிறக்கப்புகுகிறவையும் அறிந்து, இப்படி பனிநீராடப்போவதாக அத்4யவஸித்திருந்தார்களென்று கேட்டு, தானும் ஒக்கப் போவதாகக் கணிசித்திருக்க, அவர்களும் 'இவனோட்டை ஸம்ஶ்லேஷந்தான் பொறுக்கப்போகாது; அதுக்குமேலே விஶ்லேஷ வ்யஸநந்தான் பாடாற்றப்போகாது; ஸம்ஶ்லேஷமோ விஶ்

---

அதை நாம் அறியாததுபோல் இருப்போம்" என்று தங்களுக்குள் பேசிக்கொண்டு, இவர்களைப் பனிநீராட அனுமதித்தார்கள். கண்ணனும் பிரிந்த சமயத்திலிருந்து ஐந்து லக்ஷம் குடியில் ஆய்ச்சிகளைப்பற்றி ஆராய்வதே காரியமாக இருந்தான். ஆகையால் பிரிந்தபின்பு இப்பெண்கள் விஷயத்தில் என்ன நடந்தது என்பதைத் தன் தோழர்களில் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒருவனைத் தனித்தனியே ஆளிட்டு ஆராய்ந்து, தாய்தந்தையர், பெண்கள் முதலான ஊரார்க்கு விளைந்த வேறுபாடுகளையும், பிறக்கின்ற வேறுபாடுகளையும், பிறக்கப்போகிறவற்றையுங்கூட அறிந்து, இவர்கள் பனிநீராடப்போக உறுதிகொண்டிருப்பதைக் கேள்விப்பட்டு, தானும் அவர்களோடு போவதற்குப் பாரித்திருந்தான். அந்த ஆய்ச்சிகளோவென்றால் "இவனோடு ஸம்ஶ்லேஷிப்பது நம்மால் த4ரிக்கக் கூடியதாயில்லை. அதற்கு அடுத்தபடி வரும் பிரிவுத்துன்பமோ பொறுக்கமுடியாததா

---

என்றபடி. b அதுவும—ஸமஶ்லேஷமும்; c குடிஸமூஹத்தைப் பற்ற குடிக்காடு என்கிறது. d பிறந்த விசேஷங்களாவது—நிலவறைகளிலே பெண்களையடைத்தது. e பிறக்கிறவைகளாவது பித்ராதி3கள் அவர்களை நீராடச்சொன்னவைகள். f பிறக்கப்புகுகிறவைகள்—பெண்கள் நீராடப்போகிறவை.

லேஷாந்தமாயல்லதிராது ; ஆனபின்பு, அவனோடே ஸம்ஶ்லேஷித்துப் பின்னைப் பிரிந்து படும் வ்யஸநத்தில், முன்புற்றை விரஹஜ்வரத்துக்குப் பரிஹாரமாக நீரிலே போய் முழுகி, அத்தால் வந்த ஆஶ்வாஸத்தைப் பெற்றிருக்க அமையும்; அதுசெய்யுமிடத்தில் நாமும் அவனுமாய் முன்பு குளித்துப் போகும் பொய்கையிலே போகில் அவன் அறிந்துவரும்; ஆனபின்பு, அவன் அறியாததொரு பொய்கை தேடிப்போகவேணும்; அது செய்யுமிடத்தில் திரளப்போகில் அவன் அறியும் ; ஆனபின்பு, ஒருவரொருவராகப் போவோம் ; போமிடத்திலும் வழிதெரியாதபடி இட்ட அடியை அழித்துக்கொண்டுபோவோம்' என்று எல்லாரும் போனார்கள்; அவ்வளவிலே, இவனும் இவர்களைப் பெறுகைக்கு * எதிர்சூழல்புக்குத் திரிவானொருவனிறே ; இவர்கள் நினைவை அறிந்து இனித் தான் திருவ

---

யுள்ளது. ஸம்ஶ்லேஷமாகிற கூடல் எப்போதும் விஶ்லேஷமாகிற பிரிவிலேயே முடிவதாயிருக்கிறது. ஆகையால் அவனோடு ஸம்ஶ்லேஷித்து, அதற்குப்பின் பிரிந்து துன்புறுவதைக் காட்டிலும், இப்போதுள்ள விரஹதாபம் நீங்கும்படியாக நீர்நிலைக்குச்சென்று மூழ்கி, அதனால் ஆறுதல் பெற்றிருப்பது நல்லது. அதைச் செய்யும்போது நாமும் கண்ணனும் ஏற்கனவே வழக்கமாகக் குளிக்கும் பொய்கைக்குச் சென்றால் அவன் அறிந்து வந்துவிடுவான். ஆகையால் அவன் அறியாத பொய்கை ஒன்றைத் தேடிப் போகவேண்டும். அப்படிப் போகும்போதும் கூட்டமாகப்போனால் அவன் அறிந்துவிடுவான். ஆகையால் ஒவ்வொருவராகப் போவோம். அப்படிப் போகும்போதும் நம்முடைய அடிச்சுவடு தெரியாதபடி அதை அழித்துக்கொண்டுபோவோம்" என்று தங்களுக்குள் முடிவுசெய்து, அப்படியே எல்லாரும் பொய்கைக்குப் போனார்கள். "எதிர்சூழல் புக்கு எனைத்தோர் பிறப்பும்" [ திருவாய் 2-7-6 ] என்கிறபடியே இவர்களைப் பெறுவதற்காக அநாதி$_2$காலமாக எதிர்சூழல் புக்குத் திரியும் அவனும் இவர்கள் நினைவை நன்கு அறிந்திருப்பவனன்றோ. வனவாஸத்தின்போது ராமனைப் பின்தொடர்ந்துவந்த திருவயோத்தியிலுள்ள ஜனங்களை, தேரை ஸுமந்த்ரனைக்



யோத்$_4$யையிலுள்ளாரைப்போலே வழிமாறிப்போனால் அறிந்திலோம் என்று மீளும் இளிம்பனன்றே; 38. "इयेष पदमन्वेष्टुं चारणाचरिते पथि" (இயேஷ பத$_3$மந்வேஷ்டும் சாரணாசரிதே பதி$_2$) என்கிறபடியே g அடியொற்றினான். h இவன்தான் "இருளன்ன மாமேனி" என்கிறபடியே இருளோடே விகல்பிக்கலாயிறே திருமேனியிருப்பது. ஆகையால் ச$_2$ாயாவானை ச$_2$ாயை பின்செல்லுமாபோலே, இவர்கள் நிழலிலேயொதுங்கிப்போய் முற்பட்டுக் கரையைப்பற்றினான்; இவர்களும் இடைப்பெண்களாகையாலே பரியட்டங்களையும் ஆப$_4$ரணங்களையுமடையக் கரை

---

கொண்டு வழிமாறி ஓட்டச்செய்து ராமபிரான் ஏமாற்றியது போலே, வழிமாறி அடிச்சுவட்டை அழித்துக்கொண்டு போனால் 'வழிதெரியவில்லையே' என்று மீளலாம்படி ஏமாற்ற முடியாதே இக்கண்ணனை.

38. ததோ ராவணநீதாயா: ஸீதாயா: ஶத்ருகர்ஶந: ।
இயேஷ பத$_3$மந்வேஷ்டும் சாரணாசரிதே பதி$_2$ ॥
[ரா-ஸு 1.1]

[சத்துருக்களைத் துன்புறுத்தும் ஹனுமான் சாரணர்கள் நடமாடும் ஆகாயமார்க்க$_3$த்தில் ராவணனால் எடுத்துச்செல்லப்பட்ட ஸீதையை அடியொற்றிச் செல்ல விரும்பினான் ] என்று சொல்லப்பட்ட அனுமனைப்போலே இவ்வாய்ச்சிகளைக் கண்ணன் அடியொற்றினான். "இருளன்ன மாமேனி" [பெரிய திருவ 26] என்கிறபடியே இருளையொத்த திருமேனியை உடையவனாகையாலே நடந்து செல்லும் பொருளை அதன் நிழல் பின்செல்லுவதுபோலே இவர்களுடைய நிழலிலே ஒதுங்கிப்போய், இவர்களுக்கு முன்னால் கரையில் ஒளிந்துகொண்டான். இவர்களும் இடைப்பெண்களாகையாலே எல்லா வஸ்த்ரங்களையும், ஆப$_4$ரணங்களையும் கரையிலே

---

g திருவடி பிராட்டியைத்தேட அடியொற்றினாற்போலே அடியொற்றிப் போனான் ; b அடியொற்றிப்போனால் அவர்கள் அறியார்களோ? என்ன, அருளிச்செய்கிறார் (இவன தான் இத்யாதி$_3$).

யிலேயிட்டுவைத்துப் போய் ஜலத்திலே அவகா$_3$ஹித்தார்கள்: அவ்வளவிலே இவற்றையடைய வாரிக்கொண்டு பெரிய வேக$_3$த்தோடே போய்க் குருந்தின்மேலேயேறித் தன்னைத் தெரியாதபடி மறையநின்ருன்; இவர்களும் கரையிலே யேறிப் பார்த்தவிடத்தில் அவை காணுமையாலே "இருந்த படியென்?" என்று துணுக்கென்று, 'நம்முடன் கூட வந்தா ரொருவருமுண்டோ, இது ஆகாஶம் கொண்டதோ, தி$_3$க்குகள் கொண்டதோ, இக்குளம் கொண்டதோ, க்ருஷ்ணன் கொண்டானே?' என்று இங்ஙனே கலங்கி, 39. "किन्नु स्याच्चित्त-मोहोऽयं" (கிந்நுஸ்யாத் சித்தமோஹோऽயம்) என்கிறபடியே திருவடி - முன்னேயிருந்து வார்த்தை சொல்லாநிற்கச்செய்தே யும், 'இது இந்நிலத்தில் ஸம்ப$_4$விப்பதொன்றல்ல' என்றிருந்த படியாலே 'இது சித்தஸ்க$_2$லநம் பிறந்ததோ' என்றும், 40. "उन्मादजो विकारो वा स्यादियं मृगतृष्णिका" (உந்மாத$_3$ஜோ விகாரோ வா ஸ்யாதி$_3$யம் ம்ருக$_3$த்ருஷ்ணிகா) என்கிறபடியே

---

களைந்துவைத்துவிட்டு ஜலத்திலே குடைந்தாடினர்கள். இவை யனைத்தையும் வாரிக்கொண்டு அக்குளக்கரையிலிருந்த குருந்த மரத்தின்மேலே மிகவிரைவிலேறி, தன்னை அவர்கள் தெரிந்து கொள்ளாதபடி ஒளிந்துகொண்டான். இவர்கள் குளித்தபின்பு கரையில் ஏறிப்பார்த்தபோது ஆடை ஆப$_4$ரணங்களைக் காணுமல் 'எங்கே போயிற்றே?' என்று அஞ்சி "இவற்றை ஆகாயம் அபஹரித்ததோ, தி$_3$க்குகள் அபஹரித்தனவோ, இக் குளம் கொண்டதோ, கண்ணனே பறித்துவிட்டானே?" என்று பலவிதமாகக் கலங்கி,

39 & 40. கிந்நு ஸ்யாச்சித்தமோஹோऽயம்
பவேத் வாதக$_3$திஸ் த்வியம் ।
உந்மாத$_3$ஜோ விகாரோ வா
ஸ்யாதி$_3$யம் ம்ருக$_3$த்ருஷ்ணிகா ॥
[ரா-ஸு 34-23]

[இது நெஞ்சின் மயக்கமாயிருக்குமோ? வாயுவின் சேஷ்டை யாய்த்தான் இருக்குமோ? பைத்தியமோ? நம் தன்மை மாறி விட்டதோ? கானல் நீராய்த்தானிருக்குமோ?] என்கிறபடியே



'இது உந்மாத$_3$மோ, ப்ரக்ருதி விகாரம் பிறந்ததோ, இது இருந்தபடியென்?' என்று ஶங்கித்துப் பின்பு தெளிந்தாற் போலே, இவர்களும் அநேகத்தை ஶங்கித்து, இவர்கள் எங்கும் பரகு பரகு என்னப் பார்த்துக்கொண்டு வாரா நிற்க, இவனைக் குருந்தின்மேலே கண்டார்கள்; கண்ட அநந்தரம் "இவன் நம்மை மடிபிடித்து வந்தான்; நாமும் இவனை i மடிபிடித்து வாங்கினோமாம் விரகேதோ?" என்று பார்த்து, இவனை jஇரப்பார், kஏத்துவார், lவாழ்த்துவார், mசீறுவாராய், 'nஇவனை இப்படி தீம்பு செய்யப்பெற்றுவிட்ட தாயுமொருத்தியே!' என்று

---

அநுமன் பிராட்டிக்கு முன்னே சென்று வார்த்தை சொல்லிக் கொண்டிருந்தபோதும் 'இவ்வுலகில் இது நடக்கக் கூடியதா?' என்னும் கலக்கத்தாலே "நமது நெஞ்சு தடுமாறிவிட்டதோ? பைத்தியம் பிடித்துவிட்டதோ? நம் தன்மை மாறி விட்டதோ? இது எப்படி நடந்தது" என்று ஐயமுற்றுப் பின்பு தெளிந்த சீதாப்பிராட்டிபோலே இவர்களும் பலவாறு ஐயமுற்று, எல்லாத் திசையிலும் பார்த்துக்கொண்டு வரும் போது, கண்ணனைக் குருந்த மரத்தின்மேலே கண்டார்கள். கண்டவுடன் "இவன் நம் முந்தானையைப் பிடித்துக்கொண்டு நம் வஸ்த்ரங்களைப் பறிப்பதற்காகப் பின்தொடர்ந்து வந்தி ருக்கிறன். நாமும் இவனை மடிபிடித்து வம்புசெய்து இவற்றை வாங்கும் வழி என்ன?" என்று ஆலோசித்து, இவனை யாசிப் பாரும், துதிப்பாரும், வாழ்த்துவாரும், கோபிப்பாருமானார்கள். 'இப்படித் தீமைசெய்யும்படி இவனைப்பெற்ற தாயும் ஒருத் தியே' என்று அவளை வெறுப்பாரும் ஆனார்கள். இவ்வண்ண

---

i மடிபிடித்து-சாடு; புடவைக்காக வந்தான் என்றர்த்த$_2$ம்; சண்டையிட த்$_4$வநி. j"தொழுதோம்"(1) என்றத்தைப்பற்ற (இரப்பார்) என்றது. k "மதுவின் துழாய் முடிமாலே" (2) இத்யாதி$_3$யைப்பற்ற (ஏத்துவார்) என்றது. l "கூத்தாட வல்ல எங்கோவே" (6) என்கையாலே — வாழ்த்துகை ஸித்$_3$த$_4$ம். m"குரக்கரசு"(4) "மசிமையிலீ"(9) என்கையாலே (சீறுவார்) என்றது n "அஞ்சவுரப்பாள்"(9) இத்யாதியைப்

அவனை வெறுப்பார், o தங்கள் ஆற்றாமையை அறிவிப்பாராய், இப்படி ப$_3$ஹுப்ரகாரங்களாலும் அநுவர்த்திக்க; அவனும், பரியட்டங்களும் கொடுத்து p ஸம்ஶ்லேஷித்தானாய்த் தலைக்கட்டுகிறது.

## மூன்றாந்திருமொழி — முதல் பாட்டு

கோழி யழைப்பதன் முன்னம் குடைந்துநீ ராடுவான்
போந்தோம்
ஆழியஞ் செல்வ னெழுந்தான் அரவணை மேல்பள்ளி
கொண்டாய்
ஏழைமை யாற்றவும் பட்டோம் இனியென்றும் பொய்கைக்கு
வாரோம்
தோழியும் நானும் தொழுதோம் துகிலைப் பணித்தரு ளாயே.

பதவுரை:— அரவு அணை மேல்—திருவநந்தாழ்வானாகிற படுக்கையின்மேலே, பள்ளி கொண்டாய்—திருக்கண் வளர்ந்தருளுமவனே! குடைந்து—(குளத்தில்) மூழ்கி, நீர் ஆடுவான்—நீராடுவதற்காக, கோழி அழைப்பதன் முன்னம்—கோழி கூவுதற்கு முன்னம், போந்தோம் — (இவ்விடம்) வந்தோம்; (இப்போதோ என்றால்,) செல்வன் — செல்வத்தையுடையனான, ஆழியன்—ஸூர்யன், எழுந்தான்—உதித்தான்; ஆற்றவும் ஏழைமை பட்டோம்—(நாங்கள் உன்னாலே) மிகவும் கஷ்டப்பட்டோம்; இனி-இனிமேல்; என்றும்-என்றைக்கும், பொய்கைக்கு — குளத்திற்கு, வாரோம்—நாங்கள் வருவதில்லை; தோழியும் நானும் தொழுதோம்-தோழியும் நானுமாக (உன்னைக்) கும்பிடுகின்றோம்; துகிலை—(எங்களுடைய) சேலைகளை, பணித்தருளாய்—தந்தருளவேண்டும்.

---

மாகத் தங்களது ஆற்றாமையை அறிவிக்கின்றவர்களாய், பலபடிகளால் அவனை நயந்தனர் என்பதையும், அவனும் வஸ்த்ரங்கள் முதலானவற்றைக் கொடுத்து இவர்களோடு கூடினான் என்பதையும் கூறி நிறைவடைகிறது இத்திருமொழி.

---

பற்ற (இவனை) என்றது. o 'தடத்தவிழ்தாமரை''(6) இத்யாதி$_3$யைப்பற்ற (தங்கள் ஆற்றாமையை அறிவிப்பாராய்) என்றது. pமேலில் திருமொழியிலே விஶ்லேஷித்துக் கூடலிழைக்கையாலே இத்திருமொழியிலே ஸம்ஶ்லேஷம் அர்த்தா$_2$த் ஸித்$_3$த$_4$ம்.



வ்யா:— முதற்பாட்டு. (கோழியித்யாதி$_3$) நாங்கள் ஒன்றை நினைத்துவர a அது ஒன்றாய்ப் ப$_2$லித்தபடி கண்டாயே; b க்ருஷ்ணன்தான் ராத்ரி முற்கூறெல்லாம் பெண்களுடைய முலைகளோடும் தோள்களோடும் பொருது, உறங்குவது பிற்கூற்றிலேயாகையாலே, இக்காலத்திலே இவன் உணரான் என்றது பற்றாசாகவாய்த்து இவர்கள் போந்தது; c இவர்கள் நினைவு இதுவானாலும் கோழி கூவினவாறே உணருவானொருவனாய்த்து. d தாங்கள் உறக்கவுறங்கிக் கோழி உணர்த்த

---

*1. அவ:—* தாங்கள் படும் எளிவரவைக் கூறிக் கை தொழுது வஸ்த்ரங்களைத் தரும்படி யாசிக்கிறார்கள்.

*வ்யா:— (கோழி...போந்தோம்)* கோழி கூவுவதற்கு முன் னீராடி வந்துவிட்டால் அந்த சமயத்தில் கண்ணன் உறங்குவானாகையாலே அவனால் நமக்குத் தீமை நேராது என்று நினைத்து வந்தோம். அது விபரீதமாகிவிட்டதே என்று கருத்து. ஏற்கனவே கண்ணனோடு கூடியிருந்தபோது முன் இரவெல்லாம் பெண்களை அணைந்து, விடியற்காலையிலேயே அவன் உறங்குவது வழக்கமாகையாலே, அந்த வழக்கத்தை ஒட்டி இவன் விடியற்காலையில் உறங்குவான் என்று நினைத்து வந்தது தவறாகப் போய்விட்டது என்றபடி. அப்படியானால், கண்ணன் எப்படி உணர்ந்து வந்தான்? எனில், இவர்கள் சென்றவுடன்

---

அரு:— முதற்பாட்டு. (கோழியித்யாதி$_3$) a (அது ஒன்றாய்) என்றது - வேறொன்றாய் என்றபடி. b இவர்கள் நினைத்ததேது, ப$_2$லித்ததேது? என்ன அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணன்தானித்யாதி$_3$) c கோழியழைப்பதற்கு முன்னே நீராடப்போகவேணுமென்று நினைத்துப் புறப்பட்டார்களாகில், இவன் பின்னை வந்தபடியென்? என்ன, அருளிச்செய்கிறார் (இவர்களித்யாதி$_3$) அதாவது - இவர்கள் இப்படி நினைத்துப் புறப்பட்டார்களேயாகிலும், உடனே கோழியும் கூவி, அவனும் உணர்ந்து வந்தான் என்று தாத்பர்யம். d உறங்குகையும் உணருகையும் அறிந்தபடி எப்படி? என்ன அருளிச்செய்கிறார் (தாங்கள் உறக்க இத்யாதி$_3$)

உணர்ந்து போரும்படியைக்கண்டு அந்வயவ்யதிரேகங்கள் இரண்டும் அறிந்தாய்த்துப் போந்தது. (அழைப்பதன் முன்னம்) இவன்றன்னைத் துடைதட்டி எழுப்புவாரைப்போலே கோழிகூவி எழுப்ப வேண்டும் படியாய்த்து நித்$_3$ராபரவஶனாய்க் கிடக்கும் படி. இப்படி நம்மை மறைத்து நாம் உணருவதற்கு முன்னே நீங்கள் போந்தது என்ன காரியத்துக்குத்தான்? என்றான்; (e குடைந்து நீராடுவான் போந்தோம்) 42. "सरयूमवगाहते" (ஸரயூமவக$_3$ாஹதே) என்னுமாபோலே உன்னோட்டை

கோழிகூவுவதைக் கேட்டு, உணர்ந்து, விரைந்து இவர்களைத் தொடர்ந்து வந்தான். ஆக, 'எப்போதும் தாங்கள் உறங்கச் செய்ததால் உறங்கி, கோழி கூவினவுடன் உணருமவன் கண்ணன்' என்பதை அந்வய வ்யதிரேகங்களிரண்டாலும் அறிந்து, கோழி அழைப்பதற்கு முன் குளிக்கப் புறப்பட்டார்கள். (*அழைப்பதன் முன்னம்*) இவனைத் துடைதட்டி எழுப்புவாரைப் போலே கோழிகூவி எழுப்பவேண்டும்படி தூக்கத்துக்கு வசப் பட்டுக் கிடப்பவன் இவன் என்பதை அறிந்தவர்கள் இவர்கள். "இப்படி எனக்குத் தெரியாமல் நான் விழிப்பதற்கு முன் நீங்கள் புறப்பட்டது என்ன காரியத்திற்கு?" என்றான் கண்ணன். அதற்கு பதில் கூறுகிறார்கள் — (*குடைந்து நீராடு வான் போந்தோம்*)

42. அத்யந்தஸுக$_2$ஸம்வ்ருத்$_3$த$_4$: ஸுகுமார: ஸுகோ$_3$சித: ।
கத$_2$ம் ந்வபரராத்ரேஷு ஸரயூமவக$_3$ாஹதே ॥ [ரா-ஆ 16.30]

[மிகவும் ஸுக$_2$த்திலே வளர்ந்தவனும், ஸுகுமாரனும், ஸுக$_2$த்திற்கே தகுந்தவனுமான ப$_4$ரதன் எப்படித்தான் பின்னிரவு

நீ உணருவதற்கு முன்னம் என்னாதே "கோழியழைப்ப தன் முன்னம்" என்று விஶேஷித்தபோதே-கோழி கூவுவதற்கு முன்பு இவனுக்கு உறக்கமுண்டாகையும். கோழி கூவினாலும் உணருமென்றபடியாய்த்தே. இதறிந்தபடி யென், இவர்கள்? என்ன அருளிச்செய்கிறார் (தாங்கள் உறக்க இத்யாதி$_3$) தாங்களுறக்க—தங்களோடே கூடியிருக்கிறபோது உறங்குகை. அந்வயம்—உறங்குகை; வ்யதிரேகம்—உணருகை. e குடைந்து—உள்புக்கு.



விரஹதாபமெல்லாம் ஆறும்படி குளிக்கப்போந்தோம். உன் வரவை நினைத்துப்போந்தோமல்லோம். நீ வருவதற்குமுன்னே குளித்து மீளவேணும் என்னும் மநோரத$_2$த்தோடே போந்தோம். 'ஆனால் அதுக்கு வந்ததென், செய்யலாகாதோ?' என்று அவனும் ஒன்றை நினைத்தான்; அதாவது - தமிழர், கலவியை "சுனையாடல்" என்று ஒரு பேரையிட்டுப் போருவர்கள்; அத்தைப்பற்றத் தன் அபி$_4$மத ஸித்$_3$தி$_4$க்கு உடலாகச் சொன்னான் அவன்; 'உனக்கு அது செய்யவொண்ணாது காண், உன் நினைவை எண்ணி வந்து தோற்றினான் காண் ஸ்ரீமான் f ஆதி$_3$த்யன்' என்கிறார்கள்—(f$_2$ ஆழியன் செல்வனெழுந்தான்) கடலிலே முழுகி எழுவாரைப்போலே தோற்றி

நேரங்களில் ஸரயுவில் குடைந்தாடுகிறானோ?] என்று சொல்லப் பட்ட ப$_4$ரதாழ்வானைப்போலே "உன்னைப் பிரிந்த விரஹதாப மெல்லாம் ஆறும்படி குளிக்கப் புறப்பட்டோம். நீ வர வேண்டும் எனும் எண்ணத்தோடு போகவில்லை. நீ வருவதற்கு முன் குளித்து மீளவேண்டும் எனும் பாரிப்புடன் புறப் பட்டு வந்தோம்" என்கிறார்கள். "அப்படியானால் இப்போதும் புறப்படலாமே. ஏன் தாமதப்படுத்துகிறீர்கள்?" என்று கேட்டான் கண்ணன். அதாவது — தமிழர் நாயக நாயகிகள் கூடியிருத்தலாகிற கலவியைச் 'சுனையாடல்' என்று வழங்குவதையொட்டி இவர்களும் பொய்கையில் குடைந்து நீராடின பின்பு, தன்னோடு கூடுவதாகிற சுனையாடலைச் செய்வதற்காகத் தாமதம் செய்கிறார்கள் என்பது கண்ணன் கருத்து. "இது உன் கருத்தேயொழிய எங்கள் கருத்தல்ல. உன் கருத்தை நிறைவேற்றவொண்ணாதபடி ஸ்ரீமானான ஸூர்யன் உதி$_3$த்து விட்டான் காண்" என்கிறார்கள் — (*ஆழியன் செல்வன் எழுந்தான்*) ஆழியன் என்னும் ஶப்$_3$த$_3$ம் ஸூர்யனைக் குறிப்பது எப்படி? எனில், ஆழி என்று கடலைக் குறிக்குமாகையாலே, கடலிலிருந்து எழுந்த ஸூர்யனை ஆழியன் என்பதாகக் கொள்ளலாம். கடலிலே மூழ்கி எழுகின்றவரைப் போலே காட்சியளித்தான் என்று கருத்து. அன்றிக்கே 'ஆழி' என்று

f, f$_2$ ஆழியன் செல்வன்—ஆதி$_3$த்யன்.

ஞன் என்னுதல்; அன்றிக்கே, மண்ட3லத்தைச் சொல்லுதல்; ஆதி3த்ய ரத2த்தைச் சொல்லுதல். (செல்வன்) ஶ்ரிய:பதி யான நாராயணன் தன் பக்கலிலே பிராட்டியோடே ஸந்நிதி4 பண்ணும்படியான ஸம்பத்தையுடையவன். ‘ g அது பின்னே ஆர்க்கு அழகு? உங்களுடைய அங்க3ப்ரத்யங்க3ங்களை அழகிதாகக் கண்டு அநுப4விக்கைக்கு உடலாகிறது ; நீங்கள்தான் h ஒரு கார்யத்திலே உபக்ரமிக்கும்போது அது செய்து தலைக்கட்டுகைக்கு வேண்டும் i போதறிந்தன்றோ புறப்படுவது; நீங்கள் j ஆரை

---

மண்ட3லத்தை(*வட்டத்தை*)ச் சொல்லி, ஆழியன் என்று மண்ட3லாகாரமாக (*வட்டவடிவமாக*) இருக்கும் ஸூர்யனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். ‘ஆழி என்று தேர்ச் சக்கரத்தைக் குறித்து, ஆழியன் என்று “தனியாழித்தேர்” [சிறியதிருமடல்] எனப்பட்ட ஒற்றைச் சக்கரத் தேரையுடைய ஸூர்யனைக் குறிப்பதாகக் கொள்ளலாம். (*செல்வன்*) “*த்4யேயஸ் ஸதா3 ஸவித்ரு மண்ட3ல மத்4யவர்த்தீ நாராயண:*” என்று புராணங்களிலும், அதற்கு மூலமாகச் சா2ந்தோ3க்ய உபநிஷத்திலும் சொல்லியபடி புண்ட3ரீகாக்ஷனை ஸ்ரீமந்நாராயணன் பிராட்டியோடு கூடத் தன்னிடம் எழுந்தருளியிருக்கும்படியான செல்வத்தை உடையவன். இதைக்கேட்ட கண்ணன் “ஸூர்யன் உதி3த்தது எனக்கு நல்லதுதானே. உங்களுடைய கண், கை முதலான அங்க3ங்களையும், விரல்கள் முதலான ப்ரத்யங்க3ங்களையும் நான் அழகாகக் கண்டு அநுப4விக்கைக்கு ஸௌகர்யமாயிருக்கும். நீங்களும் நீராடுவதற்குப் பொய்கைக்கு வரத் தொடங்கும்போது, நீராடி முடிப்பதற்குள் ஸூர்யன் உதி3த்து விடுவான் என்று அறிந்துதானே புறப்பட்டிருப்பீர்கள். இல்லையாகில், நள்ளிரவிலேயே புறப்பட்டுக் கோழி அழைப்பதற்கு முன் திரும்பியிருக்கவேண்டாமோ? ஸூர்யன் உதி3த்த பின்பு உங்கள் அழகை யார் பார்ப்பதற்காகத் தாமதமாகப்

---

g (அது பின்னே ஆர்க்கழகு) என்றது - ஆர்க்கு நல்லது என்றபடி. h (ஒரு கார்யததிலே உபக்ரமிக்கும் போது) என்று-நம்மையறியாமல் நீராடவென்று உபக்ரமிக்கும்போது என்றபடி. i (போதறிந்தன்றோ புறப்படுவது) என்றது — ஏற்கவே புறப்படவேண்டாவோ? என்றபடி.



நினைத்துப் போந்திகோள்?’ என்ன; (அரவணைமேல் பள்ளி கொண்டாய்) உன் உறக்கத்தை மெய்யென்று போந்தோம். “வினதை சிறுவன் சிறகென்னும் மேலாப்பின்கீழ் வருவானை” என்கிறபடியே k இவ்வவதாரந்தான் $k_2$ இருபுரியூட்டியிருக்கை யாலே, திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினபடியும் தங்களுக்கு விஶத3மாகச் சொல்லிற்றாகவுமாம். அங்ஙனன்றிக்கே, திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளினபடியை நினைத்துச் சொல்லிற்றாகவுமாம். அங்குக் கண்வளர்ந்தருளினபடியாகில் l உன்னுடைய ரக்ஷணத்தை விஶ்வஸித்துப்போந்தோம் என்கி

---

புறப்பட்டீர்கள்?” என்று கூற, பதில் சொல்லுகிறார்கள்— (*அரவணைமேல் பள்ளிகொண்டாய்*) ஆதி3ஶேஷன்மேல் பள்ளி கொண்டிருக்கும் உன் உறக்கத்தை மெய் என்று நம்பி நாங்கள் இங்கு வந்தோமேயொழிய. நீ வருவாய் என்று நினைத்து வரவில்லை. இவன் அரவணைமேல் பள்ளிகொண்டவன் என்பதை இவர்கள் எப்படி அறிந்தார்கள்? எனில், “வினதை சிறுவன் சிறகென்னும் மேலாப்பின்கீழ் வருவானை” [நாச்-திரு 14-3]என்கிறபடியே இவ்வவதார்மானது மனுஷ்யத்வத்தோடு பரத்வமும் கலந்து இருபுரியூட்டியிருக்கையாலே, க3ருட3னுக்கு ஸ்வாமி என்று அறிந்ததுபோலே, ஆதி3ஶேஷன்மேல் பள்ளி கொண்டவன் என்பதையும் தெளிவாக அறியத்தட்டில்லை. அல்லது “பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்” [திருப்பாவை2] என்கிறபடியே க்ஷீராப்3தி4நாத2னே கண்ணனாக அவதரித்தவன் என்பதையிட்டும் சொல்லலாம். இப்படிக் கொள்ளும்போது திருப்பாற்கடலில் பள்ளிகொண்டு ஸர்வரக்ஷகனாயிருக்கும் நீ எங்களையும் ரக்ஷிப்பாய் என்று நம்பி வந்தோம். இப்படிப் படுக்கையடிப்பாய் என்று நினைக்கவில்லை என்று கருத்து.

---

அதாவது — கோழி கூவுவதறகு முன்னே புறப்படுகிறோமென்னாதே, அதுக்கு முன்னே புறப்பட வேண்டாவோ? என்றபடி. j ஆரைநினைத்து-எத்தைநினைத்து? k க்ருஷ்ணனுக்குத் திருவனந்தாழ்வானுண்டோ? என்ன அருளிச் செய்கிறார் (இவ்வவதாரமித்யாதி3) $k_2$ இருபுரி-மநுஷ்யத்வே பரத்வம். l (உன்னுடைய ரக்ஷணத்தை விஶ்வஸித்துப்

ரூர்களாகிறது; இங்கே பள்ளிகொண்டருளினபடியாகில், 'படுக்கை வாய்ப்பாலே நீ உணராதே உறங்குவுதி' என்னுமத்தைப் பற்றப் போந்தோம் என்கிறது. m அவன் உறங்கினானாகில் அவ்வுறக்கத்தை அநுஸந்தி4ப்பார்கள் ; உணர்ந்தானாகில் அத்தை அனுஸந்தி4ப்பார்கள்; வேறொன்றறியார்களே. 'நம் உறக்கத்தை விஶ்வஸித்துப்போந்த உங்களுக்கு இப்போது வந்ததென்?' என்ன ; (ஏழைமையாற்றவும் பட்டோம்) அழகிதாக இளிம்பு பட்டோம். ஆகில் இனி இதுக்குமேல் வருவதென்? (p ஆற்றவும்) o மிகவும். நீ நெடுநாள் எங்கள் கையில் பட்டதெல்லாம் ஒரு க்ஷணத்திலே நாங்கள் உன் கையிலே பட்டோம் என்கிறார்கள்.

---

இங்கே ஆதி3ஶேஷன்மேல் பள்ளிகொண்டதாகச் சொல்லும் முதல் அர்த்த2த்தில், படுக்கையின் மென்மை முதலான சிறப்பாலே நீ உணராமல் உறங்கிக்கொண்டிருப்பாய் என்று நினைத்து ஏமாந்துவிட்டோம் என்று கருத்து. *(பள்ளிகொண்டாய்)* அவன் உறங்கினானாகில், அந்த உறக்கத்தை நினைத்து வாய் வெருவுவார்கள். உணர்ந்தானாகில் அதையே வாய்புலர்த்துவார்கள். எந்த நிலையிலும் அவனையன்றி வேறொன்றை அறியார்கள் இவர்கள். "நாம் உறங்குகிறோம் என்று நம்பி இங்கு வந்த உங்களுக்கு இப்போது என்ன குறை ஏற்பட்டுவிட்டது?" என்று கண்ணன் கேட்கச் சொல்லுகிறார்கள்— *(ஏழைமை ஆற்றவும் பட்டோம்)* நாங்கள் மிகவும் கஷ்டப்பட்டோம். இதற்குமேல் ஒரு கஷ்டம் பெண்களுக்கு வரமுடியுமோ? *(ஆற்றவும்)* மிகவும்; உன்னை நாங்கள் ப்ரணய ரோஷத்தாலே நெடுநாள் படுத்தின பாட்டையெல்லாம் ஒரு கணத்திலே நாங்கள் உன்னிடம் படும்படி செய்துவிட்டாய் என்கிறார்கள்.

---

போந்தோம்) என்றது—ஆஶ்ரிதரக்ஷணத்திலே தீ3க்ஷித்திருக்கிறவனன்றோ, நம்மை நலியப்போகிறானே என்று விஶ்வஸித்துப் போந்தோம் என்றபடி. m இத்தால்—அவனுறக்கததோடு உணர்த்தியோடு வாசியறத் தங்களுக்கு ரக்ஷகமென்றிருப்பார்கள் என்னுமத்தை ஸ்வாபதே3ஶமாக அருளிச்செயகிறார் (அவனுறங்கினானாகில் இத்யாதி3) p,o ஆற்றவும்-மிகவும்.



"ஆகில் இனி இதுக்குப் பரிஹாரமுண்டோ? 43. "अवश्यमनु-भोक्तव्य" (அவஶ்யமநுபே4াக்தவ்யம்) அன்றோ? அத்தைத் தப்பப் போமோ இனி? நீங்கள்தான் இதுக்குப் போக்கடியாக நினைத்திருந்ததென்?" என்றான்; இதுக்குப் போக்கடியற்றுப் போகவேணுமோ? (பொய்கைக்கு வாரோம்) ஊரில்தானே "பெண்கள் கிடாய், க்ருஷ்ணன் கிடாய்" என்று நியமிக்கையாலே, உனக்குத் தோற்றிற்றுச் செய்யவொண்ணாது; பொய்கையில்தானே வாரோம்; இத்தனையன்றோ—என்கிறார்கள். "வாரோம் என்று சொல்லியன்றோ நீங்கள் வருவது" என்றான்;

---

"அப்படியானால் இதற்குப் பரிஹார முண்டோ?

43. அவஶ்யமநுபே4াக்தவ்யம் க்ருதம் கர்ம ஶுபா4ஶுப4ம்।
நாபு4க்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி ॥
[ப்3ரஹ்மவைவர்த்தம்-ப்ரக்ருதிக2ண்ட3ம் 26-90]

[மனிதனால் செய்யப்பட்ட புண்யபாபரூபமான கர்மங்களின் ப2லன் கட்டாயம் அனுப4விக்கப்படவேண்டும். நூறுகோடி கல்பங்களானாலும் கர்மம் அனுப4வியாமல் கழியாது.] என்று சொல்லப்படுகிறதன்றோ. பாபப2லாநுப4வத்தை எப்படித் தவிர்க்கமுடியும்? இனிமேலாவது இப்படி அவமானப்படாமல் இருப்பதற்கு நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்?" என்று கண்ணன் கேட்கக் கூறுகிறார்கள்— *(பொய்கைக்கு வாரோம்)* "இனிமேல் அவமானப்படாமலிருப்பதற்கு எளிய பரிஹாரம் இருக்கிறது. ஆய்ப்பாடியில் பெரியவர்கள் பெண்களையும், கண்ணனையும் ஒருவரோடொருவர் சேரமுடியாதபடி தனித்தனியாக அடைத்திருக்கையாலே நீ நாங்கள் இருக்கும் இடம்வந்து உன் இஷ்டப்படி எங்களை நலியமுடியாது. இனிமேல் பொய்கைக்குக் குளிக்க வரமாட்டோம். இதுவே இனி அவமானப்படாமலிருப்பதற்கு வழி" என்கிறார்கள். இதைக்கேட்ட கண்ணன் "வரமாட்டோம் என்று சொல்லிக்கொண்டே வருவதுதானே உங்கள் வழக்கம்" என்றான். அதைக்கேட்டு (என்றும்

(pஎன்றும் வாரோம்) என்கிருர்கள். "என்றும் வாரோம் என்று சொல்லியன்ரே என்றும் வருவது" என்ருன்; (இனி யென்றும் பொய்கைக்கு வாரோம்) இவர்கள் "வாரோம். இனி" என்றவாறே, 'தப்பவிழுந்ததாகாதே!' என்று அஞ்சி 'நம்மையும் இவர்களையும் சேரவிடுவாராரோ' என்று பார்த்தான்;'இரண்டு தலையையும் சேரவிடுகைக்குப் பரிகரம் கைகண்டு வைத்தோம்; இனி நம்மையும் இவர்களையும் சேரவிடுகைக்கு அஞ்ஜலியல்லதில்லை' என்றறியுமே; 'q அது பார்த்துக்கொள்ளுகிரேம்; நீங்கள் என்னையறியாமல் போந்ததுக்குப் பரிஹாரமாகக் கும்பிடுங்கோள்' என்ருன்; என்றவாறே, ஒரு கையாலே கும்பிட்டார்கள்; 'அது ஒண்ணுது; இரண்டு கையாலும் கும்பிடுங்கோள்' என்ருன்; ஆனல் (தோழியும் நானும் r தொழு

---

*வாரோம்*) என்கிருர்கள். அதற்குமேல் "என்றும் வரமாட்டோம் என்று எத்தனையோ தடவை சொல்லிவிட்டு வந்துகொண்டுதான் இருக்கிறீர்கள்" என்ருன். இதைக்கேட்டு (*இனி என்றும் பொய்கைக்கு வாரோம்*) என்கிருர்கள். 'இனி வாரோம்' என்று இவர்கள் சொன்னவுடன், 'ஐயோ இப்படிச் சொல்லிவிட்டார்களே' என்று கண்ணனும் அஞ்சினன். 'இவர்களையும் நம்மையும் சேரவிடுவார் ஆர்?' என்று ஆலோசித்தான். சிறிது ஆலோசித்தவுடன் "சேதநனையும், ஈச்வரனையும் சேரவிடுவதற்குக் கைகண்ட மருந்து உள்ளதே; அது அஞ்ஜலியேயன்ரே" என்று நிச்சயித்தான். "இனி என்றும் வரமாட்டோம் என்று நீங்கள் சொல்லுவது நடக்கிறதா என்று பிறகு பார்த்துக்கொள்வோம். இப்போது நீங்கள் எனக்குத் தெரியாமல் இங்கு வந்ததற்குப் பரிஹாரமாக என்னைக் கும்பிடுங்கள்" என்ருன். கும்பிட்டாலாவது துகிலைக் கொடுத்து விடுவான் என்னும் நம்பிக்கையிலே ஒரு கையாலே கு$_3$ஹ்யமான அவயவத்தை மறைத்துக்கொண்டு ஒரு கையாலே கும்பிட்டார்கள். "ஒரு கையாலே கும்பிடுவது பெரிய பாபம். இரண்டு கையாலும் கும்பிடுங்கள்" என்ருன். அதைக்கேட்டு (*தோழியும்*

---

p "என்றும் வாரோம்" என்றது - ஒருநாளும் வாரோம் என்றபடி q அது-வாராதது. r தொழுதோம்-ஆளிலே ஒருகையாகத்



தோம்) அது போராது. நாலு கையாலும் தொழவேணும் என்ருன்; (தோழியும் நானும் தொழுதோம்) இவர்கள் தொழச்செய்தேயும் கொடாதே "ஆந்ருசம்ஸ்யம் கொண்டாடியிருப்பார் பக்கலன்ரே இது ப$_2$லிப்பது, ப்ரணயிநீவிஷயத்தில் வந்தால் நம் அபி$_4$மதம் பெற்றன்ரே கொடுப்பது" என்று பின்னையும் ஒரு நிலை நிற்கிருன்; அந்த ப்ரணயித்வத்தை விடாய்; அஞ்ஜலிக்குப் ப$_2$லஸித்$_3$தி$_4$யுண்டுகாண்; எங்கள் துகிலைத் தந்தருள், s உன் நினைவொழியவும் ப$_2$லிப்பதொன்றன்ரே அது. 44. "अञ्जलिः परमा मुद्रा" (அஞ்ஜலி: பரமா முத்$_3$ரா) என்னக்கடவதிறே. 1.

---

*நானும் தொழுதோம்*) என்று இரண்டு தோழிகள் தங்களது ஒவ்வொரு கைகளைச் சேர்த்து அஞ்ஜலி செய்தார்கள். 'அது போதாது. நீங்கள் இருவரும் நாலு கைகளாலும் தொழவேணும்' என்ருன். (*தோழியும் நானும் தொழுதோம்*) என்று அதையும் செய்தார்கள். இப்படி ஸ்த்ரீத்வாபி$_4$மானத்தை விட்டுத் தொழுத பின்பும் இரக்கமற்றவனுய் "இரக்கமுள்ளவர்கள் விஷயத்திலன்ரே அஞ்ஜலி ப$_2$லிப்பது. நம்முடைய ப்ரணயிநிகள் (அன்புக்கு விஷயமாயிருப்பவர்கள்) விஷயத்தில் நாம் ஸம்ச்லேஷமாகிற இஷ்டம் நிறைவேறினுலொழிய இரக்கம் காட்டித் துகிலைக் கொடுக்கமாட்டோம் என்று பிடிவாதமாய் நின்ருன். (*தொழுதோம் துகிலைப் பணித்தருளாயே*) என்கிருர்கள். அந்த ப்ரணயித்வத்தை இப்போது காட்டாதே கிடாய். அஞ்ஜலி தன் ப$_2$லத்தைக் கொடுத்துத்தானே தீரும். உன் நினைவு இல்லாவிடிலும் ப$_2$லிக்கக்கூடிய தப்பாத ஸாத$_4$நமன்ரே அஞ்ஜலி. இந்த அஞ்ஜலிக்குப்ப$_2$லமாக நினைத்தாவது (திருநாமத்துக்குப் ப$_2$லமாக த்$_3$ரெளபதி$_3$க்குப் புடவை சுரந்ததுபோலே) எங்கள் வஸ்த்ரங்களைக் கொடுத்தருள்வாய் என்கிருர்கள்.

44. "அஞ்ஜலி: பரமா முத்$_3$ரா க்ஷிப்ரம் தே$_3$வப்ரஸாதி$_3$நீ"

*[ப$_4$ரத்$_3$வாஜஸம்ஹிதை]*

[வெகுசீக்கிரமாக ப$_4$க$_3$வானை உகப்பிக்கும் அஞ்ஜலி மேலான அடையாளமாயிருக்கிறது.] என்று சொல்லப்படுகிறதன்ரே. 1.

---

தொழுகை. s அவன் நினைவொழியத் திருநாமத்துக்குப்புடவை சுரந்தாற்போலே அஞ்ஜலிக்கும் ப$_2$லிக்கும் என்றபடி. 1.

## மூன்றாந்திருமொழி—இரண்டாம் பாட்டு

**இதுவென் புகுந்ததிங் கந்தோ! இப்பொய்கைக் கெவ்வாறு வந்தாய்?**
**மதுவின் றுழாய்முடி மாலே! மாயனே! எங்க ளமுதே!**
**விதியின்மை யாலது மாட்டோம் வித்தகப் பிள்ளாய்! விரையேல்**
**குதிகொண் டரவில் நடித்தாய்! குருந்திடைக் கூறை பணியாய்.**

பதவுரை:—**இங்கு**—இங்கே, **புகுந்தது இது என்**—என்ன காரியம் நடந்து விட்டது! **அந்தோ**—ஐயோ! **இபொய்கைக்கு**—இக்குளத்திற்கு, **எவ்வாறு வந்தாய்**—எவ்வழியாலே வந்தாய்? **மது இன் துழாய் முடி மாலே**—தேன்மாறாத இனிய திருத்துழாய் மாலை சூடிய திருவபி$_4$ஷேகத்தையுடைய பெரியோனே! **மாயனே**—ஆச்சரிய சக்தியுடையவனே! **எங்கள் அமுதே**—எங்களுக்கு அம்ருதம்போல் இனியனானவனே! **விதி இன்மையால்**—விதி$_4$யில்லாமையாலே, **அது மாட்டோம்**—ஸம்ஶ்லேஷத்திற்கு இசையமாட்டோம்; **வித்தகப் பிள்ளாய்**—ஆச்சரிய சேஷ்டைகளையுடைய பிள்ளாய்! **விரையேல்**—அவஸரப்படவேண்டா; **அரவில்**—காளிய நாக$_3$த்தின்மேல், **குதிகொண்டு**—குதித்துக்கொண்டு, **நடித்தாய்**—நர்த்தனம் செய்தவனே! **குருந்திடைக் கூறை**—(அக்) குருந்த மரத்தின்மேல் வைத்திருக்கிற சேலைகளை, **பணியாய்**—கொடுத்தருள்.

வ்யா:— இரண்டாம் பாட்டு. (இது இத்யாதி$_3$) **'தங்கள் அபி$_4$மதம் பெற்றுப்போகப் பாராநின்றார்கள்; நம் அபி$_4$மதந்தான் நினைக்கிறிலர்கள்; இவர்கள் போக்கிருந்தபடியென்? இங்ஙனல்லசெய்வது' என்று பார்த்து, குருந்தினின்றுமிழிந்து,**

2. *அவ:*— "இவர்கள் தங்கள் விருப்பப்படி தமது வஸ்த்ரங்களைப் பெற்றுப்போக நினைக்கிறார்களேயொழிய, நம் விருப்பப்படி ஸம்ஶ்லேஷத்துக்கு இசைய மறுக்கிறார்கள். இவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்கவேண்டும்" என்று நினைத்து, கண்ணன் குருந்த மரத்திலிருந்து இறங்கி, தான் ஏற்கனவே இருளில் வாரியெடுத்ததுபோக எஞ்சியிருந்த ஆடைகளையும்



**ஶேஷித்த பரியட்டங்களை வாரிக்கொண்டு, சுழற்காற்றுப்போலே எங்குமொக்க வ்யாபரித்து, இன்னது செய்தான் என்று இவர்களுக்கு ப்ரதிபத்தி பண்ணவொண்ணாதபடி பரியட்டத்தில் a போலிருக்க நெஞ்சிலும் வ்யாபரித்துக் கடுகப்போய், குருந்தின்மேலே ஏறி மறைய இருந்தான்; இவர்களும் கரையிலே போந்தேறி, ஒன்றும் காணாமையாலே ஸ்தப்$_3$தை$_4$களாய் (இதுவென் புகுந்ததிங்கு) மின்னாதே இடிவிழுந்து நிற்கக்கண்டோம்; இனி இங்குப் புகுந்ததுதானென்? b 'நீ ஸ்தப்$_3$த$_4$னா**

ஒன்றுவிடாமல் வாரிக்கொண்டு. சுழற்காற்றுப்போலே கரையெங்கும் ஸஞ்சரித்து. 'இன்னது செய்தான்' என்று இவர்களால் அறியவொண்ணாதபடி ஆடைகளைப்போலே இவர்களது நெஞ்சையும் அபஹரித்துக்கொண்டு. மிக விரைவில் குருந்தின் மேலே மறுபடியும் ஏறி மறைந்து நின்றான். இருக்கிற வஸ்த்ரங்களை எல்லாருமாக உடுப்போம் என்று எண்ணி இவர்களும் கரையிலேறிப் பார்க்கும்போது ஒரு வஸ்த்ரமும் இல்லாமையாலே செய்வதறியாமல் அவனைத் துதித்து ஆடையைத் தர வேண்டுகிறார்கள்.

*வ்யா:*— *(இதுவென் புகுந்ததிங்கு)* எங்களைச் செய்வதறியாதவர்களாகும்படி ஒரு கணத்திலே இங்கு என்ன காரியம் நிகழ்ந்து விட்டது. மின்னாமல் இடிவிழுதல்போன்ற காரியமன்றோ நடந்துவிட்டது என்கிறார்கள். செய்வதறியாமல் தி$_3$க்$_3$ப்$_4$ரமத்தை அடைந்தவர்கள் 'இதுவென் புகுந்தது இங்கு' என்று வார்த்தை சொல்ல வல்லவரானது எப்படி? எனில்,

44.a "ஸ்தப்$_3$தே$_4$ாஸி உத தம் ஆதே$_3$ஶம் அப்ராக்ஷ்ய:"
[சா$_2$ந்16-1-3]

அரு:— இரண்டாம் பாட்டு. (இது இத்யாதி$_3$) a (போலிருக்க நெஞ்சிலும்) என்றது — பரியட்டத்தைக் கொண்டு போனாற்போலே நெஞ்சையும் அபஹரித்தான் என்றபடி. b அவன் கொண்டுபோனது அறிந்திருக்கக் கேட்பானென்? என்ன; கலக்கத்தின் கார்யம் என்னுமத்தை ஶ்ருத்யர்த்த$_2$த்தை உட்கொண்டு அருளிச்செய்கிறார் (நீ ஸ்தப்$_3$

யிராநின்ருய், அவ்விஷய ஶ்ரவணம் உனக்கு உண்டாய்த்தோ என்று கேட்கப்பண்ணும் விஷயம் கண்ணுல் கண்டால் பேசாதிருக்குமோ. c ஶ்ரவண மாத்ரத்திலே அழிக்கும் விஷயம் ஸாக்ஷாத்கரித்தால் கலங்காதிருக்கவொட்டாதிறே. d கு3ண ஶ்ரவணத்தாலே அழிக்கும் விஷயம் தீம்புக்கு இலக்காளுல் d2 பேசாதிருக்கப்போகாதிறே. (அந்தோ) நம் நினைவு அவனுக்குடலாவதே! நாம் இவனுக்கு முன்னே வரவேணும் என்று போந்தோமாளுெம்; இவன் நமக்கு முன்னே கோலி

---

[உணர்ச்சியற்றவன்போல் (ஸ்தம்பி4த்து) இராநின்ருய். பரம்பொருளை உபதே3ஶம் பெற்ருகிவிட்டதோ] என்று உபநிஷத்திலே பரமாத்மோபதே3ஶம் பெறப்போய்த்திரும்பிவந்தவனைக் கண்ட பிதா 'நீ உபதே3ஶம் பெற்ருயோ என்று கேட்கப் பண்ணும் இந்த ப4க3வத்3விஷயத்தை நேரில் கண்ணுல் கண்டுவிட்டால் பேசாமல் இருக்கமுடியுமோ? "பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும். காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்" [பெரியதிருவ 34] என்கிறபடியே காதால் கேட்டவுடன் மற்ற புலன்களை அழிக்கும் அந்த ப4க3வத்3விஷயத்தைக் கண்ணுல் கண்டபின்பு கலங்கிப் பேசாமலிருக்க முடியாதன்றே. "காமனுடல்கொண்ட தவத்தாற்கு உமையுணர்த்த வண்டலம்பும் தாரலங்கல் நீண்முடியான் தன்பெயரே கேட்டிருந்து, அங்காரலங்கல் ஆனமையால் ஆய்ந்து" [நான்-திருவ78] என்கிறபடியே,பார்வதி சொல்ல எம்பெருமான் கு3ணங்களைக்கேட்டவுடன் சிவனை ஈடுபடுத்திய இந்த ப4க3வத்3 விஷயம் கண்ணனுய்ப்பிறந்தபோது அவனது தீம்புக்கு இலக்கானவர்கள் பேசாதிருக்க முடியாதன்றே. (*அந்தோ!*) நம் நினைவு அவன்பின்தொடர்வதற்கு உறுப்பாவதே !'நாம் கண்ணன் எழுந்திருப்பதற்கு முன்னம். வரவேணும்'என்று கோழியழைப்பதன்

---

த4ளுய் இத்யாதி3) c விவரணம் (ஶ்ரவணமாத்ரத்திலே) என்று. d தாத்பர்யம் (கு3ணஶ்ரவணத்தாலே) என்ற வாக்யம்; தாத்பர்யாந்தரம்(கு3ண ஶ்ரவணத்தாலே) என்றது; நியந்த்ருத்வரூபகு3ண ஶ்ரவணத்தாலே என்றபடி. d2 வெறுமனிருக்கப்போமோ? என்றபடி.



வந்து நிற்பதே! 'நீங்கள் இழவாளராய் நோவுபடுகைக்கு இப்போது விஶேஷித்து வந்ததென்? பண்டுதான் நான் உங்களோடு வாரேனே?' என்ன (இப்பொய்கைக்கு e எவ்வாறு வந்தாய்) நீயும் நாங்களுமாய் ஜலக்ரீடை3பண்ணிப் போரும் பொய்கையோ இது? இது அறிந்து நீ வந்தபடி எங்ஙனே? நாங்கள் உன்னைக்கூடக்கொண்டு போந்திலோம்; f இட்ட அடியையும் அழித்தன்றே நாங்கள் போந்தது; நீ இங்கு வந்த வழியென்? (இப்பொய்கைக்கெவ்வாறு வந்தாய்) g ஆனை நின்ற பொய்கையாய் வந்தாயல்லை; ஆர்த்தநாத3ம் வழிகாட்ட வந்தாயல்லை; எவ்வாறு வந்தாய்? (இப்பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்) காளியன் கிடந்த பொய்கையாய்

---

முன்னம் புறப்பட்டு வந்தோம். இவன் நமக்கு முன்னே நம் ஆடைகளை அபஹரிப்பதற்குத் திட்டமிட்டு வந்துநிற்பதே! என்று வியப்புறுகிருர்கள். "நீங்கள் நான் வந்தது குறித்து இப்படி வருந்தவேண்டும்படி இப்போது அப்படியென்ன நடந்துவிட்டது? முன்பும் நான் உங்களைப் பின்தொடர்ந்து பலமுறை வந்திருக்கிறேனே" என்று கண்ணன் கேட்கச் சொல்லுகிருர்கள்—(*இப்பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்?*) நீயும் நாங்களும் வழக்கமாக நீர் விளையாட்டு விளையாடும் பொய்கையல்லவே இது. நீ வரக்கூடாது என்பதற்காகவே உனக்குப் பரிசயமில்லாத இப்பொய்கைக்கு நாங்கள் வந்திருக்க, இதையும் அறிந்து நீ எப்படி வந்தாய்? நாங்கள் உன்னைக் கூட அழைத்து வரவில்லை. நீ அறிந்துவிடக் கூடாது என்றே எங்களது அடிச்சுவடுகளையும் அழித்துகொண்டே வந்தோம். அப்படியிருக்க நீ இங்கு எப்படி வந்தாய்? (*இப்பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்*) ஆனை முதலையாலே நலிவுற்று 'ஆதி3மூலமே' என்று கூப்பிட அந்த ஒலிகேட்டுவந்த பொய்கையல்லவே இது. இதற்கு எப்படி வந்தாய்? (*இப்பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்?*) ப்ரதிகூலனை காளியன் கிடந்த பொய்கைக்கு

---

e ஆறு-வழி; எவ்வாறு-எந்த ப்ரகாரத்தாலே என்னுதல்; எவ்வழியாலேயென்னுதல். f "எவ்வாறு" என்றதுக்குத் தாத்பர்யம் (இட்ட அடியையும்) என்று. g ஸ்வாபதே3ஶம் (ஆனை) என்று.

வந்தாயல்லே; முதலேகிடந்த பொய்கையாய் வந்தாயல்லேயே. அநுகூலன் கிடந்த பொய்கையாய் வந்தாயல்லே; ப்ரதிகூலன் கிடந்த பொய்கையாய் வந்தாயல்லே ; நீ வந்த வழியென் ? "அதுகொடு கார்யமென் ? வந்துகொடு நின்றேமே ; ப$_2$லம் கைப்பட்டால் ஸாத$_4$நம் நிரூபிக்கக்கடவதோ ?" என்றான் ; இவர்கள் தோல்வியையும் தன் ஜயத்தையும் அநுஸந்தி$_4$த்து மேனாணித்தமை தோற்ற மிகைத்து வார்த்தை சொல்லத் தொடங்கினான்; "பொகடு: இவன் கையிலே அகப்பட்டோம், இங்ஙனன்று இது வாங்குவது; ஸ்தவப்ரியன்; இவனையேத்திக் கொள்வோம்" என்று பார்த்து ஏத்தத் தொடங்கினார்கள். (மதுஇதயாதி$_3$) ஆதி$_4$ராஜ்யஸூசகமாக வைத்த வளையத்தோடே கூட நித்யஸூரிகளுக்கு ஓலக்கம்கொடுத்து, தன் மேன்மை தோற்றப் பரமபத$_3$த்திலே ஸர்வேச்வரனாயிருக்குமிருப்பைச்சொல்லுகிறது;

அவனை அடக்க வந்ததுபோலே ப்ரதிகூலர் எவரும் இங்கு இல்லாமையாலே இப்பொய்கைக்கு நீ வரவழியில்லையே. முதலையால் உனது அன்பனான க$_3$ஜேந்த்$_3$ரன் துன்புற்றதுபோலே இங்கு எவரும் துன்புறாமையாலே இப்பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்? "இந்த ஆராய்ச்சி எதற்காக? நான் வந்திருப்பதை நீங்கள் நேரே காண்கிறீர்கள். ப$_2$லமான நானே கிடைத்த பிறகு நான் வந்தவழியை எதற்காக ஆராயவேண்டும் ?" என்று கண்ணன் இவர்களுடைய தோல்வியையும், தன் வெற்றியையும் நினைத்து, தன் க$_3$ர்வம் வெளிப்படும்படி அதி$_4$கமாக வார்த்தை சொல்லத் தொடங்கினான். அதைக்கேட்ட ஆய்ச்சியர் 'இவ்வழியால் இவனிடம் காரியம் ஆகாதாகையாலே இதை விட்டுவிடுவோம். நாமோ இவன் கையில் அகப்பட்டு விட்டோம். நியாயத்தைச் சொல்லி இவனிடம் ஆடைகளைப் பெறமுடியாது. ஆகையால் துதிக்கு வசப்படுபவனாகையாலே இவனைத் துதித்து நம் ஆடைகளைப் பெறப்பார்ப்போம் என்று நினைத்து இவனைத் துதிக்கத் தொடங்கினார்கள். *(மதுவின் துழாய்முடி மாலே!)* *"ஆதி$_4$ராஜ்யம் அதி$_4$கம் பு$_4$வநாநாம் ஈச! தே பிசுநயந் கில மௌளி:"* [வரத$_3$-ஸ்த-25] [உலகங்கட்கெல்லாம் ஈசனான வரத$_3$னே! நீ உலகங்கட்கெல்லாம் சக்ரவர்த்தியாயிருப்பதை உனது கிரீடமே காட்டித்தருகின்றது.] என்கிறபடியே, தானே ஸர்வலோகசக்ரவர்த்தி என்பது விளங்கும்படியாக, தேன்மாறாத இனிய திருத்துழாய்மாலைசூடிய கிரீடத்தை உடையவனாய், நித்யஸூரிகளுக்குக் காட்சியளித்துக் கொண்டு,தன் மேன்மைதோற்றப் பரமபத$_3$த்தில் இருப்பவனே!



அவ்விருப்பை இவ்வருகுள்ளாரும் பெறவேணுமென்னும் வாத்ஸல்யத்தாலே அகர்மவச்யனான தான் கர்மவச்யரோடு ஸஜாதீயனாய் வந்தவதரித்து, இடையருக்கு ஏவிக்கொள்ளலாம்படி ப$_4$வ்யனாய் நின்ற ஆச்சர்யத்தைச் சொல்லுகிறது. (எங்களமுதே) அத்தனை h பொதுவான நிலையன்றிக்கே, எங்களுக்கே ஸ்வம்மாய், நிரவதி$_4$க போ$_4$க்$_3$யதையையுடையனாய் நிற்கிற நிலை. i தே$_3$வர்களுக்கு உப்புச்சாறுபோலன்றிக்கே, எங்களுக்குக் கூறான அம்ருதமாய்த்து. 'நீங்கள்தான் நம் மேன்மையறிந்திகோளே ; உங்களுக்கே ஸ்வம்மானமை தோற்றச்சொன்னிகோளே ; தந்தாமது என்றறிந்தால் தந்தாமுடைமை மங்காமல் நோக்கி விநியோக$_3$ங்கொள்ள வேண்

*(மாயனே)* அக்காட்சியை இங்குள்ளவர்களும் பெறவேணும் என்னும் வாத்ஸல்யத்தாலே கர்ம வசப்படாத தான் கர்ம வசப்பட்டவர்களோடு ஒரு குலத்தவனாய் வந்து அவதரித்து, இடையர்களுக்கும் ஏவிக் காரியம் கொள்ளலாம்படி வசப்பட்டு நிற்கும் ஆச்சர்யத்தை உடையவனே! *(எங்கள் அமுதே!)* பரமபத$_3$த்தில் ஞானச்சுருக்கமில்லாத நித்யமுக்தர்களுக்குப் பொதுவாயிருக்கும் அந்நிலைபோலல்லாமல், இடக்கையும் வலக்கையும் அறியாத ஆய்ச்சிகளாகிய எங்களுக்கு உடைமைபோலே வசப்பட்டிருப்பவனாய், எல்லையற்ற இனிமையையுடையவனான கண்ணனாய் நிற்கும் நிலை. அன்றிக்கே, தே$_3$வர்களுடைய திருப்பாற்கடலில் தோன்றிய உப்புச்சாறு போலல்லாமல் எங்கள் பங்குக்குக் கிடைத்த மிக இனிய அமுதமாயிருப்பவனே! என்றும் பொருள் கொள்ளலாம். இவர்கள் இப்படி அன்பு தோற்ற வார்த்தை சொன்னவுடன் "நீங்கள் நம் சிறப்பை அறிந்து விட்டீர்களே. உங்களுக்கு உடைமை போலேயிருப்பவன் நான் என்று விளங்கச்சொன்னீர்களே. தமது உடைமை என்று அறிந்தால் அவ்வுடைமை அழியாமல்

h பொருள் (பொதுவான)—பரமபத$_3$த்திலுள்ளார்க்கும், அவதாரத்திலுள்ளார்க்கும் பொதுவான நிலையன்றிக்கே யென்றபடி. i (தே$_3$வர்களுக்கு) இத்யாதி$_3$ வாக்யம்—தாத்

டாவோ' என்றான்; 'அதென்னன்புது ?' என்ன; 'உங்கள் கண்களாலே என்னைக் கடாக்ஷித்து என் ஸத்தையை உண்டாக்கி, நீங்களும் நானுமாக அநுப4விக்கப் பார்க்கவாகாதோ?' என்றான் ; (விதியின்மையாலது மாட்டோம்) அது பொல்லாதோ, அழகியதொன்றன்றோ ; ஆகிலும் எங்கள் பா4க்3ய ஹாநியாலே அது மாட்டுகிறிலோம் என்றார்கள். "அது" என்றார்களிறே அவன் நினைவைத் தாங்களறிந்தமை தோற்ற. 'ஆகில் நானும் என்னுடைய பா4க்3யஹாநியாலே பரியட்டம் தரமாட்டுகிறிலேன்' என்று, இவற்றையுங்கொண்டு அருங் கொம்பிலே போய் ஏறினான்; இவனுக்கு பா4க்3யஹாநியாவது-அவர்களுடன் கூடாமையிறே. (j வித்தகப் பிள்ளாய் k விரையேல்) எங்கள் l ஸத்தையையும் அழிக்கப்பாராதேகிடாய்.

---

ரக்ஷித்து. அதைக்கொண்டு காரியம் கொள்ளவேண்டாமோ ?" என்றான் கண்ணன். அது என்ன காரியம் ? என்றார்கள் இவர்கள். "உங்கள் கண்களாலே என்னைக் குளிரப் பார்த்து, என்னை உயிர் த4ரிக்கப் பண்ணி, நீங்களும் நானுமாக ஸம்ஶ்லேஷிக்க இசையலாகாதோ" என்றான் கண்ணன். அதற்கு பதில் கூறுகிறார்கள்—(*விதியின்மையால் அது மாட்டோம்*) "உன் விருப்பம் எங்களுக்கு அநிஷ்டமல்லவே. நாங்களும் விரும்புவதாயிற்றே. ஆனாலும் எங்களுடைய பா4க்3யக்குறைவாலே அதற்கு இசைய வல்லோமல்லோம்" என்கிறார்கள். அவன் நினைவை அறிந்தமை தோற்றவும், பெண்மைக்குரிய நாணத்தாலே வெளிப்படையாகச் சொல்லக் கூசியும் 'அது' என்று ஸம்ஶ்லேஷத்தைக் குறிக்கிறார்கள். "அப்படியானால் நானும் என்னுடைய பா4க்3யக் குறைவாலே வஸ்த்ரங்களைத் தர வல்லேனல்லேன்" என்று சொல்லி வஸ்த்ரங்களையும் எடுத்துக்கொண்டு மேலும் உயரமான கிளையிலே ஏறி உட்கார்ந்தான். இவன் தன்னுடைய பா4க்3யக் குறைவு என்று சொன்னது அவர்களோடு கூடாமையேயாகும். அதற்கு மேல் சொல்லுகிறார்கள் — (*வித்தகப் பிள்ளாய் விரையேல்*) நீ மிகவும் ஸமர்த்த2னான இடைப் பிள்ளை என்பது தோற்ற

---

பர்யாந்தரம். j வித்தகன்—ஸமர்த்த2ன், k, l விரையேல்—



எங்கள் போ4க3த்துக்கு விச்சே2த3ம் பண்ணினாயாகிலும் எங்கள் ஸத்தையை அழிக்கப்பாராதேகொள். 'நான் விரைந்து எங்கே என்ன ஸாஹஸம் செய்யக்கண்டிகோள்' என்றான் ; (m குதிகொண்டரவில் n நடித்தாய்) 45. "**एकदा तु विना रामं**" (ஏகதா3 து விநா ராமம்) என்கிறபடியே-தமையனார் க்ஷணம் பேரநிற்கப் பாம்பின் வாயிலே விழக்கடவ உனக்கு இவை சால அபூர்வமோ ; o அது கிடக்கிடாய் என்கிறார்கள். 'நம்

---

உயர் கொம்பிலே ஏற விரையாதே. உன்னைக் கண்ணார அநுப4விக்கும் எங்கள் போ4க3த்திற்கு இதனால் இடையூறு நேரிட்டாலும் பொறுத்துக் கொள்வோம். ஆனால் நீ உயரே ஏறுவதால் உனக்கு ஏதேனும் ஆபத்து ஏற்பட்டால் நாங்கள் உயிர் த4ரிக்கமாட்டோம். உயர் கொம்புக்கு விரையும் ஸாஹஸத்தைப் புரிவதன் மூலம் எங்கள் ஸத்தையை அழித்துவிடாதே என்கிறார்கள். "நான் விரைந்து ஸாஹஸம் பண்ணியதை நீங்கள் எப்போதாவது கண்டதுண்டோ ?" என்றான் கண்ணன். அதற்கு பதில் கூறுகிறார்கள்—(*குதிகொண்டுஅரவில் நடித்தாய்*)

45. ஏகதா3 து விநா ராமம் க்ருஷ்ணோ ப்3ருந்தா3வநம் யயௌ ।
விசசார வ்ருதோ கோ3பைர் வந்யபுஷ்பஸ்ரகு3ஜ்ஜ்வல: ॥
[வி-பு 5·1-7]

[ஒருநாள் ப3லராமனைப் பிரிந்து க்ருஷ்ணன் ப்3ருந்த3ாவனத்துக்குச் சென்றான். காட்டுப்பூமாலை அணிந்து இடையர்களால் சூழப்பெற்றவனாய் ஸஞ்சரித்தான் அவன்.] என்கிறபடியே தமையனாரான ப3லராமன் சிறிதுநேரம் வேறு காரியமாகப் போயிருந்த சமயத்தில் காளியநாக3த்தின் வாயில் விழுகையாகிற ஸாஹஸத்தைச் செய்தவனன்றோ நீ. அத்தகைய நீ உயர்கொம்பில் ஏறும் ஸாஹஸத்தைச் செய்வது ஆச்சர்யமோ? அது கிடக்கட்டும். எங்கள் வஸ்த்ரங்களைத் தருவாயாக என்கிறார்கள். அதற்குமேல் கண்ணன், "நம் கையில் இந்த

---

அருங்கொம்பிலேறாதே; ஏறினால் ஸத்தையழியும் என்றபடி. m குதிகொண்டு—காளியன் தலையிலே குதித்துக்கொண்டு, n நடித்தாய்—ந்ருத்தம் பண்ணினாய். o (அது கிடக்கிடாய்) [எங்கள் பட்டைத்தாராய்] என்கிறார்களென்று பூரிப்பது 2.

கையிலே காணிலிறே இவர்கள் வேண்டுவது' என்று பார்த்துப் பரியட்டங்களைக் குருந்திலேயிட்டு வைத்துக் கையைத்தட்டி, 'என்கையிலுண்டோ நான் தர' என்றான் ; (குருந்திடைக் கூறை பணியாய்) உன் கையிலில்லை ; குருந்தின்மேலே கிடக்கிறவற்றைத் தா என்கிறார்கள். எங்கேனும் கிடக்கிலும் இவன் திருவுள்ளமுண்டாகிலல்லது ஸித்$_3$தி$_4$யாது என்றபடி. 2.

## மூன்றாந்திருமொழி—மூன்றாம் பாட்டு

எல்லே! ஈதென்ன இளமை? எம்மனை மார்காணி லொட்டார்
பொல்லாங் கீதென்று கருதாய் பூங்குருந் தேறி யிருத்தி
வில்லா லிலங்கை யழித்தாய்! நீவேண்டிய தெல்லாந் தருவோம்
பல்லாரும் காணாமே போவோம் பட்டைப் பணித்தரு ளாயே.

பதவுரை:— வில்லால் — வில்லாலே, இலங்கை— லங்கையை, அழித்தாய் — நாசஞ் செய்தருளினவனே! எல்லே — என்னே! ஈது என்ன இளமை — இது என்ன பிள்ளைத்தனம்! எம் அனைமார்—எங்களுடைய தாய்மார்கள், காணில்—கண்டால், ஒட்டார்—(மறுபடியும் எங்களை வீட்டின் வழி வர) ஒட்டார்கள்; (நீயோவென்றால்), ஈது—(எல்லாரும் ஏசும்படி எங்களை நிர்வாணமாக்கி நிறுத்தியிருக்கிற) இது, பொல்லாங்கு என்று—பொல்லாத காரியமென்று, கருதாய்—நினைக்கிறாயில்லை; பூ குருந்து—புஷ்பித்திராநின்ற குருந்த மரத்தின்மேல், ஏறி இருத்தி-ஏறியிராநின்றாய்; நீ வேண்டியது எல்லாம்—நீ அபேக்ஷிக்குமவற்றை யடங்கலும், தருவோம்—கொடுக்கிறோம்; பல்லாரும்—(ஊரிலுள்ள)பலரும்,காணாமே—

---

வஸ்த்ரங்களைக் காண்பதால் தானே 'கொடு கொடு' என்று வேண்டுகிறார்கள்'' என்று நினைத்து, வஸ்த்ரங்களைக் குருந்த மரத்தின்மேலே வைத்து, தன் கையைத் தட்டிக் காட்டி "என் கையில் இல்லையே நான் தருவதற்கு'' என்றான். அதற்கு மேல் கூறுகிறார்கள்—(*குருந்திடைக் கூறை பணியாய்*) உன் கையில் இல்லை என்பது மெய் தான். குருந்தின்மேலே கிடக்கிற வஸ்த்ரங்களை நீயே தரவேணும் என்கிறார்கள். ஸ்வாபதே$_3$ஶத்தில் எவ்விடத்திலுள்ள எந்தப் ப$_3$லனானாலும் இவன் திருவுள்ளம் உண்டானாலல்லது கிடைக்காது என்று கருத்து. 2.



காணாதபடி, போவோம்—போகிறோம்; பட்டை-(எங்களுடைய) பட்டுச்சேலைகளை, பணித்தருளாய்—தந்தருளவேணும்.

வ்யா:— மூன்றாம் பாட்டு. (எல்லேயித்யாதி$_3$) இவர்கள் நெடும்போது நீரிலேநின்று நோவுபடச்செய்தே இவர்கள் பரியட்டங்களையெல்லாம் வாரிக்கொண்டு குருந்தின்மேலே இட்டு வைத்திருந்தான் ; 'நாங்கள் நீரிலே நெடும்போது நின்று க்லேஶப்பட நீ பேசாதிருக்கிறதென்? பரியட்டங்களைத் தா' என்ன; பரியட்டங்களைத்தர நீரில் நின்றும் கரையிலேபோந்து ஏறுங்கோளென்றான் ; அத்தை மெய்யென்று சிலர் கரையிலேபோந்து ஏறினார்கள் ; ஏறின அவர்களுடைய அங்க$_3$ ப்ரத்யங்க$_3$ங்களை ஊன்றப்பார்த்து ஸ்மிதம் பண்ணி, சில விலாஸ சேஷ்டிதங்களைப் பண்ண ; (உ எல்லே ஈதென்ன இளமை) என்னே ! இதொரு பா$_3$லிஶப்ரவ்ருத்திகளிருக்கும்படியென்! என்கிறார்கள். 'நான் பா$_3$லனாக ; நீங்களோதான் பஞ்ச த$_3$ஶ வார்ஷிகவயஸ்கராய்ப் பரிமாறினிகோள் ; அதில் வந்தால்

---

*3. அவ:*— இவர்கள் நீண்டநேரம் நீரிலே நின்று குளிராலும், காலைக் கதுவும் மீன்களாலும் துன்புற்றுக்கொண்டிருக்கும் போது,இவர்களுடைய வஸ்த்ரங்கள் அனைத்தையும் வாரியெடுத்துக் குருந்தின்மேலே இட்டுவைத்திருந்தான் கண்ணன். நாங்கள் நீரிலே துன்புற்றுக்கொண்டிருக்கும்போது நீ பேசாமலிருக்கலாமோ. வஸ்த்ரங்களைக் கொடுத்துவிடு என்றார்கள்.நீங்கள் கரையில் ஏறுங்கள் கொடுக்கிறேன் என்றான். அதை உண்மை என்று நினைத்துச் சிலர் கரைமேல் ஏறினார்கள். ஏறினவர்களுடைய அவயவங்களை உற்றுப்பார்த்துப் புன்முறுவல்செய்து சில காமுக வியாபாரங்களைச் செய்தான். அதைக்கண்டு சொல்லுகிறார்கள்.

*வ்யா:—(எல்லே ஈதென்ன இளமை)* என்னே! இப்படியொரு சிறுபிள்ளைத்தனமான செயல் இருக்கும்படி ! என்கிறார்கள். "நான் சிறுவனாயிருந்துவிட்டுப் போகிறேன். நீங்கள்தான் பதினைந்து வயதாகிப் பருவம் நிரம்பினவர்கள்போலே நடக்கி

---

அரு:— மூன்றாம் பாட்டு. (எல்லேயித்யாதி$_3$) உ எல்லே—என்னே; எல்லே என்று—தோழியைப் பார்த்துச் சொல்

உங்களோடு என்னோடு வாசியுண்டோ. இரண்டு திறத்தாரும் ஒத்த பருவமானபின்பு பருவத்துக்கீடாகப் பரிமாற நீங்கள் உடன்பட்டிலிகோள்' என்றான் ; (b எம்மனமார் காணி லொட்டார்) நாங்கள் உடன்படாமையுண்டோ ? ‘ எங்கள் ப$_3$ந்து$_4$க்கள் காணில் ஒட்டார்கள்’ என்றத்தாலேகாண் நாங்கள் மாட்டாதொழிகிறது என்ன ; “எனக்கும் ஒருதாயும் தமப்ப னும் உறவுமுறையாருமில்லையோ ; நான் ஏதேனும் காம்பற்று வானத்தினின்றும் விழுந்தேனோ ? அவர்கள் உண்டாயிருக்க வன்றோ நானும் இங்ஙனேயிருக்கிறது ; உங்களுக்கு அதில்லை யாய்த்தே’’ என்றான் ; “எங்களைப்போலேயோ நீ?’’ என்றார்கள்; “ எனக்கு வாசியென்? ’’ என்ன ; உனக்கு வாசியுண்டு (பொல்லாங்கீதென்று c கருதாய்) நீ பழி என்னப் பணைப்

---

றீர்களோ. ஆடைகளைக் கரையிலே வைத்துவிட்டுக் குளிக்கும் சிறுமிகள் காரியத்தைத்தானே செய்கிறீர்கள். ஆகையால் இவ்விஷயத்தில் நமக்குள் வித்தியாசமில்லையே. இப்படி இருவ ரும் ஒத்தபருவமானபின்பு, நம் பருவத்துக்குப் பொருத்தமாக என்னோடு நீங்கள் அணைவதற்கு இசையவில்லையே’’ என்றான். அதற்குச் சொல்லுகிறார்கள்—*( எம்மனமார் காணில் ஒட்டார் )* “நாங்கள் இசையாமலில்லை; ‘எங்களுடைய தாய்மார் முதலான உறவினர்கள் கண்டால் பொறுக்கமாட்டார்கள்’ என்னும் காரணத்தால் நாங்கள் உடன்படவில்லை’’ என்கிறார்கள். அதற் குக் கண்ணன் “எனக்கு மட்டும் தாய், தகப்பன் முதலிய உறவினர்கள் இல்லையோ ? நான் காம்பிலிருந்து விழும் பழம் போலே ஆகாசத்திலிருந்து விழுந்தேனோ ? எனக்கும் எத்த னையோ உறவினர்கள் இருக்கும்போதுதானே நான் உங்களோடு அணைய ஆசைப்பட்டிருக்கிறேன். உங்களுக்கு அவ்வாசை இல்லையே’’ என்றான். அதுகேட்டு ‘எங்களைப்போலேயோ நீ?’ என்றார்கள். ‘உங்களைக் காட்டிலும் எனக்கு என்ன வித்தி யாசம்?’ என்றான் கண்ணன். உனக்கு இதுவே வித்தியாசம் என்கிறார்கள்—*( பொல்லாங்கு ஈதென்று கருதாய் )* லோகாப

---

லிற்ருகவுமாம், b எம்மனமார்-எங்கள் அன்னைமார்;-தாய்மார்.
c கருதாய்—நினையாய்; கருதாய்—கருதுகிறாயில்லை.



புதி; நாங்கள் பழிக்கு அஞ்சுவுதோம்; இதுகாண் உனக்கும் எங்களுக்கும் வாசி. (பூங்குருந்தேறியிருத்தி) ‘நான் பழிக்கு அஞ்சேனாகிலும் உங்களுக்கு இது தரவேண்டுவதில்லையிறே’ என்று குருந்தின்மேலே இவற்றையுங்கொண்டு அதில் பூப் பொருந்தினாற்போலே பொருந்தி, இழியக் கணிசியாதே யிருந்தான். (வில்லாலிலங்கையழித்தாய்) ஒருத்திக்காக— ப்$_3$ரஹ்மாதி$_3$களுடைய அஸ்த்ரங்களுக்கும் அழியாதபடி வர ப$_3$லத்தாலே பூண்கட்டின ஊரை, மனிச்சுக்கு ஏகாந்தமான வில்லாலே மூலையடியே வழிபோம்படி பண்ணின உனக்கு இப்போது ஸ்வப$_4$ாவம் வேறுபட்டபடியென்? ‘இப்போது என் ஸ்வப$_4$ாவம் வேறுபட்டதில்லை; உங்கள் ஸ்வப$_4$ாவமும் வேறு பட்டதில்லை; உங்கள் ஸ்வப$_4$ாவமும் d அப்படியே இருக்க

---

வாத$_8$த்தை நீ பழியாக நினைப்பதில்லையே. உலகினர் பழி சொன்னால் நீ பூரித்துப் போகிறாய். நாங்கள் பழிக்கு அஞ்சு கிறோம். இதுவே உனக்கும் எங்களுக்கும் வித்தியாசம் என்கி றார்கள். “நான் பழிக்கு அஞ்சாதவன் என்று நீங்கள் பழி சொன்னாலும் உங்கள் வஸ்த்ரங்களை நான் தரமாட்டேன்” என்று குருந்தின்மேலுள்ள ஆடைகளையும்கொண்டு, அக்குருந்த மரத்திலே ஒரு பூ மலர்ந்து பொருந்தியிருப்பதுபோலே இவனும் அம்மரத்தில் பொருந்தியிருந்து, இறங்குவது என்னும் எண்ணம் இல்லாதவன் போலிருந்தான். அதைக்கண்டு *(பூங்குருந்தேறி யிருத்தி)* என்கிறார்கள். பூத்துள்ள குருந்தமரத்திலே ஒரு பூப்போலே பொருந்தியிருக்கிறாய் என்று கருத்து. இதைக் கண்டு, ராமாவதாரத்தில் ஒரு பெண்ணுக்காக உண்ணாது உறங்காது ஒலி கடலை ஊடறுத்து இலங்கையழித்த செயலை நினைவுறுத்துகிறார்கள் — *(வில்லால் இலங்கையழித்தாய்)* சீதாப் பிராட்டி ஒருத்திக்காக—பிரமன் முதலானோருடைய அஸ்த்ரங்க ளாலும் அழியாதபடி வரப$_3$லத்தாலே பூண்கட்டப்பட்ட இலங் கையை, மனிதர்களுக்கேயுரிய வில்லாலே அடியோடு அழியும் படி பண்ணின உனக்கு இப்போது அந்தத் தன்மை நேர் மாறாகப் போனது எப்படி? என்கிறார்கள். “இப்போது என்

---

d அப்படியேயிருக்கவேணும் — அந்தப் பிராட்டியைப்

வேணும். e நீங்கள் என் நினைவுக்கீடாக வரிலன்றோ நான் உங்கள் காரியஞ்செய்வது' என்ன; 'அதிலும் ஒரு குறையுமில்லை, உன் அபேக்ஷிதமெல்லாம் செய்யக்கடவோம்' என்றார்கள்; ஆகில் தரலாகாதோ என்று f மடியையேற்றான்; g (பல்லாரும் காணாமே போவோம்)இங்ஙனன்று காண் இதுசெய்வது; அதில் உருவ நடக்கும்படி செய்யவேணுங்காண்; பல்லாரும் காணாமே போவோம் என்றார்கள். 'பலர் காணிலுங்காண்கிறார்கள், தவிரிலும் தவிருகிறார்கள், நான் முந்துற முன்னம் கண்டேனே; ஆகில் போங்கோள்' என்றான்; (பட்டைப் பணித்தருளாயே) பிறர் முன்னே நாங்கள் நிற்கும்படி எங்களைப் பண்ணியருளாயே. 3.

---

தன்மையும் மாறவில்லை; உங்கள் தன்மையும் மாறவில்லை. உங்கள் தன்மை சீதாப்பிராட்டியினுடையதுபோலே வெளிப்பட்டு. நீங்கள் என் நினைவோடு ஒத்திருந்தாலன்றோ நான் உங்கள் காரியம் செய்வேன்" என்றான் கண்ணன். "உன் நினைவின்படி நாங்கள் நடக்க எத்தடையுமில்லை" என்கிறார்கள் மேலே — *(நீ வேண்டியதெல்லாம் தருவோம்)* நீ விரும்பியபடியெல்லாம் உன்னோடு ஸம்ஶ்லேஷிக்கக்கடவோம். இவர்கள் இப்படிச் சொன்னவுடன் அப்படியானால் என்னை அணைவதற்கு என்மடியில் ஏறுங்கள் என்று மடியைக் காட்டினான். அதற்குச் சொல்லுகிறார்கள்—*(பல்லாரும் காணாமே போவோம்)* இப்படிப் பலர் காணும் இடத்திலோ இச்செயலைச் செய்வது. இருவரும் ஒரே தத்துவம் என்னும்படி நாம் அணைத்துக்கொள்வதற்கு எவரும் காணாத இடத்திற்கன்றோ போகவேண்டும் என்கிறார்கள். "பலர் கண்டாலென்ன, காணாமல் இருந்தாலென்ன, நான் முதலில் கண்டுவிட்டேனே. நீங்கள் நாம் ஸம்ஶ்லேஷிக்கக்கூடிய இடத்திற்குச் செல்லுங்கள்" என்றான். *(பட்டைப் பணித்தருளாயே)* நாலுபேர் முன்னால் நாங்கள் நடக்கலாம்படி எங்கள் ஆடையைக் கொடுத்தருள்வாயாக என்கிறார்கள். 3.

---

போலேயிருக்கவேணும். e கீழ் வாக்ய விவரணம் (நீங்களித்யாதி$_3$) f மடியேற்கை—மடியிலே வந்து ஏறுங்கோள் என்று கருத்து. g பல்லாருங்காணாமே போவோம் — பலர் கண்படாமல் ஏகாந்தமாக ஸம்ஶ்லேஷிக்கப்போவோம். 3.



## மூன்றுந்திருமொழி—நாலாம் பாட்டு

பரக்க விழித்தெங்கும் நோக்கிப் பலர்குடைந் தாடும் சுனையில்
அரக்கநில் லாகண்ண நீர்கள் அலமரு கின்றவா பாராய்
இரக்கமே லொன்றுமி லாதாய்! இலங்கை யழித்த பிரானே!
குரக்கர சாவ தறிந்தோம் குருந்திடைக் கூறை பணியாய்.

பதவுரை:— இலங்கை அழித்த பிரானே!—; பலர் குடைந்து ஆடும் சுனையில் — பலர் படிந்து நீராடும் இப் பொய்கையின் கரையில், எங்கும்—நாற்புறத்திலும், பரக்க விழித்து—நன்றாக விழித்து, நோக்கி—, கண்ண நீர்கள்—கண்ணீர்த் தாரைகள், அரக்க நில்லா—அடங்கினாலும் நிற்கமாட்டாதவைகளாய், அலமருகின்ற ஆ—தளும்புகிறபடியை; பாராய்-உற்றுநோக்கு; ஒன்றும் இரக்கம் இலாதாய்-கொஞ்சங்கூட தயவு இல்லாதவனே! குரக்கு அரசு ஆவது அறிந்தோம்-'நீ மரமேற வல்லார்க்குள் தலைவன்' என்பதை அறிந்துகொண்டோம்; (ஆனபின்பு,) குருந்திடை கூறை—குருந்தின் மேலுள்ள (எங்கள்) சேலைகளை, பணியாய்—கொடுத்தருளவேணும்.

வ்யா:— நாலாம் பாட்டு. a (பரக்க இத்யாதி$_3$) b இவர்களும் நான் சொன்னதுக்கெல்லாம் மறுமாற்றம் சொல்லா

---

4. *அவ:*— இப்படி தான் சொன்னதற்கெல்லாம் இவர்கள் பதில் சொல்லிக்கொண்டிருப்பதைப் பார்த்து, இவர்களை பு$_4$யமுறுத்துவதற்காகச் சில காரியங்களைச் செய்தான். அதைக் கண்டு தங்கள் செல்லாமையைக் காட்டி அவனை இரங்கப் பிரார்த்தி$_2$க்கிறார்கள்.

*வ்யா:— (பரக்க விழித்து எங்கும் நோக்கி......பாராய்)* கோ$_3$பிகளை பு$_4$யமுறுத்திக் காரியங்கொள்ளவேணும் என்று

---

அரு:— நாலாம் பாட்டு. (பரக்க இத்யாதி$_3$) a "பலர் குடைந்தாடும் சுனையில் - பரக்க விழித்தெங்கும் நோக்கித் துணுக்கென்று கண்ணநீர்கள் - அரக்கநில்லாமல் அலமருகின்றவா பாராய்" என்று ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ம். b இவர்கள் பரக்க விழிக்கைக்கு ஹேதுவான அவன் வ்யாபாரத்தை அரு

நின்றுர்கள்; இங்ஙனன்று செய்வது; அச்சமுறுத்திக் காரியங்கொள்ளவேணும் என்று பார்த்து, c சிலர் வருகிறுர்களாகக்கொண்டு, சுற்றிலே பார்த்து உடம்பை ஒடுக்குவது, திரியவும் சிலர் வருகிறுர்களாகக்கொண்டு, அதுக்கும் கூசிஞுக அத்திக்கிலே சில தழைகளையிட்டு மறைப்பது, தழைப்புரையே எட்டிப்பார்ப்பது, இப்படிகளைக்கொண்டு சிலர் சிலர்க்கு ப4யாவஹமாயிருப்பன சிலவற்றைச் செய்யத்தொடங்கினுன்; அவ்விடந்தான் பலரும் வருமிடமாய், இவன் செய்கிற செயலுக்கு ஸம்பா4வனையுள்ளவிடமுமாயிருந்தது; ஸர்வஸாதா4ரணமான சுனையாய்த்து. இவனுடைய ப4யாவஹமான வ்யாபாரத்தாலும், ஸர்வஸாதா4ரணமான ப்ரதே3ஶமாகையாலும், துணுக்கென்று கண்ணநீர் விழவிடப்புக்கது; 'அதுதான் நாம் இவன் முன்னே செய்தோமாகிறதென் ? மறைக்கவேணும்' என்று

---

நினைத்த கண்ணன் நாற்புறமும் பார்த்து, ஒரு திசையிலே சிலர் வருவதுபோலே பா4வித்து, அவர்கள் அறியாமலிருப்பதற்காகத் தன்னுடம்பை ஒடுக்குவது, மற்றெரு திசையிலே சிலர் வருவதுபோலே நடித்து, அவர்கள் தன்னைப் பாராமலிருப்பதற்காக அந்தத் திக்கிலே சில தழைகளையிட்டுத் தன்னை மறைப்பது, தழை இடுக்கின் வழியே யார் வருகிறுர்கள் என்று எட்டிப் பார்ப்பது முதலான சேஷ்டைகள் சிலவற்றை கோ3பிகள் ப4யப்படுவதற்காகச் செய்யத் தொடங்கினுன். அந்த இடம் பலர் குளிப்பதற்கு வரக்கூடிய இடமாய், இவன் செய்கிற செயலுக்கு இடமுள்ள பிரதே3ஶமாய் இருந்தது. அந்தக் குளமோ சிலரை வராதீர்கள் என்று தடுக்கமுடியாதபடி பொதுவான குளமாயிருந்தது. அச்சமுறுத்தக்கூடிய கண்ணனுடைய செயல்களாலும், ஆண்களும் குளிக்கவரக்கூடிய இடமாகையாலும் அவமானத்தாலே ப4யந்து, இவர்கள் கண்களிலிருந்து நீர் பெருகத் தொடங்கிற்று. 'இவனுக்கு முன்னல் நாம் அழலாமோ ?' என்று நினைத்து அக்கண்ணீரை அடக்கப்

---

ளிச்செய்கிறுர் (இவர்களும் இத்யாதி3) c "எங்கும் நோக்கி" என்றது - நோக்குகிறுயென்று ஈச்வரகர்த்ருகமாதல்; அன்றிக்கே, ஸ்வகர்த்ருகமாதல். அதாவது - அவன் நோக்கினது



பார்த்து d அமைப்பதாகக் கணிசித்தார்கள்; இவர்கள் d2 நியமிக்கப்பார்த்தவிடத்திலும் நின்றதில்லை; e அநந்தரம், ஆர் வருகிறுரோ என்னுமத்தாலும், கண்ணநீர் நில்லாமையாலும் கிடந்து துடிக்கப்புக்கார்கள்; 'f நீ பரியட்டந்தரவேண்டா; அந்யபரதை பா4விக்கிறத்தைத் தவிர்ந்து நாங்கள் படுகிற அலமாப்பைப் பாராய்' என்கிறுர்கள்.

இவர்கள் இப்படிச் சொல்லச்செய்தேயும் நிர்த்த3யரைப்போலே பாராதேயிருந்தான்; (g இரக்கமேலொன்றுமிலாதாய்) இப்போது இரக்கமின்றிக்கேயிருக்கிற நீ, முன்பு ஒருத்திக்காக

---

பார்த்தார்கள். எவ்வளவு அடக்கினுலும் அதை அடக்கமுடியவில்லை. அதனுலே தமது மானம் போகும்படி யார் வருகிறுர்களோ என்னும் ப4யத்தாலும், கண்ணீரை அடக்கமுடியாமையாலும் பொய்கையிலேயே கிடந்து துடிக்கத் தொடங்கினுர்கள். "நீ வஸ்த்ரங்களைத் தராவிட்டாலும் நாற்புறமும் பார்த்து நாங்கள் படும் பாட்டைக் காணுததுபோலே இருக்குமிலை தவிர்ந்து நாங்கள் படுகிற துன்பத்தைக் காண்பாயாக" என்கிறுர்கள்.

இனி இவர்கள் இப்படித் துன்புற்று வார்த்தை சொன்னபோதும் கருணையற்றவன்போலே கண்ணெடுத்துப் பாராமலிருந்தான். அதைக்கண்டு சொல்லுகிறுர்கள் — *(இரக்கமேலொன்றுமிலாதாய் இலங்கையழித்த பிரானே)* இப்போது எங்களிடம் சிறிதும் இரக்கமில்லாமலிருக்கும் நீ, முன் ராமாவ

---

கொண்டு தாங்களும் பார்க்கிறுர்கள் என்றபடி. d அரக்க- அடக்க. e ஹேது பூர்வகமாக ஶப்3தா3ர்த்த2மருளிச்செய்கிறுர் (அநந்தரமித்யாதி3) f அன்றிக்கே "நோக்கி" என்றத்தை "நோக்க" என்றுய், "பலர் குடைந்தாடும் சுனையில் - பரக்க விழித்தெங்கும் நோக்க - அதனுலே, கண்ணநீர்கள் - அரக்கநில்லா - அலமருகின்றவா பாராய்" என்று இங்ஙனே ஶப்3தா3ர்த்த2மாக்கி அருளிச்செய்கிறுர் (நீ பரியட்டமித்யாதி3) d2 அரக்கநில்லா - அமைக்கநில்லா; g இரக்

இலங்கையை அழியச்செய்து உபகரித்தவன்! தனக்கே ஒருக் கால்ஒருபடியும் மற்ரெருபோது ஒருபீடியுமாக வேறுபடுமோ ஸ்வப₄ாவம்? ‘ நமக்குள்ளதுதன்னையும் இல்லையென்ரு நின்றிகோள்ளாகில், இனி இல்லையாயேவிட அமையாதோ’என்ரு, அவற்றையுங்கொண்டு ஒரு கொம்பிலே தாவிஞன்; (குரக் கரசாவதறிந்தேர்ம்) நீ மரமேறவல்லார்க்கு முதலியென்னு மிடம் நாங்களறிந்தோங்காண். அன்றிக்கே, காபேயமார்கச் சில வற்றைச் செய்யத் தொடங்கிஞன்; (குரக்கரசாவதறிந்தோம்) என்கிருர்களாதல். கையில் பரியட்டங்களைக்குருந்திலே பொகட்டு, ‘நம்மையலையாதே நீங்களே ஏறி வாங்கிக்கொள்ளுங்கோள்’என் ருன்; (குரக்கரசாவதறிந்தோம்) h மரமேறுவார்க்கு நிர்வாஹ கராஞரோ தருவார்? ஏறமாட்டாதாரோ தருவார்? 4.

---

தாரத்தில் சீதாப்பிராட்டிக்காக இலங்கையை அழித்து உதவின வன் என்று பெயர்பெற்றவஞயிற்றே. ஒருவனுக்கே ஒரு சமயம் ஒரு தன்மையும், மற்ரெரு சமயம் நேர்மாருன தன்மையுமாகத் தன்மைகள் வேறுபடுமோ? என்று கேட்கி ருர்கள். அதற்குமேல் “நமக்குள்ள இரக்கத்தையும் இல்லை என்று சொன்னீர்களாகில் இனி அது எனக்கு இல்லாமலே போகட்டும்” என்று சொல்லிக்கொண்டு, வஸ்த்ரங்களையும் எடுத்துக் கொண்டு ஓர் உச்சாணிக் கொம்பிலே குரங்கு தாவுவதுபோலே தாவிஞன். அதைக்கண்டு சொல்லுகிருர்கள்— *(குரக்கரசாவ தறிந்தோம்)* நீ மரமேறவல்ல குரங்குகளுக்கெல்லாம் தலைவன் என்பது நாங்களறிந்த விஷயம்தானே. அதை இப்படி நடை முறையில் செய்து காட்டவேணுமோ? என்கிருர்கள். அல்லது கண்ணன் சில குரங்குச் சேஷ்டைகளைச் செய்யத் தொடங்க, ‘குரக்கரசாவதறிந்தோம்’ என்கிருர்கள் என்றும் கொள்ளலாம். இதைக் கேட்டு வஸ்த்ரங்களைக் குருந்தின் கிளையிலே வைத்து, “எனக்குச் சிரமம் வைக்காமல் நீங்களே ஏறி எடுத்துக் கொள்ளுங்கள்” என்ருன் கண்ணன். அதைக் கேட்டுச்

---

கம் - க்ருபை; இரக்கமேல் - இரக்கமாகில். h “பணியாய்” என்றதுக்கு முந்தின அர்த்த₂த்திலே அருளிச்செய்கிருர் (மரமேறுவாரித்யாதி₃). 4.



## மூன்ருந்திருமொழி—ஐந்தாம் பாட்டு

**காலைக் கதுவிடு கின்ற கயலொடு வாளை விரவி**
**வேலைப் பிடித்தென்னை மார்க ளோட்டில் என்ன விளையாட்டோ?**
**கோலச் சிற்ருடை பலவும் கொண்டுநீ யேறி யிராதே**
**கோலங் கரிய பிரானே! குருந்திடைக் கூறை பணியாய்.**

பதவுரை:— கரிய—கறுத்த, கோலம்—திருமேனியை யுடைய, பிரானே—கண்ணபிரானே! கயலொடு—கயல் மீன்க ளும், வாளை—வாளை மீன்களும், விரவி—ஒன்ருய்க் கூடி, காலை—(எமது) கால்களை, கதுவிடுகின்ற—கடியாநின்றன; (இப்படி நீ எங்களை வருத்தப் படுத்துவதைக் கேள்விப்பட்டு) என் ஐமார்கள்—எங்கள் தமையன்மார்கள், வேலை பிடித்து— வேலைப்பிடித்துக்கொண்டு, ஓட்டில்—(உன்னைத்) துரத்தி விட்டால், என்ன விளையாட்டு—(அது பின்பு) என்ன விளை யாட்டாய் முடியும்? நீ-நீ, கோலம்-அழகிய, சிற்ருடை பலவும் கொண்டு — சிற்ருடைகளையெல்லாம் அணிந்துகொண்டு, ஏறி இராது—(மரத்தின் மேல்) ஏறியிராமல், குருந்திடை— குருந்தமரத்தின்மேலுள்ள, கூறை—(எங்கள்) சேலைகளை, பணியாய்—தந்தருள்.

---

சொல்லுகிருர்கள் — *(குரக்கரசாவதறிந்தோம் குருந்திடைக் கூறை பணியாய்)* குரங்குகளுக்குத் தலைவஞய், மரமேறுவதில் வல்லவஞன நீ வஸ்த்ரங்களை எடுத்துத்தர முடியுமேயொழிய, மரமேறமாட்டாத நாங்களே எப்படி வஸ்த்ரங்களை எடுத்துக் கொள்ளமுடியும்? ஸ்வாபதே₃ஶத்தில்—எம்பெருமானே உபாய மாவானேயொழிய, சேதனனுடைய முயற்சி உபாயமன்று என்னும் அர்த்த₂த்தைக் காட்டுகிறது. 4.

5. *அவ:—* ஆண்டாளுக்கு இடைச்சி ப₄ாவனை ஓடுகை யாலே, இடையஞன அவனைப்போலே இவளும் இடைக்குடி யிலே (ஆந்தராளக்குடியிலே) பிறந்தாளொருத்தியாய், அவ் னுடைய திருவுள்ளம் அறிவாளொருத்தியாகையாலே, ஸ்ரீக₃ஜேந்திராழ்வான் முதலையால் இடர்பட்டபோது தன் மேன்மை பாராமல் அவ்வானை துன்புற்ற பொய்கையிலே

அவ:— அஞ்சாம் பாட்டு. உ ஆந்தராளக்குடியிலே பிறந்தாளொருத்தியுண்டு போலே காணும்; ஈஶ்வரமர்மஜ்ஞையாயிருப்பாளாய், ஸ்ரீக$_3$ஜேந்த்$_3$ராழ்வான் ஆபந்நனாக, தன் மேன்மை பாராதே அது இடர்பட்ட பொய்கையிலே அரைகுலையத் தலைகுலைய வந்து உதவி அதினுபத்தைப் பரிஹரித்து, பின்னையும் 'ஏற்கவே வந்து பரிஹரிக்கப் பெற்றிலோம்; நோவுபட்ட பின்பு வந்து பரிஹரித்தவிதுவுமொன்றாய்த்தோ!' என்று திருவுள்ளம் புண்பட்டிருக்கும்படியை அறிவாளொருத்தி; 'நீ பண்டு உன்னையாஶ்ரயித்ததொன்றை ஒரு நீர்ப்புழு நலிய, ஒரு ஜலசரஸத்வம் என்று பாராதே வந்து விழுந்தபடியறிதியே; இன்று அவ்வளவன்றிக்கே இரண்டுகிடாய் எங்களை நலிகின்றது'என்ன; பரியட்டங்களையுங் கொண்டுவந்து விழுமென்று பார்த்து அத்தை முன்னிட்டுக்கொண்டு சொல்லுகிறாள்.

---

அரைகுலையத் தலைகுலைய வந்து உதவி, அதனுடைய பேராபத்தைப் போக்கடித்தபின்பும் 'முன்னமே வந்து இடரை நீக்கப் பெற்றிலோம். இடர்பட்டபின்பு வந்து நீக்கியது ஒரு பரிஹாரமாகுமா?' என்று திருவுள்ளம் புண்பட்டிருக்கும்படியை அறிந்தவளாய், "நீ முன்பொருகாலத்தில் உன்னை ஆஶ்ரயித்த ஆனையை ஒரு முதலை துன்புறுத்த, அது ஒரு நீர்ப்புழுதானே என்றும் பாராமல் வந்து விழுந்து ஆனையின் துயரம் தீர்த்தாயன்றோ. இன்று இரண்டு மீன்கள் எங்கள் காலைக் கவ்வுகின்றதைப் பாராய்" என்று கூறினால், வஸ்த்ரங்களையும் எடுத்துக்கொண்டு தன் துயரத்தையும் தீர்க்க மேல்விழுவான் என்று நினைத்துக் கயலும் வாளையும் கவ்வுவதை முன்னிட்டுக்கொண்டு சொல்லுகிறாள்.

*வ்யா:— (காலைக் கதுவிடுகின்ற கயலொடு வாளை விரவி)* கயலும் வாளையும் சேர்ந்துகொண்டு எங்களுடைய காலைக்

---

அரு:— அஞ்சாம் பாட்டு. (காலையித்யாதி$_3$) உ பரியட்டங்களைத் தரவேணுமென்று அபேக்ஷிக்கிறவர்கள், வாளையானது காலைக் கதுவுகிறதென்று இத்தைச் சொல்லுகிறதென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஆந்தராளக்குடியிலே இத்யாதி$_3$) ஆந்தராளக்குடி - முக்தரும் ப$_3$த்$_3$த$_4$ருமல்லாத



வ்யா:—.(காலையித்யாதி$_3$) கயலோடு வாளையானது கலந்து காலைக் உ$_2$ கதுவாநின்றதுகிடாய்; ஒன்று நலிய அன்று பட்டபாடு அறிதியே நீ; இப்போது இரண்டுகிடாய் நலிகிறது. 46."अतन्द्रितचमूपतिप्रहितहस्तमस्वीकृतप्रणीतमणिपादुकं' (அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தமஸ்வீக்ருதப்ரணீதமணிபாது$_3$கம்) b ஆஶ்ரிதன் கால் நொந்து கையெடுத்துக்கூப்பிட, நம் கையும் காலும்பேணவோ என்று சேனைமுதலியாரையும் கைவிட்டு, திருவடி நிலைகளையும் காற்கடைக்கொண்டு, நீ பட்டபாடறிதியே. c * கானமர் வேழம் கையெடுத்தலறக் கராவதன் காலினைக் d கதுவ, ஆனையின்

---

கடிக்கின்றன. க$_3$ஜேந்த்$_3$ரனை ஒரு முதலை நலியும்போது அன்று அப்பாடுபட்டாயே. இப்போது எங்களை இரண்டும் சேர்ந்து கடிக்கும்போது சும்மாயிருக்கலாமோ?

46. அதந்த்ரித சமூபதி ப்ரஹிதஹஸ்த மஸ்வீக்ருத-
ப்ரணீத மணிபாது$_3$கம் கிமிதி சாகுலாந்த:புரம்।
அவாஹந பரிஷ்க்ரியம் பதக$_3$ராஜமாரோஹத:
கரிப்ரவரப்$_3$ரும்ஹிதே ப$_4$க$_3$வதஸ் த்வராயை நம:॥
[ர-ஸ்த 2-57]

[கஜேந்திராழ்வானுடைய கூக்குரல் செவிப்பட்டவுடன், சேனை முதலியார் கொடுத்த கைலாகை மதியாமலும், கொண்டுவரப்பட்ட ரத்னபாது$_3$கையை ஏற்காமலும்,'இதுவென்! இதுவென்!' என்று தி$_3$வ்யமஹிஷிகள் திகைக்கவும், வாஹநாலங்காரமில்லாமலும், பெரியதிருவடியின்மீது ஏறாநின்ற எம்பெருமானுடைய வேக$_3$த்திற்கு நமஸ்காரம்.] என்கிறபடியே, 'அடியானான க$_3$ஜேந்த்$_3$ரன் கையெடுத்துக் கூப்பிடும்படி இருந்த நமக்குக் கைலாகு வேண்டுமோ?' என்று ஸேனைமுதலியார் பிடிக்க வந்த கையை உதறியும், 'அவன் கால் நொந்து கூப்

---

முமுக்ஷு. b அவன் கையெடுத்துக் கூப்பிட்டதுக்காக சேனை முதலியார் கையையுதறிவிட்டது; அவன் கால் நொந்ததுக்காகத் திருவடி நிலைகளைக் காற்கடைக்கொண்டது. உ$_2$ d கதுவுகை - கடிக்கை, c கையும் காலும் நோவுபடவோ ரக்ஷிக்கிறதென்ன; ஜலசரஸத்வமென்று பாராதே வந்து விழுந்த

துயரந்தீரப் புள்ளூர்ந்துசென்று நின்றாழிதொட்டிறே ரக்ஷித்தது. இப்போது இரண்டுகிடாய் நலிகிறது. "அது பிறராலே வந்த நலிவாகையாலே பரிஹரித்தோம்; இது நீங்களே விளைத்துகொண்டதொன்றன்றோ; அதுக்கு நானென்?" என்னா மேன்மேலன சில விலாஸ சேஷ்டிதங்களைப் பண்ணத் தொடங்கினான்; (வேலையித்யாதி3) நாங்கள் நெடும்போது நின்று நோவுபட, நீ எங்கள் பரியட்டங்கள் தாராவிட்டவாறே பெண்கள் போய் ஐ உறவுமுறையார் காலிலே விழுந்தவாறே, அவர்கள் பின்னை ஸாயுத4ராய்க் கொண்டுவந்து உன்னை ஓடிப்பிடித்துக் கட்டி இட்டுவைப்பார்கள்;அப்போது பின்னை அழகிய விளையாட்டாய்த் தலைக்கட்டுமிறே;

---

பிடும்போது நம் காலுக்குப் பாது3கையும் வேணுமோ?' என்று பாது3கையை அணியாமலும் வந்து நீ பட்டபாட்டை மறந்து விட்டாயோ? என்கிறார்கள். "கானமர் வேழம் கையெடுத்தலறக் கரா அதன் காலினைக் கதுவ, ஆனையின் துயரம் தீரப் புள்ளூர்ந்துசென்று நின்று ஆழிதொட்டானை" [பெரியதிரு 2-3-9] என்கிறபடியே ஒரு நீர்ப்புழு கவ்வினதற்கு அந்தப் பாடுபட்ட நீ எங்களை இரண்டு நீர்ப்புழுக்கள் கவ்வும்போது, வஸ்த்ரத்தை எடுத்துக்கொண்டாவது வந்து உதவ வேண்டாமா? என்று கருத்து. "அது பிறராலே வந்த துன்பமாகையாலே அதை நீக்கினோம். இது நீங்களே விளைத்துக் கொண்ட துன்பமாகையாலே நான் என்ன செய்வது?" என்று கூறி மேன்மேலே சில விளையாட்டுச் செய்கைகளைச் செய்யத் தொடங்கினான். அதுகண்டு சொல்லுகிறார்கள் — (*வேலைப் பிடித்து என்னைமார்கள் ஓட்டில் என்ன விளையாட்டோ*) 'நாங்கள் நெடும்போது நின்று நோவுபட்டபின்பும் நீ எங்கள் வஸ்த்ரங்களைத் தராவிட்டால், நாங்கள் எங்களுடைய தமப்பன்மார் தமையன்மார் முதலானவர்கள் காலில் விழுவோம்.அவர்கள் வேல் முதலான ஆயுத4ங்களை எடுத்துக்கொண்டு வந்து உன்னை ஓடிப்பிடித்துக் கட்டி இட்டுவைப்பார்கள். அப்போது உன் விளையாட்டு வினையாகிவிடும் என்பதைப் புரிந்துகொள்;

---

படிக்கு ப்ரமாணம் (கானமர்வேழமித்யாதி3) ஐ "என்-ஐமார்" தமையன்மார். 5.



இப்போது நாங்கள் உன் கையில் படுகிற பாடன்று கிடாய் நீ அவர்கள் கையிலே படுவது. "அத்தனையே? எனக்குப் ப2லித்தது ப2லிக்கிறது; இப்போது கைபுகுந்தவற்றைக் கொடுக்கிறதென்?" என்று அரையிலேயொன்றைச்சாத்துவது, தலையிலேயொன்றைக்கட்டுவது,.உத்தரீயமாக ஒன்றையிடுவதாக, இப்படித் தன் திருமேனிக்குப் பரப4ாக3மாம்படி நாநாவர்ணமானவற்றைக் கொண்டு அலங்கரித்து, ஶேஷித்தவற்றைக் குருந்திலே யிட்டுவைத்து "கண்டிகோளே நமக்குத் தகுதியாயிருந்தபடி; இத்தைக்கண்ட உங்களுக்கு வேண்டவேண்டியிருந்ததோ" என்றான்; "அழகிதாயிருந்தது; நாங்கள் அவற்றை வேண்டுகிறோமல்லோம்; குருந்தில் கிடக்கிறவற்றைத் தா" என்கிறார்கள். 5.

---

இப்போது நாங்கள் உன் கையில் படுகிற பாட்டிற்குமேல் பல மடங்கு நீ அவர்கள் கையிலே படவேண்டியிருக்கும்' என்று ப4யமுறுத்துகிறார்கள். இதைக் கேட்டவுடன் "இவ்வளவு தானே. வருவது வரட்டும். எனது கையிலகப்பட்ட வஸ்த்ரங்களைக் கொடுக்கமாட்டேன்" என்று ஒரு புடவையை அரையிலே சாத்துவது. ஒன்றைத் தலையிலே கட்டுவது. ஒன்றை உத்தரீயமாக இடுவதாகத் தன்னுடைய கரிய திருமேனிக்கு வர்ணச்சேர்த்தி அழகை விளக்கும்படி, பலநிறப் புடைவைகளைக் கொண்டு தன் திருமேனி முழுவதையும் அலங்கரித்து. மற்ற புடைவைகளைக் குருந்திலே இட்டுவைத்து, "பார்த்தீர்களா? என் உடம்புக்கு எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது? இதைக் கண்டபின்பும் நீங்கள் கேட்கலாமா?" என்றான். அதுகண்டு சொல்லுகிறார்கள் — (*கோலச் சிற்றாடை பலவுங்கொண்டு நீ ஏறியிராதே, கோலம் கரியபிரானே குருந்திடைக் கூறை பணியாய்*) உன் கரியகோலத் திருமேனிக்குப் பரப4ாக3மாகச் சாத்தியிருக்கும் கோலச்சிற்றாடைகள் மிகவும் அழகாகவே உள்ளன. நாங்கள் அவற்றை வேண்டவில்லை. குருந்தமரத்திலிருக்கும் மற்ற வஸ்த்ரங்களைக் கொடுத்தால் போதும் என்கிறார்கள். 5.

## மூன்றாந்திருமொழி—ஆறாம் பாட்டு

**தடத்தவிழ் தாமரைப் பொய்கைத் தாள்களெம் காலைக் கதுவ**
**விடத்தே ளெறிந்தாலே போல வேதனை யாற்றவும் பட்டோம்**
**குடத்தை யெடுத்தேற விட்டுக் கூத்தாட வல்லஎங் கோவே!**
**படிற்றையெல் லாம்தவிர்ந்து எங்கள் பட்டைப் பணித்தரு ளாயே.**

**பதவுரை:**— **தடம்**—விசாலமாயும், **அவிழ் தாமரை**—மலர்ந்த தாமரைகளையுடையதுமான, **பொய்கை** — தடாகத்திலே, **தாள்கள்**—தாமரைத் தண்டுகளானவை, **எம் காலை**—எங்கள் கால்களை, **கதுவ**—கடிக்க, **விடம் தேள் எறிந்தால் போல** — விஷத்தையுடைய தேள்கொட்டினாற் போலே, **ஆற்றவும்**—மிகவும், **வேதனை பட்டோம்**—வருத்தப் படாநின்றோம்; **குடத்தை**—குடங்களை, **எடுத்து**—தூக்கி, **ஏற விட்டு**—உயர எறிந்து, **கூத்து ஆட**—குடக்கூத்தை ஆடுவதற்கு, **வல்ல**—ஸாமர்த்தியமுள்ள, **எம் கோவே**—எம்முடைய தலைவனே! **படிற்றை எல்லாம் தவிர்ந்து**—(நீ செய்கிற) தீம்புகளையெல்லாம் விட்டு, **எங்கள் பட்டை**—, **பணித்தருளாய்**— கொடுத்தருளாய்.

**வ்யா:— ஆறாம் பாட்டு.** (தடத்தவிழித்யாதி$_{3}$) **பொய்கையிலுண்டான ஜலசரஸத்வங்கள் ப$_{3}$ாத$_{4}$கமாகாநின்றது என்றால் துணுக்கென்னுமோபாதி, தாமரைப் பொய்கையில் தண்டுகளும் ப$_{3}$ாத$_{4}$கமாகாநின்றதுகிடாய் என்றால் கூசுமோ என்று பார்த்து அத்தை ஸ்மரிப்பிக்கிறார்கள். பொய்கையில் தாமரைத்தண்டுகள் எங்களை நலியாநின்றது என்ன; ஆகில் கரையிலே**

---

*6. அவ:—* சென்ற பாட்டில் பொய்கையிலுள்ள கயலும் வாளையும் காலைக்கடித்துத் துன்புறுத்துகின்றன என்று சொல்லிப் பார்த்தார்கள்; அது பயனற்றுப்போகையாலே இக்குளத்தில் தாமரைத்தண்டுகள் விஷத்தேள் கொட்டியது போலே துன்புறுத்துகின்றன என்று சொன்னாலாவது இரங்குவானோ என்று நினைத்து அதை நினைவுறுத்துகிறார்கள்.

*வ்யா:—* "இக்குளத்தில் தாமரைத்தண்டுகள் எங்களைத் துன்புறுத்துகின்றன" என்று கூறினார்கள். "அப்படியானால்



**போந்தேறுங்கோள் என்றான்; ( a தடத்தவிழ் தாமரைப் பொய்கை ) b கரையிலேயோதான் தாமரையின்றிக்கேயிருக்கிறது? c *செக்கமலத் தலர்போலும் கண்கைகால் செங்கனி வாயிறே. d தடம்—பெருமை; பெரிய பொய்கை. (e விடத் தேள் எறிந்தாலேபோல) e$_{2}$விஷமில்லாத தேளுமுண்டுபோலே காணும். (வேதனையாற்றவும் பட்டோம்) நாங்கள் மிகவும்**

---

கரையிலே ஏறுங்கள்" என்றான். (*தடத்தவிழ் தாமரைப் பொய்கை*) என்று விசேஷணமிடுவதன் மூலம் கரையிலே காணப்படும் தாமரைப் பொய்கையைக் காட்டிலும் வேறு பாட்டை உணர்த்துகிறார்கள். "செக்கமலத்தலர் போலும் கண்கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலை போலும் திருமேனியடிகளுக்கே" [திருவாய் 9-7-3] "கண்ணா! கண்கைகால் தூயசெய்யமலர்களாச்சோதிச் செவ்வாய் முகிழதா சாயல்சாமத் திருமேனி தண் பாசடையா தாமரைநீள் வாசத்தடம் போல் வருவானே" [திருவாய் 8-5-1] என்கிறபடியே ஒரு தாமரைத் தடாகம்போல் இருப்பவனன்றோ இவன். கீழே இந்தத் தாமரைப் பொய்கை துன்புறுத்துகிறது. கரையிலே ஏறலாமென்றால் அந்தத் தாமரைப் பொய்கை துன்புறுத்துகிறது என்று கருத்து. 'தடம்' என்று கரையையும் பெருமையையும் காட்டும். கரையுடையதாய் அல்லது பெருமைமிக்கதாய் மலர்ந்த தாமரைகளையுடையதான பொய்கை. (*விடத்தேளெறிந்தாலே போல*) விஷமுடைய தேள் கொட்டினாற்போல் தாமரைத்தண்டுகள் எங்களைத் துன்புறுத்துகின்றன. இதனால் கரையிலேயுள்ள தாமரைத் தடம் விஷமில்லாத தேளாயிருந்து கொண்டு துன்புறுத்துகிறது என்று கருத்து. (*வேதனை ஆற்றவும் பட்டோம்*) நாங்

---

அரு:— ஆறாம் பாட்டு. (தடத்தவிழித்யாதி$_{3}$) a,b தடம்-கரையாதல்; பரப்பாதல். d அர்த்தா$_{2}$ந்தரம் (தடம்-பெருமை) என்றது. முந்தின அர்த்த$_{2}$த்துக்கு—பொய்கையில் தாமரைத் தாள்கள் எம் காலைக்கதுவாநின்றது;- தடத்தவிழ் தாமரைகளும் எங்களைக் கதுவாநின்றது என்றந்வயம். இரண்டாமர்த்த$_{2}$த்துக்கு, அத்து - சாரியை. c கரையிலே தாமரையுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (செக்கமலத்தலரித்யாதி$_{3}$) e விடம் - விஷம். e$_{2}$ கடறகரையில் தேளுக்கு விஷ

க்லேஶப்படாநின்றோம் ; " e$_3$ நீங்கள் நீரிலே புக்கபோது தொடங்கி நானும் மரத்திலே இருக்கிறேன் ; இம்மரத்திலே வர்த்திக்கிற பதா$_3$ர்த்த$_2$ங்களுக்கு ஓரெல்லையில்லை ; நானும் இவற்றிலே படுகிற வேதநைக்கு ஓர் அவதி$_4$யுண்டோ ? ' என்றான்; 'உங்களளவேயோ நான் பட்டது' என்றான். f காலத்தின் நெடுமை அவனுக்கும் ஒத்திருக்கச்செய்தே அது தோற்றுகிறதில்லை காணும் இவர்களுக்கு ; g இழந்திருப்பார்க்கிறே காலம் நெடுகித் தோற்றுவது ; h நிரபேக்ஷனிறே அவன். i இவர்களையொழியச் செல்லாதபடியாய்க்காணும் அவனுடைய

கள் மிகவும் வருந்துகின்றோம். இவர்கள் இப்படிச் சொன்னவுடன் கண்ணன்—"நீங்கள் நீரிலே புகுந்த காலம் தொடங்கி நானும் இம்மரத்திலேயே உட்கார்ந்திருக்கிறேன். இம்மரத்தில் இருக்கும் புழுப்பூச்சிகளுக்குக் கணக்கே கிடையாது. நான் இவற்றால் படும் துன்பத்திற்கு எல்லையுண்டோ? நீங்கள் படும் துன்பத்தை விட நான் படும் துன்பம் பெரிதன்றோ?" என்றான். இவர்கள் நெடுநேரமாகத் துன்பப்படுவது போலே அவனும் நெடுநேரமாகத் துன்பப்பட்டபோதிலும் அதை இவர்கள் அறியாமையாலே 'வேதனையாற்றவும் பட்டோம்' என்று தாங்கள் மாத்திரம் துன்பப்பட்டது போலே வார்த்தை சொல்லுகிறார்கள். அவனோடு ஸம்ஶ்லேஷத்தை இழந்திருப்பதோடன்றியில், வஸ்த்ரத்தையுமிழந்து மானத்தையும் இழந்து விடுவோமோ என்று ப$_4$யந்திருக்கையாலே இவர்களுக்குக் காலம் நெடுகித் தோன்றுகிறது. இவர்களுடைய வஸ்த்ரத்தைக் கைப்பற்றிக்கொண்டு நிரபேக்ஷனைப் போலே அவன் தோன்றினாலும், இவர்களையொழிய த$_4$ரிக்கமாட்டாதவனாயிருக்கையாலே இவர்கள் விஷயத்தில் அவன் நிரபேக்ஷனல்லன். ஆகையாலே அவனுக்கும் காலம் நெடுகியே தோன்றும். அடி

மில்லை. f தனக்கு அதி$_4$கம் பாடானால் கொடுக்கிறதுக்கென்னென்ன அருளிச்செய்கிறார் (காலத்தினித்யாதி$_3$) g இவர்களுக்குக் காலம் நெடுகுகைக்கு ஹேதுவேதென்ன ; அருளிச்செய்கிறார் (இழந்தித்யாதி$_3$) h அவனுக்கு இழவில்லையோவென்ன அருளிச்செய்கிறார் (நிரபேக்ஷனித்யாதி$_3$) பரியட்டம் கைப்படுகையாலே நிரபேக்ஷதை.



நைரபேக்ஷ்யமிருப்பது. j ஆஶ்ரிதவிஷயத்தில் ஸாபேக்ஷத்வம் நைரபேக்ஷ்ய விரோதி$_4$யாகாதிறே. k அந்த:புரத்துக்குத் தாழநிற்குங்காட்டில் அபி$_4$ஷிக்தனுக்குக் குறையாகாதிறே. l (வேதனை l$_2$ ஆற்றவும் பட்டோம்) என்கிறார்கள்; 'நானன்றோ வேதநை

யார்கள் விஷயத்தில் அபேக்ஷையுடையவனாயிருப்பது ஸர்வேஶ்வரனுடைய நைரபேக்ஷ்யத்துக்குக் குறையாகாது. தன் பட்டத்து ராணிக்குத் தாழநிற்பதால் சக்கரவர்த்திக்குக் குறையாகாதன்றோ. (*வேதனையாற்றவும் பட்டோம்*) உன்னை நீண்ட

i ஆனால் இவர்களை அபேக்ஷிப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (இவர்களையித்யாதி$_3$) j ஆனால் நிரபேக்ஷத்வஹாநி வாராதோவென்ன அருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதவிஷயத்திலித்யாதி$_3$) k அப்படி எங்கே கண்டோமென்ன அருளிச்செய்கிறார் (அந்த:புரத்துக்கு இத்யாதி$_3$) l$_2$ ஆற்ற-மிக. l "வேதனையாற்றவும் பட்டோம்" என்றது-உன்னை நெடும்போது பிரிகையாலும், ஜலஸ்த$_2$பதா$_3$ர்த்த$_2$ங்களாலும் மிகவும் நோவுபட்டோமென்று தாத்பர்யம். e$_2$...k இவர்கள், "வேதனையாற்றவும் பட்டோம்" என்றபோதே இவனுக்கு வேதனையில்லையென்னுமிடம் ஸித்$_3$த$_4$மாய், இத்தை அநப்$_4$யுபக$_3$ம்ய வாத$_3$த்தாலும், அப்$_4$யுபக$_3$ம்ய வாத$_3$த்தாலும் அவன் பரிஹரிக்கும் ப்ரகாரத்தைக் காட்டுகிறார் (நீங்களித்யாதி$_3$) e$_2$ அதில், (நீங்கள் நீரிலே) என்று தொடங்கி (நான் பட்டதென்றான்) என்னுமளவும் அநப்$_4$யுபக$_3$ம்யவாத$_3$ம். f...k (காலத்தின் நெடுமை) என்று தொடங்கி (குறையாகாதிறே) என்னுமளவும் அப்$_4$யுபக$_3$ம்யவாத$_3$ம் என்று இவ்வாக்யங்களுக்கு இப்படி வகையிட்டருளிச்செய்வர். f அப்$_4$யுபக$_3$ம்ய பக்ஷத்திலானால் இவனுக்கும் இவர்களை நெடும்போது பிரிந்து நோவுபட்டமையுண்டாயிருக்க வேதனையில்லையென்னக் கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (காலத்தின் நெடுமையித்யாதி$_3$) g இதுக்கு ஹேதுவென்னென்ன (இழந்திருப்பார்க்கிறேயித்யாதி$_3$) ஆனால் இவனோபாதி அவர்களுக்கும் இழ

ஆற்றவும் பட்டேன்' என்றான்; 'அது ஆராலே? நாங்கள் பரி
யட்டங்களை வாங்கிக்கொண்டுபோய்க் குருந்தின்மேலே போயேறி
னேமோ? அது உன்னாலே வந்ததன்றோ' என்றார்கள்; ''அது என்
னாலே வந்ததானாலும் இத்திரளைக் m கலைக்கப் பார்த்திலோம்'
என்றான்; '' அத்தனையே? உனக்கு இங்ஙனே திரட்டவேண்டி

---

காலம் பிரிந்திருக்கையாலும் நீரிலுள்ள கயல், வாளை, தாம
ரைத்தண்டுகள் முதலானவற்றாலும் நாங்கள் மிகவும் துன்புற்
றோம் என்று இவர்கள் கூறினார்கள். அதற்கு பதிலாக 'உங்
களைக் காட்டிலும் மரத்திலேயிருந்து துன்புற்றது நானன்றோ'
என்றான் கண்ணன். ''அது நீயே உனக்கு விளைத்துக்கொண்ட
வேதனையன்றோ. எங்கள் வஸ்த்ரங்களை எடுத்துக் கொண்டு
குருந்தின் மேல் ஏறினது நீ தானே; உன்னால் வந்த வேத
னைக்கு எங்களை எப்படிக் குறை சொல்லுவது'' என்றார்கள்.
அதற்குக் கண்ணன் ''அது என்னாலே வந்ததானாலும் உங்களு
டைய திரளைக்கலைப்பதில் எனக்கு விருப்பமில்லை. ஆகையால்
வேதனையைப்பட்டுக் கொண்டு இங்கேயே இருக்கப் போகி

---

வில்லாமையுண்டேயென்னில்; அது சொல்லவொண்ணா
திறே; இவர்களுக்கு அவனோட்டை ஸம்ஶ்லேஷம் அநபி4
மதமாய், தங்கள் வரவை அவன் அறியாதபடி வந்தவர்க
ளென்று ப்ரவேஶத்திலே சொல்லுகையாலே, அவன்
ஸந்நிஹிதனேயாகிலும் அது கூட்டரவன்றென்று கொள்ள
வேணுமிறே. ஆனால் ''பல்லாருங்காணாமே போவோம்''
என்றது சேருமோவென்னில்; அது புடவை தருகைக்குச்
சொல்லுகிறதாகையாலே அந்யார்த்த2மென்று தாத்பர்யம்.
h. (நிரபேக்ஷனிறே) என்றது - இவர்களை அநுப4விக்கை
யாலே பரிபூர்ணனென்றபடி. i இப்படி இவர்களுடைய
அநுப4வத்தாலே பூர்த்தியாகில் அவனுடைய ணைரபேக்ஷ
யத்துக்குக்கொத்தையன்றோவென்ன அருளிச்செய்கிறார்
(இவர்களையொழிய இத்யாதி3) j உபபாத3நம் (ஆஶ்ரிதேத்
யாதி3) l அநப்4யுபக3ம்யபக்ஷத்தை அவலம்பி3த்து''குடத்தை
யெடுத்தேறவிட்டு'' இத்யாதி3க்கு அவதாரிகை (வேதனை
யாற்றவும் பட்டோமென்கிறார்களித்யாதி3) m(கலைக்கப்பார்த்
திலோமென்றான்)என்றது-எல்லாரையும் ஒருக்காலே திரளக்



யிருந்ததோ? கூட்டமாட்டாயோ பெண்களுடையத்திரளும்படி
காணா? n மன்றிலே குடக்கூத்தையாடி நிர்லஜ்ஜனாய், அவ்வழி
யாலே பெண்களையெல்லாம் திரட்டுமவனன்றோ நீ. o இவர்கள்
தங்கள் ஈடுபாடு தோற்ற வார்த்தை சொன்னார்களென்னா,
அதுவே அவகாஶமாக, இன்னது செய்தான் என்று பிறர்க்குப்

---

றேன்'' என்றான். அதற்கு கோ3பிகள், ''எங்கள் கூட்டத்
தைத் திரட்டுவதற்கு இது தான் உனக்கு வழியோ? ஏற்க
னவே எங்கள் அனைவரையும் கூட்டுவதற்கு வேறொரு வழி
உனக்குக் கை கண்டதாயிற்றே. நாற்சந்தியிலே வெட்கமில்
லாமல் குடக் கூத்தாடி அதன் மூலம் பெண்களையெல்லாம்
திரட்டுவது உனக்கு கைவந்த கலையாயிற்றே'' என்கிறார்கள்—
(குடத்தையெடுத்தேற விட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே) என்
னும் அடியாலே. இவர்கள் இவனை இப்படி பதில் சொல்ல
முடியாதபடியும், தங்கள் ஈடுபாடு தோற்றவும் வார்த்தை
சொல்லுகையாலே அவ்வார்த்தையே பற்றாசாகப் பிறர்க்கு
எடுத்துச்சொல்லமுடியாதபடி சில விடபுருஷசேஷ்டிதங்களைச்

---

கண்டிலேன், கூட்டிக்காண்கைக்காகப் பரியட்டங்களை
வாங்கிக்கொண்டு போனேனென்றான் என்றபடி. n குடக்கூத்
தாடும்போது மன்றிலே ஆடவேணுமே, அப்போது
அல்லாதாரும் வருவார்கள்; அது நமக்கு லஜ்ஜையா
யிராதோவென்ன (மன்றிலே இத்யாதி3) அதாவது-நீ முன்
பும் அப்படியேயன்றோ செய்தாயென்றபடி. இந்தப் பக்ஷத்
தில் ''எம் கோவே'' என்றது —எங்களோட்டைப் பெண்
களைப் பெறுகைக்காகக் குடக்கூத்தாடி அவர்களை லபி4த்தவ
னன்றோ என்றபடி. o அநப்4யுபக3ம்யவாத3த்தில் ''குடத்தை
யெடுத்தேறவிட்டு''இத்யாதி3க்கு க்ஷேபோக்தியாக அருளிச்
செய்கையாலே (இவர்கள் தங்களீடுபாடு தோற்றவார்த்தை
சொன்னார்களென்னா) என்றது. ஔசித்யாத் அப்4யுபக3ம்ய
பக்ஷத்திலே '' கூத்தாடவல்ல எங்கோவே '' என்றதுக்குத்
தாத்பர்யமாகவேணும். ''எங்கோவே'' என்றது - எங்கள்
ஸ்வாமீ! என்றபடி. இந்தப் பக்ஷத்தில், '' குடத்தை
யெடுத்து '' இத்யாதி3க்கு ஸங்க3தியாவது - உங்களைக்கண்

பாசுரமிட்டுச் சொல்லவொண்ணுதபடி சிலவற்றைச் செய்யத் தொடங்கினுன்; p (படிற்றையெல்லாம் தவிர்ந்து)நீ பண்ணுகிற மிறுக்குக்களையெல்லாம் தவிராயென்கிருர்கள். q தவிரிகோளாகில் கொடுபோங்கோள் என்று தன் பரியட்டத்தைக் கொடுக்கப்பார்த் தான்;(எங்க்ள் பட்டைப்பணித்தருளாயே)''நாங்கள் இவற்றை யுடுத்துக்கொடுபோய் எங்கள் தாய்மார் முன்னே நிற்கப்புக்கால், 'இவை உங்களுக்கு வந்தவழியென்?' என்று ஆராயார்களோ; ஆனபின்பு எங்களுடைய பரியட்டத்தைத் தாராய்''என்கிருர்கள்.

---

செய்யத்தொடங்கினுன் கண்ணன். அதைக்கண்டு கூறுகிருர் கள்.—(*படிற்றையெல்லாம் தவிர்ந்து*) நீ பண்ணுகிற விடசேஷ்டை களையெல்லாம் கைவிடுவாயாக என்கிருர்கள். ''நீங்கள் என்னை நிர்ப்ப3ந்த4ப்படுத்துவதைக் கைவிடமாட்டீர்கள் என்ருல் என் வஸ்த்ரத்தை உடுத்துக் கொண்டு போங்கள்'' என்று தன் வஸ்த்ரத்தை அவிழ்க்கத் தொடங்கினுன். அதைக் கண்டு கூறுகிருர்கள் — (*எங்கள்பட்டைப் பணித்தருளாயே*) நாங்கள் உன் வஸ்த்ரத்தை உடுத்துக்கொண்டு போய் எங்கள் தாய் மார்முன்னே நின்ருல் கண்ணனுடைய வஸ்த்ரம் உங்களிடம் எப்படி வந்தது என்று ஆராயமாட்டார்களோ ? ஆகையால் எங்களுடைய வஸ்த்ரங்களைத் தருவாயாக என்கிருர்கள்.

---

ணுலே கண்டநுப4விக்கையாலே வேதனையில்லையென்ருன்; கண்டு அநுப4வித்தாயாகில் எங்கள் பரியட்டங்களை ஏதுக் காகக்கொண்டு போனுயென்ன ; ஆலோகநலாப4மாத்ரம் போராது, ஸம்ஶ்லேஷமும் வேணுமென்று தத3ர்த்த2மாகப் புடவைகளை வாரிக்கொண்டுபோனேனென்ன; பெண்களைத் திரட்டி ஸம்ஶ்லேஷிக்கவேணுமாகில் குடக்கூத்தாடு என்று இங்ஙனே ஸங்க3தி கண்டுகொள்வது.p அநப்4யுபக3ம்ய பக்ஷத் தில், ''படிற்றை'' என்றதுக்கு ஸங்க3தியாவது-இவர்கள் நிர் லஜ்ஜன் என்றவாறே சிவிட்கென்று சில மிறுக்குக்களைப் பண்ணினுனென்று. ''படிறு''-தீம்பு. q (தவிரிகோளாகில்) என்றதுக்குத் தாத்பர்யம் - என்னை மிறுக்குப் பண்ணுதே கொள்ளென்கிறதென் ? நீங்களேயன்ருே மிறுக்குப் பண்ணினிகோள்; ஆனபின்பு நீங்கள் மிறுக்குப் பண்ணுகை தவிரிகோளாகில் என்று இப்படி தாத்பர்யமருளிச்செய்வர்;



பஞ்சலக்ஷங்குடியில் பெண்களுக்கும் வேருரு பரியட்டங் கொடுக்கைக்குப் புடவைக் கட்டணம் எடுப்பித்துக்கொண்டு போனுனேவென்னில்; த்3ரௌபதி3யரையில் r துகிலோபாதி இவனும் ஒரு பேரிட்டுக்கொடுக்கிருன் வேணுமாகில்;s கோ3விந்த3 கோ3விந்த3 என்கிருள், வேணுமாகில். 6.

## மூன்ருந்திருமொழி—ஏழாம் பாட்டு

நீரிலே நின்றுஅயர்க் கின்ரேம் நீதியல் லாதன செய்தாய்
ஊரகஞ் சாலவுஞ் சேய்த்தால் ஊழியெல் லாம்உணர் வானே!
ஆர்வ முனக்கே யுடையோம் அம்மனை மார்காணி லொட்டார்
போரவி டாயெங்கள் பட்டைப் பூங்குருந் தேறியி ராதே.

பதவுரை:— ஊழி எல்லாம் — கற்பாந்தகாலத்திலெல் லாம், உணர்வானே—(ஜக3த்3ரக்ஷண சிந்தையுடன்) உணர்ந் திருப்பவனே ! நீரிலே நின்று--ஜலத்தில் நின்றுகொண்டு,

---

கண்ணன் ஒருவனுடைய வஸ்த்ரம் ஐந்து லக்ஷம் குடியில் பெண்களுக்கு எப்படிப் போதும்? இவர்கள் அனைவருக்கும் கொடுப்பதற்கு ஒரு வஸ்த்ர மூட்டை எடுத்துக்கொண்டு போயிருப்பதும் அஸம்ப4ாவிதமன்ருே'' என்று இங்கு ஓர் ஐயம் எழக்கூடும். இதற்குப் பரிஹாரமாவது — த்3ரௌபதி3க்கு கோ3விந்த3 நாமத்தையிட்டு ஏராளமாகப் புடவை சுரக்கச் செய்தவன் இவர்களுக்கு ஒரு பேரையிட்டு வஸ்த்ரத்தைச் சுரக்கச்செய்து கொடுக்கலாம் என்பதே. கண்ணனின் வஸ்த் ரத்தை வாங்கிக்கொண்டு அவர்களும் த்3ரௌபதி3யைப் போலே 'கோ3விந்த3 கோ3விந்த3' என்று நாமம் சொன்னுல் அது வளர்கிறது என்றும் கொள்ளலாம். 6.

---

s ''கோ3விந்த3 கோ3விந்த3'' என்ற வாக்யம் தாத்பர்யாந்தர மாகவும் அருளிச்செய்வர். r துகிலோபாதி என்றது-ஒரு துகிலே ஸஜாதீயமான அநேகம் துகிலாக அபி4வ்ருத்3த4 மாக்கினுற்போலே என்றபடி. s அன்றிக்கே, ஏகதாத்பர்ய மாய், பேரிட்டுக்கொடுக்கையாவதென்னென்ன (கோ3விந் தே3த்யாதி3). 6.

**அயர்க்கின்றோம்**—வருத்தப்படாநின்றோம்; **நீதி அல்லாதன**—அநீதியான செயல்களை, **செய்தாய்** — செய்யாநின்றாய் ; (உன் விஷமங்களுக்குத் தப்பி ஓடிப்பிழைக்கப் பார்ப்போமென்றால்), **ஊர்** — எங்கள் ஊராகிய ஆய்ப்பாடியும், **அகம்**—அதில் வீடுகளும், **சாலவும்**—மிகவும், **சேய்த்து**—தூ$_{3}$ரத்திலிராநின்றன; **ஆல்**—ஐயோ!; (இப்படி நீ எங்களை வருத்தச் செய்தேயும்), **உனக்கே**—உன்விஷயத்திலேயே, **ஆர்வம் உடையோம்**—நாங்கள் அன்புள்ளவர்களாயிராநின்றோம்; **அம்மனைமார்**—எங்கள் தாய்மார், **காணில்**—(உன்னுடன் ஸம்ஶ்லேஷிப்பதைக்) கண்டால், **ஒட்டார்**—இசையமாட்டார்கள்; **எங்கள் பட்டை**—எங்களுடைய சேலைகளை, **போர விடாய்**—எட்டும்படி தந்தருளாய்; **பூ குருந்து**—பூத்திராநின்ற குருந்த மரத்தின்மேல், **ஏறி இராதே**—ஏறிக்கொண்டு தீமைகளைச் செய்யாதே.

**வ்யா:—** ஏழாம் பாட்டு. (நீரிலேயித்யாதி$_{3}$) a கோழி கூவுவதற்கு முன்னே - b போதுவிடிந்து நீ உணர்வதற்கு முன்னே வந்து நீரிலே புகுந்து ஒருபடிப்பட நின்றத்தாலே அறிவு கலங்கிப் படுகிற க்லேஶத்தைப் பாராய். "நீங்கள்

---

*7. அவ:—* "தாமரைத் தண்டுகள் விஷத்தைக் கொட்டியது போலே துன்புறுத்துகின்றன" என்று சென்ற பாசுரத்தில் சொன்னபோதிலும் இரங்காமையாலே, "இப்படி நாங்கள் வருந்தும்போது நீதியற்ற இச்செயலைச் செய்து, உன்னிடம் அன்புடைய எங்களுக்கு அபவாத$_{3}$த்தையும் விளைத்து எங்களைத் துன்புறுத்தாதே" என்று அறிவுறுத்துகிறார்கள்.

*வ்யா:— (நீரிலே நின்று அயர்க்கின்றோம்)* கோழி அழைப்பதற்கு முன், போதுவிடிந்து நீ விழிப்பதற்கு முன் இங்கு வந்து, இக்குளிர்காலத்தில் நீரிலே நெடுநேரம் நின்றதாலே, அறிவுகலங்கி நாங்கள் படும் துன்பத்தைப் பார்ப்பாயாக.

---

அரு:— ஏழாம் பாட்டு. (நீரிலே இத்யாதி$_{3}$) a,b உக்த விவரணம் (போது விடிந்து இத்யாதி$_{3}$) c,d (சேய்த்தால்)



நீரிலேநின்று அறிவுகெட்டிகோளாகில், நான் மரத்திலே நின்று அயர்க்கிறது நெடும்போதில்லையோ, நீங்களன்றோ இதெல்லாம் பண்ணினிகோள்" என்ன, பரியட்டங்களையுங் கொடாதே சில விலாஸசேஷ்டிதங்களைப் பண்ணினான்; (நீதியித்யாதி$_{3}$) வாராய், இங்ஙன் முறைகெடப் பரிமாறலாகாது காண்! என்கிறார்கள். "இனி அதுகொடு காரியமென்? என் செய்கை செய்தோமிறே; நான் ஸ்வதந்த்ரனன்றோ; நான் செய்ததுக்கு நிவாரகருண்டோ? இனி நீங்கள் நம்மால் பட்ட இடரை ஊரிலே போய் முறைப்படமாட்டிகோளோ" என்றான்; "அது செய்யலாய்த்திறே; (ஊர் அகம் சாலவும் c சேய்த்தால்) d ஊர்தானே தூரிது. அவ்வளவும் வருந்திச் சென்றோமேயாகிலும், அதுக்குமேலே ஊரில் அகந்தான் சால தூரிதுகாண்" என்றார்கள். "நான் மிறுக்குப்பண்ணுநின்றே

---

இதைக்கேட்ட கண்ணன் "நீங்களே நீரில் நின்று அறிவுகேட்டை விளைத்துக்கொண்டீர்கள். உங்களால் நான் நீண்டநேரம் இம் மரத்திலே முடங்கிக்கிடந்து வருந்துகிறேன். இப்படி எனக்கும் துன்பத்தை விளைத்தவர்கள் நீங்களே" என்று கூறி வஸ்த்ரங்களையும் தராமல், சில காமுக வ்யாபாரங்களைச் செய்தான். அதைக்கண்டு சொல்லுகிறார்கள்—*(நீதி அல்லாதன செய்தாய்)* "நீ இப்படி நீதியற்ற செயல்களைச் செய்யலாமா?" என்றார்கள். இதைக்கேட்டு "நான் செய்வதைச் செய்துவிட்டேன். இது என் வழக்கம். ஸ்வதந்த்ரனான நான் செய்வதை யார் தடுக்க முடியும்? நீங்கள் என்னிடம் பட்ட இடரை ஊரில் போய் முறையிடுங்கள்" என்றான் கண்ணன். அதைக் கேட்டுச் சொல்லுகிறார்கள்—*( ஊர் அகம் சாலவும் சேய்த்தால் )* "இங்கிருந்து ஊரே மிகவும் தூ$_{3}$ரத்திலுள்ளது. ஊரை ஒருவாறு அடைந்தாலும், அதனுள் இருக்கும் எங்கள் அகங்கள் மிகவும் தூ$_{3}$ரத்திலுள்ளன. ஆகையால் எங்களால் முறையிட முடியாது" என்றார்கள். இதைக்கேட்டு "நானோ நீதியற்ற செயல்களைச்

---

சேய்த்து—தூரிது; "ஊர்—சேய்த்து; அகம் சாலவும் சேய்த்து" என்று அந்வயம். ஆல் — விஷாத$_{3}$ஸூசகம்.

ஞகில்; ஊரகம் சாலவும் தூரிதாகில்; இனி இதுக்குமேல் போக்கடியாக நீங்கள் நினைத்திருந்தெதன் ?'' என்றான் ; (e ஊழியெல்லாம் e2 உணர்வானே) f பிறரால் வந்த நலிவோடு g தந்தாமால் வந்த நலிவோடு வாசியற உன்னைக் கொண்டு h தீர்க்குமாபோலே, உன்னால் வந்த நலிவுக்கும் நீயே போக்கடிசொல் என்றார்கள்; i உன்னையொழிந்த காலோபலக்ஷித ஸகல பதா3ர்த்த2ங்களும் அழிந்தவன்று

---

செய்கிறேன். ஊரகமோ முறையிடமுடியாதபடி மிக தூ3ரத்திலுள்ளது. இனி இதற்குமேல் உங்களுடைய துன்பத்திற்குப் பரிஹாரமாக நீங்கள் நினைத்திருந்தது என்ன?'' என்றான். பரிஹாரம் நீயே சொல்லவேணும் என்கிறார்கள் — (*ஊழி எல்லாம் உணர்வானே*) உலகனைத்தையும் பிரளயம்கொண்ட போது. உலகை வயிற்றிலே வைத்து ரக்ஷித்து, அதை மேலும் ரக்ஷிக்கும் வழியை ஆராய்ந்துகொண்டு உணர்ந்திருப்பவனே! ''பிறரால் வந்த துன்பங்களையும், தாமே வரவழைத்துக்கொண்ட துன்பங்களையும் உன்னைக்கொண்டே தீர்த்துக்கொள்ளுவதுபோலே, உன்னால் வந்த துன்பத்திற்கும் நீயே பரிஹாரம் சொல்லவேணும். ஸ்ருஷ்டிகாலத்தில் இருந்த,

---

f பிறரால் வந்த நலிவாவது - ப்ரளயத்தால் வந்த நலிவு என்றபடி. g தந்தாமால் வந்த நலிவாவது-அதுக்கும் அடியான தந்தாமுடைய அபதே2ப்ரவ்ருத்தி கண்டு ஈஶ்வரன் கரணங்களைக் குலைத்திட்டு வைக்கையாகிற நலிவு என்றபடி. h (தீர்க்குமாபோலே) என்றது - சேதநர் தீர்த்துக்கொள்ளுமாபோலே என்றபடி. ப்ரளயங்க3தரான சேதநர்க்கு,இத்தைப்பரிஹரித்துத்தரவேணுமென்னும்அபேக்ஷை அநந்தரமாகிலும்கூடுமே; அத்தைப்பற்றச் சொல்லுகிறது என்றருளிச்செய்வர். e2 இந்தப்பக்ஷத்தில், ''உணர்வான்'' என்றது - இவர்கள் அபேக்ஷாநுகு3ணமாக ப்ரளயாத்3யாபத்துக்களைப் பரிஹரிக்கைக்கீடான அறிவைச்சொல்லுகிறதென்று தாத்பர்யம். e,i ''ஊழியெல்லாமுணர்வான்'' என்றதுக்குத் தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (உன்னை



அவற்றுக்குப் போக்கடி தேடவல்ல நீயே போக்கடி தேடுமித்தனையன்றோ. 47. ''सदेव'' (ஸதே3வ) என்னும்படியானவன்று, 48. ''बहु स्याम्'' (ப3ஹு ஸ்யாம்) என்று போக்கடி பார்க்கவல்ல நீ பார்க்குமித்தனையன்றோ. ''நாம் போக்கடி பார்த்து நல்வழிபோக்கலாய்த்திறே அந்த ஜக3த்துக்கு அப்ரதிஷேத4முண்டாகையாலே; உங்கள்பக்கல் இது இல்லையென்றான்; ''அப்ரதிஷேத4மாத்ரமேயன்று (ஆர்வமுனக்கேயுடையோம்) எங்கள் பக்கலிலும் அதுக்கொரு குறையில்லை காண். நீ அதறிந்திலை ; இத்தனையுள்ளது'' என்கிறார்கள்.

---

உன்னைத் தவிர்ந்த எல்லாப் பொருள்களும் அழிவடைந்த பிரளயகாலத்தில் அவற்றை மறுபடியும் ஸ்ருஷ்டிப்பதற்கு வழிதேடவல்ல நீயே எங்கள் துன்பம் தீரவும் வழிதேடவேணும்.

47. ஸதே3வ ஸோம்யேத3மக்3ர . ஆஸீதே3கமேவாத்3விதீயம்
[சா2ந்தோ3க்3யம் 6·2·1]
[குழந்தாய் ! (நாமரூபங்களுடன் காணப்படும்) இந்த உலகம் ப்ரளயகாலத்தில் (நாமரூபங்களில்லாமையால்) ஒன்றாகவும், (தன்னைப்போல் வேறொன்றில்லாததால்) இரண்டற்றதாகவுமிருந்த 'ஸத்' எனப்படும் ப்3ரஹ்மமாகவே இருந்தது.] என்கிறபடியே எல்லாப்பொருள்களும் உன்னிடம் ஒடுங்கினபோது, [பக்கம் 77-ல் உள்ள 27-வது ப்ரமாணத்தில் சொன்னபடி] அவையனைத்தும் மறுபடி உண்டாக வழி தேடினவன் நீயேயன்றோ.'' என்று கருத்து. இதைக்கேட்ட கண்ணன் ''அந்த உலகம் நான் செய்த நன்மையைத் தடுக்காமையாலே, அதற்கு நான் நல்லது செய்யமுடிந்தது. நீங்கள் நான் செய்யும் நன்மையைத் தடுக்கிறவர்களாயிருக்கிறீர்கள்'' என்று கூற பதிலுரைக்கிறார்கள் — (*ஆர்வம் உனக்கே உடையோம்*) ''நீ செய்யும் நன்மையைத் தடுக்காமை மாத்திரமல்ல. உன்னிடம் பேரன்பையும் உடையவர்களன்றோ நாங்கள். நீ அதை அறியவில்லையே'' என்கிறார்கள். இதைக்கேட்ட

---

யொழிந்த இத்யாதி3) e2 இந்தப் பக்ஷத்தில், ''உணர்வான்'' என்றது—ஸ்ருஷ்டிக்குஅடியான ஸங்கல்பரூபஜ்ஞாநத்தைச்

j "நானறிவேனே இந்தக் கூட்டெழுத்தை? k இல்லையாகில் அநிஷ்டகார்யம் ப$_2$லியாநிற்க, 'ஆர்வமுனக்கேயுடையோம்' என்கையாவதென்? ஒரு உக்தி அமையுமோ; அதின் கார்யமும் ப$_2$லிக்கவேண்டாவோ?" என்றான்; "அது நாங்கள் வேண்டோமோ? (l அம்மனைமார் காணிலொட்டார்) பிறரைப் பரிஹரிக்கவேணுமென்றிருந்தோமித்தனைகாண்" என்றார்கள். "நானும், நீங்கள் பட்டுகளும் உடுத்து, மந:ப்ரீதியோடே போய் உங்களகங்களிலே புக்கிருந்து விளையாடவன்றே வேண்டி யிருப்பது; பட்டுத்தர நெஞ்சு இசைகிறதில்லை; அத்தை இசைவித்துத் தரவேணும்" என்றான்; "நீ நெஞ்சொழியத் தந்தாலும் அமையும் எங்களுக்கு" என்றார்கள்; "ஆகில்

---

கண்ணன் "நீங்கள் சொல்லுவது கூட்டெழுத்துபோலே எனக்குப் புரியாததாயிருக்கிறது. எனக்கு அநிஷ்டமான காரியத்தைச் செய்துகொண்டு, உன்னிடம் பேரன்பு உடையோம் என்று சொல்லுவது பொருந்துமா? ஆர்வம் உடையோம் என்று வாயால் சொல்லிவிட்டால் போதுமா? அதன்படி நடக்கவேண்டாமா?" என்றான். அதற்குக் கூறுகிறார்கள்— *(அம்மனைமார் காணில் ஒட்டார்)* "எங்களுடைய அன்பின் காரியமான ஸம்ச்லேஷத்தை நாங்களும் விரும்பவே செய்கிறோம். ஆனால் எங்கள் தாய்மார்கள் அதற்குச் சம்மதிக்கவில்லையே. அவர்களைச் சம்மதிக்கச் செய்து ஸம்ச்லேஷிக்கலாம் என்றிருக்கிறோம்" என்றார்கள். இதைக்கேட்ட கண்ணன் "நீங்கள் பட்டுக்களை உடுத்து, உள்ளம் உகந்து, உங்கள் அகங்களிலே புகுந்து விளையாடவேண்டுமென்றே நானும் விரும்புகிறேன். ஆனால் உங்கள் பட்டுக்களைத் தருவதற்கு என் நெஞ்சு இசையமாட்டேன் என்கிறதே. எப்படியாவது அதை இசையச்செய்து தருகிறேன்" என்றான். இதைக் கேட்ட கோ$_3$பிகள் "நீ நெஞ்சொழியத்தந்தாலும் போதுமே" சொல்லுகிறது.

---

j (நானறிவேனே) இத்யாதி$_3$ வாக்யம் உத்தர ப்ரத்யுத்தரம். (நானறிவேனே இந்தக் கூட்டெழுத்தை) என்று அவன் வார்த்தை. k இல்லையாகில் - ஸ்நேஹமில்லையாகில் என்று இவர்கள் வார்த்தை. l அம்மனை-



பிடியுங்கோள்" என்று பரியட்டத்தை எடுத்துச் m செண்டிலேயேறிட்டு இவர்களுக்கு எட்டிற்று எட்டாததாக நாற்றி, முகத்தைமாறிச் சில பூக்களிலே கண்ணைவைத்து அந்யபரைப்போலேயிருந்தான்; (போரவிடாயித்யாதி$_3$) எங்களுக்கு எட்டும்படி தாராய். பரியட்டங்களை வாரிக்கொண்டு போய் இவர்களுக்கு எட்டாதபடியிருந்ததுக்கு மேலேயொன்றிறே n இது. 7.

## மூன்றாந்திருமொழி—எட்டாம் பாட்டு

மாமிமார் மக்களே யல்லோம் மற்றுமிங் கெல்லாரும் போந்தார்
தூமலர்க் கண்கள் வளரத் தொல்லை யிராத்துயில் வானே!
சேமமே லன்றிது சாலச் சிக்கன நாம்இது சொன்னோம்
கோமள வாயர் கொழுந்தே! குருந்திடைக் கூறை பணியாய்.

பதவுரை:— தொல்லை இரா — பழைய ராத்ரிகளில், தூ மலர் கண்கள் வளர — பரிசுத்$_3$த$_4$மான மலர் போன்ற கண்கள் நித்$_3$ராபரவசமாம்படி, துயில்வானே — பள்ளி கொள்பவனே! (இப்பொய்கைக் கரையிலே நிற்குமவர்கள்), மாமிமார் மக்களே அல்லோம் — உனக்குத் தேவிமாராகும்

---

என்றார்கள். "அப்படியானால் பிடியுங்கள்" என்று சில வஸ்த்ரங்களை எடுத்து, விளையாட்டுக்காகத் தான் கையிலே வைத்திருக்கும் 'செண்டுகோல்' என்னும் கைத்தடியிலே வைத்து, இவர்களுக்கு எட்டினதுபோல் இருந்து, உண்மையில் - எட்டாததான கிளையிலே வைத்து, தன் முகத்தை வேறுபுறம் திருப்பிக்கொண்டு மரத்திலுள்ள சில பூக்களின் அழகைக்கண்டு ரஸிப்பவன்போலேயிருந்தான். அதைக்கண்டு கூறுகிறார்கள் — *(போரவிடாய் எங்கள் பட்டை பூங்குருந்தேறியிராதே)* எங்களுக்கு எட்டும்படி வஸ்த்ரங்களை நன்றாகத் தாழ்த்தியருள்வாய். வஸ்த்ரங்களை வாரிக்கொண்டுபோய் எங்களுக்கு எட்டாதபடி வைத்ததுக்குமேலே, எட்டியும் எட்டாமலும் இருக்கும்படி தாழவிட்டுப் பூக்களின் அழகை ரஸிப்பவன்போலே இருந்து எங்களைப் படுகுலையடிக்காதே— என்கிறார்கள். 7.

---

தாய். m செண்டிலே - செண்டுகோலிலே. n இது-போரவிடாதது; எட்டும்படி விடாதது என்றபடி. 7.

முறையிலுள்ளார் மாத்திரமல்லோம்; மற்றும் எல்லாரும்—மற்றுமுள்ள மாமிமார், அவர்கள் தாய்மார் முதலியவர்களும், இங்கு-இவ்விடத்தில், போந்தார்-வந்திருக்கின்றார்கள்; இது—நீ செய்கிற இத்தீம்பானது, சால—மிகவும், சேமம் அன்று — தகுதியானதன்று; இது — இவ்வார்த்தையை, நாம்—நாங்கள், சிக்கன— உண்மையாக, சொன்னோம்—சொல்லுகின்றோம், ஆயர்—இடையர்களுக்கு, கோமளக் கொழுந்தே—இளங் கொழுந்து போன்றவனே!, குருந்திடைக் கூறை பணியாய்—.

வ்யா:— எட்டாம் பாட்டு. (மாமிமாரித்யாதி$_3$) இவன் ஒரு காலைக்கொருகால் மிகைசெய்யப்புக்கவாறே. ஊரில் இவை செய்யாதே இங்கே இவை செய்கிறதுக்குக் கருத்து;—தனியிடத்திலே செய்ததுக்கு ஆராய்ச்சியில்லையென்றிறே ; இவையடைய ஊரிலேயும் வார்த்தையாங்காண் என்றார்கள்; "aஊரில் வார்த்தையாகிறதென் ? நீங்களேயன்றோ இங்கே வந்திகோள்; b நான்தான் தீம்பனன்றோ; நீ தீம்பு செய்வானென்னென்றால், மைத்துனமையாலே செய்தேன் என்று எனக்கு மறுமாற்றமுண்டு

---

அவ:— 'நீதியல்லாததைச்செய்து எங்களைத் துன்புறுத்தாதே' என்று சென்ற பாசுரத்தில் அறிவுறுத்திய பின்பும் வஸ்த்ரங்களைத் தராமையால், 'உனக்குக் கூசவேண்டும்படியான உறவுமுறையையுடைய மாமிமார் முதலியவர்களும் இங்கு வந்திருக்கிறார்களாகையாலே அவர்களுக்கு முன்னே இப்படித் தீம்புசெய்து அபவாத$_3$த்தை விளைத்துக்கொள்ளாதே' என்று அறிவுறுத்துகிறார்கள்.

வ்யா:— *(மாமிமார் மக்களே அல்லோம் மற்றும் இங்கு எல்லாரும் போந்தார்)* கண்ணன் மேன்மேலே தீம்புகளை மிகுதியாகச் செய்யப்புகுந்தான். 'ஊரில் செய்யாத செயல்களையெல்லாம் இங்கு செய்வதற்குக் காரணம் இதை ஊரார் அறியமாட்டார்கள் என்னும் எண்ணத்தாலே' என்று உணர்ந்து, "ஊரிலுள்ளவர்களும் உன் தீம்புகளை அறிந்துவிடுவார்கள்" என்று ப$_4$யமுறுத்தினார்கள். "ஊரில் அபவாத$_3$ம் விளைந்தால், 'நான் மணம் புரியக்கூடிய வயஸ்ஸும் முறையும் உடையவர்களோடுதானே இத்தீம்புகளைச் செய்தேன்' என்று பதில்சொல்லிவிட்டுப் போகிறேன்" என்று



என்ன; (மாமிமார் மக்களேயல்லோம்) ஓரூராக நோற்கப் போந்தவிடத்திலே வெறும் மாமிமார் மக்களாயிருப்பார்களோ? (c மற்றுமிங்கெல்லாரும் போந்தார்) அவர்களைப் d பெற்றவர்களுமுண்டாயிராதோ? நீ நினைத்தவர்களல்லகாண் இங்குப் போந்தார்; உன்க்குக் கூச்சு முறையுடையாரெல்லாரும் போந்தார்கள்காண் ; ஆகையால் இங்குப் பிறந்தவை ஊரிலும்

---

உரைத்தான் கண்ணன். அதற்குச் சொல்லுகிறார்கள்—*(மாமிமார் மக்களே அல்லோம்)* ஆய்ப்பாடி முழுவதும் நோன்பு நோற்கப் புகுந்தார்களாகையாலே, உனக்கு மாமிமார் மக்கள் முறையுடையவர்கள் மாத்திரமல்லாமல் அவர்களைப்பெற்றவர்கள் முதலான வயதில் மிக்கவர்களும் இங்கு வந்திருக்கிறார்கள். ஆகையால் நீ நினைத்தபடி, ஆயர் சிறுமியர்கள் மட்டுமல்லாமல், நீ இத்தகைய செயல்களைச் செய்யக் கூசவேண்டும்படியான மாமிமார் முதலானவர்களும் இங்கு வந்திருக்கிறார்கள் அவர்கள் இங்கு நீ செய்தவற்றை ஊரிலும் போய்ச் சொல்லுவார்கள் — என்று ப$_4$யமுறுத்தினார்கள் ஆய்ச்சிகள். அதைக் கேட்ட கண்ணன் "நீங்கள் என்னை அறிந்திருந்தும் நானும் நீங்களும் ஏகாந்தமாக ஸம்ஶ்லேஷிப்பதற்கு இடையூறாயிருக்கும் இவர்களைக் கூட்டிவரலாமோ?" என்றான். இதைக் கேட்டுச் சொல்லுகிறார்கள் — *(தாமலர்க் கண்கள் வளரத் தொல்லையிராத் துயில்வானே)* "உன்னோடு பழகிய பழைய

---

அரு:—எட்டாம் பாட்டு. (மாமிமாரித்யாதி$_3$) a வார்த்தையாம் என்றத்தை அங்கீ$_3$கரியாமல் சொல்லுகிறான் (ஊரில் வார்த்தையாகிறதென்) என்று ; b வார்த்தையாம் என்றத்தை அங்கீ$_3$கரித்துச்சொல்லுகிறான் (நான்றான் தீம்பனன்றோ) என்று. d (பெற்றவர்களும் உண்டாயிராதோ) என்றது - அவர்கள் தாய்மாரும் ஊரிலேயுண்டாயிருக்குமே; இவர்கள் போய்த் தாய்மாரோடே சொல்லுவர்களே; ஆகையாலே உனக்குக் கூசவேண்டும்படி முறையில்லாத மற்றைப்பெண்களும் வந்தார்களென்றபடி. c "மற்றும்" என்றது - "மக்கள்" என்றதுக்கு ப்ரதிகோடியான மாமி

வார்த்தையாங்காண். ‘நீங்கள்தான் நம்மை அறிவுதிகோளே; நம்மையறிந்தால் நாமும் நீங்களுமான பரிமாற்றத்துக்கு வேண்டாதாரைக் கொடுவரக்கடவிகோளோ’ என்றான்; (தூமல ரித்யாதி$_3$) நீ பண்டுபோலேயே இப்போது என்றிருந்தோம், இப்போதாக வேறொருபடியாவதறிந்தோமோ? e பழைய ராத்ரி களில் முற்கூறெல்லாம் பெண்களோடே தீம்பு செய்து பிற்கூறு உறங்கிப் போரக்கண்டபடியாலே இப்போதும் அப்படி யென்றிருந்தோம்; நீ எங்களுக்கு முன்னேயுணர்ந்துவந்து முற்பாடனாய்வந்து நிற்பது நாங்களறிந்திலோங்காண்; ‘இனி அதுகொடு காரியமென்? முற்பாடராய்வந்து நின்றோமே’ என்று அதுக்குமேலே சில மிகைகளைச் செய்யப்புக்கான்; (fசேமமித்யாதி$_3$) வாராய்; நீயும் நாங்களுமான பரிமாற்றம் உருவச்செல்லவேணும் என்று இங்ஙன் சொல்லிப்போருவ துண்டு; அதுக்கு உடலல்லகிடாய் நீ இப்போது செய்கிறவை;

---

இரவுகளில் முன்னிரவெல்லாம் பெண்களோடு வம்பு செய்து விட்டு, பின்னிரவெல்லாம் நீ ஆழ்ந்து உறங்குவதை நாங்கள் கண்டிருந்தபடியாலே, இப்போது நீ உறங்கிக் கொண்டிருப் பாய் என்று நினைத்து இவர்களையும் கூட்டிக்கொண்டு வந்தோம். முன்னெல்லாம் நீ நடந்ததற்கு முரணாக இப்போது நடப்பாய் என்று நாங்கள் உணரவில்லை. எங்களுக்கு முன்னே விழித்து, முன் கூட்டி நீ இங்கு வந்து நிற்பதை அறியவில்லை.” என்றார்கள். “இனி அதைச் சொல்லிப் பயனென்ன? உங்க ளுக்கு முன்னதாகவே நான் வந்து நிற்பதைப் பார்க்கிறீர் களன்றோ?” என்று மேலேயும் சில அதி$_4$கப்ரஸங்க$_3$ங்களைச் செய்யத் தொடங்கினான் கண்ணன். அதைக் கண்டு சொல்லு கிறார்கள் — (*சேமமேல் அன்றிது சால*) “நீ செய்வது நமக்கு மிகவும் நல்லதன்று. நீயும் நாங்களும் எப்போதும் கூடியி ருக்கவேண்டும் என்று நாம் சொல்லிக் கொண்டிருக்கிறோம்.

---

மார்களைச் சொல்லுகிறது. e தொல்லை-நெடுமை; தொல்லை யிரா - தூமலர்க் கண்கள்வளர - துயில்வான் என்றபடி. மீமிசை; நன்றாக நித்$_3$ரைபண்ணுகை. f சேமம்–க்ஷேமம்.



இது ரக்ஷைபெற்றுப் போருவதொன்றல்ல; இவ்வளவிலே தலைக்கட்டுங்கிடாயென்ன; இது ஆர்தான் சொன்னாரென்றான்; (நாம் இதுசொன்னோம்) என்கிறார்கள். ‘ஆகில் இவ்வாசார்ய வசநம் அதிலங்கி$_4$க்கலாகாது; ஒக்குமொக்கும்; g உங்கள் வார்த்தையன்றோ’ என்றான்; அப்படியல்லகாண் (h சிக்கனச் சொன்னோம்) ப்ரதிபத்தி பண்ணாதார்க்குக் குற்றத்தாலே வந்ததாமத்தனைகிடாய் இனிமேல்வரும் அநர்த்த$_2$ம் என்றார்கள்; ‘ஓம், இந்த கு$_3$ருவசநாதிலங்க$_4$நம் பண்ணின நான் புக்க

---

நீ செய்கிற இக்காரியங்கள் அதை நடக்காமல் செய்துவிடும். நீ செய்கிற காரியத்தினால் நாம் மறுபடியும் ஒன்று சேரவே முடியாமல் போய்விடும் என்றார்கள். ‘இது யார் சொன்னீர் கள்?’ என்றான் கண்ணன். அதைக் கேட்டு (*நாம் இது சொன்னோம்*) என்றார்கள். அதைக் கேட்டு ப$_4$யந்ததுபோலே நடித்து “இவ்வாசார்ய வசநத்தை எப்படி மீறமுடியும்? நீங்கள் சொல்லுவது பொருத்தமே. நீங்களல்லவோ சொல்லி விட்டீர்கள்” என்றான் கண்ணன். அதைக் கேட்டு “இப்படி விளையாட்டாக எண்ணாதே. (*சிக்கனச் சொன்னோம்*) உண்மை யாகச் சொன்னோம். நீ அதை உணரவில்லையென்றால், அந்த உன் குற்றத்தாலே இனிமேல் பல அநர்த்த$_2$ங்கள் வரப் போகின்றன” என்றார்கள். அதைக் கேட்ட கண்ணன் “அப்படியே. இந்த ஆசார்யவசநத்தை மீறின நான் எந்த நரகத்திற்கு வேண்டுமானாலும் போகிறேன்” என்று கூறி,

---

ஏல் - அசை. சால அமைந்து விடும். இது தெலுங்கு, ஆகையாலே, ஸம்ஶ்லேஷம் முற்ற நடவாது என்றபடி. g (உங்கள் வார்த்தையன்றோ என்றான்) என்றதுக்குத் தாத் பர்யம் - உங்கள் வார்த்தை ஸத்யமன்றே என்றபடி. h “சிக்கன” என்றது - ஸத்யமென்றபடி. அன்றிக்கே, ஆசார்யன் கௌ$_3$ரவ்யனாகையாலே அவன் எது சொன்னா லும் கேட்கவேணும்; அநுத்$_3$தே$_3$ஶ்யரான உங்கள் வார்த்தை யன்றோ என்றான் என்னவுமாம். சிக்கன - ஸத்யமாக. இதிலும் முந்தின நிர்வாஹத்திலே ஔசித்யமுண்டு

லோகத்திலே புகுகிறேன்' என்று, அவற்றிலே i திருவரைக்குத் தகுதியாயிருப்பன சில பரியட்டங்களைத் திருவரையிலே சாத்தி, சேஷித்தவற்றைக் குருந்திலேயிட்டுவைத்து, 'கண்டிகோளே இவை நம் j ஸௌகுமார்யத்துக்குச் சேர்ந்திருந்தபடி! என்ன, ' j அழகிதாயிருந்தது ; நாங்கள்தான் அவற்றைத் தரச்சொன்னோமோ? மேன்மையில்லாத மரத்திலே கிடக்கிறவற்றைத் தா ' என்கிறார்கள். 8.

## மூன்றாந்திருமொழி—ஒன்பதாம் பாட்டு

**கஞ்சன் வலைவைத்த வன்று காரிரு ளெல்லில் பிழைத்து**
**நெஞ்சுதுக் கஞ்செய்யப் போந்தாய்! நின்றஇக் கன்னிய ரோமை**
**அஞ்ச வுரப்பா ளசோதை ஆணாட விட்டிட் டிருக்கும்**
**வஞ்சகப் பேய்ச்சிபா லுண்ட மசிமை யிலீகூறை தாராய்.**

பதவுரை:— **கஞ்சன்** — கம்ஸனானவன், **வலை வைத்த அன்று** — உன்னை அழிப்பதாக நினைத்த காலத்தில், **கார் இருள்** — மிக்க இருளையுடைத்தான, **எல்லில்** — இரவில், **பிழைத்து**—பிழைத்து, **நின்ற**—நிற்கின்ற, **இக் கன்னியரோமை**—இளம்பெண்களான எங்களுக்கு, **நெஞ்சு துக்கம்**

இவர்களுடைய வஸ்த்ரங்களிலே தனக்குத் தகுதியாயிருக்கும் மென்மை மிக்க சிலவற்றைத் தன் திருவரையிலே சாத்தி, மற்ற வஸ்த்ரங்களைக் குருந்த மரத்திலே இட்டுவைத்து, 'பார்த்தீர்களா, இவை நமது மென்மைக்குப் பொருந்தியிருக்கும்படியை' என்று கூற, சொல்லுகிறார்கள்—(*கோமள ஆயர் கொழுந்தே! குருந்திடைக் கூறை பணியாய்*) "அழகாயிருக்கிறது. மென்மை மிக்க ஆயர்கொழுந்தான உனக்குத் தகுதியாயிருக்குமவையாய் நீ சாத்தியிருக்கும் வஸ்த்ரங்களை நாங்கள் தரச்சொல்லவில்லை. உன் திருமேனி ஸம்பந்தமாகிற சிறப்பில்லாமல் மரத்திலே கிடக்கிற வஸ்த்ரங்களைத் தருவாயாக" என்கிறார்கள். 8

j கோமளம் - இளமை. i (திருவரைக்குத் தகுதி) என்கையாலே மெல்லிய புடவைகளைச் சாத்திக்கொண்டு பரும் புடவைகளை மரத்திலே பொகட்டுவைத்தானென்றபடி. 8.



**செய்ய**-மனத்துன்பத்தை உண்டாக்குவதற்காக, **போந்தாய்**—வந்து பிறந்தாய்; **அசோதை**—யசோதைப் பிராட்டியோ வென்றால், **அஞ்ச**—நீ பயப்படும்படி, **உரப்பாள்**—உன்னை அதட்டமாட்டாள் ; **ஆணாட விட்டிட்டிருக்கும்** — தீம்பிலே கைவளரும்படி உன்னை விட்டிராநின்றாள் ; **வஞ்சகம்**—வஞ்சனையையுடைய, **பேய்ச்சி**—பூதனையினுடைய, **பால்**—முலைப்பாலை, **உண்ட** — ( அவளுயிரோடேகூட ) உறிஞ்சியுண்ட, **மசிமை இலீ** — லஜ்ஜையில்லாதவனே ! **கூறை தாராய்**—சேலைகளைத் தந்தருள்.

**அவ:— ஒன்பதாம் பாட்டு. a இவனுக்கு ஆகாரத்வயமுண்டு. அதாவது - ஏத்தினார்க்கும் காரியம் செய்யும் ; வைதார்க்கும் காரியம் செய்யும். அதில் ஏத்திப்பார்த்தவிடத்தில் ஒன்றும் பலித்ததில்லை; இனி வைதால் காரியஞ்செய்யுமாகில் அத்தைச் செய்து பார்க்கிறோமென்று வைகிறார்கள்.**

**வ்யா:—** (கஞ்சன் வலைவைத்த அன்று) **அவன் உபயவிபூதியையும் அழிக்கக்கோலின அன்று. ஸத்தாயோகி**

9. *அவ:—* கண்ணனுக்கு இரண்டுவிதமான தன்மைகள் உண்டு. அதாவது, பஞ்சபாண்டவர்கள் முதலானாரைப்போலே இவனைத் துதித்தவர்களுக்கும் விருப்பத்தையளிப்பான். சிசுபாலனைப் போலே வைதவர்க்கும் நல்லது செய்வான். இதுவரையில் இவனைத் துதித்துப் பார்த்து ஒன்றும் பலிக்கவில்லை. ஆகையால் இவனை இனி வைது, அதனாலாவது நம் காரியம் ஆகிறதா என்று பார்ப்போம் என்று எண்ணி, இப்பாசுரத்தில் அவனை வையத் தொடங்குகிறார்கள்.

*வ்யா:—* (*கஞ்சன் வலைவைத்த அன்று*) கம்ஸன் கண்ணனையே அழிப்பதன் மூலம் நித்யவிபூதி, லீலாவிபூதி என்னும் இரு விபூதிகளையும் வலைவீசி அழிக்க முற்பட்ட அன்று. உள்ள

அரு:—ஒன்பதாம் பாட்டு. (கஞ்சனித்யாதி) a அவனைக் கார்யம்கொள்ளப்பார்க்கிறவர்கள் வைவானென்னென்ன,

ஸகல பதா3ர்த்த2ங்களையும் முடிக்கக்கோலின அன்று. bவிபூ4தி அழிந்தால் அவனுளனாக உண்டாக்கிக் கொள்ளலாம். அவனுக்கு ஒரு நலிவு பிறந்தால் பின்னை ஒன்றுமில்லையிறே. c49. “स्तन्यं तद्विषसंमिश्रं रस्यमासीज्जगद्गुरोः” (ஸ்தந்யம் தத்3விஷஸம்மிஶ்ரம் ரஸ்யமாஸீஜ்ஜக3த்3கு3ரோ:). dவிஷந்தானே தா4ரகமானபின்பாய்த்து, ஜக3த்துக்கு ஒருஶேஷியுண்டாய்த்து. விஷம் பா3த4கமாவது,அம்ருதம் தா4ரகமாவது என்னும் மர்யாதை3கள்

---

பொருள்கள் அனைத்தையுமே அழிக்கமுற்பட்ட அன்று அவனுடைய செல்வமான இவ்விபூ4திகள் அழிந்தாலும், அவன் இருந்தால் இவற்றை உண்டாக்கிக் கொள்ளலாம். அவனுக்கே அழிவு பிறந்தால் அவனாலே ஸத்தை பெறும் எல்லாப்பொருளுமே இல்லையாய் விடுமன்றோ. அதனாலே இன்னாருக்கு வலை வைத்த என்று சொல்லாமல், பொதுவாக வலைவைத்த என்கிறார்கள்.

49. ஸ்தந்யம் தத்3 விஷஸம்மிஶ்ரம் ரஸ்யமாஸீத் ஜக3த்3கு3ரோ:।
[ஹரிவம்சம் விஷ்ணுபர்வம் 6-39]

*[விஷங்கலந்த அந்த முலைப்பாலானது ஜக3த்ஸ்வாமியான கிருஷ்ணனுக்கு இனியதாயிருந்தது.]* என்கிற ப்ரமாணத்தில் ரிஷியும் இவ்வர்த்த2த்தை அறிவித்தார். ‘விஷங்கலந்த பூதனையுடைய முலைப்பால் கண்ணனுக்கு அமுதம் போலே தா4ரகமான பின்பே ஜக3த்துக்கு அவன் ஸ்வாமியாயிருப்பது நிலைநின்றதாயிற்று’ என்னும் கருத்துத் தோன்ற ‘ஜக3த்3கு3ரு’ என்று கண்ணனை நிர்த்தே3ஶித்தாரன்றோ ரிஷி. விஷம் கண்ணனுக்கு எப்படி அமுதம் போலே தா4ரகமாயிற்று? எனில், ‘விஷம் அழிக்கும் பொருள். அமுதம் உயிர் தா4ரிக்கச்செய்யும்

---

அருளிச்செய்கிறார் (இவனுக்கித்யாதி3) b அவனுக்குத் தீங்குவந்தால் விபூ4தி அழியுமோவென்ன, அருளிச்செய்கிறார் (விபூ4தி அழிந்தாலித்யாதி3) c அவனுண்டானால் விபூ4தியுண்டாமோவென்ன, அருளிச்செய்கிறார் (ஸ்தந்யமித்யாதி3) ரஸ்யமான அநந்தரம் க்ருஷ்ணனானான் என்னவேண்டியிருக்க, 49. “जगद्गुरोः” (ஜக3த்3கு3ரோ:) என்றதிறே என்றபடி. d விஷம் அம்ருதமாகக்கூடுமோவென்ன, அருளிச்



கட்டினவன் பக்கல் அது கார்யம் செய்யமாட்டாதே. (e காரிருளெல்லில் பிழைத்து) அவன் தப்பாதபடி நலியக்கோலினான்; அற்றையளவிலே ரக்ஷகமாகைக்கு ஓரிருளுண்டாவதே ! கொடுபோகிற இடத்தில் பிறர்க்குத் தெரியாதபடி கொடுபோகலாம்படி திருமேனியோடொத்த நிறமாகையும், காத்துக் கிடக்கிறவர்களுக்கு நித்3ரா பாரவஶ்யத்துக்கு உடலாகையும் இரண்டு முண்டிறே. f “வீங்கிருள்வாய் பூண்டு அன்றன்னை புலம்பப்போய் அங்கோராய்க்குலம் புக்கதும்” என்னக்கடவதிறே. g இதுக்குப் பிள்ளையுறங்காவில்லிதா3ஸர் “இவன்தான் பருவம் நிரம்பாமையாலே தன்னை நோக்கிக்கொள்ள மாட்டிற்

---

பொருள்’ என்னும் வரம்புகளை ஏற்படுத்தினவனே இவனாயிற்றே; அப்படியிருக்க, விஷம் எப்படி இவனை அழிக்க முடியும்? ஆகையாலே அது அமுதம் போலே இவனுக்கு தா4ரகமாகக் குறையில்லை. அதனாலேயே ‘தூய குழவியாய் விடப்பால் அமுதா அமுது செய்திட்ட மாயன்’[திருவாய் 1-5-9] என்று நம்மாழ்வாரும் அருளிச்செய்தார். *( காரிருள் எல்லில் பிழைத்து )* கம்ஸன் கண்ணன் தப்பமுடியாதபடி அழிவதற்குத் திட்டமிட்டான். அப்படியிருந்தும் ஓர் இருள் ரக்ஷித்துவிட்டதே! என்று கருத்து. நள்ளிருளிலே மதுரையிலிருந்து திருவாய்ப்பாடிக்கு வஸுதே3வர் கண்ணனைக் கொண்டுபோகும்போது இருளன்ன மாமேனியான கண்ணனுடைய திருமேனி நிறத்தை ஒத்திருந்தபடியாலும், சிறையிலே தே3வகி வஸுதே3வர்களைக் காத்துக்கிடந்தவர்கள் தூக்கத்திற்கு வசமாகும் காலமாகையாலும், இருளாலேயே கண்ணன் கம்ஸன் வைத்த வலையிலிருந்து பிழைத்தான் என்று கருத்து. “வீங்கிருள்வாய் பூண்டு அன்றன்னை புலம்பப் போய் அங்கோராய்க்குலம் புக்கதும்” [திருவாய் 6-4-5] என்று ஆழ்வாரும் இவ்வர்த்த2த்தை அருளிச்செய்தார். இந்த விஷயத்தைப் பிள்ளையுறங்காவில்லிதா3ஸர் “கண்ணன் கைக்குழந்தையாயிருந்தமையாலே தன்னை

---

செய்கிறார் (விஷமித்யாதி3) e கார்-கறுப்பும், பெருமையும். எல்(லி)? - இரவு. இருளுண்டாவதே ! என்று - வெறுப்பு. f,g இருள் ரக்ஷகமென்னுமதுக்கு ப்ரமாணமும் ஓரைதிஹ்ய

றிலன்; புறம்பு தானே பரிந்து நோக்குகைக்கு ஒருத்தரில்லை; கம்ஸாதி₃கள் தப்பாமல் அகப்படுத்தக் கோலிநின்றார்கள்; அவ்வளவில் உதவித்தந்தது இருள்; அத்தைச் சரணம் புகுமத்தனையிறே'' எறு பணிப்பரான்ம். h அதைப்பற்றவிறே, இவர்கள் தான் இந்த இருளை வெறுக்கிறது இப்போது. i ஸ்ரீவஸு தே₃வரையும் தே₃வகியாரையும் அவதார காலத்திலே விட்டுப் போருகையால் பண்ணின நலிவேயறிக்கன்கே, தே₃வகியாரையொழிந்த j ஶேஷித்த ஸ்த்ரீவர்க்க₃த்தை நலியாநின்றாய்;

---

ரக்ஷித்துக்கொள்ள முடியாதவன். பரிவோடு அவனை ரக்ஷிப்பதற்கு வேறு ஆளும் இல்லை. கம்ஸனும் அவனுடைய ஆட்களும் எப்படியாவது குழந்தை பிறந்தவுடன் அழிப்பதற்கு உறுதியுடன் நின்றார்கள். அந்த சமயத்தில் கண்ணனை ரக்ஷித்துக்கொடுத்தது இருளன்றோ. நாமெல்லாம் அவ்விருளையே ஶரணம் புகவேண்டும்'' என்று பரிவோடு அருளிச் செய்வராம். *(நின்ற இக்கன்னியரோமை நெஞ்சு துக்கம் செய்யப் போந்தாய்)* எங்களைத் துன்புறுத்தலாம்படி உன்னை அன்று அந்த இருள் ரக்ஷித்துவிட்டதே! என்று இவர்கள் அன்புடையார் கொண்டாடும் அந்த இருளையே இப்போது வெறுக்கிறார்கள். ''பெற்ற தகப்பனான வஸுதே₃வனையும், தாயான தே₃வகியையும் பிறந்தவன்றே விட்டுப்பிரிகையால் துன்புறுத்தியதோடன்றியில், தே₃வகியாரைத் தவிர்த்த மற்ற ஸ்த்ரீகளையும் துன்புறுத்துவதற்குத் திருவாய்ப்பாடிக்கு வந்துசேர்ந்தாயே'' என்கிறார்கள். "கம்ஸன் வலையில் அகப்படாமல் தப்பின இது பெண் பிறந்தாரை ரக்ஷிப்பதற்கு உறுப்பாயிருக்கும் என்று நினைத்திருந்தோம். அது எங்களைத் துன்புறுத்துவதற்கு உறுப்பாகி (தவிர்க்க முடியாத காரணமாகி)விட்டதே''என்று கருத்து.

---

மும் அருளிச்செய்கிறார் (வீங்கிருள்வாயித்யாதி₃) h (அத்தைப்பற்றவிறே) என்றது - அப்படி ஆத₃ரவிஷயமாயிருக்கச் செய்தேயிறே என்றபடி. i "நின்ற இக்கன்னியரோமை - நெஞ்சுதுக்கம் செய்யப் போந்தாய்" என்று அந்வயித்து அருளிச்செய்கிறார் (ஸ்ரீவஸுதே₃வரையுமித்யாதி₃)



கம்ஸன் வலையில் அகப்படாதே தப்பின இது, பெண்பிறந்தாரை ரக்ஷிக்கைக்கு உடல் என்றிருந்தோம்; இது எங்களை நலிகைக்கு உடலாய்விட்டவித்தனையாகாதே; k இனி அவனாலே புண்பட்ட நம்முடைய நோவுபாட்டை அறிவித்தால், தானும் பெண் பிறந்தவளாகையாலே அறிந்து இரங்கக் கூடுமென்று அவளுக்கு அறிவிக்கில், ''அங்ஙனும் தீமைகள் செய்வர்களோ நம்பீ! ஆயர்மடமக்களை'' என்கிறபடியே-'இடைப்பெண்களை, நாயன்தே! நலியலாமோ' என்று அஹ்ருத₃யமாக ஒரு வார்த்தை சொல்லி, கண்ணஞ்சி நியமியாதே கைவாங்கியிருக்குமே; அத்தைக் கேட்டு, 'பொகடு பொகடு; இவளில் இன்னமும் அவன்றானே l நல்லன்காண்' (m அஞ்சவுரப்பாளசோதை) n வந்த இவர்க

---

*(அஞ்ச உரப்பாள் அசோதை)* உன்னாலே துன்புறும் எங்களுடைய துன்பத்தை உன் தாயான யசோதைக்கு அறிவித்து, அவளும் பெண்ணாய்ப் பிறந்தவளாகையாலே எங்களிடம் இரங்கி உன்னைக் கண்டிப்பாள் என்று நினைத்து அவளிடம் முறையிட்டால், அவள் நீ அஞ்சும்படியாக உன்னைக் கண்டிப்பதில்லையே என்கிறார்கள். "அங்ஙனம் தீமைகள் செய்வர்களோ நம்பீ! ஆயர்மடமக்களை'' [பெரியதிரு 10-7-1i] என்கிறபடியே ''ஐயா, இடைப்பெண்களை இப்படித் துன்புறுத்தலாமோ'' என்று மனப்பூர்வமாகவல்லாமல் ஒரு வார்த்தைசொல்லிவிட்டு, அவனை அதட்டி மிரட்டிக் கண்டிக்காமல் பேசாமல் இருப்பாளன்றோ யசோதை. இதைக் கேட்கும்போது எங்களுக்கு ''இவளிடம் போய்ச் சொல்ல வந்தோமே! இவளைக் காட்டிலும் அக்கண்ணனே நல்லவன்'' என்று தோன்றிவிடும். *(அஞ்ச உரப்பாள் அசோதை)* முறையிட்டுக்கொண்டு வந்த இவர்கள் எதிரில் ஒப்புக்கு ஒரு வார்த்தை சொல்லுவாளேயொழிய, இவன்

---

j "நின்ற" என்ற பத₃த்துக்குத் தாத்பர்யம் (ஶேஷித்த ஸ்த்ரீவர்க்க₃மென்கிறது) k "அஞ்ச உரப்பாள்" என்கைக்கு ப்ரஸக்தியையுட்கொண்டு அந்தப் பத₃த்துக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (இனி அவனால் இத்யாதி₃) ப்ரஸக்தி- அவளும் பெண்பிறப்பாகை. l (நல்லன்காண்) என்று

ளெதிருக்கு ஒன்றைச் சொன்னுளாமித்தனே போக்கி அஞ்சும்படி பொடியாள். (o ஆணுடைவிட்டிட்டிருக்கும்) "இவர்கள் முறைப்பட்டு நம்மை நலியப்பார்த்த p அதினெல்லையும் கண்டு விட்டோம்" என்று, முன்பே தீம்பிலே கைவளருகிறவன் ஸஹகரிப்பாரையும் பெற்றவாறே ஶதஶாக$_2$மாகப் பணைக்குமாய்த்து. ( இருக்கும் ) தான் கண்டபடி இவனைத் தீம்பு செய்யவிட்டு "நம் மகன் இப்படிப் பருவம் நிரம்பித் தீமை செய்யப்பெற்றேம்" என்று அத்தாலே "தொல்லையின்பத் திறுதிகண்டாள்" என்கிறபடியே — ஆநந்த$_3$ நிர்ப்ப$_4$ரையாய் க்ருதக்ருத்யையாயிருக்கும். 'q பிறரையிட்டு நெருக்கியோ என்னை நீங்கள் காரியங்கொள்ளப் பார்த்தது?' என்னச் சிவட்கென்றான்; r நாங்கள் அங்ஙன் நினைத்திலோம்காண்; (s வஞ்சக

அஞ்சும்படி கண்டிக்கமாட்டாள் யசோதை. (ஆணுட விட்டிட்டிருக்கும்) "இவர்கள் யசோதையிடம் முறையிட்டு நம்மைக் கண்டிக்கப் பார்த்ததின் பூலனையும் கண்டுவிட்டோம்." என்று யசோதையிளஞ்சிங்கமான கண்ணன், ஏற்கனவே பெண்களைத் துன்புறுத்துவதையே இயல்வாகக் கொண்டிருந்தவன். இப்போது யசோதையையும் துணையாகப்பெற்றபின்பு நூறுமடங்கு பெண்களைத் துன்புறுத்தத் தொடங்கிவிடுவான். (இருக்கும்) இஷ்டப்படி இவளே இவனைத் தீம்புசெய்ய விட்டுவிட்டு, 'நம்முடைய மகன் இளம்பருவத்திலேயே இப்படி துஷ்டத்தனம் செய்கிருனே' என்று உகந்து அதனாலே 'தொல்லையின்பத்திறுதி கண்டாளே' [பெருமாள்திரு 7-8] என்கிறபடியே பேரானந்தம் உடையவளாய், தன் கடமையைச் செய்து முடித்தவளாய் நினைத்திருப்பள். இதைக் கேட்ட கண்ணன் 'பிறரிடம் முறையிட்டு என்னிடம் காரியங் கொள்ளப் பார்த்தீர்களோ?' என்று கோபித்தான். அதற்குக்

வெறுப்போடே மீளுவர்களென்று பூரிப்பது. n (வந்த இவர்கள்) இத்யாதி$_3$ வாக்யம்—தாத்பர்யாந்தரம். m உரப்பாள்-அதட்டாள். o ஆணுட — வேண்டிற்றுச் செய்ய. p ( எல்லையுங்காண்கை ) தாயாருடைய விலக்காமையுங் காண்கை. r, s நாங்கள் அங்ஙன் நினைத்திலோம் காண்;



மித்யாதி$_3$) நீ தான் தாய்முலைக்கும் பேய்முலைக்கும் வாசியறியாதானொருத்தனிறே. பிறர்நோவு கண்டால் 50. "ह्रीरेषा हि" (ஹ்ரீரேஷா ஹி) என்கிறபடியே முற்பாடனாய் லஜ்ஜிக்கும்போது சக்ரவர்த்தித் திருமகனாக வேண்டாவோ? உனக்கு இவை தெரியுமோ? t நீ லஜ்ஜாஶூந்யனன்றே. ( கூறைதாராய் ) u நீ ஆனுராகிருய்; எங்கள் பரியட்டத்தை முதல் முன்னம் தா. 9.

கூறுகிருர்கள் — *(வஞ்சகப் பேய்ச்சி பாலுண்ட மசிமையிலீ!)* நாங்கள் அப்படி நினைக்கவில்லை. நீதான் தாய்முலைக்கும் பேய்முலைக்கும் வித்தியாசம் அறியாதவனாயிற்றே. பிறர் துன்புறுவதைக் கண்டால்

50. ப்ரஸீத$_3$ந்து ப$_4$வந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா।
யதீ$_3$த்$_3$ருஶைரஹம் விப்ரைருபஸ்தே$_2$யை ருபஸ்தி$_2$த: ||
[ரா-ஆ 10.9]

[(முனிவர்களே!) நீங்கள் உகந்தருளுவீர்களாக. வந்து அடையத் தகுந்த பெரியோர்களான உங்களால் (நான்) அடையப் பட்டபடியால் எனக்கு இப்போதிருக்கும் லஜ்ஜை மிக அதி$_4$கமாயிருக்கிறது.] என்கிறபடியே, தான் முற்பட்டு அவர்களை ரக்ஷிக்காமையால் வெட்கமடையும் சக்ரவர்த்தித் திருமகனாயிருந்தால் எங்கள் வருத்தம் அறிவான். பெண்ணின் வருத்தமறியாத பெருமானான உனக்கு இது எப்படித் தெரியும்? நீ வெட்கமற்றவனன்றே. மசிமை - சுணை; வெட்கம். (*கூறைதாராய்*) நீ யாராக வேண்டுமானாலும் இரு. எங்கள் வஸ்த்ரத்தை முதன்முதலில் கொடுத்துவிடு. உன் தொடர்பே எங்களுக்கு வேண்டாம் என்கிருர்கள். 9.

நீ எங்கள் நினைவறிந்திலையீ! என்ன; நானறியேனேவென்ன; மேல்கிளம்புகிறது (வஞ்சகமித்யாதி$_3$) q நாங்கள் நெருக்கிக் கார்யம் கொள்ளப்பார்க்கவில்லை, அவள் புருஷகாரமாகக் கார்யம் கொள்ளப் பார்த்தோம் என்று இவர்கள் நினைவு. t மசிமை - சுணை. இல் - இல்லாமை. u நீ ஆனுராகிருய்— ஆனவனாகிருய்; லஜ்ஜாவானாகிலுமாம், லஜ்ஜாஹீநனாகிலுமாம் என்றபடி. 9.

## மூன்றுந்திருமொழி—பத்தாம் பாட்டு

**கன்னிய ரோடெங்கள் நம்பி கரிய பிரான்விளை யாட்டை**
**பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த புதுவையர் கோன்பட்டன்**
**கோதை**
**இன்னிசை யால்சொன்ன மாலை ஈரைந்தும் வல்லவர் தாம்போய்**
**மன்னிய மாதவ னோடு வைகுந்தம் புக்கிருப் பாரே.**

**பதவுரை:—** **எங்கள் நம்பி**—எமக்கு ஸ்வாமியாய், **கரிய**—கரியநிறத்தனான, **பிரான்**—கண்ணபிரான், **கன்னியரோடு**—ஆயர்சிறுமியரோடே செய்த, **விளையாட்டை** — தி$_3$வ்யலீலைகளைக்குறித்து, **பொன் இயல்**—பொன்போன்று அழகிய, **மாடங்கள் சூழ்ந்த**—மாடங்களால் சூழப்பட்ட, **புதுவையர் கோன்** — ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்குத் தலைவரான, **பட்டன் கோதை**-பெரியாழ்வார்க்குத் திருமகளான ஆண்டாள், **இன் இசையால்**—இனிய இசையாலே, **சொன்ன** — அருளிச்செய்த, **மாலை**—சொல்மாலையாகிய, **ஈர் ஐந்தும்**— இப்பத்துப்பாட்டுகளையும், **வல்லவர் தாம்** — கற்கவல்லவர்கள், **போய்**—(அர்ச்சிராதி$_3$மார்க்க$_3$மாகப்)போய், **வைகுந்தம் புக்கு**—பரமபத$_3$த்தையடைந்து(அவ்விடத்திலே,) **மன்னிய** — நித்யவாஸம் செய்தருளுகிற, **மாதவனோடு**-திருமாலோடு கூடி, **இருப்பார்**—நித்யாநுப$_4$வம்பண்ணிக்கொண்டு வாழ்ந்திருக்கப்பெறுவர்.

**வ்யா:— பத்தாம் பாட்டு.** (கன்னியரோடெங்கள் நம்பி கரியபிரான் விளையாட்டை) இத்தாற்சொல்லிற்றாய்த்து—

---

*10. அவ:—* தன் விருப்பம் நிறைவேறப்பெற்று இப்பதிகத்துக்குப் ப$_2$லன் சொல்லித் தலைக்கட்டுகிறார். ப்ரவேஶத்திலே "இப்படி ப$_3$ஹுப்ரகாரங்களாலும் அநுவர்த்திக்க, அவனும் பரியட்டங்களும் கொடுத்து ஸம்ஶ்லேஷித்தானாய்த் தலைக்கட்டுகிறது" என்று அருளிச்செய்திருப்பது அநுஸந்தி$_4$க்கத் தக்கது இப்பாசுரத்தில் ஸம்ஶ்லேஷித்ததைச் சொல்லவில்லையே? எனில், அடுத்த திருமொழியிலே, கண்ணனைப் பிரிந்து கூடல் இழைக்கையாலே, இங்கு பிரிவுக்கு மூந்திய ஸம்ஶ்லேஷம் ஏற்பட்டிருக்கவேண்டுமென்பது ஸித்$_3$த$_4$ம்.



இவன் செய்யுமவற்றையறியாதே சொன்னவற்றை மெய்யென்றிருக்கைக்கும், காலதத்த்வமுள்ளதனையும் அநுப$_4$வியாநின்றாலும் புதுமை மாறாதேயிருக்கைக்கும், இவன் பண்ணும் தீம்புக்குப் பாடாற்றமாட்டாதேயிருக்கைக்கும் "கன்னியர்" என்கிறது. (எங்கள்நம்பி) பஞ்சலக்ஷம் குடியில் பெண்களை நலிகைக்கீடான தீம்பாலே பூர்ணன். (கரியபிரான்) அகவாயில் a தீம்பில்லையேயாகிலும் மேல் விழவேண்டும்படியாய்த்து வடிவழகிருப்பது. (b பொன்னியலித்யாதி$_3$) இவ்விஷயத்தில் இவ்வளவான அவகா$_3$ஹநத்துக்கு அடி பெரியாழ்வார்

---

*வ்யா:— ( கன்னியரோடு.....கரியபிரான் விளையாட்டை )*
கன்னியர் என்றதால்—இவன் செய்யும் தீம்புகளை அறியாமல் இவன் சொன்ன வார்த்தைகளை உண்மையென்றிருக்கும் பருவத்தை உடையவர்கள் என்றும், காலமெல்லாம் அநுப$_4$வித்தாலும் புதுமை மாறாதபடி கண்ணனுக்கு ஒத்த வயஸ்ஸையுடையவர்கள் என்றும், இவன் செய்யும் தீம்புகளைப் பொறுக்க முடியாத சிறுமிகள் என்றும் உணர்த்தப்படுகிறது. *(எங்கள் நம்பி)* ஐந்துலக்ஷம் குடியில் பெண்களனைவரையும் படுத்தலாம்படி து$_3$ஷ்டத்தனத்தாலே நிறைந்திருப்பவன். *(கரிய பிரான்)* எங்களை ஈடுபடுத்தும் இவனுடைய நெஞ்சில் து$_3$ஷ்டத்தனம் இல்லாவிட்டாலும், நாங்கள் மேல்விழவேண்டும்படியான வடிவில் அழகையுடையவன். *(விளையாட்டை)* உண்மையில் விடபுருஷனுடைய சேஷ்டை அல்லவென்றும், பரமாத்மா ஜீவாத்மாவோடு ஸம்ஶ்லேஷத்தை விரும்பிச் செய்த விளையாட்டே என்றும் உணர்த்துகிறாள். *(பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த புதுவையர்கோன் பட்டன் கோதை)* பொன்போன்ற அழகிய மாடங்களால் சூழப்பட்ட ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்குத் தலைவரான பெரியாழ்வார் வயிற்றில் பிறந்தவ்ளாகையாலே ஆண்டாளாகிற தான் கண்ணனிடத்தில் இவ்வளவு ஈடுபட முடிந்தது என்று கருத்து *(இன்னிசையால் சொன்ன மாலை)*

---

அரு:—பத்தாம் பாட்டு. (கன்னியரோடித்யாதி$_3$) a தீம்பு பே$_4$த்$_3$யமாகையாலே (தீம்பிலையேயாகிலும்) என்கிறது.
b பொன் - அழகு. 10.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

வயிற்றில் பிறப்பாய்த்து. (இன்னிசையித்யாதி$_3$) 51. "पाठ्ये गेये च मधुरं" (பாட்$_2$யே கே$_3$யே ச மது$_4$ரம்) (மன்னிய இத்யாதி$_3$) நித்யமான ஸ்ரீவைகுண்ட$_2$த்திலே போய் ஸ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனோடே கூட நித்யாநுப$_4$வம் பண்ணப்பெறுவர். 10.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

மூன்றும் திருமொழி முற்றிற்று.

---

51. பாட்$_2$யே கே$_3$யே ச மது$_4$ரம் ப்ரமாணைஸ் த்ரிபி$_4$ரந்விதம் ।
[ரா-ப$_8$ா 4-8]

[ராமாயண காவியமானது மூன்றுவித$_4$மான அளவுகளுடன் கூடியதாய், படிக்கும்போதும், பாடும்போதும் இனியதாயிருப்பது.] "எங்ஙனே சொல்லிலும் இன்பம் பயக்குமே" [திருவாய் 7-9-11] என்கிறபடியே ராக$_3$மில்லாமல் படித்தாலும், ராக$_3$த்தோடு பாடினாலும் கேட்பார் அனைவர்க்கும் இனியதாய், எம்பெருமானுக்கு மாலைபோலே போ$_4$க்$_3$யமாயிருக்கும். *(ஈரைந்தும் வல்லவர் தாம் போய் மன்னிய மாதவனோடு வைகுந்தம் புக்கிருப்பாரே)* இப்பத்துப் பாசுரங்களையும் பொருளோடு அறியவல்லவர்கள் நித்யமான ஸ்ரீவைகுண்ட$_2$த்திலே போய் ஸ்ரீமந்நாராயணனான பரமாத்மாவோடு கூடி கோ$_3$பியரும் ஆண்டாளும் இங்கு பெற்ற ஸம்ஶ்லேஷாநுப$_4$வத்தை நித்யமாகப் பெற்று ஆனந்தி$_3$ப்பர். 10.

ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி தா$_3$ஸன் இயற்றிய
மூன்றும் திருமொழி வ்யாக்$_2$யான விவரணம் முற்றிற்று.

---

அரு:— தெள்ளியார் ப்ரவேஶ. a$_2$ கூடலாவது— வட்டமாகக் கோட்டைக்கீறி, அதுக்குள்ளே சுழிசுழியாகச் சுற்றும் சுழித்து, இவ்விரண்டு சுழியாகக்கூட்டினால், இரட்டைப்பட்டால் கூடுகை; ஒற்றைப்பட்டால் கூடாமை என்று ஸங்கேதம். a அதுக்கு ஹேதுவேதென்ன, ஸ்வாபதே$_3$ஶத்திலேயருளிச் செய்கிறார் (ஸம்ஸாரத்திலித்யாதி$_3$) b "ஸம்ஸாரத்தில்" என்ற வாக்ய விவரணம் (இத்தனையிறே) என்றது. c இழவோடே கூடின பேறு அபேக்ஷிதமோ?



## நாலாம் திருமொழி—தெள்ளியார் ப்ரவேஶம்

அவ:— இவனும் பெண்களுடைய பரியட்டங்களெல்லாம் வாரிக்கொண்டு போய் குருந்தின்மேலே ஏறியிருக்க; இவர்களும் அநுவர்த்தித்தும், வைதும் இப்படி ப$_3$ஹுப்ரகாரங்களாலே அவனுக்குக் கொடுத்தல்லது நிற்கவொண்ணாதபடி சிலவற்றைச் செய்து, அவனும்கொடுக்க இவர்களும் பெற்றார்களாய் நின்றது. இவனும் இவை கொடுத்து அவர்களும் அவைபெற்று ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமானாலும் அதுதானும் விஶ்லேஷாந்தமாயல்லதிராதிறே. a ஸம்ஸாரத்தில் போ$_4$க$_3$ங்கள் நிலைநில்லாததாகையாலே அவனும் பேரநிற்க, இவர்களும் இன்னமும் ஒருகால் பரியட்டமுரியவல்லனே என்று அதுக்குக் a$_2$ கூடலிழைக்கிறார்களித்தனையிறே. b இங்குத்தைப்

---

## நாலாம் திருமொழி வ்யாக்$_2$யான விவரணம்

### தெள்ளியார் ப்ரவேஶம்

சென்ற திருமொழியிலே—கண்ணன் பெண்களுடைய பட்டுக்களையெல்லாம் வாரிக்கொண்டுபோய் குருந்தமரத்தின்மேல் ஏறி வீற்றிருந்தான்; இப்பெண்களும் அவனைக் கெஞ்சியும் வைதும் பல வழிகளாலே தங்களது பட்டைக் கொடுத்தல்லது நிற்கவொண்ணாதபடி சில காரியங்களைச் செய்தார்கள். அவனும் வஸ்த்ரங்களைக் கொடுக்க, இவர்களும் அதைப் பெற்று, இருவரும் விரும்பும் ஸம்ஶ்லேஷமும் நிறைவேறிற்று. "*ஸம்யோக$_3$ா விப்ரயோக$_3$ாந்தா:*" [ரா-அ 105-16] [ஸம்ஶ்லேஷங்களெல்லாமே பிரிவிலேயே முடியும்] என்கிறபடியே இந்த ஸம்ஶ்லேஷமும் பிரிவில் முடிந்தது. இந்த ஸம்ஸாரமண்ட$_3$லத்தில் எந்த போ$_4$க$_3$மும் நிலைநிற்பதாய் இருக்கக்கூடாதாகையாலே கண்ணன் இப்பெண்களை விட்டுப் பிரிந்தான். இவர்களும் "மறுபடி ஒருமுறை நம்முடைய வஸ்த்ராபஹாரம் செய்தாலும்

---

என்ன அருளிச்செய்கிறார் (இதுதானித்யாதி$_3$) d லாப$_4$த்திற்காட்டில் என்றது-லாப$_4$ாலாப$_4$த்திற்காட்டில்என்றபடி e பெறுவதேlஎன்றது-வ்யாக்$_2$யாதாவினீடுபாடு f அவனையேஉபாயமாகப்பற்றியிருக்கிறவள், அசேதநமான கூடலின் காலிலேவிழக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (பரமசேதநனித்யாதி$_3$)

பரிமாற்றம் பேறும் இழவுமாய்ச்செல்லுமித்தனையிறே c இது தான் இதரவிஷயஶ்லாப4த்திற்காட்டில் நன்றாயிருக்குமிறே. பேறிழவுகள் இவ்விஷயத்திலேயாகப் e பெறுவதே! f பரமசேதநனைவிட்டு அசேதந க்ரியாகலாபங்களைக் கொண்டு பெறப்பார்ப்பாரைப்போலே, ஸர்வேஶ்வரனைப் பெறுகைக்கு அசேதநமான கூடலின் காலிலே விழுகிறாள். g வ்ருத்தஹீநனான க்ருஷ்ணனை, வ்ருத்தவதியாய்ப் பெறப்பார்க்கிறாள்காணும்! h இத்தனை கலங்காதவன்று பிரிந்த விஷயவைலக்ஷண்யத்துக்கு நமஸ்காரமாமித்தனையிறே:

---

பா3த4கமில்லை. இவனைக் கண்டால்போதும்'' என்று அவனைக் காண்பதற்காகக் கூடலிழைக்கிறார்கள். கூடலிழைப்பதாவது—குறிபார்ப்பதில் ஒருவகை. அதாவது—பூ4மியில் ஒருவட்டத்தை எழுதி. அதற்குள்ளே சுழிசுழியாக, எண்ணாமல் சுழிகளைக்கீறி. இரண்டிரண்டு சுழிகளாக எண்ணிப் பார்க்கும்போது இரட்டைப் படையாக வந்தால் நினைத்த காரியம் கூடும் என்றும் ஒற்றைப் படையாக வந்தால் கூடாது என்றும் கொள்வது. இவ்வுலகில் ப4க3வத்3பா4க3வதானுப4வங்களும் கூடியும் கூடாமலுமன்றோ இருக்கின்றன. கூடாமலும் போகக்கூடிய இப்பேற்றை விரும்பலாமோ? எனில்: இதைக் காட்டிலும் மிகத் தாழ்ந்ததான ஶப்3த3ாதி3 விஷயானுப4வத்தையும் கூடும் என்னும் நிச்சயம் இல்லாதிருந்தபோதிலும் பலர் விரும்பும்போது, அதைக்காட்டிலும் மிகச்சிறந்த இதை விரும்புவது சிறப்பேயன்றோ. இப்படிச் சிறந்த விஷயத்தைப் பெற்றாலும் பெறாவிட்டாலும், ஆசைப்படுவதே பெரும்பாக்கியமன்றோ. அவனையே உபாயமாகப் பற்றியிருக்கும் இவள் அசேதநமான கூடலின் காலிலே விழலாமோ? என்னில், பரமசேதநனைவிட்டு அசேதநமான தமது முயற்சிகளைக்கொண்டு பெறப்பார்க்கும் ஸாத4நாந்தரநிஷ்ட2ர்களைப்போலே இவளும் அசேதநமான கூடலின் காலிலே விழுகிறாள், அவனைப் பெறவேண்டும் என்னும் த்வரையின் மிகுதியாலே. இந்த த்வரையினாலேற்பட்ட கலக்கத்தால் இவள் இக்காரியம் செய்கிறாள். வ்ருத்தஹீநனான [(1) ஆசாரமில்லாத (2) தன்னைப் பற்றினாரிடம் கைம்முதலை எதிர்பாராத] கண்ணனை வ்ருத்தவதியாய் [(1) கூடலிழைப்பவளாய் (2) கைம்முதல் உடையவளாய்] இவள் பெறப்பார்க்கிறாள்கிடீர்! ப4க3வத்3விஷயத்தினுடைய பெருமையைப் பார்க்கும்போது இவள் இத்தனை கலங்குவதும் பொருந்தும். மிகவும் ஈடுபாடுடைய இவள் இத்தனை கலங்கவில்லையானால் ப4க3வத்3 விஷயத்துக்கு வைலக்ஷண்யமே இல்லை என்று ஆகிவிடும்.



## நாலாம் திருமொழி—முதற்பாட்டு

தெள்ளி யார்பலர் கைதொழுந் தேவனார்
வள்ளல் மாலிருஞ் சோலை மணாளனார்
பள்ளி கொள்ளு மிடத்துஅடி கொட்டிடக்
கொள்ளு மாகில்நீ கூடிடு கூடலே.

**பதவுரை:**— **கூடலே** — கூடலே!, **தெள்ளியார் பலர்** — தெளிவுடைய நித்யர்கள் பலர், **கை தொழும்**—கைகளார வணங்கப்பெற்ற, **தேவனார்** — ஸ்வாமியாய், **வள்ளல்** — பரமோதா3ரனாய், **மாலிருஞ்சோலை மணாளனார்** — திருமாலிருஞ்சோலையிலே எழுந்தருளியிருக்கிற அழகியமணவாளனாகிய பரமபுருஷன், **பள்ளிகொள்ளும் இடத்து** — பள்ளிகொண்டருளுமிடத்திலே, **அடி கொட்டிட**—(அவனுடைய) திருவடிகளை நான் பிடிக்கும்படியாக, **கொள்ளும் ஆகில்**—(அவன்) திருவுள்ளம் பற்றுவனாகில், **நீ கூடிடு**—நீ கூட வேணும்.

**வ்யா:**— முதற்பாட்டு. (தெள்ளியார்) காத3ாசித்கஸம்ஶ்லேஷத்துக்குத் தான் இன்றிருந்து கூடலிழைக்கப் புக்க

---

*1. அவ:*— திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருக்கும் மணவாளன் பள்ளிகொள்ளுமிடமாகிற திருவரங்கத்திலே திருவடிக் குற்றேவல் செய்வதற்குக் கூடலிழைக்கிறாள்.

---

f அது. தான் கலக்கத்தின் கார்யமென்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் (வ்ருத்தஹீநனான இத்யாதி3) வ்ருத்தஹீநனென்றது—தன்னைப்பெறுகைக்கு இவனால் ஒரு வ்ருத்தமும் வேண்டாதவன் என்றாய், அப்படி அநந்ய ஸாத்4யனானவனை வ்ருத்தவதியாய் - ஸாத4நபரையாய்ப் பெறப்பார்க்கிறாளென்று ஸ்வாபதே3ஶக3ர்ப்ப4மாயிருக்கிறது. அன்றியே, வ்ருத்தம் - ஆசாரமும், திருவாழியுமென்று சாடு. g ஆனாலும் இப்படி கலங்கலாமோ? என்ன அருளிச்செய்கிறார் (இத்தனை கலங்காத இத்யாதி3). 10.

வாறே, நித்யாநுப4வம் பண்ணுகிறவர்களை நினைத்தாள். (தெள்ளியார்) அவர்களும் சிலரே! அலாப4த்தோடேயிருந்து கூடலிழையாதே, லாப4த்தோடேயிருந்து போதுபோக்குகிற வர்களும் சிலரே ! a பிரியில் ஸர்வதா3 கூடலிழைக்கவேணும் என்றறிந்து, பிரியாதே நித்யாநுப4வம் பண்ணுமத்தனை அள வுடையவர்களாய்த்து. (பலர்) த்ரிபாத்3விபூ4தியாக அநுப4வத் தோடே காலம் செல்லுகிறதிறே. இங்கு தான் ஒருத்தியுமாய்க் கூடலிழையாநின்ருள். இங்கு வ்ருத்த கீர்த்தநத்துக்கும்

---

*வ்யா:—* (*தெள்ளியார்*) என்றும் தெளிந்திருக்கும் நித்ய ஸூரிகள். சிறிது காலம் அவனைக் கூடுவதற்குத் தான் இன்று கூடலிழைக்கப் புகுந்தவளவில், எப்போதுமே அவனை அநு ப4விக்கும் நித்யஸூரிகள் நினைவுக்கு வர, அவர்கள் என்ன பா4க்3யம் செய்தவர்கள்! என்னைப்போலே எம்பெருமானை அநு ப4விக்கப்பெருமையாலே கூடலிழையாமல், எப்போதும் அவனை அநுப4வித்துப் போதுபோக்கும் பா4க்3யஶாலிக ளல்லவோ. அவனைப் பிரிந்தால் எப்போதும் கூடலிழைக்க வேண்டிவரும் என்று அறிந்து, அந்தத் தெளிந்த அறிவாலே அவனைப் பிரியாமல் எப்போதும் அநுப4விக்கின்றவர்களாயிருக் கிருர்கள். இப்படிப்பட்டவர் ஒருவரிருவரோ? எனில்—(*பலர்*) "*பாதோ3ஸ்ய விஶ்வா பூ4தாநி த்ரிபாத3ஸ்யாம்ருதம் தி3வி*' [பு-ஸூ 1-3] [இவ்வுலகிலுள்ள எல்லா ஜீவராஶிகளும் அப் பரமபுருஷனுடைய செல்வத்தில் கால் பகுதியாதம். இவனு டைய செல்வத்தில் முக்கால் பகுதி அழியாததாய் பரமபத3த் தில். உள்ளது.] என்கிறபடியே, இவ்விபூ4தியைக் காட்டிலும் மும்மடங்கு பெரிதான த்ரிபாத்3விபூ4தி எனப்படும் பரமபத3த் தில் கணக்கற்ற நித்யமுக்தர்கள் காலமெல்லாம் இவ்வநு ப4வத்தோடு காலம் கழிக்கின்ருர்களன்ரே. இங்கோவெனில், தான் ஒருத்தியாயிருந்து கூடலிழைக்கும் நிலையிலிருக்கிருள். ஏற்கனவே பெற்ற அநுப4வத்தைப் பேசிப் போதுபோக்கு

---

அரு:— முதற்பாட்டு (தெள்ளியாரித்யாதி3) a"தெள் ளியார்" என்ருல் அறிவுடையாரென்று காட்டுமதொழிய லாப4த்தோடேயிருக்குமவர்களென்று காட்டுமோ ? என்ன



ஆளில்லை ; அங்கு வ்ருத்தகீர்த்தநம் பண்ணவேண்டா. (கைதொழும்) 52. "नित्याञ्जलिपुटाः" (நித்யாஞ்ஜலிபுடா:) என்கிறபடியே தொழுகையே யாத்ரையாய் இருக்குமவர்கள். (தேவனுர்) இவர்கள் தொழுது உளராமாபோலே, இவர் களைத் தொழுவித்துக்கொண்டு உஜ்ஜ்வலனுகாநிற்குமவன். (வள்ளலித்யாதி3) b லுப்3த4னுயிருக்குமவன், கையிலே குவா லாக உண்டாயிருக்கச்செய்தேயும் ஒன்று கழியிலும் அத் தைக் குறையாக நினைத்திருக்குமாபோலே, நித்யவிபூ4தியும் நித்யாநுப4வம் பண்ணுவாரும் உண்டாயிருக்கச்செய்தேயும், அவ்விருப்பு உண்டதுருக்காட்டாதே, ஸம்ஸாரிகள் இழவை

---

வதற்கும் இரண்டாவது ஆளில்லை. அங்கு நித்யாநுப4வமாய்ச் செல்லுகிறதாகையாலே, பெற்ற அநுப4வத்தைப்பேசிப் போது போக்கவேண்டிய அவசியமில்லை. (*கைதொழும்*)

52. முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் யச்ச்2வேதத்3வீபவாஸி
நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதி3ந:|| [நாம்|
[*பா4ர-ஶாந்தி 344-45*]

[ஶ்வேதத்3வீபவாஸிகளுக்கு எது லக்ஷணமோ, அதுவே முக் தர்களுக்கும் லக்ஷணமாகும்; அதாவது:—எப்போதும் அஞ்ஜலி செய்துகொண்டிருப்பார்கள் ; (அதனுல்) ஆநந்தி3ப்பார்கள்; வாயால் 'நம:' என்றே சொல்லும் தன்மையுடையவர்களா யிருப்பார்கள்.] என்கிறபடியே தொழுவதையே இயல்வாகக் கொண்டவர்கள். (*தேவனுர்*) இவர்கள் அவனைத் தொழுது ஸத்தை பெறுவதுபோலே அவன் இவர்களைத் தொழுவித்துக் கொண்டு பிரகாஶியாநிற்கிருன். 'தி3வு-த்3யுதி' என்ற தா4துவி லிருந்து தோன்றிய தே3வஶப்3த3ம் த்3யுதியாகிற ஒளியைக் காட்டுகிறது. (*வள்ளல் மாலிருஞ்சோலை மணுளனுர்*) முற்கூறிய படி பரமபத3த்திலே ஒளிவிடாநின்றபோதிலும், நித்யவிபூ4தியும் அங்கு நித்யாநுப4வம் பண்ணும் கணக்கற்ற நித்யஸூரி களும் இருந்தபோதிலும், அவ்வநுப4வம் ஓரநுப4வமாகத் தோற்ருமல், இவ்விபூ4தியிலுள்ளவர்கள் அவ்வநுப4வத்தை

---

(பிரியிலித்யாதி3) b இப்படி உஜ்ஜ்வலனுயிருக்கச்செய்தே அத்தைவிட்டு இங்கே வருகிறதென் ? என்ன, தா3ஸ்ய லுப்3த4னுகையாலே என்கிருர் (லுப்3த4னுயித்யாதி3)

அநுஸந்தி4த்து b2உடம்புவெளுத்து, அவ்விருப்பை இங்குள்ளார் பெறவேணுமென்னும் க்ருபையாலே திருமலையளவும் வந்து, தன்னை அநுப4விப்பிக்கைக்கு அவஸரப்ரதீக்ஷனாய் நிற்கும் நிலையைச் சொல்லுகிறது. c நித்யவிபூ4தியும் தானுமாய் இருக்கச் செய்தேயிறே, இவை அழிந்ததுகொண்டு 5[1].''ஏகாகீ'' (ஏகாகீ) என்கிறது; தன்னை d ஸர்வஸ்வதா3நம் பண்ணிக்

---

இழந்து நிற்பதை நினைத்து, உண்ணாதவன் போலே உடம்பு வெளுத்து, அவ்வநுப4வத்தை இங்குள்ளவர்களும் பெற வேணும் என்னும் மேலான வண்மையாலே, திருமாலிருஞ் சோலையளவும் வந்து, சேதனர்களாகிற நாயகிகள் தன்னைக் கைப்பிடிக்கவேண்டும் என்று எதிர்பார்த்து, மணவாளக் கோலத்தோடு நிற்பவன். அங்கு அளவற்ற அநுப4வமாகச் செல் லும்போது, அதை விட்டு ஏன் இங்கே வருகிறான்? எனில், கோடீச்வரனுக்குக் கையிலே ஏராளமான த4னம் இருந்தாலும் அதில் ஒரு ரூபாய் தொலைந்து விட்டாலும், அதையே நினைத்து வருந்துவதுபோலே, சேதந லாப4த்தில் திருப்தியில் லாத இவனும் அங்கு கணக்கற்ற சேதநர்களை அநுப4வித்த போதிலும், அவ்வநுப4வத்தால் உடம்பு பூரிக்காமல், இங் குள்ள சேதநர்களை இழந்து நிற்பதை நினைத்து உடம்பு வெளுத்து, அக்குறை தீர இங்கே வருகிறான் என்று கருத்து.

53. ஸ ஏகாகீ ந ரமேத [மஹோபநிஷத்]

[(ப்ரளய காலத்தில்) ஒருவனாயிருந்த அந்த நாராயணன் ஆனந் த3த்தை அடையவில்லை.] என்கிறபடியே ப்ரளயகாலத்தில் நித்ய விபூ4தியில் அநுப4வித்துக் கொண்டிருந்தபோதிலும், இந்த லீலா விபூ4தி அழிந்ததைக்கண்டு தன்னைத் தனியனாக நினைத்து வெறுப் படைந்தான். (*வள்ளல்*) தன்னையும், தன்னுடைமையையும் அடி

---

c அங்கு குறைபட்டிருந்தானென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச்செய்கிறார் (நித்யவிபூ4தியுமித்யாதி3) b2 நித்யஸூரிகளைத் தொழுவித்துக்கொண்டு உஜ்ஜ்வலனாயிருக்கிறவன், திருமலையிலே வந்திருக்கிறானென்றபோதே உடம்பு வெளுத்தமை ஸித்3த4ம். d வள்ளல் - உதா3ரன்; (ஸர்வஸ்வதா3நம்பண்ணி) என்றது - ஆஶ்ரிதர்க்கு என்ற



கொண்டாய்த்து நிற்கிறது. (மணாளனார்) தன்னைக் கைக் கொள்ளுகைக்காக வந்து நிற்கிற இடமாய்த்து (மணாளனார்) e ஸ்ரீகோ3பிமாரைப்போலே யமுநாதீரங்களிலே ப்3ருந்தா3வநத் திலே இரவும் இருட்டுந்தேடி ஒளிகளவிலேயாகவொண்ணாதே பெரியாழ்வார் பெண்பிள்ளையை. வேதப்பயன் கொள்ளவல்ல விட்டுசித்தராகையாலே, ஒரு f கோ3த்ரஸூத்ரப்படச் செய்ய வேணுமென்று வந்து நிற்கிறான் திருமலையிலே. (மணாளனார் g பள்ளிகொள்ளுமிடத்து) ப்ரணயிநி முகங்காட்டுவது h ஓலக்கத்திலேயன்றே. படுக்கையிலேயிறே. அதாகிறது - கோயிலாய்த்து. '''பள்ளிகொள்ளுமிடமாகிறது-கோயில்' என்று ப4ட்டரருளிச்செய்ய நான் கேட்டேன்'' என்று பிள்ளையழகிய

---

யார்க்கு அளித்துக்கொண்டிருக்கும் வண்மைமிக்கவன். (*மணாள னார்*) தன்னைக் கைப்பிடிப்பதற்காக வந்துநிற்கும் இடமாய்த்து. (*மணாளனார்*) திருவாய்ப்பாடி ஆய்ச்சியரைப்போலே யமுனைக் கரையிலும், பி3ருந்தா3வனத்திலும் இரவும் இருட்டும் தேடி, ஒளிந்து திருடி,கைக்கொள்ளமுடியாதே பெரியாழ்வார்பெண்பிள் ளையை. ''வேதப்பயன்கொள்ளவல்ல விட்டுசித்தன்''[பெரியாழ்- திரு 2-8-10] ஆகையாலே கோ3த்ர ஸூத்ரங்கள் வெளிப்பட, கோ3த்ரமாகிற திருமலையிலே நின்று, மங்க3ளஸூத்ரம்கட்டி, மணாளனாவதற்காக நிற்கிறான் திருமாலிருஞ்சோலைமலையிலே. (*மணாளனார் பள்ளிகொள்ளுமிடத்து*) அந்த அழகியமணவாளன் பள்ளிகொள்ளுமிடத்திலே. அன்புடைய நாயகி நாலுபேருக்கு நடுவில் முகங்காட்டமாட்டாளன்றோ. படுக்கையறையிலே யன்றோ இவள் கைங்கர்யம் செய்வது. இங்கு பள்ளிகொள்ளு மிடம் என்றது திருவரங்கமாகிற கோயிலை நினைத்து. '''பள்ளி கொள்ளுமிடமாகிறது கோயில்' என்று ப4ட்டர் அருளிச் செய்ய நான் கேட்டேன்'' என்று பிள்ளை அழகியமணவாளர்

---

படி. e இவளைக் கைப்பிடிக்கைக்காகல் ஸ்ரீவில்லிபுத்தூரில் நில்லாமல் திருமலையிலே நிற்கவேண்டுவானென் ? என்ன அருளிச்செய்கிறார் (ஸ்ரீகோ3பிமாரை இத்யாதி3) f கோ3த்ரம்- சாடு ; பர்வதம். g ''பள்ளிகொள்ளுமிடம்'' என்றது - ஏகாந்தமென்னுதல்; உறங்குகிற இடமென்னுதல்; h இரண்

மணவாளரரையர் பணிப்பர். (i அடிகொட்டிட) உணர்ந்திருக்கும்போது அடிமைசெய்துபோகையன்றிக்கே, பள்ளிகொள்ளும்போதும் அதுக்கு வர்த்த$_4$கமான அடிமைசெய்து வர்த்திக்கவாய்த்துச் சொல்லுகிறது. j ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிலே அந்வயிக்கவாய்த்துக் கணிசிக்கிறது. இது வாய்த்து ப்ராப்திப$_2$லம். (கொள்ளுமாகில்) அதில் உபாயாம்ஶமிருக்கிறபடி. அவன் நினைவாலே பேறுகவாய்த்து நினைத்திருப்பது. k முமுக்ஷுக்களுடைய யாத்ரையிருக்கும்படி. (நீ கூடிடுகூடலே) l அவனாலே பேறு என்றிருக்கச்செய்தேயும், அசேதநமான கூடலின் காலிலே விழும்படி இருக்கிறதிறே ப்ராப்யத்வரை. 1.

---

அரையர் பணிப்பர்—என்பர் பெரியவாச்சான்பிள்ளை. (*அடிகொட்டிட*) அவன் திருவடிகளைப் பிடிக்கும்படியாக. உணர்ந்திருக்கும்போது செய்யும் அடிமைகள் மாத்திரமல்லாமல், அவன் பள்ளிகொள்ளும்போதும் அவன் இனிதாக உறங்கலாம்படி திருவடிகளைப் பிடித்துவிட நினைக்கிறாள். "நிலமகள் பிடிக்கும் மெல்லடி" [திருவாய் 9-2.10] அன்றோ. ஶேஷத்வமாகிற ஸ்வரூபத்திற்குத் தக்கபடி திருவடிக்குற்றேவல்செய்யப் பாரிக்கிறாள். அவனை அடைவதன் ப$_2$லன் இதுவேயன்றோ. (*கொள்ளுமாகில்*) "கைங்கர்யம் கொள்ளும் அவன் நினைவே உபாயம். கூடலிழைப்பது முதலான தன் செயல்கள் உபாயமன்று" என்று நினைத்திருப்பதன்றோ முமுக்ஷுக்களின் இயல்வு. அதை வெளிப்படுத்துகிறாள். (*நீ கூடிடு கூடலே*) 'அவனாலே பேறு' என்றிருந்தபோதிலும், அவனைப் பெற்றல்லது த$_4$ரிக்க மாட்டாத ப்ராப்யத்வரையாலே வழியல்லா வழியில் சென்று கூடலின் காலிலே விழுகிறாள். கூடலிழைத்து அவனைப் பெறப் பார்க்கிறாள் என்றபடி. 1.

---

டாவது (ஓலக்கமித்யாதி$_3$) i,j முந்தின அர்த்த$_2$த்துக்கு, "அடிகொட்டிட" என்றது-ஸம்ஶ்லேஷிக்கிறதாய், அதுக்கு ஸ்வாபதே$_3$ஶம் (ஸ்வரூபாநுரூபேத்யாதி$_3$) அன்றிக்கே, "அடிகொட்டிட" என்றதுக்கு ஸாமாந்யேந ஸ்வாபதே$_3$ஶமாதல், k அப்படி நினைவாகில் "நீ கூடிடு கூடலே"



## நாலாம் திருமொழி—இரண்டாம் பாட்டு

காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்
வாட்ட மின்றி மகிழ்ந்துறை வாமனன்
ஓட்ட ராவந்துஎன் கைப்பற்றித் தன்னொடும்
கூட்டு மாகில்நீ கூடிடு கூடலே.

பதவுரை:— கூடலே!—; காட்டில் வேங்கடம் — காட்டிலுள்ள திருவேங்கடமலையிலும், நகர் கண்ணபுரம் — நகரமாகிய திருக்கண்ணபுரத்திலும், வாட்டம் இன்றி — மனக்குறையில்லாமல், மகிழ்ந்து—திருவுள்ளமுகந்து, உறை—நித்யவாஸம் செய்தருளுகிற, வாமனன்— வாமநாவதாரம் செய்தருளிய எம்பெருமான், ஓட்டரா வந்து — ஓடிவந்து, என் கை பற்றி — என்னுடைய கையைப்பிடித்து, தன்னொடும்—தன்னோடு, கூட்டும் ஆகில்—அணைத்துக்கொள்வனாகில், நீ கூடிடு—நீ கூடவேணும்.

அவ:—இரண்டாம் பாட்டு. அவன் என்னைப்பெறுகைக்கு ஸாத$_4$நாநுஷ்ட$_2$ாநம் பண்ணுகையிலே உத்$_3$யுக்தரைப்போலே இருந்தான்; அதின் ப$_2$லம் நான்பெறும்படி பண்ணவல்லையே? என்கிறாள்.

வ்யா:— (காட்டில் வேங்கடம்) காட்டிலேயுண்டான வேங்கடமென்னுதல்; காட்டை இல்லாகவுடைய வேங்கடம் என்

---

*2. அவ:*— அவன் வேங்கடத்திலும், திருக்கண்ணபுரத்திலும் என்னைப் பெறுவதற்கு ஸாத$_4$நாநுஷ்ட$_2$ானம் பண்ணத் தொடங்கினவன்போலிருந்தான். அதன் பயனாக, அவன் ஓடிவந்து என்னைக் கைப்பிடிக்கும்படி நீ செய்யவல்லையே? என்று கூடலை வேண்டுகிறாள்.

---

என்பானென்? என்ன (முமுக்ஷுக்களித்யாதி$_3$) "பள்ளிகொள்ளுமிடத்து" என்றதுக்கு ஏகதாத்பர்யமாதல். l உபபாத$_3$நம் (அவனாலே இத்யாதி$_3$) i அடிகொட்டிட-துடைகுத்தி உறக்க. 1.

னுதல். ஸ்ரீத3ண்ட3காரண்யத்தில் ரிஷிகளோடேயிருந்து வநவாஸ ரஸம் அநுப4வித்தாற்போலேயாய்த்துத் திருமலையிலிருப்பு ; திருவயோத்4யையிலிருக்குமாப்போலேயாய்த்துத் திருக்கண்ண புரத்திலே எழுந்தருளியிருக்கிற இருப்பு. அன்றியே, ஸ்ரீப்3ருந்தா3வநமும் திருவாய்ப்பாடியும்போலேயாதல். a பரமபத3த்தில் நித்யஸூரிகளுக்குத் தன்னை அநுப4விக்கக் கொடுத்துக்கொண்டிருக்குமவனிறே, கானமும் வாநரமும் வேடுமான இவர்களுக்குக் காட்சிகொடுத்துக்கொண்டு திருமலையிலே வந்துநிற்கிறன். (வாட்டமின்றி) "பரமபத3த்திலே நித்யஸூரிகள் அநுப4விக்கக்கடவ நாம், இவ்விடத்தை விட்டு இவர்கள் நடுவேயிராநின்றோம்" என்று திருவுள்ளத்திலே ஒருவாட்டமின்றிக்கே.

---

*வ்யா:—* *(காட்டில்வேங்கடம்)* காட்டிலேயிருக்கும் வேங்கடம் என்றோ, காட்டை இல்லாக—இருப்பிடமாக உடைய வேங்கடம் என்றோ பொருள் கொள்ளலாம். *(காட்டில் வேங்கடம் கண்ணபுரநகர்)* ஸ்ரீத3ண்ட3காரண்யத்திலே ரிஷிகளோடேயிருந்து வனவாஸச் சுவையை ஸ்ரீராமபிரான் அநுப4வித்தது போலே அச்சுவையைத் திருவேங்கடமுடையானாகத் திருமலையிலிருந்து அநுப4விக்கிறன். பெருமாள் அயோத்தியிலிருந்து அநுப4வித்த நகரச்சுவையை, திருக்கண்ணபுரநகரில் ஸௌரிராஜனாயிருந்து அநுப4விக்கிறன். அல்லது கண்ணன் பிருந்தாவனமாகிற காட்டிலேயிருந்து அநுப4வித்த சுவையை வேங்கடத்தில் திருவேங்கடமுடையானாயிருந்தும், திருவாய்ப்பாடியிலிருந்து அநுப4வித்த சுவையைத் திருக்கண்ணபுரத்தில் ஸௌரிராஜனாயிருந்தும் அநுப4விப்பதாகக் கொள்ளலாம். *(காட்டில் வேங்கடம்)* பரமபத3த்திலே நித்யஸூரிகளுக்குத் தன்னை அநுப4விக்கக் கொடுத்துக்கொண்டிருக்குமவனன்றோ—"கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம்" *[நான் திருவ 47]* என்கிறபடியே தாழ்ந்தவர்களுக்கு முகங்கொடுத்துக்கொண்டு திருமலையிலே வந்து நிற்கிறன். *(வாட்டமின்றி)* "பரமபத3த்திலே நித்யஸூரிகளுக்கு முகங்கொடுத்த நாம் அவ்விடத்தை விட்டு இவர்கள் நடுவிலே இருக்கும்படியாய்விட்டதே!" என்று திருவுள்ளத்தில் ஒரு வாட்டமில்லாமல் எழுந்தருளியிருக்கிறன்.



(மகிழ்ந்து) அவர்கள் நடுவே நிரதிஶயாநந்த3யுக்தனாயிருக்குமாபோலே, நிரவதி4கப்ரீதியுக்தனாயிருக்கும். (உறை) அவதாரங்கள்போலே தீர்த்த2ம் ப்ரஸாதி3யாதே, நித்யவாஸம் பண்ணுகிற. (வாமனன்) தன்னுடைமை பெறுகைக்குத் தான் இரப்பாளனுமவன். (b ஓட்டராவந்து) c ஓரடிக்கழஞ்சு மண்ணுக்குப் பதறுமவன் இவளைப்பெற்றால் இரானிறே. ஆஸுரப்ரக்ருதியான மஹாப3லிமுன்னே கழஞ்சு மண்ணுக்குப் பதறி நடக்குமவன், இவள் ஒருதலையானால் இரானிறே ஆறி. (ஓட்டரா வந்தென் கைப்பற்றி) d 54. "बाल्ये बालेन पीडित:"

---

வாட்டமில்லாமல் இருக்கும் அளவேயோ? — *(மகிழ்ந்து)* நித்யஸூரிகள் நடுவில் ப்3ரஹ்மானந்த3த்தை உடையவனாயிருப்பது போலே எல்லையற்ற மகிழ்ச்சி உடையவனாயிருக்கிறன். *(உறை)* விப4வாவதாரங்கள் போலே ஒரு காலத்தில் முடிவடையாமல் 'ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது பேரேன்' என்பவன் போலே நித்யவாஸம் செய்கிறன். *(வாமனன்)* தன் உடைமையான உலகத்தைப் பெறுவதற்கு மாவலியிடம் தான் யாசகனானவன் இப்படி மகிழ்ந்துறைவதற்குச் சொல்லவேணுமோ? *(ஓட்டராவந்து)* ஓடிவந்து. கழஞ்சு (கழற்கொடி என்னும் கழற்சிக்காய்) அளவுள்ள ஓரடி மண்ணுக்குப் பதறி வந்து யாசித்தவன் இவளைப் பெறுவதற்குச் சொல்லவேணுமோ? அஸுரஸ்வப4ாவமுடைய மாவலியின் முன்னே ஓரடி மண்ணுக்குப் பதறி நடந்தவன், பெறவேண்டியது பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையான இவளையானால் ஆறியிருப்பனோ? *(ஓட்டரா வந்து என்கைப்பற்றி)*

54. ந ப்ரமாணீக்ருத: பாணி: ப3ால்யே ப3ாலேந பீடி3த: ।
[ரா-யு 119-16]

---

அரு:—இரண்டாம் பாட்டு. (காட்டிலித்யாதி3) a "காடு" என்றதுக்குக் கருத்தென் ? என்ன ; அருளிச்செய்கிறார்— (பரமபத3த்திலித்யாதி3) b ஓட்டராவந்து - ஓடிவந்து. c ஓடிவருகை கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (ஓரடிக் கழஞ்சு மண்ணித்யாதி3 வாக்யத்3வயத்தாலே) d (ப3ால்யே

(ப$_3$ால்யே ப$_3$ாலேந பீடி$_3$த:) என்கிறபடியே, “அங்கண்ணனுண்டவென்னருயிர்க்கோதிது” என்னுமாபோலே பிடித்த பிடியிலே அநந்யார்ஹமாம்படி பிடித்து. (தன்னொடும் e கூட்டுமாகில்) f நான் தன் கரஸ்பர்ஶத்தாலே துவண்டு ஸ்தப்$_3$தை$_4$யாய் நிற்க, அணைத்து g ஏறிட்டுக்கொள்ளுமாகில். (நீ கூடிடு கூடலே) h அவன்பக்கல் குறையில்லை; உன் h$_2$ தலைதுலுக்குகைகிடாய் வேண்டுவது. 2.

---

[என் சிறுவயதில் சிறுவரான உம்மால் நெருக்கிப் பிடிக்கப்பட்ட அக்கை (இன்று) எண்ணிப்பார்க்கப்படவில்லை.] என்று சீதாபிராட்டியைப் பிடித்த பிடிபோலே தன்னையும் அவன்வந்து கையால் பிடிக்கவேணும் என்று ஆசைப்படுகிறாள். “அங்கண்ணன் உண்ட என் ஆருயிர்க் கோதிது” [திருவாய் 9-6-6] என்கிறபடியே, பிடித்தபிடியிலே வேறொருவர்க்கு ஆகாதபடி பிடித்து. (*தன்னொடும் கூட்டுமாகில்*) அவன் கையால் பிடித்த பிடியாலே துவண்டு நான் வேறொன்றறியாமல் நிற்கும்படி என்னை அணைத்துத் தன்னோடு ஒன்றாக்கிக் கொள்ளுவானாகில். (*நீ கூடிடு கூடலே*) நீ இசைந்து கூடிவிட்டாயானால், அவன் என்னை அணைப்பது நிச்சயம். ஸ்வாபதே$_3$ஶத்தில் கூடல் மனஸ்ஸைக் குறிப்பதாய், எம்பெருமான் நிர்ஹேதுகமாகச் சேதனனை ஆட்கொள்வதற்கு எதிர்சூழல் புக்குத் திரிந்தாலும், பேற்றைப் பெறுவதற்கு இவன் மனத்தில் இசைவுவேணும் என்று காட்டுகிறது. 2.

3. *அவ:*— உப$_4$யவிபூ$_4$தி நாயகனாகயிருந்து கண்ணனாய் அவதரித்தவனைக் கூட்டிவைக்கவேணும் என்கிறாள்.

---

ப$_3$ாலேந த்வயா பீடி$_3$த: பாணி: த்வயா ந ப்ரமாணீக்ருத இத்யந்வய:; யத்$_3$வா, த்வயா அங்கீ$_3$க்ருத: பாணி: ப$_3$ால்யே ப$_3$ாலேந பீடி$_3$த:) என்று அருளிச்செய்வர். f கைப்பற்றினால் தானே கூடலாயிராதோ? அவனே கூட்டவேணுமோ? என்ன,— (நானித்யாதி$_3$) e,g “கூட்டுமாகில்” என்றது-கூட்டுவானான பின்பு என்றபடி. h அவன் எதிர்சூழல்புக்குத் திரிந்தாலும் இவன் மநஸ்ஸூம் இசையவேணுமென்றபடி. h$_2$ (தலைதுலுக்கு) இசைவு. நீ கூடுகை என்றபடி. 2.



## நாலாம் திருமொழி—மூன்றும் பாட்டு

பூமகன்புகழ் வானவர் போற்றுதற்
காமகன் அணி வாணுதல் தேவகி
மாமகன்மிகு சீர்வசு தேவர்தம்
கோமகன்வரில் கூடிடு கூடலே.

பதவுரை:— **பூ மகன்**—பூவிற்பிறந்த பிரமனும், **புகழ் வானவர்**—புகழ்பெற்ற நித்யஸூரிகளும், **போற்றுதற்கு**—பாடித்துதிப்பதற்கு, **ஆம்**—தகுந்த, **மகன்**—புருஷோத்தமனாய், **அணி வாள் நுதல் தேவகி**—அழகிய ஒளியுடை நெற்றியையுடைய தேவகியினுடைய, **மா மகன்**—சிறந்த புத்திரனாய், **மிகு சீர் வசுதேவர்தம்**—மிகுந்த நற்குணங்களையுடையரான வஸூதே$_3$வருடைய, **கோ மகன்**—மாட்சிமை தங்கிய புத்திரனான கண்ணபிரான், **வரில்**—(என்னை அணைக்க) வருவானாகில், **கூடலே! கூடிடு**—.

வ்யா:— மூன்றும் பாட்டு. (a பூமகன்) b இந்த விபூ$_4$தி. (புகழ்வானவர்) 55. “लक्ष्मिसंपन्नः” (லக்ஷ்மிஸம்பந்ந:) போலே

---

*வ்யா:*— (*பூமகன்*) உந்தித்தாமரைப்பூவில் பிறந்த பிரமன். இங்கு பிரமனைச் சொன்னது அவனால் படைக்கப்பட்ட இந்த லீலாவிபூ$_4$தியிலுள்ளார்க்கு உபலக்ஷணம். (*புகழ்வானவர்*)

55. ஸர்வப்ரியகரஸ்தஸ்ய ராமஸ்யாபி ஶரீரத: ।
லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நோ ப$_3$ஹி: ப்ராண இவாபர: ॥
[*ரா-பா$_3$* 18-28]

[கைங்கர்யலக்ஷ்மியை உடைய லக்ஷ்மணன், ராமனுக்கு ஶரீரத்தைக் காட்டிலும் எல்லாப் பிரியத்தையும் செய்பவனாகவும், வெளியிலிருக்கும் மற்றொரு ப்ராணன்போலவும் விளங்கினான்.] என்கிறபடியே கைங்கர்யச்செல்வம் மிக்கவராகப் புகழப்படும் இளையபெருமாளைப்போலே புகழப்படும் நித்யஸூரிகள். இதனால் நித்யவிபூ$_4$தியிலுள்ளாரைச் சொல்லுகிறது. (*போற்றுதற்கு ஆம்மகன்*)

---

அரு:—மூன்றும் பாட்டு. (பூமகனித்யாதி$_3$) a,b “பூமகன்” என்று—ப்$_3$ரஹ்மாவாய், அத்தாலே- இந்த விபூ$_4$தியைச்

அங்குள்ளார். (c போற்றுதற்காமகன்) d 56 "नावेव यान्तमुभये हवन्ते" (நாவேவ யாந்தமுப4யே ஹவந்தே) இரண்டு கரையிலுள்ளாரும் நடுவுபோகிற ஓடத்தை d2 அழைக்குமாபோலே. (e அணியித்யாதி3) அழகிய f ஒளியையுடைத்தாய் வேறோரா ப4ரணம் மிகையான g நுதலையுடைய தே3வகிக்கு. (மாமகன்) அவள் வளர்த்த செருக்காலே மகனல்ல, உடன்பிறந்தான் என்னலாம்படி மிக்க மகன். தாய்வழியால் வந்த ஏற்ற

---

56. நாவேவ யாந்தமுப4யே ஹவந்தே
[தைத்-ஸம் (கா-1, ப்ர.6, அநு-12, பஞ்-3).]

[(ஆற்றில்) படகிலே போகிறவனை இரு கரையிலுள்ளாரும் அழைப்பதுபோலே, பரமபுருஷனை உப4யவிபூ4தியிலுள்ளாரும் அழைக்கிறார்கள்.] என்கிறபடியே இரண்டு கரையிலிருப்பவர்களும் நடுவில் ஆற்றில் ஓடத்தில் போகிறவனை அழைப்பது போலே, உப4யவிபூ4தியிலுள்ளாரும் அழைத்து. போற்றுதற்குரிய புருஷோத்தமன். (*அணி வாணுதல் தேவகி*) அழகிய ஒளியை உடையதாய், தனக்கு ஒரு ஆப4ரணமும் தேவையில்லாத நெற்றியையுடைய தே3வகிக்கு. (*மாமகன்*) அவள் இவனைச் செல்லம் கொடுத்து வளர்த்த செருக்காலே பார்ப்பவர்களுக்கு 'இவன் மகனல்ல, கூடப்பிறந்தவன்' என்று சொல்லும்படி உருவத்தாலும், அதி4காரதோரணையாலும் மிகுந்திருக்கும் மகன். இப்படித் தாய்வழியால் வந்த ஏற்றம்

---

சொல்லுகிறது. c (ஆம்மகன்) மகன்-புருஷனாய், ஆமென்று-தகுதியாய், தகுதியான புருஷன் - புருஷோத்தமன் என்றபடி. d விபூ4தித்3வயத்திலுள்ளாரும் ஏத்துமதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (நாவேவ இத்யாதி3) நாவமிவ என்றபடி (ஹவந்தே) "ह्वृ दानादानयोः" (ஹ்ரு தா3நாதா3நயோ:) என்கிற தா4துவிலே, ஆதா3நமென்று—கொள்ளுகையாய், அத்தால்—அழைக்கை என்றபடி. d2 அழைக்குமாபோலே இரண்டு விபூ4தியிலுள்ளாராலும் போற்றப்படுமவனென்று பூரிப்பது. c போற்றுதற்காம் மகன் - போற்றும்படியிருக்கிற மகன் என்றபடி. e அணி - அழகு. f வாள்-ஒளி. g நுதல்-



மொன்றுமேயோவுள்ளது? என்ன,—(மிகுசீர் வசுதேவர்தம் h கோமகன்) கோவான மகன். சக்ரவர்த்திக்குப்போலே நியாம்யனல்லன்; இவர்தம்மையும் நியமிக்கும் மகன். அவரை நியமிக்கையாவது-கம்ஸப4யத்தாலே இவனுக்கு என் வருகிறதோ! என்று வயிறு பிடித்தால், 'அப்பரே! நீரேன் ப4யப்படுகிறீர்; அஞ்சாதே நான் சொன்னத்தைக் கேட்டு ஸுக2மேயிரும்' என்றாற்போலே நியமிக்கை. (வரில்) i இரண்டு பிறப்பாலுமுள்ள இருவர் சா2யையும் தோற்ற நடையிலே நடந்துவருமாகில். (கூடிடு கூடலே) நீ கூடி என்னையும் அவனையும் கூட்டு. 3.

---

மாத்திரமோ உள்ளது? எனில்—(*மிகுசீர் வசுதேவர்தம் கோமகன்*) தந்தைக்குரிய பரிவுக்குணத்தால் மிகுந்த வசுதேவரையும் நியமிக்கவல்ல மகனாகையாலே கோமகன். த3சரத2 சக்ரவர்த்திக்கு ராமபிரான் நியாம்யனாய் (நியமிக்கப்படுமவனாய்) இருந்தது போலே இருப்பவனல்லன்; இவரையும் நியமிக்கின்றவன் என்றபடி. இவரை நியமிக்கையாவது—மிகுசீர்வசுதேவராகையாலே கண்ணனிடமுள்ள பரிவாலே கம்ஸனிடம் ப4யந்து, 'கண்ணனுக்குக் கம்ஸனால் என் வருகிறதோ?' என்று இவன் பிறந்தவுடன் அஞ்சினபோது "ஐயரே! நீர் ஏன் அஞ்சுகிறீர்? கம்ஸனை நான் கவனித்துக்கொள்கிறேன். அஞ்சாமல் நான் சொன்னதில் நம்பிக்கையுடன் நீர் இங்கேயே ஸுக2மாயிருப்பீராக" முதலான வார்த்தைகளைச் சொல்லி, பிறந்தவுடனேயே நியமித்தானன்றோ. (*வரில்*) வசுதேவர் மகனாகவும், நந்த3கோ3பன் குமாரனாகவும் இப்படி இருவர்க்கு மகனாகையாலே இருவர் சாயலும் நடையிலே தோற்ற நடந்துவரும்படி. (*கூடிடு கூடலே*) நீ கூடி என்னையும் அவனையும் கூட்டு. 3.

4. *அவ* :— காலாலே காளியமர்த்த3னம் செய்தவன் கையாலே எனக்குக் குசமர்த்த3நஸௌபா4க்3யம் கிடைக்கும்படி நீ கூடுவாயாக என்கிறாள்.

---

நெற்றி. h கோ - ராஜா. i இரண்டு பிறப்பு—தே3வகிக்கும் வஸுதே3வர்க்கும் பிறக்கை. 3.

## நாலாம் திருமொழி—நாலாம் பாட்டு

ஆய்ச்சி மார்களு மாயரு மஞ்சிடப்
பூத்த நீள்கடம் பேறிப் புகப்பாய்ந்து
வாய்த்த காளியன் மேல்நட மாடிய
கூத்த ஞர்வரில் கூடிடு கூடலே.

பதவுரை:— ஆய்ச்சிமார்களும் — இடைச்சிகளும், ஆயரும்—இடையரும், அஞ்சிட—ப$_4$யப்படும்படியாக, பூத்த நீள் கடம்பு ஏறி — புஷ்பித்ததாய் உயர்ந்திருந்த கடம்ப மரத்தின் மேல் ஏறி, புக பாய்ந்து—(காளியன் தலையும் திருவடியும்) நீரில் புகும்படி எழும்பிக்குதித்து, வாய்த்த காளியன் மேல் நடம் ஆடிய—ப$_4$ாக்$_3$யஶாலியான காளிய நாக$_3$த்தின் மேல் நர்த்தனஞ்செய்த, கூத்தனுர் வரில்— நாட்ய ஶாஸ்த்ர நிபுணனான கண்ணபிரான் வரக்கூடு மாகில், கூடலே! கூடிடு—.

வ்யா:— நாலாம் பாட்டு. (a ஆய்ச்சிமாரித்யாதி$_3$) b ப$_4$யமே ஸ்வப$_4$ாவமானவர்களும். (c ஆயரும்) d ப$_4$யம் வ்யுத்பத்தி பண்ணியறியாதவர்களும். (அஞ்சிட) e அதுவே போர்க்கள

---

*வ்யா:— ( ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிட )* ப$_4$யமே இயல்வாகவுடைய ஆய்ச்சியரும், ‘உந்துமதகளிற்றன் ஓடாத தோள்வலியன்’ [ திருப்பாவை 18 ] என்கிற நந்தகோபனைப் போலே ப$_4$யம் இன்னதென்றறியாத ஆயர்களும் ஒருபடிப்பட ப$_4$யப்படும்படியாக. “போர்க்களமாக நிருத்தம் செய்த பொய்கைக் கரை” [நாச்-திரு 12-5] என்கிறபடியே, கண்ணன் காளியன் தலைமேலே பாய்ந்தான் என்று கேட்டவுடன், கேட்ட இடத்திலேயே ஆயரும் ஆய்ச்சியரும் செத்தவர்போலே மயங்கி விழுகையாலே, ஆய்ப்பாடியும் பொய்கைக்கரையும் பிணக்காடாய்ப் போர்க்களமாகவன்றே காட்சியளித்தது.

---

அரு:— நாலாம் பாட்டு. (ஆய்ச்சிமாரித்யாதி$_3$) a...d ஸ்த்ரீபுருஷவ்யக்தியைப் பற்ற-ப$_4$யமுண்டு இல்லை என்கிறது. e ப$_4$யப்படவேண்டுவானென்னென்ன; “காளியன்



மாகவிறே ந்ருத்தம் செய்தது. (பூத்தநீள்கடம்ப) விஷத$_3$க்$_3$த$_4$மான கடம்பு, திருவடிகள் பட்டவாறே பூத்தது. f அங்கோலதைலத்துக்குள்ள ஶக்தியும் இங்கில்லையன்றே? கல்லு பெண்ணுனல் கடம்பு பூக்கச்சொல்லவேணுமோ? (நீள்கடம்பு) இலக்கு வாய்க்கைக்காக உயர ஏறிப் பாய்ந்தான். (புகப்

---

*பூத்தநீள்கடம்பு)* காளியனுடைய விஷத்தினுலே எரிந்து உலர்ந்திருந்த கடம்பமரம் அமுததாரைபொழியும் கண்ணனுடைய திருவடிகள் பட்டவுடன் பூத்துப்பணைத்தது. எரிந்துகரிந்து போனமரம் திருவடிபட்டுப் பூத்துப் பணைக்குமோ ? எனில். அங்கோலத் தைலம் தடவப்பெற்ற மாம்பழக்கொட்டையைத் தரையிலே நட்டால் அப்போதே முளைத்துப் பெரிய மரமாய், காய்த்துப் பழுக்கும் என்று சொல்லும்போது “*விஷ்ணோ: பதே$_3$ பரமே மத்$_4$வ உத்ஸ:*” [ருக் அஷ்டக2-2-24] [விஷ்ணுவினுடைய மேலான திருவடியில் அமுதம் வெள்ளமிடுகிறது.] என்று வேத$_3$த்தால் அம்ருதப்ரவாஹம் பொழிவதாகச் சொல்லப்பட்ட எம்பெருமானுடைய திருவடிபட்டு, பட்ட மரம் தளிர்க்கச் சொல்லவேணுமோ? (அங்கோலத்தைலம்பற்றி அரும்பதவுரையில் காண்க) ஸ்ரீராமபிரானுடைய திருவடியால் கல் பெண்ணுனல், கண்ணன் திருவடியால் கரிந்த கடம்பு பூக்கக் கூடாதோ ? ( *நீள்கடம்பு* ) காளியன் தலையிலே குதிப்பதற்கு வாகாயிருப்பதற்காக, கடம்பமரத்தின் உச்சியிலே ஏறிப் பாய்ந்தான். (*புகப்பாய்ந்து*) உயர இருந்து கண்ணன் வேக$_3$மாகக் குதிக்கையாலே, கண்ணனுடைய திருவடியோடுகூடிய

---

மேல்” என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிருர் (அதுவே போரித்யாதி$_3$) அவன் தலை யுத்$_3$த$_4$ பூ$_4$மியாக என்றபடி. f த$_3$க்$_3$த$_4$மான கடம்பு பூக்கக்கூடுமோ ? என்ன அருளிச்செய்கிருர் (அங்கோலமித்யாதி$_3$) அம், கோலென்று-வில்லாய் அழகிய வில்லையுடைய சக்ரவர்த்தித் திருமகன். அங்கோலதைலத்துக்குள்ள ஶக்தியாவது-அழிஞ்சில் பழம் அம்மரத்தின் கீழே உதிர்ந்து கிடந்தால், ஆகாஶத்திலே மின்னினுல் அக்ஷணத்திலே அந்தப் பழம் மரத்திலே பழைய படியே ஒட்டும்; அந்த க்ஷணத்திலே அப்பழத்தை வாங்கித் தைலமாக்கி ஒரு மாவிரையிலே தடவி, தரையிலே நட்டால் அப்போதே முளைத்துப் பெரிய மரமாய்க் காய்த்துப்

பாய்ந்து) ஜ காலாழக்குளிக்க. (வாய்த்த காளியன்) தன் முலேகளிலே இவள் கணிசிக்கும் நடமடைய அவன் தலேயிலே பெற்ருன். பெண்ணுய்ப்பிறவாதே காளியனுய்ப்பிறந்தேனுகில் இதெல்லாம் பெறலாய்த்தே. விஷம் பொதிந்தவன் தலே யாகப்பெற்ருன்; அம்ருதம் பொதிந்த முலேகள் பெருதொழி வதே! (நடமாடிய) b ந்ருத்தஶாஸ்த்ரத்துக்கு ஸூத்ரமிறே. (கூத்தனுர்வரில்) ஆடின ஒசிவோடே வந்து அணேயவேணும். (கூடிடு கூடலே) உன் இசைவு கொண்டு பெறவிருக்கிறேன் நான். 4.

---

காளியன் தலே நீரிலே புகுந்து குளிக்கும்படி பாய்ந்து. *(வாய்த்த காளியன்)* தன் தலேயின்மேல் எம்பெருமானுடைய திருவடிகள் பலமுறை ஏறித் துகைக்கும்படியான பேறு வாய்க்கப்பெற்ற காளியன். தன் ஸ்தனங்களிலே அவன் கை நடமாடவேணுமென்று ஆசைப்படும் இவளுடைய மனோ ரத₂ம் ஈடேறவில்லே. திருவடிகள் தலேயிலே நடமாடவேணு மென்று ஆசைப்படாத அவன் பெற்றுவிட்டான். பெண்ணுய்ப் பிறந்து இப்படி ஆசைப்படாமல், காளியனுய்ப்பிறந்து ஆசையே இல்லாமலிருந்திருந்தாலும் பெற்றிருக்கலாம்போலிருக்கிறதே! என்று ஆண்டாள் திருவுள்ளம். ''விஷத்தைப் பொதிந்து கொண்டிருக்கும் தலே தலேயான பேற்றைப் பெற்றது. அனே வர்க்கும் ஞானமளிக்கும் சைதன்யஸ்தன்யமாகிற (ஞானப் பாலாகிற) அமுதத்தைப் பொதிந்துகொண்டிருக்கும் முலேகள் பேறுபெருதொழிவதே!'' என்பது இங்கு வ்யாக்₂யாதாவின் ஈடுபாடு. *(காளியன் மேல் நடமாடிய)* கண்ணன் காளியன்மேல் ஆடிய ஆட்டத்தை ஸூத்ரமாகக்கொண்டே ப₄ரதமுனி முத லானுர் ப₄ாஷ்யம், வ்ருத்திபோன்ற நாட்டிய *ஶாஸ்த்ரங்களே* எழுதினுர்களன்ருே. *(கூத்தனுர்வரில்)* காளியன்மேல் நாட்டி யம் ஆடி ஒசிந்த உடம்போடே வந்து தன்னே அணேய வேண்டும் என்று ஆசைப்படுகிருள், *(கூடிடு கூடலே)* அவன் கைபார்த்திருக்கும் நான் இப்போது கூடலாகிற உன் இசைவு கொண்டு பெறவிருக்கிறேன். 4.

---

பழுக்கும் என்ருற்போலே சொல்லுவர்கள். ஜ காலாழக் குளிக்க - திருவடிகள் அவன் ப₂ணத்திலே அமிழவாதல், கொப்பளிக்கவாதல். b ஶ்ரீப₄ாஷ்யத்துக்கு ஸூத்ரம்போலே ந்ருத்த *ஶா*ஸ்த்ரத்துக்கும் இவனுடினது ஸூத்ரமென்றபடி. 4



## நாலாம் திருமொழி—ஐந்தாம் பாட்டு

மாட மாளிகை சூழ்மது ரைப்பதி
நாடி நந்தெரு வின்நடு வேவந்திட்(டு)
ஓடை மாமத யானே யுதைத்தவன்
கூடு மாகில்நீ கூடிடு கூடலே.

**பதவுரை:—** ஓடை — நெற்றிப்பட்டத்தையுடைத்தாய், **மாமதம்**—மிக்க மதத்தையுடைத்தான, **யானே**—(குவலயா பீட₃மென்னும்) யானேயை, **உதைத்தவன்**—உதைத்து அழித்த கண்ணபிரான், **மாடம் மாளிகை சூழ் மதுரை பதி**—மாடங் களேயுடைய மாளிகைகளாலே சூழப்பட்ட மதுரைமா நகரிலே, **நாடி**—(நம் வீட்டைத்) தேடிக்கொண்டு, **நம் தெரு வின் நடுவே வந்திட்டு**—நம்முடைய வீதியின் நடுவிலே வந்து, **கூடும் ஆகில்**—(நம்மோடு) கூடுவானுகில், **கூடலே! நீ கூடிடு**—.

**வ்யா:—** அஞ்சாம் பாட்டு. (மாட மாளிகை சூழ் மதுரைப் பதி நாடி) அவன் வில்விழவுக்கு என்று கோடித்தான்; இவள் இவன் வரவுக்கு என்றிருந்தாள். (நாடி) நேரே வந்து புகுரவொண்ணுது. ''இன்னுள் வீடு எது, இன்னுள் வீடு எது?'' என்று ஊர் உ இரியலிடத் தேடிவிட்டு விடாயெல்

---

*5. அவ:—* 'விரோதி₄களே நிரஸிப்பதை இயல்வாகக் கொண்டவன் கூடும்படி, கூடலே! நீ கூடுவாயாக' என்கிருள்.

*வ்யா:— (மாடமாளிகை சூழ் மதுரைப்பதி)* கம்ஸன் வில் விழவை முன்னிட்டு, மதுரை மாநகரிலே மாடமாளிகைகளே யெல்லாம் அமைத்து அதை விரிவுபடுத்தினுனன்ருே. அதை இவள் தன் காதலாலே கண்ணன் தன்னேத் தேடிவருவதற் காகச் செய்யப்பட்டது என்று கருதுகிருள். *(நாடி)* தேடி வந்து. நேரே வந்து என் வீட்டில் புகுவதில் ஸ்வாரஸ்ய

---

அரு:— அஞ்சாம் பாட்டு (மாடமித்யாதி₃) உ இரிய லிட — ஆரவாரம்பண்ண; தேடிவிட்டு — முழுச்சொல்லு.

லாந்தோற்ற. b 57.“मुदा युक्तौ मालाकारगृहं गतौ”(முத₃ா யுக்தெள மாலாகாரக்₃ருஹம் க₃தெள) மாலாகாரருக்கு முடுக்குத்தெருவிலேயிறே அகம்; பெருந்தெருவெல்லாந்தேடி முடுக்குத் தெருவிலே கண்டுகொண்டானிறே; “प्रसादपरमौ” (ப்ரஸாத₃ பரமெள) ப்ரஸாத₃மே விஞ்சியிருப்பது; “नाथौ” (நாதெ₂ள)

---

மில்லை. மதுரை மாநகரிலுள்ள ஒவ்வொரு வீதியிலும் ‘இவள் வீடு எது? இவள் வீடு எது?’ என்று தேடி, ஊரெல்லாம் ‘இவள் கண்ணனுக்கு இனியவள்’ என்று ஆரவாரம் உண்டாகும்படி தன்னைத் தேடி, அதனாலுண்டான ஆயாஸமெல்லாம் திருமேனியிலே தோற்றும்படி வரவேணும் என்று ஆசைப் படுகிருள்.

57. க்ருஷ்ணராமெள முத₃ா யுக்தெள மாலாகாரக்₃ருஹம் க₃தெள ।...
ப்ரஸாத₃பரமெள நாதெ₂ள மம கே₃ஹமுபாக₃தெள ।
த₄ந்யோऽஹமர்ச்சயிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவந: ॥
[வி-பு 5-19-17]

[ப₃லராம கிருஷ்ணர்கள் மிக உகப்புடன் மாலாகாரர் மாளிகைக்குச் சென்றனர்;...“அன்பில் விஞ்சியவர்களாய், ஸ்வாமிகளாயுள்ள இவ்விருவரும் என் குடிசைக்கு எழுந்தருளினர்; த₄ன்யனுன நான் அவர்களை அர்ச்சிக்கக்கடவேன்” என்று மாலையை விற்று வயிறு வளர்க்கும் மாலாகாரர் சொன்னர்.] என்கிறபடியே மாலாகாரர் இருந்த முடுக்குத் தெருவைத் தேடிவந்தானன்றே கண்ணன். “உகப்புடன் மாலாகாரரின் வீட்டை அடைந்தனர்” என்கையாலே, உகப்பினலே மதுரை மாநகரின் பெருந்தெருவெல்லாம் தேடி, அவற்றில் காணமல் ஓர் முடுக்குத் தெருவிலிருந்த மாலாகாரர் வீட்டைக் கண்டுபிடித்து அதை அடைந்தனர் என்று தோற்றுகிறது. ‘அன்பில் விஞ்சியவர்களாய்’ என்கையாலே இவர்களிடம் பரத்வ ஸௌலப்₄யங்கள் இரண்டும் இருந்தபோதிலும், பரத்வத்தைக் காட்டிலும் ஸௌலப்₄யமே விஞ்சிநின்றது என்பது

---

b தேடிப்போனவிடமுண்டோ? என்ன அருளிச்செய்கிருர்



இது த₄ர்மமென்கைக்கு ஒரு த₄ர்மியுண்டித்தனை; “मम गेहमुपागतौ” (மம கே₃ஹமுபாக₃தெள) c நாத₂த்வம் மிக்கிருக்கில் அழைத்தன்றே காண்பது. “धन्योऽहं” (த₄ந்யோऽஹம்) ஆரும் தேடிப்பெருத நிதி₄யை, இருந்தவிடத்தே எடுத்துக்கொள்ளப் பெற்றேன்; “अर्चयिष्यामि” (அர்ச்சயிஷ்யாமி) ஸ்வரூபாநுகு₃ணமாகப் பெற்ற நிதி₄யை d அழித்து பூ₄ஜிப்பேன். “इति” (இதி) இப்பாசுரம் ஆர்சொன்னரென்னில்: “माल्योपजीवनः”(மால்

---

இவர்கள் தன்னைத் தேடிவந்த அன்பு மிகுதியிலிருந்தே விளங்குகிறது என்கிருர் மாலாகாரர். “நாத₂ர்களாய்(ஸ்வாமிகளாய்)இருப்பவர்கள்” என்கையாலே பரத்வமும் இவர்களால் விடமுடியாததாகையாலே இவர்களுடைய ஸ்வரூபத்தில் இணைந்திருந்தது என்னும் கருத்து விளங்குகிறது. ஸௌலப்₄யத்தைக் காட்டிலும் அன்பு விஞ்சியிருந்தது என்பதும், பரத்வம் ஸ்வரூபநிருபகமாய் ஸ்வரூபத்தில் அடங்கியிருந்தது என்பதும் எப்படித் தெரிந்தது? எனில்: ‘என் குடிசைக்கு எழுந்தருளினர்’ என்னும் மாலாகாரர் வாக்யத்திலிருந்து இது விளங்குகிறது. பரத்வம் விஞ்சியிருந்தால் மாலாகாரரைத் தாமிருந்த இடத்திற்கு வரவழைத்தன்றே கண்டிருப்பார்கள். அப்படியல்லாமல் அவரிருந்தவிடம் தேடிப்போகையாலே அன்பே விஞ்சியிருந்தது என விளங்குகிறது என்று கருத்து. ‘த₄ன்யனுன நான்’ என்கையாலே, பெரியவர்களெல்லாம் தேடியும் பெறமுடியாத புதையலை இருந்தவிடத்திலிருந்தே கண்டுகொண்ட பா₄க்₃யஶாலியான நான் என்கிருர். ‘அர்ச்சிக்கக் கடவேன்’ என்கையாலே, ஸ்வரூபத்துக்குத் தக்கபடி தானே தேடிவந்த அச்செல்வத்தை நான் அழித்து (தக்கவாறு மாற்றி), அர்ச்சனம், வந்த₃னம் முதலான வகைகளில் அநுப₄விக்கக் கடவேன் என்கிருர். ‘இதி’ (என்று) என்னும் பத₃த்தாலே இப்படிச் சொன்னவர் யாரென்று மேலே உணர்த்தப் போவதைக் காட்டுகிருர் ரிஷி. ‘மால்யோபஜீவந:’ (மாலையை விற்று

---

(முத₃ா இத்யாதி₃) c (நாத₂த்வம்) என்று த₄ர்மிமாத்ரத்திலே ஒதுக்குவானென்? என்ன அருளிச்செய்கிருர் (நாத₂த்வமித்யாதி₃). d அழித்து பூ₄ஜிக்கை – அர்ச்சநாதி₃களாலே

யோபஜீவந:) பே$_4$ாக்$_4$யத்தை விற்று உண்கிறவன், ப$_4$ார்யையை விற்று உண்பாரைப்போலே. முகத்தைத் திரியவைத்திறே மாலைகட்டுவது, இதிலே சாண்eமாலையழியாமைக்காக. "आह" (ஆஹ) f இவ்வரவு இவனை இப்படியாக்கி, சொல்லுவிப்பதும் செய்தது $f_2$ என்கிறான். g இவள்தானும் ஒரு மாலைக்காரர் மகளிறே.(நந்தெரு) திருவாய்ப்பாடியடையத் தன்னதானாற்போலே இங்குமொரு திருமாளிகையுண்டு. உகந்தருளியவிடமெங்கும்,

---

வயிறு வளர்க்கும் மாலாகாரர்)' என்னும் தொடருக்கு—தான் அனுப$_4$விக்கவேண்டிய மனைவியை விற்று உண்பாரைப்போலே, தான் அணிந்து அநுப$_4$விக்க வேண்டிய மாலையை விற்று உண்ணும் ஒருவனையும் இப்பாடுபடுத்திற்றன்றோ எம்பெருமானின் குண$_3$ப்பெருமை என்று கருத்து. மாலை கட்டுகிறவர்கள் தமக்கு அதில் ஆசையுண்டாகி, ஒரு சாண் மாலையைத் தாம் சூடிக்கொண்டு விடுவோமோ என்று பயந்து, மாலை கட்டும்போது அதைத் தாம் பார்க்காமல் முகத்தை மாற்றி வைத்துக்கொண்டு மாலை கட்டுவார்கள் என்று ப்ரஸித்$_3$த$_4$மன்றோ. '(மாலாகாரர்) சொன்னார்' என்கையாலே—கண்ணனுடைய வரவு இவரைக்கூட இப்படியாக்கி, இப்படி வார்த்தை சொல்லும்படியும் செய்தது என்கிறார் ரிஷி. இவளும் மாலாகாரரான பெரியாழ்வார் மகளாகையாலே 'நாடி நந்தெருவின் நடுவே வந்திட்டு' என்று மாலைக்காக அவரைத் தேடி வந்ததுபோலே தன்னையும் தேடிவருவான் என்று நினைக்கிறாள். இவள் சூடிக்கொடுத்த மாலையையே ஆசைப்பட்டானன்றோ எம்பெருமான். (*நந்தெரு*) ஆண்டாள் திருவாய்ப்பாடியைத் தன்னுடையதாக அபி$_4$மானித்ததுபோலே, மதுரை மாநகரிலும் தனக்கு ஒரு திருமாளிகையுள்ளதாக அபி$_4$மானிக்கிறாள்.

---

அநுப$_4$விக்கை e (மாலையழிக்கை)- அதிலே அல்பமாகிலும் தான் ஆசைப்படுகை. f மாலைவிற்கிறவன் **57.**"த$_4$ந்யோஹம்" என்னக்கூடுமோ ? என்ன அருளிச்செய்கிறார் (இவ்வரவித்யாதி$_3$) $f_2$ என்கிறானென்றது-"இத்யாஹ" என்றதைப் பற்ற. g அங்கே பூவுக்காகப் போகிறான், இங்கே வரக்



58. "देवत्वे देवदेहेयं मनुष्यत्वे च मानुषी" (தே$_3$வத்வே தே$_3$வதே$_3$ஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ) ஓரோ திருமாளிகையுண்டு. இன்னாளகத்துக்கு என்று h முகம் தெரியாதபடி அகத்தளவும் தெருவின் நடுவே வரவேணும். (ஓடை) i முகபடமுமாம், பட்டமுமாம். (மாமதயானை) களிப்பித்தார்கள் மத$_3$த்$_3$ரவ்யங்களாலே; மத$_3$த்தாலே செருக்கித் திமிர்த்து நின்றது; திருவடிகளாலே உதைத்தவன். (கூடுமாகில்) விரோதி$_4$ போய்த்து; நீ கூட்டித்தருமித்தனை. 5.

---

58. தே$_3$வத்வே தே$_3$வதே$_3$ஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ ।
விஷ்ணோர் தே$_3$ஹாநுரூபாம் வை
கரோத்யேஷாத்மநஸ்தநும் ॥ [வி-பு 1-9-145]

[(ப$_4$க$_3$வான்) தே$_3$வனாய் அவதரிக்கும்போது இப்பிராட்டி தே$_3$வரூபமெடுக்கிறாள்; அவன் மனுஷ்யனாகும்போது இவள் மநுஷ்யையாகிறாள். விஷ்ணுவின் தே$_3$ஹத்திற்குத் தகுந்ததாகத் தன் தே$_3$ஹத்தை அமைத்துக்கொள்கிறாள் இவள்.] என்கிறபடியே அவன் அவதரிக்கும்போதெல்லாம் ஒரு தி$_3$வ்ய தே$_3$ஹத்தை எடுத்துக்கொள்பவள், அவன் உகந்தருளின இடங்களிலே ஒரு திருமாளிகையை ஆசைப்படுவதில் வியப்பில்லையன்றோ. (*நடுவே வந்திட்டு*) தான் வாழும் தெருவில் வரும்போது தன்னகத்திற்குத்தான் வருகிறான் என்று எவரும் அறியமுடியாதபடி தன்னகத்தையடையும்வரையிலும் தெருவின் நடுவிலே வந்து, அனைவரும் வியக்கும்படி, சடக்கெனத் தன்னகத்தினுள் புகவேணுமென்று ஆசைப்படுகிறாள். (ஓடை) யானைகளுக்கு அணிவிக்கும் முகபடத்தையோ, முகப்பட்டத்தையோ குறிக்கும். (*மாமதயானை*) யானைக்கு மத$_3$ம் ஏறும்படி மத$_3$த்$_3$ரவ்யங்களை ஊட்டிவைத்திருந்தான் கம்ஸன் என்று உணர்த்தப்படுகிறது. (*மாமதயானை உதைத்தவன்*) மத$_3$த்தாலே செருக்கடைந்து திமிர்கொண்டுநின்ற யானையை. அச்செருக்கும் திமிரும் அத

---

கூடுமோ ? என்ன அருளிச்செய்கிறார் (இவள்தானுமித்யாதி$_3$) h முகம் தெரியாதபடி - முன்னடி தோற்றாதபடி; த்வரித்து என்றபடி. i முகபடம் - முகத்தை மறைக்கும் சோடு. 5.

## நாலாம் திருமொழி—ஆரும் பாட்டு

**அற்ற வன்மரு தம்முறி யநடை**
**கற்ற வன்கஞ் சனைவஞ் சனையில்**
**செற்ற வன்திக ழும்மது ரைப்பதிக்**
**கொற்ற வன்வரில் கூடிடு கூடலே.**

**பதவுரை:— அற்றவன்**—(முன்பே எனக்கு) அற்றுத் தீர்ந்தவனாய், **மருதம் முறிய**—(யமளார்ஜுநமென்னும்) மருத மரங்களானவை முறிந்து விழும்படியாக, **நடை கற்றவன்**—தவழ்நடை நடக்கக் கற்றவனாய், **கஞ்சனை**—கம்ஸனை, **வஞ்சனையில்** — வஞ்சனையினாலே, **செற்றவன்** — அழித்தவனாய், **திகழும் மதுரை பதி கொற்றவன்**—விளங்குகின்ற மதுரை மாநகர்க்கு அரசனான கண்ணபிரான், **வரில்**—வந்திடுவானாயின், **கூடலே! கூடிடு**—.

**வ்யா:— ஆரும் பாட்டு.** (அற்றவன்) முன்பே தனக்கு அற்றவன். இவளுக்காகக்காணும் பிறந்தது. 59. “ஸாதூ₄ந்”

---

னுயிரோடே போகும்படி உதைத்தவன். (*கூடுமாகில் நீ கூடிடு கூடலே*) விரோதி$_{4}$களை அழிப்பதையே இயல்வாகக் கொண்ட அவன், நாம் அவனையடையத் தடையாயிருந்த குவலயாபீட$_{3}$த்தை அழித்து விட்டான். நீ கூடி, அவனை என்னோடு கூடும்படி செய்வது உன்கடமை என்று கருத்து. 5.

6. *அவ:*— ‘எனக்காகவே இங்கு வந்து அவதரித்தவன் என்னோடு கூடும்படி, கூடலே! நீ கூடவேணும்’ என்கிறாள்.

*வ்யா:*— (*அற்றவன்*) முன்பே எனக்கு அற்றுத்தீர்ந்தவன். இவன் அவதரித்ததே இவளுக்காகவன்றோ.

59. பரித்ராணாய ஸாதூ$_{4}$நாம் விநாஶாய ச து$_{3}$ஷ்க்ருதாம் ।
த$_{4}$ர்மஸம்ஸ்தா$_{2}$பநார்த்தா$_{2}$ய ஸம்ப$_{4}$வாமி யுகே$_{3}$ யுகே$_{3}$ ॥
[கீ$_{3}$தை 4-8]

[நல்லோர்களை ரக்ஷிக்கவும், தீயவர்களை அழிக்கவும், த$_{4}$ர்மத்தை நிலைநிறுத்தவும் நான் யுக$_{3}$ந்தோறும் பிறக்கிறேன்.] என்று இவனே அருளிச்செய்தானன்றோ. (*மருதம் முறிய நடை கற்றவன்*)



(ஸாதூ$_{4}$நாம்) அன்றோ a தன்னையறியாத பருவத்தே விரோதி$_{4}$யைப் போக்கினபடி—(b மருதமித்யாதி$_{3}$) 60. “யமளார்ஜுநௌ” (யமளார்ஜுநௌ) இத்யாதி$_{3}$. (வஞ்சனையில்) த$_{4}$ர்மயுத்$_{3}$த$_{4}$மே வேணுமென்று பெருமாளைப்போலேயிருந்தானாகில் அவன் வஞ்சனமே தலைக்கட்டுமே. அவன் நினைத்த வஞ்சனத்தை அவன்றன்னோடே போக்கினபடி (திகழும் மதுரைப்பதிக் கொற்றவன்) c ராஜ்யத்துக்கு உக்$_{3}$ரஸேநனை வைத்தானே

---

தன்னைத் தான் அறியாமல் தவழ்ந்து செல்லும் குழந்தைப் பருவத்திலேயே பொய்ம்மாய மருதான அசுரரை அழித்தவனாகையாலே விரோதி$_{4}$களைப்பற்றி அஞ்சவேண்டியதில்லை.

60. வ்யக்$_{3}$ராயாமத$_{2}$ தஸ்யாம் ஸ கர்ஷமாண உலூக$_{2}$லம் ।
யமலார்ஜுநயோர் மத்$_{4}$யே ஜகா$_{3}$ம கமலேக்ஷண: ॥
கர்ஷதா வ்ருக்ஷயோர் மத்$_{4}$யே திர்யக்$_{3}$க$_{3}$தமுலூக$_{2}$லம் ।
ப$_{4}$க்$_{3}$நாவுத்துங்க$_{3}$ஶாக$_{2}$க்$_{3}$ரௌ தேந தௌ
யமலார்ஜுநௌ ॥ [வி-பு 5-6-16]

[அந்த யசோதை தன் காரியத்திலீடுபட்டிருக்கும்போது கமலக்கண்ணன் உரலையிழுத்துக்கொண்டு இரட்டை மருதமரங்களுக்கு நடுவில் சென்றான். மரங்களுக்கு நடுவே இழுத்துச் செல்லும்போது உரல் உருண்டுசென்றது. உயர்ந்த கிளை நுனிகளை உடைய அவ்விரண்டு மரங்களும் அவ்வுரலாலே முறிக்கப்பட்டன.] என்று சொல்லப்பட்டதன்றோ. (*கஞ்சனை வஞ்சனையில் செற்றவன்*) தீய புந்திக் கஞ்சனாகையாலே அவனை வஞ்சனையாலே கொன்றவன். அறப்போராலேயே கொல்லவேண்டுமென்று சக்ரவர்த்தித்திருமகனைப் போலே இருந்தால் வஞ்சகனான இவனிடம் செல்லாதென்று அறிந்து, வஞ்சனையாலே கொன்றவன். அவன் இவனைக்குறித்து நினைத்த வஞ்சனையை அவனோடே போம்படி செய்தவன். (*திகழும் மதுரைப்*

---

அரு:—ஆரும் பாட்டு. (அற்றவனித்யாதி$_{3}$) a மேலுக்கு அவதாரிகை (தன்னையித்யாதி$_{3}$) b மருதமுறிய-முறியவென்னுதல்; உரியவென்னுதல். c உக்$_{3}$ரஸேனன் ராஜாவாயிருக்க, க்ருஷ்ணனை “மதுரைப்பதிக்கொற்றவன்” என்னக் கூடுமோ? என்ன அருளிச்செய்கிறார் (ராஜ்யத்துக்கு

யாகிலும், இவனே ராஜா என்று இவள்பக்ஷம். (வரில் கூடிடு கூடலே) ராஜாக்களுக்கு ப்ரேரகன் * வேணுமோ? 6.

## நாலாம் திருமொழி—ஏழாம் பாட்டு

**அன்றின் னாதன செய்சிசு பாலனும்**
**நின்ற நீள்மரு தும்எரு தும்புள்ளும்**
**வென்றி வேல்விறற் கஞ்சனும் வீழமுன்**
**கொன்ற வன்வரில் கூடிடு கூடலே.**

பதவுரை:— **அன்று**—முற்காலத்தில், **இன்னாதனசெய் சிசுபாலனும்** — வெறுக்கக் கூடிய காரியங்களையேசெய்து வந்த சிசுபாலனும், **நின்ற நீள் மருதும்**—வழியிடையே நின்ற பெரிய இரட்டை மருதமரங்களும், **எருதும்**—ஏழு ரிஷப4ங்களும், **புள்ளும்**—ப3காஸுரனும், **வென்றி வேல் விறல் கஞ்சனும்** — வெற்றியை விளைக்கவல்ல வேலாயுத4மென்ன, ப3லமென்ன இவற்றையுடையனான கம்ஸனும், **வீழ** — முடிந்து விழும்படியாக, **முன்** — எல்லார் கண்ணெதிரிலும், **கொன்றவன்** — கொன்றொழித்த கண்ணபிரான், **வரில்**—வரக்கூடுமாகில், **கூடலே ! கூடிடு**—.

*பதிக் கொற்றவன்)* மாடமாளிகைகள் சூழ்ந்து விளங்கும் மதுரைமாநகருக்கு அரசன்; உக்3ரஸேனனன்றோ மதுரைக்கு அரசன் எனில், யயாதி ஶாபத்தாலே யாத3வகுலம் பட்டத்துக்கு உரியதல்ல என்னும் கருத்தாலே, கண்ணன் உக்3ரஸேனனை மதுரைக்கு அரசனாகப் பட்டம் சூட்டினானாயினும், உக்3ரஸேனனுக்கு ராஜ்யம் கிடைத்தது கண்ணனாலேயாகையாலே, இவள் மதுரைப்பதிக்கு அரசன் இவனே என்று மதிக்கிறாள். *(வரில் கூடிடு கூடலே)* அவன் வரும்படி, கூடலே! நீ கூடவேணும். அரசர்களை ஒருவர் தூண்டிவிடவேண்டிய அவசியமில்லை. அப்படி அவசியமிருந்தாலும் நீ அவனை இங்கு வரும்படி தூண்டிவிடவேணும் என்று கருத்து. 6.

இத்யாதி3)"உக்3ரஸேநனை ராஜாவாகவைத்தவன் இவனாகையாலே" என்று தாத்பர்யம். 6.

* (பா) 'வேணுமே'



வ்யா:—ஏழாம் பாட்டு. (அன்றின்னாதன) உகூடல் கூடாத இன்றுபோலே ஸ்வயம்வரத்துக்கு ப்ரதிப3ந்த4கமான உ2 அன்றும் இக்கூட்டரவுக்கு இன்னாதன செய் ஶிஶுபாலன். (நின்ற இத்யாதி3) அவன்றனக்கே தனியே இன்னாதன செய்தவிடங்கள் போராதே இவனைக்(இருவரைக்?)கண்டு நின்றது. (நீள்மருதும்) சாய்ந்தால் பிழைக்கவிடாது; (எருதும்) இவனை நலியநின்ற

*7. அவ:—* விரோதி4கள் அனைவரையும் அழித்த கண்ணன் வரும்படி, கூடலே! நீ கூடு என்கிறாள்.

*வ்யா:— (அன்று இன்னாதனசெய் சிசுபாலனும்)* ருக்மிணியின் ஸ்வயம்வரத்துக்குத் தடையாய், அது கூடாமலிருக்க வேணுமென்று தகாத செயல்களைச் செய்த சிசுபாலனால் விளைந்த தடைகள் நீங்கியதுபோலே,இன்றும் கூடல் கூடாமல் இருக்கும் இத்தடை நீங்கவேணுமென்று கருத்து. *(நின்ற நீள் மருதும்)* கம்ஸன் கண்ணனுக்குத் தீங்குசெய்யும்படி தனித்தனியே பல அசுரர்களை அனுப்பியது போதாமல் இங்கு இரண்டு அசுரர்களை இரட்டை மருதமரமாக நிறுத்தி வைத்து, கண்ணன் தவழ்ந்து வரும்போது அவனை அழிக்க நியமித்திருந்தானன்றோ. இருவருமாகச் சேர்ந்து அவனுக்குத் தீங்கு செய்திருந்தால் என்ன ஆவது? என்று ப4யப்படுகிறாள். சாபத்தாலே நள கூப3ரர்கள் மருதமரமானார்கள் என்று புராணக் கதை இருந்தபோதிலும், "பொய்ம்மாய மருதான அசுரரை" [பெரியாழ் திரு 3-1-3] என்று இவற்றில் அஸுராவேஶமும் உண்டென்று பெரியாழ்வார் அருளினாரன்றோ. *( நீள் மருதும் )* மேலே சாய்ந்தால் எவராலும் பிழைக்க முடியாதபடி நீண்ட மருதமரங்கள். *(எருதும்)* நப்பின்னையை அடைவதற்காக, சுல்கமாக வைக்கப்பட்ட ஏழு எருதுகளும். மருதமரங்களாவது இரண்டுதான். இங்கு அஸுராவேஶமுடைய ஏழன்றோ நலிய

அரு:— ஏழாம் பாட்டு. (அன்றித்யாதி3) உ2 அன்றும் என்றது-அன்று அவளுக்கு ப்ரதிகூலனான ஶிஶுபாலனைப் போக்கினாற்போலே, இன்றும் என் விரோதி4யைப்போக்கி

ஏழெருதும்; (புள்ளும்) ப$_4$காஸுரனும்; வென்றியைத் தருவ தான வேலையுடையனாய், அதுவும் மிகையாம்படியான மிடுக்கை யுடையனான கம்ஸன்; b(கஞ்சனும்) கீழ்ச்சொன்னவற்றுக்கு அடி யான அவன்றன்னையும். (கொன்றவன) c ஏகப்ரயோக$_3$த்தே விரோதி$_4$களையடையப்போக்கி. அவஸர ப்ரதீக்ஷனாய் நின்றான்; இனி நீ கூடுமித்தனை. 7.

## நாலாம் திருமொழி—எட்டாம் பாட்டு

ஆவ லன்புடை யார்தம் மனத்தன்றி
மேவ லன்,விரை சூழ்துவ ராபதிக்
காவ லன்,கன்று மேய்த்து விளையாடும்
கோவ லன்வரில் கூடிடு கூடலே.

---

வந்தன. (*புள்ளும்*) கொக்காய் வந்த ப$_4$காஸுரனும். இங்கு சிலவற்றைச் சொன்னது கம்ஸன் அடுக்கடுக்காக அனுப்பிய அஸுரவர்க்க$_3$ங்கள் அனைத்துக்கும் உபலக்ஷணம். (*வென்றி வேல் விறல் கஞ்சனும்*) அதுவரையில் வெற்றியல்லது அறியா திருந்த வேலையுடையவனாய், அந்த வேலும் தேவையில்லாத படியான ப$_3$லத்தையுடைய கம்ஸனும். (*கஞ்சனும்*) முன் சொல்லப்பட்ட எல்லா அஸுரர்களையும் கண்ணனைக் கொல்ல அனுப்பினவனாய், அவர்களுக்குத் தலைவனான கம்ஸனும். (*வீழ முன் கொன்றவன்*) அடுக்கடுக்காக வந்த இவர்களனை வரும் உடனுக்குடன் அழிந்த விரைவைப் பார்க்கும்போது, ஒரேயடியில் இவர்களனைவரையும் வீழ்த்தியதுபோல இருக் கிறது. (*வரில் கூடிடு கூடலே*) தடையாயிருந்த இவ்வளவு பேரையும் அழித்து, என்னையடையவேண்டுமென்று எதிர் பார்த்து ஸித்$_3$த$_4$னாயிருக்கிறான் அவன். நீ கூடிவிட்டால் காரியம் நடந்துவிடும். 7.

---

ஸம்ஶ்லேஷிக்கவேணுமென்று தாத்பர்யம். b "கஞ்சனும்" என்றவிடத்தில் சகாரம் ப்ராத$_4$ந்யத்திலே. c விரோதி$_4$க ளெல்லாவற்றையும் சொல்லி, "கொன்றவன்" என்கை யாலே-(ஏகப்ரயோக$_3$த்தே) என்கிறது. a (கூடல் கூடாத) என்னும் இத்யாதி$_3$ வாக்யம் - கடி$_3$னம். 7.



பதவுரை:— ஆவல் அன்பு உடையார்தம் — ஆவலையும் அன்பையும் உடையவர்களுடைய, மனத்து அன்றி மேவ லன்— நெஞ்சுதவிர மற்றோரிடத்திலும் பொருந்தாதவனும், விரை சூழ் துவராபதி காவலன்— நல்ல வாஸனை சூழ்ந்த த்$_3$வாரகாபுரிக்கு ரக்ஷகனும், கன்று மேய்த்து விளையாடும் கோவலன் — கன்றுகளை மேய்த்து விளையாடும் கோ$_3$பாலனுமா கிய கண்ணபிரான், வரில்-வரக்கூடுமாகில், கூடலே! கூடிடு.—

வ்யா:— எட்டாம் பாட்டு. a (ஆவல்) ஆவலுடையார் தான் —கு$_3$ணாத்$_4$யவஸாயமும் கிடக்கச்செய்தே, நோன்பு நோற் பது, காமனை ஆராதி$_4$ப்பது, சிற்றிலிழைப்பது, பனிநீராடுவது, கூடலிழைப்பதான இவை — ஆவலாவது. (அன்பு) "மல் லாண்ட திண்டோள் மணிவண்ணா! உன் செவ்வடி செவ்வி திருக்காப்பு" என்பது, "உறகலுறகல்" என்பதான தமப்பனா ருடைய அன்பு. தங்கள் b குடியிலுள்ளார் மனத்தோடல்லது

---

*8. அவ:—* என்னிடம் ஆவலுக்கும், அன்புக்கும் குறை யில்லை. அவனிடம் ரக்ஷகத்வ ஸௌலப்$_4$யங்களுக்குக் குறை யில்லை. கூடலே! நீ கூடாததே தடையாயிருக்கிறது என்கிறாள்.

*வ்யா:—* (*ஆவலுடையார்*) ஆவலுடையவர்கள் எவ ரெனில்—"அவன் கல்யாண கு$_3$ணங்களால் நிறைந்திருப்பவன். ஆகையால் நம்மை ஏற்றுக்கொண்டே தீருவான். அவன் வரப் பார்த்திருப்பதே நமக்குத் தகுந்தது" என்று சீதாப் பிராட்டிக்குப் போலே உபாயாத்$_4$யவஸாயமிருந்தபோதிலும், அவனைப் பெறவேண்டும் என்னும் காதல் மிகுதியாலே, அவனைப் பெறுவதற்காக நோன்பு நோற்பது, காமனை ஆஶ்ரயிப்பது, சிற் றில் இழைப்பது, பனி நீராடுவது, கூடலிழைப்பது ஆகிய ஸ்வ ரூபத்துக்குத் தகாத காரியங்களைச் செய்பவர்கள். (*அன்புடையார்*) 'மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா! உன் சேவடி செவ்வி திருக்காப்பு' [திருப்பல்லாண்டு 1] என்று தாமும் அஸ்த$_2$ானே ப$_4$யஶங்கையாலே திருப்பல்லாண்டு பாடுவது, "உறகலுறகல்"

---

அரு:— எட்டாம் பாட்டு. (ஆவலித்யாதி$_3$) a ஆவல்- அபி$_4$நிவேஶம். c விரை-பரிமளம். b குடியில்-ஸந்தாநத்

மேவானென்கிருள். (c விரைசூழித்யாதி$_3$) ஆவலில்லாதா ரோடும் பொருந்துமவன்கிடீர்; 61. “ षोडशस्त्रीसहस्राणि ” (ஷோட$_3$ஶஸ்த்ரீஸஹஸ்ராணி) இத்யாதி$_3$. d அவ்வூரிலுள்ள மண்ம்போரா்மே ஸ்வர்க்க$_3$த்திலுள்ள மணமும் கூட்டிக்கொடுத்

---

[பெரியாழ் திரு 5-2-9] என்று உறங்காத நித்யஸூரிகளையும் உறங்காமல் எம்பெருமானை ரக்ஷிக்கும்படி ப்ரார்த்திப்பது முதலான பொங்கும் பரிவால் வரும் காரியங்களைச் செய்யும் பெரியாழ்வாரைப் போன்றவர்கள் அன்புடையவராவர். (*தம் மனத்தன்றி மேவலன்*) ஆவலன்புடைய ஆழ்வார்கள் குடியிலுள்ளார் மனத்திலல்லது பொருந்தாதவன். அக்குடிப் பிறப்பாலே தானும் ஆவலன்புடையவளாகையாலே தன்னிடம் குறையில்லை என்று உணர்த்துகிருள். இனி, ரக்ஷண ஸௌலப்$_4$யங்களை உடையவனுகையாலே, அவனிடமும் குறையில்லை என்று மேலே காட்டுகிருள் — (*விரைசூழ் துவராபதிக் காவலன்*) இயற்கை மணம் மிக்க பதினாறுயிரம் உத்தம ஸ்த்ரீகளைக் கைப்பிடித்து, துவராபதியில் அவர்களையும் ரக்ஷித்தவன்.

61. தா: கந்யா நரகேணுஸந் ஸர்வதோ யாஸ் ஸமாஹ்ருதா: ।
ஏகஸ்மிந்நேவ கோ$_3$விந்த$_3$: காலே தாஸாம் மஹாமுநே ॥
ஜக்$_3$ராஹ விதி$_4$வத் பாணீந் ப்ருத$_2$க்$_3$ கே$_2$ஹேஷு த$_4$ர்மத: ।
ஷோட$_3$ஶஸ்த்ரீ ஸஹஸ்ராணி ஶதமேகம் ததோऽதி$_4$கம் ॥
[வி-பு 31-17,18]

[முனிவரே! நரகாஸுரனல் பிடித்து வைக்கப்பட்டிருந்த பதினாறுயிரத்து நூறு கன்னிகைளையும் ஒரே காலத்தில் தனித்தனியாக அவரவர்களுடைய வீட்டில் (அவ்வளவு ரூபங்களை எடுத்துக்கொண்டு) க்ருஷ்ணன் கைப்பிடித்தான்.] என்று சொல்லப்படுகிறதன்றோ. மணம் மிக்க உத்தம ஸ்த்ரீகளாயிருந்தபோதிலும் என்னளவுக்கு ஆவலன்பு இல்லாத பதினாறுயிரம் ஸ்த்ரீகளோடு சேர்ந்தவன் என்னேடு சேரச் சொல்ல வேணுமோ? (*விரைசூழ் துவராபதி*) அவ்வூரிலுள்ள மணம் நிற்க, ஸ்வர்க்க$_3$த்திலுள்ள பாரிஜாத மரத்தின் மணத்தையும்

---

தில். d “துவராபதி” என்னுதே, “விரைசூழ்” என்று விஶேஷித்ததென்? என்ன அருளிச்செய்கிருர்—(அவ்வூரி



தானிறே. “மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்டுவரை நட்டான்” என்னக்கடவதிறே. e ஜக$_3$த்$_3$வ்யாபார லீலைபண்ணி. (கன்றுமேய்த்து விளையாடும்) 62. “सर्वस्य जगतः पालौ वत्सपालौ बभूवतुः” (ஸர்வஸ்ய ஜக$_3$த: பாலௌ வத்ஸபாலௌ ப$_3$பூ$_4$வது:) (கோவலன்) f ராஜ்யம் பண்ணுமைக்காகவுமாம். 8.

---

இங்கு கொண்டுவந்து சேர்த்தானன்றோ. “மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்துவரை நட்டான்” [பெரிய திரு 6-8-7] என்று சொல்லப்பட்டதன்றோ. துவராபதி என்று துவரையாகிற த்$_3$வாரகைக்கு ரக்ஷகன் என்பதாகவும், ‘காவலன்’ என்று உலகம் முழுவதையும் விளையாட்டாகப் படைத்தளித்து அழித்து ரக்ஷிப்பவன் என்றும் பொருள் கொள்ளலாம். (*காவலன் கன்று மேய்த்து விளையாடும் கோவலன்*)

62. காலேந க$_3$ச்ச$_2$தா தௌ து ஸப்தவர்ஷௌ மஹாவ்ரஜே ।
ஸர்வஸ்ய ஜக$_3$த: பாலௌ வத்ஸபாலௌ ப$_3$பூ$_4$வது: ॥
[வி-பு 5-6-35]

[ஆய்ப்பாடியில் காலம் செல்லச்செல்ல ஏழு வயது நிரம்பிய ப$_3$லராம க்ருஷ்ணர்கள் ஸர்வலோக பாலர்களாயிருந்தும், கன்று மேய்ப்பவராயினர்.] என்கிறபடியே, தம் காரியத்தைத் தாம் பார்த்துக் கொள்ள வல்லவர்களை ரக்ஷிப்பதைக் காட்டிலும், தம் காரியத்தைத் தாம் பார்த்துக்கொள்ள வல்லமையற்ற கன்றுகளை ரக்ஷிப்பதில் உகந்திருப்பவன். “திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி” [திருவாய் 10-3-10] என்கிறபடியே நித்யஸூரிகளை ரக்ஷிப்பதைக் காட்டிலும் பசுக்களை ரக்ஷிப்பதை உவந்திருப்பான்; “கன்று மேய்த்தினிதுகந்த காளாய்” [திருநெடு 16] என்கிறபடியே கன்றுகளை மேய்ப்பதை மிக உகந்திருப்பான்—என்று ஆழ்வார்களும் அருளினார்களன்றோ. (*கோவலன்*) மதுரையிலிருந்து ராஜ்யப$_4$ாரம் சுமப்பதை விரும்

---

லுள்ள இத்யாதி$_3$) e “துவராபதி” என்று-த்$_3$வாரகைக்கு நிர்வாஹகனென்றபடியாய், “காவலன்” என்று-ஜக$_3$த்$_3$வ்யாபார லீலைகளைப் பண்ணுமவன், கன்றுமேய்த்து விளையாடுகைக்காகக் கோவலனுனென்று பத$_3$பே$_4$தே$_3$ந யோஜித்துக்கொள்வது. f கோவலனுனதுக்கு ப்ரயோஜநாந்தரம்

## நாலாம் திருமொழி—ஒன்பதாம் பாட்டு

**கொண்ட கோலக் குறளுரு வாய்ச்சென்று**
**பண்டு மாவலி தன்பெரு வேள்வியில்**
**அண்ட மும்நில னும்அடி யொன்றினுல்**
**கொண்ட வன்வரில் கூடிடு கூடலே.**

**பதவுரை:— பண்டு**—முற்காலத்திலே, **கோலம் கொண்ட குறள் உரு ஆய்**—(முப்புரி நூலும் க்ருஷ்ணாஜிநமும் முஞ்சியும் பவித்ரமும் தண்டுமான) அணி பூண்டு வாமந ரூபியாய், **மாவலி தன் பெருவேள்வியில் சென்று**—மஹாப$_3$லியினுடைய சிறந்த யாக$_3$ பூ$_4$மியிலே எழுந்தருளி, **அண்டமும்**-மேலுலகங்களையும், **நிலனும்**—கீழுலகங்களையும், **அடி ஒன்றினுல்**—ஒவ்வோரடியாலே, **கொண்டவன்**—அளந்துகொண்ட திரிவிக்கிரமன், **வரில்**—வருவானுகில், **கூடலே! கூடிடு**—.

**வ்யா:— ஒன்பதாம் பாட்டு.** (கொண்ட கோலக் குறளுருவாய்) **யஜ்ஞோபவீதமும், க்ருஷ்ணாஜிநமும், (முஞ்சியும்,) பவித்ரமும், தண்டும், பரமபத$_3$த்தில் ஒப்பனையிலும் அழகிதா**

பாமல், கன்று மேய்த்து விளையாடுவதற்காக. கோவலனுய்த் திருவாய்ப்பாடிக்கு வந்ததைக் கூறுகிறதாகவுமாம்.(*வரில் கூடிடு கூடலே*) ஆக என்னிடம் ஆவலன்புக்குக் குறையில்லை. அவனிடம் ரக்ஷகத்வ ஸௌலப்$_4$யங்களுக்குக் குறையில்லை. கூடலே! ஆகையால் நீ கூடி எங்களைக் கூட்டுவாயாக. 8,

*9. அவ:—* தன் உடைமையான உலகை அளந்துகொண்டவன், உடைமையான என்னையும் கொள்ளும்படி, கூடலே! கூடுவாயாக.

*வ்யா:— (கொண்டகோலக் குறளுருவாய்)* பூணூலும், மான் தோலும், முஞ்சியும், பவித்ரமும், த$_3$ண்ட$_3$மும் கொண்ட கோலமுடைய வாமன ப்$_3$ரஹ்மசாரியைக் காணும்போது, திருவாபூ$_4$ரணங்களாலும், தி$_3$வ்யாயுத$_4$ங்களாலும் அலங்கரிக்கப்பெற்ற பரமபத$_3$நாத$_2$னைக் காட்டிலும் அழகாயிருக்கிறபடி. *(சென்று)* வழியிலுள்ளவர்கள் அனைவரும் நடந்து செல்லும் அழகில்

(ராஜ்யமித்யாதி$_3$) ராஜ்யம் பண்ணுகை அஸஹ்யமாய், கோவலனுனன் என்ருகவுமாம். 8.



யிருந்தபடி. (பெருவேள்வியில்) கூடல் தலைக்கட்டியும் பெருதிருக்க, வேள்வியின் நடுவே இவனைக் காணப்பெற்ற வேள்வி. அண்ட$_3$ம் ஓரடியும், நிலம் ஓரடியும். அவன் தன்னுடைமை விடான்; நீ கூடுகையே குறை 63. "त्रीणि पदा विचक्रमे" (த்ரீணி பத$_3$ா விசக்ரமே) என்றும்,'மூன்றடி நிமிர்த்து'என்றும் உண்டாயிராநின்றது; உஇதிருக்கிறபடியென்? என்று ப$_4$ட்டரைக் கேட்க; 64. "परो मात्रया तनुवा वृधान। न ते महित्वमन्वश्नुवन्ति। उभे ते विश्व

ஈடுபடும்படி சென்று. *(பண்டு)* 'அவன் திருவடிகளால் உலகில் உள்ளவர்கள் அனைவரும் தீண்டப்பெறும் பேறுபெற்ற அதுவும் ஒரு காலமே!' என்று காலத்தைக் கொண்டாடுகிருள். *(மாவலிதன் பெருவேள்வியில்)* கூடலிழைத்த பின்பும் பெருதிருக்கும் இன்று போலல்லாமல், வேள்வியின் நடுவிலேயே, வேள்வியின் பயனுன இவனை அனைவரும் காணக் கிடைத்ததொரு ஒப்பற்ற வேள்வி. *(அண்டமும் நிலனும் அடியொன்றினுல் கொண்டவன்)* மேலுலகங்கள் அனைத்தையும் ஓரடியாலும், நிலம் முதலான கீழுலகங்கள் அனைத்தையும் ஓரடியாலும், இப்படி ஈரடிகளாலே லீலாவிபூ$_4$தி முழுவதையும், தன் உடைமை என்னும் காரணத்தாலே அளந்துகொண்டவன். *(வரில் கூடிடு கூடலே)* அவன் தன் உடைமையை விடமாட்டாதவனுகையாலே, என்னை அங்கீ$_3$கரிப்பதில் தடையில்லை. நீ கூடாத குறையே உள்ளது.

63. த்ரீணி பத$_3$ா விசக்ரமே [யஜுர்-அஷ்டகம் 2, ப்ர-4, பஞ்-51] [மூன்று அடிவைப்புக்களாலே (உலகை) ஆக்ரமித்தான் திரிவிக்கிரமன்] என்றும், "மூன்றடி நிமிர்த்து" [பெரியாழ் திரு 4-7-10] என்றும் எம்பெருமான் திரிவிக்கிரமனுகி மூவடிகளாலே உலகளந்தான் என்று வேத$_3$ங்களும், ஆழ்வார்களும் கூறும்போது, இங்கு இரண்டு அடிகளாலே உலகளந்ததாகக் கூறுவது எப்படிப் பொருந்தும்?—என்று ப$_4$ட்டரை நஞ்ஜீயர் கேட்டாராம்,

64. பரோ மாத்ரயா தநுவா வ்ருத$_4$ாந ।
நதே மஹித்வமந்வஶ்நுவந்தி ।

அரு:— ஒன்பதாம் பாட்டு. (கொண்டவித்யாதி$_3$) உ(இதிருக்கிறபடியென்) என்றது இரண்டடியாலே அளந்தா

रजसीपृथिव्याः। विष्णो देव त्वं परमस्य वित्से"(பரோ மாத்ரயா தநுவா வ்ருத$_{4}$ாந। ந தே மஹித்வமந்வஶ்நுவந்தி। உபே$_{4}$ தே வித்$_{3}$ம ரஜஸீப்ருதி$_{2}$வ்யா:। விஷ்ணோ தே$_{3}$வ த்வம் பரமஸ்ய வித்ஸே) என்று வேத$_{2}$புருஷன்றனே 'இரண்டடியாலளந்தவிடம் எல்லாருமறியும்; நீ மூன்றடியாலளந்தவிடம் உனக்கே தெரியுமத்தனை' என்று காணமல் விட்டான்; அவன் அளந்தமையுண்டு; அவனுக்கே தெரியுமத்தனை—என்று அருளிச்செய்தார் என்று ஜீயர் அருளிச்செய்வர். 9.

---

உபே$_{4}$ தே வித்$_{3}$ம ரஜஸீப்ருதி$_{2}$வ்யா: ।
விஷ்ணோ தே$_{3}$வ த்வம் பரமஸ்ய வித்ஸே ॥
[யஜுர்-அஷ்டகம்-2, ப்ர-8, பஞ்-16]

[விஷ்ணுவே! மேலானவனை நீ மிகப்பெரிய உருவுடன் வளர்ந்தருளினாய். (அப்போது) உன் பெருமையை அளவிட்டு அனுப$_{4}$வித்தார் ஆருமில்லை. பூ$_{4}$மியிலும், ஆகாயத்திலும் நீ வைத்த இரண்டடிகளை யாமறிவோம்; இதற்கு மேற்பட்ட மூன்றாவது அடிவைப்பை நீயே அறிவாய்போலும்!] என்று வேத$_{2}$புருஷனே 'இரண்டு அடியால் நீ கீழ்மேல் உலகங்களை அளந்தாய் என்பதை அனைவரும் அறிவார்கள். மூன்றாவது அடியால் நீ எதை அளந்தாய் என்பது உனக்கே தெரியுமே யொழிய வேறெவர்க்கும் தெரியாது' என்று இவ்விஷயம் தனக்கே தெரியாது என்று கூறிவிட்டான்; ஆனால் மூவடியால் உலகளந்ததாக ப்ரமாணங்கள் கூறுகையால், மூன்றாவது அடியாலும் அவன் அளந்தது உண்டு. எதையளந்தான் என்பது அவனுக்கே தெரியும்—என்று ப$_{4}$ட்டர் அருளினார் என்று நஞ்ஜீயர் அருளினார் எனும் ஐதிஹ்யம் இங்குஅநுஸந்தே$_{4}$யம்.

---

னென்று இருக்கிறபடியென்? என்றபடி. (பர: த்வம் அதிமாத்ரயா தந்வா, வ்ருத$_{4}$ாந—வர்த்தி$_{4}$தவாநஸி, தே மஹித்வம், ந-அந்வஶ்நுவந்தி—ஈத்$_{3}$ருக்தயா இயத்தயா நாநுப$_{4}$வந்தீத்யர்த்த$_{2}$:। ப்ருதி$_{2}$வ்யா:-தே-உபே$_{4}$-ரஜஸீ-வித்$_{3}$ம:, ப்ருதி$_{2}$வீஶப்$_{3}$தே$_{3}$ந லோக உபலக்ஷித:; ரஜஸீ—சரணௌ; "லோகவிக்ராந்தசரணௌ" இதி யாவத்। ஏதாவதே$_{3}$வ வித்$_{3}$ம: ; அஸ்ய-பரம்-த்வமேவ வித்ஸே—ஜாநாஸி ॥ 9.



"த்$_{3}$வே இத$_{3}$ஸ்ய க்ரமணே ஸ்வர்த்$_{3}$ருஶோ-
ऽபி$_{4}$க்$_{2}$யாய மர்த்யோ பு$_{4}$ரண்யதி ।
த்ருதீயமஸ்ய நகிரா த$_{3}$த$_{4}$ர்ஷதி
வயஶ்சந பதயந்த: பதத்ரிண: ॥"
[ருக் அஷ்டகம் 2-2-24-154-11]

[இந்த ஸ்வர்க்க$_{3}$த்தைக் காண்பவனான விஷ்ணுவினுடைய இரண்டு அடிவைப்புக்களையே மனிதன் நன்கறிந்து பூ$_{4}$ஜிக்கிறான். இந்த விஷ்ணுவின் மூன்றாவது அடிவைப்பை ஒருபோதும் எவனும் அறியவல்லனல்லன். (எங்கும்) வீசும் வாயுக்களும் (பறக்கும்) பறவைகளும் (அறியவல்லனவல்ல).] என்னும் விஷ்ணுஸூக்த மந்திரத்திலும் இவ்விஷயம் கூறப்பட்டது. இப்படி எவருமறியாத இந்த மூன்றாவது அடிவைப்பு எதாயிருக்கமுடியும்? என்னும் கேள்விக்கு இரண்டு வகையாக பதில் கூறலாம். அதாவது— (1) ஈரடியால் உலகமளந்தபிறகு, வாமனன் மாவலி தலையில் காலைவைத்து அவனைப் பாதாளத்தில் அழுத்தி, அங்கு அவனுக்குப் பெருஞ்செல்வத்தைப் பண்ணிக்கொடுத்துத் தானே அவனுக்கு த்$_{3}$வாரபாலகனாய் நின்றதாக இதிஹாஸ புராண ப்ரஸித்$_{3}$தி$_{4}$யுள்ளது. "உத$_{3}$ாரா:" என்னும் தன் திருவுள்ளத்தாலே ப$_{4}$க்தனான மாவலியின் தலைமேல் வைத்த அடிவைப்பையே கீழ்மேல் உலகங்களோடு ஒரு நிலையில் வைத்து மூன்றாவது அடிவைப்பாகக் கருதியிருக்கிறான். இந்த வண்மைக்குணம் ஒருவர்க்கும் நிலமல்லாததாகையாலே இதை மனுஷ்ய வாயு பக்ஷிகள் அறியமாட்டார்கள் என்பதாக ஒரு நிர்வாஹம். (2) அங்ஙனன்றிக்கே, "தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்ட எந்தாய்" [திருமாலை 35]

"ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ:। ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத் ।
ஸ பூ$_{4}$மிம் விஶ்வதோ வ்ருத்வா। அத்யதிஷ்ட$_{2}$த்$_{3}$ த$_{3}$ஶாங்கு$_{3}$லம்॥"

[புருஷனெனப்படும் நாராயணன் கணக்கற்ற தலைகளையும், அளவற்ற கண்களையும், அநந்தமான கால்களையும் உடையவர். அவர் பூ$_{4}$மியை எல்லாப் புறமும் சூழ்ந்து, அதற்குமேலும் அநந்தயோஜனைகள் வியாபித்தார்.] என்கிறபடியே, ரக்ஷகனின் பாரிப்பு ரக்ஷ்யத்தின் அளவல்லவாகையாலே, மஹாப$_{3}$லியால்

## நாலாம் திருமொழி—பத்தாம் பாட்டு

பழகு நான்மறை யின்பொரு ளாய்மத
மொழுகு வாரண முய்ய வளித்தஎம்
அழக னாணி யாய்ச்சியர் சிந்தையுள்
குழக னூர்வரில் கூடிடு கூடலே.

**பதவுரை:— பழகு நால் மறையின் பொருள் ஆய்—** அநாதி3யான சதுர்வேத3ங்களின் உட்பொருளாயிருககு மவனாய், **மதம் ஒழுகு வாரணம் உய்ய அளித்த** — மத3 ஜலம் பெருகாநின்ற க3ஜேந்த்3ராழ்வான் (துயர் நீங்கி) வாழும்படி க்ருபைசெய்தருளியவனாய், **எம் அழகனார்—** எம்மை ஈடுபடுத்தவல்ல அழகையுடையவனாய், **அணி ஆய்ச்சியர் சிந்தையுள் குழகனார்**—அழகிய கோ3பிமார்களின் நெஞ்சினுள்ளே குழைந்திருக்குமவனான கண்ணபிரான், **வரில்**—வரக்கூடுமாகில், **கூடலே! கூடிடு**—.

---

அபஹரிக்கப்பட்ட லோகங்களை மீட்டுக்கொடுக்கப்புகுந்த இவன். இவ்விபூ4தி முழுவதும் இரண்டே அடிவைப்புக்குக் காண்கையாலே, மாவலியால் அபஹரிக்கப்படுவதற்கு ப்ரஸக்தியேயில்லாத நித்யவிபூ4தியையும் மூன்றாவது அடியாலே அளந்து கொண்டான் என்றும் நிர்வஹிக்கலாம். இந்த நிர்வாஹம் "*த்ருதீயமஸ்ய நகிரா த3த4ர்ஷதி வயஶ்சந பதயந்த: பதத்ரிண:*" [இவனுடைய மூன்றாவது அடிவைப்பை மனிதனும், வாயுக்களும், பறவைகளும் காணமாட்டா] என்ற மந்திரப் பிற்பகுதிக்கு மிகப்பொருந்தியிருக்கும். ப்3ரஹ்மருத்3ராதி3கள் தொடங்கி ஒருவருக்கும் காண நிலமல்லாதிருப்பதன்றோ பரமபத3ம். 9.

*10. அவ:—* ஶமத3மாதி3களற்ற க3ஜேந்த்3ராழ்வானையும் ரக்ஷித்தவன் நம்மையும் ரக்ஷிக்கக் குறையில்லை; கூடலே! அவன் வரும்படி கூடுவாயாக என்கிறாள்.

*வ்யா:— (பழகு நான்மறையின் பொருளாய்)* அநாதி3கால மாக ஆசார்யன் உச்சரிக்க, *ஶி*ஷ்யன் அநூச்சாரணம் செய்ய, இப்படி எவராலும் செய்யப்படாத எழுதாக்கிளவியாய், வாய்



வ்யா:— பத்தாம் பாட்டு. (பழகுநான்மறையின் பொருளாய்) அபௌருஷேயமான வேத3ங்களின் அர்த்த2ம் இவனேயிறே ; அல்லாதவை ஏகவிஜ்ஞாந ந்யாயஸித்3த4ம் ; (மத

---

மொழியாகவே பழகிப்போந்த வேத3ங்களின் அர்த்த2மாயிருப்பவன் இவனேயன்றோ. 65a. "*வேதை3ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்3ய:*" [கீ3தை 15-15] [எல்லா வேத3ங்களாலும் அறியப் படுபவன் நானே] என்றன்றோ அவனும் அருளிச்செய்தான். வேத3ங்களுக்குப் பொருள் அவனே என்றால் சேதநாசேதநங் களையும் வேத3ங்கள் சொல்லியிருப்பது பொருந்தாதே எனில்: அவையிரண்டும் அவனைவிட்டுப் பிரித்துக்காணமுடியாத ஶரீரமாய், அவனையறிந்தால் இவற்றையும் அறிந்ததாகும் என்று சொல்லலாம்படியிருக்கையாலே குறையில்லை. 65b. "*யதா2 ஸோம்யைகேந ம்ருத்பிண்டே3ந ஸர்வம் ம்ருண்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்*" [சா2ந் 6-1-4] [குழந்தாய்! ஒரு மண்கட்டியை அறிந்தால் அந்த மண்கட்டியிலிருந்து உண்டாகும் சட்டி, பானை முதலான அனைத்தும் அறியப்பட்டதாவதுபோல், ப்3ரஹ்மத்தை அறிந் தால் அதிலிருந்து உண்டாகும் உலகனைத்தும் அறியப்பட்ட தாகும்] என்று உபநிஷத் ஓதியபடியே ப்3ரஹ்மம் ஒன்றை அறிந்தால், அதைவிட்டுப் பிரியமாட்டாத ஶரீரமாயிருக்கும் உலகனைத்தும் அறியப்பட்டதாகிறதாகையாலே வேத3ங்களின் பொருள் பரம்பொருளான நாரணன் ஒருவனே என்று கூறக் குறையில்லை. (*மதமொழுகு வாரணம்*) ஶமத3மாதி3 கு3ணங்கள் நிறைந்ததொரு வஸ்துவையோ எம்பெருமான் ரக்ஷித்தது? புலனடக்கமேயற்றதான மதமொழுகும் பிடிசேர்களிறை

---

அரு:— பத்தாம் பாட்டு. (பழகித்யாதி3) வேதா3ர்த்த2ம் இவன் தானேயோ, சேதனாசேதநங்களுமில்லையோ? என்ன அருளிச்செய்கிறார் (அல்லாதவையித்யாதி3) ஏகவிஜ்ஞாந ந்யாயமாவது - காரணவிஜ்ஞாநாத் கார்யவிஜ்ஞாநமென்கிற ந்யாயம். 65b. "**यथा सोम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातं स्यात्**" **(யதா2 ஸோம்யைகேந ம்ருத்பிண்டே3ந ஸர்வம் ம்ருண்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத்)** என்னக்கடவதிறே. ஒன்றையறியவே எல்லாமறிந்ததாம் ; அப்படியே ஈஶ்வரனைச் சொன்ன

மொழுகுவாரணம்) * b ஶமத$_3$மாத்$_3$யுபேதமன்று. அகப்பட்ட இடரில்நின்றும் உய்ய. (எம்மழகனுர்) 65. "स्रग्भूषाम्बरमय-थायथं दधानः" (ஸ்ரக்$_3$பூ$_4$ஷாம்ப$_3$ரமயத$_2$ாயத$_2$ம் த$_3$த$_4$ாந:). (அணி

---

யன்றே உஜ்ஜீவிக்கச்செய்தது. என்ன நீர்மை! என்ன நீர்மை!! என்று கருத்து.[இவ்விடத்தில் பாடத்திருத்தம்பற்றியும், தவருன பாடத்தைக்கொண்டமையாலே அரும்பதவுரை பொருந்தவில்லை என்பதையும் முதற்பதிப்பின் முகவுரையில் காண்பது.] *(உய்ய)* முதலையின் வாயிலே அகப்பட்ட துன்பத்திலிருந்து உய்வுபெறும் படியாக. அன்றிக்கே எம்பெருமான் திருவடிகளில் தான் பறித்த பூவை இடமுடியவில்லையே என்றே இவன் இடர்ப்பட்டானுகையாலே, அந்த இடர் நீங்கி உய்யும்படியாக என்றும் கொள்ளலாம். *(அளித்த எம் அழகனுர்)* இப்படி இடரிலிருந்து நீக்கியதோடல்லாமல் தன் அழகைக்காட்டி அவனை ரக்ஷித்தான.

65. ஶ்ரீரங்கே$_3$ஶய! ஶரணம் மமாஸி வாத்யா —
வ்யாலோலத் கமல தடாக தாண்ட$_3$வேந ।
ஸ்ரக்$_3$பூ$_4$ஷாம்ப$_3$ரமயத$_2$ாயத$_2$ம் த$_3$த$_4$ாந:
தி$_4$ங்மாமித்யநுக$_3$ஜக$_3$ர்ஜமாஜக$_3$ந்த$_2$ ॥ [ர.ஸ்த 2-59]

[ஸ்ரீரங்க$_3$நாதரே! க$_3$ஜேந்திராழ்வானுடைய கூக்குரல் செவிப் பட்டவுடனே 'கெட்டேன் கெட்டேன்' என்று தம்மை நொந்துகொண்டு, *மாலை, ஆப$_4$ரணம், வஸ்த்ரம் ஆகிய இவற்றை முறையின்றியே த$_4$ரித்துக்கொண்டவராய்,* பெருங்காற்றினுல் அலையும் தாமரைத்தடாகம்போலே அழகியவராய் எழுந்தருளினீர்; (இப்படிப்பட்ட தேவரீரே) அடியேனுக்குப் புகலிடம்.] என்கிறபடியே மாலை, திருவாப$_4$ரணம், வஸ்த்ரம் முதலானவற்றைத் தாறுமாருகச் சாத்திக்கொண்ட அழகைக் காட்டியன்றே இவனை ரக்ஷித்தான். *( அணி ஆய்ச்சியர் சிந்தையுள்*

---

போதே எல்லாம் சொன்னதாமென்றபடி. b ப்$_3$ராஹ்மஜ்ஞாநத்தாலே ஸகலஜ்ஞாநமும் உண்டாகையாலே, ஶமத$_3$மாத்$_3$யுபேதனுய்க்கொண்டு சேதநாசேதநங்களைத் தனித்

---

* "ஶமத$_3$மாத்$_3$யுபேதமன்று" என்று சில சுவடிகளில் தவருக (மதமொழுகு வாரணம்) என்பதற்கு முன் உள்ளது கொண்டு தவருன அரும்பதவுரையெழுந்தது.



யாய்ச்சியரித்யாதி$_3$) "தங்குமேல்" என்றிருக்குமவர்கள். அப்போதே இவனுதவாவிட்டால் இனிப்பிதற்றமையும்; வரிலும் முகங்கொடுப்பதில்லையென்றிருந்தவர்கள் நெஞ்சில் மறமாறும்படி வாழ்வுகள் செய்தும் தாழ்வுகள் சொல்லியும் கலந்தவர்களோடே கலக்கவல்லவன்; அப்படி என் இன்னுப்பைத் தீர்த்துக் கலக்குமாகில் கூடிடு. 10.

## நாலாம் திருமொழி—பதினேராம் பாட்டு

ஊடல் கூட லுணர்தல் புணர்தலை
நீடு நின்ற நிறைபுக ழாய்ச்சியர்
கூட லைக்குழற் கோதைமுன் கூறிய
பாடல் பத்தும்வல் லார்க்கில்லை பாவமே.

---

*குழகனுர் )* அழகையுடைய ஆய்ச்சியருடைய நெஞ்சைக் குழையவைப்பவன். *( அணி ஆய்ச்சியர் )* அழகையுடைய ஆய்ச்சியர். இவர்களுக்கு அழகாவது — "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து, ஒருநாள் தங்குமேல் என்னுவி தங்குமென்றுரையீரே' [நாச்-திரு 8-7] என்கிறபடியே அவனேடு அணையப்பெருவிடில் த$_4$ரிக்கவொண்ணுமையும், அவன் அப்போதே உதவாவிட்டால் அவனைப்பற்றி மடலெடுப்பது முதலான அதிப்ரவ்ருத்திகளைச் செய்கையும், அவன் வந்தாலும் முகங்காட்டுவதில்லை என்று உறுதியோடிருக்கையுமாகும். *(சிந்தையுள் குழகனுர்)* இப்படி உறுதியோடிருக்கும் இவர்களுடைய நெஞ்சில் கோபம் ஆறும்படி கோலப்பாத$_3$த்தையும், அணிமிகு தாமரைக்கையையும் இவர்கள் தலைமிசை வைப்பது முதலான வாழ்வுகள் செய்தும், 'அடியேன், குடியேன்' என்று தாழ்வுகள் சொல்லியும், குழைந்து, கலந்து பிரிந்தவர்களோடே கலக்கவல்லவன். (*குழகனுர்*) அவர்கள் நெஞ்சைக் குழையவைப்பவன் என்றும் கொள்ளலாம். *(வரில் கூடிடு கூடலே)* ஆய்ச்சியர் வருத்தத்தைத் தீர்த்ததுபோலே எனது வருத்தத்தையும் தீர்த்துக் கூடுவானுகில், கூடலே! நீ கூடிடு என்கிருள். 10.

---

தனியே அறியவேண்டுவதில்லை; ஆகையாலே, சேதநாசேதநஜ்ஞாநம் ஶமத$_3$மாத்$_3$யுபேதமன்றென்கிறது. 10.

**பதவுரை:—** **ஊடல் கூடல்**—ஊடலோடே கூடியிருக்கை (அதாவது-ப்ரணயரோஷ ஸஹிதைகளாயிருக்கை) யென்ன, **உணர்தல்**—குற்றங்களை உணர்த்துகையென்ன, **புணர்தல்**—(பிறகு) ஸம்ஶ்லேஷிக்கையென்ன (இப்படிப்பட்ட காரியங்களிலே), **முன்** — நெடுங்காலமாக, **நீடு நின்ற** — நீடித்துப் பொருந்திநின்ற, **நிறைபுகழ் ஆய்ச்சியர் கூடலை**—நிறைந்த புகழையுடைய ஆய்ப்பெண்கள் (இழைத்த) கூடலைப்பற்றி, **குழல்கோதை**—அழகிய மயிர்முடியையுடையளான ஆண்டாள், **கூறிய** — அருளிச்செய்த, **பாடல் பத்தும்**—பத்து பாட்டுக்களையும், **வல்லார்க்கு**—ஓதவல்லவர்களுக்கு, **பாவம் இல்லை** — (எம்பெருமானைப் பிரிந்து துன்புறும்படியான) பாவம் இல்லையாம்.

**வ்யா: —** **பதினோராம் பாட்டு** (ஊடல் கூடல் உணர்தல் புணர்தலை) a ஊடலோடே கூடுகை - ஊடல் கூடல். b ஊடியிருப்பார்களிறே பெண்கள். இவன்றன்குறைகளை அவர்கள் c உணர்த்தும்படியும், அவன் பின்பு d க்ஷாமணம்பண்ணிப் புணரும்படியும். (நீடுநின்ற நிறைபுகழாய்ச்சியர்) இவனோடே ஊடுவது கூடுவதாய் இதுவே யாத்ரையான புகழையுடைய திருவாய்ப்பாடியில் பெண்களித்தனைவருடைய e பாசுரத்தையும். " நிறைபுகழாய்ச்சியர் " என்கிறதுக்கு - எம்பார், 'இவர்களுக்கு நிறைபுகழாவது - க்ருஷ்ணனை இன்னாள் நாலு பட்டினி கொண்டாள், இன்னாள் பத்துப்பட்டினி கொண்டாள் என்னும் புகழ்காண்!" என்று அருளிச்செய்வர். (குழலித்யாதி3) இவள் மயிர்முடியாலே அவனைக் கூடலிழைப்பிக்க வல்லவள். (பாவம்-இல்லை) இவளைப்போலே இப்படிப்பட வேண்டா; சொன்ன இத்தை அப்4யஸிக்கவல்லார்க்குக் கூடலிழைக்கவேண்டா. 11.

**ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.**
**பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.**
**நாலாம் திருமொழி முற்றிற்று.**

---

*11. அவ:—* இப்பதிகத்தை அப்4யஸிக்க வல்லவர்களுக்குப் ப2லன் சொல்லித் தலைக்கட்டுகிறாள்.

*வ்யா:— (ஊடல்கூடல்)* ஊடல் எனப்படும் ப்ரணயரோஷத்தோடு கூடியிருக்கை. *(உணர்தல்)* 'எங்களைப் பிரிந்து நலிந்தாய்' என்று அவன் குற்றத்தை உணர்த்துதல். 'உணர்த்தல்' என்பது 'உணர்தல்' என்றிருக்கிறது *(புணர்தலை)* 'உங்களுடைய காதலை வளர்க்கவே பிரிந்தேன்' என்று ஸமாதா4னம் பண்ணி, மன்னிப்பு கேட்டுக்கொண்டு, அவன் இவர்களோடு ஸம்ஶ்லேஷித்தல். முதலிரண்டும் ஆய்ச்சியருடையது. மூன்றாவது கண்ணனுடையது. *(முன் நீடு நின்ற நிறைபுகழாய்ச்சியர் கூடலை)* இப்படி இவனோடே ஊடுவது, கூடுவதாய் இதுவே யாத்திரையாயிருக்கையாகிற புகழையுடைய திருவாய்ப்பாடியிலிருந்த பெண்களனைவருடைய கூடலிழைக்கையைச் சொல்லும் பாசுரத்தையும். "இவ்வாய்ச்சியருக்கு நிறைபுகழாவது — கண்ணனுக்கு முகங்கொடுக்காமல் ஒருத்தி நாலு நாள் அவன் பட்டினி இருக்கும்படி செய்தாள்; மற்றொருத்தி பத்து நாள் அவன் பட்டினி கிடக்கச் செய்தாள் என்னும் புகழேயாகும்" என்று எம்பார் அருளிச்செய்வராம். *(குழற்கோதை கூறிய)* இவள் தன் குழலழகாலே அவனைக் கூடலிழைக்கும்படி செய்ய வல்லவளாயிருக்க, அவனைக் குறித்துக் கூடலிழைத்த பாசுரம் இது. *(பாடல்பத்தும் வல்லார்க்கு இல்லை பாவமே)* இப்பத்துப்பாட்டையும் கற்க வல்லவர்க்கு இவளைப்போலே இப்படிக் கூடலிழைத்து வருந்த வேண்டியதில்லை. இப்பதிகத்தைக் கற்பதாலேயே இவள் பெற்ற கிருஷ்ண ஸம்ஶ்லேஷமாகிற ப2லனைப் பெறுவர். 11.

**நாலாம் திருமொழி விவரணம் நிறைவுபெற்றது.**

---

**அரு:—** பதினோராம் பாட்டு. (ஊடலித்யாதி3) a ஊடலோடே கூடுகை - ஊடியிருக்கை; b இத்தையருளிச்செய்கிறார் (ஊடியிருப்பாரித்யாதி3) c உணர்த்துகை - எங்களையொழியப் பூமுடித்தாயென்கை. d க்ஷாமணம் பண்ணுகை- உங்களுக்காகச்செய்தேனென்கை. e கூடலை - கூடலிழைக்கையைச்சொன்ன பாசுரத்தை. 11.

**ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.**

## ஐந்தாம் திருமொழி—மன்னுபெரும்புகழ் ப்ரவேஶம்

அவ:—"நீ கூடிடுகூடலே" என்றவிடத்தில் கூடேனென்னுதல், கூடுவனென்றேரு மறுமாற்றம் சொல்லக்கேட்டிலள்; முன்பு தானுமவனுமாயிருந்தபோது வார்த்தைகேட்டால் ப்ரதிவசநம் பண்ணிப்போந்த வாஸநையாலும், a சைதந்யத்திலுறைப்பாலுமாக"குயில் பொருந்தவிடவற்று" என்று பார்த்து, என்னையும் அவனையும் நீ சேரவிடவல்லையே? என்று குயிலின்காலிலே விழுகிருள். சொன்ன வார்த்தைக்கு ப்ரதிவசநம் பண்ணுமென்னுமிதுவேயாய்த்து, அதின்பக்கல் பற்ருசாக நினைக்கிறது.

---

## ஐந்தாம் திருமொழி வ்யாக்யான விவரணம்

### மன்னுபெரும்புகழ் ப்ரவேஶம்

"நீ கூடிடு கூடலே" என்று சென்ற திருமொழியில் ப்ராப்ய த்வரையாலே அசேதனமான கூடலின் காலில் விழுந்தாள். அது அறிவற்றதாகையாலே, 'கூடமாட்டேன்' என்ருே, 'கூடுவேன்' என்ருே பதில் சொல்லக்கேட்டிலள்; அதனுல் 'அசேதனத்தின் காலில் விழுவதில் பயனில்லை' என்று உணர்ந்து, அறிவுள்ள தொன்றின் காலில் விழுகிருள் இத்திருமொழியில்; எதின் காலிலே விழுந்து என்ன செய்யச்சொல்லுகிருள்? எனில்: எம்பெருமானேடு கலந்திருந்தபோது வார்த்தை கேட்டால் பதில் சொல்லிப் போகும் வழக்கத்தை உடையதும், 66a. "*அதிஶக்த்யா பதத்ரிஷு*" [பக்ஷிகளுக்கு வெகுதூரம் பறப்பது, அறிவு முதலான சக்திகள் மிகுந்திருக்கும்] என்கிறபடியே அறிவு மிக்கதுமாகையாலே, இது நம்மை எம்பெருமானேடு சேர்க்கும் என நினைத்து, குயிலின் காலிலே விழுந்து, "நீயாவது என்னை அவனேடு சேரவிடு" என்று வேண்டுகிருள், சொன்ன வார்த்தைக்கு பதில் சொல்லக்கூடிய அறிவுடையது என்னுமிதுவே கூடலைக்காட்டிலும் இதற்குள்ள சிறப்பு. இதையே பற்ருசாகக்கொண்டு இதை வேண்டுகிருள் இத்திருமொழியில்.

---

அரு:— மன்னுபெரும்புகழ் ப்ரவேஶே. a 66a. "अतिशक्त्या पतत्रिषु" (அதிஶக்த்யா பதத்ரிஷு) என்றதைப்பற்ற (சைதந்யத்திலுறைப்பாலும்) என்றது.



b ராவணனைப்பார்த்து "நீ என்னையும் அவனையும் சேர்க்க வல்லையே" என்னுமவர்கள், இத்தைப் பெற்ருல் விடார்களிறே. c 66 "मित्रमौपयिकं कर्तुं रामः स्थानं परीप्सता। वधञ्चानिच्छता घोरं त्वयासौ पुरुषर्षभः॥" (மித்ரமௌபயிகம் கர்த்தும் ராம: ஸ்த$_2$ாநம் பரீப்ஸதா। வத$_4$ஞ்சாநிச்ச$_2$தா கே$_4$ாரம் த்வயாஸௌ புருஷர்ஷப$_4$:॥) 67. "विदित:" (விதி$_3$த:)

---

66. மித்ரமௌபயிகம் கர்த்தும் ராம: ஸ்த$_2$ாநம் ப்ரீப்ஸதா ।
வத$_4$ம் சாऽநிச்ச$_2$தா கே$_4$ாரம் த்வயாऽஸௌ புருஷர்ஷப$_4$:॥
[ரா-ஸு 21-19]

[(ராவண!) நீ உன்னுடைய குடியிருப்பை விரும்பினையாகில், கோ$_4$ரமான வத$_4$த்தை விரும்பாமலிருந்தாயாகில், இந்தப் புருஷ ஶ்ரேஷ்ட$_2$ரான ஸ்ரீராமபிரானை நண்பனுகக்கொள்வது தகுந்தது.]

67. விதி$_3$தஸ் ஸ ஹி த$_4$ர்மஜ்ஞ: ஶரணாக$_3$தவத்ஸல: ।
தேந மைத்ரீ ப$_4$வது தே யதி$_3$ ஜீவிதுமிச்ச$_2$ஸி ॥
[ரா-ஸு 21-20]

[(ராவணு!) ஸ்ரீராமபிரான் த$_4$ர்மத்தை அறிந்தவராகவும், ஶரணமடைந்தவரிடம் வாத்ஸல்யமுடையவராகவும் பிரஸித்த$_4$மானவர். நீ உயிர் வாழ விரும்பினையாகில் அவருடன் உனக்கு நட்பு உண்டாகட்டும்.] என்கிறபடியே ப்ரதிகூலனை ராவணனிடமும் "நீ ராமனுக்கு நண்பனுகி என்னையும் அவனையும் சேர்த்து நற்பேறு பெறலாமே" என்று கூறுகிறவர்கள் அத்தகைய ப்ராதிகூல்யமில்லாத இக்குயிலிடம் இப்படிப் பிரார்த்திப்பது வியப்பில்லையன்ருே.

---

b ஆனுலும் திர்யக்கைக்குறித்து, என்கார்யம் செய் என்னக் கூடுமோவென்ன அருளிச்செய்கிருர் (ராவணனை இத்யாதி$_3$) "பெருமாளோடே தோழமைகொள்" என்றபோதே தன்னைச் சேர்க்கச்சொன்னதும் அர்த்தா$_2$த் ஸித்$_3$த$_4$மென்று கண்டுகொள்வது. c "मित्रमौपयिकं" (மித்ரமௌபயிகம்) ப்ராப்தமென்று க்ரியை.

## ஐந்தாம் திருமொழி—முதற்பாட்டு

மன்னு பெரும்புகழ் மாதவன் மாமணி
　　வண்ணன் மணிமுடி மைந்தன்
தன்னை உகந்தது காரண மாகஎன்
　　சங்கிழக் கும்வழக் குண்டே
புன்னை குருக்கத்தி நாழல் செருந்திப்
　　பொதும்பினில் வாழும் குயிலே
பன்னியெப் போது மிருந்து விரைந்துஎன்
　　பவளவா யன்வரக் கூவாய்.

பதவுரை:— **புன்னை**—புன்னைமரங்களும், **குருக்கத்தி**—குருக்கத்திமரங்களும், **நாழல்**-கோங்குமரங்களும், **செருந்தி**-செருந்திமரங்களும், (இவை முதலிய பல மரங்கள் நிறைந்த சோலையில்), **பொதும்பினில்**—பொந்துகளிலே, **வாழும்**—வாழுகின்ற, **குயிலே!**—கோகிலமே!, **மன்னு பெரும் புகழ்**—நித்யமாய் அளவில்லாத கு$_3$ணங்களையுடையனாய், **மாதவன்**-ஶ்ரிய:பதியாய், **மா மணி வண்ணன்**—நீலமணி போன்ற நிறத்தையுடையனாய், **மணி முடி**—நவமணிகள் அழுத்திச் சமைத்த திருவபி$_4$ஷேகத்தையுடையனாய், **மைந்தன் தன்னை**-மிடுக்கையுடையனான எம்பெருமானை, **உகந்தது காரணம் ஆக**—ஆசைப்பட்டதே ஹேதுவாக, **என் சங்கு இழக்கும் வழக்கு**—என்னுடைய கைவளைகள் கழன்றொழியும்படியான நியாயம், **உண்டே?**—(உலகத்தில்) உண்டோ? (இது வெகு அநியாயமாயிருக்கிறது). (இதற்கு நான் என்செய்வேன்? என்கிறாயோ) **என் பவளம் வாயன்**—பவளம்போற் பழுத்த திருவத$_4$ரத்தையுடையனான எனது துணைவன், **வர**—(என்னிடம்) வந்து சேரும்படி, **எப்போதும்**—இரவும் பகலும், **பன்னி இருந்து**—(அவனது திருநாமங்களைக்) கத்திக் கொண்டிருந்து, **விரைந்து கூவாய்**—சீக்கிரமாகக் கூவ வேணும்.



அவ:— முதற்பாட்டு. (மன்னு பெரும் புகழித்யாதி$_3$) a எல்லாப் பதா$_3$ர்த்த$_2$ங்களையும் முறையில் நிறுத்தக்கடவ அவன் முறை செய்யாவிட்டால் பொருந்தவிடுகை உனக்கு ப$_4$ரமன்றோ என்கிறாள்.

வ்யா:—(மன்னுபெரும்புகழ் மாதவன் மாமணிவண்ணன் மணிமுடிமைந்தன் தன்னை b உகந்தது காரணமாக) c இத்தலையில் குறையுண்டாயிழக்கிறேனோ? தன்பக்கல் குறையுண்டாயிழக்கிறேனோ? (மன்னு) தா$_4$ர்மியுண்டாய் கு$_3$ணங்கள்

---

*1. அவ:—* சிறியதைப் பெரியது நலியாதபடி அவ்வப் பொருள்களை வரம்பிலே நிறுத்தி ரக்ஷிக்கின்ற அவன் என்னை ரக்ஷிக்காவிடில், அவனோடு என்னைச் சேரவிட்டு ரக்ஷிப்பது உனக்கே பொறுப்பன்றோ என்கிறாள். ஸ்வாபதே$_3$ஶத்தில் குயில் முதலான பறவைகள், சேதனனை எம்பெருமானோடு சேரவிடும் ஆசார்யர்களைக் குறிக்கின்றன என்பது இங்கு குறிக்கொள்ளத்தக்கது.

*வ்யா:— ( மன்னு பெரும்புகழ் மாதவன்......வழக்குண்டே )* எம்பெருமானைப் பார்த்தால் நிலைநின்ற பெரும்புகழையுடைய ஶ்ரிய:பதியாகவும், நீலமணிபோன்ற நிறத்தையுடையவனாகவும், ஸர்வலோக சக்ரவர்த்தி என்று தோற்றுவிக்கும் முடியணிந்திருப்பவனாகவும், உலகனைத்தையும் ரக்ஷிக்கவல்ல ப$_3$லமுடையவனாகவும் இருக்கிறான். எனக்கும் அவனைப் பெற வேண்டும் என்னும் ஆசையில் ஒரு குறையில்லை. இப்படி இரண்டு தலையிலும் குறையில்லாமல் இருக்கும்போது நான் எம்பெருமானைப் பிரிந்து, மேனி மெலிந்து, என் சங்குவளையை இழக்கலாமோ? என்று பாட்டின் முற்பாதிக்குக் கருத்து. *(மன்னு)* நிலைநின்ற கு$_3$ணங்களையுடையவன். இவனுடைய

---

அரு:— முதற்பாட்டு. a "மணிமுடி மைந்தன்" என்றத்தைப் பற்ற அவதாரிகையருளிச்செய்கிறார் (எல்லாப் பதா$_3$ர்த்த$_2$ங்களையுமித்யாதி$_3$) b,c "உகந்தது" என்றத்தைப் பற்ற அருளிச்செய்கிறார் (இத்தலையில் குறையித்யாதி$_3$) இத்தலையிலென்றது - ஈஶ்வரன் பக்கலிலே என்றபடி. "உகந்தது" என்றிருக்கையாலே - தன் பக்கலிலே என்

நடையாடாததொருபோதுண்டாய் நானிழக்கிறேனே? (d பெரும் புகழ்) e கு3ணங்களுக்கு அவதி4யுண்டென்றும் அது என் பக்கலேறிப்பாயாதென்றும் நானிழக்கிறேனே ? ( புகழ் ) f அன்றிக்கே, ஹேயகு3ணங்களும் கலசித்தான் நானிழக்கிறேனே ? g 68. " स्वाभाविकानवधिकातिशयासङ्ख्येयकल्याणगुणगण " (ஸ்வாப4ாவிகாநவதி4காதிஶயாஸங்க்2யேயகல்யாணகு3ணக3ண)

---

ஸ்வரூபத்தில் கு3ணங்கள் வெளிப்படாததொரு காலம் இருந்தால் அப்போது நான் இழப்பதற்கு இடமுண்டு. இவன் நிலையான கு3ணங்களை உடையவனாயிருக்கையாலே நான் இழக்க இடமில்லையே என்று கருத்து. (பெரும்புகழ்) எல்லையற்றவையாய், கணக்கற்றவையாய், மிகச் சிறந்தவையான கு3ணங்களை உடையவன். கு3ணங்களுக்குக் கணக்கும், ஒவ்வொரு கு3ணத்திற்கும் எல்லையும் இருந்தால், இல்லாத சில கு3ணங்களாலேயோ, அந்த கு3ணங்கள் என் பக்கல் ஏறிப்பாயுமளவுக்கு இல்லை என்னும் காரணத்தாலேயோ நான் இழக்கலாம். அப்படியுமில்லையே. (*புகழ்*) முழுவதும் கல்யாண கு3ணங்களே நிரம்பப்பெற்றிருப்பவன். தாழ்ந்த கு3ணங்களும் கலந்திருந்தால் அவற்றால் நான் இழக்க இடமுண்டு. அப்படியல்லாமல், எல்லாமே தலைசிறந்த கல்யாணகு3ணங்களாயிருக்கையால் நான் இழக்க இடமில்லையே. ( *மன்னுபெரும்புகழ்* ) இதையும், ' உயர்வற உயர்நலமுடையவன் ' [திருவாய் 1-1-1] என்னும் ஆழ்வாரது அருளிச்செயலையும் பின்பற்றியே,

68\. ஸ்வாப4ாவிகாநவதி4காதிஶயாஸங்க்2யேய
கல்யாணகு3ணக3ண [ஶரணாக3திக3த்3யம்-5]

[இயற்கையானவையும், எல்லையற்ற பெருமையை உடையவையும் எண்ணிக்கையற்றவையுமான மங்க3ளகு3ணக3ணங்களை உடையவனே !] என்று எம்பெருமானார் அருளிச்செய்தா

---

றும் சொல்லலாம். d, e, f பெருமைக்கு மூன்று தாத்பர்யம்; நிஸ்ஸீமமாதல், நிஸ்ஸங்க்2யமாதல், ஶ்லாக்4யதையாதல்; இந்த மூன்று அர்த்த2த்தையும் பற்ற அருளிச்செய்கிறார் (கு3ணங்களுக்கித்யாதி3 வாக்யத்3வயத்தாலே) g க3த்3



என்றாற்போலேயிருக்கிறதாய்த்து. (மாதவன்) இப்போது இக்கு3ணங்களின்றிக்கேயொழிக; அருகேயிருந்து 69. "न कश्चिन्नापराध्यति" (ந கஶ்சிந்நாபராத்4யதி) என்று சேர்ப்பாரில்லாமைதான் இழக்கிறேனே? " ஶ்ரீவல்லப4 " என்றாற்போலேயிருக்கிறது. (மாதவன் மாமணிவண்ணன் ) h தனக்காக வடிவு படைத்திருப்பானொருவனைத்தான் இழக்கிறேனே? h2 இழக்கலாம் வடிவாய்த்தான் இழக்கிறேனே? i 70. "न ते रूपं" (ந தே

---

ரன்றே. (*மாதவன்*) நிரங்குஶ ஸ்வாதந்த்ரியத்தாலே இப்போது இந்த கு3ணங்கள் இல்லாதவைபோலேயாயினும், இவனுடைய ஸ்வாதந்த்ரியத்தையும், நிக்3ரஹத்தையும் மாற்றி என்னை இவனோடு சேரவிடுவார் இல்லாமலிருந்தாலும் நான் இழக்கலாம்.

69\. பாபாநாம் வா ஶுப4ாநாம் வா
வத4ார்ஹாணும் ப்லவங்க3ம ।
கார்யம் கருணமார்யேண
ந கஶ்சிந் நாபராத்4யதி ॥ [ரா-யு 116-44]

[வானர ! பாபிகளாயினும், புண்யமுள்ளவராயினும், கொல்லத் தகுந்தவர்களாயிருந்தாலும் கு3ணவானாயிருப்பவனால் அவர்கள் விஷயத்தில் கருணை காட்டப்படவேண்டும், அபராத4ம் செய்யாதவன் ஒருவனுமில்லையே ] என்கிறபடியே என்னை அவனோடு சேரவிடும் பெரியபிராட்டியார் அருகில் இருக்கும் போது நான் இழக்கலாமோ? ' மாதவன் ' என்னும் இதை அடியொற்றியே '*ஶ்ரீவல்லப4!*' என்று ஶரணாக3தி க3த்3யத்தில் அருளிச்செய்தார். (*மாதவன் மாமணிவண்ணன்*) பெரியபிராட்டியார் அநுப4விக்கும் மாமணிவண்ணத் திருமேனியுடையவன். இவன் திருமேனி தனக்காகக் கொண்ட வடிவானால் நான் இழக்கலாம். சிறப்பற்றதாய் இழக்கக் கூடியதானாலும் இழக்கலாம். மாமணிவண்ணனாகையாலே மிகச் சிறந்ததாய்,

70\. ந தே ரூபம் ந சாகாரோ நாயுத4ாநி ந சாஸ்பத3ம் ।
தத2ாऽபி புருஷாகாரோ ப4க்தாநாம் த்வம் ப்ரகாஶஸே ॥
[ஜிதந்தே 1-5]

---

யம் "स्वाभाविक"(ஸ்வாப4ாவிக)இத்யாதி3. h2 "மா" என்றதுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் ( இழக்கலாமித்யாதி3 ) h,i (தனக்காக) என்ற வாக்யத்தில் அர்த்த2த்துக்கு ப்ர

ரூபம்) இத்யாதி3. (j மணிமுடி மைந்தன்) k இத்தனையுமுண்டானாலும் என்னைப்போலே பிறர் கை பார்த்திருப்பானொருவனாய்த்தான் இழக்கிறேனோ? l ஸ்வதந்த்ரனாவது—ரக்ஷணத்திலே தீ3க்ஷித்திருப்பானொருவனாய்த்து. (மைந்தன்) ரக்ஷணத்தை ஏறிட்டுக்கொண்டாலும் ப்ரயோஜனமில்லையிறே அஶக்தனாயிருக்குமாகில். "மைந்து" என்று வலியாய், வலியையுடையவனென்றபடி. (தன்னையுகந்தது காரணமாக)

---

[(உன்னுடைய) தி3வ்யாத்மஸ்வரூபமானது உனக்காக இராது; (ஸ்வதந்த்ரமான அது ஆஶ்ரிதர்களுக்காகப் பரதந்த்ரமாகவும் ஆகும் என்று தாத்பர்யம்). தி3வ்யமங்க3ளவிக்3ரஹமும் உனக்காயிராது; தி3வ்யாயுத4ங்களும் உனக்காயிருக்கவில்லை; இருப்பிடமான வைகுண்ட2ம் முதலியவைகளும் உனக்காயிருக்கவில்லை; (இவையெல்லாம் உன் அடியார்களுக்காயிருக்கும் என்று பொருள்). ப4க்தர்களுடைய உடைமையான நீ, இப்படி ஆஶ்ரிதபரதந்த்ரமான ஸ்வரூபரூபகு3ணவிபூ4திகளை உடையவனாயிருந்தபோதிலும், புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட ஸர்வாதி4கனாயிருக்கும் தன்மையுடன் விளங்குகிறாய்.] என்கிறபடியே அடியார்க்காகவே ஏற்பட்ட வடிவை உடையவனாயிருக்க, இழக்கலாமோ? (*மணிமுடி மைந்தன்*) ஸர்வலோக சக்ரவர்த்தி என்பது தோற்ற நவரத்னக2சிதமான கிரீடத்தை அணிந்த மிடுக்கன். முற்கூறிய பெருமைகளெல்லாமிருந்தாலும் என்னைப்போலே ஒருவனுக்குப் பரதந்த்ரனாய், அவன் கை பார்த்திருப்பவனாயிருந்தால் இழக்கலாம்; அப்படி எவனுக்கும் பரதந்த்ரனாயிராமல் ஸ்வதந்த்ரனாய், அனைவரையும் ரக்ஷிக்கும் விரதம் பூண்டிருப்பவனாகையாலே இழக்க இடமில்லையே. (*மைந்தன்*) ப3லத்தை உடையவன். அனைவரையும் ரக்ஷிப்பதாக விரதம் பூண்டிருந்தாலும், ஶக்தியற்றவனாயிருந்தால் ரக்ஷிக்க முடியாமற்போகலாம். 'மைந்து' எனப்படும் ப3லத்தை உடையவனாகையாலே அதற்கும் இடமில்லையே. (*தன்னை உகந்தது காரணமாக*) தகாத விஷ

---

மாணம் "न ते रूपं" (ந தே ரூபம்) இத்யாதி3 j, k, l "மணிமுடி" என்றதுக்கு இரண்டு தாத்பர்யம்; ஆதி4ராஜ்யஸூசக



அப்ராப்த விஷயத்தை ஆசைப்பட்டேனோ? இழப்பேன் m நானோ? n தன் திருவடிகளிலே சிலர் தலைசாய்த்தால் அநுப4வ்யங்கள் பின்னை அவர்களநுப4விப்பார்களோ? தானநுப4வித்தல் பரிஹரித்தல் செய்யுமத்தனையன்றோ? 71. "पार्थं संछाद्य माधवः" (பார்த்த2ம் ஸஞ்ச2ாத்3ய மாத4வ:). (வழக்குண்டே) என் ஆர்த்தியைக் கண்டு ஓரம்பண்ணச் சொல்லுகிறேனல்லேன்; மத்4யஸ்த2 பு3த்3தி4யாலே பார்க்கச்சொல்லுகிறேனத்தனை. 72. "न वासुदेवभक्तानामशुभं विद्यते क्वचित्" (ந வாஸுதே3வப4க்தா

---

யத்தை ஆசைப்பட்டிருந்தால் இழக்கலாம். ப்ராப்த விஷயமான எம்பெருமானை ஆசைப்பட்டு இழக்கலாமோ? என்னைப் பெற்று அநுப4விப்பவன் தானாயிருக்க, நான் இழக்க இடமுண்டோ? உண்மையில் இழப்பவன் அவனன்றோ? தன் திருவடிகளிலே சிலர் போக்கற்று விழுந்தால், அவர்கள் முன் செய்த முழுவினைகளை அநுப4விக்க வேண்டுமோ? '*ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி*' [கீ3தை 18-66] என்கிறபடியே அப்பாபங்களைப் போக்குதல்,

71. விஸ்ருஷ்டம் ப4க3த3த்தேந தத3ஸ்த்ரம் ஸர்வக4ாதுகம் ।
உரஸா த4ாரயாமாஸ பார்த்த2ம் ஸஞ்ச2ாத்3ய மாத4வ: ॥
[ப4ார-துரோணபர்வம் 29-18]

[ப4க3த3த்தனாலே விடப்பட்டதும், எல்லாவற்றையும் ஸம்ஹரிப்பதுமான அந்த ப3ாணத்தை, அர்ஜுனனை மறைத்து, மாத4வன் மார்பினாலே த4ரித்தான்.] என்று அர்ஜுனனைக் குறித்து எறிந்த ஆயுத4த்தைத் தன் மார்பிலே ஏற்று அவனை ரக்ஷித்ததுபோலே, அவற்றைத் தான் அநுப4வித்தல் செய்ய வேண்டாமோ? (*என் சங்கிழக்கும் வழக்குண்டே*) இப்படியெல்லாமிருக்கும்போது நான் என் சங்குவளையை இழப்பதற்கு நியாயமுண்டா? என்னுடைய வருந்தத்தக்க நிலையைப் பார்த்து, பக்ஷபாதமாக நடக்கச்சொல்லவில்லை; நடுநிலைநின்று ஆராய்ந்து நியாயமாகவே நடக்கச்சொல்லுகிறேன்.

72 ந வாஸுதே3வப4க்தாநாமஶுப4ம் வித்3யதே க்வசித் ।
[ஸஹஸ்ரநாமாத்4யாயம்]

---

மாகையால் வந்த ஸ்வாதந்த்ர்யமாதல்; ரக்ஷணஸூசகமாதல். m (நானோ.) - உகந்த நானோ? n "காரணமாக"

நாமஶுப4ம் வித்3யதே க்வசித்) என்றும், 73. "न मे भक्तः ப்ரணஶ்யதி" (ந மே ப4க்த: ப்ரணஶ்யதி) என்றும் சொல்லக்கடவதிறே. 73. "कौन्तेय प्रतिजानीहि" (கௌந்தேய ப்ரதிஜாநீஹி) அர்ஜுநா ! இவ்வர்த்த2த்தில்நின்றும் நம்மை விஶ்வஸித்து ப்ரதிஜ்ஞைபண்ணு; "न मे भक्तः प्रणश्यति" (ந மே ப4க்த: ப்ரணஶ்யதி) நம்மைப்பற்றினார்க்கு ஒருகாலமும் அநர்த்த2ம் வாராதுகாண். (o புன்னையித்யாதி3) என்னுடைய ஶோகத்துக்கு அடியான p அக்கு3ணப்பரப்போபாதியும் போந்திருந்ததீ உன் களிப்புக்கு அடியான படுக்கை வாய்ப்பும் !

---

[ வாஸுதே3வனுடைய ப4க்தர்களுக்கு எங்கும் அமங்க3ளமில்லை. ] என்று மத்4யஸ்த2ர்களும்,

73. க்ஷிப்ரம் ப4வதி த4ர்மாத்மா ஶஶ்வச்சா2ந்திம் நிக3ச்ச2தி ।
கௌந்தேய! ப்ரதிஜாநீஹி ந மே ப4க்த: ப்ரணஶ்யதி ॥
[கீ3தை 9·31]

[(என்னை அடைந்தவன்) சீக்கிரமே த4ர்மாத்மாவாகிறான்; நிலைபான ஶாந்தியாகிய மோக்ஷத்தை அடைகிறான். அர்ஜுனா! என்னுடைய ப4க்தன் நஶிக்கமாட்டானென்று நீ ப்ரதிஜ்ஞை பண்ணு.] என்று தன் வார்த்தை பொய்யானாலும் ஆகலாமாகையாலே, எம்பெருமான் தானே அர்ஜுனனைக் குறித்துப் பிரதிஜ்ஞை செய்யச் சொல்லியும் எம்பெருமானடியார்களுக்கு ஒரு நாளும் தீங்கில்லை என்று அறுதியிட்ட விஷயமன்றோ இது. *(புன்னை குருக்கத்தி...குயிலே!)* புன்னை, குருக்கத்தி, கோங்கு, செருந்தி முதலான பல மரங்கள் நிறைந்த சோலையில், மரப்பொந்துகளில் வாழ்கின்ற குயிலே! குயிலானது அவ்வக்காலங்களுக்குத் தக்கவாறு ஒவ்வொரு மரப்பொந்திலே ஸுக2மாக வாழும் என்றும், "எம்பெருமானுடைய 'மன்னு பெரும் புகழ்' எனப்பட்ட நித்யமாய், பரந்துள்ள கு3ணங்கள் என் வருத்தத்துக்குக் காரணமானாற்போலே, இப்படி விரிந்து பரந்து அமைந்துள்ள உன்னுடைய படுக்கை வாய்ப்பு உன் ஆநந்த3த்திற்குக் காரணமாயுள்ளது" என்றும் உணர்த்தப்படுகிறது.

---

என்றத்தைப் பற்ற அருளிச்செய்கிறார் (தன் திருவடிகளித்யாதி3) p "மன்னுபெரும்புகழ்" - நித்யமாய் அபரிச்சி2ந்நமான புகழ். o நாழல் - ப2லிநீ; பூங்கொடி. அதாவது - கொடிப் பூக்களுக்குப் பேர். பொதும்பு - பொந்து.



நான் தரைக்கிடை கிடக்க நீ படுக்கையிலே பொருந்துவதே ! எனக்கு மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாயிருக்க நீ படுத்த படுக்கைப்பரப்பிருந்தபடியே ! இத்தை விட்டு உனக்குச் செய்ய வேண்டுமத்தைச் சொல்லலாகாதோ ? என்ன; (q பன்னி—இருந்தித்யாதி3) ஒருகால் சொல்லிவிடுகையன்றிக்கே பலகாலுமிருந்து, ஆனை இடர்பட்ட மடுவின் கரையிலே அரைகுலையத் தலைகுலைய வந்து விழுந்தாற்போலே விரைந்துவந்து, என்னோடே கலந்துபோகிற ஸமயத்தில் அணைத்து ஸ்மிதம்பண்ணி வருமளவும் ஜீவித்திருக்கும்படி விளைநீரடைத்துப் r போனபோதைச்

---

நான் எம்பெருமானைப் பிரிந்து தரையிலே கிடந்து துவளும் போது, நீ வாய்ப்பான படுக்கையிலே பொருந்தி இன்புறுவதே! 'மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாலோ'[திருவாய் 9-9-4] என்கிற படியே எனக்கு மலர்ப்படுக்கை சுடுவதாயிருக்க, நீ மலர்ச்சோலைப் பொந்துகளிலே இனிதாகக் கண் வளர்வதே! என்று கருத்து. "இப்படி உனது நிலையையும், என் நிலையையும் சொல்லுவதை விட்டு உனக்கு நான் என்ன செய்யவேண்டும் என்பதைக்கூறாய்" என்று குயிலுக்குக் கருத்தாகக் கொண்டு கூறுகிறாள் மேலே— *(பன்னி......கூவாய்)* *(பன்னி எப்போதும் இருந்து கூவாய்)* எனக்குத் தூதாகச் செல்லும் நீ ஒருகால் சொல்லிவிடுவது போதாது. பலகாலும் அவன் முன்னேயிருந்து சொல்லி, அவன் என்னிடம் வரும்படி வார்த்தை சொல்லவேணும். *(விரைந்து வரக்கூவாய்)* (151-ம் பக்கம் 46-வது ப்ரமாணத்தில் காட்டியபடி) க3ஜேந்த்3ராழ்வான் துன்புற்ற மடுவின் கரையிலே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து விழுந்தாற்போலே, விரைந்து என்னிடம் வரும்படியாகக் கூவுவாய்—(வார்த்தை சொல்லுவாய்). *(என் பவளவாயன் வரக்கூவாய்)* என்னோடு கலந்து பிரிகிற காலத்தில் என்னை அணைத்து, தான் திரும்பி வரும் வரையிலும் இதை நினைத்தே நான் உயிர் வாழ்ந்திருக்கும்படி, பயிருக்கு நீர் பாய்ச்சுவாரைப் போலே புன்முறுவல் செய்து போனபோது அவன் திருவத,

---

q பன்னல் - சொல்லல். r,s "பவளவாயன்" என்றதுக்கு-

r2செவ்வியோடும், 8 அத4ரத்தில் பழுப்போடும் வந்து அணைக்கும் படியாகக் கூவப்பாராய் என்கிருள். 1.

## ஐந்தாம் திருமொழி—இரண்டாம் பாட்டு

**வெள்ளை விளிசங் கிடங்கையில் கொண்ட**
**விமல னெனக்குருக் காட்டான்**
**உள்ளம் புகுந்தென்னை நைவித்து நாளும்**
**உயிர்பெய்து கூத்தாட்டுக் காணும்**
**கள்ளவிழ் செண்பகப் பூமலர் கோதிக்**
**களித்திசை பாடுங் குயிலே!**
**மெள்ள விருந்து மிழற்றி மிழற்ருதுஎன்**
**வேங்கட வன்வரக் கூவாய்.**

**பதவுரை: — கள் அவிழ் —** தேன்பெருகாநின்றுள்ள, **செண்பகம் பூ**—செண்பகப்பூவிலே, **மலர்கோதி** — (அஸாரமான அம்சத்தைத் தள்ளி) ஸாரமான அம்சத்தை அநுப4வித்து, **களித்து**—(அதனால்) ஆநந்த3மடைந்து, **இசை பாடும் குயிலே!**—(அந்த ஆநந்த3த்திற்குப் போக்குவீடாக) இசைகளைப் பாடாநின்றுள்ள கோகிலமே!, **வெள்ளை விளிசங்கு இடங்கையில் கொண்ட** — சுத்3த4ஸ்வபா4வமாய் (கைங்கர்யருசியுடையாரை) அழைக்குமதான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை இடக்கையிலே ஏந்திக்கொண்டிருக்கிற, **விமலன்**—பரிசுத்3த4னை பரமபுருஷன், **உரு**-தனது தி3வ்யமங்க3ளவிக்3ரஹத்தை, **எனக்குக் காட்டான்**—எனக்குக் காண்பிக்கமாட்டேன் என்கிருன்; (அதுவுமல்லாமல்) **உள்ளம்**—என்னுடைய ஹ்ருத3யத்தினுள்ளே, **புகுந்து**—வந்து புகுந்து, **என்னை நைவித்து**—என்னை நைந்துபோம்படி பண்ணி, (அவ்வளவிலே நான்

---

ரத்திலே புதிதாக ஏற்பட்ட சிவப்பும், திருவத4ரத்திற்கு இயற்கையாக உள்ள சிவப்பும் கூடிய அப்பவளச் செவ்வாயன் வந்து என்னை அணைக்கும்படியாகக் கூவுவாயாக என்கிருள். 1.

---

தன்னேட்டைக் கலவியாலுண்டான சிவப்பாதல்; ஸ்வாபா4விகமான சிவப்பாதல். r2 செவ்வி - சிவப்பு. 1.



முடிந்துபோவதாயிருந்தால், இன்னமும் என்னை ஹிம்ஸிப்பதற்காக முடியவொட்டாமல்) **நாளும் உயிர்பெய்து**—நாள்தோறும் ப்ராணனைப் பெருக்கடித்து, **கூத்தாட்டு காணும்**—என்னைத் தத்தளிக்கச்செய்து வேடிக்கைபாராநின்ருன்; (நீ செய்யவேண்டியதென்னவென்ருல்) **இருந்து**—என் அருகில் இருந்துகொண்டு, **மெள்ள மிழற்றி மிழற்ருது**—உன் மழலைச் சொற்களைச் சொல்லி விலாஸசேஷ்டிதங்களைப் பண்ணுமல், **என் வேங்கடவன் வர**—எனக்காகத் திருவேங்கடமலையிலே வந்துநிற்கிற எம்பெருமான் (இங்கே) வரும்படியாக, **கூவாய்**—கூப்பிடவேணும்.

**அவ :—** இரண்டாம் பாட்டு. (வெள்ளை இத்யாதி3) a **கீழ் நின்ற நிலையை அறிவிக்கவேணுமிறே, மேல் அதுக்குப் பரிஹாரம் பண்ணும்போது; இதுகாண் என் நிலையிருக்கிறபடி என்கிருள்.**

**வ்யா :—** (வெள்ளை b விளி சங்கு) ஶ்யாமமான திரு**மேனிக்குப் பரபா4க3மான வெண்மையையுடைத்தாய், பிற்பாடரை 'அடிமைசெய்ய வாருங்கோள்" என்று அழைப்பாரைப் போலேயிருக்கிற த்4வநியையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை.**

---

*அவ:—* தான் இப்போதிருக்கும் நிலையைத் தெரிவித்தால் தான், குயிலால் அதற்குப் பரிஹாரம் தேடமுடியுமாகையாலே, அந்நிலையைக் கூறுகிருள்.

*வ்யா:— (வெள்ளை விளிசங்கு)* நீலநிறமுடைய திருமேனிக்குப் பரபா4க3ரஸத்தை (வர்ணச்சேர்த்தியழகை) அளிக்கும் வெள்ளை நிறத்தை உடையதாய், அடிமை செய்யத் தாழ்த்தவர்களை "அடிமைசெய்ய வாருங்கள்" என்று அழைப்பது போலே இருக்கும் ஒலியை உடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை.

---

அரு:— இரண்டாம் பாட்டு. (வெள்ளை இத்யாதி3) a இரக்கிறவள் தன் அவஸ்தை2யைச் சொல்லுவானென்? என்ன அருளிச்செய்கிருர் (கீழ்நின்ற இத்யாதி3)

(இடங்கையிற்கொண்ட) இடக்கையிலே த4ரித்த. வலக்கையிலேயாகில். c "வலக்கையாழி இடக்கைச் சங்கம்" என்பர்; இல்லையாகில், "இடங்கை வலம்புரிநின்ருர்ப்ப" என்பர்கள். ஏதேனுமாக, இருந்தபடி ஆத3ரிக்குமவர்களிறே. d ராஜபுத்ரன் கையில் அறுகாழிக்குத் தோற்றிருப்பாரைப்போலே, கையும் ஸ்ரீபாஞ்சஜந்யமுமான அழகுக்குப்போலேகாணும் இவள் தோற்றிருப்பது. (விமலன்) விக்3ரஹங்களும் தி3வ்யாயுத4ங்களும் பிறர்காணக் கண்டதென்று இருக்குமவன். 70. "न चाकारो नायुधानि—भक्तानां" (ந சாகாரோ நாயுத4ாநி — ப4க்தாநாம்) என்றிறே இருப்பது. "பிறர்க்காக நம் வடிவுகண்டது" என்றிருக்குமவன். (எனக்கு) ஆசையின் எல்லையிலே நிற்கிற

---

*(இடங்கையில் கொண்ட)* இடக்கையிலே த4ரித்த. இது வலக்கையில் சக்ரத்தை த4ரித்திருப்பதற்கும் உபலக்ஷணம். *"வலக்கையாழி இடக்கைச் சங்கம்"* [திருவாய் 6-4-9] *"இடங்கை வலம்புரி நின்ருர்ப்ப, எரிகான்று அடங்கார் ஒடுங்குவித்ததாழி"* [இர-திருவ 71] என்று ஆழ்வார்களும் இரண்டு திருக்கைகளிலுமுள்ள இரண்டு தி3வ்யாயுத4ங்களையும் சேர்த்தே அநுப4வித்தார்களன்ருே. ராஜபுத்ரனைக் காதலிக்கும் பெண்கள் அவன் கையிலுள்ள மோதிரத்துக்குத் தோற்றிருப்பதுபோலே இவளும் திருக்கையும் ஸ்ரீபாஞ்சஜந்யமுமான சேர்த்தியழகுக்குத் தோற்றிருக்கிறபடி. *(விமலன்)* தன்னுடைய திருமேனிகளும், தி3வ்யாயுத4ங்களும் தனக்கென்றிராமல், தன் அடியார்க்காக என்று நினைத்திருக்கும் பரிஶுத்3தி4யை உடையவன். (229-ம் பக்கம் 70-வது ப்ரமாணத்தில் காட்டியபடி) ஜிதந்தையிலும் இவன் தன்னுடையவையனைத்தையும் தன்னடியார்க்காகவே கொண்டிருப்பவன் என்று கூறப்பட்டதன்ருே. *(எனக்கு)* ஆசையின் எல்லையிலே நிற்கிற எனக்கு. *(உருக்*

---

b விளித்தல்-ஶப்3தி3த்தல். c ஸ்ரீபாஞ்சஜந்யத்தை முன்னே சொல்லுவானென்? என்ன, தனக்கு ப்ரகாஶித்தபடியே என்கிருர் (வலக்கை இத்யாதி3) அதாவது - இப்பாட்டில் திருவாழியைச் சொல்லாவிட்டாலும் ஸ்த2லாந்தரங்களிலே ஒக்க எடுக்கையாலே அதுக்கும் உபலக்ஷணம் என்றபடி. d அன்றியே, தான் தோற்றபடியைச் சொல்லுகிருள்



எனக்கு. (e உருக்காட்டான்) எனக்குக் காட்டாதே யாருக்குக் காட்டவிருக்கிருன்? மீனுக்குத் தண்ணீர் வார்ப்பாரைப்போலே, நித்யஸூரிகளுக்குக் காட்டவிருக்கிருனே? வடிவின் வாசியறியாத ஸம்ஸாரிகளுக்குக் காட்டவிருக்கிருனே? f [காசிஞெளியில் திகழும்வண்ணங்காட்டீர்] பொன்போலே திகழாநின்றுள்ள வடிவை எனக்குக் காட்டுகிறிலீர். [எம்பெருமான் வாசிவல்லீர்] உம்முடைய வடிவின் வீறும், பெறுகிற எங்களுடைய சிறுமையும் நேராகக் கணக்கிடவல்லீர். [இந்தளூரீர்! வாழ்ந்தே போம் நீரே] வாசியறியாதே — தரமிடாதே தரவந்தவிடத்தே வாசிபார்க்கப் பார்த்திராகில் $f_2$ உம்

---

*காட்டான்)* காணுவிடில் த4ரியாத எனக்குத் தன் வடிவையும் அழகையும் காட்டாதே யாருக்குக் காட்ட நினைத்திருக்கிருன்? தண்ணீரில் வாழும் மீனுக்குத் தண்ணீர் த4ர்மம் செய்வதுபோலே தன்னை எப்போதும் அநுப4வித்துக் கொண்டிருக்கும் நித்யஸூரிகளுக்குக் காட்ட நினைத்திருக்கிருனே? இத்திருமேனியின் பெருமையை அறியாமையாலே அதைக்காண ஆசைப்படாத ஸம்ஸாரிகளுக்குக் காட்ட நினைத்திருக்கிருனே? இவ்விடத்தில் "காசிஞெளியில் திகழும்வண்ணம்" [பெரிய திருமொழி 4-9-4] என்று தொடங்கும் திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்தி அநுப4விக்கத்தக்கது:— [காசிஞெளியில் திகழும் வண்ணம் காட்டீர்] பொன்போலே திகழ்கின்ற தேவரீரது திருமேனியை, அதைக் காண ஆசைப்பட்டிருக்கும் எனக்குக் காட்டமாட்டேன் என்கிறீரே. [எம்பெருமான் வாசிவல்லீர்] உம்முடைய திருமேனியின் சிறப்பையும், அதை ஆசைப்படுகிற எங்களுடைய சிறுமையையும் துல்லியமாகக் கணக்கிட வல்லவராய் இருக்கிறீர்! [இந்தளூரீர்! வாழ்ந்தே போம் நீரே] பெரியவர் சிறியவர் என்கிற வேறுபாடு காணமல், அவரவர் பெருமை சிறுமைக்குத் தக்கபடி படியளப்பது என்னும் நியமமில்லாமல்

---

என்கிருர் (ராஜபுத்ரன் இத்யாதி3) e உரு - வடிவும், அழகும். e, f, $f_2$ "எனக்கு" என்றதுக்கு இரண்டு தாத்பர்யம் தோற்றுகிறது; "பிறர்க்காக நம் வடிவு கண்டது" என்றிருக்குமவன் "எனக்கு உருக்காட்டான்" என்றபோதே

முடைய உடம்பை நீரே கட்டிக்கொண்டு கிடந்து வாழ்ந்து போம். (உருக்காட்டான்) விடாய்த்தார்க்குத் தண்ணீர் வாராதாரைப்போலே. (உள்ளம் புகுந்து) வடிவை மறந்து பிழைக்கவும் ஒட்டுகிறிலன். என் ஹ்ருத$_3$யத்திலே வந்து புகுந்து. (என்னை நைவித்து) ஹ்ருத$_3$யத்திலே புகுந்தால் நைவோடே தலைக்கட்டியல்லது நில்லாதிறே. "நினைதொறும்" என்றும், "நினைந்து நைந்து" என்றும் சொல்லுகிறபடியே. (நாளும் g உயிர்பெய்து கூத்தாட்டுக் காணும்) நெஞ்சிலே புகுந்து மறக்கவொண்ணாதபடி பண்ணும்; ஸந்நிஹிதரைப்

---

அனைவர்க்கும் தூ$_4$ளி தா$_3$னமாகத் திருமேனியை வழங்க வந்த இடம் அர்ச்சாவதாரம். அந்த இடத்தில் எங்களுடைய சிறுமை பார்த்துத் திருமேனியைத் தாராதொழிந்திராகில், உம்முடைய உடம்பை நீரே கட்டிக்கொண்டு கிடந்து வாழ்ச்சி பெற்றுப் போவீராக — என்றாரன்றோ திருமங்கையாழ்வார். *(உருக்காட்டான்)* தாகமெடுத்தவர்களுக்குத் தண்ணீர் வார்க்காதவர்களைப் போலே, திருமேனியைக் காண ஆசைப்பட்ட எங்களுக்கு அதைக் காட்டுகின்றிலன். "காட்டாமலிருந்தாலும், நிம்மதியாய் இருக்கவும் விடுகின்றிலனே" என்கிறாள் மேலே — *(உள்ளம் புகுந்து)* இத்திருமேனியை மறந்து பிழைத்திருக்கவும் முடியாமல் என்நெஞ்சிலே வந்து புகுந்தான். *(என்னை நைவித்து)* இதயத்தில் புகுந்தால் அதை அநுப$_4$விக்க ஆசைப்படும் இவளுக்கு நைந்து நைந்து கரையாமலிருக்க முடியாதே. "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்து உகும்" [திருவாய் 9-6-2] என்றும், "நினைந்து நைந்து உள்கரைந்து உருகி" [திருவாய் 1-5-2] என்றும் ஆழ்வார் அருளிச்செய்தாரன்றோ. *(நாளுமுயிர் பெய்து கூத்தாட்டுக் காணும்)* சித்ரவதை$_4$ செய்பவர்கள் வதைக்கப்படுகிறவனை உயிர்போகும்நிலை அடையும்படி துன்புறுத்தி, மறுபடியும் தா$_4$ரகங்களை அளித்து உயிர்உண்டாக்கி

---

தனனுடம்பைக் கட்டிக்கொண்டிருக்கிறான் என்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் (காசினொளியின் இத்யாதி$_3$)

g (உயிர்பெய்து) பெய்கை - இடுகையாய், நாள்தோறும் உண்டாக்குகை.



போலே ப்ரகாஶித்தவாறே அணைக்கக் கைநீட்டி, கைக்குள் அகப்படாமையாலே நோவுபட்டு, பின்னையும் முடிந்து பிழைக்கவும் பெறாதே, க்ஷணிகபதா$_3$ர்த்த$_2$ம்போலே முடிந்தது ஜீவிப்பதாய்க்கொண்டு உருவ நோவுபட்டுச் செல்லாநிற்குமாய்த்து. இப்படித் துடிக்கவிட்டு இதுதானே போதுபோக்காயிராநின்றான்.

(h கள்ளவிழித்யாதி$_3$) நான் இப்படி நோவுபடாநிற்க, உன்னவஸ்தை$_2$யிருந்தபடியென்! i மது$_4$விரியாநின்றுள்ள செண்பகப்பூவில் j ருஜீஷமான அம்ஶத்தைக் கழித்து மலரைக்கோதி, நான் பூக்காண வெருவ நீ களித்து, அந்த

---

மறுபடியும் துன்புறுத்தி இப்படியே படாதபாடுபடுத்துவர்கள். அப்படியே இவனும் என் நெஞ்சிலே புகுந்து என்னால் அவனை மறக்கமுடியாதபடி பண்ணுவான்; இப்படி அருகில் இருப்பவனைப்போலே நெஞ்சில் தோற்றினவுடன் நான் அவனை அணைக்க எண்ணிக் கைநீட்டுவேன்; இவன் நெஞ்சிலேயே இருக்கையால் கைக்குள் அகப்படாமையாலே நோவுபடுவேன். ஒரேயடியாக இறந்து, இத்துன்பத்திலிருந்து பிழைக்கவும் முடியாதபடி மறுபடிமறுபடி நெஞ்சிலே தோற்றி உயிரூட்டி அணைப்பதற்கு ஆசையை விளைத்து அதையளிக்காமல் படுகொலையடிக்கையாலே, கணநேரமே வாழும் பொருள்போலே சாவதும் உயிருண்டாவதுமாய் எப்போதும் துன்புறுவதே வாழ்க்கை நடைமுறை ஆகிவிட்டது எனக்கு. இப்படிப் படர்தபாடு படுத்தி இதையே போதுபோக்காகக்கொண்டு, நான் துடிப்பதைக் கண்டு களிக்கின்றான்.

*(கள்ளவிழ் செண்பகப் பூமலர் கோதிக் களித்து இசை பாடும் குயிலே)* நான் இப்படித் துன்புற்றிருக்கும்போது, நீ இன்பத்தின் எல்லையிலே இருக்கின்றாயே! இது தகுமோ? தேன் விழாநிற்கும் செண்பகப்பூவில் கோதான பகுதியை நீக்கி, மலரின் ஸாரமான பகுதியை அநுப$_4$வித்து, அதனால் இன்புற்று, அந்த இன்பத்திற்குப் போக்குவீடாக இசைபாடு

---

j ருஜீஷம் - கோது. h,i கள் - தேன்; அவிழ்தல் - வீழ்தல். 2.

ஹர்ஷம் வழிந்தாற்போலேயிருக்க, இசை பாடுகிற குயிலே! (மெள்ள) அருகேயிருந்து நிரம்பா மென் சொற்களைச்சொல்லி விலாஸசேஷ்டிதங்களைப் பண்ணுதே. (என் வேங்கடவன் வரக் கூவாய்) ஸ்ரீமிதிலையில் புறச்சோலையிலே, பிராட்டியைக் கைப் பிடிக்கைக்காக வந்து விட்டுக்கொண்டிருந்தாற்போலே, எனக் காகத் திருமலையிலேயிருந்தான்; நாலடியும் வரும்படியாக நீ கூவவல்லேயே. "பரமபதத்தைவிட்டுத் திருமலையிலேவந்து நிற் கிற நிலை, தன்னுடைய ஸ்வயம்வரத்துக்காக" என்றிருக்கிறாள் 2.

## ஐந்தாம் திருமொழி—மூன்றும் பாட்டு

மாதலி தேர்முன்பு கோல்கொள்ள மாயன்
இராவணன் மேல்சர மாரி
தாய்தலை அற்றற்று வீழத் தொடுத்த
தலைவன் வரவெங்குங் காணேன்
போதலர் காவில் புதுமணம் நாறப்
பொறிவண்டின் காமரம் கேட்டுஉன்
காதலி யோடுடன் வாழ்குயி லே!என்
கருமாணிக் கம்வரக் கூவாய்.

---

கின்ற குயிலே! நான் பூவைக் கண்டாலே நடுங்கும்போது, நீ பூவைக் கோதிக் களித்துப் பாடுவது தர்மமா? *(மெள்ள இருந்து மிழற்றி மிழற்றுது)* என் அருகில் இருந்துகொண்டு மழலைச் சொற்களைச் சொல்லி, பேடையோடு கூடுவது முதலிய களியாட்டங்களைச்செய்து என்னைப் படுகுலையடிக்காமல். "என்னைக் குற்றம் சொல்லாமல் நான் உனக்குச் செய்ய வேண்டிய உதவியைச் சொல்லுவாயாக" என்று குயிலுக்குக் கருத்தாகக்கொண்டு கூறுகிறாள் — *(என் வேங்கடவன் வரக் கூவாய்)* அயோத்தியிலிருந்து விச்வாமித்ரரோடு வந்து, மிதிலை நகரில் புறச்சோலையிலே ஸீதாபிராட்டியைக் கைப்பிடிப்பதற் காகத் தங்கியிருந்ததுபோலே, என்னைக் கைப்பிடிப்பதற்காகப் பரமபதத்திலிருந்து வந்து திருமலையிலே தங்கியிருக்கிறான்; எனக்காக நெடுந்தூரம் வந்தவன் எஞ்சியிருக்கும் நாலடியும் வரும்படியாக நீ கூவவேண்டும். "பரமபதத்தைவிட்டுத் திருமலையிலே வந்து நிற்கிறநிலை, அவனை ஆசைப்பட்டிருக்கும் தன்னைக் கைப்பிடிப்பதற்காக" என்று நினைத்திருக்கிறாள். 2.



பதவுரை :— போது அலர் காவில் — சிறந்த பூக்கள் அலர்கின்ற சோலையிலே, புது மணம்—புதிதான பரிமள மானது, நாற—வீச, பொறி வண்டின்—அழகிய வண்டி னுடைய, காமரம்—'காமரம்' என்கிற பண்ணை, கேட்டு— கேட்டுக்கொண்டு, உன் காதலியோடு உடன் வாழ் குயிலே— உன்பேடையோடு கூட வாழ்கிற குயிலே! மாதலி — மாதலியானவன், தேர் முன்பு—(இராவணனுடைய) தேரின் முன்னே, கோல் கொள்ள—கோலைக்கொண்டு தன் தேரை நடத்த, மாயன் இராவணன் மேல்—மாயாவியான ராவணன் மேலே, சரம் மாரி—பாணவர்ஷத்தை, தாய் தலை அற்று அற்று வீழ தொடுத்த—(அவ்விராவணனுடைய) ப்ரதானமான தலை(பலகால்)அற்று அற்று விழும்படி பிரயோகித்த, தலைவன்—எம்பெருமானுடைய, வரவு—வரவை, எங்கும்— ஒரு திக்கிலும், காணேன்—காண்கிறேனில்லை; (ஆதலால்), என்—என்னுடைய அநுபவத்துக்கு யோக்யனாய், கரு மாணிக்கம்—நீலரத்நம் போன்ற திருமேனியையுடையனை அவ்வெம்பெருமான், வர—இங்கே வரும்படியாக, கூவாய்— நீ கூவவேணும்.

வ்யா:— மூன்றும் பாட்டு. உ (மாதலிதேர்முன்பு கோல் கொள்ள) இந்த்ரன் என்றுமொக்க முதுகுகாட்டிப்போரு

---

3. *அவ:*— நம்முடைய விரோதிகளைப் போக்கி, பரம போக்யமான திருமேனியை நமக்கு அனுபவிக்கக்கொடுக்கிற வன் வரும்படியாகக் கூவுவாயாக என்கிறாள்.

*வ்யா:— (மாதலி தேர் முன்பு கோல் கொள்ள)* இந்திர னுடைய தேர்ப்பாகனை மாதலி இந்திரனாலே அனுப்பப் பெற்று ராம ராவண யுத்தத்திலே ஸ்ரீராமபிரானைத் தேரில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு இராவணன் முன்பே தேரை

---

அரு:—மூன்றும் பாட்டு. (மாதலி இத்யாதி) உ மாதலி யானவன், ராவணன் முன்பே தேரை நடத்த. மாதலி-

கையாலே ஒருநாளும் முன்னின்றறியானுய்த்து; பெருமாளும் ராவணனுமாகப் பொருதவன்றுய்த்து முன்னின்று ஸாரத்$_2$யம் பண்ணப்பெற்றது. (மாயனிராவணன்) செவ்வைப் பூசல் பொரவறியாமல் என்றுமொக்க வஞ்சநத்தாலே பொருமவனுய்த்து. b 74. "त्वं नीच शशवत्स्मृत:" (த்வம் நீச ஶஶவத் ஸ்ம்ருத: ) என்றுளிறே பிராட்டி. c கோழையாய், ராஜபுத்ரர்களை மதி$_3$த்திருந்தபடியாலே, அவர்களை அகற்றித் தனியிருப்பிலே கொடுபோரக்கடவ நீயே இவ்வார்த்தை சொல்லு

---

நடத்த; இராவணனோடு இந்திரன் போர் புரியும்போது என்றுமே முதுகுகாட்டி ஓடுகையாலே, ஒருநாளும் மாதலி இராவணனுக்கு முன்நின்று தேர்நடத்தி அறியமாட்டான். பெருமாளும் இராவணனுமாகப் போர் புரிந்தபோதே மாதலி இராவணனுக்கு முன்நின்று தன்குதிரைகளை நடத்தும் பேறுபெற்றான். *(மாயனிராவணன்)* த$_4$ர்மயுத்$_3$த$_4$ம் புரிவதையே அறியாமல், என்றுமே மாயப்(வஞ்சகப்)போர் செய்வதையே இயல்வாகக் கொண்ட இராவணன்.

**74.** யதா$_2$ த்$_3$ருப்தஶ்ச மாதங்க$_3$: *ஶஶஶ்ச* ஸஹிதோ வநே।
தத$_2$ா த்$_3$விரத$_3$வத் ராமஸ் த்வம் நீச *ஶஶ*வத் ஸ்ம்ருத: ॥
[ரா-ஸு 32-16]

[க$_3$ர்வங்கொண்ட யானையும், முயலும் காட்டில் கூடி வாழ்வதுபோல், ராமபிரான் யானைபோன்றவர்; நீசனே! *நீ* முயல் போன்றவனாவாய்.] என்று ஸீதாபிராட்டியும் இராவணனைக் கோழையான முயல்போன்றவன் என்றும், "பெருமாளையும் இளையபெருமாளையும் கண்டு பயந்து அவர்களைப் பிரித்து நான் தனியே இருக்கும்போது என்னைத் திருடிக்கொண்டுவந்த நீயா அவர்களை இகழ்ந்து வார்த்தை சொல்லுவது?" என்றும் கூறினாளன்றோ.

---

இந்த்$_3$ரனுடைய தேர்ப்பாகன். b வஞ்சகனேவென்ன அருளிச்செய்கிறார் (த்வம் நீசேத்யாதி$_3$) f க்ஷுத்$_3$ரனாகை யாலே (வஞ்சகன்) என்கிறது. c ராஜபுத்ரர்களை மதி$_3$த் திருந்தபடியாலே சொல்லுகிறாள் என்று அங்வயம்.



கிறுயென்கிறாள். d 75 "यदन्तरं सिंहसृगालयोर्वने" ( யத$_3$ந்தரம் ஸிம்ஹஸ்ருக$_3$ாலயோர்வநே ) (ஸிம்ஹஸ்ருக$_3$ாலயோ:) என்ற வாறே, e தன்னை ஸிம்ஹமாகச் சொன்னாள் என்று பையல் ப்$_4$ரமிக்கவும் கூடுமென்று, ( த்வம் நீச *ஶஶ*வத் ) என்றாளிறே; பிரித்துக்கொண்டுபோந்து தனியிருப்பு இருத்தினவன் முன்னேயிறே இவ்வார்த்தை சொல்லுகிறது, அவனை

---

**75.** யத$_3$ந்தரம் ஸிம்ஹஸ்ருக$_3$ாலயோர் வநே
யத$_3$ந்தரம் ஸ்யந்த$_3$நிகா-ஸமுத்$_3$ரயோ: ।
ஸுராக்$_3$ர-ஸௌவீரகயோர் யத$_3$ந்தரம்
தத$_3$ந்தரம் வை தவ ராக$_4$வஸ்ய ச ॥ [ரா-ஆ 47-45]

[காட்டிலுள்ள சிங்கத்துக்கும், நரிக்கும் எவ்வளவு வாசியுண்டோ, எச்சில் நீருக்கும் ஸமுத்$_3$ரத்துக்கும் எவ்வளவு வாசியுண்டோ, மேலான மது$_4$வுக்கும் இலந்தை ரஸத்துக்கும் எவ்வளவு வாசியுண்டோ அவ்வளவு வாசி உனக்கும் ராக$_4$வனுக்குமுண்டு.] என்று பெருமாளையும் இராவணனையும் கருத்தில்கொண்டு 'உங்கள் இருவர்க்கும் சிங்கத்திற்கும் நரிக்கும் உள்ள வாசி உண்டு' என்றாற்போலே வார்த்தை சொன்னால், தன்னை சிங்கமாகச் சொன்னதாக இராவணன் மயங்கக்கூடும் என்று திருவுள்ளம்பற்றி "நீசனே! நீ முயல்போன்றவன்" என்றாளன்றோ. "யத$_3$ந்தரம்" என்று தொடங்கும் வாக்கியமும்—"ஸிம்ஹ ஸ்ருக$_3$ாலயோ:—தவ ராக$_4$வஸ்ய ச" என்று சொல்லுகிறவள் வீரனான ராமனின் பத்நியாய், இராவணனை மதியாதவளான ஸீதை தன்னை ப$_4$ர்த்தாவினிடமிருந்து பிரித்துக்கொண்டு வந்து தனிச்சிறையில் வைத்த இராவணனைக்குறித்துச் சொல்

---

d அவன் கோழையென்னுமதுக்கு நியாமகவசநம் (யத$_3$ந்தரமித்யாதி$_3$) e (ஸிம்ஹஸ்ருக$_3$ாலயோ:) என்கிற வசநத்தில், ஸிம்ஹஸ்ருக$_3$ாலதாரதம்யம்போலே பெருமாளுக்கும் உனக்குமென்றால் வாசிதோற்றுமையாலே, ராவணாபி$_4$ப்ராயத்தாலே *ஶ*ங்கித்து, தத்பரிஹாரத்வேந த்$_3$விரத$_3$*ஶஶ* ஸாம்யம் சொல்லி, விஶேஷோபபாத$_3$நம்பண்ணி "த்வம் நீச *ஶஶ*வத்" என்றத்தை வ்யவஹிதமானாலும் எடுக்

மதி3யாத வீரபத்நியாகையாலே. (மாயனிராவணன்மேல்) f வஞ்சகனான ராவணன்மேலே. (சர g மாரி) 16. "शरवर्षं ववर्ष ह" (ஶரவர்ஷம் வவர்ஷ ஹ) என்கிறபடியே பாட்டம் பாட்டமாக. (h தாய்தலையற்றற்று வீழத்தொடுத்த) ப்ரதா4நமான தலையற்றுவீழ, திருச்சரங்கள் பண்ணின பா4க்3யத்தாலே அறுக்கவறுக்க முளைத்ததாய்த்து. பின்னை அதுதானே போதுபோக்காக நின்று கொன்றானாய்த்து. அப்படி முளைத்ததில்லையாகில், திருச்சரங்களின் வரவு இவனால் அடக்கப் போகாதே. (தலைவன்) தீ4ரோதா3த்தநாயகன். (வரவெங்குங் காணேன்) "ப்ரதிப3ந்த4கமென்றொன்று கிடப்பதில்லை" என்று வரும் வழியை i கண்மறையப் பார்த்து நின்றாள் போலே

லும் வார்த்தையாகையாலே. பு3த்3தி4ஸ்த2க்ரமமாய் "இராகவன் சிங்கம் போன்றவன். நீ நரி போன்றவன்" என்றே பொருள் தருமன்றோ. *(மாயனிராவணன் மேல்)* வஞ்சகனான ராவணன்மேலே. "மாயன்" என்னும் ஶப்3த3ம் ஆச்சரியமான வஞ்சனைகளைப் புரியும் வஞ்சகன் என்று பொருள்படுகிறது. *(சரமாரி)* (39-ம் பக்கம் 16-வது ப்ரமாணத்தில் காட்டியபடி) மழைபோலே பாட்டம் பாட்டமாக அம்புகளைப் பொழிந்தாரன்றோ பெருமாள். *(தாய் தலையற்றற்று வீழத்தொடுத்த)* 'ஸர்வஸ்ய கா3த்ரஸ்ய ஶிர:ப்ரதா4நம்'' என்கிறபடியே உடம்பில் ப்ரதா4நமாயிருக்கும் தலை பலகால் அறுந்துவிழ; பெருமாளுடைய அம்புகள் பண்ணின பா4க்3யத்தாலே அறுக்க அறுக்கத் தலை முளைத்துக்கொண்டேயிருந்தது. இதுவே போதுபோக்காகக் கொண்டு நெடுநேரம் வீரவிளையாட்டு விளையாடி, அதன் பிறகன்றோ ஸ்ரீராமபிரான் இராவணனைக் கொன்றான். இராவணனுடைய தலைகள் வரப3லத்தாலே இப்படி முளைத்துக்கொண்டேயிருக்கவில்லையென்றால் மேல்மேலெனக் கிளர்ந்துவந்த பா3ணங்களை ஸ்ரீராமபிரானால் திருப்தி செய்விக்கமுடியாமல் போயிருக்கும். *(தலைவன்)* காவியநாயகர்களிலே தலைமைபெற்ற தீ4ரோதா3த்தநாயகன். *(வரவெங்கும் காணேன்)* எல்லாத் திசைகளை

கிறாளென்று தாத்பர்யம். d2 ஸ்ருகா3லம்-நரி. g மாரி-மழை. h தாய் தலை—மெய்யான தலை. i கண்மறைய-கண் பூச்சி



காணும்! (j போதலரித்யாதி3) பரப்புமாறப் பூத்த k சோலையிலே, அப்போதலர்ந்த செவ்வியழியாத அரிமிதியான பரிமளமானது கமழ, ரஸாயந ஸேவை பண்ணினாற்போலே l து3ர்ஶநீயமான வண்டானது m "காமரம்" என்கிற பண்ணைப் பாட, அதுக்குச் செவிதாழ்த்து. (உன் n காதலியோடுடன் வாழ் குயிலே) மேல்விளைவதறிந்து விடாதே வர்த்திக்கிறாயன்றோ நீ. தன்னைப்பிரிந்து நான் கிடக்கும்படி பண்ணிப் போனவனைப் போலன்றிக்கே, உன் பேடையுடனே சேர வர்த்திக்கிற குயிலே! (என் கருமாணிக்கம் வரக்கூவாய்) தன் வடிவைக் காட்டி என்னை அநந்யார்ஹமாக்கினவன் வரக் கூவாயென்கிறாள். (என் கருமாணிக்கம் வரக்கூவாய்) நல்ல அங்கக்காரனாயிருந்தான்; அவன் வரும்படி கூவு. 3.

யும் மாறி மாறிப் பார்த்து, "இவன் வருவதற்கு எங்கும் தடையொன்றுமில்லையே" என்று வரும் வழியைக் கண்பூத்துப் போகும்வரையில் பார்த்து நின்றாள்போல் இருக்கிறது. *(போதலர் காவில் புது மணம் நாறப் பொறிவண்டின் காமரம் கேட்டு)* எங்கும் பூத்திருக்கும் சோலையிலே அப்போதே பரவுகின்றதாய், பெருமை குறையாததாய், வண்டுகளை ஈர்ப்பதான மணம் கமழ, மது4பானம் பண்ணினவர்களைப்போலே அழகிய வண்டு "காமரம்" என்கிற பண்ணைப்பாட அதைக்கேட்டு. *(உன் காதலியோடுடன் வாழ் குயிலே)* காதலியைப் பிரிந்தால் அப்பெண்குயில் என்ன பாடுபடும் என்பதை அறிந்து, காதலியைப் பிரியாமல் கூடி வாழ்கிறாயன்றோ நீ. நாயகனைப் பிரிந்து இந்நிலையிலே நான் துன்புறும்படி செய்துபோந்த எனது நாயகனைப் போலல்லாமல், உன் பேடையுடன் கூடி வாழ்கின்ற குயிலே! *(என் கருமாணிக்கம் வரக் கூவாய்)* தன் நீலமணி போன்ற திருமேனியைக் காட்டி என்னைத் தனக்கேயாக்கின

பூக்க. j போது—புஷ்பம். k கா - சோலை. l பொறி - வரி; அழகும். m காமரம் - ஶிக2ரமானபண். n காதலி - மனைவி. (அங்கக்காரன்) - சாடு; நல்ல வடிவையுடையவன் என்று அர்த்த2ம்; வாதுக்கு வெட்டுகிறவன் - த்4வநி; ஸமர்த்த2ன் என்றபடி. 3.

## ஐந்தாம் திருமொழி—நான்காம் பாட்டு.

என்புரு கிஇன வேல்நெடுங் கண்கள்
இமைபொருந் தாபல நாளும்
துன்பக் கடல்புக்கு வைகுந்த னென்பதுஓர்
தோணி பெறாதுஉழல் கின்றேன்
அன்புடை யாரைப் பிரிவுறு நோயது
நீயு மறிதி குயிலே!
பொன்புரை மேனிக் கருளக் கொடியுடைப்
புண்ணிய னைவரக் கூவாய்.

பதவுரை:— குயிலே!—ஓ குயிலே!, என்பு உருகி—எலும்புகள் உருகிப்போனதுமல்லாமல், இனம் வேல் நெடு கண்கள் இமை பொருந்தா—வேல் இனம் போன்று நீண்டு பரந்த கண்களும் (தூக்கமற்று) மூடிக்கிடக்கின்றனவில்லை; பல நாளும்—நெடுங்காலமாக, துன்பம் கடல் புக்கு—பிரிவுத்துன்பமாகிற கடலிலே அழுந்தி, வைகுந்தன் என்பது ஓர் தோணிபெறாது—ஸ்ரீவைகுண்ட2நாத2ன் என்கிற ஒரு தோணியை அடையப் பெறாமல், உழல்கின்றேன்—அக்கடலுக்குள்ளேயே தட்டித் தடுமாறிக்கொண்டிராநின்றேன்; அன்பு உடையாரை பிரிவுறும் நோய் அது — அன்பர்களைப் பிரிவதனாலுண்டாகும் துக்கத்தை, நீயும் அறிதி—நீயும் அறிவாயன்றோ? பொன் புரை மேனி—பொன்போன்ற திருமேனியை உடையவனாய், கருளக் கொடி உடை—கருடனைக் கொடியாகவுடையவனான, புண்ணியனை—"த4ர்மமே வடிவெடுத்தவன்" என்னப்படுகிற கண்ணபிரானை, வர கூவாய்—இங்கே வரும்படி கூவு.

---

வன் வரும்படி கூவுவாயாக என்கிறாள். (*என் கருமாணிக்கம் வரக்கூவாய்*) எனது நாயகன் நல்ல அங்கக்காரனாய் (1. அழகிய அங்க3ங்களையுடையவனாய், 2. சூரனாய்) இருந்தான். அவன் வரும்படி கூவு. 3.

4. *அவ:*— அடியார்களை ரக்ஷிப்பதற்குக் கொடிகட்டிக் கொண்டிருக்கிறவனாய், மோக்ஷோபாயமாயிருக்கும் வைகுந்தன் வரும்படி கூவுவாயாக என்கிறாள்.



வ்யா: — நாலாம் பாட்டு. (என்புருகி) தோல்புரையே போகையன்றிக்கே, எலும்பானது உருகி. (a இனவேல் நெடுங்கண்கள் இத்யாதி3) b 35. "अनिद्रस्सततं रामः" (அநித்3ரஸ் ஸததம் ராம:) என்று-அவன் படக்கடவ பாட்டைக் கிடீர் நான் படுகிறது. இக்கண்ணுக்கு இலக்கானார் படுமத்தைத் தான் படாநின்றாளாய்த்து. 35. "रामः अनिद्रः" (ராம: அநித்3ர:) செல்வப்பிள்ளைகளாயிருப்பார், பாதிப்போது நித்3ரையோடேயாய்த்துப் போதுபோக்குவது; இப்படியிருக்க, நித்3ரை இல்லையாய்த்து. சிறிது போது உறங்கிச் சிறிதுபோது உணர்ந்து

---

*வ்யா:—(என்புருகி)* எனக்கு வந்திருக்கும் இக்காதல்நோய் தோலை மட்டும் துன்புறுத்தும் சிறிய நோய்போன்றதன்று: எலும்பையே உருக்கும் எலும்புருக்கி நோய் போன்றது: அதனாலே எலும்பானது உருகி. (*இனவேல் நெடுங்கண்கள் இமை பொருந்தா*) சிறந்த வேல் போன்று நீண்ட கண்களும் இமை பொருந்தாமல் தூக்கமற்றுக் கிடக்கின்றன. (115-ம் பக்கத்தில் 35-வது ப்ரமாணத்தில் உள்ளபடி) அவன் தூக்கமில்லாமல் படவேண்டிய பாட்டையன்றோ நான் படுகிறேன். இக்கண்ணுக்கு இலக்கான அவன் படவேண்டிய பாட்டை இக்கண்களும் கண்ணுடையாளும் படுவதே! "அநித்3ரஸ்ஸததம்" என்று தொடங்கும் (ஷை 35-வது ப்ரமாணத்தில்) "ராமன் தூக்கமற்றவன் ஆனான்" என்றார் வால்மீகி இதன் கருத்தாவது—செல்வப்பிள்ளைகளாய் இருப்பவர்கள் இராப்போதோடு நில்லாமல் பகல்போதிலும் பாதிப்போதைத் தூங்கிக்கழிப்பார்கள். சக்ரவர்த்தித் திருமகனுகையாலே செல்வப்பிள்ளையாய் இப்படியிருக்க வேண்டிய ராமனுக்குத் தூக்கமேயில்லையாயிற்று. "எப்போதும் தூக்கமற்றவன்" என்று கூறியவுடன், "தூங்கினாலும்" என்றும் கூறினார் வால்மீகி. சிறிதுபோது தூங்கி, சிறிதுபோது விழித்திருந்தாலன்றோ இது பொருந்தும். "ராமனுக்கு எப்

---

அரு:— நாலாம் பாட்டு. (என்புருகி இத்யாதி3) a இனவேல் — வேலொழுங்கு; இமைபொருந்தா-உறங்கா. தோணி - மரக்கலம். b பகல் நித்3ரையில்லாமையாலே (அநித்3ர:) என்கிறது. (ஸததம்) என்கையாலே - ராத்ரியு

தானிருப்பாரோ? என்னில் ; 35. "सततं अनिद्रः सुप्तोऽपि च" (ஸததம் அநித்3ரஸ் ஸுப்தோऽபி ச) ஆனல் இதென் சொல்லிற்றுகிறது? என்னில்; உணர்ந்திருக்கச்செய்தே உணர்த்தியற்றிருக்கும்படியைச் சொல்லிற்றுகிறது. பராகு3ர்த்த2ாநுஸந்த4ாநாப4ாவம் இருந்தபடி. 35. "नरोत्तमः" (நரோத்தம:) அபி4மத விஷயத்தைப் பிரிந்தால் இப்படி அநித்3ரையாலே நோவுபடுகை போலே காணும் புருஷோத்தமத்வமாவது. 76. "न च तेन विना निद्रां लभते पुरुषोत्तमः" (ந ச தேந விநா நித்3ராம் லப4தே புருஷோத்தம:) 35. "सीतेति" ( ஸீதேதி ) இத்யாதி3.

---

போதும் தூக்கமில்லை'' என்று சொன்ன பின்பு இது எப்படிப் பொருந்தும்? எனில்: ராமன் விழித்துக்கொண்டிருக்கும்போதே வெளி உணர்வில்லாமல் மயங்கி நிற்கும் நிலையிலிருந்ததை இங்கு " தூங்கினலும் " என்கிருராகையாலே பொருந்தும். வெளிப்பொருள்களை அநுஸந்தி4க்க இயலாமல் இருந்தான் இராமன் என்று கருத்து. அப்படியிருந்த ராமனை "நரோத்தமன்" என்கிருர் வால்மீகி. காதலியைப் பிரிந்தால் இப்படித் தூக்கமில்லாமல் துன்புறுவதே புருஷோத்தமலக்ஷணம் என்று கருத்து.

76. ந ச தேந விநா நித்3ராம் லப4தே புருஷோத்தம: ।
ம்ருஷ்டமந்நமுபாநீதமஶ்நாதி நஹி தம் விநா ॥

[ரா-பா3 19-29]

[புருஷோத்தமனுன ராமனும் லக்ஷ்மணனில்லாவிடில் தூங்கமாட்டான்; தனக்காகக்கொண்டுவரப்பட்ட நல்லுணவை அவனில்லாமல் உண்ணமாட்டான்.] என்று "அன்புத் தம்பியான இளைய பெருமாளைப் பிரிந்தாலும் பெருமாளுக்குத் தூக்கம் வராது, புருஷோத்தமராகையாலே" என்றும் கூறினுரன்ருே வால்மீகி. முன் எடுத்த 35-வது ப்ரமாணத்தில் "ஸீதே! என்னும் இனிய வார்த்தையைச் சொல்லிக்கொண்டே ராமன் விழித்தெழுகிருன்" என்கிருர் வால்மீகி. ஸீதையின் வேல்போன்ற கண்களுக்கு இலக்கானபடியாலே ராமனுக்கு இந்நிலை ஏற்பட்டதாகையாலே விழித்தவுடன் அவள் பெயரே வாயில் வருகிறது என்று கருத்து.

---

மில்லையாய், நித்யாக்3நிஹோத்ர வ்யாவ்ருத்தி.



அநேகம் வேல்களை ஒருமுகமாகச் சேர்த்து வைத்தாற்போலே ஓராளும் ஒரு நோக்கும் நேராய், அவ்வளவல்லாத பரப்பையுடைத்தான கண்கள் இமையோடு இமை பொருந்துகிறனவில்லை. (பலநாளும் துன்பக்கடல்புக்கு) பிரிவாற்றுமையிலுண்டான து3:க்க2ஸாக3ரத்திலே ஆழ்ந்து. (வைகுந்தனென்பதோர் தோணிபெருதுழல்கின்றேன்) உகந்தருளின நிலங்களிலே புக்கு அநுப4விக்கக்கோலி, அங்கு அணைத்தல், வார்த்தை சொல்லுதல் செய்யக்காணுமையாலே, அப்படிப் பரிமாறின அவதாரங்களிலேபோய், அவை தீர்த்த2ம் ப்ரஸாதி3த்துப்

---

இப்படி ராமன் படும்பாட்டை நான் படுகிறேன் என்கிருள் ஆண்டாள்—(இனவேல் நெடுங்கண்கள் இமைபொருந்தா) பல வேல்களை ஒருமுகமாகச் சேர்த்துவைத்தாற்போல் இருப்பவை. வேல் பாய்ந்தால்அடிபட்டுவிழுவதுபோலே இக்கண்களின் நோக்குக்கு இலக்கானவன் இவற்றுக்குத் தோற்று விழவேண்டும். வேல்கள் நீளத்திற்கு உபமானமாகுமேயொழிய இக்கண்களின் பரப்புக்கு அவை உபமானமாகமாட்டா. 'இத்தகைய கண்களுக்கு இலக்கான அவன் கண்ணுறங்காமல் இருக்கவேண்டியிருக்க, என் கண்ணிமைகள் பொருந்தாமல் இருப்பதே!' என்கிருள். ( பலநாளும் துன்பக்கடல்புக்கு ) பிரிவாற்றுமையால் உண்டான துன்பக்கடலிலே பல நாட்களாக மூழ்கிக்கிடக்கிறேன். " இக்கடலிலிருந்து கரையேற ஏதேனும் தோணி கிடைக்கவில்லையோ? " எனில் — (வைகுந்தன் என்பதோர் தோணி பெருதுழல்கின்றேன்) ஏதேனும் தோணி கிடைக்குமோ? என்று எங்கும் தேடினேன். உகந்தருளின நிலங்களான அர்ச்சாவதார ஸ்த2லங்களிலே புகுந்து எம்பெருமானை அநுப4வித்துக் கரையேறலாம் என்று பார்த்தால், அவ்வெம்பெருமான் அணைத்தல் வார்த்தை சொல்லுதல் முதலானவற்றைச் செய்யாமையாலே, என்னுல் துன்பக் கடலிலிருந்து கரையேற முடியவில்லை. அதனுல் அணைத்தல் வார்த்தை சொல்லுதல் முதலானவற்றைச் செய்த விப4வாவதாரங்களைத் தோணியாகக் கொண்டு கரையேறலாமோ என்று பார்த்தால் அவை நீண்டநாட்களுக்கு முன்பே முடிந்துவிட்டனவாகை

போகையாலே பரத்வத்தளவிலே சென்று, அவ்விருப்புத் தானும் c பெருங்கடலுக்கு ஒரு மரத்தோணிபோலேயாம்படியாக அபிநிவேஶமானது கரைபுரண்டு, அதினுடைய அலாபத்தாலே படுகிற அலமாப்பிருக்கிறபடி. (அன்புடையாரித்யாதி) பிரிவாற்றுமையால் படுகிற வ்யஸநம் நீ அறியாமையில்லையிறே. சேரவிருக்கச்செய்தே "நீயுமறிதி" என்னும்படி எங்ஙனேயென்னில்; ஸம்ஶ்லேஷமாகில் விஶ்லேஷாந்தமா

---

யாலே அவை கொண்டும் கரையேற முடியவில்லை. அதனுல் இந்த எல்லாத் திருமேனிகளுக்கும் மூலமூர்த்தியான பரத்வத்தைத் தோணியாகக் கொண்டு கரையேறலாம் என்று பார்த்தால் அந்த வைகுந்தன் என்னும் தோணியும் பெருங்கடலுக்கு ஒரு மரத்தோணிபோலே ஆகும்படி என்னுடைய காதல் கரைபுரண்டு பெருகுகையாலே, அந்தத்தோணியும் எட்டாததாகவும் பயனற்றதாகவும் ஆகித் துன்புறுகின்றேன் என்கிருள். (*அன்புடையாரைப் பிரிவுறுநோயது நீயும்அறிதி*) பிரிவாற்ருமையால் படுகிற துன்பத்தை நீயும் அறிவாயன்ருே. "காதலியோடுடன் வாழ் குயிலே!" என்று சென்ற பாசுரத்தில் கூறியபடி பேடையோடு சேர்ந்திருக்கும்போது "பிரிவுறுநோயது நீயும்அறிதி" என்ற கூறுவது எப்படிப் பொருந்தும்? எனில் '*ஸம்யோகா விப்ரயோகாந்தா:*" [ரா-அ 105-16] [காதலர் கூடுவது பிரிவில் முடியும்] என்று அறிந்திருக்கிறவளாகையாலே குயிலும் அதை அறிந்திருக்கும் என்று எண்ணிச் சொல்லுகிருள். தனக்கு நாயகன் துன்பக்கடலை விளைத்ததை அநுபவித்து அறிந்தவளன்ருே இவள்.

---

c (பெருங்கடலுக்கு ஒரு மரத்தோணிபோலே) என்றது-மரத்தோணியானது கடலிலே அகப்பட்டவனுக்குக் கைக்கெட்டிற்போலேயிருக்க நழுவிப்போமாபோலே, அபிநிவேஶமாகிற கடலிலே அகப்பட்ட இவளுக்கு மாநஸாநுபவத்தாலே கிட்டிற்போலவும், பாஹ்யாநுபவமில்லாமையாலே கிட்டாதாப்போலவுமிருக்கையாலே வைகுந்தனை "தோணி" என்கிறது.



யல்லதிராதென்றிருக்குமவளாகையாலே சொல்லுகிருள். d தனக்குத் துன்பக்கடலை விளைத்தானிறே அவன். e (பொன்புரை மேனி) f தன்னேடு கலந்தபோது பொன்போலே திகழ்கிற வடிவும்தானுமாக நின்ற நிலை; g பிரிந்தபோதும் வடிவு அப்படியிருக்குமென்று இருக்கிருள்; h பிரிந்தபோது அவனிருக்கும்படிதான் அறியாளே; i "பிரிவாற்ருமையாலே நொந்து

---

நான் செய்யவேண்டியது என்ன? என்று குயிலுக்குக் கருத்தாகக் கொண்டு கூறுகிருள்—(*பொன்புரைமேனி*) தன்னேடு கூடினபோது பொன்போலே விளங்குகிற வடிவோடு கூடியிருந்ததை அடையாளமாகக் காட்டுகிருள். இப்போது பிரிந்திருக்கும்போதும் வடிவு அப்படியே இருக்குமென்று நினைக்கிருள். [114-வது பக்கத்தில் உள்ள 33-வது ப்ரமாணத்தின்படி] தன்னைப்பிரிந்தபோது அவன் படும்பாட்டைப் பார்த்து அறியாதவளன்ருே. "பிரிவாற்ருமையாலே என்னைப்போலே

---

d (தனக்கு) இத்யாதிவாக்யம் தாத்பர்யமாதல். "வேங்கடவன்" "தொடுத்த தலைவன்" என்கையாலே— அர்ச்சாவதாரம் என்கிறது. அன்புடையாரைப் பிரிவுறுகை-நோயென்றபடி. e, f விஶ்லேஷ ஸமயத்தில் விவர்ணமாயன்ருே இருப்பது; "பொன்புரைமேனி" என்னக் கூடுமோ? என்ன அருளிச்செய்கிருர் (தன்னேடு இத்யாதி). e புரை-ஒப்பு. g ஆகையாலே (பிரிந்தபோதும் இத்யாதி) h ஆனுல் விஶ்லேஷதஶையில், 38. "नैव दंशान्" (நைவ தம்ஶாந்) என்றன்ருேவிருப்பது என்ன அருளிச்செய்கிருர் (பிரிந்தபோது அவனித்யாதி)i விஶ்லேஷதஶையில் "பொன்புரைமேனி" என்னலாமோ? என்ற ஶங்கைக்கு ஸம்ஶ்லேஷதஶையில் கண்டதுகொண்டு விஶ்லேஷதஶையிலும் அப்படி இருக்குமென்ருர்-கீழ்; ஸம்ஶ்லேஷதஶையிலிருக்கும்படியைக் கண்டபடியாலே சொல்லுகிருளென்னவேணுமோ? விஶ்லேஷஸமயத்திலும் * பொன்புரைமேனியாயிருக்கும் என்ற வெறுப்பாலே சொல்லுகிருளென்கிருர் (பிரிவாற்ருமையால் இத்யாதி)

விவர்ணனுயிருந்தானுகில் குயிலின் காலிலே விழப்பார்த்திருக்குமோ? வாரானே'' என்றிருக்கிருள். (j கருளக்கொடியுடை) ஆர்த்தரக்ஷணத்துக்கு த்₄வஜங்கட்டியிருக்கிறவன். (புண்ணியன்) 77. ''आनृशंस्यं परो धर्मः'' (ஆந்ருஶம்ஸ்யம் பரோ த₄ர்ம:) ''நீரும் நானுமாய், ஓடமேற்றிக் k கூலிகொள்ளுமளவாயிருக்கச்செய்தே த₄ர்மங்களில் நீர் விரும்பியிருப்பதென்?'' என்று கேட்டேன்; ''பிறர்நோவுபடப் பொறுக்கமாட்டேன். பிறர் நோவுபடப்பொறுக்கமாட்டாத இதுவேகாண், நாம் வெளிறு கழிந்த த₄ர்மமாக நினைத்திருப்பது'' என்று அருளிச்செய்தீர்; 77. ''त्वत्त एव मया श्रुतः'' (த்வத்த ஏவ

துன்புற்று மேனியின் நிறமழிந்து இருந்தானுகில் நான் குயிலின் காலில் விழும்வரையில் தாமதித்திருப்பானே. நேரில் வந்திருக்கமாட்டானே'' என்று நினைத்துப் ''பொன்புரைமேனி'' என்று வெறுப்பாலே அருளிச்செய்கிருள் என்றும் கொள்ளலாம். *( கருளக் கொடியுடை )* க₃ருட₃னுகிய கொடியை உடையவன். துன்புற்றவர்களை ரக்ஷிப்பதற்காகக் கொடிகட்டிக் கொண்டிருப்பவனுகையாலே கூவினுல் அவசியம் வருவான் என்று கருத்து. *(புண்ணியன்)*

77. ஆந்ருஶம்ஸ்யம் பரோ த₄ர்மஸ் த்வத்த ஏவ மயா ஶ்ருத:
[ரா·ஸு 38·41]

[இரக்கம் என்பதே மேலான த₄ர்மம் என்று உம்மிடமிருந்தே நான் அறிந்தேன்.] என்கிறபடியே இரக்கத்தையே முக்கியமான த₄ர்மமாகக் கொண்டவனன்றே அவன். இந்த ப்ரமாணத்தில் ''இரக்கமே மேலான த₄ர்மம் என்று உம்மிடமே கேட்டேன்'' என்று பிராட்டி கூறுகிருள். இவ்வாக்யத்தில்— ''ஓடக்காரன் ஓடத்தில் ஏறினவனை நட்டாற்றில் கூலி கேட்கும்போது அவனுல் கொடுக்காமல் இருக்கமுடியாதது போலே, நீரும் நானும் கூடி ஸம்ஶ்லேஷ ரஸத்தை அநுப₄வித்துக் கொண்டிருந்தபோது 'த₄ர்மங்களில் தலையானதாக நீர் விரும்பியிருப்பது என்ன?' என்று கேட்டேன். 'பிறர் துன்

இந்த வாக்யம் ஶங்கையின்மேலே அர்த்தா₂ந்தரம். jகருளன்-க₃ருட₃ன். k கூலிகொள்ளுகை-அநுப₄வம் விஞ்சினத₃ஶை.



மயா ஶ்ருத:) ''இதுதான் உம்முடைய ஆளான திருவடி வாயிலேயிட்டு நீட்டுகையன்றிக்கே உம்முடைய வாயாலே அருளிச்செய்ய, நான் செவியாலே கேட்டேன். l இதுதான் பிறர்மேலே ஏறிட்டு, நீர் நம்மைப்பிரிந்து நோவுபடவிட்டீர், ஓங்காண்'' என்று சொன்னுரானுர் அவர், பிரிந்து நோவுபடவிட்டிருந்தானென்னுமத்தைப்பற்ற; m அத்தைச் சொல்லுகிருளாய்த்து இவள்.(புண்ணியனை வரக்கூவாய்)''பிறர் நோவுபடப்

புறுவதைக் கண்டு பொறுக்கமாட்டேன் நான். த₃யை என்றும், இரக்கம் என்றும், கருணை என்றும் சொல்லப்படும் இந்த கு₃ணத்தையே நான் பரம ஸாரமான த₄ர்மமாக நினைத்திருக்கிறேன்' என்று அருளிச்செய்தீர். இந்த வார்த்தை—உம்முடைய ஆளான திருவடியின் வாய் மூலமாக இப்போது நீர் அனுப்பும் ஓலைப்புற வார்த்தை போலன்று; உம்முடைய வாயாலே நீரே அருளிச்செய்ய என் செவியாலே நானே கேட்ட வார்த்தை இது. 'இந்த வார்த்தையைப் பிறர் அநுஷ்டி₂க்க வேண்டும் என்னும் கருத்தாலேயே நீர் சொல்லியிருக்கிறீரே யொழிய உமது அநுஷ்டா₂னத்திற்காகச் சொல்லவில்லை' என்பதை இப்போது என்னைப் பிரிந்து துன்புறச் செய்ததிலிருந்து புரிந்துகொண்டேன்'' என்று, பெருமாள் தன்னைப் பிரிந்து துன்புறவிட்டிருந்தார் என்னும் ஆதங்கத்தாலே ஸீதாபிராட்டி அனுமனிடம் பெருமாளைப்பற்றி வார்த்தை சொன்னுளன்றே. '' புண்ணியன் '' என்பதன் மூலம் அந்த வார்த்தையின் கருத்தை ஆண்டாள் இங்கு உணர்த்துகிருள். *(குயிலே! புண்ணியனை வரக்கூவாய்)* ''பிறர் துன்புறுவது கண்டு பொறுக்கமாட்டாதவனே அவன், கருணையில்லாதவன் அல்லன். ஆகையால், அவனது நெஞ்சை நீ உபதே₃ஶத்தால் திருத்த வேண்டியதில்லை. நீ அவனிருக்குமிடம் சென்று உன் இனிய

l அப்போது பெருமாள் சொன்னதுக்கும் இப்போது பிராட்டி சொன்னதுக்கும் கருத்தென்? என்ன அருளிச்செய்கிருர் ( இதுதான் பிறரித்யாதி₃ ) (பிறர்மேலே ஏறிடுகை)-பிறர் து₃:க்க₂ப்படவிட்டிரோம் என்கிற வ்யாஜத்தாலே உன்னை விட்டிரோமென்றபடி. இதுதானென்றது ஆந்ருஶம்ஸ்யத்தை. m(அத்தைச் சொல்லுகிருள்)என்றது—

பொறுக்கமாட்டாதவன் நெஞ்சு திருத்தவேண்டா; நீ சென்று m கிணுக்கவமையுங்காண் அவன் வருகைக்கு'' என்கிறாள். 4.

## ஐந்தாம் திருமொழி—ஐந்தாம் பாட்டு

மென்னடை யன்னம் பரந்து விளையாடும்
  வில்லிபுத் தூருறை வான்றன்
பொன்னடி காண்பதோ ராசையி னாலென்
  பொருகயற் கண்ணிணை துஞ்சா
இன்னடி சிலொடு பாலமு தூட்டி
  யெடுத்த வென்கோலக் கிளியை
உன்னொடு தோழமை கொள்ளுவன் குயிலே!
  உலகளந் தான்வரக் கூவாய்.

**பதவுரை:—மெல் நடை அன்னம்**—மந்தகதியையுடைய அன்னப் பறவைகள், **பரந்து**—எங்கும் பரவி, **விளையாடும்**—விளையாடுவதற்கு இருப்பிடமான, **வில்லிபுத்தூர்**—ஸ்ரீவில்லிபுத்தூரிலே, **உறைவான் தன்**—எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய, **பொன் அடி**—அழகிய திருவடிகளை, **காண்பது ஓர் ஆசையினால்**—காணவேணுமென்றுண்டான ஆசையினாலே, **பொரு கயல் என் கண்இணை**—சண்டையிடும் இரண்டு கெண்டைகள் போன்ற எனது கண்கள், **துஞ்சா** — உறங்குகின்றனவில்லை; **குயிலே!**—ஓ குயிலே! **உலகு அளந்தான்**—(த்ரிவிக்ரமனாய்) உலகங்களை அளந்த பெருமான், **வர** — இங்கே வரும்படி, **கூவாய்**—கூவு; [அப்படிக் கூவுவாயாகில்] **இன் அடிசிலொடு பால் அமுது ஊட்டி எடுத்த என் கோலக்கிளியை**—இனிய சோற்றையும் பாலமுதையும் ஊட்டி வளர்க்கப் பெற்ற எனது அழகிய கிளியை, **உன்னொடு**—உன்னோடே, **தோழமை கொள்ளுவன்**—ஸ்நேஹப்படுத்தி வைப்பேன்.

---

குரலாலே எனது நிலையைக் கிணுகிணுத்தாயாகில் (சிறிது உணர்த்தினாயாகில்) அவன் உடனே வந்து விடுவான்'' என்கிறாள். 4.

---

அந்த ஆந்ருஶம்ஸ்யத்தைச் சொல்லுகிறாள் என்றபடி. m (கிணுக்க) - ஶப்திக்க. அதாவது-அல்பம் ஸூசிப்பிக்க என்றபடி. 4.



வ்யா:— அஞ்சாம் பாட்டு. (மென்னடையன்னம் பரந்து விளையாடும்) ஊராகத் a தன்னினமே பெருத்திருக்குமாய்த்து. b பரமபதத்திலே நித்யஸூரிகள் ஓலக்கங்கொடுக்கவிருக்கிறவன், அத்தை விட்டு என்னோடு ஸஜாதீய பதார்த்தங்கள் கண்டு போதுபோக்குகைக்காகவன்றோ இங்கு b1 வந்து நிற்கிறது. ‘‘ ‘வைகுந்தனென்பதோர் தோணி பெறாதுழல்கின்றேன்’ என்கை ப்ராப்தம் அது தூரஸ்தமாகையாலே; தனக்காக வந்துநிற்கிற இடத்திலே காணப்பெறாதே நோவுபட்டுக் கண்ணுறங்காதேயிருந்தாள் என்றால் இது சேரும்படி

---

*அவ:—* வடபத்ரஶாயியை நான் காணவரும்படி கூவுவாயாக என்கிறாள்.

*வ்யா:— (மென்னடையன்னம் பரந்து விளையாடும்)* ஊர் முழுவதும் அன்னக்கூட்டமே பெருத்திருக்குமாயிற்று. அன்ன மென் நடையாளான ஆண்டாள் அவதரித்த பின்பு *(வில்லிபுத்தூர் உறைவான்)* பரமபதத்தில் நித்யஸூரிகளைக் கண்டு களித்திருப்பவன், அதைவிட்டு என்னைப்போன்ற நடையழகையுடைய அன்னங்களைக் கண்டு போது போக்குவதற்காக அவ்வன்னங்கள் எங்கும் பரவி விளையாடும் இவ்வூரில் வடபெருங்கோயிலுடையானாக வந்து வாழ்கின்றான். *(வில்லிபுத்தூருறைவான் தன் பொன்னடி காண்பதோராசையினால்....)* வடபத்ரஶாயியுடைய அழகிய திருவடிகளைக் காணவேணும் என்னும் ஒப்பற்ற ஆசையினால். ‘‘ ‘வைகுந்தனென்பதோர் தோணி பெறாதுழல்கின்றேன்’ என்று சொல்லுவது பொருந்தும், பரமபதம் கைக்கெட்டாத தூரத்தில் இருக்கையாலே; இவளுக்குக் காட்சி கொடுப்பதற்காகப் பள்ளி கொண்டிருக்கும் வடபெருங்கோயிலுடையானைக் காண முடியாமல் துன்புற்றுக் கண்ணுறங்காமல் இருந்தேன் என்பது எப்படிப் பொருந்தும்?''

---

அரு:— அஞ்சாம் பாட்டு. (மென்னடையித்யாதி) a அன்னநடையாகையாலே அன்னங்களை (தன்னினம்) என்கிறது. b தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (பரமபதத்திலித்யாதி) b1 (வந்து நிற்கிறது)—அது இப்போது காண்கிறிலோம் என்று வெறுப்பு உள்ளேகொண்டு.

எங்ஙனே?'' என்று நான் ஜீயரைக் கேட்டேன்; ''உள்ளுப் புக்கால் குறியழியாமே நம்மைப்போலே போரவல்லவளல்லள். ஸ்ரீப$_4$ரதாழ்வானைப்போலே மோஹிப்பாளொருத்தியாய்த்து. உள்ளே கொடுபுகில், அந்த ஶீலகு$_3$ணத்தைக் கண்டவாறே இவள் மோஹித்துக்கிடக்கும். பின்னை 'இவளையிழக்கவொண்ணாது' என்று கொண்டு புக்கார்களில்லைபோலே காணும் என்று அருளிச்செய்தார்'' என்று அருளிச்செய்வர். c [இழை கொள்சோதி] இத்யாதி$_3$. ''பரிஹாரம் சொல்லுகிறவர்கள் தாங்களே படுகுலையடித்திகோள், நீங்கள் கொடுபுக்குக் காட்டிக்கெடுத்திகோள்'' என்னும்படியிறே யிருப்பது.

---

என்று நம்பிள்ளை நஞ்சீயரைக் கேட்க, அதற்கு நஞ்சீயர் ''கோயிலுக்குள் புகுந்தால் நம்மைப்போல் எந்த விகாரமும் இல்லாமல் திரும்பி வரக்கூடியவள் அன்றே இவள். ஸ்ரீராமபிரானைக் கண்ட ப$_4$ரதாழ்வானைப் போலே மயங்கி விழக்கூடியவளாயிற்றே. இவளை உள்ளே அழைத்துச் சென்றால் அப்பெருமானுடைய நீர்மைக் கு$_3$ணத்தைக் கண்டு இவள் மயங்கிக் கிடப்பதைப் பார்த்து 'இவளை இழக்க நேரிடுமோ' என்று பயந்த உறவினர்கள் இவளைக் கோயிலுக்குள் போகாமல் தடுத்திருப்பார்களாகையாலே இப்படிக் கூறுவது பொருந்தும்'' என்று அருளிச்செய்தார் என்னும் ஐதிஹ்யம் இங்கு அநுஸந்தி$_4$க்கத்தக்கது. இவ்விடத்தில் ''குழையும் வாள்முகத் தேழையைத் தொலைவில்லி மங்கலம் கொண்டுபுக்கு இழைகொள் சோதிச் செந்தாமரைக்கட்பிரான் இருந்தமை காட்டினீர்'' [திருவாய் 6-5-5] என்ற பாசுரத்திலே பராங்குஶ நாயகி 'எனக்கு நோய் வந்தால் அதற்குப் பரிஹாரம் சொல்ல வேண்டிய தாய்மார்களான நீங்களே தொலைவில்லி மங்கலத்துக்கு அழைத்துச்சென்று அவனுடைய கண்ணழகையும் வீற்றிருக்கும் அழகையும் எனக்குக் காட்டி என்னை வெட்டுண்ட வாழைக்குலைபோலே மயங்கி விழச்செய்து விட்டீர்கள். நீங்களே கோயிலுக்குக் கொண்டுபோய்க் காட்டி என்னைக் கெடுத்துவிட்டீர்களே' என்று கூறியதும் அநுஸந்தி$_4$க்கத்தக்கது.

---

c போனால் ஈடுபடுத்துமோ? என்ன அருளிச்செய்கிறார் (இழைகொளித்யாதி$_3$). பொன்—அழகு.



பிறர்க்குக் காட்டுகைக்காக வந்து நிற்கிறவன் திருவடிகள் காணவேணும் என்னும் ஆசையினாலே. (என் பொருகயல் கண்ணிணை துஞ்சா) இக்கண்ணுக்கு இலக்கானவன் படுமத்தைத் தான் படாநின்றாளாய்த்து. பொராநின்றுள்ள கயல்போலேயாய் ஒன்றுக்கொன்று ஒப்பான கண்களானவை உறங்கா.

(d இன்னடிசிலித்யாதி$_3$) 'e பிறரோடு தோழமை கொள்ளுகைக்கு அவகாஶமில்லாதபடி ஶ்லாகி$_4$த்துக்கொண்டு போருகிற என் கிளியை ; இப்படி நான் உபலாளநம் பண்ணிக்

---

*(உறைவான்தன் பொன்னடி காண்பதோர் ஆசையினால்)* பிறர்க்குக் காட்டுவதற்காகவே வந்து படுகாடு கிடக்கிறவனுடைய பொன்போன்ற அழகிய திருவடிகளைக் காணவேண்டும் என்னும் ஆசையினாலே. *(என் பொரு கயற்கண்ணிணை துஞ்சா)* சண்டையிடும் இரு கெண்டை மீன்கள் போலே அவனைக் காணத் துடிக்கின்றவையாய், ஒன்றுக்கொன்று ஒப்பான என் இரு கண்களும் உறங்காமல் இருக்கின்றன. இக்கண்ணாகிற அம்பினால் அடிக்கப்பட்ட அவன் படவேண்டிய பாட்டை இவள் படுகிறாளாயிற்று.

*(இன்னடிசிலொடு பாலமுதூட்டி எடுத்த என்கோலக்கிளியை உன்னொடு தோழமை கொள்ளுவன் குயிலே)* உனக்கு நீண்ட நாளாக ஒரு குறையுண்டு என்று எனக்குத் தெரியும். இனிய அடிசிலையும் (சோற்றையும்), பாலமுதையும் ஊட்டி என்னால் வளர்க்கப்பெற்று, என்னுடனே மழலை பேசிக் கொஞ்சிக் கொண்டு, வேறு எவரிடமும் நட்புக்கொள்ள நேரமில்லாதிருக்கும் நான் வளர்க்கும் கிளியோடு தோழமை கொள்ள வேணுமென்று நீண்டநாளாக் ஆசைப்பட்டிருப்பதை நான் அறிவேன். அக்கிளியின் தலைவியாகிய நானே அதை நியமித்து, உன்னோடு தோழமை கொள்ளச்செய்து உன் ஆசையை நிறை

---

d தோழமைகொள்ளுவன் - தோழமைகொள்விப்பன்.

e (பிறரோடு தோழமைகொள்ளுகைக்கு அவகாஶமில்லாதபடி) என்றது-இங்கே ஒருகுறை உண்டானாலிறே சிலரோடு

கொண்டு போருகிற கிளியை, உன்னோடு தோழமை கொள்ளுவிப்பன். † அதுக்குக்கடவாள் தானே. (உலகளந்தானித்யாதி) இத்தோடே தோழமை கொள்ளுகையாகிற ஏற்றம் உனக்கு; பேறு எனக்குக் கைப்படும். ‡ எல்லாரோடும் வரையாதே பொருந்துமவன் வரக்கூவுகை உனக்குக் கார்யம்; கு

---

வேற்றிவைப்பேன். ஸ்வாபதேஶத்தில் குயில் ஆசாரியனைக் குறிக்கிறதாகையாலே, 'உன்னொடு தோழமை கொள்விப்பன்' என்னாமல் 'கொள்ளுவன்' என்று கூறியது—'நானே ஆசார்யனுக்கு அடிமையாகி, என் உடைமைகளையும் அவனுக்கு அடிமையாக்குவேன்' என்னும் அரும்பொருள் த்வனிக்கைக்காக. அந்தக் கிளிக்குச் செய்யும் உபசாரங்களெல்லாம் உனக்கும் செய்வேன் என்கிற அர்த்தமும் தோற்றுகிறது. *(உலகளந்தான் வரக்கூவாய்)* குணத்தில் உயர்ந்தார் தாழ்ந்தார் என்னும் வாசி பாராமல், தீண்டினால் புனிதப்படுத்தும் உத்தம ப்ராஹ்மணர்கள், தீண்டத்தகாதவர்களான சண்டாளர்கள் என்னும் வித்தியாசத்தைக் கணிசியாமல், அனைவரையும் வரம்பில்லாமல் தன் திருவடிகளாலே அணைத்தவனான திரிவிக்கிரமன் வந்து என்னை அணைக்கும்படி கூவுவாயாக, எனக்கு இந்தப் பேறு கிடைக்கும்படி நீ செய்தால், என் கிளியோடு தோழமை கொள்ளும் பேறு உனக்குக் கிடைக்கும்படி நான் செய்வேன். நீ செய்ய வேண்டியது கூவுதலாகிற சிறு காரியம்; எனக்கும் உனக்கும் கிடைக்கும் பேறோ மிகப்பெரிது. அவன் அனைவரோடும்

---

தோழமைகொள்ளுகைக்கு அவகாஶமுள்ளது என்றபடி. குயிலோடே தோழமைகொள்விக்கையாவது-தன் கார்யம் செய்தால் தானும் ஶேஷமாய், தன்னுடைமையையும் அதுக்கு ஶேஷமாக்குகை என்று ஸ்வாபதேஶம். † "கொள்ளுவன்" என்னாதே "கொள்விப்பன்" என்பானென்? என்ன, அருளிச்செய்கிறார் (அதுக்கு இத்யாதி) அதுக்குக் கடவாள் தானென்றது-பலிதம். அதாவது-அந்தக் கிளியைப்போலே உன்னையும் உபலாளிப்பன் என்றபடி. ‡ஸாதஸத்வஸங்கீர்நிவ்ருத்த்யர்த்தம் (எல்லாரோடும் இத்யாதி). கார்யம் அல்பம், பேறு அதிகம்; அதாவது-கூவுகை அல்ப



குண நிருபணம் பண்ணாதே வஸிஷ்ட சண்டாள விபாகமற எல்லாரோடும் பொருந்துமவன் வரும்படி கூவப்பாராய். 5.

## ஐந்தாம் திருமொழி—ஆறும் பாட்டு

எத்திசை யுமம ரர்பணிந் தேத்தும்
இருடீகே சன்வலி செய்ய
முத்தன்ன வெண்முறு வல்செய்ய வாயும்
முலையும் அழகழிந் தேன்நான்
கொத்தலர் காவில் மணித்தடங் கண்படை
கொள்ளும் இளங்குயி லே!என்
தத்துவ னைவரக் கூகிற்றி யாகில்
தலையல்லால் கைம்மாறி லேனே.

பதவுரை:—**கொத்து**—பூங்கொத்துக்களானவை, **அலர்**—மலருமிடமான, **காவில்**—சோலையிலே, **மணி தடம்**—அழகானவொரு இடத்திலே, **கண் படைகொள்ளும்**—உறங்குகின்ற, **இளங் குயிலே!**—சிறு குயிலே!; **எத் திசையும்**—எல்லா திசைகளிலும், **அமரர் பணிந்து ஏத்தும்**—தேவர்கள் வணங்கித் துதிக்கும்படியான பெருமை வாய்ந்த, **இருடீகேசன்**—கண்டாருடைய இந்திரியங்களையெல்லாம் கொள்ளை கொள்ளுமவனான எம்பெருமான், **வலி செய்ய**—(தன்னை எனக்குக் காட்டாமல்) மிறுக்குக்களைப் பண்ண, (அதனாலே) **நான்**—நான், **முத்து அன்ன வெண்முறுவல்**—முத்துப்போல் வெளுத்த முறுவலும், **செய்ய வாயும்**—சிவந்த அதரமும், **முலையும்**—முலைகளும் (ஆகிய இவை), **அழகு அழிந்தேன்**—அழகு அழிந்ததாம்படி மாறுபட்டேன்; **என் தத்துவனை**—நான் உயிர்தரித்திருப்பதற்கு மூலகாரணமான அவ்வெம்பெருமானை, **வர கூகிற்றி ஆகில்**—இங்கே வரும்படி கூவவல்லையேயானால், **தலை அல்லால்**—என் வாழ்நாள் உள்ளவளவும் என் தலையை உன் காலிலே வைத்திருப்பது தவிர, **கைம்மாறு இலேன்**—வேறொரு ப்ரத்யுபகாரம் செய்ய அறியேன்.

---

வரம்பில்லாமல் பொருந்துகிறவனாகையாலே நீ கூவினால் காரியம் நிச்சயம் நிறைவேறும் என்று கருத்து. 5.

---

மாய், ஸம்ஶ்லேஷம் அதிகமாயிருக்கும் என்றபடி. 5.

வ்யா:— ஆறும் பாட்டு. (எத்திசையுமித்யாதி3) பார்த்த பார்த்த இடமெங்கும், து3ர்மாநிகளாயிருக்கக்கடவ ப்3ரஹ்மாதி3கள் தந்தாமுடைய அபி4மாநங்கள் முறிந்து திருவடிகளிலே விழுந்து ஜிதரானமை தோற்ற ஸ்தோத்ராதி3கள் பண்ணுநிற்பர்களாய்த்து இப்படி ஸர்வஸமாஶ்ரயணீயனுயிருக்கிறவன் என் ஸர்வேந்த்3ரியங்களையும் அபஹரித்துத் தன்னை எனக்குக்காட்டாதே மிறுக்குக்களைப்பண்ண, முத்துப் போன்ற a முறுவலும், சிவந்த அத4ரமும், ஒரிடுசிவப்பு வேண்டாத முலையும் அழகழிந்தேன் நான். என்னை மிறுக்குக்

---

*அவ:*—நான் உயிர்த4ரித்திருக்கைக்கு மூலகாரணமான அவன் வரும்படி கூவினுயாகில், என் வாழ்நாள் உள்ளவளவும் என் தலையை உன் காலிலே பொருந்தும்படி செய்வேன் என்கிருள்.

*வ்யா:— ( எத்திசையும்......அழகழிந்தேன் நான் )* (*எத்திசையும் அமரர் பணிந்தேத்தும் )* எவரையும் வணங்கிப் பழக்கமில்லாத து3ரஹங்காரமுடைய பிரமன் சிவன் இந்திரன் முதலான தே3வர்கள், பார்த்தபார்த்த இடமெங்கும் (எல்லா திசைகளிலும்) எம்பெருமானைக் கண்டவுடன், தம்முடைய அஹங்காரங்களைக் கைவிட்டு. அவன் திருவடிகளிலே விழுந்து தாங்கள் அவனுக்குத் தோற்றிருப்பது தோற்றும்படி துதி முதலானவைகளைச் செய்வார்களாயிற்று. ( *இருடீகேசன் வலி செய்ய*) இப்படி அனைவராலும் ஆஶ்ரயிக்கத் தக்கவனுயிருப்பவன், என்னுடைய இந்திரியங்கள் அனைத்தையும் அபஹரித்துத் தன்னை எனக்குக் காட்டாமல் என்னைத் துன்புறுத்த. *இருடீகேசன்* — ஹ்ருஷீகேசன் ; அதாவது ஹ்ருஷீகங்களாகிற இந்திரியங்களை நியமிக்கும் ஈசன் ( தலைவன் ). (*முத்தன்ன வெண்முறுவல் செய்ய வாயும் முலையும் அழகழிந்தேன் நான்*) முத்துப்போல் வெளுத்த பற்களும், சிவந்த அத4ரங்களும், அத4ரங்களைப் போலே செயற்கையான அங்க3ராக3ங்களை எதிர்பாராமல், இயற்கையிலேயே அழகுடைய ஸ்தனங்களும் அழகழியும் நிலையை அடைந்தேன் நான். என்னுடைய முறுவலும் வாயும் முலையும் அவனுக்கே த4ாரக போஷக போ4க்3யங்களாயிருக்க, என்னைத் துன்புறுத்துவதற்காக அவற்றை



கள் பண்ணுகைக்காகத் தன் ஜீவநத்தையும் அழியாநின்ருன். b 30. “ईषदुन्नस्य पश्यामि” (ஈஷது3ந்நம்ய பாஸ்யாமி) என்பாள் இவளன்றே. (c கொத்தலரித்யாதி3) d அவன்விபூ4தி அழியாநிற்க, நோக்காதே நீ கிடந்துறங்கும்படியாயன்ருே உன் செருக்கிருக்கிறது. நான் இப்படி நோவுபடாநிற்கப் படுக்கையிலே பொருந்தும்படியாயிருக்கிறதன்ருே உன்தௌ3ஶ. (என் e தத்துவனை வரக் கூகிற்றியாகில்) எனக்கு ஸத்தாஹேது வானவன் வரும்படி கூவவல்லையாகில். இது கூவியழைக்க வேண்டும்படி அவன் வரவு தாழ்க்கச்செய்தேயும், தன்

---

யும் அழிக்கின்ருன். ( 111-வது பக்கத்தில் 30-வது ப்ரமாணத்தில் உள்ளபடி ) அருளிச்செய்தவர் பெருமாளேயொழிய ஸீதையல்லவே. (*கொத்தலர்காவில் மணித்தடம் கண்படை கொள்ளும் இளங்குயிலே)* பூக்கள் கொத்துக்கொத்தாக மலரும் சோலையிலே அழகியதோர் இடத்திலே உறங்கும் சிறு குயிலே! அவனுடைய செல்வங்களான இவை அழிந்து கொண்டிருக்க அவற்றை ரக்ஷிக்காமல், கவலையற்றுக் கிடந்து உறங்கும்படியன்ருே உன் செருக்கு இருக்கிறது. நான் இப்படித் துன்புறும்போது. நீ இனிதாகக் கண்ணுறங்குவது நியாயமோ? (*என் தத்துவனை வரக் கூகிற்றியாகில்* ) என் ஸத்தைக்குக் காரணமானவன் வரும்படி கூவவல்லையாகில்; தத்துவம் என்னும் பத3ம் ஸ்வரூப ஸத்தையைக் குறிக்கிறதாகையாலே தத்துவன் என்றது அதற்குக் காரணமானவனைக் குறிக்கிறது. இக்குயில் கூவி அழைக்க வேண்டும்படி அவன் தாமதம் செய்திருந்தபோதிலும், அவனிடம் ஊடியிருக்கும் இந்நிலையிலும்

---

ஆறும் பாட்டு. (எத்திசையும் இத்யாதி3) a “முறுவல்”- பல். b இவள் அவயவம் அவனுக்கு ஜீவநமோ ? என்ன அருளிச்செய்கிருர் “ईषदुन्नस्य” ( ஈஷது3ந்நம்யேத்யாதி3 ). d (அவன்விபூ4தி அழியாநிற்க) என்றது — “முத்தன்ன வெண்முறுவல்” இத்யாதி3யை. c ‘மணி”-அழகு. “தடம்”- பெருமை. “கண்படை”-உறக்கம். e ‘தத்துவன”-மெய்யன். h “தலை”-அஞ்ஜலி. “கைம்மாறு”-ப்ரத்யுபகாரம். e தத்த்வம்- ஸ்வரூபமாய் ஸத்தாஹேதுவான ஆத்மாவைச் சொல்லு

f ஸத்தை அவனென்றிருக்கிறுள் காணும். g "ராவணன் மாயாஶிரஸ்ஸைக் காட்டினபோது, 'ஸார்வபௌமனுயிருப்பா னொருவன் கைப்பிடிக்கக் கடவன் என்றுற்போலே ஜ்யோதிர் வித்துக்கள் சொன்னவையும் பலிக்கக் கண்டிலேன்' என்று இங்ஙனே சிலவற்றைச் சொல்லி, இக்காலத்தில் ஸ்த்ரீகள் பொய்யே கண்ணநீரை விழ விட்டிருக்குமாபோலே, இவளும் தரித்திருக்கைக்கு அடியென்?" என்று நான் ஜீயரைக்கேட்க, "ஜ்ஞாநமன்று இவள் ஜீவநத்துக்கு ஹேது; பெருமாள் ஸத்தையாய்த்து; அவர் உளராகையாலே இருந்தாள்காணும்" என்றருளிச்செய்தார். தானுளனுகில் நானுளேனும்படியா யிருக்கிறவன் வரும்படி கூவவல்லையாகில். (h தலையல்லால் கைம்மாறிலேனே) i பெற்றி, "கிழக்குக்குப் போனவிடத்திலே—

---

அவனே தனது ஸத்தாகாரணம் என்னும் உண்மையை இவள் உணர்ந்திருக்கிறபடி. இவ்விடத்தில் பின்வரும் ஐதிஹ்யம் அநுஸந்திக்கத்தக்கது.—"ராவணன் ஸீதையிடம் ராமனுடைய மாயா *ஶிர*ஸ்ஸைக் காட்டி ராமன் இறந்துவிட்டான் என்னும் தோற்றத்தை விளைத்தபோது, 'ஸர்வலோக சக்ரவர்த்தியாயிருப்பவன் இந்த ஸீதையைக் கைப்பிடிக்கப் போகிறுன் என்று சோதிடர்கள் சொன்ன வார்த்தையும் பொய்யாகி விட்டதே' என்றுற் போன்ற சில வார்த்தைகளைச் சொல்லி, இக்காலத்திலுள்ள ப்ராக்ருத ஸ்திரீகள் கணவனை இழந்தபோது பொய்யாகக் கண்ணீர்விட்டு அழுவதுபோலே அழுதாளே யொழிய, ஸீதை தன் பதிவ்ரதைத் தன்மைக்குப் பொருந்தும்படி கணவன் இறந்தான் என்றவுடன் உயிர் நீங்கப்பெற்றுளில்லையே. இவள் உயிர்தரித்திருக்கக் காரணம் என்ன?" என்று நம்பிள்ளை நஞ்சீயரைக் கேட்க, "ஸீதை உயிர் தரித்திருப்பதற்கு 'ராமபிரான் உயிரோடிருக்கிறுன்' என்னும் ஞானம் காரணமன்று: ராமனுடைய ஸத்தையே ஸீதை உயிர்

---

கிறது. f (ஸத்தை) உண்மை. g அவன் இவளுக்கு ஸத்தையென்னுமதுக்கு ஸம்வாதம் அருளிச்செய்கிறுர் (ராவணன் இத்யாதி) h, i "தலையல்லால்" என்கிற பதத்துக்கு ஸம்வாதமுகேந அர்த்தம் அருளிச்செய்கிறுர்



'இதுக்குப் பொருளென்' என்று என்னைச் சிலர் கேட்டார்கள்; 'நீ இவன் வரும்படி கூவவல்லையாகில் உனக்கு ப்ரத்யுபகாரமாக என் i₂ தலையைத் தருமத்தனையிறே என்று சொல்லுகிறுள்' என்று சொன்னேன்; இவ்வளவாகமாட்டாது இதுக்குப் பொருள் என்றிருந்தேன்; இவ்விடத்துக்கு ஜீயர் அருளிச் செய்யும்படியென்?" என்று கேட்டார்; "'நீ பண்ணின உபகாரத்துக்கு இத்தலையால் செய்வதொன்றுண்டோ? என்று, i₃ என்தலையை உனக்காக்கி, காலமெல்லாம் உன்காலிலே

---

தரித்திருப்பதற்குக் காரணம்; ராமன் உண்மையில் உயிர் இழந்திருந்தால் இவளது உயிர் போகுமேயொழிய, வெறும் மாயா *ஶிர*ஸ்ஸின் காட்சியால் இவள் உயிர் போகாது. பெருமாள் உயிரோடு இருந்தமையாலே இவளும் உயிரோடு இருந்தாள்." என்று நஞ்சீயர் அருளிச்செய்தார்—என்பது அவ்வைதிஹ்யம். இங்கு ஆண்டாள் 'தத்துவன்' என்றதும் 'தான் உளனுகில், நான் உள்ளவளாம்படியாய் இருக்கிறவன்' என்னும் இதே கருத்தையுடையது. (*தலையல்லால் கைம்மாறிலேனே*) என் தலையை உன் திருவடியில் என்றும் பொருந்த வைப்பதைத் தவிர உனக்கு வேறு கைம்மாறு காண்கின்றிலேன். இவ்விடத்தில் பின்வரும் ஐதிஹ்யம் அநுஸந்திக்கத் தக்கது.—நஞ்சீயருடைய சிஷ்யர்களில் ஒருவரான பெற்றி ஸ்ரீரங்கத்திற்குக் கிழக்கே ஒரு காரியமாகப் போன இடத்தில் "'தலையல்லால் கைம்மாறிலேனே' என்றதற்குப் பொருள் என்ன?" என்று அவரைச் சிலர் கேட்டார்கள். அதற்கு அவர் "'நீ எம்பெருமான் வரும்படி கூவினுயாகில் உனக்குக் கைம்மாருக என் தலையையே அறுத்துக் கொடுப்பேன்' என்று சொல்லுகிறுள்" என்று சொன்னுர். ஆனால் இப்பொருள் பொருந்தவில்லையே என்னும் ஐயம் அவருக்கே இருந்தது. நம்பிள்ளையிடம் "இவ்விடத்திற்கு நஞ்சீயர் என்ன பொருள் அருளிச்செய்வர்" என்று கேட்டார். "'நீ பண்ணின உபகாரத்திற்கு நான் ஒரு கைம்மாறு செய்வது இயலாதாகையாலே என் தலையை உனக்கு உரியதாக்கி எல்லாக் காலமும் உன்

---

(பெற்றி இத்யாதி) i₂ தலையைத் தருமென்றது-தலையாலே வணங்குகையென்று பெற்றிக்கு விவக்ஷை. i₃ பெற்றி

வணங்கி வர்த்திக்குமத்தனை’ என்கிறுள் என்று அருளிச் செய்வர்’’ என்றேன்; போரக்கொண்டாடியருளி “ ‘நான் பதி ஞேருருத் திருவாய்மொழி கேட்டேன் ; திருமொழி கேட்கப் பெற்றிலேன் ; போனவிடங்களிலே என்னைச் சிலர் கேட்டால், அருளிச்செய்யுமதுவே எனக்குத் தோற்றி, நானும் சொல் லும்படி ப்ரஸாதி$_3$க்கவேணும்’ என்று வேண்டிக்கொண்டேன்; அவரும் அப்படி ப்ரஸாதி$_3$த்தருளினுர்; ‘ஒரு வரலாப$_4$த்தாலே இவை அறியப்போகாது; ஶ்ரவணங்கொண்டே அறியவேணும்’ ’’ என்று அருளிச்செய்வர். 6.

---

காலிலே வணங்கி வாழ்வேன் என்கிருள்’ என்று நஞ்சீயர் பொருள் அருளிச்செய்வர் ’’ என்று நம்பிள்ளை அருளிச்செய் தார். இதைக்கேட்ட பெற்றி நஞ்சீயரை மிகவும் கொண் டாடி, “நான் நஞ்சீயரிடம் பதினெரு முறை திருவாய் மொழிக்குப் பொருள் கேட்டேன். திருமொழிகளுக்கு அவரி டம் பொருள் கேட்கப் பெறவில்லை. நான் வெளியூர் செல்லும் போது திருமொழிக்கு எவராவது பொருள் கேட்டால், நஞ்சீயர் அருளிச்செய்த அர்த்த$_2$ங்களே எனக்குத் தோற்றி, நானும் சொல்லும்படி நீர் எனக்குத் திருமொழிகளுக்கு அர்த் த$_2$ம் அருளிச்செய்யவேணும்’’ என்று நம்பிள்ளையைப் பிரார்த் தி$_2$த்தார். அவரும் அப்படியே பொருள் அருளிச்செய்தார். அதைக் கேட்ட பெற்றி, “தவம் புரிந்து வரம்பெற்று இவ் வர்த்த$_2$ங்களை எவராலும் அறியமுடியாது. ஆசாரியனிடம் கேட்டே அறியவேணும்’’ என்று அருளிச்செய்தார்—என்பது அவ்வைதிஹ்யம். 6.

---

தாம் அருளிச்செய்த அர்த்த$_2$ம் தம் திருவுள்ளத்துக்குப் போந்திராமையாலே, நம்பிள்ளையை, ‘நஞ்சீயர் அருளிச் செய்யும் ஸம்ப்ரதா$_3$யமான அர்த்த$_2$மேது?’’ என்று கேட்க அவரருளிச்செய்தபடி;—(தலையை உனக்காக்கி) என்றது. “ ‘सर्वस्य गात्रस्य शिरः प्रधानं’ (ஸர்வஸ்ய கா$_3$த்ரஸ்ய ஶிர:ப்ரதா$_4$நம்) என்கிறபடியே, அவயவவிஶிஷ்டனை என்னை உனக்கு ஶேஷமாக்கிக் காலமெல்லாம் அடிமைசெய்கையொழிய வேறு உபகாரமில்லை’’ என்று அருளிச்செய்தார். (ஶ்ர வணங்கொண்டே அறியவேணும்) என்கையாலே - ப$_4$ட்ட ருக்கு ஆழ்வான் ப்ரஸாதி$_3$த்து அருளினதாகவேணும். 6.



## ஐந்தாம் திருமொழி—ஏழாம் பாட்டு

பொங்கிய பாற்கடல் பள்ளிகொள் வானைப்
புணர்வதோ ராசையி ஞல்என்
கொங்கை கிளர்ந்து குமைத்துக் குதுகலித்து
ஆவியை யாகுலஞ் செய்யும்
அங்குயி லே!உனக் கென்ன மறைந்துறைவு
ஆழியும் சங்குமொண் தண்டும்
தங்கிய கையவ னைவரக் கூவில்நீ
சாலத் தருமம் பெறுதி.

பதவுரை:— அம் குயிலே!—அழகிய குயிலே!, பொங்கிய பால் கடல்—அலையெறியும் திருப்பாற்கடலில், பள்ளி கொள் வானை—பள்ளிகொண்டருளும் எம்பெருமானேடே, புணர் வது ஓர் ஆசையினுல்—ஸம்ஶ்லேஷிக்க வேணுமென்று உண் டான ஆசையினுல், என் கொங்கை—எனது முலைகள், கிளர்ந்து—பருத்து, குதுகலித்து-மிக்க உத்ஸாஹங்கொண்டு, ஆவியை—எனது உயிரை, குமைத்து ஆகுலம் செய்யும்— உருக்கி வியாகுலப்படுத்தாநின்றன ; (அழகிய குயிலே !) மறைந்து உறைவு—(வெயில் படாமல் நிழலிலே) நீ மறைந் திருப்பதனுல், உனக்கு என்ன—உனக்கு என்ன பயன் ? ஒண் ஆழியும் சங்கும் தண்டும் தங்கிய கையவனை வர— திருவாழி திருச்சங்கும் ஸ்ரீக$_3$தை$_3$யும் பொருந்திய திருக்கை களையுடைய பெருமான் இங்கே வரும்படி, நீ கூவில்— நீ கூவுவாயாகில், சால—மிகவும், தருமம் பெறுதி—த$_4$ர்மம் செய்தனையாவாய்.

வ்யா:— ஏழாம் பாட்டு. (பொங்கிய இத்யாதி$_3$) பரம பத$_3$ம் இருப்பிடமாயிருக்க அத்தை விட்டுவந்து, ஸ்வஸந்நி

---

*அவ:*— நான் படும் பாட்டைக் கண்டு இரங்கி அவனை வரும்படி கூவினுயாகில் நீ பெரிய த$_4$ர்மம் செய்ததாகும்.

*வ்யா:— ( பொங்கிய பாற்கடல் பள்ளிகொள்வானை )* இவ னுக்கு இருப்பிடம் பரமபத$_3$மாயிருக்க, இங்குள்ளாரை வசப்

த4ாநத்தாலே திரைக்கிளப்பத்தையுடைத்தான திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டருளுகிறவனை. a ஒரு சந்த்3ரத3ர்ஶநத்திலே கிளரக்கடவதான கடல், 78. 'नखच्छलेनाश्रित्य नित्यं सद्वृत्तोभूत् स तु दशगुणः पुष्कलो निष्कलङ्कः' (நக2ச்ச2த்3மநாஶ்ரித்ய நித்யம் ஸத்3வ்ருத்தோऽபூ4த் ஸ து த3ஶகு3ண: புஷ்கலோ நிஷ்களங்க:) என்கிறபடியே, நிஷ்களங்கரான சந்த்3ரர்கள்

---

படுத்துவதற்காக அப்பரமபத3த்தைவிட்டு வந்து, தான் அருகிலிருக்கையாலே பொங்கும் அலைகளையுடைய திருபாற்கடலிலே பள்ளிகொண்டருளுகிறவனை.

78. ஶம்பே4ாரம்பே4ாருஹமுக2ஸக2ா
ஸந் ஸஹாங்க3ஶ் ஶஶாங்க:
குர்வந் ஸேவாம் வரத3! விகலோ
வ்ருத்தஹீநஸ் ஸுவக்ர: |
த்வத்பாத3ாப்3ஜே ப்ரியமக2 !
நக2ச்ச2த்3மநாஶ்ரித்ய நித்யம்
ஸத்3வ்ருத்தோऽபூ4த் ஸ து த3ஶகு3ண:
புஷ்கலோ நிஷ்களங்க: || [வ-ஸ்த 60]

[தாமரைபோன்ற திருமுகத்தையுடையவனுய், யஜ்ஞப்ரியனனை ப4க3வானே! [ஏற்கனவே] பாபமுடையனை - (களங்கத்தை உடையவனுன) - அந்தச் சந்திரன் ருத்3ரனுக்கு நண்பனுயிருந்தும், (தலையலங்காரமாய்) ஸேவை செய்தும், வித்3யையற்றவனுய் - மூளியாய் - நல்லொழுக்கமற்றவனுய் - உருண்டை வடிவமிழந்தவனுய் - ஆகி, நக2ங்களென்கிற வியாஜத்தாலே உன் திருவடித்தாமரைகளை எப்போதும் அடைந்து, களங்கமற்றவனுய் (பாபமற்றவனுய்), பூர்ணனுய் (வித்3யையுள்ளவனுய்), உருண்டை வடிவமுள்ளவனுய் (நல்லொழுக்கமுள்ளவனுய்), பத்தாகப் பெருகினவனுய் ஆனுன்.] என்று ஆழ்வான் அருளிச்செய்தபடியே களங்கமுடைய ஒரு சந்திரனைக் கண்டால்

---

ஏழாம் பாட்டு:— (பொங்கிய இத்யாதி3) a கடல் சந்த்3ரனைக் கண்டாலொழிய இவனைக் கண்டால் கிளம்பக் கூடுமோ? என்ன அருளிச்செய்கிறுர் (ஒரு சந்த்3ர த3ர்ஶ



ஒரு முஹூர்த்தத்திலே ஒருவனடியிலே தோற்றக்கண்டால் கிளரச்சொல்லவேண்டாவிறே; அதுதானே b அடியாகக் கிளருமிறே இது. c சந்த்3ரன்தனக்குத் தன் திருவுள்ளத்தில் தண்ணளியிலே சிறுதூட்டினமாத்ரமிறேயுள்ளது, 79. "चन्द्रमा मनसो जातः" (சந்த்3ரமா மநஸோ ஜாத:) என்று. அவனைக் கண்டு கிளரக்கடவதானுல், தானே வந்து படுகாடுகிடந்தால் சொல்லவேண்டாவிறே. (d புணர்வதோராசையினுல்) அவனுடனே கலக்கவேணுமென்கிற ஆசையாலே. (என்கொங்கை இத்யாதி3) ஆசை உண்டாயிருக்கச் செய்தேயும் ஸ்த்ரீத்வத்தை நோக்கிக்கொண்டிருக்கவேணுமென்றிருக்கிற என்னைப்போலே

---

பொங்கக் கூடிய கடல் இவனுடைய திருவடிகளிலே நக2ங்களாகிற பத்து சந்திரர்கள் ஒரே ஸமயத்தில் தோற்றக் கண்டால் பொங்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ. அதுதானே அடியாக (1. காரணமாக, 2. திருவடிகளிலே) பொங்குவதன்றே இக்கடல்.

79. சந்த்3ரமா மநஸோ ஜாத: சக்ஷோ: ஸூர்யோ அஜாயத
[புருஷஸூக்தம்]

[சந்திரன் மனத்திலிருந்து உண்டானுன்; ஸூர்யன் கண்ணிலிருந்து பிறந்தான்.] என்கிறபடியே தன்னுடைய திருவுள்ளத்திலிருந்து உண்டானவனுகையாலே சந்திரனுக்கு அதிலுள்ள குளிர்த்தியில் ஒரு சிறிதையளித்தான் எம்பெருமான். அவனைக் கண்டே பொங்கக் கூடிய கடல் அவ்வெம்பெருமான் தானே வந்து இதன் மேலேயே படுகாடு கிடக்கும்போது பொங்கச் சொல்லவேணுமோ? *(புணர்வதோர் ஆசையினுல்)* அவனேடு அணைய வேண்டும் என்னும் ஆசையாலே. *(என் கொங்கை...... ஆகுலம் செய்யும்)* 'பெருங்காதல் இருந்தபோதிலும் பெண்மைக்கு உரிய அடக்கத்துடன் இருக்க வேண்டும்' என்றிருக்கும்

---

நத்திலேயித்யாதி3). b (அடியாக) - சாடு. திருவடிகளிலே உண்டாக - அர்த்த2ம். ஹேது - த்4வநி. c அன்றிக்கே, அவன் குளிர்த்திக்கும் இவன் ஹேதுபூ4தனுகையாலே ஈஶ்வர ஸ்வபா4வத்தாலும் கிளருமென்கிறுர் (சந்த்3ரன் தனக்கு இத்

இருக்கிறனவன்றே முலைகள். (கிளர்ந்து) அவனுக்கு வீங்கா நின்றன. என்னைப்போலே ஆறியிருக்கும்படியோ நான் முலை படைத்தது. இவளுக்கு d நெஞ்சடையாயிருக்குமே இவை. (குமைத்து) e அங்கு இரை பெறுவிட்டவாறே தன் முதுகிலே இடாநின்றதாய்த்து. (f குதுகலித்து) தன் த3ஶையைப் பார்த்து வந்தானென்று எதிர்கொள்ளப் புறப்படுவாரைப்போலே கௌதூஹலம் பண்ணாநின்றதாய்த்து. (g ஆவியை ஆகுலம் செய்யும்) ஹ்ருத3யத்தை நலிகிறபடி ஒரு மஹாபா4ரதத்துக்குப் போரும். (அங்குயிலே! உனக்கென்ன மறைந்துறைவு) நான் இங்ஙனே க்லேஶப்படாநிற்க, உனக்கு வெய்யில் காணும

---

என்னைப்போலே எனது முலைகள் அடங்கியிருக்க மறுக்கின்றன. *(கிளர்ந்து)* பொன்னுக்கு வீங்கும் நோய் வரும்போது, சில அவயவங்கள் வீங்குவது போலே, பொன்போன்ற இவனை ஆசைப்பட்டு வீங்குகின்றன. ‘என்னைப்போலே அடங்கியிருக்கும்படியோ நான் முலை படைத்தது?’ என்கிறாள். இவளுக்கு நெஞ்சடையாய் (1. நெஞ்சை நலிவதாய், 2. மார்புக்குச் சுமையாய்) இருப்பவையன்றோ இவை. *(குமைத்து)* குழந்தைகள் சோறு இடாத தாயை முதுகிலே குத்துவதைப் போலே கிளர்ந்த பின்பும் அவன் மார்பாகிற இரையைப் பெறுமையாலே, முதுகிலே குத்துவது போலே இவளையே துன்புறுத்தின. *(குதுகலித்து)* அவன் வராமலிருக்கும்போதே வந்தானென்று மயங்கி, தான் படும் பாட்டைக் கண்டு வந்த அவனை எதிர்கொள்ளப் புறப்படுவாரைப் போலே மிகுந்த உத்ஸாஹத்தைக் காட்டின. *(ஆவியை ஆகுலம்செய்யும்)* என் நெஞ்சை இவை படுத்துகிற பாட்டை விளக்கப் புக்கால் ஒரு மஹா பா4ரதமாய் விரியும். *(அங்குயிலே! உனக்கென்ன மறைந்துறைவு)* நான் இப்படித் துன்புறும்போது, நீ வெய்யில் படாமல் நிழலிலே

---

யாதி3) d (நெஞ்சடை)-சாடு, பா3த4கம்-அர்த்த2ம்; மார்வை அடைக்கை - த்4வநி. e (அங்கு) என்றது வீங்கினவிடத்திலும் என்றபடி. (முதுகிலேயிடுகை) சாடு; த்வரிக்கை; ப்ரஹரிக்கை. c2 புணர்தல்-கலத்தல். f குதுகலித்தல்-ஸம்ப்4ரமித்தல். g ஆவி - ப்ராணன். h சால - மிகவும்; சாலத்



லிருக்கப்போமோ? (ஆழியுமித்யாதி3) “எப்போதும் கைகழலா நேமியான்” என்கிறபடியே வினையுண்டானபோதாகத் தேடவொண்ணாதென்று ஆஶ்ரிதரக்ஷணத்துக்காக எப்போதும் த4ரித்துக்கொண்டிருக்கிறவன் வரும்படி கூவுதியாகில்.

80. “वाचा धर्ममवाप्नुहि” (வாசா த4ர்மமவாப்நுஹி) என் ஸத்தை பெறுகிற்று உனக்கு ஒருக்கியே நேரவேண்டுவது; ஒரு வாய்ச் சொல்லாலே தண்ணீர்ப் பந்தலாம்; ஆறியிராதே இத்தனையும் செய். (நீ h சாலத்தருமம் பெறுதி) ஸேஶ்வரமான ஜக3த்தை ரக்ஷித்தாயென்னும் ஏற்றம் பெறுதி. i பழையத்தைப் புதியதாக்கினாயாவுதி. பண்டும் ஒரு பக்ஷியிறே தன்னை அழிய

---

இனிதுவாழ்வது தகுமோ? *(ஆழியும் சங்கும் ஒண் தண்டும் தங்கிய கையவனை வரக்கூவில்)* “எப்போதும் கைகழலா நேமியான்” [பெரிய திருவ 87] என்கிறபடியே அடியாரைக் காப்பதற்குத் தேவையானபோது ஆயுதத்தைத் தேடிக்கொண்டிருக்க முடியாது என்று எப்போதும் கையிலேயே பஞ்சாயுத4ங்களையும் த4ரித்துக் கொண்டிருப்பவன் வரும்படி கூவுவாயாகில். *(நீ சாலத் தருமம் பெறுதி)*

80. ஜீவந்தீம் மாம் யதா2 ராமஸ் ஸம்பா4வயதி கீர்த்திமாந் ।
தத் ததா2 ஹநுமந் வாச்யோ வாசா த4ர்மமவாப்நுஹி ॥
[ரா-ஸு 39-10]

[கீர்த்திமானான ராமபிரான் உயிருடன் வாழும் என்னை கௌ3ரவிக்கும்படியாக நீ வார்த்தை சொல்லவேண்டும்; வார்த்தை சொல்லிப் புண்ணியம் பெறுவாயாக.] என்று பிராட்டி அநுமனைப் பார்த்துச் சொன்னது போலே சொல்லுகிறாள். நீ ஒரு வார்த்தை சொல்லுவதால் நான் உயிரே த4ரிக்கப் பெறுவேன். ஒரு வாய்ச் சொல்லாலே தண்ணீர்ப்பந்தல் வைத்தது போன்ற த4ர்மம் உனக்கு ஏற்படும். தாமதம் செய்யாமல் இதை அவசியம் செய்யவேணும். *(நீ சாலத்தருமம் பெறுதி)* என்னை ரக்ஷித்தால், என்னைப் பிரிந்து உயிர் த4ரிக்கமாட்டாத அவனை யும் ரக்ஷித்ததாகும். அவனை ரக்ஷித்தால் அவனில்லாமல் ஸத்தை

---

தருமம் - மிக்க த4ர்மம். i பக்ஷியான எங்களுக்கு ரக்ஷண த4ர்மமுண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (பழையத்தை

மாறி ஶரணாகதனை ரக்ஷித்தது; இங்கு உன்னை அழியமாற வேண்டா. ஒருக்தியே நேரவேண்டுவது. j இவளில்லையாகவே அவனில்லையாம்; பின்னை உபயவிபூதியுமில்லையாமித்தனை யிறே. "தருமம்பெறுதி" என்னாதே, "சாலத்தருமம் பெறுதி" என்கிறது;—அங்கு நிஷாதனொருவனும்; இங்கு உபயவிபூதி யும். k 81. "धर्मतः परिरक्षिताः" (தர்மத: பரிரக்ஷிதா:). 7.

---

பெறமாட்டாத உலகையே ரக்ஷித்ததாகும். அநாதி ஸித்தமான ஈஶ்வரனோடு கூடிய உலகத்தையே புதுப்பித்த புண்ணியம் உனக்கு உண்டாகும். முற்காலத்தில் ஒரு புரு தன் பேடை யைப் பிடித்துக்கொண்டு மழையாலே துன்புற்று, தன் மரத் தடிக்கு வந்த வேடனை ஶரணாகதனாகக் கொண்டு தன் உயிரையே கொடுத்து ரக்ஷித்தது என்று கபோதோபாக்யானம் கூறு கிறது. இங்கு அப்புருவைப் போலே நீ உன்னை அழித்துக் கொள்ள வேண்டா. ஒரு வார்த்தை சொன்னால் போதும். அப்புரு ஒரு வேடனையே ரக்ஷித்தது. இங்கு நானில்லையானால் அவனில்லையாகி, உபய விபூதியும் இல்லையாகிவிடுமாகையாலே என்னை ரக்ஷிப்பதால் நீ உபய விபூதியையும் ரக்ஷித்த பெரும் புண்ணியத்தைப் பெறலாம் என்கிறாள்.

81. அஹம் ச ரகுவம்ஶஶ்ச லக்ஷ்மணஶ்ச மஹாபல: |
வைதேஹ்யா தர்ஶநேநாத்ய தர்மத: பரிரக்ஷிதா: ||
[ரா-யு 1-12]

[நானும், ரகுகுலத்திலுதித்த பரதனும் மஹாபலவானான தம்பி லக்ஷ்மணனும், நீ ஸீதையைக் கண்டதினால் (ப்ரத்யு பகாரத்தை எதிர்பாராமல்) தர்மத்தினாலேயே உன்னால் ரக்ஷிக் கப்பெற்றோம்.] என்று பெருமாளும் அனுமனைப் பார்த்து இவ்வண்ணமே அருளிச்செய்தாரன்றோ. 7.

---

இத்யாதி). j இவளை ரக்ஷித்தால் ஸேஶ்வரமான ஜகத்தை ரக்ஷித்ததாமோ? என்ன அருளிச்செய்கிறார் (இவளில்லை யாக இத்யாதி) k இவளை ரக்ஷிக்கவே உபயவிபூதியும் ரக்ஷித்ததாம் என்றதுக்கு ப்ரமாணம் "धर्मतः परिरक्षिताः" (தர்மத: பரிரக்ஷிதா: இத்யாதி). ஶ்லோகமெல்லாம் விவக்ஷிதம். 7.



## ஐந்தாம் திருமொழி—எட்டாம் பாட்டு

சார்ங்கம் வளைய வலிக்கும் தடக்கைச்
சதுரன் பொருத்த முடையன்
நாங்களெம் மில்லிருந் தொட்டிய கச்சங்கம்
நானு மவனும் அறிதும்
தேங்கனி மாம்பொழில் செந்தளிர் கோதும்
சிறுகுயி லே! திரு மாலை
ஆங்கு விரைந்தொல்லைக் கூகிற்றி யாகில்
அவனைநான் செய்வன காணே.

பதவுரை:— தேம் கனி-இனிமையான பழங்களையுடைய, மா பொழில்—மாந்தோப்பிலே, செம் தளிர் கோதும்—சிவந்த (துளிர்களை வாயலகால்) கொந்துகிற, சிறு குயிலே!—இளங்குயிலே!, சார்ங்கம்— தனது வில்லை, வளைய வலிக்கும்—வளைத்து இழுக்கும் சக்தியையுடைய, தட கை — பெரிய திருக்கைகளையுடையவனாய், சதுரன்—மிகத் திறமையுடைய வனான எம்பெருமான், பொருத்தம் உடையன்—ப்ரணயரீதி யிலும் வல்லமை பெற்றவன்; நாங்கள்—அவனும் நானும் ஆக இருவரும், இருந்து—சேர்ந்திருந்து, எம்மில் ஒட்டிய— எங்களுக்குள் ரஹஸ்யமாகச் செய்துகொண்ட, கச்சங்கம்— ஸங்கேதத்தை, நானும் அவனும் அறிதும்—நாங்களிரு வருமே அறிவோமேயன்றி வேறொருவரும் அறியார்; ஆங்கு திருமாலை — தூரஸ்தனாயிருக்கிற ஶ்ரிய:பதியை' ஒல்லை விரைந்து—மிகவும் சீக்கிரமாக, கூகிற்றி ஆகில்—நீ கூவவல்லையாகில், அவனை — (அவன் இங்கு வந்த பிற பாடு) அவன் விஷயத்தில், நான் செய்வன—நான் செய்யப் போகிற மிறுக்குக்களை, காண்—காணக்கடவை.

---

8. *அவ:*— நாங்கள் கூவினால் அவன் வருவானோ? என்று குயிலுக்குக் கருத்தாகக்கொண்டு, "வீரத்திலும் காதல் பரிமாற் றத்திலும் விஞ்சியிருப்பவன் அவன். அவனை வரும்படி செய்யவல்ல பெரியபிராட்டியாரும் அருகில் இருக்கிறாள். ஆக, வரத்தட்டில்லையாகையாலே கூவுவாயாக" என்கிறாள்.

வ்யா:—எட்டாம் பாட்டு. (a சார்ங்கமித்யாதி$_3$) b 82. “राम-चापाश्रयां वने” (ராமசாபாஶ்ரயாம் வநே) என்கிறபடியே விற்பிடித்த பிடியிலும் வில் வளைத்தபடியிலும் தோற்றிருப்பாளொரு வீரபத்நிபோலேகாணும் இவள்தான்! c 83. “चापञ्च मुमोच”

*வ்யா:— (சார்ங்கம் வளைய வலிக்கும் தடக்கைச் சதுரன்)* தனது வில்லை வளைத்து அம்பெய்யும் சக்தியுடைய பெரிய திருக்கைகளையுடையவனும், மிக்க திறமையுடையவன்.

82\. அப்ரமேயம் ஹி தத்தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா।
ந த்வம் ஸமர்த்த$_2$ஸ் தாம் ஹர்த்தும் ராமசாபாஶ்ரயாம்
வநே॥ [ரா-ஆர 37-38]

[யாதொரு ராமபிரானிடத்தில் ஜநககுமாரியான ஸீதையிருக்கிறளோ, அந்த ராமபிரானுடைய தேஜஸ் அளவற்றதன்றோ. காட்டில் ராமனுடைய வில்லை ஆஶ்ரயித்திருக்கும் அவளை அபஹரிக்க நீ ஸமர்த்த$_2$னல்லன்.] என்கிறபடியே வில்லைப்பிடித்த பிடியிலும், அதை வளைக்கும் வீரத்திலும் தோற்றிருக்கும் வீரபத்னி இவள் என்று விளங்குகிறது. (சதுரன்)

83\. யோ வஜ்ரபாதாஶநி ஸந்நிபாதாத்
ந சுக்ஷுபே$_4$ நாபி சசால ராஜா।
ஸ ராமபா$_3$ணாபி$_4$ஹதோ ப்$_4$ருஶார்த்த:
சசால சாபஞ்ச முமோச வீர:॥ [ரா-யு 59-139]

[எந்த ராவணன், வஜ்ரத்தின் அடியினாலும், இடி விழுவதாலும் கலங்காமலும், அசையாமலுமிருந்தானோ, அந்த வீரன் ராமபா$_3$ணத்தால் அடிபட்டு, மிகவும் வருந்தித் தள்ளாடினான்; வில்லையும் கைவிட்டான்.] என்கிறபடியே எதிரிகள் தங்கள் வில்லைக் கைவிடும்படி வில்பிடிக்கவல்ல மஹாவீரன் இவன் என்று கருத்து.

---

எட்டாம் பாட்டு:— (சார்ங்கமித்யாதி$_3$) a “சார்ங்கம்”-வில்; “தடம்”-பெருமை. b அல்லாத ஆயுத$_4$ங்களிருக்க, வில்லைச்சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (ராமசாபாஶ்ரயாமித்யாதி$_3$). “சார்ங்கமானது வளையும்படி வலிக்கும்” என்றபோதே, பிடித்ததும் வலித்ததும் ஸித்$_3$த$_4$மிறே. c “சதுரன்” என்றதுக்குத் தாத்பர்யம் “चापञ्च” (சாபஞ்ச)



(சாபஞ்ச முமோச) என்கிறபடியே - எதிரிகள் வில் பொகடும்படி வில்பிடிக்க வல்லவர். (பொருத்தமுடையன்) வீரவாசியிலுங்காட்டில்கிடீர் ப்ரணயித்வத்தில் நிற்கும் நிலை. d வீரத்திலும் கொத்தையில்லை, ப்ரணயித்வத்திலும் கொத்தையில்லை. (e நாங்களித்யாதி$_3$) பிறர்க்குத் தெரிவதொன்றல்ல காண் எங்கள் நிலை. அதாகிறது — f இன்றியமையாமை. “ஒருவரையொழிய ஒருவர் உளோமாகோம்” என்று, எங்களில் நாங்கள் பண்ணிவைக்கும் ஸமயம் நானும் அவனும் அறியுமத்தனை. g அது நிர்வஹிக்கை உனக்கு ப$_4$ரமாயிருக்கச்

---

வெறும் வீரமேயாய், காதல் பரிமாற்றம் அறியாதான் ஒருவனோ? எனில் — *(பொருத்தமுடையன்)* வீரத்தைக்காட்டிலும் காதலிலே இவன் பரிமாறுவது விஞ்சியிருக்கும். ஆக வீரத்திலும் காதல் பரிமாற்றத்திலும் குறையில்லாதவன் என்றதாயிற்று. *(நாங்கள்......அறிதும்)* நாங்கள் இருவரும் ஒருவர்க்கொருவர் செய்துகொண்ட ஸங்கேதத்தை நாங்கள் இருவருமே அறிவோம்; அது பிறர்க்குத் தெரிவதொன்றல்ல காண். கச்சங்கம் — ஸங்கேதம். அதாவது—பரஸ்பரம் இன்றியமையாமை. “ஒருவரையொழிய ஒருவர் உயிர்த$_4$ரிக்கமாட்டோம்” என்று எங்களுக்குள் நாங்கள் செய்துகொண்ட ஸங்கேதத்தை நானும் அவனுமே அறிவோம். அந்த ஸங்கேதத்தை அவன் மீறி நடக்கும்போது அவனுக்கு நியாயத்தை உணர்த்தவேண்டியது. எங்களைச் சேரவிடும் உனக்குப் பொறுப்பாயிருக்க, நீ பேசாமலிருக்கலாமோ? இந்தக் குயில் இருக்குமிடத்தில் இப்படி ஸங்கேதம் பண்ணிக்கொண்டிருந்தாலன்றோ அது இதை அறிய முடியும்? “நாங்கள் எம்மில் இருந்து ஒட்டிய கச்சங்கம்” என்று தாங்கள் இருவரும் தனியே இருந்தபோது இந்த ஸங்கேதத்தைச் செய்துகொண்டதாகவன்றோ கூறுகிறாள்.

---

இத்யாதி$_3$. d கீழ் ப்ரணயித்வாதிஶயம் சொல்லி, ஸாம்யம் அருளிச்செய்கிறார் (வீரத்திலும் இத்யாதி$_3$). e கச்சங்கம் - வ்யவஸ்தை$_2$; ப்ரதிஜ்ஞை. f (இன்றியமையாமை)-ஒருவரையொழிய ஒருவர் த$_4$ரியாமை. g இது சொல்லுகிறதுக்குத்

செய்தே, ஆறியிராநின்ரும். h அதுபின்னே $h_2$ ஸமயம்பண்ணின இடம் $h_3$ இதுவோ? என்னில்; இருவருமானபோது "நான் உன்னையொழிய ஜீவியேன், நான் உன்னையொழிய ஜீவியேன்" என்றிறே இருவர்க்கும் வார்த்தை. i தூ$_3$தர்க்குட்படச்சொல்லக் கடவ அவர்கள் சேரவிருந்தால் சொல்லாதிருப்பரோ? (j தேங்

---

ஆகையால் குயில் இதையறிந்து எப்படி அவனுக்கு உணர்த்த முடியும்? எனில்: தூதுசெல்லும் இக்குயில் இருவரோடும் பரிசயமுடையது. தனியே இருக்கும்போது, மற்றவரையொழியத் தம்மால் உயிர்வாழமுடியாது என்று இருவருமே இதனிடம் சொல்லிவைப்பார்கள். ஆகையால் இவர்களுடைய ரஹஸ்யஸங்கேதம் இதுவே என்று இக்குயில் அறியத் தடையில்லை. [116-வது பக்கத்தில் உள்ள 37-வது ப்ரமாணத்தின்படி] தனியே இருக்கும்போது ராமபிரானும் தூ$_3$தனை அநுமனிடம் ஸீதையையொழிய உயிர்வாழமாட்டேன்' என்று சொன்னுன். [115-வது பக்கத்தில் உள்ள 36-வது ப்ரமாணத்தின்படி] அசோகவநத்தில் ஸீதையும் இப்படியே ராமனுக்கு அநுமன்மூலம் சொல்லியனுப்பினுள். இப்படி தூ$_3$தர்களிடமே சொல்லியனுப்பும் அவர்கள் தனியே இருக்கும்போது இப்படி ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொள்ளாமல் இருப்பரோ. ஆகையால், இதுவே இங்கு "எம்மில் இருந்து ஒட்டிய கச்சங்கம்" என்று சொல்லப்படுகிறது என்று கொள்வது பொருத்தம். *(தேங்கனி மாம்பொழில் செந்தளிர் கோதும் சிறு குயிலே)*

---

தாத்பர்யம் (அது நிர்வஹிக்கை இத்யாதி$_3$) h (அது பின்னே) என்றது - ஆனல் பின்னை என்றபடி. $h_2$ (ஸமயம்பண்ணின இடம் இதுவோவென்னில்) என்றது - ஸமயம் பண்ணின வார்த்தை இதுவாகவேணுமோ, வேறென்றுனலோ என்றபடி. $h_3$ (இதுவோ) - இப்படிப் பிரிந்திருக்கையோ என்று வ்யங்க்$_3$யம், i பிரியில் த$_4$ரியோமென்னக்கூடுமோ? என்ன அருளிச்செய்கிறுர் (தூ$_3$தர்க்கித்யாதி$_3$) 37. "न जीवेयं क्षणमपि" (ந ஜீவேயம் க்ஷணமபி) 36. "ऊर्ध्वं मासान्न जीविष्ये" (ஊர்த்$_4$வம் மாஸாந்ந ஜீவிஷ்யே) என்று சொல்லக்கடவ அவர்கள் என்றபடி. j 'தேம்"-இனிமை. "கனி"-பழம். k (உன்



கனியித்யாதி$_3$) என் கார்யஞ்செய்து தலைக்கட்டவேண்டும்படியன்றோ k உன்னளவு இருக்கிறது. தேமாம்பழத்தை பு$_4$ஜித்து அது தேக்கிட்டு, ரஸாந்தரத்தையிட்டு மாற்றவேணுமென்று சூழ்ந்த பொழிலிலுண்டான சிவந்த தளிர் கோதுகிற சிறு குயிலே! (திருமாலை இத்யாதி$_3$) நீ அத்தலையிலே சென்று அறிவிக்குமத்தனையே வேண்டுவது; நம் குற்றங்களைப் பொறுப்பித்துப் பதறி நடந்துவரப்பண்ணுவார் அருகேயுண்டு; அவன் பதறி நடந்துவரும்படி சடக்கெனக் l கூவவல்லையாகில் (அவனையித்யாதி$_3$) இவள் படுகிற க்லேஶத்துக்கு ஒரு ப்ர

---

இனிய பழங்களையுடைய மாந்தோப்பில் சிவந்த தளிர்களை வாயலகால் கோதுகின்ற இளங்குயிலே! இனிமைமிக்க தேமாம்பழத்தைக் கொத்தி உண்டு, அது திகட்டுகையாலே வேறு ரஸத்தையிட்டு மாற்றவேணும் என்று மாமரம் சூழ்ந்த தோட்டத்திலே உள்ள மாந்தளிர்களைக் கோதி அந்தத் துவர்ப்பையிட்டுத் திகட்டிய இனிப்பை மாற்றிக்கொள்ளும் குயிலே! இவ்வளவு விவேகமுடைய நீ என்காரியத்தை நிறைவேற்றித்தர வேண்டாமோ? என்று கருத்து. *(திருமாலை ஆங்கு விரைந்து ஒல்லைக் கூகிற்றியாகில்)* நீ அவன் இருக்கும் இடம் சென்று அறிவிக்கும் இவ்வளவுதான் செய்யவேண்டும். அவனைவிட்டுப் பிரியாமல் திருவாகிய பெரியபிராட்டியார் கூடியிருக்கையாலே, அவள் நம்முடைய குற்றங்களைப் பொறுக்கச்செய்து பதறி ஓடிவரும்படி பண்ணுவாள்; இப்படி அவன் பதறி ஓடிவரும்படி விரைவில் கூவுவாயாகில். *(அவனை நான் செய்வன காணே)*

---

அளவு)-விவேகத்தால் வந்த பெருமை. உ இந்தப் பாட்டுக்கு அவதாரிகை கண்டுகொள்வது. அதாவது — 'நாங்கள் சொன்னல் அவன் வருமோ' என்று அவற்றுக்குக் கருத்தாக, "தடக்கைச் சதுரன்" என்று வீரஸ்ரீயும், "பொருத்தமுடையன்" என்று ப்ரணயித்வமும் உண்டாகையாலே வருகையில் தாழ்ச்சியில்லை, சொல்லுங்கோள் என்கிறுன் (சார்ங்கம் இத்யாதி$_3$) l "கூகிற்றியாகில்"-கூவவல்லையாகில். m அவத$_4$ாரணார்த்த$_2$ம் (அதுகாண்கையே இத்யாதி$_3$). 3.

யோஜநமில்லையென்றிறே நீ இருக்கிறது. அவன் வந்து கிட்டினவாறே அவன் பிரிந்து நெடுநாள் என்னைப் படுத்தின பாட்டையெல்லாம் உன் ஸந்நிதியிலே நான் அவனைப் படுத்தும்படி பாராய். ம அது காண்கையே போருமிறே உனக்குப் பலம். இவள்தான் அவனை என்னென்பது செய்வது? எனில்; முகத்தை மாறவைக்கத் திருமே அவன்கார்யம். நெடுநாள் பட்டினிகிடந்தவன் முன்னே சோற்றை இட்டுவைத்து உண்ணாதபடி தகைந்தால், கிடந்து க்லேஶிக்குமாபோலே, இவனும் கிடந்து துடிக்குமத்தனை. இவள்முகத்தாலேயிறே அவனுக்கு ஊண். மணநோக்கமுண்டானிறே. 8.

## ஐந்தாம் திருமொழி—ஒன்பதாம் பாட்டு

பைங்கிளி வண்ணன் சிரீதர னென்பதுஓர்
பாசத் தகப்பட் டிருந்தேன்
பொங்கொளி வண்டிரைக் கும்பொழில் வாழ்குயி
லே!குறிக் கொண்டிது நீகேள்

---

இவள்படுகிற துன்பத்திற்கு ஒரு பயனில்லை என்றல்லவோ நீ நினைத்திருக்கிறாய். இதனால் உனக்குப் பெரும்பயன் விளையப் போகிறது. அவன் என்னைவந்து அடைந்தவுடன் நீண்டநாள் பிரிந்து என்னைப் படுத்தின பாட்டையெல்லாம் உன்முன்பே அவன்படும்படி செய்கிறேன். அந்த அரிய காட்சியைக் காண்பதே உனக்குப் பெரும்பயனன்றோ. அப்படி இவள் அவனை என்ன செய்துவிடப்போகிறாள்? எனில்: நெடுநாள் பிரிந்திருந்த அவன் இவளோடு அணைய ஆர்வத்தோடு வரும்போது இவள் அவனை அணைவதில் விருப்பத்தைக் காட்டாமல் முகத்தைத் திருப்பிக்கொண்டால் இவள்பட்டபாட்டையெல்லாம் அவன்பட்டுத் தானே தீரவேண்டும். நீண்ட நாள் பட்டினி கிடந்தவன் முன்னால் சோற்றைவைத்து, உண்ணாதபடி கையைக் கட்டிப்போட்டால் துடிப்பதுபோலே இவனும் துடிப்பான். இவள் முகத்தாலேயன்றோ—(1 மூலமாகவன்றோ 2 முகத்தைக் காண்பதாலேயன்றோ) அவன்பட்டினி தீருவது. "வண்டார் பூமாமலர்மங்கை மணநோக்கமுண்டான்" [பெரியதிரு 8-10-1] என்று திருமங்கையாழ்வாரும் அருளிச்செய்தாரன்றோ. 8.



சங்கொடு சக்கரத் தான்வரக் கூவுதல்
பொன்வளை கொண்டு தருதல்
இங்குள்ள காவினில் வாழக் கருதில்
இரண்டத்தொன் றேல்திண்ணம் வேண்டும்.

**பதவுரை:—** **பொங்கு ஒளி வண்டு** — மிக்க ஒளியையுடைய வண்டுகளானவை, **இரைக்கும் பொழில்** — (மது பாநமயக்கத்தாலே) இசை பாடாநின்ற சோலையிலே, **வாழ்** — களித்து விளையாடுகிற, **குயிலே!** — கோகிலமே!, **இது**—நான் சொல்லுகிற இதனை, **நீ குறிக்கொண்டு கேள்**—நீ பராக்கில்லாமல் ஸாவதாநமாய்க் கேள்; **நான்**—நான், **பைங் கிளி வண்ணன் சிரீதரன் என்பது ஓர் பாசத்து** — பசுங்கிளி போன்ற நிறத்தையுடையனான ஶ்ரிய:பதி என்கிற ஒருவலையிலே, **அகப்பட்டு இருந்தேன்** — சிக்கிக்கொண்டு கிடக்கிறேன்; **இங்கு உள்ள காவினில்**—இந்தச்சோலையிலே, **வாழ கருதில்**—நீ வாழ நினைத்தாயாகில், **சங்கொடு சக்கரத் தான் வரக்கூவுதல்** — திருவாழி திருச்சங்குடையனான எம்பெருமான் (இங்கே) வரும்படி கூவுவதென்ன, **பொன் வளை கொண்டு தருதல்** — (நான் இழந்த) பொன்வளைகளைக் கொண்டுவந்து கொடுப்பதென்ன, **இரண்டத்து ஒன்று**— இவையிரண்டுள் ஏதாவதொரு காரியம், **திண்ணம் வேண்டும்**—நீ கட்டாயம் செய்து தீரவேண்டும்.

**வ்யா :—** ஒன்பதாம் பாட்டு. (க பைங்கிளியித்யாதி) b என்றால் பரிஹரித்துக்கொள்ளலாம் நோயன்றுகாண் நான்

---

*அவ:—* நயமாகச் சொல்லிப்பார்த்தும், குயில் கேளாமையாலே பயமுறுத்துகிறாள் தன் ஆற்றாமையாலே.

*வ்யா:— (பைங்கிளிவண்ணன்......அகப்பட்டிருந்தேன்)* என்னுடைய நோய் நானே போக்கிக்கொள்ளக்கூடியதில்லைகாண். அவனுடைய வடிவழகிலும், காதல் பரிமாற்றத்திலும் தோல்வி

---

ஒன்பதாம் பாட்டு. (பைங்கிளி இத்யாதி) க "பை"- அழகும், பசுமையும். 6 "பாசம்" - நேசமும், கயிறும்.

கொண்ட நோய். அவன் வடிவழகிலும் ப்ரணயித்வத்திலும் தோற்றுக் கால்நடையாடாதே, இருந்தவிடத்தே இருக்கும்படியன்றோ என் தசையிருக்கிறது. (சிரீதரனென்பது c ஓர் பாசத்தகப்பட்டிருந்தேன்) ஸ்ரீதரனாகிற வலையிலே என்னுதல்; ஸ்ரீதரவிஷயமாகிற ஸ்நேஹத்திலேயென்னுதல். ($c_2$ பொங்கொளியித்யாதி) என் ஆர்த்தத்வநி செவிப்படும்படியன்றிறே உன் செருக்கிருக்கிறது. மிக்க ஒளியையுடைத்தான வண்டுகள் மதுபானமத்தமாய்க்கொண்டு த்வநியாநின்றுள்ள பொழிலிலே, அது கேட்டுப் போதுபோக்கும்படியாயிறே உன் செருக்கிருக்கிறது. என் ஆர்த்தத்வநி செவிப்படுமளவல்ல உன் நிலை; ஆகிலும் உன் நெஞ்சிலே படும்படி அவதானம் பண்ணி, இத்தனையும் கேள். (சங்கித்யாதி) என் ஆபரணம் என் கையிலே தொங்குதல், அவன் கையில் ஆபரணம் என்

---

யுற்று, நடக்கமுடியாமல், இருந்தவிடத்திலே இருக்கும்படியன்றோ என் நிலை ஆகிவிட்டது. இப்படிப்பட்ட தனித்தன்மை வாய்ந்த நோய் தன்னுடையது என்பதை "ஓர் பாசம்" என்று காட்டுகிறாள். *(சிரீதரன் என்பதோர் பாசத்தகப்பட்டிருந்தேன்)* ஸ்ரீதரனாகிற வலையிலே அகப்பட்டிருந்தேன்; ஸ்ரீதரன் விஷயத்தில் காதல் நோய்வாய்ப்பட்டேன் என்றும் கொள்ளலாம். பாசம் என்பது வலையையும் காதலையும் குறிக்கும். *(பொங்கொளி வண்டிரைக்கும் பொழில் வாழ்குயிலே)* மிகுந்த ஒளியையுடைய வண்டுகள் பூக்களிலுள்ள தேனைக் குடித்து மயங்கி, அந்த மதுமயக்கத்தாலே பாடுகின்ற சோலையிலே போதுபோக்கும் செருக்கையுடைய உனக்கு என்னுடைய கூக்குரல் காதில்படாதன்றோ என்று கருத்து. *(குறிக்கொண்டிது நீ கேள்)* உன் நிலை அப்படியிருந்தபோதிலும், உன் நெஞ்சிலே படும்படி கவனத்தோடு என் வார்த்தையை நீ கேட்டே தீரவேண்டும். அப்படி என்ன அவசியம் என்பதைப் பிற்பாதியாலே விளக்குகிறாள்—*(சங்கொடு சக்கரத்தான் வரக் கூவுதல் பொன்வளைகொண்டு தருதல்......திண்ணம் வேண்டும்)* அவனைப் பிரிந்து மெலிந்து நான் இழந்த என் வளைகள் என்

---

b,c " ஓர்பாசம் " என்றதுக்குத் தாத்பர்யம் (என்றால் பரி



கையிலே தொங்குதல் செய்யும்படி பண்ணு. d ஒரு கார்யத்தாலே இரண்டும் தலைக்கட்டுமிறே. e அவன் கிட்டினவாறே இவள் / கையில் ஆபரணமும் இவளதாம்; அவன் வந்தவாறே அவன் கையில் ஆபரணமும் இவளதாம். f நான் உகந்தது பெறுதல். என்னுடைமை பெறுதல் செய்யும்படி பண்ணு. (g இங்கித்யாதி) நீதான் இச்சோலையிலே இருந்து ஜீவிக்க

---

கையில் தங்கும்படியாகவாவது நீ செய்யவேண்டும்; அல்லது அடியார்க்கு ஆபரணம்போலே காட்சியளிக்கும் சங்கு சக்கரங்களை ஏந்திய அவன் இங்கு வரக்கூவுவதன்மூலம் அவன் கையில் ஆபரணங்களான அந்த சங்குசக்கரங்கள் என்கையில் அகப்படும்படியாவது ( வசப்படும்படியாவது ) நீ செய்ய வேண்டும். நீ செய்யும் கூவுதலாகிற ஒரு காரியத்தாலே நான் விரும்பும் இந்த இரண்டு காரியங்களும் நிறைவேறுமன்றோ. எப்படியெனில்: குயில் கூவி அவன் வந்தவுடன் மெலிவு நீங்கப்பெற்று, பொன்வளையாகிற இவளுடைய ஆபரணமும் இவள் கையில் தங்கும். அவன் வந்தவுடன், அவன் கையில் ஆபரணங்களான சங்குசக்கரங்களும் இவள்வசப்படும். அதனாலே மிக்க திறமையோடு 'நான் உகந்த அவன்கையில் ஆபரணங்களையாவது எனக்குக் கொண்டுவந்து கொடு; இழந்த என் ஆபரணத்தையாவது நான் பெறும்படி செய்' என்று கூறுகிறாள். *(இங்குள்ள காவினில் வாழக்கருதில் இரண்டத்தொன்றேல் திண்ணம் வேண்டும்)* உனக்குப் பரமபோக்யமாயிருக்கும் இந்தச் சோலையிலே நீ இருந்து வாழவேண்டாமா

---

ஹரித்து இத்யாதி) d (ஒரு கார்யத்தாலே) ஒரு கார்யம்-அவன் வருகை. e விவரணம் (அவன் கிட்டினவாறே இத்யாதியும்). f இத்தாலென்ன அதிசயம் சொன்னதாய்த்து? என்ன (நான் உகந்தது இத்யாதி) நானுகந்தது-அவன் கையில் ஆபரணம். / இவை இரண்டும் ப்ரணயித்வத்தாலே மாறுடும். $c_2$ "பொங்கல்"-மிகுதி "இரைத்தல்"-ஶப்தித்தல். g "கா" - சோலை; "வாழக்கருதியேல்" - வாழ

---

/ "கையிலாபரணம் அவனதாம்; அவன் வந்தவாறே அவன் கையிலாபரணம் இவளதாம்"* என்று அரும்பதவுரைக்குப் பாடம்.

வேணுமே முந்துற முன்னம்; என் ஆர்த்தத்வநி செவிப்படா நிற்கச்செய்தே ஜீவிப்பதொரு ஜீவநமுண்டோ? b அதுகிடக்க, நான் முடிந்தால் இச்சோலைப் பரப்பு உனக்கு நோக்கித்தரு வார் ஆர்? i வானவர் நாட்டை அவன் நோக்கிவைத்துக் கொடுக்குமாபோலே காணும், இவற்றுக்கு இவள் நோக்கிக் கொடுக்கும்படி. 9.

## ஐந்தாம் திருமொழி—பத்தாம் பாட்டு

அன்றுல கம்அளந் தானை யுகந்துஅடி
மைக்கண் அவன்வலி செய்ய
தென்றலுந் திங்களு மூடறுத் தென்னை
நலியு முறைமை யறியேன்
என்றும்இக் காவி லிருந்திருந் தென்னைத்
ததர்த்தாதே நீயும் குயிலே!
இன்றுநா ராயண னைவரக் கூவாயேல்
/ இங்குற்று நின்றும் துரப்பன்.

மூதலில்? என் அழுகுரல் உன்காதில் பட்டுக்கொண்டேயிருந் தால் உனக்கு இங்கு வாழ்ச்சி கிட்டுமா? நெஞ்சில் ஈரமில் லாமல் என் அழுகுரலைக் கேட்டுக்கொண்டிருந்தாலும், பிரிவுத் துன்பத்தாலே நான் அழிந்துவிட்டால் உனக்கு இந்தச் சோலையை ரக்ஷித்துத் தருவது யார்? அதை நினைத்தாவது இரண்டில் ஒன்றை நீ செய்துதான் தீரவேண்டும். "வானவர் நாட்டையும் நீ கண்டுகொள்ளென்று வீடும் தரும் நின்று நின்றே" [திருவாய் 3-9-9] என்கிறபடியே நித்யஸூரிகளின் நாடான பரமபதத்தை அவன் ரக்ஷித்துவைத்துத் தன் அடி யார்க்குத் தருவதுபோலே இவளும் இந்தச் சோலையை ரக்ஷித்து வைத்து, இக்குயில் வாழக் கொடுத்திருக்கிருள் என்று விளங்குகிறது. 9.

இச்சித்தாயாகில், கீழ்ச்சொன்ன இரண்டிலே ஒன்று அவஶ்யம் செய்யவேணும். b தாத்பர்யாந்தரம் (அது கிடக்க இத்யாதி) i வேறு நோக்குவாரில்லையோ? என்ன அருளிச்செய்கிருர் (வானவர் நாடு இத்யாதி). 9.

/ (பா) 'இங்குத்தை'



பதவுரை:— அன்று—(மஹாபலி கொழுத்திருந்த) அக் காலத்தில், உலகம் அளந்தானை—மூவுலகங்களையும் அளந்து கொண்டவனுன எம்பெருமான் விஷயத்திலே, உகந்து—(நான் கைங்கர்யத்தை) ஆசைப்பட, அவன்—அவ்வெம் பெருமான், அடிமைக்கண்—(அந்தக்) கைங்கர்யத்திலே, வலி செய்ய—வஞ்சனைபண்ண, (அதற்கு நான் நோவு பட்டிருக்கிற ஸமயத்திலே) தென்றலும்—தென்றல் காற் றும், திங்களும்—பூர்ணசந்திரனும், என்னை — என்னை, ஊடு அறுத்து நலியும் முறைமை—உள்ளே பிளந்து கொண்டு புகுந்து ஹிம்ஸிக்கும் நியாயத்தை, அறியேன்—அறிகின்றிலேன்; குயிலே!—ஓ குயிலே! நீயும்—(என்னு டைய க்ஷேமத்தை விரும்புகின்ற) நீயும், என்றும்—எந்நாளும், இக்காவில்—இந்தச் சோலையிலே, இருந்து இருந்து — இடைவிடாமலிருந்துகொண்டு, என்னை—(ஏற் கனவே மெலிந்திருக்கிற) என்னை, ததர்த்தாதே—ஹிம்ஸி யாமலிரு; இன்று—இன்றைக்கு, நாராயணனை வர கூவா யேல் — ஶ்ரீமந் நாராயணன் இங்கே வரும்படி அவனை நீ கூவாமற்போனுயாகில், இங்குற்று நின்றும் — இந்தச் சோலையிலிருந்து, துரப்பன்—உன்னைத் துரத்திவிடுவேன்.

வ்யா:— பத்தாம் பாட்டு. (a அன்றுலகமளந்தானை உகந்து) b தன்பக்கல் ஆபிமுக்யம் பண்ணுதார்தலையிலும்

அவ:— ஸாம தாந பேதோபாயங்கள் குயிலிடம் பலிக் காமல் போனவுடன், 'இச்சோலையைவிட்டு உன்னைத் துரத்தி விடுவேன்' என்று தண்டோபாயத்தையும் பிரயோகிக்க முற் படுகிருள்.

வ்யா:— (*அன்றுலகம் அளந்தானையுகந்து*) தன்னிடம் அன்பு செலுத்தாதவர்கள் தலையிலும் திருவடிகளைத் தானே கொண்டுவந்து வைக்கின்றவன் என்னும் காரணத்தாலன்றோ

பத்தாம் பாட்டு. — (அன்றித்யாதி) a,b "உலகம்" என்றதைப்பற்ற அருளிச்செய்கிருர். (தன் பக்கலித்யாதி)

திருவடிகளைக் கொண்டுவந்து வைக்குமவனை ஆசைப்பட்டு. c உறங்குகிற ப்ரஜைக்கு முலை கொடுக்கும் தாயைப்போலே, d இவையறியாதிருக்கத் தானே அவற்றின் தலையிலே திருவடிகளை வைத்தவனை உகந்து. (அடிமைக்கண் அவன் வலிசெய்ய) பெறவுமாய் இழக்கவுமானத்தையோ நான் ஆசைப்பட்டது? பெற்றல்லது ஸத்தையில்லாத ப்ராப்தி$_2$பலமான கைங்கர்யத்தை நான் ஆசைப்பட, அவ்வடிமையிடையாட்டத்திலே அவன் மிறுக்கடிக்க. d (தென்றலித்யாதி$_2$) e அதில் வாசியறியாதவர்கள் என்னை நலியும் முறைமை அறிகிறிலேன்.

---

நான் அவனை அடைய ஆசைப்பட்டேன். உறங்குகிற குழந்தைக்கு முலை கொடுக்கும் தாயைப்போலே இச்சேதநர் அறியாதிருக்கும்போது, தானே அவர்களின் தலையிலே திருவடிகளை வைத்தவனையன்றோ ஆசைப்பட்டேன். *(அடிமைக்கண் அவன் வலிசெய்ய)* *(அடிமைக்கண்)* பெற்ருலும் பெறலாம், இழந்தாலும் இழக்கலாம் என்று இருக்கக்கூடிய விஷயத்தையோ நான் ஆசைப்பட்டேன்? அவனை அடைந்து பெறும் பெரும்பேருயிருப்பதாய், பெற்ருலல்லது உயிர்வாழ முடியாததான கைங்கர்யத்தையன்றோ நான் ஆசைப்பட்டேன். *(அவன் வலிசெய்ய)* அந்தக் கைங்கர்ய விஷயத்திலேயன்றோ அவன் வஞ்சனை செய்துவிட்டான். 'பட்டகாலிலே படும்' என்கிற ரீதியில் நான் படும் மற்ற துன்பங்களையும் கேளாய் என்கிருள் மேலே – *(தென்றலும் திங்களும் ஊடறுத்து என்னை நலியும் முறைமையறியேன்)*. 'அந்த அடிமையின் சிறப்பை அறியாத இத்தென்றலும், திங்களும் என்னை உள்ளே புகுந்து பிளந்து நலிகின்ற இது என்ன நியாயத்தில் சேரும் என்பது எனக்குப் புரியவில்லை. இவ்விரண்டும் அவன் விஷயமான கைங்கர்யத்தின் சிறப்பை அறியமாட்டாததோடன்றியில், அவனளந்த

---

c,e "அளந்து" என்றதைப்பற்ற அருளிச்செய்கிருர் (உறங்குகிற இத்யாதி$_2$.) c,d "உலகம்" என்கிற அசேதநஸமாதி$_4$க்குத் தாத்பர்யம் (இவையறியாதிருக்க இத்யாதி$_2$) d,e "தென்றலும் திங்களும்" என்ற சப்$_3$தா$_3$ர்த்த$_2$ம் (அதில் வாசியித்யாதி$_2$). e$_2$ "அதில் வாசியறியாத" என்றதின்



e$_2$ அடிமையில் வாசி அவையறியாவிறே. f அவனளந்த கால் வாசியுங்கூட அறியாதவையிறே. g ராவணன் நடுவே புகுந்து நலிந்தாற்போலே, தென்றலும் சந்த்$_3$ரனும் நடுவே வந்து என்னை நலிகைக்கீடாயிருப்பதொரு முறையுண்டாக அறிகிறிலேன். h தங்களுக்குக் கடவார்க்குக் h$_2$ கடவாரைச் சேர்க்க முறையுண்டித்தனையல்லது, நலிகைக்கு முறையில்லையிறே. i தன் i$_2$ புத்ரனுக்குண்டான பரிவில் காற்கூறுமில்லைகாணும்

---

கால் வாசியும் கூட (1. கால் பகுதிகூட, 2. திருவடிகளின் சிறப்புங்கூட) அறியமாட்டாவன்றே. பெருமாளும் பிராட்டியும் ஜனஸ்த$_2$ானத்திலே சேர்ந்திருந்தபோது ராவணன் நடுவே புகுந்து நலிந்ததுபோலே, இந்தத் தென்றலும், சந்திரனும் நடுவே புகுந்து என்னைத் துன்புறுத்துவது எந்த முறையில் சேர்ந்தது என்று அறிகின்றிலேன். இந்தத் திங்களும் தென்றலும் எம்பெருமானுல் படைக்கப்பட்டவையாகையாலே அவனுக்குப் புத்ர ஸ்த$_2$ானத்தில் இருப்பவை. நாயகியாயிருக்கையாலே நான் அவனுக்கு மிகவும் வேண்டியவள். இப்படிப் புத்ரஸ்த$_2$ானத்தில் உள்ள இவை பிதாவான அவனையும், மாத்ரு ஸ்த$_2$ானத்திலிருக்கும் என்னையும் சேர்ப்பது நியாயமேயொழிய, துன்புறுத்துவது நியாயமல்லவே. தென்றலாகிற வாயுவின் மைந்தனுன மாருதி பரிவுடன் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் இடையே தூது சென்ருன். புத்திரனுன அவ

---

விவரணம் (அடிமையிலென்று). f வாசியறியாத மாத்ரமன்றிக்கே, அவன் சேஷ்டித வாசியும் அறியாதென்கிருர் (அவனளந்த காலித்யாதி$_2$.) g தாத்பர்யம் சொல்லிற்று–கீழ்; சப்$_3$தா$_3$ர்த்த$_2$ம் அருளிச்செய்கிருர் (ராவணனித்யாதி$_2$). d ஊடு–நடுவு. d,h "நலியும் முறைமை" என்ற உறைப்பைப்பற்ற அருளிச்செய்கிருர் (தங்களுக்கித்யாதி$_2$). தங்களுக்குக் கடவார்—ஈச்வரன்; h$_2$ அவனுக்குக் கடவார்—பிராட்டி. h$_2$,i (கடவாரைச் சேர்க்க முறையுண்டித்தனை) என்றத்தால்—அப்படிச்செய்த திருவடிக்குண்டான ஆகாரமில்லை என்கிருள் (தன் புத்ரனுக்கென்று).

இக்காற்றுக்கு. (j என்னை நலியும் முறைமையறியேன்) k 84. "धन्या लक्ष्मण सेवन्ते पम्पोपवनमारुतं" (த3ந்யா லக்ஷ்மண! ஸேவந்தே பம்போபவநமாருதம்) என்று அவனும் கால்கண்ட மாத்ரத்திலே படுமதறியானே. காரேறுழக்கவுழக்குண்டு தளர்ந்தும், முறிந்தும் (தான்) கிடக்குமாபோலேயிறே அவன் காலாலே துகையுண்ணும்படி. (என்றுமித்யாதி3) அவை நலிகிற நலிவு காதா3சித்கமிறே; என்றுமொக்க இச்சோலை

---

ளுக்கு இருந்த பரிவில் கால்வாசி கூட இக்காலுக்கு (காற்றுக்கு) இல்லையே. (*என்னை நலியும் முறைமையறியேன்*)

84. பத்3மஸௌக3ந்தி4கவஹம் ஶிவம் ஶோகவிநாஶநம் ।
த4ந்யா லக்ஷ்மண! ஸேவந்தே பம்போபவநமாருதம் ॥
[ரா-கி 1-105]

[லக்ஷ்மணா! தாமரை செங்கழுநீர்ப் பூக்களின் மணத்தைக் கொண்டு வருவதும், கலப்பற்ற பசுந்தென்றலாயிருப்பதும், (என்னை அழியச் செய்வதன்மூலம்) துன்பத்தை ஒரேயடியாகப் போக்கவல்லதுமான பம்பாஸரஸ்ஸின் கரையிலுள்ள தோட்டங்களிலிருந்து வரும் காற்றை பா4க்3யவான்களே அநுப4விப்பார்கள்.] என்று ஸ்ரீராமபிரான் பிராட்டியைப் பிரிந்தபோது அருளிச்செய்தபடியே, பெருமாளாகிற அவரும் கால் (காற்றைக்) கண்ட மாத்திரத்தில் படாதபாடுபட்டாரே. "காரேறுழக்கவுழக்குண்டு தளர்ந்தும் முறிந்தும் கிடப்பேனை" [நாச்-திரு 13-4] என்று நான் எம்பெருமானிடம் படும்பாட்டையெல்லாம் அப்பெருமான் காலாலே (1. காற்றாலே. 2. பாத3த்தாலே) துகையுண்டு பட்டானன்றோ. (*என்றும் இக்காவில் இருந்துஇருந்து என்னைத் ததர்த்தாதே நீயும் குயிலே*) தென்றல் எப்போதாவது வீசும். திங்களும் இரவில் சில நேரங்களிலேயே வரும். ஆகையால் அவை என்னைத் துன்புறுத்துவது சில ஸமயங்களிலேயே. நீயோ இரவும் பகலும் இச்சோலை

---

ஓ,i3"அடிமையில் வாசியறியா" என்றதும், "புத்ரனுக்குண்டான பரிவில் கால் கூறுமில்லை" என்றதும் ஏகதாத்பர்யமாயே ப2லிக்கும். i1(புத்ரன்)—திருவடி. j,k "என்னை"



யிலேயிருந்து என்னை நோவுபடுத்தாதே. ஏகதே3ஶவாஸித்வத்தாலே வந்த பா3ந்த4வமே ஹேதுவாக நோவுபடுத்தாதே. (நீயும் குயிலே! இன்று நாராயணனை வரக்கூவாயேல்) l இத்தையுடையவனாய், உடைமைதான் அசித்ஸம்ஸ்ருஷ்டமாய்த்தென்று காற்கடைக்கொள்ளாதே, அழுக்குகப்பாரைப்போலே அதுதன்னோடே விரும்பும்படியாயிருக்கிறவனை வரும்படி கூவாயாகில். (இங்குற்று நின்றும் துரப்பன்) ஓட்டுவன். * ஒட்டுவன ஒட்டி இருத்துவன இருத்திச்செய்கிறாளல்லவிறே

---

யிலேயே இருந்துகொண்டு என்னைத் துன்புறுத்துகிறாய். நானும் நீயும் ஒரே சோலையில் வாழ்கிறோம் என்கிற இந்த உறவையே காரணமாகக்கொண்டு, நீ என்னைத் துன்புறுத்துவதைக் கைவிடுவாயாக. (*நீயும் குயிலே! இன்று நாராயணனை வரக் கூவாயேல்*) குயிலாகிற நீயும்—நரஸமூஹங்களாகிற சேதநாசேதநங்களை உடையவனாய், சேதநவஸ்துவான நம்மைப் போன்றவர்கள் அசித்தான தேஹத்தோடு கூடியிருக்கிறோம் என்று உபேக்ஷிக்காமல் நாயகன் நாயகியின் அழுக்கை உகப்பது போலே இந்த அழுக்குடம்போடு சேர்த்தே நம்மை விரும்பும் வாத்ஸல்ய கு3ணத்தோடுகூடிய நாராயணன் வரும்படி கூவாமல் இருந்தாயாகில். (*இங்குற்று நின்றும் துரப்பன்*) இந்தச் சோலையிலிருந்து உன்னைத் துரத்திவிடுவேன். துரத்த வேண்டியவைகளைத் துரத்தி, இருத்த வேண்டியவைகளை இருத்திக் காரியம் செய்யக் கூடிய வலிமை பிரிவால் துன்புறும் இவளுக்குக் கிடையாது. ஆகையால் தடி கல் முதலானவற்றைக் கொண்டு விரட்டுவேன் என்று இங்கு பொருள் கொள்ள முடியாது. அப்படியானால் 'ஓட்டுவன்' என்றதற்கு

---

என்கையாலே—அவனையொழிய என்னை நலியக் கூடாதென்றாய், அவனையும் நலியுமோவென்ன அருளிச்செய்கிறார் "धन्याः" (த4ந்யா இத்யாதி3). l ஸமாஸத்3வயத்தைப் பற்ற அருளிச்செய்கிறார் (இத்தையுடையவனாய் இத்யாதி3). m (ஓட்டி இருத்துவன்)—ஓட்டிவிடுவனென்றபடி. n (இருத்

---

* (பா) "m ஓட்டியிருத்துவன். n இருத்திச்செய்கிறாளல்லவிறே இவள்" என்று அரும்பதவுரைக்குப் பாடம்.

இவள். ஆனால் என்சொல்லுகிறதென்னில்: நான் முடிவன்; பின்னை இங்குநின்றும் புறப்பட்டுப் போமித்தனைகிடாய்; நானுளேனாய்ச் சோலை நோக்கித்தரவேணுமே; நான் முடிந்தால் பின்னை உனக்கு இருப்பில்லைகிடாயென்கிறாள். 10.

## ஐந்தாம் திருமொழி—பதினோராம் பாட்டு

விண்ணுற நீண்டடி தாவிய மைந்தனை
  வேற்கண் மடந்தை விரும்பி
கண்ணுற வென்கடல் வண்ணனைக் கூவு
  கருங்குயி லே!என்ற மாற்றம்
பண்ணுறு நான்மறை யோர்புது வைமன்னன்
  பட்டர்பி ரான்கோதை சொன்ன
நண்ணுறு வாசக மாலைவல் லார்நமோ
  நாராய ணாயவென் பாரே.

பதவுரை:— வேல் கண் — வேல் போன்ற கண்களையுடையளாய், மடந்தை—பெண்மைக்கு உரிய குணங்கள் நிறைந்தவளாய், பண் உறு நான்மறையோர் புதுவை மன்னன் பட்டர் பிரான் கோதை—ஸ்வரப்ரதானமான நான்கு வேதங்களையும் ஓதின ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழ்கிற ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத் தலைவரான பெரியாழ்வாருடைய மகளான ஆண்டாள், அடி விண் உற நீண்டு தாவிய மைந்தனை— திருவடியானது [1]பரமாகாசத்தளவும் போய்ப்பொருந்தும்

---

என்ன பொருள்? எனில்—'நான் என்னையே முடித்துக்கொள்வதன் மூலம் உன்னை இங்கிருந்து துரத்திவிடுவேன்' என்பதே இவள் நிலைக்குத் தகுந்தபொருள். 'நான் இருந்து இச்சோலையை ரக்ஷித்துத் தந்தாலன்றோ நீ இங்கு வாழமுடியும். என்னை முடித்துக்கொள்வதன் மூலம் இந்தச் சோலையைப் பாழாக்கி உன்னை இதிலிருந்து விரட்டிவிடுவேன். இந்த முறையில் உன்னைத் துண்டிப்பதற்கும் எனக்கு வழி இருக்கிறதாகையால், நீ நாராயணன் வரும்படி கூவியே தீரவேணும்' என்று கருத்து. 10.

---

திச் செய்கிறாளல்ல) — இருந்து செய்கிறாளல்ல 10.
என்றபடி.



படியாக நெடுக வளர்ந்து (உலகங்களை) வியாபித்த மிடுக்கையுடையவனான எம்பெருமானை, விரும்பி—ஆசைப்பட்டு, "கருங் குயிலே! என் கடல் வண்ணனை கண் உற கூவு" என்ற மாற்றம் — 'ஓ கரியகுயிலே! கடல்போன்ற திருநிறத்தையுடையவனான என் காதலனை நான் ஸேவிக்கும்படி நீ கூவு' என்று நியமித்த பாசுரமாக, சொன்ன—அருளிச்செய்த, நண்ணுறு வாசகம் மாலை—(எம்பெருமானை) நன்கு பேசிய (இந்த) ஸ்ரீஸூக்திமாலையை, வல்லார்—ஓதவல்லவர்கள், 'நமோ நாராயணாய' என்பார்—எம்பெருமானுக்கு அந்தரங்ககிங்கரராகப் பெறுவர்கள்.

அவ:— நிகமத்தில்; இத்திருமொழி அப்யஸித்தவர்கள், ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்தைப் பெறுவர் என்கிறாள்.

வ்யா:— (விண்ணுற நீண்டடி தாவிய மைந்தனை) ஒருவர் பக்கலிலே ஒன்றைக் கொள்ள நினைத்தால் அவர்களுக்குப் பின்னையொன்றும் சேஷியாதபடி கொள்ளுமவனை. (வேல்கண் மடந்தை விரும்பி) அவனை இப்பாடுபடுத்தும் இப்பரிகரமுடையவள்தான் ஆதரித்து. வேல்கள் ஒரு முகஞ்

---

*அவ:*— "இத்திருமொழியைப் பொருளோடு கற்றவர்கள் ஸ்வரூபத்திற்குத் தகுந்த கைங்கர்யமாகிற பயனைப் பெறுவர்கள்" என்கிறாள்.

*வ்யா:*— *(விண்ணுற நீண்டடி தாவிய மைந்தனை)* திரிவிக்ரமனாய் வளர்ந்து இரண்டடியாலே மூவுலகங்களையும் கொண்ட மிடுக்கை உடையவனான எம்பெருமானை. மைந்து—மிடுக்கு. ஒருவரிடமிருந்து ஒன்றைக் கொள்ளவேணுமென்று இவன் நினைத்துவிட்டால், அப்பொருளில் சிறிதும் அவர்களுக்கு ஆகாதபடி முழுவதையும் கொள்கின்றவன் இவன் என்று கருத்து. *(வேல்கண் மடந்தை விரும்பி)* பார்த்த பார்வையிலே அவனை அடித்து விழ்த்தவல்ல வேல்போன்ற கண்ணையுடைய உத்தமஸ்த்ரீயான இவள் அவனுக்குத் தோற்று அவனை விரும்பினாள். வேல்கள் ஒரு முகம் செய்து (1. ஒன்றுகூடி,' 2. ஒருமுகத்

செய்து நிற்கச்செய்தேகிடீர் தான் ஈடுபட்டது அவனுக்கு. a (கண்ணுற) அவன்றன்னை வேலுக்கிரையாக்கத் தேடுகிருள். என் கண்ணுக்கு விஷயமாம்படி ஶ்ரமஹரமான வடிவை யுடையவன் வரும்படி. (கூவு கருங்குயிலே என்ற b மாற்றம்) "உன் வடிவைக்காட்டி, அவன் வடிவுக்கு ஸ்மாரகமான நீ என்னையும் அவனையும் சேர்க்கவேணும்" என்று சொன்ன பாசுரமாய்த்து. (c பண்ணுறு நான்மறையோர்) ஸ்வரப்ர தா4நமான நாலு வேத3ங்களும் கைவந்திருக்குமவர்கள். (புதுவையித்யாதி3) ஶ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் திருமகள் சொன்ன. (d நண்ணுறு வாசகமாலை வல்லார்) 85. "यतो वाचो निवर्तन्ते" (யதோ வாசோ நிவர்த்தந்தே) என்று மீண்ட வேத3ம் போலன்றிக்கே, விஷயத்தை மறுபாடு ருவும்படி அருளிச்செய்த இத்தை அப்4யஸிக்கவல்லார்கள்.

திலே அமைந்து) நிற்கச் செய்தேயன்றோ நான் அவனுக்குத் தோற்றேன்' என்கிருள். (*கண்ணுற*) கண்காணும்படியாக. அவனை இக்கண்களாகிற வேலுக்கு இரையாக்கப் பார்க்கிருள். (*கண்ணுற என்கடல்வண்ணனை*) கண்டார் களைப்பையெல்லாம் ஆற்றும்படியான கடல்போன்ற தன்மைகளையுடைய திருமேனியை உடையவன் என் கண்காண வரும்படி. (*கூவு கருங்குயிலேயென்ற மாற்றம்*) "உன் வடிவைக்காட்டி அவன் வடிவை எனக்கு நினைவுறுத்திய நீ, நானும்அவனும் சேரும்படி கூவவேணும்" என்று சொன்ன பாசுரமாயிற்று இப் பதிகம். (*பண்ணுறு நான்மறையோர்*) உதா3த்தம் அநுதா3த்தம் முதலான ஸ்வரங்களை முக்கியமாகக் கொண்ட நாலு வேத3ங்களிலும் வல்லவர்கள் வாழ்கின்ற. (*புதுவை மன்னன் பட்டர் பிரான் கோதை சொன்ன*) ஶ்ரீவில்லிபுத்தூருக்குத் தலைவரான பெரியாழ்வாருடைய திருமகளான ஆண்டாள் உரைத்த. (*நண்ணுறு வாசக மாலை வல்லார்*) எம்பெருமானை நன்கு பேசிய இந்தச் சொல் மாலையைப் பொருளோடு கற்கவல்லார்.

பதினோராம் பாட்டு. நிக3மத்தில். (விண்ணுற இத்யாதி3)

a "கண்ணுற"-கண்காண. b "மாற்றம்"-சொல். c "பண்"-ஸ்வரம். d "நண்ணுறு" - நண்ணுறுகை -'கிட்டவுறுகை.



e (நமோ நாராயணயவென்பாரே) f "நமோ நாராயணய வென்று பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு" என்றிறே தமப்பனார் வார்த்தை. g இக்குடிக் காக உள்ளதோராசையிறே g3 இது. அதுவே ப2லமாகப்பெறு வர். h நல்லாண்டென்று நவின்று—பல்லாண்டென்றுரைப்

85. யதோ வாசோ நிவர்த்தந்தே। அப்ராப்ய மநஸா ஸஹ।
ஆநந்த3ம் ப்3ரஹ்மணோ வித்3வாந்।
ந பி3பே4தி குதஶ்சநேதி॥ [தை-ஆ 9-1]

[எந்த ப்3ரஹ்மத்தினிடமிருந்து, மனத்துடன் கூடிய வாக்குகள், (அதை) அளவிட்டறியாமல் திரும்புகின்றனவோ, அந்தப் பரமாத்மாவின் ஆநந்த3த்தை அறிந்தவன் எதனிடமும் பயப்படமாட்டான்.] என்று அவனைப் பேச முடியாமல் திரும்பிய வேத3ம்போலல்லாமல் அவனைப் பரிபூர்ணமாகப் பேசிய பெருமையுடையவை இப்பத்து பாசுரங்களும் என்று கருத்து. (*நமோ நாராயணய என்பாரே*) த்3வயத்தில் உத்தர க2ண்ட3த்தில் சொன்ன பரமபுருஷார்த்த2மான பரார்த்த2 கைங்கர்யத்தைப் பரமபத3த்திலே சென்று அடைவர்கள். "நமோ நாராயணய என்று பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே" [திருப்பல்லாண்டு 12] என்றல்லவோ பெரியாழ்வாரும் பரமபத3த்திற்குச் சென்று

e "நமோநாராயணய என்பாரே" என்று இத்தைப் ப2லமாகச் சொல்லுவானென்னென்ன (நமோநாராயணய இத்யாதி3). "நமோநாராயணய" என்று பரமபத3த்திலே பல்லாண்டு பாடுவார் என்று ஶப்3தா3ர்த்த2ம். f இதுவே ப2லமாகச் சொன்னபேருண்டோவென்ன, அருளிச்செய் கிருர் (நமோநாராயணயவென்று பல்லாண்டும் இத்யாதி3) அதாவது—அத்தலைக்கு மங்க3ளாஶாஸநம் பண்ணுகை இஷ்டமாகையாலே அது தோற்றச் சொல்லுகிருள் என்றபடி. g ஆனல் தமப்பனரைப்போலே தானும் சொல்ல வேணுமோவென்ன (இக்குடிக்காக) என்றது. g3 இது என் றது-மங்க3ளாஶாஸநம்; h மங்க3ளாஶாஸநம் பண்ணுகிற

பார்-நமோ நாராயணாயவென்று-b₂ பல்லாண்டும்-ஏத்துவரிறே; i தத்க்ரதுந்யாயத்தாலே பேறாகையாலே; j காத₃ாசித்கமாகை

---

அவனுகப்புக்காகப் பல்லாண்டு பாடுவதைப் பயனாக அருளிச் செய்தார். அஞ்சு குடியாகிற (அஸ்த₂ாநே ப₄ய ஶங்கை கொள்கிற) ஆழ்வார்கள் குடிப்பிறந்த அனைவரும் ஆசைப் படுவதன்றோ இப்பலன். அஞ்சு குடிக்கொரு ஸந்ததியாய்த் தோன்றிய இவளும் 'இப்பதிகத்தைக் கற்றார் அனைவரும் இந்தப் பலனையே பெறுவர்' என்கிறாள். "நல்லாண்டென்று நவின்று — பல்லாண்டென்றுரைப்பார் — நமோ நாராயணாய வென்று—பல்லாண்டும்—ஏத்துவர்" என்று திருப்பல்லாண்டு ப₂ல ஶ்ருதிப் பாசுரத்தின் அன்வயம்.

86. யதா₂க்ரதுரஸ்மிந் லோகே புருஷோ ப₄வதி,
தததே₂த: ப்ரேத்ய ப₄வதி [சா₂ந்தோ₃க்₃யம் 3-1-14]

[இந்த உலகத்தில் உபாஸகன் எப்படி உபாஸிக்கிறானோ, அப்படியே மேலுலகம் சென்றபிறகு ப₂லனை அனுப₄விக்கிறான்.] என்கிற தத்க்ரது ந்யாயத்தாலே, இவ்வுலகில் எம்பெருமானுக்குப் பரிந்து பல்லாண்டு பாடுகிறவர்கள் பரம பதத்திலும் அவனுக்குப் பரிந்து பல்லாண்டு பாடுகையாகிற அந்தப் பலனையே பெறுவர் என்கிறது. உறக்கம், பிணி, பசி, மூப்பு முதலான துன்பங்களோடு கூடிய இவ்வுலகில், சில ஸமயங்களில்தான் பல்லாண்டு பாடமுடியும். இத்துன்

---

துண்டே, அங்குப் போகவேண்டுகிறதென்? என்ன (நல்லாண்டென்று இத்யாதி₃) b₂,i,j "பல்லாண்டும் ஏத்துவரிறே. ஆகையாலே காத₃ாசித்கமாகை தவிருகையே உள்ளது" என்னுதல்; அன்றிக்கே, தத்க்ரதுந்யாயத்தாலே பேறாகையாலே ப்ராப்ய பூ₄மியிலே புக்கிருந்து இப்பாசுரம் சொல்லி அநுபூ₄விக்கப்பெறுவர் என்னுதல். i ஆனால் இங்கு மங்க₃ளாஶாஸநம் நித்யமாகவில்லையோ? என்ன அருளிச் செய்கிறார் (தத்க்ரதுந்யாயேத்யாதி₃) தத்க்ரதுந்யாயமாவது—86. "यथाक्रतुरस्मिन् लोके पुरुषो भवति तथेतः प्रेत्य भवति" (யதா₂க்ரதுரஸ்மிந் லோகே புருஷோ ப₄வதி தததே₂த: ப்ரேத்ய ப₄வதி) என்கிற ஶ்ருதி. க்ரது:-ஸங்கல்ப:; யாதொருபடி



தவிருகையேயுள்ளது; ப்ராப்ய பூ₄மியிலே புக்கிருந்து இப் பாசுரஞ் சொல்லி அநுப₄விக்கப்பெறுவர். 11.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

ஐந்தாம் திருமொழி முற்றிற்று.

## ஆறாம் திருமொழி—வாரணமாயிரம் ப்ரவேஶம்

அவ:— குயிலைப்பார்த்து, "நீ அழைத்துத்தரவேணும்" என்றவிடத்தில் அது அப்படியே செய்யக்கண்டிலள்; அவனைக் கடுகக் கிட்டிக்கொடு நிற்கக் கண்டிலள்; a கடுகக் கிட்ட

---

பங்கள் இல்லாத அந்தப் பரமபத₃த்தில் ஸதா₃ ஸர்வ காலமும் பல்லாண்டு பாடலாம். அத்தகைய பரம ப்ராப்யமான பரமபத₃த்திலே சென்று 'நமோ நாராயணாய' என்னும் இப் பாசுரத்தையே சொல்லிப் பல்லாண்டு பாடி எம்பெருமானை அனுப₄விக்கப் பெறுவர் என்று கருத்து. 11.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தா₃ஸன் இயற்றிய
ஐந்தாம் திருமொழி வ்யாக்₂யான விவரணம் முற்றிற்று.

## ஆறாம் திருமொழி வ்யாக்யான விவரணம்

வாரணமாயிரம் ப்ரவேஶம்.

சென்ற திருமொழியில் குயிலைப் பார்த்து, 'நீ எம்பெருமான் வரும்படி கூவவேணும்' என்று ப்ரார்த்தி₂த்த பின்பும், அது அப்படிச் செய்யக் காணவில்லை. அப்படிச் செய்திருந்தால் அவன் விரைந்து வந்திருப்பானன்றோ. அவன் விரைந்து

---

இங்கே ஸங்கல்பித்தான், அப்படியே இங்குநின்றும் புறப்பட்டுப்போய், இங்கே ஸங்கல்பித்த ப₂லத்தை அங்கே அநுப₄விக்கும் என்று அர்த்த₂ம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

அவ:— வாரணம் ப்ரவேஶம். a ஆனால் ஆறியிருக்கிறதுக்கென்? என்ன அருளிச்செய்கிறார் (கடுகக் கிட்ட இத்யாதி₃) b (அவஸங்கையானாள்) என்னுமளவும்

வேண்டும்படியாய்த்து, இவளுக்குப் பிறந்த த$_{3}$ஶை; அப்போதே கிட்டப்பெறாமையாலே மிகவும் அவஸந்நையானாள்; b அவன்றான், இவள் த$_{3}$ஶைக்கீடாக வந்து முகங்காட்டிற்றிலன்; c இத்தலையில் $c_1$ அவஸ்தை$_{2}$யறியாதானொருவனல்லவிறே; இன்னமும் d ஓரளவைப் பிறப்பித்து முகங்காட்டுகிறோம் என்றிருந்தான். e மயர்வறமதிநலமருளின

---

வரக் காணாமையாலே குயில் அவன் வரக் கூவவில்லை என்று உணர்ந்தாள். ‘வரும்போது வரட்டும்’ என்று ஆறியிருக்கக் கூடியவளல்லள் இவள். அவன் விரைந்து வராவிடில் உயிர் த$_{4}$ரிக்கமுடியாத நிலையை அடைந்தவளாகையாலே, அவனைச் சடக்கென அடையப்பெறாமல் மிகவும் வருத்தமுற்றாள். அவனும் இவள் நிலைக்குத் தக்கவாறு விரைந்துவந்து முகம் காட்டவில்லை. ஆனாலும் ‘இவள்படும் பாட்டை அவன் அறியாதவன்’ என்று சொல்லமுடியாது. இவளுடைய ஆர்த்தி மேலும் வளர்ந்தபின்பு, வந்து முகங்காட்டுவோம் என்று இருந்தான். நம்மாழ்வாருக்கும் அவன் இப்படியேயன்றோ அருளியது. “மயர்வற மதிநலம் அருளினன்” [திருவாய் 1-1-1] என்று திருவாய்மொழியின் தொடக்கத்தில் அஜ்ஞானஸேஷமு

---

கீழ்த்திருமொழியில் ப்ரமேயமாய், அவஸந்நையான இவள் ஸத்தையை த$_{4}$ரிப்பிப்பானாகத் தன் விஷயமான ஸ்வப்நாநுப$_{4}$வத்தைக் காட்டி த$_{4}$ரிப்பிக்கிறானென்று இத்திருமொழிக்கு ப்ரமேயம் அருளிச்செய்யக்கோலி, இப்படி அவஸந்நையான இவளுக்கு வந்து முகங்காட்டவொண்ணாமைக்கு ஹேது இன்னதென்று அருளிச்செய்வாராக அடிகொண்டு எழுந்திருக்கிறார் (அவன்றானித்யாதி$_{3}$) c இவள் த$_{3}$ஶையறியானோ? என்ன அருளிச்செய்கிறார் (இத்தலையிலித்யாதி$_{3}$) $c_2$ (அவஸ்தை$_{2}$யறியாதானொருவனல்லவிறே) “இப்படியிருக்க முகங்காட்டாதொழிகிறானென்னென்னில்” என்று ஶங்கையைப் பூரிப்பது. d (அளவைப் பிறப்பித்து) என்றது - பரமப$_{4}$க்தி பர்யந்தமான பாகத்தைப் பிறப்பித்து என்றபடி. e ஆனால் அந்த அவஸ்தை$_{2}$யை உடனே உண்டாக்கவாகாதோ? என்ன அருளிச்செய்கிறார் (மயர்வற



போதே முனியே நான்முகனு யிராதே; f மயர்வற்றபோதே பெறவேண்டும்படியான ஆற்றாமையுண்டாயிருக்கச்செய்தேயும், பரப$_{4}$க்திபர்யந்தமாக நடுவுண்டான அவஸ்தை$_{2}$களைப் பிறப்பித்திறே கொடுத்தது ஆழ்வார்க்கு; g வெளுத்த புடவைக்கு வாசங்கொளுத்துவாரோபாதியாக, இவ்வருகே பரமப$_{4}$க்திபர்யந்தமாகப் பிறந்தாலிறே அங்குப் போய் அநுப$_{4}$விக்கும் அநுப$_{4}$வம் ஸாத்மிப்பது; h முதலடியிலே இதுண்டானாலும் காலஞ்சென்றவாறே பிறப்பிப்பதும் ஒரு பாகமுண்டிறே; i பிராட்டிக்கூப் பெருமாளைப் பிரிந்தபோதே கூடவேணு

---

மற்ற ஜ்ஞாந ப$_{4}$க்திகளை அருளியிருந்தபோதிலும், ‘முனியே நான்முகனே’ [திருவாய் 10-10] என்னும் கடைசித் திருவாய்மொழியில் ‘அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன்’ [திருவாய் 10-10-11] என்னுமிடத்தில் பெற்ற பேற்றை முதலிலேயே பெறவில்லையே. முதலிலேயே ‘அவனைப் பெறவேணும்’ என்ற ஆற்றாமை இருந்தபோதிலும், ஆர்த்தியைப் படிப்படியாக வளர்த்துக்கொண்டுபோய், பரப$_{4}$க்தி, பரஜ்ஞாநம், பரமப$_{4}$க்தி ஆகியவற்றை விளைத்து, அதற்குப் பின்பன்றோ நம்மாழ்வார்க்கும் பேற்றை அருளினான். வெளுத்த புடவைக்குச் சிறிதுசிறிதாகச் சாயம் ஏற்றுவதுபோலே, இவ்வுலகில் பரமப$_{4}$க்திவரையில் விளைந்தாலன்றோ பரமபத$_{3}$த்திற்குச் சென்று அநுப$_{4}$விக்கும் அநுப$_{4}$வம் இவனுக்குப் பொருந்துவதாயிருக்கும். ‘ஸாக்ஷாத் பூ$_{4}$மிதே$_{3}$வியின் அவதாரமான இவ்வாண்டாளுக்குப் பிறப்பிலேயே பரமப$_{4}$க்தி உண்டே; ஆகையால் ஆழ்வாருக்குப் போலே காலம் தாழ்த்தவேண்டாமே’ எனில்: முதலிலே பரமப$_{4}$க்தி இருந்தபோதிலும், காலம் செல்லச் செல்ல ஆர்த்தி

---

மதிநலமருளின இத்யாதி$_{3}$) f க்ரமத்திலே செய்ததெங்கே? என்ன அருளிச்செய்கிறார் (மயர்வற்றபோதேயித்யாதி$_{3}$) g பரமப$_{4}$க்தியுண்டாக்கவேண்டுவானென்? என்ன அருளிச்செய்கிறார் (வெளுத்த புடவை இத்யாதி$_{3}$) h இவளுக்கு ப$_{4}$க்திரூபாபந்ந ஜ்ஞாநமன்றோ அடியிலே உண்டாக்கிற்று, ப$_{4}$க்தியுண்டேயென்ன அருளிச்செய்கிறார் (முதலடியிலே இத்யாதி$_{3}$) i ஆசையுண்டாயிருக்க, காலபாகத்தாலே ப$_{4}$க்தி

மென்னும் ஆசை உண்டாயிருக்கச்செய்தேயிறே, 36. "ऊर्ध्वं मासान्न जीविष्ये" (ஊர்த்வம் மாஸாந்ந ஜீவிஷ்யே) என்பது, அவர்தாம், 37. "न जीवेयं क्षणमपि" (ந ஜீவேயம் க்ஷணமபி)

விஞ்சுவதும் உண்டன்றே. பெரியபிராட்டியாரின் அவதாரமான ஸீதைக்கும் பெருமாளைப் பிரிந்தபோதே அவரோடு கூடவேணும் என்கிற ஆசை இருந்தபோதிலும், [115-வது பக்கத்தில் 36-வது ப்ரமாணத்தில் உள்ளபடி] 'ஒரு மாஸத்திற்குமேல் தரித்திருக்கமாட்டேன்' என்று ஒருவரம்பை யிட்டாளன்றே. [116-வது பக்கத்தில் 37-வது ப்ரமாணத்தில் உள்ளபடி.] அவரைப்போலே 'கணநேரமும் தரிக்கமாட்டேன்' என்று அருளிச்செய்யவில்லையே. ஆகையால், ஆசை உண்டாயிருந்தபோதிலும் காலக்ரமத்தில் பரமபக்தி முற்றினபோது பேற்றைக்கொடுப்பது என்னும் நியமம் பூமிப்பிராட்டியின் அவதாரமான இவள் விஷயத்திலும் பொருந்தும். ஆகையால் அவன் வராமல் தாமதம் செய்தான். இவள் அத்தாமதம் பொறுக்கமாட்டாமல் மிகவும் துன்புற்றாள். அதைக்கண்ட எம்பெருமான் "நாம் நேரே விரைந்துசென்று காட்சியளித்தால் இவளால் அதைத் தாங்கமுடியாது. ஆகையால் கனவில் சென்று இவளை மணம் புரிவதாக ஓர் அநுபவத்தைக் கொடுத்து, இவளுக்கு தரிப்பை உண்டாக்கி, காலக்ரமத்தில் பேற்றை அளிப்போம்" என்று திருவுள்ளம்கொண்டு, அப்படியே கனவில் அநுபவிப்பித்தபடியைச் சொல்லுகிறது இத் திருமொழி. இவ்விஷயத்தில் ஸீதாபிராட்டியைக் காட்டிலும் ஆண்டாளுக்குச் சிறப்பு உண்டு. 'கனவிலாவது பெருமாளைக்

முற்றினவிடமுண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (பிராட்டிக்கு இத்யாதி) "அவன், பாகம் பிறக்குந்தனையும் முகங் காட்டவொண்ணாதென்று வரவுதாழ்க்க, அது பற்றாமல் இவள் கிடந்து அலமாக்க, அத்தைக்கண்ட ஈஶ்வரன் 'நாம் கடுகக் கிட்டிக்கொடு நிற்கில் உடைகுலைப்படும்' என்று ஸ்வப்நமுகேந அநுபவிப்பித்து தரிப்பித்து, அநந்தரம் அநுபவிப்போமென்று விசாரித்து, ஸ்வப்நத்திலே வந்து அநுபவிப்பிக்க, அநுபவித்த ப்ரகாரத்தைச் சொல்லு



என்பதாய்த்து. j 87 "स्वप्नेऽपि यद्यहं वीरं" (ஸ்வப்நேऽபி யத்யஹம் வீரம்) ஸ்வப்நத்திலே கண்டாலும் து:க்க நிவர்த்தகராகவல்லராய்த்து. 87. "राघवं सहलक्ष्मणं" (ராகவம் ஸஹலக்ஷ்மணம்) k பிரிகிறபோது இருவரையும் கூடப் பிரிகையாலே காணுமிடத்திலும் இருவரையும் கூடக் காணவேணுமென்றிறே ஆசைப்படுவது. l அப்போது இருவரும் பிரிகையாலே "தங்களில் கூடினார்களோ இல்லையோ" என்றும் அதிஶங்கை பண்ணியிருக்குமே. 87. "पश्येयं यदि जीवेयं स्वप्नोऽपि मम मत्सरी" (பஶ்யேயம் யதி ஜீவேயம் ஸ்வப்நோऽபி மம மத்ஸரீ) என் அவஸ்தையறிந்து முகங்காட்டாமைக்கு அவரேயன்றிக்கே, இதுவும் என்னை நலியவேணுமோ என்றாளிறே. m தான் காணப்பெறாதபோதும் m பிறர் கண்டு

கண்டு தரிக்கலாம்' என்று ஆசைப்பட்ட ஸீதைக்கு எம்பெருமான் அந்த ஸ்வப்நாநுபவத்தைக் கொடுக்கவில்லை.

87. ஸ்வப்நேऽபி யத்யஹம் வீரம் ராகவம் ஸஹலக்ஷ்மணம் ।
பஶ்யேயம் யதி ஜீவேயம் ஸ்வப்நோऽபி மம மத்ஸரீ ॥
[ரா.ஸு. 34-21]

[ஸ்வப்நத்திலும் நான் லக்ஷ்மணனோடு கூடிய வீரரான ராகவரைப் பார்ப்பேனாகில் உயிர்வாழ்வேன்; (ஆனால்) ஸ்வப்நமும் எனக்கு விரோதியாயன்றோ உள்ளது.] என்று அவளே அருளிச்செய்தாளன்றே. 'கனவில் கண்டாலும் தன் துன்பங்களைப் போக்கக்கூடிய வீரர் பெருமாள்' என்னும் கருத்தை வீரஶப்தத்தாலே காட்டினாள். பிரியும்போது இளையபெருமாள், பெருமாள் ஆகிய இருவரையும் பிரிகையாலே, கனவில் காணும்போதும் இருவரையும் சேர்த்துக்காண ஆசைப்பட்டாள். பிரியும்போது மாயமானான மாரீசன் பெருமாளையும்

கிறது" என்று கூட்டி யோஜிப்பது. j இப்படி ஸ்வப்நம் தாரகமாமோவென்ன; தாரகமாகையாலே பிராட்டி ப்ரார்த்தித்தாளென்கிறார் (ஸ்வப்நேபி இத்யாதி). k,l "ஸஹலக்ஷ்மணம்" என்றது - இருவரையும் காணவேணுமென்னுதல்; இருவரும் கூடினார்களோவென்னுதல்; இத்தை அருளிச்செய்கிறார் (அப்போது இருவருமித்யாதி). m தான்

சொல்லக்கேட்டு த$_4$ரித்திருந்தாளிறே அவள்; n த்ரிஜடாதி$_3$கள் சொல்லக் கேட்டு த$_4$ரித்திருந்தாற்போலே இருக்கவல்லவளல்ல ளாய்த்து இவள். o இவள் தன்னையுண்டாக்கி அநுப$_4$விக்கவேணு மென்றிருக்குமே; ஸ்வப்நத்திலேயாகிலும் அநுப$_4$விப்பித்து த$_4$ரிப்பிப்போமென்று பார்த்தான். p இஜ்ஜந்துக்கள் கிடந்து உறங்காநிற்கச்செய்தே, ஸர்வேஶ்வரன்தான் உணர்ந்திருந்து, கர்மாநுகு$_3$ணமாகச் சில பதா$_3$ர்த்த$_2$ங்களை ஸ்ருஷ்டித்து, ஸ்வப்நத்திலே அநுப$_4$விப்பிக்குமென்று p$_2$சொல்லாநின்றதிறே.

---

இளையபெருமாளையும் பிரித்துவிட்டபடியாலே 'அவர்கள் இருவரும் மறுபடியும் ஒன்று சேர்ந்தார்களோ இல்லையோ?' என்னும் ஸந்தே$_3$ஹம் தீர கனவில் இருவரையும் சேர்த்துக் காண ஆசைப்படுகிருள். 'நான் படும்பாடு அறிந்து உயிர் த$_4$ரிக்கலாம்படி சடக்கென முகங்காட்டாமல் அவர் படுத்துவது போதாதென்று இக்கனவும் என்னிடம் விரோத$_4$ம் கொண்டு என்னையடையாமல் படுத்துகிறதே' என்னும் கருத்தை முன் எடுத்த ஸ்ரீராமாயண வாக்கியத்தில் ஸீதாபிராட்டி தெரிவிக்கை யாலே அவளுக்குப் பெருமாள் ஸ்வப்நாநுப$_4$வத்தைத் தரவில்லை என்று விளங்குகிறது. அப்படியானல், அவள் எப்படி உயிர் த$_4$ரித்திருந்தாள் எனில்: தான் கனவு காணுவிட்டாலும் த்ரிஜடை முதலான மற்றவர்கள் சொல்லக்கேட்டு உயிர்த$_4$ரித்திருந்தாள் அவள். அப்படி ஒருவர் சொல்லக்கேட்டு த$_4$ரித்திருக்கக்கூடிய இயல்வு உடையவளல்லளாகையாலே, இவ்வாண்டாளை உயிர் த$_4$ரிக்கச்செய்து அநுப$_4$விக்கவேணும் என்று திருவுள்ளங் கொண்டு, கனவிலே இவளுக்கு ஓர் அநுப$_4$வத்தைக்கொடுத்து உயிர்த$_4$ரிக்கச் செய்ததைச் சொல்லுகிறது இத்திருமொழி.

---

காணுவிட்டால் ஸ்வப்நத்திலே த$_4$ரித்தபடி எப்படியென்ன (தான் காணப்பெருத இத்யாதி$_3$). m$_2$ பிறர் காண்கை— த்ரிஜடை காண்கை. n அப்படியே இவளுக்கும் பிறர் முகே$_2$ந ஸ்வப்நத்தைக்காட்டி த$_4$ரிப்பிக்கலாகாதோவென்ன அருளிச்செய்கிருர் (த்ரிஜடாதி$_3$களித்யாதி$_3$). o ஆகையாலே (இவ்ள் தன்னை உண்டாக்கி) என்று கூட்டுவது. p ஆனல் லோகவ்யாவ்ருத்தமாக, பாணிக்$_3$ரஹணபர்யந்தமாக ஸ்வப்நந் தன்னை அவளுக்கு உண்டாக்குமோ? என்ன அருளிச்செய் கிருர் (இஜ்ஜந்துக்களித்யாதி$_3$). p$_2$ (சொல்லாநின்றதிறே)



q அப்பொதுவான நிலையன்றிக்கே, தன்னை அநுப$_4$விக்க வேணுமென்று இருக்கிறளாகையாலே, இவள் அநுப$_4$விக்க வேணுமென்று பாரித்திருந்தபடிகளில் ஒன்றும் குறையாத படி பாணிக்$_3$ரஹண பர்யந்தமாக ஸ்வப்நத்திலே அநுப$_4$விப் பிக்க அநுப$_4$வித்து, தான் அநுப$_4$வித்தபடியைத் தோழிக்குச் சொல்லி த$_4$ரிக்கிருளாயிருக்கிறது.

---

உபநிஷத்துக்களிலும், ப்$_3$ரஹ்மஸூத்ரத்தில் ஸந்த்$_4$யாதி$_4$ கரணத்திலும்—ஸம்ஸாரி ஜீவர்கள் உறங்கும்போது,

88. ஏஷ ஸுப்தேஷு ஜாக$_3$ர்த்தி காமம்
காமம் புருஷோ நிர்மிமாண: [கட$_2$ (2-5-8)]

[இந்த ஜீவர்கள் உறங்குகையில் பரமபுருஷன் (இவர்களை ஸ்வப்நத்தில் அனுப$_4$விப்பிப்பதற்காகப்) பதா$_3$ர்த்த$_2$ங்களைத் தன் விருப்பப்படி ஸ்ருஷ்டித்துக்கொண்டு விழித்திருக்கிருன்.] என்கிறபடியே ஸர்வேஶ்வரன் தான் உணர்ந்திருந்து அவர்க ளுடைய கர்மத்திற்குத் தக்கவாறு கனவிலே சில பொருள்களைப் படைத்து அநுப$_4$விக்கச் செய்வான் என்று சொல்லப்பட்டது. ஆண்டாளுக்கு எம்பெருமான் இங்கு கொடுக்கும் ஸ்வப்நாநு ப$_4$வம் மற்ற ஜீவர்களுக்குப்போலே கர்மானுகு$_3$ணமான அநு ப$_4$வம் அன்று. 'எம்பெருமானைப் பரிபூர்ணமாக அநுப$_4$விக்க வேணும்' என்று ஆசைப்பட்டிருக்கும் இவளுக்கு எம்பெரு மான் நிர்ஹேதுகமாகக் கொடுக்கும் அநுப$_4$வமாகையாலே, இவள் அநுப$_4$விக்கவேணுமென்று ஆசைப்பட்ட வைப$_4$வங் களில் ஒன்றும் குறையாதபடி கைத்தலம் பற்றுவது, தீவலம் செய்வது, அம்மி மிதிப்பது முதலான எல்லா விவாஹ வைப$_4$வங்களையும் இவளது கனவிலே அவன் அநுப$_4$விப்பித்த படியே பரிபூர்ணமாக அநுப$_4$வித்து, அதைத் தோழிக்குச் சொல்லி த$_4$ரிக்கிருள் இத்திருமொழியில்.

---

88. "एष सुप्तेषु" (ஏஷ ஸுப்தேஷு) இத்யாதி$_3$யாலே என்றபடி. q (அப்பொதுவான நிலையன்றிக்கே) என்றவிடத்திலே,

## ஆறும் திருமொழி — முதற்பாட்டு

வாரண மாயிரம் சூழ வலஞ்செய்து
நாரணன் நம்பி நடக்கின்றா னென்றெதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீ!நான்.

பதவுரை:— தோழீ—என் உயிர்த்தோழியே!, நம்பி—ஸகலகு₃ணபரிபூர்ணனான, நாரணன்—ஸ்ரீமந்நாராயணன், ஆயிரம் வாரணம் சூழ—ஆயிரம் யானைகள் சூழ்ந்துவர, வலம் செய்து நடக்கின்றான் என்று—ப்ரதக்ஷிணமாக எழுந்தருளுகிறானென்று (வாத்₃யகோ₄ஷாதி₃களால் நிச்சயித்து),

89. ஸ்வப்நேऽபி கேஶவாத₃ந்யம்
நபஶ்யதி மஹாமதி: ।
நித்₃ராऽபி (ஸ்வப்நேऽபி?) தஸ்ய
நாயாதி புருஷார்த்த₂விரோதி₄நீ ॥
[இதிஹாஸ ஸமுச்சயம் 32-128]
[மஹாபு₃த்₃தி₄மானான அவர் ஸ்வப்னத்திலும் கேஶவனைக் காட்டிலும் வேறு யாரையும் காண்பதில்லை. ப₄க₃வத₃னுப₄வமாகிற புருஷார்த்த₂த்துக்குத் தடையாயிருக்கும் நித்₃ரையும் (ஸ்வப்னத்திலனுப₄வமும் ?) அவருக்கு வருவதில்லை.] என்கிற ப்ரமாணத்தில், அன்புடையார் திறத்தில் எம்பெருமான் கர்மானுகு₃ணமாகவல்லாமல் அடியாருடைய ருசிக்கு அநுகு₃ணமாக ஸ்வப்நாநுப₄வங்களை அருளுவான் என்று கூறியது இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது.

89. "स्वप्नेऽपि केशवादन्यं न पश्यति महामतिः। स्वप्नेपि तस्य नायाति पुरुषार्थविरोधिनी ॥" (ஸ்வப்நேऽபி கேஶவாத₃ந்யம் நபஶ்யதி மஹாமதி: । ஸ்வப்நேபி தஸ்ய நாயாதி புருஷார்த்த₂விரோதி₄நீ॥) என்றத்தை அருளிச்செய்வர்.

இத்தால் — ஈஶ்வரன் ஸ்வப்நாநுப₄வம் பண்ணிவருமிடத்தில், ஸாமாந்யர் விஷயத்தில் கர்மாநுகு₃ணமாகவும் ஆஶ்ரிதர்விஷயத்தில் அவர்கள் ருச்யநுகு₃ணமாகவும் அநுப₄விப்பிக்குமென்று ப₄லிக்கிறதென்று அருளிச்செய்வர்.



எதிர்—எதிரே, பொன் பூரண குடம் வைத்து—பொன்மயமான பூர்ணகும்ப₄ங்களைவைத்து, புரம் எங்கும்—பட்டணம் முழுவதும், தோரணம் நாட்ட — தோரண ஸ்தம்ப₄ங்கள் நாட்ட (இந்த நிலைமையை), நான் கனா கண்டேன்—நான் ஸ்வப்நத்தில் அநுப₄வித்தேன்.

அவ:— முதற்பாட்டு. (வாரணமித்யாதி₃) வந்து புகுந்தால் அநுப₄விக்கையன்றிக்கே, "வாராநின்றான்" என்று ஊரிலே வார்த்தையானவாறே தொடங்கி அநுப₄விக்கவேணுமென்றாற்போலே காணும் இவள்தான் ஆசைப்பட்டிருப்பது. அவனுடைய க₃திசிந்தனை பண்ணுகிறாளாய்த்து.

வ்யா:— (வாரணமாயிரம் சூழவலஞ்செய்து) * உந்துமதகளிற்றன் பிள்ளையிறே. ‡ [ஸ்ரீ நந்த₃கோ₃பரும் ஆனையேறியிறே திரிவது. ஸ்ரீவஸுதே₃வரும் நந்த₃கோ₃பரும்

*1. அவ:—* வந்து புகுந்த பின்பு அநுப₄விப்பது போதாதாகையாலே, ஆண்டாளைக் கல்யாணம் செய்துகொள்ளக் கண்ணன் வருகின்றான் என்று ஊரிலே பேச்சு ஏற்பட்ட ஸமயம் தொடங்கி அநுப₄விக்க ஆசைப்பட்டிருக்கிறாளாகையாலே கனவிலும் அவன் நடந்து வருமிடத்திற்குச் செய்யப்பட்ட அலங்காரங்களையெல்லாம் காண்கிறாள்.

*வ்யா:— (வாரணமாயிரம் சூழ வலம்செய்து)* திருவாய்ப்பாடியில் கன்றுகளும் பசுக்களுமொழிய யானைகள் இருக்க இடமில்லையே எனில்: "உந்துமதகளிற்றன்" [திருப்பாவை 18] என்று எதிரிகளை எதிர்ப்பதற்கு யானைப் படையையும் உடையவர் நந்த₃கோ₃பர் என்று இவளே அருளிச்செய்கையாலே, அவர் பிள்ளையான கண்ணனும் ஆயிரம் யானைகள் சூழ வலம் செய்து வரக் குறையில்லை. ஸ்ரீநந்த₃கோ₃பரும் யானையேறித் திரிவாரென்று ப்ரஸித்₃தி₄ உண்டு. திருவாய்ப்பாடிக்குத் தலைவரான நந்த₃கோ₃பரிடம் யானைப்படை எப்படி வந்தது? எனில்:

‡ [குண்ட₃லிதம் சில தாளகோஶங்களிலில்லை]

தங்களில் மித்ரராய், 90. "एकं दुःखं सुखञ्च नौ" (ஏகம் து3:க்க2ம் ஸுக2ஞ்ச நௌ) என்றிருக்கிறபடியாலே இங்குத்தை கோ3ஸம்ருத்3தி4 அவரதாய், அங்குத்தை யானைகுதிரை இவரதாய், ஒன்றுய்ப் பரிமாறியிறே போருவது. இனி, த3த்த புத்ரர்களுக்கு இரண்டிடத்திலும் அம்ஶமுண்டாயிறேயிருப்பது. ஆகையாலே யானைக்குக் குறையில்லையிறே.] "ஆயிரம்" என்ற நிர்ப்ப3ந்த4த்துக்குக் கருத்தென்னென்னில்; தன்னேராயிரம் பிள்ளைகளும் தானுமாக வரும்போது அவர்களைத் தன்னில் தாழ்வாகவொட்டானே; ஆகையாலே "ஆயிரம்"

---

90. த்வம் வயஸ்யோ஽ஸி மே ஹ்ருத்3யோ ஹ்யேகம் து3:க்க2ம் ஸுக2ஞ்ச நௌ।
ஸுக்3ரீவம் ராக4வோ வாக்யமித்யுவாச ப்ரஹ்ருஷ்டவத் ॥ [ரா-கி5-18]

["நீ என் மனத்துக்கினிய நண்பனுனய்; நம்மிருவர்க்கும் ஸுக2து3:க்க2ங்கள் ஒன்றேயாகும்" என்று ராமபிரான் ஸுக்3ரீவனிடம் மகிழ்ச்சி மிகுந்த வார்த்தையைச் சொன்னுன்.] என்று பெருமாள் ஸுக்3ரீவனிடம் சொன்ன ரீதியில் வஸுதே3வரும் நந்த3கோ3பரும் நெருங்கிய நண்பர்களாயிருக்கிறபடியாலே, நந்த3கோ3பருடைய ஆநிரைச் செல்வம் வஸுதே3வருடையதாகவும், அவரிடமுள்ள யானை குதிரை இவருடையதாகவும் ஒன்றுகப் பரிமாற்றம் நடப்பதுண்டு. ஆகையால் அவர் சிறையில் இருந்தபோது அவருடைய யானைப் படைகள் நந்த3கோ3பரிடம் இருந்திருக்க இடமுண்டு. மேலும் த3த்த புத்திரர்களுக்குப் பிறந்த இடத்துச் செல்வத்திலும், புகுந்த இடத்துச் செல்வத்திலும் உரிமை ஏற்படுவது உண்டு. அந்த ரீதியில் பார்த்தாலும் கண்ணன் வஸுதே3வருடைய யானைப் படை சூழ வரக் குறையில்லை. "வாரணம் ஆயிரம்" என்று எண்ணிக்கையைக் குறித்ததற்குக் கருத்து என்ன? எனில்: 'தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர் நடையிட்டு வருவான்' [பெரியாழ் திரு 3-1-1] என்கிறபடியே தன்னுடைய தோழர்களான ஆயிரம்பேரும் தன்னைவிடத் தாழ்ந்திருப்பதைக் கண்ணன் பொறுக்கமாட்டானுகையாலே அவர்கள் ஒவ்வொருவரையும் தன்னைப் போலே யானை மேலே ஏற்றிக்கொண்டு வருவதற்கு



என்கிறது. * தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையேயொக்க அருள்செய்திறே வைப்பது. (a நாரணன் நம்பி) b உப4யவிபூ4தியுக்தன் வருமாபோலே இருக்கும் போலே காணும், ஸ்ரீமது4ரைக்தம் திருவாய்ப்பாடிக்கும் கடவராய் வரும்போது. (நம்பி) c உப4ய விபூ4தி யோக3த்தால் வந்த கு3ணங்கள் சொல்லக்கேட்டுப்போமித்தனையிறே; அக்கு3ணங்கள் பூர்ணமாக அநுப4விக்கலாவது அவதாரங்களிலேயிறே. d குறைவாளர்க்கு முகங்கொடுத்தவிடத்திலேயிறே

---

ஆயிரம் யானைகள் வேண்டுமன்றே. அதனுலே "வாரணம் ஆயிரம்" என்கிருள். "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே ஒக்க அருள் செய்வர்"[பெரிய திரு 11-3-5] என்கிறபடியே தன்னை அடைந்தவர்களுக்குத் தன்னையொத்த பெருமைகளைச் செய்து வைப்பவனன்றே எம்பெருமான். *(நாரணன் நம்பி)* ஸ்ரீமது4ரைக்கும், திருவாய்ப்பாடிக்கும் தலைவனுன கண்ணன் வரும்போது உப4யவிபூ4தி நாத2னுன நாராயணன் வருவது போலன்றே இருக்கிறது. *(நம்பி)* கு3ணங்களால் நிறைந்தவன். பரத்வத்தில் உப4யவிபூ4திகளையும் உடையவனுயிருப்பதால் கு3ணங்களால் நிறைந்தவனுயிருக்கிருன் என்று ஶாஸ்த்ரங்கள் சொல்லக் கேட்டுப் போகிறேமேயொழிய நேரே அநுப4விக்க முடிகிறதில்லை. அந்த கு3ணங்கள் முழுவதையும் அநுப4விக்கும்படியிருப்பது அவதாரங்களிலேயே

---

அரு:—முதற்பாட்டு. (வாரணமித்யாதி3) a,b க்ருஷ்ணன் பின்னை நாராயணனேன்னென்ன அருளிச்செய்கிருர் (உப4ய விபூ4தியுக்தனித்யாதி3) அதாவது — இவ்விரண்டுக்கும் கடவனுனத்தை உப4யவிபூ4திக்கும கடவனுனவோபாதியாக நினைத்திருக்குமாய்த்து அவன் என்றபடி. "நம்பி" என்றது— இவ்வூர்களுக்கு நிர்வாஹகனுகையாலே வந்த பூர்த்தி. c அன்றிக்கே, "நாரணன்" என்றது - க்ருஷ்ணனையாய், "நம்பி" என்று—நாராயணத்வப்ரயுக்தமான கு3ணபூர்த்தியேயாய், ஆனல் நாராயணத்வ ப்ரயுக்தமான ஸ்வாமித்வாதி, கு3ண பூர்த்தியுள்ளது பரத்வத்துக்கன்றே, அவதாரத்துக் குண்டோவென்ன (உபயவிபூதீத்யாதி) d "குறைவு"

d3 ஸௌலப்4யம் அநுப4விக்கலாவது; e தாழ்ந்தார்க்கு முகங் கொடுத்தவிடத்திலேயிறே இக்கு3ணங்கள் ஸ்பு2டமாவது. f செவ்வைக்கேடர் பக்கலிலேயே அவனுடைய ஆர்ஜவாதி3 கு3ணங்கள் காணலாம். g (நடக்கின்றானென்று) h91. "कुशस्थले निवसति स च प्रातरिहेष्यति" (குஶஸ்த2லே நிவஸதி ஸ ச ப்ராதரிஹேஷ்யதி) இன்னவிடத்திலே வந்து விட்டான், அணித்தாக வந்து விட்டானென்னும் அதுதானும் த4ரிப்புக்குடலாயிருக்கு

---

யன்றோ. மேலும் உயர்ந்தவர்களான நித்ய முக்தர்களுக்குத் தன்னை அநுப4விக்கக் கொடுக்கும் பரமபத3த்தில் ஸௌலப்4யம் (எளிமை), ஸௌஶீல்யம் (நீர்மை), ஆர்ஜவம் (நேர்மை) ஆகிய கு3ணங்கள் வெளிப்படமாட்டா. இருட்டறையில் விளக்குப்போலே குறைவாளர்களான ஸம்ஸாரிகளுக்குத் தன்னை அநுப4விக்கக் கொடுக்கும் இவ்விபூ4தியிலேயே இந்த கு3ணங்கள் வெளிப்படையாக விளங்கும். நேர்மையில்லாதவர்கள் விஷயத்தில்தானே இவனுடைய நேர்மை முதலான கு3ணங்களைக் காணமுடியும். பரமபத3த்தில் நேர்மை இல்லாதவர்களே கிடையாதே. ஆகையால் 'நம்பி' என்று அவதாரத்திலேயே உள்ள கு3ணபூர்த்தி உணர்த்தப்படுகிறது. *(நடக்கின்றானென்று)*

91. குஶஸ்த2லே நிவஸதி ஸ ச ப்ராதரிஹேஷ்யதி
[பா4ர-உத்3 73-1]

[ப4க3வான் க்ருஷ்ணன் (இன்று) குஶஸ்த2லத்தில் எழுந்தருளியிருக்கிறான்; நாளைக் காலை இங்கு எழுந்தருளுவான்.] என்கிறபடியே அன்புடையவர்களுக்கு இவன் தம்மை நோக்கி வருகின்ற செய்திகளெல்லாம் உயிர் த4ரிப்பதற்கு உறுப்பாயிருக்குமன்றோ.

---

என்றதுக்கு ஸௌலப்4யாதி3 கு3ணபூர்த்தியென்று தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறார் (குறைவாளர்க்கு இத்யாதி3) d ஸௌலப்4யம் ஸௌஶீல்யார்ஜவங்களைச் சொல்லுகிறது. e(தாழ்ந்தார்) தன் கு3ணங்களுக்கு விஷயமான ஸம்ஸாரிகள். f நித்யஸூரிகளிடங்களிலே கு3ணம் ப்ரகாஶியாதோ? என்ன அருளிச்செய்கிறார் (செவ்வைக்கேடர் இத்யாதி3) g h "நடக்கின்றான்" என்றதுக்கும், 'வந்து புகுந்தால்' (பக்கம் 299) என்ற



மிறே. i 92. "शापादपि शरादपि" (ஶாபாத்3பி ஶராத்3பி) என்னும் விஶ்வாமித்ராதி3களைக்கொடு வரவும் வேண்டாவிறே இங்கு. (எதிர் பூரணபொற்குடம்வைத்து) எதிரே பூர்ண கும்ப4ங்களை வைத்து. (i1 புர(ற)மித்யாதி3) "தோரணம் நிறைத்தெங்கும் தொழுதனர்" என்னக்கடவதிறே — இங்குள்ளார் அங்குப் போம்போது; அதுக்கும் j அடியானவர்கள் வரவுக்

---

92. ஶாபாத்3பி ஶராத்3பி

[ஶாபத்தாலும், அம்பாலும் (காரியம் ஸாதி4க்கவல்லேன்?).] என்கிறபடியே எந்த வகையிலும் காரியத்தை முடிக்கவல்ல விஶ்வாமித்ரர் ஸீதையிடம் பெருமாளைக் கொண்டுவர வேண்டியிருந்தது. இங்கு அத்தகைய ஒருவரும் தேவையில்லாமல் கண்ணன் தானே ஆண்டாளை நோக்கி வருகிற சிறப்பு உள்ளது. *(எதிர் பூரண பொற்குடம் வைத்து)* எதிரே ஜலம் நிறைந்த பூர்ண கும்ப4ங்களை வைத்து. *(புரமெங்கும் தோரணம்நாட்ட)* "தோரணம் நிறைத்தெங்கும் தொழுதனர்" [திருவாய் 10-9-2] என்கிறபடியே இங்குள்ளவர்கள் பரமபத3ம் செல்லும்போது அங்குள்ளவர்கள் தோரணம் கட்டுவதுபோலே, அப்பரமபத3த்திற்குத் தலைவன் இங்கு வரும்போது இங்குள்ளவர்கள் தோரணம் கட்டுவதைச் சொல்லுகிறது. புரம்—பட்டணம். 'புறம்' என்று பாட2ம் கொண்டால், ஊர்ப்புறமாகிற புறச்சோலைகளைக்

---

அவதாரிகாவாக்யத்துக்கும், (குஶஸ்த2லே நிவஸதி) இத்யாதி3 வாக்யத்துக்கும் ஈஷத்3பே4த3முண்டாகில் கண்டுகொள்வது. i ஏகனாக வரலாமோ, க4டகரும் வேண்டாவோ வென்ன அருளிச்செய்கிறார் (ஶாபாத்3பீத்யாதி3) ஶாபம் விஶ்வாமித்ரனுக்காய், ஶரம் பெருமாளுக்காகவுமாம். அன்றிக்கே, அஸ்த்ரஶிக்ஷை பண்ணுவிக்கையாலே இரண்டும் விஶ்வாமித்ரன்றனக்கேயாகவுமாம். இத்தால் பெருமாளைப்போலே க4டகரைக் கூட்டிவரவேண்டாதே, கு3ணபூர்ணனாகையாலே தானே வந்தான் என்றபடி. (ஶாபாத்3பி ஶராத்3பி) என்ற இரண்டாலும் ஸம்ஹரிக்கிறேன் என்று பரசுராமாழ்வான் தன மிடுக்காலே சொல்லும் வார்த்தை. j (அடியானவர்கள்)

குடலாக அலங்கரிக்கிறபடி சொல்லுகிறதிறே இங்கு. (கனாக் கண்டேன்) k கதிரில்லிபோலே இருக்கிற பா3ஹ்யேந்த்3ரியங்க ளாலே அநுப4விக்கிற ஜ்ஞாநங்கொண்டநுபவிக்கையன்றிக்கே, நேரே ஹ்ருத3யத்தாலே ஒருமுகஞ்செய்து அநுப4விக்கப்பெற் றேன்காண். ஆநுகூல்யமுடையார் சொல்லுதல், நீ சொல்லு தல்செய்யக் கேட்கையன்றிக்கே, நான் உனக்குச் சொல்ல லாம்படி அநுப4வித்தேன்காண்! 1.

## ஆறும் திருமொழி — இரண்டாம் பாட்டு

நாளை வதுவை மணமென்று நாளிட்டு
பாளை கமுகு பரிசுடைப் பந்தற்கீழ்
கோளரி மாதவன் கோவிந்த னென்பான்,ஓர்
காளை புகுதக் கனாக்கண்டேன் தோழீ!நான்.

பதவுரை:— தோழீ!— நாளை—நாளைக்கு, **வதுவை மணம்** என்று நாள் இட்டு-விவாஹமஹோத்ஸவமென்று முஹூர்த் தம் நிர்ணயித்து, **பாளை கமுகு பரிசு உடை பந்தல்கீழ்**—பாளைக ளோடுகூடின பாக்குமரங்களாகிற அலங்காரங்களை உடைத் தான மணப்பந்தலின் கீழே, **கோளரி மாதவன் கோவிந்தன் என்பான் ஓர் காளை**—நரஸிம்ஹனென்றும் மாத4வனென்றும் கோ3விந்த3னென்றும் திருநாமங்கள் பூண்ட ஒரு யுவா வானவன், **புகுத**—பிரவேசிக்க, **நான் கனாக் கண்டேன்**—.

---

குறிக்கிறது. (*கனாக்கண்டேன்*) ஸூர்ய கிரணம் நுழைவதற் காக வீடுகளில் அமைக்கப்பட்ட கதிரில்லிகள் (சன்னல்கள்) போலே இருக்கிற வெளி இந்திரியங்களால் அநுப4விக்கிற நனவில் பல விஷயங்கள் தோற்றுகையாலே ஒருமுகப்பட்ட அநுப4வம் கிடைக்காது. அப்படியல்லாமல் கனவில் காண் கையாலே நேரே நெஞ்சாலே ஒருமுகமாக அநுப4விக்கப் பெற் றேன். (*கண்டேன்*) அன்புடைய தாய்மார் முதலானோர் சொல் லியோ, தோழியாகிய நீ சொல்லியோ கேட்கப்பெறாமல் நான் உனக்குச் சொல்லலாம்படி நேரே அநுப4வித்தேன்காண்! 1.

---

என்றது - "அதுக்கடியானவன்" என்று ஏகவசநமாகச் சொல்லாமல் பூஜ்யவாசி. k கதிரில்லியாவது - இல்லியில் கதிர் என்றாய்-ஜாலகரந்த்4ரத்தில் கதிரென்றபடி. (கதிரில்லி)- ஸூக்ஷ்ம த்4வாரமென்றுமாம். i2 "புறம்"-ஊர்ப்புறம். 1



வ்யா:— இரண்டாம் பாட்டு. a (நாளையித்யாதி3) நாள் நெடுகவிட்டால் ஆற்றமாட்டாள்; b "இன்று" என்னில், வாய் புகுநீராய்த்தரிக்கமாட்டாள் ; c 93. "प्रहर्षेणावरुद्धा सा व्याजहार न किञ्चन" (ப்ரஹர்ஷேணாவருத்3த4ா ஸா வ்யாஜஹார நகிஞ்சந) திருவடி, ராமவிஜயத்தை விண்ணப்பம் செய்யக் கேட்டபோது,

---

2. *அவ:*— 'மணப்பந்தலின்கீழ் கண்ணன் புகுந்தபடியைக் கனாக்கண்டேன்' என்கிறாள்.

*வ்யா:— (நாளை வதுவை மணமென்று நாளிட்டு)* நாளைக்கு விவாஹ மஹோத்ஸவம் என்று நாள் நிச்சயம்செய்து. 'இன்று' என்றோ, 'நாலு நாள் கழித்து' என்றோ கூறாமல் 'நாளை' என்றதற்குக் கருத்து என்? எனில்: — நீண்டநாள் கழித்து என்றால் ஆண்டாள் பொறுக்கமாட்டாள். இன்று என்றால் ஆனந்த3ம் மிகுதியாகி, தாகம் எடுத்தவன் வேகமாகத் தண்ணீர் குடிக்கும்போது புரையேறி உயிரிழப்பது போலே, த4ரிக்க மாட்டாதவள் ஆவாள்.

93&94 ப்ரஹர்ஷேணாவருத்3த4ா ஸா வ்யாஜஹார ந கிஞ்சந ।
அப்3ரவீச்ச ஹரிஶ்ரேஷ்ட2: ஸீதாமப்ரதிஜல்பதீம் ॥
கிம் த்வம் சிந்தயஸே தே3வி கிந்நு மாம் நாபி4பா4ஷஸே॥
[ரா யு 116-15,16]

[ (ராமவிஜயத்தைக் கேட்டவுடன்) பேரானந்த3த்தாலே பீடிக் கப்பட்ட சீதாபிராட்டி ஒன்றும் பேசாமலிருந்தாள். பதிலு ரைக்காமலிருந்த தே3வியைப் பார்த்து "தே3வி! என்ன நினைக் கிறீர்கள்? ஏன் என்னிடம் வார்த்தை சொல்லவில்லை?" என்று ஹனுமான் உரைத்தான்.] என்கிறபடியே அநுமன் "ராமன்

---

அரு:— இரண்டாம் பாட்டு. (நாளையித்யாதி3) a "நாளிட்டு"-முஹூர்த்தமிட்டு. b "இன்று" என்றால் ஹர்ஷாதிஶயத்தாலே வாய்புகுநீராய் த4ரிக்கமாட்டா ளென்று சற்றுக் கூட்டிக்கொள்வது; c அப்படி ஹர்ஷாதி ஶயம் த4ரிப்பின்மைக்குடலாகக் கண்ட பேருண்டோவென்ன

பிராட்டி ஹர்ஷத்தாலே விக்கி வார்த்தை சொல்லமாட்டாதே யிருந்தாள் ; அவளுக்கு ஓடுகிற ப்ரீதியிலே சிறிது d அகஞ் சுரிப்படுத்தவேணுமென்று, 94. ''किं त्वं चिन्तयसे देवि'' (கிம் த்வம் சிந்தயஸே தே3வி) என்றான்; ''நான் விண்ணப்பம் செய்த ராமவிஜயம் இங்குத்தைக்கு அநபி4மதமோ ? ஒரு மறுமாற்றம் அருளிச்செய்யாதிருந்ததீ'' என்ன, ஓடின ப்ரீதி அரையாறுபட்டு, '' ஹர்ஷம் மிடறடைக்க, வார்த்தைசொல்லா திருந்தேனத்தனைகாண்'' என்றாளிறே. நாளை e விவாஹ மங்களமென்று நாளிட்டு. நாள் பொருந்தினாலிறே அல்லா தவைகொண்டு கார்யமுள்ளது ; இருவர் நாளுங்கேட்டு, இரண்டுதலைக்கும் பொருந்தும்படி நாளிட்டு, பாளையுடனே கொடுவந்து நட்ட கமுகையுடைத்தான பந்தலின் கீழே.

---

ராவணனைக் கொன்று வெற்றியடைந்தான்'' என்று விண்ணப் பம் செய்யக் கேட்டவுடன் பிராட்டி ஆனந்த3 மிகுதியாலே விக்கி வார்த்தை சொல்லமாட்டாமல் இருந்தாள். அந்த ஆனந் த3த்தைச் சிறிது சுருக்கினால்தான் அவளுக்கு த்4ரிப்பு ஏற்படும் என்னும் கருத்தாலே, '' 'ராமன் வெற்றியடைந்தான்' என்று அடியேன் சொன்னது தேவரீருக்கு அநிஷ்டமோ? '' என்று அநுமன் கூறியவுடன் ஸீதையினுடைய ஆனந்த3ம் பெருக் காறு பாதியாக வற்றினாற்போலே சுருங்கி த்4ரிப்பு ஏற்பட, '' ஆனந்த3ம் தொண்டையை அடைத்தபடியாலேயே வார்த்தை சொல்ல முடியாமலிருந்தேன் '' என்றாளன்றோ பிராட்டி. (*நாளிட்டு*) முதலில் நாள் பொருந்தினாலன்றோ மற்ற விவாஹ கார்யங்களைச் செய்யமுடியும். இருவர் நக்ஷத்திரங்களையும் பார்த்து இரண்டிற்கும் பொருந்தும்படி நாளிட்டார்கள் என்று கருத்து. (*பாளை கமுகு பரிசுடைப் பந்தற்கீழ்*) பாளையுடன்

---

அருளிச்செய்கிறார் (ப்ரஹர்ஷேணேத்யாதி3) d அகஞ்சுரிப் படுத்துகையாவது - நெல்லு முதலானவை கூடைகளிலே கொட்டி, அந்தக் கூடைகளைக் குலுக்கினால் நிரம்பின நெல்லு உள்ளே அமுங்கும்; அத்தைச் சொல்லுகிறது. ''வதுவை''-கந்யகை. e''மணம்''-விவாஹம். f''பரிசு''-அழகும்,



f பரிசு - பெருமைக்கும், அழகுக்கும் பேர். வேறோரிடத்தி னின்றும் கொடுவந்து நட்டாற்போலேயிராதே, அவ்விடத்தே முளைத்தெழுந்த சோலைபோலே அழகிதாயிருக்கை.

(g கோளரி) 95. '' यस्य सा जनकात्मजा-अप्रमेयं हि तत्तेजः '' ( யஸ்ய ஸா ஜநகாத்மஜா-அப்ரமேயம் ஹி தத்தேஜ: ) என்கிற பெருமையெல்லாம் தோற்ற மேனாணிப்போடே வந்தபடி. (மாதவன்) பரம ரஸிகனென்று தோற்ற நடந்து வந்தபடி. (கோவிந்தன்) ''விவாஹமாயிராநின்றது ; ஆராலே என்ன விக்4நம் வரும்'' என்றறியாமையாலே, எல்லாருக்கும் கையா ளாய் முகங்கொடுத்துக்கொடு வந்தபடி. (காளை) இவை யொன்றுமில்லையாகிலும் மேல்விழவேண்டும் பருவமிருந்த

---

கொண்டுவந்து நட்ட கமுகு (பாக்கு) மரங்களையுடைய அழகிய பந்தலின் கீழே. (*பரிசுடைப் பந்தல்*) பரிசு என்னும் பதம் பெருமையையும், அழகையும் குறிக்கும். வேறோர் இடத் திலிருந்து கொண்டுவந்து நட்டது போலிராமல், அவ்விடத்தி லேயே முளைத்தெழுந்த சோலைபோலே அழகாயிருந்தபடியைச் சொல்லுகிறது.

(*கோளரி*)மிடுக்குடைய சிங்கம்போலே வந்தபடியைச்சொல் லுகிறது. [272-ம் பக்கத்தில்82-வது ப்ரமாணத்தின்படி]*ஸ்ரிய:*பதி என்னும் பெருமையெல்லாம் வெளிப்படும்படி மிடுக்கோடு வந் தான் என்று கருத்து. (*மாதவன்*) பெரிய பிராட்டியாரின் நாதன். அவளோடு பரிமாறினவனாகையாலே, சிறந்த ரஸிகத்தன்மை வெளிப்படும்படி நடந்து வந்தான் என்று கருத்து. (*கோவிந்தன்*) ஆயர்களோடும், பசுக்களோடும் தாழநின்று பரிமாறுகிறவன். விவாஹ ஸமயத்தில் யாராலே என்ன தடைவரும் என்று அறியாமையாலே அனைவரோடும் தாழநின்று முகம் கொடுத்துக் கொண்டு வந்தான் என்று கருத்து. (*என்பான்*) இப்பெருமை களெல்லாம் உலகமறிந்த பெயர்களாயன்றோ உள்ளன என்று கருத்து. (*ஓர்காளை*) முற்கூறிய பெருமைகள் ஒன்றுமில்லை யானாலும் மேல் விழவேண்டும்படி ஒப்பற்ற காளைப் பருவத்

---

பெருமையும்; இரண்டாலும் பூலிதம்-அழகு. g ''கோள்''-

படி. தோழிமார், ப3ந்து4க்கள், மற்றுமுள்ளார் பருவமில்லை யென்னவொண்ணுதே. ( கனுக்கண்டேன் தோழீ நான் ) அவன் பருவம் என்னெஞ்சிலே b படுத்த, நீ படும் பாடறிதியே; அத்தலை இத்தலையாய், நான் உனக்குச் சொல்ல வேண்டும்படியாய்த்துக்காண். 2.

## ஆரும் திருமொழி — மூன்ரும் பாட்டு

இந்திர னுள்ளிட்ட தேவர் குழாமெல்லாம்
வந்திருந் தென்னை மகட்பேசி மந்திரித்து
மந்திரக் கோடி யுடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக் கனுக்கண்டேன் தோழீ!நான்.

பதவுரை:—இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாம் எல்லாம்—இந்திரன் முதலான தே3வஸமூஹங்களெல்லாம், வந்து இருந்து—(இங்நிலத்திலே) வந்திருந்து, என்னை மகள் பேசி—என்னைக் கல்யாணப் பெண்ணுக வார்த்தைசொல்லி, மந்திரித்து—(அதற்குமேல் ஸம்ப3ந்தி4கள் ஒருவர்க்கொருவர் செய்துகொள்ளவேண்டிய ஏற்பாடுகள் விஷயமாக) ஆலோசித்து முடிவுசெய்துகொண்டு, (பிறகு) அந்தரி—'து3ர்க்கை3' என்கிற நாத்தனுர், மந்திரக் கோடி உடுத்தி—கல்யாணப் புடவையை என்னை உடுத்தச்செய்து, மணம் மாலை சூட்ட—பரிமளம் மிக்க புஷ்பங்களையும் சூட்ட, தோழீ! நான் கனுக்கண்டேன்—.

---

தோடு வந்தான். தோழிகள், உறவினர், தாய்மார் முதலானுர் ''மணவாளன் பெண்ணுக்குப் பொருத்தமான பருவமுடையவனல்லன்'' என்று கூறமுடியாது. *(காளை புகுதக் கனுக்கண்டேன் தோழீ நான்)* எனக்கு அவனிடமுள்ள காதலைப் பெருக்குவதற்காக அவனுடைய காளைப் பருவத்தை என் நெஞ்சிலே ஏறும்படி வார்த்தை சொல்ல முன்பெல்லாம் நீ படாதபாடு படுவாயன்ரே. அந்தப் பாட்டை இப்போது நான் படும்படியாகி அவன் பருவத்தை உனக்குச் சொல்லும்படியாயிற்றன்ரே என்கிருள். 2.

---

மிடுக்கும், ஒளியும். b (படுத்த நீ படும் பாடு) - என்னெஞ்சிலே நீ ஏறிடப் படும் பாடு. 2.



வ்யா:—மூன்ரும் பாட்டு. (இந்திரனித்யாதி3) a96. "आत्मानं मानुषं मन्ये" (ஆத்மாநம் மாநுஷம் மந்யே) என்று—சூழ்த்துக் கொடுக்கும் அவதாரமல்லாமையாலே, இந்த்3ராதி3களும் வருவர்களிறே. ஶரப4ங்க3 ப4க3வான் ஆஶ்ரமத்தில் b பெருமாளைக் கண்டவன், " இவர் மனிச்சையேறிட்டுக் கொண்டிருக்கச் செய்தே நான் முகங்காட்டுகிறதென்?" என்று தறையிலே

---

*3. அவ:—* கூறைப் புடவை உடுத்தி மணமாலை சூட்டும் வைப4வத்தையும் அநுப4விக்கப் பெற்றேன் என்கிருள்.

*வ்யா:— ( இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாம் எல்லாம் வந்திருந்து )*

96. அப்3ரவீத் த்ரித3ஶஶ்ரேஷ்ட2ாந் ராமோ
தர்மப்4ருதாம் வர: |
ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் த3ஶரத2ாத்மஜம் ||
*[ரா-யு 120-11]*

["நான் என்னை மநுஷ்யனுகவும் த3ஶரத2ன் பிள்ளை ராமனுகவும் நினைக்கிறேன்'' என்று த4ர்மவான்களில் மேலான ராமன் தே3வ ஶ்ரேஷ்ட2ர்களைக் குறித்துச் சொன்னுன்.] என்று தன்னை மனிதனுகவே அறுதியிட்டு நடத்திக்காட்டிய ராமாவதாரம் அல்லாமையாலே, கண்ணனுக்கும், ஆண்டாளுக்கும் நடக்கும் இத்திருக்கல்யாணத்திற்கு இந்திரன் முதலான எல்லா தேவர்களும் வந்திருந்தார்கள். இதே இந்திரன் ஶரப4ங்க3 மஹர்ஷியின் ஆஶ்ரமத்தில் ஸ்ரீராமபிரானைக் கண்டவுடன் " இவர் மனிதனுகவே தம்மைக் காட்டிக்கொண்டிருக்கும்போது நாம் முகம் காட்டுவது தகாது'' என்னும் எண்ணத்தாலே பூ4மியில் இறங்காமலே சென்ரு

---

அரு:— மூன்ரும் பாட்டு. (இந்திரனித்யாதி3) aகே3ாப ஸஜாதீயனுய் அவதரித்தவிடத்திலே இந்த்3ராதி3கள் வருவர்களோவென்ன அருளிச்செய்கிருர் (ஆத்மாநம் மாநுஷம் மந்யே இத்யாதி3) 96 (ஆத்மாநம் மாநுஷம்) என்றவோபாதி 196.(அஹம் வோ பா3ந்த4வ:) என்றதுண்டானுலும்,ஈஶ்வரத்வம் கலந்து பரிமாறும் அவதாரமிறே என்று தாத்பர்யம். b (பெருமாளைக் கண்டவன்) - இந்த்3ரன். c (ப்ராஜாபத்யம்

காலபாவாதே போனுனிறே, 'ராவணவதா4நந்தரத்திலே முகங்காட்டுகிறோம்' என்று. இங்கு இங்ஙனன்றிக்கே, ஈஶ்வரத்வம் கலந்து பரிமாறும் அவதாரமாகையாலே, இந்த்3ராதி3கள் வந்து அங்கோடு இங்கோடாய், c ப்ராஜாபத்யம் பண்ணித் திரியாநின்றார்களாய்த்து. இந்த்3ராதி3தே3வர்கள் திரள் திரளாக வந்து தறையிலே காலபாவி, நற்றரிக்கவிருந்து ; இக்கார்யம் தலைக்கட்டினாலல்லது எழுந்திருப்பதில்லையென்றிருந்து. (என்னை d மகள் பேசி) ப்3ரஹ்மா தொடங்கி இக்குலத்திலுண்டான நன்மைகளெல்லாம் பேசி ; பெண்பேசி. (e மந்திரித்து) திரளில் நின்றும் எழுந்திருந்து போய் ரஹஸ்யமாக இருந்து, இத்தலைக்கும் அத்தலைக்கும் வேண்டுவன ஆராய்ந்து தங்களிலே அறுதியிட்டு. (மந்திரக் கோடி உடுத்தி) அறுதியிட்டபோதே ஒருவிக்4நம் பிறப்பதற்கு

---

னன்றோ, 'ராவணவத4ம் முடிந்த பிறகு சந்திப்போம்' என்று. இந்த க்ருஷ்ணவதாரம் இப்படியல்லாமல் மனிதத் தன்மையோடு ஈஶ்வரத் தன்மையையும் கலந்து காட்டும் அவதாரமாகையாலே, இந்திரன் முதலான தேவர்கள் எல்லாரும் வந்து அங்கும் இங்கும் திரிந்து விவாஹ காரியங்களை நிர்வஹிக்கத் தொடங்கினார்கள். (*தேவர்குழாம் எல்லாம்வந்து இருந்து*) இந்திரன் முதலான எல்லா தேவர்களும் கூட்டம் கூட்டமாக வந்து, தங்கள் இயல்பையும் மீறிக் கால் நிலம் தோய நின்றுதிடமாயிருந்து, 'இந்த விவாஹ கார்யம் நிறைவேறினாலல்லது இதைவிட்டுக் கிளம்புவதில்லை' என்று உறுதியாயிருந்தார்கள். (*என்னை மகள் பேசி*) என்னைப் பெண் பேசி. பிரமன் தொடக்கமாகப் பெரியாழ்வார் வரையில் இக்குலத்துக்குள்ள பெருமையெல்லாம் பேசி. (*மந்திரித்து*) செய்ய வேண்டிய காரியங்களை ஆலோசித்து முடிவு செய்து. விவாஹ ஸபை4யிலிருந்து எழுந்திருந்து போய், ரஹஸ்யமாக இருந்து பெண்ணுக்கும் பிள்ளைக்கும் செய்யவேண்டியவைகளை அனைவரும்கூடி ஆராய்ந்து முடிவுகட்டி. (*மந்திரக்கோடியுடுத்தி*) ஆராய்ந்து

---

பண்ணுகை) - ஆதி4பத்யம் பண்ணுகை. d ''மகள் பேசி''- பெண் பேசி. e ''மந்திரித்து'' - விசாரித்து. f ''உடுத்தி''-



முன்னே தலைக்கட்டவேணுமென்று எல்லாரும் குறைவறுத்துக் கொண்டுபோலே காணும் வந்தது. (மந்திரக்கோடி f உடுத்தி) மந்த்ரவாஸஸ்ஸை உடுத்தி. (மணமாலை g அந்தரி சூட்ட) நாத்தனாய், இதுக்கெல்லாம் கடவாளாய் அபி4மாநித்த து3ர்க்கை3யாய்த்து மாலைகளும் மது4வுஞ்சூட்டி ஒப்பித்தாள். இவளுடைய ஸ்பர்ஶந்தான் ஒன்று தங்கி அவனோடே அணைந்தாற்போலே இருக்கிறது காணும் இவளுக்கு. அவனுடன்

---

முடிவு கட்டியபின் விவாஹத்தைச் சில நாள் தள்ளி வைத்தால், ''ஶ்ரேயாம்ஸி ப3ஹு விக்4நாநி ப4வந்தி'' [நல்ல காரியங்களுக்குப் பல தடைகள் உண்டாகும்] என்னும் உலக வழக்கின்படி ஏதேனும் தடை உண்டாகிவிடுமோ என்று ப4யந்து, தடை வருவதற்கு முன் விவாஹத்தை முடித்துவிடவேண்டும் என்று கூறைப்புடவை மணமாலை முதலியவற்றை ஸித்3த4ப்படுத்திக் கொண்டே அனைவரும் வந்திருக்கிறார்கள் என்று விளங்குகிறது. (*மந்திரக்கோடியுடுத்தி*) வேதமந்திரத்தால் பரிசுத்தப்படுத்தப்பட்ட கூறைப்புடவையை மணமகளாகிற என்னை உடுத்தச்செய்து (*மணமாலை அந்தரி சூட்ட*) கிருஷ்ணவதாரத்தில் யஶோதையின் பெண்ணாகப் பிறந்தவளாகையாலே மணமகளான எனக்கு நாத்தனாராய், 'ஸஹோத3ரனின் காரியங்களைத் தானே முன்னின்று செய்யவேண்டும்' என்று அபி4மானித்து வந்திருந்த து3ர்க்கை3யே தேனொழுகும் மணம்மிக்க மணமாலையைச் சூட்டி என்னை அலங்கரித்தாள். அவனுடைய ஸஹோத3ரியின் ஸ்பர்ஶமாகையாலே இவளுடைய ஸ்பர்ஶம் அவனுடைய ஸ்பர்ஶத்திற்கு அடுத்தபடி இனிமையானதாக ஆண்டாளுக்கு இருக்கிறதாயிற்று. 'அவனோடு கூடப் பிறந்தவள் என்னைத் தொட்டு மணமாலை சூட்டப்பெற்றேன் காண்!' என்று தோழிக்குச் சொல்லுகிறாள். 'அந்தரி' என்று அந்தரமாகிற ஆகாஶத்தில் ஸஞ்சரிக்கும் து3ர்க்கை3யைச் சொல்லுகிறது.

---

மந்த்ரவாஸஸ் உள்பட உடுத்தி அலங்கரித்தார்கள். g ''அந்தரி'' அந்தரத்திலே - ஆகாஶத்திலே ஸஞ்சரிக்கிற து3ர்க்கை3க்குப்பேர். 3.

பிறந்தாள் என்னை ஸ்பர்ஶிக்கப் பெற்றேன் காண்! 97. “ब्र ह्मालङ्कारेणालङ्कुर्वन्ति” (தம் ப்3ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி) இருக்கிறபடி. 3.

## ஆறாம் திருமொழி — நாலாம் பாட்டு

நாற்றிசைத் தீர்த்தங் கொணர்ந்து நனிநல்கிப்
பார்ப்பனச் சிட்டர்கள் /பல்லா ரெடுத்தேத்திப்
பூப்புனை கண்ணிப் புனிதனோ டென்றன்னைக்
காப்புநாண் கட்டக் கனாக்கண்டேன் தோழீ!நான்.

பதவுரை:— தோழீ!—; பார்ப்பனர் சிட்டர்கள் பல்லார்—சிஷ்டர்களான பல ப்3ராஹ்மணர்கள்; நால் திசை—நான்கு திசைகளிலும் இருந்து, தீர்த்தம்-தீர்த்த2ங்களை, கொணர்ந்து-கொண்டுவந்து, நனி நல்கி—நன்றாகத்தெளித்து, எடுத்து ஏத்தி—உச்சஸ்வரமாக எடுத்து மங்க3ளாஶாஸநம்பண்ணி, பூ புனை கண்ணி புனிதனோடு—(பலவகைப்) புஷ்பங்கள் புனைந்த மாலையையுடையவனாய், பரமபாவநனான கண்ண பிரானோடு, என்றன்னை—என்னை (இணைத்து), காப்பு நாண் கட்ட—கங்கணங்கட்ட, நான் கனாக் கண்டேன்—.

---

97. “தம் பஞ்சஶதாந்யப்ஸரஸாம் ப்ரதி தா4வந்தி ஶதம் மாலா ஹஸ்தா:, ஶதமஞ்ஜநஹஸ்தா:, ஶதம் சூர்ணஹஸ்தா:, ஶதம் வாஸோஹஸ்தா:, ஶதம் பணஹஸ்தாஸ் தம் ப்3ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி ||” [ கௌஷீதகீ 1-34 ] [அந்த முக்த புருஷனிடம் ஐந்நூறு மதிமுக மடந்தையர் விரைகின்றனர்: நூற்றுவர் மாலையைக் கைக்கொண்டும், நூற்றுவர் மையைக் கைக்கொண்டும், நூற்றுவர் வாசனைப்பொடியைக் கைக்கொண்டும், நூற்றுவர் ஆடைகளைக் கைக்கொண்டும், நூற்றுவர் ஆப4ரணங்களைக் கைக்கொண்டும் அவனை ப்3ரஹ்மத்தின் அலங்காரத்தினால் அலங்கரிக்கின்றனர்.] என்று பரமபத3த்திற்கு முக்தாத்மா செல்லும்போது மதிமுக மடந்தையரான நித்யஸூரிகள் அவனை அலங்கரிப்பதுபோலே கண்ணனை ஆண்டாள் மணம் புரியும்போது து3ர்க்கை3யால் அலங்கரிக்கப் படுகிறபடி. (*கனாக்கண்டேன் தோழீ! நான்*) இப்படி விவாஹ கார்யங்களில் ஒன்றும் குறையாமல் அநுப4விக்கப்பெற்றே னன்றோ என்று தோழிக்குச் சொல்லுகிறாள். 3.

---

/ (பா) பல்லாண்டெடுத்தேத்தி.



வ்யா:— நாலாம் பாட்டு. (நாற்றிசைத் தீர்த்தங் கொணர்ந்து) பெருமாளுடைய திருவபி4ஷேகத்துக்கு ஸ்ரீவாநரவீரர்கள் நாலு ஸமுத்3ரத்திலுள்ள ஜலங்களையுங் கொண்டுவந்தாற்போலே, நாலு தி3க்கிலுமுள்ள தீர்த்த2ங்களைக் கொடுவந்து. (a நனி நல்கி) மிகவும் நல்கி. போர நீரைத் தெளிக்கவே ஆயுஸ்ஸு தொடக்கமான நன்மைகளெல்லாம் உண்டாமென்றிருப்பர்களிறே. (b பார்ப்பன இத்யாதி3) ஜாதிமாத்ரமாயிருக்கையன்றியே, ஒத்து அழகிதாகப்போய், ஶிஷ்டர்களென்று வ்யபதே3ஶ்யராய், சடங்குகள் அழகிதாகக் கைவந்திருக்கும் ப்3ராஹ்மணாக்3ரேஸரரெல்லாரும் திரண்டு c உதா3த்தமாக இரண்டு தலைக்கும் மங்க3ளாஶாஸநம்

---

*4. அவ:*— விவாஹத்தின் தொடக்கத்தில் கங்கணம் கட்டும் வைப4வத்தையும் அநுப4விக்கப் பெற்றேன் என்கிறாள்.

*வ்யா:*— (*நாற்றிசைத்தீர்த்தம் கொணர்ந்து*) ஸ்ரீராமபிரானுடைய பட்டாபி4ஷேகத்திற்கு வானர வீரர்கள் நாலு ஸமுத்3ரங்களிலுமுள்ள ஜலங்களையும் கொண்டுவந்தாற்போலே, நாலு தி3க்குகளிலும் உள்ள தீர்த்த2ங்களைக் கொண்டுவந்து, (*நனி நல்கி*) நன்றாகத் தெளித்து. ஶாஸ்த்ரங்களில் சொன்னபடி தீர்த்த2ங்களை நன்றாகத் தெளித்தால் ஆயுள் முதலான நன்மைகளெல்லாம் உண்டாகும் என்று அறுதியிட்டிருப்பவர்களாகையாலே தீர்த்த2 ப்ரோக்ஷணம் செய்கிறார்கள். (*பார்ப்பனச் சிட்டர்கள் பல்லார் எடுத்தேத்தி*) சாதியில் மாத்திரம் அந்தணர்களாயிராமல் வேதத்தை நன்கு ஓதியவர்களாய், நல்லொழுக்கம் உடையவர்கள் என்று அனைவராலும் கொண்டாடப் படுகிறவர்களாய், விவாஹம் முதலிய சடங்குகளை நன்றாகச் செய்து வைக்கக் கூடிய ப்3ராஹ்மணர்கள் அனைவரும் உச்ச ஸ்வரத்தில் மணமகளுக்கும் மணமகனுக்கும் வாழ்த்துக்கூறி. ‘பல்லாண்

---

அரு:— நாலாம் பாட்டு. (நாற்றிசையித்யாதி3) a “நனி”-மிகுதி. b“சிட்டர்”—ஶிஷ்டர். c “எடுத்தேத்தி”—

பண்ணி. (d பூப்புனை கண்ணிப் புனிதனோடு) e விவாஹ ஸமயத்தில் அவள் பேரொப்பனைபோலன்றிக்கே, ஒரு தனி மாலையை இட்டு ஸ்நாநம்பண்ணி, கையும் பவித்ரமுமாய், தீண்டிலுருண்டாகில் முகத்தைப் பொல்லாதாகப்பண்ணி, குந்திநடந்து, புடைவையொதுக்கி, விநீத வேஷத்தோடே வந்தபடி. f பெரியாழ்வார் பெண்பிள்ளையை ஆசாரவைகல்ய முண்டானால் கொடார்களிறே. (என்தன்னைக் காப்பு நாண கட்ட) நான் தொடுமதொழியத் g தொட்டாரைத் தொடுமள

---

டெடுத்தேத்தி'என்றும் பாடம். (*பூப்புனை கண்ணிப்புனிதனோடு*) விவாஹ ஸமயத்தில் மணமகளான அவளுக்கு எல்லா ஆப4ர ணங்களையும் இட்டு அலங்காரம் செய்திருப்பது போலல்லா மல், மணமகனான இக்கண்ணன் ஒரு தனி மாலையைச் சூட்டிக் கொண்டு நீராடி, கையில் பவித்திரத்தை த4ரித்து, அருகில் வருகிறவர்களை 'என்மேல் படாதீர்கள்' என்று கோபித்து, ஒருவரும் தன்மேல் படாதபடி ஒதுங்கி நடந்து, வஸ்திரத்தை ஒதுக்கிக்கொண்டு, மிகுந்த ஆசாரத்துடன், மிகப் பரிஶுத்3 த4னாய் வந்தபடியைச் சொல்லுகிறது. கண்ணனுக்கு இத்தகைய ஆசாரம் உண்டோ? எனில்: ஆசாரத்தில் ஏதேனும் குறைவு உண்டானால் பெரியாழ்வார் பெண்பிள்ளையைப் பெண் கொடுக்க மாட்டார்களாகையாலே இத்தனை ஆசாரங்களையும் வரவழைத் துக்கொண்டு வந்தான் என்று தோன்றுகிறது. (*என்தன்னைக் காப்பு நாண்கட்ட*) அவனைத் தொடவேண்டும் என்று நான் ஆசைப்பட்டது கிடைக்காவிடினும், இருவருக்கும் கங்கணம் கட்டும்போது அவனைத்தொட்ட உபாத்தியாயரை நான் தொடும் பேறு பெற்றேன். பரமனாகிற எம்பெரு

---

உச்சமாக ஏத்தி. d "புனைதல்"-கட்டல்; "கண்ணி"-மாலை. d,e "பூப்புனை கண்ணிப்புனிதன்" என்று பூக்களாலே புனையப்பட்ட மாலையையுடையவனுமாய், பவித்ரனானவ னென்கையாலே, தாத்பர்யம் (விவாஹ ஸமயத்தில் என்று). f விநீதவேஷத்தோடே ஸாசாரனாய் வந்தானென்றாக வேணுமோ? என்ன அருளிச்செய்கிறார் (பெரியாழ்வாரித் யாதி3). g (தொட்டாரை) என்றது - ஈஶ்வரனைத் தொட்ட



வாய்த்துக்காண். h பரபு3த்3தி4யாலே கிட்டப்பெற்றேன் காண். (தோழீ நான) பேற்றில் இனி இதுக்கவ்வருகில்லை; i இது பற்றுசாகத் தோழீ! பெறுவதுகாண். 4.

## ஆறும் திருமொழி — ஐந்தாம் பாட்டு

கதிரொளி தீபம் கலச முடனேந்திச்
சதிரிள மங்கையர் தாம்வந் தெதிர்கொள்ள
மதுரையார் மன்ன னடிநிலை தொட்டெங்கும்
அதிரப் புகுதக் கனாக்கண்டேன் தோழீ!நான்.

பதவுரை:— தோழீ!—; சதிர் இள மங்கையர் தாம்— அழகிய இளம் பெண்கள், கதிர் ஒளி தீபம்—ஸூர்ய னுடைய ஒளி போன்ற ஒளியையுடைய மங்க3ள தீ3பத்தை யும், கலசம் — பொற்கலசங்களையும், உடன் ஏந்தி— கையில் ஏந்திக்கொண்டு, வந்து எதிர் கொள்ள—எதிர் கொண்டுவர, மதுரையார் மன்னன்—மதுரையிலுள்ளார்க்கு அரசனான கண்ணபிரான், அடிநிலை தொட்டு—பாது3கை களைச் சாத்திக்கொண்டு, எங்கும் அதிர—பூ4மியெங்கும் அதிரும்படியாக, புகுத-எழுந்தருள, நான் கனாக் கண்டேன்—.

---

மான் நினைவாலே அவனை அணுகினேன் கங்கணம் கட்டப் பெற்றபோதே. (*தோழீநான்*) அவன் நினைவைக் காட்டிலும் மேலான பேறு ஒன்றுமில்லையே. அவன் நினைவு ஏற்பட்ட பிறகு, தோழீ! நான் பெறுவது ஸித்3த4மன்றோ. ப்ராப்ய ப்ராபகங்கள் அவன் நினைவே என்றபடி. 4.

5 *அவ:*— மணப்பந்தலுக்குள் தீ3பத்தோடும், பூர்ண கும்ப4த்தோடும் எதிர்கொள்ளப்பெற்று, எம்பெருமான் எழுந் தருள்வதை அநுப4விக்கப் பெற்றேன் என்கிறாள்.

---

ப்3ராஹ்மணனை என்றபடி. h விவரணம் (பர.பு3த்3தீ4த்யாதி3) அதாவது - பரஸம்மதியுமுண்டாய்த்து என்றபடி. உபாத்4 யாயர் கட்டுகையாலே, தொட்டாரைத் தொடுமளவாய்த்து என்றபடி. i ஸம்ஶ்லேஷம் வேண்டாவோ என்ன (இது பற்றுசாகவென்று) இதுபற்றுசாக - காப்புநூலடியாக. 4.

வ்யா:— அஞ்சாம் பாட்டு. (a கதிரொளி தீபம் கலசமுடனேந்தி) இதுக்கு ஒரு விச்சே2த3ம்வரில் மங்க3ளத்துக்குக் குறையாம் என்று ஆதி3த்யப்ரபை4போலேயிருக்கிற தீ3பம், அப்படியேயிருக்கிற பொற்கலசங்கள், இவற்றை த4ரித்து. (சதிரிளமங்கையர்) "மதிமுகமடந்தையர்" என்னக்கடவதிறே. தங்கள் பருவத்தாலும், வடிவழகாலும தங்களையே எல்லாரும் கடாக்ஷிக்கும்படியிருக்கிறவர்கள் தாங்கள் கவிழ்ந்து முன்னடியைப் பார்த்துக்கொடு வந்தெதிர்கொள்ள. (b மதுரையார் மன்னன்) c பரமபத3த்தை விட்டுப்போந்து விரும்பின ஊருக்கு நிர்வாஹகனிறே. பரமபத3த்திலிருப்புக்குமேலே ஓரேற்றம்போலேகாணும் அவ்வூருக்குக்கடவன் என்னுமது. "மன்னு வடமதுரை மைந்தனை" என்று இவள்தான் ஆத3ரிப்ப

---

*வ்யா:— (கதிரொளி தீபம் கலசமுடன் ஏந்தி)* மங்க3ளப் பொருள்களான மங்க3ள தீ3பத்திற்தும், பூர்ண கும்ப4த்திற்தும் ஓர் குறை ஏற்பட்டால் விவாஹ மங்க3ளத்திற்குக் குறையாகும் என்று கருதி, ஸூர்யனின் ஒளி போல் அணையாமல் ஒளிரும் மங்க3ள தீ3பங்களையும், அவ்வண்ணமே ஒளியில் குறையற்ற பொன்னாலான பூர்ணகும்ப4ங்களையும் த4ரித்து வந்தார்கள். வந்தவர்கள் யார்? எனில்—*(சதிரிள மங்கையர்)* "நிறைகுடவிளக்கமும் மதிமுக மடந்தையர் ஏந்தினர் வந்தே" [திருவாய்10-9-10] என்று பரமபத3த்தில் முக்தாத்மாவை எதிர்கொள்ளுகிறவர்களைப் போலே, இங்கு இருப்பவர்கள் பரமாத்மாவை எதிர்கொள்ளுகிறார்கள் என்கிறாள். *(தாம் வந்தெதிர்கொள்ள)* தங்கள் பருவத்தாலும், வடிவழகாலும் தங்களையே அனைவரும் காணும் படியிருக்கிறவர்கள் தாங்கள் கவனமாகக் கவிழ்தலையிட்டு முன்னடியைப் பார்த்துக்கொண்டு வந்து எதிர்கொள்ள. *(மதுரையார்மன்னன்)* பரமபத3த்தை விட்டுவந்து அதைக் காட்டிலும் விரும்பிய வடமதுரைக்கு நிர்வாஹகன் என்னுமிது பரமபத3 நாத2ன் என்பதைக் காட்டிலும் சிறப்புற்றதன்றோ. "மன்னு வடமதுரை மைந்தனை" [திருப்பாவை-5] என்றல்லவோ

---

அரு:— அஞ்சாம் பாட்டு. (கதிரொளி இத்யாதி3) b,c "மதுரையார் மன்னன்" என்றது அதிஶயமன்றே



தும் அங்கேயிறே. d ஒருவன் d2 ஒரு பிள்ளையை உகந்தருளப் பண்ணி, "இவர்க்கு என்ன திருநாமம் சாற்றுவோம்" என்றிருக்கச்செய்தே, "'அதுவே இதுவே' என்றழையாதே, என்னை மதுரைமன்னன் என்றழை" என்று ஸ்வப்நத்திலே அருளிச்செய்தாராம். e (அடிநிலையித்யாதி3) திருவடி நிலைகளைக் கோத்து. (எங்கும் f அதிரப் புகுத) மஹாப3லியஜ்ஞவாடத்திலே நடந்தபோது பூ4மி நெளிந்ததென்று g ஒரு க்3ரந்த2த்திலே கிடந்ததாய், "இதுக்குப் பொருளென்?"

---

இவள் திருப்பாவையிலும் விரும்பினாள். இந்தத் திருநாமத்தை எம்பெருமான் மிகவும் உகந்திருப்பான் என்பது பின்வரும் ஐதிஹ்யத்திலிருந்து விளங்குகிறது. ஒரு ஸ்ரீவைஷ்ணவன் ஓர் வெண்ணெய்க்காடும்பிள்ளை விக்3ரஹத்தை ப்ரதிஷ்டை2 செய்வித்து 'இப்பெருமாளுக்கு என்ன திருநாமம் சாற்றுவோம்' என்று ஆலோசித்துக் கொண்டிருக்கும்போது "அவன் இவன் என்று அழையாமல், என்னை மதுரை மன்னன் என்று அழை" என்று அவனுடைய கனவிலே அந்தப் பெருமாள் தோன்றி அருளிச்செய்தார். *(அடிநிலைதொட்டு)* திருவடி நிலைகளை (பாது3கைகளை) சாத்திக்கொண்டு. *(எங்கும் அதிரப்புகுத)* மணப்பந்தலில் எல்லா இடங்களும் அதிரும்படியாக எழுந்தருள.

98. யஸ்மிந் ப்ரயாதேऽஸுரபூ4ப்4ருதோऽத்4வரம்
நநாம கே2தா3த3வநிஸ் ஸஸாக3ரா।
ஸ்ஸ வாமநஸ் ஸர்வஜக3ந்மயஸ் ஸதா3
மமாஸ்து மாங்க3ள்ய விவ்ருத்3த4யே ஹரி: ||
[விஷ்ணுத4ர்மம் 43-31]

---

என்ன (பரமபத3த்தை இத்யாதி3). d மது4ரையையிட்டு நிருபிக்கிறது உகப்பு என்னுமதுக்கு ஓர் ஐதிஹ்யம் அருளிச்செய்கிறார் (ஒருவன் இத்யாதி3) d2 (பிள்ளை) – க்ருஷ்ணவிக்3ரஹம். a "கதிர்" - செங்நெற்கதிர்; "கலசம்"- கரகம்; "கதிர்"-அழகு. e "அடிநிலை"-பாது3கை. f "அதிர"- நெளிய. g (ஒரு க்3ரந்த2த்திலே கிடந்ததாய்) என்றவிடத்திலே
98. "यस्मिन् प्रयातेऽसुरभूभृतोऽध्वरं ननाम खेदादवनिस्ससागरा । स

என்று கேட்டவாறே, "ஸர்வேச்வரனன்றோ, சொல்ல வேணுமோ" என்றார்களாய்; இத்தை ஜீயர் கேட்டருளி ப4ட்டரைக் கேட்க; "இரப்பில் பதற்றத்தாலே அடியிட்டபடிகாணும்" என்றருளிச்செய்தாராம். ஒரு பூ4மிக்காக இப்படி பதறி வருமவன் இவளைப் பெற்று விடுகிறானோ ? (தோழீ! நான்) உகப்பாய் நீயிறே. 5.

## ஆறும் திருமொழி — ஆறும் பாட்டு

மத்தளங் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீ! நான்.

[எந்த ப4க3வான் அசுரவரசனான மாவலியின் யாக3த்திற்குச் செல்லும்போது கடலுடன் கூடிய பூ4மி வருத்தத்தாலே வளைந்ததோ, ஸர்வஜக3ந்மயனான அந்த வாமனன் எப்போதும் எனக்கு மங்க3ளங்களைப் பெருகச்செய்யட்டும்.] என்கிறவிடத்தில் மஹாப3லியின் யஜ்ஞபூ4மியில் வாமனன் நடந்தபோது பூ4மி நெளிந்தது என்று எழுதியிருப்பதைப் பார்த்து இதற்குப் பொருள் என்ன ? என்று சிலர் சில பண்டி3தர்களைக் கேட்டார்கள். அதற்கு அப்பண்டி3தர்கள் "இவன் ஸர்வேശ்வரனாகையாலே பூ4மி நெளியச் சொல்லவேணுமோ?" என்றார்களாம். இதைக் கேட்டிருந்த நஞ்சீயர் 'இப்பொருள் சரியோ' என்று ப4ட்டரைக் கேட்க, 'கொடுத்தே பழகியவன் யாசிக்க வந்தானாகையாலே பதற்றத்தாலே பூ4மி அதிரப்புகுந்தான்' என்பதே இதற்குப் பொருள் என்று அருளிச்செய்தாராம். மூவடி மண்ணுக்காக இப்படிப் பதறி வருகிறவன் ஆண்டாளைப் பெறுவதற்கு அதிர அடியிடுவது வியப்பில்லையன்றோ. (*கனாக் கண்டேன் தோழீ! நான்*) இப்படிக் கனவு கண்டது நானானாலும், அதற்கு என்னைவிட உகப்பவள் நீயன்றோ என்று கருத்து. 5.

वामनस्सर्वजगन्मयस्सदा ममास्तु माङ्गल्यविवृद्धये हरिः॥" (யஸ்மிந் ப்ரயாதே ऽஸுரபூ4ப்4ருதோ ऽத்4வரம் நநாம கே2தா3த3வநிஸ்ஸஸாக3ரா। ஸ வாமநஸ்ஸர்வஜக3ந்மயஸ்ஸதா3 மமாஸ்து மாங்க3ல்யவிவ்ருத்34யே ஹரி: ॥) என்றது அநுஸந்தே4யம். 5



பதவுரை: — தோழீ!—; மத்தளங் கொட்ட—மத்தளங்கள் அடிக்கவும், வரிசங்கம் நின்றூத—ரேகைகளையுடைய சங்குகள் நீண்டநேரம் ஊதவும், மைத்துனன் நம்பி மதுசூதன்—மைத்துனமை முறையையுடையனாய், பூர்ணனான கண்ணபிரான், முத்து உடை தாமம் நிரை தாழ்ந்த பந்தல் கீழ் வந்து—முத்துக்களையுடைய மாலைத்திரள்கள் தொங்கவிடப் பெற்ற பந்தலின் கீழே வந்து, என்னை கைத்தலம் பற்ற—என்னைப் பாணிக்3ரஹணம் செய்தருள, நான் கனாக் கண்டேன்—.

வ்யா:— ஆறும் பாட்டு. (மத்தளமித்யாதி3) ராஜகுலமுடையராய் இருக்குமவர்கள் விவாஹம் பண்ணப்புக்கால் செய்யுமாபோலே, மங்க3ளவாத்3யங்கள் மாறாதே நின்று முழங்க. ஸாந்தீ3பிநியோடே ஓதுவதுக்கு முன்னேபோலே காணும் இவளை விவாஹம் பண்ணிற்று. திருவாய்ப்பாடியிலே

6. *அவ:*— மது4ஸூத3னன் என்னைப் பாணிக்3ரஹணம் பண்ணியதையும் அநுப4விக்கப்பெற்றேன் என்கிறாள்.

*வ்யா:— (மத்தளம்கொட்ட வரிசங்கம் நின்றூத)* ராஜகுலத்தில் பிறந்தவர்கள் விவாஹம் பண்ணும்போது செய்வதுபோலே மத்தளம், சங்கம் முதலான மங்க3ள வாத்3யங்கள் இடைவிடாமல் முழங்கும்படியாக. "வேத3 மந்த்ரங்களைச் சொல்லிப் பாணிக்3ரஹணம் செய்தான்" என்று கூறாமல், "மங்க3ள வாத்3யங்கள் முழங்கப் பாணிக்3ரஹணம் செய்தான்" என்று வேத3ம் ஓதாதவர்களுடைய விவாஹம்போலே சொல்லலாமோ ? எனில்:- 'ஸாந்தீ3பினியிடம் வேதம் ஓதுவதற்கு முன்பே இவளைக் கைப்பிடித்தான் போலும் என்பது பெரியவாச்சான்பிள்ளையின் ஸமாதா4னம். திருவாய்ப்பாடியில் நெடுங்காலம் வளர்ந்து, அதற்குப்பின்னே ஸாந்தீ3பினியிடம் வேத3ம் ஓதச் சென்றான் என்பது சரித்திரம். ஆயர் சிறுமியாகத் தன்னை அபி4மானித்

அவ:— ஆறும் பாட்டு. (மத்தளமித்யாதி3) ராஜகுலத்தை உடையராயிருக்குமவர்களென்பானென்? ராஜாவன்றோ என்ன அருளிச்செய்கிறார் (ஸாந்தீ3பிநி இத்யாதி3)

நெடுங்காலம் வளர்ந்து, பின்பிறே அங்குப்போய்த்தது. முத்துமாலைநிரைகளானவை தலையிலேவந்து தாழ்ந்த பந்தலின் கீழே. (மைத்துனன் நம்பி) b நப்பின்னைப் பிராட்டியோடுண்டான ஸம்ப$_3$ந்த$_4$ம் தன்னோடும் உண்டென்றிருக்கிறாள் காணும். (மதுசூதன்) மற்றும் மைத்துனமை முறையுண்டென்று ஆரேனும் வந்து கைப்பிடிக்கப்பார்க்கில், அவர்களையும் அழியச்செய்து தானே ஸ்வீகரிக்கவல்லவனாய்த்து. தன் உடைமையை, பிறர் "என்னது" என்னும்போது அவர்களை அழியச்செய்து கைக்கொள்ளவல்லனாய்த்து.

---

திருக்கும் ஆண்டாளை வேத$_3$ம் ஓதுவதற்கு முன்பே கைப்பிடித்தான் என்பது பொருத்தமே. *(முத்துடைத் தாமம் நிறை தாழ்ந்த பந்தற்கீழ்)* முத்து மாலை வரிசைகள் தலையிலே வந்து தொடும்படி தொங்கவிடப் பெற்ற பந்தலின் கீழே. *(மைத்துனன் நம்பி)* கல்யாணம் செய்வதற்கு உறவு முறையை உடைய கண்ணனாகிற எம்பெருமான். நப்பின்னைப் பிராட்டியைப் போலே அவனோடு உறவு முறையை உடைய ஆயர் சிறுமியாகத் தன்னை ஆக்கிக் கொண்டிருக்கிறாளன்றோ ஆண்டாள். *(மதுசூதன்)* மது$_4$ முதலான விரோதி$_4$களை அழித்தவன். ஆயர் சிறுமியான இவ்வாண்டாளை மணம் புரிவதற்கு உறவுமுறை கொண்டாடி வேறு ஆரேனும் வந்தாலும் அவர்களையும் அழித்துத் தானே கைப்பிடிக்க வல்லவன் என்று கருத்து. தன் உடைமையை மற்றொருவன் ஆக்ரமிக்கும்போது மது$_4$வை அழித்ததுபோலே அவர்களை அழித்துத் தன் உடைமையைத் தான் கைக்கொள்ளுகிறவனன்றோ இவன்.

---

க்ஷத்ரியனுக்கொழிய அத்$_4$யயநம்பண்ணவொண்ணாமை யாலே அப்போதாய்த்து ராஜத்வம் தோற்றிற்று என்றபடி. a$_2$ (ஓதுவதுக்கு) - அத்$_4$யயநத்துக்கு. b "உன் மைத்துனன் பேர்பாட" என்று - நப்பின்னைப் பிராட்டிக்கன்றோ மைத்துனன் முறையுள்ளது, பெரியாழ்வார் பெண்பிள்ளையான தனக்குச் சொல்லலாமோ? என்ன அருளிச்செய்கிறார் (நப்பின்னை இத்யாதி$_3$) அதாவது - தானும் கோ$_3$பிகை என்றிருக்கையாலே என்றபடி.



(வந்தென்னைக் கைத்தலம்பற்ற) "அவன்தானே வந்து கைப்பிடிக்கை முறை" என்றிருப்பாளொருத்தியிறே இவர்கள் தான். c (கைததலம் பற்ற) d 99. "न प्रमाणीकृतः पाणिः बाल्ये बालेन पीडितः" (ந ப்ரமாணீக்ருத: பாணி: ப$_3$ால்யே ப$_3$ாலேந பீடி$_3$த:) என்னை அறியாவிட்டால் தம்மையறியாதொழிய வேணுமோ? தாம் பருவம் நிரம்பாதிருக்கத் தாம் என்னைக் கையைப் பிடித்தது மறந்தாரோ? "'பாணிக்$_3$ரஹணம்' என்று ஒரு பத$_3$த்தால் சொல்லாதே, d$_2$ 'பீடித:' (பீடி$_3$த:) என்பானென்?" என்று எம்பாரைச் சிலர் கேட்டார்கள்; "'அங்கண்ணனுண்ட என்னாருயிர்க்கோதிது' என்கிறபடியே பிடித்தபிடியிலே அநந்யார்ஹையாம்படி பிடித்து" என்றாராம்.

---

*(வந்தென்னைக் கைத்தலம் பற்ற)* "உடையவனான அவன்தானே வந்து உடைமையான நம்மைக் கைக் கொள்வதே முறை" என்று உபாயாத்$_4$யவஸாயத்துடனிருக்கும் பெரியாழ்வார் திருமகளன்றோ இவள். ஆகையாலே அவனே வந்து தன்னைக் கைப்பிடித்தான் என்கிறாள். *(கைத்தலம்பற்ற)* [91-ம் பக்கத்தில் உள்ள 54-வது ப்ரமாணத்தின்படி] ஸீதாபிராட்டி "என்னை மறந்தாலும் தம்மை மறக்கலாமோ? தாம் பன்னிரண்டு பிராயம் உடையவராயிருக்கும்போது என்னைக் கைப்பிடித்ததையும் மறந்தாரோ?" என்று அநுமனிடம் தன்னைக் கைத்தலம் பற்றியதை நினைவூட்டினாளன்றோ. "பாணிக்$_3$ரஹணம் என்னும் பத$_3$த்தால் சொல்லாமல், 54. 'பீடி$_3$த:' (கை அழுந்தப் பிடிக்கப்பட்டது) என்று கூறுவானேன்?" என்று எம்பாரைச் சிலர் கேட்டார்கள். "'அங்கண்ணனுண்ட என்னாருயிர்க்கோதிது' [திருவாய் 9-6-6] என்கிறபடியே பிடித்த பிடியிலே தனக்கேயாம்படி பிடித்ததை இப்பத$_3$ம் சொல்லுகிறது" என்று எம்பார் பதில் அருளிச்செய்தார்.

---

c, d, e (கைத்தலம் பற்ற) இதுக்கு ஸம்வாத$_3$மாக ப்ரமாணத்$_3$வயமருளிச்செய்கிறார் (ந ப்ரமாணீக்ருத இத்யாதி$_3$) d ந ப்ரமாணீக்ருத:—ப்ராமாணிகமாகவன்றிக்கே வலியப் பிடிக்கை. d$_2$ '(பீடி$_3$த:) என்பானென்?' என்று ஶங்காபி$_4$ப்ராயம். (ப்ரதீச்ச$_2$,

e 100. "इयं सीता" (இயம் ஸீதா) பிறந்த உமக்குப் f பிறவாமையால் வந்த ஏற்றமுடையார் தேட்டமே. "मम सुता" (மம ஸுதா) g நீர் ஆர்த்த ரக்ஷணத்திலே தீ$_3$க்ஷித்தால், உமக்கு முன்னே போய்க் கைச்சிறையாயிருக்கவல்லவள். "प्रतीच्छ चैनां" (ப்ரதீச்ச$_2$ சைநாம்) கரும்பு தின்னக் கூலியன்றோ; இவளைக் கைக்கொள்ளுமென்றன்றோ உம்மை

100. இயம் ஸீதா மம ஸுதா ஸஹத$_4$ர்மசரீ தவ ।
ப்ரதீச்ச$_2$ சைநாம் ப$_4$த்$_3$ரம் தே பாணிம்
க்$_3$ருஹ்ணீஷ்வ பாணிநா ॥ [ரா-பா$_3$ 73-26]

[இந்த ஸீதை என் மகள்; உமக்கு ஸஹத$_4$ர்மசாரிணி; இவளை அங்கீ$_3$கரியும். உமக்கு மங்க$_3$ளமுண்டாகுக. உம் கையாலே இவள் கையைப் பிடிப்பீர்.] என்கிற ஸீதா கன்யகாப்ரதா$_3$ந ஶ்லோகம் இங்கு அநுப$_4$விக்கத்தக்கது. [இயம் ஸீதா] நீர் பன்னிருதிங்கள் கோசலையார் வயிற்றில் இருந்து பிறந்தவர். ஒரு தாய் வயிற்றில் பிறவாமல். *101. 'ஸீதா லாங்க$_3$லபத்$_3$த$_4$தி:'* [அமரம் 2-9-14; வைஜயந்தீ பூ$_4$மி-வைஶ்ய-30] [கலப்பை உழுதவழி ஸீதை எனப்படும்] என்கிறபடியே யாக$_3$பூ$_4$மியில் கலப்பை உழுத வழியில் அயோநிஜையாகத் தோன்றிய படியாலே ஸீதை என்று பெயர் பெற்ற இவளைப் பெறுவது உமக்குச் சிறப்பன்றோ. [மம ஸுதா ஸஹத$_4$ர்மசரீ தவ] குடிகளை ரக்ஷிப்பதையே த$_4$ர்மமாகக்கொண்ட என்பெண்ணுகையாலே, நீர் வருந்தியவர்களை ரக்ஷிப்பதை விரதமாகக்கொண்டால், உம்மிலும் முற்பட்டு தே$_3$வஸ்த்ரீகளை ரக்ஷிப்பதற்காக இலங்கைக்குச் சென்று சிறையிருக்கவல்லவள். [ப்ரதீச்ச$_2$ சைநாம்] கரும்பு தின்னக் கூலி கொடுப்பாரைப் போலே, 'இவளைக் கைக்

e "கைத்தலம்பற்ற" என்று கையைப் பிடித்தமாத்ரத்துக்கு ப்ரமாணம் "इयं सीता" (இயம் ஸீதா) இத்யாதி$_3$; அக்$_3$நி ஸாக்ஷிகமாகையாலே நெகிழவொண்ணாதென்றபடி. f 101. "सीता लाङ्गलपद्धतिः" (ஸீதா லாங்க$_3$லபத்$_3$த$_4$தி:) என்கிறத்தையிட்டுக்கொண்டு (பிறவாமையால் வந்த ஏற்றம்) என்றது. g "सहधर्मचरी तव" (ஸஹத$_4$ர்மசரீ தவ) என்னுமளவுக்கு தாத்பர்யம் (நீர் ஆர்த்தரக்ஷண இத்யாதி$_3$) h ‹



நான் காலிபிடிக்கிறது. "भद्रं ते" (ப$_4$த்$_3$ரம் தே) "வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்கிறபடியே. "ஐயரும் ஊரிலுள்ளாரும் வாராதிருக்க, நான் கைக்கொள்ளுகையாவதென்?" என்று தம்முடைய வைத$_3$க்$_3$த்$_4$யம்தோற்ற இருய்த்து நின்றார்; அது வேண்டா காணும், உம்முடைய கையாலே இவள்கையைப் பிடியீர். h "प्रतीच्छ" (ப்ரதீச்ச$_2$) என்னச்செய்தே, "पाणिं गृह्णीष्व" (பாணிம் க்$_3$ருஹ்ணீஷ்வ) என்றானிறே. 6.

## ஆறாம் திருமொழி—ஏழாம் பாட்டு

வாய்நல்லார் நல்ல மறையோதி மந்திரத்தால்
பாசிலை நாணல் படுத்துப் பரிதிவைத்துக்
காய்சின மாகளி றன்னானென் கைப்பற்றித்
தீவலஞ் செய்யக் கனாக்கண்டேன் தோழீ! நான்.

கொள்ளும்' என்றல்லவோ உம்மை நான் கால்பிடிக்கிறேன். பால்குடிக்கக் கால்பிடிக்கவேணுமோ? [ப$_4$த்$_3$ரம் தே] "வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" [திருப்பல்லாண்டு2]என்கிறபடியே இருவருமான சேர்த்திக்குப் பல்லாண்டு பாடுகிறாள். வில்லை முறித்தபோது ஜனகன் தன் பெண்ணைக் கொடுக்கவர, "என் தந்தையாரும் ஊரில் உள்ளாரும் வராதிருக்க நான் எப்படி இவளைக் கைப்பிடிக்க முடியும்?" என்று தம்கு$_3$ணப் பெருமை தோற்ற மறுத்து நின்றார்பெருமாள். "அப்போது மறுத்தது சரி. உம்முடைய தந்தையார் முதலிய அனைவரும் வந்திருக்கும் இப்போது உம்முடைய கையால் இவளுடைய கையைப் பிடிப்பீராக" என்கிறான் ஜனக சக்ரவர்த்தி. "ப்ரதீச்ச$_2$" [இவளை அங்கீ$_3$கரிப்பீராக] என்ற பின்பு 'பாணிம் க்$_3$ருஹ்ணீஷ்வ' [கையைப் பிடியும்] என்று கூறுகிற இதற்கு "முன்புபோலே மறுக்காமல் பாணிக்$_3$ரஹணம் செய்யும்" என்னும் இதுவே கருத்தாக வேணுமன்றோ. 6.

இருய்த்ததுக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச்செய்கிறார் (ப்ரதீச்ச$_2$ என்னச் செய்தே இத்யாதி$_3$). 6.

பதவுரை:— **தோழீ!**—; **வாய் நல்லார்**—நன்றாக ஓதின வைதி$_3$கர்கள், **நல்ல மறை ஓதி**—சிறந்த வேத$_3$வாக்கியங்களை உச்சரித்து, **மந்திரத்தால்**—(அந்தந்த க்ரியைகளுக்கு இசைந்த) மந்த்ரங்களைக்கொண்டு, **பாசு இலை நாணல் படுத்து** — பசுமைதங்கிய இலைகளையுடைத்தான நாணற்புல்லைப் பரிஸ்தரணமாக அமைத்து, **பரிதி வைத்து** — ஸமித்துக்களை இட்டு, **காய் சினம் மா களிறு அன்னான்**—மிக்க சினத்தையுடைய மத்தக$_3$ஜம்போல் செருக்கனான கண்ணபிரான், **என் கை பற்றி**—என்கையைப் பிடித்துக்கொண்டு, **தீ வலம் செய்ய**—அக்$_3$நியைச் சுற்றிவர, **நான் கனாக்கண்டேன்**—.

வ்யா:— **ஏழாம் பாட்டு.** (வாய்நல்லார்) **அழகியதாக ஸ்வரத்திலே உச்சரிக்கவல்லவர்கள்.** a (நல்ல மறையோதி) b **ஆராத$_4$ந விஷயமாகப் பரந்தவையன்றிக்கே ஆராத்$_4$யனுடைய ஸ்வரூபத்திலே பரந்தவற்றைச் சொல்லி. ஸ்ரீபுருஷஸூக்தாதி$_3$களைச் சொல்லி.** (மந்திரத்தால்) **அதுக்குள்ளே எல்லாமுண்டாயிருக்கச்செய்தே, அவ்வோ க்ரியைக்கு அநுரூபமான மந்த்ரத்தாலே.** c (பாசிலை நாணற்படுத்து) **பசுத்த இலையையுடைத்தான நாணலை, அக்$_3$நியைச் சூழப் படுத்து-பரிஸ்தரித்து.** d(பரிதிவைத்து) **பரிதி$_4$களையிட்டு.** (காய்சினமா களிறன்னான் என் கைப்பற்றி) **ஒரு மத்தக$_3$ஜம் போலே மேன்மையோடே வந்து.** (தீயித்யாதி$_3$) **அக்$_3$நியைச் சூழ வருகிறபோது பிசுகி நடந்தபடி.** e **102. "एकमिषे" (ஏகமிஷே)**

7. *அவ:*— 'தீவலம் செய்வதையும் அநுப$_4$விக்கப் பெற்றேன்' என்கிறாள்.

*வ்யா:—(வாய்நல்லார்)* அழகாக ஸ்வரத்தோடு வேத$_3$த்தை உச்சரிக்க வல்லவர்கள். *(நல்ல மறை ஓதி)* நல்ல மறை என்று விசேஷிப்பதற்கு வேத$_3$த்தில் இரண்டுவகை உண்டோ? எனில்: வேத$_3$த்தில் பூர்வப$_4$ாக$_3$ங்கள் இந்திரன் முதலான தே$_3$வர்களுக்கு அந்தர்யாமியாயிருக்கும் அவனுடைய ஆராத$_4$னமான யாக$_3$ங்களைச் சொல்லுகின்றன. புருஷஸூக்தம் முதலான உத்தர ப$_4$ாக$_3$ங்கள் எம்பெருமானுடைய ஸ்வரூபரூப கு$_3$ணங்களை நேரே சொல்லுகின்றன. பூர்வப$_4$ாக$_3$ங்களைக் காட்டிலும் உத்தர ப$_4$ாக$_3$ங்களின் இந்தச் சிறப்பை நோக்கி 'நல்ல மறை' என்கிறாள். ஸ்ரீபுருஷஸூக்தம் முதலானவற்றைச் சொல்லி என்றபடி. *(மந்திரத்தால்)* புருஷஸூக்தத்திலேயே எம்பெருமானுடைய பெருமைகள் எல்லாம் இருந்தபோதிலும், த$_3$ர்ப்பை$_4$களை அக்$_3$நியைச் சுற்றி வைப்பதாகிற பரிஸ்தரணம், ஸமித்துக்களை இடுவது, தீவலம்செய்வது முதலான அந்தந்த க்ரியைக்கு க்$_3$ருஹ்ய ஸூத்ரங்களில் விதி$_4$க்கப்பட்ட அந்தந்த மந்திரங்களாலே. *(பாசிலை நாணல் படுத்து)* பசுமையான இலையையுடைய நாணலை அக்$_3$நியைச் சுற்றிலும் வைப்பதாகிற பரிஸ்தரணத்தைச் செய்து. *(பரிதி வைத்து)* ஸமித்துக்களை இட்டு. *(காய்சின மாகளிறன்னான் என் கைப்பற்றி)* மிக்க சினத்தையுடைய மத்தக$_3$ஜம்போல் செருக்கோடு நடந்து வந்த கண்ணன் என் கையைப் பற்றி. *(தீவலம் செய்ய —களிறன்னான்)* அக்$_3$நியைச் சுற்றிலும் வலம்வரும்போது யானை போலே மந்த$_3$மாக நடந்ததைச் சொல்லுகிறது.

**102. ஏகமிஷே விஷ்ணுஸ் த்வாऽந்வேது।**
**த்$_3$வே ஊர்ஜே விஷ்ணுஸ் த்வாऽந்வேது।...**
**ஸக$_2$ாய: ஸப்தபத$_3$ா அபூ$_4$ம ॥**

*[யஜுர்-அஷ்டகம்-3, ப்ரஶ்ந-7, பஞ்-89.]*

**[மணமகன் மணமகளைத் தன் கையால் பிடித்துக்கொண்டு, 'ப$_4$க$_3$வான் விஷ்ணு உன்னை ஒரு அடி அழைத்துச்செல்லட்டும். ......ஏழு அடி நடந்து என்னுடன் துணைவியாவாயாக' என்று உச்சரித்துக்கொண்டு அக்$_3$னியை வலம் வரும் மந்திரமிது.]**

அரு:— ஏழாம் பாட்டு. (வாயித்யாதி$_3$) a, b "நல்ல மறை" என்கைக்கு, மறையிலே இரண்டுவித$_4$முண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (ஆராத$_4$நேத்யாதி$_3$) c "பாசிலை நாணல்"—பச்சை இலையையுடைத்தான நாணற்புல்லு. d "பரிதி$_4$" — ஸமித்து. e "**इष एकपदी भव**" **(இஷ ஏகபதீ$_3$ப$_4$வ)** என்று ஸ்மார்த்தக்ரியை. ஓரடி தொடங்கி ஏழடியளவாக

என்றது-"பூபபுனேகண [illegible]

தொடங்கி, "सखा सप्तपदा भव" (ஸக$_2$ா ஸப்தபத$_3$ா ப$_4$வ) அள வும் நடந்தபடி. f வந்து கைப்பிடித்தபோது ஒரு மத்தக$_3$ஜம் f$_2$ சிறைப்பட்டாப்போலேயாய்த்து. (தீவலஞ்செய்ய) g தான் நெகிழுமன்றும் நெகிழவொண்ணுதபடியாகவும், நானும் நெகிழவொண்ணுதபடியாகவும் பெற்றதுகாண். 7.

ஆறும் திருமொழி—எட்டாம் பாட்டு

இம்மைக்கு மேழேழ் பிறவிக்கும் பற்ருவான்
நம்மை யுடையவன் நாராயணன் நம்பி
செம்மை யுடைய திருக்கையாற் ருள்பற்றி
அம்மி மிதிக்கக் கனுக்கண்டேன் தோழீ!நான்.

பதவுரை:— **தோழீ !**—; **இம்மைக்கும்**—இப்பிறவிக்கும், **ஏழ் ஏழ் பிறவிக்கும்**—மேலுள்ள பிறவிகள் எல்லாவற்றிற்கும், **பற்று ஆவான்** — சரண்யனுயிருப்பவனுய், **நம்மை உடையவன்**—நமக்கு சேஷியாய், **நம்பி**—ஸகல கல்யாண கு$_3$ண பரிபூர்ணனுய், **நாராயணன்**-நாராயணனுன கண்ண பிரான், **செம்மை உடைய திரு கையால்**—செவ்விய (தனது) திருக்கையினுல், **தாள் பற்றி** — (எனது) காலைப்பிடித்து, **அம்மி மிதிக்க** — அம்மியின் மேல் எடுத்துவைக்க, **நான் கனுக் கண்டேன்**— .

---

என்கிற ஸப்தபதீ$_3$ மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு அக்$_3$னியை வலம் வந்தபடியைச் சொல்லுகிருள். *( கைப்பற்றி )* மத$_3$ங்கொண்ட களிறு (ஆண்யானை) போன்ற அவன் வந்து இவள் கையைப் பிடித்தபோது, மத$_3$ங்கொண்ட பிடி (பெண்யானை) சிறைப்பட்டதுபோல் ஆயிற்று. *(தீவலம்செய்ய)* அக்$_3$னிஸாக்ஷியாகக் கைப்பிடிக்கையாலே அவனும் இவள் கையை விட முடியாது, இவளும் அவன் கையை விடமுடியாது என்று கருத்து. 7.

---

என்றபடி. f "காய்சின மாகளிறன்னுன்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் ( வந்து கைப்பிடித்தபோது இத்யாதி$_3$ ) f$_2$(சிறைப்படுகை)—இவன்கையிலே அகப்படுகை. g அக்$_3$னி ஸாக்ஷிகமாகையாலே நெகிழவொண்ணுது இருவர்க்கும். 7.

மனை ற'' என்கைக்கு, மறையிலே இரண்டுவித$_3$முண்டோ?



வ்யா :— எட்டாம் பாட்டு. (இம்மைக்கும் இத்யாதி$_3$) அக்$_3$நிதானே நெகிழ்க்கப் பார்க்குமன்றும் நெகிழவிடானுய்த்து. a "இவனுடைய அநுப$_4$வம் மாருதே செல்லுமாகில், என்றும் பிறந்தாலாகாதோ" என்றிருக்கிருள். b "ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னேடுற்ருேமே யாவோம்" என்று ப்ரார்த்தி$_2$க்குமவளிறே. c வ்ருஷ்ட்யாதி$_3$களுக்கீடாக யத்நித்தால் வர்ஷித்தவநந்தரம் மறுத்துப் போகாநிற்கும்; ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தைப் பற்றினுல் காலதத்வமுள்ளதனையும் அநுப$_4$வித்தே நிற்குமத்தனையாய்த்து. "குற்றமில் சீர் கற்று

---

*8. அவ :—* தீவலம் செய்தபின் அம்மி மிதிக்கையாகிற அஶ்மாரோஹண க்ரியையையும் அநுப$_4$விக்கப் பெற்றேன் என்கிருள்.

*வ்யா :— (இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்ருவான்)* சென்ற பாட்டின் இறுதியில் அக்$_3$நிஸாக்ஷிகமாகக் கைப்பிடிக்கையாலே இருவராலும் விடமுடியாது என்ருள். இங்கு ஸாக்ஷியான அந்த அக்$_3$நியே கைவிடச் செய்ய முயன்ருலும் கைவிடாதவன் இவன் என்கிருள். இப்பிறவி மட்டுமல்ல; எத்தனை பிறவி எடுத்தாலும் நமக்குப் புகலாய் இருப்பவன் இவனேயன்ருே. *(ஏழேழ் பிறவிக்கும்)* "இவனை இடைவிடாமல் அநுப$_4$விக்கும்படி பெற்ருேமாகில், எத்தனை பிறவி எடுத்தாலும் குறையில்லையே" என்னும் கருத்திலே சொல்லுகிறது. "ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னேடு உற்ருேமேயாவோம்" [திருப்பாவை 29] என்று திருப்பாவையிலும் ப்ரார்த்தி$_2$த்தாள் அன்ருே. *( ஏழேழ் பிறவிக்கும் பற்ருவான் )* மழை முதலான ப$_2$லன்களைப் பெறுவதற்குக் காரீரி முதலான யாக$_3$ங்களை அநுஷ்டி$_2$த்தால் அதன் ப$_2$லமாக ஒருமுறை மழை பெய்தவுடன் நின்றுவிடும். "*ஸக்ருதே$_3$வ ப்ரபந்நாய*" [ராம சரமஶ்லோகம்] என்கிறபடியே ஒருமுறை எம்பெருமானை உபாயமாகப் பற்றினுல் காலதத்வமுள்ளதனையும் ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வம் நீடிக்கும். அதை "ஏழேழ் பிறவிக்கும்" என்று காட்டுகிருள்.

---

அரு:— எட்டாம் பாட்டு. (இம்மைக்கும் இத்யாதி$_3$) a த்யாஜ்யமான ஜந்மத்தை உத்$_3$தே$_3$ஶ்யமாகச் சொல்லுவானென் ? என்ன அருளிச்செய்கிருர் ( இவனுடைய இத்யாதி$_3$) b ஏதத்$_3$விவரணம் (ஏழேழ் பிறவிக்கும் இத்யாதி$_3$) c ஒருகால் ஸ்வீகரித்தால் எற்றைக்கும் நிற்குமோ ? என்ன

என்றது-"பூப்புனைகண்ணிப்புனிதனேடு" (4) [illegible]

வைகல் வாழ்தல் கண்டீர் குணம்'' என்கிறபடியே. (நம்மை யுடையவன்) d ப$_2$லமின்றிக்கேயொழிந்தால்தான் புறம்பு எங்கே போவது? ஸர்வஸ்வாமி. e அவனுடைமையை ''என்னது'' என்றிருக்குமதிறே களவாவது; 103. ''चोरेणात्मापहारिणा'' (சோரேணாத்மாபஹாரிணா) என்கிறபடியே. (நாராயணன் நம்பி) f ஸ்வாமித்வத்துக்கும் கு$_3$ணங்களுக்கும் வாசகமான திருநாமமிறே. (நம்பி) g கல்யாண கு$_3$ணங்களால் பூர்ணன்.

---

''குற்றமில் சீர் கற்று வைகல் வாழ்தல் கண்டீர் குணமே'' [திருவாய் 9-1-7] என்கிற பாசுரத்திலே 'வைகல்' என்னும் பத$_3$த்தாலே நம்மாழ்வார் இதை உணர்த்தினார். (*நம்மை உடையவன்*) நமக்கு ஸ்வாமியாயிருப்பவன். முற்கூறியபடி காலமெல்லாம் அநுப$_4$விக்கும் ப$_3$லமில்லாமற்போனாலும், நம் அனைவர்க்கும் ஸ்வாமியான இவனைவிட்டு வேறு எங்கே போவது? 'நமக்கு வேறெங்கும் புகலில்லாவிடிலும் நமக்கு நாமிருக்கிறோமே' என்றும் நினைக்கவொண்ணாதே.

103. யோऽந்யதா$_2$ ஸந்தமாத்மாநமந்யதா$_2$ ப்ரதிபத்$_3$யதே।
கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா ॥
[ப$_4$ார-உத்$_3$யோ 42-35]

[ப$_4$க$_3$வானுடைய உடைமையாயிருக்கும் ஆத்மாவை, எவனொருவன் தனக்குச் சொந்தமாக நினைக்கிறானோ, ஆத்மாவை அபஹரிப்பவனான அந்தத் திருடனால் செய்யப்படாத பாபம் எது?] என்கிறபடியே அவனுடைய உடைமையான நம் ஆத்மாவை 'நம்முடையது' என்று நினைப்பது பெரிய களவல்லவோ? (*நாராயணன்*) 'நம்மை உடையவன்' என்று அநுஸந்தி$_4$க்கப்பெற்ற ஸ்வாமித்வத்துக்கும், 'பற்றுவான்' என்று அநுஸந்தி$_4$க்கப்பெற்ற கு$_3$ணங்களுக்கும் வாசகமான திருநாமமன்றோ இது. (*நம்பி*) எல்லையற்ற கல்யாணகு$_3$ணங்களால் நிறைந்தவன்.

---

அருளிச்செய்கிறார் (வ்ருஷ்ட்யாதி$_3$களுக்கித்யாதி$_3$) d புறம்பு புகலில்லாவிட்டால் தனக்காயிருக்கலாகாதோ? என்ன, தனக்காயிருக்கை களவாமென்று கண்டுகொள்வது. e இது களவோ என்ன அருளிச்செய்கிறார் (அவனுடைமையித்யாதி$_3$) f (ஸ்வாமித்வத்துக்கும் கு$_3$ணங்களுக்கும்) என்றது ''பற்று வான்,'' ''உடையவன்'' என்றத்தைப்பற்ற. g ''நம்பி'' என்று அநுக்தமான கல்யாணகு$_3$ணங்களால் பூர்ணன் என்றபடி

மறை'' என்கைக்கு, மறையிலே இரண்டுவித$_3$முண்டோ?



(செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி) h பிள்ளை உறவுமுறையார் வேண்டாவென்பர்கள்; பெண்பிள்ளை உறவு முறையார் வேணும் என்று நிற்பர்கள்: இப்படி இரண்டு தலையிலுள்ளாரும் வார்த்தை சொல்லாநிற்கச்செய்தே. தானே வந்து காலைப்பிடிக்கக் கணிசியாநிற்குமாய்த்து. அதாவது — i ஆஶ்ரிதர்கால்பிடிக்க என்றால் இராயாத கையாய்த்து. j உபதே$_3$ஶகாலத்திற்போலன்றிறே பரிமாற்றத்திலிருப்பது. உபதே$_3$ஶிப்பது— அவன்கால் பிடிக்கக்கடவதாக; பரிமாற்றத்தில் வந்தால் அவன்தான் பிடிக்கும்படியாக

---

(*செம்மையுடைய திருக்கையால் தாள் பற்றி*) அம்மி மிதிக்கும் போது — சிவந்த நிறத்தையும், ஆஶ்ரிதபாரதந்த்ரியமாகிற கல்யாணகு$_3$ணத்தையும் உடைய திருக்கையால் எனது காலைப் பிடித்து. வகுத்த ஸ்வாமியாகிற இவனது திருவடியைப் பற்றுவதில் அநாதி$_3$காலமாக ஆர்வமில்லாமலிருந்த நம்மைப் போலல்லாமல் அடியார்களுடைய காலைப் பிடிப்பதில் பேரார்வமுடைய இவனது ஆஶ்ரிதபாரதந்த்ரியமே 'செம்மை' எனப்படுகிறது. கல்யாணத்தின்போது பிள்ளையின் உறவினர்கள் 'பெண்ணின் காலைப் பிடிக்காதே' என்பார்கள். பெண்ணின் உறவினர்கள் 'அவள் காலைப் பிடித்தே தீரவேண்டும்' என்பார்கள். இப்படி இரண்டு தரப்பிலுள்ளவர்களும் விவாத$_3$ம் செய்துகொண்டிருக்கும்போது தானே வந்து என் காலைச் சடக்கெனப் பிடிப்பதில் பேரார்வமுடையவனாயிருந்தான் என்பதை 'செம்மை' என்னும் பத$_3$த்தால் காட்டுகிறாள். ஆஶ்ரிதனுக்கு உபதே$_3$ஶிக்கும்போது *'மாமேகம் ஶரணம் வ்ரஜ'* என்று தன் காலைப் பிடிக்கும்படி உபதே$_3$ஶித்தாலும், அவனைப் பெற்று அநுப$_4$விக்கும்போது அவன் காலைப் பிடிப்பதில் பேரார்வ

---

h ''பற்றி'' என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிள்ளையித்யாதி$_3$) i செம்மைக்குத் தாத்பர்யம் (ஆஶ்ரிதரித்யாதி$_3$) j இவன் ப$_3$ந்து$_4$க்கள் முதலானார் அவன்றன் காலைப்பிடிக்க என்றன்றோ உபதே$_3$ஶிப்பது, இப்படி மாறாட்டமாகலாமோ? என்ன அருளிச்செய்கிறார் (உபதே$_3$ஶேத்யாதி$_3$) உபதே$_3$ஶகாலம் - ஆஶ்ரயணகாலம். அதா



என்றது-''பூப்புனைகண்ணிப்புனிதனோடு'' (4) என்று கீழைக்

**வாய்த்து இருப்பது.** (அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன்)**அஶ்மா ரோஹணம் பண்ணக் கனாக்கண்டேன்.** k **"அவ்வம்மியில் ஓரடியிடில் செய்வதென்?" என்று துணுக்குத் துணுக்கென்றிருந்தாள்காணும்; அடியிட்டானாகில் அதுவும் ஒரு பெண்ணாமே!** (தோழிநான்) **நீ என் கால்பற்றிப்போரும்படியெல்லாமறிதியே. அவன் என் கால் பற்றும்படியாய்த்துக் காண்,** l **அவன் ஸ்வப4ாவம் நீ சொல்லக்கேட்டபடியே அநுப4விக்கப்பெற்றேன். 8.**

### ஆறும் திருமொழி — ஒன்பதாம் பாட்டு

**வரிசிலை வாண்முகத் தென்னைமார் தாம்வந்திட்(டு)**
**எரிமுகம் பாரித் தென்னைமுன் னேநிறுத்தி**
**அரிமுக னச்சுதன் கைம்மேலென் கைவைத்துப்**
**பொரிமுகந் தட்டக் கனாக்கண்டேன் தோழீ!நான்.**

**பதவுரை:— தோழீ— ; வரி சிலை வாள் முகம்**—அழகிய வில்போன்ற புருவத்தையும் ஒளிபொருந்திய முகத்தையுமுடையவர்களான, **என் ஐமார் தாம்**-எனது தமயன்மார்கள், **வந்திட்டு**—வந்து, **எரி முகம் பாரித்து**— அக்3நியை நன்றாக ஜ்வலிக்கச்செய்து, **முன்னே என்னை நிறுத்தி**— அந்த அக்3நியின் முன்னே என்னைநிறுத்தி, **அரி முகன்**—சிங்கம்போன்ற திருமுகத்தையுடையனாய் இருந்த, **அச்சுதன்**— கண்ணபிரானுடைய, **கை மேல்**-திருக்கையின் மேலே, **என் கை வைத்து**-என்னுடைய கையை வைத்து, **பொரி**—பொரிகளை, **முகந்து அட்ட**—அள்ளிப்பரிமாற, **நான் கனாக்கண்டேன்—.**

---

முள்ள பரமப்ரணயியன்றோ இவன். *(அம்மி மிதிக்கக் கனாக் கண்டேன்) "அஶ்மேவ த்வம் ஸ்தி2ரா ப4வ'* [இந்தக் கல்லைப் போலே எனக்கு ஆட்பட்டிருப்பதில் நிலையாயிருப்பாய்]என்று அசித்3வத்பாரதந்த்ரியத்தை உபதே3ஶிக்கும் வேத3மந்த்ரத்தைச் சொல்லி, என்னை அவன் அம்மி மிதிக்கச் செய்வதைக் கனவில் கண்டேன்.*(அம்மி மிதிக்க)*தன் காலை அம்மியில் வைக்கும்போது 'இவனுடைய கால் அம்மியில் பட்டுவிட்டால் என் செய்வது' என்று பயந்துகொண்டிருந்தாள் போலும். பட்டால் என்ன? எனில்: அக்கல்லும் அஹல்யையைப்போலே ஒரு பெண்ணாகி விடுமே! *(தோழீ! நான்)*தோழீ! நீ என் காலைப்பிடித்து,அவற்றின் மென்மை முதலான பெருமைகளை அறிவாயன்றோ; அவன் என் காலைப்பிடித்து அவற்றை அறியும்படியாயிற்றுக்காண். அன்றிக்கே, அவனுடைய ஆஶ்ரிதபாரதந்த்ரியத்தை நீ சொல்லிக் கேட்டபடியே அநுப4விக்கப்பெற்றேன் என்கிறாளாகவுமாம். 8.

---

வது-தன் வ்யாமோஹத்தாலே அவன் தலைதடுமாறாகச் செய்யும் என்றபடி. k ஹார்த்த3ப4ாவம் (அவ்வம்மியிலித்யாதி3) l தாத்பர்யாந்தரம் (அவன் ஸ்வப4ாவமித்யாதி3) 8.

மறை" என்கைக்கு, மறையிலே இரண்டுவித2மூண்டோ?



**வ்யா:— ஒன்பதாம் பாட்டு.** உ ( வரிசிலையித்யாதி3 ) **என்னுடைய ப்4ராதாக்களானவர்களே " இதுக்கெல்லாம் அபி4மாநிகள்" என்னுமிடம் தங்கள் முகத்திலொளியிலே காணும்படியாக வந்து அக்3நிமுக2த்தைப் பாரித்து, நான் வ்ரீளையாலே இருய்க்க, என்னை எடுத்து முன்னே நிறுத்தி.** (அரிமுகனித்யாதி3) **மைத்துனமை முறையுடையார் இவனை**

---

9\. *அவ:—* மணவினை நூல்களில் 'லாஜஹோமம்' எனப்படும் கிரியையைச் செய்ததையும் கனவில் கண்டேன் என்கிறாள்.

*வ்யா:— (வரிசிலை வாள் முகத்து என்னைமார் தாம்)* என்னுடைய ஸஹோத3ரர்கள் அனைவரும் 'இந்த லாஜஹோமத்தைச் செய்வதற்கு உரிமையுடையவர்கள் தாங்களே' என்பது தங்களுடைய முகத்தில் ஒளியிலும், புருவநெறிப்பிலும் பிறர் காணும்படியாக வந்தார்கள் என்று கருத்து. *(வந்திட்டு எரிமுகம் பாரித்து)* விவாஹம் நடக்குமிடம் வந்து, அக்3னியை நன்றாக ஜ்வலிக்கச்செய்து. *(என்னை முன்னே நிறுத்தி)* பெண்களுக்குரிய நாணத்தாலே நான் முன் வருவதற்கு இசையாதிருக்க, என்னை வலிய எடுத்து முன்னே நிறுத்தி. *(அரிமுகன்)* சிங்கம் போன்ற முகத்தையுடையவன். மைத்துனர்களான என் அண்ணன்மார் முதலானவர்கள் இவனைக் கேலி பண்ணிச்

---

அரு:— ஒன்பதாம் பாட்டு. உ (வரிசிலை வாண்முகம்) வரி-அழகு. அழகிய வில்லுப்போலேயிருக்கிற புருவத்தையும், ஒளியையுடைய முகத்தையுமுடையவர்களான என் ப்4ராதாக்களென்று ஶப்3தா3ர்த்த2ம். வில்லைச் சொன்னது-

என்றது-"பூப்புனைகண்ணிப்புனிதனோடு" (4) என்று கீழைக்

இளிம்புபடுத்திச் சிரிக்கவேணுமென்று சில விலாஸசேஷ்டிதங்களைப் பண்ணக்கோலினால், அவர்களுக்குக் கணிசிக்கவொண்ணாதபடி அநபி$_4$ப$_4$வநீயனாயிருந்த இருப்பு.(அச்சுதன்) அவர்கள் b பொரியட்டிவிட்டாலும் தான் கைவிடாதவன். 9.

ஆறாம் திருமொழி—பத்தாம் பாட்டு

குங்கும மப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து
மங்கல வீதி வலஞ்செய்து மண நீர்
அங்கவ னோடு முடன்சென்றங் கானைமேல்
மஞ்சன மாட்டக் கனாக்கண்டேன் தோழீ!நான்.

பதவுரை:— அங்கு,—தோழீ!—, குங்குமம்—குங்குமக் குழம்பை, அப்பி—உடம்பெல்லாம் பூசி, குளிர் சாந்தம்—குளிர்ந்த சந்தனத்தை, மட்டித்து-கனக்கத்தடவி,அங்கு ஆனைமேல்-அங்குள்ள மத்தக$_3$ஜத்தின் மேலே, அவனோடும் உடன் சென்று-அக்கண்ணபிரானோடு கூடியிருந்து, மங்கலம் வீதி-

---

சிரிக்கவேண்டும் என்று சில வேடிக்கைச் செயல்களைப் பண்ண முற்பட்டால், அவர்களுக்குத் தன்னைப் பார்க்கவும் நெருங்கவும் ஒண்ணாதபடி பெருமதிப்போடு இருந்த இருப்பைக் காட்டுகிறது. (*அச்சுதன்*) கைவிடாதவன். அவர்கள் பொரியை அக்$_3$னியில் இடுவித்தபின்பும் என் கையை விடாதவன். இத்தால் என்றுமே என்னைக் கைவிடாதவன் என்று தோற்றுகிறது. (*கைம்மேல் என் கை வைத்து*) அவனுடைய கைக்கு மேலே என் கையை வைத்து. அடியார்களுக்கு அப$_4$யம் அளிப்பதில் எம்பெருமானுடைய கையைக் காட்டிலும் இவளுடைய கை மேற்பட்டது என்று 'கைம்மேல் என் கை' என்னும் தொடர் உணர்த்துகிறது. (*பொரி முகந்து அட்டக் கனாக்கண்டேன்*) எனது அண்ணன்மார் பொரியை அள்ளி,எங்கள் கையில் வைத்து,அக்$_3$னியிலே சொரியச் செய்வதை என் கனவில் கண்டேன். (*தோழீ! நான்*) என் கையில் மென்மையை நீ அறிவாயன்றோ. அதை அவனும் அறியும்படியான பேறுபெற்றேன். 9.

---

புருவத்துக்கும் உபலக்ஷணம். b"பொரி முகந்து"-பொரியை அள்ளி; "அட்ட"-அதிலே பரிமாற என்றபடி. 9.

மறை'' என்கைக்கு, மறையிலே இரண்டுவித$_4$முண்டோ?



(விவாகத்திற்கான) அலங்காரங்கள் விளங்குகின்ற வீதிகளிலே, வலம் செய்து-ஊர்வலம் வந்து, மணம் நீர்-வாஸனை ஜலத்தினால், மஞ்சனம் ஆட்ட—(எங்களிருவரையும்) திருமஞ்சனம் பண்ணுவதாக, நான் கனாக் கண்டேன்—.

வ்யா:— பத்தாம் பாட்டு. (குங்குமமித்யாதி$_3$) காப்புக்கட்டுகைக்குத் தனிமாலையும் சாந்துமாக a மட்டாக ஒப்பித்தானென்றது. அவ்வளவன்றிக்கே, விவாஹஸமயத்தில் மாலைகளும்அங்க$_3$ராக$_3$ங்களும் போரக்கொண்டு பேரொப்பனையாகவிறே ஒப்பிப்பது; அவற்றையெல்லாம் கழித்து; அக்$_3$நிமுக$_2$த்திலே இருந்தது பொறுதிறே ஸௌகுமார்யத்தாலே; அதுக்குப் பரிஹாரமாகக் குளிர்ந்த குங்குமத்தைத் திருமேனியெங்கும் அப்பி, பழகப் புதைத்து ஆறின சாந்தை b மட்

---

*10. அவ:—* ஆனைமேல் அவனோடு ஊர்வலம்வந்து, எங்கள் இருவரையும் திருமஞ்சனம் பண்ணுவதாகக் கனாக் கண்டேன் என்கிறாள்.

*வயா :— ( குங்குமம் அப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து )* ரக்ஷாப$_3$ந்த$_4$னம் எனப்படும் காப்புக்கட்டுகைக்குத் தனி மாலையும் சந்த$_3$னமுமாகச் சுருக்கமாக அலங்காரம் செய்துகொண்டான் என்னும் விஷயம் "பூப்புனைகண்ணிப் புனிதனோடு என்தன்னைக் காப்புநாண்கட்ட" [4] என்னும் பாசுரத்தில் கூறப்பட்டது. அதற்குமேல் பாசுரங்கள் விவாஹத்தைக் கூறுகின்றனவாகையாலே, அந்த சமயத்தில் பல மாலைகளும், பூச்சுக்களும் சாத்திக்கொண்டு, பெரிய அலங்காரமாக இருக்கும். இப்பேரலங்காரத்தோடு அக்$_3$னிக்கு முன் இருந்தது மென்மைமிக்க திருமேனிக்குப் பொறுக்கமாட்டாதன்றோ. அதனாலே அப்பேரலங்காரங்களையெல்லாம் கழித்து, நெருப்பின் முன் இருந்த உஷ்ணத்துக்குப் பரிஹாரமாக, குளிர்ந்த குங்குமத்தைத் திருமேனி முழுவதும் அப்பி, பழகுவதற்காக நிலத்தில் புதைத்து

---

அரு:— பத்தாம் பாட்டு. (குங்குமமித்யாதி$_3$)·b "மட்டித்து"-மார்த்தி$_3$த்து. a (மட்டாக ஒப்பித்தானென்றது) என்றது-"பூப்புனைகண்ணிப்புனிதனோடு" (4) என்று கீழைக்

டித்து. c திருமஞ்சநத்துக்கீடாகச் $c_2$ சமைந்தவற்றைக் கொண்டு ஊரை வலமாக வந்து. d அற்றை வீதியிலே தானும் தோழன்மாருமாக ஆனையேறி வந்தான் $d_2$ என்றதிறே. இப்போது தானும் அவனுமாக அங்கே ஆனைக் கழுத்திலே புக்கு வலமாக வந்து. (மஞ்சனமாட்டக் கனாக்கண்டேன்) இருவரையும் கூடவைத்து e உடன்மண நீராட்டினார்களாய்த்து. 10.

---

ஆறின சந்த₃னத்தைக் குழைத்து, திருமேனியில் கனக்கத் தடவியதைக் கூறுகிறது. *(அங்கு மணநீர் மங்கலவீதி வலம்செய்து)* திருமஞ்சனத்துக்குத் தேவையானவற்றைக்கொண்டு விவாஹத்திற்கான மங்க₃ளமான அலங்காரங்கள் நிறைந்த அவ்வீதிகளிலே ஊர்வலம் வந்து. *(அங்கு ஆனைமேல் அவனோடும் உடன்சென்று)* "வாரணமாயிரம் சூழவலம்செய்து" என்னும் முதற்பாசுரத்தில், தோழன்மாரோடு விவாஹத்திற்கு முன்பு தனது ஆனையேறி வீதி வலம் வந்தான் என்று சொல்லப்பட்டது. விவாஹத்திற்குப் பின் தானும்அவனுமாகத் திருமண ஊர்வலத்திற்காக ஏற்பாடுசெய்யப் பட்டிருந்த ஆனையேறி வீதிவலம் வந்ததை இப்போது கூறுகிறது. *(மஞ்சனமாட்டக் கனாக்கண்டேன்)* விவாஹத்தில் ஏற்பட்ட களைப்பெல்லாம் தீரும்படி எங்களிருவரையும் கூடவைத்து, (என் புடவையையும், அவன் வஸ்திரத்தையும் முடிந்து ஒன்றாக்கி நீராட்டுவதாகிற) உடன் மணநீராட்டுவதையும் கனாக்கண்டேன். *(தோழீ! நான்)* கனவில் கண்டதாகையாலே இக்காட்சிகளையெல்லாம் நான் கண்டேன். நீ காணப்பெறவில்லையே! என்று கருத்து. 10.

---

கடாக்ஷித்து. c "மணநீரை-மங்கலவீதி வலம்செய்து-அங்கானைமேல்-அவனோடுமுடன்சென்று" என்று அங்வயித்து அருளிச்செய்கிறார் (திருமஞ்சனத்துக்கித்யாதி₃) $c_2$(சமைந்தவற்றை) பரிமளத்₃ரவ்யங்களோடே கூடின திருமஞ்சனத்தை. d "வாரணமாயிரம் சூழ வலம்செய்து" என்ற இடத்துக்கும் இதுக்கும் வாசியென்னென்ன (அற்றை வீதியிலே இத்யாதி₃) (அற்றைவீதி)-அந்த வீதி. (அற்றை வீதியிலேகொண்டு ஊரை வலமாக வந்து) என்று வாக்யத்தை அங்வயிப்பது. $d_2$ (என்றதிறே) முதற்பாட்டில் என்று பூரிப்பது. e உடன்மண நீராட்டுகையாவது - த₃ம்பதிகளிருவரும் ஒருபுடவையுடுத்து நீராடுகை. 10.



## ஆறும் திருமொழி—பதினோராம் பாட்டு

**ஆயனுக் காகத்தான் கண்ட கனாவினை**
**வேயர் புகழ்வில்லி புத்தூர்க்கோன் கோதைசொல்**
**தூய தமிழ்மாலை யீரைந்தும் வல்லவர்**
**வாயுநன் மக்களைப் பெற்று மகிழ்வரே.**

பதவுரை:—**வேயர் புகழ்**-வேயர் குலத்தவரால் புகழப் பட்டவராய், **வில்லி புத்தூர் கோன்**—ஸ்ரீ வில்லிபுத்தூர்க்குத் தலைவரான பெரியாழ்வாருடைய (திருமகளான), **கோதை**—ஆண்டாள், **தான் ஆயனுக்கு ஆக கண்ட கனாவினை**—தான் க்ருஷ்ணனுக்கு வாழ்க்கைப்பட்டதாகக் கனாக் கண்டபடியைக் குறித்து, **சொல்** — அருளிச்செய்த, **தூய**—பரிசுத்தமான, **தமிழ் மாலை ஈர் ஐந்தும்**—தமிழ்த்தொடையான இப் பத்துப் பாட்டுகளையும், **வல்லவர்** — ஓதவல்லவர்கள், **வாயும்**—நற்குணங்களமைந்த, **நல் மக்களைப் பெற்று** — விலக்ஷணரான புத்திரர்களைப்பெற்று, **மகிழ்வர்**—ஆநந்தி₃க்கப்பெறுவர்கள்.

வ்யா:— **நிக₃மத்தில்;** (ஆயனுக்கித்யாதி₃) **அவனுக்கு அநந்யார்ஹையாகத் தான் கண்ட கனாவினை என்னுதல்; a அவன்பேற்றுக்கு உறுப்பாகத் தான் கண்ட என்னுதல். 37. 'न जीवेयं' (ந ஜீவேயம்) என்பாரதிறே பேறு; b திங்கள் புக்கிருப்பாரதன்றே.** (வேயரித்யாதி₃) **ஆப்திக்கு ப்₃ராஹ்**

---

*11. அவ :—* கடைசிப் பாசுரமான இதில் இப்பதிகம் கற்றார்க்குப் ப₂லம் சொல்லித் தலைக்கட்டுகிறாள்.

*வ்யா :—(ஆயனுக்காகத் தான் கண்ட கனாவினை)* ஆயனாகிற கண்ணனுக்கேயுரிய பத்னியாவதாகத் தான் கண்ட கனவினை. அன்றிக்கே, 'உனக்கே நாமாட்செய்வோம்' [திருப்பாவை 29] என்கிறபடியே, அவன்பேற்றுக்கு உறுப்பாகத் தான்கண்ட கனவினை என்றும் கொள்ளலாம். [116-ம் பக்கத்திலுள்ள 37-வது ப்ரமாணத்தின்படி] ஒரு கணமும் உயிர்வாழமுடியாத எம்பெருமானுடையதல்லவோ பேறு. [115-ம் பக்கத்திலுள்ள 36-வது ப்ரமாணத்தின்படி] ஒரு மாதம் ஜீவிக்கவல்ல பிராட்டியுடையதல்லவே. *(வேயர்புகழ் வில்லிபுத்தூர்க்கோன் கோதை*

---

அரு— பதினோராம் பாட்டு. நிக₃மத்தில், (அவன் பேற்றுக்குறுப்பாக) என்கைக்கு அவனதோ பேறு, தம்மதன்றோ? என்ன அருளிச்செய்கிறார் **37. "न जीवेयं"(ந ஜீவேயம்)** இத்யாதி₃ b (திங்கள்புக்கு) என்றது **36. "मासादूर्ध्वं"**(மாஸாதூ₃ர்த்₄வம்)

மணராலே ஸ்துதிக்கப்பட்டிருக்கிற ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் திருமகள் ஸ்ரீஸூக்தியான. (c தூய தமிழ்மாலை) d அநுப$_4$வத்துக்குப் பாசுரமிட்ட இத்தனையல்லது நெஞ்சோடேகூடக் கவிபாடிற்றல்லவாய்த்து. (வாயும் நன்மக்களைப்பெற்று மகிழ்வரே) இவளோடொத்த தரத்தில் பெண்கள் இத்தை அப்$_4$யஸித்தார்களாகில் e க்ருஷ்ணனைப்போலேயிருக்கும் வரனைப் பெறுவர்கள். புருஷர்கள் அப்$_4$யஸித்தார்களாகில், பெரியாழ்வாரைப்போலே f ப$_4$க$_3$வத் ப்ரவணரான புத்ரர்களைப் பெற்று ஹ்ருஷ்டராவர்கள். g "மாயன் மணிவண்ணன் தாள்பணியும் மக்களைப் பெறுவர்கள்" என்றாரிறே தாம் கைக்கண்டவராகையாலே. 11.

---

சொல்) "உள்ளதை உள்ளபடி சொல்லும் பரமாப்தர்" என்று சிறந்த அந்தணர்களான வேயர்களாலே புகழப்படுகிறவராய், ஸ்ரீவில்லிபுத்தூருக்குத் தலைவரான பெரியாழ்வாரின் திருமகளான ஆண்டாளின் ஸ்ரீஸூக்தியான. *(தூய தமிழ்மாலை)* தான் மானஸஸாக்ஷாத்காரமாகிற கனவில் கண்டு அநுப$_4$வித்து. அவ்வநுப$_4$வம் வழிந்து புறப்பட்டதாயிருக்கும் தூய்மையை உடையது இத்தமிழ்மாலை. மற்ற கவிதைகளைப்போலே நெஞ்சாலே பத$_3$ங்களை இணைத்து. முயன்று பாடப்பட்டதல்ல. *(ஈரைந்தும் வல்லவர், வாயும் நன்மக்களைப் பெற்று மகிழ்வரே)* இப்பத்துப் பாசுரங்களையும் அர்த்த$_2$த்தோடு அநுஸந்தி$_4$ப்பவர்கள் இவ்வாண்டாளைப்போன்ற பருவப் பெண்களாயிருந்தால், கண்ணனைப் போன்ற வடிவழகையுடையவனைக் கணவனாகப் பெறுவர்கள். விவாஹமான பெண்களும், புருஷர்களும், பெரியாழ்வாரைப் போலே, ப$_4$க$_3$வத்$_3$ப$_4$க்தியுடைய மக்களையும் *ஶிஷ்யர்களையும்* பெற்று உகப்பார்கள். "மாயன் மணிவண்ணன் தாள்பணியும் மக்களைப் பெறுவர்களே" [பெரியாழ்திரு 1-7-11] என்று அநுப$_4$வபூர்வகமாக அருளிச்செய்தாரன்றோ பெரியாழ்வாரும். 11.

**ஆறும் திருமொழி விவரணம் முற்றிற்று.**

---

என்றபடி; க$_3$ர்ப்பி$_4$ணி - த்$_4$வநி. c, d அநுப$_4$வத்தாலே சொல்லுகையால் வந்த தூய்மை. e (க்ருஷ்ணனைப்போலே) என்றது-வடிவழகாயிருக்கிற நல்ல ப$_4$ர்த்தாக்களைப்பெறுவர்களென்றபடி. f,g (ப$_4$க$_3$வத்ப்ரவணரான புத்ரர்களை) என்றது-ஶிஷ்யர்களையாய், ஆண்டாளுக்கும் உபலக்ஷணமாமென்று கண்டுகொள்வது, மேலில் வாக்யத்துக்கீடாக. 11.

**ஜீயர் திருவடிகளே சரணம்.**



## ஏழாம் திருமொழி—கருப்பூரம் ப்ரவேஶம்

அவ:— (கருப்பூர மித்யாதி$_3$) ஆண்டாளுடைய ப$_4$ாக்$_3$யமிருந்தபடி, புதியதொரு குரங்கைப்பார்த்து, 104. "கதமூரூ கத் வாஹூ" (கத$_2$மூரூ கத$_2$ம் ப$_3$ாஹூ) என்னுதே, தே$_3$ஶிகரைக் கேட்கப்பெற்றாளிறே. a ஒரு ஸ்வப்நாநுப$_4$வத்தைச் சொன்னவளவன்றிக்கே ஸம்ஶ்லேஷமும் வ்ருத்தமாய்த்துப் போலே. இல்லையாகில் "வாக$_3$ம்ருதமிருக்கும்படியென்?" என்று கேட்கக்கூடாதிறே. b ஸ்வப்நாநுப$_4$வமாகையாலே

---

## ஏழாம் திருமொழி வ்யாக்$_2$யான விவரணம்

### கருப்பூரம் ப்ரவேஶம்

சீதாபிராட்டியைக் காட்டிலும் ஆண்டாளுடைய பாக்கியம் சிறப்புற்றிருக்கிறது. சீதாபிராட்டி ஏற்கனவே பழகாத வானர ஜாதியைச் சேர்ந்த அநுமனைப் பார்த்து,

**104. கீத்$_3$ருஶம் தஸ்ய ஸம்ஸ்த$_2$ாநம் ரூபம் ராமஸ்ய கீத்$_3$ருஶம் ।**
**கத$_2$மூரூ கத$_2$ம் ப$_3$ாஹூ லக்ஷ்மணஸ்ய ச ஶம்ஸ மே ॥**

*[ரா-ஸு 35-4]*

[அந்த ராமபிரானுடைய அமைப்பு எப்படிப்பட்டது? உருவம் எப்படிப்பட்டது? துடைகள் எப்படியிருக்கும்? கைகள் எப்படி விளங்கும்? லக்ஷ்மணனுடைய இந்த லக்ஷணங்களையும் எனக்குச் சொல்லுவாயாக.] என்று கேட்டாள். ஆண்டாளோ இத்திருமொழியில் எம்பெருமானை அடைவதற்குப் புருஷகாரமாய், அவனை அனுப$_4$விப்பதற்கு வழிகாட்டும் தே$_3$ஶிகராயிருக்கும் ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வானைப் பார்த்து "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ" என்று கேட்கும் சிறப்பைப் பெற்றாளன்றோ. சென்ற திருமொழியில் எம்பெருமான் தன்னை மணம்புரிவதாகக் கனவு கண்டதோடு நில்லாமல், ஆண்டாள்

---

அரு:— கருப்பூரம் ப்ரவேஶம். a ஸ்ரீ பாஞ்சஜந்யத்தைக் கேட்கைக்கு ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாய்த்தோ? என்ன அருளிச்செய்கிறார் (ஒரு ஸ்வப்நேத்யாதி$_3$) b ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமானால் கேட்கிறதென்? என்ன அருளிச்செய்

மின்மினி பறந்தாற்போலே இருக்குமத்தனையல்லது நெஞ்சில் பட்டிராது; ரஸ்யதையாலே நெஞ்சில் படாதிராது. c ஸம்ஶ்லேஷத்தில் $c_2$ உபக்ரமத்திலே தானிழந்தாள், e /தனக்கமைத்த அம்ஶத்தை ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக் கேட்கிருள். அவனைக் கேட்பானென்னென்னில்; f திரை வளைத்தால்

---

எம்பெருமானேடு கலந்தும் இருக்கிருள் என்பது இத்திருமொழியிலிருந்து தேறுகிறது. இல்லாவிடில், ''மருப்பொசித்த மாதவன் தன் வாய்ச்சுவையும் நாற்றமும் விருப்புற்றுக் கேட்கின்றேன்'' என்று இங்கு ஆண்டாள் அருளிச்செய்வது பொருந்தாதன்றே. சென்ற திருமொழியில் கிடைத்தது கனவில் அநுப$_4$வமாகையாலே, மின்மினி பறந்தாற்போலே சிறிதாயிருக்குமேயொழிய, நெஞ்சில் நிலையாக இராது. ஆனுலும், ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தைப் பற்றிய கனவாகையாலே நெஞ்சில் படாமலும் இராது. அடுத்து நேர்ந்த கலவியிலும் இவளது ஆர்த்தியை அதிகப்படுத்துவதற்காக எம்பெருமான் தொடக்கத்திலேயேஇழக்கும்படி செய்திருக்கிருன். அதனுல் தான் பெற்றிருக்கவேண்டிய அநுப$_4$வத்தை,

---

கிருர் (ஸ்வப்நாநுப$_4$வமித்யாதி$_3$) c ரஸ்யதை நெஞ்சிலே பட்டால் கேட்கவேண்டுவானென்? என்ன அருளிச்செய்கிருர் (ஸம்ஶ்லேஷத்திலித்யாதி$_3$) $c_3$ (உபக்ரமத்திலே இழக்கை) - ஸ்வப்நத்திலே இழக்கை. d (உவமை)-த்$_3$ருஷ்டாந்தம்; (உவமையமைக்கையாவது) - பச்சையிடுகை. நாயகன் பச்சையிட்ட அம்ஶத்தை என்றபடி. e அன்றிக்கே ''தனக்கு அமைத்த அம்ஶத்தை'' என்றும் பாட$_2$ம். ஆக இத்தால் - கீழில் திருமொழியிலே - ஸ்வப்நாநுப$_4$வம் பண்ணின இவள் இத்திருமொழியில் ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வாக$_3$ம்ருதச்சுவடு கேட்கைக்கு ஹேது ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமாகையாலும், ஸ்வப்நத்திலே அநுப$_4$விக்கையாலே விஶத$_3$மாயிருக்கையாலும், ஸம்ஶ்லேஷத்தில் உபக்ரமத்திலே இழிந்தவளாகையாலும் என்று மூன்ருகக் கண்டுகொள்வது. f...l திருவாழி முதலானவற்றைவிட்டு

---

/ (பா) d உவமை அமைத்த.



அதுக்குள்ளே !வர்த்திக்கும் $f_2$ கூனர் $f_3$ குறளரைப்போலே அவனைக்கைவிடாதே அந்தரங்க$_3$ருய் இருக்கையாலும், g தாங்களநுப$_4$விக்கும் துறையிலே இழிந்து அநுப$_4$விக்கும் நிலவருயிருக்கையாலும், h தங்களைப்போலே காத$_3$ாசித்கமன்றிக்கே $h_2$ நித்ய ஸம்ஶ்லேஷம் பண்ணி வர்த்திப்பா

---

ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வானைக் கேட்பதிலும் குறையில்லை. க$_3$ருட$_3$ன், விஷ்வக்ஸேனர் முதலான மற்ற நித்யஸூரிகளும் இருக்கும்போது ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வானைக் கேட்பானேன்? எனில்: 1. சக்ரவர்த்தி நாயகியோடு ஏகாந்தமாகத் திரைக்குள்ளேயிருக்கும்போது வயதான கூனர், குறளர் (குட்டையர்) போன்ற சிலருக்கு அங்கிருக்க அநுமதியுண்டு. அவர்களைப்போன்ற இவனும் எம்பெருமானைக் கைவிடாமலிருக்கும் அந்தரங்க$_3$ருயிருப்பவன். 2. வாயமுதத்தைப் பருகும் நாயகியான தன்னைப்போலே, வாயிலேயேயிருந்து, வாய்ச்சுவையைப் பருகுவதில்

---

ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வாக$_3$ம்ருதச்சுவடு கேட்கைக்கு ஹேது ஸப்தவித$_4$மாய், அதில் நாலாம் ஹேது ''அவனுக்குப் பரிவருகையாலும்'' என்று விவக்ஷித்து, அந்தப் பரிவை ''இனி'' என்று தொடங்கி, ''கரந்து நிற்பானுமாய்'' என்னுமளவாக இரண்டுவித$_4$மாகக் காட்டி,''பெண்களுக்குக் காட்சிகொடுப்பதும் இவற்ருலே ஆகையாலும்'' என்று அஞ்சாம் ஹேதுவைக்காட்டி, ''ஶ்யாமமான திருமேனிக்குப் பரப$_4$ாக$_3$மான ஆகாரத்தைப் பற்றத் தான் எப்போதும் இத்தையே ப$_4$ாவித்திருக்கையாலும்'' என்று ஆரும் ஹேதுவைக் காட்டி, ''இனி இவன் வார்த்தை'' இத்யாதி$_3$யாலே ஏழாம் ஹேதுவைக் காட்டுகிருர் என்று க்ரோடீ$_3$கார:. இப்படிப் பல ஹேதுக்கள் அருளிச்செய்கிருர் (திரை வளைத்தால் இத்யாதி$_3$) f ''திரைவளைத்து'' என்கையாலே- நித்யஸூரிகளையும், g ''தாங்கள் அநுப$_4$விக்கும் துறை'' என்கையாலே-திருவாழியாழ்வானையும், $h_2$ ''நித்ய ஸம்ஶ்லேஷம்'' என்கையாலே-பிராட்டிமாரையும் வ்யாவர்த்திக்கிறது. $f_2$(கூனர்)-வ்ருத்$_3$த$_4$ர். $f_3$(குறளர்)எக்கடிகள். f(திரைவளைத்து)

ளுருவனுகையாலும். i இனி, வினையுண்டானல் திருவாழி யாழ்வான் திருக்கையை விட்டுப்போய் வ்யாபரிக்கும்; இவன் வினைமுடுகமுடுகத் திருப்பவளத்திலே அணையுமித்தனை. i$_2$ இனி உகவாத கம்ஸாதி$_3$கள் காணுமைக்கிறே 105. "उपसंहर" (உபஸம்ஹர) என்றது. உகந்த பெண்களுக்குக் காட்சி கொடுப்பதும் இவற்றேடே கூடவாய் இருக்குமிறே. வாய்க் கரையிலே போயிருந்து ஆர்ப்பரவம் பண்ணி அவ்வார்ப்பர வத்திலே எதிரிகள் கெடும்படி இருப்பானுமாய், இவனை உகவாத கம்ஸாதி$_3$கள் காணுதபடி 105. 'उपसंहर' (உப

---

வல்லவனுயிருப்பவன் இவன். 3. எப்போதாவது கலவிபெறும் தன்னைப்போலன்றியே எப்போதும் எம்பெருமானுடைய ஸம் ஶ்லேஷத்தை உடையவன் இவன். 4. திருவாழியாழ்வானும் இவனைப்போலே கைவிடாத அந்தரங்க$_3$னுனுலும், ஒரு காரியம் ஏற்பட்டால், "கருதுமிடம் பொருது கைந்நின்ற சக்கரத்தன்" [திருவாய் 10-6-8] என்கிறபடியே அக்காரியத்தை முடிப்பதற் காகத் திருக்கையைவிட்டுப் போய் செயல்புரிபவனுயிருப்பான். இப்பாஞ்சஜன்யாழ்வானே எப்போதும் கையிலேயேயிருக்கும் பரிவையுடையவனுய், காரியம் ஏற்பட்டால் கையிலிருந்து வாயில் அணைந்து, வாய்ச்சுவையைப் பருகத் தொடங்கிவிடுவான்.

5. 105. உபஸம்ஹர ஸர்வாத்மந்! ரூபமேதச்சதுர்பு$_4$ஜம் ।
ஜாநாது மாऽவதாரம் தே கம்ஸோऽயம் தி$_3$திஜந்மஜ:॥
[வி.பு 5.3.11]

[ஸர்வாந்தர்யாமியே! நான்கு திருக்கைகளையுடைய இந்த ரூபத்தை மறைத்துக்கொள்வாயாக. அஸுரனுன இந்தக் கம்ஸன் உன்னுடைய அவதாரத்தை அறியவேண்டாம்.] என்று இவன் கையைவிட்டு மறைந்திருப்பதும் எதிரிகளான கம்ஸன் முதலானுர் காணுமைக்கேயாகும். இவனிடம் அன் புடைய பெண்களுக்கு சங்கு சக்கரங்களோடு கூடவே காட்சி கொடுப்பான். திருப்பவளத்திலே போய் அமர்ந்து, பெரு முழக்கம்செய்து, அம்முழக்கத்தாலேயே எதிரிகள் அழியும்படி

---

இத்யாதி$_3$ வாக்யத்துக்குத தாத்பர்யாந்தரம் - தானுமவனு மான சேர்த்தியில் போ$_4$க$_3$த்தை அறியுமவனுகையாலும்



ஸம்ஹர) என்ருல், அப்போதே கை i$_3$கரந்து நிற்பானுமாய், j உகந்த பெண்களுக்குக் காட்சி கொடுப்பதும் இவற்றேடே கூடவாயிருக்குமிறே. k இவர்கள்தான் ஶ்யாமமான திரு மேனியை அநுப$_4$வித்தால் அதுக்குப் பரப$_4$ாக$_3$மான வெண் மையை உடையவனுகையாலே, சேர அநுஸந்தி$_4$க்கவேண்டி யிருக்குமிறே. இவன்தான் அதித$_4$வளனுமாயிருக்குமிறே. k$_2$ "தாமுகக்கும் தம் கையில் சங்கமேபோலாவோ" என்றும், "வெள்ளை விளிசங்கிடங்கையில் கொண்ட விமலன்" என் றும், "பாலன்ன வண்ணத்துன் பாஞ்சசன்னியமே போல் வன சங்கங்கள்" என்றும், இவள்தான் ப$_4$ாவித்திருப்பதும்

---

இருப்பவனுய், சற்றுமுன் எடுத்த [105-வது] ப்ரமாணத்தனபடி அன்புடையார் 'எதிரிகளான கம்ஸன் முதலானுர் காணுதபடி மறைத்தருளவேணும்' என்று எம்பெருமானைப் பிரார்த்தி$_3$த்தால் அப்போதே மறைந்துநிற்பவனுய், கையும் சங்குமாகக் காண ஆசைப்படும் பெண்களுக்குக் கையிலேநின்று காட்சியளிப்பவன் இவன். 6. இவர்கள் எம்பெருமானுடைய கறுத்த திருமேனியை அநுப$_4$விக்கும்போது அதற்கு வர்ணச் சேர்த்தியழகை அளிக்கும் வெண்மைநிறத்தை உடையவனுகையாலே, அவனேடு சேர்த்து இவனை அநுஸந்தி$_4$ப்பதே பொருத்தமாகும். இவன் மிகுந்த வெண்மையையுடைய ஶுத்$_3$த$_4$ஸ்வப$_4$ாவமுடையவனன்றே. "தாமுகக்கும் தம் கையில் சங்கமே போலாவோ" [நாச்-திரு 11-1] "வெள்ளை விளிசங்கிடங்கையில்கொண்ட விமலன்" [நாச்-திரு 5-2] "பாலன்ன வண்ணத்துன் பாஞ்சசன்னியமே போல்வன சங்கங்கள்" [திருப்பாவை 26] என்று இவள்தான் எப்போதும் நினைத்திருப்பதும் இப்பாஞ்சஜன்யத்தையன்றே. 7. இப்பாஞ்ச

---

என்றபடி. i$_3$ (கரந்துநிற்பானுமாய்) "இப்படிப் பரிவனு யிருக்குமிறே, அத்தாலும்" என்று கூட்டி நிர்வஹிப்பது. k தங்கள் துறையான வாக$_3$ம்ருதந்துக்கு தே$_3$ஶிகனுன மாத்ரமன்றிக்கே அவனை அநுப$_4$விக்குமிடத்தில் ப்ரத$_4$ாநாநு ப$_4$ாவ்யனுகையாலும் இவனைக் கேட்கிருர்கள் என்கிருர். (இவர்கள்தான் இத்யாதி$_3$) k$_2$ இவனை ப்ரத$_4$ானமாக அநு ப$_4$வித்தவிடமுண்டோ? என்ன அருளிச்செய்கிருர் (தாமு

இத்தையிறே. 1 இனி இவன் வார்த்தை கேட்டால் அவன் வார்த்தை கேட்டாற்போலே இனியதுமாயிருக்குமே.

## ஏழாம் திருமொழி—முதல் பாட்டு

**கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ**
**திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ**
**மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும்**
**விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே!**

**பதவுரை:— ஆழி வெண்சங்கே**—க$_{3}$ம்பீ$_{4}$ரமாய் வெளுத்திரா நின்ற ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானே!, **மருப்பு ஒசித்த மாதவன் தன்**—(குவலயாபீட$_{3}$யானையின்) கொம்பை முறித்த கண்ணபிரானுடைய, **வாய்**—திரு அத$_{4}$ரத்தினுடைய, **சுவையும்**—ரஸத்தையும், **நாற்றமும்**—பரிமளத்தையும், **விருப்புற்று**—ஆசையோடே, **கேட்கின்றேன்**—(உன்னைக்) கேட்கின்றேன்; **திரு பவளம் செம் வாய்தான்**—(அப்பெருமானுடைய) அழகிய பவளம்போன்ற சிவந்த திருவத$_{4}$ரமானது, **கருப்பூரம்**—பச்சைக்கர்ப்பூரம்போல், **நாறுமோ ?**—வாசனை வீசுமோ ?, (அல்லது) **கமலப்பூ**—தாமரைப் பூப்போலே, **நாறுமோ ?**—வாசனைவீசுமோ ? **தித்தித்திருக்குமோ**—மது$_{4}$ரமான ரஸத்தை உடைத்தாயிருக்குமோ?, **சொல்**—(இன்னபடியிருக்குமென்று எனக்குச்) சொல்.

---

ஜன்யத்தின் ஒலியைக்கேட்டால் எம்பெருமானுடைய வார்த்தையைக் கேட்பதுபோலே இனியதாயிருக்கும். இவ்வேழு காரணங்களால் வேறொரு நித்யஸூரியைக் கேளாமல், இப்பாஞ்சஜன்யத்தையே கேட்கிறாள்.

*1. அவ:*-எம்பெருமானுடைய வாயில் இருந்து எப்போதும் அநுப$_{4}$விப்பவனாகையாலே, அவனுடைய வாய்ச்சுவையையும்

---

கக்குமித்யாதி$_{3}$) 1 இவன் வார்த்தை அவன் வார்த்தை போலே இருக்கையாலும் கேட்கிறாள் என்கிறார் (இனி இவன் வார்த்தை இத்யாதி$_{3}$) ஆக, கேட்கைக்கு ப்ரதா$_{4}$ந ஹேது மூன்று.



அவ:— முதற்பாட்டு. "a அத்தை நித்யாநுப$_{4}$வம் பண்ணுகையாலே உனக்குத் தெரியுமிறே; அவனுடைய வாக$_{3}$ம்ருதமிருக்கும்படியென்? நீ சொல்லவல்லையே?" என்று அவனைக் கேட்கிறாளாயிருக்கிறது.

வ்யா:— (கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ) b எறிச்சு c வெட்டிதாயிருக்கும் கர்ப்பூரநாற்றம்; ஆறிக் குளிர்ந்து நிலைநின்றிக்கும் கமலப்பூவினுடைய நாற்றம்; d இரண்டுமேயாயிராதிறே. 3. "सर्वगन्धः" (ஸர்வக$_{3}$ந்த$_{4}$:) என்கிற வஸ்துவாகையாலே. e எல்லாம் அநுப$_{4}$வவிஷயமாயிருக்கச்செய்தே ஒன்றையிரண்டைக் கேட்கிறாளித்தனை

---

வாய் மணத்தையும் அறிகிறவன் நீயே. அவை எப்படியிருக்கும் என்பதை நீ சொல்லுவாயா ? என்று ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வானைக் கேட்கிறாள்.

*வ்யா:— (கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ)* கர்ப்பூரத்தின் மணம் எரிப்பையும், வெட்டும் தன்மையாகிற உறைப்பையும் உடையதாயிருக்கும். கமலப்பூவின் மணம் எப்போதுமே ஆறிக் குளிர்ந்திருக்கும். திருப்பவளச் செவ்வாயின் மணம் இக்குறைகள் எதுவுமில்லாமல் இவற்றின் நிறைவுகளைப் பன்மடங்கு உடையதாயிருக்கும். [பக்கம் 9ல் உள்ள 3-வது ப்ரமாணத்தின்படி] எல்லா நறுமணங்களையும் உடையதாக வேத$_{3}$த்தில் ஓதப்படுகின்ற திருமேனியின் அவயவமன்றோ இது. இதனுடைய பெருமைகளனைத்தும் எதற்கும் இல்லாமையாலே ஒரு சில பெருமைகளையுடைய ஒன்றிரண்டு பொருள்களைச் சொல்லி, அவற்றின் குறைகள் இதற்கு இல்லாமையாலே

---

அரு:— முதற்பாட்டு. (கருப்பூரமித்யாதி$_{3}$) a (அதனை)- வாக$_{3}$ம்ருதத்தை. b (எறிக்கை) - ப்ரகாசிக்கை. c (வெட்டிது) - உறைப்பு. d கருப்பூரம்போலவும், கமலம்போலவும் என்னலாம், அதுவோ இதுவோ? என்று ஸம்சயிப்பானென்? என்ன (இரண்டுமேயித்யாதி$_{3}$) e ஸர்வக$_{3}$ந்த$_{4}$ விஷயமானால் எல்லாவற்றையும் சொல்லவேண்டாவோ, ஒன்றிரண்டைக் கேட்பானென்? என்ன அருளிச்செய்கிறார் (எல்லாமித்யாதி$_{3}$) அதாவது - நீச்சுநீரும், நிலை நீருமாகை

யாய்த்து. இதில் உனக்குத்தான் ஏதேனும் தெரிந்திருக்குமாகில், நீதான் சொல்லவல்லையே? என்கிருள். (திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ) e அத்தைத்தப்பி உள்ளே இழிந்தால் அநுப$_4$விக்கும்படி கேட்கிருள். f(ஸர்வக$_3$ந்த$_4$:)என்கிற இதுபோல் 3."सर्वरसः" (ஸர்வரஸ:) என்கிற இது-விகல்ப விஷயமாயிருக்கிறதில்லைபோலே காணும். g தேன்போலே கன்னல்போலே இருக்குமோ?என்று விகல்பித்துக்கேட்கமாட்டுகிறிலளாய்த்து—h வாய்புகுநீராய் i ஆழங்காலாயிருக்கையாலே.

---

'நாறுமோ' என்று ஸம்ஶயமாகக் கேட்கிருள். கருப்பூரம், கமலப்பூ போன்று மற்றும் பல பொருள்களின் நறுமணங்களும் இதில் அநுப$_4$விக்கத் தக்கதாயிருந்தபோதிலும் ப்ரத$_4$ானமான ஒன்றிரண்டைக் கேட்கிருள் என்று கண்டுகொள்வது. *(நாறுமோ)* இதில் எந்த நறுமணம் உள்ளது என்று உனக்கு ஏதேனும் தெரிந்திருந்தால் நீதான் சொல்லவல்லாயோ? என்கிருள். *(திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ)* அருகிலிருக்கும்போதும் அநுப$_4$விக்கக்கூடிய மணத்துக்கும் மேலே சென்று, திருப்பவளத்தில் உள்ளிழிந்து வாய்ச்சுவையை அநுப$_4$வித்தால் அது தித்தித்திருக்குமோ என்று கேட்கிருள். [பக்கம் 9ல் உள்ள 3-வது ப்ரமாணத்தின்படி] இவனுடைய திருமேனி எல்லா நறுமணங்களோடு, எல்லா நற்சுவைகளையும் உடையதன்ருே. அங்கு இரண்டு த்$_3$ருஷ்டாந்தங்களைச் சொல்லி விகல்பித்துக் கேட்டதுபோலே, இங்கும் தேன்போலேயிருக்குமோ, கன்னல்போலேயிருக்குமோ என்று விகல்பித்துக் கேட்காதொழிவானென்? எனில்: இது வாய்புகு நீராய் *(வாய்ச்சுவையாய்)* திகைக்கவைக்கைபால், நீரில் ஆழத்திலிருந்தவர்கள் வேருென்றை நினைக்கமாட்டாதது போலே இரண்டாவதைக் கேட்கமாட்டாதவளானுள்போலும்.

---

யாலே என்றபடி. e (அத்தைத் தப்பி)-பரிமளத்தைத்தப்பி; f ரஸத்தையும் விகல்பிக்கவொண்ணுதோ? என்ன அருளிச்செய்கிருர் **"सर्वगन्धः" (ஸர்வக$_3$ந்த$_4$:)** இத்யாதி$_3$. g உக்தோபபாத$_3$நம் (தேன்போலே இத்யாதி$_3$) h வாய்புகு நீர்-சாடு. தன் வாயிலே புகுகிற ரஸமென்று அர்த்த$_2$ம்; i ஆழம்-த்$_4$வநி.



j (திருப்பவளச்செவ்வாய்) k கண்ணுக்கிலக்கானபோதே பிடித்து அவ்வருகு ஒன்றில் இழியவொட்டுகிறதில்லையாய்த்து. l ஸர்வேந்த்$_3$ரியங்களுக்கும் விஷயமுண்டாயிருக்கிறபடி. (மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச் m சுவையும் n நாற்றமும்) o அளவுடையார் இழிந்து ஆழங்கால் படும் துறையாய்த்து. 106. "भर्तारं परिषस्वजे" (ப$_4$ர்த்தாரம் பரிஷஸ்வஜே) என்கிறபடியே, குவலயாபீட$_3$த்தைத் தள்ளின

---

*(திருப்பவளச் செவ்வாய்)* இது கண்ணுக்கு இலக்கானபோதே தொடங்கி இதைத் தவிர வேருென்றில் இழியவிடாமல் செய்துவிட்டது. அப்படி இதற்குப் பெருமையுண்டோ? எனில், இத்திருப்பவளத்தில் தலைசிறந்த ஶப்$_3$த$_3$ஸ்பர்ஶரூப ரஸக$_3$ந்த$_4$ங்கள் உண்டாயிருக்கையாலே எல்லா இந்த்$_3$ரியங்களுக்கும் இரைபோடுவதன்ருே இது. *(மருப்பொசித்த மாதவன் தன் வாய்ச்சுவையும் நாற்றமும்)*

**106. தம் த்$_3$ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணும்**
**ஸுக$_2$ாவஹம் ।**
**ப$_3$பூ$_4$வ ஹ்ருஷ்டா வைதே$_3$ஹீ ப$_4$ர்த்தாரம் பரிஷஸ்வஜே ॥**
*[ரா-ஆ 30 40]*

[சத்துருக்களை அழித்தவனும், மஹர்ஷிகளுக்கு ஸுக$_2$த்தை அளித்தவனுமான கணவனைப் பார்த்து சீதாப்பிராட்டி ஆநந்த$_3$மடைந்தவளாய் ஸத்தை பெற்ருள். ப$_4$ர்த்தாவான ராமபிரானை நன்ருகத் தழுவினுள்.] என்று க$_2$ரதூ$_3$ஷணுதி$_3$களைக் கொன்றவுடன் அவ்வீரத்துக்குத் தோற்று ஸீதாபிராட்டி இராமபிரானை அணைத்துக் கொண்டதுபோலே குவலயாபீட$_3$த்தைக்கொன்ற வீரத்துக்குத் தோற்று, பிராட்டிமார் ஆழ இழிந்து, வெளிவர

---

j, k "செவ்வாய்" என்றதுக்குத் தாத்பர்யம் (கண்ணுக்கித்யாதி$_3$) l (ஸர்வேந்த்$_3$ரிய விஷயம்) - நாற்றம், ரஸம், சிவப்பு; இம்மூன்றும் மற்றை இரண்டுக்கும் உபலக்ஷணம். l அவ்வருகு இழியவொட்டாமைக்கு ஹேதுவேது? என்ன அருளிச்செய்கிருர் (ஸர்வேந்த்$_3$ரியங்களுக்கும் இத்யாதி$_3$) o (அளவுடையார்) என்றது - பிராட்டியை.

அனந்தரம் அணைத்தநுப$_4$விக்குமாய்த்து. (வாய்ச்சுவையும் நாற்றமும்) p அநுப$_4$வ ஸமயத்தில் நாற்றம் முற்பட்டதே யாகிலும், அநுப$_4$ாஷிக்கிறவிடத்தில் ரஸம் முற்பட்டு க$_3$ந்த$_4$ம் பிற்பட்டிருக்கிறதுகாணும். q (விருப்புற்றுக் கேட்கின்றேன்) q$_2$ 107. "अनसूयवे" (அநஸூயவே) என்னும் விளம்ப$_3$முமில்லை;

---

முடியாமல் ஈடுபடும் துறையன்றோ இது. *(வாய்ச்சுவையும் நாற்றமும்)* அநுப$_4$விக்கும்போது முதல் இரண்டு அடிகளிலே முதலில் மணத்தைச் சொல்லி, பிறகு சுவையைச் சொன்ன போதிலும் அவ்வநுப$_4$வத்திலிருந்து மீண்டு அதைப் பேசும் போது பு$_3$த்$_3$தி$_4$ஸ்த$_2$க்ரமத்திலே முதலில் சுவையைச் சொல்லி பிறகு மணத்தைச் சொல்லுகிறுள். *(விருப்புற்றுக் கேட்கின்றேன்)* நான் இவ்வாய்ச் சுவையிலும் நாற்றத்திலும் பெருங்காதல் கொண்டு கேட்கின்றேன்.

**107. இத$_3$ம் து தே கு$_3$ஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே।**
**ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம்**
**யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽஶுப$_4$ாத் ॥** [கீ$_3$தை 9-1]

---

m (சுவை)-ரஸம். n (நாற்றம்) - க$_3$ந்த$_4$ம். p கீழ்ச்சொன்ன படியை நாற்றம் முன்னாக அநுப$_4$ாஷியாதிருப்பானென்? என்ன அருளிச்செய்கிறுர் (அநுப$_4$வ ஸமயத்திலித்யாதி$_3$) அவக$_3$ாஹநாதிஶயத்தாலே ரஸ்யதை பின்னுட்டிற்று என்றபடி. p "(அநுப$_4$வ ஸமயத்தில்) என்றது-அநுப$_4$வோப க்ரமஸமயத்திலென்றபடி" என்றருளிச்செய்வர். இத்தால் தாத்பர்யம்; — அநுப$_4$வோபக்ரம ஸமயத்திலே க$_3$ந்த$_4$க்$_3$ரஹணம் ப்ரத$_2$மப$_4$ாவியாய், ரஸம் பஶ்சாத்$_3$ப$_4$ாவியானுலும் அநுப$_4$வவேளையில் ரஸமே ப்ரத$_4$ாநமாயிருக்கையைப் பற்ற அநுப$_4$ாஷிக்கிறவிடத்தில் ரஸம் முன்னுகச்சொல்லுகிறுள் என்றபடி. உபக்ரம ஸமயத்தைப்பற்ற கீழ்ச்சொல்லிற்று; அநுப$_4$வஸமயத்திலிருக்கும்படியைப் பற்ற இங்கு இப்படி அநுப$_4$ாஷிக்கிறதென்றபடி. q"விருப்பு"-ஆத$_3$ரம் q,q$_2$"விருப் புற்று" என்றதுக்கு - ஈஶ்வரன் பக்கலிலே விருப்புற்று என்றுய், இதுக்குத் தாத்பர்யம் "अनसूयवे" (அநஸூயவே)



108. "न च मां योऽभ्यसूयति" (ந ச மாம் யோऽப்$_4$யஸூயதி) என்னவேண்டாவிறே இவளுக்கு; r அடியானுகையாலே நியமித்துக் r$_2$ கேட்கலாமே; s அவனுக்கு ஶேஷபூ$_4$தனுகை யாலே இவளுக்கும் அடியானுயிருக்குமிறே; ப$_4$ர்த்ருப$_4$ார்யை

---

[மிகவும் ரஹஸ்யமானதும், விஶேஷஜ்ஞானத்தோடு கூடியது மான ப$_4$க்திருபமான இந்த ஜ்ஞானத்தை, *அஸூயையற்றவனுன* உனக்கு உபதே$_3$ஶிக்கிறேன். இதையறிந்தால் எல்லா அஶு ப$_4$ங்களிலிருந்தும் நீ விடுபடுவாய்] என்கிறபடியே முதலில் அஸூயையின்மை பிறந்து, அதற்குப்பின் விருப்பம் பிறக்க வேண்டிய காலதாமதமும் என்விஷயத்தில் இல்லை.

**108. இத$_3$ம் தே நாதபஸ்காய நாப$_4$க்தாய கதா$_3$சந।**
**ந சாஶுஶ்ருஷவே வாச்யம் ந ச மாம்**
**யோऽப்$_4$யஸூயதி ॥** [கீ$_3$தை18-67]

[(என்றல்) உனக்குச் சொல்லப்பட்ட இந்த சாஸ்திரம், தவம் செய்யாதவனுக்கும், (என்னிடமும் உன்னிடமும்) ப$_4$க்தியற்ற வனுக்கும், கேட்பதில் விருப்பமற்றவனுக்கும், என்னை எவ னொருவன் த்$_3$வேஷிக்கிருனே அவனுக்கும் ஒரு போதும் உபதே$_3$ஶிக்கத்தக்கதன்று.] என்று அர்ஜுனனிடம் சொன்னது போலே பெருங்காதலுடைய இவளுக்குச் சொல்லவேண்டா மன்றோ. அன்றிக்கே, ஸ்ரீபாஞ்சஜன்யத்தை நோக்கி 'உன்னி டத்தில் மிகவிருப்பத்துடன் நான் இதைக் கேட்கிறேன்' என்ப தாகவும் பொருள்கொள்ளலாம். அவனுடைய பிராட்டியாகிய நான் அடியானுன உன்னை நியமித்துக் கேட்கலாமானுலும் என்செல்லாமையாலே உன்னைப் பிரார்த்தி$_2$த்துக் கேட்கிறேன். ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வான் எம்பெருமானுக்கு அடிமைப்பட்ட வனுகையாலே இவளுக்கும் அடிமையன்றோ. கணவனுக்கும்

---

இத்யாதி$_3$. q,r அன்றிக்கே, "விருப்புற்று" என்றதுக்கு-உன் பக்கலிலே ஆத$_3$ரத்தை உடையேனுய்க் கேட்கிறேனென் றுக்கி, தாத்பர்யம் (அடியானுகையாலேயித்யாதி$_3$) r$_2$ (கேட்கலாமே) " ஆயிருக்கவும் விருப்புற்றுக் கேட்கின் றேன் என்றுளிறே செல்லாமை " என்று வாக்யஶேஷம் அத்$_4$யாஹார்யம். s கேட்கலானபடி எப்படியென்ன அருளிச்

கள் இருவருக்கும் பொதுவாயிறே த$_3$ாஸத$_3$ாஸிகளிருப்பது. (ஆழி) உன் அளவுடைமைபோலேயிருக்கவேண்டாவோ பரிமாற்றமும்? t அன்றிக்கே பிறப்பைச் சொல்லுதல். (வெண் சங்கே) உன் நிறத்தில் வெண்மை நெஞ்சிலே பட்டாற் போலே உன் வார்த்தையும் நெஞ்சிலே படும்படி சொல்ல வேணும். (வெண்சங்கே) u கைவிடாதே அநுப$_4$வியாநிற்கச் செய்தே உடம்பு வெளுக்கும்படியிறே இவனுடைய ஆற்ருமை. 1

## ஏழாம் திருமொழி—இரண்டாம் பாட்டு

கடலில் பிறந்து கருதாது பஞ்சசனன்
உடலில் வளர்ந்துபோய் ஊழியான் கைத்தலத்
திடரில் குடியேறித் தீய வசுரர்
நடலைப் படமுழங்கும் தோற்றத்தாய் நற்சங்கே!

---

மனைவிக்கும் பொதுவாக இருப்பவர்களன்ரோ அடிமைகள். *(ஆழி-சங்கே)* கடல்போல் பெருத்த மனப்பரப்பையுடைய சங்கே! உன்னுடைய மனப்பரப்பைப்போல் நீ விசாலமாக நடந்துகொள்ளவேண்டாமா என்று கருத்து. அன்றிக்கே, ஆழியாகிய கடலில் பிறந்த சங்கே என்றும் பொருள்கொள்ளலாம். அப்போது உன்பிறப்பிடமான கடல் எல்லாவற்றிற்கும் த$_4$ாரகமாயிருப்பதுபோலே நீயும் என் கேள்விக்கு பதில் சொல்லி என்னை த$_4$ரிக்கச் செய்யவேணும் என்று கருத்து. *(வெண்சங்கே சொல்)* உன் நிறமாகிற வெண்மை என்நெஞ்சில் பட்டது போலே உன்வார்த்தையும் என்நெஞ்சில் படவேணும். அன்றிக்கே, கைவிடாமல் அநுப$_4$வித்துக்கொண்டிருக்கும்போதும் உடம்பு வெளுக்கும் ஆற்ருமை உடைய நீ எனது ஆற்ருமையையும் அறிவாயாகையாலே சொல்லவேணும் என்கிருள் என்றும் கொள்ளலாம். 1.

---

செய்கிருர் (அவனுக்கித்யாதி$_3$) t பிறப்பைச் சொன்ன பக்ஷத்தில், ஸமுத்$_3$ரம் பத$_3$ார்த்த$_2$ங்களுக்கு த$_4$ாரகமாமாப் போலே, நீயும் எனக்கு த$_4$ாரகமாகவேண்டாவோ என்றபடி. u தாத்பர்யாந்தரம் (கைவிடாதே இத்யாதி$_3$). 1.



பதவுரை:—**நல் சங்கே**-அழகிய சங்கே! (நீ), **கடலில்**—ஸமுத்$_3$ரத்திலே, **பிறந்து**-பிறந்து (அங்குநின்றும்), **பஞ்சசனன் உடலில் போய் வளர்ந்து**—பஞ்சசனனென்ற அஸுரனுடைய சரீரத்திற்போய் வளர்ந்து, **கருதாது**—(இப்படி பிறந்த இடத்தையும வளர்ந்த இடத்தையும்) நினையாமல், **ஊழியான்**—எம்பெருமானுடைய, **கை தலம் திடரில்**—கைத்தலமாகிற உயர்ந்த இடத்திலே, **குடி ஏறி**—குடிபுகுந்து, **தீய அசுரர்**—கொடியவர்களான அசுரர்கள், **நடலை பட**—துன்பப்படும்படி. **முழங்கும் தோற்றத்தாய்**—ஒலி செய்யும்படியான மேன்மையுடையையாயிராநின்ருய்.

அவ:— இரண்டாம் பாட்டு. *a உகவாதாரை அழியச் செய்யுமாபோலே உகப்பாரை வாழ்விக்கவேணுங்காண். b நீ பிறந்து வளர்ந்தாற்போலே இருக்கவேணுங்காண் கார்யங்களும்.

---

2, *அவ:*— * எம்பெருமானிடம் அன்பில்லாதவர்களை அழியச்செய்வதுபோலே, நீ அவனிடம் அன்புடைய என்னைப் போன்றவர்களை வாழ்விக்கவும்வேணும் என்கிருள். உன்னுடைய பிறப்பும் வளர்ப்பும் பிறர்க்காகவே அமைந்தது போலே நீ செய்யும் காரியங்களும் பிறர்க்காகவே இருக்கவேணும் என்று சொல்லுகிருள் என்றும் கொள்ளலாம்.

*வ்யா:— (கடலில் பிறந்து கருதாது பஞ்சசனன் உடலில் வளர்ந்து போய் ஊழியான் கைத்தலத் திடரில் குடியேறி)* உப்புக்கடலிலே பிறந்து,நெஞ்சு முழுவதும் ப$_4$க$_3$வானைப் பற்றிய த்$_3$வேஷமேயாயிருக்கிற பஞ்சசனன் என்னும் அஸுரனுடைய உட லுக்குள்ளே வளர்ந்து. இப்படிப் பிறந்து வளர்ந்த இடங்க

---

அரு:— இரணடாம் பாட்டு. (கடலிலித்யாதி$_3$) b உன் பிறப்பு பரார்த்த$_2$மானாற்போலே உன் கார்யமும் பரார்த்த$_2$மாகவேணுமென்று இரண்டாம் அவதாரிகைக்குத் தாத்

---

* பாசுரத்தின் பிற்பகுதியை நோக்கி முதல் அவதாரிகையும், முற்பகுதியை நோக்கி இரண்டாவது அவதாரிகையும் எழுந்துள்ளன.

வ்யா:—(கடலிலித்யாதி$_{3}$) கடலிலே பிறந்து அகவாயிலுள்ளது c த்$_{3}$வேஷமேயாயிருக்கிற d அஸுரனுடைய உடலுக்குள்ளே வளர்ந்தத்தை e நினையாதே, பின்னைப்போய், f காலஶேஷமான ஜக$_{3}$த்துக்கு நிர்வாஹகனாயிருக்கிற ஸர்வேஶ்வரனுடைய கைத்தலத்திலே குடியேறி. (தீய அசுரர் g நடலைப்பட முழங்கும் ந$_{2}$ தோற்றத்தாய்) அவன்படி அடங்க

---

ளின் தாழ்வை நினையாமல், எல்லாப்பொருள்களும் ஸம்ஹரிக்கப்பெற்று, காலம் ஒன்றே எஞ்சியிருந்த ப்ரளயகாலத்தில் ஸர்வஸம்ஹாரகனாய், அனைத்துலகையும் தனக்குள்ளே அடக்கியிருந்த ஸர்வேஶ்வரனுடைய திருக்கைத்தலத்திலே குடியேறி. 'கடலில் பிறந்து' என்றது தாழ்வைச் சொல்லுவதாகாமல், கணக்கற்ற ஜீவராசிகளுக்கு இருப்பிடமாயிருக்கும் உபகாரத்தைச் சொல்லுவதாய், இப்படி அனைவர்க்கும் உபகரிக்கும் கடலில் பிறந்த நீ என்னைப் போன்றவர்களுக்கு உபகரிக்க வேணும் என்று கூறுவதாகவும் கொள்ளலாம். *(கருதாது... வளர்ந்து)* அஸுரனுடைய உடலில் அவனுடைய தே$_{3}$ாஷத்தைக் காணாமல் வளர்ந்த நீ, எங்களுக்கும் குற்றம் காணாமல் உபகரிக்கவேணும் என்று கருத்து. *(தீய அசுரர் நடலைப் பட முழங்கும் தோற்றத்தாய்)* கொடியவர்களான அஸுரர்கள் துன்பம் அடையும்படி எம்பெருமான் செய்யும் யுத்$_{3}$த$_{4}$ங்களிலே ஒலிசெய்யும் பெருமையை உடையையாயிராநின்றாய்.

---

பர்யம். a "அசுரர் நடலைப்பட" என்றதுக்குத் தாத்பர்யம் (நீ உகவாதாரையித்யாதி$_{3}$) b (நீ பிறந்து வளர்ந்தாற்போலே இருக்கவேணும்) என்றதுக்குத் தாத்பர்யம் — ஸர்வோபகாரகமான கடலிலே பிறந்தாற்போலவும் பஞ்சஜநனுடலிலே அவன் தே$_{3}$ாஷம் த$_{3}$ர்ஶியாமல் வளர்ந்தாற்போலவும் இருக்கவேணுங்காண் என்றபடி. e "கருதாது"-நினையாது. d (பஞ்சசனன்) - அஸுரன். c கருதாது - ப$_{4}$க$_{3}$வானைக் கருதாதென்றாய், அத்தால் - த்$_{3}$வேஷமேயாயிருக்கிற பஞ்சஜநனென்றபடி. f (காலஶேஷமான) என்றது - எல்லாப் பதா$_{3}$ர்த்த$_{2}$ங்களும் ஸம்ஹ்ருதமாய், காலமே ஶேஷித்த என்றபடி. ஊழியான் - காலநிர்வாஹகன். g (நடலை)-



உண்டாயிருந்ததீ உனக்கு. அவன் யது$_{3}$குலத்திலே பிறந்து ஶத்ருவான கம்ஸனுக்குள்ளாய் இறையிறுத்திருக்கிற திருவாய்ப்பாடியிலே வளர்ந்து, காலயவநஜராஸந்த$_{4}$ாதி$_{3}$களுக்காகப் போய் ஸ்ரீமத்$_{3}$த்$_{3}$வாரகையைப் படைவீடாகச் செய்து அங்கே குடியேறி, பின்னை து$_{3}$ர்யோத$_{4}$நாதி$_{3}$களை மண்ணுண்ணும்படி வந்து, இப்படி செய்தானிறே அவனும். (நல் சங்கே) h இருகரையராயிருப்பார்கள் உனக்கொப்பாவர்களோ ? குற்றத்தையும் கு$_{3}$ணத்தையும் கணக்கிட்டுச்

---

அவன் ஸ்வப$_{4}$ாவம் முழுவதும் உனக்கு உண்டாயிருப்பதில் என்ன ஆஶ்சர்யம் ? அவன் யது$_{3}$குலத்தில் பிறந்ததுபோலே நீயும் கடலில் பிறந்தாய். அவன் அஸுரத் தன்மையுடைய கம்ஸனுடைய ஆளுகைக்கு உட்பட்ட திருவாய்ப்பாடியில் வளர்ந்ததுபோலே, நீயும் அஸுரனுடைய உடலிலே வளர்ந்தாய். அவன் காலயவனன், ஜராஸந்த$_{4}$ன் முதலானவர்களின் படையெடுப்பைத் தவிர்ப்பதற்காக ஸ்ரீத்$_{3}$வாரகையைத் தலைநகரமாகக் கொண்டு குடியேறியதுபோலே நீயும் எம்பெருமானது கைத்தலத் திடரில் குடியேறினாய். அவன் து$_{3}$ர்யோத$_{4}$னாதி$_{3}$களை அழியச்செய்ததுபோலே நீயும் *"ஸ கோ$_{4}$ஷோ தா$_{4}$ர்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருத$_{3}$யாநி வ்யதா$_{3}$ரயத்"* [கீ$_{3}$தை 1-19] [அந்தப் பாஞ்சஜன்ய ஒலி த்$_{4}$ருதராஷ்ட்ர புத்ரர்களின் நெஞ்சங்களைப் பிளந்தது] *"யஸ்ய நாதே$_{3}$ந தை$_{3}$த்யாநாம் ப$_{3}$லஹாநிரஜாயத"* [வி-பு 5-21-29] [எந்தப் பாஞ்சஜன்யத்தின் ஒலியாலே அஸுரர்களின் ப$_{3}$லம் அழிந்ததோ] என்கிறபடியே அஸுர ஸ்வப$_{4}$ாவமுடைய அனைவரும் அழியும்படி முழங்கினாய் என்று கருத்து. இப்படி எம்பெருமானோடு ஸாம்யம் மாத்திரமல்ல, அவனைக்காட்டிலும் சிறப்பும் உண்டு என்கிறாள் மேலே— *(நல்சங்கே)* கர்மாநுகு$_{3}$ணமாக உலகைப்படைப்பவனாகையாலே குற்றத்தையும் கு$_{3}$ணத்தையும் கணக்கிட்டு, குற்றங்களுக்கு

---

து$_{3}$:க்க$_{2}$ம். h கர்மாநுகு$_{3}$ணமாகக் குற்றங்களையும் கு$_{3}$ணங்களையும் பார்க்கையாலே ஈச்வரனை இருகரையனென்கிறது. அவன், குற்றத்தையும் கு$_{3}$ணமாகக்கொள்ளுகிற உனக்கொவ்வான் என்றபடி.

செய்யுமவர்கள் உனக்கொப்பாகமாட்டார்களிறே; கர்மாநுகு$_3$ணமாக ஸ்ருஷ்டிக்குமவனிறே அவன்,

i (கடலில் பிறந்தித்யாதி$_3$) j நஞ்சீயர் ஸந்யஸித்தருளின காலத்திலே அநந்தாழ்வான் கண்டு, முன்புத்தை ஐஶ்வர்யம் அறியுமவனுகையாலே, "ஒரு பூவைச்சூடி வெற்றிலையைத் தின்று சந்த$_3$நத்தைப் பூசிப் போராநிற்கச்செய்தே, எம்பெருமானே ரக்ஷகன் என்றிருந்தால் பரமபத$_3$த்தில் நின்றும் இழியத் தள்ளுவர்களோ? இங்ஙனே செய்யத் தகாது" என்று போர வெறுத்தவாறே; கூட நின்றவர்களும் "இங்ஙன் செய்வதே!" என்று வெறுத்தார்களாய்,

---

தண்டனை வழங்கி, கு$_3$ணத்துக்குத் தக்கபடி அருள்புரியும் இருகரையனுன ஸர்வேஶ்வரனைக் காட்டிலும், சிறப்புடையையாய், குற்றத்தையும் கு$_3$ணமாகக்கொள்ளும் நன்மையுடைய சங்கே! உனக்கு எம்பெருமானும் ஒப்பாகமாட்டானன்றோ. ஓரிடத்திலே பிறந்து, ஓரிடத்திலே வளர்ந்து, ஒரு காரியத்தைச் செய்பவன் என்று பாஞ்சஜன்யாழ்வானைச் சொன்னது— ஸ்வாபதே$_3$ஶத்திலே ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் திருமந்த்ரத்திலே பிறந்து, த்$_3$வயத்திலே வளர்ந்து, த்$_3$வயார்த்த$_2$த்திலே ஊன்றியிருக்கவேணும் என்பதைக் காட்டுகிறது என்னும் இவ்வர்த்த$_2$த்தை விளக்கும் ஐதிஹ்யம் ஒன்று இங்கு பெரியவாச்சான்பிள்ளையால் எடுக்கப்பட்டது. அதாவது—ஏராளமான செல்வத்தையுடையவராய், மேல்நாட்டில் போ$_4$க$_3$போ$_4$க்$_3$யங்களோடு வாழ்ந்திருந்தவராய், வேத$_3$ாந்தி என்று புகழ்பெற்றிருந்த அத்$_3$வைதியான மாத$_4$வாசார்யர் பட்டரால் ஜயிக்கப்பெற்று, அவருக்குச் சீடரானுர். சில காலத்துக்குப்பின் ஸ்ரீரங்கத்தில் ப$_4$ட்டரோடு சேர்ந்து அவருக்குத் தொண்டுபுரியவேணும் என்று திருவுள்ளம்பற்றி, தமது ஐஶ்வர்யத்தையெல்லாம் உதறி, உறவினர்களையும் அடியோடு கைவிட்டு ஸந்யாஸத்தை ஏற்றுக்கொண்டார்; ப$_4$ட்டரால் நஞ்சீயர் என்று அபி$_4$மானிக்கப் பெற்றுர்.

---

j இவனைப்போலே பிறந்து வளர்ந்து விரோதி$_4$நிரஸநம் பண்ணிக் கையிலே வாழுகைக்கு ஸம்வாத$_3$மாக ஓர் ஐதிஹ்யம் அருளிச்செய்கிறுர் (நஞ்சீயர் இத்யாதி$_3$)



"இவர் தாம் k செய்வதென்?" என்று விட்டு, l "திருமந்த்ரத்திலே பிற" என்று முக்கால்சொல்லி, "திருமந்த்ரத்திலே பிறந்து, த்$_3$வயத்திலே வளர்ந்து, த்$_3$வயைகநிஷ்ட$_2$னும்படியாய்த் தலைக்கட்டுவது உன் கார்யம்" என்று ப்ரஸாதி$_3$த்தான். "திருமந்த்ரத்தில் சொல்லுகிறபடியே ஸ்வரூபஜ்ஞாந

---

எம்பெருமானுருடைய ஶிஷ்யரான அநந்தாழ்வான் இவர் ஸந்யாஸம் ஏற்றுக்கொள்வதைக்கண்டு, ஏற்கனவே இவருக்கிருந்த செல்வச் சிறப்பையெல்லாம் அறிந்தவராகையாலே, "ஜீயரே! புஷ்பம், வெற்றிலை, சந்த$_3$னம் முதலான போ$_4$க$_3$ப்பொருள்களை அநுப$_4$வித்துக்கொண்டு க்$_3$ருஹஸ்த$_2$ராயிருந்து எம்பெருமானே தஞ்சம் என்றிருந்தால் உம்மைப் பரமபத$_3$த்தில் நுழையமுடியாதபடி தள்ளிவிடுவார்களோ? இந்த ஸந்யாஸம் எதற்கு?" என்று மிகவும் துன்பத்தைக் காட்டினுர். அங்கு கூடியிருந்த மற்ற ஸ்ரீவைஷ்ணவர்களும் இதைக்கண்டு துன்புற்றுர்கள். ஆனுலும் ஆசார்யநிஷ்டை$_2$யாலே க்$_3$ருஹஸ்த$_2$ாஶ்ரமத்தில் வெறுப்புற்று இதைச் செய்தார் என்று ஒருவாறு தேறினுர்கள். அப்போது அநந்தாழ்வான் "க்$_3$ருஹஸ்த$_2$ாஶ்ரமத்தைவிட்டு, ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்றுக்கொள்ளும் புதிய பிறப்பு பெரிய பிறப்பல்ல; திருமந்த்ரத்தின் மூன்று பத$_3$ங்களின் பொருளையும் நன்கு உணர்வதன்மூலம் வைஷ்ணவனுகப் பிறக்கும் பிறப்பே உண்மையான பிறப்பாகும்" என்பது தோற்ற திருமந்த்ரத்திலே பிற என்று மூன்று முறை கூறினுர். "திருமந்த்ரத்திலே பிறந்து, த்$_3$வயத்திலே வளர்ந்து, த்$_3$வயத்தின் பொருளிலேயே ஊன்றியிருக்கவேண்டியதே நீர் செய்யவேண்டியது" என்றும் அருளினுர். இதன் விளக்கமாக

---

l "திருமந்த்ரத்திலே பிற" என்று முக்கால் சொன்னதுக்குத் தாத்பர்யம்—ப்ரத$_2$ம மத்$_4$யம சரம பர்வக்ரமத்தைப் பற்ற. k (செய்வதென்னென்று விட்டு) என்றது - இவரை வெறுக்கிறத்தை விட்டென்றபடி. i "கடலில்" இத்யாதி$_3$ என்று புந:பதே$_3$ாபாத$_3$ாநம் பண்ணினதுக்குத் தாத்பர்யம்-வைஷ்ணவனுக்குத் திருமந்த்ரோத்பத்த்யாதி$_3$களுண்டென்று ஸந்யா

முண்டாய், த்3வயத்தில் சொல்லுகிறபடியே உபாயபரிக்3ரஹ முண்டாகவேணும்'' என்று ப்ரஸாதி3த்தான். 2.

### ஏழாம் திருமொழி — மூன்ரும் பாட்டு

தடவரையின் மீதே சரற்கால சந்திரன்
இடையுவா வில்வந்து எழுந்தாலே போல்நீயும்
வடமதுரை யார்மன்னன் வாசுதே வன்கையில்
குடியேறி வீற்றிருந்தாய் கோலப் பெருஞ்சங்கே!

**பதவுரை:— கோலம் பெரு சங்கே** — அழகிய பெரிய சங்கே!, **சரற்காலம் சந்திரன்** — சரத்காலத்துச்சந்திரன், **உவா இடையில்** — பௌர்ணமியினன்று, **தட வரையின் மீது வந்து எழுந்தால் போல்** — பெரிய உத3யகி3ரியிலே வந்து எழுந்தாற்போல், **வட மதுரையார் மன்னன் வாசுதேவன் கையில்** — வடமதுரையிலுள்ளார்க்கு அரசனுன கண்ண பிரானுடைய திருக்கையில், **நீயும் குடி ஏறி** — நீயும் குடி புகுந்து, **வீற்றிருந்தாய்** — உன மேன்மையெல்லாம் தோற்ற இராநின்ருய்.

**வ்யா:— மூன்ரும் பாட்டு.** a (தடவரையித்யாதி3) **உத3ய கி3ரியின் மேலே ஶரத்காலத்திலே எல்லாக்கலேகளும் நிரம்**

---

''திருமந்த்ரத்திலே சொல்லுகிறபடியே ஸ்வரூபஜ்ஞானம் உமக்கு உண்டாகி, த்3வயத்தில் சொல்லுகிறபடியே எம்பெரு மானேயே உபாயமாக நீர் பற்றவேணும்'' என்னும் வாக்யத்தை யும் அருளினர்—என்பதே அவ்வைதிஹ்யம். 2.

3. *அவ:*—சரத்காலத்தில் உத3யகி3ரியின்மேல் பௌர்ணமி நிலவு எழுந்ததுபோலே, வாசுதேவன் கையில் சங்கம் வீற்றி ருக்கும் அழகைக் கொண்டாடுகிருள்.

*வ்யா:— (தடவரையின் மீதே சரற்காலசந்திரன் இடை உவாவில் வந்து எழுந்தாலே போல்)* உத3யகி3ரியின்மேலே சரத்

---

ஸத்தில் உபாயத்வபு3த்3தி4பண்ணவேண்டா என்றபடி. ஜ3 (தோற்றம்) காட்சியும், அழகும். 2.



பின b பூர்ண சந்த்3ரன் வந்து தோற்றிறுற்போலே. தட வரைத்தோளிறே. (நீயும் வடமதுரையார் மன்னனித்யாதி3) உன் ஐஶ்வர்யமிருந்தபடியென் ! ஸ்ரீமது4ரையிலுள்ளார்க்கு நிர்வாஹகனுய், ஸ்ரீ வஸுதே3வர் திருமகனுய் இருக்கிறவ னுடைய திருக்கையிலே ஒரு காலமும் பிரியாதபடியாகக்

---

காலத்திலே பௌர்ணமியன்று பதினறு கலேகளும் நிரம்பிய பூர்ணசந்திரன் வந்து தோற்றிறுற்போலே. *(தடவரை)* '*தடவரைத்தோள்*'' [பெரியாழ்-திரு 5-4-4] என்று இவளது தமப்பனரும் எம்பெருமானுடைய தோளேப் பேசினரன்றே. அந்தத் தோளின்மீது சங்கம் வீற்றிருப்பது, உதயகிரியின் மேலே பூர்ணசந்திரன் எழுந்ததுபோலேயிருக்கிறது என்று கருத்து. *(சரற்காலசந்திரன்)* சரத்காலத்தில் வானம் மேக4ங் களால் சூழப்படாமல் நிர்மலமாயிருக்குமாகையாலே, மிகுந்த வெண்மையையுடைய சங்கத்திற்கு சரத்காலசந்திரனே உவமை யாக்குகிருள். *(இடை உவாவில் வந்து எழுந்தாலே போல்)* உவா என்பது அமாவாஸ்யை, பௌர்ணமி ஆகிய இரண்டை யும் குறிக்கும். இங்கு சங்கத்திற்கு த்3ருஷ்டாந்தமாகச் சந்தி ரனேக் குறிக்கையாலே 'உவா' என்னும் சொல் பௌர்ணமி யைக் குறிக்கிறது. 'இடையுவாவில்' என்றது 'உவா இடையில்' (பௌர்ணமியில்) என்றபடி. *(நீயும் வடமதுரையார் மன்னன் வாசுதேவன் கையில் குடியேறி வீற்றிருந்தாய்)* நீயும் வடமதுரை யிலுள்ளார்க்கு அரசனுய், ஸ்ரீவஸுதே3வகுமாரனுன கண்ண பிரானுடைய திருக்கையில் ஒருகாலும் பிரியாதபடி குடிபுகுந்து, உன் மேன்மையெல்லாம் தோற்ற இராநின்ருய். உன் செல்வ மிருந்தபடியென்! 'வடமதுரையார் மன்னன்' என்று மேன்மை யையும், 'வாசுதேவன்' என்று நீர்மையையும், 'கையில்' என்று வடிவழகையும் காட்டுகிருள். இப்பசுங்கூட்டு ஆழ்

---

அரு:—மூன்ரும் பாட்டு. a (தடவரையித்யாதி3) ''சரற் காலத்தில் - உவா இடையில் - தடவரையின்மீதே தோற் றின - சந்த்3ரனேப்போலே'' இத்யந்வய:. b (இடையுவா) ''இடை'' என்று - நடுவாய். சதுர்த்த3ஶிக்கும் ப்ரத3மைக் கும் நடுவான பர்வத்திலேயென்னுதல்; உவாவினிடையில்

குடியேறி, உன் ஐஶ்வர்யவ்யாவ்ருத்தியெல்லாம் தோற்றும் படியாயிருந்தாய். (கோலப்பெருஞ்சங்கே) உன் அழகுக்கு மேலே அவனுக்கும் உன்னாலே அழகாம்படி இருந்ததீ உன்னேற்றம். 3.

ஏழாம் திருமொழி—நாலாம் பாட்டு

சந்திர மண்டலம்போல் தாமோ தரன்கையில்
அந்தர மொன்றின்றி ஏறி யவன்செவியில்
மந்திரங் கொள்வாயே போலும் வலம்புரியே!
இந்திரனு முன்னோடு செல்வத்துக் கேலானே.

பதவுரை:— **வலம்புரியே!** —வலம்புரிச்சங்கே!, **தாமோதரன்கையில்** — கண்ணபிரானது திருக்கையில், **சந்திர மண்டலம் போல்** — சந்திர மண்டலம்போலே, **அந்தரம் ஒன்று இன்றி ஏறி**—இடை விடாது இருந்து கொண்டு, **அவன் செவியில்** — அவனுடைய காதில், **மந்திரம் கொள் வாய் போலும்** — ஏதோ ரஹஸ்யம் பேசுகிறாய் போலிரா நின்றாய்; **இந்திரனும்** - (செல்வத்தில் மிக்கவனாய்ப் புகழ் பெற்ற) இந்திரனும், **செல்வத்துக்கு** ஐச்வர்யவிஷயத்தில், **உன்னோடு ஏலான்**—உனக்கு ஒப்பாகமாட்டான்.

---

வார்கள் எம்பெருமான் விஷயத்தில் அடிக்கடி சேர்த்து அநுப₄விக்கும் ஆகாரத்ரயமன்றோ. *(கோலப்பெரும் சங்கே)* அழகில் பெருமைபெற்ற சங்கே! உன் அழகுக்கு மேலே, அவனுக்கும் உன்னாலே அழகுண்டாம்படியிருக்கிறது உன் பெருமை என்று கருத்து. 3.

*4. அவ:*—எம்பெருமான் செவியில் ரஹஸ்யவார்த்தைகள் பேசவல்ல நீ என்னைப்பற்றி அவனுக்கு அறிவிக்கவேணும் என்று உணர்த்துகிறாள்.

---

என்றாய், பர்வத்திலேயென்னுதல். எல்லாப் பாட்டுகளுக்கும் க்ரியை ''சொல்லாழி வெண்சங்கே'' என்றது. அன்றியே பாட்டுத்தோறும் கொண்டாட்டமாதல். 3.



வ்யா:— நாலாம் பாட்டு. (சந்திரனித்யாதி₃) செருக்கராயிருக்குமவர்கள் கையிலே a.குளிரிக்குடம் பிடித்துக் கொண்டிருக்குமாபோலே. (தாமோதரன் கையில்) அவனைக் கண்டால் வயிற்றில் தழும்பாலே ''ஒரு தாயார்க்கு ப₄வ்யனாய் வளர்ந்தான்'' என்று தெரியுமாபோலே, உன்னைக் கண்டால் இவனும் ப₄வ்யனென்று b.தோற்றும்படி இருக்க வேண்டாவோ? (அந்தரமொன்றின்றி) அவன் விரும்பியிருப்பார் பலருமுண்டிறே; அவர்களைப்போலே ஒரு விச்சே₂த₃மின்றிக்கே. [ஒருத்தர்க்கு] c ஓராபத்து வந்தவாறே

---

வ்யா:—*(சந்திரமண்டலம்போல் தாமோதரன் கையில் ஏறி)* தாமோதரன் திருக்கையிலே சந்திரமண்ட₃லம் உள்ளதுபோல் இருக்கிறது உன் இருப்பு. செல்வச்செழிப்புள்ள ராஜகுமாரர்கள் கையில் பனிநீர்க்குப்பியை, தமக்கு அடிக்கடி சைத்யோபசாரம் செய்வதற்கு ஏந்தியிருப்பதுபோலேயிருக்கிறது உன்னை எம்பெருமான் கையிலே ஏந்தியிருப்பது. *(தாமோதரன் கையில்)* அவனைக் காண்பார்க்கு அவன் வயிற்றிலுள்ள தழும்பைக் கொண்டு, 'தாயான யசோதை கயிற்றால் கட்டவுமாம்படி அவளுக்கு ப₄வ்யனாய் வளர்ந்தவன்' என்று விளங்குவது போலே, உன்னைக்கண்டால் ''இப்பாஞ்சஜன்யாழ்வானும் எம்பெருமானுக்கும் அவனடியார்களுக்கும் ப₄வ்யன்'' என்று தோற்றும்படி இருந்து எங்கள் கார்யம் செய்யவேண்டாவோ? என்று கருத்து. *(தாமோதரன்)* தான் யசோதையின் கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டிருந்தவன் என்பது தோற்ற வயிற்றில் தழும்பைக் கொண்டிருப்பவன். *(அந்தரம் ஒன்றின்றி ஏறி)* அவனால் விரும்பப்பட்ட நாயகிகளைப்போலே ஒவ்வொரு சமயம் அவனை விட்டுப்பிரியாமல், நீ இடைவிடாமல் அவன் கையில் இருக்கிறாயன்றோ என்று வியப்பைத் தெரிவிக்கிறாள்.

---

அரு:— நாலாம் பாட்டு. (சந்திரனித்யாதி₃) a (குளிரிக்குடம்) - பனிநீர்க்குப்பி. b (தோற்றும்படி இருக்க வேண்டாவோ) தோற்றும்படி இருக்கிறாயே என்று கொண்டாட்டமாதல்; தோற்றுகிறாயில்லையென்று வெறுப்பாதல். c ''ஒன்றின்றி'' என்றதுக்குத் தாத்பர்யம் (ஓராபத்து வந்தவாறே)

**கைவிட்டுப் போவாரைப் போலன்றிக்கே.** (அவன் செவியில் மந்திரம் கொள்வாயேபோலும்) **"உம்மைப் பிரிந்து ஆற்ற மாட்டாதார் பலருமுண்டு" என்று திருச்செவியிலே சொல்லு கிறுப்போலே இருக்கிறது. அவன் செவியிலே ரஹஸ்யத் தைச் சொல்லுவான் போலேயிருக்கை.** 6 **கொள்ளுகை— கொடுக்கை.** (வலம்புரியே) **அல்லாதவை எல்லாம் இடத் திலே புரிந்து, நீ வலத்திலே புரிந்தாற்போலே, காரியத்தி**

---

அல்லது நன்றாயிருக்கும்போது உறவாடி, ஓர் ஆபத்து வந்த வுடன் விட்டுப்பிரிந்துபோகும் உறவினர்களைப் போலல்லாமல், எப்போதும் அவன் கையை விட்டுப் பிரியாமல் இருக்கிறு யன்றோ நீ என்று கொண்டாடுவதாகவும் கொள்ளலாம். மற்ற திருக்கையிலேயிருக்கும் திருவாழியாழ்வானும் போர்க் காலங்களில் 'கருதுமிடம் பொருது கைந்நின்ற சக்கரத்தன்' [திருவாய் 10-6-8] என்கிறபடியே அவன் கையை விட்டுப் பிரியவேண்டியிருக்கிறது. உனக்கு அந்த தௌர்பாக்யமில்லை. போர்க்காலங்களிலும் நீ விட்டுப்பிரியாமல் அவன் கையிலும், வாயிலுமே குடியிருக்கிறுயன்றோ என்று கருத்து. *(அவன் செவியில் மந்திரம் கொள்வாயே போலும்)* அவன் செவியில் ரஹஸ்யமான மந்திராலோசனை பேசுகின்றவன்போலேயிருக் கிறுய். "உம்மைப் பிரிந்து தரிக்கமாட்டாத நாயகிகள் பலரும் உண்டு" என்று திருச்செவியிலே நீ கூறுவதுபோலேயிருக்கிறது. என்னைப்பற்றியும் அவன்காதில் போட்டுவை என்று கருத்து. 'மந்திரம் கொள்ளுகை' என்றது 'மந்திரம் கொடுக்கை' என்ற படியாய், மந்திராலோசனை கூறுவதைச் சொல்லுகிறது. *(வலம்புரியே)* மற்ற சங்கங்களெல்லாம் அப்ரதக்ஷிணமான சுழியை உடையவையாய் 'இடம்புரி' என்று பெயர்பெற்றிருக்க, நீ ப்ரதக்ஷிணமான சுழியை உடையையாய் 'வலம்புரி' என்று பெயர்பெற்றுச் சிறப்புற்றிருப்பதுபோலே, கார்யத்திலும் நீ சிறப்புற்றவளுயிருக்கவேண்டும். புகலற்ற என்னைப்போன்ற வர்களை அவனோடு சேரவிடவேண்டும் என்று கருத்து.

---

என்று; திருவாழியைப் போலன்றிக்கே என்றபடி. 6 (மந்திரங்கொள்ளுகை) அவன் கையிலே தான் கொள்ளு



**லும் வேறுபட்டிருக்கவேணுங்காண்.** (இந்திரனுமுன்னோடு செல்வத்துக்கு 6 ஏலானே) **தான் நினைத்தபோது வர்ஷிப் பித்து, அல்லாதபோது தவிர்ந்து போருகையாலே** e **ஐஶ்வர்ய முள்ளது இந்த்3ரனுக்கென்றுய்த்து இவர்களிருப்பது இடைச்சிகளாகையாலே.** e2 **"இந்திரனுக்கென்றுயர்களெடுத்த எழில் விழவு" என்னக்கடவதிறே. அன்றிக்கே, பெரியாழ் வார் பெண்பிள்ளையாகையாலே இந்த்3ரப்ராணுதி3 ஶப்3த3ங்க ளும் ப4க3வத்3 வாசகங்கள் என்னும் வாஸநையாலே சொல்**

---

*(இந்திரனும் உன்னோடு செல்வத்துக் கேலானே)* தலைசிறந்த செல்வமுடைய தேவேந்த்ரனும் ஐஶ்வர்யவிஷயத்தில் உனக்கு ஒப்பாகமாட்டான். 'தான் நினைத்தபோது மேகங்களை மழை பெய்யச்செய்து, தனக்கு விருப்பமில்லாதபோது மழைபெய் விக்காமலிருக்கையாலே, செல்வம் உடையது இந்திரனுக்கே' என்று நினைக்கும் இடைச்சியாகையாலே இந்திரனைச் சிறந்த செல்வமுடையவனுக எடுக்கிறுள். "இந்திரனுக்கென்று ஆயர்கள் எடுத்த எழில் விழவு" [பெரியதிரு 2-3-4] என்று இந்திரனை ஆரா த்4ய தேவதையாகக்கொண்டு அவனுக்கே விழாவெடுப்பவர்க ளன்றோ ஆயர்கள். அன்றிக்கே, *"வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனனே"* [பெரியாழ் திரு 4-3-11] என்கிறபடியே பரமவேதாந்தியான பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையாகையாலே, இந்த்ரப்ராணுதிகர ணம் [1-1-11] முதலானவற்றில் நிஷ்கர்ஷித்தபடியே, இந்த்ரன் ப்ராணன் முதலான ஶப்தங்கள் நேரேயோ, அவ்வவற்றிற்கு அந்தர்யாமியான வகையாலேயோ எம்பெருமானைக் குறிக்கும் என்று அறிந்தவளாகையாலே, எம்பெருமானையே இந்திரன் என்று குறிப்பதாகவும் கொள்ளலாம். அவனுடைய ஸ்வா தந்த்ர்யச் செல்வம் உன்னுடைய (பாஞ்சஜன்யத்தினுடைய) பாரதந்த்ர்யச் செல்வத்துக்கு ஒவ்வாது என்று கருத்து. அது எப்

---

தல்; தான் அவனுக்குக் கொடுத்தல். e,e2 இடைச்சிகள் இந்த்ரனுக்கே ஐஶ்வர்யமென்றிருப்பர்களோவென்ன அருளிச்செய்கிறுர் (இந்திரனுக்கித்யாதி) / (ஆகக்கொள்ள

---

/ ( ) இவ்வடைப்பினில் உள்ளது அந்வயிக்கவில்லை.

லிற்றுதல். அவனுடைய ஸ்வாதந்த்ர்ய லக்ஷ்மி உன்னுடைய பாரதந்த்ர்ய லக்ஷ்மிக்குப் போராதாயிருந்ததீ! ஒருவன் அநுகூலித்தவாறே அழியுமதிறே. f 109. "लक्ष्मणो लक्ष्मिसंपन्नः" (லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நः) என்று நிலை நின்றதாய்த்து இது. g 110. "सर्वात्मना पर्यनुनीयमानो यदा न सौमित्रिरुपैति योगम्" (ஸர்வாத்மநா பர்யநுநீயமாநோ யத$_{3}$ா ந ஸௌமித்ரிருபைதி யோக$_{3}$ம்) என்று - ஒருபடியாலும் முடி சூடேனென்றவரையிறே லக்ஷ்மிஸம்பந்நர் என்றது.

---

படி? எனில்: சேதனன் ஒருவனுக்கு அநாதி$_{3}$காலமாய் ஏறிட்டுக் கொண்டிருந்த ப்ராதிகூல்யம் தவிர்ந்து, ஆநுகூல்யம் ஏற்பட்டவுடன் எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ர்யம் அழிந்துவிடும். சேதநனுடைய பாரதந்த்ர்யம் என்றுமே அழியாமல் நிலைநிற்பது. ஆகையால் ஒரு காலத்தில் அழியக்கூடிய ப$_{4}$க$_{3}$வத்ஸ்வாதந்த்ர்யத்தைக் காட்டிலும், என்றும் நிலைநிற்கும் பாஞ்சஜந்ய பாரதந்த்ர்யம் சிறந்தது என்னக் குறையில்லை. 195ம் பக்கத்திலுள்ள 55-வது ப்ரமாணம் சேதனனுடைய பாரதந்த்ர்யம் நிலைநின்ற செல்வம் என்று காட்டிற்றன்றோ.

110. ஸர்வாத்மநா பர்யநுநீயமாநோ
யத$_{3}$ா ந ஸௌமித்ரிருபைதி யோக$_{3}$ம் ।
நியுஜ்யமாநோऽபி ச யௌவராஜ்யே
ததோऽப்$_{4}$யஷிஞ்சத் ப$_{4}$ரதம் மஹாத்மா ॥
[ரா-யு 131-93]

[எல்லாப்படியாலும் கேட்டுக்கொள்ளப்பட்டும் நியமிக்கப் பட்டும் லக்ஷ்மணன் யௌவராஜ்யாபி$_{4}$ஷேகத்துக்கு ஸம்மதிக்காதவளவில், மஹாத்மாவான ராமபிரான் ப$_{4}$ரதனுக்கு யௌவராஜ்யாபி$_{4}$ஷேகம் செய்து வைத்தார்.] என்று எவ்வளவு நிர்ப்பந்தி$_{4}$த்தாலும் 'முடி சூடமாட்டேன்' என்றவரையன்றோ முற்கூறிய ப்ரமாணத்தில் 'லக்ஷ்மிஸம்பந்நன்' [செல்வம் நிறைந்தவன்] என்றது.

---

வென்றுதல்; ஆராதி$_{4}$த்தாளென்றபடி.) f,g "லக்ஷ்மிஸம்பந்நः" என்றால் பாரதந்த்ர்ய ஸம்பத்தாகவேணுமோ? என்ன அருளிச்செய்கிறார் (ஸர்வாத்மநா இத்யாதி$_{3}$)



h 111. "पूर्वजस्यानुयात्रार्थे द्रुमचीरैरलङ्कृतः" (பூர்வஜஸ்யாநுயாத்ரார்த்தே$_{2}$ த்$_{3}$ருமசீரைரலங்க்ருதः) பெருமாள் முடிதவிர்ந்தார்; இளையபெருமாள் வகுத்த முடி சூடினார். 4.

## ஏழாம் திருமொழி—ஐந்தாம் பாட்டு

உன்னோ டுடனே ஒருகடலில் வாழ்வாரை
இன்னா ரினையாரென்(று) எண்ணுவா ரில்லைகாண்
மன்னாகி நின்ற மதுசூதன் வாயமுதம்
பன்னாளு முண்கின்றாய் பாஞ்சசன் னியமே!

பதவுரை:— பாஞ்சசன்னியமே!—சங்கே!, ஒரு கடலில்—ஒரே கடலில், உன்னோடு உடனே — உன்னோடு கூடவே, வாழ்வாரை—வாழ்கின்றவர்களான மற்றும் பலரை, இன்னார் இனையார் என்று எண்ணுவார் இல்லை காண்—ஒரு பொருளாகவும் மதிப்பாரில்லை காண்; (நீ ஒருவன் மாத்

---

111. ப்ராகே$_{3}$வ து மஹாப$_{4}$ாக$_{3}$: ஸௌமித்ரிர் மித்ரநந்த$_{3}$நः ।
பூர்வஜஸ்யாநுயாத்ரார்த்தே$_{2}$ த்$_{3}$ருமசீரைரலங்க்ருதः ॥
[ரா-ஸு 33-28]

[மஹாப$_{4}$ாக்$_{4}$யவானும், அநுகூலர்களை உகப்பிப்பவனும், ஸுமித்ராபுத்ரனுமான லக்ஷ்மணன், தமயனுக்குப் பின்செல்லுகைக்காக முன்னமேயே மரவுரிகளால் அலங்கரித்துக் கொண்டான்.] என்கிறபடியே பெருமாள் முடிதவிர்ந்த போதும், இளையபெருமாள் தமக்கேற்பட்ட பாரதந்த்ர்ய ஸாம்ராஜ்யமுடிசூடினாரன்றோ. ஆகையால் தவிர்க்கக்கூடிய எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ர்யச் செல்வத்தைக் காட்டிலும், தவிர்க்கமுடியாத பாஞ்சஜன்யத்தினுடைய பாரதந்த்ர்யச் செல்வமே சிறந்தது என்பது தெளிவு. 4.

---

h சேஷத்வமே ஐஸ்வர்யமென்றதுக்கு ப்ரமாணாந்தரம் ("पूर्वजस्य"—பூர்வஜஸ்ய) இத்யாதி$_{3}$. c$_{5}$ "மந்திரம்"-ரஹஸ்யம். d$_{5}$ "ஏலான்"-ஒவ்வான். e$_{5}$ "கொள்வாய்" என்றது - முமுட்சொல்லு. e முந்தின பொருள் இந்த்ரனே பரனென்றபடி 4.

திரம்) **மன் ஆகி நின்ற** — ஸர்வஸ்வாமியாய் இராநின்ற, **மதுசூதன்** — கண்ணபிரானுடைய, **வாய் அமுதம்** — திருவாயினமுதந்தை, **பல் நாளும்** -பலகாலமாக, **உண்கின்ருய்** —பருகாநின்ருய். (ஆகையால் நீயே ப$_4$ாக்$_3$யஶாலி.)

**வ்யா:— அஞ்சாம் பாட்டு.** (உன்ஞேடித்யாதி$_3$) **உன்ஞேடு ஸஜாதீயபத$_3$ார்த்த$_2$ங்களை இட்டு எண்ணுவாரின்றிக்கேயிருக்க நீ ஒருவன் வாழ்ந்தபடியென்! ஒரு தே$_3$ஶத்திலே உன்ஞேடே சேர வர்த்திக்கிறவர்களை,** உ **அவர்கள் ஸ்வரூபமாதல், ப்ரகாரமாதல், இன்று எண்ணக் கடவாரில்லைகாண்.** (மன்ஞகிநின்ற) 112. "राजाधिराजः" **(ராஜாதி$_4$ ராஜ:) என்கிறபடியே நிர்வாஹகஞய்நின்ற.** (மதுசூதன)

*5. அவ:—* "மதுசூதன் வாயமுதத்தை எப்போதும் பருகும் உனக்கு மற்ற சங்கங்கள் எவையும் ஒப்பல்ல" என்று கொண்டாடுகிருள்.

*வ்யா:— ( உன்ஞேடுடனே........எண்ணுவாரில்லைகாண் )* ஒரே கடலில் உன்ஞேடு கூடவே வாழ்கின்ற உன் ஜாதியைச் சேர்ந்த மற்ற சங்குகளை ஒரு பெயரிட்டுக் கூட எண்ணுவதற்கு ஆள் இல்லாமலிருக்க, நீ ஒப்பற்றவஞய் வாழ்ந்தபடியென்! ஒரே இடத்தில் உன்ஞேடு கூடவே இருக்கிறவர்களை இன்ஞர் என்று அவர்கள் ஸ்வரூபத்தையோ, இனையார் (இத்தகையவர்கள்) என்று அவர்கள் பெருமைகளையோ, எண்ணிப்பார்ப்பவர் எவருமில்லை என்று கருத்து. *(மன்ஞகிநின்ற)*

**112. ராஜாதி$_4$ராஜஸ் ஸர்வேஷாம் விஷ்ணுர் ப்$_3$ரஹ்மமயோ மஹாந் ।**
**ஈஶ்வரம் தம் விஜாநீம: ஸ பிதா ஸ ப்ரஜாபதி: ॥**
[ப$_4$ார-ஆஶ்வ 43-13]

[எல்லா அரசர்களுக்கும் பேரரசராய், ப்$_3$ரஹ்மஸ்வரூபியாய், பெரியவராய் விளங்குபவர் விஷ்ணுவே. அவரையே ஈஶ்வரரென்று அறிவோம். அவரே தந்தையாவர். ப்ரஜாபதியுமா

---

அஞ்சாம் பாட்டு, (உன்ஞேடு இத்யாதி$_3$) உ "இன்ஞர் இனையார்" என்றதுக்கு பே$_3$த$_3$ம் (அவர்கள் இத்யாதி$_3$) 5.



**இதுதான் ஒரு நாமமாத்ரமாயிராதே ஆஶ்ரிதர்க்குக் களையறுத்துக் கொடுக்குமவஞய்த்து; அவனுடைய வாக$_3$ம்ருதத்தை.** (பன்ஞளும் உணகின்ருய்) **நாங்கள் அநுப$_4$விக்குமத்தை, எங்களநுப$_4$வத்தைக் காத$_3$ாசித்கமாக்கி, நித்யாநுப$_4$வம்பண்ணுநின்ருய்,** (பாஞ்சசன்னியமே) **" பிறப்பு " என்று ஒன்றில்லையாகாதே;— பெரியாழ்வார் வயிற்றில் பிறந்து உன்னைக் கால்கட்டாநின்றேன்; நீ அசுரன் வயிற்றிலே பிறந்து நித்யாநுப$_4$வம் பண்ணுநின்ருய்.** 5.

## ஏழாம் திருமொழி—ஆரும் பாட்டு

**போய்த்தீர்த்த மாடாதே நின்ற புணர்மருதம்**
**சாய்த்தீர்த்தான் கைத்தலத்தே ஏறிக் குடிகொண்டு**
**சேய்த்தீர்த்த மாய்நின்ற செங்கண்மால் தன்னுடைய**
**வாய்த்தீர்த்தம் பாய்ந்தாட வல்லாய் வலம்புரியே!**

**பதவுரை:— வலம்புரியே !**—வலம்புரிச்சங்கே!, **போய்**—வெகுதூரம் வழிநடந்துபோய், **தீர்த்தம்** —கங்கை முதலிய தீர்த்தங்களிலே, **ஆடாதே** — நீராடுகிற கஷ்டங்கள் பட

---

வார்.] என்கிறபடியே உலகங்களுக்கெல்லாம் தலைவஞய் நின்ற. *(மதுசூதன்)* மது$_4$வை அழித்தவன். இது வெறும் பெயர் மாத்திரமன்று. அடியவர்களுக்குக் களையறுத்துக் கொடுப்பதையே இயல்வாகவுடையவன் என்று கருத்து. *(வாயமுதம்)* இத்தகைய பெருமையுடையவனுடைய வாக$_3$ம்ருதத்தை. *(பன்ஞளும் உண்கின்ருய்)* நாயகிகளாகிய நாங்கள் எப்போதும் அநுப$_4$விக்கவேண்டிய வாயமுதத்தை, எங்களுடைய அநுப$_4$வத்தை எப்போதாவது கிடைப்பதாகச் செய்து, நீ எப்போதும் அநுப$_4$விக்கின்ருய். *(பாஞ்சசன்னியமே)* பஞ்சசனன் என்னும் அசுரன் வயிற்றில் பிறந்த சங்கே! பெரியாழ்வார் வயிற்றில் பிறந்து நான் உன் காலில் விழுகின்றேன். அசுரன் வயிற்றில் பிறந்து நீ நித்யாநுப$_4$வம் பண்ணுகின்ருய். " உயர்குடிப்பிறப்பு உயர்வைத் தரும்; தாழ்குடிப் பிறப்பு தாழ்வைத்தரும் " என்னும் உலக வழக்கும் பொருளற்றதாகிவிட்டதே! 5.

வேண்டாமல், **நின்ற**—நாரத3சாபத்தாலே மரமாய்நின்ற, **புணர் மருதம்**—இரட்டைமருதமரத்தை, **சாய்த்து ஈர்த்தான்**—முறித்துத தள்ளின கண்ணபிரானுடைய, **கைத்தலத்து ஏறி** — திருக்கைத்தலத்தின் மீதேறி, **குடி கொண்டு**—(ஆங்கே) நித்ய வாஸம் பண்ணிக்கொண்டு, **சேய் தீர்த்தம் ஆய் நின்ற** — லோகோத்தரமான தீர்த்த2மாகிய, **செம் கண் மால் தன்னுடைய**—புண்டரீகாக்ஷனான கண்ணபிரானுடைய, **வாய் தீர்த்தம்** — வாயிலுள்ள தீர்த்தத்திலே, **பாய்ந்து** — படிந்து, **ஆட வல்லாய்** — நீராடும் பா4க்3யம் பெற்றிருக்கிறாய்.

**வ்யா:— ஆறாம் பாட்டு.** (போய்த்தீர்த்தமாடாதே) **ஆயிரக்காதம் ஐஞ்ஞூற்றுக்காதம் போய்ச் சரகூறலிலே முழுகித் திரியாதே.** (a நின்றவித்யாதி3) **அஸுராவேஶத்தாலே பேராதே நிர்விவரமாய் நின்ற மருதுகளிரண்டின் நடுவே அவகாஶம் கண்டுபோய், பின்னை அவை முறிந்து உரலோடே இழுப்புண்டுவர, அதின் த்4வநியைக்கேட்டுப்**

---

*6. அவ:—* "தீர்த்த2மாடுவதற்கு எங்கும் சுற்றித்திரிய வேண்டிய அவசியமிராமல் இருந்தவிடத்திலிருந்தே பரம பாவனமான வாய்த்தீர்த்தத்தில் நீராடும் பாக்கியம் பெற்றிருக்கிறாய்" என்று கொண்டாடுகிறாள்.

*வ்யா:— (போய்த் தீர்த்தமாடாதே)* ஆயிரம் காதம், ஐந்நூறு காதம் நடந்துசென்று உப்பு நீரிலும் உவர் நீரிலும் முழுகித்திரிகிறார்கள் உலகிலுள்ளார். அப்படியிருக்க, இருந்த விடத்தில் இருந்தபடியே பரமபாவனமாய், பரமபோ4க்3யமான தீர்த்த2த்தில் குடைந்தாடும் உனது பாக்கியத்தை என்னென்பது! *(நின்ற புணர்மருதம் சாய்த்து ஈர்த்தான் கைத்தலத்தே)* நளகூப3ரர்கள் எனும் க3ந்த4ர்வர்கள் நாரத3சாபத்தாலே இரட்டை மருதமரங்களாய் நின்றார்கள். இடைவெளியில்லாமல் நின்ற அந்த மருதமரங்களிலே கம்ஸனால் ஏவப்பெற்ற

---

ஆறாம் பாட்டு. (போயித்யாதி3) a "புணர்" - சேர்த்தி. b "புணர்மருதம் சாய்த்தீர்த்தான் கைத்தலத்தே ஏறிக்



**புரிந்து பார்த்துக்கொண்டிருந்த மௌக்3த்4யத்தையுடையனாய் இருக்கிறவன் கையிலே.** (ஏறிக்குடிகொண்டு) b **அவதாரத்தின் மெய்ப்பாட்டாலே 105. "उपसंहर" (உபஸம்ஹர) என்று சிலரிரக்க, 'நாம் மறைந்து நாலுநாள் நிற்கையாலிறே இப்ரமாத3ம் புகுந்தது' என்று, " இனி ஒரு நாளும் பிரியவொண்ணாது " என்று திருக்கையை விடாதே வர்த்திக்கிறானாய்த்து.** c (சேய்த்தீர்த்தமாய்நின்ற) d **அறத்தூரமாய்,** e **அதிபாவநமாய்நின்ற. 113."पावनस्सर्वलोकानां त्वमेव रघुनन्दन" (பாவநஸ்ஸர்வலோகாநாம் த்வமேவ ரகு4நந்த3ந) என்றும்,**

---

அசுரனும் ஆவேசித்து நின்றான். அந்த மருதுகள் இரண்டின் நடுவிலே இடைவெளி ஏற்படுத்திக்கொண்டு, தன்னை யசோதை கட்டியிருந்த உரலையும் இழுத்துக் கொண்டுபோய், அதனால் மருதமரங்கள் முறிந்துவிழ, அந்த ஓசையைக் கேட்டு, அவ்வோசையில் விருப்பத்துடன் திரும்பிப் பார்த்துக்கொண்டிருந்த சிறுபிள்ளைத்தனமுடையவன் கையிலே, *( ஏறிக்குடிகொண்டு )* மனிதனாகப் பிறந்த அவதாரத்தின் மெய்ப்பாட்டாலே [340-வது பக்கத்தில் உள்ள 105-வது ப்ரமாணத்தின்படி] 'தாய் தந்தையர் இரக்க, பித்ருவாக்ய பரிபாலனம் செய்வதற்காக சங்கு சக்ரங்களாகிய நாம் மறைந்து நின்றதாலன்றோ இவ்வாபத்து வந்தது' என்று நினைத்து, ' இனி ஒருநாளும் பிரியக்கூடாது ' என்று உறுதிகொண்டு, திருக்கையில் ஏறி அதை விடாமல் வாழ்கின்றான் ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வான் என்று கருத்து. *(சேய்த்தீர்த்தமாய் நின்ற)* இனிமையில் மிகச் சிறந்ததாய், பாவனத்தன்மையிலும் மிகவுயர்ந்ததாய் நின்ற. இதை 'வாய்த்தீர்த்தம்' என்பதற்கு விஶேஷணமாகவும் கொள்ளலாம்; ' செங்கண்மா 'லுக்கு விஶேஷணமாகவும் கொள்ளலாம்.

**113. பாவநஸ் ஸர்வலோகாநாம் த்வமேவ ரகு4நந்த3ந**
*[ரா உத் 82.9]*

---

குடிகொண்டு" என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் ( அவதாரத்தின் " இத்யாதி3 ) c "சேய்த்தீர்த்தம்" - பெரிய தீர்த்த2ம் ; சேய்-தூரம் d,e (அறத்தூரமாய்) என்றதின்

114. "पुण्यानामपि पुण्योऽसौ" (புண்யாநாமபி புண்யோऽஸௌ) என்றும், "தீர்த்தன்" என்றும் சொல்லுகிறபடியே நின்ற. (செங்கண்மால் தன்னுடைய) புண்ட3ரீகாக்ஷனை ஸர்வேஶ்வரனுடைய. (வாய்த்தீர்த்தம் பாய்ந்தாடவல்லாய்) கடலில் அம்ருதம் படும் துறையிலே இழியுமாபோலே, f முகப்பிலே- வாய்கரையிலே நின்று தீர்த்த2மாடுகிறாயிறே. (வலம்புரியே) அநுப4வத்திலேற்றம்போலே ஸந்நிவேஶமும் இப்படி இருக்க வேணுமோ! 6.

---

[ரகு4நந்த3னா! நீயே எல்லா உலகங்களையும் பரிஶுத்3த4ப் படுத்துபவன்.]

114. பவித்ராணாம் ஹி கோ3விந்த3: பவித்ரம் பரமுச்யதே ।
புண்யாநாமபி புண்யோஸௌ மங்க3ளாநாஞ்ச
மங்க3ளம் ॥ [பா4ர-வநபர்வ-தீர்த்த2யாத்ரா 88-26]

[பரிஶுத்3த4ங்களுக்குள் கோ3விந்த3ன் மேலான பரிஶுத்3த4மாகச் சொல்லப்படுகிறான். *புண்ணியங்களுக்குள் புண்ணியமாகவும்*, மங்க3ளங்களுக்குள் மங்க3ளமாகவுமிருப்பவனிவன்] என்றும், "தீர்த்தன் உலகளந்த சேவடி" [திருவாய் 2-8-6] என்றும் சொல்லுகிறபடியே, அவனையே பரமபாவனனாக ப்ரமாணங்கள் பேசும்போது அவனுடைய வாய்த் தீர்த்த2ம் மிகச் சிறந்த தீர்த்த2ம் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? *(செங்கண்மால் தன்னுடைய)* "அவனுக்கு ஸூர்யனால் மலர்ந்த புண்ட3ரீகம் (தாமரை) போன்ற இரு கண்கள் உள" என்று சா2ந்தோ3க்3யத்தில் முழங்கப்படும் புண்ட3ரீகாக்ஷனை ஸர்வேஶ்வரனுடைய. *(வாய்த்தீர்த்தம் பாய்ந்தாடவல்லாய்)* கடலில் அமுதம் அகப்படும் துறையில் இழிவதுபோலே, கடல்வண்ணனை அவனுடைய பரமபாவனமான வாயமுதத்தில் குடைந்தாட வல்லாய்! முகப்பிலே (முன்னதாக; முக2த்தில்) — வாய்கரையிலே நின்று தீர்த்த2மாடுகின்றாயன்றோ! (வலம்புரியே) அநுப4வத்தில் சிறப்புற்றிருப்பது போலே, உருவ அமைப்பிலும் மிகச் சிறந்த வலம்புரிச்சங்காயிருக்கிறாயன்றோ என்று கொண்டாடுகிறாள். 6.

---

விவரணம் (அதிபாவநமாய்) என்றது. f (முகப்பு)—சாடு. முக2ம்—அர்த்த2ம்; முன்னே-த்4வநி. 6.



## ஏழாம் திருமொழி—ஏழாம் பாட்டு

**செங்கமல நாண்மலர்மேல் தேனுகரு மன்னம்போல்**
**செங்கண் கருமேனி வாசுதே வனுடைய**
**அங்கைத் தலமேறி அன்ன வசஞ்செய்யும்**
**சங்கரையா! உன்செல்வம் சால வழகியதே.**

**பதவுரை:— நாள்**—அப்போதலர்ந்த, **செம் கமலம் மலர் மேல்** செந்தாமரைப்பூவில் (படிந்து), **தேன்**—தேனை, **நுகரும்**—பருகுகின்ற, **அன்னம் போல்**—அன்னப்பறவை போன்று, **செம் கண் கருமேனி வாசுதேவனுடைய**—சிவந்த திருக்கண்களையும், கறுத்த திருமேனியையும உடைய கண்ணபிரானது, **அம் கைத்தலம் ஏறி**—அழகிய கைத் தலத்தின் மீதேறி, **அன்னவசம் செய்யும்**—கண்வளர்கின்ற, **சங்கு அரையா!**—சங்குகளிற்சிறந்த பாஞ்சஜந்யமே!, **உன் செல்வம்**—உன்னுடைய செல்வமானது, **சால**—மிகவும், **அழகியது**—சிறந்ததுகாண்.

**வ்யா:— ஏழாம் பாட்டு.** (செங்கமலமித்யாதி3) **செந்தாமரையில் அப்போதலர்ந்த செவ்விமலரின்மேலே அன்னம் படிந்து மது4பாநம் பண்ணுமாபோலே,** ௨ 115. "अहमन्न"

---

7. *அவ:—* வாசுதேவனுடைய திருக்கைத்தாமரையில் நீ இருப்பது, தாமரையில் தேனுண்ணும் அன்னமிருப்பது போல் உள்ளது என்று கொண்டாடுகிறாள்.

*வ்யா:— (செங்கமல நாண்மலர்மேல் தேனுகரும் அன்னம் போல்)* அக்கணத்தில் மலர்ந்த செந்தாமரையாகிற செவ்வி மலரின் மேலே அன்னம் அமர்ந்து மது4வை உண்பதுபோலே யிருக்கிறது — ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வான் எம்பெருமானுடைய செந்தாமரைக்கையிலே வீற்றிருப்பது. *(செங்கண் கருமேனி வாசுதேவனுடைய அங்கைத்தலமேறி)*

115. அஹமந்நமஹமந்நமஹமந்நம் ।
அஹமந்நாதோ3ऽஹமந்நாதோ3ऽஹமந்நாத3: ॥
[தை-ப்4ருகு3 10-6]

(அஹமந்நம்) என்றுகொண்டு, வாத்ஸல்யப்ரகாஶகமான திருக்கண்களையும், தாபமடைய ஆறும்படி குளிர்ந்த வடிவையும் உடைய ஸ்ரீவஸுதே3வர்திருமகனுடைய அழகிய திருக்கையிலேயேறி, உணவுக்கீடாக இடம்வலங்கொள்ளும். பரப்பு மாறத் தாமரை பூததாற்போலே தி3வ்யாவயங்களும், " அக்கமலத்திலைபோலுந்திருமேனி " என்கிறபடியே அதில் பச்சையிலைபோலே திருமேனியும், அங்கே மது4பாநார்த்த2மாக இழிந்த அன்னம்போலே திருமேனிக்குப் பரப4ாக3மான வெண்மையையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யமுமாய் இருந்தபடி.

---

[நான் (பரமாத்மாவுக்கு)அன்னம்போல் பே4ாக்3யமாயிருப்பவன்; நான் (பரமாத்மாவுக்கு) அன்னம்; நான் (பரமாத்மாவுக்கு) அன்னம்; நான் (பரமாத்மாவின் உகப்பாகிற) அன்னத்தை பு4ஜிப்பவன்; நான் அந்நத்தை பு4ஜிப்பவன்; நான் அந்நத்தை பு4ஜிப்பவன்.]என்கிறபடியே பசியனுக்கு உணவுபோலே பே4ாக்3யமான பாஞ்சஜன்யாழ்வானுடைய ஸ்பர்ஶத்தாலே வாத்ஸல்யத்தை வெளிப்படுத்தும் சிவந்த திருக்கண்களையும், காண்பவர்களுடைய தாபம் அனைத்தும் ஆறும்படியான குளிர்ந்த திருமேனியையும் உடைய ஸ்ரீவஸுதே3வ குமாரனுடைய அழகிய திருக்கையிலே ஏறி (அன்னவசம் செய்யும்) பஞ்சணையில் துயில்வார் உணவு ஜரிப்பதற்காக மாறிமாறி இடம் வலமாகப் புரண்டு படுப்பதுபோலே பாஞ்சஜன்யாழ்வானும் கண்வளருகிறபடி. " செக்கமலத்தலர் போலும் கண்கைகால் செங்கனிவாய், அக்கமலத்திலைபோலும் திருமேனியடிகளுக்கே " [திருவாய் 9-7-3] என்கிறபடியே தாமரைத்தடாகம் முழுவதையும் மறைக்கும்படியாகப் பூத்த தாமரை மலர்கள் போன்ற கண் கை கால் செங்கனிவாய்களாகிற தி3வ்யாவயவங்களும், அம்மலர்களிடையே காட்சியளிக்கும் பச்சை இலை போன்ற திருமேனியும், அங்கே தேன் உண்பதற்காக வந்து சேர்ந்த அன்னம்போலே, திருமேனிக்கும், தி3வ்யாவயவங்களுக்கும் வர்ணச் சேர்த்தியழகை அளிக்கும் வெண்மை நிறைத்தை உடையதான ஸ்ரீபாஞ்சஜன்யமுமாய் இருக்கும் பேரழகை அநுப4விக்கிருள்.

---

ஏழாம் பாட்டு. (செங்கமலமித்யாதி3) a (அஹமந்நம்) என்றவிடத்தில் அன்னஶப்3த3ம் த்4வங்யர்த்த2ம் ;-"அஹமந்நம்" என்றது-ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானை ஹம்ஸம் என்று.



b (சங்கரையா) c 116. "ततो वानरराजेन" (ததோ வாநரராஜேந) என்னுமாபோலே; c2 பெருமாள் மஹாராஜரை முடிசூட்டுவதற்கு முன்னே, "வாநரராஜேந" என்றுனிறே ரிஷி.

d 117. "गृध्रराज्यं परित्यज्य" (க்3ருத்4ரராஜ்யம் பரித்யஜ்ய); e விடலாம் ராஜ்யத்தையோ அவர் விட்டது. f117. "पितृपैतामहं

---

(சங்கரையா) சங்குகளுக்கு அரசனே!

116. ததோ வாநரராஜேந வைராநுகத2நம் ப்ரதி।
ராமாயாவேதி3தம் ஸர்வம் ப்ரணயாத் து3:க்கி2தேந ச ॥
[ரா-பா3 1-61]

[அதற்குப்பின், மிகவும் துன்புற்ற வானரவரசனை ஸுக்3ரீவன் வாலியுடன் விரோத4ம் வந்த வழியைத் தெரிவிப்பதற்காக, அன்புடன் எல்லா விஷயங்களையும் ராமனிடம் சொன்னுன்.] என்று ஸுக்3ரீவன் வானரர்களுக்கு அரசனுயிருந்ததுபோல், ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வான் சங்குகளுக்கு அரசனுயிருக்கிறபடி. இந்த ஶ்லோகத்தில் ஸ்ரீராமபிரான் வானரராஜாவாகத் திருவுள்ளம் பற்றியபடியாலே, அவர் அவனுக்கு முடிசூட்டுவதற்கு முன்னமே வால்மீகி ஸுக்3ரீவனை 'வானரராஜன்' என்று அழைக்கும் ரஸம் சுவைத்து இன்புறத்தக்கது. இப்படி வானரராஜாவாக ஸுக்3ரீவனைத் திருவுள்ளம் பற்றியதுபோலே ஜடாயுவையும் கழுகரசனுகத் திருவுள்ளம் பற்றினுர்.

117. க்3ருத்4ரராஜ்யம் பரித்யஜ்ய பித்ருபைதாமஹம் மஹத்।
மம ஹேதோரயம் ப்ராணுந் முமோச பதகே3ஶ்வர: ॥
[ரா-ஆ 68-23]

---

அவன் திருக்கையாகிற தாமரையிலே ஏறினுன் என்று இவ்விடத்துக்கு அர்த்த2ம்.

b,c,c2,d "சங்கரையா" என்கைக்குத் திர்யக்குக்களுக்கு ராஜத்வமுண்டோ? என்ன, உண்டென்னுமத்தை மஹாராஜர் பெரிய உடையார் பக்கலிலே காட்டுகிருர் (பெரு

महत्’ (பித்ருபைதாமஹம் மஹத்) g இக்ஷ்வாகு முதலான ராஜாக்கள் ஆண்டு போந்த ராஜ்யத்தை நாம் பொகட்டுப் போந்தவளவுமன்றிறே அவர் நமக்காக விட்ட ராஜ்யம் என்கிறுர்; h ப$_4$க$_3$வத்ப்ரத்யாஸத்தியாலே h$_2$ ஸஜாதீயரடங்கலும் உன் காலிலே வந்து துவளும்படியன்றே உன் ஐஶ்வர்யம். (உன்செல்வம சால அழகியதே) i "இந்திரனும் உன்னேடு

---

[மூதாதையர் வழி வந்ததான பெரியதான கழுகரசைத் துறந்து விட்டு, இந்தக் கழுகரசரான ஜடாயு எனக்காகப் பிராணனை விட்டுவிட்டார்.] என்கிற ஶ்லோகம் காணத்தக்கது. "*பித்ருபைதாமஹம் மஹத் க்$_3$ருத்$_4$ரராஜ்யம் பரித்யஜ்ய*" என்று 'மஹத்' (பெரிது) என்று கழுகுராஜ்யத்தை விஶேஷிக்கையாலே, தாம் விட்டுப்போந்த இக்ஷ்வாகுக்களின் ராஜ்யத்தைக் காட்டிலும் ஜடாயு தமக்காக விட்ட ராஜ்யம் மிகப் பெரிதும் விடற்கரிதுமாகும் என்று பெருமாள் திருவுள்ளம் பற்றுகிறுர். (*சங்கரையா*) வால்மீகி ஸுக்$_3$ரீவனை 'வானரராஜர்' என்றும், ஜடாயுவை 'பதகே$_3$ஶ்வரர்' என்றும் பெருமாளிடத்தில் அவர்களுக்குள்ள நெருக்கத்தையும், பரிவையும் கண்டு கூறியது போலே, ஆண்டாளும் பாஞ்சஜந்யாழ்வானுக்கு எம்பெருமானிடமுள்ள நெருக்கத்தையும் பரிவையும் கண்டு 'சங்கரையா' என்று விளிக்கிறுள். எல்லாச் சங்குகளும் உன்னைத் தங்களுக்குச் சக்ரவர்த்தியாக ஏற்றுக்கொண்டு உன் காலிலே விழுந்து துவளும்படியன்றே உன் செல்வம் உள்ளது என்று கருத்து. (*உன் செல்வம் சால அழகியதே*) "இந்திரனும் உன்னேடு செல்வத்துக்கு ஏலானே" [ 4 ] என்ற

---

மாளித்யாதி$_3$) e,f (**பித்ருபைதாமஹம்**) என்றதுக்குத் தாத்பர்யம் (விடலாம் இத்யாதி$_3$) g "**महत्**" (**ம்ஹத்**) எனறத்தைப் பற்ற அருளிச்செய்கிறுர் (இக்ஷ்வாகு முதலான இத்யாதி$_3$) d,h "க்$_3$ருத்$_4$ரராஜ்யத்தை விட்டிருக்கச்செய்தே" என்றது-ப$_4$க$_3$வத் ப்ரத்யாஸத்தியாலே என்றபடி. **117.** "**पतगेश्वरः**' (**பதகே$_3$ஶ்வர:**) என்னுமள்வும் ஶ்லோகத்தில் விவக்ஷை. **h$_2$**(ஸஜாதீயர்)-திருப்பவளத்தை அநுப$_4$விக்கிற பெண்கள். i "இந்திரனுமுன்னேடு" என்ற வாக்யத்துக்குத் தாத்பர்யம்-



செல்வத்துக்கேலான்" என்றவளவன்றிக்கேயிருந்ததீ உன் ஐஶ்வர்யம். 7.

## ஏழாம் திருமொழி—எட்டாம் பாட்டு

**உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம்**
**கண்படை கொள்ளில் கடல்வண்ணன் கைத்தலத்தே**
**பெண்படை யாருன்மேல் பெரும்பூசல் சாற்றுகின்றுர்**
**பண்பல செய்கின்றுய் பாஞ்சசன் னியமே!**

பதவுரை:— **பாஞ்சசன்னியமே!** — சங்கே!, **உண்பது சொல்லில்**—நீ உண்பது என்னவென்றுல், **உலகு அளந்தான் வாய் அமுதம்** — உலகங்களை அளந்தவனுன எம்பெருமானுடைய திருவாயிலுள்ள அம்ருதம்; **கண் படை கொள்ளில்** — நீ படுத்துக்கொள்வது எங்கேயென்றுல், **கடல் வண்ணன் கைத்தலத்தே**—கடல்போன்ற நிறத்தையுடையனுன அவ்வெம்பெருமானுடைய திருக்கையிலே; (இப்படி உனக்கு ஊணுமுறக்கமும் அங்கேயாயிருப்பதனுல்) **பெண்படையார்** — பெண்குலத்தவர்கள் அனைவரும், **உன் மேல்**—உன் விஷயமாக, **பெரும் பூசல் சாற்றுகின்றுர்**—பெரிய கூச்சல் போடுகிறுர்கள்; [எங்கள் ஜீவனத்தை இவனே கொள்ளை கொள்ளுகிறுனென்று கூச்சலிடுகிறுர்கள்;] **பண்பு அல செய்கின்றுய்** — (இப்படி அவர்கள் வருந்தும்படி) அநியாயமான காரியத்தைச் செய்கிறுய்; [இஃது உனக்குத் தகுதியல்ல என்கை.]

---

**விடத்தில் சொன்னதைக் காட்டிலும் சிறப்புற்றிருக்கிறது உன் செல்வம் என்கிறுள்.** 7.

**8.** *அவ:*— **இப்பாட்டிலும் அடுத்த பாட்டிலும் 'தகாத காரியம் செய்கிறுய்' என்று பாஞ்சஜந்யத்தைக் குறை கூறுவது போல் அவன்து பெருமையைப் பறைசாற்றுகின்றுள்.**

---

"ஈச்வரனளவன்றிக்கே எங்களிலும் வ்யாவ்ருத்தமாயிருந்ததீ!" என்று. 7.

வ்யா:— (உண்பது இத்யாதி3) நீ உண்ணும்படி சொல்லவோ? a உறங்கும்படி சொல்லவோ? வாயதுகையதான ஐஶ்வர்யமன்றோ உன்னது. ஶேஷபூ4தராணுரெல்லார்க்கும் b பொதுவானதன்றிக்கே, வாக3ம்ருதத்தையாய்த்து பு4ஜிக்கிறது. வாயாலே ஊட்ட உண்டு, ஶ்ரமஹரமான வடிவைக் கடைக்கணித்துக்கொண்டு, கையிலேயாய்த்துச் சாய்வது; ப்ரஸாத3த்தைச் சூடிக் கைப்புடையிலே கிடப்பாரைப்போலே. c (பெண்படையித்யாதி3) அவ்வாக3ம்ருதமும் வடிவுமே ஜீவநமாயிருக்கும் பெண்பிறந்தாரடங்கலும் கையெடுத்துக்

---

*வ்யா:— (உண்பது சொல்லில் உலகளந்தான்........கைத்தலத்தே)* உலகில் செல்வமுடையார் உண்பதும் உறங்குவதுமாகவே இருப்பர். நீயும் உலகளந்தான் வாயமுதமாகிய சிறந்த உணவை உண்டு, தாமரையிலும் மென்மைமிக்க அவன் திருக்கைத்தலத்திலே உறங்குகிறாய். நீ உண்ணும்படியும் உறங்கும்படியும் இப்படிச் சிறப்புற்றிருக்கிறது. *(வாயமுதம்.....கைத்தலத்தே)* வாயதுகையதான (உண்ட பிறகும் கையில் யதே2ஷ்டமாக மிகுந்திருக்கும்) செல்வமன்றோ உன்னுடையது. அடியார்கள் அனைவருக்கும் பொதுவானது அடிசூடும் அரசாகிற செல்வம். உன் செல்வம் அப்படிப் பொதுவானதன்றிக்கே, நாயகிகளுக்கே உரிமைப்பட்ட வாயமுதத்தை உண்பதேயாகிறது. எம்பெருமான் வாயாலே ஊட்ட, வாயமுதம் உண்டு, களைப்பையெல்லாம் ஆற்றும் கார்வண்ணன் திருமேனியைக் கடைக்கண்ணாலே கண்டுகொண்டு, அவன் திருக்கையிலே சாய்ந்திருக்கிறாயன்றோ. கோயில்களிலே கிடைக்கும் பரமபோ4க்3யமான ப்ரஸாத3ங்களை வயிறார உண்டு. மாலை ப்ரஸாத3ங்களையும் சூட்டிக்கொண்டு, குடவறைகளிலே சாய்ந்து கிடக்கும் ஸுக2வாஸிகளைப் போலே இருக்கிறாய். *(பெண்படையார் உன்மேல் பெரும்பூசல் சாற்றுகின்றார்)* அந்த வாயமுதமும் வடிவுமே தா4ரகமாகக் கொண்ட பெண்ணாகப் பிறந்தவர்கள் அனைவரும், கையெடுத்துக் கூப்பிட்டு உன்

---

எட்டாம் பாட்டு. (உண்பது இத்யாதி3) b (பொதுவானது)-திருவடிகள். a "கண்படை"-உறக்கம் c (பெண்படை)



கூப்பிடாநின்றார்கள்கிடாய். திருவாய்ப்பாடியிலுள்ளாரும் ஸ்ரீ மது4ரையிலுள்ளாரும் திரண்டு கூப்பிடாநின்றார்கள்கிடாய். d (பண்பல செய்கின்றாய்) ப4க3வத்3விஷயத்திலே இழிந்து, நீர்மையுடையராயிருப்பார் செய்வதல்ல, நீ செய்கிறது; ப4க3வத்ப்ரத்யாஸத்தியுடையாரிலே "நமக்கு" என்று தனியநுப4விப்பார் இல்லைகாண்! (பாஞ்சசன்னியமே) இது பிறப்புக்குச் சேருமத்தனை. e "வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல்" என்றும், "போதுவீர் போதுமினோ" என்றுமிறே தமப்பனார் படியும் தம்படியும். 8.

ஏழாம் திருமொழி—ஒன்பதாம் பாட்டு

பதினாறு மாயிரவர் தேவிமார் பார்த்திருப்ப
மதுவாயில் கொண்டாற்போல் மாதவன்தன் வாயமுதம்
பொதுவாக உண்பதனைப் புக்குநீ யுண்டக்கால்
சிதையாரோ? உன்னோடு செல்வப் பெருஞ்சங்கே.

---

மேல் பழி சொல்லுகிறார்களன்றோ. *(பெண்படையார்)* திருவாய்ப்பாடியில் உள்ளாரும், ஸ்ரீமது4ரையில் உள்ளாரும் படையாகத் திரண்டு பழி சொல்லுகிறார்கள் என்று கருத்து. *(பண்பல செய்கின்றாய்)* பண்பல்லாத அநியாயச் செயலைச் செய்கின்றாய். ப4க3வத்3விஷயத்திலே ஈடுபட்டு, பா4க3வத ஸம்ருத்3தி4யை விரும்பும் நீர்மையுடைய பரமபா4க3வதர்கள் செய்யும் கார்யமல்ல நீ செய்வது. எம்பெருமானிடம் நெருங்கியவர்கள் எவரும் 'நமக்கு' என்று தனியே அநுப4வியாமல் மற்ற பா4க3வதர்களோடு சேர்ந்தேயன்றோ அநுப4விப்பது. *(பாஞ்சசன்னியமே)* அசுரன் வயிற்றில் பிறந்த உன் பிறப்புக்கே பொருந்துவதாயிருக்கிறது இக்காரியம். 'வாழாட்பட்டு நின்றீர் உள்ளீரேல்' [திருப்பல் 3] என்று தந்தையான பெரியாழ்வாரும், 'போதுவீர் போதமினோ' [திருப்பாவை 1] என்று தானும் பா4க3வதர்களோடு சேர்ந்தே அநுப4விப்பவர்களாகையாலே 'அப்பெருமையில்லையே உனக்கு' என்று பாஞ்சஜந்யத்தைக் குறை கூறுகிறாள். 8.

---

படை - ஸமூஹம். d "பண்பு" - ந்யாயம். e 'தாங்கள்தான் பரஸம்ருத்3தி4பரரோ? தனியநுப4வியாதே கூடியநுப4வித்த பேருண்டோ?' என்ன அருளிச்செய்கிறார் (வாழாள் இத்யாதி3) 8.

**பதவுரை:— பெரு செல்வம் சங்கே** — பெரிய செல்வம் படைத்த சங்கமே!, **பதினாறும் ஆயிரவர் தேவிமார்**— பதினாறுயிரம் தேவிமார்கள், **பார்த்து இருப்ப** —(கண்ணபிரானுடைய வாயமுதத்தை நாம் பருகவேணுமென விரும்பி) எதிர்பார்த்திருக்கையில், **பொது ஆக உண்பது மாதவன் தன் வாய் அமுதத்தை** —ப$_4$க$_3$வத்ஸம்ப$_3$ந்தி$_4$களெல்லாரும் பொதுவாக உண்ணவேண்டியதான அவ்வெம்பெருமானது வாயமுதத்தை, **நீ புக்கு**—நீ ஒருவனே ஆக்ரமித்து, **மது வாயில் கொண்டாற்போல் உண்டக்கால்**—தேனை உண்பது போல் உண்டால், **உன்னோடு சிதையாரோ**—(மற்ற பேர்கள்) உன்னோடு விவாத$_3$ப்படமாட்டார்களோ ?

**வ்யா:— ஒன்பதாம் பாட்டு.** (பதினாறுமாயிரவரித்யாதி$_3$) **எத்தனைபேரை வாய்க்காவலிட்டால்தான் உனக்கு வயிறு வளர்க்கலாவது ? பதினாறுமாயிரம்பேர் இது அநுப$_4$விப்பதாக அவஸரம் பார்த்திருக்க, நீயொருவனுமே மேல்விழுந்து பு$_4$ஜித்தால். ஸர்வ ஸாத$_4$ாரணமான அம்ருதத்தை நீயொருவனுமே பு$_4$ஜித்தால்.** (சிதையாரோவுன்னோடு) **''இவன் நம் கோ$_3$ாஷ்டி$_2$க்குப் புறம்பு'' என்றால், நீ மண்ணைமணலைமொக்கு**

---

9. *அவ:—* தே$_3$விகள் அனைவர்க்கும் பொதுவான வாயமுதத்தை நீ ஏகபோ$_4$க$_3$மாக உண்பது தகாது என்கிறாள்.

*வ்யா:—(பதினாறுமாயிரவர் தேவிமார் பார்த்திருப்ப)* பதினாறுயிரம் பேரைப் பட்டினி கிடக்கச் செய்தோ நீ வயிறு வளர்ப்பது. *(பதினாறுமாயிரவர் ...... உண்டக்கால்)* 212-வது பக்கத்தில் எடுக்கப்பட்ட 61-வது ப்ரமாணத்தில் காட்டியபடி பதினாறுயிரம் தேவிமார்களும் கண்ணனுடைய வாயமுதத்தை அநுப$_4$விக்க நேரம் பார்த்திருக்கும்போது, நீ ஒருவனே அனைவர்க்கும் பொதுவான அவ்வாயமுதத்தை எப்போதும் தேனை உண்ணும் வண்டுகள் போலே ஏகபோ$_4$க$_3$மாகவும், ப$_3$லாத்காரமாகவும் உண்டாயானால். *(சிதையாரோ உன்னோடு)* அத்தனை தேவிமாரும் சேர்ந்து '' இவன் நம் கோ$_3$ாஷ்டி$_2$க்குப் புறம்பானவன் '' என்று உன்னைத் தள்ளிவைத்துவிட்டால்.



**மித்தனையிறே. ''கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள் குழுவினில் புகுதலொட்டோம்'' என்றால் நீ செய்வதென்? ''சாது கோட்டியுள் கொள்ளப்படுவார்'' என்னுமவர்களிறே.** [a] (செல்வப் பெருஞ்சங்கே) **உன் ஐஶ்வர்யச்செருக்கிறே விளைவதறியாதொழிகிறது.** [b] **அவன் ஐஶ்வர்யத்துக்கும் அடியான எங்கள் ஐஶ்வர்யத்துக்கும் மேலாயிருந்ததீ உன் நிலை. 9.**

### ஏழாம் திருமொழி—பத்தாம் பாட்டு

**பாஞ்சசன் னியத்தைப் பற்பநா பனோடும்**
**வாய்ந்த பெருஞ்சுற்ற மாக்கிய வொண்புதுவை**
**ஏய்ந்தபுகழ்ப் பட்டர்பிரான் கோதைதமி ழீரைந்தும்**
**ஆய்ந்தேத்த வல்லா ரவரு மணுக்கரே.**

**பதவுரை:— பாஞ்சசன்னியத்தை** — சங்கை, **பற்பநாபனோடும்** —எம்பெருமானோடே, **வாய்ந்த பெரு சுற்றம் ஆக்கிய**—கிட்டின பேருறவை உடையதாகச் செய்தவளும், **ஒண் புதுவை**—அழகிய ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதரித்தவளும், **ஏய்ந்த புகழ்** — நிறைந்த புகழையுடையவளும், **பட்டர் பிரான் கோதை** — பெரியாழ்வாருடைய திருமகளு

---

நீ வாயமுதம் உண்ணும் செல்வத்தை இழந்து, மண்ணையும் மணலையும் விழுங்கவேண்டிய நிலையை அடைவாயன்றோ. எங்கள் தகப்பனாரைப்போலே ' கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள் குழுவினில் புகுதலொட்டோம் ' [திருப்பல் 3] என்று தேவிமார் உன்னைத் தள்ளிவைத்துவிட்டால் நீ என்ன செய்வாய். ' சாதுகோட்டியுள் கொள்ளப்படுவாரே ' [பெரியாழ் திரு 3-6-11] என்று ப$_4$ாக$_3$வதர்களின் அநுமதி பெற்றே எம்பெருமானை அநுப$_4$விப்பவர்களன்றோ இவர்கள். *(செல்வப் பெருஞ்சங்கே)* உன் செல்வச் செருக்கினாலல்லவோ விளையும் பயனை அறியாமல் காரியம் செய்கிறாய். அவனுடைய செல்வத்துக்கும் மூலகாரணமான எங்களுடைய செல்வத்தைக் காட்டிலும் மேலாயிருக்கிறதன்றோ உன் செல்வநிலை. 9.

---

ஒன்பதாம் பாட்டு. (பதினாறுமித்யாதி$_3$) a b ''பெரும்-செல்வத்தையுடைய-சங்கே'' என்று அந்வயவிவக்ஷயா தாத்பர்யம (அவனைஶ்வர்யத்துக்குமித்யாதி$_3$) (அவன்)-ஈஶ்வரன். பிராட்டிமாராகையாலே அவனைஶ்வர்யத்துக்கு அடி. 9.

மான ஆண்டாள் (அருளிச்செய்த), **தமிழ் ஈர் ஐந்தும்**— இத்தமிழ்ப் பாசுரங்கள் பத்தையும், **ஆய்ந்து**—அநுஸந்தி4த்து, **ஏத்த வல்லாரவரும்**-(இதுகொண்டு எம்பெருமானைத்) துதிக்கவல்லவர்களும்,**அணுக்கர்**-(ஆண்டாளாகிற என்னைப் போல்) அந்தரங்க3ராகப்பெறுவர்கள்.

**வ்யா:— பத்தாம் பாட்டு.** (பாஞ்சசன்னியமித்யாதி3) **ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக் a கேட்டாள்; தன்னோடுண்டான உறவறுத்து அவனோடே சேர்த்துவிடுகிருள். b** (பற்பநாபனோடும்) **அநந்யக3திகளான எங்கள் ஜீவநத்தைக் கைக்கொண்டாயாகில், c** மற்றும் **இத்துறையில் இழிந்தவர்களுடைய ஜீவனத்தையும் நீயேகொள்.**

---

*அவ:—*பாஞ்சஜந்யாழ்வான் இவள்கேட்ட கேள்விகளுக்கு யாதொரு பதிலும் சொல்லாமையாலே, ப2லனைச் சொல்லும் கடைசிப் பாசுரத்தில் பாஞ்சஜந்யத்துக்குத் தன்னோடு உண்டான உறவை அறுத்துப்பேசி, "இப்பத்துப் பாசுரமும் கற்றவர்களும் இப்படிப் பாஞ்சஜந்யத்தோடு தங்களுக்குண்டான உறவை அறுத்துப் பேசலாம்படி எம்பெருமானுக்கு அந்தரங்க3ராவர்கள்" என்று ப2லன் சொல்லித் தலைக்கட்டுகிருள்.

*வ்யா:— (பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடும் வாய்ந்த பெருஞ்சுற்றமாக்கிய கோதை)* 'பாஞ்சஜந்யத்தைப் பத்3மநாப4னோடு கிட்டிய பேருறவை உடையவனுக ஆக்கிய கோதை' என்கையாலே இத்திருமொழியிலே ஆண்டாள் ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக்கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லாமையாலே தன்னோடு அவனுக்கு உண்டான உறவை அறுத்து, அவனை எம்பெருமானோடேயே உறவுடையவனுக்கிவிடுகிருள் என்னும் உட்கருத்து தோன்றுகிறது. *(பற்பநாபனோடும்)* தாமரையுந்தி உடையவன் என்கையாலே எம்பெருமானுடைய வடிவழகைச் சொல்லுகிறது. "வேறு புகலற்ற எங்களுடைய உணவாகிற வாயமுதத்தை நீயே ஏகபோ4க3மாக அநுப4விப்பது போலே அனைவரும் அநுப4விக்கும் இந்த வடிவழகையும், அவர்களுக்கு இல்லாதபடி நீயே அநுப4வித்து வாழ்ந்து போ" என்கிருள்.

---

பத்தாம் பாட்டு. (பாஞ்சசன்னியத்தை இத்யாதி3) a (கேட்டாள்) "அவன் சொல்லாமையாலே (தன்னோடுண்டான உறவறுத்து)" என்று கூட்டுவது. b,c "பற்பநாபன்"



d (ஏய்ந்த புகழ்) "ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடே சீறுபாறென்ருள்" என்ருல் "தகாதோ? பெரியாழ்வார் பெண்பிள்ளையன்ருே? பெறும்" என்னும் புகழாய்த்து; e அநுஸந்தி4த்துக்கொண்டு சொல்லவல்லார். (அவரும் f அணுக்கரே) அவர்களும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடே சீறுபாறென்னவுரியராவர். நாய்ச்சியாரைப்போலே அவரும் g அண்ணியராவர்.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

ஏழாம் திருமொழி முற்றிற்று.

---

*(ஒண்புதுவை ஏய்ந்த புகழ்ப்பட்டர்பிரான் கோதை)* ஒளி பொருந்திய ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்தவளும், நிறைந்த புகழையுடையவளுமான பெரியாழ்வாருடைய திருமகளான ஆண்டாள். "எம்பெருமானுக்கு மிக அந்தரங்க3னை ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வானையும் ஆண்டாள் கோபிக்கலாமோ?" என்று சிலர் கேட்டால், "பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண் பிள்ளையாகையாலே ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வானையும் கோபிப்பதற்கு இவளுக்கு உரிமையுண்டு; கோபித்தது தகும்" என்று உலகெங்கும் புகழ் பெற்றிருப்பவள் என்று கருத்து. 'ஒண்புதுவை' 'ஏய்ந்த புகழ்' என்னும் தொடர்களைப் பட்டர்பிரான் பெருமையைக் கூறுவனவாகவும் கொள்ளலாம். அப்போது ஏய்ந்த புகழாவது - பாண்டியன் கொண்டாடப் பரதத்வநிர்ணயம் செய்து பரமபுருஷனையே நேரில் வரவழைத்துப் பல்லாண்டு பாடிய புகழாகும். *(கோதை தமிழ்*

---

என்கையாலே - வடிவழகைச் சொல்லி, அத்தை அநுப4விப்பாருமுண்டாகையாலே (மற்றும் இத்துறையில்) என்கிறது. "வாய்ந்த" - கிட்டின. "சுற்றம்" - உறவு. "வாய்ந்த பெருஞ்சுற்றம்" - கிட்டின பேருறவு. d "ஏய்ந்த" பொருந்தின. e "ஆய்ந்து"-ஆராய்ந்து; ஆய்கை-சோதிக்கையாய், மநஸ்ஸாலே ஆராய்கை; அநுஸந்தி4த்து என்றபடி. f,g "அணுக்கர்"-அண்ணியர்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

# எட்டாம் திருமொழி—விண்ணீலமேலாப்பு ப்ரவேஶம்

அவ:— a ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வார்த்தை கேட்டாள். இவனை வார்த்தை கேட்டவாறே ப$_{4}$ாவநாப்ரகர்ஷத்தாலே அவனளவும் செல்லுமிறே. b நித்யதத$_{3}$ாஶ்ரயத்வ $b_2$ தச்சே$_{2}$ஷத்வங்கள் உண்டாகையாலே; த$_{4}$ர்மியையொழிய

---

*ஈரைந்தும் ஆய்ந்தேத்த வல்லார்)* கோதை பாடிய இத்திருமொழியை அர்த்த$_{2}$ாநுஸந்த$_{4}$ானத்துடன் சொல்லவல்லவர்கள். *(அவரும் அணுக்கரே)* அவர்களும் ஆண்டாளாகிய என்னைப் போலே, ஸ்ரீபாஞ்சஜன்யத்தையும் கோபிக்கலாம்படி எம்பெருமானுக்கு மிகவும் நெருங்கியவர்கள் ஆவர்.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி த$_{3}$ாஸன் இயற்றிய
ஏழாந்திருமொழி வ்யாக்$_{2}$யான விவரணம் நிறைவுற்றது.

# எட்டாம் திருமொழி வ்யாக்யான விவரணம்

## விண்ணீலமேலாப்பு ப்ரவேஶம்

இந்தத் திருமொழியில் ஆண்டாள் திருவேங்கடத்தெம் பெருமானிடம் தன் காதலைத் தெரிவித்து, மேக$_{4}$ங்களைத் தூது விடுகிருள். “ முந்தின திருமொழியில் ஸ்ரீபாஞ்சஜன்யத்தோடு வார்த்தை சொன்னவள் இப்போது திருவேங்கடமுடையானிடம் தூது விடுவானேன்?” எனில்; ஸ்ரீபாஞ்சஜன்யத்தோடு வார்த்தை சொன்னவுடன் நினைவின் முதிர்ச்சியாலே எம்பெருமானளவும் ஆண்டாளுடைய ப$_{4}$ாவவ்ருத்தி செல்லுமன்றே; மேலும் ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வான் எம்பெருமானை ஆஶ்ரயித்து அவனுக்கு ஶேஷபூ$_{4}$தனாயிருக்கையாலே,. அவனுக்கு த$_{4}$ர்மம் போலே ப்ரகாரமாயிருப்பான். த$_{4}$ர்மியாய் (ப்ரகாரியாய்) உள்ள

---

அரு:— விண்ணீலமேலாப்பு ப்ரவேஶம். a இவனைக் கேட்டவள் அவனளவும் செல்லுவானென் ? என்ன அருளிச்செய்கிருர் (ஸ்ரீபாஞ்சஜந்யேத்யாதி$_{3}$) b அவனளவும் செல்லுகைக்கு ஹேதுவேதென்ன அருளிச்செய்கிருர் ( நித்யதத$_{3}$ாஶ்ரயேத்யாதி$_{3}$ ) $b_2$ ( ஶேஷத்வம் ) - ஶரீரவத்



த$_{4}$ர்மமாத்ரத்துக்குப் பிரித்து $b_3$ ஸ்தி$_{2}$த்யுபலம்ப$_{4}$ாதி$_{3}$களில்லையே. c இவனை வார்த்தை கேட்டாள்; d மேக$_{4}$ங்களானவை வாராமுழங்கிற்று. e“கார்க்கோடு பற்றியான் கை” என்று இங்ஙனேயும் ஒரு சேர்த்தியுண்டிறே. f கார்காலத்தில் வரவைக்குறித்துப் போனான்; அக்காலம் வந்தவாறே அவன் வடிவுக்குப் போலியான மேக$_{4}$ங்கள் வாராத் தோற்

---

எம்பெருமானை விட்டுப்பிரிந்து த$_{4}$ர்ம( ப்ரகார )மாத்ரமாய் உள்ள ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்கு இருப்பு, காட்சி முதலானவை இல்லையன்றே. சென்ற திருமொழியில் ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வானைச் சில கேள்விகள் கேட்டாள். அவன் பதில் சொல்லவில்லை. மழை காலம் வந்தமையாலே மேக$_{4}$ங்கள் தோன்றி முழங்கின. எம்பெருமானும் தான் பிரிந்தபோது மழைகாலத்தில் திரும்பி வருவதாகச் சொல்லிப்போனான். அக்காலம் வந்த பின்பும் அவன் வரவில்லை. அவனைப்போலே கருநிறமுள்ள மேக$_{4}$ங்களே வந்தன. அவனும் கூட வந்தானே என்று மயங்கினாள். ஆனால் மேக$_{4}$ங்களைக் கண்டாளேயொழிய எம்பெருமானைக் காணவில்லை. பாஞ்சஜன்யம் பதில் சொல்லாவிடிலும் “ கார்க்கோடு பற்றியான் கை ” [முதல் திரு 27] என்று முதலாழ்வார் மேக$_{4}$த்துக்கும் பாஞ்சஜன்யத்துக்கும்

---

ஶேஷத்வம். $b_3$ (உபலம்ப$_{4}$ம்)-தோற்றுகை. c இன்னமும் அவனளவும் செல்லுகைக்கு ஹேத்வந்தரமருளிச்செய்கிருர் (இவனை வார்த்தை இத்யாதி$_{3}$) d கீழில் திருமொழியிலே ஆஶ்வாஸஹேதுவாக ஸ்ரீபாஞ்சஜந்யத்தை வார்த்தை கேட்டாளாகில், இப்படியே த$_{4}$ரித்திராதே “பெண்ணீர்மையீடழிக்குமிது தம்க்கோர் பெருமையே” என்று திரியவும் நோவுபடுவானென்னென்ன அருளிச்செய்கிருர் (மேக$_{4}$ங்களானவையித்யாதி$_{3}$) e ‘கார்க்கோடு’-காரின் ஸ்வப$_{4}$ாவத்தையுடைத்தான ஶங்க$_{2}$மென்றபடி. மேக$_{4}$ங்கள் வந்து தோன்றுகையாலே அவன் வடிவுக்கு ஸ்மாரகமாய், அவனளவும் சென்றது. f “திருமாலும் போந்தானே” என்றத்தையுட்கொண்டருளிச்செய்கிருர் ( கார்காலத்திலித்யாதி$_{3}$ )

றின; g அவன் தானும் கூட வந்தானாகக்கொண்டு ப்$_4$ரமித்தாள். அவையேயாய், அவன் தன்னைக் கண்டிலள்; அவற்றைப் பார்த்து வார்த்தைகேட்டு, அவை ஒரு மறுமாற்றம் சொல்லக்காணாமையாலே நோவுபட்டு, மீளவும், "ஏகதே$_3$ஶவாஸித்வத்தாலே உங்களுக்கும் அவனுக்கும் ஒரு சேர்த்தியுண்டிறே; ஆனபின்பு, என் த$_3$ஶையை அங்கே சென்று அறிவிக்கவேணும்" என்று அவற்றைத் தூதாக விடுகிறாள். h ராமாவதாரத்தில் ஐந்த்$_3$ரவ்யாகரணபண்டித$_3$னைத் தூதாக விட்டாற்போலே, அர்ச்சாவதாரத்திலே, "இவை வார்த்தை சொல்லமாட்டா" என்றறியமாட்டாதே கலங்கி, இவற்றைத்

---

ஸ்வப$_4$ாவத்தில் ஒற்றுமையை அருளிச்செய்திருக்கையாலே, மேக$_4$முழக்கத்தைக் கேட்டே சிறிது த்ருப்தி அடைந்தாள். அந்த மேக$_4$ங்களைப் பார்த்து எம்பெருமானைப் பற்றிய வார்த்தைகளைக் கேட்டாள். அவையும் ஒரு பதிலும் சொல்லவில்லை. அதனால் மிக வருந்தி மறுபடியும் "அவன் வாழும் திருவேங்கடமலையிலேயே நீங்களும் வஸிக்கையாலே உங்களுக்கும் அவனுக்கும் ஒரு தொடர்பு உண்டு. ஆகையால் எனது நிலையை நீங்களே அவனிடம் தூது சென்று அறிவிக்கவேண்டும்' என்று மேக$_4$ங்களைத் தூது விடுகிறாள். ராமாவதாரத்தில் ஐந்த்$_3$ரவ்யாகரணமும் அறிந்த பேரறிவாளனான அனுமனைத் தூது விட்ட ஸீதையைப்போலே அர்ச்சாவதாரத்திலே இந்த மேக$_4$ங்களைத் தூது விடுகிறாள் ஆண்டாள். "*காமார்த்தா ஹி ப்ரக்ருதிக்ருபணாஶ் சேதநாசேதநேஷு*" [மேக$_4$ தூ$_3$தம் 1-5] என்கிறபடியே காமத்தால் வருந்தியவர்கள் சேதனமா அசேதனமா என்பதையுமாராயாமல் கலங்கி, மேக$_4$ம் முதலான அசேதனப் பொருள்களையும் தூது விடுவார்களன்றோ? அதுபோலே ஆண்டாளும் "இந்த மேக$_4$ங்கள் வார்த்தை சொல்லமாட்டா" என்று அறியாமல் கலங்கி, திருவேங்கடமுடையானிடம் இவற்றைத் தூது விடுகிறாள். "அர்ச்சாவதாரத்திலே

---

g "திருமாலும் போந்தானே" என்று கேட்கைக்கு ப்ரஸக்தி- வர்ஷாகாலத்தில் வருவானென்றதும், மேக$_4$ஸாம்யமும்.
h அசேதநத்தைத் தூதுவிட்டால் சொல்லுமோ? என்ன



தூதாக விடுகிறாள். i "அர்ச்சாவதாரத்தில் காட்சிக்கு மேற்பட வார்த்தை சொல்லுதல், பரிமாறுதல் செய்கையில்லை. அவதாரத்திலே இதுள்ளது" என்னும் i$_2$ தெளிவுமில்லை. j இனி, காமமாவதுதான்—ப$_4$க்தி; அதாவது—அந்வயத்தில் த$_4$ரிக்கையும், வ்யதிரேகத்தில் த$_4$ரியாமையுமிறே. இவை இரண்டுமுள்ளது பிராட்டிமார்க்காகையாலே, ஆழ்வார்களும் பிராட்டிமார் பாசுரத்தாலே தங்கள் ஆசையைப் பேசக்கடவராயிருப்பர்கள். j அது இருக்கிறபடியாய்த்து.

---

காட்சி கொடுப்பது தவிர வார்த்தை சொல்லுவது, தழுவுதல் முதலான பரிமாற்றங்களைச் செய்வது ஆகியவை இல்லை. விப$_4$வாவதாரங்களிலேயே இவையுள்ளன" என்னும் தெளிவும் ஆண்டாளுக்கில்லை. இங்கு ஆண்டாள் உலகினரைப் போலே காமத்தைக் காட்டுவது தாழ்வன்றோ? எனில்: இங்கு காமம் எனப்படுவது பரமபுருஷ விஷயமான ப$_4$க்தியேயாகும். உலகில் காணும் ப்ராக்ருத காமமன்று. ப$_4$க்தியுடையவர்களும் ப்ராக்ருத காமிகளைப்போலே தம் நாயகனான எம்பெருமானோடு கூடினால் த$_4$ரித்தும், பிரிந்தால் த$_4$ரியாமலும் இருக்கையாலே ப$_4$க்தியானது ஶ்ருங்கா$_3$ர வார்த்தையாக இங்கு வெளிப்படுத்தப்படுகிறது. கூடினால் த$_4$ரிக்கையும் பிரிந்தால் த$_4$ரியாமையும் ஆண்டாளைப் போன்ற பிராட்டிமார்க்கு இயல்வாக உள்ளது. அதனாலேயே ஆழ்வார்களும் நாயகிப$_4$ாவத்தை யடைந்து, பெண் பேச்சாலே தங்களுடைய ப$_4$க்தியைப் பேசுகிறார்கள். ஆண்களாகப் பிறந்த அவர்களுக்கு அது மேட்டுமடையாயுள்ளது. பெண்ணான இவளுக்குப் பள்ளமடையாய் இயல்வாகவே இருக்கிறது.

---

அருளிச்செய்கிறார் (ராமாவதாரத்திலித்யாதி$_3$) i தூதுவிட வேண்டின விஷயந்தான் ராமாவதாரம்போலே கார்யம் செய்யுமென்று விடுகிறாளோ? என்ன அருளிச்செய்கிறார் (அர்ச்சாவதாரேத்யாதி$_3$) i$_2$ (தெளிவும் இல்லை). என்றது- சஶப்$_3$த$_3$த்தைப் பற்ற, இவை அசேதநமாகையாலே வார்த்தை சொல்லமாட்டா என்கிற தெளிவுமில்லையென்று ஸமுச்சயிக்கிறது. j லோகத்தார் காமம்போலேயோ

## எட்டாம் திருமொழி—முதல் பாட்டு

**விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்**
**தெண்ணீர்பாய் வேங்கடத்தென் திருமாலும் போந்தானே**
**கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோரச் சோர்வேனைப்**
**பெண்ணீர்மை யீடழிக்கு மிதுதமக்கோர் பெருமையே.**

பதவுரை:— **விண்**—ஆகாசம் முழுவதிலும், **நீலம் மேலாப்பு விரித்தாற்போல்**—நீலநிறமான மேற்கட்டியை விரித்துக் கட்டினாற்போலிராநின்ற, **மேகங்காள்!**—மேக$_4$ங்களே!, **தெள் நீர் பாய்**—தெளிந்த அருவிகள் பாயுமிடமான, **வேங்கடத்து**—திருவேங்கடமலையில் எழுந்தருளியிராநின்ற, **என் திருமாலும்**—திருமாலாகிய எம்பெருமானும், **போந்தானே**—(உங்களோடு கூட) எழுந்தருளினானே? **முலை குவட்டில்**—முலை நுனியிலே, **கண் நீர்கள் துளிசோர**—கண்ணீர் அரும்ப, **சோர்வேனை**—வருந்துகிற என்னுடைய, **பெண் நீர்மை ஈடு அழிக்குமிது**—பெண்மையை உருவழிக்கிற இது, **தமக்கு**-அவர் தமக்கு, **ஓர் பெருமையே**-ஓர் பெருமையாயிராநின்றதோ ?

---

*1. அவ:*— என்னுடைய பெண்மையை உருவழிப்பது திருவேங்கடமுடையானுக்குப் பெருமையாகுமோ ? என்று திருவேங்கடமுடையானிடம் சென்று மேக$_4$ங்களைக் கேட்கச் சொல்லுகிறாள்.

*வ்யா:— (விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல்)* ஆகாயத்தின் இடமெல்லாம் அடையும்படி நீலமாயிருக்கும் ஒரு மேற்கட்டியைக்கட்டினாற் போலே மேக$_4$ங்கள் வந்து பரவியிருக்கின்றன. நாயகனும் தானும் வெட்டவெளியில் கொலு இருக்கைக்கு ஒரு மேற்கட்டி கட்டியிருப்பதாக இதை நினைத்திருக்கிறாள்.

---

இங்குமென்ன, ஸ்வாபதேஶமருளிச்செய்கிறார் (இனி காமமித்யாதி$_3$). j (அதிருக்கிறபடி)—அது இவளுக்கு ஸ்வப$_4$ாவமாயிருக்கிறபடி.



வ்யா:— **முதற்பாட்டு.** (விண்ணீல a மேலாப்பு விரித்தாற்போல்) **ஆகாஶாவகாஶ மடங்கலும் வெளியடையும்படி நீலமாயிருப்பதொரு மேற்கட்டி கட்டினாற்போலேயாய்த்து இருக்கிறது. மேக$_4$ங்கள் வந்து பரம்பினபோது, b நாயகனும் தானுமாக வெளியோலக்கமிருக்கைக்கு வெளியிலே ஒரு b$_2$ ஈத்தொற்றி கட்டிற்றாகவாய்த்து நினைத்திருக்கிறாள். c உப$_4$யவிபூ$_4$தியும் இருவர்க்கும் ஶேஷமாயிறேயிருப்பது. d ஜக$_3$த்ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் இதுவென்றிருந்தாளாய்த்து.** e (மேகங்காள்) **f திருவடி ஒருவனுக்குமே வார்த்தை சொன்னாற்போலே சொல்லவேணுமென்னும் நிர்ப்ப$_3$ந்த$_4$மில்லையே இவளுக்கு. g118 "सेयमासादिता मया" (ஸேயமாஸாதி$_3$தா மயா) என்று - குறைப்பட்டிருக்குமவையு**

---

பெருமாளும் பிராட்டியுமான இருவர்க்கும் நித்யவிபூ$_4$தியாகிற பரமபத$_3$மும் லீலாவிபூ$_4$தியாகிற இவ்வுலகமும் ஶேஷமாயன்றோ இருப்பது. உலகைப் படைத்து மேக$_4$ங்களைப் பரவவிட்டிருப்பது தானும் அவனும் வெளியில் கொலுவிருப்பதற்கே என்று நினைக்கிறாள். *(மேகங்காள்)* ஸீதாபிராட்டி பெருமாளுக்கு தூ$_3$து விடும்போது அனுமன் ஒருவனிடமே வார்த்தை சொல்லி தூ$_3$துவிட வேண்டியிருந்தது. இவளுக்கு தூ$_3$து விடுவதற்குப் பல மேக$_4$ங்கள் அமைந்திருப்பது தன்னேற்றம் *(சிறப்பு)*.

**118. யாம் கபீநாம் ஸஹஸ்ராணி ஸுப$_3$ஹூந்யயுதாநி ச ।**
**தி$_3$க்ஷு ஸர்வாஸு மார்க்க$_3$ந்தே ஸேயமாஸாதி$_3$தா மயா ॥** [ரா-ஸு30-3]

---

முதல் பாட்டு. (விண்ணீலமித்யாதி$_3$) a "மேலாப்பு"- மேற்கட்டி. b மேற்கட்டியாகக் கொண்டாடுவானென்? என்ன அருளிச்செய்கிறார் (நாயகனும் தானுமித்யாதி$_3$) b$_2$ 'ஈ' என்றது-ஜந்துக்களுக்கு உபலக்ஷணமாய், ஜந்துக்கள் விழாமல் கட்டின மேற்கட்டி. c நாயகநாயகிகளுக்கு வெளி ஓலக்கம் கூடுமோ? என்ன அருளிச்செய்கிறார் (உப$_4$யவிபூ$_4$தியுமித்யாதி$_3$) d ஓலக்கமிடுகைக்குத் தாத்பர்யம் (ஜக$_3$த்ஸ்ருஷ்டித்யாதி$_3$) e,f,g பூ$_3$ஹூவசநத்தைப்

மன்றே இவை. 118 "मया" (மயா) "எல்லாரும் காணவேணு மென்று தேடுகிற விஷயம் நானொருவனுமே காண்பதே!" என்றானிறே; h118. "यां कपीनां सहस्राणि" (யாம் கபீநாம் ஸஹஸ்ராணி)யிறே. ராஜாக்கள் வருமிடத்து ஜலக்ரீடை3க்குப் பரிகரமான "மேகர்" என்கிற ஜாதி முன்னே வரக்கடவதாயிருக்குமிறே. "அவனோடே ஜலக்ரீடை3பண்ணி அவன் நனைக்க நனைந்தவுடம்போடே வந்தன" என்றிருந்தாள்.

---

[ஆயிரக்கணக்காகவும், பதினாயிரக்கணக்காகவும் பல வானரக் கூட்டங்கள் எல்லாத் திசைகளிலும் எவளைத் தேடுகின்றனவோ, அவள் என்னால் கண்டுபிடிக்கப்பட்டாள்.] என்கிறபடியே "ஆயிரக்கணக்கான வானர வீரர்களால் தேடப்படுகிற பிராட்டியை நானொருவனே காணப்பெற்றேன். காண ஆசைப்படும் மற்ற வானரர்க்கு அந்த பா4க்3யமில்லை" என்று அனுமன் குறைப்பட்டான். எல்லா மேக4ங்களுமே சென்று எம்பெருமானைக் காணப்போகின்றமையால் மேக4ங்களுக்கு அந்தக்குறையில்லை. இவ்விரு கருத்துக்களும் "மேகங்காள்" என்கிற பன்மையாலே உணர்த்தப்படுகின்றன. ராஜாக்கள் ஜலக்ரீடை3 செய்வதற்கு வரும்போது அதற்குத் துணையான "மேகர்" என்ற ஜாதியினர் முன்னே வருவார்கள். அவனோடு ஜலக்ரீடை3 செய்வார்கள். அதுபோலே இந்த மேக4ங்களும் அவனோடே ஜலக்ரீடை3 செய்து அவன் நனைக்க நனைந்த உடம்போடு வந்தன என்று நினைத்திருக்கிறாள்.

---

பற்றத் தாத்பர்யத்3வயம் அருளிச்செய்கிறார் (திருவடி இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே) பிராட்டி திருவடி ஒருவனுக்குச் சொன்னாற்போலே சொல்லவேண்டாமல் எல்லாருக்கும் சொல்லலாயிருக்கையாலும், திருவடி, "நானொருவனுமே கண்டேன்" என்று குறைவுபட்டாற்போலே குறைவுபடவேண்டாமல் எல்லாரும் போய்க் காணவற்றாயிருக்கையாலும், "மேகங்காள்" என்று திரளாக விடுகிறாளென்றபடி. h அப்படி எல்லாரும் தேடினார்களோ என்ன அருளிச்செய்கிறார் (யாம் கபீநாம்) இத்யாதி3.



k (தெண்ணீர்பாய் வேங்கடத்து) தெளிந்த அருவிகள் ஒழுக்கறாதே பாய்கிற திருமலையில். அவன் நிற்கிற தே3ஶத்திலுள்ளவையெல்லாம் தெளிந்திருக்குமிறே. 119. "उपतप्तोदका नद्यः पल्वलानि सरांसि च" (உபதப்தோத3கா நத்3ய: பல்வலாநி ஸராம்ஸி ச) என்றிறே இவ்விடம் கிடக்கிறது. (என் திருமாலும் போந்தானே) 120. "अग्रतस्ते गमिष्यामि" (அக்3ரதஸ்தே க3மிஷ்யாமி) என்ற அவள் முன் நடக்கக்

---

(தெண்ணீர்பாய் வேங்கடத்து) தெளிந்த அருவிகள் இடைவிடாமல் பாய்கிற திருவேங்கடமலையில். அவன் நிற்கும் தே3ஶத்திலுள்ளவையெல்லாம் அவனுடைய ஸாந்நித்4யத்தாலே தெளிந்திருக்குமன்றோ.

119. உபதப்தோத3கா நத்3ய: பல்வலாநி ஸராம்ஸி ச ।
பரிஶுஷ்கபலாஶாநி வநாந்யுபவநாநி ச ॥ [ரா-அ 59-5]

[(ராமவிரஹத்தால்) நதி3களும், குட்டைகளும், குளங்களும் வரண்டன. காடுகளும், தோட்டங்களும் காய்ந்த இலையை உடையவையாயின.] என்று ராமனைப் பிரிந்ததால் நதி3கள் முதலானவை வரண்டும், உலர்ந்தும் போனதுபோலே நான் இருக்குமிடம் ஆகிவிட்டது என்று கருத்து. (என் திருமாலும் போந்தானே)

120. யதி3 த்வம் ப்ரஸ்தி2தோ து3ர்க்க3ம் வநமத்3யைவ ராக4வ ।
அக்3ரதஸ்தே க3மிஷ்யாமி ம்ருத்3நதீ குஶகண்டகாந் ॥
[ரா-அ 27-6]

[ராக4வரே! நீர் கடக்கவரிதான காட்டிற்குப் புறப்பட்டு விட்டீராகில், உமக்கு முன்னால் (உம் திருவடி நோவாதபடி) த3ர்ப்பை4களையும் முட்களையும் என் காலால் மிதித்துக்கொண்டு நான்

---

k "தெள்" - தெளிவு. i "திருமாலும் போந்தானே" என்று அவன் பின்னும் இவைமுன்னுமாய் வருகைக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ராஜாக்கள் இத்யாதி3) j ஜலத்தோடேகூடியிருக்கையைப்பற்ற அருளிச்செய்கிறார் (அவனோடே ஜலக்ரீடை3 இத்யாதி3) l (சொல்லுகிறாளிறே)

காணும் வந்தது. "என்திருமால்" என்று தன்னோடே சேர்த்துச் l சொல்லுகிறாளிறே. "போந்தானே" என்றால், "ஓம், போந்தான்" என்னவல்லார்க்கிறே m வாயுள்ளது. அவை பேசாதேயிருந்தன; "அசேதநமாகையாலே வார்த்தை சொல்லமாட்டா" என்று அறியமாட்டாதே, "அவன் வாராமையாலேயிறே இவை பேசாதிருக்கின்றன" என்று கண்ணநீர் வெள்ளமிடத் தொடங்கிற்று. 121. "किमर्थं तव नेत्राभ्यां" (கிமர்த்த$_2$ம் தவ நேத்ராப்$_4$யாம்) என்று - வேறு சிலர் சொல்லவேண்டாதே தானே சொல்லு

---

இன்றே செல்வேன்.] என்று ஸீதாபிராட்டி முன்நடக்க அவளைப் பின்பற்றி வந்தவனன்றோ என் திருமால். அவன் என்னைத் துடிக்கவிடக் காரணமில்லையாகையால், அவனும் உங்களுக்குப் பின்னால் வந்திருக்கவேண்டும். அப்படி வந்திருக்கிறானா, சொல்லுங்கள்—என்று மேக$_4$ங்களைக் கேட்கிறாள். தான் பிராட்டியின் பரிகரமானமையும், அவள் தனக்குப் புருஷகாரமானமையும் தோற்ற 'என் திருமால்" என்று தன்னோடே சேர்த்துச் சொல்லுகிறாளன்றோ. வாயுள்ளவையாயிருந்தால் 'போந்தானே' என்று இவள் கேட்டவுடன் 'ஆம்; போந்தான்' என்று சொல்லியிருக்கும். ஆனால் அந்த மேக$_4$ங்கள் வாயற்றவையாகையால் பேசாதே கிடந்தன. "அசேதனமாகையாலே வார்த்தை சொல்ல இயலாதவை இந்த மேக$_4$ங்கள்" என்று கலக்கத்தால் அறியமாட்டாமல் "அவன் வராமையாலேயன்றோ இவை பேசாதிருக்கின்றன" என நினைத்து இவளுக்குக் கண்ணீர் வெள்ளம் பெருகத் தொடங்கிற்று.

121. கிமர்த்த$_2$ம் தவ நேத்ராப்$_4$யாம் வாரி ஸ்ரவதி ஶோகஜம்।
புண்ட$_3$ரீகபலாஶாப்$_4$யாம் விப்ரகீர்ணமிவோத$_3$கம் ॥
[ரா-ஸு 33-4]

---

"தனக்குப் புருஷகாரமானமை தோற்ற" என்று பூரிப்பது. m (வாயுள்ளது)-வாயுண்டானாலன்றோ ஒன்று சொல்லலாவது என்றபடி. அதாவது-அசேதநமாகையாலே என்றபடி. n121. "तव नेत्राभ्यां शोकजं वारि स्रवति किमर्थं" (தவ நேத்ராப்$_4$யாம் ஶோகஜம் வாரி ஸ்ரவதி கிமர்த்த$_2$ம்) என்று



கிறாள். "किमर्थं" (கிமர்த்த$_2$ம்) n ஆர்குடி வேர்பறியத்தான் இக்கண்கள் ஶோகாஶ்ரு ப்ரவஹிக்கிறது. o அன்றிக்கே, பிராட்டியைக் கண்டபின்பு இங்கு o$_2$ படையற்று. o$_3$ ஆரைச்

---

[பிராட்டி! தாமரையிலையிலிருந்து தண்ணீர் விழுவதுபோல் உம் திருக்கண்களிலிருந்து து$_8$:க்க$_2$த்தாலுண்டாகும் கண்ணீர் எதற்காகப் பெருகுகிறது?] என்று அனுமன் ஸீதாபிராட்டியின் கண்ணீரைக் கண்டு பேசியதுபோலே பேசுவதற்கு இங்கு எவரும் இல்லாமையாலே தானே பேசுகிறாள் (*கண்ணீர்கள்*) என்று தொடங்கி. மேழெடுத்த ஶ்லோகத்தில் "தேவரீருடைய கண்கள் இரண்டிலிருந்தும் வருத்தத்தாலுண்டான கண்ணீர் பெருகுவது எதற்காக" என்று அனுமன் கேட்பது "யாருடைய குடி அடியோடு பூண்டற்றுப் போவதற்காக இக்கண்களில் இந்த வருத்தக்கண்ணீர் பெருகுகிறது?" என்னும் கருத்திலேயாகும். அன்றிக்கே, "தாமரையிலையிலிருந்து தண்ணீர் சிதறுவதுபோலே தேவரீருடைய திருக்கண்களிலிருந்து கண்ணீர் பெருகுவது எதற்காக" என்று பிராட்டியிடம் ஈடுபாடுதோற்ற அனுமன் உரைத்ததற்கு வேறு கருத்தும் உரைக்கலாம்: — பிராட்டியைக் காண்பதற்கு முன்பு பெருமாளிடமே ஈடுபட்டிருந்தான் அனுமன்; பெருமாளைப் பிரிந்த பிராட்டியைக் கண்ணுங்கண்ணீருமாய்க் கண்ட பின்பு இவளிடம் அனுமனுக்கு ஈடுபாடு மிகுந்தது; அந்த நிலையிலே "தம்மைப் பிரிந்து தேவரீர் கண்ணும் கண்ணீருமாய் இருப்பதைப் பெருமாளன்றோ காணவேண்டும். மற்றவர்களெல்லாம் இதைக் காணத் தகுதியற்ற அசேதனதுல்யரன்றோ; இக்கண்ணீரைக் காணவேண்டிய அந்தப் பெருமாள் இங்கு இல்லாதபோது தேவரீர் கண்ணீர் விடுவதற்குப் பய

---

கூட்டி அருளிச்செய்கிறார் (ஆர்குடி இத்யாதி$_3$). o 121. "पुण्डरीकपलाशाभ्यां विप्रकीर्णमिव-तव नेत्राभ्यां वारि स्रवति किमर्थं" (புண்ட$_3$ரீகபலாஶாப்$_4$யாம் விப்ரகீர்ணமிவ - தவ நேத்ராப்$_4$-யாம் வாரி ஸ்ரவதி - கிமர்த்த$_2$ம்) என்று இங்ஙனே கூட்டி அருளிச்செய்கிறார் (அன்றிக்கே பிராட்டி இத்யாதி$_3$) o$_2$ (படையற்று) - அற்றுத்தீர்ந்து; ஈடுபட்டு என்றபடி.

சேதனராகக்கொண்டுதான் என்னுதல். (முலைக் p குவட்டில் துளிசோர) q மேக4ங்கள் - நித்யவாஸம் பண்ணுகையாலே யிறே அவன் திருமலையை விடாதேயொழிகிறது. திருமலையைத் தன்னுடம்பிலே படைத்துக் காட்டுகிருள். மேக4ங்கள் வர்ஷித்தவாறே அருவிகள் சிதறிவந்து சிகரங்களிலே விழுந்தாற்போலேயாய்த்து - கண்ண நீர்கள் முலைக்குவட்டிலே விழுகிறபடி. r "துளியும் சோர நானும் சோருகிறேன்" என்கிருளல்லள்; அக்3நிகணங்கள் பட்டாற்போலே துளிசோரத் தானும் சோருகிருளித்தனை. அதுவே ஹேதுவாகச் சோருகிற என்னை. s (பெண்ணீர்மை ஈடழிக்குமிது) எல்லா அவஸ்தை2யிலும் 14. "तत्तस्य सदृशं भवेत् (தத்தஸ்ய ஸத்3ருனென்ன?" என்னும் கருத்திலே அனுமன் இப்படிக் கூறுவதாகவும் கொள்ளலாம். *(கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளி சோர)* மேக4ங்கள் எப்போதும் குடியிருந்து பன்னீர் தெளித்தாற்போல் மழைத்துளிகளைத் தெளிக்கையாலன்றே எம்பெருமான் திருமலையை விடாமல் வாழ்கிறன். அவன் வருவதற்காகத் திருமலையை என் உடம்பிலேயே படைத்துக் காட்டுகிறேன் என்கிருள். மேக4ங்கள் மழை பொழிந்தவுடன் அருவிகள் சிதறிப்பெருகி வந்து மலையுச்சிகளில் விழுந்தாற்போலே யாயிற்று இவளுடைய கண்ணீர் முலைக்குவட்டிலே விழுகிறபடி. *(துளிசோரச் சோர்வேனை)* இதற்கு "துளியும் சோர (விழ), நானும் சோருகிறேன் (சோர்வடைகிறேன்)" என்று பொருளல்ல. நெருப்புப் பொறிகள் பட்டதுபோலே வருத்தக் கண்ணீர்த் துளிகள் விழுகையாலே தானும் சோர்வடைகிருள் என்று கருத்து. கண்ணீர்த் துளிகள் விழுவதே காரணமாகச் சோர்வடைகிற என்னை. *(பெண்ணீர்மையீடழிக்குமிது)* [பக்கம் 34ல் 14-வது ப்ரமாணத்தின்படி] தன் முயற்சியாலன்றியே

---

o3 *(ஆரைச்சேதநராக)* பெருமாளன்றே இவ்வழகுகாண ப்ராப்தமென்றபடி. p "குவடு" - *ஶிக2ரம்.* q "குவடு" என்று விஶேஷிக்கிறதுக்குத் தாத்பர்யம் (மேக4ங்கள் இத்யாதி3). r துளியும் தானும் தனித்தனியே சோருகிருளல்லள்; துளிபட்டது பா3த4கமாகத் தான் சோருகிருள்



ஶம் ப4வேத்) என்கிறபடியே அத்தலையாலே பேருக நினைத்திருக்குமதிறே ஸ்தரீத்வமாவது; அத்தை அழியாநின்ருய்த்து. t 122. "नानयोर्विद्यते परं" (நாநயோர்வித்3யதே பரம்) என்னக்கடவதிறே. u அன்றியே, ஸ்த்ரீத்வ புமஸ்த்வங்களிரண்டும் தங்கள் பக்கலிலே பர்யவஸிதமென்று

---

எம்பெருமானுலே பேருக நினைத்திருப்பதன்றே பெண்ணின் தன்மையாவது. எனது பெண்மையை அழித்து என்னை தூதுவிடல் போன்ற செயல்களைச் செய்யும்படி செய்யும் இது.

**122. தே3வதிர்யங் மநுஷ்யேஷு புந்நாமா ப4க3வாந் ஹரி: ।**
**ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய நாநயோர் வித்3யதே பரம் ॥** [வி-பு 1-8-35]

[மைத்ரேயரே! தே3வர், திர்யக் (ஊர்வன), மனுஷ்யர்கள் ஆகிய ஜீவராசிகளுள் ஆணுயிருப்பது ப4க3வான் ஹரியின் அம்ஶம் பெற்றது. பெண்ணுயிருப்பது லக்ஷ்மியின் அம்ஶம் பெற்றது. இவ்விருவரைக் காட்டிலும் மேலானதில்லை.] என்கிறபடியே அவன் உத்தமநாயகனுகையாலும், இவள் உத்தமநாயகியாகையாலும் அவன் ஸ்வாதந்த்ர்யத்தாலே இவளுடைய பெண்மையை அழிப்பதும், இவள் ப்ராப்யத்வரையாலே பெண்மை அழியப்பெறுவதும் தக்கதேயன்றே, அன்றிக்கே, கீழெடுத்த 122-வது ப்ரமாணத்தின்படி ஆண்தன்மை தன்னிடமும், பெண்தன்மை பெரியபிராட்டியாரிடமுமே முடிந்து நிற்கிறதென்றுகொண்டு என்னுடைய பெண்மையை அழிக்கிருன்போலும் என்றும் கருத்துரைக்கலாம். இவளுடைய பெண்மை எத்தகையது என்று ஆராய்ந்தால் "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" [நாச்-திரு 1-5] என்று இவளே அருளிச்செய்தபடி அங்யஸம்ப3ந்த,

---

என்றபடி - t, u அவனழிக்கைக்கும் இவளழிகைக்கும் ஹேது ஏதென்ன, உத்தம நாயக நாயகிகளாகையாலே எனகிருர் **"नानयोः" (நாநயோ:)** இத்யாதி3 வாக்யத்3வயத்தாலே. t அதூவா, ஸ்தரீத்வத்தை அழிக்கைக்கு ஹேது ஏதென்ன; "திருமாலாகையாலே" என்று விவக்ஷித்து, அப்படி அவளுக்காக அழிக்கவேணுமோவென்ன, **"नानयोः"**

போலேகாணும் இருப்பது. v "மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன்" என்றிறே இவள்படி; 123. "वरद सकलमेतत्संश्रितार्थं चकर्थ" (வரத$_3$ ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்த$_2$ம் சகர்த்த$_2$) என்றிறே அவன்படி. இப்படியிருக்கையிறே ஸ்த்ரீத்வ பும்ஸ்த்வங்களுக்கு எல்லையாவது. w பெண்ணீர்மை யீடழிக்கையாவதென்னென்ருல்; "போந்தானே" என்று -

ப்ரஸ்தாவத்தாலே அழியும்படியாயிருக்கை இவளுடைய பெண்மை; அவனுடைய ஆண்மை எத்தகையது என்று ஆராய்ந்தால்,

123. பரிஜநபரிப$_3$ர்ஹா பூ$_4$ஷணந்யாயுத$_4$ாநி
ப்ரவரகு$_3$ணக$_3$ணாஶ்ச ஜ்ஞாநஶக்த்யாத$_3$யஸ்தே ।
பரமபத$_3$மத$_2$ாண்ட$_3$ாந்யாத்மதே$_3$ஹஸ் தத$_2$ாத்மா
வரத$_3$! ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்த$_2$ம் சகர்த்த$_2$ ॥
[வரத$_3$-ஸ்த 63]

[வரத$_3$னே! (விஷ்வக்ஸேனர், ஆதி$_3$ஶேஷன் முதலிய) பரிஜனங்களும், (ச$_2$த்ரம், சாமரம் முதலிய) பரிச்ச$_2$த$_3$ங்களும், ஆப$_4$ரணங்களும், ஆயுத$_4$ங்களும், ஜ்ஞானம், ஶக்தி முதலிய அந்தச் சிறந்த கு$_3$ணஸமூஹங்களும், ஸ்ரீவைகுண்ட$_3$மும், அண்ட$_3$ங்களும், உன்னுடைய தி$_3$வ்யமங்க$_3$ள விக்$_3$ரஹமும், தி$_3$வ்யாத்மஸ்வரூபமுமாகிய இவை எல்லாவற்றையும் அடியவர்களுக்கு ஆக்கிவைத்தாய்] என்கிறபடியே தன்னுடையதனைத்தையும் தன் அடியார்களுக்காக ஆக்கிவைக்குமளவாயிருக்கும் ஸ்வாதந்த்ர்யமே அவனது ஆண்மை. இப்படியிருக்கையே பெண்மைக்கும் ஆண்மைக்கும் எல்லையாகும். இவனே தன் ஸ்வாதந்த்ர்யத்தை அப்படிக்

(நாநயோ:) இத்யாதி$_3$ என்னவுமாம். y (தமக்கு) திருமாலான தமக்கு என்னுதல், என்ஞலே அதிஶயத்தையுடைய தமக்கு என்னுதல்; u இத்தையருளிச்செய்கிருர் (அன்றியே இத்யாதி$_3$) v "தமக்கு" என்ற பத$_3$த்தைக் கூட்டி "பெண்ணீர்மை" என்றதுக்கு அர்த்த$_2$ாந்தரம் (மானிடவர்க்கு இத்யாதி$_3$) s பெண்ணீர்மை - அநந்யார்ஹத்வ லக்ஷணமென்றபடி. y (தமக்கு)-திருமலையிலிருக்கிற தமக்கு. w முந்தின அர்த்த$_2$த்திலே நோக்காக (பெண்



இவள் வார்த்தை கேட்கவிருக்கை; x தன்பேற்றுக்குத் தான் ப்ரவர்த்திக்கவேண்டும்படியிருக்கை. (y தமக்கோர் y$_2$ பெருமையே) z ஶ்ரிய:பதித்வத்தால் வந்த உத்கர்ஷத்தையுடையராயிருக்கிற தமக்கு a "அவளோடு அநந்யராயிருப்பார் நோவுபட முகங்கொடுத்திலர்" என்ருல், அத்தால் வரும் அவத்$_3$யம் தம்மதன்ருே? அவள் அவயவகோடியிலுள்ளார்

காட்டாமல் 'திருமாலும் போந்தானே' என்று இவள் வார்த்தை சொல்லவும், இவள் மேக$_4$ங்களைத் தூதுவிடும்படியாகவும் செய்து இவளுடைய பாரதந்த்ர்யமாகிற பெண்மையை அழிக்கையிலே காட்டுகிருன் என்றபடி. *(இது தமக்கோர் பெருமையே)* லக்ஷ்மீநாத$_2$ஞயிருக்கையால் வந்த பெருமையுடைய தமக்கு, அவளுக்கு அவயவம்போலேயிருக்கும் எனக்கு முகம் காட்டவில்லை என்ருல், அதனுல் விளைவது குற்றமேயொழியப் பெருமையில்லையன்ருே.

123*. பே$_4$ாக்$_3$யா வாமபி நாந்தரீயகதயா
புஷ்பாங்க$_3$ராகை$_3$ஸ் ஸமம்
நிர்வ்ருத்தப்ரணயாதிவாஹநவிதெ$_4$ள
நீதா: பரீவாஹதாம் ।
தே$_3$வி! த்வாமநு நீளயா ஸஹ
மஹீ தே$_3$வ்ய: ஸஹஸ்ரம் தத$_2$ா
யாபி$_4$ஸ்த்வம் ஸ்தநப$_3$ாஹுத்$_3$ருஷ்டிபி$_4$ரிவ
ஸ்வாபி$_4$: ப்ரியம் ஶ்லாக$_4$ஸே ॥ [ஸ்ரீகு$_3$ண 26]

நீர்மை யீடழிக்கையாவதித்யாதி$_3$) x விவரணம் (தன் பேற்றுக்கு இத்யாதி$_3$) y,z "தமக்கு" என்றதுக்கு, கீழே— 'வேங்கடத்திலே நிற்கிற தமக்கு' என்றருளிச்செய்து, 'திருமாலான தமக்கு' என்று தாத்பர்யாந்தரம் (ஶ்ரிய:பதித்வேத்யாதி$_3$) a "என" என்ற பத$_3$த்தைக் கடாக்ஷித்து (அவளோடு அநந்யராயிருப்பார்) என்றது. அன்றிக்கே, 123*. "स्तनबाहुदृष्टिभिरिव" (ஸ்தநப$_3$ாஹுத்$_3$ருஷ்டிபி$_4$ரிவ) என்றத்தைப் பற்றவாதல். y$_2$ "பெருமையே" என்றது-

நோவுபடவிட்டிருந்தானென்றால் அத்தால் வரும் ஸ்வரூப ஹாநி தம்மதன்றோ ? b தமக்கு வரும் ஸ்வரூபஹாநி வேறு சிலரோ பரிஹரிப்பார் ? தமக்கே பரிஹரிக்கை ப1ரமன்றோ ? அன்றிக்கே — c 95. "यस्य सा जनकात्मजा अप्रमेयं हि तत्तेजः" (யஸ்ய ஸா ஜநகாத்மஜா அப்ரமேயம் ஹி தத்தேஜ:) என்கிற படியே - d 'தமக்கேற்றமாம்படி இருக்கிற பெரியாழ்வார் திருமகள், தம்மை ஆசைப்பட்டுப்பெறாதே நோவுபடாநின்றாள்' என்றால் இது தமக்குப் போருமோ ? நோவுபடாதபடி பரி ஹரிக்கவேண்டாவோ ?– என்னுதல். 1.

---

[பெரியபிராட்டியே! பூ4மி, நீளை முதலான எந்த தேவியராலே, உம்முடைய ஸ்தனபா3ஹு த்3ருஷ்டிகளைப்போலே எம் பெருமானை நீர் உகப்பிக்கிறீரோ, அந்த பூ4மி, நீளை முதலான கணக்கற்ற தேவிமார்கள் உமக்கும் எம்பெருமானுக்கும், விட வொண்ணாத புஷ்பசந்த3நாதி3களைப்போலே போ4கோ3பகரண மாயும் உங்களுடைய ஸம்ஶ்லேஷரஸம் தலைமண்டையிடும் போது அதற்குப் போக்குவீடாகவும் இருப்பர்கள்] என்கிற படியே பெரியபிராட்டியார்க்குத் திருக்கைகள் திருக்கண்கள் முதலான அவயவங்கள்போலேயிருக்கும் நான் துன்புறும் போது பார்த்துக்கொண்டிருந்தான் என்றால் அது அவனுடைய ஸ்வரூபமாகிற இரக்கத்துக்கன்றோ குறை. தமக்கு வரும் தாழ்வைப் பிறரா பரிஹரிப்பார் ? தாமே போக்கிக்கொள்ள வேண்டாமோ ? அன்றிக்கே, (307-ம் பக்கத்திலுள்ள 95-வது ப்ரமாணத்தின்படி) தமக்கும் சிறப்பை விளைப்பவளாய், தமக்கு அந்தரங்க3ரான பெரியாழ்வார் திருமகளாயிருக்கும் ஆண்டாள் தம்மை ஆசைப்பட்டுப் பெறாது வருந்துகிறாள் என்றால், இது தமக்குத் தகுமோ ? நான் வருந்தாதபடி பரிஹாரம் செய்யவேண்டாவோ? என்றும் கருத்துரைக்கலாம். 1.

---

பிரிநிலையேகாரம். b இத்தால் ப2லிதம் (தமக்கித்யாதி3) c,d அன்றிக்கே, **95. "यस्य सा जनकात्मजा" (யஸ்ய ஸா ஜநகாத்மஜா)** என்கிற பக்ஷத்தில், "தமக்கு" என்றது - எல்லா ஏற்றமுமாம்படி இருக்கிற தமக்கு என்றபடி. 1.



## எட்டாம் திருமொழி – இரண்டாம் பாட்டு

**மாமுத்த நிதிசொரியும் மாமுகில்காள்! வேங்கடத்துச்**
**சாமத்தி னிறங்கொண்ட தாளாளன் வார்த்தையென்னே!**
**காமத்தீ யுள்புகுந்து கதுவப்பட் டிடைக்கங்குல்**
**ஏமத்தோர் தென்றலுக்குஇங்கு இலக்காய்நா னிருப்பேனே.**

பதவுரை — **மா முத்தம் நிதி சொரியும்** — சிறந்த முத்துக்களையும் பொன்னையுங்கொண்டு பொழிகிற, **மா முகில்காள்** — காளமேக4ங்களே ! **வேங்கடத்து** — திருமலையில் எழுந்தருளியிராநின்ற, **சாமத்தின் நிறம் கொண்ட** — நீல நிறமுடையனான, **தாளாளன்** — எம்பெருமானுடைய, **வார்த்தை என்னே** — செய்தி ஏதாகிலுமுண்டோ ?, **காமம் தீ** — காமாக்3நியானது, **உள் புகுந்து** — உள்ளே புகுந்து, **கதுவப் பட்டு** — கவ்வ, அதனால் துன்புற்று, **கங்குல்** — இரவில், **இடை ஏமத்து** — நடுயாமத்திலே, **ஓர் தென்றலுக்கு** — ஒரு தென்றற்காற்றுக்கு, **நான் இலக்கு ஆய்** — நான் இலக்காகி, **இங்கு இருப்பேனே** — இங்கு இருப்பனோ ?.

**வ்யா:— இரண்டாம் பாட்டு.** (மாமுத்தமித்யாதி3) **a என்னைத் தோற்றி ஔரௌத3ார்யம் படைக்கவேண்டாவே உங்களுக்கு. பராநுக்3ரஹமே** *ஶீலமாயிருக்குமவர்களன்றோ*

---

2. *அவ:—* "தென்றலாலே நலிவுபடும் எனக்கு எம் பெருமான் ஏதேனும் வார்த்தை சொல்லி அனுப்பியிருக் கிறானோ ?" என்று மேக4ங்களைக் கேட்கிறாள்.

*வ்யா:— (மாமுத்த நிதிசொரியும் மாமுகில்காள்)* விலை மதிப்புமிக்க முத்துக்களையும், பொன்னையும் கொண்டு பொழிகிற காளமேக4ங்களே ! எனக்காக ஓர் வண்மையை ஏறிட்டுக் கொள்ளவேண்டாதபடி பிறர்க்கு உதவுவதையே இயல்வாகக்

---

இரண்டாம் பாட்டு. (மாமுத்த இத்யாதி3) a பத3ப்ர யோக3த்துக்குத் தாத்பர்யம் (என்னைத்தோற்றி இத்யாதி3)

நீங்கள். பெருவிலையனுன முத்துக்களையும் பொன்களையும் சொரியுமாய்த்து. அதாவது :- பிறரிரக்கக் கொடுக்கையன்றிக்கே, b தன்ஆஶ்ரயங்கொண்டு த4ரிக்கமாட்டாமல் கொடுப்பாரைப்போலேயாய்த்துக் கொடுப்பது. (மாமுகில காள்) பிறரிரக்கக்கொடுததல், ப்ரத்யுபகாரம் கொள்ளக் கொடுத்தல் செய்கையன்றிக்கே, தன் பேருகக் கொடுக்குமவையென்கை. c இப்படிக் கொடுக்கப்பெருதவன்று உடம்பு வெளுக்குமவர்களன்றே நீங்கள். (வேங்கடதது) d ஏகதே3ஶ வாஸித்வத்தாலே உங்களுக்குத் தெரியாமையில்லையிறே. e (சாமததின நிறங்கொண்ட) e2 அவ்வளவன்றிக்கே, வடிவிலேயும் போலியுண்டிறே உங்களுக்கு. f (தாளாளன)

---

கொண்டிருப்பவர்களன்றே நீங்கள். (*சொரியும்*) பிறர் யாசிக்கக் கொடுக்கையன்றிக்கே முலைக்கடுப்புத் தீரத் தறையிலே பீச்சுவாரைப்போலே கொடுத்தாலல்லது த4ரிக்கமாட்டாமல் வழங்குவதைச் சொல்லுகிறது. (*மாமுகில்காள்*) சிறந்த மேக4ங்களே! மேக4ங்களுக்குச் சிறப்பாவது-பிறர் யாசிக்கக்கொடுத்தல், ஒரு கைம்மாறு கருதிக் கொடுத்தல் செய்யாமல் தன்பேருகக் கொடுக்கையும், இப்படி வழங்கப் பெருவிடில் உடம்பு வெளுக்கையுமாம். "கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரி மாட்டென்னுற்றுங்கொல்லோ உலகு" என்ருர் குறளாசிரியர். (*வேங்கடத்து ..வார்த்தை என்னே*) அவனிருக்குமிடத்திலேயே வாழ்கையாலே அவன் எனக்குச் சொன்ன வார்த்தை உங்களுக்குத் தெரியாதிருக்கமுடியாதே. (*சாமத்தின் நிறங்கொண்ட*) ஒரே ஊரில் வாழ்கை மாத்திரமல்லாமல் நிறத்திலும் உங்களை ஒத்திருப்பவனன்றே அவன். (*தாளாளன்*) தாள் என்று

---

b (ஆஶ்ரயங்கொண்டு) முலைக்கடுப்பாலே தறையிலே பீச்சுவாரைப்போலே என்றபடி. c "முகில்காள்" என்றதுக்குத் தாத்பர்யம் (இப்படி இத்யாதி3) d "வார்த்தை" என்ற பத3த்தைக் கடாக்ஷித்துத் தாத்பாயம் (ஏகதே3ஶேத்யாதி3) e "சாமம்"-ஶ்யாமம. சாமத்தின் நிறம்-ஶ்யாமமான நிறத்தையுடைய. e2 (அவ்வளவனறிக்கே) என்றது ஏகதே3ஶவாஸித்வமேயன்றிககே என்றபடி. f (தாளாளன்)



இவற்றுக்கின்றிக்கே அவனுக்குண்டான ஏற்றம் :- பிறர்க்காகக் கண்ட உடம்பைத தனக்கென்றிருக்குமவனுய்த்து. 70. "ஶராளர்" (ப4க்தாநாம்) என்றிருக்கிற உடம்பைத் தனக்கென்றிருக்கிறவன். g "இவ்வடிவு படைத்த நாமோ சென்றணைவோம்? இதில் அபேக்ஷையுடையார் வேணுமாகில் தாங்களே வருகிருர்கள்" என்று எழவாங்கியிருக்குமவன். (வாாதநதை என்னே) h இங்கு வாராராகிலும், இழவு தமக்கென்றிருந்தாராகில் வார்த்தை சொல்லிவிடாமை இல்லையிறே. (என்னே) i 'நாம் முற்பாடராய் உதவப்பெற்றி

---

திருவடியாய், அதனுல் திருமேனியைக் காட்டி, திருமேனியை ஆள்பவன், அதாவது-அதைத் தனக்கே ஶேஷமாகக்கொண்டிருப்பவன் என்று பொருள்படுகிறது. நீங்கள் உங்களிடமுள்ளவற்றைப் பிறர்க்காகக் கொண்டிருக்க, (229-ம் பக்கம் 70-வது ப்ரமாணத்தின்படி) பிறர்க்காக ஏற்பட்ட உடம்பைத் தனக்காகவே நினைத்திருக்கிருனன்றே அவன். இவ்விஷயத்தில் உங்களுக்கு நேர்மாருனவன் என்று கருத்து. அன்றிக்கே தாளாளன் என்னும் பத3ம் ரூடி4யாலே மேன்மைமிக்கவனைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். "இப்படிச் சிறந்த வடிவு படைத்த நாம் வலுவில் சென்று அணையலாமோ? இதில் விருப்பமுடையவர்கள் வேண்டுமானுல் தாங்களே வரட்டுமே" என்று மதிப்புடன் விலகி இருப்பவன் என்று கருத்து. (*வார்த்தை என்னே*) இங்கு வராவிடிலும் எனக்கு அருள் புரியாததனுல் ஏற்படும் நஷ்டம் தமக்கே என்று நினைத்தாராகில், ஒருவார்த்தையாவது சொல்லிவிடாமல் இருக்கமாட்டாரே. அது என்ன என்று சொல்லுங்கள். (*என்னே*)

---

"தாள்" என்று திருவடியாய், அத்தால்-திருமேனியைச் சொல்லி, அத்தை ஆளுகை-தனக்கே ஶேஷமாகக் கொண்டிருக்கை. g அனறிக்கே, "தாளாளன்" என்று ரூடி4யாய்-மேன்மையாய், "சாமத்தின் நிறங்கொண்ட தாளாளன்" என்று கூட்டி அருளிச்செய்கிருர் (இவ்வடிவு இதயாதி3) h ஸ்வார்த்த2பரனுயிருக்கிறவன் வார்த்தை சொல்லக்கூடுமோ? என்ன அருளிச்செய்கிருர் (இங்கு

லோம்' என்னும் லஜ்ஜையாலே, "நீங்கள் அவள் செய்த தென்?" என்று அறிந்து வாருங்கோளென்னுதல்; j அன்றிக்கே, 37. "न जीवेयं क्षणमपि" (ந ஜீவேயம் க்ஷணமபி) என்னுதல் ; k அங்ஙனிருப்பாருண்டாவதாக $k_2$ நாமறிந்திலோமீ! என்னுதல்; l து$_3$ஷ்யந்தனுடையவும் ஶகுந்தலையுடையவும் கதை$_2$யைச் சொல்லிக்கொள்வது; $l_2$ ஒன்று(ம்)

---

அவன் சொன்ன வார்த்தை என்ன? 'நாம் முற்பட்டு உதவவில்லையே' என்னும் லஜ்ஜையாலே அவன பின்வரும் வார்த்தைகளில் ஏதாவதொன்றைச் சொல்லியிருப்பானே. அது என்ன? அதாவது :— 1. "நீங்கள் அவள் என்ன செய்கிருள் என்று அறிந்து வாருங்கள்" என்றே, 2. (116ம் பக்கம் 37-வது ப்ரமாணத்தின்படி) ஸ்ரீராமபிரான் சொன்ன வார்த்தையையோ, 3. து$_3$ஷ்யந்தன் ஶகுந்தலைவிஷயத்தில் சொன்னதுபோலே. "ஆண்டாள் என்று என்னோடு தொடர்புடையவள் ஒருத்தி

---

வாராரிதயாதி$_3$) i,j,k "வார்த்தையேது?" என்று கேட்கும்போது வார்த்தைவிகல்பங்களுண்டென்று தோற்றுகையாலே, அந்த விகல்பங்களைக் காட்டுகிருர் (நாம் முற்பாடராயித்யாதி$_3$).

$k_2$, l "நாமறிந்திலோமீ!" என்ற மூன்ருமதுக்கு உதா$_3$ஹரணம் (து$_3$ஷ்யந்தனுடையவுமித்யாதி$_3$) கதை$_2$யாவது;- து$_3$ஷ்யந்தன் என்கிற ராஜா வேட்டைக்குப் புறப்பட்டுப் போனவிடத்திலே, ரிஷிபுத்ரியான ஶகுந்தலையோடே யாத்$_3$ருச்சி$_2$கமாக ஸம்ஶ்லேஷமுண்டாக, அவன் உடனே தன்னூரேபோக, அவளுக்கு க$_3$ர்ப்ப$_4$மாய்ப் பிள்ளைபெற, ரிஷி, பெண்ணையும் கொண்டுபோய், ராஜாவினண்டையிலே விட, அவன் மறந்து 'இப்படி உணடோ' என்றிருக்க, "உண்டு" என்று ரிஷி சொல்ல, அதிலும் விஶ்வஸியாதே இருக்க, பிள்ளையை விட, பிள்ளை அவன் மடியிலே போயேற, பின்பு கூட்டிக்கொண்டானென்றபடி. $l_2$ "இப்புடைகளிலே - ஒன்று சொல்லாமையில்லையிறே" என்று வாக்யத்தைக் கூட்டி நிர்வஹிப்பது.



சொல்லாமை இல்லையிறே. ஒரு வார்த்தைகொண்டு த$_4$ரித்திருக்கலாமோ இவளுக்கு? என்னில்; ஒருவார்த்தை கேட்கில் 124. "स्थितोऽस्मि" (ஸ்தி$_2$தோऽஸ்மி) என்றிருக்கலாமிறே. "வார்த்தை என்னே" என்றவிடத்தில் இன்னதென்று சொல்லக்கேட்டிலள். (காமத்தீயுள் புகுந்து கதுவப்பட்டு) கேவலாக்$_3$நியோபாதி இதுவென்று நினைத்திருக்கிருளோ? கேவலாக்$_3$நியிற்காட்டில் நரகாக்$_3$நிக்கு எத்தனை வாசியுண்டு.

---

இருப்பதே எனக்குத் தெரியாதே" என்றே இத்தகைய வார்த்தைகளில் ஏதாவதொன்றைச் சொல்லாமல் இருந்திருக்க மாட்டானன்றே. அந்த வார்த்தையைக் கேட்டு த$_4$ரித்திருக்கலாமென்று நினைக்கிருள். வார்த்தையைக் கேட்டு த$_4$ரித்தாருண்டோ? எனில்,

124. நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்$_3$த$_4$ா
த்வத்ப்ரஸாத$_3$ாந் மயாऽச்யுத ।
ஸ்தி$_2$தோऽஸ்மி க$_3$தஸந்தே$_3$ஹ: கரிஷ்யே வசநம் தவ ॥
[கீ$_3$தை 18-73]

[அச்சுதனே! (விபரீதஜ்ஞானமாகிய) மோஹம் நஶித்தது; உன்னருளால் உண்மையறிவு என்னால் அடையப்பட்டது. ஸந்தே$_3$ஹம் நஶிக்கப்பெற்றவனாயிருக்கிறேன். உன் வசனத்தின்படியே (யுத்$_3$த$_4$ம்) செய்கிறேன்.] என்கிறபடியே அர்ஜுனன் கீ$_3$தை சொல்லக்கேட்டு த$_4$ரித்திருந்தானன்றே; "பாவி நீ யென்று ஒன்று சொல்லாய் பாவியேன் காணவந்தே" [திருவாய் 4-7-3] என்று நம்மாழ்வாரும் ப்ரதிகூலமாகவாவது அவன் வாயிலிருந்து ஒருவார்த்தை கேட்க ஆசைப்பட்டாரன்றே. இப்படி இவள் "வார்த்தை என்னே" என்று கேட்டபோதிலும், மேக$_4$ங்கள் 'அவன் இன்னவார்த்தை சொன்னன்' என்று பதில் சொல்லவில்லை. அதனாலே மிக வருந்தி வெறுப்போடு வார்த்தை சொல்லுகிருள் பாட்டின் பிற்பாதியாலே. (காமத்தீயுட்புகுந்து கதுவப்பட்டு) இந்தக் காம நொப்பு உலகில் காணும் நெருப்பைப் போன்றது என்று நினைத்திருக்கிருளோ? உலகில் அக்$_3$நியைக்காட்டிலும், நரகத்தில் அக்$_3$நி எத்தனை மடங்கு கொடிதாயிருக்குமோ அத்தனை

அவ்வோபாதியும் போராதே அந்நரகாக்$_3$நிக்கு இது. (உள் புகுந்து) புறம்புள்ளதடங்க த$_3$ஹித்து, த$_3$ாஹ்யாப$_4$ாவத்தாலே உள்ளே விழுந்ததாய்த்து. m ப$_4$ாவப$_3$ந்த$_4$மடியாக வந்ததாகையாலே உள்ளேயாயிருக்குமிறே. n (கதுவப்பட்டு) o வெந்தவிடமே விறகாக எரியாநின்றதாய்த்து. p (இடைக் கங்குல் ஏமதது) ராத்ரியில் நடுயாமத்திலென்னுதல். அன்றிக்கே, ஏமத்திலே ரக்ஷையுள்ளவிடத்திலே இருந்தநுப$_4$விக்க வேணுமென்று பாரித்திருந்தாள்; அவன் வந்திலன். (ஏமம)

---

ம ங்குசகும மேப்ல நரகாக்$_3$நிகைக் காட்டிலும் இந்தக காமாக்$_3$நி கொடிதாயிருக்குமன்றோ. (உட்புகுந்து) வெளியேயுள்ள தே$_3$ஹம் முழுவதையும் கொளுத்தி, வெளியில் கொளுத்துவதற்கு வேறொன்றுமில்லாமையாலே உள்ளே ஆத்மாவையும் த$_3$ஹிக்கத் தொடங்கிற்று. இந்தக் காமத்தீயானது ஆத்மாவினுளேயிருக்கும் அன்பினாலே வந்ததாகையாலே த$_3$ஹிப்பதும் உள்ளேயாயிருக்குமன்றோ. (கதுவப் பட்டு) கவ்வ, அதனாலே பட்டுப்போய். "உட்புகுந்து" எனறு "அடியோடு ஆத்மா வெந்துபோயிற்று" என்று சொன்னபின்பு மறுபடியும் "கதுவப்பட்டு" என்கையாலே, வெந்த இடமே விறகாக எரியாநின்றது என்று தோற்றகிறது. (இடைக்கங்குல் ஏமத்து) கங்குல் இடையில் யாமத்து; ராத்ரியில் நடுயாமத்து என்று கருத்து. அன்றிக்கே; ஏமத்து என்றது காவலுள்ள இடத்திலே ராத்ரியில் என்றும் பொருள்கொள்ளலாம். ரக்ஷையுள்ள இடத்தில் ஏகாந்தத்தில் தான் அநுப$_4$விக்கவேண்டும் என்று மநோரதி$_2$த்திருந்தது அவன் வராமையாலே நிறைவேறவில்லை. கட்டும் காவலும் ஏகாந்தமுமான இடமாகையாலே ஆறுதல் சொல்லக்கூட ஒருவர் இல்லாத இடத்தில் அகப்பட்டுத் துன்புறுகிறேன் என்று கருத்து. "ஏமம்" என்னும்

---

m தாத்பர்யாந்தரம (ப$_4$ாவப$_3$ந்த$_4$மிதயாதி$_3$) n "கதுவப் பட்டு" - ப$_3$ாதை$_4$ப்பட்டு. o "உள்புகுந்து" என்று நிஶ்ஶேஷமாக வெந்ததாஞல், பின்னை ப$_3$ாதி$_4$க்க அவகாஶமுண்டோவென்ன (வெந்தவிடமேயித்யாதி$_3$) n 'கதுவ'- கவ்வ. p (இடைக்கங்குலேமத்து) கங்குலிடையில் யாமதது



[காவலும், சாபமும்] - கட்டழகும், q வலியும், r புகுந்து ஆஶ்வஸிப்பிப்பாரில்லாத இடத்திலே அகப்பட்டாள்.

(ஓர் தென்றலுக்கு) இந்த ப$_3$ாத$_4$க பத$_3$ார்த்த$_2$த்துக்குத் தம்மோபாதி ஶக்தி போராதென்றிருக்கிறரோ? 84. "पम्पा-पवनमारुत" (பம்போபவநமாருதம்) என்று-தாமும் கால்வாசியறியாரோ? நான் இக்காலாலே துகையுண்ணக் கடவேனோ?; (இங்கு) s "இது வரும்" என்றறிந்(திருந்)தால் என்னைத் தம் காற்கீழே இட்டுக்கொள்ளவேண்டாவோ? t தாமும் நாமுமா

---

சொல்லுக்கு, கட்டழகு வலி முதலான மற்றும் பல பொருள்கள் உண்டாயினும், இங்கு யாமம் காவல் என்னும் இரண்டு பொருள்களே பொருந்தும். அரும்பதவுரையில் வலி என்னும் பொருளும் ஒருவாறு பொருந்தவிடப்பட்டுள்ளது.

(ஓர் தென்றலுக்கு) என்னை நலிவதில் ஒப்பற்ற சக்தியையுடைய தென்றல் காற்றுக்கு. நலிவதில் இதற்குள்ள இந்த ஒப்பற்ற சக்தியை அறியாமையாலே எப்பெருமான் ஆறியிருக்கிறனோ? (284-ம் பக்கம் 84-வது ப்ரமாணத்தின்படி) தானும் ராமனாய் அவதரித்தபோது இக்காற்றின் சக்தியை அறிந்தவனாயிற்றே அவன் கால்பட ஆசைப்பட்டிருக்கும் நான் இக்காலாலே (காற்றாலே) துகையுண்பது தகுமோ? (இங்கு) "என்னை நலிவதற்கு இக்கால் வரும்" என்று அறிந்தால் என்னைத் தம்முடைய கால் கீழ் இட்டுக்கொள்ள

---

என்னுதல்; கங்குலேமவிடதென்னுதல. ஏமம" கட்டழகு, வலி, மயக்கம், இனிமை. அழகிய படுக்கை ஸ்த$_2$லமென்றபடி. அன்றிக்கே, q,r (வலியும்) என்றது - ஒருத்தர்க்கும் கிட்டப்போகாதவிடமாய் அத்தைப்பற்ற அருளிச்செயகிறர் (புகுந்து ஆஶ்வஸிப்பிப்பாரித்யாதி$_3$) புகுந்து ஆஶ்வஸிப்பிக்கை - தோழிமாராதல்; நாயகனுதல்.

s "இங்கிலக்காய் நானிருப்பேனே" என்றதுக்குத் தாத்பர்யம் (இது வருமென்றறிந்திருந்தால் இத்யாதி$_3$) t அன்றிக்கே, "நான்-இங்கிலககாய் இருப்பேனே" என்று

யிருந்தாலன்றோ இது வாய்மடிந்து போவது. (இலக்காய்) u ஸர்வஸாத$_4$ாரணமான வஸ்துவுக்கு நானொருத்தியும் இலக்காவதே! v தம்முடைய கரஸ்பர்ஶத்தாலே ஜீவித்திருக்குமது தவிர்ந்து அதுக்குப் போலியான இதுவந்து ஸ்பர்ஶிக்க, இன்னம் நான் ஜீவிப்பேன் என்றிருக்கிறாரோ? w தம் கைபார்த்திருக்கிற நான் இக்காலாலே அமுக்குண்ணக்கடவேனோ?

---

வேண்டாவோ? தாமும் நானும் சேர்ந்திருந்தாலன்றோ இக்கால் *(காற்று)* வலி அழிந்துபோகும். *(நான் இலக்காய்)* காதல் நோய்க்கு ஆட்பட்ட காதலிகள் அனைவரையும் நலியும் இக்காற்றுக்கு நான் ஒருத்தியே இலக்காகும்படியாயிற்றே. *(தென்றலுக்கு இலக்காய்)* "அணிமிகு தாமரைக் கையை அந்தோ அடிச்சியோம் தலைமிசை நீயணியாய்" [திருவாய் 10-3-5] என்கிறபடியே தம்முடைய கரஸ்பர்ஶத்தாலே உயிர் த$_4$ரிக்க வேண்டிய நான் அதற்குப் போலியான இக்காற்று வந்து ஸ்பர்ஶித்து, இழந்த அக்கரஸ்பர்ஶத்தை நினைவுபடுத்தி என்னை நலிய, அதற்குப் பின்னும் நான் உயிரோடிருப்பேன் என்று நினைத்திருக்கிறாரோ? தம் கைபார்த்திருக்கும் நான் இக்காலாலே அமுக்குண்பது தகுமோ? *(நான் இலக்காய் இருப்பேனே)* முன் எடுத்த ஸ்ரீராமாயண [கிஷ் 1-105] ஶ்லோகத்தின்படி இத்தென்றலுக்கு அவன் இலக்காகலாமேயொழிய நான் இலக்காகலாமோ? என்று கருத்து. அந்த ஶ்லோகத்தின் ஒவ்வொரு பத$_3$த்தின் கருத்தும் இனி விவரிக்கப்படுகிறது.

---

கூட்டித தாத்பர்யாந்தரம் (தாமும் நானுமாயித்யாதி$_3$) அத$_2$வா, கால்கீழே இட்டுக்கொண்டது-கொண்ட பூ$_3$ாதை$_4$ நிவ்ருத்தமாமோ என்கிற ஶங்கையிலேயாதல்.

u "நான்" என்றத்தையும் கூட்டித் தாத்பர்யம் (ஸர்வஸாத$_4$ாரணேத்யாதி$_3$) (ஸர்வஸாத$_4$ாரணம்) என்றது-விரஹிகளுக்கெல்லாமென்றபடி. v "தென்றலுக்கு - இலக்காய நானிருப்பேனே" என்று கூட்டித் தாத்பர்யம் (தம்முடைய இத்யாதி$_3$) "இருப்பேனே" என்கிற ஏகாரம்-பிரிநிலையிலே. w அன்றிக்கே, "இருப்பேனே" என்று ஸ்வரத்திலேயாக்கி, தாத்பர்யாந்தரம் (தம் கை இத்யாதி$_3$)



x 84. "पद्मसौगन्धिकवहं" (பத்$_3$மஸௌக$_3$ந்தி$_4$கவஹம்) கலம்பகன் சூடுவாரைப்போலே. "शिवं" (ஶிவம்) இதின்தனை நன்மையுடையாரொருவருமில்லை. இதுக்கு நன்மையென்னென்னில்; y "शोकविनाशनं" (ஶோகவிநாஶநம்) நம்மைச் சித்ரவத$_4$ம் பண்ணுது. ஶோகம் மறுவலிடாதபடி பண்ணும் போலேயிராநின்றது. 84. "धन्याः" (த$_4$ந்யா:) த$_4$நமுடையராயிருப்பார் க்ஷாமத்துக்கு அஞ்சார்களிறே. 84. "सेवन्ते" (ஸேவந்தே) அஞ்சாமையேயன்றிக்கே இத்தை அநுப$_4$விக்கைக்கு ஏகாந்தமான ஸ்த$_2$லம் தேடாநிற்பர்கள். 84. "पम्पोपवनमारुतं" (பம்போபவநமாருதம்) "ஆகரத்தில்

---

*(பத்$_3$மஸௌக$_3$ந்தி$_4$கவஹம்)* தாமரை, செங்கழுநீர்ப் பூக்களின் மணத்தைக்கொண்டுவருவது. இது கதம்பமாலை சூடிவருவது போலே உள்ளது. *(ஶிவம்)* மங்க$_3$ளமானது. தலைசிறந்த உபகாரத்தை எனக்கு விளைப்பது என்று கருத்து. அப்படி இது செய்த உபகாரம் என்ன? எனில் *(ஶோகவிநாஶநம்)* என்னை அழிப்பதன்மூலம் மறுபடியும் வராதபடி எனது வருத்தத்தை அடியோடு போக்குவது. இப்படி என்னைச் சித்ரவத$_4$ம் செய்யாமல் அழிப்பதன்மூலம் எனக்குச் சிறந்த உபகாரம் செய்யுமிதுவே பரமமங்க$_3$ளமானது என்று கருத்து. *(த$_4$ந்யா:)* செல்வமுடையவர்கள் பஞ்சத்துக்கு அஞ்சமாட்டார்களன்றோ. அதுபோல் இக்காற்றை அநுப$_4$விக்கக்கூடியவர்கள் அநுப$_4$வப் பஞ்சத்துக்கு அஞ்சமாட்டார்கள். *(ஸேவந்தே)* அநுப$_4$விக்கிறார்கள். நிகழ்கால ப்ரயோக$_3$த்தாலே இவ்வநுப$_4$வம் நித்யாநுப$_4$வமாய்ச் செல்லுகையாலே அநுப$_4$வப்பஞ்சத்துக்கு அஞ்சாமலிருப்பதோடன்றியில் இக்காற்றை அநுப$_4$விப்பதற்குரிய தனியிடங்களையும் தேடுவர்கள். *(பம்போபவநமாருதம்)* வெறும் தென்றல் காற்றே நெருப்புப்போல் கொளுத்துவதாகும். பம்பாஸரஸ்ஸின்

---

x "நான்" என்கையாலே - அவனன்றோ படுவானென்று விவக்ஷித்து அவர் காற்றுக்கு நோவுபடும்படியை அருளிச் செய்கிறார்—**84. "पद्मसौगन्धिकवहं" (பத்$_3$மஸௌக$_3$ந்தி$_4$கவஹம்)** இத்யாதி$_3$, (ஸௌக$_3$ந்தி$_4$கம்) — செங்கழுநீர். y (ஶோக

நெருப்பு'' என்னுமாபோலே. (இலக்காய்) ஏகலக்ஷ்யமாய். (நான்) z என்னையும் தாமாக நினைத்திருந்தாரோ? $z_2$ ''ஒரு கால் காணில் செய்வதென் ?'' என்றிருக்கிற நான். (இருப்பேனே) $z_3$ என்னையொழியவும் தமக்கு ஜீவிக்கலாமென்றிருக்கிருரோ ? இரேனிறே என்றபடி. 2.

### எட்டாம் திருமொழி — மூன்றும் பாட்டு

**ஒளிவண்ணம் வளைசிந்தை உறக்கத்தோ டிவையெல்லாம்**
**எளிமையா லிட்டென்னை ஈடழியப் போயினவால்**
**குளிரருவி வேங்கடத்துஎன் கோவிந்தன் குணம்பாடி**
**அளியத்த மேகங்காள்! ஆவிகாத் திருப்பேனே.**

---

சோலையிலிருந்துவரும் தென்றற்காற்றோ வெனில் அக்$_3$நிகுண்ட$_3$த்தின் நெருப்புப்போலே மிகவும் கொளுத்துவதாகும் என்று கருத்து. (இலக்காய்) ஒரே லக்ஷ்யமாய். (நான்) என்னையும் தம்மைப்போலே இதன் நலிவைத் தாங்கக்கூடியவள் என்று நினைக்கிருரோ? தென்றற்காற்றைக் கண்டால் என் செய்வதென்று நடுங்குகிறவளன்றோ நான். (இருப்பேனே) உயிர் த$_4$ரிக்கமாட்டேன் என்கை. நான் நலிவுபட்டுக்கொண்டே உயிர்த$_4$ரித்திருப்பேன் என்று அவர் நினைத்தாராகில் அது பொய்யாகப்போகிறது. நான் உயிர் த$_4$ரிக்கமாட்டேன். என்னை இழந்தபின்பு தாம் உயிர்வாழலாமென்று நினைத்திருக்கிருரோ? என்று கருத்து. 2.

---

விநாஶநம்) என்றது - முடிந்தால் ஶோகமில்லாமையாலே, முடித்துவிடுமென்றபடி. z கீழே, '' நான் '' என்றதுக்கு- விரஹிணிகளில் வ்யாவ்ருத்தி காட்டி, ஈச்வரனில் வ்யாவ்ருத்தி (என்னையுமித்யாதி$_3$) $z_2$ (கால்காணில்) சாடு. பிறர் காண்கை - அந்யருடைய த$_3$ர்ஶநம் த்$_4$வநி. $z_3$ ''இருப்பேனே'' என்றதுக்கு - இரேனென்றபடியாய், அத்தால் ப$_2$லித்த தாத்பர்யம் (என்னையொழியவுமித்யாதி$_3$.) இத்தால் - அவனிரானென்றபடி. 2.



பதவுரை:— **அளியத்த மேகங்காள்**— அருள்புரியக் கடவ மேக$_4$ங்களே! **ஒளி**— தே$_3$ஹத்தின் காந்தியும், **வண்ணம்**— நிறமும், **வளை** - வளைகளும், **சிந்தை**— நெஞ்சும் **உறக்கத்தோடு இவை எல்லாம்** — உறக்கமும் ஆகிய இவையெல்லாம், **எளிமையால்** — என்னுடைய தை$_3$ந்யமே காரணமாக, **என்னை இட்டு**— என்னை உபேக்ஷித்துவிட்டு, **ஈடு அழிய**— நான் ப$_2$லம் குலையும்படி, **போயின** — நீங்கிப்போய் விட்டன; **ஆல்** அந்தோ!; **குளிர் அருவி** — குளிர்ந்த அருவிகளையுடைய, **வேங்கடத்து**— திருமலையிலெழுந்தருளியிருக்கிற, **என் கோவிந்தன்**— எனது கண்ணபிரானுடைய, **குணம்**— திருக்கல்யாணகு$_3$ணங்களை, **பாடி**— வாயாரப் பாடிக்கொண்டு, (அந்தப் பாட்டே த$_4$ாரகமாக) **ஆவி**— பிராணனை, **காத்திருப்பேனே**— ரக்ஷித்திருக்க என்னுல் முடியுமோ?

**வ்யா:— மூன்றும் பாட்டு. (ஒளியித்யாதி$_3$) a ஓர் உபாதி$_4$யாலே பெற்றவை, $a_2$ ஸ்வாப$_4$ாவிகமானவை எல்லாம் போய்த்தன ; ப$_3$ாஹ்ய பரிகரங்களும். ஆந்தர பரிகரங்களும் போய்த்தன என்கிருள். புறம்புள்ள ஆப$_4$ரணமும் உள்ளுள்ள ஆப$_4$ரணமும் போய்த்தென்கிருள்.**

---

3. அவ:— எல்லாமிழந்த நிலையிலிருக்கும் நான் திருநாம ஸங்கீர்த்தனத்தாலே உயிர்த$_4$ரித்திருக்கமுடியுமோ? என்கிருள்.

வ்யா:—*(ஒளி வண்ணம் வளை சிந்தை உறக்கத்தோடு இவை எல்லாம் போயின)* அவன் என்னேடு கலந்த காரணத்திலுலே எனக்கு விளைந்த தே$_3$ஹகாந்தி, நிறம் முதலான மேனியின் சிறப்புக்களும், கழலாத வளைகளும், எனக்கு எப்போதுமே உள்ளதான நெஞ்சும், உறக்கமும் ஆகிய எல்லாமே என்னை விட்டு நீங்கிப்போய்விட்டன. எனக்குத் துணையாயிருந்த ஒளி வண்ணம் வளைகளாகிற வெளிச் சிறப்புகளும், சிந்தை

---

மூன்றும் பாட்டு. (ஒளியித்யாதி$_3$) a...$f_2$ ஒருபாதி$_4$யாலே இத்யாதி$_3$ வாக்யம் தொடங்கி மேலெல்லாம் ப$_4$ங்க்$_3$யந்தரேண விவரணங்கள். $a_2$ ஸ்வாப$_4$ாவிகமானவை-சிந்தை

b மெய்யிலாப$_4$ரணமும் c பொய்யிலாப$_4$ரணமுமிருக்கிறபடி. d அவனோடு கலந்து பெற்ற புகர். அதுக்காஶ்ரயமான நிறம், கழற்றிப்பூணும் ஆப$_4$ரணமும், கழற்றாதே கிடக்கும் ஆப$_4$ரணமும், நித்$_3$ரையோடேகூட, e (இவையெல்லாம்) f அவனுடைய உப$_4$யவிபூ$_4$தியில் பரப்போபாதியும் போருங் காணும் இவையும். (ஒளி, வண்ணம், வளை) இவை மெய்யே விட்டுப்போய்த்தன; f$_2$ உறக்கந்தானே கண்ணற்றுப் போய்த்தது. இவை இப்படி போகைக்கடியென்னென்னில்,- g (எளிமையால்) நான் எளிமைப்பட்டிருக்கையாலே போய்த்

யுறக்கங்களாகிற உள்சிறப்புகளும் நீங்கிவிட்டன என்கிறாள். ஒளி வண்ணம் வளைகளாகிற வெளியே உள்ள அணிகளும், சிந்தையுறக்கங்களாகிற உள்ளே உள்ள அணிகளும்போயின என்கிறாள். மெய்யான ஆத்மாவிலுள்ள ஆப$_4$ரணங்கள் சிந்தை யுறக்கங்கள். பொய்யான (நிலைநில்லாத) மெய்யில் (ஶரீரத்தில்) உள்ள ஆப$_4$ரணங்கள் ஒளி வண்ணம் வளைகள். *(ஒளி)* அவனோடு கலந்து பெற்ற தேஜஸ். *(வண்ணம்)* அதுக்கிருப்பிடமான நிறம். *(வளை)* இது கழற்றிப்பூணும் ஆப$_4$ரணம். ஒளி வண்ணம் சிந்தைகள் கழற்றாதே கிடக்கும் ஆப$_4$ரணங்கள். (*உறக்கத்தோடு*) தூக்கத்தோடே கூட. (இவையெல்லாம்) "எல்லாம்" என்றதாலே நான் இழந்தவை மற்றும் பலவும் உண்டு. அவை அவனுடைய உப$_4$யவிபூ$_4$திபோலே விரிந்து கிடக்கின்றன. ஒளி, வண்ணம், வளை ஆகியவை மெய்யிலிருந்து (ஶரீரத்திலிருந்து) மெய்யே (உண்மையாகவே) விட்டு நீங்கின. கண்ணுறக்கமும் கண்ணற்று (கருணையில்லாமல்) போயிற்று. இவை இப்படி நீங்குவதற்குக் காரணம் என்ன? எனில் (*எளிமையால்*) 'என்னுடைய எளிமையால்' என்றும்,

யுறக்கங்கள். b (மெய்) - ஆத்மா. c (பொய்) - ஶரீரம். a, d "ஒருபாதி$_4$யாலே" என்றத்தை விவரிக்கிறார் (அவனோடித்யாதி$_3$) ஜ்ஞாநப்ரஸரணத்$_3$வாரமாகையாலே அந்த:கரணத்தை ஆத்மபூ$_4$ஷணமென்கிறது. e, f "எல்லாம்" என்றதுக்குத் தாத்பர்யம் (அவனுடைய இத்யாதி$_3$) g "எளிமை" - தனிமை. "ஆல்" - அசை. g$_2$ "இட்டு"-



தன என்னுதல்; புல்லியாரிறே ஆபந்நரைக் கைவிடுவார். என்னெளிமையாலே என்னுதல்; தந்தாமுடைய புன்மையாலே என்னுதல். g$_2$ (இட்டு) புரிந்துபாராதே சில அசேதநங்களைப் பொகடுமாபோலே பொகட்டு. "ஒளி, வண்ணம், வளை" என்கிற இவை, "நாம் இவளுடனே கையும் மெய்யும் தீண்டிப்பரிமாறினோம்" என்னுமதின்றிக்கே போயின; உறக்கந்தானே, "நாம் கண்கலந்து பரிமாறினோம்" என்னுமதின்றிக்கே பொகட்டுப்போய்த்து. ஆகிலும், போகிறது கண்ணற்றுப்போய்த்து. h (ஈடழிய) அவன் பிரிகிறபோது பிரிவையுணர்த்தி, வருந்தனையும் த$_4$ரிக்கும்படி ஸ்மிதம் பண்ணியணைத்து, தன் செல்லாமை தோற்றவிறே போய்த்தது. i இவை அங்ஙனன்றிக்கே, 125. "[illegible]' (ஶைதி$_2$ல்யமுபயாந்த்யாஶா:) என்கிறபடியே

'கைவிட்டுப் போனவைகளுடைய புன்மையால்' என்றும் இரண்டு வகையாகவும் பொருள்கொள்ளலாம். எனது எளிய நிலையைப் பார்த்து என்னைக் கைவிட்டன; தம்முடைய புன்மைக் குணத்தாலே பேராபத்திலிருக்கும் என்னைக் கைவிட்டன என்று முறையே பொருள். (*என்னை இட்டு*) சில அசேதனப் பொருள்களைத் தூக்கி எறிவதுபோலே, திரும்பிப்பாராமல் என்னை வீசி எறிந்துபோயின. ஒளி, வண்ணம், வளை ஆகியவை "நாம் இவளுடனே கையும் மெய்யும் தீண்டிக் கலந்து பரிமாறினோம்" என்னும் நினைவுமின்றிக்கே போயின. கண்ணுறக்கமும் "நாம் கண்கலந்து பரிமாறினோம்" என்னும் நினைவும் இன்றிக்கே என்னை விட்டுப்போயிற்று. போனதும் கண்ணில்லாமல் (இரக்கமில்லாமல்) போயிற்று. (*ஈடழியப்போயின*) என் ப$_3$லத்தை அழித்துக்கொண்டு போயின அவன் என்னைப் பிரியும்போது, தான் பிரியப்போவதைச் சொல்லி, தான் வருமளவும் நான் உயிர்த$_4$ரிக்கும்படி புன்முறுவலோடு என்னை அணைத்து என்னை விட்டுப் பிரியத் தனக்கு மனமில்லாமை விளங்கும்படி பிரிவான். இவை அப்படியல்லாமல்,

பொகட்டு. h ஈடு-மிடுக்கு; "ஈடழிய" - நான் ப$_3$லமழிய என்றபடி. i (இவை அங்ஙனன்றிக்கே) என்றது—த$_4$ரிப்பிக்

சடக்கெனப் பிரிந்துகொடு நின்றன. (குளிரருவி இத்யாதி$_3$) இத்த$_3$ஶையில் j கு$_3$ணஜ்ஞாநத்தாலே த$_4$ரித்தல், கு$_3$ண கீர்த்தநத்தாலே த$_4$ரித்தல் செய்யலாமெனக்கு என்றிருக்கிருரோ? (குளிரருவி வேங்கடத்து) இத்தாபம் அத்தே$_3$ஶத்தை நிணைக்கத் தீருங்காணும். ஸகல தாபங்களையும் ஆற்றவல்ல தே$_3$ஶமாய்த்து. (என்) இப்போது வந்திலனேயாகிலும், முன்பு தன்னை எனக்காக்கிவைத்தவற்றை முந்துற முன்னம் தவிர்க்கவொண்ணுதிறே. (கோவிந்தன்) ஸர்வ ஸுலப$_4$னை நிலையைத் தவிர்க்கவொண்ணுதிறே. j$_2$ (குணம்

125. அநுராகே$_3$ண ஶைதி$_2$ல்யமஸ்மாஸு வ்ரஜிதே ஹரௌ।
ஶைதி$_2$ல்யமுபயாந்த்யாஶு கரேஷு வலயாந்யபி ॥
[வி பு 5-18-29]

[கண்ணன் நம்மைப் பிரிந்துசெல்லும்போது, அவனிடம் அன்பிஞலே நாம் மெலிவடைகிருேம். நம் கையிலிருக்கும் வளைகளும் உடனே *கழல்கின்றன*] என்கிறபடியே பிரிவதற்கு நேரம் பார்த்துக்கொண்டிருந்தவைபோலே உடனே விட்டுப் போயின. *(குளிரருவி...)* இந்நிலையில் தம்முடைய கு$_3$ணத்தை அநுஸந்தி$_4$த்தோ, கு$_3$ணத்தைச் சொல்லும் ‘கோ$_3$விந்த$_3$ன்’ முதலான திருநாமங்களைச் சொல்லியோ நான் உயிர்த$_4$ரித்திருப்பேன் என்று நினைத்திருக்கின்ருரோ? என்று கருத்து. *(குளிரருவி வேங்கடத்து)* என்னுடைய இந்தத் தாபமும் அவனுடைய குளிர்ந்த அருவிகளையுடைய திருமலையை நினைத்தவுடன் தீரும் கிடீர். எல்லாத் தாபங்களையும் ஆற்றவல்ல தி$_3$வ்யதே$_3$ஶமன்றே அது. *(என்)* இப்போது வராமல் என்னைத் தவிக்கவிடுகிருனும், முன்பு என்னேடு கலந்தபோது தன்னை எனக்காக்கி வைத்ததை இல்லைசெய்யமுடியாதே! ஆகையால் என் கோ$_3$விந்த$_3$னே அவன் என்கிருள். *(கோவிந்தன்)* அனைவர்க்கும் எளியன் என்பது தோற்ற கோ$_3$விந்த$_3$பட்டாபி$_4$ஷேகம் செய்து கொண்ட நிலையை மறைக்கவோ மறுக்கவோ முடியாதே. *(குணம்பாடி ஆவிகாத்திருப்பேனே)*

கைக்கு உடலன்றிக்கேயென்றபடி. j,j$_2$ “குணம்பாடி” என்று, கு$_3$ணகீர்த்தநம் சொல்லி என்றது கு$_3$ணஜ்ஞாநத்துக்கும்



பாடி) k 126. “सोऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा” (ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்$_3$ரஹ்மணு) என்கிறபடியே - அந்வயத்திலும் கு$_3$ணுநுப$_4$வமாகில் பண்ணுவது; பிரிந்தாலும் கு$_3$ணஜ்ஞாநத்தாலே த$_4$ரிக்கலாமென்றிருக்கிருரோ? (அளியத்த மேகங்காள்) நீங்கள் முன்னம் அவனைப்போலேயாகாதொழியப் பெற்றேன். அவன் பொகட்டுப்போன ஸமயத்திலே முகங்காட்டுவதே நீங்கள். l (ஆவிகாத்திருப்பேனே) m ப்ராணநாத$_2$ன் நானே? n தன்னை அநுப$_4$விக்குமதொழிய ப்ராணரக்ஷணமும் எனக்குப் பணியோ? o ஆனைப்பண்ணைக்

126. ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந்
ஸஹ ப்$_3$ரஹ்மணு விபஶ்சிதா [தை-ஆ 1.2]

[முக்தன் எல்லாக் கல்யாணகு$_3$ணங்களையும். ஸர்வஜ்ஞனை ப்$_3$ரஹ்மத்துடன் கூட அனுப$_4$விக்கிருன்.] என்கிறபடியே அவனை த்$_4$யானிப்பவர்கள் அவனேடு த்$_4$யானநிலையில் கூடியிருக்கும்போது கு$_3$ணுநுப$_4$வமே செய்வதுபோலே அவனைப் பிரிந்திருக்கும்போதும் கு$_3$ணஜ்ஞானத்தாலும் கு$_3$ணஸங்கீர்த்தனத்தாலும் உயிர்த$_4$ரித்திருப்பேன் என்று நினைத்திருக்கிருரோ? “*ஆஶம்ஸேயம்*” [ரா-ஸு 27-14] என்னும் ஶ்லோகத்தில் “*தஸ்மிம்ஶ்ச ப$_3$ஹவோ கு$_3$ணு:*” என்று கு$_3$ணஜ்ஞானத்தாலே த$_4$ரித்திருந்த ஸீதாபிராட்டியைப்போலே என்னையும் நினைத்திருக்கிருரோ? *(அளியத்த மேகங்காள்)* அருள்புரியும் மேக$_4$ங்களே! என்னை விட்டுப் பிரிந்த அவனைப்போலவும், என்னைக் கைவிட்டுப் போன ஒளிவண்ணம் முதலானவைபோலவும் அல்லாமல் நீங்கள் கருணையுள்ளவர்களாயிருப்பது என்பா$_4$க்$_3$யமன்றே என்கிருள். அவன் கைவிட்டுப்போந்த ஆபத்துக்காலத்தில் முகங்காட்டும் நீங்கள் பரமதா$_4$ர்மிகரன்றே! *(ஆவி காத்திருப்பேனே)* உயிர் த$_4$ரித்திருப்பேனே? என் ப்ராணனுக்கு நானே நாத$_2$ன்? என்

உபலக்ஷணமாக்கி, (கு$_3$ணஜ்ஞாநத்தாலே த$_4$ரித்தல்) என்றது; “आशंसेयं” (ஆஶம்ஸேயம்) இத்யாதி$_3$. k கு$_3$ணுநுப$_4$வம் பண்ணித$_4$ரிக்கைக்கு ப்ரஸக்தி ஏதென்ன (ஸோஶ்நுதே இத்யாதி$_3$) l, n தாத்பர்யாந்தரம் (தன்னையநுப$_4$விக்குமதொழிய இத்யாதி$_3$) l “ஆவி காத்திருப்பேனே” என்றதுக்கு மூன்று தாத்பர்யமுண்டு; m, n, o நிரூபித்தல் (ப்ராணநாத$_2$னித்யாதி$_3$) o, p (ஆனைப்பண்) என்ற வாக்

குதிரை சுமக்கவற்ருே? p ஒரு ஸர்வஶக்திதொழிலை என்ஞலே செய்யலாமோ? 3.

### எட்டாம் திருமொழி— நாலாம் பாட்டு

மின்ஞகத் தெழுகின்ற மேகங்காள்! வேங்கடத்துத்
தன்ஞகத் திருமங்கை தங்கியசீர் மார்வர்க்கு
என்ஞகத் திளங்கொங்கை விரும்பித்தாம் நாள்தோறும்
பொன்ஞகம் புல்குதற்குஎன் புரிவுடைமை செப்புமினே.

பதவுரை:— **ஆகத்து மின் எழுகின்ற மேகங்காள்**—சரீரத்திலே மின்னல் தோன்றப்பெற்ற மேக$_4$ங்களே!, **என் ஆகத்து**—என் மார்விலுண்டான, **இளம் கொங்கை**—இள முலைகளை, **தாம் விரும்பி**—அவ்வெம்பெருமான் விரும்பி, **பொன் ஆகம் புல்குதற்கு**— அழகிய தம் மார்வோடே அணையவேணுமென்னும் விஷயத்திலே, **நாள் தோறும்**—நித்யமும், **என் புரிவுடைமை** — எனக்கு ஆசையிருக்கிறபடியை, **வேங்கடத்து**—திருமலையிலே, **தன் ஆகம்**—தனது திருமேனியில், **திருமங்கை தங்கிய சீர் மார்வர்க்கு**—பிராட்டி எழுந்தருளியிருக்கப்பெற்ற திருமார்பு படைத்த பெருமையுடையவருக்கு, **செப்புமின்**—சொல்லுங்கள்.

---

உயிரை ரக்ஷிக்கவேண்டிய பொறுப்பு ப்ராணநாத$_2$ஞன அவனுடையதன்ருே. அவனை அநுப$_4$விப்பதைத் தவிர, என் உயிரை ரக்ஷித்துக்கொள்வதும் என் கார்யமாகுமோ? ஆனைக்குரிய அலங்காரங்கள், கட்டுகள் முதலானவற்றைக் குதிரையால் சுமக்கமுடியுமோ? ஒரு ஸர்வஶக்தியின் தொழிலாகிற எனதாவி காக்கும் கார்யத்தை என்ஞலே செய்யமுடியுமோ? என்று கருத்து. 8.

---

யத்துக்கும் (ஒரு ஸர்வஶக்தி) என்ற வாக்யத்துக்கும் சேர்த்தி. n இரண்டாம் தாத்பர்யம் (தன்னையநுப$_4$விக்கும் இத்யாதி$_3$) o மூன்ருவது (ஆனைப்பண் இத்யாதி$_3$) ஆனைப் பண்) - ஆனை சுமக்கிற அதின் ஶவரணை. அதாவது - ஆனைச்சோட்டைக் குதிரை சுமக்க மாட்டாதென்றபடி. 3.



வ்யா:— நாலாம் பாட்டு. a (மின்ஞகத்தித்யாதி$_3$) அவனைப் பிரிந்திருக்கிற ஸமயத்திலே மறக்கவொட்டாதே, அவன் வடிவுக்குப் போலியான உங்கள் வடிவைக்காட்டி அவனை ஸ்மரிப்பிக்கிற நீங்கள், வல்லிகோளாகில் நானும் அவனும் சேரும்படி காரியம் பாரிகோள். மேக$_4$ங்களானவை தம்மில் உரோசினவாறே நடுவேயெழுவதொன்றிறே மின்ஞவது. b மின்ஞனது ஆகத்திலே எழுகிற மேக$_4$ங்களென்று

---

4. *அவ:*— புருஷகாரமான பிராட்டியை முன்னிட்டுக் கொண்டு தன் விருப்பத்தைத் திருவேங்கடத்தானிடம் விண்ணப்பிக்கும்படி கோருகிருள்.

*வ்யா:—(மின்ஞகத் தெழுகின்ற மேகங்காள்) ''நீலதோயத$_3$மத்$_4$யஸ்த$_2$ா வித்$_3$யுல்லேகே$_2$வ ப$_4$ாஸ்வரா''* [ தை-நா 11 ] [நீலமேக$_4$முட்கொண்ட மின்னல்கொடிபோல் ஒளிவிடுவது பரமாத்மாவின் திருமேனி] ''நீலமுண்ட மின்னன்னமேனிப் பெருமான்'' [திருவிருத்தம் 29] என்று உப$_4$யவேத$_3$ங்களிலும் ஓதியபடி அவன் திருமேனியை ஒத்திருக்கையாலே, அவனைப் பிரிந்திருக்கிற காலத்திலே நான் அவனை மறக்க இயலாதபடி அவன் வடிவையொத்த வடிவைக்காட்டி அவனை நினைக்கச் செய்யும் நீங்கள், முடியுமாஞல் நானும் அவனும் கூடும்படி முயற்சி செய்யவேண்டும் என்று கருத்து. மேக$_4$ங்கள் ஒன்ருேடொன்று மோதும்போது நடுவே எழுவதன்ருே மின்னல். அதையே "ஆகத்தெழுகின்ற" என்கிருள். அன்றிக்கே "மின்நாகத்தெழுகின்ற" என்று பத$_3$ம்பிரித்து 'நாகம்' என்னும் சொல் ஆகாயத்தைக் குறிக்குமாகையாலே, 'மின்னல் ஆகாயத்திலே தோற்றும்படி எழுகிற மேக$_4$ங்களே' என்றும் பொருள் கொள்ளலாம். மின்னல்போன்ற பெரியபிராட்டியாரைத் தன்

---

நாலாம் பாட்டு. (மின்ஞகத்தித்யாதி$_3$) a,b நாமைகதே$_3$ஶே நாமக்$_3$ரஹணமென்கிற ந்யாயத்தாலே "ஆகாயம்" என்னவேண்டினவிடத்திலே "ஆகம்" என்று கடைக்குறைத்தலாய் ஆகாஶமென்னும் பேர்பெற்றுக் கிடக்கிறது; ஆகையாலே "மின்ஞனது ஆகத்திலே" என்று கூட்டுவது;

தல்; c மின்னுனது-c$_2$ ஆகாஶத்திலே தோற்றும்படி எழுகிற மேக$_4$ங்களென்னுதல். d தன்வடிவில் இருட்சிக்குக் கைவிளக்குப் பிடித்துக் காட்டுவாரைப்போலே, மின்னிக்கொண்டு ஸஞ்சரியாநின்றனவாய்த்து. (மேகங்காள்) நடுவே பெரியவுடையார் வந்து தோற்றினாற்போலே இருந்ததீ அவனைப் பிரிந்து நோவுபடுகிற ஸமயத்திலே நீங்கள் வந்து தோற்றின படியும். (வேங்கடத்து) கடல்கடக்கவும் விரோதி$_4$போக்கவும் வேண்டாவே உங்களுக்கு; கலங்காப் பெருநகரத் தேறப்போகச் சொல்லுகிறேனுமன்றே. e (தன்னாகத் திருமங்கை தங்கியசீர் மார்வர்க்கு) f அணைந்தல்லது த$_4$ரிக்க

ஆகத்தில் (திருமார்பில்) அவன் கொண்டிருப்பதுபோலே இவையும் மின்னாகத் தெழுகின்ற மாமுகிலாய் இருக்கிறபடி. தன்னுடைய இருளன்ன மாமேனியை, கைவிளக்குப்போல் ஒளியுடையவளாய் திருமார்பில் எழுந்தருளியிருக்கும் பிராட்டியைக்கொண்டு காட்டித்தரும் அவனைப்போலே, இவையும் மின்னலாகிற கைவிளக்கைக்கொண்டு தம் இருண்டமேனியைக் காட்டிக்கொண்டு ஸஞ்சரிக்கின்றன. (மேகங்காள்) ஸீதாபிராட்டியை ராவணன் அபஹரித்துக் கொண்டுபோன பேராபத்தின்போது நடுவழியிலே பெரியவுடையார் (ஜடாயு) வந்து தோன்றியதுபோலேயிருந்தது, அவனைப் பிரிந்து நான் வருந்தும் இப்போது நீங்கள் வந்து தோன்றியது என்று கருத்து. (வேங்கடத்து) அநுமனைப்போலே கடலைக்கடக்கவோ விரோதி$_4$களை அழிக்கவோ வேண்டாவே உங்களுக்கு. ''கலங்காப்பெருநகரம்'' [மூன்-திருவ 51] எனப்படும் ஸ்ரீவைகுண்ட$_2$த்துக்கும் உங்களை நான் தூது அனுப்பவில்லையே. உங்களால் மிக எளிதில் அடையக்கூடிய மங்குல்தோய் சென்னி வடவேங்கடத்துக்கன்றோ உங்களைத் தூது அனுப்புகிறேன். (தன்னாகத் திருமங்கை தங்கிய சீர்மார்பர்க்கு) அணைந்தல்லது

a, c இரண்டாமர்த்த$_2$த்துக்கு ''மின் நாகத்தெழுகின்ற'' என்று பத$_3$பே$_4$த$_3$ம் கொள்வது; c$_2$ ''நாகம்'' - ஆகாஶம். d இது சொன்னதுக்குத் தாத்பர்யம் (தன் வடிவிலித்யாதி$_3$) e, f, g கீழ்-தாத்பர்யம்; e, h மேல்—ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம் அருளிச்செய்கிறார்



வொண்ணாத வடிவு படைத்தவர்க்கு. g பிராட்டி ''அகலகில்லேனிறையும்'' என்று விரும்பி நித்யவாஸம் பண்ணும் வீறுடைய மார்வு படைத்தவர்க்கு. h தான் உளளாகைக்காகவும், தன் ஸத்தை பெறுகைக்காகவும் பிராட்டி நித்யவாஸம் பண்ணும் மார்வு படைத்தவர்க்கு. i ''அளவுடையராயிருப்பார் அணைந்தல்லது த$_4$ரியாத உடம்பை, புதியராய் ஆசைப்பட்டவர்களைப் போகவிட்டால் ஆற்றப் போமோ?'' என்று சொல்லுங்கோள். j எனக்குப் புருஷகாரமில்லாமல் இழக்கிறேனன்றே; k ப்ரணயகதை$_2$ இன்றிருந்து

உயிர்த$_4$ரிக்கவொண்ணாத வடிவையுடையவனாகையாலே உங்களைத் தூதுவிடுகிறேன் என்கிறாள். பெரியபிராட்டியார் ''அகலகில்லேன் இறையும்'' [திருவாய் 6-10-10] என்று அவன் திருமார்பில் இருக்கும்போதே 'என் வருகிறதோ!' என்று கலங்கி அநுஸந்தி$_4$த்துக்கொண்டு விரும்பி என்றும் வாழும் சிறப்புடைய திருமார்பை உடையவருக்கு. ஆண்டாளைப் போன்று அவன் மார்பை அணைய ஆசைப்படும் நாயகிகளைப் புருஷகாரஞ்செய்து சேரவிட்டு ஸத்தை பெறுவிக்கவும், தன் ஸத்தை பெறுகைக்காகவும் பிராட்டி எப்போதும் வாழும் திருமார்புபடைத்தவர்க்கு என்று கருத்து. ''பேரளவுடையவரான பெரியபிராட்டியார் அணைந்தல்லது உயிர்த$_4$ரிக்கமுடியாத திருமேனியை, அநுப$_4$வத்தில் புதியவளாய் ஆசைப்பட்ட எனக்கு அளிக்காமல் கைவிட்டால் என்னால் பொறுக்க முடியுமோ?'' என்று சொல்லுங்கள். புருஷகாரமாகப் பெரிய

(தான் உளளாகைக்கித்யாதி$_3$) e, f ''திருமங்கை தங்குகிற-மார்வு'' என்றபோதே அணைந்தல்லது த$_4$ரிக்கவொண்ணாதென்னுதல்; அன்றிக்கே, ''சீர்'' என்றதுக்குத் தாத்பர்யமாதல். g விவரணம் (பிராட்டியித்யாதி$_3$) e, i, j, k ''திருமங்கை-சீர்-மார்வர்க்கு'' என்றதுக்கு மூன்று தாத்பர்யம் (அளவுடையார் இத்யாதி$_3$ வாக்யத்ரயமும்) (புதியராயாசைப் பட்டவர்களைப் போகவிட்டால்) என்றது - ஸம்ஶ்லேஷ ரஸமறியாமல் ஆசைப்பட்டவர்கள் அது கிடையாவிட்டால் ஆறியிருக்கக்கூடும், ரஸமறிந்த எனக்கு அவர்களைப்

**சிலர் ஓதுவிக்கவேண்டாவே தமக்கு.** l (என்னுகத் திளங்கொங்கை விரும்பி) **பிராட்டி முலையெழுந்தாற்போலேயோ நான் முலையெழுந்தபடி? 14. "तत्तस्य सदृशं भवेत्" (தத் தஸ்ய ஸத்$_{3}$ருஶம் ப$_{4}$வேத்) என்று ஆறியிருக்கலாம்படியோ நான் முலையெழுந்தபடி ?** m (இளங்கொங்கை) $m_2$ **சொற்கேளா ப்ரஜைகளைப் போலேயாய்த்து முலைகளின்படி. "விஷயத்தைக் காட்டுகிறது" என்றால் ஆறியிருக்கமாட்டாதவை. "என்கொங்கை கிளர்ந்து குமைத்து" என்னக்கடவதிறே.** (இளங்கொங்கை விரும்பித்தாம்) n **127. "गात्रैः शोकाभिकर्शितैः। संस्पृशेयं" (க$_{3}$ாத்ரைஶ்ஶோகாபி$_{4}$கர்ஶிதை: ஸம்ஸ்ப்ருஶேயம்)**

---

பிராட்டியார் திருமார்பிலேயே இருக்கும்போது நான் அவனைப் பெறாமல் இழக்கமுடியுமோ? திருமங்கையை மார்பிலேயே இருத்தி அணைத்திருப்பவனாகையாலே, காதல் இலக்கியத்தை இன்று சிலர் ஓதுவிக்கவேண்டியதில்லையே உமக்கு என்று சொல்லுங்கள் என்று கருத்து. *(என்னுகத்திளங்கொங்கை விரும்பி)* பெரியபிராட்டியார் முதியவளாகையாலே அவளுடையது முதுகொங்கை. என்னுடைய இளங்கொங்கை அவளுடையதைக் காட்டிலும் சிறப்புற்றது என்று கருத்து. [34-ம் பக்கம் 14-வது ப்ரமாணத்தின்படி] சீதையைப்போலே பொறுத்திருக்கும்படியோ என்கொங்கை இருப்பது? *(இளங்கொங்கை)* தாய் சொற்கேளாத குழந்தைகளைப்போலேயுள்ளன என் முலைகள். "அவனது திருமார்பில் சிறிது பொறுத்து அணையலாம்" என்றால் பொறுத்திருக்கமாட்டாதவை. "என்கொங்கை கிளர்ந்து குமைத்துக் குதுகலித்து ஆவியை ஆகுலஞ்செய்யும்" [நாச்-திரு 5-7] என்று இவளே அருளிச்செய்தாளன்றோ. *(இளங்கொங்கை விரும்பித் தாம்)*

---

போலே ஆறியிருக்கப்போமோ என்றபடி. l "ஆகம்"- உடம்பு. m "இளங்கொங்கை" - ஆசைப்பட்ட கொங்கை. "இளங்கொங்கை" என்று-தன்னைப்பற்ற முலைக்குண்டான வ்யாவ்ருத்தி. m, n "இளங்கொங்கை" என்று - சொற்கேளாத ப்ரஜை என்றதே, இப்படிக் கூடுமோ, அசேதநமன்றோவென்ன அருளிச்செய்கிறார் **(க$_{3}$ாத்ரைரித்யாதி$_{3}$)**



**என்னுமாபோலே** - o **ஒருவர் பட்டினிவிட ஒருவர் ஜீவிக்குமாபோலே ஆகவொண்ணாது; விடாய்த்த இக்கரணங்களாலே நான் அணையும்படி பண்ணு.** p (நாடோறும்) **காலமெல்லாம்.** q **ஆசைப்படுகிறபோதே. காலமெல்லாம் அநுப$_{4}$விக்க வேணுமென்று ஆசைப்படும்படியிருக்கிறது காணும் விஷயந்தான்.** r [(தன்னுகத் திருமங்கை தங்கியசீர் மார்வர்க்கு (பொன்னுகமுண்டு - வீறுடைய ஆகம்) என்னுகத் திளங்

---

**127. "யத$_{2}$ா தம் புருஷவ்யாக்$_{4}$ரம்**
**க$_{3}$ாத்ரை: ஶோகாபி$_{4}$கர்ஶிதை: ।**
**ஸம்ஸ்ப்ருஶேயம் ஸகாமாऽஹம் தத$_{2}$ா குரு த$_{3}$யாம் மயி॥**
*[ரா-ஸு 40-3]*

[துன்பத்தாலே வாடியிருக்கும் என் அவயவங்களாலே நான் அந்த நரஶ்ரேஷ்ட$_{2}$ரான ராமபிரானை ஆசையுடன் தொடும்படியாக நீ என்னிடம் அருள்புரியவேண்டும்.] என்று ஸீதாபிராட்டி அருளிச்செய்ததுபோலே, "என்கொங்கைகள் இரண்டுமே சேதன ஸமாதி$_{4}$யாலே அவன் திருமார்பை அணைய விரும்பியிருப்பவையாகையாலே, அவையிரண்டும் அணைய வேண்டும். ஒருவர் பட்டினி கிடக்க, ஒருவர் வயிறுபுடைக்க உண்பதுபோலே, இவ்வுடம்பு அவனை அணையாமல் பட்டினி கிடந்து உயிர்விட, மறுபிறவியெடுத்து அவ்வுடம்போடு அணையும் நிலையும் நேரலாகாது. ஆசைப்பட்ட இக்கொங்கைகளோடே நான் அவனை அணையும்படி செய்யுங்கள்" என்கிறாள். *(நாள் தோறும்)* எல்லாக்காலமும். ஆசைப்படுகிறபோதே, எல்லாக்காலமும் அநுப$_{4}$விக்கவேணும் என்று ஆசைப்படும்படியிருக்கிறதன்றோ இவ்விஷயம். "இளங்கொங்கை தாம் விரும்பி" என்றதற்கு "இளமுலைகளை எம்பெருமான் விரும்பி" என்று தொடங்கிப் பதவுரையில் காட்டியதுபோலேயும் பொருள்கொள்ளலாம். *(தன்னுகத் திருமங்கை தங்கிய சீர்மார்வர்க்கு என்னுகத்திளங் கொங்கை தாம் விரும்பி நாள்தோறும் பொன்னுகம் புல்குதற்கு என் புரிவுடைமை)* இங்கு பொன்னுகம் என்றது சிறப்புடைய

---

n,o இதுக்கர்த்த$_{2}$ம் (ஒருவர் பட்டினியித்யாதி$_{3}$) $r_2$ "புல்குதல்"- தழுவுதல். $r_3$ "புரிவு"-விருப்பம் p, $r_3$, q "புல்குதற்குப் புரிவுடைமை" என்றாற்போராதோ, "நாடோறும்" என்ன

கொங்கை தாம் விரும்பி - நாள்தோறும் - பொன்னுகம் $r_2$ புல்குதற்கு என் $r_3$புரிவுடைமை] - s நினைவாலே த$_4$ரிக்க வல்லவளல்லளாய்த்து இவள். (என் புரிவுடைமை) தாமும் நானுமாய்க் கலந்திருந்தபோது தம் புரிவுடைமையேயிறே கேட்டுப் போந்தது. t ஒருதலையில் ஆசையேயாய்த்துக் கேட்டுப் போந்தது. இப்போது மற்றைப்படியேயாய், நான் விரும்புகிறபடியைச் சொல்லுங்கோள். u ரக்ஷ்யரக்ஷகபா$_4$வம் மாருடிற்றென்று சொல்லுங்கோள். v '' தம் ஸ்வரூபமும் என் ஸ்வரூபமும் அழிந்தது'' என்று சொல்லுங்கோள்.

---

திருமார்பு எனப் பொருள்படும். ''அவனுடைய பொன்னுகத்தை அணைவதற்கு என் ஆசையைக் கூறுங்கள்'' என்று சொல்லுகையாலே, ஏற்கனவே அவனோடு கலந்த அந்த நினைவாலே உயிர் த$_4$ரிக்கக்கூடியவளல்லள் இவள் என்று விளங்குகிறது. (என் *புரிவுடைமை*) அவனோடு கலந்திருந்தபோது புருஷோத்தமனுகையாலே அவன் தன் ஆசையைச் சொல்ல, இவள் தன் பெண்மைக்குச் சேரக் கேட்டுப்போம்படியே இருந்தது. ஸ்வதந்த்ரனுன ஆண்மகனின் ஆசையையே பரதந்த்ரையாய், உத்தமநாயகியான இவள் மௌனமாக இருந்து கேட்டுப் போந்தாள். இப்போது பிரிவுத் துன்பத்தாலே பெண்மைக்குப் பொருந்தாதபடி தூதுவிடுதல் முதலான அதிப்ரவ்ருத்திகள் செய்யும் நிலை விளைந்துவிட்டபடியால், ''என் ஆசையை அவனுக்குச் சொல்லுங்கள்'' என்கிருள். உடையவன் உடைமையைப் பெற ஆசைப்படலாமேயொழிய உடைமை உடையவனைப் பெற ஆசைப்படுவது தகாது. இப்போது உடைமை உடையவனை அடைய ஆசைப்படத் தொடங்கிவிட்டபடியால்

---

வேணுமோவென்ன அருளிச்செய்கிருர் (ஆசைப்படுகிற போதே இத்யாதி$_3$) s (நினைவாலே) என்றது - அத்தலையில் நினைவாலே என்றபடி.

t (ஒரு தலையிலாசை) - ஈஶ்வரனுடைய ஆசையென்றபடி. $r_3$,u ''என்புரிவுடைமை'' என்றதுக்கு ஸ்வாபதே$_3$ஶத்திலே தாத்பர்யாந்தரம் (ரக்ஷ்ய ரக்ஷகேத்யாதி$_3$) v விவரணம்



w ''தான் நினைத்துப் பெறுமதுவும் ஸ்வரூபஹாநி'' என்று போலே காணும் இவள்தான் நினைத்திருப்பது. (செப்புமினே) நந்தாமுக்கு இல்லாதவை கேட்டறிய வேணுமிறே; x நந்தலையில் குறைதீர அறிவித்துப் போருங்கோள். 4.

எட்டாம் திருமொழி - ஐந்தாம் பாட்டு

வான்கொண்டு கிளர்ந்தெழுந்த மாமுகில்காள்! வேங்கடத்துத்
தேன்கொண்ட மலர்சிதறத் திரண்டேறிப் பொழிவீர்காள்!
ஊன்கொண்ட வள்ளுகிரால் இரணியனை யுடலிடந்தான்
தான்கொண்ட சரிவளைகள் தருமாகில் சாற்றுமினே.

---

'ரக்ஷ்யரக்ஷகபா$_4$வம் மாருடிப்போயிற்று' என்றும், 'நம் இருவர் ஸ்வரூபமும் அழிந்தது' என்றும் சொல்லுங்கள் என்கிருள். ''தான் அவனை ஆசைப்பட்டு தூதுவிடுதல் முதலான செயலைச் செய்து அவனைப் பெறுவதும் ஸ்வரூபத்துக்குத் தகாது'' என்றல்லவோ இவள்தான் நினைத்திருப்பது. (செப்புமினே) தன்னிடம் இல்லாத பெருங்காதல் என்னிடம் இருப்பதை உங்களிடமிருந்து அவன் கேட்டே அறியவேணும் என்று கருத்து. '' தே$_3$ஶிகாஸ்தத்ர தூ$_3$தா: '' [தாத்பர்யரத்னுவளி 3] [தூதுவிடப்படும் மேக$_4$ங்கள் முதலானவை ஸ்வாபதே$_3$ஶத்தில் ஆசார்யர்களைக் குறிப்பவை] என்கிறபடியே புருஷகாரபூ$_4$தர்களைப் பார்த்து 'நாம் அவனோடு சேராமலிருக்கும் குறைதீர நீங்கள் நம் நிலையை அவனுக்கு அறிவியுங்கள்' என்கிருள். 4.

---

(தம் ஸ்வரூபமித்யாதி$_3$) w இத்தால் தாத்பர்யம் (தான் நினைத்தித்யாதி$_3$) x தாத்பர்யாந்தரம் (நந்தலையிலித்யாதி$_3$)

''மின்னுகத்தெழுகின்ற மேகங்காள்-என்னுகத் திளங்கொங்கையை - தாம் - விரும்பி - 'என் பொன்னுசத்தோடே அவன் புல்கவேணும்' என்று நாடோறுமுண்டான என் புரிவுடைமையை - வேங்கடத்துத் தன்னுகத் திருமங்கை தங்கிய சீர்மார்வர்க்கு-செப்புமின்'' இத்யந்வய:. ''விரும்பி''- கொங்கையை ஆசைப்பட்டு. 4.

**பதவுரை:—** **வேங்கடத்து** — திருமலையிலே, **தேன் கொண்ட மலர் சிதற** — தேன் நிறைந்துள்ள புஷ்பங்கள் சிதறும்படி, **திரண்டு ஏறி பொழிவீர்காள்** — திரள்திரளாக ஆகாயத்திலேறி மழையைப் பொழிகின்றவையாயும், **வான் கொண்டு கிளர்ந்து எழுந்த** — ஆகாயத்தைக் கப3ளீகரித்துக்கொண்டு ஓங்கிக் கிளம்புகின்றவையாயுமுள்ள, **மாமுகில்காள்!** — காளமேக4ங்களே! **ஊன் கொண்ட வள் உகிரால்** — தசைப்பற்றுள்ளவையாய், கூர்மையுடையவையான நகங்களாலே, **இரணியனை உடல் இடந்தான் தான்** — ஹிரண்யாஸுரனுடைய உடலைப்பிளந்தெறிந்த பெருமான், **கொண்ட** — என்னிடத்துக் கொள்ளை கொண்டுபோன, **சரி வளைகள்** — கைவளைகளை, **தரும் ஆகில்** — திருப்பிக்கொடுப்பதாகவிருந்தால், **சாற்றுமின்** — (எனது அவஸ்தை2யை அவர்க்குத்) தெரிவியுங்கள்.

**வ்யா:— அஞ்சாம் பாட்டு.** (வான்கொண்டு) **தங்களுக்கு வாஸஸ்த2ாநமறும்படி வந்து தோற்றுநின்றன. நம் குடியிருப்பென்று பரிஹரிக்க அறிகிறனவில்லை.** a **"அபரிச்சி2ந்நமாயிருக்கும் ஆகாஶம்" என்றிறே ப்ரஸித்3தி4;**

---

5. *அவ:*— அடியார்களின் விரோதி4யைப் போக்குமவனிடம் தன் நிலையை விண்ணப்பிக்கும்படி கூறுகிறாள்.

*வ்யா :—* (*வான்கொண்டு கிளர்ந்தெழுந்த மாமுகில்காள்*) தங்களுடைய இருப்பிடமான ஆகாயத்தை விழுங்கிக்கொண்டு கிளர்ந்தெழுகின்ற மேக4ங்களே! நாம் இருக்குமிடமாயிற்றே என்று பாராமல் ஆகாயம் முழுவதையும் ஆக்ரமித்தபடி.

---

அஞ்சாம் பாட்டு. (வான்கொண்டு இத்யாதி3) a"கொண்டு" என்று அக4டிதத்தைச் செய்தாற்போலே சொல்லுகைக்கு, ஆகாஶத்துக்கு அதிஶயம் ஏதென்ன அருளிச்செய்கிறார் (அபரிச்சி2ந்நம் இத்யாதி3) b,b2 (ஆகாஶத்தை, க்2ரஸித்துக்கொண்டு) — விழுங்கிக்கொண்டு என்றபடி.



b **அத்தை ப்ரத2ம பரிஸ்பந்த3த்தாலே** b2 **க்3ரஸித்துக்கொண்டு பின்னையும் அதினளவல்லாதபடியாகக் கிளரா நின்றதாய்த்து.** c **இவற்றின் ஒருமைப்பாடிருக்கிறபடி. இவ்வளவன்றென்று தோற்றுநின்றன வாய்த்து.** (வேங்கடத்து இத்யாதி3) **நல்லத்தை அழிக்கிறவித்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? நானும் அவனும் சேரும்படி காரியம் பாரிகோள் வல்லிகோளாகில். நீங்களெல்லாம் கூடித்திரண்டு பெரிய கிளர்த்தியோடே பூக்களழியக் காரியம் பார்க்கிறிகோளித்தனையிறே; இத்தால் எனக்கென்ன ப்ரயோஜநமுண்டு?** d **ஒரு மாலை அவனோடே சேரும்வழி உண்டாகில் பாரிகோள். தேன் மிக்கிருந்துள்ள மலர்களானவை சிதறும்படி திரண்டேறி வர்ஷிக்கிற நீங்கள்.** e **என் விரோதி4யை நீங்கள்**

---

"ஆகாயம் அளவற்றது" என்று ப்ரஸித்34மன்றோ; அத்தகைய ஆகாயத்தைத் தோன்றிய கணத்திலேயே விழுங்கிக்கொண்டு தோன்றி, பிறகு அதையும் விஞ்சிக் கிளர்ந்தெழுந்தன இம்மேக4ங்கள். இச்செயலைச் செய்யும்போது மேக4ங்கள் அனைத்துமே ஒருமைப்பாட்டுடன் தொழில்புரிகின்றன. இவ்வாகாயமும் இவற்றுக்கு இடம் போராது என்று எண்ணும்படி கிளர்ந்தெழுகின்றன. (*வேங்கடத்துத் தேன்கொண்ட மலர்சிதறத் திரண்டேறிப் பொழிவீர்காள்*) தேன்கொண்ட மலர்களாகிற நல்ல வஸ்துக்களைச் சிதறச்செய்வதால் என்ன பயன்? நானும் அவனும் சேரும்படி தூது சொன்னால் பயனுண்டு என்று கருத்து. மேக4ங்களாகிற நீங்கள் அனைவரும் கூடித் திரண்டு பெரிய கிளர்த்தியோடு செய்கிற கார்யம் என்னவென்று பார்த்தால் பூக்களை அழிப்பதேயாயிருக்கிறது. இதனால் எனக்கு என்ன பயன்? இப்படிப் பூக்களை அழிப்பதைவிட்டு, பூமாலை போல் வடிவுடையவளாய், 'கோதை' (*மாலை*) என்னும் பெய

---

c "கிளர்ந்தெழுந்த" என்றத்தாலே ப2லிதம் (இவற்றின் இத்யாதி3) d (ஒரு மாலை) என்றது - விடாய்த்தார் நாக்கு நனைக்கப்போருமென்னுமாபோலே அபி4நிவேஶாதிஶயம். e "மலர் சிதறத்திரண்டேறிப் பொழிவீர்காள்" என்றதுக்

போக்கின இத்தால், நான் அவனோடே சேர்ந்தேனானேனோ? f128. "नेमान् पुष्पफलद्रुमान्" (நேமாந் புஷ்பப$_2$லத்$_3$ருமாந்) என்றிறே இவளுக்கிருக்கிறது. உனக்கு நாங்கள் செய்ய வேண்டுவதென்னென்றாற்போலே இருந்தன. (ஊன்கொண்ட இத்யாதி$_3$) தசைந்து கூரிதான உகிராலே. (இரணியனை யுடலிடந்தான்) தமப்பன் பகையாக, மகனுடைய ப்ரதிஜ்ஞா ஸமகாலத்திலே வந்து தோற்றி, அவன் விரோதி$_4$யைப் போக்கினவன். g தமப்பனில் அண்ணியாரில்லையிறே; இப்படி

ருடையவளான நான் அவனோடே சேரும் வழியுண்டா என்று பாருங்கள்.

128. நைஷா பஶ்யதி ராக்ஷஸ்ய: நேமாந் புஷ்பப$_2$லத்$_3$ருமாந்।
ஏகஸ்த$_2$ஹ்ருத$_3$யா நூநம் ராமமேவாநுபஶ்யதி॥
[ரா-ஸு 16-25]

[இப்பிராட்டி ராக்ஷஸிகளையும் காணவில்லை; இந்தப் புஷ்பங்களையும், பழங்களையும், மரங்களையும் காணவில்லை. ஒரே நினைவுகொண்டவளாய் ராமனையே காண்கிறாள்போலும்.] என்கிறபடியே அவனைக்காண்பதற்குத் தடையாயிருக்கையாலே எனக்கு விரோதி$_4$யான இந்த மலர்களை நீங்கள் சிதறவடித்ததனால் நான் அவனோடு சேர்ந்ததாகிவிடுமோ என்றும் கருத்துரைக்கலாம். "நாங்கள் உனக்குச் செய்யவேண்டிய கார்யம் என்ன ?" என்று கேட்பதுபோலே இருந்தன மேக$_4$ங்கள். அதைக்கண்டு இவைகள் செய்யவேண்டியதைப் பாடலின் பிற்பகுதியாலே கூறுகிறாள். (*ஊன்கொண்ட வள்ளுகிரால்*) தசைப்பற்று உள்ளவையாய், கூர்மையுடையவையான நக$_2$ங்களாலே. (*இரணியனை உடலிடந்தான்*) பெற்ற தந்தையே பகையானபோது மகனான ப்ரஹ்லாதன் "எங்குமுளன் கண்ணன்" [திருவாய் 2-2-9] என்று ப்ரதிஜ்ஞைசெய்த அதே காலத்தில் தூணில் தோன்றி, அவனுடைய விரோதி$_4$யான இரணியனின் உடலைப் பிளந்தவன். பிள்ளைக்குத் தகப்பனைக்

குத் தாத்பர்யாந்தரம் (என் விரோதி$_4$யையித்யாதி$_3$) f பூக்கள் விரோதி$_4$யாய் அஸஹ்யமாயிருக்குமோவென்ன அருளிச் செய்கிறார் (நேமாநித்யாதி$_3$) g "தமப்பனில்" என்றது



யிருக்க, அவனில் அண்ணியனாய் உதவினவன். "பிறர் பகையானாலுதவுமவன், தான் பகையானால் உதவலாகாதோ?" என்று சொல்லுகிறாளென்று சொல்லுங்கோள். தன்னைப்பேணாதே வந்து விரோதி$_4$யைப் போக்குமவன்; "தன்னைப்பேணாதே வரச்சொல்லுகிறேனன்றே; தன்னைப் பேண நான் பிழைப்பனே; என் பருவத்திலே ஓராணுக்கு உதவினவன் எனக்கு உதவலாகாதோ?" என்று சொன்னேனென்று சொல்லுங்கோள். (ஊன்கொண்ட வள்ளுகிரால்) h ஆஶ்ரிதவிரோதி$_4$களைத் தானே கைதொடனாய்ப் போக்கு

காட்டிலும் நெருங்கியவனில்லை. இப்படியிருக்க, ப்ரஹ்லாதனுக்குத் தந்தையே பகையானபோது, அவனைக்காட்டிலும் நெருங்கினவனாய் இருந்து உதவினவன். இப்போது இதை இங்கு சொல்லுவதற்குக் கருத்து—"பிறர் பகையானால் உதவுகிறவன் என்னைப் பிரிவதன்மூலம் தானே பகையாம்போது உதவலாகாதா? என்று கேட்கிறாள் என்று சொல்லுங்கள்" என்றபடி. "தே$_3$வாதி$_3$தே$_3$வனான தான் தன் பெருமைக்குத் தகாதபடி நரங்கலந்த சிங்கமாய் வந்து பிறந்து அடியவனின் விரோதி$_4$யைப் போக்கினான். எனக்கு உதவும்போது இப்படித் தன் பெருமைக்குத் தகாதமுறையில் வரவேண்டிய அவசியமில்லை. உள்ளபடியே வந்தாலே நான் உயிர்த$_4$ரிப்பேனே. என்னைப் போன்ற பருவமுடைய ஆணான ப்ரஹ்லாதனுக்கு உதவினவன் பெண்ணான எனக்கு உதவக்கூடாதா என்று கேட்டேன் என்று சொல்லுங்கள்" என்று மேக$_4$ங்களைப் பார்த்துக் கூறுவதாகவும் கருத்துரைக்கலாம். (*ஊன்கொண்ட வள்ளுகிரால்*) என்கையாலே அடியானுடைய விரோதி$_4$யைத் தானே நேரில் வந்து தன் கையாலே போக்குகிறவன் என்றதாகிறது. "எனக்கு—ப்ரஹ்லாதனுக்குச் செய்ததுபோலே தன் திருமேனியை நரங்கலந்த சிங்கமாக மாற்றிக்கொண்டுவரவோ விரோதி$_4$யைப் போக்கவோ வேண்டிய அவசியமில்லை. தான் கவர்ந்த என் உடைமையை நான் பெறும்படி நினைத்தாலேபோதும் என்

தொடங்கி மேலெல்லாம் தாத்பர்ய பே$_4$த$_3$ங்கள். h "உகிரால்" என்றதுக்குத் தாத்பர்யம் (ஆஶ்ரித விரோதீ$_4$த்யாதி$_3$)

மவன். (இரணியனையித்யாதி$_{3}$) விரோதி$_{4}$யைப் போக்கவும் தன்னை அழியமாறவும் வேணுமென்று சொல்லுகிறேனல்லேன்; தன் i உடைமை தான் பெறுவாளென்று நினைக்க வமையும். (சரிவளைகள்) j கழலுகிற வளைகளென்னுதல். சரியும் வளையுமென்னுதல். k அவன் வந்தாலும் தொங்காது போலே காணும். l (தருமாகில்) m தாராதொழிகையே ஸ்வபா$_{4}$வமென்றிருக்கிருள். n ஸ்வதந்த்ரராயிருப்பார் தாராதொழியிலும் ஒழிவரிறே; o ஆனாலும் நமக்கு நசையறுதிறே.

---

கிருள் பாட்டின் கடைசிப்பகுதியாலே—*(இரணியனை உடலிடந்தான் தான்கொண்ட சரிவளைகள் தருமாகில் சாற்றுமினே)* "சரிவளைகள்" என்றது சரிகின்ற அதாவது கழல்கின்ற வளைகள் என்று பொருள்படும். அன்றிக்கே 'சரி' என்று ஓராப$_{4}$ரணம் உண்டாகையாலே "சரியும் வளையும்" என்று பொருள்கொள்ளலாம். சரிவளை என்கையாலே கழல்வதையே இயல்வாகக்கொண்ட வளை என்று தோற்றுகிறது. அவன் வந்தாலும் கழல்வளையாகவே இருக்கும்போலும்! (*தருமாகில்*) ஆகில் என்று ஐயத்தைக் குறிக்கும் சொல்லாலே தராமலிருக்கையே இவனது இயல்பு என்று நினைத்திருக்கிருள் என்று விளங்குகிறது. 'ஆகில்' என்று ஐயமுறுவதற்குக் காரணம் என்னவெனில்: ஸர்வேச்வரன் ஸ்வதந்த்ரனுகையாலே அவன் தராமலிருந்தாலும் இருக்கலாம் என்பதேயாகும். அப்படியானுல் அவனிடம் தூது அனுப்புவானேன்? எனில்: அவன் தந்தாலும் தராவிட்டாலும் நமக்கு ஆசைவிடாதன்றே. (*சாற்றுமினே*) அவன் சரிவளைகள் தந்தாலும் தரட்டும், தராமல்போனுலும் போகட்டும்; நீங்கள் சரிவளைகளைத் தரும்படி தூதுசொல்லிவிடுங்கள். கழல்வளைகளைத் தருகையாவது — எம்பெருமான் வந்து கூடுகையேயாகும். 5.

---

i (உடைமை) - வளை. j, k "கழலுகிற வளை" என்று ஸாமான்யமாய் இருக்கையைப்பற்றத் தாத்பர்யம் (அவன் வந்தாலுமித்யாதி$_{3}$) l m "ஆகில்" என்ற யதி$_{3}$ஶப்$_{3}$த$_{3}$த்துக்கு- தாராமையை நிஶ்சிதமாக்கித் தாத்பர்யம் (தாராதொழிகையே இத்யாதி$_{3}$) l,n அன்றிக்கே, "தரும் ஆகில்" என்று பிரித்து, "தரும்" என்றதுக்கு - தருகையே நிஶ்சிதமென்றர்த்த$_{2}$மாக்கி. "ஆகில்" என்ற யதி$_{3}$ஶப்$_{3}$த$_{3}$த்துக்குத் தாத்பர்யம் (ஸ்வதந்த்ரராயித்யாதி$_{3}$) o முந்தின அர்த்த$_{2}$த்திலே நோக்காக்கித் தாராமையே நிஶ்சிதமானுல், "சாற்றுமினே" என்பானென்னென்ன அருளிச்செய்கிருர் (ஆனுலும் நமக்கித்யாதி$_{3}$) p இரண்டாமர்த்த$_{2}$த்திலே நோக்காக (அவன் தரிலுமித்யாதி$_{3}$). 5.



(சாற்றுமினே) p அவன் தரிலும் தருகிருன்; தவிரிலும் தவிருகிருன். நீங்கள் அறிவித்துப் போருங்கோள். 5.

## எட்டாம் திருமொழி—ஆரும் பாட்டு

**சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த தண்முகில்காள்! மாவலியை**
**நிலங்கொண்டான் வேங்கடத்தே நிரந்தேறிப் பொழிவீர்காள்!**
**உலங்குண்ட விளங்கனிபோல் உள்மெலியப் புகுந்து என்னை**
**நலங்கொண்ட நாரணர்க்குஎன் நடலைநோய் செப்புமினே.**

**பதவுரை:— சலம் கொண்டு**—குளிர்ந்த ஜலத்தைக் கொண்டு, **கிளர்ந்து எழுந்த**—மேற்கிளம்பி விளங்குகின்ற, **தண் முகில்காள்**—குளிர்ந்த மேக$_{4}$ங்களே! **மா வலியை**—மஹாப$_{3}$லியிடமிருந்து, **நிலம் கொண்டான் வேங்கடத்து**—பூ$_{4}$மியை யாசித்துப்பெற்றுக்கொண்டவனுன எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற திருமலையிலே, **நிரந்து ஏறி பொழிவீர் காள்!**—பரந்து ஏறிப்பொழிகின்ற மேக$_{4}$ங்களே!, (நான்) **உலங்கு உண்ட**—பெருங்கொசுக்கள் பு$_{4}$ஜித்த, **விளங்கனி போல்**—விளாம்பழம்போல், **உள்மெலிய**—உள்மெலியும்படி, **புகுந்து**—என்னுள்ளே பிரவேசித்து, **என்னை**—என்னுடைய, **நலம்கொண்ட**—நிறைவுகளை அபஹரித்த, **நாரணர்க்கு**—நாராயணனுக்கு, **என் நடலைநோய்**-எனது கஷ்டவியாதியை, **செப்புமின்**—தெரிவியுங்கள்.

---

6 *அவ:*— என்னை நலங்கொண்ட நாரணர்க்கு என் துன்பத்தைக் கூறுங்கள் என்கிருள்.

வ்யா:— ஆரும் பாட்டு. (a சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த) குளிர்ந்த தண்ணீரைச்சேர்த்து "ஏலக்குழம்பு, ஏலக்குழம்பு" என்று திரிவாரைப்போலே திரியாநின்றன வாய்த்து. (தண்முகில்காள்) நீங்கள் வர்ஷிக்கிற ஜலம் வேணுமோ? உங்கள் வடிவே அமையாதோ? (மாவலி யித்யாதி3) பிறர்க்காகத் தன்னை இரப்பாளனாக்கினவன் வர்த்திக்கிற தே3ஶத்திலே வர்த்திக்கிற உங்களுக்கு, என் இரப்புக்குக் காரியம் செய்யவேண்டாவோ? b அஸுரன் பக்கலிலே உங்களைப் போகச்சொல்லுகிறேனன்றே; உடையவன் பக்கலிலே உங்களைப் போகச்சொல்லுகிறேனத்தனை யன்றோ? c (நிரந்து) பரந்து. ஏறிப்பொழிவீர்காள்) சாய்கரகத்தை உயரவைத்துத் தண்ணீர் வார்ப்பாரைப்போலே,

---

*வ்யா:—* *(சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த)* குளிர்ந்த தண்ணீரில் ஏலம் முதலான வாஸனை த்3ரவ்யங்களைச் சேர்த்து "ஏலக்குழம்பு ஏலக்குழம்பு" என்று விற்றுத் திரிவாரைப் போலே இந்த மேக4ங்களும் நீரைக்கொண்டு உயரவெழுந்து திரிகின்றன. பிறர்க்கு த4ாரகமான ஜலத்தை உடல்நோவச் சுமந்துசென்று கைம்மாறு கருதாமல் உபகரிக்கும் நீங்கள் என் கார்யம் செய்யவேணும் என்று கருத்து. *(தண்முகில்காள்)* நீங்கள் பொழிகின்ற ஜலம் வேணுமோ? உங்கள் வடிவே போதாதோ அனைவருடைய களைப்பையும் ஆற்றுவதற்கு? வடிவாலே களைப்பாற்றும் நீங்கள் என் துன்பத்தையும் போக்க வேணும் என்று கருத்து *(மாவலியை நிலம்கொண்டான் வேங்கடத்தே)* தே3வர்களுக்காகத் தன்னை யாசகனாக்கிக் கொண்டு மாவலியிடம் நிலம்கொண்டவன் வாழும் தே3ஶத்திலே உள்ள நீங்கள் எனது இரப்புக்குக் கார்யம் செய்ய வேண்டாவோ? அவன் செய்ததுபோல் அஸுரனிடம் நான் உங்களைப் போகச்சொல்லவில்லையே. நம்மையுடையவனை நாராயணனிடமன்றோ உங்களைத் தூது அனுப்புகிறேன். *(நிரந்து)* எங்கும் வியாபித்து. *(ஏறிப் பொழிவீர்காள்!)* தண்ணீர்ப்பந்தலில் நீர்பருக வருபவர்களுடைய முகத்திலே நீர்

---

ஆரும் பாட்டு. (சலமித்யாதி3) a "சலம்" - ஜலம். b "மாவலியை நிலங்கொண்டான்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் (அஸுரன் பக்கலித்யாதி3) c "நிரந்து"-பரந்து.



காணவே விடாய்கெடும்படி உயரவேறி வர்ஷிக்கிறிகோளிறே. அவன் வர்த்திக்கிற தே3ஶத்திலே வர்த்தித்து அவனோடே உங்களுக்கு ஒரு ஸம்ப3ந்த4முண்டானால் அவன் ஸ்வப4ாவமுண்டாகவேண்டாவோ?. d (உலங்கித்யாதி3) "உலங்கு" என்பது - பெருநுளம்பு. அவை விளாம்பழத்திலே மொய்த்தவாறே அதின் ரஸமெல்லாம் குடிபோமாய்த்து; அப்படியே என்னுடம்போடேயணைந்து அகவாயைக் குடிபோக்கினானாய்த்து. (என்னை நலங்கொண்ட) என்னை ஸர்வஸ்வஹரணம் பண்ணின. (நாரணர்க்கு) தம்முடம்பிலழுக்கு பே4ாக்3யமாயிருக்குமவர்க்கு. (என்னித்யாதி3) "தம் வாத்ஸல்யத்துக்கும் என்னாற்றாமைக்கும் என்ன சேர்த்தி

---

விழும்படி கிண்டி போன்றதொரு பாத்திரத்தை உயர வைத்திருப்பார்கள். அதைச் சாய்கரகம் என்பர். விடாய்த்தவர்கள் தூரத்தில் வரும்போது இச்சாய்கரகம் தண்ணீர்ப்பந்தலிருக்குமிடத்தைக் காட்டிக்கொடுக்கும். அதுபோலே காணும்போதே விடாய் நீங்கும்படி உயர ஏறிமழை பொழிகிறீர்களன்றோ நீங்கள் என்கிறாள். அவன் வாழும் வேங்கடத்திலே வஸிப்பவர்களாய் அவனோடு தொடர்புபெற்ற நீங்கள் அவனைப்போன்று நிர்ஹேதுகக் கிருபையுடையவர்களாய் இருக்கவேண்டாவோ? என்று கருத்து. நாங்கள் செய்யக்கூடியதென்ன? என்று மேக4ங்கள் கேட்டதாகக்கொண்டு பாட்டின் பிற்பாதியாலே பதில் அளிக்கிறாள். *(உலங்குண்ட விளங்கனிபோல் உள்மெலியப் புகுந்து)* உலங்கு என்பது ஒருவகையான பெருங்கொசுக்களைக் குறிக்கும். அவை விளாம்பழத்தில் மொய்த்தவுடன் அப்பழத்தின் ரஸமெல்லாம் வற்றிவிடும். அப்படியே என் உடம்போடே அணைந்து, என் நலனும் என்நிறையும் என்சிந்தையும் என்வளையுமாகிற ஸாரத்தையெல்லாம் அபஹரித்துக்கொண்டானாயிற்று. *(என்னை நலங்கொண்ட)* என்னிடம் உள்ளதையெல்லாம் கொள்ளைகொண்ட. *(நாரணர்க்கு)* அனைத்துக்கும் இவர் ஆத்மாவாகையாலும், அனைத்தும் இவருக்கு ஶரீரமாகையாலும் அழுக்குப் படிந்த உடம்பாகிற லீலாவிபூ4தியின் அழுக்கையும் போ4ாக்3யமாகக் கொண்டவர்க்கு. *(என்நடலைநோய் செப்புமினே)* எனது பிரிவுத் துன்பநோயைச் சொல்லுங்கள். "வாத்ஸல்ய கு3ணத்தைக் காட்டும் நாராயணன் என்னும் பெயருக்கும் நான்

---

d "உலங்கு" - பெருநுளம்பு; பெருங்கொசுகென்றபடி.

யுண்டு?" என்று சொல்லுங்கோள். (என் e நடலைநோய்) தமக்கும் இந்நடலைநோயுண்டாகில் அறிவிக்க இராரிறே. நிற்பது இருப்பது விழுவது எழுவதாய்ப்படுகிற என்னுற் றுமையை அறிவியுங்கோள். 6.

எட்டாம் திருமொழி—ஏழாம் பாட்டு

**சங்கமா கடல்கடைந்தான் தண்முகில்காள்! வேங்கடத்துச்**
**செங்கண்மால் சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம்**
**கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள்**
**தங்குமேல் என்னுவி தங்குமென் றுரையீரே.**

**பதவுரை:— சங்கம்** — சங்குகளையுடைத்தாயும், **மா**— பெருமைவாய்ந்ததுமான, **கடல்**—கடலை, **கடைந்தான்**— கடைந்தருளின பெருமான் எழுந்தருளியிருக்கிற, **வேங் கடத்து**—திருமலையில் திரிகிற, **தண் முகில்காள்**—குளிர்ந்த மேக$_4$ங்களே! **செம் கண் மால்**—சிவந்த கண்களையுடைய அவ்வெம்பெருமானுடைய, **சே அடி கீழ்**—செவ்விய திருவடிகளின் கீழ். **அடிவீழ்ச்சி**—அடியேனுடைய, **விண்ணப் பம்**—விஜ்ஞாபநம் (யாதெனில்), **கொங்கைமேல்**—எனது முலைகளின் மேல் (பூசப்பட்டுள்ள), **குங்குமத்தின் குழம்பு**— குங்குமக் குழம்பானது, **அழிய**—நன்ருக அழிந்துபோம்படி, **ஒருநாள்**—ஒருநாளாகிலும், **புகுந்து தங்கும் ஏல்**—அவன் வந்து ஸம்ச்லேஷிப்பனுகில், (அப்போதுதான்) **என் ஆவி தங்கும் என்று** — என் பிராணன் நிலைநிற்கும்—என்பதாம்; **உரையீர்** — (இவ்விண்ணப்பத்தை அப்பெருமானிடத்துச்) சொல்லுங்கோள்.

---

படுகிற துன்பத்துக்கும் என்ன பொருத்தமுண்டு ?" என்று கேளுங்கள். (*நடலைநோய்*) நிற்பது, இருப்பது, விழுவது, எழுவதாய்ப்படுகிற பிரிவுத் துன்பநோய். (*என் நடலைநோய்*) தமக்கும் இந்நடலைநோய் இருந்திருந்தால் நான் தூதுவிடும்படி இருக்கமாட்டார்; ஆகையால் எனக்கே உரிய நோய் என்று கருத்து. (*செப்புமினே*) அறிவிக்கவேண்டியதொன்றே நீங்கள் செய்யவேண்டியது. வாய்வார்த்தையாலே தண்ணீர்ப்பந்தல் வையுங்கள் என்கிருள். 6.

---

e "நடலை"-து$_3$:க்க$_2$ம். "நடலை" என்று-நிற்பதிருப்பதான ஸஞ்சாரம். 6.



வ்யா:— ஏழாம் பாட்டு. (சங்கமாகடல் கடைந்தான்) a கீழ்க்கிடந்த சங்குகள் மேலேறிக் கொழிக்கும்படி அபரிச்சி$_1$ந்நமான கடலைக் கடைந்தவன்; b தன்னை அர்த்தி$_2$த்தார்க்குத் தன்னை வருந்திக் கடலைக்கடைந்து அவர்கள் ப்ரயோஜநத்தைக் கொடுக்குமவன் வர்த்திக்கிற தே$_3$ஶத்திலேயன்றே நீங்களும் வர்த்திக்கிறது. (தண்முகில்காள்) c கடல் கடைந்தபோதுண்டான ஆயாஸத்தால் வந்த ஶ்ரம மாறும்படி குளிர்ந்த வடிவைக்காட்டி வர்த்திக்கிறனவாய்த்து. d தன்னையே ப்ரயோஜநமாகவேணுமென்றிருப்பார்க்காக வந்து நிற்கிற தே$_3$ஶமாய்த்து. "அவன்ருன் வாராதிருக்க, இவள் இப்பாடு படுகிறதென்?" என்றிருக்கிறிகோளாகில்,—

---

7. *அவ:*—அவன் அணைந்தாலல்லது என் உயிர் த$_4$ரிக்காது என்று கூறுங்கள் என்கிருள்.

*வ்யா:—(சங்கமா கடல்கடைந்தான்)* அளவுகாணமுடியாத கடலை, கீழே கிடந்த சங்குகள் மேலேயேறிக் கொழிக்கும்படி கடைந்தவன். (*கடைந்தான் தண்முகில்காள்*) தன்னிடம் ப்ரயோஜநாந்தரங்களை வேண்டியவர்களுக்கும் தன் திருமேனியை வருத்திக் கடலைக் கடைந்து அவர்கள் விருப்பியதைக் கொடுக்கிறவன் வாழ்கிற தே$_3$ஶத்தில் வாழும் நீங்கள் என்கார்யத்தைச் செய்யவேணும் என்று கருத்து. (*கடைந்தான் தண்முகில்காள்*) கடலைக் கடைந்தபோது ஏற்பட்ட களைப்பு ஆறும்படி குளிர்ந்த வடிவைக்காட்டி இந்த மேக$_4$ங்கள்

---

ஏழாம் பாட்டு. (சங்கமித்யாதி$_3$) a "சங்கம்" என்றதுக்குத் தாத்பர்யம் (கீழ்க்கிடந்த இத்யாதி$_3$) b 'சங்கமாகடல் கடைந்தானென செங்கண்மாலானவனுடைய-வேங்கடத்துத் தண்முகில்காள்" என்று கூட்டித் தாத்பர்யம் (தன்னையித்யாதி$_3$) c "கடல்கடைந்தான் - தண்முகில்காள்" என்று கூட்டித் தாத்பர்யம் (கடல்கடைந்தபோதித்யாதி$_3$) d "சங்கமா கடல் கடைந்தவனுய், அநந்தரம், வேங்கடத்துச் செங்கண்மாலானவன்" என்று கூட்டித் தாத்பர்யம் (தன்னையே

e (செங்கண்மால்) அங்கே சென்றவாறே காண்கிறிகோளிறே. அவன் f கண்ணுறங்காமையும், அவனுடைய வ்யாமோஹமுமெல்லாம் அங்கே சென்றவாறே காண்கிறிகோளிறே. 35. ''अनिद्रस्सततं रामः'' (அநித்$_3$ரஸ்ஸததம் ராம:). g (சேவடிக்கீழித்யாதி$_3$) h திருவடிகளிலே விழுந்து விண்ணப்பம் செய்யுங்கோள். விண்ணப்பம் செய்யும் பாசுரமென்னென்னில்; i (கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்தொருநாள் தங்குமேலென்னாவி தங்கும்) என்று சொல்லுங்கோள். ''தம் வரவை விஶ்வஸித்து உத்$_3$யோகி$_3$த்துக்கொண்டிருந்தேன், அது ஸப்ரயோஜநமாம்படி பண்ணுவாராகில் த$_4$ரிக்கலாம்'' என்று சொல்லுங்கோள். j முலையெழுந்தார்படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே k''நாம் சென்றாலும் இனி ஜீவிக்கமாட்டாள்'' என்றிருக்கிலும் இருப்பரிறே; அக்குறைதீர அறிவித்துப் போரிகோள். l (கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப்புகுந்து) வெறும்புறத்திலே கொண்டு ஆற்றவொண்ணாத முலைகளை, அதுக்கு மேலே குங்குமத்தாலும் அலங்கரித்தாளாய்த்து.

---

ஸஞ்சரிக்கின்றன என்று கருத்து. *(வேங்கடத்துச் செங்கண்மால்)* ப்ரயோஜநாந்தரங்களை அபேக்ஷித்த தே$_3$வர்களுக்கு உதவிய குறைதீர, தன்னையே ப்ரயோஜனமாக நினைத்திருப்பார்க்கு அருள்புரிவதற்காக அவர்களிடம் வாத்ஸல்யத்தைத் திருக்கண்களாலே தோற்றுவித்துக் கொண்டு வந்து நிற்குமிடம். ''அவன் இவளுக்கு அருள்புரிய வராமலிருக்க இவள் இப்பாடு படுவதேன்?'' என்று நினைத்தீர்களாகில், அங்கு சென்று அவன் திருக்கண்களைப் பார்த்தால் அவன் எனக்காக உறங்காமலிருப்பதையும், என்னிடம் பெருங்காதல் கொண்டிருப்பதையும் நீங்களே நேரில் காணலாம் என்று கருத்து. (115-வது பக்கத்தில் 35-வது ப்ரமாணத்தின்படி) ஸீதையைப் பிரிந்து இப்பாடுபட்டானன்றோ. *(சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம்)* திருவடிகளில் விழுந்து விண்ணப்பம் செய்யுங்கள்; விண்ணப்பம் செய்யும் பாசுரம் என்? என்னில்;*(கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள் தங்குமேல் என்னாவி தங்கும்)* என்று சொல்லுங்கள். ''தேவரீர் வருவீர் என்று நம்பி தேவரீர் அணைப்பதற்காகக் கொங்கைமேல் குங்குமத்தைச்சேர்த்துக்கொண்டிருந்தேன். அது பயனுடையதாம்படி செய்வீராகில் உயிர்த$_4$ரிக்கலாம்'' என்னும் என் விண்ணப்பத்தைச் சொல்லுங்கள். ''ஸர்வஜ்ஞனான அவன் அறியானோ? சொல்லவேணுமோ?'' என்னில்; முலையெழுந்தாரான பெண்கள் படும் துன்பம் மோவாயெழுந்தாரான ஆண்களுக்குத் தெரியாதாகையாலே எடுத்துச் சொல்லவேண்டும். அப்படியல்லாமல், ''நாம் சென்றாலும் இனி உயிர்த$_4$ரிக்கமாட்டாள்'' என்று நினைத்திருந்தாலும் இருக்கலாமன்றோ. அக்குறைதீர நான் உயிர்த$_4$ரிப்பதற்கு ஒருவழியுண்டு என்று எடுத்துச் சொல்லுங்கள் என்பதாகவும் கொள்ளலாம். *(கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து)* பரிஷ்காரம் செய்யாதநிலையிலும் அவனைப் பிரிந்து த$_4$ரிக்கவொண்ணாத முலைகளைக் குங்குமமப்பி அலங்கரித்து வைத்தது மேலும் துன்புறக் காரணமாயிற்று. *(குழம்பு)*

---

யித்யாதி$_3$) e, f உறங்காமையாலே கண் சிவக்கும். g ''சேவடிக் கீழடிவீழ்ச்சி விண்ணப்டம்'' என்றதுக்கு, ''அடிவீழ்ச்சியான என்னுடைய - செங்கண்மால் சேவடிக் கீழ்விஷயமான - விண்ணப்பத்தை'' என்றந்வயித்தருளிச் செய்வர். ''அடிவீழ்ச்சி'' - அடியாட்டி. h, i, j, k, l ''அடிவீழ்ச்சி'' - அடியிலே விழுந்து என்றும் (பாசுரமென்னென்னில்) என்ற அநந்தரம், '''கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள் தங்குமேலென்னாவிதங்கும்' என்று சொல்லுங்கோள்; தம்வரவை விஶ்வஸித்து உத்$_3$யோகி$_3$த்துக்கொண்டிருந்தேன், அது ஸப்ரயோஜநமாம்படி பண்ணுவாராகில் த$_4$ரிக்கலாமென்று சொல்லுங்கோள். முலையெழுந்தார்படி அவருக்குத் தெரியாதிறே;...கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப்புகுந்து'' என்றும் இவ்வளவும் திருத்துவாக்யம். j 'அவனறியானோ? சொல்லவேணுமோ' என்ன (முலையெழுந்தாரித்யாதி$_3$) k அவன் வரவுக்குடலாக வொப்பித்து போ$_4$க$_3$த்திலே அந்வயிக்க அவஸரம் பார்த்திருக்கிறாளாகில், ''தங்குமேலென்னாவிதங்கும்'' என்பா

(குழம்பு) m இவை சென்று அறிவித்து நசையற்றாலிறே m2 அவை பொறியெழுவது. n செருக்கனாய் ஸ்வதந்த்ரனாயிருப்பானொருவனாகையாலே " இன்னபோதுவரும் " என்று அறுதியிடவொண்ணாதே. 'இப்போது வந்தான்', 'இப்போது வந்தான்', என்று அலங்கரித்தபடியே இருக்கவேணுமிறே. இத்தலை பரதந்த்ர வஸ்துவாகையாலே. (குழம்பழியப் புகுந்து) o முன்னடி தோற்றாதேயிறே வந்து புகுருவது. (ஒரு நாள் தங்குமேல்) ஒருநாள் தங்குமாகில் போருமோ பின்னை இப்பாரிப்புக்கெல்லாமென்னில் (என்னாவிதங்கும்)

---

குங்குமம் எப்போதும் காயாமல் இருக்கிறபடி. இந்த மேக4ங்கள் அவனிடம் சென்று அறிவித்து, அதற்குப் பின்னும் அவன் வராமல், வருவான் என்ற ஆசையுமற்றுப் போனால் தான் அக்குங்குமக் குழம்பு காய்ந்துபோகும். மதிப்புடையவனாய், ஸ்வதந்த்ரனாயிருப்பவனாகையாலே " இன்னபோது வருவான் ' என்று உறுதியாகக் கூறமுடியாது. இவள் அவனுக்குப் பரதந்த்ரையாகையாலே, 'இதோ வந்துவிடுவான், இதோ வந்துவிடுவான்' என்று குங்குமத்தால் அடிக்கடி அலங்கரித்தபடியே இருக்கவேணுமாகையாலே குழம்பாகவேயிருக்கும் என்றும் கொள்ளலாம். *(குழம்பழியப் புகுந்து)* தான் வருவது எவர்க்கும் அறியமுடியாதபடியன்றோ வந்து புகுவான் கண்ணன். *(ஒருநாள் தங்குமேல்)* ஒருநாள் தங்குவானாகில். இப்படி இடைவிடாமல் குங்குமத்தால் அலங்கரித்துக்கொண்ட பாரிப்புக்கெல்லாம் ஒருநாள் தங்குவது போதுமோ? என்னில்: *(என் ஆவி தங்கும்)* போ4க3த்துக்குப் போதாது. என் உயிர்

---

னென்னென்ன (நாம் சென்றாலுமித்யாதி3) m விஶ்லேஷ த3ஶையில் குழம்பு அஸஹ்யமாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (இவை சென்றித்யாதி3) m2 பொறியெழுகை- தணலாய்ச்சுடுகை. n ஆனாலும் அலங்கரித்திருக்கக் கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (செருக்கனாயித்யாதி3) o குழம்பழிய வேண்டுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (முன்னடியித்யாதி3) 7.



போ4க3த்துக்குப் போராது. ப்ராண ரக்ஷணத்துக்குப் போரும். (ஒருநாள் தங்குமேல் என்னாவி தங்கும்) " கு3ணஜ்ஞானத்தாலே த4ரியாளோ?" என்றிருக்கவொண்ணாது; அணையுமாகில் த4ரிக்கலாம். 7.

## எட்டாம் திருமொழி — எட்டாம் பாட்டு

**கார்காலத் தெழுகின்ற கார்முகில்காள்! வேங்கடத்துப்**
**போர்காலத் தெழுந்தருளிப் பொருதவனார் பேர்சொல்லி**
**நீர்காலத் தெருக்கில்அம் பழவிலைபோல் வீழ்வேனை**
**வார்காலத் தொருநாள்தம் வாசகந்தந் தருளாரே.**

பதவுரை:— **கார் காலத்து** — வர்ஷாகாலத்திலே, **வேங்கடத்து எழுகின்ற** — திருமலையிலே வந்து தோற்றாநின்ற, **கார் முகில்காள்** — காளமேக4ங்களே!, **போர் காலத்து** — யுத்3த4ஸமயத்திலே, **எழுந்தருளி** — (போர்க்களத்தில்) எழுந்தருளி, **பொருதவனார்** — போர்செய்து வெற்றிபெற்ற பெருமானுடைய, **பேர்** — திருநாமங்களை, **சொல்லி** — ஸங்கீர்த்தநம்பண்ணி, **நீர் காலத்து எருக்கில் அம் பழ இலைபோல் வீழ்வேனை** — மழைகாலத்தில் அழகிய எருக்கம் பழுப்புகள் அற்றுவிழுவதுபோல் ஒசிந்து விழுகின்ற எனக்கு, **வார் காலத்து** — நெடுகிச்செல்லுகிற காலத்திலே, **ஒரு நாள்** — ஒருநாளாகிலும், **தம் வாசகம் தந்தருளாரே** — தம்முடைய ஒரு வார்த்தையை அருளாதொழிவரோ?.

---

த4ரிப்பதற்குப் போதும். *(ஒருநாள் தங்குமேல் என் ஆவி தங்கும் என்று உரையீரே)* "கோவிந்தன் குணம்பாடி ........ ஆவிகாத்திருப்பேனே" (3) என்னும் முன் பாசுரத்தின் நிலையும் மீறிப்போயிற்று. அவன் ஒருநாளாகிலும் அணைத்தால்தான் உயிர்த4ரிக்கலாம் என்று சொல்லுங்கள். 7.

8. *அவ:*— ஒருநாள் ஒரு வார்த்தையாவது அருளாமலிருப்பது அழகல்ல என்று விண்ணப்பிக்கச் சொல்லுகிறாள்.

வ்யா:— எட்டாம் பாட்டு. (a கார்காலத்தெழுகின்ற) அவன் வரவு குறித்துப்போன காலத்திலே தோற்றினவர்களன்றோ நீங்கள். (கார்முகில்காள்) b தனக்கடைத்த காலத்திலே தோற்றுகிறவையாகையாலே தன்நிறம் பெற்றுத் தோற்றி உதவுமாபோலேயாய்த்து. இவனும் - முன்பெல்லாம் தோற்றாதே, ஆஶ்ரிதர் நலிவுபடுமளவானவாறே வந்து தோற்றி, அவர்கள் விரோதி$_4$களைப் போக்கி உதவி, தான் நிறம் பெறும்படியும். இத்த$_3$ஶையிலே திருநாமஸங்கீர்த்தநத்தாலே த$_4$ரிக்கலாமென்றிருந்தோம்; அதுதானே ஶைதி$_2$ல்ய ஹேதுவாகாநின்றது. (நீர்காலமித்யாதி$_3$) கோடையிலே பாலறவுலர்ந்த எருக்கிலையிலே மழைத்துளிபட்டவாறே அற்று விழுமாபோலேயாய்த்து. விரஹத்தாலே நொந்திருக்கிற ஸமயத்திலே திருநாமஸங்கீர்த்தநத்தைப் பண்ண,

---

*வ்யா:— (கார்காலத் தெழுகின்ற)* அவன் வருகிறேன் என்று நாள்குறித்துப்போன மழைகாலத்திலே வந்து தோற்றினவர்களன்றோ நீங்கள். அவன் வராவிட்டாலும் அவனுடைய நிறம் பெற்ற உங்களைப் பார்த்து நான் ஆறியிருக்கலாம்படி தோன்றிய உங்களது வரவு நல்வரவு என்று கருத்து. *(கார் முகில்காள்.....பொருதவனார்)* தமக்கு ஏற்பட்ட காலத்திலே தோற்றுகையாலே தமக்குரிய கருநிறம்பெற்றுத் தோற்றி உலகிற்கு உதவும் இவைகளைப்போலே, எம்பெருமானும் முன்பெல்லாம் தோற்றாமல் அடியார் துன்புறும்போது வந்து தோற்றி, அவர்களது எதிரிகளைப் போக்கி உதவித் தன் நிறம் பெறுவான் என்று கருத்து. *(பேர்சொல்லி......வீழ்வேனை)* இந்த து$_3$ர்த$_3$ஶையிலே திருநாமஸங்கீர்த்தனத்தால் த$_4$ரிக்கலாமென்று நினைத்தோம். அதுவே நமக்கு நலிவடையக் காரணமாயிற்று என்கிறாள். *(நீர்காலத் தெருக்கிலம் பழவிலைபோல் வீழ்வேனை)* கோடையிலே பால்வற்றியுலர்ந்த எருக்கிலையிலே மழைகாலத்தில் மழைத்துளி பட்டவுடன் அது உதிர்ந்து விழுவதுபோலே, பேர்சொன்னவுடன் தடுமாறி விழுகிறேன் நான். பிரிவுத் துன்பத்தாலே நொந்திருக்கும் சமயத்தில் திரு

---

எட்டாம் பாட்டு. (கார்காலத்து இத்யாதி$_3$) a "கார்காலம்"-வர்ஷாகாலம். b "போர்காலம்"-என்ற பத$_3$த்தைக் கடாக்ஷித்து, இப்பத$_3$த்துக்குத் தாத்பர்யம் அருளிச்



அதுதானே ஶைதி$_2$ல்ய ஹேதுவாக இற்றிற்று விழுகிறபடி. c (வார்காலத்து) d ஓடவொழுகிச் செல்லுகிற காலத்திலே. (ஒருநாள் தம் வாசகம் தந்தருளாரே) e என்றும் ஒருபடிப் பட்டிருக்கவேணுமோ e$_2$ இதிலும்? 80. "वाचा धर्ममवाप्नुहि" (வாசா த$_4$ர்மமவாப்நுஹி) என்று-ஒரு வார்த்தை சொன்னலாகாதோ? அங்கு தூதர்க்குச் சொன்ன வார்த்தையிறே; f இங்கும் இவற்றுக்கிறே சொல்லுகிறது. 8.

---

நாமஸங்கீர்த்தனத்தைப்பண்ண, அதுவே தளர்ச்சிக்குக் காரணமாகித் தடுமாறிவிழும்படி செய்துவிட்டது என்று கருத்து. *(வார்காலத்து ஒருநாள்)* நீண்டுசெல்லும் காலத்திலே ஒருநாள். "வார்தல் போதல் ஒழுகல் இவை நெடுமையாகும்" எனும் நிக$_4$ண்டு அரும்பத உரையில் எடுக்கப்பட்டது. *(ஒருநாள் தம் வாசகம் தந்தருளாரே)* என்றும் முகம் காட்டாமலிருப்பதில் ஒருபடிப் பட்டிருப்பதுபோலே, வார்த்தை சொல்லாமலிருக்கும் இதிலும் என்றும் ஒருபடிப்பட்டிருக்கவேணுமோ? என்று கேளுங்கள். முகம்காட்டுவதில்லையாகிலும் வார்த்தையாவது சொல்லக்கூடாதோ என்று கருத்து. (269-வது பக்கத்தில் 80-வது ப்ரமாணத்தின்படி) வார்த்தை சொல்லுகையாகிற த$_4$ர்மத்தையாவது செய்யலாமே. அங்கு ஸீதாபிராட்டி தூ$_3$தனை அனுமனிடம் வார்த்தை சொன்னதுபோலே இங்கும் ஆண்டாள் தூதுசொல்லும் மேக$_4$ங்களுக்கு இவ்வார்த்தையைச் சொல்லுகிறாள். 8.

---

செய்கிறார் (தனக்கடைத்த இத்யாதி$_3$) c "வார்தல்" - நீளுதல். d (ஓடவொழுகி) - மிகவும் நெடுகி. c,d "வார்தல் போதலொழுகலிவை நெடுமையாகும்" என்னக்கடவதிறே. e முகங்கொடாமையிலே ஒருபடிப்பட்டிருக்குமாபோலே வார்த்தைசொல்லாமையிலும்ஒருபடிப்பட்டிருக்கவேணுமோ? என்றபடி. e$_2$ (இதிலும்)-வார்த்தை சொல்லுகிற இதிலும். ஸம்ஶ்லேஷமில்லாவிட்டால் வார்த்தைதான் சொல்லவொண்ணாதோ? என்றபடி. f "அவன் வார்த்தை சொல்லுகிறானில்லை" என்றதுக்கு இஶ்லோகம் ஸம்வாத$_3$மானபடி எப்படியென்ன ; அருளிச்செய்கிறார் (இங்குமிவற்றுக்கிறே இத்யாதி$_3$). 8.

## எட்டாம் திருமொழி—ஒன்பதாம் பாட்டு

**மதயானை போலெழுந்த மாமுகில்காள்! வேங்கடத்தைப்**
**பதியாக வாழ்வீர்காள்! பாம்பணையான் வார்த்தை என்னே!**
**கதியென்றும் தானாவான் கருதாதுஓர் பெண்கொடியை**
**வதைசெய்தா னென்னுஞ்சொல் வையகத்தார் மதியாரே.**

**பதவுரை:— வேங்கடத்தை**—திருமலையை, **பதி ஆக**—இருப்பிடமாகக்கொண்டு, **வாழ்வீர்காள்**—வாழ்கின்றவையாயும், **மதம் யானை போல் எழுந்த**—மத்தக$_3$ஜம்போலே செருக்கிக்கிளர்ந்தவையாயுமுள்ள, **மாமுகில்காள்**—காளமேக$_4$ங்களே! **பாம்பு அணையான்**—சேஷசாயியான எம்பெருமானுடைய, **வார்த்தை என்னே**—வார்த்தையானது யாது?, ''**தான்**—அவ்வெம்பெருமான்றான், **என்றும்**—எப்போதைக்கும், **கதி ஆவான்**—ரக்ஷகனாயிருந்துவைத்து, **கருதாது**—(தன் ஸ்வரூபஹானியை) நினையாமல், **ஓர் பெண் கொடியை**—ஒரு பெண்பிள்ளையை, **வதை செய்தான்**—கொலைபண்ணினான்'', **என்னும் சொல்**—என்கிற சொல்லை, **வையகத்தார்**—இப்பூமியிலுள்ளவர்கள், **மதியாரே**—மதிக்கமாட்டார்களோ?

**வ்யா:— ஒன்பதாம் பாட்டு.** (மதயானைபோலெழுந்த மாமுகில்காள்) **129. ''एष ह्येवानन्दयाति'' (ஏஷ ஹ்யேவாநந்த$_3$யாதி) என்கிறபடியே அவன் ஆனந்தி$_3$ப்பிக்க ஆநந்தி$_3$த்துத் திரிகிறிகோளன்றோ நீங்கள்.**

---

9. *அவ:*—என்னைச் சித்ரவதைசெய்வது தமக்கு லோகாபவாத$_3$த்தை ஏற்படுத்தும் என்று சொல்லுங்கள் என்கிறாள்.

*வ்யா:— (மதயானைபோலெழுந்த மாமுகில்காள்)*

**129. ஏஷ ஹ்யேவாநந்த$_3$யாதி** [தை-ஆந 7]
[இப்பரமாத்மாவேயன்றோ ஜீவனை ஆநந்தி$_3$ப்பிக்கிறான்.] என்கிறபடியே அவன் தன் திருமேனி முதலானவற்றைக் காட்டி உங்களை ஆநந்தி$_3$க்கச் செய்கையாலே, மத$_3$ங்கொண்ட யானைகள் போலே களித்துத் திரிகிறீர்களன்றோ நீங்கள் என்று கருத்து.



(மாமுகில்காள்) ஒரு விபூ$_4$தியாக **115. ''अहमन्नमहमन्न'' (அஹ**
மந்நமஹமந்நம்) **என்று - அநுப$_4$வத்தாலே களிக்குமா**
**போலே. நீங்களும் திரள் திரளாக அநுப$_4$வித்து வர்த்திக்**
**கிறிகோளன்றோ?** (வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்)
**வந்தேறிகளாய்த் திருநாள் ஸேவித்துப் போவாரைப்போலே**
**போராதே, அங்கே நித்யவாஸம் பண்ணப்பெறுவதே**
**நீங்கள்!** a **சேறுதோய்ந்து கழுவினவர்களன்றிக்கே, முக்**
**தரைப் போலன்றிக்கே, நித்யஸித்$_3$த$_4$ரைப்போலேயாய்த்து.**
**அங்குத்தை** b **வர்த்தநத்தையிறே வாழ்வாகச் சொல்லு**

---

*(மாமுகில்காள்)* (367 வது பக்கத்தில் 115-வது ப்ரமாணத்தின்
படி) நித்யவிபூ$_4$தியில் நித்யமுக்தர்கள் பரமபத$_3$நாத$_2$னை அநு
ப$_4$வித்துக் களிப்பதுபோலே நீங்களும் திருவேங்கடமுடை
யானைத் திரள்திரளாக அநுப$_4$வித்துக் களிக்கிறீர்களன்றோ.
*(வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்)* திருநாள் ஸேவித்துப்
போகின்றவர்கள் வந்தேறிகளாய், சிலநாள் இருந்துவிட்டுத்
திரும்புவதுபோலில்லாமல் திருவேங்கடத்திலேயே நித்யவாஸம்
செய்யும் பா$_4$க்$_3$யமுடையவர்களன்றோ நீங்கள். இப்படி
முமுக்ஷுக்களைக் காட்டிலும் சிறப்புடையவர்களாய் இருப்ப
தோடல்லாமல், நீங்கள் முக்தர்களைக் காட்டிலும் சிறப்புடைய
வர்களன்றோ என்றுமே பரமபத$_3$நாத$_2$னை அநுப$_4$விக்கும் நித்ய
ஸூரிகளைப்போலே, என்றுமே திருவேங்கடமுடையானை அநு
ப$_4$விக்கும் பேறுபெற்றிருக்கையாலே, சிலநாள் ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வ
மில்லாமல் ஸம்ஸாரச் சேற்றில் அழுந்தியிருந்த முக்தர்களைக்
காட்டிலும் சிறப்புடையவர்கள் என்று கருத்து. பரமபத$_3$த்
தில் வாஸத்தைப்போலே திருவேங்கடத்தில் வாஸத்தையே

---

ஒன்பதாம் பாட்டு. (மதயானையித்யாதி$_3$) a கீழ் -
முமுக்ஷுக்களில் வ்யாவ்ருத்தி சொல்லி, முக்தரில் வ்யா
வ்ருத்தி (சேறுதோய்ந்தித்யாதி$_3$) c ''வேங்கடத்தைப் பதி
யாக உடைத்தாகையே வாழ்வு'' என்றார் - கீழ் ;
'' வேங்கடத்தைப் பதியாகப்பெற்று ப$_4$க$_3$வத்ப்ராவண்ய
மாகிற வாழ்வை உடையீர்காள்'' என்று அர்த்த$_2$ாந்தரம்
விவக்ஷித்து, தத்ப்ரதிகோடியையும் காட்டுகிறார் (பலநீ
காட்டியித்யாதி$_3$) b (வர்த்தநத்தையிறே) ''வாழ்ச்சியாக'',

கிறது. இரண்டாற்றுக்கும் நடுவில் வாஸம்போலே; "நல்லார்கள் வாழும் நளிரரங்கம்" என்னக்கடவதிறே. c "பல நீ காட்டிப்படுப்பாயோ" "இன்னங்கெடுப்பாயோ?" என்கிற படியே - இதர விஷயப்ராவண்யம் விநாஶஹேதுவாயிருக்கும்; ப$_4$க$_3$வத்ப்ராவண்யம் வாழ்வாயிருக்கும். (பாம்பணையான் வார்த்தையென்னே) படுக்கைத் தலையில் சொல்லும் வார்த்தைகள் d அந்தரங்க$_3$ர்க்குத் தெரியுமிறே. (கதியென்றும் தாஞவான்) e130. "देवानां दानवानाञ्च सामान्यमधिदैवतम्।

வாழ்வாகச் சொல்லுகிறுளன்றே. தொண்டரடிப்பொடியாழ்வார் இரண்டாற்றுக்கும் நடுவில் வாஸத்தையே வாழ்வாகச் சொன்ஞற்போலே. 'நல்லார்கள் வாழும் நளிரரங்கம்" [நாச்-திரு 11-5] என்று இவ்வாண்டாளும் திருவரங்கவாஸத்தையே வாழ்வாகச் சொன்ஞளன்றே. அன்றிக்கே வேங்கடத்தை இருப்பிடமாகப்பெற்று ப$_4$க$_3$வத்ப்ராவண்யமாகிற வாழ்ச்சியைப் பெற்றவர்களே ! என்றும் கொள்ளலாம். "பல நீ காட்டிப் படுப்பாயோ [திருவாய் 6-9-9] "புறத்திட்டின்னம் கெடுப்பாயோ" [6-9-8] என்கிறபடியே மற்ற விஷயங்களில் ஈடுபடுவது ஸ்வரூபம் அழிவதற்குக் காரணமாயிருக்கும். எம்பெருமானிடம் ஈடுபடுவது வாழ்வாயிருக்கும் என்று கருத்து. *(பாம்பணையான் வார்த்தையென்னே)* ஆதி$_3$ஶேஷன்மேல் ஶயனித்திருக்கும் அவன் சொன்ன வார்த்தை — அவ்வாதி$_3$ஶேஷனைப்போலே அந்தரங்க$_3$ர்களாயிருந்துகொண்டு வேங்கடத்தைப் பதியாக வாழும் உங்களுக்குத் தெரிந்திருக்குமே. அவ்வார்த்தை என்னவென்று எனக்குச் சொல்லுங்கள். *(கதியென்றும் தாஞவான்)*

**130. தே$_3$வாநாம் த$_3$ாநவாநாஞ்ச ஸாமாந்யமதி$_4$தை$_3$வதம்।**
**ஸர்வதா$_3$ சரணத்$_3$வந்த்$_3$வம் வ்ரஜாமி ஶரணம் தவ॥**
[ஜிதந்தே-2]

என்று பூரிப்பது. c அன்றிக்கே, இப்படி வர்த்தநத்தைக் கொண்டாடுகைக்கு ஏற்றமேதென்ன அருளிச்செய்கிறுர் (பல நீ காட்டியித்யாதி$_3$) என்னுதல். d ஏகதே$_3$ஶவாஸத்தாலே (அந்தரங்க$_3$ர்) என்கிறது. அன்றிக்கே, அங்குத்தை வர்த்தநத்துக்கும் அடி - ப$_4$க$_3$வத் ப்ராவண்யமாகையாலே, ஏகார்த்த$_2$மாகவுமாம். e,e$_2$(தே$_3$வாநாம்......அல்லேன் ஆவே



र्वदा" (தே$_3$வாநாம் த$_3$ாநவாநாஞ்ச ஸாமாந்யமதி$_4$தை$_3$வதம் । ஸர்வதா$_3$) என்கிறபடியே. e$_2$ அல்லேனென்றும் ஆவேனென்றும் சொல்லும் e$_3$ இவனைப்போலன்றிக்கே. என்றுமொக்க ஒருபடிப்பட்டேயிருக்குமாய்த்து அவன். "ஆள் பார்த்துழிதருவாய்" என்கிறபடியே. (கருதாது) தனக்கு வருகிற ஸ்வரூபஹாநியை பு$_3$த்$_3$தி$_4$பண்ணுதே. (ஓர் பெண் கொடியை வதைசெய்தானென்னும் சொல்) ஓர் கொள் கொம்பிலே சேர்க்கவேண்டும் கொடியை, தரையிலேயிட்டு வைக்கையாவது - வதி$_4$க்கையிறே. 131. "न च सीता त्वया हीना" (ந ச ஸீதா த்வயா ஹீநா). ப$_4$க$_3$வத்$_3$ விஶ்லேஷமும்

[ப$_4$க்தியுடைய தே$_3$வர்க்கும், ப$_4$க்தியற்ற அஸுரர்க்கும் எப்போதும் பொதுவாகப் பற்றக்கூடிய தே$_3$வதையாயிருக்கும் உன் திருவடியிணையை உபாயமாக நிச்சயிக்கிறேன்.] என்கிற படியே அனைவர்க்கும் என்றும் தஞ்சமாயிருப்பவன் இவனேயன்றே. *(என்றும்)* "உனக்கு அடிமையாகமாட்டேன்" என்று ஒருசமயமும், "உனக்கு அடிமையாவேன்" என்று ஒருசமயமும் சொல்லும் ஜீவனைப்போலல்லாமல், எப்போதும் இவனை ரக்ஷிப்பவனுகவேயிருப்பவன் அவன். "ஆள்பார்த்துழிதருவாய்" [நான்-திருவ 60] என்கிறபடியே "சேதனஞெருவன் நமக்குக் கிடைப்பானே" என்று ஆசைப்பட்டுத் திரிகிறவனன்றே ஸர்வேஶ்வரன். *(கருதாது)* என்னை ரக்ஷிக்காமையால் தனக்கு வருகிற கு$_3$ணக்கேட்டை நினையாமல். *(ஓர் பெண்கொடியை வதைசெய்தான் என்னும் சொல்)* ஓர் கொள்கொம்பிலே சேர்க்கவேண்டிய கொடியை, தரையிலே படரவிடுவது அதைச் சாகடிக்கையேயாகும். அதுபோலே அவனை அணையவேண்டிய கொடிபோன்ற என்னை வந்து ஆட்கொள்ளாமலிருப்பதும் என்னைச் சித்திரவதை$_4$செய்வதேயாகும்.

**131. ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராக$_4$வ।**
**முஹூர்த்தமபி ஜீவாவோ**
**ஜலாந்மத்ஸ்யாவிவோத்$_3$த்$_4$ருதௌ॥** [ரா-அ 53-31]

னென்கை) - ஶேஷத்வத்துக்கு உடன்படுகையும், படாமையும். e$_3$ (இவனைப்போல்) என்றது - சேதனனை. f "வைய

வத$_4$மும் பர்யாயங்களாலும். (வையகத்தார் மதியாரே) f அத்தலையில் ஸத்$_3$ப$_4$ாவத்தாலே இத்தலையில் ஸத்தை யென்னுமது f$_2$ போய்த்தே. g ஒருகால் முடிந்தார்க்கு இரு கால் முடியவேண்டாவே? இனி நாட்டார் தம்மை ரக்ஷக ரென்று விரும்பார்களென்று சொல்லுங்கோள். தந்தாம் அழிந்தாலும் அத்தலைக்கு வரும் அவத்$_3$யம் பரிஹரிக்கும் h குடியிறே(யோ!) 9.

---

[ராக$_4$வரே! உம்மைப் பிரிந்த ஸீதையும் உளளாகாள்; (உம்மைப் பிரிந்த) நானும் ஸத்தை பெறமாட்டேன். (ஒருகால் ஜீவித்தாலும்) ஜலத்தைப் பிரிந்த மீன்போலே முஹூர்த்த நேரமே ஜீவிப்போம்.] என்கிறபடியே எம்பெருமானைப் பிரிந்திருப்பது அழிவேயாகும் என்று இளையபெருமாள் அறுதியிட்டாரன்றோ (வையகத்தார் மதியாரே) "என்னை வதை, செய்தபின் உலகினர் உம்மை ரக்ஷகராகக் கொள்ளமாட்டார்கள்" என்று சொல்லுங்கள். நாயகன் உயிரோடிருப்பதாலேயே, அவனைப் பிரிந்து நலிவுறும் காலத்திலும் நாயகி உயிருடன் இருக்கிறாள் என்பது அனைவரும் இசைந்தது. இதைத் தமிழ் நூலார் "இன்றியமையாமை" என்று கூறுவர். என்னை வதை, செய்துவிட்டதால் இந்த ந்யாயமும் அழிந்தது இப்படிச் செய்ததால் எம்பெருமானுக்கு உண்டாகும் அபவாத$_3$ம் இவளுக்குப் பொறுக்கவொண்ணாததாய் மறுபடியும் சித்திரவதை, செய்கிறது. ஒருமுறை அழிந்தவர்கள் மறுபடியும் அழிய வேண்டுமோ? அழிகின்ற இவளுக்கு அழித்தவனுக்கு வரும் அபவாத$_3$த்தைப்பற்றி என்ன கவலை? எனில், பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையாகையாலே, தான் அழியப்புக்க வளவிலும் எம்பெருமானுக்கு ஒருகுறை வரக்கூடாது என்று நினைக்கிறாள். 9.

---

கத்தார் மதியாரே' என்றதுக்கு அவதாரிகை (அத்தலையில் இத்யாதி$_3$) "இன்றியமையாமை" என்கிற ந்யாயத்தாலே, தானுண்டானால் என் ஸத்தையுமுண்டென்கிறது. f$_2$ (போய்த்தே) இனி முடியுமத்தனையன்றோ? g "ஒருகால் முடிந்தால் இருகால் மட்டு முடியவேண்டா" என்று வாக்ய தாத்பர்யம். h குடியோ! - குடியன்றோ என்றீடுபாடு. 9.



## எட்டாம் திருமொழி—பத்தாம் பாட்டு

**நாகத்தி னணையானை நன்னுதலாள் நயந்துரைசெய்**
**மேகத்தை வேங்கடக்கோன் விடுதூதில் விண்ணப்பம்**
**போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதைதமிழ்**
**ஆகத்து வைத்துரைப்பா ரவர்அடியா ராகுவரே.**

பதவுரை:— **நல் நுதலாள்**—விலக்ஷணமான முகத்தை யுடையளாய் **போகத்தில் வழுவாத புதுவையர் கோன் கோதை**-ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வத்தில் குறையாதவரான பெரியாழ்வாருடைய மகளான ஆண்டாள், **நாகத்தின் அணையான் வேங்கடக்கோனை** — திருவனந்தாழ்வானைப் படுக்கையாக வுடையனான திருவேங்கடமுடையானை, **நயந்து**—ஆசைப்பட்டு, **உரைசெய்** - அருளிச்செய்ததாய், **மேகத்தை விடு தூதில் விண்ணப்பம்**-மேகத்தைத் தூதுவிடுவதாக அமைந்த விண்ணப்பமாகிய, **தமிழ்** — இத்தமிழ்ப் பாசுரங்களை, **ஆகத்துவைந்து** — ஹ்ருத$_3$யத்திலே வைத்துக்கொண்டு, **உரைப்பாரவர்**—ஓதவல்லவர்கள், **அடியார் ஆகுவர்**—எம்பெருமானுக்கு நித்ய கைங்கரியம் பண்ணப்பெறுவர்கள்.

**வ்யா:— நிக$_3$மத்தில்** - (நாகத்தினணையானை) **நீங்கள் சென்று அறிவிக்குமித்தனையே வேண்டுவது; அத்தலையில் ஒரு குறையில்லை;** a **நம்** வரவுக்குறுப்பாகப் **படுக்கை படுத்துச் சாய்ந்து கிடந்தான்.** b (நன்னுதலாள்) **அப்படுக்கையிலே துகைத்து ஏறத்தகும் அவயவஶோபை$_4$யை உடையவள்.**

---

10. *அவ:*— இத்திருமொழி கற்றார்க்குப் ப$_4$லம் சொல்லித் தலைக்கட்டுகிறாள்.

*வ்யா:*— *(நாகத்தினணையானை)* மேக$_4$ங்களாகிற நீங்கள் சென்று அறிவிக்கவேண்டியதே குறை. நான் வருவேன் என்று எதிர்பார்த்துப் படுக்கையில் படுத்துக்கிடக்கிறான். *(நன்னுதலாள்)* அப்படுக்கையிலே துகைத்து ஏறலாம்படியான

---

பத்தாம் பாட்டு. (நாகத்தினணையித்யாதி$_3$) a விவரணம் (நம்வரவுக்கு இத்யாதி$_3$) d "வேங்கடக்கோன்" என்கையாலே

([c] நயந்துரைசெய் - விண்ணப்பம்) ஆசைப்பட்டுச் சொன்ன **விண்ணப்பம்.** (மேகத்தை வேங்கடக்கோன் விடுதூதில் விண்ணப்பம்) ராமாவதாரத்தில், ஐந்த்$_3$ரவ்யாகரண பண்டி$_3$தனைத் தூதாகவிட்டது; இங்கு, திருமலையிலே மேக$_4$ங்களைத் தூதாகவிடாநின்றாள்; இதுவே வாசி. அங்குநின்றும் வந்தாரையே விடுகை இரண்டிடத்திலும் ஒக்கும். [d] அவ்வவதாரத்தில் பிற்பாடர்க்கு இழக்கவேண்டாதபடி, திருமலையிலே வந்து 'தூதுவிடுவார் ஆரோ' என்று அவஸரம் பார்த்து இராநின்றாளாய்த்து.

(போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதை தமிழ்) ப$_4$க$_3$வத்$_3$ போ$_4$க$_3$த்தில் ஒன்றும் தப்பாதபடி எல்லா வகையாலும் அநுப$_4$வித்த பெரியாழ்வார் வயிற்றிற் பிறப்பாய்த்து - இவ்வாசைக்கு ஊற்று. [e] விப$_4$வமுண்டானவன்று

---

திருமுகமண்டல ஒளியாகிற பெருமையைப் பெற்றவள். (*நயந்துரை செய் விண்ணப்பம்*) எம்பெருமானை ஆசைப்பட்டுச் சொன்ன விஜ்ஞாபனம். (*மேகத்தை வேங்கடக்கோன் விடு தூதில் விண்ணப்பம்*) ராமாவதாரத்தில் ஸீதாப்பிராட்டி ஐந்த்$_3$ரவ்யாகரண பண்டி$_3$தனை அனுமனைத் தூதாகவிட்டாள்; ஆண்டாள் இங்கு திருமலையில் மேக$_4$ங்களாகிற அசேதனங்களைத் தூதாக விடுகின்றாள். இரண்டு தூதுக்கும் இதுவே வேற்றுமை. நாயகனிடமிருந்து வந்தவர்களையே தூதாக விடுவது இரண்டுக்கும் ஒற்றுமை. (*வேங்கடக்கோன்*) அந்த அவதாரத்துக்குப் பிற்பட்டவர்கள் தூதுவிடும் ரஸத்தை இழக்கவேண்டாதபடி "திருமலையிலே உள்ள நம்மைக் குறித்து எவரேனும் தூதுவிடுவார்களோ" என்று எதிர்பார்த்து, திருமலையிலே வந்து நிற்கின்றாயிற்று. (*போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதை தமிழ்*) எம்பெருமானுடைய அநுப$_4$வத்தில் ஒன்றும் குறையாதபடி 'வண்ணமாடங்க'ளிலே திருவவதாரச் சிறப்பு தொடங்கி திருப்பாத$_3$ாதி$_3$கேசவர்ணநம்,

---

வ்யாவ்ருத்தியும் காட்டுகிறார் (அவ்வவதாரத்திலித்யாதி$_3$)

[e] விப$_4$வம் - சாடு; - அவதாரம் அர்த்த$_2$ம் ; ஐஶ்வர்யம் - த்$_4$வநி. [b] "நுதல்" - நெற்றி. [c] "நயந்து" - ஆசைப்பட்டு,



தொடங்கி போ$_4$க$_3$த்திலே அந்வயித்தவரிறே பெரியாழ்வார்: "கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்" என்று தொடங்கி அநுப$_4$வித்தவரிறே. இது அப்$_4$யஸிக்கைக்கு எவ்வளவதி$_4$காரம் வேணுமென்னில்; — ([f] ஆகத்து வைத்துரைப்பாரவர்) "ஒருத்தி ஒரு விஷயத்தை ஆசைப்பட்டுப் படும்பாடென்!" என்று அநுஸந்தி$_4$த்துச் சொல்லவல்லவர்கள். (அடியாராகுவரே) மேக$_4$ங்களைத் தூதுவிடவேண்டாதே, இவள்தான் மேக$_4$ங்களைத் தூதுவிட்டவதுவே ஹேதுவாக இவளாசைப்பட்ட கைங்கர்யத்தைப்பெற்று வாழப்பெறுவர். [g] "ஶேஷத்வம் த்யாஜ்யம்" என்றிறே புறம்புள்ளார் நினைத்திருப்பது;

---

தாலாட்டு, அம்புலிப்பருவம், செங்கீரைப்பருவம், சப்பாணிப் பருவம், தளர்நடைப்பருவம், அச்சோப்பருவம், புறம்புல்குதல், பூச்சிகாட்டுதல், முலையுண்ணல், காதுகுத்தல், நீராட்டம், குழல் வாரல், கோல்கொண்டு வாவென்னல், பூச்சூட்டல், காப்பிடல், பா$_3$லக்ரீடை$_3$கள், அம்மம் தாரேனென்னல், கன்றின் பின் போக்கினேன் என்று இரங்கல், வரவு கண்டு மகிழ்தல் முதலான போ$_4$க$_3$ங்கள் ஒன்றிலும் ஒரு குறையில்லாதபடி அநுப$_4$வித்த பெரியாழ்வார் வயிற்றில் பிறந்ததே இவ்வாசைக்கு அடியாகும். விப$_4$வம் (1 அவதாரம். 2 செல்வம்) உண்டானவன்று தொடங்கி போ$_4$க$_3$த்தில் அந்வயித்தவரன்றோ பெரியாழ்வார். "கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்" [பெரியாழ் திரு 1-1-1] என்று தொடங்கி அநுப$_4$வித்தவரன்றோ. இத்திருமொழியைக் கற்பதற்கு எவ்வளவு தகுதிவேண்டும்? எனில் (*ஆகத்துவைத்துரைப்பார் அவர்*) "ஆண்டாள் ப$_4$க$_3$வத்$_3$ விஷயத்தை ஆசைப்பட்டு என்ன பாடுபடுகிறாள் !" என்று அநுஸந்தி$_4$த்து இத்திருமொழியைச் சொல்லவல்லவர்கள். (*அடியார் ஆகுவரே*) மேக$_4$ங்களைத் தூதுவிடவேண்டிய அவஶ்யமில்லாமல் இவள் மேக$_4$ங்களைத் தூதுவிட்டதை அநுஸந்தி$_4$த்ததே ஹேதுவாக, இவள் ஆசைப்பட்ட ப$_4$க$_3$வத்கைங்கர்யத்தைப் பெற்று வாழப்பெறுவர். (*அடியார் ஆகுவரே*)

---

"உரைசெய்" - உரைக்கப்பட்ட. [f] "ஆகம்"-நெஞ்சு. [g] இத்தைப் புருஷார்த்த$_2$மாகச் சொல்லுவானென்னென்ன

h ஶேஷத்வம் புருஷார்த்த2மென்று கேட்கலாவது — இவ்வாழ்வார்கள் பக்கலிலேயிறே. i அபி4மதவிஷயத்தில் தா3ஸ்யம் பே4ாக3மாயிருக்குமிறே; j இதரவிஷயங்களில் ஶேஷத்வமிறே கழிக்கிறது; k வகுத்த விஷயத்தில் ஶேஷத்வம் உத்3தே3ஶ்யமாகக்கடவது. அந்யஶேஷத்வமாய்த்துத் தவிர்க்கிறது. 10.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.
எட்டாம் திருமொழி முற்றிற்று.

---

"ஸேவா ஶ்வவ்ருத்திர் வ்யாக்2யாதா
தஸ்மாத் தாம் பரிவர்ஜயேத்" [மநு 4.6]
[பிறருக்கு அடிமைத் தொழில் செய்வது நாயின் தொழிலாகும்; ஆகையால் அதை அடியோடு விலக்கவேண்டும்.]
"ஸர்வம் பரவஶம் து3:க்க2ம் ஸர்வமாத்மவஶம் ஸுக2ம்"
[மநு 4.160]
[பிறருக்கு அடிமைப்பட்டிருப்பது அனைத்தும் துன்பம். தனக்கு வஶப்பட்டிருப்பது அனைத்தும் இன்பம்.] முதலான ப்ரமாணங்களை மேலெழுந்த வாரியாகப் பார்த்துப் பலர் எம்பெருமான் விஷயத்திலும் அடிமைப்பட்டிருப்பது கூடாது என்று நினைத்திருப்பார்கள். அக்கொள்கையை அறுத்து, ப4க3வச்சே2ஷத்வம் பரமபுருஷார்த்த2ம் என்பதை அறுதியிடுவதற்கே ஆழ்வார்கள் அவதரித்தனர். தன் மனைவிக்கு அடிமை செய்வதை ஒவ்வொருவரும் போ4க3மாகக்கொள்வதைக் காண்கிறோம். மிக இனியனான எம்பெருமான் விஷயத்தில் அடிமை மிக இனியது என்று சொல்லவும் வேண்டுமோ?

---

(ஶேஷத்வமித்யாதி3) h "सेवा श्ववृत्तिः" (ஸேவா ஶ்வவ்ருத்தி:) என்று த்யாஜ்யமன்றோ, அடியாரென்கை புருஷார்த்த2மோ? என்ன அருளிச்செய்கிறார் (ஶேஷத்வம் புருஷார்த்த2மித்யாதி3) i ஆனால் ஶேஷத்வம் து3:க்க2ரூபமாயிராதோ? என்ன அருளிச்செய்கிறார் (அபி4மத இத்யாதி3) j "सर्वं परवशं दुःखं" (ஸர்வம் பரவஶம் து3:க்க2ம்) என்றும், "तां परिवर्जयेत्" (தாம் பரிவர்ஜயேத்) என்றும் நிஷேதி4க்கிறதென்னென்ன அருளிச்செய்கிறார் (இதர விஷயங்களிலித்யாதி3) k விவரணம் (வகுத்த விஷயத்திலித்யாதி3). 10.

ஜீயர் திருவடிகளே சரணம்.



## ஒன்பதாம் திருமொழி
## சிந்துரச்செம்பொடி ப்ரவேஶம்

அவ:— 132. "प्राणानामपि सन्देहो मम स्यात्" (ப்ராணாநாமபி ஸந்தே3ஹோ மம ஸ்யாத்) என்னும் த3ஶையாய்த்து கீழ் நின்றது; அத்த3ஶை தன்னை அங்குச்சென்று அறிவிக்கைக்கு ஆள்பெற்றதிறே a அங்கு. அங்ஙன்போய் அறிவிக்கைக்கும் ஒருவரின்றிக்கே, "போயறிவிக்கவேணும்" என்று சொன்ன மேக4ங்களும் போகாதே, நின்றவிடத்திலே

---

முற்கூறிய ப்ரமாணங்கள் எம்பெருமானைத் தவிர்ந்த மற்ற ப்ராக்ருதவிஷயத்தில் அடிமையையே நிந்தி3த்துக் கழிக்கின்றன. மிக இனியதாய் வகுத்த விஷயமான ப4க3வத்3விஷயத்தில் ஶேஷத்வம் மிகவும் உத்3தே3ஶ்யமாகும். ப4க3வத்3ப4ாக3வதர்கள் தவிர்ந்த மற்றவர்கள் விஷயத்தில் அடிமையையே ஶாஸ்த்ரங்கள் விலக்குகின்றன.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி த3ாஸன் இயற்றிய
எட்டாம் திருமொழி விவரணம் நிறைவு பெற்றது.

## ஒன்பதாம் திருமொழி வ்யாக்2யான விவரணம்
### சிந்துரச்செம்பொடி ப்ரவேஶம்

132. க3தே ஹி ஹரிஶார்தூ3ல புநராக3மநாய து।
ப்ராணாநாமபி ஸந்தே3ஹோ மம ஸ்யாந் நாத்ர ஸம்ஶய:॥
[ரா-ஸு 39-22]
[வானரர் தலைவனான அநுமனே! நீ திரும்பி வருவதற்காகப் போனாலும் நான் உயிர்வாழ்வது ஸந்தே3ஹமாகும். இவ்விஷயத்தில் ஸந்தே3ஹமில்லை] என்று ஸீதாப்பிராட்டி அருளியது போல் சென்ற திருமொழியில் உயிர்த4ரிக்கமுடியுமோ முடியாதோ என்னும் நிலை ஆண்டாளுக்கு ஏற்பட்டிருந்தது. ஆனாலும் தனது அந்த நிலையை அங்கு சென்று அவனிடம் அறிவிப்பதற்கு அனுமனாகிற தூ3தன் வாய்க்கப்பெற்ற சிறப்பு

---

அரு:— சிந்துரச்செம்பொடி ப்ரவேஶே. a (அங்கு)- பிராட்டிக்கு. கீழ் மேக4ங்களைத் தூதுவிட்டாளாய் நின்றது;

நின்று வர்ஷித்தன; அத்தாலே அக்காலத்துக்கு அடைத்த பதா3ர்த்த2ங்களடங்கலும் அரும்பிற்று; அலர உபக்ரமிப்பனவும், கழிய அலர்வனவுமாய், அவைதான் செவ்வி பெற்று, திருமேனிக்கும், அவயவஶோபை4க்கும் ஸ்மாரகமாய்க்கொண்டு, கண்டதடங்கலும் பா3த4கமாகிறதாய், சில பா3தி4க்கைக்கு ஒருப்பட்டபடியாய்த்து - இத்திருமொழி. அதுதான் போய் முறுகி ப்ராணன்கள் கொண்டு ஜீவிக்க அரிதாம்படியான அளவாய்த்து மேலில் திருமொழி. ஆக, இரண்டுங்கூட இன்னுயிர்ச் சேவலினுடைய அவஸ்தை2யாய்ச் செல்லுகிறது.

---

ஸீதா பிராட்டிக்கு இருந்தது ஆண்டாளுக்கு அப்படி தூ3து சென்று அறிவிக்கைக்கும் ஒருவரில்லாமல், சென்ற திருமொழியில் அறிவிக்கும்படி நியமிக்கப்பெற்ற மேக4ங்களும் போகாமல் ஆண்டாள் இருந்த இடத்திலேயே மழை பொழிந்தன. அதனால் அந்தக்காலத்தில் தோன்றக்கூடிய மலர்கள் முதலான பொருள்கள் அனைத்தும் அரும்பத் தொடங்கின. அவற்றில் சில மலரத் தொடங்கியபடியாகவும், சில மலர்ந்தவைபாகவும் இருந்தன. இப்படி அழகு பெற்ற இவை எம்பெருமானுடைய திருமேனியையும் கண்கள் முதலான அவயவங்களின் அழகையும் நினைவுபடுத்திக்கொண்டு, கண்டதனைத்தும் இவளை நலியும் பொருள்களாய், சில பொருள்கள் நலியத் தொடங்கியதைச் சொல்லுகிறது இந்த ஒன்பதாந்திருமொழி. இந்நிலை வளர்ந்து ஆண்டாளுக்கு உயிர்த4ரிக்க அரிதாயிருக்கும் நிலையைச் சொல்லுகிறது அடுத்ததான பத்தாம் திருமொழி. ஆக இவ்விரண்டு திருமொழிகளும் சேர்ந்து "இன்னுயிர்ச்சேவல்" [திருவாய் 9-5] என்னும் திருவாய்மொழியில் நம்மாழ்வாருக்கு ஏற்பட்ட நிலை ஆண்டாளுக்கு ஏற்பட்டபடியைக் கூறுகின்றன.

---

அவை அக்காலத்தில் வர்ஷித்து மறைந்தது. அவ்வர்ஷத்தால் உத்பந்நமான பதா3ர்த்த2ங்களுடைய இவளுக்கு பா3த4கமாய் இன்னுயிர்ச் சேவலின் அவஸ்தை2யாய்ச் செல்லுகிறது மேலிரண்டு திருமொழி.



## ஒன்பதாம் திருமொழி—முதல் பாட்டு

**சிந்துரச் செம்பொடிப்போல் திரு மாலிருஞ் சோலையெங்கும்**
**இந்திர கோபங்களே எழுந் தும்பரந் திட்டனவால்**
**மந்தரம் நாட்டிஅன்று மது ரக்கொழுஞ் சாறுகொண்ட**
**சுந்தரத் தோளுடையான் சுழ லையில்நின் றுய்துங்கொலோ?**

பதவுரை:— **திருமாலிருஞ்சோலை எங்கும்** — திருமாலிருஞ்சோலையில் பார்த்த பார்த்தவிடமெங்கும், **இந்திரகோபங்கள்**—பட்டுப்பூச்சிகளானவை, **செம்** — சிவந்த, **சிந்துரம் பொடிபோல்** — ஸிந்துரப்பொடிபோலே, **எழுந்து** — மேலெழுந்து, **பரந்திட்டன**—பரவிக்கிடக்கின்றன; **ஆல்**— அந்தோ!; **அன்று**—(கடலைக்கடைந்து அமுதமளிக்கவேணுமென்று தேவர்கள் சரணம்புகுந்து வேண்டின) அக்காலத்திலே, **மந்தரம்** — மந்தரமலையை, **நாட்டி**—(பாற்கடலில் மத்தாக) நாட்டி, (கடல்கடைந்து) **கொழு மதுரம்** —மிகவும் மது4ரமான, **சாறு** — அம்ருதரஸம்போன்ற பிராட்டியை, **கொண்ட**— ஸ்வீகரித்த, **சுந்தரத்தோளுடையான்** — ஸ்ரீஸுந்த3ர பா3ஹுநாத2னுடைய, **சுழலையில்நின்று**—சூழ்வலையில் நின்றும், **உய்தும் கொல்**—பிழைப்போமோ?.

வ்யா:— **முதற் பாட்டு.** (சிந்துரச்செம்பொடியித்யாதி3) **"திருமலையைக் உ கண்ணாலே கண்டாகிலும் த4ரிப்போ**

---

*1. அவ:—* திருமலையையும் காணமுடியாதபடி இந்திர கோபங்கள் (பட்டுப்பூச்சிகள்) அதை மூடிமறைத்துக்கொண்டு விட்டன. அழகர் விரித்த வலையிலிருந்து நாம் தப்புவோமோ? என்கிறாள்.

*வ்யா:— (சிந்துரச்செம்பொடி ........... பரந்திட்டனவால்)* "அவனைப் பிரிந்திருக்கும் இந்நிலையில் அவன் வாழுமிடமான திருமாலிருஞ்சோலைமலையைக் கண்ணாலே கண்டாவது உயிர்

---

முதற்பாட்டு. (சிந்துரமித்யாதி3) உ (கண்ணாலே கண்டாகிலும் தரிப்போம்) என்றது - அவன் ஸம்ப3ந்த4முடைய

மென்றால் அதுவுங்கூட அரிதாம்படியாவதே! b நம் த3சை யிருந்தபடியென்!" என்கிறாள். c "அவன் நாட்டில் குன்றுங் கொடியவோ ஒன்றும் தோன்றா" என்பர்களிறே; d "அவன் றன்னைக் காணப்பெறாவிட்டால் நாட்டில் மலைகளும் தோன்றா தொழியவேணுமோ ?" என்னாநிற்பர்களாய்த்து ; e அவன் வடிவுக்குப் போலியான திருமலையைக் கண்டாகிலும் த4ரிப்போமென்று பார்த்தால் அதுவும் e2 அரிதாம்படியாய் விடுவதே!. f (சிந்தூரச் செம்பொடிப்போல்) ஒரு மத்த

---

த4ரிப்போமென்று பார்த்தால் அதுவும் நமக்கு வாய்க்காதபடி சிந்தூரச் செம்பொடியைப்போன்ற பட்டுப்பூச்சிகள் திருமலை முழுவதையும் மறைத்துவிட்டனவே. நம்முடைய தௌ3ர்பா4க்3யம் இருந்தபடியென்!" என்கிறாள். தமிழிலக்கியங்களிலும் "அவன் நாட்டில் குன்றம் கொடியவோ ஒன்றும் தோன்றா" என்று கவி பாடினார்களன்றோ. நாயகனைக் காணப்பெறாவிட்டாலும் அவன் நாட்டில் மலைகளையாவது கண்டு த4ரிக்கமுடியாதபடி அவையும் தோன்றாதொழியவேண்டுமோ? என்று இதற்குப் பொருள். அதுபோலவே "எம்பெருமானுடைய வடிவை நினைவுபடுத்தும் திருமலையைக் கண்டாவது த4ரிப்போம் என்று பார்த்தால், அதுவும் அரிதாய்விட்டதே" என்கிறாள் ஆண்டாள். (*சிந்தூரச் செம்பொடிப்போல்*) திருமலை ஒரு மத3யானைபோலேயிருக்கிறது.

---

தன்றோ என்று கண்ணாலே கண்டாகிலும் த4ரிப்போமென்றாலென்றபடி. b (நம் த3சையிருந்தபடி) நம்முடைய பா4க்3யஹானியிருந்தபடி. c விரஹிணிகளுக்கு நாயகனுடைய தே3சத்தில் மலை அபேக்ஷிதமாயிருக்குமோவென்ன ; அபேக்ஷிதமென்னுமத்தைத் தமிழர் துறையிலே அருளிச் செய்கிறார் (அவன் நாட்டிலித்யாதி3 d எடுத்த வசனத்துக்கு அர்த்த2ம் (அவன் றன்னையித்யாதி3) e கீழ் - திருமலையைக் கண்டு த4ரிக்கைக்கு ஹேது - ஸம்ப3ந்த4மென்றருளிச் செய்தாராய், தத்ஸ்மாரகத்வேந என்று ஹேத்வந்தரம் அருளிச்செய்கிறார் (அவன் வடிவுக்கித்யாதி3) e2 (அரிதாம் படியாய் விடுவதே) அதாவது-இந்திர கோபங்கள் மறைக்கை யாலே என்றபடி. f "சிந்தூரம்"-சாதிலிங்கம். "செம்மை"-



க3ஜம்போலேயாய்த்துத் திருமலை. அது ஸிந்து4ரிதமானாப் போலே இராநின்றதாய்த்து இவைவந்து பரம்பினபோது. g மத்தக3ஜத்துக்குத் g2 துவரூட்டினாற்போலே இராநின்ற தாய்த்து. h (திருமாலிருஞ்சோலையெங்கும்) ஜக3த்தெல்லா மென்றபடி. ஜக3த்தாவது - கண்ணுக்கு விஷயமாயிருப்ப

---

அதற்கு சிந்தூரச்செம்பொடியை மத்தகத்திலே பூசினதுபோலே யிருக்கிறது பட்டுப்பூச்சிகள் வந்து பரவினபோது. மதயானைகளுக்கு மத்தகத்திலே சிந்தூரப்பொடியைப் பூசுவது வழக்கம். அதைத் 'துவரூட்டுதல்' என்பர். மலையாகிற மதயானைக்கும் அது செய்தாற்போலே இருக்கிறது. 'சிந்தூரம்' என்று அப்பொடியின் சிவப்பு நிறத்தையும், 'செம்' என்று அதன் அழகையும் குறிக்கிறது. "சிந்தூரமிலங்கத் தன் திருநெற்றிமேல்" [பெரியாழ்-திரு 3-4-6] என்றாரன்றோ பெரியாழ்வாரும். (*திருமாலிருஞ்சோலையெங்கும்......பரந்திட்டனவால்*) அவனது திருவத4ரத்தின் சிவந்த நிறத்தை நினைவுபடுத்திக்கொண்டு

---

அழகு. "சிந்தூரம்" என்று - ஆனை. g2 (துவரூட்டுகை)- அந்தப் பொடியை அதின் மஸ்தகத்திலே பூசுகை. g கீழ் வாக்யத்துக்கு விவரணம் (மத்த க3ஜத்துக்கு இத்யாதி3) h கீழே அவன் ஸம்ப3ந்த4ங்கொண்டும் திருமலையைக் கண்டு த4ரிப்போமென்றால் அது செய்யவொண்ணாதபடி இந்திரகோபங்கள் மறையாநின்றதென்றார்; அன்றிக்கே, இந்திரகோபங்கள் அவனுடைய திருவத4ரத்துக்குப் போலியான ஆகாரத்தாலே நலியாநின்றதென்று அர்த்தா2ந்தரம் விவக்ஷித்து, ஆனால் இந்திரகோபங்கள் அத4ரத்துக்குப் போலியாய் நலிகிறதாகில், ஜக3த்தில் இந்திரகோபங்களுக்கும் பா3த4கத்வமுண்டே. ஆனபின்பு, "ஜக3த்தில் இந்திர கோபங்கள் நலிகிறது" என்னாதே "திருமாலிருஞ்சோலை யெங்கும்" என்று விசேஷிப்பானென் ? என்ன (திருமா லிருஞ்சோலையெங்கும்-ஜக3த்தெல்லாமென்றபடி) என்கிறார்; அத2வா, வர்ஷாகாலத்தில் ஜக3த்தெல்லாம் இந்திர கோபங்கள் பரந்திராதோ, "திருமாலிருஞ்சோலையெங்கும்"

தொன்றிறே; இவள் கண்ணுக்கு விஷயம் திருமலையொழிய இல்லையாய்த்து. i (சிந்துரம்) - சிவப்பு. (செம்மை) - அழகு. "சிந்துரமிலங்கத் தன் திருநெற்றிமேல்" என்னக் கடவதிறே.

j (இந்திரகோபங்களே) k 133. "प्राकारं वानरीकृतं" (ப்ராகாரம் வாநரீக்ருதம்) என்னப்பெற்றதில்லை; லங்கையடங்க ) ராக்ஷஸரேயாயிருக்குமாபோலேயாய்த்து. (எழுந்தும் பரந்

---

திருமாலிருஞ்சோலையெங்கும் பரவிய பட்டுப்பூச்சிகள் என்னை நலிகின்றன என்னும் கருத்திலே சொல்லுவதாகவும் கொள்ளலாம். மழைகாலத்தில் உலகெல்லாம் பட்டுப்பூச்சி பரவும் போது "திருமாலிருஞ்சோலை எங்கும் பரவின" என்று கூறலாமோ? எனில் இவள் கண்ணுக்குப் புலப்படுவது திருமலை ஒன்றேயாகையால்; இங்கு திருமாலிருஞ்சோலையெங்கும் என்றது உலகமெங்கும் என்றபடியேயாகும்.

*(இந்திரகோபங்களே)*

133. த$_3$த்$_3$ருஶு ராக்ஷஸா தீ$_3$நா: ப்ராகாரம் வாநரீக்ருதம் ।
ஹாஹாகாரம் ப்ரகுர்வந்தி ராக்ஷஸா ப$_4$யமோஹிதா: ॥
[ரா-யு 41-99]

[மனம்வருந்திய ராக்ஷஸர்கள் மதில்களெல்லாம் குரங்குகளால் நிறைந்திருப்பதைக் கண்டார்கள். ப$_4$யத்தால் மோஹித்த ராக்ஷஸர்கள் ஐயோ ஐயோ' என்றனர்.] என்கிறபடியே ப$_4$க$_3$வத்$_3$ப$_4$க்தர்களான வாநரர்கள் எங்கும் நிறைந்ததுபோலல்லாமல், இலங்கை முழுவதும் ராக்ஷஸர்களேயாயிருப்பது போலே நம்மை நலியும் பட்டுப்பூச்சிகளே எங்கும் பரவின. (எழுந்தும் பரந்திட்டனவால்)

---

என்பானென் ? என்கிற ஶங்கையிலேயாகவுமாம். i "சிந்துரம்" என்றதுக்கு அர்த்தா$_2$ந்தரம் (சிவப்பென்று) j,k அவதா$_4$ரணார்த்த$_2$த்தைப் பற்ற அருளிச்செய்கிறார் 133. **"प्राकारं" (ப்ராகாரம்)** இத்யாதி$_3$. அநுகூலராலே சூழுகையன்றிக்கே



திட்டனவால்) m 134. "एषैवाशंसते लङ्कां" (ஏஷைவாஶம் - ஸதே லங்காம்) என்னுமாபோலே, பூ$_4$மியிலே தோன்றுவன சிலவும், ஆகாஶத்திலே எழும்புவன சிலவும், நாலடியிட்டு மேலே விழுந்தாற்போலே இருப்பன சிலவுமாயிராநின்றன வாய்த்து. n "இந்திரகோபங்களெம்பெருமான் கனிவாயொப்பான் சிந்தும் புறவில்" என்கிறபடியே-திருவத$_4$ரத்தில் பழுப்புக்கு ஸ்மாரகமாகாநின்றதாய்த்து.

---

134. யே து விஷ்டப்$_4$ய க$_3$ாத்ராணி க்ஷ்வேளயந்தி நத$_3$ந்தி ச ।
உத்த$_2$ாய ச விஜ்ரும்ப$_4$ந்தே க்ரோதே$_4$ந ஹரிபுங்க$_3$வா: ॥
ய ஏநமநுக$_3$ச்ச$_2$ந்தி வீரா: சந்த$_3$நவாஸிந: ।
ஏஷைவாஶம்ஸதே லங்காம் ஸ்வேநாநீகேந மர்தி$_3$தும் ॥
[ரா-யு 26-20, 22]

[உடம்பை உயர்த்திக்கொண்டும், ஸிம்ஹக$_3$ர்ஜனை செய்து கொண்டும், சப்தித்துக்கொண்டும், கோபத்தினல் எழுந்து குதித்துக்கொண்டுமிருக்கும் சந்தனவனவாஸிகளான இந்த வானர வீரர்களால் பின் தொடரப்படும் இந்த நளன் என்னும் வானரன், தன் ஸேனையாலேயே லங்கையை அழிக்கப்பார்க்கிறான்.] என்கிறபடியே இலங்கையில் வாநரஸேனை கிளர்ந்தெழுந்து பரவியதுபோலே பட்டுப்பூச்சிகளும் பூ$_4$மியில் காட்சியளிப்பவை சிலவும், ஆகாயத்தில் எழும்புவன சிலவும், சிறிது கிளம்பி மேலே விழுந்தாற்போலே இருப்பன சிலவுமாய் இராநின்றன. "இந்திர கோபங்கள் எம்பெருமான் கனிவாயொப்பான் சிந்துப்புறவில்" [பெரியாழ்-திரு 4-2-9] என்று பெரியாழ்வார் அருளியபடியே இப்பட்டுப்பூச்சிகள் எம்பெருமானுடைய கனிவாயை நினைவுபடுத்திக்கொண்டு என்னை நலிகின்றன என்று கருத்து.

---

ப்ரதிகூலரேயாய்த்து என்றபடி. m இது கிளம்பினது எப்படியென்ன அருளிச்செய்கிறார் 134. **"एषैव' (ஏஷைவ)** இத்யாதி$_3$. நாளுெருவனுமே லங்கையை ஸேனையோடே ஸம்ஹரிக்கிறேன் என்று கிளம்புமாபோலே என்றபடி. l,n (ராக்ஷஸரேயாயிருக்குமாப்போலே) என்ற பூ$_3$ாத$_4$கத்வம் எவ்வழியாலேயென்ன அருளிச்செய்கிறார் (இந்திரகோபங்க

(மந்தரம்நாட்டி) ஒருவர் பக்கலிலே ஒன்று கொள்ளப் புக்கால் பின்பு அவர்களுக்கு ஒன்றும் தொங்காதபடி கொள்வானொருவனாய்த்து. மந்த$_3$ர பர்வதத்தைக்கொடு வந்து கடலின் நடுநெஞ்சிலே நட்டுநெருக்கி, தானே அகவாயிலுள்ளது காட்டிக் கொடுக்கும்படி கடைந்தாய்த்து வாங்கிற்று. / o 135. “मन्दरमूढवात” (மந்த$_3$ரமூட$_4$வாத) இத்யாதி$_3$. p ஒருவரால் கலக்கவொண்ணாத பெரியதத்வங்களையும் கலக்கி அவர்கள்பக்கலுள்ளது கொள்வானொருவன். q ஸ்த்ரீத்வாபி$_4$மாநத்தாலே “நம்மை வந்து மேலிட்டழிக்கையாவதென் ?” என்றிருந்தாள்போலேகாணும் இவள்தான்.

---

(*மந்தரம் நாட்டியன்று மதுரக்கொழும் சாறுகொண்ட*) மந்தரமலையைக் கொண்டுவந்து கடலின் நெஞ்சுபோன்ற நடுப்பகுதியில் நட்டு நெருக்கி, அக்கடல்தானே தன் உள்ளே உள்ளதனைத்தையும் வெளிவிடும்படிக் கடைந்தாயிற்று தனக்கு உரியதையும் பெற்றுக்கொண்டது /“மந்த$_3$ரமூட$_4$வாத”முதலானவற்றில் சொன்னபடியே எவராலும் கலக்கமுடியாத கடல் போன்ற பெரிய தத்துவங்களையும் கலக்கி, அவைகளிடம் உள்ளதைக் கொள்கின்றவன் என்றும் அப்படிக் கொள்ளும்போது அவர்களுக்கு ஒன்றுமில்லாதபடி ஸாரமனைத்தையும் கொள்கின்றவன் என்றும் கருத்து. இதை இங்கே சொல்லுவானேன்? என்னில் “எம்பெருமான் நம்மை வந்து ஆக்ரமித்து அழித்துவிடமுடியுமோ ?” என்றிருந்த தன்னுடைய (ஆண்டாளுடைய) ஸ்த்ரீத்வாபி$_4$மாநத்தை அழித்தபடியையும், தன்னிடமுள்ள கைவளை முதலான அனைத்தையும் கொண்டடடியையும் உணர்த்துவதற்காகக் கூறுகிறாள்.

---

ளெம்பெருமான் இத்யாதி$_3$). o கடைந்தானே என்ன அருளிச்செய்கிறார் ‘मन्दरमूढ’ (மந்த$_3$ரமூட$_4$) இத்யாதி$_3$. p,q இப்போது கடல்கடைந்தத்தைச் சொல்லுவானென்? என்ன அருளிச்செய்கிறார் (ஒருவரால் கலக்க இத்யாதி$_3$) இத்தால் - தான் மதி$_3$த்திருந்த ஸ்த்ரீத்வாபி$_4$மாநத்தையும்போக்கி,. தனக்குள்ளத்தையும் தொண்டமை தோற்றச் சொன்னாள் என்றபடி.

---

/ முழுப்ரமாணமும், பொருளும் தெரியவில்லை.



(மதுரக்கொழும் சாறுகொண்ட) r தான்கொண்ட ப்ரயோஜநத்தைக் குறித்து, அல்லாதார் கொண்ட ப்ரயோஜநமாக நினைத்த உப்புச்சாறு-கடலில் ஜலத்தோபாதியிறே. s விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்டவனாய்த்து.

(சுந்தரத்தோளுடையான்) t நெருக்கினானேயாகிலும் கைவிடவொண்ணாதாய்த்துத் தோளழகிருப்பது. (u சுழலையில் நின்றுய்துங்கொலோ) அவன் நம்மைத தப்பாதபடி அகப்படுத்திக்கொள்ளப்பார்த்த சுழலையாய்த்து இம்மேக$_4$ஸ்ருஷ்டி.

---

(*மதுரக்கொழும் சாறுகொண்ட*) இப்படிக் கடலைக்கடைந்து அவன் கொண்டது தேவர்களுக்குரிய அம்ருதமாகிற உப்புச்சாறும், தனக்குரிய இனிமையும் அழகும் வெள்ளமிடும் பெரியபிராட்டியாராகிற மதுரக்கொழுஞ்சாறுமேயாகும். எம்பெருமான் தான் கொண்ட பயனோடு ஒப்பிட்டால் தே$_3$வர்கள் கொண்ட பயனாகிற தே$_3$வாம்ருதமாகிற உப்புச்சாறு கடலில் உள்ள உவர்நீர்போன்றதேயன்றோ. “விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே” [பெரியதிரு 6-1-2] என்று இதைத் திருமங்கையாழ்வாரும் தெளிவாக அருளிச்செய்தார். (*சுந்தரத் தோளுடையான்*) நலிந்தானேயானாலும் இவனைக் கைவிடமுடியாதபடியாயிற்று இவனது தோளழகு இருப்பது. (*சுழலையில் நின்றுய்துங்கொலோ*) அவன் நம்மைத் தப்பிப்போகமுடியாதபடி அகப்படுத்திக்கொள்ளுவதற்காக வைத்த சுழலை. (*சூழ்வலை*) ஆயிற்று இந்த மேக$_4$ஸ்ருஷ்டி. ஆகவே அது நம்மை நலிவதிலிருந்து தப்பி நம்மால் உஜ்ஜீவிக்கமுடியுமோ ?

---

r (தான் கொண்ட) பிராட்டியை ப்ரயோஜநமாகக்கொண்டு, கடலில் அம்ருதத்தை அவன் ப்ரயோஜநமாக நினைக்க, அந்த உப்புச்சாறு கடலில் ஜலத்தோபாதியாய்த்து என்றபடி. s அம்ருதம் ஜலமென்னும்படி பிராட்டி அம்ருதமாயிருப்பாளோ ? என்ன அருளிச்செய்கிறார் (விண்ணவர் இத்யாதி$_3$) t நெருக்கினானேயாகிலும் என்றது - நோவு

அத்தைத்தப்பி உஜ்ஜீவிக்க வல்லோமாவோமோ? v 136. "मेघोदयस्सागरसन्निवृत्तिः" (மேகே$_4$ாத$_3$யஸ்ஸாக$_3$ர ஸந்நிவ்ருத்தி:) என்னக்கடவதிறே. ஒரு மஹாப$_3$ாஹு, நம்மை அகப் படுத்துகைக்குப் w பார்த்துவைத்த வலையை நாம் தப்பி உஜ் ஜீவிக்கை என்று ஒரு பொருளுண்டோ? இனி முடிந்து போமித்தனையன்றோ? 1.

ஒன்பதாம் திருமொழி—இரண்டாம் பாட்டு

போர்க்களி றுபொரும்மா லிருஞ் சோலையம் பூம்புறவில்
தார்க்கொடி முல்லைகளும் தவ ளநகை காட்டுகின்ற
கார்க்கொள் படாக்கள்நின்று கழ றிச்சிரிக் கத்தரியேன்
ஆர்க்கிடு கோ?தோழீ! அவன் தார்செய்த பூசலையே.

பதவுரை:— **போர் களிறு**—போர்செய்வதையே தொழி லாகவுடைய யானைகள், **பொரும்**—பொருது விளையாடு மிடமான, **மாலிருஞ்சோலை**—திருமாலிருஞ் சோலைமலையி

---

136. மேகே$_4$ாத$_3$யஸ் ஸாக$_3$ரஸந்நிவ்ருத்திர்
வித்$_3$யுத்$_3$விப$_4$ங்க$_3$: ஸ்பு$_2$ரிதாநி வாயோ: ।
இந்தே$_3$ார் விப$_4$ாகே$_3$ா க$_3$தமுஷ்ணரஶ்மேர்
விஷ்ணோர் விசித்ரா: ப்ரப$_4$வந்தி மாயா: ॥

[மேக$_4$ம் தோன்றுவது, ஸமுத்$_3$ரம் அலை பொங்கித் திரும்புவது, மின்னல் தோன்றி மறைவது, காற்று அசைவது, சந்திரனின் வ்ருத்$_3$தி$_4$க்ஷயப் பிரிவுகள், ஸூர்யன் செல்வது ஆகிய இவை யெல்லாம் விஷ்ணுவின் விசித்திரமான மாயைகள்.] என்கிற ப்ரமாணத்தின்படி மேக$_4$ம் உண்டாவது எம்பெருமானுடைய ஸங்கல்பத்தாலன்றோ. சுந்தரத்தோளுடையானாகிற ஒரு மஹா ப$_3$ாஹு நம்மைப் பிடிப்பதற்காக விரித்த வலையிலிருந்து தப்பி நாம் உயிர்வாழ்வது என்பது முடியுமோ? இனி அழிவது நிச்சயமன்றோ என்று கருத்து. 1.

---

படவிட்டானேயாகிலும் என்றபடி. v மேக$_4$ம் அவன் ஸ்ருஷ்டியோ? என்ன அருளிச்செய்கிறார் "मेघोदयः" (மேகே$_4$ாத$_3$ய:) இத்யாதி$_3$. u,w "சுழலை" - சூழ்வலை. 1.



லுடைய, **அம் பூ புறவில்**—மிகவும் அழகிய தாழ்வரை களிலே, **தார் கொடி முல்லைகளும்**—அரும்புகளையுடைய கொடி முல்லைகளும், **தவளம் நகை**—(அழகருடைய) வெளுத்த புன்சிரிப்பை, **காட்டுகின்ற**—நினைப்பூட்டா நின்றன; (அன்றியும்) **கார் கொள்**—சினைகொண்ட, **படாக்கள்**—படா என்னுங்கொடிகள், **நின்று**—பூத்துநின்று, **கழறிச் சிரிக்க**—'எமக்கு நீ தப்பிப்பிழைக்க முடியாது' என்று சொல்லிக்கொண்டே சிரிப்பது போல மலர, **தரியேன்**—(அதுகண்டு) த$_4$ரிக்கமாட்டுகின்றிலேன்; **தோழீ**—எனது உயிர்த்தோழியே! **அவன் தார்**—(நாம் ஆசைப் பட்ட) அவனுடைய தோள்மாலையானது, **செய்த**—உண்டு பண்ணின, **பூசலை**—பரிப$_4$வத்தை, **ஆர்க்கு இடுகோ**—யாரிடத்து முறையிட்டுக் கொள்வது?

வ்யா:— **இரண்டாம் பாட்டு.** a (போர்க்களிறுபொரும் மாலிருஞ்சோலை) **களிறுகள் களிக்குமூராய்த்து; பிடியே யாய்த்து உருவுகிறது. ஆனைகள் திருமலையிலே கரை பொருது திரியாநிற்குமாய்த்து; அழகியதாகப்பூத்த பர்யந்**

---

2. *அவ:*— அவன் தோள்மாலையை ஆசைப்பட்டு நான் படும்பாட்டை யாரிடம் முறையிடுவது? என்கிறாள்.

*வ்யா:*— *(போர்க்களிறு பொரும் மாலிருஞ்சோலை)* போர் செய்வதையே தொழிலாகவுடைய யானைகள் ஒன்றோடொன்று போர்செய்து விளையாடிக்களிக்கும் இடமான மாலிருஞ்சோலை. எம்பெருமானைப்போல் ஆண்யானைகள் களித்துத் திரிகின்றன. என்னைப்போலே பெண்யானைகளான பிடிகள் பிரிவுத்துன்பத் தால் நலிவடைகின்றன. *(போர்க்களிறு பொரும்)* ஆண் யானைகள் திருமலையில் மேட்டுநிலங்களை த$_3$ந்தத்தாலே குத்தி விளையாடுகிறதைச் சொல்லுகிறதாகவுமாம். *(அம்பூம்புறவில்)* திருமலையிலே உள்ள அழகாகப் பூத்த தாழ்வரைகளில். *(தார்க்*

---

இரண்டாம் பாட்டு. (போர்க்களிறு இத்யாதி$_3$)
a "போர்க்களிறு"-யுத்$_3$தோ$_4$ந்முக$_2$மான யானை. b "கார்"-

தங்களிலே. (தாரித்யாதி$_3$) அழகிதாகப் பூத்த முல்லைக் கொடியானது ஸம்பே$_4$ாக$_3$த்தினுடைய உபோத்$_3$க$_4$ாதத்தில் அவனுடைய மந்த$_3$ஸ்மிதத்துக்கு ஸ்மாரகமாகாநின்ற தாய்த்து. விஜாதீயராய் நம்மை நலியப்பெற்ருேமோ?.

b (காரித்யாதி$_3$) சினைகொண்ட படாக்களானவை எங்கு மொக்க முட்டாக்கிடப் பூத்துக் கிடந்தபோது ஸம்ஶ்லேஷம் போய் உந்மஸ்தகரஸமாய், பின்னை ஒருதலையில் பேற்றுக்கு c விட்டுச்சிரிக்குமதுக்கு ஸ்மாரகமாகாநின்றதாய்த்து. (ஆர்க்கிடுகோ தோழீ அவன்தார் செய்த பூசலையே) நாம் அவன் தோளிலிட்ட மாலையை ஆசைப்பட்டு அது விளைத்த மஹாப$_4$ாரதத்தை யார்க்குச் சொல்லுவோம்? d தோழி

---

*கொடி முல்லைகளும் தவளநகை காட்டுகின்ற)* அழகாகப்பூத்த முல்லைக்கொடியானது எம்பெருமான் நம்மோடு கலக்கத் தொடங்குகையில் செய்யும் புன்முறுவலை நினைவுபடுத்தி நம்மை நலிகின்றன. பெண்கொடியான என்னை, என்னைப்போன்றதான முல்லைக்கொடி நலிகின்றது. ஒரு ஜாதியைச் சேர்ந்த வஸ்துவை மற்றொரு ஜாதியைச் சேர்ந்தவை நலியலாம். கொடி தன் ஜாதியைச் சேர்ந்த மற்றொரு கொடியை நலியலாமோ? என்று கருத்து.

*( கார்க்கொள் படாக்கள்நின்று கழறிச்சிரிக்கத் தரியேன் )* கருக்கொண்ட *( சினைகொண்ட )* படாக்கள் என்னும் கொடிகளானவை கொடிமூடும்படியாகப் பூத்துக்கிடந்தது—எம்பெருமான் என்னோடு கலந்த கலவியின் உச்சநிலையில் புருஷனை தனது ஸ்வதந்த்ரமான ஆநந்த$_3$த்தாலே வாய்விட்டுச் சிரிப்பதை நினைவுபடுத்திக்கொண்டு என்னை நலிகின்றது *(ஆர்க்கிடுகோ தோழீ அவன் தார்செய்த பூசலையே*! நாம் அவன் தோளிலிட்ட மாலையை ஆசைப்பட்டு அதனுலுண்டான மஹாப$_4$ாரதப்போரை ஆருக்குச்சொல்லி ஆறுதல் அடைவது? 'தோழீ'என்று விளிக்கப்பட்ட தோழிக்குச் சொல்லக்கூடாதோ?

---

சினை. "படா"-புஷ்பவிஶேஷம். c (விட்டுச்சிரிக்க)-பெரிய



தான் இவளுக்கு முன்னே மோஹித்துக் கிடந்தாள்; இவளிழவுக்கு. இவளுக்கு முன்பே தறைப்பட்டாளாய்த்து அவள். "எம்மில் முன் அவனுக்கு மாய்வராலோ" என்னுமா போலே. லாப$_4$ாலாப$_4$ங்கள் இரண்டுதலைக்கும் ஒத்திருக்கையாலே நீ எனக்கு முன்னே நோவுபடாநின்ருய்; என் ஆற்ருமையை உனக்குச்சொல்லி த$_4$ரிக்கப்பெறுகிறிலேன்; இனி இதுகொடு காரியமின்றிக்கே, புறம்பே அந்யபராராயிருக்கிறவர்களுக்குச் சொல்லவோ நான்?. 2.

## ஒன்பதாம் திருமொழி — மூன்ரும் பாட்டு

**கருவிளை யொண்மலர்காள்! கா யாமலர் காள்!திருமால்**
**உருவொளி காட்டுகின்றீர் எனக் குய்வழக் கொன்றுரையீர்**
**திருவிளை யாடுதிண்டோள் திரு மாலிருஞ் சோலைநம்பி**
**வரிவளை யில்புகுந்து வந் திபற்றும் வழக்குளதே.**

**பதவுரை:—** **ஒண்** — அழகிய, **கருவிளை மலர்காள்**— காக்கணம் பூக்களே! **காயாமலர்காள்**—காயாம்பூக்களே! (நீங்கள்) **திரு மால்** — பிராட்டியோடு கூடிய எம்பெருமானுடைய, **உரு ஒளி**—திருமேனியின் நிறத்தை, **காட்டுகின்றீர்** — நினைப்பூட்டாநின்றீர்கள்; **எனக்கு** — (அதனை

---

எனில்: அத்தோழியானவள் இவள் படும் பாட்டைக் கண்டு இவளுக்கு முன்னே மயங்கித் தரையிலே சாய்ந்தாள். "எம்மில்முன் அவனுக்கு மாய்வராலோ" [ திருவாய் 9 9-5 ] என்று நம்மாழ்வாரும் இவ்விஷயத்தை அருளிச்செய்தாரன்ரே. 'லாப$_4$நஷ்டங்கள் நம் இருவருக்கும் பொதுவாகையாலே, நீ எனக்கு முன்னே வருந்தி மயங்கினுய். ஆகையால் என் ஆற்ருமையை உனக்குச் சொல்லி என்னுல் உயிர்த$_4$ரிக்கமுடியவில்லை. இனி நான்படும் பாட்டைப்பற்றிக் கவலையேயில்லாமல் எத்தனையோ கவலைகளைச் சுமந்து திரியும் மற்றுள்ளாரிடமோ நான் முறையிடுவது?" என்று கருத்து. 2.

---

ஹாஸம்பன்னை. d தோழியிருக்க, "ஆர்க்கு" என்பானென்? என்ன அருளிச்செய்கிருர் (தோழிதான் இத்யாதி$_3$). 2.

நினைத்து வருந்துகின்ற) எனக்கு, **உய்வழக்கு ஒன்று** — பிழைக்கும் வகையொன்றை, **உரையீர்**—சொல்லுங்கள்; **திரு விளையாடு** — பெரியபிராட்டியார் விளையாடுமிடமான, **திண் தோள்** — திண்ணிய திருத்தோளையுடையரான, **திருமாலிருஞ்சோலைநம்பி**—அழகர், **இல் புகுந்து** - (எனது) வீட்டினுள்புகுந்து, **வரிவளை**—(எனது) அழகிய வளைகளை, **வந்திபற்றும் வழக்கு உளதே**—ப$_4$லாத்காரமாகக் கொள்ளை கொண்டு போவதும் நியாயமோ ?

**வ்யா:— மூன்ரும் பாட்டு.** (கருவிளையித்யாதி$_3$) **கருவிளையினுடைய அழகிய மலர்காள்!** (கருவிளை) காக்கணம். (காயா மலர்காள் திருமாலித்யாதி$_3$) **பெரியபிராட்டியாரும் அவனுமாய்க் கலந்திருந்தபோது தன்னிறம் பெற்றிருக்கும்போதைப் புகரைக் காட்டாநின்றிகோள்.** (எனக்கு) **என்றும் அவனுளாய் அவன் கார்யமே செய்து தலைக்கட்டப்பார்க்கு மித்தனையோ ?** a **இருவராலும் நொந்தாரை 'ஐயோ!'**

---

3. *அவ:*— சில மலர்களைப்பார்த்து, "திருமால் நிறத்தை நினைவுறுத்தும் நீங்கள் அவன்செய்த காரியம் நியாயமா என்று கூறுங்கள்' என்கிருள்.

*வ்யா:— ( கருவிளையொண்மலர்காள்! )* கருவிளை எனப்படும் காக்கணப் பூச்செடியில் மலர்ந்த ஒளியோங்கிய மலர்களே! *(காயா மலர்காள்!)* காயாம் பூக்களே! *(திருமால் உருவொளி காட்டுகின்றீர்)* பெரியபிராட்டியாரும் அவனுமாய்க் கலந்திருக்கும் சமயத்தில் குறையற்ற நிறத்தையுடைய எம்பெருமானின் திருநிறத்தை நினைப்பூட்டாநின்றீர்கள். *(எனக்கு உய்வழக்கொன்றுரையீர்)* என்னை நலிவதற்காக அவனால் படைக்கப்பட்டவர்களாயிருந்தபோதிலும், என்றுமே அவனுடைய ஆட்களாய் அவன் கார்யமே செய்யாமல், எனக்கும் ஒரு நியாயம் சொல்லுங்கள். நானும் அவனுமான இருவரில் நொந்துகிடக்கும் என் விஷயத்திலும் 'ஐயோ' என்று இரக்கப்

---

மூன்ரும் பாட்டு. (கருவிளை இத்யாதி$_3$) a (இருவராலும்)-தானுமவனுமாலும். b அவைதான் பா$_3$தி$_4$ப்பானென் ?



என்னவேண்டாவோ ? b "ஸர்வேஶ்வரன் கருத்தைப் பின் செல்லவேண்டாவோ எல்லார்க்கும்" என்றிராநின்றன வாய்த்து அவை. c நஞ்சீயர், ஸுந்த$_3$ரபாண்டிய தேவரைக் கண்டிராநிற்கச்செய்தே, 138. "गुणैर्दशरथोपमः" (கு$_3$ணைர் த$_3$ஶரதே$_2$ாபம:) என்கிறவிடத்துக்கு — "பிறந்து படைத்த கு$_3$ணங்களும், ஸ்வாப$_4$ாவிக கு$_3$ணங்களுமெல்லாங்கூடினு

---

படவாவது வேண்டாமா ? என்று கருத்து. அவை இவளை நலிவதற்குக் காரணம் என்ன ? எனில் " நம் அனைவர்க்கும் ஸ்வாமியான எம்பெருமானுடைய திருவுள்ளத்தை நாம் அனைவரும் பின்சென்ருகவேண்டும். ஆகையால் அவன் திருவுள்ளப்படி இவளை நலிவோம்" என்னும் நினைவுடையவையாயிருந்தன. அவை. 'பிராட்டியோடு தொடர்பாலே பெருமாள் நிறம்பெறுகிருர்' என்று கூறியதையும், 'எல்லோரும் பிதாவான எம்பெருமான் திருவுள்ளத்தைப்பின்செல்லவேண்டும்' என்று கூறியதையும் நிலைநிறுத்தும் பின்வரும் ஐதிஹ்யம் இங்கு அநுஸந்தி$_4$க்கத்தக்கது. நஞ்ஜீயர் காலத்தில் ஸுந்தர பாண்டியதே$_3$வர் என்று ஓர் அரசர் இருந்தார். அவர் நஞ்ஜீயரைச் சந்திக்கும்போது ஸ்ரீராமாயணத்தில் பல ஸந்தே$_3$ஹங்களைக் கேட்டுத் தெளிவடைவதுண்டு. அந்த ரீதியில்—

**138. ஸ ஹி வீர்யோபபந்நஶ்ச ரூபவாநநஸூயக: ।**
**பூ$_4$மாவநுபமஸ் ஸூநுர் கு$_3$ணைர் த$_3$ஶரதே$_2$ாபம: ॥**
[ரா-அ 1-9]

[அந்த ராமபிரான் வீரியமுள்ளவன்; வடிவழகுள்ளவன்; பொருமையற்றவன்; உலகிலேயே ஒப்பற்ற பிள்ளை. கு$_3$ணங்களாலே தந்தையான த$_3$ஶரத$_2$னை ஒத்தவன்.] என்னும் ஶ்லோகத்தைப் பற்றிய விசாரம் ஒருநாள் நேர்ந்தது. "எம்பெருமான் ஸ்ரீராமபிரானைப் பிறந்து படைத்த கு$_3$ணங்களும், அவனுக்கு

---

என்ன அருளிச்செய்கிருர் ( ஸர்வேஶ்வரன் இத்யாதி$_3$ ) c பெரியபிராட்டியாரும் தானுமாகக் கலந்தபோது தன்னிறம் பெற்றிருக்கும் என்றத்தைப் பிடித்து, அப்படி அவளாலே தனக்கு நிறமாம்படியிருக்குமோ ? என்ன அருளிச்செய்கிருர் (நஞ்சீயரித்யாதி$_3$) d இவள்நினைவும் பூக்கள்நினைவும் வெவ்

லும் $c_2$ மார்(அரை)மட்டேயாய், சக்ரவர்த்தித் திருமகன் என்னப்போருமித்தனை'' என்றருளிச்செய்ய; அத்தைக்கேட்டு "பரமபுருஷனுக்கு ஒருவன் வயிற்றிலே பிறந்து ஓரேற்ற முண்டாகவேணுமோ? அவன் பிறக்கையாலே அக்குடி தனக்கும் ஏற்றமாமித்தனையன்றோ?'' என்றானும். $c_3$ நாம் போன ஸமாதி$_4$ இவனறிந்திலனென்றுபார்த்து, "அதெல்லாங் கிடக்க; பரமபுருஷன் என்னும்படி $c_4$ என்தான்!'' என்றாராம்;

---

இயல்வாகவே உள்ள பரத்வம் முதலான கு$_3$ணங்களும் எல்லாம் கூடினாலும் சக்கரவர்த்தியான த$_3$ஶரத$_2$னின் கு$_3$ணங்களுக்கு அரைவாசியேயாய் 'சக்கரவர்த்தித்திருமகன்' என்று சொல்லப் போதுமானவையாயிருக்கும்'' என்று நஞ்சீயர் அருளிச்செய்தார். ''*ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் த$_3$ஶரதா$_2$த்மஜம்*'' [ரா-யு 120-11] [நான் என்னை மனிதனாகவும் த$_3$ஶரத$_2$னின்பிள்ளை ராமனாகவும் நினைத்திருக்கிறேன்] என்ற பெருமாள் திருவுள்ளத்தை அநுஸரித்தும், "*த$_3$ஶரதோ$_2$பம:*'' என்று சொல்லியிருக்கையாலே உபமானத்தைக் காட்டிலும் உபமேயம் மட்டமாயிருக்கும் என்னும் ஆலங்காரிகமரியாதை$_3$யை ஒட்டியும் இப்படி அருளிச்செய்தபடி. அதைக்கேட்ட ஸுந்த$_3$ரபாண்டியன் '' பரமபுருஷனுக்கு ஒருவன் வயிற்றில் பிறந்ததனால் ஒரு சிறப்பு உண்டாகவேணுமோ? அவன்பிறக்கையாலே அக்குடிக்குத்தானே சிறப்புண்டாகும் '' என்று ஆக்ஷேபித்தான். 'நாம் நினைத்த அர்த்த$_2$ங்களை இவன் அறிந்திலன்; சொன்னாலும் புரியாது' என்று உணர்ந்து அதற்குப் பதில் சொல்லாமல்''அதிருக்கட்டும்; நீ பரமபுருஷன் என்று சொன்னது எவ்வளவு அழகான வார்த்தை!'' என்று ஆழ்பொருள்படப் பேசி அவ்விஷயத்தை முடித்துவிட்டார் நஞ்சீயர்.

---

வேறாயிருந்ததுக்கு ஸம்வாத$_3$மாக ஓரைதிஹ்யமருளிச்செய்கிறார் (நஞ்சீயரித்யாதி$_3$) ராஜா, "ஸர்வாதி$_4$கனானவனை த$_3$ஶரத$_2$ற்கு ஸமமாகச் சொல்லலாமோ?'' என்று ஜீயரைக்கேட்க, **"आत्मानं मानुषं मन्ये'' (ஆத்மாநம் மாநுஷம் மந்யே)** என்று '' த$_3$ஶரத$_2$ன் மகன் '' என்கிறதே தமக்கு ஏற்றமாக நினைத்திருக்கையாலே ஸமரென்னலாம்; ஸௌஶீல்யமன்றிக்கே பரமபுருஷத்வமுண்டோ, *ஶீ*லகு$_3$ணம் உண்டானபோது காண் '' பரமபுருஷத்வம் '' என்று ஜீயருக்கு விவக்ஷை.



$d$ ஸ்ரீவிபீ$_4$ஷணாழ்வானை ப்ரஸங்கி$_3$த்தவாறே, " விபீ$_4$ஷணனேதான் அழகிதாகச்செய்தான்! ஆபத்ஸமயத்திலே ப்$_4$ராதாவை விட்டுப்போந்தானே!'' என்றானும்; $d_2$ எல்லாவற்றையும் விட்டுக்கொடுக்கவொண்ணாதென்று, "பிதாவும் ஜ்யேஷ்ட$_2$னான ப்$_4$ராதாவும் சேரப்போந்தவன்று ப்$_4$ராதாவை அநுவர்த்திக்கக்கடவன்; பிதாவோடே அவன் $d_3$ விரோதி$_4$த்தவன்று ஜ்யேஷ்ட$_2$னென்று பாராதே பிதாவை அநுவர்த்திக்கவேணும்'' என்றருளிச்செய்தார்.

---

இங்கு த$_3$ஶரத$_2$ன் பிள்ளையானதால் பெருமாளுக்கு நற்குணங்கள் அமைந்தன என்று கூறியது போன்றது—பிராட்டியின் தொடர்பால் பெருமாள் சிறம்பெற்றார் என்றதும் என்று கருத்து. மற்றொரு ஸமயம் ஸுந்த$_3$ரபாண்டியனோடு ஸ்ரீராமாயண விசாரம் செய்கையில் விபீ$_4$ஷணாழ்வானைப்பற்றிய ப்ரஸ்தாவம் வந்தது. அப்போது ஸுந்த$_3$ரபாண்டியன் "விபீ$_4$ஷணன்செய்த கார்யம் மிக அழகாயிருக்கிறது! ஆபத்துக்காலத்தில் தமையனைவிட்டு வந்தவனன்றோ அவன்''என்று விபீ$_4$ஷணாழ்வான் மேலே குற்றம் சாட்டினான். இங்கு அவனுக்குப் புரியும்படி சொல்லலாமாகையாலே நஞ்ஜீயர் இவ்விஷயத்தை விட்டுக்கொடுக்காமல் "தந்தைக்கும் தமையனுக்கும் முரண்பாடு ஏற்படும்போது, தம்பியானவன் தந்தையையே பின்பற்றவேண்டுமேயொழிய, தமையனைப் பின்பற்றக்கூடாது. இங்கு ராமபிரான் ஸர்வலோகபிதாவாகையாலே தமையனான ராவணனைக் கைவிட்டுத் தந்தையான பெருமாளோடே சேர்ந்தது தவறில்லை''என்று அருளிச்செய்தார்.

---

$c_3$(நாம்போன ஸமாதி$_4$) நம் ஹ்ருத$_3$யம். $c_4$(என்னென்றாராம்) அவனைக் கொண்டாடினாராம். $c_2$ (மார்மட்டேயாய்)-அளவுபட்டு என்றபடி. $d$ இவள் நோவுபட, பூக்கள் அவனோடே கூடி நலிகிறதுக்கு ஓரைதிஹ்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீவிபீ$_4$ஷணாழ்வான் இத்யாதி$_3$) $d_2$ (எல்லாவற்றையும் விட்டுக்கொடுக்கவொண்ணாது) என்றது — ராஜாவன்றோ என்று கீழ் விட்டிருந்தாற்போலே, இங்கும் விட்டுக்கொடுக்கவொண்ணாதென்றபடி. $d_3$ (விரோதி$_4$த்தவன்று) என்றது

**139.** "सर्वेषामेव लोकानां पिता माता च माधवः" (ஸர்வேஷா மேவ லோகாநாம் பிதா மாதா ச மாத$_4$வ:) லோகத்துக் குள்ளே அந்தர்ப்பூ$_4$தனிறே ராவணனும்.

(உய்வழக்கு) முடிக்கும் வழக்கேயோ நீங்கள் கற்றது? உஜ்ஜீவிக்கும் வழக்கு சொன்ஞலாகாதோ? "நீ அஞ்சாதே கொள், நாங்கள் மறைய நிற்கிறோம்" என்று ஒரு வார்த்தை சொன்ஞலாகாதோ ?. e பூப்போலே வந்து புலியானிகோளீ !. (ஒன்றுரையீர்) இவையே சைதந்யம் பெற்று ஒருவார்த்தை சொன்னுல். அதுகேட்டு [பின்பு

---

139. ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாத$_4$வ: ।
க$_3$ச்ச$_2$த்$_4$வமேநம் ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷப$_4$ா: ॥
[ப$_4$ார-ஆர 192.56]

[புருஷஶ்ரேஷ்ட$_2$ர்களே! எல்லா உலகங்களுக்கும் தந்தையும், தாயும் லக்ஷ்மீநாத$_2$னே. ஶரணமடையத்தகுந்த இவனே ஶரண மடையுங்கள்.] என்று பிரமாணங்கள் ஸ்ரீமந்நாராயணனைத் தாயாகவும் தந்தையாகவும் முழங்கினவன்றே! "ஸர்வேஷாம் லோகாநாம்" என்கிற ஸர்வலோகத்துக்குள்ளே ராவணனும் அடங்கினவனேயன்றே. இந்த ரீதியில் கருவிளையொண்மலர் களும், காயாமலர்களும் "ஸர்வலோகபிதாவான எம்பெருமான் கருத்தைப் பின்செல்லவேண்டியதே அனைவர்க்கும் கடமை யாகும்" என்று நினைத்திருந்தன என்று கருத்து.

(*உய்வழக்கொன்றுரையீர்*) முடிக்குப் வழக்குத்தான் நீங்கள் கற்றதோ? உய்விக்கும் வழக்கு ஒன்று சொல்லக்கூடாதோ? "நீ வருந்தாதபடி, நாங்கள் உன்னை நலியாமல் மறைந்து நிற்கிறோம்" என்று ஒருவார்த்தை சொல்லக்கூடாதோ? என்று கருத்து. பூப்போலே தோன்றிப் புலியின் கார்யத்தைச் செய்கின்றீர்களே என்றபடி. (*ஒன்றுரையீர்*) ஒருவார்த்தை சொல்லுங்கள் என்று யாசிக்கிருள். இவையே அறிவுபெற்று ஒருவார்த்தை சொன்னுல், அதைக்கேட்டுப் பின்பு அதை நினைத்தே உயிர்த$_4$ரிக்கவேண்டும்

---

பிதாவை விரோதி$_4$த்தவன்று என்றபடி. e (பூப்போலே)



அவற்றைக்கொண்டு] த$_4$ரிக்கவேண்டும் த$_3$ஶைகாணும் இவள்தன்னது !

( திருவிளையாடித்யாதி$_3$ ) ப்ரணயியல்லாதானொருவனல் லன்; ஒரு நத்தத்தில் பிறவாதானொருவனல்லன். ஓரூரிலே பிறந்து வளந்தார் f வந்தியிடார்களிறே. (திருவிளையாடு திண்டோள்) பெரியபிராட்டியார்க்கு லீலார்த்த$_2$மாகச் சேண்குன்று சமைத்தாற்போலேயாய்த்துத் திருத்தோள்க ளிருப்பது. (திருமாலிருஞ்சோலை நம்பி) ஆர்யர்களிகழ்ந்த ம்லேச்ச$_2$ பூ$_4$மியிலுள்ளார்க்கு ஸுலப$_4$னனவன். g அதுக் குள்ளேயுண்டிறே ஶீலமும். (நம்பி) சொல்லிச் சொல்லாத

---

நிலையன்றே இவளுடையது. ( *திருவிளையாடு திண்டோள் திருமாலிருஞ்சோலைநம்பி* ) நாயகியிடம் அன்பில்லாதான் ஒரு வனல்லன் இவன். ஒரூரில் பிறக்காதவனல்லன் இவன். நல்லார் பலர் வாழும் ஒரூரில் பிறந்து வளர்ந்தவர்கள் பிறர் துன்புறும் படி சண்டையிடமாட்டார்களன்றே.

(*திருவிளையாடு திண்டோள்*) பெரியபிராட்டியார் விளையாடு வதற்குச் செய்யப்பட்ட உயர்ந்த குன்றங்கள்போலேயுள்ளன திருத்தோள்கள். (*திருமாலிருஞ்சோலைநம்பி*) பண்டைக்காலத் தில் தென்னுடு த$_3$ண்ட$_3$காரண்யமாக இருந்தபோது அசுரர் அரக்கர் முதலான கீழ்மக்களுக்கே இருப்பிடமான ம்லேச்ச$_2$ பூ$_4$மியாய் வடநாட்டிலுள்ள ஆரியர்கள் (*நல்லோர்கள்*) இதை இகழ்ந்திருந்தனர். அத்தகைய தென்னுட்டிலுள்ள குறவர் முதலான கீழ்மக்களுக்கு முகங்கொடுத்துக்கொண்டிருக்கும் ஸௌலப்$_4$யமும், "இனக்குறவர் புதியதுண்ணும் எழில் மாலிருஞ் சோலை எந்தாய்" [பெரியாழ்-திரு 5-3-3] என்று அநுஸந்தி$_4$க்கப் பட்ட ஸௌஶீல்யமும் நிறைந்திருக்கப் பெற்றவன். (*நம்பி*) மற்றுமுள்ள எல்லா நற்குணங்களாலும் நிறைந்தவன். (*வரிவளை இல்புகுந்து வந்திபற்றும் வழக்குளதே*) இவர் இருந்த இடத் துக்கு நாங்கள் சென்றிருந்தோமாகில் எங்களை நலிவது உசி

---

என்றது - சாடு. f (வந்தி)-சண்டை. h "இல்புகுந்து - வரி

கு$_3$ணங்களால் பூர்ணனுய்த்து. h (வரிவளையித்யாதி$_3$) $h_2$ தாமிருந்தவிடத்திலே நாங்கள் சென்ருேமாகில் எங்களை நலிய ப்ராப்தம்; நாங்களிருந்த இருப்பிலே தாமேவந்து எங்களுடைய $h_3$ உயிர்நிலையறிந்து. i (வந்தி பற்றும்) எங்களிசைவின்றிக்கேயிருக்க, எங்கள் வளை கைக்கொள்ளுகைக்கு வழக்குண்டோ ? தாம் விரும்பின வளையென்று நாங்கள் இத்தைக்கொண்டு த$_4$ரிப்போமாகில் இத்தையுங் கைக்கொள்ளுகைக்கு வழக்குண்டோ? வழக்குள்ளவிடத்திலேயன்ருே j கைக்கூலிகொள்வது ? ஆனபின்பு எனக்கு ஜீவிக்கைக்கு ஒரு விரகு சொல்லிகோள். 3.

---

தமே. நாங்கள் எங்கள் வீட்டிலிருந்தபோது அதனுள் தாமே வந்து எங்களுடைய உயிர்நிலையை (வளையை) அறிந்து நலிவதோ நியாயம்? (*வந்தி பற்றும் வழக்குளதே*) எங்களுடைய இசைவில்லாமலிருக்க எங்கள் வளையைக் கைக்கொள்வது நியாயமோ? ''இவர் விருப்பின வளை'' என்று நாங்கள் இதைக் கொண்டு உயிர்த$_4$ரிக்கப்பார்த்தால் இதையும் கைக்கொள்வது எந்த நியாயத்தில் சேர்ந்தது? வழக்குள்ள இடத்திலேயன்ருே கைக்கூலியை (1. கையில்வளையை, 2. கையிலுள்ள பொருளை) பறித்துக்கொள்வது. இப்படி எங்கள் உயிர் நிலையையும் பறித்துக்கொண்ட பிறகு நாங்கள் உயிர்வாழ்வதற்கு நீங்களே ஒருவழி சொல்லுங்கள் என்று கருத்து. 3.

---

வளை - வந்தி பற்றும்'' என்றந்வயம். i (வந்தி பற்றுகை)- ப$_3$லாத்காரேண அபஹரிக்கை. g தாழ்ந்தாருக்கு முகங் கொடுக்கை ஶீலமன்ருே, ஸுலப$_4$னென்று ஸௌலப்$_4$யம் சொல்லுவானென் ? என்ன அருளிச்செய்கிருர் (அதுக்குள்ளே இத்யாதி$_3$) h, $h_2$ ''இல் புகுந்து - வரிவளை - வந்தி பற்றும் - வழக்குளது'' என்று அந்வயித்து அருளிச்செய்கிருர் (தாமிருந்தவிடத்திலே இத்யாதி$_3$) $h_3$ (உயிர்நிலை)- வளை. j (கைக்கூலி)-சாடு. கையில் வளை - அர்த்த$_2$ம்; பரித$_3$ாநம் - த்$_4$வநி. 3.



## ஒன்பதாம் திருமொழி—நாலாம் பாட்டு

**பைம்பொழில் வாழ்குயில்காள்! மயில் காள்! ஒண் கருவிளை**
**வம்பக் களங்கனிகாள்! வண் ணப்பூவை நறுமலர்காள்! [காள்**
**ஐம்பெரும் பாதகர்காள்! அணி மாலிருஞ் சோலைநின்ற**
**எம்பெரு மானுடைய நிறம் உங்களுக் கென்செய்வதே ?**

பதவுரை:— **பைம்பொழில்வாழ்** — பரந்த சோலையில் வாழ்கின்ற, **குயில்காள்**—குயில்களே! **மயில்காள்**—மயில்களே! **ஒண் கருவிளைகாள்**—அழகிய காக்கணம் பூக்களே! **வம்பக்களங்கனிகாள்**—புதிய களாப்பழங்களே! **வண்ணம் நறு பூவைமலர்காள்**—அழகிய நிறத்தையும் பரிமளத்தையுமுடைய காயாம் பூக்களே! **ஐ பெரு பாதகர்காள்**—(ஆகிய) பஞ்சமஹாபாதகர்களே! **உங்களுக்கு** — உங்களுக்கு, **அணி மாலிருஞ்சோலை நின்ற எம்பெருமானுடைய நிறம் என்செய்வது** — திருமாலிருஞ்சோலையிலுள்ள அழகருடைய திருமேனி நிறமானது எதுக்காக ?

**வ்யா:— நாலாம் பாட்டு.** (பைம்பொழிலித்யாதி$_3$) **பரந்த பொழிலிலே வர்த்திக்கிற குயில்காள்! உங்களுக்குச் சோலை நோக்கித்** a **தருவாரார்?** b (மயில்காள் இத்யாதி$_3$)

---

4 *அவ:*— தன்னை நலியும் பஞ்சமஹாபாதகர்களைக் கண்டிக்கிருள்.

*வ்யா:*—பாட்டில் முற்பாதியாலே பஞ்சமஹாபாதகர்களைக் குறிப்பிடுகிருள். (*பைம்பொழில் வாழ்குயில்காள்*) பரந்த சோலையில் வாழ்கின்ற குயில்களே! நான் வளர்த்துவைத்த சோலையில் வாழ்ந்துகொண்டு என்னையே நலிகிறீர்களே என்று கருத்து. அன்றிக்கே உங்களால் நலியப்பட்டு நான்முடிந்தால் இந்தச் சோலையை நோக்கித் தருவதற்கு ஆள் இல்லையென்பதை உணராமல் உங்களுக்கு நீங்களே தீங்கு விளைத்துக்கொள்கிறீர்

---

நாலாம் பாட்டு. (பைம்பொழிலித்யாதி$_3$) a (தருவாரார்) ''நான் முடிந்தால்'' இதி ஶேஷ:. b ''பைம்பொழில்

ஏகதே3ஶவாஸித்வமே ஹேதுவாக ப3ாத4கமாகாநின்றி கோளீ! ; காத3ாசித்கமாகப் பழுத்த களாப்பழங்கள் நலிகிறபடி. அழகிய நிறத்தையுடைய பூவைகாள்! c பஞ்ச மஹாபாதகரைப்போலேயாய்த்து நலிகிறது. (அணியித்யாதி3) ப3ாத4கனானவன் வடிவைக்கொண்டு d ரக்ஷகரான நீங்கள் என்செய்ய நலிகிறிகோள்? e ஶேஷஶேஷிகளானால் ஶேஷபூ4தர் தங்களிலே ஒருமிடறாய் நின்று பிழைக்க வேண்டாவோ? திருமலையிலே நிற்கிற நிலையைக்காட்டி

---

களே என்றும் கருத்துரைக்கலாம். (*மயில்காள்*) பைம்பொழில் வாழ் என்பதை இங்கும் கூட்டிக்கொள்வது. நீங்கள் வாழும் சோலையிலேயே நானும் வாழும் இதுவே காரணமாக என்னை நலிகின்றீர்களே. (*ஒண் கருவிளைகாள்*) ஒளிபொருந்திய மலர்களாகிற நீங்கள் உங்களைப்போன்ற என்னை நலிகையாகிற இச்செயலைச் செய்யலாமோ? (*வம்பக்களங்கனிகாள்*) எப்போதும் வாழும் குயில்கள், மயில்கள் நலிவதோடில்லாமல், எப்போதோ பழுக்கும் களாப்பழங்களும் நலிகிறபடி. (*வண்ணப்பூவை நறுமலர்காள்*) நல்ல நிறத்தையும், மணத்தையும் உடைய காயாம்பூக்களும் காயாம் பூவண்ணனை நினைவுபடுத்தி நலிகிறபடி. (*ஐம்பெரும் பாதகர்காள்*) ப்3ரஹ்மஹத்தி, ஸுராபானம், ஸ்வர்ணஸ்தேயம் முதலானவை ஶாஸ்த்ரங்களில் பஞ்சமஹாபாதகங்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. அவைகளைப்போலே பரஹிம்ஸை செய்கையாலும், ஐந்தாயிருக்கையாலும் இவற்றையும் பஞ்சமஹாபாதகர்கள் என்று குறிப்பிடுகிறுள். (*அணிமாலிருஞ்சோலை......என்செய்வதே*) என்னை நலிகின்றவன் வடிவுபோன்ற வடிவை வைத்துக்கொண்டு, என்னை ரக்ஷிக்க வேண்டிய நீங்கள் எதற்காக என்னை நலிகின்றீர்கள்? அவன் நமக்கு ஸ்வாமி. நாம் அவனுக்கு தா3ஸராயிருப்பவர்கள். நாம்

---

வாழ் - மயில்காள்'' என்றும் கூட்டுவது. c ப3ாத4கத்தின் உறைப்பாலும், அவைதான் அஞ்சாயிருக்கையாலும் ரஸோக்தியாக (பஞ்சமஹாபாதகர்) என்கிறது. d (ரக்ஷகரான நீங்கள்) என்றது - இவ்வளவில் வந்தாஶ்வஸிப்பித்த வழியாலே ரக்ஷகரான என்றபடி. e ஸ்வாபதே3ஶத்திலே



என்னை அநந்யார்ஹையாக்கினவனுடைய நிறத்தை நீங்கள் என்செய்ய ஏறிட்டுக்கொண்டிகோள்?

f (பைம்பொழிலித்யாதி) g பரமசேதநனேடு, g2 சைதந்யமாத்ரமுடையாரோடு, அசேதநங்களோடு வாசியற எல்லாருமொக்க ப3ாத4கரானால் எங்ஙனே பிழைக்கும்படி? பிரிந்தான் ஒருவனாய், ப3ாத4கர் பலருண்டானால் எங்ஙனே பிழைக்கும்படி? h கலந்தார் ப3ாத4கராகையன்றிக்கே, அவ்வளவில் அவன்பிரிந்த ஸமயத்திலே முகங்காட்டி ஆஶ்வாஸத்தைப் பண்ணக்கடவ நீங்கள் ப3ாத4கரானால்

---

எல்லாரும் ஒரு கட்சியாயிருந்து அவனிடமிருந்து நம்மைக் காத்துக்கொள்ளவேண்டாமா? தொழிலாளிகள் சிலர் முதலாளிகள் கட்சியில் சேருவதுபோலல்லவோ இது இருக்கிறது. அழகிய திருமாலிருஞ்சோலையில் நிற்கிற நிலையைக் காட்டி என்னை வசப்படுத்திக்கொண்ட எம்பெருமானுடைய நிறத்தை நீங்கள் எதற்காக ஏறிட்டுக்கொண்டீர்கள்?

வேறு கருத்து அருளிச்செய்வதற்காக மறுபடியும் வ்யாக்2யானம் செய்யப்படுகிறது. (*பைம்பொழில் வாழ்குயில் காள்......வண்ணப்பூவை நறுமலர்காள்*) எம்பெருமான் பரமசேதனன். குயில்களும், மயில்களும் அறிவுமாத்திரமுடைய பிராணிகள். கருவிளை, களங்கனி, பூவை ஆகிய மூன்றும் அறிவற்ற அசேதனங்கள். இப்படி அனைவரும் சேர்ந்துகொண்டு என்னை நலிந்தால் நான் எப்படிப் பிழைக்கமுடியும்? பிரிந்தவன் அவனொருவன். பிரிந்து வருந்தும் நானும் ஒருத்தி. ஒருத்தியான என்னை நீங்கள் பலர் சேர்ந்து நலிந்தால் நான் எப்படிப் பிழைக்கமுடியும்? கலந்து பிரிந்த அவன் நலிவதில் ஆஶ்சர்ய

---

தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கிறுர் (ஶேஷஶேஷிகளித்யாதி3) f தாத்பர்யாந்தரம் அருளிச்செய்கைக்கு மீளவும் பதே3ாபாத3ாநம் பண்ணுகிறுர் (பைம்பொழிலித்யாதி3) g "எம்பெருமான்" என்கையாலே (பரமசேதநனேடு) என்றது. g2 (சைதந்யமாத்ரம்) - குயில். h குயில் மயில்

எங்ஙனே பிழைக்கும்படி ? i பிரிந்தான் ஒருவனுய் ப$_3$ாத$_4$க கோடி பலவானுலும் பிழைக்கப்போமோ ? (அணியித்யாதி$_3$) நலியாநிற்கிறவன் நிறத்தை ரக்ஷகரான நீங்கள் என் செய்ய ஏறிட்டுக்கொண்டிகோள் ? அவன் நிறத்தைத் தரப்புக்கால், " எங்களுக்கு இந்நிறம் வேண்டா " என்ன வேண்டாவோ ? 4.

ஒன்பதாம் திருமொழி—ஐந்தாம் பாட்டு

துங்க மலர்ப்பொழில் சூழ் திருமாலிருஞ் சோலைநின்ற
செங்கட் கருமுகிலின் திரு வுருப்போல் மலர்மேல்
தொங்கிய வண்டினங்காள்! தொகு பூஞ்சுனைகாள்! சுனையில்
தங்குசெந் தாமரைகாள்! எனக் கோர்சரண் சாற்றுமினே.

பதவுரை:— **துங்கம் மலர் பொழில் சூழ்**—ஓங்கின மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த, **திருமாலிருஞ் சோலை**—திருமாலிருஞ்சோலையில், **நின்ற**—நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக்கிற, **செம் கண் கருமுகிலின்**—

---

மில்லை. அவன் பிரிந்த ஸமயத்தில் முகங்காட்டி எனக்கு ஆறுதலளிக்கவேண்டிய நீங்களும் என்னை நலிந்தால் நான் எப்படிப் பிழைக்கமுடியும் ? பிரிந்த அவன் ஒப்பற்றவன் ஐம்பெரும் பாதகர்களாய் நலிகின்ற நீங்களும் ஒவ்வொரு வகையிலும் பலர்கூடியிருக்கிறீர்கள். இப்படி பலர் நலிந்தால் ஒருத்தியானநான் எப்படிப் பிழைக்கமுடியும் ? *(அணிமாலிருஞ் சோலை நின்ற......என்செய்வதே)* பிரிந்து நலிகின்றவனுடைய நிறத்தை என்னை ரக்ஷிக்கவேண்டிய நீங்கள் எதற்காக ஏறிட்டுக் கொண்டீர்கள்? அவன் தந்ததால் ஏற்றுக்கொண்டோம் என்பீர்களாகில், அவன் நிறத்தைத் தரும்போது " எங்களுக்கு இந் நிறம்வேண்டா " என்று சொல்லவேண்டாமோ ? 4.

---

களுக்கு, ப$_4$ங்க்$_3$யந்தரேண விவரணம் அருளிச்செய்கிருர் (கலந்தாரித்யாதி$_3$) i "குயில்காள்" என்ற பன்மைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர் (பிரிந்தானொருவனை யித்யாதி$_3$). 4.



தாமரைபோன்ற திருக்கண்களையும் காளமேக$_4$ம் போன்ற வடிவையுமுடைய எம்பெருமானுடைய, **திரு உரு போல்**—அழகிய வடிவம்போலே, **மலர்மேல் தொங்கிய வண்டு இனங்காள்**—மலர்மேல் தங்கியிருக்கிற வண்டுக்கூட்டங்களே! **தொகு**—நெருங்கியிருக்கின்ற, **பூ சுனைகாள்**—அழகிய சுனைகளே! **சுனையில் தங்கு**—அச்சுனைகளில் உள்ள, **செம் தாமரைகாள்**—செந்தாமரை மலர்களே! **என்க்கு**—எனக்கு, **ஓர் சரண் சாற்றுமின்**—ஓர் அடைக்கலம் சொல்லுங்கள்.

**வ்யா:— அஞ்சாம் பாட்டு.** (துங்கமலரித்யாதி$_3$) **ஓங்கின மலரையுடைத்தான பொழிலாலே சூழப்பட்ட திருமாலிருஞ் சோலையிலே நின்ற.** a **ஒருவரால் சென்று ப்ரவேசிக்க அரிதாயிருக்கை.** b **140. "नगोत्तमं पुष्पितमाससाद" (நகே$_3$ாத்த**

---

5. *அவ:*— வண்டுகளையும் சுனைகளையும் தாமரைகளையும் தனக்கு ஒரு புகல்சொல்லும்படி வேண்டுகிருள்.

*வ்யா:*— ***(துங்கமலர்ப் பொழில்சூழ் திருமாலிருஞ்சோலை நின்ற)*** ஒங்கிய மலர்களையுடைய பொழில்களால் சூழப்பட்ட திருமாலிருஞ்சோலையிலே நின்ற. எனைப்போன்று பிரிந்து நலிகின்ற ஒருத்தியால் நுழைய அரிதாயிருக்குமிடம் என்று கருத்து.

**140. இதீவ தே$_3$வீ ப$_3$ஹுதா$_4$ விலப்ய**
**ஸர்வாத்மநா ராமமநுஸ்மரந்தீ ।**
**ப்ரவேபமாநா பரிஶுஷ்கவக்த்ரா**
**நகே$_3$ாத்தமம் புஷ்பிதமாஸஸாத$_3$ ॥** *[ரா-ஸு 28-17]*

[இம்மாதிரியாகப் பிராட்டியானவள் பலபடியாக அழுது, ராமனையே நினைத்திருப்பவளாய், நடுங்குபவளாய், உலர்ந்த

---

அஞ்சாம் பாட்டு. ( துங்கமலரித்யாதி$_3$ ) a 'மலர்ப் பொழில்சூழ்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிருர் (ஒருவராலித்யாதி$_3$) (ஒருவரால்)-விரஹிணிகளால். b அப்படி விரஹிணிகளுக்குக் கிட்டப்போகாதோவென்ன அருளிச்

மம் புஷ்பிதமாஸஸாத$_3$) c ஆற்றுமை கரைபுரண்டால் தீப் பாய படுமாபோலே. d 128. "नेमान् पुष्पफलद्रुमान्" (நேமாந் புஷ்பப$_2$லத்$_3$ருமாந்) என்னும்படியாயிறே இவளுக்கிருக்கிறது. e ராக்ஷஸீத$_3$ர்ஶநத்தோபாதி கொடிதாயிரா நின்றதாய்த்து இவளுக்கு இவற்றினுடைய த$_3$ர்ஶநமும். (செங்கட்கருமுகில்) f இந்நெருப்பைக் கடந்து புகவேணுங் காணும் $f_2$ அ(நுப$_4$)விக்க. அகவாயில் நீர்மை அடங்கலும் தெரியுமாய்த்துக் கண்ணில் தண்ணளியிலே.

---

வாயை உடையவளாய், பூத்திருந்தபெரு சிறந்த மலையை அடைந்தாள்.] என்னும் ப்ரமாணத்தில் ஆற்றுமை கரை புரண்டவர்கள் பூக்கள் நிறைந்த இடத்தை அடைவது தீக்குளிக்கச் செல்வது போன்றது என்று உணர்த்தப்பட்டதன்றே. (418-ம் பக்கத்தில் 128-வது ப்ரமாணத்தின்படி) ஸீதாப்பிராட்டிக்குப் பூக்களோடும், பழங்களோடும் கூடிய மரங்களைப் பார்ப்பது ராமபிரானை நினைவுபடுத்தி நலிகைக்குக் காரணமாகையாலே, ராக்ஷஸிகளைக் காண்பதுபோலே பொறுக்கவொண்ணாததாயிருந்தது. இவளுக்கும் துங்கமலர்ப் பொழில் சூழ் திருமாலிருஞ்சோலை அப்படியே இருக்கிறது. *(செங்கட் கருமுகிலின்)* எம்பெருமானுடைய திருவுள்ளத்திலுள்ள கருணை முழுவதும் செந்தாமரைக் கண்ணிலே தெரிகின்றது. ஆனால் அதை அநுப$_4$விப்பதற்கு துங்கமலர்ப்பொழில்களாகிற இந்த நெருப்பைக் கடந்துசெல்லவேண்டும். "அநுப$_4$விக்க" என்பதற்கு பதிலாக அரும்பதவுரையில் "அவிக்க" என்று பாட$_2$ங்கொண்டு "தங்கள் தாபத்தை அவன் அவிக்க" என விவரணம் செய்யப்பட்டது.

---

செய்கிறார் (நகே$_3$ாத்தமமித்யாதி$_3$) c ஆனால் கிட்டலாமோவென்ன அருளிச்செய்கிறார் (ஆற்றுமையித்யாதி$_3$) d த$_4$ரிக்கைக்குடலாகக் கிட்டினுளென்றலோவென்ன அருளிச்செய்கிறார் (நேமாநித்யாதி$_3$) e எடுத்த ச்லோகத்தில், 128.(நைஷா பஶ்யதி ராக்ஷஸ்ய:) என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (ராக்ஷஸீத$_3$ர்ஶநேத்யாதி$_3$) f (நெருப்பை) என்றது - கீழ்ச்சொன்ன புஷ்பிதமானபொழிலை. h"இனங்காள்" என்றதுக்குத் தாத்பர்யம் (குறைவற்றாரித்யாதி$_3$) $f_2$(அவிக்க)-



g (மலர்மேல் தொங்கிய வண்டினங்காள்) நெருப்பிலே கால் பொருந்துமாபோலே இருக்கிறதிறே இவளுக்கு. h குறைவற்றார் குறைவாளர் குறை தீர்க்கவேண்டாவோ? (தொகு) அதின் கீழில் நீர் - திருமேனிக்கு ஸ்மாரகமாகா நின்றது. (சுனையித்யாதி$_3$) அதில் பூத்த பூக்கள் தி$_3$வ்யாவயவாதி$_3$களுக்கு ஸ்மாரகமாகாநின்றது. (எனக்கித்யாதி$_3$) த$_4$ர்மபுத்ரன் பீ$_4$ஷ்மத்$_3$ரோணாதி$_4$கள் பக்கலிலேசென்று "உங்களை நான் கொல்லும் விரகு நீங்களே சொல்லவேணும்" என்றாற்போலே, பா$_3$தி$_4$க்கவொருப்பட்டு நிற்கிற இவற்றைப் பார்த்து, 'நான் உங்களைத் தப்பி ஜீவிப்பதொரு விரகு

---

*(திருவுருப்போல் மலர்மேல் தொங்கிய வண்டினங்காள்)* அவனுடைய திருவுருவைக் கொண்டிருக்கிறவையாய், மலர் மேல் தங்கியிருக்கின்ற வண்டுக்கூட்டங்களே! இவற்றைப் பார்ப்பது நெருப்பிலே கால்வைப்பதுபோலேயிருக்கிறதன்றே இவளுக்கு. *(வண்டினங்காள்)* கூட்டங்கூட்டமாயிருந்து குறைவற்று வாழும் நீங்கள் தனியாயிருந்து குறையோடு வாழும் என்னுடைய குறையைத் தீர்க்கவேண்டாமோ? *(தொகு பூஞ்சுனைகாள்)* நெருங்கியிருக்கிற அழகிய சுனைகளே! சுனைகளில் இருக்கும் நீர் எம்பெருமானுடைய திருமேனியை நினைவுபடுத்தி இவளை நலிகிறது. *(சுனையில் தங்கு செந்தாமரைகாள்)* அதில் பூத்த செந்தாமரைப்பூக்கள் கண், கை, கால் முதலான தி$_3$வ்யாவயவங்களை நினைவுபடுத்தி நலிகின்றது. *(எனக்கு ஓர் சரண் சாற்றுமினே)* நான் உங்களிடமிருந்து தப்பிப்பிழைக்கும் வழியை நீங்களே எனக்குச் சொல்லித்தர வேண்டும். த$_4$ர்மபுத்ரன் மஹாபா$_4$ரதயுத்$_3$த$_4$த்தின்போது பீ$_4$ஷ்மர் த்$_3$ரோணர் முதலான எதிர்க்கட்சித் தலைவர்களிடம் சென்று "உங்களை நான் கொல்லும் வழியை நீங்களே எனக்குச் சொல்லித்தரவேண்டும்" என்றதுபோலே, இவளை நலிகின்ற இவற்றைப் பார்த்து நான் உங்களிடமிருந்து பிழைக்கும் வழியை நீங்களே சொல்லித்தரவேண்டும் என்று ஆற்றுமை

---

தங்கள் தாபத்தை அவனவிக்க. g (மலர்மேல் தொங்கிய வண்டினங்காள்) திருக்கண்களில் கருவிழிக்கு ஸ்மாரகமா

சொல்லவல்லிகோளே?'என்று i கேட்கிருள். j''ஶிக2ண்டி3யை முன்னே நிறுத்துவது. வில்லைப்பொகடுகிரும். கொன்று கொள்'' என்ருற்போலே ஒருவிரகு சொல்லவல்லிகோளே? '' நாங்களில்லாதவிடம் இன்னவிடம், அங்கேபோய் நீ ஜீவி'' என்று ஒருபுகல் சொல்லவல்லிகோளே ? இவை தனக்கொரு புகல் சொல்லவேண்டும்படிகாணும் இவள் தான் புகலற்றபடி! 5.

ஒன்பதாம் திருமொழி – ஆரும் பாட்டு

**நாறு நறும்பொழில்மா லிருஞ் சோலை நம்பிக்குநான்**
**நூறு தடாவில்வெண்ணெய் வாய் நேர்ந்து பராவிவைத்தேன்**
**நூறு தடாநிறைந்த வக்கார வடிசில்சொன்னேன்**
**ஏறு திருவுடையா னின்று வந்திவை கொள்ளுங்கொலோ.**

---

யின் மிகுதியினுலே கேட்கிருள். ''புருஷனுய் வடிவெடுத்த ஸ்த்ரீயான ஶிக2ண்டி3யை முன்னே நிறுத்திருல் நான் எதிர்க்காது வில்லை எறிந்து விடுவேன்'' என்று பீ4ஷ்மர் வழிசொல்லிக் கொடுத்தார். ''என்பிள்ளையான அஶ்வத்த2ாமா இறந்துவிட்டான் என்று காதில்பட்டால் நான் போர்செய்வதை நிறுத்திவிடுவேன்'' என்று த்3ரோணர் வழிசொல்லிக் கொடுத்தார். அது போல் உங்களிடமிருந்து தப்பிப்பிழைக்க நீங்களே வழி சொல்லுங்கள் என்று கேட்கிருள் இவற்றை. ''நாங்கள் இல்லாத இடம் இன்ன இடம், நீ அங்கேபோய்ப் பிழைத்துக் கொள்'' என்று இவை வழிசொல்லும் என்று எதிர்பார்க்கிருள். *(எனக்கோர் சரண் சாற்றுமினே)* இவை தனக்கு ஓர் புகலிடம் சொல்லவேண்டும்படியன்ரே இவள் புகலற்றவளாகிவிட்டாள்!5

---

யிரானின்றதென்று கண்டுகொள்வது. i (கேட்கிருள்) ஆற்ருமையின் க4னத்தாலே என்றபடி. j (ஶிக2ண்டி3) - / நிர்வாணையான ஸ்த்ரீ. இவளைக்காணவே பீ4ஷ்மர்க்கு முடிகைக்குக் காரணம். **(அஶ்வத்த2ாமா ஹத:)** என்றது-த்3ரோணன் வில்லுப் பொகடுகைக்குக் காரணம். 5.

---

/ இது தவறு.



பதவுரை:— **நறு பொழில் நாறும்**—பரிமளம் மிகுந்த பொழில்கள் மணங்கமழாநிற்கப்பெற்ற, **மாலிருஞ்சோலை**—திருமாலிருஞ்சோலையில் (எழுந்தருளியிருக்கிற), **நம்பிக்கு**—எம்பெருமானுக்கு, **நான்**—அடியேன், **நூறு தடாவில்**—நூறு தடாக்களில் நிறைந்த, **வெண்ணெய்**—வெண்ணெயை, **வாய் நேர்ந்து**—வாயாலே சொல்லி, **பராவி வைத்தேன்**—ஸமர்ப்பித்தேன்; (இன்னமும்) **நூறு தடா நிறைந்த**—நூறு தடாக்களில் நிறைந்த, **அக்கார அடிசில்**—அக்கார வடிசிலும், **சொன்னேன்** — வாயாலே ஸமர்ப்பித்தேன், **இவை** — இந்த வெண்ணெயையும் அக்காரவடிசிலையும்; **ஏறு திரு உடையான்**—(நாட்செல்லநாட்செல்ல) ஏறிவருகிற ஸம்பத்தையுடையரான அழகர், **இன்று வந்து**—இன்று எழுந்தருளி, **கொள்ளும்கொல்**—திருவுள்ளம் பற்றுவரோ?

**வ்யா:— ஆரும் பாட்டு.** (நாறுநறும்பொழிலித்யாதி3) a **சோலையில் பரிமளம்** a2 **தன்னுடைய நாற்றத்தோடே கூடினுற்போலேகாணும் பூர்ணமாவது. குறைவற்ருரை வஶீகரிக்கும்போது வெண்ணெயாலே வஶீகரிக்க வேணும்**

---

6. *அவ:*— நூறு தடாவில் வெண்ணெயும், நூறுதடா நிறைந்த அக்காரவடிசிலும் அழகருக்கு ஸமர்ப்பிக்க ஆசைப்படுகிருள். பிற்காலத்தில் இதை நிறைவேற்றிவைத்து ஸ்ரீவில்லிபுத்தூர் எழுந்தருளியபோது, '' கோயிலண்ணர் '' என்று எம்பெருமானுர் ஆண்டாளால் கொண்டாடப்பெற்ருர் என்பது ஸுப்ரஸித்3த4ம்.

*வ்யா:— (நாறு நறும்பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு நான்)* மாலிருஞ்சோலையில் இயல்வாகவே உள்ள பரிமளம்—க3ந்த4வதியான பூ4மிதே3வியின் அவதாரமான ஆண்டாளுடைய நறுமணத்தோடு கூடின பின்பே நிறைவடைகிறது.

---

ஆரும் பாட்டு. (நாறுநறும்பொழிலித்யாதி3) a ''நாறு நறும் பொழில்'' என்று விஶேஷிக்கிறதுக்குத் தாத்பர்யம் (சோலையிலித்யாதி3) a2 (தன்னுடைய) என்றது ஆண்டாளை.

**போலேகாணும்.** (நூறுதடாவில்வெண்ணெய்) b**இடைச்சிகள் ப்ரார்த்தி2ப்பது வெண்ணெயாயிருக்குமிறே.** (வாய்நேர்ந்து) c **141. "क्रियतामिति मां वद" (க்ரியதாமிதி மாம் வத3)** c2 **என்னுமாபோலே இராநின்றதாய்த்து இத்தலைக்கு.**

---

*(நம்பிக்கு நூறுதடாவில் வெண்ணெய்)* குறைவற்றவனை வஶீகரிப்பதற்கு வெண்ணெயாலேயே வஶீகரிக்கவேண்டும் போலும்! *(நான் நூறுதடாவில் வெண்ணெய்)* தான் இடைச்சி ப4ாவனையில் இருப்பதால், இடைச்சிகள் ஸமர்ப்பிக்க விரும்பும் வெண்ணெயை முதலில் கூறுகிறாள். அவன் தன்மையைப் பார்த்தாலும், இவள் தன்மையைப் பார்த்தாலும் வெண்ணெயை ஸமர்ப்பிப்பதே பொருத்தமன்றோ. *(வாய்நேர்ந்து பராவி வைத்தேன்)* நினைவில் நினைத்தால் மாத்திரம் போராது. வாயால் சொல்லியும் ஸமர்ப்பித்தேன்.

**141. பரவாநஸ்மி காகுத்ஸ்த2 த்வயி வர்ஷஶதம் ஸ்தி2தே।
ஸ்வயம் து ருசிரே தே3ஶே க்ரியதாமிதி மாம் வத3 ॥**
[ரா-ஆ 15-7]

[ககுத்ஸ்த2 வம்ஶத்தில் பிறந்தவரே! நீர் இருக்கையில் எப்போதும் நான் (உமக்கு) அடிமையாயிருக்கிறேன். நீராகவே "அழகிய தே3ஶத்தில் பர்ணஶாலை கட்டப்படட்டும்" என்று என்னை ஆஜ்ஞையிடுவீராக.] என்று இளையபெருமாள் "திருவுள்ளத்தால் நினைப்பதோடல்லாமல் 'இன்னதைச்செய்' என்று வாயாலே அருளிச்செய்யவேண்டும்" என்று அருளிச்செய்ததுபோலே இவளும் நெஞ்சால் நினைப்பது மாத்திர

---

b"நான்" என்றதுக்குத் தாத்பர்யம் (இடைச்சிகளித்யாதி3) இத்தால் - அவன் ஸ்வப4ாவத்தாலும் தன் ஸ்வப4ாவத்தாலும் வெண்ணெயை ப்ரார்த்தி2க்கிறாளென்றபடி. c141. **"க்ரியதாமிதி மாம் வத3"** என்று திருவுள்ளத்தாலே நினைத்தளவன்றிக்கே, "இன்னத்தைச் செய்யென்று அருளிச்செய்யவேணும்" என்று இளையபெருமாள் அருளிச்செய்தாற்போலே, இவளுக்கும் மநோரத2மாத்ரம் போராமல் வாயாலே சொல்லி ப்ரார்த்தி2க்கவேணுமென்றபடி. c2 (என்னுமாபோலே இராநின்றதாய்த்து இத்தலைக்கு) என்று பாட2மா



(நூறுதடா நிறைந்த) **"பெண்பிள்ளை ப்ரார்த்தி2த்து வைத்தாள்; கொடுத்தாளாகச் சொல்லக் கேட்டிலோம்; ப்ரார்த்தி2த்தவற்றை இறுக்கை அஸ்ஸந்தாநஜாதர்க்கு ப4ரமிறே" என்று தாம் அமுதுசெய்வித்தருளினாராம். 142. "अन्यत्पूर्णाद्पां कुम्भादन्यत्पादावनेजनात्" (அந்யத் பூர்ணாத3பாம் கும்ப4ாத3ந்யத் பாத3ாவநேஜநாத்) என்கிற வஸ்துவுக்கு "நூறுதடா நிறைந்த" என்று இங்ஙனே போரச் சொல்லுவானென்? என்று, நான் ஜீயரைக்கேட்டேன்; "திருவாய்ப்பாடியில் ஐஶ்வர்யத்துக்கு இதெல்லாங் கூடிலும் ஒரு பூர்ணகும்ப4ஸ்தா2நீயம்" என்றருளிச்செய்**

---

மல்லாமல் வாயாலும் சொல்லி ஸமர்ப்பிக்கிறாள். *(நூறு தடா நிறைந்த...சொன்னேன்)* "பெண்பிள்ளை பிரார்த்தி2த்து வைத்தாள். ஸமர்ப்பித்ததாக வரலாறு இல்லை. பிரார்த்தி2த்ததை நிறைவேற்றிவைப்பது அவளது வம்ஶத்தில் பிறந்த எமக்குக் கடமையன்றோ" என்று எம்பெருமானார் அழகருக்கு நூறுதடாவில் வெண்ணெயும், நூறுதடா நிறைந்த அக்காரவடிசிலும் ஸமர்ப்பித்தது ஸுப்ரஸித்3த4மன்றோ.

**142. அந்யத் பூர்ணாத3பாம் கும்ப4ாத் அந்யத் பாத3ாவநேஜநாத்।
அந்யத் குஶலஸம்ப்ரஶ்நாத் ந சேச்ச2தி ஜநார்த்த3ந: ॥**
[ப4ார-உத்3 87-13]

[ஒரு பூர்ணகும்ப4த்தைக் காட்டிலும் வேறொன்றையோ, திருவடி விளக்குவதைக்காட்டிலும் வேறொன்றையோ, க்ஷேமம் வினவுவதைக் காட்டிலும் வேறொன்றையோ கிருஷ்ணன் விரும்பமாட்டான்.] என்கிறபடியே "எவ்வளவு குறைந்த பொருளை ஸமர்ப்பித்தாலும், திருப்தி அடையும் எம்பெருமானுக்கு நூறுதடாவில் வெண்ணெயும், நூறுதடா நிறைந்த அக்காரவடிசிலும் ஸமர்ப்பிப்பதாக மிகுதியாகச் சொல்லுவானேன்" என்று நம்பிள்ளை நஞ்ஜீயரைக் கேட்டாராம். அதற்கு நஞ்ஜீயர் "திருவாய்ப்பாடியின் செல்வத்தைப் பார்க்கும்போது இவையெல்லாம் ஒரு பூர்ணகும்ப4ம்போலே

---

யிருந்ததாகில், யதா2யோக்3யம் அர்த்த2ம் கண்டுகொள்வது. அப்போதும், தாத்பர்யம் இப்படியே ப2லிக்கும்.

என்றருளிச்செய்வர். d பூர்வார்த்த4 நிஷ்ட2ர்க்கு இட்டவடி மாறியிட ப்ராப்தியில்லை: உத்த்ரார்த்த4 நிஷ்ட2ர்க்கு 143. "अहं सर्वं करिष्यामि" (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்கிற படியே இருக்கவேணும். பூர்வார்த்த4த்தை அநுஸந்தி4த்தால் 14. "तत्तस्य" (தத்தஸ்ய) என்று - பிராட்டி இருந்தாற்போலே இருக்கவேணும்; உத்தரார்த்த4த்தை அநுஸந்தி4த்தால் இளையபெருமாளைப்போலே கண்ணுறங்க அவஸரமில்லை.

---

அல்பமானவையே'' என்று அருளிச்செய்தார். த்3வயத்தின் முற்பாதியை அநுஸந்தி4த்தால், 'எம்பெருமான் வேறெதையும் எதிர்பாராத உபாயம்' என்று கூறுகையாலே உபாயபு3த்3தி4யுடன் இரண்டடி நடப்பதும் உசிதமன்று. ஆகையால் முற்பாதியில் ஊன்றியிருப்பவர்கள் ஸ்வப்ரயத்னலேஶமும் அற்றவர்களாய் இருப்பார்கள். பிற்பாதியை அநுஸந்தி4த்தால் எல்லாக் கைங்கர்யங்களையும் செய்யவேண்டுமென்று கூறுகையாலே,

143. ப4வாம்ஸ்து ஸஹ வைதே3ஹ்யா கி3ரிஸாநுஷு
ரம்ஸ்யதே ।
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்3ரதஸ் ஸ்வபதஶ்ச தே ॥
[ரா-அ 31-25]

[நீர் வைதே3ஹியுடன் கூட மலைத்தாழ்வரைகளில் விளையாடுவீர்; அடியேன் நீர் விழித்துக்கொண்டிருக்கும்போதும், தூங்கும்போதும் உமக்கு எல்லா அடிமைகளையும் செய்வேன்.] என்கிறபடியே ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமைசெய்யப் பாரித்திருக்கவேண்டும். பிற்பாதியில் ஊன்றிநிற்பவர்கள் இளையபெருமாளையும் நம்மாழ்வாரையும்போலே ஸ்வயம்ப்ரயோஜன கைங்கர்யரூபமான முயற்சிகளை மிகுதியாகச் செய்வார்கள். முற்பாதியை அனுஸந்தி4த்தால் (34-வது பக்கம் 14-வது ப்ரமாணத்தின்படி) ஸீதாப்பிராட்டியைப்போலே இருக்கவேண்டும். பிற்பாதியை அனுஸந்தி4த்தால் இளையபெருமாளைப்போலே கண் உறங்காமல் எல்லாக் கைங்கர்யமும் செய்யவேண்டும்.

---

d ஆனுல் அநந்யஸாத4நனுக்கு இது ஸாத4நமாயந்வயியாதோவென்ன அருளிச்செய்கிருர் (பூர்வார்த்த4 நிஷ்டர்க்கு இத்யாதி3)



(ஏறுதிருவுடையான்) நாட்செல்ல நாட்செல்ல ஏறிவருகிற ஸம்பத்தையுடையவன். நிரபேக்ஷனுகையாலே இவன் இடுகிற த்3ரவ்யத்தில் தாரதம்யம் பாரானுய்த்து. (இன்று வந்திவை கொள்ளுங்கொலோ) இதொரு வாங்மாத்ரமேயாய்ப் போகாமே, இத்தை அநுஷ்ட2ாநபர்யந்தமாக்கி ஸ்வீகரிக்கவல்லனேயோ? e அத்ரிப4க3வான் ஆஶ்ரமத்திலே ஸாயம் ஸமயத்திலே சென்று, "நான் ராமன், இவள் மைதி2லி, இவன் லக்ஷ்மணன்'' என்று நின்ருற்போலே, இவற்றை ஸ்வீகரிக்கவல்லனேயோ ?

(ஏறு திருவுடையான்) f வங்கிப்புரத்து நம்பி ஸ்ரீபாத3த்திலேயாய்த்துச் சிறியாத்தான் ஆஶ்ரயித்தது. போஶள

---

ஆண்டாளுக்கு இப்போது பிற்பாதியின் அனுஸந்த4ானமாயிருக்கையாலே, நூறுதடா நூறுதடாவாக ஸமர்ப்பிக்க ஆசைப்படுகிருள். *(ஏறு திருவுடையான்)* நாட்செல்ல நாட்செல்ல ஏறிவருகிற செல்வத்தையுடையவன். இப்படி செல்வத்தால் நிறைந்து, ஒருவரிடமிருந்து ஒன்றைப் பெற்ருகவேண்டுமென்ற அவஶ்யமில்லாமையாலே, ஒருவன் மிகுதியாக இட்டான் என்று மகிழ்வதும், மற்றொருவன் குறைவாக இட்டானென்று இகழ்வதும் செய்யாதவன் என்று கருத்து. *(இன்று வந்து இவை கொள்ளுங்கொலோ)* இது நான் வாயால் சொன்னதுமாத்திரமாய்ப்போகாமல் என்னை ஸமர்ப்பிக்கவல்லவளாக்கி, தான் இவற்றை ஸ்வீகரிப்பானே? அத்ரிமஹர்ஷியின் ஆஶ்ரமத்தில் மாலைவேளையில் சென்று "நான் ராமன்; இவள் மைதி2லி; இவன் லக்ஷ்மணன்'' என்று கூறிநின்று, அத்ரி அநஸூயைகளுடைய உபசாரங்களை ஏற்றுக்கொண்டாற்போலே இவற்றையும் ஏற்றுக்கொள்வானே ?

*(ஏறு திருவுடையான்)* கூரத்தாழ்வான் தம் ஸுந்த3ர பா3ஹுஸ்தவத்திலே இப்பத3த்தை "ஆரூட4ஸ்ரீ:'' *(திருமார்பில்)*

---

e "வந்திவைகொள்ளுங்கொலோ'' என்கைக்கு அவன் வந்தவிடமுண்டோவென்ன அருளிச்செய்கிருர் (அத்ரி ப4க3வானித்யாதி3) f ஏறுதிருவுடையானுக்கு ஶ்ரிய:பதித்

ராஜ்யத்தில் நின்றும் வந்த நாளிலே ராஜகேஸரியிலே ஆச்சான் நடந்திருந்தானாய், காணவேணுமென்று அங்கே சென்று கண்டிருக்கிறவளவிலே, நம்பி எனக்கு இங்ஙனே பணிக்கக்கேட்டேன்;-''பா3ஹ்ய ஸமயங்களிலுள்ளாரும் ஒரு வஸ்துவைக்கொண்டு அதுதனக்கு ஜ்ஞாநாதி4க்யத்தையும் உண்டாக்கிக்கொள்ளாநின்றார்கள் ;- அவர்களிற்காட்டில் வைதி3க ஸமயமான நமக்கேற்றம்;-'ஶ்ரிய:பதி ஆஶ்ரயணீயன்' என்று பற்றுகிற இதுகாண்'' என்று பணித்தானும்.

---

ஏறியிருக்கும் ஸ்ரீதே3வியையுடையவன் என்று மொழிபெயர்த்தருளினார். இவ்வர்த்த2மும் ஸம்ப்ரதா3ய ஸித்3த4ம் என்பதைக் காட்ட ஓர் ஐதிஹ்யம் வ்யாக்2யானத்தில் காட்டப்பட்டுள்ளது. எம்பெருமானாருடைய ஶிஷ்யர்களில் 'வங்கிப்புரத்து நம்பி' என்பவர் ஒருவர். சிறியாத்தான் அல்லது சிறியாச்சான் என்று அழைக்கப்படும் மஹாநுபா4வர் அந்த நம்பியின் ஶிஷ்யராவார். ஒருஸமயம் சிறியாச்சான் போசளராஜ்யத்திலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்திருந்தபோது, 'ராஜகேஸரி' என்னுமிடத்திலே எழுந்தருளியிருந்த நம்பியைக் காணச்சென்று, அவரோடு வார்த்தை சொல்லும்போது அவர் ஆச்சானிடம் ''ஶைவம் முதலான புறச்சமயங்களிலுள்ளவர்களும் ஶிவனைப்போன்ற ஒரு தெய்வத்தைப் பரம்பொருளாகக்கொண்டு, அவனை ஸர்வஜ்ஞனாகவும் கொண்டாடிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களைக் காட்டிலும் வைதி3கமதத்திலுள்ளவர்களான நமக்குச் சிறப்பு 'லக்ஷ்மீநாத2னே ஆஶ்ரயிக்கத்தக்கவன்' என்று ஒரு மிது2னத்தைப் பற்றுகிற இதுவேயாகும்'' என்று சொன்னதாக ஆச்சான் அருளினார் என்னும் ஐதிஹ்யம் இங்கு அநுஸந்தி4க்கத்தக்கது. நம்முடைய த3ர்ஶநார்த்த2ம் இப்படி இருப்பதாலேயே த்3வயத்தில் முற்பாதியாலே எம்பெருமானைப் பற்றும்போது புருஷகாரமான பிராட்டி முன்னாகவே பற்றுகிறோம். பிற்பாதியில் எம்பெருமானை ப்ராப்யமாகப் பற்றும்போது ப்ராப்யையான இவள் முன்னாகவே பற்றுகிறோம்.

---

வத்தையும் ஓரர்த்த2மாக விவக்ஷித்துத் தத3ர்த்த2மாக ஓரைதிஹ்யமருளிச்செய்கிறார் (வங்கிப் புரத்தித்யாதி3) நம்பியும் ஆச்சியும் ஒருத்தர்; *நம்பி குமாரர் ஆச்சியென்றும்.

---

* ''நம்பியின் தந்தையும், குமாரரும் 'ஆச்சி' எனப் பெயர்பெற்றவர்'' எனப் பெரிய திருமுடியடைவு.



ஆகையாலிறே நாம் இரண்டிடத்திலும் அவள் முன்னாக அநுஸந்தி4க்கிறது. g ஜக3த்காரணத்வாதி3களைக் கொள்ளப் புக்கால் ஒரூர்க்கு ஒருத்தன் ஸ்ரஷ்டாவாயிருக்கும்; ஶ்ரிய:பதித்வந்தான் ஆஶ்ரயாந்தரத்தில் கிடப்பதொன்றன்றே.

### ஒன்பதாம் திருமொழி—ஏழாம் பாட்டு

இன்றுவந் தித்தனையு மமு துசெய்தி டப்பெறில்நான்
ஒன்றுநூ றாயிரமாக் கொடுத் துப்பின்னு மாளும்செய்வன்
தென்றல் மணங்கமழும் திரு மாலிருஞ் சோலைதன்னுள்
நின்ற பிரான்அடியேன் மனத் தேவந்து நேர்படிலே.

பதவுரை:— **தென்றல் மணம் கமழும்**—தென்றல் காற்றானது மணத்தைக்கொண்டு வீசுகின்ற, **திருமாலிருஞ்சோலை தன்னுள்**—திருமாலிஞ்சோலைமலையிலே, **நின்ற**—எழுந்தருளியிருக்கிற, **பிரான்**—ஸ்வாமியான அழகர், **இன்று**—இன்றைக்கு, **வந்து**—இவ்விடமெழுந்தருளி, **இத்தனையும்**-நூறுதடா நிறைந்த வெண்ணெயையும், அக்காரவடிசிலையும்,

---

144. ''காரணம் து த்4யேய:'' [அத2ர்வஶிகோ2பநிஷத்]

[காரணவஸ்துவே தியானிக்கத்தக்கது.] என்கிறபடியே ஜக3த்காரணத்வத்தை ப்3ரஹ்மலக்ஷணமாகக் கொள்வதுண்டாயினும், பிரமன் முதலான பலரும் பல பொருள்களைப் படைப்பவர்களாகையாலே அவர்களும் ஜக3த்காரணர்களோ என்று ஐயத்துக்கு இடமேற்படும். புருஷஸூக்தத்தில் சிலைநாட்டப்பட்ட ஶ்ரிய:பதித்வத்தை ப்3ரஹ்மலக்ஷணமாகக்கொண்டால், அது வேறொருவரிடம் இல்லாததாகையாலே ஐயத்துக்கு இடமில்லாமலிருக்கும். ஆகையால் 'ஏறு திருவுடையான்' என்று ஆண்டாள் லக்ஷ்மீஸம்ப3ந்த4த்தைக் குறிப்பதாகக் கொள்வது மிகப்பொருத்தம். 6.

---

g 144. "कारणं तु ध्येयः" (காரணம் து த்4யேய:) அன்றோ, காரணத்வம் போராதோ, ஶ்ரிய:பதித்வம் வேணுமோவென்ன அருளிச்செய்கிறார் (ஜக3த்காரணத்வாதி3களையித்யாதி3.) 6.

**அமுதுசெய்திட பெறில்** — அமுது செய்தருளப் பெற்றால் (அவ்வளவுமன்றி), **அடியேன் மனத்தே வந்து நேர்படில்** — அடியேனுடைய ஹ்ருத$_3$யத்திலேயே நித்யவாஸம் பண்ணப் பெற்றால், **நான்** — அடியேன், **ஒன்று** — ஒருதடாவுக்கு, **நூறு ஆயிரம் ஆ கொடுத்து** — நூறாயிரம் தடாக்களாக ஸமர்ப்பித்து, **பின்னும்** — அதற்குமேலும், **ஆளும் செய்வன்** — ஸகலவித$_4$ கைங்கர்யங்களும் பண்ணுவேன்.

வ்யா:— **ஏழாம் பாட்டு.** a (இன்று இத்யாதி$_3$) **நான் ப்ரார்த்தி$_2$த்திருக்கிற இன்று வந்து; என்னிரப்பு மறுமைக்கு ஒன்று செய்தானாய் விடுகையன்றிக்கே, தனக்கு இதொழியச்** b **செல்லாமையுடையனாய்க்கொண்டு உவந்து அமுதுசெய் திடப்பெறில்.** (இத்தனையும்) **நூறுதடாவில் வெண்ணெயும்**

---

7. *அவ:—* அடியேன் ஸமர்ப்பித்த நூறுதடாவில் வெண்ணெயையும் நூறுதடாநிறைந்த அக்காரவடிசிலையும் அமுதுசெய்தானாகில், ஒன்று நூறாயிரமாகக்கொடுத்துக் கைங்கர்யமும் செய்வேன் என்கிறாள்.

*வ்யா:— (இன்று வந்தித்தனையும் அமுதுசெய்திடப்பெறில்)* ''இன்றுவந்து'' என்பதை ''இன்று வந்து'' என்றும், ''இன்று உவந்து'' என்றும் பிரித்துப் பொருள்கொள்ளலாம். முதற் பொருள் பதவுரையில் காட்டப்பட்டது. *(இன்று உவந்து அமுதுசெய்திடப்பெறில்)* அடியேன் யாசித்ததை மறுக்கமுடியாமல் அமுதுசெய்வது போதாது. அமுதுசெய்யாவிடில் தான் த$_4$ரிக்கமாட்டான் என்பது தோற்ற உவந்து அமுதுசெய்ய வேணும். *(இத்தனையும்)* நூறுதடாவில் வெண்ணெயையும் நூறுதடாநிறைந்த அக்காரவடிசிலையும். ''அட்டுக்குவிசோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறுமடங்கப் பொட்டத் துற்று'' [பெரியாழ்-திரு 3-5-1] என்கிறபடியே சோற்றுமலையையும், தயிர்க்குளத்தையும், நெய்மடுவையும் உண்ட உலகமுண்ட

---

ஏழாம் பாட்டு. (இன்று வந்தித்யாதி$_3$) a இன்றுவந் தென்னுதல். இன்று உவந்தென்னுதல். b உவப்பால் -



**நூறுதடாநிறைந்த அக்காரவடிசிலும்.** (அமுதுசெய்திடப் பெறில்) **இவளுக்குப் பேறு இதுவே; பின்னையும் அவனுக்குக் கொடுக்குமத்தனை. அவன் அமுதுசெய்தால் கொள்ளும் ப்ர யோஜநமென் ? என்னில்:** (நான் ஒன்று நூறுயிரமாக் கொடுத்துப் பின்னும் ஆளுஞ்செய்வன்) c **இது எனக்கு ப்ரயோஜநம்.** (நான்) **அவன் ஆசைப்படவேணுமென்று ப்ரார்த்தி$_2$க்கிற நான்.** ( ஒன்று நூறுயிரமாக்கொடுத்து )

---

பெருவாயனுக்கு இது ஒரு பெரிதல்லவே. *(அமுதுசெய்திடப் பெறில்)* இவளுக்குப் பயன் இதுவே. இதை ஸாத$_4$னமாக்கி வேறொருபயனைப்பெற்று அகலும் குடியில் பிறந்தவளல்லவே. '' கூறைசோறிவை வேண்டுவதில்லை ' [பெரியாழ்-திரு 5-1-4] என்னும் பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையல்லவோ; மேலும் அவனுக்கு ஒன்று நூறுயிரமாகக் கொடுப்பதாக வன்றோ அருளிச்செய்கிறாள், அப்படியானால், அமுதுசெய்வதால் அவன்கொள்ளும் பயனென்ன ? மேலும், ''ப்ரயோஜந மநுத்$_3$திஶ்ய ந மந்தோ$_3$பி ப்ரவர்த்ததே'' [ஓர் பயன் கருதாது, ஒரு முட்டாளும் ஒரு கார்யத்தில் ஈடுபடமாட்டான்] என்று உலகவழக்கிருக்கும்போது பயனில்லை என்பது எப்படி? எனில்— *(நான் ஒன்று நூறுயிரமாக்கொடுத்துப் பின்னும் ஆளும்செய்வன்)* நான் கொடுக்கவந்தவளேயொழியக் கொள்ளவந்தவளல்ல. நூறுதடா அமுதுசெய்தால் நூறுயிரம் தடாவாகக்கொடுப்பேன்; இத்துடன் கைங்கர்யமும் செய்வேன். நூறுயிரம் தடாவில் வெண்ணெயும் நூறுயிரம் தடாநிறைந்த அக்காரவடிசிலும் நான் செய்யும் கைங்கர்யமும் அவன்கொள்ளும் பயன்கள். இவற்றைக்கொள்வதால் அவனுக்கு ஏற்படும் உகப்பு எனக்குப்பயன். *(நான்)* அவன் உகக்க வேண்டும் என்று யாசிக்கிறவளன்றோ நான். அன்றிக்கே, இவள் ஒன்று நூறுயிரமாகக் கொடுப்பதைக்கொள்வது அவனுக்குப் பயன். ப்ராப்யத்வரையாலே கைங்கர்யம் செய்யத் துடிக்கும் எனக்குக் கைங்கர்யம் பயனாகிறது என்றும்

---

ஆற்றாமை . சொல்லுகிறது. c ஒன்று நூறுயிரமாகக் கொடுத்துப் பின்னுமாளும் செய்கை ப்ரயோஜநமென்றபடி.

**நூறுதடாவுக்கும் நூறுயிரம் தடாவாகக்கொடுத்து.** (பின்னும் ஆளும்செய்வன்) **அவனுகந்தது கொடுக்கிற நான் ஆசைப் பட்டத்தை விடுவேனே ?**

(தென்றல் மணம் கமழும் திருமாலிருஞ்சோலை தன்னுள் நின்ற பிரான் அடியேன் மனத்தேவந்து d நேர்படில்........ பின்னுமாளும் செய்வன்) d$_2$ **வேறென்று பெறுமதிற்காட்டிலும் அடிமைசெய்யுமித்தனையாகாதேதான் அவன் விரும்பியிருப்பது.** e **புதியதொன்று பெறுமதிற்காட்டிலும், பழையதாயிழந்தது பெற்றாலன்றோ அவனுகப்பது.** (ஆளுஞ்செய்வன்) f **"வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்" என்று தமப்பனார் பாரித்திருக்குமதே காணும் - இவளுமாசைப்படுகிறது.**

---

பொருள்கொள்ளலாம், *(பின்னும் ஆளும்செய்வன்)* அவன் உகந்ததை ஒன்று நூறுயிரமாகக்கொடுக்கிற நான், அடியேனுகந்த கைங்கர்யத்தை விடுவேனோ ?

*(தென்றல் மணம் கமழும் திருமாலிருஞ்சோலை தன்னுள் நின்ற பிரான் அடியேன் மனத்தேவந்து நேர்படில் ...... பின்னுமாளும் செய்வன்)* வெண்ணெய், அக்காரவடிசில் முதலானவற்றைப் பெறுவதைக் காட்டிலும், இவள் அடிமைசெய்வதையேயன்றோ அவன் விரும்பியிருக்கிறான். புதியதாய் ஒன்றைப் பெறுவதைக் காட்டிலும், அநாதி$_{3}$ஸித்$_{3}$த$_{4}$மாகையாலே பழையதாய், தான் இழந்துகிடக்கும் அடிமையைப் பெற்றாலன்றோ அவன் உகப்பான். கண்ணன் வெண்ணெய் முதலானவற்றைக் களவுகண்டதும் சேதனர்களை ஆட்கொள்ளுகைக்காகவேயன்றோ. *(ஆளும் செய்வன்)* "வழுவிலா அடிமைசெய்யவேண்டும் நாம்" [ திருவாய் 3-3-1 ] என்று அஞ்சு குடிக்கொரு சந்ததியான இவளுடைய தகப்பனாரான நம்மாழ்வார் ஆசைப்பட்டதையே இவளும்

---

d "நேர்படில்"-கிட்டுமாகில். d$_2$ "ஆளும் செய்வன்" என்றதுக்குத் தாத்பர்யம் (வேறென்றித்யாதி$_3$) e இவள் கொடுக்கிறதைப் பற்றவும். அடிமையை அவனுகந்திருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (புதியதொன்றித்யாதி$_3$).



(தென்றல் இத்யாதி$_3$) g **அவன்பக்கல் குறையில்லையிறே அத்தே$_3$ஶவாஸம்** h **தட்டாதாகில். அவன் உபகரிக்கையிலேயொருப்பட்டான்; அது தலைக்கட்டுமாகில்.** (அடியேன் மனத்தே வந்து நேர்படில்........பின்னுமாளும் செய்வன்) **" வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம் " என்று மநோரதி$_2$த்திருந்தபடியே வந்து கிட்டப்பெறில், பின்னுமாளும் செய்வன்.** (அடியேன்) **புதியதொன்றை ப்ரார்த்தி$_2$க்கிறேனே ?.** 7.

ஒன்பதாம் திருமொழி—எட்டாம் பாட்டு.

**காலை யெழுந்திருந்து கரி யகுரு விக்கணங்கள்**
**மாலின் வரவுசொல்லி மருள் பாடுதல் மெய்ம்மைகொலோ ?**
**சோலை மலைப்பெருமான் துவ ராபதி யெம்பெருமான்**
**ஆலி னிலைப்பெருமா னவன் வார்த்தை யுரைக்கின்றதே.**

---

ஆசைப்படுகிறாள். *(தென்றல் மணம் கமழும் ........ பிரான் அடியேன் மனத்தே வந்து நேர்படில்)* உபகரிப்பதையே இயல்வாகக்கொண்ட பிரானாகையால், அடியேன் மனத்தே வந்து நேர்படாதது அவனிடமுள்ள குறையாலன்று; அவன் என் மனத்தில் வந்து புகுகைக்காகப் புறப்படும்போது, திருமாலிருஞ்சோலைதன்னுள் கமழ்கின்ற தென்றல் மணம் அவனைக் கால் கட்டியிருக்கவேண்டும். அப்படி அந்த தே$_3$ஶவாஸமாகிற தடையையும் மீறி அடியேன் மனத்தே எழுந்தருளினானாகில். *(அடியேன் மனத்தே வந்து நேர்படில் பின்னுமாளும் செய்வன்)* "வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்' என்று ஆசைப்பட்டிருந்தபடியே, அவன் அடியேன் நெஞ்சில் எழுந்தருளினானாகில் அடிமையும்செய்வேன். *(அடியேன்)* அடிமைசெய்கை அநாதி$_3$காலமாக ஸ்வரூபப்ராப்தமன்றோ. புதியதொன்றைப் ப்ரார்த்தி$_2$க்கிறேனோ அடியேன் ? 7.

---

f "செய்வன்" என்ற ப்ரார்த்த$_2$னைக்குத் தாத்பர்யம் (வழுவிலாவித்யாதி$_3$) இதிலும் கைங்கர்யமே அவனுக்குப் புருஷார்த்த$_2$ம். g "பிரான்" என்கையாலே-குறையில்லை. h தென்றல் பா$_3$த$_4$கமாகையாலே (தட்டாதாகிலென்கிறது). 7.

**பதவுரை:— கரிய குருவி கணங்கள்**—கரிய குருவிக் கூட்டங்கள், **காலை**—விடியற்காலத்திலே, **எழுந்திருந்து**—எழுந்து, **சோலைமலை பெருமான்**—திருமாலிருஞ்சோலைக்குத் தலைவனையும், **துவராபதி எம்பெருமான்**—த்$_3$வாரகாபுரிக்குத் தலைவனையும், **ஆலின் இலை பெருமான் அவன்**—ஆலிலையில் வளர்ந்த பெருமானையுமுள்ள அந்த ஸர்வேஶ்வரனுடைய, **வார்த்தை** — வார்த்தைகளை, **உரைக்கின்ற** — சொல்லாநின்றன; (இப்படி) **மாலின்**—எம்பெருமானுடைய, **வரவு**—வருகையை, **சொல்லி**-சொல்லிக்கொண்டு, **மருள் பாடுதல்**-மருள் என்கிற பண்ணைப் பாடுவதானது, **மெய்ம்மை கொல்**—மெய்யாகத் தலைக்கட்டுமா ?

**வ்யா:-எட்டாம்பாட்டு.** (காலையெழுந்திருந்து)ஆ**ஆச்சான் பணித்ததாக ஜீயரருளிச்செய்யும்படி;- "இவள் பிறந்தவூரில் திர்யக்குக்களுக்குத்தான் வேறு போதுபோக்குண்டோ ? கண்ணுறக்கந்தான் உண்டோ ?" என்று. ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போலவிறே பண்ணிக்கொண்டிருப்பது.**

---

8. *அவ:*— குருவிக்கணங்கள் எம்பெருமான் வரப்போவதைச் சொல்லுவது நிறைவேறுமோ ? என்கிருள்.

*வ்யா:— (காலையெழுந்திருந்து)* விடியற்காலையில் எழுந்திருந்து. அறிவு குறைந்த குருவிக்கணங்கள் விடியற்காலையில் எழுந்திருப்பதும், எம்பெருமானது வரவை உணர்த்துவதும் கூடுமோ? என்னும் கேள்விபெழ (6-ம் பாட்டு வ்யாக்$_2$யானத்தில் வங்கிப்புரத்து நம்பியின் ஶிஷ்யராக எடுக்கப்பெற்ற)சிறியாச்சான், "இவள் பிறந்த ஊரில் பறவைகளுக்குத் தான் வேறு போது போக்குண்டோ? கண்ணுறக்கம்தான் உண்டோ? ஆகையாலே விடியற்காலையில் எழுந்திருப்பதும், எம்பெருமான் வரவை உணர்த்துவதும் கூடும்" என்று ஸமாத$_4$ாநம் அருளிச்செய்தார் என்று நஞ்சீயர் அருளிச்செய்வராம்; "ஊரும் நாடுமுலகமும் தன்னைப்போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்ற" [திருவாய் 6-7-2] என்கிறபடியே ஆண்டாள் பிறந்த ஊரில் அறிவற்ற ஜந்துக்களும் எம்பெருமானைப் பற்றியே பேசுமன்றே.

---

எட்டாம் பாட்டு. (காலையித்யாதி$_3$) ஆ அசேதநமான இவை காலை எழுந்திருக்கவும், ஸர்வேஶ்வரன் வரவைச் சொல்லவும் கூடுமோவென்ன அருளிச்செய்கிருர் (ஆச்சானித்யாதி$_3$).



**145.** "ब्राह्मे मुहूर्ते चोत्थाय चिन्तयेदात्मनो हितं" **(ப்$_3$ராஹ்மே முஹூர்த்தே சோத்த$_2$ாய சிந்தயேத$_3$ாத்மநோ ஹிதம்) என்னுமாபோலேயாய்த்து.** (கரியவித்யாதி$_3$) **வடிவாலும் பேச்சாலும் உபகரிக்குமவையாய்த்து.** (மாலின் வரவு சொல்லி) **அவன் முன்னடி தோற்ருதே வரும்படியைச் சொல்லி, "மருள் இந்தளம்" என்கிற பண்ணைப் பாடுகிறது மெய்யாகவற்ரே? 146. "किन्नु स्याच्चित्तमोहोऽयं" (கிந்நு ஸ்யாச் சித்தமோஹோ ऽயம்) என்னுமாபோலே.**

(சோலையிதயாதி$_3$) **எல்லாருடையவும் ரக்ஷணத்திலே யொருப்பட்டிருக்கிறவன் ; பதினாருயிரம் பெண்களோடு**

---

**145. ப்$_3$ராஹ்மே முஹூர்த்தே சோத்த$_2$ாய**
**சிந்தயேத$_3$ாத்மநோ ஹிதம் ।**
**ஹரிர் ஹரிர் ஹரிரிதி**
**வ்யாஹரேத் வைஷ்ணவః புமாந் ॥**

*[வங்கிபுரத்துநம்பி நித்யக்ரந்தம்.]*

[வைஷ்ணவனுயிருப்பவன் விடியற்காலவேளையில் எழுந்து தனக்கு நன்மையைச் சிந்திக்கக்கடவன்; ஹரிநாமத்தை மூன்று தடவை உச்சரிக்கக்கடவன்;] என்று அறிவுடைய வைஷ்ணவர்களுக்கு ஶாஸ்த்ரம் விதி$_4$த்தது அறிவற்ற பறவைகளும் அனுஷ்டி$_2$க்கும்படியாயிற்று. *(கரிய குருவிக்கணங்கள் மாலின் வரவுசொல்லி)* கரியகுருவிகளாகையாலே கரியபிரானுகிற அவனைக் கண்டாற்போலேயிருந்து வடிவால் உபகரித்தன. மாலின் வரவு சொல்லுகையாலே பேச்சாலும் உபகரித்தன. *( மாலின் வரவு சொல்லி மருள் பாடுதல் மெய்ம்மை கொலோ )* ஆண்டாளைப் பெறப்போகிரேம் என்னும் ஆசையாலே அவன் முன்னடி தோற்ருமல் கலங்கிவரும்படியைச் சொல்லி " மருள் இந்தளம் " என்னும் பண்ணைப்பாடுவது உண்மையாகவே நடக்குமோ, அல்லது என்னுடைய மதிமயக்கம்தானே? [120-ம் பக்கத்தில் 39வது ப்ரமாணத்தின்படி ] ஸீதாப்பிராட்டி பட்டபாடெல்லாம் ஆண்டாளும் படுகிருள்.

b ஆனைக்குக் குதிரைவைத்துப் பரிமாறின பரமரஸிகன், அக$_{4}$டிதக$_{4}$டநாஸாமர்த்$_{2}$யத்தையுடையவன்; அவன்வார்த்தை சொல்லாநின்றன. (மாலின்வரவு சொல்லி மருள்பாடுதல், மெய்ம்மைகொலோ)—இது மெய்யாகவற்றோ? 8.

---

*(சோலைமலைப் பெருமான்)* சேதனர் அனைவரையும் ரக்ஷிப்பதற்காகத் திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருப்பவன். *(துவராபதி எம்பெருமான்)* துவராபதி என்பது த்$_{3}$வாரகையிலுள்ள பதினாறுமாயிரவரான தேவிமார்களை லக்ஷணையாலே குறிக்கிறது. 'பெருமான்' என்கையாலே அவர்கள் அவ்வளவு பேரும் சேர்ந்தாலும், ஆனைக்கும் குதிரைக்கும் ஓட்டப்பந்தயத்திலே, பெருத்திருந்தாலும் ஆனை குதிரைக்குப் பின்தங்கியே வருவதுபோலே காதல்பரிமாற்றத்திலே அப்ரதா$_{4}$னர்களாகவே இருப்பர்கள் என்றும். இவன் அவர்களிலும் விஞ்சியிருக்கும் பரமரஸிகன் என்றும் உணர்த்தப்படுகிறது. *(ஆலினிலைப் பெருமான்)* எல்லாவுலகையும் தன் சிறிய வயிற்றிலே அடக்கிக்கொண்டு அப்போதே தளிர்விட்ட ஓராலிலையில் ஶயனித்திருக்கும் அக$_{4}$டிதக$_{4}$டநா (சேராதவற்றையும் சேர்த்துவைக்கும்) ஸாமர்த்$_{2}$யத்தையுடையவன். *( அவன் வார்த்தை யுரைக்கின்றதே )* அவன் விஷயமான வார்த்தைகளைச் சொல்லுவதன் மூலம் மாலின் வரவை உணர்த்துவது மெய்யாகுமோ? என்று மேலோடே கூட்டிப் பொருள் கொள்வது. 8.

---

b (ஆனைக்குக் குதிரைவைக்கை) ஆனை பெருத்திருந்தாலும் குதிரையைக் கிட்டித் தொடமாட்டாதாப்போலே, அவர்கள் அநேகரும் தானொருவனுமாயிருந்தாலும் "பெருமான்' என்கையாலே அவர்களெல்லார்க்கும் அவ்வருகாய், ப்ரணயத$_{4}$ரையில் விஞ்சியிருக்குமென்றபடி. "கரிய குருவிக்கணங்கள் — காலை எழுந்திருந்து — சோலைமலைப் பெருமானென்று தொடங்கி, அவன் வார்த்தையுரைக்கின்றது; இப்படி மாலின் வரவுசொல்லி மருள்பாடுதல் மெய்ம்மைகொலோ" இத்யந்வய:. 8.



ஒன்பதாம் திருமொழி — ஒன்பதாம் பாட்டு

**கோங்கல ரும்பொழில்மா லிருஞ் சோலையில் கொன்றைகள்
மேல்
தூங்குபொன் மாலைகளோ டுட னாய்நின்று தூங்குகின்றேன்
பூங்கொள் திருமுகத்து மடுத் தூதிய சங்கொலியும்
சார்ங்கவில் நாணொலியும் தலைப் பெய்வதெஞ்
ஞான்றுகொலோ?**

பதவுரை: — **கோங்கு அலரும் பொழில்** — கோங்கு மரங்கள் மலரப்பெற்ற சோலைகளையுடைய, **மாலிருஞ்சோலையில்** — திருமாலிருஞ்சோலை மலையில், **கொன்றைகள் மேல்** — கொன்றை மரங்களின் மேலே, **தூங்கு** — தொங்குகின்ற, **பொன் மாலைகளோடு உடனாய் நின்று** — பொன்நிறமான பூமாலைகளோடு ஸமமாக, **தூங்குகின்றேன்** — வீணைக் கிடக்கிறேன்; **பூ கொள்** — அழகு பொருந்திய, **திரு முகத்து** — திருப்பவளத்திலே, **மடுத்து** — வைத்து, **ஊதிய** — ஊதப்படுகிற, **சங்கு** — ஸ்ரீபாஞ்சஜந்யத்தினுடைய, **ஒலியும்** — த்$_{4}$வநியும், **சார்ங்கம் வில் நாண் ஒலியும்** — சார்ங்கமென்னும் வில்லின் நாணோசையும், **தலைப்பெய்வது** — ஸமீபிப்பது, **எஞ்ஞான்று கொல்** — என்றைக்கோ?

**வ்யா:— ஒன்பதாம் பாட்டு.** (கோங்கித்யாதி$_{3}$) **கோங்கலராநின்றுள்ள பொழிலையுடைத்தான திருமாலிருஞ்சோலையில்.** (கொன்றையித்யாதி$_{3}$) a **தாமஸபுருஷர்கள் புகுரும்**

---

9 *அவ:—* மாலிருஞ்சோலைமலையில் கொன்றைமரங்கள் போலே வீணைக் கிடக்கின்ற நான் எம்பெருமானுடைய சங்கொலியையும் சார்ங்கவில் நாணொலியையும் கேட்டு உயிர் த$_{4}$ரிக்கப் பெறுவது எந்நாளோ ? என்கிருள்.

*வ்யா:— (கோங்கலரும் பொழில்........தூங்குகின்றேன்)* கோங்குமரங்கள் மலரப்பெற்ற சோலைகளையுடைய திருமாலிருஞ்சோலைமலையில் கொன்றைமரங்களின் மேலே தொங்குகின்ற

---

ஒன்பதாம் பாட்டு. (கோங்கலருமித்யாதி$_{3}$) a"மாலிருஞ் சோலையில் கொன்றை" என்றதுக்குத் தாத்பர்யம் (தாமஸ

தே3ஶமன்று; b ஸாத்விகர் இதுகொண்டு காரியங்கொள்ளார்கள். பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்து ப4க3வத3ர்ஹமான வஸ்து c இங்ஙனே இழந்திருந்து c2 க்லேஶப்படுவதே!. (பூங்கொளித்யாதி3) இரண்டவதாரத்தில் இரண்டு

---

பொன்நிறமான பூமாலைகளையொத்து நான் வீணாகக்கிடக்கின்றேன். திருமாலிருஞ்சோலைமலையில் கொன்றைமரங்களின் பூங்கொத்துக்கள் வீணாகக்கிடக்குமோ? எனில்: இது எம்பெருமானுடைய மலையாகையாலே தமோகு3ணம் நிறைந்தவர்களான ஶிவப4க்தர்கள் இந்த மலைக்கு வரமாட்டார்கள்; ஸத்வகு3ணம் நிறைந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் ஶிவனுக்கு உரியதான இதைப் பறித்து உபயோகி3க்கமாட்டார்கள். ஆகையால் திருமாலிருஞ்சோலைக் கொன்றைமரங்களின்மேல் பூங்கொத்துக்கள் பயன்படுத்தப் பெறாமல் வீணாகியே போயின. பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்து "கோவிந்தனுக்கல்லால் வாயில்போகா" [நாச்-திரு 12-4] "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" [நாச்-திரு 1-5] என்கிறபடியே எம்பெருமானுக்கே உரியவளான இவ்வாண்டாள் இப்படி அவனை இழந்திருந்து துன்புறுவதே! என்று பெரியவாச்சான்பிள்ளை ஈடுபடுவர். ஆண்டாள் தன்னைக்குறித்தே சொல்லுவதாக அரும்பதவுரை. த்3ருஷ்டாந்தத்தையொட்டிப் பார்க்கும்போது "எம்பெருமானாலும் ஏற்றுக்கொள்ளப்படாமல் எப்பெருமானுக்குரியவள் என்பதே காரணமாக ஸம்ஸாரிகளுக்கும் பயன்படாமல் இப்படி வீணாகப்போவதே" என்று கருத்து. (பூங்கொள்........எஞ்ஞான்று கொலோ) இங்கு சங்கொலியை

---

புருஷர்களித்யாதி3) b "கொன்றை" என்றதுக்குத் தாத்பர்யம் (ஸாத்விகரித்யாதி3) "கொன்றைமாலிருஞ்சோலையில்" என்றந்வயித்து அருளிச்செய்வர். c (இங்ஙனே இழந்திருந்து க்லேஶப்படுவதே! என்ற வாக்யத்துக்கு - த்3ருஷ்டாந்தாநுகு3ணமாக, ப4க3வத3ங்கீ3காரமுமின்றிக்கே, ப4க3வத் ஸம்ப3ந்த4மே ஹேதுவாக ஸம்ஸாரிகளுக்கும் கூட்டின்றிக்கே இப்படி க்லேஶப்படுவதே! என்று தாத்பர்யம். c2 (க்லேஶப்படுவதே) என்று இவள் வார்த்தை.



பிராட்டிமார்க்கு உதவினது தனக்கொருத்திக்குமே வேண்டும்படியாய்த்து இவள் த3ஶை. ஶிஶுபாலன் ஸ்வயம்வரார்த்த2மாகவொருப்பட்ட ஸமயத்திலே, புறச்சோலையிலே ஸ்ரீபாஞ்சஜந்ய கோ4ஷமானது வந்து செவிப்பட்டு த4ரிப்பித்தது ருக்மிணிப் பிராட்டியை; ராவணன் மாயாஶிரஸ்ஸைக் காட்டினபோது, ஸ்ரீஶார்ங்க3த்தின் ஜயகோ4ஷமானது வந்து செவிப்பட்டு த4ரிப்பித்தது ஸ்ரீஜநகராஜன் திருமகளை; இரண்டவதாரத்திலுள்ளவையும் மடுத்தொலிக்க வேண்டும்படியாய்த்து இவள் விடாய். d அவர்களளவல்லவாய்த்து இவளாற்றாமை. 9.

---

யும் சார்ங்கவில் நாணொலியையும் கூறியது ஆழ்ந்த கருத்துடையது. ஸ்ரீராமாவதாரத்தில் அஶோகவநத்திலிருந்த ஸீதாப்பிராட்டியின் நிலையைக் காட்டிலும், ஶிஶுபாலனுக்கு மணம் முடிக்க நிச்சயித்திருந்தபோது ருக்மிணிப் பிராட்டியின் நிலையைக் காட்டிலும் வருந்தத்தக்க நிலையிலிருக்கும் தனக்கு அவ்விரு பிராட்டிமார்களையும் உயிர்த4ரிப்பித்த அவ்விரண்டு ஒலிகளையும் கேட்டால்தான் உயிர்த4ரிக்கமுடியும் என்கிறாள். ஶிஶுபாலனுக்கு மணம்முடிக்க நிச்சயித்திருந்த ஸமயத்திலே புறச்சோலையிலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தின் பெருமுழக்கம் வந்து காதில்பட்ட பின்புதான் ருக்மிணிப்பிராட்டி உயிர்த4ரித்தாள். அஶோகவனத்திலே இருந்தபோது கடலைத்தாண்டி இலங்கைக்கு வந்த ஸ்ரீராமபிரான் செய்த சார்ங்கவில் நாணொலியைக் கேட்டு, ராவணன் மாயாஶிரஸ்ஸைக் காட்டினபோது ஸீதாப்பிராட்டி உயிர்த4ரித்தாள். இவளுடைய ஆற்றாமை அவர்களுடையதைக் காட்டிலும் மிக்கதாகையாலே, அந்த இரண்டு ஒலிகளும் சேர்ந்து ஒலித்தால்தான் உயிர்த4ரிப்பேன் என்கிறாள் ஆண்டாள். அவ்விரண்டு பிராட்டிமார்களில் ஒவ்வொருத்தியைக் காட்டிலும் தான் ஆற்றாமைமிக்கவள் என்றபடி. 9.

---

கொன்றைப் புஷ்பம்போலே ஒன்றுக்கும் அர்ஹமன்றிக்கே நிஷ்ப்ரயோஜநமானேனென்று கருத்து. d (அவர்களளவல்ல வாய்த்து) என்றது - அவர்கள் ஒரொருத்தருடைய ஆற்றாமையினளவல்லவாய்த்து என்றபடி. 9.

## ஒன்பதாம்திருமொழி—பத்தாம் பாட்டு

**சந்தொடு காரகிலும் சுமந் துதடங் கள்பொருது**
**வந்திழி யுஞ்சிலம்பா றுடை மாலிருஞ் சோலைநின்ற**
**சுந்தர னைச்சுரும்பார் குழற் கோதை தொகுத்துரைத்த**
**செந்தமிழ் பத்தும்வல்லார் திரு மாலடி சேர்வர்களே.**

பதவுரை;— **சந்தொடு**—சந்தனக்கட்டைகளையும், **கார் அகிலும்** — காரகிற்கட்டைகளையும், **சுமந்து** — அடித்துக் கொண்டு, **தடங்கள் பொருது வந்து**—கரைகளை அழித்துக் கொண்டு ஓடிவந்து, **இழியும்**—பெருகுகின்ற, **சிலம்பாறு உடை**—நூபுர க$_3$ங்கை$_3$யை உடைத்தான, **மாலிருஞ்சோலை நின்ற சுந்தரனை** — திருமாலிருஞ்சோலை மலையில் எழுந்தருளியிருக்கிற அழகரைக்குறித்து, **சுரும்பு ஆர் குழல் கோதை** — வண்டுகள் படிந்த கூந்தல் முடியை உடைய வளான ஆண்டாள், **தொகுத்து உரைத்த**— அழகாக அருளிச்செய்த, **செம் தமிழ் பத்தும் வல்லார்**—செந்தமிழிலாகிய இப்பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கள், **திருமால் அடி** ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகளை, **சேர்வர்கள்**—அடையப்பெறுவர்கள்.

வ்யா:— **பத்தாம் பாட்டு.** a (சந்தித்யாதி$_3$) **பிறந்தகத்தினின்றும் புக்ககத்துக்குப் போம் ஸ்த்ரீகள், த$_4$நங்கொண்டு போமாபோலேயாய்த்து.** (தடங்கள் பொருது) **ஒரு மத்த**

---

10. *அவ:*—இப்பத்தையும் ஓதவல்லவர்களுக்குப் பயனைக் கூறிப் பதிகத்தை நிறைவடைவிக்கிருள்.

*வ்யா:— (சந்தொடு......சிலம்பாறு)* பிறந்தகத்திலிருந்து புக்ககத்துக்குப் போகும் பெண்பிள்ளைகள் த$_4$னம் கொண்டு போவதுபோலே, மலையில் பிறந்த சிலம்பாறும் எம்பெருமான் இருப்பிடமான இப்புக்ககத்துக்குப் போகும்போது, சந்த$_3$னத்தோடு காரகிற்கட்டைகளை அலைக்கரங்களாலே சுமந்துகொண்டு, புக்ககத்துக்குச் செல்லும் வேக$_3$த்தாலே கரைகளை அழித்துக் கொண்டு ஓடிவந்து பெருகுகின்றது. *(தடங்கள் பொருது)* மத$_3$ம்



**க$_3$ஜம் கரைபொருது வருமாபோலே.** (சிலம்பாறுடை) **பரமபத$_3$த்துக்கு விரஜைபோலேயாய்த்து-திருமலைக்குத் திருச்சிலம்பாறு.** (சுந்தரனை) **ஸர்வாங்க$_3$ ஸௌந்த$_3$ரனையாய்த்துக் கவிபாடிற்று.** b (சுரும்பார் குழல் கோதை) **தன்னுடைய ஏகாங்க$_3$ ஸௌந்த$_3$ர்யத்தாலே இவையடையக் குமிழ் நீருண்ணும்படி பண்ணவல்லவளாய்த்து இப்பாடுபட்டாள்.** (தொகுத்துரைத்த) **ரத்நங்களைச் சேரத் திரட்டினாற்போலே கல்யாணகு$_3$ணங்களைச் சேர்த்துச் சொன்ன.**

(செந்தமிழ்) c **செவ்விய தமிழ்.** d **ப$_4$ாவப$_3$ந்த$_4$ம் வழிந்து சொல்லாய்ப் புறப்பட்டவித்தனை.** (திருமாலித்யாதி$_3$) **பிராட்டி**

---

கொண்ட யானை கரைகளை த$_3$ந்தத்தாலே குத்திக்கொண்டு வருவதுபோலே வருகிறது இச்சிலம்பாறு. *(சிலம்பாறுடை)* பரமபத$_3$த்துக்கு விரஜாநதி$_3$போலேயாயிற்று இத்திருமலைக்கு நூபுர க$_3$ங்கை$_3$. *(மாலிருஞ்சோலை நின்ற சுந்தரனை)* மிக அழகிய மாலிருஞ்சோலையில்நின்ற ஸர்வாங்க$_3$ஸௌந்த$_3$ரனையாயிற்று இவள் கவிபாடினது. பாடினவள் யாரெனில் *(சுரும்பார் குழற்கோதை)* வண்டுகள்படிந்த கூந்தல் முடியையுடையவளான ஆண்டாள்; தன்னுடைய ஓரவயவமான குழலின் அழகாலேயே மாலிருஞ்சோலையின் அழகையும், அழகருடைய அழகையும் வெற்றி கொள்ளவல்ல ஆண்டாளாயிற்று இப்பாடுபட்டாள். *(தொகுத்துரைத்த)* பலவகைப்பட்ட ரத்னங்களையும் ஒன்ருகச் சேர்த்து மாலையாகத் தொடுத்தாற்போலே அழகருடைய கல்யாணகு$_3$ணங்களைச்சேர்த்துப் பாமாலையாகத் தொகுத்தபடி.

*(செந்தமிழ்)* ஆண்டாளுடைய காதல்பெருக்கு வழிந்து இப்பாமாலையாகப் புறப்பட்டதாகையாலே இது செவ்விய தமிழாயிருக்கிறது. *(பத்தும் வல்லார்;* இப்பத்துப்பாசுரங்களையும் அர்த்த$_2$த்தோடு அனுஸந்தி$_4$க்கவல்லவர்கள். *(திருமாலடி சேர்வர்களே)* பிராட்டியும் அவனுமான சேர்த்தியிலே அடிமை செய்யவேண்டும் என்று ஆசைப்பட்டு அது கிடையாமை

---

நிக$_3$மத்தில்(சந்தித்யாதி$_3$)a"சந்து"-சந்த$_3$நம்.b"சுரும்பு"-வண்டு. c,d ப$_4$ாவப$_3$ந்த$_4$மடியாக உண்டாகையாலே -

யும் அவனுமான சேர்த்தியிலே அடிமை செய்யவேணுமென்றாய்த்து இவளாசைப்பட்டது; அப்பேறுபெறுவர்கள். e 147. "अहं शिष्या च" (அஹம் ஶிஷ்யா ச) ஜ்ஞாதவ்யங்களடங்கக் கேட்டதும் உம்மோடே; 147. "दासी च" (தா3ஸீ ச) பெரிய பிராட்டியாரும் நீரும் சேரவிருந்து "இன்னத்தையெடு, இன்னத்தை வை" என்றால் அப்படி செய்யவுரியேன்; 147. "भक्ता च" (ப4க்தா ச) உம்முடைய அடியாரோடே கூடிக் கவிபாடவுரியேன். ஒரு வ்யக்திக்கே இப்படி அநேகாகாரமாகப் பிரியவொண்ணுமோ? இப்படி கூடுமோ? என்னில்;

---

யாலே இத்திருமொழியில் இவள் இப்பாடுபட்டாள். இதை அநுஸந்தி4க்கவல்லவர்கள் இப்பாடெல்லாம் படாமல், இவள் ஆசைப்பட்ட பேற்றைப் பெறுவர். (அடிசேர்வர்) என்றது பரமபுருஷார்த்த2மான கைங்கர்யத்தைப் பெறுவர் என்றபடி. இவள் அடிமைசெய்ய ஆசைப்பட்டிருந்ததுண்டோ? எனில்,

**147. அஹம் ஶிஷ்யா ச தா3ஸீ ச ப4க்தா ச புருஷோத்தம ।**
[வராஹபுராணம்]

[புருஷோத்தமனே! நான் உனக்கு சிஷ்யையாகவும், தா3ஸியாகவும், ப4க்தையாகவுமிருக்கிறேன்.] என்கிறபடியே இவள் தான் பூ4மிப்பிராட்டியாக இருந்தபோது 'தா3ஸீ' என்று அடிமைசெய்ய ஆசைப்பட்டிருப்பவள் என்று கூறியதாக வராஹபுராணம் சொல்லிற்றன்றோ. (*அஹம் ஶிஷ்யா ச*) அறிய வேண்டிய அர்த்த2ம் அனைத்தும் கேட்டது உம்மிடமே. (*தா3ஸீ ச*) பெரியபிராட்டியாரும் நீரும் கூடியிருந்து "இன்ன பொருளை எடு, இன்ன பொருளை வை" என்று நியமித்தால் அப்படியே செய்யக்கடமைப்பட்டவள் அடியேன். (*ப4க்தா ச*) உம்முடைய அடியார்களாகிற ஆழ்வார்களாகிற அஞ்சுகுடிக்கொரு சந்ததியாய்ப்பிறந்து கவிபாடப்போகிறவள். ஒருத்தியே இப்படி பல ஆகாரங்களையுடையவளாகப் பிரிந்திருக்க முடியுமோ? இது கூடுமோ? என்னில்: (*புருஷோத்தம*)

---

(செவ்விய தமிழ்). e அடிமைசெய்ய ஆசைப்பட்டிருக்குமோ இவள்? என்ன அருளிச்செய்கிறார் (**அஹம் ஶிஷ்யேத்யாதி2**)



147. "पुरुषोत्तम" (புருஷோத்தம) நீர் புருஷோத்தமர்; நீரெவ்வளவு அழிக்கவல்லீர் அவ்வளவும் அழியுமத்தனையன்றோ எதிர்த்தலை. f ஆறுபெருகியோடாநின்றால், வாய்த்தலைகளாலும் கைவாய்க்கால்களாலும் பிரியுண்டுபோகாநின்றாலும் கடலில் புகும் அம்சம் குறைவற்றுப் புகுமிறே; அப்படியே எல்லாவகையாலும் அநுப4வியாநின்றாலும் அபி4நிவேஶம் குறையாதிருக்குமாய்த்து இவர்க்கு. 10.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஒன்பதாம் திருமொழி முற்றிற்று.

## பத்தாம் திருமொழி
## கார்க்கோடல் ப்ரவேஶம்

அவ:— a கீழ்த் திருமொழியில்-தன் ஜீவநத்திலுண்டான நசையாலே புறம்பே சிலவற்றின் காலிலே விழுந்தாள்; அது கார்யகரமாகப் பெற்றதில்லை; b அவன்தான் வந்து

---

நீர் புருஷோத்தமர். நீர் உமது அடியார்களை எவ்வளவு அழிக்க (*ஈடுபடுத்த*) வல்லீரோ அவ்வளவுக்கு அடியார்கள் அழிவர்களன்றோ. ஆறுபெருகி ஓடும்போது மதகுகள்மூலமும் கிளைவாய்க்கால்கள்மூலமும் ஆற்றுநீர் பல பிரிவுகளாகப் பிரிவுண்டு போனாலும், கடலில்சென்று சேரும் நீரின் அளவும் குறைவில்லாமலிருக்குமன்றோ. அப்படியே எம்பெருமானை *ஶிஷ்யை*, தா3ஸீ, ப4க்தை இப்படி எல்லாவகையாகவும் அனுப4வித்தாலும் காதல் குறையாமல் கடலின் மிகப்பெரிதாய் வளருமாயிற்று பூ4மிப்பிராட்டிக்கு.

ஒன்பதாம் திருமொழி விவரணம் நிறைவு பெற்றது.

---

f எல்லா அவஸ்தை2யுமுண்டானால் அபி4நிவேஶம் குறையாதோ? என்ன அருளிச்செய்கிறார் (ஆறுபெருகி இத்யாதி2). 10.

ஜீயர் திருவடிகளே சரணம்.

முகங்காட்டுதல், அவன் வரவுக்கு ஸூசகமாயிருப்பன சிலவுண்டாதல் செய்யப்பெற்று அத்தாலே த$_4$ரிக்கவேண்டும் படி ஆற்ருமை கரைபுரண்டது; இவளை த$_4$ரிப்பிக்கைக் குடலாயிருப்பதொன்றின்றிக்கே, அவன் வரவு குறித்துப் போன c பருவம் வந்து, அப்பருவத்துக்கடைத்த பத$_3$ார்த்த$_2$ங்களும் ஒருமுகஞ்செய்து, அவனுடைய திருமேனிக்கும் தி$_3$வ்யாவயவங்களுக்கும் அவயவஶோபை$_4$க்கும் பேச்சுக்கும் ஸ்மாரகமாய்க்கொண்டு, d எடுப்பும் சாய்ப்புமாய் மேல்

---

## பத்தாம் திருமொழி — வ்யாக்$_2$யான விவரணம்

### கார்க்கோடல் ப்ரவேஶம்

தான் வாழவேண்டும் என்னும் ஆசையாலே கீழ்த் திருமொழியான சிந்துரச்செம்பொடியில் "எனக்கோர் சரண் சாற்றுமினே' (9-5) என்னும் பாசுரத்தில் வண்டுகள் முதலான வற்றின் காலிலும், அதற்கு முந்திய 'விண்ணீல மேலாப்பு' திருமொழியில் மேக$_4$த்தின் காலிலும் விழுந்தாள். அவை யொன்றும் ப$_2$லிக்கவில்லை. இவளுடைய ஆற்ருமையோ 'அவன் நேரே வந்து முகங்காட்டினுலோ, அவன் வரப் போகிருன் என்பதை உணர்த்தும் சில அடையாளங்கள் உண்டானுலோதான் உயிர்தரிக்கலாம்' என்னும்படி கரை புரண்டது. அவன் வருவேன் என்று குறித்துப்போன கார் காலம் வந்தும் அவன் வரவில்லை. அக்காலத்தில் தோன்றும் பூக்கள் முதலானவை எங்குபார்த்தாலும் தோன்றி அவ னுடைய திருமேனி, அழகிய அவயவங்கள், அவயவஶோபை, பேச்சு முதலானவற்றை நினைவுறுத்துவனவாய் இருந்து

---

அரு:— கார்க்கோடல் ப்ரவேஶே—a (கீழ்த்திருமொழி) விண்ணீல மேலாப்பு; காலிலே விழுந்தது விண்ணீல மேலாப்பில். b "பிறந்தமை பொய்யன்றே" (4) என்றது- ஸம்ஶயம்; "அதுகாண்டும்" (10) என்றது நிஶ்சயம்; இந்த இரண்டு பத$_3$த்தையும் பற்ற அருளிச்செய்கிருர் (அவன் தான் இத்யாதி$_3$) c (பருவம்வந்து) என்றது-காலம்வந்து என்றபடி. d (எடுப்பும் சாய்ப்புமாய்) என்றது சிந்துரச்செம்பொடியான



விழுந்து நலிய, அவற்ருலே நலிவுபட்டு, இவற்றின் ஒருமைப்பாடிருந்தபடியால் நமக்கு ஜீவிக்கை என்ருெரு பொருளின்றிக்கே இருந்தது; இனி நாம் ஜீவிக்கைக்கு முதலாக நினைத்திருப்பது இரண்டு; e அவன், 149. "न त्यजेयं" (ந த்யஜேயம்) என்றும், 151. "एतद्व्रतं मम" (ஏதத்$_3$ வ்ரதம் மம) என்றும், 150. "न मे मोघं वचः भवेत्" (ந மே மோக$_4$ம் வசோ ப$_4$வேத்) என்றும் சொல்லும் வார்த்தைகளும், பெரியாழ்வார் வயிற்றில் பிறப்புமாய்த்து; அவன் சொல்லும்

---

கொண்டு இவள் தெளிவதும் கலங்குவதுமாகும்படிமேல்விழுந்து நலியப்புக்கன. அவற்ருலே துன்புற்று "இவையனைத்தும் திரண்டு நம்மைத் துன்புறுத்துகிறபடியால் நாம் உயிர்த$_4$ரிக்க முடியாதாயிருந்தது. இனி நாம் உயிர்த$_4$ரிப்பதற்கு பின்வரும் இரண்டு வழிகள் உண்டு" என்று எண்ணலுற்ருள்:— (1)

**149.மித்ரப$_4$ாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கத$_2$ஞ்சந ।**
**தோ$_3$ஷோ யத்$_3$யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத$_3$க$_3$ர்ஹிதம் ॥**
*[ரா-யு 18-3]*

[நண்பனுடைய பா$_4$வத்தோடு நெருங்கின இவ்விபீஷணனை ஒருபொழுதும் கைவிடமாட்டேன். அவனிடம் தோ$_3$ஷமிருந் தாலும் இருக்கட்டுமே. நல்லோர்களுக்கு இவனை ஸ்வீகரிப்பது நிந்தி$_3$க்கத்தக்கதல்ல.]

**150. த்$_3$யௌ: பதேத் ப்ருதி$_2$வீ ஶீர்யேத்**
**ஹிமவாந் ஶகலீப$_4$வேத் ।**
**ஶுஷ்யேத் தோயநிதி$_4$: க்ருஷ்ணே!**
**ந மே மோக$_4$ம் வசோ ப$_4$வேத் ॥** *[பா$_4$ர-உத் 70-48]*

[க்ருஷ்ணையே! ஆகாயம் கீழ்விழக்கூடும்; பூ$_4$மி சுக்கலாகக் கூடும், ஹிமாசலபர்வதம் தூளாகக்கூடும்; ஸமுத்$_3$ரம் வற்றக் கூடும்; என்னுடைய வார்த்தை வீணுகாது.]

---

திருமொழியில். e "குமரனர் சொல்லும் பொய்யானுல் நானும் பிறந்தமை பொய்யன்றே" (4) என்றத்தைப்பற்ற [அவன் 149. "न त्यजेयं" (ந த்யஜேயம்) என்றும் இத்யாதி$_3$]

வார்த்தைகளைக்கொண்டு ஜீவிக்க நினைத்திருந்தாலும் ஸ்வதந்த்ரனை இவைகொண்டு வளைக்கவொண்ணாதிறே; அவன் ஒரோவ்யக்திகளை உபேக்ஷித்தால், அதுக்கு நிவாரகரில்லையிறே, ஸ்வதந்த்ரனாகையாலே; இனி அது தப்பிற்றாகிலும், தப்பாதென்றிருக்கலாவது பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பு; "அதுதானும் நமக்குப் ப$_2$லிக்கப்புகாநின்றதோ?, அதுக்குத்தான் விஷயபூ$_4$தர் நாமல்லோமோ?" என்று அதிலேயும் அதிஶங்கைபண்ணி; f பின்னையும் "அல்லாதவையெல்லாம் தப்பிற்றாகிலும் பெரியாழ்வாரோடுண்டான ஸம்ப$_3$ந்த$_4$ம் தப்பாது; அவன் ஸ்வாதந்த்ர்யத்தையும் மாற்றி, நம்மையும் அவன் திருவடிகளிலே சேர்த்தல்லது விடாது" என்று

---

151. ஸக்ருதே$_3$வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே ।
அப$_4$யம் ஸர்வபூ$_4$தேப்$_4$யோ த$_3$த$_3$ாம்யேதத் வ்ரதம் மம ॥
[ரா-யு 18-33]

[ஒருதடவை ஶரணமடைந்தவன் பொருட்டும், 'உனக்கு அடியேனாகிறேன்' என்று ப்ரார்த்திப்பவன் பொருட்டும் எல்லா ப்ராணிகளிடத்தினின்றும் அப$_4$யமளிக்கிறேன். இது எனக்கு விரதம்.] என்று அவன் சொன்ன வார்த்தைகள் பழுதாகாதாகையாலே அவற்றாலே நாம் வாழக்கூடும். (2) அல்லது பெரியாழ்வார் திருமகளாய்ப் பிறந்தமையாலே வாழக்கூடும். அவன் வார்த்தைகளைக்கொண்டு வாழலாமென்று பார்த்தால், ஸ்வதந்த்ரனான அவனை இவ்வார்த்தைகளைக்காட்டி நிர்ப$_3$ந்தி$_4$க்க முடியாது. அவன் ஒவ்வொருவரை உதா$_3$ஸீனப்படுத்தினால் ஸ்வதந்த்ரனாகையாலே அதைத் தடுப்பாரில்லையன்றோ. இனி, அவன் வார்த்தைகள் தப்பினாலும் பெரியாழ்வார் பெண்பிள்ளையாய்ப் பிறந்தமை பேற்றைவிளைக்கத் தப்பாது. 'அதுவும் ப$_2$லிக்குமோ ப$_2$லிக்காதோ ? அதற்கு நாம் விஷயமாவோமோ ஆகமாட்டோமோ ? தெரியவில்லையே' — என்று ஐயமுற்று; அதற்குமேலே "மற்றவையெல்லாம் தப்பினாலும் பெரியாழ்வாரோடுள்ள உறவு தப்பவே தப்பாது. அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையும் மாற்றி, அவன் திருவடிகளிலே சேர்த்

---

f "நல்லவென்தோழி" (10) என்கிற பாட்டைக் கடாக்ஷித்து



அத்$_4$யவஸித்து, அத்தாலே த$_4$ரித்தாளாய்த் தலைக்கட்டுகிறது. g அவன் 149. "न त्यजेयं" (ந த்யஜேயம்) என்றாலும், 151*. "आनयैनं हरिश्रेष्ठ" (ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட$_2$) என்பார் வேணுமிறே. h ப$_4$ட்டர், வாணவதரையனைக் காண எழுந்தருளி ஸ்ரீதே$_3$விமங்கலத்திலே இருக்கச்செய்தே, அங்குத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸம்ப்$_4$ரமங்கண்டு h$_2$ அருளிச்செய்த வார்த்தை.

---

தல்லது விடாது" என்று உறுதிபூண்டு, அவ்வுறவுகொண்டு உயிர் த$_4$ரித்தமையைக் கூறி இத்திருமொழியை நிறைவுபடுத்துகிறாள். [491 ம் பக்கத்தில், 149-வது ப்ரமாணத்தின்படி] அவன் நம்மைக் கைவிடமாட்டேன் என்றாலும்,

151*. ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட$_2$ த$_3$த்தமஸ்யாப$_4$யம் மயா ।
விபீ$_4$ஷணோ வா ஸுக்$_3$ரீவ! யதி$_3$ வா ராவணः ஸ்வயம்
[ரா-யு 18.34]

[வானரர்களுள் சிறந்தவனான ஸுக்$_3$ரீவனே! இவனை அழைத்துவா: விபீ$_4$ஷணனாயிருந்தாலும், ராவணன்தானேயாயிருந்தாலும் இவனுக்கு என்னால் அப$_4$யமளிக்கப்பட்டது.] என்கிறபடியே அவனையும் நம்மையும் சேர்ப்பிப்பார் வேணுமன்றோ. அவ்விஷயத்தைக் கூறுவது இத்திருமொழி. ஸ்ரீபராஶரப$_4$ட்டர் வாணவதரையன் என்னும் சிற்றரசனைக் காண்பதற்காக எழுந்தருளி 'ஸ்ரீதே$_3$விமங்க$_3$லம்' என்னும் ஊரில் இருக்கும்போது, ஸ்ரீவைஷ்ணவர்கள் பரபரப்போடு ப$_4$ட்டரிடம் ஈடுபடுவதைக் கண்டு, சிலர் "பெருமாளிருக்க உம்மிடத்தே ஸ்ரீவைஷ்ணவர்கள் இத்தனை ஈடுபடுவதற்குக் காரணமென்ன?" என்று கேட்க, "எம்பெருமானை அடைவதற்கு அவனடியார் க$_4$டகர்

---

(பின்னையும் இத்யாதி$_3$) g (ந த்யஜேயம்) என்னாநிற்கப் புருஷகாரம் வேண்டுவானென் ? என்ன அருளிச்செய்கிறார் (அவன் ந த்யஜேயம் இத்யாதி$_3$) h புருஷகாரம் வேணும் என்னுமதுக்கு ஸம்வாத$_3$மாக ஓர் ஐதிஹ்யம் அருளிச்செய்கிறார் (ப$_4$ட்டர் இத்யாதி$_3$) h$_2$ அருளிச்செய்த வார்த்தையாவது-"பெருமாளிருக்க, உம்மிடத்திலே

## பத்தாம் திருமொழி— முதல் பாட்டு

**கார்க்கோடல் பூக்காள் கார்க்கடல் வண்ணனென் மேல்உம்**
**போர்க்கோலஞ் செய்து போர விடுத்தவ னெங்குற்ருன்?[மைப்**
**ஆர்க்கோ வினிநாம் பூச லிடுவது அணிதுழாய்த்**
**தார்க்கோடும் நெஞ்சந் தன்னைப் படைக்கவல் லேனந்தோ.**

**பதவுரை:— கார் கோடல் பூக்காள்!**—கறுத்த காந்தள் பூக்களே!, **உம்மை**—உங்களை, **போர் கோலம்செய்து**—யுத்$_3$த$_4$த்திற்கு உசிதமாக அலங்கரித்து, **என்மேல்**—என்மேலே (பாயும்படி), **போரவிடுத்தவன்** — அனுப்பினவனான, **கார் கடல் வண்ணன்**-கறுத்த கடல்போன்ற வடிவையுடையனான கண்ணபிரான், **எங்குற்ருன்**—எங்கேயிருக்கிருன்? **நாம்**—(உங்களால் துன்புற்ற) நான், **இனி**—இனிமேல், **ஆர்க்கு**—யாரிடத்தில்போய், **பூசல் இடுவதோ** — முறையிட்டுக் கொள்வதோ (அறியேன்), **அணி** — அழகிய, **துழாய் தார்க்கு** — திருத்துழாய்மாலையை ஆசைப்பட்டு, **ஓடும் நெஞ்சம் தன்னை படைக்க வல்லேன் அந்தோ!** — ஓடுகின்ற நெஞ்சையுடையவளாய் இராநின்றேனே! ஐயோ!!

---

*(புருஷகாரபூ$_4$தர்)* ஆவார்களாகையாலே ஆழ்வானோடு எனக்குள்ள ஸம்ப$_3$ந்த$_4$த்தைப் பார்த்து ஈடுபடுகிருர்கள்" என்று ப$_4$ட்டர் அருளிச்செய்த வார்த்தை இங்கு அனுஸந்தி$_4$க்கத் தக்கது.

1. *அவ:—* மழைகாலத்தில் பூக்கும் காந்தள் மலர்களைக் கண்டு "உங்களை என்மேல் போரிடும்படி அனுப்பியவன் எங்கே இருக்கிருன்?" என்று கேட்கிருள்.

---

ஸ்ரீவைஷ்ணவர்கள் இத்தனை ப்ரதிபத்தி பண்ணுகைக்கு ஹேதுவேது?" என்று தடஸ்த$_2$ர் கேட்க; "ப$_4$க$_3$வல்லாப$_4$த்துக்கு ப$_4$ாக$_3$வதர் க$_4$டகராகையாலே ஆழ்வான் ஸம்ப$_3$ந்த$_4$த்தைப் பற்றச் செய்தார்கள்" என்று அருளிச்செய்த வார்த்தை.



வ்யா:— முதற்பாட்டு. (கார்க்கோடல் பூக்காள்) **கார் காலத்தில் கோடல் பூக்காளென்னுதல்;** (கார்க்கோடல்) **a பெருத்த கோடல்பூக்காளென்னுதல்; அன்றிக்கே, b அவை தான் நாநாவர்ணமாயிருக்குமிறே. அத்தாலே - கறுத்த நிறத்தையுடைத்தானவென்னுதல். காலபரமானபோது "அவன் குறித்துப்போன காலத்துக்கு c ஸ்மாரகமாகாநின்றன" என்ருகிறது; மற்றைப்போது, அவன் வடிவுக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடியாகிறது.** (கார்க்கோடல் பூக்காள்) **d முத**

---

*வ்யா:— (கார்க்கோடல் பூக்காள்)* 'கார்காலத்தில் பூத்த கோடல்பூக்களே!' என்ருே? 'பெருத்த கோடல்பூக்களே!' என்ருே பொருள்கொள்ளலாம். 'கார்' என்னும் பத$_3$ம் கார் காலத்தையும், பெருமையையும் குறிக்கும். அல்லது 'கார்' என்று கருமை நிறத்தைக் குறிப்பதாகக்கொண்டு, 'கறுத்த காந்தள் மலர்களே!' என்பதாகவும் கொள்ளலாம். காந்தள் மலர் சிவந்தன்ருே இருக்குமெனில், கருமை நிறமுடைய காந்தள் மலரும் உண்டாகையாலே, இப்பொருளும் பொருந்தும். கார்காலம் என்று பொருள்படும்போது "அவன் வருவதாகச் சொல்லிப் போன காலத்தை நினைவுபடுத்துவதன் மூலம் இவை என்னைத் துன்புறுத்துகின்றன" என்று கருத்து. பெருமையையோ நிறத்தையோ குறிக்கும்போது "பெரியதாய் கருநிறமுடைய அவனுடைய திருமேனியை நினைவுபடுத்துவதன் மூலம் என்னைத் துன்புறுத்துகின்றன" என்று கருத்து. *(கார்க்கோடல் பூக்காள்......போரவிடுத்தவன்)* கார்க்கோடல் பூக்களே! உங்களை என்னோடு போர்புரியும்படி படைத்து விட்டவன். முதலிலேயே தன்னோடு கலந்தது பிரிவதற்காகவே

---

முதற்பாட்டு. (கார்க்கோடல்) a "கார்" - பெருமை. "கோடல்"-காந்தள். "கார்" கறுப்பும், பெருமையும். b அது சிவந்தன்ருே இருப்பது? என்ன அருளிச்செய்கிருர் (அவை தான் இத்யாதி$_3$) c (ஸ்மாரகமாய்) - அவயவங்களுக்கும் திருமேனிக்கும் ஸ்மாரகமாய் என்றபடி. "போரவிடுத்தவன்"-போகவிட்டவன். d "போரவிடுத்தவன்" என்றதைப் பற்ற அருளிச்செய்கிருர் (முதலிலே இத்யாதி$_3$)

லிலே தன்னோடே கலந்து பிரியக்கடவனாக நினைத்தவளவிலே தன்னை நலியக்கடவதாக, இப்பத$_3$ார்த்த$_2$ங்களை அவன் அடியிலே ஸ்ருஷ்டித்துவிட்டானென்றிருக்கிறாள். e "ஜக$_3$த் ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் மோக்ஷம்" என்றிருக்கை தவிர்ந்து, தன்னை நலிகைக்கு உடலாக உண்டாக்கினானென்றிருக்கிறாள். f ஒரு விஷயத்தைப் பிரிந்து நோவுபடுவார்க்கு இத்தனை பத$_3$ார்த்த$_2$ங்கள் பகையாவதே!; பிராட்டியைப் பிரிந்தவனந்தரம் ராக்ஷஸஜாதியாகப் பகையானாற்போலே, g மூலப$_3$லத்தினன்று ராக்ஷஸஜாதியாகச் சூழப்போந்தாற்போலே, பார்த்த பார்த்தவிடமெங்கும் இவையேயாய்க் கிடவாநின்றன.

---

யாகையாலே "நாம் பிரியும்போது இவளை நலிவதற்கு இவை இருக்கட்டும்" என்று இவற்றைப் படைத்துவைத்திருப்பதாக நினைக்கிறாள். "உலகைப் படைத்தது மோக்ஷமளித்துத் தன்னை அடைவிப்பதற்காக" என்று முன்பெல்லாம் நினைத்திருக்கும் நினைவு தவிர்ந்து, "தன்னைத் துன்புறுத்துவதற்காகவே இவ்வுலகைப் படைத்திருக்கிறான்" என்று நினைக்கும்படியாயிற்று. "ஸீதாபிராட்டியைப் பிரிந்தபின்பு ராக்ஷஸ ஜாதிமுழுவதும் பகையானதுபோலே, "எம்பெருமானைப் பிரிந்து வருந்தும் எனக்கு, பூக்கள், மயில்கள், குயில்கள் முதலான இத்தனை பொருள்கள் பகையாவதே!" என வருந்துகிறாள். மூலப$_3$லப் போரின்போது எண்ணமுடியாத அரக்கர்கள் ராமபிரானைச் சூழ்ந்ததுபோலே பார்த்தவிடமெல்லாம் தன்னைத் துன்புறுத்தும் பொருள்களேயாயிருந்தன.

---

e கீழ் வாக்யவிவரணம் ( ஜக$_3$த்ஸ்ருஷ்டிக்கு இத்யாதி$_3$ ) f மேலில் பாட்டுக்களையும் பற்ற அருளிச்செய்கிறார் (ஒரு விஷயத்தை இத்யாதி$_3$) g ப$_3$ஹுவசநத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (மூலப$_3$லத்தினன்று இத்யாதி$_3$) h மேக$_4$ங்களைக் கேட்பது, பூக்களைக் கேட்பதாகிற இதுக்கு வாசி ஏதென்ன அருளிச்செய்கிறார் (விண்ணீல மேலாப்பு இத்யாதி$_3$).



h "விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல்" என்றவிடத்தில் வாயுப்ரேரிதமாய்க் கொண்டாகிலும் ஸஞ்சரிக்கைக்கு யோக்$_3$யதையுண்டிறே மேக$_4$ங்களுக்கு, அங்ஙன் கால் வாங்கமாட்டாதே நிற்கிறவற்றுக்கு வார்த்தை சொல்லுகிறாளிறே கலங்கினபடியாலே. (பூக்காள்) உங்களுடைய ஸ்வாப$_4$ாவிகமான மென்மையைப் பொகட்டு ஓரப$_3$லையை நலிகைக்கு இவ்வன்மையை ஏறிட்டுக்கொண்டு வருவதே!

(கார்க்கடல் வண்ணன்) கறுத்த நிறத்தையுடைத்தான கடல்போன்ற நிறத்தையுடையவன். i இதர பத$_3$ார்த்த$_2$ங்களினுடைய i$_2$ ஸத்$_3$ப$_4$ாவம் ஸ்வேச்ச$_2$ாதீ$_4$நமாய் இருக்குமாபோலே, இவ்விக்$_3$ரஹ பரிக்$_3$ரஹமும் ஸ்வேச்ச$_2$ாதீ$_4$நமாய் இருக்குமிறே. இவ்விக்$_3$ரஹத்தை ஏறிட்டுக்கொண்டதும்

---

"விண்ணீலமேலாப்பு"[நாச்-திரு 8] திருமொழியில் துன்புறுத்திய மேக$_4$ங்களாவது காற்றினால் அடிக்கப்பட்டு மறையக்கூடும். அப்படி மறைவதற்கும் இடமில்லாமல் நின்று துன்புறுத்தும் இப்பூக்களைப் பார்த்து மிகக் கலங்கி வார்த்தை சொல்லுகிறாள். *(பூக்காள்)* உங்களுக்கு இயல்வான மென்மையைக் கைவிட்டு ப$_3$லமற்ற அப$_3$லையான என்னைத் துன்புறுத்துவதற்கு இப்படி ஒரு வன்மையைக் கைக்கொண்டுவிட்டீர்களே!

*(கார்க்கடல் வண்ணன்)* கறுத்த நிறத்தையுடைய கடல்போன்ற நீலநிறத்தையுடையவன். இத்திருமேனியை இங்கே எதற்காகச் சொல்லுகிறாள்? எனில்: இத்திருமேனியைக் கைக்கொண்டதும் தன்னைத் துன்புறுத்துவதற்காகவே என்னும் திருவுள்ளத்தாலே சொல்லுகிறாள். என்னை நலிவதற்குக் கார்க்கோடல் பூக்கள் முதலான பொருள்களைத் தன் இச்சை$_2$யாலே படைத்துவைத்ததுபோலே இத்திருமேனியைத் தன் இச்சை$_2$யாலே எடுத்துக்கொண்டதும் தன்னை நலிவதற்கேயன்றோ!

---

i ப$_3$ாத$_4$கபத$_3$ார்த்த$_2$ங்களைச் சொல்லுகிறவிடத்திலே விக்$_3$ரஹத்தைச் சொல்லுவானென், இதுவும் ப$_3$ாத$_4$கமன்றோ? என்ன அருளிச்செய்கிறார் (இதர பத$_3$ார்த்த$_2$ங்கள் இத்யாதி$_3$) i$_2$ (ஸத்$_3$ப$_4$ாவம்) ப$_3$ாத$_4$கமாகப் புஷ்பங்களை உண்டாக்கு

தன்னை நலிகைக்கு என்றிருக்கிருள். j (எம்மேல்) k கலக்கை யுங்கூட மிகையாம்படி, ஆஶ்ரயமுங்கூடவின்றிக்கே இருக் கிற என்மேலே. l (உம்மை) $l_2$ நலிகைக்கு ஏகாந்தமான நிறத்தை ஏறிட்டுக்கொண்டுவந்து நிற்கிற உங்களை. m விரஹத்தாலே முன்பே தொட்டார் மேல் தே$_3$ாஷமாம்படி சென்றற்றிருக்கிற என்மேல். (உம்மை) n மென்மையின் றிக்கே, வன்மையுடையாரையும் முடிக்கவல்ல உங்களை. o "நிர்ஜீவ ஶரீரத்திலேயும் உயிரைக்கொடுத்து நலிய வல்லவை" என்றிருக்கிருள்.

---

என்று கருத்து. (எம்மேல்) இயற்கையிலேயே மென்மைமிக்க பெண்பிள்ளையாய், பிரிவுத்துன்பத்தாலே மிக மெலிந்திருக்கும் என்மேல்; அவன்வந்து அணைத்தாலும் அதையும் தாங்க முடியாதபடி மிகமிக மெலிந்திருக்கையாலே 'இந்த வஸ்துவே இல்லையோ' என்று சொல்லலாம்படி இருக்கும் என்மேல். (உம்மை) என்னைத் துன்புறுத்துவதற்கென்றே ஏற்பட்ட நிறத்தைக் கைக்கொண்டுவந்து நிற்கிற உங்களை. (எம்மேல்) பிரிவுத் துன்பத்தாலே ஏற்கனவே தொட்டார் மேல்பழியாம்படி மிக மெலிந்திருக்கும் என்மேல். (உம்மை) என்னைப்போல் மென்மையுடையவளாயிராமல் வன்மையுடையாரையும் நிறத் தைக் காட்டி அழிக்கவல்ல உங்களை. "உயிர் நீங்கும் உடலிலும் அவனுடைய நிறத்தைக்காட்டி உயிரை உண்டு பண்ணி, திரும்பவும் அந்த நிறத்தைக்காட்டிச் சித்திரவதை செய்பவை இவை'' என்று எண்ணியிருக்கிருள்.

---

கைக்கு. j (எம்மேல்) ஸ்வாப$_4$ாவிகமார்த்த$_3$வமென்னுதல்; விரஹகார்ஶ்யமென்னுதல். l (உம்மை) நிறத்தாலே என்னுதல்; ப$_3$லத்தாலேயென்னுதல். k,m (கலக்கையுங் கூட) என்ற வாக்யவிவரணம் (விரஹத்தாலே இத்யாதி$_3$). n (மென்மையின்றிக்கே) என்ற வாக்யம் - தாத்பர்யாந்தர மாதல். $l_2$,o (நலிகைக்கு ஏகாந்தமான) என்ற வாக்ய விவரணம் (நிர்ஜீவேத்யாதி$_3$) o அன்றிக்கே, சென்றறிந்த தாகில் நலியக்கூடுமோ ? என்ன அருளிச்செய்கிருர் (நிர்ஜீவேத்யாதி$_3$) என்னவுமாம்.



p (போர்க்கோலம் செய்து) இந்த்$_3$ரஜித்$_3$வத$_4$த்துக்கு இளையபெருமாளைப் பெருமாள் அலங்கரித்துப் புறப்பட விட்டாற்போலே, தன்னை முடிக்கைக்கு இவற்றை ஒப் பித்துப் போரவிட்டானென்றிறே இருக்கிருள். அங்கு ப்ரணயிநியைப் பிரித்தாரை முடிக்கைக்குப் புறப்படவிட்டான்- சக்ரவர்த்தித்திருமகன்; இங்கு ப்ரணயிநியை முடிக்கைக்கு க்ருஷ்ணன் தன் தீம்பாலே இவற்றை வரவிட்டானென்ருய்த்து நினைத்திருக்கிறது. (செய்து) இவற்றுக்கு q நிறங்கொடுத் தான் அவனிறே. 152. "कृष्ण एव हि लोकानामुत्पत्तिरपि चाव्ययः" (க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய:). (போர விடுத்தவன்) "இவற்றுக்கு த்வரை போராது" என்றுபார்த்து. "நீங்கள் போங்கோள்" என்று அவன்தானே பின்னே

---

(போர்க்கோலம் செய்து) இந்த்$_3$ரஜித்தைக் கொல்லுவதற் காக இலக்குவனை ஸ்ரீராமபிரான் அலங்கரித்துப் போர்க்கு அனுப்பியதுபோலே தன்னை அழிப்பதற்கு இப்பூக்களை அலங் கரித்துத் தன்னோடு போர்புரிய அனுப்பியிருக்கிருன் என் றல்லவோ நினைக்கிருள். மனத்துக்கினியானை சக்ரவர்த்தித் திருமகன் தன் காதலியைப் பிரித்தவர்களை அழிப்பதற்காகப் போர்க்கோலம் செய்துவிட்டான்; தருமமறியாக் குறும்பனை கண்ணனோவெனில் தன் காதலியை அழிப்பதற்கு இவற்றைப் போர்க்கோலம்செய்து அனுப்பிவிட்டான் என்று நினைத்திருக் கிருள். (செய்து) இவற்றைப் படைத்து நிறங்கொடுத்தவன் அவனல்லவோ.

152. க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய: ।
க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூ$_4$தமிதம் விஶ்வம் சராசரம்॥
[பா$_4$ரதம்-ஸபா$_4$ 38-23]

[க்ருஷ்ணனேதான் உலகங்களுக்கு ஸ்ருஷ்டி ஸ்தி$_2$தி லயகாரண மாவான்; அசைவனவும், அசையாதனவுமான உலகு க்ருஷ்ண னுக்காகவே ஏற்பட்டது.] என்றல்லவோ ப்ரமாணங்கள் கூறு கின்றன. (போரவிடுத்தவன்) "இவற்றுக்கு வேக$_3$ம்போதாது'' என்று நினைத்து 'விரைவாகச் செல்லுங்கள்' என்று அவனே

---

p கோலமாவது-நிறம். q நிறங்கொடுத்தான்-ஸ்ருஷ்டித்

நின்று த்வரிப்பிக்கிறான் என்றிறே இருக்கிறாள்; r ராஜாக்கள், எதிரிகள் அரண் அழியாவிட்டால், தாங்கள் முகந்தோற்றாமே நின்று, தங்களுக்கு அஸாத$_4$ாரண சிஹ்நமான ச$_2$த்ரசாமராதி$_3$களைப் போகவிடுமாபோலே, இவற்றுக்குத் தன் நிறத்தைக் கொடுத்துப் போகவிட்டான் அவன் என்றிறே இருக்கிறாள். s நம்மை நலிகைக்குடலாக இவற்றை உண்டாக்கினானன்றாகில் நம் கண்வட்டமொழிய நிறுத்தவுமாமே!.

t (எங்குற்றான்) u 153. "तेन नादेन महता निर्जगाम हरीश्वरः" (தேந நாதே$_3$ந மஹதா நிர்ஜக$_3$ாம ஹரீஶ்வர:) u$_2$மஹாராஜ

பின்னால்நின்று விரைவுபடுத்துகிறான் என்றல்லவோ நினைக்கிறாள். அரசர்கள் முற்றுகையிடும்போது எதிரிகளுடைய அரண் அழியாவிட்டால் தாங்கள் பின்னேநின்று தங்களுடைய தனி அடையாளங்களான குடை சாமரம் முதலானவற்றைப் போர்முனைக்கு அனுப்பித் தங்களது படைவீரர்களை எதிரிகளின் அரணை அழிக்கும்படி உத்ஸாஹப்படுத்துவதுபோலே, தன்னை அழிப்பதற்காக இவற்றுக்குத் தன் நிறத்தைக்கொடுத்துப் போகவிட்டான் என்றல்லவோ எண்ணுகிறாள். நம்மை நலிவதற்காக இவற்றை உண்டாக்கவில்லையெனில் இவற்றை நம் கண்பார்வையில் படாமல் நிறுத்தியிருக்கலாமே! (எங்குற்றான்)

**153.ததோऽக$_3$ர்ஜத் ஹரிவர: ஸுக்$_3$ரீவோ ஹேமபிங்க$_3$ள:।**
**தேந நாதே$_3$ந மஹதா நிர்ஜக$_3$ாம ஹரீஶ்வர:॥** [ரா-பா$_3$ 1-68]

தான். r "போர்க்கோலம் செய்து" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் (ராஜாக்கள் இத்யாதி$_3$) முந்தினது-ஸாமாந்யேந அவற்றுக்கு நிறங்கொடுக்கை; இரண்டாவது தன் நிறத்தைக் கொடுக்கை. ஸ்மாரகத்வேந பா$_3$த$_4$கத்வம், இரண்டு தாத்பர்யத்துக்கும் ஸமாநம். r, s அவன் போரவிட்டானென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச்செய்கிறார் (ராஜாக்களித்யாதி$_3$ வாக்யத்$_3$வயத்தாலே) s இவற்றுக்குத் தன்னிறத்தைக் கொடுத்துவிட்டது தன்னை நலிகைக்கோவென்ன அருளிச்செய்கிறார் (நம்மையித்யாதி$_3$) t,u "எங்குற்றான்" என்று இவற்றைக் கேட்கைக்கு ப்ரஸக்தி ஏதென்ன அருளிச்செய்கிறார் (**தேந நாதே$_3$நேத்யாதி$_3$**)



ருடைய மிடற்றோசையின் தசைப்பைக்கேட்டு, "முன்பு போலே கோழைத்தனமாய் இருந்ததில்லை. ஓரடி இவனுக்குண்டாகவேணும், நமக்கு இரைபோருமாகில் பார்ப்போம்" என்று புறப்பட்டானிறே. அப்படியே, இவற்றினுடைய உத்$_3$யோக$_3$மிருந்தபடியையும் பா$_3$த$_4$கத்வமிருந்தபடியையும் கண்டோமுக்கு, "இவற்றினளவல்ல, அவன் பின்னேவந்து நின்றான்" என்று, "எங்குற்றான்" என்கிறாள். தன்னை முடிக்க நிற்கிற இவற்றை "எங்குற்றான்" என்கிறதென்? என்னில்; இவை முடிக்கை தவிராதாகில், அவ்வடிவை ஒருகால் கண்டு முடியலாமென்னுமத்தாலே; நம் அபி$_4$மதமும் பெற்றோமாகில் பெறுகிறோம், அவன் நினைவும் தலைக்கட்டிற்றாகிறது. இவளுக்கு அபி$_4$மதம் அவன்வடிவைக்

[அதற்குப்பின் பொன்போன்ற நிறமுள்ள வாநரஶ்ரேஷ்ட$_2$னான ஸுக்$_3$ரீவன் க$_3$ர்ஜித்தான். வானரர்தலைவனான வாலி அந்தப் பேரொலியைக் கேட்டவுடன் வெளிவந்தான்.] என்கிறபடியே ஸுக்$_3$ரீவனின் குரல் ஒலியின் வலிமையைக்கேட்டு "முன்போல் இவ்வொலி கோழைத்தனமாயிருக்கவில்லை. இவனுக்கு ஓர் பக்கப$_3$லம் ஏற்பட்டிருக்கவேண்டும்; அந்தப் பக்கப$_3$லம் நமக்குத்தக்க எதிரியாகில் ஒருகைபார்ப்போம்" என்று வாலி புறப்பட்டானன்றோ. அப்படியே இவற்றினுடைய துன்புறுத்தும்பெருமுயற்சியையும், எதிரியாயிருக்கும் தன்மையையும் பார்க்கும்போது, "இவை தனியே வரவில்லை. இவற்றை அனுப்பிய அவன் பின்னே வந்துநிற்கிறான்" என்னும் கருத்தாலே "எங்குற்றான்" என்கிறாள். தன்னை அழிக்கமுற்பட்டிருக்கும் இவற்றை "எங்குற்றான்" என்று கேட்பானேன்? எனில்: "இவை நம்மை அழிக்கப்போவது நிச்சயம். அழிவதற்குமுன் அவன் வடிவை ஒருமுறைபார்த்துவிட்டு அழியலாம்" என்னும் எண்ணத்தாலே "எங்குற்றான்" என்கிறாள். அவை அவனைக் காட்டினால் அவன் வடிவைக் காண்கையாகிற நம் இஷ்டமும் பெறுவதற்கு வாய்ப்புண்டு. அவனைக் கண்டவுடன் உயிர்விடப்போகிறோமாகையாலே அவன் இஷ்டமும் நிறைவேறிவிடுகிறது—என்று எண்ணுகிறாள்.

u$_2$ "எங்குற்றான்" என்கைக்குக் கிட்ட நிற்கிறானோவென்ன

காண்கை; அவனுக்கு அபி$_4$மதம் இவளை முடிக்கை. v ''எங் குற்றான்'' என்றால், '' இங்குற்றான் '' என்று அவற்றுக்கு மறுமாற்றம் சொல்லவேண்டும்படியிறே தன் அவஸ்தை$_2$ தான். w 154. ''क्षिप्रं रामाय शंस त्वं'' (க்ஷிப்ரம் ராமாய ஶம்ஸ த்வம்) x அவற்றுக்கு அபி$_4$மாநியான தே$_3$வதா முக$_2$த்தாலே யாகிலும் வார்த்தை சொல்லுகைக்கு யோக்$_3$யதையுண்டிறே- அங்கு; அதுவுமில்லையிறே இவற்றுக்கு. y இவை ஒரு வார்த்தை சொல்லக்கேட்டிலள்; ''இவையொரு வார்த்தை சொல்லமாட்டா'' என்றறியாதே, ''அவன் வாராமையாலே யிறே இவை பேசாதேநிற்கிறது'' என்று பார்த்து,

---

''எங்குற்றான்'' என்று இவள்கேட்டால் அறிவற்ற அப்பூக்கள் பதில் சொல்லுமோ ? எனில் '' இதோ இங்கே இருக்கிறான் '' என்று தன்னுடைய தீ$_2$னமான நிலையைப்பார்த்து, அவை பதில் சொல்லும் என நினைக்கிறாள். இப்படி அசேதனத்தைக் கேட்டார் யாரேனும் உண்டோ ? எனில்,

**154.ஹம்ஸகாரண்ட$_3$வாகீர்ணாம் வந்தே$_3$ கோ$_3$தா$_3$வரீம் நதீ$_3$ம்**
**க்ஷிப்ரம் ராமாய ஶம்ஸ த்வம் ஸீதாம் ஹரதி ராவண: ||**

[ரா.ஆ 49.32]

[ஹம்ஸகாரண்ட$_3$வபக்ஷிகள்நிறைந்த கோ$_3$தா$_3$வரீநதியை வணங்குகிறேன். ''ஸீதையை ராவணன் எடுத்துப்போகிறான்'' என்று சீக்கிரமாக நீ ராமபிரானிடம் சொல்லுவாயாக.] என்று ஸீதாப் பிராட்டி அறிவற்ற கோ$_3$தா$_3$வரி நதி$_3$யைக் கேட்டுக்கொண்டாளன்றோ. கோ$_3$தா$_3$வரி நதி$_3$க்கு அபி$_4$மானியான தே$_3$வதையாவது அங்கு வார்த்தை சொல்லத் தகுதியுண்டு. இங்கு அதுவுமில்லையன்றோ இப்பூக்களுக்கு. ஆகையாலே அசேதனமானாலும் தன் து$_3$ரவஸ்தை$_2$யைப் பார்த்து வார்த்தை சொல்லும் என்றிருக்கிறாள்.

---

அருளிச்செய்கிறார் (மஹாராஜரித்யாதி$_3$) v அசேதனத்தைக் கேட்டால் சொல்லுமோவென்ன அருளிச்செய்கிறார் (எங்குற்றானென்றாலித்யாதி$_3$) w அப்படி அசேதநத்தைக் கேட்டபேருண்டோ? என்ன அருளிச்செய்கிறார் **(க்ஷிப்ரம் ராமாயேத்யாதி$_3$)** v,w,x பிராட்டி கோ$_3$தா$_3$வரியாகிற நதி$_3$யைக்



(ஆர்க்கோ இனி நாம் z பூசலிடுவது) என்கிறாள். அவனோ வந்திலன்; a அவன் விபூ$_4$தியோ நமக்குப் பகையாய்த்து; வ்ருத்தகீர்த்தநம் பண்ணி த$_4$ரிப்போமென்றால், 155. ''बोध- यन्तः परस्परं'' (போ$_3$த$_4$யந்த: பரஸ்பரம்) பண்ணுகைக்கும் ஆளில்லையாய்த்து; இனி நாம் ஆர்வாசலிலே கூப்பிடுவோம்? b அவன் நமக்கு ப$_3$ாத$_4$கனானவன்றும் அவன் விபூ$_4$தி b$_2$ ஓரகத்தடியாராய் நம் கருத்திலே நிற்குமென்றிருந்தோம், அதுவும் அவன் கருத்திலே நின்றபின்பு, நாம் இனி யார் வாசலிலே கூப்பிடுவோம் ?

---

இவள் எதிர்பார்த்தபடி பூக்கள் ஒரு வார்த்தை சொல்லக் கேட்டிலள் 'இவை ஒருவார்த்தை சொல்ல இயலாதவை'' என்று அறியாமல் 'அவன் வராமையாலேயே இவை பேசாமல் இருக்கின்றன' என்று நினைத்துச் சொல்லுகிறாள்—(ஆர்க்கோ *இனி நாம் பூசலிடுவது*) ஆரிடம் சென்று இனி நாம் முறையிடுவது ? அவனோ வரவில்லை. அவன் படைத்துவிட்ட ஆட்களான நீங்களோ எனக்குப் பகையாயிருக்கிறீர்கள். [51-வது பக்கத்தில் 19-வது ப்ரமாணத்தின்படி] நமக்கும் அவனுக்கும் நடந்த கலவியைப் பேசி த$_4$ரிப்போமென்று பார்த்தால் அதற்கும் ஆளில்லை. இனி நாம் யார் வாசலிலே சென்று முறையிடுவது? அவன் பகையானபோதும் நம்மைப் போலே அவனுக்கு அடியாராயிருக்கும் இப்பூக்கள் முதலானவை நம்மோடு ஒத்துழைக்கும் என்று நினைத்தோம். அவையும் அவனிடம் பக்ஷபாதமாயிருக்கும்போது நாம் இனி யார் வாசலிலே கூப்பிடுவோம் ?

---

குறித்துச் சொன்னாளென்றபடி. வ்யாவ்ருத்தி அவற்றுக்கு; அதுவுமில்லையிறே இவற்றுக்கு. இப்படியிருக்க, அவற்றுக்கு மறுமாற்றம் சொல்லவேண்டும்படியிறே (தன்னவஸ்தை$_2$ தான்) என்று கீழோடே ஸம்ப$_3$ந்த$_4$ம். z ''பூசலிடுவது'' - கூப்பீடு. c ''அணி''-அழகு. y மேலுக்கவதாரிகை (இவையித்யாதி$_3$) a (அவன் விபூ$_4$தி) என்றது-கார்க்கோடல் பூக்களை.

b அவன் பகையானால் விபூ$_4$தியும் பகையாகாதோவென்ன அருளிச்செய்கிறார் (அவன் நமக்கு இத்யாதி$_3$)

e (அணியித்யாதி3) அவனும் அவன் விபூ4தியும் ஒருமிடறானால் நானும் d என் விபூ4தியும் $d_2$ ஒருமிடறாகப் பெற்றேனோ? அதுவும், அவன் திருமேனியிலே சாத்தின திருத்துழாய்மாலை என்றவாறே e உடைகுலைப்படாநின்றது. f156. "मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः" (மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் ப3ந்த4மோக்ஷயோ:) என்னக்கடவதிறே. அதுவும் இப்போது ப3ந்த4கமாய்விட்டதித்தனை.

---

*(அணிதுழாய்த் தார்க்கோடும் நெஞ்சம் தன்னைப் படைக்கவல்லேன்)* அவனும் அவனது விபூ4தியான பூக்களும் என்னை நலிவதிலே ஒத்துழைக்கும்போது என் விபூ4தியான நெஞ்சு என்னோடு ஒத்துழைக்கப் பெற்றேனோ? அதுவும் அவன் திருமேனியிலே சாத்தின திருத்துழாய்மாலை என்றவுடன் உருகி அதன்பின்னே ஓடாநின்றது.

156. மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் ப3ந்த4மோக்ஷயோ: ।
ப3ந்தா4ய விஷயாஸங்கி3 முக்த்யை நிர்விஷயம் மந: ॥
[வி.பு 6.7.28]

[மனிதர்களுக்கு ஸம்ஸாரத்திற்கும் மோக்ஷத்திற்கும் மனம்தான் காரணம். ஶப்3தா3தி3 விஷயங்களில் ஈடுபட்ட மனம்ஸம்ஸாரஹேதுவாகிறது. விஷயங்களில் பற்றற்ற மனம் முக்திஹேதுவாகிறது.] என்கிறபடியே எனது நெஞ்சே எனக்கு ப3ந்த4கமாய்விட்டது.

---

$b_2$ (ஓரகத்தடியார்) - அகத்திலவளாயிருக்கிற க்3ருஹிணிக்கு அடியார் என்றபடி. d (இவள் விபூ4தி) நெஞ்சு. $d_2$ (ஒருமிடறாகப்பெற்றேனோ) என்றது - தா4ரகத்வேந ஒருமிடறாகப் பெற்றேனோ? என்றபடி. e ஆசைப்பட்டுக் கிடையாமையாலே உடைகுலைப்படாநின்றது என்றபடி. f நெஞ்சு போனால் த4ரிக்கவொண்ணாதோ? என்ன அருளிச்செய்கிறார் (மந ஏவ இத்யாதி3) நெஞ்சு எல்லாவற்றுக்கும் பொதுவாகையாலே, அதில்லாவிட்டால் த4ரித்திருக்கப்போகாது என்று தாத்பர்யம். அதாவது - ப4க3வத்3விஷயத்தைப் பற்றுகையாலே மோக்ஷஹேதுவாகிற ஆகாரம்போய், து3:க்க2ஹேதுத்வேந ப3ந்த4கமாய் விட்டது என்றபடி.



g (நெஞ்சந்தன்னைப்படைக்கவல்லேன்) h நெஞ்சு எனக்கில்லாவிட்டால் நானோதான் எனக்குளேனாய் இருக்கிறேன்? i நெஞ்சுக்கு $i_2$ ஆஶ்ரயமான தே3ஹபரிக்3ரஹத்துக்கு அடியான $i_3$ கர்மம் பண்ணினேன் நானேயன்றோ? (அந்தோ) அவனில்லையாய்த்து. அவன் விபூ4தியில்லையாய்த்து: j தானில்லையாய்த்து. தன் விபூ4தியில்லையாய்த்து. இத்த3ஶை கண்டு இரங்கி க்ருபைபண்ணுகைக்குப் புறம்பு ஒருவருமில்லையாய்த்தே; தன் த3ஶைக்குத் தானேயிரங்கி ஐயோ! என்கிறாள். 1.

---

*(நெஞ்சம் தன்னை படைக்கவல்லேன்)* இப்படிப்பட்ட நெஞ்சைப் படைக்கும்படி பாபத்தைப் பண்ணினேன். நெஞ்சு எனக்கில்லாவிட்டால் நானாவது எனக்காய் இருக்கிறேனோ? நெஞ்சுக்கு இருப்பிடமான தே3ஹமெடுப்பதற்குக் காரணமான கர்மத்தைப் பண்ணினவள் நானேயன்றோ. *(அந்தோ)* அவனும் எனக்கில்லை, அவன் விபூ4தியும் எனக்கில்லை. நானும் எனக்கில்லை, என் விபூ4தியும் எனக்கில்லை. இந்த நிலை கண்டு இரங்கி 'ஐயோ' என்று கருணைகாட்டுவதற்கும் வேறொருவர் இல்லாமல் போய் விட்டதே! அதனாலே தன் நிலைக்குத் தானே இரங்கி 'ஐயோ' என்கிறாள். 1.

---

அவனை விடுகை இஷ்டமாய், கூடுகை அநிஷ்டமாயிருக்கையாலே ப3ந்த4கமாய் விட்டதென்று வெறுப்பு. g "நெஞ்சந் தன்னை" என்று முழுச்சொல்லாய், இப்படிப்பட்ட நெஞ்சைப் படைக்கும்படியான பாபத்தைப் பண்ணினேன் என்று ஶப்3தா3ர்த்த2ம். h நெஞ்சில்லாமையாலே அர்த்தா2த் தானுமில்லை என்கிறாள் (நெஞ்சு எனக்கில்லா இத்யாதி3) i இரண்டுமில்லாமைக்கு ஹேது கர்மம் என்கிறார் (நெஞ்சுக்கு ஆஶ்ரயம் இத்யாதி3) $i_2$,$i_3$ (ஆஶ்ரயமான கர்மம்)-ஹேதுவான பாபம். j (தானில்லையாய்த்து) என்றது- தன்னுடைய ஸ்த்ரீத்வ ஸ்வரூபமில்லையென்றாய், அதுண்டானால் வாய்திறக்கவொட்டாது, ஸ்த்ரீத்வமில்லாமையாலே கூப்பிடுகிறாள் என்றபடி. 1.

பத்தாம் திருமொழி—இரண்டாம் பாட்டு

**மேல்தோன்றிப் பூக்காள்! மேலுல கங்களின் மீதுபோய்**
**மேல்தோன்றுஞ் சோதி வேத முதல்வர் வலங்கையின்**
**மேல்தோன்று மாழியின் வெஞ்சுடர் போலச் சுடாதுஎம்மை**
**மாற்றோலைப் பட்டவர் கூட்டத்து வைத்துக்கொள் கிற்றிரே.**

**பதவுரை:— மேல் தோன்றிப் பூக்காள்**—உயரப் பூத்திருக்கிற காந்தள் பூக்களே! **மேலுலகங்களின் மீது போய் மேல் தோன்றும் சோதி**—மேலுள்ள உலகங்களெல்லாவற்றையும் கடந்து அவற்றுக்கு மேற்பட்டு விளங்குகின்ற ‘தன்னுடைச்சோதி’ என்கிற பரமபத$_3$த்தில் எழுந்தருளியிருக்கிற, **வேதமுதல்வர்**—வேத$_3$ப்ரதிபாத்$_3$யனான பரமபுருஷனுடைய, **வலம் கையின் மேல் தோன்றும்** - வலத்திருக்கையிலே விளங்காநின்ற, **ஆழியின்**—திருவாழியாழ்வானுடைய, **வெம்சுடர் போல**—வெவ்விய தேஜஸ்ஸுபோல, **சுடாது**—எரிக்காமல், **எம்மை**—என்னை, **மாற்றோலைப் பட்டவர் கூட்டத்து**—கைவல்ய நிஷ்டர்களுடைய திரளில், **வைத்துக் கொள்கிற்றிரே**—கொண்டு சேர்க்க வல்லீர்களோ?

**வ்யா:— இரண்டாம் பாட்டு.** (a மேல்தோன்றியித்யாதி$_3$) **b த்$_3$ருஷ்டி விஷம்போலே கோடல் பூக்கள் பா$_3$த$_4$கமாகப்புக்கவாறே, அவற்றுக்கு இருய்த்துக் கண்ணை மேலேவைத்தாள்; அங்கே மேல்தோன்றிப் பூக்களாய்க் கிடந்தது; அவற்றை நோக்கி** (மேல்தோன்றிப் பூக்காள்) **என்கிறாள். “அதுக்குத் தப்பினாரையும் அழிக்கக்கடவோம்” என்று அதுக்கு ஒரு பேரும் பெற்று நீங்கள் மேலே புக்குநிற்பதே! c 157. “ஷஹு ஸ்யாம” (ப$_3$ஹு ஸ்யாம்) என்று “அவன் அநேகங்களை ஸ்ருஷ்டிக்கும்” என்று கேட்டிருந்தோம், d நாட்டில் கோடல் பூக்களுமில்லையோ? e தே$_3$வாதி$_3$ பே$_4$த$_3$ங்களுண்டாம்படியிறே ஸ்ருஷ்டிப்பது.** (மேலுலகங்களித்யாதி$_3$) **அண்ட$_3$ங்களையும் ஆவரணஸப்தகத்தையும் கடந்து மேலேபோய்,**

---

2. *அவ:*—“திருவாழியாழ்வானைப்போல் சுடாமல் எம்மை ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வமில்லாதார் கூட்டத்திலே சேர்த்துவிடுங்கள்” என்று மேல்தோன்றிப் பூக்களைப் பார்த்துக் கூறுகிறாள்.

*வ்யா:*— (*மேல்தோன்றிப் பூக்காள்*) பார்வையாலேயே கொல்லும் பாம்புபோலே கோடற்பூக்கள் நலியத் தொடங்கியவுடன் அவற்றினிடமிருந்து தப்புவதற்காகக் கண்களை மேலே வைத்தாள்: அங்கே மேல்தோன்றிப் பூக்கள் காணப்பட்டன. அவற்றை விளிக்கிறாள். “கார்க்கோடல் பூக்களுக்குத் தப்பினவர்களையும் அழித்துவிடவேண்டும்” என்று உறுதிபூண்டு அதற்காகவே ‘மேல்தோன்றிப் பூக்கள்’ என்ற பெயரையும் பெற்று, நான் மேலேயும் பார்க்கவொண்ணாதபடி நீங்கள் மேலே புக்கு நிற்கிறீர்களே! [77-ம் பக்கத்தில், 27-வது ப்ரமாணத்தின் படி] அவன் பல பொருள்களைப் படைத்து வைத்திருக்கிறான். அவைகளில் கார்க்கோடல் பூக்கள், மேல் தோன்றிப் பூக்கள் என்னும் நாங்கள் பூவகைகளைச் சேர்ந்தவர்கள். ஆகையால் எங்களை வெறுக்கவேண்டாம் என்று அவைகள் கூறுவதாகக் கொண்டு தே$_3$வர், மனிதர், திர்யக் (விலங்கு), தாவரங்கள் என்ற நான்குவகைப்பட்ட படைப்புக்களில்இவ்விபூ$_4$தியிலுள்ள மற்றவையெல்லாம் கிடக்க, என்னை நலிவதற்காகவே படைக்கப்பட்டவை நீங்கள் என்கிறாள். (*மேலுலகங்களின் மீதுபோய்*) அண்ட$_3$ங்களையும்,ஏழு ஆவரணங்களையும் கடந்து மேலேபோய்.

---

இரண்டாம் பாட்டு. (மேல்தோன்றியித்யாதி$_3$) a “மேல் தோன்றி’ - காந்தள். b (த்$_3$ருஷ்டிவிஷம்) - கண்ணுக்கு அஸஹ்யமாயிருக்கை. c கார்க்கோடல் பூக்களோபாதி, நாங்களும் அவன் ஸ்ருஷ்டிக்க வந்தோம், எங்களை வெறுக்கவேண்டாவென்று கருத்து; (ப$_3$ஹு ஸ்யாம்) இத்யாதி$_3$ வாக்யத்துக்கு “கேட்டிருந்தோம் அப்படியே அநேகமாயிருந்திகோள்” என்றபடி. d மேல்தோன்றிப் பூக்களும் கோடல்பூக்களிலே ஒரு அவாந்தரமாகையாலே மேலே தோன்றுகிற பூக்களொழிய, (நாட்டில் கோடல் பூக்களும் இல்லையோவென்கிறாள்) என்றபடி. e பூக்களையும் ஸ்ருஷ்டிக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (தே$_3$வாதி$_3$ பே$_4$த$_3$ங்கள் இத்யாதி$_3$)

158. "अव्यक्तं अक्षरं तमः" (அவ்யக்தம் அக்ஷரம் தம:) என்றுற் போலே சொல்லுகிறவற்றுக்கு மேலேபோய்.

(மேல்தோன்றும் சோதி)யுண்டு—159. "अत्यर्कानलदीप्तं तत्स्थानं" (அத்யர்க்காநலதீ3ப்தம் தத்ஸ்த2ாநம்) என்று சொல்லும்படியிருக்கிற பரமபத3த்திலே; 160. "तमसः

---

158. அவ்யக்த மக்ஷரே லீயதே। அக்ஷரம் தமஸி லீயதே।
தம: பரே தே3வ ஏகீப4வதி ॥ [ஸுபா3ல 2]

[அவ்யக்தம் அக்ஷரத்தில் லயிக்கிறது; அக்ஷரம் தமஸ்ஸில் லயிக்கிறது தமஸ் மேலான தே3வனிடம் ஒடுங்குகிறது.] என்கிற படியே அவ்யக்தம், அக்ஷரம், தமஸ் என்று சொல்லப்படும் மூல ப்ரக்ருதியின் நிலைகளுக்கு மேலேபோய். *(மேல்தோன்றும் சோதி)*

159. அத்யர்க்காநலதீ3ப்தம் தத் ஸ்த2ாநம் விஷ்ணோர்
மஹாத்மந: ।
ஸ்வயைவ ப்ரப4யா ராஜந்! து3ஷ்ப்ரேக்ஷம்
தே3வதா3நவை: ॥
தத்ர க3த்வா புநர்நேமம் லோகமாயாந்தி பா4ரத ॥
[பா4ர-ஆர 136-18 & 43]

[மஹாத்மாவான விஷ்ணுவினுடைய அந்த ஸ்தாநம் ஸூர்யனுடையவும், அக்3நியுடையவும் ஒளியை விஞ்சியது. அரசனே! அது தன்னுடைய ஒளியினாலேயே தே3வர்களாலும், அஸுரர்களாலும் காண அரியது. பரதவம்சத்தில் உதித்தவனே! அங்குப்போய் மறுபடியும் இவ்வுலகுக்குத் திரும்பிவருவதில்லை] என்று சொல்லப்படுகிற சோதிமயமான பரமபத3த்திலே.

160. வ்யக்தமேஷ மஹாயோகீ3 பரமாத்மா ஸநாதந:।
அநாதி3மத்4யநித4நோ மஹத: பரமோ மஹாந் ॥
தமஸ: பரமோ தா4தா ஶங்க2சக்ரக3தா3தா4ர: ॥
[ரா-யு 114-15]

[இந்த ராமபிரான் மஹாயோகி3யும் பழையவருமான பரமாத்மாவே; இவர் ஆதி3மத்4யாந்தமற்றவர்; பெரியவரான இவர் மஹானுக்கும், தமஸ்ஸுக்கும் அப்பாற்பட்டவர். ஸர்வாதா4ரர். ஶங்க2சக்ரக3தை3களை தா4ரித்தவர்] என்று ஸ்ரீராமாயணத்திலும் சொல்லப்பட்டதன்றே. *(வேதமுதல்வர் வலங்கையின் மேல் தோன்றும் ஆழியின் வெஞ்சுடர்போலச் சுடாது)*



परमो धाता" (தமஸ: பரமோ தா4தா). 161. "तमसः परस्तात्" (தமஸ: பரஸ்தாத்) என்கிறபடியே வேதை3க ஸமதி4க3ம்யராயிருக்கிறவருடைய வலத்திருக்கையின் மேலே தோன்றுகிற திருவாழியின் வெவ்விய சுடர்போலச் சுடாதே.

---

161. வேத3ாஹமேதம் புருஷம் மஹாந்தம்
ஆதி3த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்
தமேவம் வித்3வாநம்ருத இஹ ப4வதி
நாந்ய: பந்தா2 வித்3யதேऽயநாய ॥ [பு-ஸூ 2-2]

[(வேத3புருஷனாகிய) நான் (ஸ்வரூபரூபகு3ணவிபூ4திகளில்) பெரியவனும், ஸூர்யன்போல் ப்ரகாசிப்பவனும், ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டவனுமான இந்தப் புருஷனை அறிகிறேன். அவனை இம்மாதிரி அறிபவன் இங்கேயே முக்தனாக ஆகிறான். மோக்ஷத்திற்கு வேறு வழி கிடையாது.] என்கிறபடியே வேத3த்திலால் பரம்பொருளாகச் சொல்லப்படும் எம்பெருமானுடைய வலத்திருக்கையின் மேலே தோன்றுகிற ஸுதர்சனத்தின் வெம்மைமிக்க சுடர்போலே சுடாமல். *(வேதமுதல்வர்)* வேத3த்தில் ஜக3த்காரணத்வம் முதலானவற்றையுடைய பரம்பொருளாகக் கூறப்படுபவர். சங்ககாலத் தமிழர்களும்—"நின் வலயின் நிறுத்தும் ஏவல் உழந்தமை கூறும் நாவல் அந்தணர் அருமறைப் பொருளே" [பரிபாடல் 1] [எல்லாவுலகும் உன்னுடைய ஏவலுக்குப் பணிந்து நிற்கின்ற தமையை நாவன்மையுடைய அந்தணர் ஓதும் அரியமறையாகிற பொருள் கூறும்] "நலம் முழுது அளைஇய புகர் அறு காட்சிப் புலமும் பூவனும் நாற்றமும் நீ" [ஷை] [(உயிர்கள் அனைவர்க்கும்) நன்மைகளை ஒன்றுவிடாமல் காட்டுவதும், எந்தக் குற்றமும் அற்றதும், அனைத்தையும் அறிவிப்பதும், பொருள்களைப் புலப்படுத்துவதுமான வேத3மும் (அதை உன்னிடமிருந்து ஓதிய) உன் உந்தித்தாமரையில் பிறந்த பிரமனும் அவனுடைய படைப்புத் தொழிலும் உன் அதீ4னமே] "வாய்மொழிப்புலவ" [ஷை] [வாய்மொழியாகிற வேத3த்தில் புலப்படுகிறவனே] "வடுஇல் கொள்கையின் உயர்ந்தோர் ஆய்ந்த கெடுஇல் கேள்வியுள் நடுஆகுதலும்" [பரிபாடல் 2] [குற்றமற்ற கொள்கைகளையுடைய குணம்மிக்கவர்களால்

† இவ்வருகுண்டான ஆதி3த்யாதி3களுடைய தேஜஸ்ஸிற் காட்டில் இந்த்3ராதி3களுடைய தேஜஸ்ஸு விஞ்சியிருக்கும்; அதிற்காட்டில் ப்3ரஹ்மாதி3களுடைய தேஜஸ்ஸு விஞ்சி யிருக்கும்; அதில் காரணத்வ ப்ரயுக்தமாய் வருமதாகை

---

ஆராயப்படுவதும், அழிவில்லாததும், காதால் கேள்விப்பட்டே பரவுவதால் "கேள்வி" எனப்படுவதுமான வேத3த்தினுள் அனைத்துக்கும் அந்தர்யாமியாகச் சொல்லப்படுகிறவனும் நீயே] "நாவல் அந்தணர் அருமறைப் பொருளே" [பரிபாடல் 2] "மாயோய்! நின்வயின் பரந்தவை உரைத்தேம் மாயா வாய் மொழி உரைதர வலந்து" [பரிபாடல் 3] [மாயோனே! அழிவில்லாத வேதம் சொல்லுகிறபடி உன்னிடமிருந்து உண்டாகும் பொருள்களை முறைதப்பிக் கூறினோம்] "முன்னை மரபின் முதுமொழி முதல்வ" [ஷை] [அநாதி3, சிஷ்யாசார்ய பரம்பரையின்மூலம் பரவிவரும் வேத3த்தில் முதல்வனாக ஓதப்படுபவனே!] "காலமுதல்வனை; ஏஎ இன கிளத்தலின் இனமை நற்கு அறிந்தனம்" [ஷை] [ஸாமவேத3ம் காலமுதல்வனாகக் கூறுவதால் நாங்கள் அதை அறிந்தோம்.] "தொல்லியல் புலவ" [ஷை] [அநாதி3வேத3த்தில் புலப்படும் திருமாலே] "கோடாச்செல்வனை ஏவல்இன் முதுமொழி கூறும்" [பரிபாடல் 13] [அழியாத செல்வத்தை உடைய திருமாலே! உனது பெருமைகளை எவராலும் இயற்றப்படாத வேத3ம் கூறும்] "நலம்புரீஇ அஞ்சீர் நாமவாய்மொழி இது என உரைத்தலின்" [பரிபாடல் 15] [அனைவர்க்கும் நலத்தை விரும்பி அழகிய சிறப்பையும் புகழையும் உடைய வேத3மானது திருமாலுக்குச் சொல்லும்] என்று பலவிடங்களில் "திருமாலே வேதமுதல்வர்" எனக் காட்டினார்களன்றே. *(வெஞ்சுடர்)* இவ்வுலகிலுள்ள சூரியன் முதலான சுடர்களுடைய தேஜஸ்ஸைக் காட்டிலும் இந்திரன் முதலான தே3வர்களுடைய தேஜஸ் மிக்கிருக்கும். அதைக்காட்டிலும் பிரமன் முதலான தே3வதே3வர்களுடைய தேஜஸ் மிக்கிருக்கும். அதைக்காட்டிலும், அவர்களுடைய

---

† பூ4ர்த4கத்வத்துக்கு த்3ருஷ்டாந்தமாகச் சொல்லும் போது ஆதி3த்யாதி3களைச் சொல்லாமல் திருவாழி யாழ்வானைச் சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார்



யாலே மூலப்ரக்ருதியினுடைய தேஜஸ்ஸு விஞ்சியிருக்கும்; "அதுதான் தமஸ்ஸு" என்னும்படி பரமபத3த்தில் புகர் அதுக்கு ப்ரகாஶத்தைப்பண்ணும்; தி3வ்ய மங்க3ள விக்3ரஹம் அதுக்கு ப்ரகாஶத்தைப்பண்ணும்; அதுக்கு மேலேயிறே திருவாழியாழ்வான் தேஜஸ்ஸு.

(ஆழியின் வெஞ்சுடர்போலச்சுடாது) ‡ மஹாநஸாதி3களிலே அக்3நிக்கும் தூ4மத்துக்கும் ஸாஹசர்யத்தைக் கண்டு, பின்னையிறே பர்வதத்தில் அநுமிப்பது; அப்படியே இங்குள்ளவற்றுக்கும் அவ்விபூ4தியிலுள்ளவற்றை த்3ருஷ்

---

சரீரத்திற்கும் காரணமாகையாலே மூலப்ரக்ருதியின் தேஜஸ்ஸு மிகுந்திருக்கும். அதுதான் தமஸ் (இருள்) என்னும்படி பரமபத3த்தின் ஒளி மூலப்ரக்ருதியையும் ஒளிவிடச் செய்யும். எம்பெருமானுடைய தி3வ்யமங்க3ள விக்3ரஹம் அந்தப் பரமபத3த்தையும் ப்ரகாசிக்கச் செய்யும். திருவாழியாழ்வானுடைய தேஜஸ் அந்த தி3வ்யமங்க3ளவிக்3ரஹத்தின் தேஜஸ்ஸுக்கும் மேற்பட்டதாயிருக்கும். அதனாலேயே அதை வெஞ்சுடர் என்கிறாள். *(ஆழியின் வெஞ்சுடர்போலச் சுடாது)* ஸுத3ர்சனத்தின் கொடிய சுடர்போலச் சுடாமல். இவ்வுலகிலுள்ள ஸூர்யன்போன்ற சுடர்களைச் சொல்லாமல் கண்காணாத திருவாழியாழ்வானைச் சொல்லலாமோ? கண்ணால்கண்ட இடத்தில் வ்யாப்தியை அறிந்தன்றோ காணாததில் அனுமானம் செய்யலாம். சமையலறை முதலானவற்றில் புகையிருக்குமிடத்திலெல்லாம் நெருப்பு இருப்பதைப் பார்த்து, அதற்குப் பின் பன்றோ மலையில் கண்ணால்காணாத நெருப்பை அனுமானம் செய்வது எனில் — ஆண்டாளுக்கு உப4யவிபூ4தியும் மிசத் தெளிவாகக் காட்சியளிக்கிறபடியாலே இங்குள்ளவற்றுக்கும் நித்யவிபூ4தியிலுள்ளவற்றை த்3ருஷ்டாந்தமாகச் சொல்லலாம். உண்மையில் ப4க3வத3னுப4வம் கிட்டாத இந்த விபூ4தி மேடாய், ஒரு விபூ4தியாக ப4க3வத3னுப4வத்தில் திளைக்கும்

---

(இவ்வருகுண்டான இத்யாதி3) ‡ ப்ரத்யக்ஷமானத்தை த்3ருஷ்டாந்தமாகச் சொல்லாதே பரோக்ஷத்திலே ஒன்றைச் சொல்லக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (மஹாந

டாந்தமாகச் சொல்லலாம்படியாய்த்து-அவ்விடம் h விதே4யமானபடி. i இவ்விடம் மேடாய் அவ்விடம் பள்ளமாய்த் தோற்றினபடி. j ப்ரஸித்3த4த்திலேயிறே வ்யாப்தி க்3ரஹிப்பது. k "அயர்வறும் அமரர்களதிபதி" என்று - முற்பட நித்யவிபூ4தியைச் சொல்லி, பின்னை மூன்றும்பாட்டிலேயிறே லீலாவிபூ4த்யநுஸந்தா4நம் பண்ணிற்று. (சுடாதெம்மை) l அவன் உகவாதாரையிறே முடிப்பது; நீ உகந்தாரை முடியாநின்றாய். "அருளார் திருச்சக்கரம்" என்றும், "அருளாழி" என்றுமிறே உகப்பார்க்கிருப்பது.

---

பரமபத3ம் பள்ளமாயன்றோ ஆண்டாளுக்குத் தோற்றுகிறது. ப்ரஸித்3த4மான சமையலறை முதலானவற்றிலன்றோ அநுமானத்துக்கு உறுப்பான வ்யாப்தியை (எங்கெங்கு ஹேது உள்ளதோ அங்கங்கு ஸாத்4யமும் இருக்கும் என்னும் நியமத்தை) அறிவது. இவளுக்கு நித்யவிபூ4தியிலுள்ள திருவாழியாழ்வான் அப்படி ப்ரஸித்3த4மாயிருக்கிறபடி. இவளுடைய தமப்பனாரான நம்மாழ்வாரும் 'அயர்வறும் அமரர்கள் அதிபதி' என்று முதற்பாட்டிலே நித்யவிபூ4தியைச் சொல்லி, பிறகு 'இலனது' என்னும் மூன்றும் பாட்டிலன்றோ லீலாவிபூ4தியை அநுஸந்தி4த்தார். (சுடாதெம்மை) திருவாழியாழ்வான் எம்பெருமானிடம் அன்பில்லாதவரையே சுட்டழிப்பான். "அருளார் திருச்சக்கரம்" [திருவிருத்தம் 33] "அருளாழி" [திருவாய் 1-4-6] என்கிறபடியே அன்புடையாரிடம் அருளையே பொழிவான். மேல்தோன்றிப் பூக்களான நீங்கள் உகந்த என்னையன்றோ சுட்டு அழிக்கின்றீர்கள்.

---

ஸாதி3களிலித்யாதி3) h (விதே4யமானபடி) விஶத3மானபடி. i இவ்விடம் விதே4யமன்றோவென்ன அருளிச்செய்கிறார் (இவ்விடமித்யாதி3) j விஶத3மானது கொண்டு இங்குத்தைக்கு அவ்விடத்தில் அது த்3ருஷ்டாந்தமாகவேணுமோவென்ன அருளிச்செய்கிறார் (ப்ரஸித்3த4த்திலேயிறேயித்யாதி3) (ப்ரஸித்3த4த்திலே) என்றது - ப்ரத்யக்ஷத்திலே என்று தாத்பர்யம். k இவ்விடத்தைப் பற்றவும் அவ்விடம் அண்ணிமையாகச் சொன்னபேருண்டோவென்ன அருளிச்செய்கிறார் (அயர்வறுமித்யாதி3) l (அவன்) திருவாழியாழ்வான்.



m (மாற்றித்யாதி3) இதுக்குத் திருமலைநம்பி பணிக்கும்படி:— "தான் பிரிவாலே நொந்தபடியாலே 162. 'ஜராமரண-மோக்ஷாய' (ஜராமரணமோக்ஷாய) என்று ஆஶ்ரயிக்கும் திரளின் நடுவே என்னைக்கொடுபோய் வைக்கவல்லையே என்கிறாள்" என்றருளிச்செய்வர்; n ப4க3வத3நுப4வம் பண்ணுமதிலும் து3:க்க2நிவ்ருத்தி தேட்டமானபடியாலேசொல்லுகிறாளென்று.

---

*(மாற்றாலைப் பட்டவர் கூட்டத்து வைத்துக்கொள்கிற்றிரே)* இதற்குத் திருமலை நம்பியின் நிர்வாஹம் பின்வருமாறு—பிரிவாலே மிகத்துன்புறும் ஆண்டாள் எம்பெருமானிடம் அன்பு கொண்டமையாலன்றோ இப்பாடுபட வேண்டியிருக்கிறது என்று ப4க3வத3நுப4வத்தில் வெறுப்புற்று,

162. ஜராமரணமோக்ஷாய
மாமாஶ்ரித்ய யதந்தி யே।
தே ப்3ரஹ்ம தத்3விது3: க்ருத்ஸ்நம்
அத்4யாத்மம் கர்ம சாகி2லம்॥ [கீ3தை 7-29]

[கிழத்தனம், மரணம் என்பவை நீங்கி ஆத்மஸ்வரூபத்தைக் காண்பதற்காக எவர்கள் என்னையடைந்து முயலுகிறார்களோ, அவர்கள் 'ப்3ரஹ்மம்' எனப்படும் ஆத்மஸ்வரூபத்தையும், 'அத்4யாத்மம்' எனப்படும் ப்ரக்ருதி முழுவதையும், ப்ரஜோத்பத்தியாகிற கர்மம் முழுவதையும் அறிகிறார்கள்.] என்கிறபடியே ப4க3வத3நுப4வத்தில் விருப்பமில்லாமல் ஆத்மாநுப4வத்தை மாத்திரம் விரும்பும் கேவலர்களின் கூட்டத்தின் நடுவே என்னைக்கொண்டுபோய் வைக்கவல்லையே என்கிறாள்—

---

m "மாற்றாலைப்பட்டவர்"-கேவலர்; மாற்றுகை—நீங்குகை. (மாற்றாலை)-ஓலை மாறப்படுகை; கேவலர்க்கும் முக்தர்க்கும் ஒக்கும். திருமலைநம்பி நிர்வாஹத்துக்கு, "மாற்றாலைப் பட்டவர்" என்றது - ப4க3வத3நுப4வத்துக்கு மாற்றாலைப் பட்டவரென்றபடியாய், கேவலர் கூட்டமென்றபடி. அன்றிக்கே, ஸம்ஸாரத்திலே ஓலைமாற்றப்பட்டவரென்னவுமாம். n அத்தைச்சொல்லலாமோவென்ன அருளிச்செய்கிறார்

"கேவலர் தனித்தனியேயாய்த்து அநுப4விப்பது; திரளாயிருக்கக்கூடாது" என்று எம்பார் அருளிச்செய்யும்படி; "மாற்றரூலேப்பட்டவர் கூட்டமாகிறது-அடியார்கள் குழாங்களாய், என்னை அத்திரளின் நடுவே கொடுபோய் வைக்கவல்லேயே" என்கிருளென்று. ஸம்ஸாரத்தில் ஓலே மாற்றப்பட்டவர்கள். o நாம் ரஹஸ்யத்திலும் அநுஸந்தி4ப்பது ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமாக அநுப4விக்கும் அநுப4வத்தை

---

என்று. துன்பத்தை விளைக்கும் ப4க3வத3நுப4வத்தைக் காட்டிலும் துன்பத்திலிருந்து நீங்குவதே இப்போது இவளுக்குத் தேவையாகையாலே ஸம்ஸாரது3:க்க2 நிவ்ருத்தியை மாத்திரம் விரும்பும் கேவலர்திரளிலே சேரவிரும்புகிருள் என்று கருத்து.

எம்பார் இவ்விடத்தில் வேறுவித4மாக நிர்வஹிப்பர். "கேவலர் தனித்தனியே இருந்து தத்தம் ஆத்மாக்களை அநுப4விப்பார்கள். திரளாயிருந்து அநுப4விப்பதில்லை. இங்கு 'கூட்டம்' என்கையாலே கேவலரைச் சொல்லுவதில் ஸ்வாரஸ்யமில்லை. ஆகையால் ஸம்ஸாரத்திலிருந்து ஓலேமாற்றப்பட்டவர்களாகையாலே மாற்றரூலேப்பட்டவர்கள் எனத்தக்க முக்தர்கள் கூட்டத்தின் நடுவே என்னைக்கொண்டுபோய் வைக்கவல்லேயே என்கிருள்" என்று. "அடியார்கள் குழாங்கள்" [திருவாய் 2-3-10] நடுவே தன்னைக்கொண்டுபோய் வைக்கச்சொல்லுகிருள் என்று கருத்து. ப4க3வத3நுப4வபரர்களை அவ்வநுப4வத்தையிட்டு நிரூபியாமல் 'மாற்றரூலேப்பட்டவர்' என்று ஸம்ஸாரநிவ்ருத்தியையிட்டு நிரூபிக்கலாமோ? எனில். திருவஷ்டாக்ஷரத்திலும், த்3வயத்திலும் 'நமோ நாராயணுய' என்னும் இடத்தில் நமஶ்ஶப்3த3த்தாலே ஸம்ஸாரநிவ்ருத்தியையும், 'நாராயணுய' என்று

---

(ப4க3வத3நுப4வம் இத்யாதி3) o அநுப4வத்தையிட்டு நிரூபியாமல், "மாற்றரூலேப்பட்டவர்" என்று ஸம்ஸாரநிவ்ருத்தியையிட்டு நிரூபிப்பானென்னென்ன அருளிச்செய்கிருர் (நாம் ரஹஸ்யத்திலும் இத்யாதி3) உத்தர வாக்யத்தில், நமஶ்ஶப்3த3த்தாலே-ஸம்ஸார நிவ்ருத்தியையும், சதுர்த்தி2யாலே-



யிறே. p இங்கே ப4க3வத3நுப4வமுண்டானுலும் காத3ாசித்கமிறே. ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வகமாகப் பெறுமன்றிறே பரிபூர்ண கைங்கர்யத்தைப் பெறலாவது.

அங்ஙனன்றிக்கே, ஆப்பான் பணிக்கும்படி; ஆழ்வான் பணிக்கக் q கேட்டிருக்கவுமாமிறே;— r"அவன் r2 கொடுவரச்

---

அதை முன்னிட்டுக்கொண்டுவரும் ப4க3வத3நுப4வகைங்கரியங்களையுமன்ரே முக்தர்களுடைய ப2லமாக அநுஸந்தி4ப்பது. இங்கே அர்ச்சாவதாரத்தில் ப4க3வத3நுப4வம் உண்டானுலும் அது எப்போதாவது ஏற்படுவதேயன்ரே. ஸம்ஸாரம் நீங்கிய பின்பன்ரே பரிபூர்ணமான அநுப4வகைங்கர்யங்களைப்பெறுவது.

கூரத்தாழ்வானுடைய ஶிஷ்யரான ஆப்பான் வேறுவகையாக நிர்வஹிப்பர். ஆழ்வான் இப்படி நிர்வஹிக்கக் கேட்டிருக்கக் கூடியவரன்ரே அவர். அவரது நிர்வாஹமாவது-ஸர்வேஶ்வரன் என்னை நலிவதற்காக உங்களை அனுப்பியிருக்கிருன். சிலரைத் தானே நேரே நலியவேண்டும் என்னும்

---

அநுப4வகைங்கர்யத்தையுமிறே அநுஸந்தி4ப்பதென்றபடி. p ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமாகவேணுமென்கிறதென்? இங்கே அர்ச்சாவதாரத்திலே அநுப4வமுண்டேயென்ன அருளிச்செய்கிருர் (இங்கே ப4க3வதி3த்யாதி3.) q (கேட்டிருக்கவுமாமிறே) "ஶிஷ்யராகையாலே" இதி ஶேஷ:. r மூன்றும் பொருளுக்கு "மாற்றரூலேப்பட்டு, அவர் கூட்டம்" என்று பத3மாய், ஓலே மாருடிக்கொண்டுவந்தோமென்றபடி என்று விவக்ஷித்துப் பொருளருளிச்செய்கிருர் (அவன் கொடுவர) என்று; (அவன்) - ஈஶ்வரன். ஓலே மாருடுகையாவது- "ஒருத்தியை பா3தி4க்கவேணும், கொடுவாருங்கோள்" என்று சிலரை வரவிட்டால், வந்தவர்கள் அவளைவிட்டு இவளைக் கொடுபோய் முன்னேவிட்டால், "இது என்தான்? சொன்னவளெங்கே?" என்று ஈஶ்வரன் கேட்டால், ஓலே மாருடிஞேமென்று சொல்லுகை; இது கோஶாந்தரே. r2 அத2வா, (கொடுவரச் சொன்னவர்களை) என்றது-

சொன்னவர்களைத் $r_3$ தவிர்ந்து $r_4$ 'மாற்றோலைப்பட்டோம்' என்று அவர்கள் திரளிலே என்னை வைக்கவல்லையே என்கிருள்'' என்று. 2.

---

திருவுள்ளத்தாலே அவர்களை அழைத்து வரச்சொல்லியும் உங்களை அனுப்பியிருப்பான். உங்களால் நலியப்படவேண்டியவர்கள் கூட்டத்திலிருந்து என்னை எடுத்து, ஸர்வேஶ்வரன் நேரே நலியவேண்டும் என்று அழைத்துவரச் சொல்லப்பட்டவர்கள் கூட்டத்திலே என்னைச் சேர்த்து அவன் முன்னே கொண்டு செல்லுங்கள். ''அவன் அவளைவிட்டு இவளை ஏன் கொண்டுவந்தீர்கள்'' என்று கேட்டால் ''ஓலைமாறிப் போய் விட்டது'' என்று சொல்லுங்கள். அவன் நேரே என்னை நலிந்தானுகிலும், அவனை நேரில் பார்த்த திருப்தி எனக்கு ஏற்படும் என்று கருத்து. அரும்பதவுரையில் இந்த நிர்வாஹத்துக்கு மற்றும் சில பொருள்கள் உரைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். 2.

---

பா$_3$தி$_4$ப்பதாகக் கொடுவரச் சொன்னவர்களை என்றபடி. $r_3$(தவிர்ந்து) என்றது-நீங்கள் கொடுபோகவேண்டாவென்று தவிர்ந்தென்றபடி. $r_4$(மாற்றோலைப்பட்டோமென்று) அதாவது;-நீங்கள் பா$_3$தி$_4$க்கைக்கு உறுப்பாகக் கொடுவந்த ஓலைக்கு மாருன ஓலையாவது-பா$_3$தி$_4$க்கவேண்டாவென்று ஓலை கொடுவந்தோமென்று சொல்லி என்றபடி.

அன்றிக்கே, ஈஶ்வரன் முன்னே கொடுவரச்சொன்னவர்களைக் கொடுபோக வேண்டாவென்று நீங்கள் நிஷேதி$_4$த்து இவள் நமக்கு ஶத்ருவென்று ஈஶ்வரனாலே ஓலையெழுதப்பட்டோமென்று அந்த ஶத்ருக்கள் கூட்டத்திலே வைக்கவில்லையே என்கிருளென்றுமாம். இத்தால் அவர்கள் நடுவேயிருக்குமதிலும் கொடிதாயிருக்கிறது நீங்கள் பா$_3$தி$_4$க்கிறபடி என்று தாத்பர்யம். அங்ஙனுமன்றிக்கே, ஸர்வேஶ்வரன் தன்பக்கலிலே கொடுவரச்சொன்னவர்களை ''வேண்டா'' என்று தம்முடைய ஶத்ருக்களான ஶிஶு-பாலாதி$_3$கள் நடுவே கொடுபோகச்சொல்லி ஓலையெழுதப்



## பத்தாம் திருமொழி—மூன்ரும் பாட்டு

**கோவை மணுட்டி! நீஉன் கொழுங்கனி கொண்டுஎம்மை**
**ஆவி தொலைவியேல் வாயழகர் தம்மை யஞ்சுதும்;**
**பாவியேன் தோன்றிப் பாம்பணை யார்க்கும்தம் பாம்புபோல்**
**நாவு மிரண்டுள வாய்த்து நாணிலி யேனுக்கே.**

பதவுரை:— **கோவை மணுட்டி!**—அம்மா! கோவைக் கொடியே!! **நீ**—நீ, **உன்**—உன்னுடைய, **கொழுங்கனி கொண்டு**—அழகிய பழங்களாலே, **எம்மை**—என்னுடைய, **ஆவி**—உயிரை, **தொலைவியேல்**—போக்கலாகாது; **வாய் அழகர் தம்மை**— அழகிய வாய்படைத்த பெருமான் விஷயத்திலே, **அஞ்சுதும்**—பயப்படாநின்றேன்; **பாவியேன்**—பாவியான நான், **தோன்றி**—பிறந்தபின்பு, **நாணிலியேனுக்கு**—லஜ்ஜை அற்றவளான என் விஷயத்திலே, **பாம்பு அணையார்க்கும்**—சேஷசாயியான பெருமானுக்கும், **தம் பாம்பு போல்**—தமது (படுக்கையான) திருவனந்தாழ்வானுக்குப்போலே, **நாவும் இரண்டு உள ஆய்த்து**—இரண்டு நாக்குகள் உண்டாயின.

**அவ:— மூன்ரும் பாட்டு.** (கோவையித்யாதி$_3$) **மேலில் கண்ணை மாறி. பக்கத்திலே கண்ணை வைத்தாள்; அங்கே**

---

3. *அவ:*— மேலே இருக்கும் மேல்தோன்றிப் பூக்களிடமிருந்து தன் கண்ணை எடுத்துப் பக்கத்திலே கண்ணை

---

பட்டோமென்று அந்த ஶத்ருக்கள் நடுவே கொடுபோய் வைக்கவில்லையே என்கிருளென்றுமாம். இவைகளில் முந்தினதே ஸ்வரஸம். மூன்ரும் நிர்வாஹத்தில், மாற்றோலைப் பட்டோமென்றவர்கள் திரளாவது-யமலோகத்திலே போய், ஓலைமாற்றப்பட்டுத் திரும்பிவந்தோமென்ற ஸம்ஸாரிகள் திரளிலே என்னுதல். யமன் ''இவனை ஏன் கொண்டு வந்திகோள்?'' என்று தூதரைக்கேட்டால், ''மாற்றோலைப் பட்டோம்'' என்னும் தூதர்திரளிலே என்னுதல்; முடித்து விடவல்லையே என்றபடி. 2.

செடியிலே கோவை படர்ந்து பழுத்துக்கிடந்தது; அத்தைப் பார்த்து வார்த்தை சொல்லுகிறாள். கார்க்கோடல், நிறத்துக்கு ஸ்மாரகமாய் நலிந்தது; மேல்தோன்றி திருவாழிக்கு ஸ்மாரகமாய் நலிந்தது. கோவைப்பழம், திருவத$_4$ரத்துக்கு ஸ்மாரகமாய் நலிகிறதாய்த்து.

வ்யா:— a (கோவைமணாட்டி) கொடியாகையாலே ஸாபத்ந்யத்தாலே நலிந்தாற்போலே இராநின்றது; b மணமுடைமை சொல்லுகிறது. அது இங்குண்டோ பின்னை? என்னில்; உபமேயத்தைப் பற்றச் சொல்லுகிறது. 3. "ஸர்-

வைத்தாள். அங்கே படர்ந்திருக்கும் செடியிலே கோவைப்பழம் பழுத்துக்கிடந்தது. அதைப்பார்த்து "என்னை நலிய உன்னையும் அனுப்பினாரோ?" என்கிறாள். முதற்பாட்டில் கார்க்கோடல் பூக்கள் எம்பெருமானுடைய கருமை நிறத்தை நினைவுபடுத்தி நலிந்தன. இரண்டாம் பாட்டில் மேல்தோன்றிப் பூக்கள் ஸுத$_3$ர்சனத்தின் சுடரை நினைவுபடுத்தி நலிந்தன. இப்பாட்டில் கோவைப்பழம் எம்பெருமானுடைய பவளவாயை நினைவுபடுத்தி நலிகின்றது.

*வ்யா:— (கோவை மணாட்டி)* கோவைக்கொடியாகிற பெண்ணே! வேயர்தங்கள் குலக்கொடியாகிற என்னோடு கோவைக்கொடியாகிற நீ சக்களத்தி போராட்டம் செய்கின்றாயோ? 'மணாட்டி' என்று எம்பெருமானுடைய தே$_3$வியாக வைத்துச் சொல்லுகிறாள். அல்லது மணமுடையவள் என்னும் பொருளிலே சொல்லுவதாகவும் கொள்ளலாம். கோவைக்கொடிக்கு மணம் உண்டோ? எனில்: எம்பெருமானுடைய திருப்பவளச் செவ்வாய்க்குக் கோவைப்பழம் உபமானமாகையாலே, உபமேயமான திருப்பவளச்செவ்வாய்க்குள்ள நறுமணம் இதுக்கும் இருக்கும் என்று வைத்துச்

மூன்றாம் பாட்டு. (கோவையித்யாதி$_3$) a "மணாட்டி" என்றது-ஸ்த்ரீத்வமென்னுதல்; மணமுடைமையென்னுதல்; b மணாட்டியாவதென்னென்ன அருளிச்செய்கிறார் (மண



ஸ:" (ஸர்வக$_3$ந்த$_4$:) என்கிற வஸ்துவையிறே உபமேயமாகச் சொல்லுகிறது. "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ" என்று கேட்பதும் செய்தாளே. (நீ) கோடலும் மேற்றோன்றியும் அமையாதோ? ஒரு தூற்றிலே கிடந்து நலிகைக்கென்றே பழுப்பதே!. (உன்) c உனக்கு முன்னம் நலிவில்லையே. d தன்னைத் தானே நலிந்துகொள்ளவேணுமென்னுமது $d_2$ இல்லையிறே அதுக்கு. e "தன்னைத்தானறிந்ததாகில் 'பிறர்க்கு நலிவுபண்ணக் கடவோமல்லோம்' என்று

சொல்லுகிறாள். [9-வது பக்கத்தில், 3-வது ப்ரமாணத்தின்படி] எம்பெருமானுடைய நறுமணமுள்ள பவளச்செவ்வாயன்றோ இதற்கு உபமேயம். இவ்வாண்டாளும் "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ" [நாச்-திரு 7-1] என்று இவ்வாயின் மணமும், சுவையும் எத்தகையது என்று சங்கத்தைக் கேட்டாளன்றோ. (நீ) கோடற்பூவும் மேல்தோன்றிப் பூவும் என்னை நலிந்தது போதாதோ? ஒரு புதரிலே கிடந்து என்னைத் துன்புறுத்துவதற்கென்றே நீ பழுப்பதே! (உன்) பெண்ணான நீ சிறிதும் நலிவில்லாமலிருக்கிறாயே. அதுபோல் நானுமிருக்கவேண்டாமா? பிரிவுத் துன்பத்தை அறியாயாகையாலே உன்னை நீயே நலிந்துகொள்ள வேண்டிய அவஶ்யமில்லையே உனக்கு. 'கொடியாகிற நீ உன்னை ஒரு பெண்ணாய்ப் பிறந்தவளாக அறிந்தாயாகில். மற்றொரு

முடைமை சொல்லுகிறது) என்று. c அவன்றன்னை, "உன்னைக் கண்ணுடிப் புறத்திலுங் கண்டறியாயே, கண்டால் பிரியாயே" என்னுமாபோலே, கொடியாகையாலே ஸ்த்ரீத்வ ஸாம்யத்தை விவக்ஷித்தருளிச்செய்கிறார் (உனக்கு முன்னமித்யாதி$_3$) d தன் வைலக்ஷண்யம் அறியாதோவென்ன (தன்னைத்தானித்யாதி$_3$) $d_2$ (இல்லையிறே அதுக்கு) ஆகையாலே, "எம்மையாவி தொலைவியேல்" என்கிறாளென்று தாத்பர்யம். e "கொழும்" என்ற விஶேஷணத்துக்குத் தாத்டர்யம் (தன்னைத்தானறிந்ததாகில்) என்று. (தன்னைத் தானறிந்ததாகில்)-தன் வைலக்ஷண்யமறிந்ததாகிலென்ற

கண்வட்டத்தினின்றும் கடக்க நிற்கவேண்டாவோ ?" என்றிருக்கிறாள். f (கொழுங்கனி கொண்டு) g அதுக்குச் செவ்வியுண்டாயிருக்குமிறே. (எம்மை) இப்பரிப்புக்கெல்லாம் இங்கு விஷயமுண்டோ ?

h (ஆவிதொலைவியேல்) i தோற்புரையே நலிந்துவிடுகையன்றிக்கே. உயிர்நிலையிலே நலியாநின்றது. j கோடலும் மேல்தோன்றியும் அலைத்த ஆவியை நீ என்செய்யத் தொலைக்கிறாய்? "தொலைவியேல்" என்றதுக்கு "நான் தொலைக்கிறதுண்டோ" என்ன அதுக்கு k வாயில்லையே.

---

பெண்ணான என்னைத் துன்புறுத்தக் கூடாது என்று என் கண்பார்வையில் படாமல் நிற்கவேண்டாமா' என்று நினைக்கிறாள். *(கொழுங்கனி கொண்டு)* உன்னுடைய பழம் உபமேயமான பவளச்செவ்வாய்போலே மிகச் செழுமைபெற்றன்றோ இருக்கிறது. *(எம்மை)* நீ படுத்துகிற பாட்டையெல்லாம் தாங்குவதற்கு எனக்கு வலிமையுண்டோ ?

*(ஆவிதொலைவியேல்)* மேலாகத் துன்புறுத்தாமல் என் உயிர்நிலையிலே நலிவதை நிறுத்துவாய். ஆவி-மர்மஸ்த$_2$ானம்; உயிர்நிலை. அன்றிக்கே உயிர் என்று பொருள்கொண்டு, ஏற்கனவே கோடலும் மேல்தோன்றியும் துன்புறுத்தி நொந்துகிடக்கும் என் உயிரை நீ ஏன் மேலும் நோவச்செய்கிறாய் என்பதாகவும் கொள்ளலாம்.

---

படி f,g "கொழுங்கனி" என்று விசேஷிப்பானென்னென்ன (அதுக்கித்யாதி$_3$) அதுக்கு - திருவத$_4$ரத்துக்கு.

h (தொலைவியேல்) "மர்மத்திலே என்னுதல்; நொந்திருக்கிற ஆவியென்னுதல்" என்று தாத்பர்யம். i,j இவற்றை வாக்யத்$_3$வயத்தாலே அருளிச்செய்கிறார் (தோற்புரையேயித்யாதி$_3$) h ஆத்மாவை நசிப்பியாதேகொள்ளென்று ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம். j ப$_2$லிதம் (கோடலுமித்யாதி$_3$) f கொழுமை-அழகு; h ஆவி-உயிர்; தொலைவு-மாள்வு. k "வாயில்லை" என்றது - அசேதநத்வாத் என்னுதல்; ப$_3$ாத$_4$கத்வமுண்டாகையாலே என்னுதல்.



l (வாயழகர் தம்மையஞ்சுதும்) கலக்கப்புக்காலும், அஞ்சி நான் m கண் செம்பளித்தபடியேகாண் இருப்பது. முன்பேயஞ்சிக் காண் நான் அதுக்கிருப்பது. "அஞ்சுதும்"

---

அசேதனமான கோவைக் கொடியைப் பார்த்து இவள் இப்படிச் சொன்னால் அது புரிந்துகொள்ளுமோ ? புரிந்துகொண்டு பதில் கூறுமோ? எனில்: இவள் 'என் ஆவியைத் துன்புறுத்தாதே' என்று சொன்னால் அதைப் புரிந்துகொண்டு 'நான் எங்கே துன்புறுத்துகிறேன் ?' என்று பதில் சொல்ல அதற்கு வாயில்லையே. ஆயினும் அது எம்பெருமானுடைய பவளச்செவ்வாயை நினைவுபடுத்துவதன் மூலம் இவளைத் துன்புறுத்துவது உண்மையாகையாலே, அது அசேதனமென்பதை மறந்து 'ஆவிதொலைவியேல்' என்று கூறுகிறாள். *"காமார்த்தா ஹி ப்ரக்ருதிக்ருபணா: சேதநாசேதநேஷு"* என்று காளிதாஸன் மேக$_4$ஸந்தே$_3$ஶத்தில் கூறியபடியே விரஹ வேத$_3$னையில் இருப்பவர்கள் சேதனத்துக்கும் அசேதனத்துக்கும் வேறுபாடு அறியமாட்டார்களன்றோ. கோவைப்பழத்தைப் பார்த்துக்கொண்டே இருந்ததால், அதை எம்பெருமானுடைய பவளச்செவ்வாயாகவே நினைத்துக் கூறுகிறாள்—*(வாயழகர் தம்மை அஞ்சுதும்)* வாயழகரான எம்பெருமானோடு கூடியிருக்கும் காலத்திலும், அதன் இனிமையைத் தாங்கமாட்டாமையாலே அச்சத்தாலே கண்ணை மூடிக்கொண்டே நான் இருப்பேன். பிரியும்போது இதை நினைவுபடுத்தி மற்ற பொருள்கள் என்னைத் துன்புறுத்தும் என்னும் காரணத்தாலும் நான் கண்ணைமூடிக்கொண்டிருப்பேன். ஏற்கனவே அந்தப் பவளச்செவ்வாயைக் கண்டு அஞ்சியிருக்கிறேன். இப்போது அஞ்சுகின்ற என்னை 'அஞ்சேல்' என்று சொல்லாமையாலே மிகவும் ப$_4$யப்படுகிறேன். 'அஞ்சுகிறேன்' என்று நான் கூறினால்,

---

l உபமாநமான பழத்தை உபமேயமாக விவக்ஷித்து அருளிச்செய்கிறார் (வாயழகரித்யாதி$_3$) m (கணசெம்பளித்தபடியே) என்றது - போ$_4$க்$_2$யதா ப்ரகர்ஷத்தாலே வாய்புகுநீராகையாலே என்றபடி. அன்றிக்கே, விஶ்லேஷ ஸம

என்றால் "நீ அஞ்சவேண்டா" காண். 162* 'मा शुचः' (மா ஶுச:) என்று - என் கண்வட்டத்தினின்றும் கடக்க நிற்கவிறே அடுப்பது; அது செய்ததில்லை.

(பாவியேன் தோன்றி) இத்தைக் காற்கட்டும்படி அவன் ஸ்வப4ாவம் அந்யத2ாகரித்தது என்னைத் தோற்றிக்கிடீர். பெரியாழ்வாரும் ஸர்வேஶ்வரனுமாய் ரஹஸ்யங்களுண்டாய்ப் போருகிற காலங்களில் இவையெல்லாமில்லை கிடீர். (பாவியேன் தோன்றி...நாவுமிரண்டுளவாய்த்து) பெரியாழ்வார் காலத்தில் இரண்டு வார்த்தை சொல்ல

---

162* ஸர்வத4ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வபாபேப்4யோ
மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ॥ [கீ3தை 18-66]

[(ப2லஸாத4னமான) எல்லா த4ர்மங்களையும் வாஸனையுடன் விட்டு. என்னை ஒருவனையே உபாயமாக அடை; நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்; துன்புறாதே.] என்றாற்போலே நீ அஞ்சவேண்டியதில்லை என்று என் கண் பார்வையிலிருந்து விலகிப் போகவேண்டாவோ? அது செய்யாமையாலே மிகவும் ப4யப்படுகிறேன்.

*(பாவியேன் தோன்றி)* "இந்தக் கோவைக்கொடியின் காலிலே விழும்படி எம்பெருமானுடைய இயல்வு வேறுபட்டது நான் பிறந்தபின்பேயன்றோ. நான் பிறப்பதற்குமுன் பெரியாழ்வாரும் எம்பெருமானும் ஒருவரோடு ஒருவர் ரஹஸ்யங்களைப் பரிமாறிக்கொண்டிருந்த காலங்களில் இவையெல்லாம் இல்லையன்றோ. அவர்கள் இருவருக்கும் நடந்த பரிமாற்றமெல்லாம் குலைந்தது நான் பிறந்தபின்பன்றோ. *(பாவியேன்தோன்றி...நாவுமிரண்டுள வாய்த்து)* பெரியாழ்வார் காலத்தில் அவன் இரண்டுசொல் சொல்லமுடியாதே. முரணுக இரண்டுவார்த்தை பேசினானாகில் அவரோடு தொடர்பு விட்டு

---

யத்தில் இதுக்கு ஸ்மாரகமாய், பதா3ர்த்த2ங்கள் நலியுமென்னுமத்தைப் பற்றவாதல்.



வொண்ணாதாய்த்து அவனுக்கு. அதாவது - இரண்டு வார்த்தை சொல்லில் அவரைக் கிடையாதே. ஆகையால் ஒரு வார்த்தையேயாய்த்து அவர் காலத்தில் உள்ளது. n "ஒன்றேயுரைப்பான் ஒரு சொல்லே சொல்லுவான்" என்று ஐயரை இடுவித்துக் கவிபாடுவித்துக்கொண்டதித்தனையிறே. நடுவே o "ஜீவிக்கிலும் ஜீவிக்கிறாள். முடியிலும் முடிகிறாள் நாம் வேண்டிற்றுச் சொன்னால்" என்றிருக்கலாவது எனக்கிறே. (பாவியேன் தோன்றி) p 163. 'शङ्के मद्भाग्यसङ्क्षयात्' (ஶங்கே மத்3ப4ாக்3ய ஸங்க்ஷயாத்) 28. 'सत्य-

---

விடுமே. ஆகையால் அவர்காலத்தில் ஒரு சொல்லே சொல்பனாயிருந்தான் எம்பெருமான். "ஒன்றேயுரைப்பான் ஒரு சொல்லே சொல்லுவான்" [பெரியாழ்திரு 2-6-4] என்று தன் உண்மையான தன்மையை அறியாத அவரைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்டானன்றோ அவன். "நாம் மனம்போனபடி பேசினால் அவள் உயிர்வாழ்ந்தால் வாழட்டும், அழிந்தால் அழியட்டும்" என்று அவன் உதா3ஸீனமாயிருப்பது எனக்கேயன்றோ. *(பாவியேன் தோன்றி)*

163. க்2யாத: ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞஶ்ச
ஸாநுக்ரோஶஶ்ச ராக4வ: ।
ஸத்3வ்ருத்தோ நிரநுக்ரோஶ:
ஶங்கே மத்3ப4ாக்3யஸங்க்ஷயாத் ॥ [ரா-ஸு 26-11]

---

n அவர் காலத்திலேதான் ஒரு வார்த்தையாயிருக்குமதுண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (ஒன்றேயித்யாதி3) அதாவது - எனக்கு இப்போது ப2லியாமையாலே அதுவும் வலியக் கவிபாடுவித்துக்கொண்டானாமித்தனை என்றபடி. அன்றிக்கே, என்னைத் தோன்றிப் பெரியாழ்வார் காலத்திலும் வார்த்தை இரண்டென்று தாத்பர்யாந்தரம் விவக்ஷித்து, ஆனால் அவரேயன்றோ 'ஸத்யவாதி3' என்றது என்ன அருளிச்செய்கிறார் (ஒன்றே) என்றுமாம். o முந்தின அர்த்த2த்திலே (ஜீவிக்கிலுமித்யாதி3) p ஆனால் இது வாஸ்

விலும் மீளுகிறதில்லை. g172. "न त्वा पश्यामि कौसल्ये" (ந த்வா பஶ்யாமி கௌஸல்யே) g$_2$ பெருமாள் முகத்திலே விழிக்கப்பெருதே, கைகேயி முகத்திலே விழித்ததால் வந்த தாபமெல்லாம் ஆறும்படி உன்னைக் காணவேணுமென்று ஆசைப்படாநின்றேன்; அது செய்யப்பெறுகிறிலேன். 172. 'साधु मा पाणिना स्पृश'' (ஸாது$_4$ மா பாணிநா ஸ்ப்ருஶ) இந்த்$_3$ரியங்கள்தான் நித்யாதீந்த்$_3$ரியவஸ்துக்களாகையாலே கார்யகல்ப்யமிறே. ரூபக்$_3$ரஹணபா$_4$வத்தாலே சக்ஷுரிந்த்$_3$ரியம் குடிபோய்த்ததென்றிருந்தேன்; த்வகி$_3$ந்த்$_3$ரியம் கிடந்ததோ இல்லையோவென்று ஸ்பர்ஶித்துப் பார்க்க

---

ராமனைத்தான் காணப்பெறவில்லை; அவனைப்பெற்ற பெருமையுடைய உன்னைக் கண்டாவது த$_4$ரிக்கலாமென்று பார்த்தால் இன்றளவும் என் கண் ராமனிடமிருந்து மீளவில்லையே. [*ந த்வா பஶ்யாமி கௌஸல்யே*—கௌஸல்யையே! உன்னைக் காண்கிறேனல்லேன்] ராமன் முகத்தில் விழிக்கப்பெருமல் கைகேயி முகத்தில் விழித்ததால் விளைந்த துன்பமெல்லாம் ஆறும்படி உன்னைக்காணவேண்டுமென்று ஆசைப்படுகின்றேன்; அது கிடைக்கவில்லையே. [*ஸாது$_4$ மா பாணிநா ஸ்ப்ருஶ*—என்னை உன் கையாலே நன்ருகத் தொடுவாயாக] என்னை உன் கையால் நன்ருகத் தடவிக்கொடு. ஸ்பர்ஶத்துக்கு உறுப்பான த்வகி$_3$ந்த்$_3$ரியமும் கண்ணைப்போலே என்னைவிட்டுச் செல்லவில்லையாகில், உனது கரஸ்பர்ஶபா$_4$க்$_3$யத்தையாவது பெறுகிறேன். இந்த்$_3$ரியங்கள் (*புலன்கள்*) எப்போதுமே புலன்களால் அறியத்தகாத பொருள்களாகையால், அவ்வவற்றின் கார்யங்களைக்கொண்டே அவையுள்ளதையோ இல்லாததையோ அறியவேண்டும். கண்ணுல் உன்னைப் பார்க்கமுடியாமையாலே கண் சென்றுவிட்டது என்றறிந்தேன், த்வகி$_3$ந்த்$_3$ரியம் இருக்கிறதோ இல்லையோ என்று நான் அறியலாம்படி நீ என்னைத்

---

g g$_2$ (கௌஸல்யே த்வாம் ந பஶ்யாமி) என்ருய், (ந பஶ்யாமி) என்று - இழவுபடுகைக்கும் காணவேண்டுகைக்கும் ஹேது ஏதென்ன அருளிச்செய்கிருர் (பெருமாள் முகத்திலே இத்யாதி$_3$).



வல்லையோ? 172. "साधु स्पृश" (ஸாது$_4$ ஸ்ப்ருஶ) "கைகேயியோடே க்ருதஸங்கேதனுய்ப் பெருமாளைக் காடேறப் போகவிட்டான்; 'அவர் கைகழியப்போனுர், இனிமீளார்' என்றறிந்தவாறே, பொய்யே கூத்தடிக்கிருன்" என்றிராதே, "இவனுக்கு இது ஸம்ஸர்க்க$_3$த்தாலே வந்தது; ஐயோ! என் செய்வான் பாவி அகப்பட்டான்" என்னும் நெஞ்சோடே கூட என்னை ஸ்பர்ஶிக்கவல்லையே.

h (நானேர் முதலிலேன்) i அவன் கூடவிருந்தால் போலேகாணும் இவளுக்குக் கண்ணுள்ளது. j விஷயத்தையுண்டாக்கிருல் ப்ரயோஜநமில்லை, கண்ணுண்டாய்க் காணவேணுமே. k 173. "चक्षुर्देवानां" (சக்ஷுர்தே$_3$வாநாம்) என்னக்கடவதிறே.

---

தொடமாட்டாயா? [*ஸாது$_4$ ஸ்ப்ருஶ*—நன்ருகத் தொடுவாய்] "கைகேயியோடே முன்னமே பேசிவைத்துக்கொண்டு ஸ்ரீராமனைக் காட்டுக்கு விரட்டிவிட்டான்; 'ராமன் காட்டுக்குப் போய்விட்டான். இனித் திரும்பிவரமாட்டான்' என்று அறிந்தவுடன் பொய்யாக வேஷம்போடுகிருன்" என்று நினைக்காமல் "இவனுக்கு இது ஸஹவாஸதோ$_3$ஷத்தாலே வந்தது; ஐயோ! என் செய்வான் பாவி, கைகேயி விரித்த வலையில் விழுந்துவிட்டான்" என்னும் நெஞ்சோடுகூட அன்புடன் என்னைத் தொடமாட்டாயா?

(*நானேர் முதலிலேன்*) எம்பெருமான் கூட இருந்தால்தான் இவளுக்குக் கண் இருக்கும்போலும்! நான் காண்பதற்காக அழகாகத் தோகை விரித்தாடுவதால் ஒரு பயனுமில்லை. கண்ணிருந்தாலல்லவோ அதைக் காணலாம்.

---

h.i கண்ணுண்டாயிருக்க "முதலிலேன்" என்பானென்? என்ன அருளிச்செய்கிருர் (அவன் கூட இத்யாதி$_3$) அதாவது - அவனை விஶ்லேஷிக்கையாலே கண்ணில்லை என்றபடி. j அன்றிக்கே, கண்ணுக்கு நிர்வாஹகனை வனைப் பிரிகையாலும் கண்ணில்லையென்கிருர் (விஷயத்தையித்யாதி$_3$) k கூட இருந்தால் கண்ணுண்டாய், பிரிந்தால் கண்ணில்லாமையாலே, அவன்தானே கண் என்றதாய், அவன் கண்ணே? என்ன அருளிச்செய்கிருர் (சக்ஷுர்தே$_3$வா

(குடமாடுகூத்தன்) அவன் l தன் ஸ்வரூபத்தை அந்யதா2பா4விப்பித்தது காணுங்கோள்; m என் ஸ்வரூபத்தை அந்யதா2பா4விப்பித்ததுமன்றியிலே தன்னை எல்லாரும் கண்டு அநுப4விக்கும்படி குடக்கூத்தாடினான்; கண்களையுமுண்டாக்கி விஷயத்தையும் காட்டினான்; தான் கூட நிற்கையாலே கண்ணுண்டாமிறே; தி3வ்ய சக்ஷுஸ்ஸையும் கொடுத்து வைஶ்வரூப்யத்தையும் காட்டினாற்போலே, தன்னங்க3ப4ங்கி3களை எல்லாருங்கண்டு அநுப4விக்கும்படி பண்ணினவன்.

n (கோவிந்தன் கோமிறைசெய்து) பசுக்களுக்கும் இடையர்க்குங்கூட ஸுலப4னானவன், ஸ்வதந்த்ரன் பண்

---

173. சக்ஷுர் தே3வநாமுத மர்த்யாநாம்

[யஜுர் கா.4, ப்ர.6, அநு 5.2]

[நித்யஸூரிகளுக்கும், மனிதர்களுக்கும் கண்ணாயிருப்பவன் பரமாத்மா.] என்கிறபடியே எனக்குக் கண்ணாயிருப்பவன் அவனன்றோ.

*(குடமாடுகூத்தன்)* குடக்கூத்தாடி தன் அவயவ அழகுகளை அனைவரும் கண்டு அனுப4விக்கும்படி செய்தவன். பரமபத3த்தில் எவரும் காணமலிருந்த அவன் தன் ஸ்வரூபத்தை மாற்றிக்கொண்டு அனைவரும் கண்டு அனுப4விக்கும்படி நாற்சந்தியிலே குடக்கூத்தாடினான். அப்படிச் செய்வதன்மூலம் நான் என்னுடைய பெண்மைக்குரிய நாணம் முதலானவற்றை இழக்கும்படி பண்ணினான். தான் கூட இருக்கையாலே அப்போது எனக்குக் கண் இருந்தது. தி3வ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்து அர்ஜுனனுக்கு விஶ்வருபம் காட்டினதுபோலே எனக்குக் கண்ணையும் கொடுத்து நான் கண்டுகளிக்கும்படி

---

நாம் இத்யாதி3) l (தன் ஸ்வரூபத்தை) தன்மேன்மையை. m "எம்மையுடைமாடுகொண்டான்" என்றத்தைப்பற்ற (என் ஸ்வரூபத்தை அந்யதா2பா4விப்பித்தது) என்றது. n "மிறை"-மிறுக்கு. "கோ" நிர்வாஹகனென்றபடி. o "மாடு"-த4நம். முந்தின அர்த்த2த்துக்கு, "உடை" அவ்யயம்;



ணும் மிறுக்கைப் பண்ணி; கோக்கள் பண்ணக்கடவ மிறுக்குக்களைப்பண்ணி. o (எம்மை இத்யாதி3) என்னுடைமையான த4நத்தைக் கொண்டானென்னுதல்; என்னுடைமையையும் த4நத்தையும் கொண்டானென்னுதல்; p என்னை ஸர்வ ஸ்வாபஹாரம் பண்ணினானென்னுதல். (உங்களுக்கு இனியொன்றுபோதுமே) q அவனல்லாத உங்களுக்கு என்முன்னே ஆடி நலிகை போருமோ? (இனி) அவன் குடக்கூத்தாடுவதற்கு முன்னே ஆடினிகோளாகிலன்றோ ப்ரயோஜநமுள்ளது; r சைதந்யம் நடையாடினால் பின் ஆடக்கடவதோ? அவனிற்

---

குடக்கூத்தும் ஆடினான். *(கோவிந்தன் கோமிறைசெய்து)* பசுக்களுக்கும் இடையர்களுக்குங்கூட எளியனானவன் ஸ்வதந்த்ரரான ராஜாக்கள் பண்ணும் மிறுக்கைப் பண்ணினான். கோவிந்தன் - பசுக்களை அடைந்திருப்பவன்; கோ - அரசன். மிறை - மிறுக்கு; துன்புறுத்துதல். *(எம்மை உடைமாடு கொண்டான்)* 'என் உடைமையான நிறம் முதலான செல்வத்தைக் கொண்டான்' என்றோ, 'நாணம் முதலான என் உடைமையையும், நிறம் வளை முதலான என் செல்வத்தையும் கொண்டான்' என்றோ, 'என்னுடைய எல்லாச் செல்வத்தையும் கொண்டான்' என்றோ பொருள்கொள்ளலாம். உடை என்று உடைமையைக் காட்டுகிறது; மாடு என்று செல்வம். 'உடைமாடு' என்று ஒரே சொல்லாய் முழுச்செல்வத்தையும் குறிக்கும். *(உங்கட்கு இனி ஒன்று போதுமே)* அவனைப்போலே துன்புறுத்துவது இயற்கையாயிராத உங்களுக்கு என்முன்னே ஆடி அவனை நினைவுபடுத்தித் துன்புறுத்துகை தகுமோ? *(இனி)* அவன் குடக்கூத்தாடுவதற்கு முன்னே ஆடியிருந்தீர்களானால்

---

"உடை" என்று-ஸாகல்யவாசி. p இரண்டாலும் ப2லித்ததை அருளிச்செய்கிறார் (என்னை ஸர்வஸ்வாபஹாரமித்யாதி3) q அவனல்லாத உங்களுக்கு— அவனைப்போலே, நலிகை ஸ்வபா4வமல்லாத உங்களுக்கு என்றபடி. ப்ராப்தியின்றிக்கேயிருக்கிற உங்களுக்கு என்றுமாம். r அவனாடினால் எங்களுக்கும் ஆடவொண்ணாதோவென்ன - அருளிச்செய்கிறார் (சைதந்யம் இத்யாதி3) சைதந்யம் உங்களுக்கு

காட்டிலும் உங்களுக்கு s ஒருவாசி வேண்டாவோ ? t பிறர் நலிந்தாரையும் நலியக்கடவிகோளோ ? 7.

பத்தாம் திருமொழி—எட்டாம் பாட்டு

மழையே ! மழையே ! மண்புறம் பூசியுள் ளாய்நின்ற
மெழுகூற்றி னற்போ லூற்றுநல் வேங்கடத் துள்நின்ற
அழகப் பிரானர் தம்மையென் னெஞ்சத் தகப்படத்
தழுவநின்(று) என்னைத் ததைத்துக்கொண்
டூற்றவும் வல்லையே.

பதவுரை:—**மழையே மழையே!**—ஓ மேகமே! **புறம்**—மேற்புறத்திலே, **மண் பூசி**—மண்ணைப் பூசிவிட்டு **உள்ளாய் நின்ற மெழுகு ஊற்றினல் போல்**—உள்ளே இருக்கும் மெழுகை உருக்கி வெளியில் தள்ளுமாபோலே, **ஊற்றும்**—என்னை அணைந்து உளளேயுள்ள உயிரை உருக்கி அழிப்பவராய், **நல் வேங்கடத்துள் நின்ற அழகப் பிரானர் தம்மை**—விலக்ஷணமான திருவேங்கடமலையிலே நிற்குமவரான அழகிய பெருமானை, **என் நெஞ்சத்து அகப்பட தழுவ நின்று**—என் நெஞ்சிலே ஸேவைஸாதிக்கிறபடியே நான் அணைக்கும்படிபண்ணி, **என்னை**—என்னை, **ததைத்துக் கொண்டு**—அவரோடே நெருக்கிவைத்து, (பிறகு) **ஊற்றவும் வல்லையே**—வர்ஷிக்கவல்லையோ ?.

---

உலகிலுள்ள மற்றுள்ளாரைப்போலே நானும் அதைக்கண்டு களித்திருப்பேனுகையால் அது பயனுடையதாய் இருந்திருக்கும். நான் கண்ணிழந்து நிற்கும் இப்போது ஆடி என்ன பயன் ? நான் படுகிற பாட்டைக் கண்டபின்பு, அறிவுடைய நீங்கள் என்முன்னே ஆடி என்னை மேலும் படுத்தலாமோ? பெண்ணின் வருத்தமறியாத அவனைக் காட்டிலும் உங்களுக்கு ஒரு வேற்றுமை இருக்கவேண்டாமோ ? முன்னமே அவனால் நலிவு பட்டிருக்கும் என்னை மேலும் நலியலாமோ? 7.

---

உண்டானல் என்றபடி. s,t வாசிவேண்டாவோ) என்றதின் கருத்தை அருளிச்செய்கிறர் (பிறர் நலிந்தாரையும் இத்யாதி$_3$) நலிவுபட்ட என்னை நலினக உங்கள் ஜ்ஞானத்துக்குப் போராது என்றபடி. 7.



அவ:— எட்டாம் பாட்டு. கண்ணால் கண்ட a பத$_3$ார்த்த$_2$ங்களையெல்லாம் ப$_3$ாத$_4$கமாக்கி, பின்னையும் விடாதே மேக$_4$ங்கள் நின்று வர்ஷிக்கப் b புக்கதாய்க்கொள்ளீர். c திருமலைநம்பி, இவ்விரண்டு பாட்டையும் ஆத$_3$ரித்துப் போருவராய் ; அவ்வழியாலே நம்முடையவர்கள் எல்லாரும் ஆத$_3$ரித்துப்போருவர்கள்; இப்பாட்டையும் மேலிற்பாட்டையும் அநுஸந்தி$_4$த்து. கண்ணும் கண்ணீருமாய் ஒரு வார்த்தையும் சொல்லாதே வித்$_3$த$_4$ராயிருப்பராம்.

வ்யா:—d (மழையே மழையே) இவ்வீப்ஸைக்குக் கருத்து-மேக$_4$ங்கள் தூ$_3$ரப்போமே, அவற்றுக்குச் செவிப்

---

8. *அவ:*— மேக$_4$ங்கள் மழைபொழிந்து காற்கோடல் முதலான பூக்களை மலரச்செய்தும், மயில்கள் முதலானவற்றை ஆடச்செய்தும், கண்ணால் கண்ட பொருள்களையெல்லாம் இவளை நலிகின்றவையாக்கி, பின்னையும் விடாமல் பொழியத் தொடங்கியதைப் பார்த்து எழுந்தது இப்பாட்டு. திருமலை நம்பி இப்பாட்டிலும் அடுத்தபாட்டிலும் மிகவும் ஈடுபடுவர். அதனாலேயே நம்முடைய பூர்வாசார்யர்கள் அனைவரும் இவற்றில் ஈடுபடுவர்கள். இப்பாட்டையும் அடுத்த பாட்டையும் அநுஸந்தி$_4$த்து, கண்ணும் கண்ணீருமாய் ஒருவார்த்தையும் சொல்லாதே ஈடுபட்டிருப்பராம் திருமலைநம்பி.

*வ்யா:*— *(மழையே மழையே)* மழை என்று மேக$_4$த்தைக் குறிக்கிறது. இரண்டு முறை அழைப்பது மேக$_4$ங்கள் மிக உயரமாகச் செல்லுமாகையாலே அவற்றுக்குச் செவிப்பட வேண்டும் என்னும் கருத்தாலே. *(மண்புறம் பூசி உள்ளாய் நின்ற மெழுகூற்றினற்போல் ஊற்றும்)* விக்$_3$ரஹம் வார்ப்பதற்

---

எட்டாம் பாட்டு. (மழை இத்யாதி$_3$) d "மழை" - மேக$_4$ம். a வர்ஷாகாலத்திலே மயில்கள் முதலானவை ஆலிக்குமாகையாலே (பத$_3$ார்த்த$_2$ங்களையெல்லாம் ப$_3$ாத$_4$கமாக்கி) என்றது. b "புக்கதாய்க்கொள்ளீர்" - புக்கதாக வேணும்போலே என்றபடி. வார்த்தைப்பாடு. c ஆர்த்

படும்படி கூப்பிடுகிறாள். (மண்ணணித்யாதி$_3$) மண்ணைப் புறம்பே பூசி மெழுகி உள்ளில் மொழுக்கை வெதுப்பி யூற்றுமாபோலே ஊற்றும், e உடம்பிலே அணைந்து அக வாய் குடிபோம்படி பண்ணுமவராய்த்து. (நல்வேங்கடத்துள் நின்ற) உங்களுக்குச் சென்று கூடிக்கொள்ளலாம்படி அணித்தாக நிற்கிறவர்.

(அழகப்பிரானார் தம்மை) என்னை இப்பாடு படுத்துகைக் கீடான f பரிகரத்தையுடையவர். g (என்னெஞ்சத்தகப்படத் தழுவ நின்று) நெஞ்சிலே ப்ரகாஶித்து. அணைக்கக்கோலிக்

---

காக அச்சு செய்பவர்கள் மெழுகாலே விக்$_3$ரஹத்தை உருவாக்கி அதற்கு வெளியிலே ஈரமண்ணைப்பூசி உள்ளே இருக்கும் மெழுகைச் சுடவைத்து வெளியே தள்ளுவதுபோலே மழை நீரை ஊற்றும். எம்பெருமான் என்னை அணைந்தது வெளியிலே ஈரமண்ணைப் பூசியதுபோலே இருந்தது. அதற்குப்பின் என் நெஞ்சை உருக்கி வெளியேற்றியது மெழுகைச் சுடவைத்து வெளியே தள்ளுவதுபோலேயிருந்தது. *(நல்வேங்கடத்துள் நின்ற)* உங்களுக்குச் சென்று அணுகலாம்படி நன்மையுடைய வேங்கடத்திலே அருகில் நிற்கிறவர்.

*(அழகப்பிரானார் தம்மை)* என்னை இப்பாடுபடுத்துவதற்கு உறுப்பான அழகாகிற கருவியையுடையவர். *(என்னெஞ்சத் தகப்படத் தழுவநின்று)* இப்போது போலே என் நெஞ்சிலே தோற்றி நான் அணைக்கவிரும்பிக் கையை நீட்டியவுடன் கைக்கு அகப்படாமையாலே வருத்தப்படாமல், நெஞ்சிலே தோற்றுகிறபடியே வெளியில்வந்து நான் அணைக்கும்படி பண்ணி. பா$_3$ணாஸுரனின் பெண்ணான உஷையையும்

---

த்யதிஶயம் தோற்றியிருக்கையாலே திருமலைநம்பி ஈடு பட்டிருப்பராம் என்றபடி.

e த்$_3$ருஷ்டாந்தத்தில் ஶிக்ஷித்த அர்த்த$_2$த்தை தா$_3$ர்ஷ்டாந்திகத்திலே காட்டுகிறார் (உடம்பிலே இத்யாதி$_3$) f (பரிகரம்)-அழகு. g "என்னெஞ்சத், தகப்படத் தழுவநின்று"



கையை நீட்டி அகப்படக் காணாமையாலே நோவுபடுகை யன்றிக்கே, நெஞ்சிலே ப்ரதிப$_4$ாஸிக்கும்படியே நான் அணைக் கும்படி பண்ணி. உஷையையும் அநிருத்$_3$த$_4$னையும் கூட விலங்கிட்டு வைத்தாற்போலே. (என்னைத் h தழைத்துக் கொண்டு) என்னை நெருக்கிக்கொண்டு. i (ஊற்றவும் வல்லையே) அப்போது இதுதான் தேட்டமாயிருக்குமிறே. 8.

## பத்தாம் திருமொழி—ஒன்பதாம் பாட்டு

கடலே! கடலே! யுன்னைக் கடைந்து கலக்குறுத்து
உடலுள் புகுந்துநின் றூற /லறுத்தவற்(கு) என்னையு
முடலுள் புகுந்துநின் றூற லறுக்கின்ற ||மாயற்(கு)என்
நடலைக ளெல்லாம் நாகணைக் கேசென் றுரைத்தியே.

பதவுரை:— **கடலே கடலே!** — ஓகடலே!, **உன்னை** — (தனக்குப் படுக்கையிடமாக வாய்த்த) உன்னை, **கடைந்து** — (மலையை இட்டுக்) கடைந்து, **கலக்குறுத்து** — கலக்கி, **உடலுள் புகுந்து நின்று** —(உனது) சரீரத்திலே புகுந்திருந்து,

---

கண்ணனுடைய பேரனை அநிருத்$_3$த$_4$னையும் ஒரே சிறையில் விலங்கிட்டு வைத்தாற்போலே, எங்களையும் வைக்கவேணும் என்று கருத்து *(என்னைத் தழைத்துக்கொண்டு ஊற்றவும் வல்லையே)* என்னை நெருக்கிக்கொண்டு ஊற்றமாட்டாயா? அப்போது அவனோடு கூடியிருக்கையாலே இது மிகவும் தேவையாயிருக்குமே. அவனைப் பிரிந்திருக்கும்போது ஊற்றி என்னை நலியாமல் அவனோடு என்னைக் கூட்டிவைத்து ஊற்றுவாயாக என்று மேக$_4$த்தை வேண்டுகிறாள். 8.

---

நெஞ்சிலே அகப்படும்படி பா$_3$ஹ்யத்திலும் தழுவும்படி பண்ணி என்றபடி. நெஞ்சிலே அகப்பட்டபடியே பா$_3$ஹ்யத்திலும் தழுவும்படி பண்ணி என்றபடியும். h "தழைத்துக்கொண்டு" - பா$_3$தி$_4$த்துக்கொண்டு என்றபடி. i " ஊற்றவும் " - வர்ஷிக்கவும். " தழுவநின்று என்னைத் தழைத்துக்கொண்டு — என்னெஞ்சத்தகப்படத் தழுவும்படி பண்ணிநின்று ஊற்றவும் வல்லையே " என்று க்ரியை. 8.

---

/ (பா) லறுத்தவர்க்கு. || (பா) மாயர்க்கு.

ஊறல் அறுத்தவற்கு — ஸாரமான அமுதத்தை அபஹரித்தவனாய், (அவ்வாறாகவே) என்னையும் உடலுள் புகுந்துநின்று— என் உடலிலும் புகுந்திருந்து, ஊறல் அறுக்கின்ற — என் உயிரை அறுக்குமவனான, மாயற்கு — எம்பெருமானுக்கு, (விண்ணப்பம் பண்ணும்படி) என் நடலைகள் எல்லாம் — என் து$_3$:க்க$_2$ங்களையெல்லாம், நாக அணைக்கே — அவர் படுக்கையான திருவனந்தாழ்வானிடத்தில், சென்று — நீ போய், உரைத்தியே — சொல்லுவாயா? (சொல்லவேணும் என்கை.)

அவ:— ஒன்பதாம் பாட்டு. அநந்தரத்திலே கடலானது ஓதங்கிளரத் தொடங்கிற்று.

வ்யா:— (கடலே கடலே) இங்கு a இரட்டிக்கிறதென்னென்னில்; இவள் ஒருகால் வார்த்தைசொன்னால் அது கேளாதே கே$_4$ாஷியாநிற்குமாய்த்து; அதின் த்$_4$வநி அபி$_4$பூ$_4$தமாய் மேலே கேட்கும்படி கூப்பிடுமாய்த்து. (உன்னைக் கடைந்து b கலக்குறுத்து) c நீ தான் என்செய்தாய்? d தூசித்

---

9. *அவ:—* கடலானது அலையெறியத் தொடங்கிற்று. "நான் படுகிற பாட்டை நாகணைக்குச் சென்றுரைப்பாயாக" என்றுரைக்கிறாள் அதைப் பார்த்து.

*வ்யா:—(கடலே கடலே)* இங்கு இரண்டுமுறை கூப்பிடுவது இவள் ஒருமுறை கூப்பிட்டால் அது காதில் விழாதபடி முழங்குமாகையாலே அதனுடைய முழக்கத்தையும் கீழ்ப்படுத்தி மேலெழுந்து கேட்பதற்காக என்று கொள்வது. *(உன்னைக் கடைந்து கலக்குறுத்து)* படுக்கையான உன்னையன்றோ கடை

---

ஒன்பதாம் பாட்டு. (கடல் இத்யாதி$_3$) a (இரட்டிக்கிறதென்னென்னில்) என்கிற ஶங்கைக்குத் தாத்பர்யம்;-கீழே மேக$_4$மாகையாலே ஸஞ்சாரித்வத்தைப்பற்ற இரட்டிப்புக் கூடும்; கடல் ஸ்த$_2$ாயியாய்க்கொண்டு ஆஸந்நவர்த்தியாகையாலே இரட்டிப்பு என்? என்று. c (நீதான் என் செய்தாய்) உபகாரமன்றோ பண்ணினாய் என்றபடி. d (தூசித்தலை



தலையிலே d$_1$ படையறுப்பாரைப்போலே உன்னையன்றோ நெருக்கிக் கடைந்து கலங்கப்பண்ணிற்று. படுக்கையென்று பாராதேயன்றோ நெருக்கிற்று. இடங்கொடுத்தார் நெஞ்சிலே கல்லை இட்டு நெருக்கிச் e சாறுபெறுத்துமவனன்றோ.

(உடலுள் புகுந்து நின்று f ஊறலறுத்தவற்கு) உன்னைப் படுக்கையாகக்கொண்டு, உன்னோடே அணைந்து, பின்னையும் உன்னை நெருக்கிக்கடைந்து, பசையறப் பண்ணினவனன்றோ? g அவன் இரந்தார் காரியமோ செய்

---

வதும் கலக்குவதும் செய்தான். நீ அவனுக்கு படுக்கையாயிருந்து உபகாரமன்றோ செய்தாய். முதல் யுத்$_3$த$_4$த்திலே படையை அழிப்பாரைப்போலே, உன்னையன்றோ மலையையிட்டு நெருக்கிக் கடைந்து கலங்கப்பண்ணினான். தன் படுக்கையாயிற்றே என்று பாராமலன்றோ நெருக்கினான். படுக்க இடம்கொடுத்தார் நெஞ்சிலே கல்லையிட்டு நெருக்கி அவரிடத்திலுள்ள ஸாரத்தையெல்லாம் எடுக்கிறவனன்றோ. என்னைப்போலே நீயும் அவனால் துன்புறுத்தப்பட்டவனாகையாலே என்கார்யம் செய்யவேணும் என்று கருத்து.

*(உடலுள் புகுந்துநின்று ஊறலறுத்தவற்கு)* உன்னைப் படுக்கையாகக்கொண்டு உன்னோடே அணைந்து அதற்குப் பின்பும் உன்னை நெருக்கிக் கடைந்து ஸாரத்தையெல்லாம்

---

யிலே படையறுக்கை)-ஸந்நாஹத்தோடே வந்த படையை முதலிலே ஸம்ஹரிப்பாரைப்போலே மஹத்தத்வமான உன்னையுங்கடைந்தது. d$_1$ இத்தால் தன் வார்த்தை கேட்கைக்காக, அதுக்கு அவன்பண்ணின நலிவைச் சொல்லுகிறாள் (படையறுப்பாரைப்போலே) என்று; ஸ்வகீயனாய் அநுகூலனானவனை விரோதி$_4$ப்பாரைப்போலே என்றபடி. b "கலக்கு உறுத்து"-மலையை உறுத்துக் கலக்கி. e (சாறு பெறுத்துகை)-ஸாரம் வாங்குகை; மூக்குச்சாரம் போடுகை என்றுமாம். f "ஊறல்" - ப்ராணன். g$_1$ சாடுவுக்கு "ஊறலறுக்கின்ற" என்றத்தைப்பற்ற கீழ் உக்த சாடு. g (அவன்

தது? (என்னையுமுடலுள் புகுந்துநின்று g ஊறலறுக்கின்ற) இவளையும் அணைத்தாய்த்து அகவாயில் பசையறுத்தது. h (மாயற்கு) இப்படி நெருக்கினானென்று பின்னையும் விடவொண்ணாதிருக்கை. (என் i நடலைகளெல்லாம்) நீ பட்டதெல்லாம் படாநின்றேன் காண் நானும்; போவது, வருவது, கண்ணுறங்காதொழிவது, கூப்பிடுவது, விடமாட்டாதொழிவதாய்ப் படாநின்றதிறே; இவளும் நிற்பது இருப்பதாய், விழுவது எழுவதாய் அரதியாயிறே படுகிறது. (நாகணையித்யாதி3) நீ அங்கே சென்று அறிவிக்கையிலுண்டான அருமையே! பின்னை நம்மாள் அங்கேயுண்டு. "நாகணை மிசைநம்பிரான் சரணே சரண்நமக்கு" என்றிறேயிருப்பது. 9.

---

எடுத்தவனன்றோ. அவனை யாசித்த தே3வர்கள் கார்யம் செய்வது என்பது வ்யாஜமாய், உன்னுடைய ஸாரத்தை எடுப்பதன்றோ அவனுடைய குறிக்கோளாயிருந்தது. (*என்னையும் உடலுள் புகுந்துநின்று ஊறலறுக்கின்ற*) என்னையும் அணைத்து நின்றுயிற்று என் ஸாரத்தை வாங்கினான். (*மாயற்கு*) இப்படி ஸாரத்தைக் கொள்ளைகொண்டான் என்னும் காரணத்தினால் விடவொண்ணாதபடி "கொடிய என்னெஞ்சம் அவனென்றே கிடக்கும்" [திருவாய் 5-3-5] என்கிறபடியே தன்னிடம் ஈடுபாட்டை விளைக்கும் ஆஶ்சர்யபூ4தனுக்கு. (*என் நடலைகள் எல்லாம்*) நான் பட்ட பாட்டையெல்லாம். நீ பட்ட பாடெல்லாம் நானும் பட்டேன்காண்! போவது, வருவது, இரவுபகலாகக் கண்ணுறங்காதொழிவது, கூப்பிடுவது, விடமாட்டாதொழிவதாய்ப் படாதபாடு படுகின்றதன்றோ கடல்.

---

இரந்தார்காரியமோ) என்றது - மேலுக்கு அவதாரிகை. "உடலுள் புகுந்துநின்று-உன்னைக்கடைந்து கலக்குறுத்து-ஊறலறுத்தவர்க்கு" என்று அந்வயம். h "மாயர்"-ஸௌந்த3ர்யாதி3களால் ஆஶ்சர்யபூ4தர். i "நடலை"-து3:க்க2ம். j திருவனந்தாழ்வானைப் புருஷகாரமாகப்பற்றினவிடமுண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (நாகணைமிசை இத்யாதி3). 9.



## பத்தாம் திருமொழி—பத்தாம் பாட்டு

**நல்லவென் தோழி! நாகணை மிசை நம்பரர்**
**செல்வர் பெரியர் சிறுமா னிடவர்நாஞ் செய்வதென்**
**வில்லி புதுவை விட்டுசித் தர்தங்கள் தேவரை**
**வல்ல பரிசு வருவிப்ப ரேலது காண்டுமே.**

**பதவுரை:— என் நல்ல தோழி!** — எனது உயிர்த் தோழியே!, **நாக அணைமிசை**—திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே சயனித்திருக்கிற, **நம் பரர்**—நம்பெருமாள், **செல்வர்**—பெருஞ்செல்வம் படைத்தவர்; **பெரியர்**—எல்லாரினும் மேற்பட்டவர்; **நாம்**—நாமோவென்றால் **சிறு மானிடவர்**—க்ஷுத்3ர மநுஷ்யராய் இராநின்றோம்; (இப்படிப்பட்ட நாம்) **என் செய்வது**—என்ன செய்யலாம்? **வில்லி புதுவை விட்டுசித்தர்**—ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வார், **தங்கள்தேவரை**—தமக்கு விதே4யராயிருக்கிற அப்பெருமானை, **வல்ல பரிசு**—தம்மால் கூடிய வழிகளாலே, **வருவிப்பரேல்**—அழைப்பராகில், **அது காண்டும்** — அப்போது (அவனை) நம் ஸேவிக்கப்பெறுவோம்.

**அவ:—நிக3மத்தில்,** (நல்லவித்யாதி3) k **தோழியானவள் இவள்தன்னிலுங்காட்டில் இழவுபட்டு, 'இவள் தனக்குப்**

---

இவளும் நிற்பது இருப்பதாய், விழுவது எழுவதாய்த் துன்பப்படுகிறாளன்றோ. (*நாகணைக்கே சென்றுரைத்தியே*) நாகணைக்கே சென்று உரைக்கமாட்டாயா? நீ அவனிடம்சென்று அணுகி அறிவிப்பது அரிய காரியமே; அணுகிவிட்டால் திருவநந்தாழ்வானாகிற நம் ஆள் சிபார்சுசெய்ய அங்கு இருக்கிறான். ஆகையால் நம் கார்யம் எளிதாகிவிடும் என்று கருத்து. "நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" [திருவாய் 5-10-11] என்று நம்மாழ்வாரும் திருவனந்தாழ்வானைப் புருஷகாரமாகப் பற்றினானன்றோ. 9

---

k நிக3மத்தில்; k இப்பாட்டிற் சொல்லுகிற பெரியாழ்வார் ஸம்ப3ந்த4ம், புருஷகாரத்வேநவும் ஸ்வதந்த்ரோபாய

பேற்றுக்குடலாக நினைத்திருப்பது இரண்டை;-பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பையும், அவன் "ஆநுகூல்யமுடையாரை விடேன்" என்ற வார்த்தையையுமாய்த்து. a$_{2}$ அதுதன்னிலேயும் அதிஶங்கை பண்ணாநின்றாள்;-இவள் ஜீவித்தாளாய்த் தலைக்கட்டுகைக்கு ஒருவழி கண்டிலோம்; எவ்வழியாலே இவளை த$_{4}$ரிப்பிப்போம்? என்றிருந்தாள்; அவளைப்பார்த்து, "நீ அஞ்சவேண்டாகாண், நமக்கு ஜீவிக்கைக்கொருகுவி ரகு கண்டேன் காண்" என்கிறாள்.

---

10. *அவ:—* இத்திருமொழியில் கடைசிப் பாட்டான இதில், இவளுடைய தோழியானவள் இவளைக்காட்டிலும் வருத்தமுற்று "இவள் எப்போதும் பேற்றுக்குக் காரணமாக நினைத்திருப்பது பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பும் 'அன்புடையாரை விடேன்' என்று அவன் சொல்லியிருக்கும் வார்த்தையுமாகிய இரண்டையுமேயாகும். 'குமரனார் சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே' [4] என்று அவ்விரண்டுமே எனக்குப் பேற்றை அளிக்குமோ? என ஐயமுறுகின்றாள் இவள், இவள் உயிர்வாழ்வதற்கு ஒருவழியும் தெரியவில்லை; எவ்வழியாலே இவளை வாழச்செய்வது?' என்று எண்ணினாள். முகக்குறியாலே அவளுடைய எண்ணத்தை அறிந்து "நீ அஞ்சவேண்டியதில்லை. நாம் வாழ்கைக்கு ஒரு வழியுண்டுகாண்; நம் ஐயரான பெரியாழ்வார் ஏதோ ஒரு வழியில் அவனை வருவித்துக் கொடுப்பார்காண்!" என்கிறாள் இப்பாட்டில்.

---

த்வேநவும் இரண்டு வகையாலும் தோற்ற வ்யாக்$_{2}$யாநம் பண்ணுகிறார் என்று கண்டுகொள்வது. a$_{2}$(அதுதன்னிலேயும் அதிஶங்கைபண்ணாநின்றாள்) என்றது-"குமரனார் சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே"[4] என்று - அவ்விரண்டிலும் அதிஶங்கை பண்ணாநின்றாள் என்றபடி. பெரியாழ்வார் வயிற்றிற்பிறப்பை, கீழே அதிஶங்கைபண்ணிற்று தன்னையிட்டு; இங்குத் தெளிகிறது அர்த்த$_{2}$ஸ்தி$_{2}$தியைப்பற்ற என்று தாத்பர்யம்.



வ்யா:— (நல்ல என்தோழி) என்னிலும் என்னிழவுக்கு நொந்திருப்பாய் நீயேயிறே. நாகணையித்யாதி$_{3}$ அநந்தஶாயியாய், b ஶ்ரிய:பதியுமாய், உயர்ந்தாரொருத்தராயிருக்கிறவரை, அதிக்ஷுத்$_{3}$ரராயிருக்கிற நம்மாலே செய்யலாவதுண்டோ? "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்று ஶரணம்புகவொருப்பட்டவர், அதுக்குறுப்பாக "அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கை உறைமார்பா" என்றும் "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றும்– தம் பேற்றுக்குடலாக நினைத்திருந்தவைதன்னையும் இழவுக்குடலாகச் சொல்லிக் கைவாங்கும்படி காணும் கண்ணுஞ்சுழலையிட்டபடி. (நாகணைமிசை) அநந்தஶாயியாயிருக்கைக்கு மேற்பட இல்லையிறே ஒருவனுக்கு ஏற்றத்துக்கு.

---

*வ்யா:— (நல்ல என்தோழி)* என்னைக்காட்டிலும் என் இழப்பைப் பார்த்து மிகவும் வருத்தப்படுபவள் நீயேயன்றோ. *(நாகணைமிசை நம்பரர் செல்வர் ...... செய்வது என்)* திருவனந்தாழ்வான் மேல் ஶயனித்திருப்பவராய், திருவின் நாயகராய், மிக உயர்ந்தவர் என்று ப்ரஸித்$_{3}$தி$_{4}$பெற்றவரை மிகத் தாழ்ந்தவரான நாம் என்ன செய்யமுடியும்? "அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" [திருவாய் 6-10-10] என்று ஶரணம்புக முற்பட்ட நம்மாழ்வார் "அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல்மங்கையுறை மார்பா!" [திருவாய் 6-10-10] என்றும், "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" [திருவாய் 5-10-11] என்றும் தமக்குப் பேற்றைப் பெற்றுத்தரும் புருஷகாரபூ$_{4}$தர்களாக அநுஸந்தி$_{4}$த்த பெரிய பிராட்டியாரும் திருவனந்தாழ்வானுங்கூடத் தான் பேறுபெருமலிழந்ததற்குக் காரணம் என்று சொல்லி ப$_{4}$க$_{3}$வத்$_{3}$விஷயத்தில் நின்றும் விலகிச்செல்லும்படியன்றோ இவள் விரகவேதனையாலே மயக்கமுற்றிருக்கிறாள். *(நாகணைமிசை நம் பரர்)* பர்யங்கவித்$_{3}$யையிலே பரமாத்மாவை அனந்தஶயனனாகக்

---

b(ஶ்ரிய:பதியுமாய்) அத ஏவ (உயர்ந்தாரொருத்தராய்) என்றபடி. c,d"நம்" என்ற ப்ரஸித்$_{3}$தி$_{4}$யை "பரர்" என்ற

c (நம்பரர்) அநந்யபரமான வாக்யங்களாலே ப்ரஸித்$_3$த$_4$மான பரத்வத்தையுடையவர். 174. "नारायणपरं ब्रह्म" (நாராயணபரம் ப்$_3$ரஹ்ம) இத்யாதி$_3$களில் சொல்லுகிறபடியே. (செல்வர்) ஸ்ரீய:பதிகள். d "அணவதரவணைமேல் பூம்பாவையாகம் புணர்வது" 175. "ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ" (ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ) என்கிறபடியே, ஆகையாலே (பெரியர்) நமக்கும் அவனுக்கும் பர்வத பரமாணுக்களோட்டை வாசிபோரும். (சிறுமானிடவர்)

---

கூறுகையாலே திருவனந்தாழ்வான்மேலே ஶயனித்திருப்பதற்கு மேற்பட ஏற்றத்தைத்தரும் பெருமை எவனுக்கும் இல்லையன்றோ.

*(நம்பரர்)* பரம்பொருளைக் குறித்து,

**174.** நாராயண பரம் ப்$_3$ரஹ்ம தத்வம் நாராயண: பர: ।
நாராயணபரோ ஜ்யோதிராத்மா நாராயண: பர: ॥
[தை-நா 11]

[நாராயணனே பரப்$_3$ரஹ்மம்; நாராயணனே பரம்பொருள்; நாராயணனே பரஞ்சோதி; நாராயணனே பரமாத்மா.] என்கிறபடியே நாராயண ஶப்$_3$த$_3$த்தைப் பலகால் படிக்கையாலே வேறு எவரையும் குறிக்கமாட்டாத வேதா$_3$ந்த வாக்யங்களிலே விளங்கிநிற்கும் மேன்மையையுடையவர். *(நம் செல்வர்)* திருவின் நாயகர் எனப்புகழ்பெற்றவர். "அணைவதரவணைமேல் பூம்பாவை ஆகம் புணர்வது"[திருவாய் 2-8-1] என்றும்.

**175.** ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ [பு ஸூ 2-5]

[பரமபுருஷனே! உனக்கு பூ$_4$மிதே$_3$வியும் லக்ஷ்மீதே$_3$வியும் பத்னிகள்] என்றும் இவர் திருவின் நாயகராகையாலே மிகப் பெரியவர் என்று உப$_4$யவேத$_3$ங்களும் உரைத்தனவன்றோ. *(பெரியர்)* இக்காரணங்களாலேயே மிகப் பெரியவர். நமக்கும்

---

பத$_3$த்துக்கு விஶேஷணமாகக் கீழே அருளிச்செய்து, "நம்-செல்வர்" என்று கூட்டித் தாத்பர்யம் (அணைவதித்யாதி$_3$). c (நம் பரர்) நம் - ப்ரஸித்$_3$தி$_4$. e திருவநந்தாழ்வான் அவ்



தே$_3$வயோநியிலே பிறந்து சிறிது அணையநிற்கையுமன்றிக்கே. e ப்ரா(அ)ஜ்ஞராய் அவனோடு அணையநிற்கையுமன்றிக்கே. அதிக்ஷுத்$_3$ரரான மநுஷ்யர். (நாம் செய்வதென்) முன்பே ஒரு வார்த்தை சொல்லி வைத்தார் என்றத்தைக்கொண்டு நம்மாலே அவரை வளைக்கப்போமோ?

f 'ஆனால் நாம் இழந்தேபோமித்தனையோ?' என்ன, நமக்கு இழக்கவேண்டாகாண்; 176. "त्वयि किञ्चित्समापन्ने किं कार्यं सीतया मम" (த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம்

---

அவருக்கும் அணுவுக்கும் மலைக்கும் உள்ள வேற்றுமையுண்டு. *(சிறுமானிடவர்)* தே$_3$வஜாதியில் பிறந்து அவனைச் சிறிது நெருங்கி நிற்கையுமல்லாமல், ஜ்ஞானிகளாயிருந்து அவனை நெருங்கியிருக்கையுமல்லாமல், பேரறிவாளராயிருந்தும் அறிவற்ற அசித்துப்போலே படுக்கையாயிருந்து அவனை அணைந்துநிற்கும் திருவனந்தாழ்வானைப் போலுமல்லாமல், இடக்கையும் வலக்கையும் அறியாதிருந்தும் அவனை அணைந்துநிற்கும் ஆய்ச்சிகளைப் போலுமல்லாமல் மிகத் தாழ்ந்த மனிதராயிருப்பவரன்றோ நாம். *(நாம் செய்வது என்)* "ஆஸ்ரிதர்களை ரக்ஷிப்பேன்" என்று முன்னமே அவர் ஒரு வார்த்தை சொல்லிவைத்தார் என்ற காரணத்தால் நம்மாலே அவரை நிர்ப்ப$_3$ந்தி$_4$க்கமுடியுமோ?

"அப்படியானால் நாம் ப$_4$க$_3$வத்$_3$விஷயத்தை இழந்துவிடவேண்டியதுதானோ?" என்று தோழிக்குக் கருத்தாகக்கொண்டு "நாம் இழக்கவேண்டிய அவஶ்யமில்லை;

**176.** த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம ।
ப$_4$ரதேந மஹாபா$_3$ஹோ ! லக்ஷ்மணேந யவீயஸா ।

---

வநுப$_4$வத்துக்குத் தண்ணீர்த் துரும்பாகவொண்ணாதென்று தன் ஜ்ஞானத்தை அமைத்து, அஜ்ஞனாய், அசித்$_3$வத்பரதந்த்ரனாயிருக்கையாலே (அஜ்ஞராய் அவனோடு அணைய நிற்கையும்) என்கிறது. "ப்ராஜ்ஞராய் அவனோடு அணைய" என்றும் பாட$_3$முண்டு. f பெரியாழ்வாரை... க$_4$டகத்வேந சொல்லுகிற பக்ஷத்திலே நோக்காக மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (ஆனாலித்யாதி$_3$)

ஸீதயா மம) என்றவனுக்குச் g சொல்லவேண்டுவதும் $g_2$ ஒரு விஷயமுண்டுகாண். h நீ பின்னையும் பேறறுக்குடலாக நினைத்திருந்ததென்? என்ன.— (வில்லியித்யாதி$_3$ – i தங்கள் தேவரை) j ஸர்வஸாத$_4$ாரணமாக இருக்கும் வஸ்துவென்று பற்றக்கடவதன்று; ஆசார்யனுக்கு விதே$_4$யம் அவ்வஸ்து;

---

ஶத்ருக்$_4$நேந ச ஶத்ருக்$_4$ந! ஸ்வஶரீரேண வா புந: ||

[ரா யு 41-4]

[நீண்ட கைகளையுடைய ஸுக்$_3$ரீவனே! உனக்கு ஏதாவது அவமானம் நேர்ந்ததாகில் ஸீதையால் எனக்கு என்ன பயன்? ப$_4$ரதனாலும், இளையவனான லக்ஷ்மணனாலும், சத்ருக்$_4$னனாலும் என்ன பயன்? சத்துருக்களை அழிப்பவனே! என்னுடைய ஶரீரத்தினால்தான் என்ன பயன்?] என்று கூறியவனுக்கு நாம் உணர்த்தவேண்டிய ஒருவிஷயம் உண்டுகாண்' என்கிருள் பாட்டின் பிற்பாதியாலே. "இந்நிலையிலும் நீ அவரைப்பெறுவதற்கு உபாயமாக நினைத்திருந்தது என்ன?" என்று தோழி கேட்கக் கூறுகிருள்—(*வில்லி புதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை...காண்டுமே*) தே$_3$வர்களுக்கும் அஸுரர்களுக்கும் பொதுவானவர் என்னும் ஆகாரத்தைவிட்டு நாம் அவரைப் பற்றுகிறோமல்லோம். "அனந்தன்பாலும்" [பெரியாழ் 5-4-8] என்கிறபடியே விஷ்ணுவைத் தம் மனத்தே

---

$g_3$ (ஒருவிஷயம்) மஹாராஜரைப்போலே அபி$_4$மதமான விஷயம்; பெரியாழ்வார். g (சொல்லவேண்டுவதும் ஒரு விஷயமுண்டுகாண்) என்றது "**विष्णुः चित्ते यस्य**" (**விஷ்ணு: சித்தே யஸ்ய**) என்றுகொண்டு, "அனந்தன்பாலும்" இத்யாதி$_3$ப்படியே - அவர்களையும் காற்கடைக்கொண்டு இவர் ஹ்ருத$_3$யத்திலே விரும்பி வர்த்திக்கும்படி அபி$_4$மதவிஷயமான பெரியாழ்வார் க$_4$டகத்வேந உண்டுகாணென்றபடி. h பெரியாழ்வாரை உபாயத்வேந சொல்லுகிற பக்ஷம் தோற்ற அவதாரிகை அருளிச்செய்கிருர் (பின்னையுமித்யாதி$_3$) e (அஜ்ஞராய் அணைந்தவர்கள் - இடைச்சிகள்) i j "தங்கள்" என்று விஶேஷிக்கிறதுக்குத் தாத்பர்யம் (ஸர்வஸாத$_4$ாரணேத்யாதி$_3$) இதெல்



அவன் வழியாலே நமக்குக் கிடைக்குமென்றிருக்க அடுக்கும். k ஸம்ப$_3$ந்த$_4$ம் நமக்கும் $k_2$ அவனுக்கும் ஒக்குமென்று நினைக்கலாகாது; l ஸம்ப$_3$ந்த$_4$ம் நித்யமாயிருக்கச்செய்தேயிறே இந்நாள்வரை கிடந்தது. "தங்கள் தேவரை" என்று-தன்னோடு உறவறுத்துப் பெரியாழ்வாரோடே சேர்த்துச்

---

கோயில்கொள்ளச் செய்திருக்கும் நம் ஆசார்யரான பெரியாழ்வார் இட்ட வழக்காயிருப்பவர் என்னும் ஆகாரத்தாலேயே அவரைப் பற்றுகிறோம் என்கிருள். பரமாத்மா ஆசார்யனுக்கு வசப்பட்டிருப்பவன். ஆசார்யன் ஸம்ப$_3$ந்த$_4$த்தாலே அவன் நமக்குக் கிடைப்பான் என்றே சேதனன் நினைத்திருக்க வேண்டும். நமக்கும் ஆசார்யனுக்கும் எம்பெருமானோடு ஶேஷஶேஷி ஸம்ப$_3$ந்த$_4$ம் ஒத்திருக்கும்போது நமக்குப் பேற்றுக்கு நடுவில் ஆசார்யன் வேண்டிய அவச்யமென்ன? என்று நினைக்கலாகாது. நமக்கும் எம்பெருமானுக்கும் உள்ள ஶேஷஶேஷி ஸம்ப$_3$ந்த$_4$ம் நித்யமாயிருந்தபோதிலும், நாம் இன்றுவரை எம்பெருமானைப் பெருமலிருந்தது ஆசார்யஸம்ப$_3$ந்த$_4$மில்லாமையாலன்றே. ஆகையால் ஆசார்யனைப் புருஷகாரமாகக்கொண்டே எம்பெருமானைப் பெறவேண்டும் என்ற ஶாஸ்த்ரார்த்த$_2$ம் இங்கு சொல்லப்படுகிறது. இப்படி ஆசார்யனைப் புருஷகாரமாக மாத்திரம் கொள்ளாமல் "தேவுமற்றறியேன்" [கண்ணி-2] என்று ஆசார்யநிஷ்டை$_2$யிலே ஊன்றியிருக்கும் சில மஹாத்மாக்கள் எம்பெருமானைக் காற்கடைக்கொண்டு ஆசார்யனையே உபாயமாக நினைப்பதுமுண்டு. தான் அந்த கோ$_3$ஷ்டி$_2$யில் சேர்ந்தவள் என்பது தோற்ற ஆண்டாள் 'தங்கள் தேவரை' என்று எம்பெருமானுக்குத் தன்னோடுள்ள உறவை அறுத்து, பெரியாழ்வாரோடே உறவுபடுத்திச் சொல்லுகிருள். பெரியாழ்வார் உகந்தவன் என்னும் காரணத்தாலேயேயன்றோ

---

லாம் புருஷகாரத்வபக்ஷத்திலே. j k (ஸர்வஸாத$_4$ாரணமாகவிருக்கும் வஸ்துவென்று பற்றக்கடவதன்று) என்ற வாக்யவிவரணம் (ஸம்ப$_3$ந்த$_4$மித்யாதி$_3$) $k_2$ (அவனுக்கும்)- ஆசார்யனுக்கும்; l அவனேபாதி நமக்கும் ஸம்ப$_3$ந்த$_4$முண்டோவென்ன அருளிச்செய்கிருர் (ஸம்ப$_3$ந்த$_4$ம் நித்யமா

சொல்லுகிருள். m பெரியாழ்வாருகந்தவரென்ருய்த்து உகந்தது; n த்ரிபுராதே$_{3}$வியார் வார்த்தையை நினைப்பது.

(வல்ல பரிசு வருவிப்பரேல்) ஒரு பூவையிட்டு வரப்பண்ணவுமாம்; ஒரு இசையைச்சொல்லி இசைவிக்கவுமாம்; கிழியை அறுத்து வரப்பண்ணவுமாம்; திருமஞ்சநத்தைச் சேர்த்து அழைக்கவுமாம்; திருக்குழல்பணியைச் சேர்த்து வைத்து அழைக்கவுமாம்; அன்றிக்கே, திருவந்திக்காப்பிட்டு

---

இவள் எம்பெருமானை உகந்தாள். எம்பெருமானுருடைய ஶிஷ்யையான த்ரிபுராதேவியார் என்ற அரசகுலப்பெண்மணியை ''நீங்கள் ஏன் மற்ற தெய்வங்களைத் தொழுவதில்லை'' என்று சிலர் கேட்க, ''எம்பெருமானுர் தொழாமையாலே தொழுவதில்லை; காடிச்சால் மூலையாகிற ஈஶான்ய தி$_{3}$க்கின் (வடகிழக்கு தி$_{3}$க்கின்) அதி$_{4}$பதியாகிற ஶிவனையும் எம்பெருமானுர் பற்றினுல் நாங்களும் பற்றுவோம்'' என்று பதில் கூறினுள். இவ்வைதிஹ்யமும் இங்கு நினைக்கத்தக்கது.

*(வல்ல பரிசு வருவிப்பரேல்)* பெரியாழ்வாரிடம் அவரை வரச்செய்வதற்குப் பல வழிகள் உண்டு; அவ்வழிகளில் ஏதேனுமொன்ருலே பெரியாழ்வார் அவரை வரப்பண்ணிருராகில் அப்போது நாம்அவரைப்பெற்றுப்போகிருேம். ''செண்பகப்பூச்சூட்ட வாராய்'' [பெரியாழ்-திரு2-7-1] என்று ஒரு பூவையிட்டும் அவரை அவர் வரச்செய்யக்கூடும். ''பல்லாண்டு பல்லாண்டு'' [திருப்பல்] என்று ஓர் இசையைச் சொல்லியும் அவரை வரச்செய்வாரவர். வேண்டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்தும் அவரை வரப்பண்ணுவார். திருமஞ்சனத்துக்கு உரிய த்$_{4}$ரவ்யங்களைச் சேர்த்து 'நாரணு நீராட வாராய்'' [பெரியாழ்-திரு2-4-1] என்று அழைத்தாலும் அவர் வந்தே தீரவேண்டும். குழல்வார வேண்டியவற்றைச் சேர்த்துவைத்து அழைத்தாலும் அவர்

---

யித்யாதி$_{3}$) m உபாயத்வபக்ஷே (பெரியாழ்வாருகந்தவரென்ருய்த்தித்யாதி$_{3}$) n த்ரிபுராதே$_{3}$வியார் ''காடிச்சால் மூலையில் தே$_{3}$வதையாகிலும், எம்பெருமானுர் பற்றினுல் எங்களுக்கும் அதுவேயமையும்'' என்ற வார்த்தை. ஃ$_{3}$(அதி



அழைக்கவுமாம்; ''வெண்ணெயளைந்த குணுங்கும்'' ''ஆனிரைமேய்க்க நீ போதி'' ''இந்திரனேடு பிரமன்'' இத்யாதி$_{3}$கள் அநேகமிறே. அன்றிக்கே, நான் தம்மை முன்னிட்டாற்போலே, தமக்குப் புருஷகாரமாவாரை முன்னிட்டு வரப்பண்ணவுமாம். (அது காண்டுமே) அவ்வழியாலே பெறக்கடவோம். 177. ''पितामहं नाथमुनिं विलोक्य प्रसीद'' (பிதாமஹம் நாத$_{2}$முநிம் விலோக்ய ப்ரஸீத$_{3}$) என்னுமாபோலே;

---

வந்தே ஆகவேண்டும். ''அந்தியம்போதிதுவாகும் அழகனே! காப்பிட வாராய்''[பெரியாழ்-திரு2-8-1] என்று கூப்பிட்டாலும் அவரால் வரமாட்டேன் என்று தட்டமுடியாது. ''வெண்ணெயளைந்த குணுங்கும்'' [பெரியாழ்-திரு 2-4] என்னும் பதிகத்தில் நீராடவும், ''ஆநிரை மேய்க்க நீபோதி'' [பெரியாழ் திரு 2-7] என்னும் பதிகத்தில் பூச்சூடவும், ''இந்திரனேடு பிரமன்'' [பெரியாழ்-திரு 2-8] என்னும் பதிகத்தில் காப்பிடவும் இதுபோல மற்றும் பல பதிகங்களில் மற்றும் பல காரியங்களுக்கும் பெரியாழ்வார் அவரை வரப்பண்ணிருரன்றே. இப்படி வருவிப்பதற்குப் பல வழிகளுண்டாகையாலே, ''வல்ல பரிசு'' என்கிருள். அன்றிக்கே, தான் அவரை முன்னிட்டாற்போலே, தமக்குப் புருஷகாரமான தம்மாசார்யரை முன்னிட்டு வரப்பண்ணுவதை ''வல்லபரிசு'' என்பதாகவும் கொள்ளலாம். *(அது காண்டுமே)* இப்படி ஏதேனும் ஒருவழியாலே அவரை வரச்செய்தாராகில் அவ்வழியாலே நாம் அவரைப்பெறுவது உறுதி.

**177. அக்ருத்ரிமத்வச்சரணுரவிந்த$_{3}$-**
**ப்ரேமப்ரகர்ஷாவதி$_{4}$மாத்மவந்தம் ।**
**பிதாமஹம் நாத$_{2}$முநிம் விலோக்ய**
**ப்ரஸீத$_{3}$ மத்$_{3}$வ்ருத்தமசிந்தயித்வா ॥**

[ஸ்தோ॰ர 65]

---

ஶங்கைபண்ணி என்றது - ''கொல்லையரக்கியை'' என்றவிடத்தில்; அங்கு - ஸ்வக$_{3}$தம்; இங்கு - பரக$_{3}$தம்). 10.

**ஜீயர் திருவடிகளே ஶரணம்.**

178. "𑌤𑍍𑌵𑌤𑍍𑌪𑌾𑌦𑌮𑍂𑌲𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇" (த்வத்பாத3மூலம் ஶரணம் ப்ரபத்3யே) என்று - ஶரணம் புக்குவைத்து, ப்ரபத்தி பண்ணினோம் நாமாகையாலே, அதுவும் போட்கனுகக் கூடு மென்று அக்குறைதீர, நாத2முநிகளை முன்னிட்டாற்போலே, இவளும் பெரியாழ்வாரை முன்னிடுகிறாள். 10.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

பத்தாம திருமொழி முற்றிற்று.

---

[என்னுடைய நடத்தையை நினையாமல், உன்னுடைய திருவடித் தாமரைகளில் இயற்கையாயிருக்கும் மேலான அன்பிற்கு எல்லைநிலமாயிருப்பவரும், ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்தவரும் எனக்குப் பாட்டனுருமாகிய நாத2முனிகளைப் பார்த்து எனக்கு அருள்புரியவேண்டும்.] என்று ஆளவந்தாரும், தம் பாட்டனுரும் பரமாசார்யருமான நாதமுனிகள் ஸம்ப3ந்த3த்தையிட்டே தமக்கு அருளவேண்டும் என்றாரன்றோ;

178. ந த4ர்மநிஷ்டோ2ऽஸ்மி ந சாத்மவேதீ3,
ந ப4க்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே3 ।
அகிஞ்சநோऽநந்யக3தி: ஶரண்ய!
த்வத்பாத3மூலம் ஶரணம் ப்ரபத்3யே ॥
[ஸ்தோ·ர 22]

[ஶரணமடையத் தகுந்த எம்பிரானே! அடியேன் கர்மயோக3த்தில் நிலைநின்றவனல்லேன்; ஆத்மஜ்ஞாநமுடையேனல்லேன்; உன் திருவடித்தாமரைகளில் ப4க்தியையும் உடையேனல்லேன். ஓர் உபாயமுமற்றவனும், வேறு புகலற்றவனுமான அடியேன் உன் திருவடித்தாமரைகளை உபாயமாக நிஶ்சயிக்கிறேன்.] என்று ஆளவந்தார் எம்பெருமானை நேரே ஶரணம்புகுந்து, "ப்ரபத்தி பண்ணினது நாமாகையாலே அதுவும் வலிமையற்றதாகக் கூடும்" என்று நினைத்து, அக்குறைதீர ஸ்தோத்ரத்தில் கடைசி ஶ்லோகத்தில் நாத4முனிகளை முன்னிட்டுப் பெற விரும்பியதுபோலே இவளும் பெரியாழ்வாரை முன்னிட்டுப் பெறவிரும்புகிறாள். 10.

பத்தாம் திருமொழி வ்யாக்2யான விவரணம் நிறைவுற்றது.



## பதினோராம் திருமொழி

### "தாமுகக்கும்" ப்ரவேஶம்

அவ:— அவர் இரண்டு வார்த்தை சொல்லாரென்றும், அதுதான் தப்பிற்றாகிலும் தப்பாததொன்றுண்டு;- நமக்குப் பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பானது நம்மைப் ப2லத்தோடே ஸந்தி4ப்பித்தல்லது விடாதென்றும் அத்4யவஸித்திருக்கச் செய்தேயும், அவன்றான் வந்து உதவக்கண்டிலள்; அர்ஜுநன் கையில் அம்புகளாலே உளைய ஏவுண்டு ஶரதல்பத்திலே கிடந்த ஸ்ரீபீ4ஷ்மரைப்போலே, ஸ்மாரகபத3ார்த்த2ங்களாலே போர நோவுபட்டுக்கிடக்கிற த3ஶையைக் கண்டு, "இவளுக்கு ஓடுகிறது இன்னதென்றறியவேணும்" என்று தாய்மார் தோழிமார் அந்யபரைகளாயிருப்பாரடையப் புகுந்து திரண்டுகிடக்க, அவர்களைப்பார்த்து,

---

## பதினோராம் திருமொழி—வ்யாக்2யான விவரணம்

### தாமுகக்கும் ப்ரவேஶம்

சென்ற திருமொழியில் "குமரனார் சொல்" (10-4) என்று அவர் இரண்டு வார்த்தை சொல்லாதவரென்றும் "வில்லி புதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அதுகாண்டுமே" (10-10) என்று "அவர் வார்த்தை தப்பினாலும் பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பு தப்பாது; அவர் ஸம்ப3ந்த4ம் நமக்குப் ப2லத்தை அளித்தே தீரும்" என்றும் உறுதிகொண்டிருந்தபோதிலும் அவன் உதவக்கண்டிலள்; அர்ஜுனன் கையில் அம்புகளாலே மர்மஸ்தா2னத்தில் அடிக்கப்பட்டு அம்புப்படுக்கையில் படுத்திருந்த ஸ்ரீபீ4ஷ்மரைப்போலே, எம்பெருமானை நினைவுபடுத்தும் பொருள்களாலே மிகவும் துன்புற்றுக்கிடக்கிற இவளது நிலையைக்கண்டு தாய்மார்களும் தோழிமார்களும் "இவள் எக்காரணத்தால் துன்புற்றிருக்கிறாள் என்று அறியவேணும்" என்று அவரவர் வேலையை விட்டு அனைவரும் இவள் முன்னே கூடியிருக்க, அவர்களைப்பார்த்து

a "நான் அத்4யவஸித்திருந்தபடி கண்டிகோளே, b என் த3சையிருந்தபடி கண்டிகோளே, c இவ்வளவிலே அவன் வந்துதவினபடி கண்டிகோளே, d அவன் ஸ்வப4ாவமிருந்த படி கண்டிகோளே" என்று இன்னுதாய், e பின்னையும் "தன்திறத்திற் பெண்களிலே சிலருக்கு உதவினவன் நமக்கு உதவாதொழிகிருனல்லன்" என்று வருந்தி ஒருபடி த4ரித்தாளாய்த் தலைக்கட்டுகிருள்.

பதினோராம் திருமொழி—முதல் பாட்டு

தாமுகக்கும் தங்கையில் சங்கமே போலாவோ?
யாமுகக்கு மெங்கையில் சங்கமு மேந்திழையீர்!
தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர்
ஆ!முகத்தை நோக்காரா லம்மனே! அம்மனே!

---

"பெரியாழ்வாரோடு ஸம்ப3ந்த4மே எனக்குப் பேற்றுக்கு உபாயம் என்று நான் உறுதிபூண்டிருந்தேன். எம்பெருமான் என்னுடைய வளைகள் கழலும்படி செய்துவிட்டான். நான் இருக்கும் தெருவழியாக வந்தும் எனக்கு உதவுகிருனல்லன். அவனே ஸீதாப்பிராட்டிக்காக உண்ணுது உறங்காது அரும் பாடுபட்டவன்" என்று வருந்தி வார்த்தை சொல்லி, மேலும், "என்னைப்போன்ற ருக்மிணிப் பிராட்டியை சிசுபாலனிடமிருந்து காப்பாற்றிக் கைப்பிடித்தவன் எனக்கும் உதவாமலிருக்க மாட்டான்" என்று கிலேசத்தோடே ஒருவாறு உயிர்த4ரித்து நிறைவுபடுத்துகிருள் இத்திருமொழியை.

---

அரு:—தாமுகக்கும் ப்ரவேசே; a"விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டும்" (10-10) என்றத்தைப்பற்ற (நான் அத்4யவஸித்திருந்தபடி) என்றது. b"கழல்வளையேயாக்கினர்"(2) என்றத்தைப்பற்ற (என் த3சையிருந்தபடி கண்டிகோளே) என்றது. c"இத் தெருவே போதாரே"(4) என்றதைப்பற்ற (இவ்வளவிலே) என்றது. d"உண்ணுதுறங்காது"(7) இத்யாதி3யைப்பற்ற (அவன் ஸ்வப4ாவமித்யாதி3) e"கண்ணுலம் கோடித்து"(9) இத்யாதி3யைப்பற்ற (பின்னையும்) என்றது.



பதவுரை:— ஏந்து இழையீர்!—ஆப4ரணங்களை அணிந்துள்ள மாதர்களே! **யாம் உகக்கும் எம் கையில் சங்கம்**—நான் உகந்து த4ரித்துக்கொண்டிருக்கிற என்கையில் வளைகள், **தாம் உகக்கும் தம் கையில் சங்கம் போலாவோ**—தான் உகந்து த4ரித்துக்கொண்டிருக்கிற தன் கையில் சங்கோடு ஒவ்வாதோ? **தீ முகத்து**—கொடிய முக2ங்களையுடைய, **நாக அணை மேல்** — திருவனந்தாழ்வானுகிற படுக்கையின் மேலே, **சேரும்** — பள்ளிகொண்டருளாநின்ற, **திரு அரங்கர்**—ஸ்ரீரங்க3நாத2ர், **முகத்தை**—(என்னுடைய) முக2த்தை, **நோக்கார் ஆல்**—நோக்குகின்றுரில்லையே; **ஆ!**—ஐயோ!; **அம்மனே! அம்மனே!!**—அந்தோ! அந்தோ!!.

**அவ:— முதற்பாட்டு.** (தாமுகக்கும் இத்யாதி3) a**"இவ்வவஸாத3த்தில் வந்து நீர் உதவாதொழிந்ததென்?" என்று கேட்டால்,** a2 **இன்னத்தாலேயென்று ந(த)மக்கு மறுமாற்றமாகச் சொல்லலாவதொன்றுண்டென்று நினைத்திருக்கி**

---

1. *அவ:*— தாய்மார்களையும், தோழிமார்களையும் பார்த்து "எம்பெருமான் செய்த செயல் நியாயமா?" என்று கேளுங்கள் என்கிருள். "'இவள் இப்படிப் பெருவருத்தப்படும்போது நீ வந்து உதவாமலிருப்பதற்குக் காரணமென்ன?' என்று நீங்கள் கேட்டால், இன்னகாரணம் என்று நமக்குப் பதில் சொல்லுவதற்கு ஒன்று உண்டு என்று நினைத்திருக்கிருரோ? கேளுங்கள்" என்

---

அரு:—முதற்பாட்டு. (தாமுகக்குமித்யாதி3) 'ஏந்திழையீர் - தாமுகக்கும் தங்கையிற் சங்கமே போலாவோ யாமுகக்கும் எம் கையிற் சங்கமும் - தீமுகத்து நாகணை மேற்சேரும் திருவரங்கர் - முகத்தை நோக்காரால் - ஆ அம்மனே அம்மனே" என்றந்வயம். ஸ்த்ரீகளைப் பார்த்து ந்யாயம் கேட்டதாயிருக்கிறது இப்பாட்டு. a பத3ங்களைக் கடாக்ஷித்துக்கொண்டு அவதாரிகை அருளிச்செய்கிருர் (இவ்வவஸாத3த்திலித்யாதி3.) a2 (இன்னத்தாலே) என்றது-

றாரோ, கேளிகோள். b என்னுகப்பில் குறையுண்டாயோ? $b_3$ தம் உகப்பில் குறையுண்டாயோ? தம்முடைய $b_3$ ரக்ஷணத்தில் குறையுண்டாயோ?, என்னுடைய $b_4$ ரக்ஷ்ய (ரக்ஷ்ண)ப$_4$ாவத்தில் குறையுண்டாயோ? எத்தாலே "நான் உதவிற்றிலன்" என்று சொல்லவிருக்கிறார்? c தம் கையில் குறையில்லை, என் கையில் குறையில்லை, இனி என் சொல்லுவதாக இருக்கிறார்?

வ்யா:— (தாமுகக்கும் இத்யாதி$_3$) d"ஸ்வதந்த்ரராயிருப்பார்தாம் தாம் நினைத்தது செய்து தலைக்கட்டுமத்தனை

---

கிறாள். "நான் அவரை உகந்திருப்பதில் உள்ள குறை காரணமா?" என்று பார்த்தால், என்னுடைய உகப்பில் ஒரு குறையுமில்லை. "தாம் என்னை உகந்திருப்பதில் உள்ள குறை காரணமோ?" என்று பார்த்தால், தம்முடைய உகப்பிலும் குறையில்லை. "தம்முடைய ரக்ஷணத்தில் குறையிருக்குமோ" என்று பார்த்தால் அதிலும் குறையில்லை. "நான் ரக்ஷிக்கத்தக்கவளாயிருப்பதில் உள்ள குறை காரணமோ" என்று பார்த்தால் அதிலும் குறையில்லை. இனி, தாம் உதவாமைக்கு என்ன காரணத்தைச் சொல்லுவதாக நினைத்திருக்கிறார்? எதுவுமில்லை என்று கருத்து.

*வ்யா:— (தாமுகக்கும் தம் கையில் சங்கமே போலாவோ யாமுகக்கும் எம் கையில் சங்கமும்)* தம் கையில் சங்கத்தைத்

---

என் குறையாலேயாதல்; தம் குறையாலேயாதல். b அவதாரிகையை விவரிக்கிறார் (என்னுகப்பில் குறையுண்டாயோ இத்யாதி$_3$.) (என்னுகப்பு;-வளையிழந்து அவன் வளையை ஆசைப்படுகை. $b_2$ (தம் உகப்பு) - என் வளையைக் கைக்கொள்ளுகை. $b_3$ (ரக்ஷணம்) கோயிலிலே சேருகை. $b_4$ (ரக்ஷ்ணப$_4$ாவம்) "முகத்தை நோக்காரால்" என்றிருக்கை. c இவற்றால் ப$_2$லிதத்தை அருளிச்செய்கிறார் (தங்கையில் இத்யாதி$_3$.)

d,e "தாமுகக்கும் தம் கையிற் சங்கமேபோலாவோ யாமுகக்குமெம் கையிற் சங்கமும்" என்றது - தம் கையிற்



யன்றோ?" என்று சொல்ல நினைத்திருக்குமதுவும் வார்த்தையல்ல; e "பரதந்த்ரராயிருப்பார், செய்தபடி கண்டிருக்குமத்தனையல்லது, நிர்ப்ப$_3$ந்தி$_4$க்கக் கடவர்களோ?" என்று நினைத்திருக்குமதுவும் வார்த்தையல்ல; f "நம் கையிலுள்ள தொன்றும் கொடோம், பிறர் கையிலுள்ளது கொள்ளக் கடவோம்" என்று நினைத்திருக்குமதுவும் வார்த்தையல்ல; g "வன்மையுடையார் செய்தபடி கண்டிருக்குமத்தனையன்றோ $g_2$ மென்மையுடையார்" என்று நினைத்திருக்கக்கடவரல்லர்.

---

தாம் உகக்குமாபோலேயன்றோ என் கையில் சங்குவளையையும் நான் உகப்பது. என் கையில் சங்கு வளையைத் தாம்கொண்டால் தம் கையில் சங்கத்தையாவது எனக்குத் தரவேண்டாமோ? என்று கருத்து. "நான் ஸ்வதந்த்ரன்; என் இஷ்டப்படி எது வேண்டுமானாலும் செய்வேன்" என்று பதில் சொல்ல நினைத்தாரானால் தாம் பரமப்ரணயியாகையாலே அதுவும் பொருந்தாது. "பரதந்த்ரையாயிருக்கும் நீ ஸ்வதந்த்ரனான நான் செய்தபடி கண்டிருக்கவேண்டுமேயொழிய நிர்ப்ப$_3$ந்தி$_4$க்கக்கூடாது" என்று பதில் சொல்ல நினைத்தாரானால் என்னுடைய ஆற்றாமையை அறியாமல் சொல்லும் வார்த்தையாகையாலே அதுவும் பொருந்தாது. "நம் கையில் இருப்பது எதுவும் கொடுக்க மாட்டோம். பிறர் கையில் இருப்பதைப் பறிப்போம்" என்று சொல்லநினைத்தாரானால் அது நியாயத்துக்கு முரணானதாகையாலே பொருந்தாது. "வன்மையுடைய ஆண்கள் என்ன செய்தாலும் மென்மையுடைய பெண்கள் பார்த்துக்கொண்டு பேசாமலிருக்கவேண்டியதுதான்" என்று சொல்லநினைத்தாரானால்

---

சங்கத்தைத் தாமுகக்குமாபோலேயன்றோ எம் கையிற் சங்கமும் யாமுகப்பதென்று அர்த்த$_2$மாய், "என் வளைகொண்டால் தம் வளைதன்னைத் தரவேண்டாவோ" என்று இவளுக்குக் கருத்தாக, அதுக்கு அவன் கருத்தை அநுவதி$_3$த்து உத்தரம் சொல்லுகிறார் (ஸ்வதந்த்ரராயித்யாதி$_3$ வாக்யத்$_3$வயத்தாலே) f,g கீழை விவரிக்கிறார் (நம் கையிலுள்ளதித்யாதி$_3$ வாக்யத்$_3$வயத்தாலே.) g (வன்மை)-புருஷஸ்வப$_4$ாவம் $g_2$ (மென்மை) - ஸ்த்ரீஸ்வப$_4$ாவம். h (அது பின்னை பிறர்க்

"உம்முடைய கையில் வளை நீர் கொடாதொழிகிறதென்?" என்று கேட்டால் "நானுகந்திருக்கையாலே" என்று சொல்ல நினைத்திருக்கிறாரோ?, h அது பின்னை பிறர்க்கில்லையோ?, i கையும் ஸ்ரீ பாஞ்சஜந்யமுமான அழகைப்போலேகாணும் இவள்தான் கணுக்கண்டு கிடக்கிறது; "நாமும் கணுக் கண்டு கிடப்பது j இத்தையன்றோ" என்று சொல்லவிறே அவரும் நினைத்திருப்பது. அது தமக்காகக் கண்டதோ? 70. "न ते रूपं-नायुधानि-भक्तानां" (ந தே ருபம்-நாயுத$_{4}$ாநி-ப$_{4}$க்தாநாம்) என்றன்றோ இருப்பது.

k (தாமுகக்கும் இத்யாதி$_{3}$) l "நாமுகந்தது நம் கையிலே கிடக்குமித்தனை; பிறருகந்ததும் நம் கையிலே கிடக்கு

---

மிக்க ஆற்றுமையையுடைய எனக்கும் இவரைப் பணியவைக்க மடலூர்தல் முதலான உபாயங்கள் என் கையிலுமுண்டு. "உம்முடைய கையில் உள்ள என் வளையை நீர் ஏன்கொடுக்க மறுக்கிறீர்" என்று கேட்டால் "நான் உகந்திருக்கையாலே" என்று சொல்லநினைத்தாரானால் "அதுபோலவே உம்கையில் சங்கத்தை நான் உகந்திருக்கிறேன்; அதை என்னிடம்கொடும்" என்று நான் கேட்கக்கூடாதோ? கையும் ஸ்ரீபாஞ்சஜன்யமும் சேர்ந்திருக்கும் அழகைக் காணவன்றோ இவள் எப்போதும் ஆசைப்பட்டிருப்பது. "நம்முடைய பாஞ்சஜன்யத்திடம் நமக்கும் ஆசையிருக்கிறதே; அதை எப்படி உன்னிடம் தருவது" என்று சொல்லநினைத்தாரானால் "அது உமக்காக ஏற்பட்டதோ? [229-ம் பக்கத்தில், 70-வது ப்ரமாணத்தின்படி] அது எங்களுடையதன்றோ.

*(தாமுகக்கும் எம் கையில் சங்கமே போலாவோ யாமுகக்கும் தம் கையில் சங்கமும்)* என்று கூட்டியும் பொருள்கொள்ளலாம். "நாம் உகக்கும் சங்குவளையும் நம் கையிலேயே இருக்கவேண்டும்; பிறருகக்கும் சங்கமும்

---

கில்லையோ) என்றது - உம்முடைய சங்கிலாசை எனக் கில்லையோ? என்றபடி. i இவள்தான் சங்கை ஆசைப் பட்டிருக்குமோ? என்ன அருளிச்செய்கிறார் (கையும் ஸ்ரீபாஞ்சஜந்யமுமித்யாதி$_{3}$) j (இத்தையன்றோ) - பாஞ்ச ஜந்யத்தையன்றோ.

1



மித்தனை. நாமுகந்ததும் கொடோம். பிறருகந்ததும் கொடோம்" என்று நினைத்திருக்குமது அழகோ?. உகந்தார் உகந்தது பெறுதல், உடையார் உடையது பெறுதல் செய்ய வேண்டாவோ?; உகந்தார் உகந்தது பெறும்போது தன் கையிலுள்ளவை என் கையிலே வரவேணும்; உடையார் உடையது பெறில் என் கையிலவை என் கையிலே கிடக்கவேணும், இரண்டும் ஸம்ஶ்லேஷத்தையொழியக் கூடாதிறே.

---

நம் கையிலேயேயிருக்கவேண்டும். நாமுகந்த வளையையும் கொடுக்கமாட்டோம். பிறருகந்த சங்கத்தையும் கொடுக்க மாட்டோம்" என்று நினைத்திருப்பது அழகோ? உகந்தவர்கள் உகந்ததைப் பெறுவதாகில் என் கையில்வளை உம் கையில் இருப்பதுபோலே உம் கையில் சங்கம் என்கையில் வரவேண்டும். உடையவர்கள் உடைமையைப் பெறவேண்டுமாகில் என்கையில் வளை என்னிடமேயன்றோ இருக்கவேண்டும். இவ்விரண்டும்— கூடியிருக்கும் நிலையிலேயே நடக்கக்கூடியதாகையால் ஸம்ஶ்லேஷம் *(கூடல்)* நடக்கவேண்டும் என்று பரமதாத்பர்யம்.

"நீ சங்கை ஆசைப்பட்டதாலன்றோ அவன் உன் வளையைக் கொண்டான்; இப்போது வெறுப்பதேன்?" என்று தோழிமார்

---

k,l இத்தால்-"எனக்கு இஷ்டமான என் கையில் வளை தாராவிட்டால், தமக்கு இஷ்டமான தம் கையில் வளையாகிலும் தரவேண்டாவோ" என்று இவளபேக்ஷிக்க, அவன் "ஸ்வாதந்த்ர்ய கார்யமான ப$_{3}$லத்தாலும், தன் வளையில் தனக்குண்டான ஆசையாலும் கொடோம்" என்றதுக்கு உத்தரம் சொன்னாளாய் நின்றது கீழ்; மேல் இரண்டா மர்த்த$_{2}$மருளிச் செய்கிறார் (தாமுகக்குமித்யாதி$_{3}$) l "தாமுகக்கும் - எம் கையில் சங்கமே போலன்றோ யாமுகக்கும்— தம்கையில் சங்கமும்" என்றந்வயித்து, "தாமுகந்த சங்கு கொண்டாராகில் நானுகந்த சங்கு தரவேண்டாவோ" என்று இவளுக்குக் கருத்தாக, அவன் கருத்தை அநுவதி$_{3}$த்து அதுக்கு உத்தரம் சொல்லுகிறார் (நாமுகந்தது நம் கையில் இத்யாதி$_{3}$).

m "வெள்ளை விளிசங்கிடங்கையில் கொண்ட விமலன்" என்று ஒரு சங்குபெற ஆசைப்பட்ட என்னை, "தான் கொண்ட சரிவளைகள்" என்று ஒரு ஜாதியாக இழக்கும்படி பண்ணுவதே!. n "ஈஶ்வரஜாதி" என்று ஒரு ஜாதி உண்டாகிலிறே தம் கையில் வளையோடு ஸஜாதீயமுண்டென்று சொல்லலாவது. o (தம்கையில் சங்கமேபோலாவோ யாமுகக்கும் எம்கையில் சங்கமும்) p தம் கையில் வளை ஆப4ரணமாய்த் தோற்றுகையாலே, அவன்கையில் ஸ்ரீபாஞ்சஜந்யமும் ஆப4ரணமாய்த் தோற்றுகிற. இத்தனையல்லது, ஆயுத4மாய்த் தோற்றுகிறதில்லை காணும் இவளுக்கு.

---

களும். தாய்மார்களும் கூற, "வெள்ளை விளிசங்கு இடங்கையில்கொண்ட விமலன்" [நாச்-திரு 5-2] என்று ஒரு சங்கு பெற நான் ஆசைப்பட்டதற்காக, "தான் கொண்ட சரிவளைகள்" [ஷை 8-5] என்று எனது வளைகள் அத்தனையையும் இழக்கும்படி பண்ணிவிட்டானே; 'அவனுகந்தது' என்று நினைத்து நான் த4ரித்திருப்பதற்குறுப்பாக ஒரு வளையைக்கூட என் கையில் விடவில்லையே என்கிறாள். "நீயும் அவன் கையில் சங்கம் அனைத்தையும் ஆசைப்படக்கூடாதோ?" எனில்; "ஈஶ்வரன் எப்படி அவன் ஒருவனேயாயிருக்கிறானோ, அப்படியே அவன் கையில் சங்கமும் ஒப்பற்றதாய், ஒன்றாகவேயிருக்கையாலே நான் பலவற்றை ஆசைப்படமுடியாதே" என்று கருத்து. *(தம் கையில் சங்கமே போலாவோ யாமுகக்கும் எம் கையில் சங்கமும்)* "அவன் கையில் சங்கம் ஆயுத4மன்றோ? அதை எப்படி ஆசைப்பட்டாய்?" எனில்; "என் கையில் வளைபோலே, அவன் கையில் சங்கமும் எனக்கு ஆப4ரணமாகவே தோற்றுகிறதாகையாலே, ஆசைப்பட்டதில் தவறில்லை" என்கிறாள்.

---

m நீ ஆசைப்படக்கொள்ளவன்றோ அவன் கொண்டது; உனக்கு வெறுப்பென்னென்ன அருளிச்செய்கிறார் (வெள்ளை விளிசங்கித்யாதி3). ஆசைப்பட்டவளவன்றிக்கே அதி4கமாகக் கொள்ளுகையாலே வெறுப்பு. n தாமும் அநேகத்தை ஆசைப்படவொண்ணாதோ? என்ன அருளிச்செய்கிறார் (ஈஶ்வரஜாதீத்யாதி3) o ஶங்காபரிஹாரம் பண்ணுவாராய், பதே3ாபாத3ாநம் பண்ணுகிறார் (தம் கையில் சங்கமேயித்யாதி3) p அது தி3வ்யாயுத4மன்றோ, அத்தை அபேக்ஷிப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (தம் கையில்வளையித்யாதி3)



q நாரீணாமுத்தமையாய் வளையிட்டாற்போலே, அவன் புருஷோத்தமத்வத்துக்கும் வளையிட்டானென்றிருக்கிறாளாய்த்து.

(ஏந்திழையீர்) ஏந்தப்பட்ட இழையையுடையீர்! - த4ரிக்கப்பட்ட ஆப4ரணத்தையுடையீர்! ப்ரளயத்திலும் தப்பிக் கிடப்பாரைப்போலே நீங்களெங்கே தப்பிக் கிடந்திகோள்? r 179. "मयूरस्य वने नूनं रक्षसा न हृता प्रिया" (மயூரஸ்ய வநே நூநம் ரக்ஷஸா ந ஹ்ருதா ப்ரியா) என்று இருவராயிருப்

---

*"நாரீணாம் உத்தமா வதூ4:"* என்று இவள் மங்கையர்திலகமாயிருப்பதற்கேற்ப வளையணிந்தாற்போலே, அவனும் புருஷோத்தமனாயிருப்பதற்கேற்ப சங்கத்தை ஆப4ரணமாக த4ரித்தான் என்று நினைத்திருக்கிறாளாயிற்று. *(ஏந்திழையீர்!)* ஏந்தப்பட்ட இழையை உடையீர்! - அணிந்துகொள்ளப்பட்ட அணிகலன்களை உடையவர்களே! நான் இப்பாடுபடுகையில், ப்ரளயத்திலும் அகப்படாமலிருப்பவர்களைப் போலே நீங்கள் எங்கேயிருந்து இவ்வாபத்திலிருந்து தப்பினீர்கள்? தான் அவனாலே வளையிழந்து கிடப்பதுபோலே இவர்களும் வளையிழந்து கிடக்க வேண்டியிருக்க, வளை முதலான அணிகலன்களை அணிந்திருப்பதைக் கண்டு வியப்புடன் வினவுகிறாள்.

**179. மயூரஸ்ய வநே நூநம் ரக்ஷஸா ந ஹ்ருதா ப்ரியா।**
**தஸ்மாந் ந்ருத்யதி ரம்யேஷு வநேஷு ஸஹ காந்தயா॥**
*[ரா-கி 1-40]*

[காட்டிலே ஆண்மயிலின் பிரியை ராக்ஷஸனால் அபஹரிக்கப்படவில்லை. அதனாலேயே அழகிய காட்டில் தன் மனைவியுடன் கூட நடனமாடுகிறது.] என்கிறபடியே ஸ்ரீராமபிரானும்

---

q ஆப4ரணமாய்த் தோற்றுகைக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச்செய்கிறார் (நாரீணாமித்யாதி3).

r தான் இழக்கையாலே எல்லாரும் இழந்ததாக நினைத்த பேருண்டோ? என்ன அருளிச்செய்கிறார் - **"मयूरस्य वने"** **(மயூரஸ்ய வநே)** இத்யாதி3; எல்லாரும் இழந்தாரென்றி

பாரையெல்லாம் பிரித்தானென்றிருந்தாரிறே பெருமாள்; அப்படியே "வளை கையில் தொங்கினார் ஒருவருமில்லை" என்றிருந்தாள்போலே காணும். நீங்கள் தப்பிக்கிடந்தபடி எங்ஙனே? என்கிறாள். அவனோடு கலந்து பிரிந்தபடியால் ப்ராதே$_3$ஶிகமாகமாட்டாதென்று தோற்றியிருந்ததாய்த்து. s ஆப$_4$ரணமிழந்தார் வழக்கு ஆப$_4$ரணம் பூண்டிருந்தார் பக்கலிலே கேட்குமித்தனையிறே; குறைவாளர் வழக்கு, குறைவற்றார் பக்கலிலேயிறே கேட்பது; யுவாக்கள் வழக்கு ஸந்யாஸிகள் பக்கலன்றே கேட்பது; யுவாக்கள் பக்கலிலேயிறே கேட்பதும். t "நீயும் சிலநாள் வைத்துக்கொண்டிரு" என்பார்

---

தாம் மனைவியை இழந்ததுபோலே காட்டிலுள்ள மயில்களும் தமது பேடைகளை இழந்திருக்கவேண்டியிருக்க இழக்காமலிருந்ததைக் கண்டு வியப்புற்றாரன்றோ; அப்படியே இவளும் கையில் வளை தங்கப் பெற்றவர்கள் எவரும் இல்லை என்று நினைத்திருந்தமையாலே "நீங்கள் இவ்வாபத்தை எப்படித் தப்பினீர்கள்?" என்கிறாள். ஸர்வலோக நாயகனான அவனோடு கலந்து பிரிந்தபடியால் உலகில் எவரும் வளையை இழக்காமலிருக்க முடியாது என்று இவளுக்குத் தோற்றியிருந்ததாயிற்று. ஆப$_4$ரணமிழந்தவர்கள் ஆப$_4$ரணம் பூண்டிருப்பவர்களிடமன்றோ குறையைத் தெரிவிக்கலாம்; குறைவாளர்கள் குறைவற்றாரிடமன்றோ குறையைத் தெரிவிக்கலாம். வாலிபர்கள் முற்றும் துறந்தவர்களிடமோ குறைப்பட்டுக்கொள்வார்கள்? தங்களோடொத்த வாலிபர்களிடமன்றோ குறைப்பட்டுக்கொள்வார்கள். "என்னுடைய சங்கத்தை அவன் பறித்துக்கொண்டுவிட்டான்" என்று குறை கூறினால் "அவனுடைய சங்கத்தை நீ சில நாள் வைத்துக்கொண்டிரு" என்று கூறுகிறவர்களிடம் முறை

---

ருக்கைக்கு ஹேது, தன்னிழவாலேயாதல்; அவனெடுப்பாலேயாதல். s இவர்களைக் கேட்பானென், வேறுசிலரைக் கேட்கவொண்ணாதோ? என்ன அருளிச்செய்கிறார் (ஆப$_4$ரணம் இழந்தாரித்யாதி$_3$) t ஸம்ஶ்லேஷமறியாதே "நீயும் சிலநாள் அவன் வளையைக் கொண்டிரு" என்பார் பக்கல் கேட்கவொண்ணாதென்றபடி.



பக்கலன்றே கேட்பது. ஆண்களோபாதியிறே இவளுக்கு ஓடுகிற த$_3$ஶையறியாமைக்கு இவர்களும்.

(தீயித்யாதி$_3$) இவர்களை விடீர்!; நம் த$_3$ஶையை அறிவானொருவனாய் வைத்து அவனுக்கு உடம்பு கொடுக்கிறவனைச் சொல்லீர். u விஶ்லேஷத்தால் வரும் வ்யஸநமறியானித்தனைபோக்கி, ஸம்ஶ்லேஷரஸம் அறியாமையில்லையே; v ஸம்ஶ்லேஷந்தான் நித்யமாயிருக்கச்செய்தேயும் பிரிந்தார் படுமது படுமவனாய்த்து. இப்படிப்பட்டவன்தான் அவனுக்கு முகங்கொடுக்கக்கடவனோ?, என்னையொழிய அவன் போ$_4$க$_3$த்திலே அந்வயிக்கப்புக்கால் போ$_4$கி$_3$யான

---

யிடுவதில் பயன் என்ன? இவள் படுகிற பாட்டை அறியாமையால் இவர்களும் ஆண்களைப் போன்றவர்களேயன்றோ.

*(தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர்)* இவர்கள் ஒருபுறமிருக்க நமது நிலையை அறிபவனாயிருந்தும் எம்பெருமானுக்கு உடம்பு கொடுத்துக் கொண்டிருக்கும் ஆதிஶேஷனை என்சொல்வது? அவன் பிரிவுத் துன்பத்தை அறியாவிடினும் கூடியிருப்பதின் சுவை அறிவனே; எப்போதும் கூடியிருந்த போதிலும் "பிரிவு ஏற்பட்டுவிடுமோ" என்று அஸ்தா$_2$நே ப$_4$யஶங்கைபண்ணி, பிரிந்தார்படும் துன்பத்தை அனுப$_4$விக்கும் தீமுகத்து நாகணையாயிருக்கையாலே பிரிவுத் துன்பமும் அறிவானே. இப்படிப்பட்டவனான அவன், எம்பெருமான் என்னைப் பிரிந்து தன்னுடைய போ$_4$க$_3$த்தில் (1. ஸர்ப்ப ஶரீரத்தில், 2. அநுப$_4$வத்தில்) தொடர்பு கொண்டால் போ$_4$கி$_3$யான (ஸர்ப்பமான) தான் உடம்பு கொடுக்கலாமோ? என்று கருத்து. திருவனந்தாழ்வானை "தீ முகத்து" என்று வெறுத்துச் சொல்லலாமோ? எனில், அவனைப் பெரியாழ்வாரைப் போலே நினைத்

---

u அவன் விஶ்லேஷது$_3$:க்க$_2$மே அறியானேயென்ன அருளிச்செய்கிறார் (விஶ்லேஷத்தால் இத்யாதி$_3$) v ஸம்ஶ்லேஷஸுக$_2$ம் அறிந்தால் விஶ்லேஷது$_3$:க்க$_2$ம் அறியும்படி எப்படியென்ன அருளிச்செய்கிறார் (ஸம்ஶ்லேஷந்தான் இத்யாதி$_3$) பிரிந்தார் படுமது படுமவனாயிருக்கையாலே

தான் உடம்பு கொடுக்கக்கடவனே? w பெரியாழ்வாரோ பாதியாகவிறே நினைத்திருப்பது. x தான் வெறுத்திருக்க, பிறந்தகத்துற்றார், புக்ககத்துற்றாரோடே கைவைத்தால் சொல்லுமாபோலே சொல்லுகிறாளிறே; y180. "பிதுர்நிதேஶ நியமேந க்ருத்வா" (பிதுர்நிதே$_3$ஶம் நியமேந க்ருத்வா); இவ்விடத்தில் வார்த்தையைச் சொல்லிக்கொள்வது.

---

திருக்கையாலே "நம்மை எம்பெருமானோடு சேர்க்கவேண்டிய இவன் அப்படிச் செய்யாமல் எம்பெருமானோடு உறவு கொண்டாடுகிறானே" என்னும் வெறுப்பாலே 'தீமுகத்து' என்கிறாள். ஓர் பெண்பிள்ளை தான் கணவனைப் பிரிந்து வெறுத்திருக்கும்போது பிறந்தகத்தைச் சேர்ந்தவர்கள் புக்ககத்திலுள்ளவர்களோடு உறவு கொண்டாடினால் அவர்களை வெறுத்து வார்த்தை சொல்லுவதுபோலே சொல்லுகிறாளன்றோ. பெரியாழ்வார் விஷயத்திலும் இவள் "தங்கள் தேவரை" என்று அருளிச்செய்தாளன்றோ.

**180. பிதுர்நிதே$_3$ஶம் நியமேந க்ருத்வா**
**வநாந் நிவ்ருத்தஶ் சரிதவ்ரதஶ்ச।**
**ஸ்த்ரீபி$_4$ஸ்து மந்யே விபுலேக்ஷணாபி$_4$ஸ்**
**த்வம் ரம்ஸ்யஸே வீதப$_4$ய: க்ருதார்த்த$_2$: ॥**

*[ரா-ஸு 28.84]*

[தந்தையின் ஆஜ்ஞையைச் சரியாகச் செய்து முடித்துவிட்டு, (ஆஶ்ரிதஸம்ரக்ஷணமாகிற) விரதம் முடியப்பெற்றவராய் வநத்திலிருந்து திரும்பி, ப$_4$யமற்றவராய், பயனடைந்தவராய்,

---

விஶ்லேஷது$_3$:க்கமும் அறியுமென்றபடி. w கீழ் "தீமுகத்து" என்று வெறுப்பாகச் சொல்லலாமோவென்ன அருளிச்செய்கிறார் (பெரியாழ்வார் இத்யாதி$_3$) x அவர் தம்மை வெறுத்ததேதுக்காக? என்ன அருளிச்செய்கிறார் (தான் வெறுத்து இத்யாதி$_3$) நான் ஈஶ்வரனோடே வெறுத்திருக்க, பெரியாழ்வார் அவனோடே கூடியிருக்கையாலே, "தங்கள் தேவர்" என்று அவனோடே கூட்டி வெறுக்கக்கூடும், அந்த ந்யாயம் இங்குமென்றபடி. y (பிதுர்நிதேஶம்) என்கிற வாக்யம் தெரியாது.



(தீமுகத்து) நொந்தாரை "ஐயோ!" என்று தண்ணளி பண்ண வேண்டியிருக்க எதிர்விழிக்கவொண்ணாதபடி நெருப்பை உமிழ்ந்தாற்போலே இராநின்றதாய்த்து. அவர் தமக்கும் இவனோடு ஒரு கு$_3$ருகுலவாஸம் பண்ணவேண்டியிருந்தது வெட்டிமைக்கு. அன்றிக்கே, தான் படுக்கையிலே சாயப்புக்கால் விரோதி$_4$ போக்குகைக்கு வேறோர் ஆயுத$_4$ந்தேடவேண்டாதபடி இருப்பானொருவனாய்த்து. உகவாதார்க்கு வந்து கிட்டவொண்ணாதபடியாயிருக்கை. கிட்டினாருண்டாகில், "வாய்ந்த மதுகைடவரும் வயிறுருகி மாண்டார்" என்று முடிந்துபோம்படி இருக்குமவனென்னுதல். (சேரும்) அவர்படி விஸஜாதீயமாய் இராநின்றது. இருவர்க்குப் படுத்த படுக்கையிலே தனியே சாயவல்லராவதே!

---

பெரிய கண்களையுடைய பெண்களுடன் நீர் விளையாடுவீர் என்று நினைக்கிறேன்.] என்று ஸீதாப்பிராட்டியும் இவ்வண்ணமே வெறுத்து அருளிச்செய்தாளன்றோ.

*(தீமுகத்து)* என்னைப்போல் வருந்துவாரைப் பார்த்து "ஐயோ" என்று கருணை காட்டவேண்டியிருக்க, முகத்தில் விழிக்கவொண்ணாதபடி நெருப்பை உமிழ்ந்தாற்போலே இருக்கின்றது இந்த நாகணை. *(சேரும் திருவரங்கர்)* கருணையின்மை விஷயத்தில் அவனும் இத்திருவனந்தாழ்வானோடு கு$_3$ருகுல வாஸம் பண்ணிக் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. அல்லது, இத்திருவரங்கர் படுக்கையில் ஶயனிக்கப் புகுந்தால் விரோதி$_4$களைப் போக்குவதற்கு வேறொரு ஆயுத$_4$ம் வேண்டாதபடி இத்திருவனந்தாழ்வானே விரோதி$_4$களை எரிக்கும் தீமுகத்தை உடையவனாயிருக்கிறான் என்றும் பொருள்கொள்ளலாம். என்னைப்போல் எம்பெருமானுடைய வெறுப்புக்கு இலக்காயிருப்பவர்கள் வந்து அணுக முடியாதபடி இருக்கிறான் இத்திருவனந்தாழ்வான் என்று கருத்து. அப்படி எவராவது அணுகினால் "ஏய்ந்த பணைக்கதிர் மேல் வெவ்வுயிர்ப்ப,—வாய்ந்த மதுகைடவரும் வயிறுருகி மாண்டார்" [மூன்றாம் திருவ 66] என்று அழிந்து போகும்படி இருப்பவன் என்று கருத்து. *(சேரும்)* இவ்வெம்பெருமானுடைய தன்மை உலக நடைக்கு மாறுபட்டதாயிருக்கின்

(திருவரங்கர்) ஆர்த்தரக்ஷணம் பண்ணப்போர்தவர் அத்தை மறந்து படுக்கை வாய்ப்புக்கொண்டாடி சாய்ந்துகிடந்து உறங்காநின்றார். இவ்வளவில் பரமபத$_3$த்திலே இருந்தா ரென்றுதான் ஆறியிருக்கிறேனோ ?

(ஆ) கெட்டேன் ! (முகத்துநோக்காரால்) பிரிந்தால் கழற்ற வேண்டுவது ப்ரணயித்வமன்றோ. கண்ணோக்கமும் தவிரவேணுமோ?. z (அம்மனே அம்மனே) பிரிந்து ஆற்றாத ஸமயத்திலே அநுஸந்தி$_4$த்தால் நா நீர்வரும்படி இருக்கு மவர், " புலி, ஸர்ப்பம் " என்றாற்போலே நினைக்கவும் ப$_4$யாவஹமாம்படியாவதே ! இவர் படி இருந்தபடியென் ? இவர் ஸ்வப$_4$ாவம் போய் வேறுபட்டபடியென் ?

---

றது. நாயகியான எனக்கும் இவருக்குமாக விரித்த படுக்கை யிலே தனியே படுக்கவல்லவராவதே! (*திருவரங்கர்*) வருந்தியவர் களைக் காப்பதற்காகத் திருவரங்கத்துக்கு வந்தவர் அதை மறந்து திருவனந்தாழ்வானாகிற படுக்கையின் மென்மை, குளிர்த்தி, நறுமணம் முதலானவற்றை விரும்பிப் படுக்கையிலே சாய்ந்து உறங்குகின்றாரே ! பரமபதத்திலிருந்து என்னைக் கைக்கொள் ளாமலிருந்தாலும் ஆறியிருக்கலாம். இங்கு வந்த பின்பும் என்னை உபேக்ஷித்திருப்பதே.

*(ஆ)* கெட்டேன் ! *(முகத்து நோக்காரால்)* பிரிவிலே நாயகன் தனது ப்ரணயித்வத்தை *(அன்புடைமையை)* கைவிட் டாலும் பொறுக்கலாம். கண்ணோக்கத்தையும் (1 கண்ணால் நோக்குவதையும், 2 கருணையையும்) கைவிடவேண்டுமோ ? *(அம்மனே அம்மனே)* இது ப$_4$யத்தை உணர்த்தும் சொல். பிரிவாற்றாமைக் காலத்தில் நினைத்தவுடன் நாக்கில் நீர் வரும்படி இனியராயிருப்பவர் "புலி, பாம்பு" என்றாற்போலே நினைத் தாலும் ப$_4$யத்தை விளைக்கும்படி ஆவதே! இவர் முன்பு எப்படி இருந்தார்; இப்பொழுது இப்படி வேறுபட்டுவிட்டாரே! இனிமை நீங்கப்பெற்று, ப$_4$யத்தை விளைப்பவராகிவிட்டாரே!

---

z "அம்மனே! அம்மனே!" என்று - ப$_4$யாவஹமான சொல்லு. 1.



181. "प्राप्तफलो हि भीष्मः" (ப்ராப்தப$_2$லோ ஹி பீ$_4$ஷ்ம:) என்று முடியுமளவில் முகத்திலே விழிக்கலாவதும் ஆண்களுக்காய்க் கொள்ளீர், 1.

### பதினோராம் திருமொழி — இரண்டாம் பாட்டு

எழிலுடைய அம்மனைமீர்! என்னரங்கத் தின்னமுதர்
குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில்
எழுகமலப் பூவழக ரெம்மானார் என்னுடைய
கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினரே.

பதவுரை:— **எழில் உடைய** — அழகையுடைய, **அம்மனை மீர்** — தாய்மார்களே! **அரங்கத்து** — திருவரங்கத்திலெழுந் தருளியிருக்கிற, **என் இன் அமுதர்** — என்னுடைய இனிய அமுதம் போன்றவராய், **குழல் அழகர்** — அழகிய திருக் குழற்கற்றையையுடையவராய், **வாய் அழகர்** — அழகிய திருவத$_4$ரத்தையுடையவராய், **கண் அழகர்** — அழகிய திருக் கண்களையுடையராய், **கொப்பூழில் எழு கமலப்பூ அழகர்** — திருநாபி$_4$யிலுண்டான தாமரைப்பூவாலே அழகு பெற்றவ ராய், **எம்மானார்** — எனக்கு ஸ்வாமியான அழகிய மண வாளர், **என்னுடைய** — என்னுடைய, **கழல்வளையை** — 'கழல் வளை' என்று இடுகுறிப்பெயர் பெற்ற கைவளையை, **தாமும்** — அவர்தாம், **கழல்வளையே ஆக்கினர்** — 'கழன்றொழி கிற வளை' என்று காரணப்பெயர் பெற்றவளையாக ஆக்கினார்.

---

**181.** யம் யோகி$_3$ந: ப்ராணவியோக$_3$காலே
யத்நேந சித்தே விநிவேஶயந்தி।
ஸ தம் புரஸ்தாத் ஹரிமீக்ஷமாண:
ப்ராணாந் ஜஹௌ ப்ராப்தப$_2$லோ ஹி பீ$_4$ஷ்ம: ॥
*[ப$_4$ார-ஶாந்தி 46-139]*

[எவனை யோகி$_3$கள் உயிர் போகும்போது முயற்சிசெய்து தம் நெஞ்சில் நிலைநிறுத்துகிறார்களோ, அந்த ஹரியைத் தன் கண்முன்னே கண்டுகொண்டே உயிரைவிட்டார் அந்த பீ$_4$ஷ்மர். அவரன்றோ பயன் பெற்றவர்!] என்கிறபடியே அந்திமகாலத்தில் முகத்தில் விழிக்கலாவது பீ$_4$ஷ்மரைப்போன்ற ஆண்களுக்குத் தான்போலும்! என்னைப்போன்றபெண்களுக்கு அல்லபோலும்!1.

வ்யா:— இரண்டாம் பாட்டு. a (எழிலுடைய அம்மனைமீர்) b ஆப4ரணமிழந்தார் வழக்கு ஆப4ரணம் பூண்டாரைக் கேட்குமித்தனையிறே என்றாற்போலே, எழிலிழந்தார் எழிலிழவாதாரைக் கேட்குமித்தனையிறே. (அம்மனைமீர்) c எழிலுண்டாக்கிக் காட்டவேண்டுமவர்களுக்கிறே எழிலிழந்தமை சொல்லுகிறது. தன் த3ைஶ இருந்தபடி.

அவ:— தன்னுடைய நிலையை மறைக்கவேண்டிய தாய்மார்களிடம் தனது நிலையைக் காட்டுகிறாள்.

வ்யா:— *(எழிலுடைய அம்மனைமீர்)* சென்ற பாட்டில் ஆப4ரணமணிந்தவர்களைப் பார்த்து ஆப4ரணமிழந்த தன் நிலையைச் சொன்னாள். இப்பாட்டில் அழகுடையவர்களைப் பார்த்து அழகிழந்த தன் நிலையைச் சொல்லுகிறாள். **(அம்மனைமீர்)** தான் அழகிழந்தமையை மறைத்து அழகை ஏறிட்டுக் காட்ட வேண்டிய தாய்மார்களுக்கும் தனது அழகிழந்த நிலையைச் சொல்லுகிறாளன்றோ. இவள் நிலை இப்படியாகிவிட்டது.

---

இரண்டாம் பாட்டு. (எழிலித்யாதி3) a "எழில்"-அழகு. b "எழிலுடைய அம்மனைமீர்" என்று - அவர்களுடைய எழிலுடைமை சொல்லுகிறதுக்குக் கருத்தேதென்ன அருளிச்செய்கிறார் (ஆப4ரணமிழந்தார்வழக்கு இத்யாதி3) அதாவது- கீழ்ப்பாட்டிலே தனக்கு ஆப4ரணமான சங்கு இழக்கையாலே, "ஏந்திழையீர்" என்றும், இங்கும் "எழிலுடைய" இத்யாதி3யாலே - அர்த்த2ாத் தன்னெழிலிழந்தமை ஸித்3த4மாகையாலே சொல்லுகிறது; c ஆனால் தாய்மாரோடே தான் எழில் இழந்தமை சொல்லலாமோ? என்ன அருளிச்செய்கிறார் (எழிலுண்டாக்கி இத்யாதி3) (எழிலுண்டாக்கிக் காட்டவேண்டுமவர்களுக்கிறே) என்றது - தான் எழிலிழந்தாலும் தாய்மார் கௌ3ரவ்யராகையாலே, எழிலிழந்தோமென்று காட்ட லஜ்ஜித்து எழிலுண்டாக்கிக் காட்டவேண்டுமவர்களுக்கிறே என்றபடி. அன்றிக்கே, "எழிலுண்டாக்கி" என்றது - தன் ப்ராவண்யம் தாய்மாருக்கு மறைக்கவேண்டியிருக்கச் சொல்லுகிறதென்றபடி.



d 182. "सौमित्रे शोभते पम्पा" (ஸௌமித்ரே ஶோப4தே பம்பா) என்னுமாபோலே. (என்) தே3வஜாதிக்குப் பொதுவான அம்ருதம் போலன்று; இவளுக்கு ஸ்வம்மான அம்ருதமாய்த்து. (அரங்கத்து) இது ஸ்வர்க்க3த்திலேயிருக்கும் அம்ருதமன்று. (இன்னமுதர்) ஶரீரத்துக்கு ஸ்தை2ர்யத்தைப் பண்ணிக்கொடுக்கும் அம்ருதமன்று.

(குழலழகரித்யாதி3) e கண்ணாலே பருகும் அம்ருதம். f அம்புக்கு நேர்நிற்கவொண்ணாதாப்போலே, நோக்குக்கு

---

**182. ஸௌமித்ரே ஶோப4தே பம்பா வைதூ3ர்யவிமலோத3கா।**
**பு2ல்லபத்3மோத்பலவதீ ஶோபி4தா விவிதை4ர் த்3ருமை:॥**
[ரா-கி 1-3]

[லக்ஷ்மணா! வைடூ3ர்யத்தைப்போலே பரிஶுத்3த4மான ஜலத்தையுடையதாய், மலர்ந்த தாமரை, நீலோற்பலம் ஆகிய புஷ்பங்களையுடையதாய், பல மரங்களால் பிரகாசிப்பதாயுள்ள பம்பாநதி3யானது மிக விளங்குகிறது.] என்கிறபடியே மறைக்கவேண்டிய இளையபெருமாளிடம் ஸ்ரீராமபிரானும் தனது பிரிவாற்றாமையை வெளியிட்டாரன்றோ. *(என்னமுதர்)* தே3வர்களுக்குப் பொதுவான உப்புச்சாறான அமுதம் போலன்று எனக்கு உரிய அமுதமான இவர் என்றபடி. *(அரங்கத்து அமுதர்)* இது ஸ்வர்க்க3த்திலே இருப்பதன்று; அரங்கத்திலேயிருப்பது. *(இன்னமுதர்)* ஶரீரத்துக்கு உறுதியைப் பண்ணிக்கொடுக்கும் அந்த அம்ருதமன்று; உயிருக்கு உறுதியைப் பண்ணிக்கொடுக்கும் ஆனந்த3ாம்ருதம் இது.

*(குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில் எழுகமலப் பூவழகர்)* வாயாலே பருகும் தே3வாம்ருதத்தைக் காட்டிலும்

---

d அப்படி மறைக்கவேண்டும் விஷயத்திலும் ஆற்றாமையாலே ஸ்வத3ஶையைச் சொன்ன பேருண்டோவென்ன அருளிச்செய்கிறார் **182. "सौमित्रे" (ஸௌமித்ரே)** இத்யாதி3.

e வாயாலே பருகும் அம்ருதத்தை வ்யாவர்த்திக்கைக்காக. (கண்ணாலே பருகுமம்ருதம்) என்று. f "கண்ணழகர் - குழ

நேர்நிற்கவொண்ணுமே திருக்குழலிலே ஒதுங்கினுள்; அது வாய்கரையிலே போர வீசிறறு; அதுக்குத் தோற்றுத் திருவடிகளிலே விழப்புக்கவாறே, நடுவே வயிறு பிடியாய்த்துக் காணும்; நடுவே வழிபறித்தது திருநாபீ4கமலம்; g காமிநியிறே. (எம்மாஞர்) h 183. ''जितन्ते'' (ஜிதந்தே) என்னுமா

---

மிகச் சிறப்புற்றிருப்பது கண்ணுலே பருகும் இவ்வமுதம் என்று காட்டுகிருள். அர்த்த2ஸ்வாரஸ்யத்தைக் கருதி "கண்ணழகர், குழலழகர், வாயழகர், கொப்பூழில் எழுகமலப் பூவழகர்'' என்று கூட்டிப் பொருள்கொள்ளவேண்டும். அம்புக்கு நேர்நிற்க இயலாததுபோலே திருக்கண்நோக்குக்கு நேர்நிற்க இயலாமல் திருக்குழலைப் பார்க்க முற்பட்டாள்; திருக்குழலின் அலை வாய்கரையிலே (கரைபோலிருக்கும் வாயிலே) கொண்டு தள்ளிற்று. அவ்வாயழகால் வெல்லப்பட்டுத் திருவடிகளிலே விழமுற்பட, நடுவிலே வயிறுபிடியாயிற்று. அதாவது—கொப்பூழில் எழிகமலப்பூவழகு இவள் கண்ணைக் கொள்ளைகொண்டது. காதல் வயப்பட்டவளாகையாலே ஸ்வரூபகு3ணங்களில் ஈடுபடாமல் திருமேனியழகுகளிலே ஈடுபடுகிருள். *(எம்மாஞர்)* இப்படி அழகைக் காட்டி என்னை எழுதிக்கொண்டவர்.

**183. ஜிதந்தே புண்ட3ரீகாக்ஷ நமஸ்தே விஶ்வப4ாவந।**
**நமஸ்தேऽஸ்து ஹ்ருஷீகேஶ மஹாபுருஷ பூர்வஜ॥**

[ஜிதந்தே 1]

[செந்தாமரைக்கண்ணு! உன்னுல் (இவ்வாத்மவஸ்து) ஜயிக்கப்பட்டது; *(இது)* என்னுடையதல்லவே; உன்னுடையதாயிற்றே. உலகையெல்லாம் உண்டாக்கினவனே! இந்திரியங்

---

லழகர்-வாயழகர்'' என்று அந்வயம். இருந்தபடியே அர்த்த2மருளிச்செய்யாமல், கண்ணை முன்னுகச் சொல்லுகிறது அர்த்த2ஸ்வாரஸ்யத்தைப்பற்ற. g ஸ்வரூபகு3ணமிருக்க, விக்3ரஹகு3ணத்திலேயிழிவானென்னென்ன அருளிச்செய்கிருர் (காமிநியிறே) என்று. h, i (வார்த்தையல்ல) **(ஜிதந்தே)** இத்யாதி3வத், அழகுக்குத்தோற்று ''எம்மாஞர்'' என்கிருளென்று பூரிப்பது.



போலே, ஸ்வாப4ாவிகமான ஶேஷித்வத்துக்குத் தோற்றுச் சொல்லுகிற i வார்த்தையல்ல.

(என்னித்யாதி3) j ''எழில்கொண்டார்'' என்று அவர்க்கு இத்தை எங்ஙனே நாம் குற்றமாகச் சொல்லும்படி? ப்ரணயித்வத்தில் k ஏதேனும் தப்பநின்ருராகிலன்ரூ நம்மால் அவர்க்குக் குற்றஞ்சொல்லலாவது; l ஏககண்ட2ரானவர்க்கு நாம் என்ன குற்றம் சொல்லுவது? m அவர் பிரிந்தாலும்

---

களை நியமிப்பவனே! கொடுப்பதில் சிறந்தவனே! (இவ்வாத்மவஸ்து) எனக்காகை தவிர்ந்து உனக்கேயாகவேணும்.] என்று கண்ணழகுக்குத் தோற்றதுபோலே இவளுடைய இவ்வார்த்தையும் எம்பெருமானுடைய இயல்பான ஶேஷித்வத்துக்கு (தலைமைக்கு)த் தோற்றுச் சொல்லும் வார்த்தையாயிராமல் அழகுக்குத் தோற்றுச் சொல்லும் வார்த்தையாயிருக்கிறது.

*(என்னுடைய கழல்வளையைத் தாமும் கழல் வளையேயாக்கினரே)* ''இழ் எழிலுடைய அம்மனைமீர்'' என்ற இடத்தில் ''என்னுடைய எழிலைக் கொண்டார்'' என்று அவன்மேல் குற்றம் சொன்னேன். உண்மையில் அவர்மேல் குற்றமிருப்பதாகத் தெரியவில்லை. அவர் அன்பிலே குறைவுடையவராயிருந்தாலன்ரூ நாம் அவர்மேல் குற்றம் சொல்லலாம். நம்மோடு ஒத்த மனத்தினராய் அவர் இருக்கும்போது நாம் என்ன குற்றம் சொல்லுவது? அவர் பிரிந்தாலும் கழலாதபடி திண்மையையுடைய கழல்வளையைத்தேடி அணிந்துகொண்டோம் நாம். ''கழல்வளை'' என்று இடுகுறிப் பெயர்பெற்ற அக்கை வளையை ''கழன்ருழிகிற வளை'' என்று காரணப்பெயர் பெற்ற வளையாக ஆக்குவதன்மூலம் அதன் பெயரை மெய்யாக்கிஞர். பிரிந்தபோதும் கழலாமல் கையில் தங்கும் கழல்

---

j எழில்கொண்ட மாத்ரமன்றிக்கே வளையும் கழலப் பண்ணுகையாலே வ்யங்க்3யமாகச் சொல்லுகிருள் (எழில் கொண்டாரித்யாதி3) k (ஏதேனும் தப்பநின்ருர்) என்றது-வ்யங்க்3யம்; l (ஏககண்ட2ர்) என்றதும் - வ்யங்க்3யம். m இத்தைக் காட்டுகிருர் (அவர் பிரிந்தாலுமித்யாதி3) ''கழல்வளை'' என்றது - ''வெள்வளை'' என்னுமாப்போலே

**கழலாதபடி திண்ணிய வளை தேடியிட்டோமானேம் நாம். அவர் இதினுடைய நாமத்தை n மெய்யாக்கினர். விஶ்லேஷத்திலும் o தொங்கும் வளை தேடியிட்டோமானேம் நாம்; அவர் ஒரு க்ஷணமும் தொங்காதபடியாக்கினர். p "தாமும்" என்ற அழகு பாரீர்; q இது அங்கும் ஏறப் பெற்றதில்லை; அவர் கையில் வளை கழன்றதாகில் இவள்**

---

வளையைத் தேடியிட்டோம் நாம். அவர் ஒரு கணமும் கையில் தங்காத கழல்வளையாகவே அதை ஆக்கிவிட்டார். இதில் அவர்மேல் குற்றம் சொல்ல என்ன இருக்கிறது? "தாமும்" என்ற உம்மையினலே தம்மோடு ஒத்த மனத்தினர் என்று உணர்த்தும் அழகு காணத்தக்கது. தம்முடைய வெறுப்பை மறைத்து எதிர்மறையாகச் சொல்லுகிறபடியிது. "என்னுடைய கழல்வளை" என்கையாலே தம்முடைய வளை கழலப் பெற்றதில்லையே என்ற வெறுப்பு தோற்றுகிறது. அவர் கையில் வளை கழன்றதாகில், அவருடைய ஆற்ருமையை

---

வளைக்குப் பேரென்றருளிச்செய்வர். n (மெய்யாக்கினர்) என்றது **"न नामतः केवलमर्थतोऽपि" (ந நாமத: கேவலமர்த்த$_2$தோऽபி)** இதிந்யாயேந யோக$_3$ரூட$_4$மாக்கினரென்றபடி. o விவரணம் (தொங்கும் வளையித்யாதி$_3$) இத்தால் தாத்பர்யம் - விஶ்லேஷஸமயத்தில் வளையைக் கழலப்பண்ணி, அவ்வழியாலே தன்பக்கல் எனக்கு ப்ராவண்யமுண்டென்று எல்லாருமறியும்படி பண்ணினராகையாலே நம்மோடு ஏககண்ட$_2$ரென்றபடி.

p நான் கழலாதே இட்ட வளையைக் கழலப்பண்ணின னென்ருல் ச$_2$லம் பண்ணினனென்று அர்த்த$_2$மாகவுங் கூடுமாயிருக்க, ஐககண்ட்$_2$யத்துக்குடலாகச் சொல்லுகைக்கு நியாமகமேதென்ன (தாமும் என்ற அழகு பாரீர் என்கிருர்) "தாம் கழல்வளை" என்னலாயிருக்க, "தாமும்" என்று ஈடுபாடு தோற்றச் சொல்லுகையாலே என்று தாத்பர்யம். q அன்றிக்கே, என்னுடைய கழல்வளையையே தாம் கழல்வளையாக்கினரென்ருய், வெறுப்பிலே தாத்பர்யம்



**கையில் வளை தொங்குமிறே. அவர்க்கும் இச்செல்லாமை உண்டென்றறிந்தால் இவள் கையில் வளை கழலாதாய்த்து; r சலிக்கிறபடி. s "நீயொருத்தியும் இழந்தாயாகச் சொல்லுகிறதென்? இங்ஙனேயன்ரே எல்லாரும் இருப்பது" என்ன; என்னையொழிய ஆரேனும் வளையிழந்தாருண்டோ? என்கிருள். 2.**

பதினேராம் திருமொழி—மூன்ரும் பாட்டு

**பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்**
**அங்காதுஞ் சோராமே யாள்கின்ற வெம்பெருமான்**
**செங்கோ லுடைய திருவரங்கச் செல்வனர்**
**எங்கோல் வளையா லிடர்தீர்வ ராகாதே.**

**பதவுரை:—பொங்கு**—அலையெறியாநின்றுள்ள, **ஓதம்**—கடலாலே, **சூழ்ந்த**—சூழப்பட்ட, **புவனியும்**—இப்பூ$_4$மண்ட$_3$லமும், **விண் உலகும்**—பரமபத$_3$மும், **அங்கு ஆதும் சோராமே**—அங்கு சிறிதும் குறைவுபடாதபடி, **ஆள்கின்ற**-நிர்வஹித்துக் கொண்டிருக்கிற, **எம் பெருமான்**—எம் ஸ்வாமியாய், **செங்கோல் உடைய**—செங்கோல் செலுத்த வல்லவராய், **திரு**

---

அறிகையாலே இவள் கையில் வளை கழலாமல் தங்குமன்ரே. அவருக்கும் இச்செல்லாமை உண்டு என்று இவள் அறிந்தால் இவளுடைய கையில் வளை சலிக்குமேயொழியக் கழலாது. "என்னுடைய கழல் வளையையே கழல்வளையாக்கினர்" என்றும் ஏகாரத்தைக் கூட்டலாம். அப்போது "நீ ஒருத்தியே வளையிழந்ததாகச் சொல்லுவானேன்? அவனைப் பிரிந்தாரனைவருமே வளையிழந்தன்ரே கிடப்பது" என்று சிலர் கூறுவதாகக் கொண்டு, "வளையிழந்தவள் நான் ஒருத்தியே; என்னைத் தவிர யாரேனும் வளையிழந்தாருண்டோ?" என்கிருள் என்று பொருள்படுகிறது. 2.

---

(இது அங்குமித்யாதி$_3$) இது - கழலுகிற இது. r(சலிக்கிறபடி) என்ற ஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ம் மணிக்கட்டுக்குக் கீழ் கழலாமல் சலிக்கிறதென்றபடி. s "என் - கழல்வளை" என்றத்தைப் பற்ற அருளிச்செய்கிருர் (நீயொருத்தியுமித்யாதி$_3$). 2.

அரங்கம் செல்வனார்—கோயிலிலே பள்ளிகொண்டிருப்பவரான ஸ்ரீமான், என்—என்னுடைய, கோல்வளையால்—கைவளையாலே, இடர் தீர்வர் ஆகாதே — தம் குறைகளெல்லாம் தீர்ந்து நிறைவுபெறுவரன்றோ.

அவ:— மூன்றும் பாட்டு. உன்பக்கல் உகப்பாலேயன்றோ அவன் உன் கையில் வளைகொண்டதென்ன; தம்முடைய ஐஶ்வர்யத்திலே ஒரு குறையுண்டாய், அது பூரிக்கவேண்டி, இதொழியச் செல்லாமை இடர்பட்டு, இது பெற்ற பின்னை அது தீர்ந்தாராயிருந்தாரோ? என்னை இடர் விளைக்கைக்காகச் செய்தாரித்தனையன்றோ? என்று வெறுக்கிறாள்.

வ்யா:— (பொங்கோதம் சூழ்ந்த புவனியும்) ஓதங்கிளர்ந்த கடலை வேலியாகவுடைய பூ$_4$மியும். மர்யாதை$_3$யில் ஒன்றும் குறைந்ததில்லையிறே a அங்கு; பூ$_4$மிக்கு மேலே விஞ்சிவாராநிற்கச் செய்தேயும் கரையேறமாட்டாதே கிடக்கிறதிறே கடல். (விண்ணுலகும்) ஒரு மர்யாதை$_3$

3. *அவ:*— "உன்னிடம் உகப்பாலேயன்றோ அவன் உன கையில் வளையைக் கொண்டது'' என்று சிலர் கூற, "தம்முடைய செல்வத்தில் ஒரு குறையுண்டாகி, அதை நிறைவுபடுத்துவதற்காக இந்தக் கைவளையைப் பெற்றாலல்லது த$_4$ரிக்காதவராகி இது பெற்றபின்பு குறைதீர்ந்தவராயிருக்கிறாரோ அவர்? என்னைத் துன்புறுத்துகைக்காகச் செய்த செயலன்றோ இது'' என்று வெறுத்து வார்த்தை சொல்லுகிறாள்.

*வ்யா:*— *(பொங்கோதம் சூழ்ந்த புவனியும்)* அலையெறியும் கடலை நாற்புறமும்கொண்ட பூ$_4$மியும். கடல் பூ$_4$மியை நோக்கி அலையெறிந்தபோதிலும் கரை கடக்கமாட்டாதிருக்கிறதாகையாலே வரம்புடைமையில் குறையில்லாமலிருப்பது இந்த பூ$_4$மி என்று கருத்து. இப்படி வரம்புடைய பூ$_4$மியிலிருந்தும் என் விஷயத்தில் வரம்புமீறிய கார்யத்தைச் செய்கிறான் எம்பெருமான் என்று உணர்த்தப்படுகிறது. (விண்ணுலகும்) பூ$_4$மியைப்போலே

---

மூன்றும் பாட்டு. (பொங்கோதமித்யாதி$_3$) a (அங்கு) இங்கு மர்யாதை$_3$ தப்பிக்கிடக்கிறதென்று கருத்து.



யில்லாத த்ரிபாத்$_3$விபூ$_4$தியும். b (அங்காதும் சோராமே யாள்கின்ற) உப$_4$யவிபூ$_4$தியிலும் ஒரு குறை பிறவாமே நிர்வஹித்துக்கொண்டு போருகிற. அழிந்தவன்று தன் மேலே ஏறிட்டுக்கொண்டு நோக்கியும், உண்டாக்கினவன்று தன் நிலையிலே நிறுத்தியும் நடத்தும் இவ்விபூ$_4$தியை; நித்ய ஸம்ஶ்லேஷத்தாலே ஸத்தையைக் கொடுத்து நோக்கும் அவ்விபூ$_4$தியை. (எம்பெருமான்) என்னையொரு மூன்றும் விபூ$_4$தியாக ஆளாநின்றான். c ஶப்$_3$த$_3$ாதி$_3$களாலே களிக்கும்படி பண்ணிவைத்தான் இவ்விபூ$_4$தியை; தன்னை அநுப$_4$வித்துக் களிக்கும்படி பண்ணிவைத்தான் அவ்விபூ$_4$தியை; நான் இங்குள்ளார்க்கும் கூட்டன்றிக்கே அங்குள்ளார்க்கும் கூட்டன்றிக்கே, நடுவே நோவுபடும்படி பண்ணிவைத்தான் என்னையொருத்தியையும்.

---

ஒரு வரம்பை உடைத்தாயிராத பரமபத$_3$மும். அது வரம்பில்லாத தே$_3$ஶமாயிருந்தாலும் இங்கு என்விஷயத்திற்போலே வரம்புமீறிய காரியத்தை அங்கு அவன் செய்வதில்லை என்று உணர்த்தப்படுகிறது. *(அங்கு ஆதும் சோராமே ஆள்கின்ற)* உப$_4$யவிபூ$_4$தியிலும் ஒருகுறை உண்டாகாதபடி ஆட்சிபுரிகின்ற. அழிந்தபோது தன் வயிற்றிலேவைத்து ரக்ஷித்தும், மறுபடி ஸ்ருஷ்டிகாலத்தில் ஸ்தூ$_2$லநிலையில் இதை நிறுத்தியும் ஆள்கின்றான் இந்த லீலாவிபூ$_4$தியை. எப்போதும் நித்யமுக்தர்களைத் தன்னை அநுப$_4$விக்கச் செய்வதன்மூலம் அவர்களுக்கு ஸத்தையைக் கொடுத்து ரக்ஷிக்கிறான் நித்யவிபூ$_4$தியை. (எம்பெருமான்) தன் ரக்ஷணத்துக்குப் புறம்பான ஒரு மூன்றும் விபூ$_4$தியாக என்னைக்கொண்டு, எனக்குத் துன்பத்தையே கொடுத்து ஆட்சி புரிகின்றான். ஶப்$_3$த$_3$ம் முதலான விஷயங்களை அநுப$_4$வித்து இன்புற்றிருக்கும்படி செய்துவைத்தான் லீலாவிபூ$_4$தியை; தன்னை அநுப$_4$வித்து இன்புற்றிருக்கும்படி பண்ணிவைத்தான் நித்ய விபூ$_4$தியை. நான் இங்குள்ளாரோடும் அங்குள்ளாரோடும் சேராமல் நடுவேநின்று துன்பமே படும்படி பண்ணிவைத்தான் என்னை ஒருத்தியை.

---

b " ஆதும் " - ஒன்றும். c (ஶப்$_3$த$_3$ாதி$_3$களாலேயித்யாதி$_3$) தாத்பர்யாந்தரம்.

d(செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார்) தம்முடைய e ஆஜ்ஞாநுவர்த்தநம் (ஸ்வ)ஸங்கல்பத்தாலே நடத்துமது போராதென்று கோயிலிலே வந்து சாய்ந்தவர். பெரிய பெருமாளோ பின்னை உப₄யவிபூ₄தியையும் ஆளுகிறார்? என்னில், அல்ல. அவரிட்டதோரேவலாள். (திருவரங்கச் செல்வனார்) f பெரிய பெருமாளுமல்லர் காணும்.

g (எங்கோலித்யாதி₃) தமக்கொரு குறையுண்டாய், என் கையில் வளையொழியச் செல்லாமே குறைப்பட்டு, அவ்விடர் தீர்க்கைக்காகக் கொண்டாரோ? எனக்கு க்லேஶத்தை விளைக்கைக்காகச் செய்தாரித்தனையன்றோ. கழலாதபடி h திண்ணிதாக இட்ட வளையையும் கொண்டார், கோல்வளையையுங்கொண்டார். 3.

---

*(செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்)* பரமபத₃த்திலிருந்து தம்முடைய ஆணையைத் தம் ஸங்கல்பத்தாலே அனைவரும் பின்பற்றும்படி நடத்திச் செல்வது போராதென்று கோயிலிலேவந்து பள்ளிகொண்டவர். பெரியபெருமாளோ உப₄யவிபூ₄தியும் ஆள்பவர்? எனில் *(செங்கோலுடைய)* பெரியபெருமாளுமல்லர், அவர் இட்டதொரு ஏவலாளான செங்கோலே இத்தனையும் செய்கிறது என்று கருத்து. *(என் கோல்வளையால் இடர் தீர்வராகாதே)* தம்முடைய செல்வத்தில் ஒரு குறையுண்டாகி அதை நிறைவுபடுத்துவதற்காக இந்தக் கைவளையைப் பெற்றாலல்லது த₄ரிக்காதவராகி இது பெற்ற பின்பு குறை தீர்ந்தவராக இருக்கிறாரோ அவர்? என்னைத் துன்புறுத்துகைக்காகச் செய்த செயலன்றோ இது. சென்ற பாட்டில் சொன்னபடி திண்மை மிக்க கழல் வளையையும் கொண்டார்; இப்போது கோல் வளையையும் கொண்டார். 3.

---

f (பெருமாளுமல்லர்காணும்) என்றதுக்குத் தாத்பர்யம்- செங்கோலாய்த்து என்றபடி. d,e "செங்கோல்"- ஆஜ்ஞை. g "எம்கோல்வளை" - என் அழகிய வளை; கோல்வளை-வளை விஶேஷம். h(திண்ணிதாக இட்ட வளையும் கொண்டார்) என்றது-கீழிற்பாட்டிலது. 3.



### பதினோராம் திருமொழி—நாலாம் பாட்டு

மச்சணி மாட மதிளரங்கர் வாமனனார்
பச்சைப் பசுந்தேவர் தாம்பண்டு நீரேற்ற
பிச்சைக் குறையாகி யென்னுடைய பெய்வளைமேல்
இச்சை யுடையரே லித்தெருவே போதாரே.

பதவுரை:— மச்சு—மேல்தளங்களாலே, அணி—அலங்கரிக்கப்பட்ட மாடம்—மாடங்களையும், மதிள்—மதிள்களையுமுடைய, அரங்கர்—திருவரங்கத்திலே எழுந்தருளியிருப்பவராய், வாமனனார்—(முன்பு) வாமநாவதாரம் செய்தருளினவராய், பச்சைப் பசுந்தேவர்—பசுமைதங்கிய தேவரான பெரியபெருமாள், தாம்—தாம், பண்டு—முன்பு (மஹாபலியிடத்தில்), நீர் ஏற்ற பிச்சை குறை ஆகி—நீர்த்தாரை ஏந்திப்பெற்ற பிச்சையிலே குறையுண்டாகி, (அக்குறையைத் தீர்ப்பதற்காக) என்னுடைய—என்னுடைய, பெய் வளை மேல்—(கையில்) இடப்பட்டுள்ள வளைமேல், இச்சை உடையரேல்—விருப்பமுடையவராகில், இத்தெருவே இத்தெருவழியாக, போதாரே—எழுந்தருளமாட்டாரோ?

அவ:— நாலாம் பாட்டு. "அல்லாதாரெல்லாம் வளையிட்டிருக்கச் செய்தே கையில் வளைகொண்டது உன்பக்கல் உகப்பாலேயன்றோ; அது ஹர்ஷஹேதுவித்தனையல்லது ஶோகஹேதுவாகவற்றோ?" என்ன; "ஓம்; a உகப்பு ஒன்றிலேயாய், மற்றையதிலின்றிக்கேயாகாதே இருப்பது" என்கிறாள்.

---

4. *அவ:*— "மற்ற ஸ்த்ரீகளும் வளையிட்டிருந்தபோதிலும் உன்கையில் வளையை அவன் கொண்டது உன்னிடம் அவனுக்குள்ள உகப்பாலேயன்றோ; இதைக் கண்டு நீ ஆனந்தப் படவேணுமேயொழிய வருந்தலாமோ?" என்று அருகிலிருப்பவர்கள் கூற, "அது சரி. என் வளையிலுள்ள உகப்பு என்னி

---

நாலாம் பாட்டு. (மச்சணியித்யாதி₃) a "பண்டுநீரேற்ற" என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (உகப்பொன்றிலே

b "தாம் விரும்பியிருக்கும் வளை" என்று. அதுகொண்டாகிலும் எங்கள் ஸத்தையை நோக்கிக்கொண்டு கிடக்கவேணும் என்றிருந்தோம். அதொழியத் தம் ஸத்தை நோக்கவரிதாய், அதிலே விருப்பத்தைப்பண்ணி அதைக்கொண்டாராய் இருக்குமாகில், எங்கள் ஸத்தை கிடக்கவேணுமென்று கண்வட்டத்தே இத்தெருவேயாகிலும் ஒருகால் போகாரோ?

வ்யா:—(c மச்சணிமாடமித்யாதி$_3$) மச்சுக்களாலே அலங்க்ருதமான மாடங்களையும் அரணுகப்போரும்படியான மதிளையுமுடைத்தான கோயிலிலே வந்து தம்முடைமை பெறுகைக்காகத் தாம் அர்த்தி$_2$களாய்க் கண்வளர்ந்தருளுகிறவர். (மச்சணிமாட மதிளரங்கர் வாமனனுர்) மாடமெடுக்கவும்

---

டத்தில் இருப்பதாகத் தெரியவில்லையே'' என்று பதில் கூறுகிருள். அதாவது — ''இவர் விரும்பியிருக்கும் வளை என்ற காரணத்தாலே அதைப் பார்த்து நாம் த$_4$ரித்திருப்போம் என்று நான் நினைத்திருந்தேன். என் ஸம்ப$_8$ந்த$_4$ம் பெற்ற அந்த வளையைக் கொள்ளாவிடில் உயிர் த$_4$ரிக்கமுடியாதவராய் அவ்வளையை விரும்பி அதை என்னிடமிருந்து கொண்டாராகில் நான் உயிர் த$_4$ரிப்பதற்காக என் கண்முன்னே இத்தெருவிலே ஒருமுறை நடக்கவேண்டாமோ? அது செய்வதாகத் தெரியவில்லையே'' என்பது இப்பாசுரத்தின் கருத்து.

*வ்யா:— (மச்சணி மாட மதிள் அரங்கர் வாமனனுர்)* மேல்தளங்களாலே அலங்கரிக்கப்பெற்ற மாடமாளிகைகளையும், விரோதி$_4$கள் நுழையமுடியாதபடி அரணுயிருக்கும் மதிள்களையும் உடைய திருவரங்கம் பெரிய கோயிலிலே எழுந்தருளி வாமனுவதாரத்திற்போலே தம்முடைமையான ஜீவர்களைப் பெறுவதற்காக 'என் விருப்பம் பெற்றாலல்லது போகேன்' என்று ஶயனித்துக்கொண்டிருப்பவர். *(மச்சணி மாடமதிளரங்கர் வாமனனுர்)* மாடமாளிகைகள் கட்டிக்கொள்வதற்குத்

---

இத்யாதி$_8$) b கீழ்வாக்ய விவரணம் (தாம் விரும்பியித்யாதி$_8$) "இத்தெருவே போதாரே" என்றத்தைப்பற்ற அவதாரிகாந்தரமருளிச்செய்கிருர் (தாம் விரும்பியித்யாதி$_8$) c "மச்சு"-



மாளிகைகளெடுக்கவும் கற்றுரித்தனைபோக்கி, ஒருகாலும் ப்ரணயித்வத்தில் புதியதுண்டிலர்காணும்! (வாமனனுர்) சிறியவன் பெற்ற செல்வமிறே; d எதனைச் செய்வனென்றறியானே. (வாமனனுர்) சத்திரமேந்தித் தனியொருமாணியாய் உத்தரவேதியில் நின்ற ப்$_3$ரஹ்மசாரியையிறே இவள்தான் ஆசைப்படுகிறது. e (பச்சைப்பசுந்தேவர்) அழைத்து அநுப$_4$வித்திலரென்னு. விடவொண்ணுதபடியாயிருக்கை வடிவழகு. 184.'[illegible]' (மேக$_4$ஶ்யாமம்)—"கைகேயிவயிற்றிற் பிறப்பால் வந்த தாபமாறுங்கிடீர்—அவ்வழகிய வடிவிலே

---

தெரிந்துகொண்டாரேயொழிய, தம்மிடம் அன்புடைய நாயகியாகிய என்னிடம் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதில் அக்ஷராப்$_4$யாஸமும் செய்யவில்லையே! *(வாமனனுர்)* ''அல்பனுக்குச் செல்வம் வந்தால் அர்த்த$_4$ராத்ரியில் குடைபிடிப்பான்'' என்கிற உலகவழக்கையொட்டி வாமனனுகிற சிறியவன் பெற்ற செல்வமாகையாலே இன்னது செய்வது என்பதை அறிகின்றுனில்லை. *(வாமனனுர்) ''சத்திரமேந்தித் தனியொரு மாணியாய், உத்தரவேதியில் நின்ற ஒருவனை, கத்திரியர் காணக் காணிமுற்றும் கொண்ட பத்திராகாரன்''* [பெரியாழ்-திரு 1-9-6] என்று தகப்பனுரான பெரியாழ்வார் சொல்வதைக் கேட்டிருப்பாளாகையாலே வாமனப்$_8$ரஹ்மசாரியையன்றே இவள்தான் ஆசைப்பட்டிருப்பாள். *(பச்சைப் பசுந்தேவர்)* பசுமை அழகிய நிறத்தைக் குறிப்பதாய், "பச்சைப்பசுந்தேவர்" என்னும் தொடர் "மிக அழகிய தேவர்'' என்று பொருள் படுகிறது. என்னையழைத்து அனுப$_4$விக்காவிடிலும் விடவொண்ணுதபடியிருக்கிறது அவருடைய வடிவழகு.

**184. மேக$_4$ஶ்யாமம் மஹாபா$_3$ஹும் ஸ்தி$_2$ரஸத்த்வம் த்$_3$ருட$_4$வ்ரதம் ।**
**கதா$_3$ த்$_3$ரக்ஷ்யாமஹே ராமம் ஜக$_3$த: ஶோகநாஶநம்॥**
*[ரா-அ 83-8]*

---

மேல்தளம். d (எத்தைச் செய்வன்) என்றது - அல்பனுக்கு வந்த ஐஶ்வர்யமாகையாலே மச்சு முதலானதும் கட்டத்தொடங்கினுர்என்றபடி. e "பச்சைப்பசுந்தேவர்"—கலப்பற்ற

விழிக்கப்பெற்றேனாகில்" என்றானிறே ஸ்ரீப4ரதாழ்வான். அன்றிக்கே, கலப்பற்ற பரதே3வதை. f "அங்குவைத்திங்குப் பிறந்த" என்னக்கடவதிறே. (தேவர்) g த்3யோதநாதி3 கு3ணயோக3த்தையுடையவர். (தாம் பண்டு நீரேற்ற) "கொள்வன் நான் மாவலி" என்று அதுபெற்றன்றித் தரியாதானாய், "ஒண்டாரை நீரங்கை தோய நிமிர்ந்திலே"

---

[மேக4ம்போல் கறுத்தவனும், நீண்ட கைகளையுடையவனும், நிலையான ப3லத்தையுடையவனும், உறுதியான விரதத்தை யுடையவனும், உலகின் துன்பத்தைப் போக்கடிப்பவனுமான ராமபிரானை என்று நாம் காண்போம் ?] என்கிறபடியே "கைகேயி வயிற்றில் பிறந்ததாலுண்டான கொதிப்பு இராம பிரானுடைய அழகியவடிவிலே விழிக்கப்பெற்றால்தான் ஆறும்" என்று ஸ்ரீப4ரதாழ்வான் கூறினானன்றோ. அப்படிப் பொருள் கொள்ளாமல் 'பச்சைப் பசும்பொன்' என்று கலப்பற்ற பொன்னைக்கூறுவதுபோலே "பச்சைப்பசுந்தேவர்" என்றதற்குக் கலப்பற்ற தெய்வத்தன்மையை உடையவர் என்றும் பொருள் கொள்ளலாம். "ஆதியஞ் சோதியுருவை அங்கு வைத்திங்குப் *பிறந்த*" [திருவாய் 3-5-5] என்கிறபடியே அவதரிக்கும்போதும் பரத்வம் முதலான கு3ணங்களில் குறைவற்றவனாய்ப் பிறக்கிறான் என்றாரன்றோ ஆழ்வார். *(தேவர்) "தி3வ்-க்ரீட3ா...... த்3யுதி"* என்கிறபடியே தெய்வத்தன்மைக்குரிய ஒளி முதலான கு3ணங் களையுடையவர். *(தாம் பண்டு நீரேற்ற)* "கொள்வன் நான் *மாவலி மூவடிதா*" [திருவாய் 3-8-9] என்கிறபடியே தன் னுடையதான உலகை நீரேற்றுப் பெற்றாலன்றி த4ரியாதவனாய், *"ஒண்டாரை நீரங்கை தோய நிமிர்ந்திலையே"* [முதல்திருவ 79] என்று பொய்கையாழ்வார் அருளியபடியே மாவலியிடமிருந்து தாம் முன்னம் நீரேற்றுப் பெற்றுக்கொண்ட. *(பிச்சைக் குறையாகி...............உடையரேல்)* மஹாப3லியிடம் பூ4மியைப்

---

உத்கர்ஷத்தை உடையவர். f "பச்சைப்பசும்" என்றது - ஶ்யாமமான திருமேனி என்று அர்த்தா2ந்தர விவக்ஷயா (அங்குவைத்து) என்று. g இந்த இரண்டாமர்த்த2த்திலே (த்3யோதநாதி3யென்று.)



என்கிறபடியே உத3கபூர்வகமாகக்கொண்ட. h (பிச்சைக் குறையாகி) மஹாப3லிபக்கல் பெற்றுக்குறையுண்டாய், அது என் கையாலே பெறவேணுமென்னும் இச்சை2யாலே. (என்னுடைய பெய்வளைமேல் இச்சை உடையரேல்) i அம் மண்ணேபாதி இச்சை2யும் என்வளையிலே உடையராகில்

---

பிச்சையேற்று, "தன்னது என்று பூ4மியை அபி4மானித்தவ னிடம் பிச்சை ஏற்கும்படி நேர்ந்ததே" என்று குறையுண்டாய், அக்குறைதீர அவ்வபி4மானமில்லாத என் கையாலே பிச்சை பெறவேணும் என்னும் விருப்பமுடையராகில். *(பிச்சைக் குறையாகி* **என்னுடைய** *பெய்வளைமேல் இச்சையுடையரேல்)* மற்ற எல்லாப் பெருமைகளிருந்தும் "அடியார்களுக்காகப் பிச்சையெடுத்தார் என்னும் பெருமையில்லை" என்னும் குறை தீர மாவலியிடம் மூவடி மண்ணைப் பிச்சையெடுத்ததுபோலே, "அடியார்களிடம் பிச்சையெடுக்கவில்லை" என்னும் குறைதீர என் வளையைப் பிச்சையாகப் பெறவிருப்பமுடையராகில் என்றும் பொருள்கொள்ளலாம். என் கையில் வளையைப் பெற்று 'அடியார் கையில் பிச்சையேற்கவில்லை' என்னும் குறை நிரப்பவேணும் என்னும் விருப்பமுடையராகில் என்று கருத்து. *(இத்தெருவே போதாரே) "நாடி நந்தெருவின் நடுவே வந்திட்டு"* [நாச்-திரு 4-5] என்கிறபடியே எங்கள் தெருவிலே என்னிடம் பிச்சையேற்பதற்காக எழுந்தருளக் கூடாதோ ? அஸுரனுடைய யாக3பூ4மியிலே நடந்த நடையை இத்தெரு

---

h (பிச்சைக்குறையாகி) ஏற்ற பிச்சையிலே குறை யுண்டாய், அத்தை நிரப்ப இச்சை2யுடையரேலென்னுதல்; i அன்றிக்கே, பிச்சை ஏலாமையாலே குறைப்பட்டு, அக் குறைதீர மண்ணேற்றாற்போலே, என்வளையையிரவாத போது குறையுண்டாய், குறைதீர இச்சை2யுடையரேல் என்னுதல்; இத்தையருளிச்செய்கிறார் (அம்மண்ணித்யாதி3) (அம்மண்ணேபாதி) என்ற வாக்யத்தில் அர்த்தா2ந்தரத் துக்குச்சேர அந்வயிக்கும்போது "நீரேற்ற பிச்சையிலே குறையானாற்போலே" என்று அந்வயிப்பது என்றருளிச் செய்வர். 4.

என்றுமாம். / என்கையில் வளையாலே குறைநிரப்பவேணும் என்னும் இச்சை2யுண்டாகில். (இத்தெருவே போதாரே) "நந்தெருவின் நடுவே வந்து" என்கிறபடியே - எங்கள் தெருவிலே எழுந்தருளாதோ பின்னை? அஸுரனுடைய யஜ்ஞவாடத்திலே நடந்த நடையை இத்தெருவிலே நடந்தாலாகாதோ? 4.

---

விலே நடக்கக் கூடாதோ? அப்படி நடந்துவந்தாலாவது அவனுடைய வடிவழகைப் பார்த்து த4ரித்திருக்கலாம் என்று நினைக்கிறாள். 4.

---

/ தாமிரந்த மண்ணில் வீறும் என்கையில் வளையில் வீறும் தாம் சொல்லக்கேட்டிருக்குமத்தனையிறே நாம்; தாமிரந்த பூ4மி யார்க்கு ஆப4ரணமாகவற்று? இடப்பட்ட வளையின்மேலே; ஸ்ரிய:பதியாய், கொடுத்துவளர்ந்த கையையுடையராயிருக்கிறவர்தாம் கழஞ்சு மண்பெறு கைக்குத் தம்மை இரப்பாளராக்கி, அதில் பண்ணின விருப்பம் என்பக்கலிலே பண்ணி இருந்தாராகில்; என் கையில் வளையாலே குறைதீரவேணுமென்னும் இச்சை2 யுண்டாகில். (இத்தெருவே போதாரே) என்கண்வட்டத்திலே நடந்தாலாகாதோ?; தன்னுடைமையல்லாததைக் கொடுத்து ஔதா3ர்யம் கொண்டிருக்கிறவனைப் போலே இருப்பனோ நான்? "ஒன்று நூறாயிரமாகக் கொடுத்துப் பின்னுமாளும் செய்வன்" என்றிருக்குமவளன்றோ நான். [ கொண்டானையல்லால் கொடுத்தாரை யார் பழிப்பார் ] தன்னதல்லாதவற்றைக் கொடுத்தவனைக் குறைசொல்லுவாரில்லை. "தனக்குக்கொடுத்தவனுக்கு அபகாரத்தைப் பண்ணுவதே! இவன்தன்னில் க்ருதக்4நரில்லை" என்று நிற்பர்கள். தன்னதல்லாதவற்றைக் கொடுத்தவனையன்றோ நெல்லிலே வைத்துத் தெரிக்கவேண்டுவது என்கிறார்.

---

/ "தாமிரந்த" என்பதுமுதல் "யதே2பாஸநம் ப2லமாகையாலே" என்னுமளவாக அதி4கபாட2ம் காண்கிறது. அரும்பதவுரையில் எடுக்கப்படாமையால் இவ்வதி4கபாட2த்திற்கு விவரணம் எழுதப் படவில்லை.



பதினோராம் திருமொழி—ஐந்தாம் பாட்டு

பொல்லாக் குறளுருவாய்ப் பொற்கையில் நீரேற்று
எல்லா வுலகும் அளந்துகொண்ட வெம்பெருமான்
நல்லார்கள் வாழும் நளிரரங்க நாகணையான்
இல்லாதோம் கைப்பொருளும் எய்துவா னொத்துளனே.

**பதவுரை:—** **பொல்லா குறள் உரு ஆய்**—விலக்ஷண வாமநருபியாய், **பொன் கையில்**—அழகிய கையாலே, **நீர் ஏற்று**—பி4க்ஷை பெற்று, **எல்லா உலகும்**—ஸகலலோகங்களையும், **அளந்துகொண்ட**—தன் வசப்படுத்திக்கொண்ட, **எம்பெருமான்**—ஸ்வாமியாய், **நல்லார்கள் வாழும்**—நன்மை மிக்க பெரியோர் வாழ்கிற **நளிர் அரங்கம்**—குளிர்ந்த திருவரங்கத்தில், **நாக அணையான்**—திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையரான பெரியபெருமாள். **இல்லாதோம்**—அகிஞ்சனையான என்னுடைய, **கைப்பொருளும்**—கைம்முதலான வஸ்துவையும் (சரீரத்தையும்), **எய்துவான் ஒத்து உளன்**—கொள்ளைகொள்வான்போலிராநின்றான்.

---

நம்முடைய ஆத்மஸமர்ப்பணம்போலே அவனுடைய ஔதா3ர்யமும்; அவனுடைய வஸ்துவையிறே அவனுக்குக் கொடுக்கிறது; ஆனால் ஆத்மஸமர்ப்பணம் குற்றமோ? என்னில்; "என்னது" என்றிருந்தவன்று "அவனுக்கு" என்று கொடுக்க ப்ராப்தம். ப்4ரமித்தவன்றைத்துக்கொடுக்க ப்ராப்தியுள்ளது. உணர்த்தியுண்டானவாறே **185. "अथवा किन्नु समर्पयामि ते"** **(அத2வா கிந்நு ஸமர்ப்பயாமி தே)** என்னாநின்றார்களிறே. ஸ்வரூபஜ்ஞானம் பிறந்தால் அவனுடைய ஸ்வரூபகு3ணங்களோபாதி அங்கே தோற்றக் கடவதாய்த்து இது; அவனுடைய ப்ராப்யத்வத்தில் ஏகதே3ஶமாய் அந்வயிக்குமத்தனை. ஆத்மயாதா2த்ம்யஜ்ஞானம் முன்னாகப் பற்றினால் அநுப4வஸமயத்திலும் ஆத்மயாதா2த்ம்யஜ்ஞானம் முன்னாகவிறே அநுப4விப்பது.
/ யதே2பாஸநம் ப2லமாகையாலே.

வ்யா:—அஞ்சாம் பாட்டு. (பொல்லாக் குறளுருவாய்) கண்ணெச்சில் வாராமைக்குக் கரிபூசுகிறாராதல்; அழகிலே விஜாதீயதையாலே "அழகிது" என்னில், நாட்டிலழகோடொக்க நினைக்கக்கூடுமென்று "பொல்லா" என்கிறாராதல். (குறளுருவாய்) a கோடியைக் காணியாக்கினாற்போலே பெரிய வடிவழகையெல்லாம் இவ்வடிவிலேயமைத்து அநுப₄விக்கலாம்படி அடக்கினபடி. b (பொற்கையில் நீரேற்று) c அழகிய கையிலே நீரையேற்று. அவனுக்குப் பொற்கலத்தில் பி₄க்ஷையாய்த்தே.

---

5. *அவ:—* என் வளையோடல்லாமல் என் உடம்பையும் கொள்ளைகொள்வான்போலே பிரார்கின்றான் என்கிறாள்.

*வ்யா:—(பொல்லாக்குறளுருவாய்)* இவ்வாமனவேஷத்துக்கு த்₃ருஷ்டிதோ₃ஷம் வராமலிருப்பதற்காக "பொல்லா" என்று விஶேஷணமிட்டு த்₃ருஷ்டி பரிஹாரம் செய்கிறார் நாச்சியார் என்றும் கொள்ளலாம். அல்லது 'பொல்லாக்குறளுரு என்று உலகில் நடையாடாததொரு வாமனவேஷம் என்கிறதாகவும் கொள்ளலாம். "அழகிய குறளுரு" என்றால் உலகத்திலுள்ள மற்ற அழகிய பொருள்களோடு ஒக்க நினைக்கக்கூடும் என்று கருதி. 'பொல்லாக்குறளுரு' என்கிறாள் என்று கருத்து. *(குறளுருவாய்)* ஒருபடி பாலைக்காய்ச்சி 1/8 படி குழம்புப் பாலாக்கினால் இனிமை மிகுவதுபோலே கோடிஸ்த₂ானத்தில் இருக்கும் திரிவிக்கிரமன் வடிவைக் காணிஸ்த₂ானத்திலேயிருக்கும் வாமன வடிவமாக்கினால் அனுப₄விப்பார்க்கு இனிமை மிக்கிருக்கும் என்று கருத்து. *(பொற்கையில் நீரேற்று)* அழகிய கையிலே த₃ான நீரை ஏற்று. உலகில் பிச்சையிடுவாரெல்லாம் மண்கலத்திலே பிச்சையிடாநிற்க, பொற்கையாகிற பொற்கலத்தில் பிச்சையிடும் பாக்கியம் மாவலிக்குக் கிடைப்பதே!

---

அஞ்சாம் பாட்டு. (பொல்லாவித்யாதி₃) a (கோடியைக் காணியாக்குகை)-கோடித்₃ரவ்யத்தையிட்டு ஒரு ரத்நத்தை வாங்கி, அத்தை மார்பிலே வைத்து அநுப₄விக்கை. d (அடியிடுகிறபடி) என்றது-சாடுவுமாய். "கைப்பொருளுமெய்து வானெத்துளன்" என்றதிலும் நோக்காயிருக்கிறது.



(எல்லாவுலகுமளந்துகொண்ட) பரஸ்வாபஹாரத்துக்கு d அடியிடுகிறபடி. ஒன்றைக்கொள்ளப்புக்கானாகில் கொடுத்தவர்களுக்குப் பாதாளமே க₃தியாம்படியிறே கொள்ளுவது; இறைப்பொழுதில் பாதாளம் கலவிருக்கை கொடுத்துகந்தவனிறே. e தனக்கு இரப்பிட்டவர்களைக் குழியிலே தள்ளி ஹ்ருஷ்டனுமவனிறே. (எம்பெருமான்) அச்செயலாலே என்னை அநந்யார்ஹையாக்கினவன். "மூவடி மண் கொண்டளந்த மன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன் பயந்தேன்" என்கிறபடியே அச்செயலிலேகாணும் இவள் ஈடுபட்டது.

(நல்லார்கள் வாழும் f நளிரரங்கம்) அநந்யப்ரயோஜநர் வர்த்திக்கிற தே₃ஶம்; "மறைப்பெருந்தீ வளர்த்திருப்பார்

---

*(எல்லாவுலகுமளந்துகொண்ட)* பொல்லாக்குறளுருவாய்ப் பொற்கையில் நீரேற்றது பிறர் திரவியத்தை அபஹரிப்பதற்கு அடியிடுகிறபடி (1 தொடங்குகிறபடி. 2 அடியாலளந்தபடி.) சிலரிடம் ஒன்றைக் கொள்ளப்புகுந்தானாகில் கொடுத்தவர்கள் அத₄:பாதாளத்தில் விழும்படி கொள்கிறவனன்றோ. "இறைப்பொழுதில் பாதாளங்கலவிருக்கை கொடுத்துகந்த எம்மான்" [பெரியாழ்திரு 4-9-7] என்றாரன்றோ பெரியாழ்வாரும். தனக்குப் பிச்சையிட்டவர்களைப் படுகுழியிலே தள்ளி உகப்பவனன்றோ. இவன் இல்லாதோம் கைப்பொருளும் எய்துவான் போலிருப்பது வியப்பல்ல. *(எம்பெருமான்)* அச்செயலாலே என்னை வேறொருவருக்கும் ஆகாதபடி எழுதிக்கொண்டவன் "மூவடி மண்கொண்டளந்த மன்னன் சரிதைக்கே மாலாகிப் பொன்பயந்தேன்" [பெரியதிரு 9-4-2] என்கிறபடியே இச்செயலிலேயன்றோ இவர்கள் ஈடுபடுவது. தனக்குப் பிச்சையிட்டவர்களையும் படுகுழியில் தள்ளுமவனிடம் ஜாக்கிரதையாயிராமல் அச்செயலிலே ஈடுபட்டு, கைப்பொருளையும் இழக்கும் நிலையையடைந்தேன் என்று கருத்து.

---

b,c "பொற்கை" - அழகியகை. e "அளந்த" என்றத்தைப் பற்ற அருளிச்செய்கிறார் (தனக்கு இத்யாதி₃) f "நளிர்"-

வருவிருந்தை அளித்திருப்பார், சிறப்புடைய மறையவர்வாழ் திருவரங்கமென்பதுவே" என்னக்கடவதிறே. அத்தே3ஶ வாஸந்தானே வாழ்ச்சி, "வேங்கடத்தைப் பதியாக வாழ் வீர்காள்" என்னக்கடவதிறே. (நளிரரங்கம்) நளிர் - குளிர்த்தி; ஶ்ரமஹரமாய், தாபத்ரயங்களும் தட்டாத தே3ஶம். (நாகணையான்) அநந்தஶாயி. என்னையொழியவும் படுக்கை பொருந்துவதே! (இல்லாதோம் கைப்பொருளும்) அப்படுக் கையிலேற பா4க்3யமில்லாத என் கையில்; மஹாப3லியைப் போலே தம் அபேக்ஷிதம் பூர்ணமாகக் கொடுக்கைக்கில் லாத என்னுதல்; தம்மையொழியத் துணையில்லாத என்னு தல். (கைப்பொருளும்) - கைம்முதலும். ♮ (எய்துவானொத் துளனே) இது கைக்கொள்ளுவான்போலே இராநின்றான்.

---

(*நல்லார்கள் வாழும் நளிரரங்கம்*) இவனைத் தவிர வேறு பயன் கருதாதவர்கள் வாழுகின்ற தி3வ்யதே3ஶம். 'மறைப் பெருந்தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை அளித்திருப்பார் சிறப்புடைய மறையவர் வாழ் திருவரங்கமென்பதுவே" [பெரி யாழ்திரு 4-8-2] என்றாரன்றோ பெரியாழ்வாரும். (*வாழும்*) அந்த தே3ஶத்தில் வஸிப்பதே வாழ்ச்சியாகும். "வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்" [நாச்-திரு 8-9] என்று நாச்சியாரும் அருளிச்செய்தாரன்றோ. (*நளிரரங்கம்*) குளிர்ந்த அரங்கம். நளிர்-என்னும் பத3ம் குளிர்த்தியைச் சொல்லும். வாழ்பவர்க ளுடைய களைப்பை ஆற்றுவதாய், ஆத்4யாத்மிகம் (தே3ஹம் காரணமாக வருவது), ஆதி4பௌ4திகம் (பஞ்சபூ4தங்கள் காரணமாக வருவது), ஆதி4தை3விகம் (தெய்வச் செயலால் வருவது) என்னும் மூவகைத் தாபங்களும் தட்டாத தே3ஶம். (*நாகணையான்*) திருவனந்தாழ்வான் மேலே ஶயனித்திருப்பவன். நாயகியான என்னைவிட்டுப் படுக்கையில் பொருந்தியிருப்பதே! (*இல்லாதோம் கைப்பொருளும்*) அப்படுக்கையில் ஏற பாக்கிய மில்லாத என் கையில் பொருளையும். அல்லது 'மாவலியைப் போலே தாம் விரும்பியதைப் பூர்ணமாகக் கொடுப்பதற்கு இல்லாத என்னிடமுள்ள பொருளையும்' என்றும் பொருள்

---

குளிர்த்தியும் நடுக்கமும். ♮ "எய்துவான்"-கிட்டுவான். 5.



வ்யாக்2யாநாந்தரத்தில் வார்த்தை;—(நளிரரங்கம்) இத் தே3ஶத்திலே வர்த்திக்கிறவன்கிடீர் ஸ்த்ரீக4ாதுகர் செய்வுத் தைச் செய்கிறான். ஓரோ ப்ரதே3ஶங்களிலே ஸுக்ருதிக ளடங்கலும் வர்த்திக்கும் தே3ஶமாயிருக்கும். (நல்லார்கள்) ஸாத4நாநுஷ்டா2நம்பண்ணி வர்த்திக்கையன்றிக்கே ப2லா நுப4வம்பண்ணி வர்த்திக்கும் தே3ஶமாய்த்து. ப்ராப்ய வஸ்து ஸுலப4மாய் நித்யஸந்நிதி4 பண்ணுகையாலே அநுப4வ மாய்ச் செல்லாநிற்கும்; அத்தே3ஶத்தில் வாஸத்தை ஆசைப் பட்டார்க்கு அநுப4வமொழியவுண்டோ?. "பரமபத3ம் வரில் செய்வதென்?" என்று நடுங்குவர்கள் போலே காணும் அவ்வூரில் வர்த்திக்கிறவர்கள்; "இச்சுவை தவிர யான்போய்

---

கொள்ளலாம். தம்மைத் தவிர வேறு துணையில்லாத என்றும் பொருள்கொள்ளலாம். (*கைப்பொருளும்*) பிச்சையெடுப்பவன் கையில் இருக்கும் ஓடுபோன்ற அல்பவஸ்துக்களையும். ஶரீரத் தையும் அதைச் சேர்ந்தவற்றையும் நினைக்கிறாள். (*எய்து வானொத்துளனே*) கொள்ளைகொள்பவன்போலே இராநின்றான்.

### மற்றொரு வ்யாக்2யானத்தில் சில வார்த்தைகள்

(*நளிரரங்கம்*) இந்தக் குளிர்ந்த தி3வ்யதே3ஶத்தில் இருப்பவ னன்றோ பெண்களைக் கொலை செய்பவர்கள் புரியும் காரியத் தைச் செய்கிறான். (*நல்லார்கள் வாழும் அரங்கம்*) ஆங்காங்கு உள்ள பா4க்3யஶாலிகள் அனைவரும் வந்து படுகாடு கிடக் கும் இடம். ஆழ்வார்கள் அனைவரும் மண்டின "அற்ற பற்றர் சுற்றி வாழும் அந்தணீரரங்கம்" [திருச்சந்த52] அன்றோ. (*நல்லார்கள்*) ஸாத4நாநுஷ்டா2னம் பண்ணிச் சிரமப் படாமல் பயனை அனுப4விப்பவர்கள் வாழும் தி3வ்யதே3ஶ மாயிற்று. பரமபத3த்தில் சென்றடையவேண்டிய பரம்பொருள் அனைவர்க்கும் எளியதாய் என்றும் வாழுகையாலே, அங்கி ருப்பவர்களுக்கு ப4க3வத3நுப4வமே போதுபோக்காயிருக்கும். அந்தத் திருப்பதியில் வாழ ஆசைப்பட்டவர்களுக்குப் பெரிய பெருமாளுடைய அனுப4வம் தவிர வேறுண்டோ? அவ்வூரில் இருப்பவர்கள் "இவ்வனுப4வத்தை இழக்கும்படி பரமபத3ம் வந்துவிட்டால் என்ன செய்வது" என்று நடுங்குவர்கள்

இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன்'' என்னும்படியே.

பட்டரை, முதுகில் புண்ணாலே நொந்துகிடக்கச்செய்தே அருள்பாடிட்டு, பெருமாள், "வாராய்! அஞ்சினாயோ?'' என்று கேட்டருள; "நாயன்தே! எனக்குச் செய்து தந்தருளாத தரமில்லை, இங்கேயிருக்கச் செய்தேயும் பரமபத3ம் என் சிறுமுறிப்படி செல்லும்படி பண்ணியருளிற்று; அதிலொரு குறையுமில்லை. இங்கே குளிர்ந்த முகத்தையும் திருநாமத் தழும்பையும் முறுவலையும் இழக்கவென்றால் அடியேன் அஞ்சேனோ ?'' என்றார். ஆளவந்தார் மகனார் சொட்டை நம்பி, ஓரளவிலே திருக்கோட்டியூர் நம்பியை நெகிழ ஒரு வார்த்தை சொன்னாராய், "நீ கடக்க வர்த்தி'' என்றருளிச் செய்ய; அவரும் படைவீட்டிலே ராஜஸேவைபண்ணித் திரிந்

போலே காணும்; "இச்சுவைதவிர யான்போய் இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே'' [திருமாலை 2] என்று அருளினானன்றோ பெரிய பெருமாளையல்லது அறியாத தொண்டரடிப்பொடியாழ்வார்.

பட்டர் முதுகில் புண்ணாலே நொந்து கிடக்கும்போது பெரியபெருமாள் அருள்பாடிட்டு 'அஞ்சினாயோ?' என்று கேட்டருள, "எம்பிரானே! எனக்குச் செய்தருளாத பெருமையில்லை. இங்கேயிருக்கும்போதே நான் ஓலை எழுதிப் பரமபத3ம் வழங்கலாம்படி செய்தருளிற்று. அவ்விஷயத்தில் எனக்கு எக்குறையுமில்லை. இங்கே தேவரீருடைய குளிர்ந்த திருமுகத்தையும் திருமண்காப்புத் தழும்பையும் முறுவலையும் இழக்கவேண்டுமென்றால் அடியேன் அஞ்சமாட்டேனோ?'' என்றார். ஆளவந்தார் திருக்குமாரர்களில் சொட்டை நம்பி என்பவர் ஒருவர். அவர் ஆளவந்தாரின் ப்ரத4ான *ஶிஷ்யர்*களில் ஒருவரான திருக்கோட்டியூர் நம்பியைக் குறித்துத் தவறான தோர் வார்த்தை சொன்னபடியாலே நம்பி அவரைப் பார்த்து "நீ என் அருகில் வராதே, தூரப்போ'' என்று அருளிச் செய்தாராம். அவரும் சோழ அரசனின் தலைநகரத்துக்குச் சென்று ராஜஸேவை பண்ணிக்கொண்டு, லௌகிகராய்



தாராய், பின்பு இவருடைய சரமஸமயத்திலே இவருடைய அத்4யவஸாய மறியவேணுமென்று, "நீ நினைத்துக் கிடக்கிறதென்?'' என்று கேட்டார்களாய், "ஆளவந்தார் ஸ்ரீபாத3த்தின் ஸம்ப3ந்த4ம் பரமபத3ப்ராப்தி பண்ணித் தந்தல்லது விடாது; அங்கே போனால் ஸ்ரீவைகுண்ட2நாத2ன் முக2ம் நம்பெருமாள் திருமுக2மண்ட3லம்போலே குளிர்ந்திருந்ததில்லையாகில் முறிச்சுக்கொண்டு வருவதாக நினைத்திருந்தேன்'' என்றாராம்;-186.. 'न च पुनरावर्त्तते'' (ந ச புநராவர்த்ததே) என்கிற மர்யாதை3யை இடறிப்போரவேணுமே (என்றாராம்).

(நளிரரங்கம்) தாபத்ரயம் ஆறுகைக்குப் பரமபத3ம் தேடிப் போக வேண்டா. (நாகணையான்) ப்ராப்யவஸ்துவை அநுப4

வாழ்ந்து வந்தார் அந்தச் சொட்டைநம்பியின் கடைசிக் காலத்தில் 'லௌகிகராய்ப் போய்விட்ட இவருக்கு வைஷ்ணவத்தில் உறுதி இருக்கிறதா என்று சோதிக்கவேணும்' என்று நினைத்த சிலர் "நீர் நினைத்துக்கிடக்கிறது என்ன?'' என்று கேட்டார்களாம். அப்போது அவர் "ஆளவந்தாரின் திருவடி ஸம்ப3ந்த4ம் எனக்குப் பரமபத3த்தைக் கொடுத்தல்லது நில்லாது. அங்கே போனால் ஸ்ரீவைகுண்ட2நாத2னுடைய முக2ம் நம்பெருமாள் திருமுகமண்டலம்போலே குளிர்ந்திருக்கவில்லையானால் அண்டச்சுவரை முறித்துக்கொண்டு ஸ்ரீரங்க3த்துக்கே வரநினைத்திருக்கிறேன்'' என்றாராம்.

186. ஸ க4ல்வேவம் வர்த்தயந் யாவத3ாயுஷம்
ப்3ரஹ்மலோகமபி4ஸம்பத்3யதே।
ந ச புநராவர்த்ததே। ந ச புநராவர்த்ததே॥
[ச2ாந் 1-15-1]

[அந்த முமுக்ஷுவானவன் தன் ஆயுள் முடியும்வரையில் இப்படி வாழ்ந்து (ஆயுள் முடிந்தபின்) ப்3ரஹ்மத்தின் உலகை அடைகிறான். மறுபடி இங்கு திரும்பிவருகிறதில்லை.] என்று வேத3ம் சொன்ன வரம்பைமீறிப் போக வேண்டியிருக்கிற அதுவே குறை—என்றும் கூறினாராம்.

விக்கும்போது படுக்கையிலே கண்டு அனுப,விக்கலாயிருக்கை. (இல்லாதோம் கைப்பொருளும்) வேணுமாகில் அவன் பக்கல் உள்ளதுகொள்ள ப்ராப்தம்; "தன்னது" என்றிருக்கிற என்னை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணுகிறது ஏதுக்காக? தம்மையொழிய ஆஶ்ரயமில்லாத எங்களுடைய கைப்பொருளுண்டு-உடம்பு; அதுபோலே காணும் ஶேஷித்தது. "இல்லாதோம்" என்னாநிற்கச்செய்தே, "கைப்பொருள்" என்பானென்னென்னில்; அவன் விரும்பியிருக்கும் வழியாலே. (எய்துவானொத்துளனே) தம்முடம்பை ப்ராப்ய

(நளிரரங்கம்) தாபங்களை ஆற்றும் குளிர்ந்த அரங்கம். ஆத்,யாத்மிகம், ஆதி,பௌ,திகம், ஆதி,தை,விகம் என்னும் மூன்று வகைத் தாபங்களும் ஆறுவதற்குப் பரமபத,ம் போக வேண்டாம். இத்திருவரங்கமே அமையும் என்று கருத்து. (நாகணையான்) அடையப்படும் ப்ராப்யப்பொருளை. அனுப,விக்குப்போது பரமபத,நாத,னைப்போலே இருக்கையிலே கண்டனுப,விக்கவேண்டியிராமல் "கிடந்ததோர்கிடக்கை" [திருமாலை 23] என்கிறபடியே இருக்கையிற்காட்டிலும் அழகுமிக்க படுக்கையில் கிடக்கையில் கண்டு அனுப,விக்கலாம்படி இருக்கை. (இல்லாதோம் கைப்பொருளும்) ஒன்றுமில்லாத எங்களிடமிருக்கும் பொருளும். நாங்களும், எங்களிடமிருக்கும் பொருள்களும் அவனுடையதாயிருக்கையாலே நாங்கள் ஒன்றுமில்லாதவர்களே. ஆகையால் அவன் எதைக்கொண்டாலும் தன்னுடையதைக் கொண்டதாகவே முடியும். அப்படியிருக்கும்போது என்னுடைய பொருள்களையெல்லாம் அபஹரிப்பவன் போலே கார்யம் செய்வது எதற்காக? "ஒன்றுமில்லாதவர்கள்" என்று சொல்லிக்கொண்டே 'கைப்பொருள்' என்று சொல்லலாமோ? எனில்; அவன் என்னுடையது என்று நினைத்து என்னையும் என்னிடமிருப்பதையும் விரும்பியிருக்கிறானாகையாலே அவன் நினைவாலே 'கைப்பொருள்' என்கிறார். அன்றிக்கே 'இல்லாதோம்' என்றதற்கு "தம்மையொழிய வேறு தஞ்சமில்லாத நாங்கள்" என்றும் பொருள்கொள்ளலாம். இல்லாதோம் கைப்பொருளாவது அப்படிப்பட்ட எங்களோடு ஒட்டிக்கொண்டிருக்கும் உடம்பு. எஞ்சியிருப்பது அது



மென்று நினைத்திருப்பார் அது பெறுகைக்குப் படும்பாடத்தனையும், தாம் என்னுடம்பை ப்ராப்யமென்று, அது பெறுகைக்குப் படாநின்றார் தந்தாமுக்கில்லாதது பெற்றார் போலே, 5.

## பதினோராம் திருமொழி — ஆறாம் பாட்டு

கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் காவிரிநீர்
செய்ப்புரள வோடும் திருவரங்கச் செல்வனார்
எப்பொருட்கும் நின்றார்க்கு மெய்தாது நான்மறையின்
சொற்பொருளாய் நின்றாரென் மெய்ப்பொருளும்
கொண்டாரே.

பதவுரை:— **காவிரி நீர்**—காவிரியின் தீர்த்த,மானது, **செய் புரள ஓடும்**—பயிர் நிலங்களிலெல்லாம் ஓடிப்புரளும் படியான நீர் வளம் மிகுந்த, **திரு அரங்கம்**—திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கிற, **செல்வனார்**—ஸ்ரீமானாயும், **எப்பொருட்கும் நின்று**—எத்தனையேனும் தாழ்ந்தார்க்கும் எளியனாய் நின்று. **ஆர்க்கும் எய்தாது**—உயர்ந்தார்க்கும் கைப்படாமல், **நால் மறையின் சொல்பொருள் ஆய் நின்றார்**—நான்கு வேதங்களிலுள்ள சொற்களுக்கும் பொருளாய் நிற்பவருமான பெரியபெருமாள், **முன்னமே**—ஏற்கனவே, **கைப்பொருள்கள்**—கையிலுள்ள பொருள்களை எல்லாம், **கைக்கொண்டார்** — கொள்ளை கொண்டவராயிருந்துவைத்து, (இப்போது) **என் மெய்ப்பொருளும்**—எனது சரீரமாகிற வஸ்துவையும், **கொண்டார்**—கொள்ளைகொண்டார்.

ஒன்றே. (எய்துவானொத்துளனே) தே,ஹத்தையே ஆத்மாவாக நினைத்து அதையே ப்ராப்யமென்று நினைத்திருக்குமவர்கள். அதை உறுதிப்படுத்தப் படும் பாடு அவ்வளவையும், தாம் என்னுடம்பை ப்ராப்யமாக நினைத்து அதைப் பெறுகைக்குப் பட்டு, தமக்கு இல்லாததைப் பெற்றாற்போலே நினைத்திருக்கிறார். 5.

வ்யா:— ஆறும் பாட்டு. (கைப்பொருள்களித்யாதி$_3$) கைம்முதலுள்ளவையும் முன்னே கைக்கொண்டார். (காவிரி நீர் செய்ப்புரளவோடுந் திருவரங்கச்செல்வனார்) அசேதநமான ஜலமுங்கூட ரக்ஷ்ய வர்க்க$_3$த்தை ரக்ஷிக்கும் தே$_3$ஶமாய்த்து. தாம் பரமசேதநர். தே$_3$ஶமது. அத்$_3$தே$_3$ஶவாஸத்துக்கும் என்னை ஸர்வஸ்வஹரணம் பண்ணுகைக்கும் தமக்கு என்ன சேர்த்தியுண்டு?

(எப்பொருட்கும் நின்று) ஒரு வேடுவிச்சி, குரங்கு, (இடைச்சி) இவர்களுக்கு ஸௌலப$_4$னாய் நின்று.

---

6. *அவ:—* எனது சரீரத்னதக் கொள்ளைகொள்வான் போலே இருந்தவன் அதைக் கொள்ளைகொள்வதும் செய்தான் என்கிறாள் இப்பாட்டில்.

*வ்யா:— (கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார்)* என் உடலைச் சேர்ந்ததான வளை, நிறம் முதலானவற்றை ஏற்கனவே கொள்ளை கொண்டு விட்டார். அப்படிக் கொள்ளை கொண்டவர் யாரென்னில்: *(காவிரிநீர் செய்ப்புரள ஓடும் திருவரங்கச் செல்வனார்)* காவிரியின் நீரானது பயிர் நிலங்களிலெல்லாம் ஓடிப்புரளும்படியான நீர்வளம் மிகுந்த திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் செல்வர். அறிவற்ற நீருங்கூட, காக்கவேண்டிய பொருளைக்காக்கும் தேசமாயிற்று. தேசமோ அத்தகையது. தாமோ எல்லாமறிந்த பரமசேதனர். அந்த தேசத்தில் வாழ்வதற்கும், என்னிடமுள்ள அனைத்தையும் கொள்ளை கொள்வதற்கும் தமக்கு என்ன பொருத்தம் உண்டு?

*(எப்பொருட்கும் நின்று)* ஒரு வேடுவிச்சியாகிய ஶப$_3$ரி, ஒரு குரங்காகிய ஸுக்$_3$ரீவன், ஓரிடைச்சியாகிய யசோதை ஆகிய எத்தனையேனும் தாழ்ந்தவர்களுக்கும் எளியனாய் நின்று; அடுத்துள்ள "ஆர்க்கும் எய்தாது" என்ற தொடருக்குப் பிரதிகோடியாகையாலே, "எப்பொருட்கும் நின்று" என்ற தொடருக்கு 'எல்லாப் பொருள்களுக்கும் அந்தராத்மாவாக நின்று' என்று பொருள் கொள்ளுதல் பொருந்தாது. "எவ்வளவு தாழ்ந்தவர்களுக்கும் எளியனாய் நின்று" என்று பொருள்கொள்வதே பொருந்தும்.



(ஆர்க்குமெய்தாது) எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநரேயாகிலும் ஸ்வயத்நத்தால் ப்ராபிக்க நினைப்பார்க்கு து$_3$ஷ்ப்ராபராய், (நான்மறையித்யாதி$_3$) வேதை$_3$கஸமதி$_4$க$_3$ம்யராய் நின்றார். "வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு" என்னக்கடவதிறே. (என் மெய்ப்பொருளுங் கொண்டாரே) ஆத்மாத்மீயங்களிரண்டையும் கொண்டார்.

* வ்யாக்$_2$யாநாந்தரத்தில் வாக்யம்:- ௨ (கைப்பொருள் இத்யாதி$_3$) இவளுக்கு முலைப்பாலோடேகூடப் புகுந்ததிறே

---

*(ஆர்க்கும் எய்தாது)* எத்தனை உயர்ந்த அறிவுடையராயிருந்தாலும் தம் முயற்சியால் அடைய நினைப்பார்க்கு அடைய அரியராய், " ஆருமோர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான். ஆருமோர் நிலைமையன் என அறிவெளிய எம்பெருமான் " [திருவாய் 1-3-4] என்று நம்மாழ்வார் அருளியதையே 'ஆர்க்கும் எய்தாது' என்றும், 'எப்பொருட்கும் நின்று' என்றும் அருளுகிறாள். *(நான்மறையின் சொற்பொருளாய் நின்றார்)* நான்கு வேத$_3$ங்களிலுள்ள எல்லாச் சொற்களுக்கும் ஒரே பொருளாய் நின்றார்: *"வேதை$_3$ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்$_3$ய:"* [கீதை 15-15] [எல்லா வேத$_3$ங்களாலும் அறியப்படுபவன் நானே] என்று தானே அருளினானன்றோ; "வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு" [பெரியாழ். திரு 4-3-11] என்று இவளுடைய தகப்பனாரும் அருளிச்செய்தாரன்றோ. *(என் மெய்ப்பொருளும் கொண்டாரே)* என்னுடைய ஆத்மாவும், அதனைச் சேர்ந்ததான உடலும் ஆகிய இரண்டையும் கொள்ளை கொண்டார்.

*மற்றொரு வ்யாக்$_2$யானம்:– (கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார்)* முன்னமே — என் குழந்தைப் பருவத்திலேயே என்று கருத்து. இவளுக்குத் தாய் முலைப்பாலூட்டும் பொழுதே எம்பெருமானிடம் அன்பும் பெரியாழ்வாரால் ஊட்டப்பட்டதன்றோ.

---

* சென்ற பாட்டில் ' வ்யாக்$_2$யாநாந்தரத்தில் வார்த்தை ' முதல் இது வரை வ்யாக்$_2$யாநாந்தர வாக்யம் என்பர்.

ப$_4$க$_3$வத் ஸம்ப$_3$ந்த$_4$ம் 187.“सृष्टस्त्वं वनवासाय”(ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய) போலே, பிறக்கிற போதே வளையிழந்துகொண்டு போலேகாணும் பிறந்தது; இத்தனையும் சொல்லத்தகும்படி யோக்$_3$யவஸ்துவிறே. 17. “बाल्यात्प्रभृति सुस्निग्धः” (பா$_3$ல்யாத் ப்ரப்$_4$ருதி ஸுஸ்நிக்$_3$த$_4$:) அந்வயத்தில் த$_4$ரித்து, வ்யதிரே கத்தில் த$_4$ரியாமை இவளுக்கு ஸத்தாப்ரயுக்தமாய்த்து.

(காவிரியித்யாதி$_3$) ஸாத$_4$நம் ஸாத்$_4$யத்தோடு தோள் தீண்டியாய் வ்யபி$_4$சரியாத தே$_3$ஶத்திலே வர்த்திக்கிறவர் — ஸாத$_4$நாநுஷ்ட$_3$ானம் பண்ணிப் ப$_2$லம் விப$_2$லித்தல், ப்ரப$_3$ல

---

187. ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய ஸ்வநுரக்தஸ்
ஸுஹ்ருஜ்ஜநே ।
ராமே ப்ரமாத$_3$ம் மா கார்ஷீ: புத்ர! ப்$_4$ராதரி க$_3$ச்ச$_2$தி॥
[ரா- அ 40-5]

[குழந்தாய்! நீ வனத்தில் வஸிப்பதற்காகவே ஸ்ருஷ்டிக்கப் பட்டிருக்கிறாய்; உன்னுடைய ஸுஹ்ருத்தான ராமனிடம் மிகவும் அன்பு பூண்டவனாயிருக்கிறாய்; உன் தமையனாகிய ராமன் நடந்துசெல்லுகையில், (அந்த நடையழகில் ஈடுபட்டு) (அவனை ரக்ஷிப்பதில்) கவனமில்லாமல் இருந்துவிடாதே] என்று ஸுமித்ரை இளையபெருமாளுக்குக் குழந்தையாயிருக் கும் பொழுதே ராமப$_4$க்தியையும் தாய்ப்பாலோடு சேர்த்து ஊட்டினாற்போலே, இவ்வாண்டாளும் பிறக்கிறபோதே எம் பெருமானின் பிரிவால் மெலிந்து வளையிழந்துகொண்டே பிறந்தாள் போலும்! இப்படிச் சொல்லுவதும் இவளுக்கு மிகப் பொருந்துமே. உயர்வு நவிற்சியாகாதே. [பக்கம் 44ல் 17-ம் ப்ரமாணத்தின்படி] இளையபெருமாளைப்போலே எம்பெருமானோடு கூடினால் உயிர்த$_4$ரித்தும் பிரிந்தால் உயிர் த$_4$ரியாமலுமிருக்கை இவளுக்குப் பிறப்பிலிருந்தே உண்டான தாயிற்றே.

*(காவிரி நீர் செய்ப்புரள ஓடும் திருவரங்கச் செல்வனார்)* வயலை விளையச் செய்யும் ஸாத$_4$னமான காவிரி நீர் விளைவிக்கப் படும் வயலாகிற ஸாத்$_4$யத்தில் சென்று பாய்வதாய், இந்த நிலை ஏதோ ஒரு ஸமயத்திலல்லாமல் என்றுமே மாறாதிருக்கும் திருவரங்கத்திலே வாழ்கிறவர்; உபாஸகர்க்கு ஸாத$_4$நானுஷ்



கர்மப்ரதிருத்$_3$த$_4$மாய் நிற்றல் செய்கையன்றிக்கே கைப் புகுந்து வர்த்திக்கிற தே$_3$ஶம். விளையுமதிலே விளைவிக்குமது வவ்வால்நாற்றியாக வந்து விழாநிற்குமாய்த்து. உபாய ஸ்வீகாரம் பண்ணுகிறவனும் ஸ்வீகாரமும் கிடக்கச்செய்தே, தானே உபாயமாக வேண்டுகிறது, ப$_2$லத்தோடு வ்யபி$_4$ சரியாததொன்று உபாயமாக வேண்டுகையிறே. உபாய பு$_3$த்$_3$தி$_4$ பண்ணுகிற இவன்பக்கல் உபாயப$_4$ாவம் கிடை யாதே. ப$_2$லத்துக்குப் பூர்வக்ஷணவர்த்திகளானவற்றுக்கெல் லாம் உபாயப$_4$ாவமில்லையே, கரணஶரீராந்தர்க்க$_3$தமானதி லேயிறே உபாயப$_4$ாவம்கிடப்பது. அவ்வூரில் ஸம்ப$_3$ந்த$_4$த் தைச்சொல்லி வாழ்கிறவர்.

---

ட$_2$ானம் பண்ணிய பின்பும் ப$_2$லம் கிடைக்காமல் போகலாம்; வலிமைமிக்க கர்மங்களால் தடைபட்டும் நிற்கலாம்; இப்படி யல்லாமல் இத்திருவரங்கத்திலுள்ளவர்களுக்கு ஸாத்$_4$யமான எம் பெருமான் கையிலே புகுந்து நிற்கிறபடி. விளையும் நிலத் திலே விளைவிக்கும் காவிரிநீர்—தொங்கும் வவ்வால் திடீரென்று விழுவதுபோல் வந்து விழாநிற்கும். நிலத்தின் நீர்வளம் சொன்னபடி. இதற்கு ஸ்வாபதே$_3$ஶமாவது—எம்பெருமானாகிய உபாயத்தைப் பற்றுகிறவனும், அவன் பற்றுகிற பற்றும் இருந்தபோதிலும் எம்பெருமான் தானே உபாயமாக வேண்டு வது ‘ப$_2$லத்தைக் கொடுத்தல்லது நில்லாதது எதுவோ அதுவே உபாயம்’ என்பதே உபாயலக்ஷணம் ஆகையாலேயன்றோ ; எம்பெருமானை உபாயமென்று நினைக்கும் இவன், அந்நினைவி னாலேயே எம்பெருமானைப் பெற்றுவிட முடியாது; ஆகை யாலே இவனுக்கும் அந்த நினைவிற்கும் உபாயத்வம் இல்லையே, ப$_2$லத்தைத் தவறாமல் அளிக்கக்கூடிய எம்பெருமானுக்கு உபா யத்வம் கூடுமேயொழிய ப$_2$லம் கிடைப்பதற்கு முன்கணத்தில் இருக்கும் நினைவுக்கும், நினைப்பவனுக்கும் உபாயத்வம் இல்லையே. ப$_2$லனைப் பெற்றுத் தரும் தனிக்காரணமாயிருக்கும் எம்பெருமான் ஒருவனிடமேயன்றோ உபாயத்வம் கிடப்பது. காவிரிநீர் செய்ப்புரள ஓடுவது இஃதனைத்தையும் உணர்த்தி நிற்கிறது. *(திருவரங்கச்செல்வனார்)* அவ்வூரோடு தொடர்பி னாலே வாழ்ச்சிபெற்றிருப்பவர்.

b (எப்பொருளித்யாதி$_3$) ஒரு குரங்கு, வேடுவிச்சி, (இடைச்சி) இவர்களுக்கு ஸுலப$_4$னாய்நின்று. 188. "सुग्रीवं शरणं गतः" (ஸுக்$_3$ரீவம் ஶரணங்க$_3$த:) 189. "सुग्रीवं नाथमिच्छति" (ஸுக்$_3$ரீவம் நாத$_2$மிச்ச$_2$தி) என்கிறபடியே தாம் சொல்லுகையன்றிக்கே அருகுநின்றாருங்கூடச் சொல்லலாம்படி தம்மை அமைத்துவைக்கை. 189. "लोकनाथः पुरा भूत्वा" (லோகநாத$_2$: புரா பூ$_4$த்வா) லோகநாத$_2$னான இது மஹாராஜர்பக்கல் பாரதந்த்ர்யத்துக்கு கு$_3$ருகுலவாஸம் பண்ணினபடி. இப்பாரதந்த்ர்யம் கு$_3$ணமாகைக்குவேண்டும் ஸ்வாதந்த்ர்யமேயாய்த்து உள்ளது. எளியவன் தாழநின்றால் அது கு$_3$ணமாகாதிறே. 189. "इच्छति" (இச்ச$_2$தி) எல்லாரும்

(எப்பொருட்கும் நின்று) ஒரு குரங்காகிற ஸுக்$_3$ரீவன், வேடுவிச்சியாகிய ஶப$_3$ரி, இடைச்சியாகிய யசோதை ஆகிய இவர்களுக்த எளியனாய் நின்று,

**188. பிதா யஸ்ய புரா ஹ்யாஸீத் ஶரண்யோ த$_4$ர்மவத்ஸல: ।**
**தஸ்ய புத்ர: ஶரண்யஶ்ச ஸுக்$_3$ரீவம் ஶரணம் க$_3$த: ॥**
*[ரா-கி 4-19]*

[எவருடைய தந்தையானவர் நெடுங்காலமாக த$_4$ர்மத்தில் பேரன்புகொண்டவராய், ஶரணமடையத்தக்கவராயிருந்தாரோ, அவருடைய பிள்ளையாய், தாமும் ஶரணமடையத்தகுந்தவரான ராமபிரான் இப்போது ஸுக்$_3$ரீவனை ஶரணமடைந்தார்.]

**189. ஏஷ த$_3$த்வா ச வித்தாநி ப்ராப்ய சாநுத்தமம் யஶ: ।**
**லோகநாத$_2$: புரா பூ$_4$த்வா ஸுக்$_3$ரீவம் நாத$_2$மிச்ச$_2$தி॥**
*[ரா கி 4-18]*

[இந்தராமபிரான்எல்லாருக்கும்எல்லாப்பொருள்களையும் கொடுத்தும், மேலான கீர்த்தியை அடைந்தும், முன்னெல்லாம் லோகநாத$_2$னாக இருந்தவர் (இன்று) ஸுக்$_3$ரீவனை நாத$_2$னாக விரும்புகிறார்.] என்கிறபடியே தாம் சொல்லிக்கொள்வதல்லாமல் அருகிலிருப்பவர்களும் சொல்லலாம்படி தம்மை எளியராக்கி

ஆறும் பாட்டு. (கைப்பொருள்களித்யாதி$_3$) b "எப்பொருள்"-எல்லாப் பதா$_3$ர்த்த$_2$ங்களும்.



தந்தாமுக்கு இல்லாதத்தைஆசைப்படுமித்தனையிறே. அநாத$_2$னிறேயிவன். இடைச்சிக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி நின்றும், வேடுவிச்சிக்குக் கிட்டி அஸாத$_4$ாரணர் பண்ணும் பரிசர்யைகள் பண்ணலாம்படி நின்றும் போரும்படியும்.

ஒருநாள் பரத்வமே பிடித்து ஸௌலப்$_4$யத்தளவும் செல்ல உபபாதி$_3$த்தருள அத்தைக்கேட்டு எம்பார், கண்ணுங் கண்ணீருமாய் வித்$_3$த$_4$ராயிருக்க, அவரைப் பார்த்தருளி, "அவனுடைய ஸௌலப்$_4$யத்தைச் சொன்னவாறே நாட்டார்,

வைத்தபடி. சற்றுமுன் எடுத்த பிரமாணத்தின்படி உலகுக்கெல்லாம் ஸ்வாமியாயிருந்தது ஸுக்$_3$ரீவனிடம் அடங்கி நடப்பதற்கு உலகினரிடம் கு$_3$ருகுலவாஸம் செய்தபடி. பாரதந்த்ரியமும் ஸ்வாதந்த்ரியமும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையாயிற்றே எனில்: இப்பாரதந்த்ரியம் கு$_3$ணமாவதற்கு வேண்டிய அளவு ஸ்வாதந்த்ரியமே இவனிடம் உள்ளது. தலைமையேயில்லாத எளியவன் ஒருவன் தாழநின்றால் அது கு$_3$ணமாகாதன்றோ? ஆகையால் அளவோடு கூடிய ஸ்வாதந்த்ரியமும் பாரதந்த்ரியமும் முரண்பட்டவையல்ல. முன் எடுத்த பிரமாணத்தில் 'ஸுக்$_3$ரீவனை நாத$_2$னாக விரும்புகிறார்' என்று வந்துள்ளது. எவருமே தம்மிடம் இல்லாததைத்தானே ஆசைப்படுவார்கள். தனக்கொரு நாத$_2$னற்றவனன்றோ இவன். ஆகையால் தனக்கொரு நாத$_2$ன் கிடைக்க இவன் ஆசைப்படுகிறான் என்று கருத்து. இடைச்சியான யசோதைக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி நின்றதையும், வேடுவிச்சியான ஶப$_3$ரிக்கு—அந்தரங்க$_3$ரான இளையபெருமாள் போல்வார் பண்ணும் கைங்கர்யங்களை அணுகி நின்று பண்ணலாம்படி நின்றதையும் 'எப்பொருட்கும் நின்று' என்ற தொடர் உணர்த்துகிறது.

ஒருநாள் (பரத்வம்) மேன்மை தொடங்கி, ஸௌலப்$_4$யம் (எளிமை) அளவாக எம்பெருமானார் விளக்கியருளினார்; அதைக் கேட்ட எம்பார் கண்ணுங்கண்ணீருமாய் ஈடுபட்டிருக்க, எம்பெருமானார் அவரைக் கடாக்ஷித்து, "அவனுடைய எளிமையைச் சொன்னால் உலகிலுள்ளவர்கள் 'இத்தனை எளி

'இத்தனை எளியவனோ' என்று கைவிட்டுப்போனார்கள். ப4ாக்3யஹாநியாலே, 'அறப்பெரியவன் இப்படி எளியவனுவதே!' என்று நெருங்குகைக்குடலாய்த்து உமக்கொருவர்க்கும்'' என்றருளிச்செய்தருளினராம். 190. ''वानरेन्द्रस्य प्रसादमभिकाङ्क्षते'' (வாநரேந்த்3ரஸ்ய ப்ரஸாத3மபி4காங்க்ஷதே). 191.''एतद्व्रतम् मम''(ஏதத்3வ்ரதம் மம) 192 ''न त्यजेयं कथञ्चन'' (ந த்யஜேயம் கத2ஞ்சந) என்றதுக்கு ''இருவரும் ஶரணாக3தபரித்ராணம் பண்ணுகிறார்கள்'' என்று ப4ட்டர்; இவர், 188. ''सुग्रीवं शरणं गतः''(ஸுக்3ரீவம் ஶரணங்க3த:)என்றார்; அவன் 193. ''राघवं शरणं गतः'' (ராக4வம் ஶரணங்க3த:)

யவனோ? ' என்று விலகிப்போனார்கள். அவர்கட்கு பா4க்3யமில்லாமையாலே. 'மிகப்பெரியவனான இவன் இவ்வளவு எளியனுவதே!' என்று அவனை அணுகுவதற்கே அவனது எளிமை காரணமாகிறது உமக்கு ஒருவர்க்கும்'' என்று அருளிச்செய்தாராம்.

190. யஸ்ய ப்ரஸாதே3 ஸததம் ப்ரஸீதே3யுரிமா: ப்ரஜா: ।
ஸ ராமோ வாநரேந்த்3ரஸ்ய ப்ரஸாத3மபி4காங்க்ஷதே ॥
[ரா-கி 4-21]

[எவர் உகந்தாராகில் இந்த ஜநங்களெல்லாம் என்றுமுகப்பார்களோ, அந்த ராமபிரான் வானரர்தலைவனான ஸுக்3ரீவனின் உகப்பை விரும்புகிறார்.] என்கிற பிரமாணம் இங்கு அநுஸந்தி4க்கத்தக்கது. [பக்கம் 492ல் 151வது ப்ரமாணத்தின்படியும், பக்கம் 491ல் 149வது ப்ரமாணத்தின்படியும்] ஸ்ரீராமபிரான் ஸுக்3ரீவனோடு முரண்படுவதாகத் தோன்றுகிறதே எனில்: '' 'இருவரும் அவரவரைச் சரணடைந்தவரை ரக்ஷிக்க முற்படுகிறார்கள்' ஆகையாலே முரண் இல்லை'' என்று ப4ட்டர் நிர்வஹிப்பர். [பக்கம் 620ல் 188வது ப்ரமாணத்தின்படி] ராமபிரான் ஸுக்3ரீவனைச் சரணடைந்தவர். அவரை விபீ4ஷணனிடமிருந்து ரக்ஷிக்கப்பாடுபடுகிறான் ஸுக்3ரீவன்.

193. ஸோऽஹம் பருஷிதஸ்தேந தா3ஸவச்சாவமாநித: ।
த்யக்த்வா புத்ராம்ஶ்ச தா3ராம்ஶ்ச ராக4வம்
ஶரணம் க3த: ॥ [ரா-யு 17-16]



என்றான்; இனி யாரை யார்விட? விபீ4ஷணனை ஸ்வீகரிக்கையாவது-பெருமாளை அவன் கையிலே காட்டிக்கொடுக்கை என்றிருக்கிறாரவர். அவர் முதிரநிற்க நமக்குடலென்றிருக்கிறாராய்த்து இவர்:- நாம் முன்பே ப்ரதிஜ்ஞைபண்ணினோம்; இனி அது தலைக்கட்டுமித்தனையிறே என்கிறார்.

(c ஆர்க்கும் d எய்தாது) எத்தனையேனும் அதிஶயிதஜ்ஞாநரான ப்3ரஹ்மாதி3களுக்கும் கிட்ட அரியனாயிருக்கும். ''பெண்ணுலாம் சடையினானும்'' இத்யாதி3. (ஆர்க்கும்

[அப்படிப்பட்ட நான் அந்த ராவணனால் கடுமையாக நடத்தப்பட்டு, வேலைக்காரனைப்போலே அவமதிக்கப்பட்டு, என் பிள்ளை பெண்டுகளையெல்லாம் விட்டு ராக4வனை ஶரணமடைகிறேன்.] என்கிற ப்ரமாணத்தின்படி விபீ4ஷணன் ராமபிரானைச் சரணடைந்தவன்; அவனை ரக்ஷிக்க ராமபிரான் பாடுபடுகிறான். தன்னைச் சரணடைந்த ராமபிரானை ஸுக்3ரீவனும்விடமாட்டான்; தன்னைச்சரணடைந்த விபீ4ஷணனை ராமபிரானும் கைவிடமாட்டான். விபீ4ஷணனை ஏற்றுக்கொள்வது ஸ்ரீராமபிரானை அவன் கையிலே காட்டிக் கொடுப்பதாகி ஸ்ரீராமனுக்கு ஆபத்துவிளைக்கும் என்று நினைக்கிறான் ஸுக்3ரீவன். ஸுக்3ரீவனை இசைவித்து விபீ4ஷணனை ஏற்றுக்கொள்வதே தமக்குத் தக்கது என்று நினைக்கிறான் ஸ்ரீராமன், ஸுக்3ரீவனை இசைவிப்பதற்காக ''ஶரணடைந்தவனை ரக்ஷிப்பதென்பது நமக்கு நீண்ட நாளாக ஏற்றுக்கொண்ட பிரதிஜ்ஞையாகும். என்னிடம் பரிவாலே அதைத் தடுக்காமல் நீரும் இசைந்து அதை நிறைவேற்றிவைக்க வேண்டுமன்றோ'' என்று ஸுக்3ரீவனிடம் வேண்டுகிறார் ஸ்ரீராமபிரான்.

மிகத் தாழ்ந்தவர்களுக்கும் தன்னை எளியனாக்கிக் கொண்டிருக்கும் இவனுக்குப் பெருமையில்லையோ? எனில்: (ஆர்க்கும் எய்தாது) மிகுந்த அறிவையுடைய பிரமன் முதலானார்க்கும் அணுகமுடியாதவனாயிருக்கும் பெருமையையுடையவன். ''பெண்ணுலாம் சடையினானும் பிரமனும் உன்னைக் காண்பான் எண்ணிலா ஊழியூழி தவம் செய்தார்'' [திருமாலை 44] என்று

c ''ஆர்க்கும்''-எத்தனையேனும் அறிவுடையார்க்கும்.
d ''எய்தாது'' - கிட்டாது;

இத்யாதி$_{3}$) ஸர்வாந்தராத்மாவாய் நின்று எய்தானென்றுமாம். e (நான்மறை இத்யாதி$_{3}$) வேத$_{3}$ார்த்த$_{2}$ம்; வேத$_{3}$ ப்ரதிபாத்$_{3}$யன். f (என்னித்யாதி$_{3}$) ஓலைப்புறத்திற் கேட்டுப் போரும் வஸ்து கண்ணுக்கிலக்காய் வந்து கிட்டி இட்டிடிட்டுக்கொள்ளும் உடம்பைக் கொண்டு; தன்னை பு$_{4}$ஜிக்குமவர்கள் ஸ்வரூபங்களைவிட்டுத் திருமேனியை விரும்புமாப்போலே, தானும் ததீ$_{3}$ய விஷயத்தில் ஸ்வரூபாதி$_{3}$களைவிட்டு உடம்பையாய்த்து விரும்புவது. இருவரும் உடம்பையாய்த்து விரும்புவது. திருமாலையாண்டான், "ப்ரக்ருதி ப்ராக்ருதங்களை த்யாஜ்யமென்று கேட்டுப் போராநிற்கச்செய்தேயும், "இத்தை விடவேண்டியிருக்கிறதில்லை, ஆளவந்தார்ஸ்ரீபாத$_{3}$த்தை ஆஸ்ரயிக்கைக்குறுப்பாமென்று ஆத$_{3}$ரியாநின்றேன்'' என்றாராம். 6.

---

அருளிச்செய்தாரன்றோ தொண்டரடிப்பொடியாழ்வார். *(எப்பொருட்கும் நின்று ஆர்க்கு மெய்தாது)* எல்லாப் பொருட்கும் அந்தர்யாமியாய் நின்று அக்காரணத்தாலேயே எவராலும் அறியப்படாதவனுயும் இருப்பான் என்றும் பொருள் கொள்ளலாம். *(நான்மறையின் சொற்பொருளாய் நின்ருர்)* வேதப் பொருளாய் நின்ருர் வேதத்தின் ஒவ்வொரு சொல்லாலும் சொல்லப்படுபவராய் நின்ருர் என்றபடி. *(என் மெய்ப்பொருளும் கொண்டாரே)* வேத$_{3}$த்தால் கேட்டே அறியப்படும் பரமாத்மா கண்ணுக்கு முன்னே வந்து தோன்றி, நம்மோடு விடவொண்ணுத உறவையுடையதாய் நாம் காரியம்கொள்ளும் நம்முடம்பைக் கைக்கொண்டார். தம்மை அனுப$_{4}$விக்கிறவர்கள் ஸ்வரூபம், கு$_{3}$ணம் முதலானவற்றைவிட்டுத் திருமேனியை விரும்புவதுபோலே, தாமும் தம்மடியார் விஷயத்தில் ஸ்வரூபம், கு$_{3}$ணம் முதலானவற்றைவிட்டு உடம்பையேயன்ருே விரும்புவது. இவள் அவனுடைய உடம்பை விரும்புவதுபோல அவனும் இவளது உடம்பையே விரும்புகிருன்.

---

e நான்மறையாகிற சொல்லுக்குப் பொருளாய் நின்ருரென்றபடி f ''மெய்ப்பொருள்'' ஆத்மா உ ''கைப்பொருள்'' ஆத்மீயம். ஆக கீழ்ச்சொன்ன கைப்பொருளும் ஆத்மீயங்கள். 6.



## பதிஞேராம் திருமொழி—ஏழாம் பாட்டு

**உண்ணு துறங்கா(து) ஒலிகடலை யூடறுத்துப்**
**பெண்ணுக்கை யாப்புண்டு தாமுற்ற பேதெல்லாம்**
**திண்ணர் மதிள்சூழ் திருவரங்கச் செல்வனர்**
**எண்ணுதே தம்முடைய நன்மைகளே யெண்ணுவரே.**

பதவுரை:— **திண் ஆர் மதிள் சூழ்** — (மஹா ப்ரளயத்துக்கும் அழியாதபடி) திண்மை பொருந்திய மதிள்களாலே சூழப்பட்ட, **திரு அரங்கம்** — கோயிலிலே எழுந்தருளியிருக்கிற, **செல்வனர்** — ஸ்ரிய:பதியானபெருமாள், (ஸ்ரீராமனுய்த் திருவவதரித்தபோது) **பெண் ஆக்கை ஆப்புண்டு** — (சீதையென்கிற ஒரு) பெண்ணின் சரீரத்தில் ஆசைப்பட்டு, **உண்ணுது** — உண்ணுமலும், **உறங்காது** — உறங்காமலும் (வருந்தி), **ஒலி கடலை** — (திரைக்கிளப்பத்தாலே) கோ$_{4}$ஷிக்கின்ற கடலை, **ஊடு அறுத்து** — இடையறும்படி பண்ணி [அணைகட்டி], **தாம் உற்ற** —(இப்படி) தாம் அடைந்த, **பேது எல்லாம்** — எளிமைகளை எல்லாம், **எண்ணுது** — மறந்துபோய், (இப்போது) **தம்முடைய** — தம்முடைய, **நன்மைகளே** — பெருமைகளையே, **எண்ணுவர்** — எண்ணுநின்ருர்.

---

திருமாலையாண்டான் "மூலப்ரக்ருதியும் அதிலிருந்து தோன்றும் மற்ற அசேதனப் பொருள்களும் கைவிடத்தக்கவை என்று ஶாஸ்த்ரங்களில் கேட்டிருக்கச் செய்தேயும், ப்ராக்ருதமான இவ்வுடலை விடவேண்டிய அவசியமில்லை; ஆளவந்தார் திருவடிகளை அடைவதற்கு உதவுகிறது என்ற நினைவாலே அடியேன் இவ்வுடலை விரும்பவே செய்கிறேன்'' என்று அருளியது இங்கு அனுஸந்தி$_{4}$க்கத்தக்கது. 6.

7. அவ:—தாம் ஸீதாப் பிராட்டியைப் பிரிந்து பட்ட பாட்டையெல்லாம் மறந்து தம்முடைய பெருமைகளையே எண்ணி என்னைப் பாடுபடுத்தி, அதைத் தமக்குப் பெருமையாக எண்ணுகிருர் என்கிருள்.

வ்யா:— ஏழாம் பாட்டு. (உண்ணாது) 34. "न मांसं राघवो भुङ्क्ते न चापि मधु सेवते' (ந மாம்ஸம் ராக$_4$வோ பு$_4$ங்க்தே ந சாபி மது$_4$ ஸேவதே) என்கிறபடியே a பார்த்துப் பரிந்தூட்டு மவள் போனால், இனி யார் அவரைப் பரிந்தூட்ட? b மாமலர் மங்கை மணநோக்கமுண்டானிறே. அவள் போனால் இவனுக்கு ஊணில்லையிறே. (உறங்காது) 35. "अनिद्रस्सततं रामः'' (அநித்$_3$ரஸ்ஸததம் ராம:) என்கிறபடியே கண்ணுறக்கமற்று; ஊணுமுறக்கமுமற்று, c 188. "सुग्रीवं शरणं गतः" (ஸுக்$_3$ரீவம் ஶரணம் க$_3$த:) என்று கண்ட காபேயர் கால்களிலே விழுந்து. (ஒலிகடலை d ஊடறுத்து) ஓதம் கிளர்ந்த கடலை ஊடறுத்து. e கூற்றறுத்தடைத்து. 194. "समुद्रं राघवो राजा शरणं गन्तुमर्हति" (ஸமுத்$_3$ரம் ராக$_4$வோ ராஜா ஶரணம் க$_3$ந்து

---

வ்யா:— (உண்ணாது) [பக்கம் 114ல் 34-வது ப்ரமாணத்தின்படி] பார்த்துப் பார்த்துப் பரிவுடன் உணவூட்டுகிற ஸீதை பிரிந்துவிட்டபடியாலே இனி யார் அவருக்குப் பரிவுடன் ஊட்ட முடியும்? தம்பி இல்லையோ? எனில்: "மாமலர் மங்கை மணநோக்கமுண்டான்" [பெரியதிரு 8-10-1] என்கிறபடியே அவளுடைய நோக்கே இவனுக்கு உணவாகையாலே அவள் பிரிந்த பிறகு இவனுக்கு உணவு இல்லையன்றோ. (*உறங்காது*) [பக்கம் 115ல் 35-வது ப்ரமாணத்தின்படி] கண்ணுறங்குவதுமற்று. (*உண்ணாது உறங்காது*) ஊணும் உறக்கமுமில்லாமல், [பக்கம் 620ல் 188வது ப்ரமாணத்தின்படி] கண்ட குரங்குகள் காலிலே விழுந்து. (*ஒலிகடலை ஊடறுத்து*) அலையெறிவதாலே ஓசையுள்ள கடலை ஊடுருவி அணைகட்டி; அதாவது அதை இரு கூறுகப்பிரித்து அணைகட்டி என்றபடி.

**194. ஏவமுக்தஸ்து த$_4$ர்மஜ்ஞ: ப்ரத்யுவாச விபீ$_4$ஷண:।**
**ஸமுத்$_3$ரம் ராக$_4$வோ ராஜா ஶரணம் க$_3$ந்துமர்ஹதி॥**
[ரா-யு 19-30]

---

ஏழாம் பாட்டு. d ஊடு-நடு. g ஆக்கை-ஶரீரம். a(பார்த்து) நோக்கி; b அவனுக்கு ஊணே? என்ன அருளிச் செய்கிறார்



மர்ஹதி) என்று f ராக்ஷஸனுக்கு ஶிஷ்யராய்ப்புக்கு, அவன் சொல்லக் கடலை ஶரணம்புக்கு. g (பெண்ணாக்கையாப்புண்டு) பிராட்டிவடிவிலே ப$_3$த்$_3$த$_4$ராய். ஒரு பெண் கொடியாலே கட்டுண்டு. h (தாமுற்ற h$_2$பேதெல்லாம்) தாம் பட்ட எளிமையெல்லாமெண்ணாதே. i (திண்ணாரித்யாதி$_3$) த்$_3$ருட$_4$மாய் ஓங்கியிருப்பதான மதிளாலே சூழப்பட்ட திருவரங்கந் திருப்பதியிலே வாஸமாகிற செல்வத்தையுடையவர். 195.

---

[தருமமறிந்தவனான விபீ$_4$ஷணன், இப்படிச் சொல்லப்பட்டவனாய், "ராஜாவான ராக$_4$வர் ஸமுத்$_3$ரத்தை ஶரணமடைய வேண்டும்" என்று பதில் சொன்னான்.] என்கிறபடியே ராக்ஷஸ ஜாதியிற் பிறந்த விபீ$_4$ஷணனுக்கு ஶிஷ்யராகி அவன் சொன்னபடி கடலரசனைச் சரணம் புகுந்து பட்ட பாட்டையெல்லாம் நினைக்கிறது.

(*பெண்ணாக்கை ஆப்புண்டு*) பெண்கொடியான பிராட்டியின் திருமேனியிலே கட்டுண்டவராய். 'ஆக்கை' என்னும் சொல் சரீரத்தையும் கொடியையும் குறிக்குமாகையால், ஒரு பெண்ணாகிற கற்பகக்கொடியாலே கட்டுண்டது பெருமாளாகிற கற்பக மரம் என்றபடி. (*தாமுற்ற பேதெல்லாம் எண்ணாதே*) தாம் பட்ட எளிமைகளையெல்லாம் நினையாதே. (*திண்ணார் மதிள்சூழ் திருவரங்கச் செல்வனார்*) உறுதியாய் ஓங்கியிருப்பதான மதிள்களாலே சூழப்பட்ட திருவரங்கமாகிற திருப்பதியிலே வாழுகையாகிற செல்வத்தையுடையவர். (*பேதெல்லாம் எண்ணாதே*)

---

(மாமலரித்யாதி$_3$) h$_2$ "பேது"-து$_2$:க்க$_2$ம். c அர்த்த$_2$ாத் அருளிச் செய்கிறார் (ஸுக்$_3$ரீவம்இத்யாதி$_3$) c, f, h 'தாமுற்றபேதெல்லாம்' என்று அவனுடைய எளிமை சொல்லுகையாலே, அத்தைப் பற்ற (ஸுக்$_3$ரீவம் ஶரணம் க$_3$த:) என்றும் (ராக்ஷஸனுக்கு ஶிஷ்யராய்ப்புக்கு) என்றும் சொல்லுகிறது. e (கூற்றறுத்தடைத்து) என்றது-கூறிட்டடைத்து என்றபடி. அதாவது— இரு கூறுகப்பண்ணி. g "ஆக்கை"-ஶரீரமாதல்; கொடியாதல். i "திண்"-வலி. j "எண்ணம்"-நினைவு. 7.

“धैर्येण हिमवानिव” (தை4ர்யேண ஹிமவாநிவ) என்னக்கடவ தமக்கு தை4ர்யமில்லாமையை எண்ணுதே. (தம்முடைய நன்மைகளே j எண்ணுவரே) ‘நம்மைப்பிரிந்தார்—நோன்பு நோற்பது. காமன் காலிலே விழுவது. கூடலிழைப்பது. இத்யாதி3களைச் செய்யாநிற்பர்’ என்று தம்முடைய வீறுகளை எண்ணுநிற்பர்.

வ்யாக்2யாநாந்தரத்தில் வாக்யம்:—(உண்ணுது) தே3ஹ யாத்ரைதான் பேணிஞரோ? தமக்குள்ளது பிறர்க்காக்குகை குற்றமோ? (ஆக்கையாப்புண்டு) உடம்பாராய்ந்து. அதுக்கு

---

195. ஸ ச ஸர்வகு3ணோபேதః கௌஸல்யாநந்த3வர்த்த4நः।
ஸமுத்3ர இவ கா3ம்பீ4ர்யே தை4ர்யேண ஹிமவாநிவ ॥
[ரா-பா3 1.17]

[கௌஸல்யைக்கு ஆநந்த3த்தை வளர்க்கும் அந்த ராமன் எல்லா குணங்களும் நிறைந்தவன்; கா3ம்பீ4ர்யத்தில் ஸமுத்ரம் போன்றவன்; தை4ர்யத்தில் ஹிமவானைப் போன்றவன்.] என்கிறபடியே இமயமலைபோல் அசையாத மனவலிமை யுடையவர் அவ்வலிமையை இழந்ததை நினையாமல். (*தம்முடைய நன்மைகளே எண்ணுவரே*) எனது நிலையைப் பார்த்து ‘‘நம்மைப் பிரிந்தவர்கள் நோன்பு நோற்பது, காமன் காலிலே விழுவது, கூடலிழைப்பது, தூதுவிடுவது முதலான பாடுகளைப் படுகிறுர்கள்’’ என்று தம்முடைய பெருமைகளையே நினைக் கின்றுர். ஸீதைதிறத்தில் தாம்பட்ட பாடுகளை மறந்து, திருவ ரங்கத்தில் உப4யவிபூ4தி நிர்வாஹகனுய்ப் பள்ளிகொண்டி ருக்கும் செல்வச் செருக்காலே நான் இவரைப் பிரிந்து படும் பாடுகளைத் தமக்குப் பெருமையாக நினைத்திருக்கிறுரே என்கிறுள்.

மற்றொரு வ்யாக்2யானத்தில் வார்த்தை:— (*உண்ணுது*) ஒரு பெண்ணைப் பிரிந்து உண்ணுது உறங்காதிருந்த தம் நிலையைக் காட்டி என்னை மயக்கி, தம்மைப் பிரிந்து நான் உண்ணுது உறங்காதிருக்கும்படி செய்தது இவர் குற்றமேயல்லது என் குற்றமல்லவே. (*ஆக்கையாப்புண்டு*) பிராட்டியின் உடம்பை



அவ்வருகு போகமாட்டாதே. (தாமுற்ற) வஸிஷ்ட2 ஶிஷ்யன் பட்டபடி பார்த்தால் அறிவு நுழையாத பெண்பிறந்தார்க்கு எத்தனைபடவேணும்? தம்பிக்கன்றே சொல்லுவது அபி4மதா லாப4ம். (எண்ணுதே) ஊரும் மதிளுமாய் வாழப்புக்கால் பட்டது மறப்பார்களோ? (திருவரங்கச்செல்வனுர்) ஐஶ்வர்யச் செருக்கிறே. 7.

### பதினேராம் திருமொழி—எட்டாம் பாட்டு

**பாசிதூர்த் துக்கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள்**
**மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாம்**
**தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனுர்**
**பேசி யிருப்பனகள் பேர்க்கவும் பேராவே.**

**பதவுரை:— பண்டு ஒருநாள்** — முன்னொரு காலத்தில், **பாசி தூர்த்து கிடந்த** — பாசிபடர்ந்து கிடந்த, **பார் மகட்கு** — ஸ்ரீ பூ4மிப்பிராட்டிக்காக, **மாசு உடம்பில் நீர்வாரா மானம் இலா பன்றி ஆம்** — அழுக்கேறின சரீரத்தில் ஜலம் ஒழுகாநிற்கும் வெட்கமில்லாத வராஹவடிவு கொண்ட, **தேசு உடைய தேவர்**—தேஜஸ்ஸையுடைய கடவுளாகிய, **திருஅரங் கச் செல்வனுர்**-ஸ்ரீரங்க3நாத2ன். **பேசி இருப்பனகள்**-(முன்பு) சொல்லியிருக்கும் பேச்சுக்களானவை, **பேர்க்கவும் பேரா**— (நெஞ்சில்நின்றும்) பேர்க்கப்பார்த்தாலும் பேரமாட்டாதவை.

---

நினைத்து அதிலே கட்டுண்டு, அதற்குள்ளிருக்கும் ஆத்ம ஸ்வருபத்திலும் ஆத்மகு3ணங்களிலும் ஈடுபடமாட்டாதவரா யன்றே இருந்தார். (*தாமுற்ற*) வஸிஷ்ட2ருடைய ஶிஷ்யரான தாம் காமவசப்பட்டுப் பட்ட பாடுகளைப் பார்த்தால், அறிவில் லாத என்னைப்போலப் பெண்ணுய்ப் பிறந்தவள் எத்தனை பாடு படவேண்டும்? “ *த4ந்யா லக்ஷ்மண ஸேவந்தே பம்போபவந மாருதம்* ” [ரா-கி 1-115] [பம்பாநதிச் சோலையில் காற்றை பா4க்3யஶாலிகளே அனுப4விக்கமுடியும்] என்று தாம் பிராட்டி யைப் பிரிந்து பட்டபாட்டைத் தம்பியிடமே சொன்னுரன்றே. (எண்ணுதே) இப்போது ஊரும் மதிளுமாய் வாழும் செருக்கி ஞல், ஏற்கனவே பட்டபாட்டையும் மறக்கலாமோ? செருக் குண்டோ ? எனில், (*திருவரங்கச் செல்வனுர்*) செல்வச் செருக்கன்றே இவரை மாற்றிவிட்டது. 7.

அவ:— எட்டாம் பாட்டு a "'தாமுற்ற பேதெல்லாம் எண்ணுதே தம்முடைய நன்மைகளேயெண்ணுவர்' என்று- நீ இங்ஙனே இன்னுதாகக்கடவையோ ? இழந்தவை மறந்து வருந்தியாகிலும் கு$_3$ணஜ்ஞாநத்தாலே த$_4$ரித்திருக்கவேண்டாவோ?" என்ன; 'நானும் மறந்து த$_4$ரிக்கலாமோவென்று பாரா நின்றேன்; என்னுல் மறக்கலாயிருக்கிறதில்லை' என்கிருள்.

வ்யா:— (பாசி தூர்த்துக் கிடந்த பார்மகட்கு) பூ$_4$மியானது ப்ரளயங்கொண்டு நீர்ச்செழும்பேறிக்கிடந்ததாய்த்து; b இதுதான் இதுக்கு அபி$_4$மாநிநியான ஸ்ரீபூ$_4$மிப் பிராட்டி உடம்பிலேறின அழுக்காயிருக்குமிறே — இது அவளுக்கு ப்ரகாரமாகையாலே. ரஸிகராயிருப்பார் ப்ரணயிநிகளுடம்பு அழுக்கேறியிருக்கத் தங்கள் உடம்பு பேணிக்குளித்திரார்

---

8. *அவ:—* "'தாமுற்ற பேதெல்லாம் எண்ணுதே தம்முடைய நன்மைகளே எண்ணுவரே' என்று நீ இவ்வண்ணமாக வருந்தி எம்பெருமானைத் தூற்றலாமோ? இழந்தவைகளை மறந்து, முயன்ருகிலும் அவனது கு$_3$ணங்களை நினைத்து த$_4$ரித்திருக்கவேண்டாமோ ?" என்று அருகிலுள்ளார் கூற, "நானும் அவனை மறந்து உயிர்த$_4$ரிக்கலாமோ என்று முயல்கின்றேன். என்னுல் மறக்கமுடியவில்லையே" என்கிருள்.

*வ்யா:— (பாசி தூர்த்துக் கிடந்த பார்மகட்கு)* ப்ரளய ஜலத்தில் நெடுங்காலம் மூழ்கி, பூ$_4$மியானது நீர்ப்பாசி ஏறிக் கிடந்ததாயிற்று. "பாருக்கல்லவோ பாசி ஏறிற்று. 'பார்மகள்' என்று பூ$_4$மிப் பிராட்டியைச் சொல்லலாமோ?" எனில், பாராகிற பூ$_4$மியை, பார்மகளாகிற இவள் தன் உடம்பாக அபி$_4$மானிக்கையாலே, பார்மேல் ஏறிக்கிடந்த பாசி பூ$_4$மிப் பிராட்டியின் உடம்பில் ஏறின அழுக்காயிருக்குமன்ருே. இப்

---

அவ:— எட்டாம் பாட்டு. (பாசி இத்யாதி) a"'பேர்க்கவும் பேராவே" என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிருர் (தாமுற்ற பேதெல்லாமித்யாதி$_3$) b பாருக்கன்ருே பாசி, "பார்மகள்" என்று பூ$_4$மிப்பிராட்டியைச் சொல்லுவானென்? என்ன



களிறே; அப்படியே ஸ்ரீ பூ$_4$மிப்பிராட்டியுடம்பு அழுக்கேறினவாறே தானும் நீருக்கும் சேற்றுக்கும் இருயாத வடிவைக் கொண்டாளுய்த்து. (பண்டொருநாள்) c அன்றுமொருநாள்; இன்றுமொருநாளேதான்? d (மாசித்யாதி$_3$) e அப்ராக்ருத தி$_3$வ்யஸம்ஸ்தா$_2$நத்தை— e$_2$ "அழுக்குடம்பு" என்று சொல்லுமவர்கள்உடம்பளவிலுமன்றிக்கே.தே$_3$ஹாத்மாபி$_4$மாநம் பண்ணி உடம்பையே விரும்பியிருக்குமவர்கள் உடம்புக்கும் f அவ்வருகேயாம்படி ஆக்கினுன்; உடம்பு அழுக்கேறிற்று என்று லஜ்ஜிக்கவேண்டாத ஜந்மத்தையாய்த்து ஏறிட்டுக்கொண்டது.

---

பாரையிட்டு நிரூபிக்கவேண்டும்படி இது அவளை விட்டுப்பிரியாத ஶரீரமாயிருக்கையாலேயன்ருே 'பூ$_4$மிப்பிராட்டி' என்று இவள் பெயர் பெற்றது. ரஸிகராயிருப்பவர்கள் தங்களுடைய அன்பு மனைவியின் உடம்பு அழுக்கேறியிருந்தால் தாங்கள் தங்கள் உடம்பைச் சீர்திருத்திக் குளித்திருக்கமாட்டார்களன்ருே. அப்படியே பூ$_4$மிப்பிராட்டியின் உடம்பு பாசியேறினவுடன் தானும் நீருக்கும் சேற்றுக்கும் கூசாத பன்றியுருவைக் கொண்டானுயிற்று. *(பண்டொருநாள்)* அவரோடு அணையப் பெற்ற அதுவும் ஒருநாள், பிரிந்திருக்கும் இதுவும் ஒரு நாளோ? *(மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப்பன்றியாம்)* "அழுக்குடம்பு" [திருவிருத்தம் 1] என்று சொல்லும் முமுக்ஷுக்களுடைய உடம்பிலும் தாழ்ந்ததாய், தே$_3$ஹத்தையே ஆத்மாவாக நினைத்து உடம்பிலுள்ள அழுக்கைப் போக்கிக்கொண்டு, அதையே விரும்பியிருக்கும் ஸம்ஸாரிகளுடம்பிற் காட்டிலும் தாழ்ந்ததாய், அழுக்குதானே இனியதாம்படி, அழுக்குநீரொழுகும் உடம்பையுடையதாய், உடம்பு அழுக்கேறிற்று என்று வெட்கப்படவும் வேண்டாதபடியான மானமிலாப்பன்றியாம் பிறப்பையாயிற்று ஏறிட்டுக்கொண்டது. *(மானமிலா)*

---

அருளிச்செய்கிருர் (இதுதானித்யாதி$_3$) c "ஸம்ஶ்லேஷித்த அன்றும் ஒருநாள், விஶ்லேஷித்த இன்றுமொருநாள்"என்று ஈடுபாடு. e$_2$ "அழுக்குடம்பு" என்று சொல்லுமவர்கள்-முமுக்ஷுக்கள். d (மாசுடம்பு) முதலிலே தே$_3$ஹந்தன்னை "அழுக்குடம்பு" என்று கழிக்கிற முமுக்ஷுக்களுடைய தே$_3$ஹத்

(மானமிலா) g 196. "अहं वो बान्धवो जातः" (அஹம் வோ பா3ந்த4வோ ஜாதঃ) என்றும், h 197. "आत्मानं मानुषं मन्ये" (ஆத்மாநம் மாநுஷம் மந்யே) என்றும் சொல்லுமளவன்றிக்கே, தா4ரகத்3ரவ்யங்களும் வேறுபட்டு அஜ்ஜாதிக்கடைத்தவையே தா4ரகமுமாய், ஸ்வபா4வமுமப்படியேயாம்படியாகவாய்த்து அவற்றோடே தன்னை ஸஜாதீயமாக்கினபடி. முத்தக்காசை அமுதுசெய்யப் பண்ணும்படியிறே தாழவிட்டபடி.

---

196. நாஹம் தே3வோ ந க3ந்த4ர்வோ
ந யக்ஷோ ந ச தா3நவঃ।
அஹம் வோ பா3ந்த4வோ ஜாதோ
நைதச்சிந்த்யமிதோऽந்யதா2 ॥ [வி-பு 5-13-12]

[நான் தே3வனல்லன்; க3ந்த4ருவனல்லன்; யக்ஷனல்லன்; அஸுரனுமல்லன்; நான் உங்களுக்கு உறவினனாகப் பிறந்திருக்கிறேன். என் பிறப்பு இதைத்தவிர வேறுவிதமாக (உங்களால்) நினைக்கத்தக்கதல்ல.] என்றும் [பக்கம் 309ல் 96-வது ப்ரமாணத்தின்படியும்] மனிதனாகப் பிறக்கும் அளவிற்கும் கீழேபோய், உடம்பை தா4ரிக்க வைக்கும் பொருள்களும் வேறுபட்டு, அந்த ஜாதிக்கு உற்றனவான கோரைக்கிழங்கு முதலானவற்றையே தா4ரகமாகக் கொண்டு, காட்டுப்பன்றியின் தன்மைகளும் அப்படியேயாகும்படியாயிற்று அவற்றோடு தன்னை ஒருநீராக்கினபடி. வராஹப்பெருமானுக்கு முத்தக்காசு என்று சொல்லப்படும் கோரைக்கிழங்கையே அமுதுசெய்ய வேண்டும்படியன்றோ தன்னைத் தாழவிட்டபடி.

---

த்தையும், மேலெழுந்த அழுக்கைப் போக்கிக் கொண்டிருக்கிற ஸம்ஸாரிகளுடைய தே3ஹத்தையும் போலே அருசிப்பட வேண்டாதபடி ருசியையுடைத்தாய், அழுக்குத் தானே போ4க்3யமாம்படியான உடம்பை பரிக்3ரஹித்தென்றபடி. d "நீர்வாரா" நீர் ஒழுக. e f (அப்ராக்ருத தி3வ்யஸம்ஸ்தா2நத்தை-அவ்வருகேயாம்படியாக்கினன்) என்று அந்வயிப்பது.

g, h "பன்றியாம்" என்கிற மெய்ப்பாட்டுக்குத் தா[illegible]ர்யம் "अहं वो" (அஹம் வோ இத்யாதி[illegible] i "தேசு" - அ[illegible].



மாயாம்ருக3த்தைக் கண்டு, அல்லாத ம்ருக3ங்கள் மோந்து பார்த்து வெருவியோடிற்றினவிறே; அப்படியன்றிக்கே, ஸஜாதீயங்கள் மோந்து பார்த்தாலும் "நம்மினம்" என்று மருவும்படியாயாய்த்து. (மானமிலா) ஈஶ்வராபி4மாநம் வாஸனையோடே போனபடி. i (பன்றியாம் தேசுடைய தேவர்) ஆஶ்ரிதார்த்த2மாகத் தன்னை அழியமாறுகையால் வந்த தேஜஸ்ஸு. j "தனக்கு வேண்டுருக்கொண்டு" என்கிறபடியே - இச்சா2க்3ருஹீதமான வடிவாகையாலே j2 எறித்திருக்குமிறே ரக்ஷகத்வம்.

---

மாரீசன் மாயமானானபொழுது மற்ற மான்கள் அதை முகர்ந்து பார்த்து, தங்கள் இனமல்லவென்று உணர்ந்து பயந்தோடினவன்றோ; அப்படியல்லாமல் மற்ற காட்டுப் பன்றிகள் மோந்து பார்த்தாலும், 'நம் இனம்' என்று நெருங்கும்படியாயிற்று அவதரித்தது. ஆக 'மானமிலா' என்றது லஜ்ஜையற்ற என்றதாயிற்று. *(மானமிலா)* அபி4மானமில்லாத என்றும் பொருள்கொள்ளலாம். தான் ஈச்வரன் என்னும் அபி4மானம் அடியோடுபோயிற்று. *(மானமிலா)* என்றதற்கு 'அளவிட முடியாதபடி பெரிய' என்றும் 'உபமானமில்லாத' என்றும் பொருள் கொள்வாருண்டாயினும், 'மாசுடம்பில் நீர்வாரா' என்ற அடைமொழிக்கு அவை பொருந்தாவாகையால் அவை பெரியவாச்சான்பிள்ளையால் ஆதரிக்கப்படவில்லை. *(பன்றியாம் தேசுடைய தேவர்)* அடியார்க்காகத் தன்னைத் தாழ்த்திக் கொள்ளுகையால் வந்த ஒளி. "தனக்கு வேண்டுருக்கொண்டு" [திருவாய் 6-4-7] என்கிறபடியே கர்மம் காரணமாகவல்லாமல், தன்னுடைமையை ரக்ஷிக்கவேண்டும் என்னும் விருப்பத்தாலே எடுத்த வடிவாகையாலே ரக்ஷகத்வம் உறைத்திருக்குமன்றோ.

---

i, j "தேவர்" என்றதுக்கு - ரக்ஷணத்தால் வந்த தேஜஸ்ஸினுடைய ஆதி4க்யத்தைச் சொல்லி, இதுக்கு ஹேதுவேதென்ன அருளிச்செய்கிறார் (தனக்கித்யாதி3) j2 (எறித்திருக்கை) அதிஶயித்திருக்கை; எறிப்பு-ப்ரகாசம். k (செல்வர்

(திருவரங்கச் செல்வனார்) "அவ்வவதாரத்துக்கு உதவி னேமில்லை" என்கிற இழவு தீரும்படி கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறவர். (செல்வனார் பேசியிருப்பனகள்) k செல்வர் சொல்லுக்கஞ்சாரே. l விபூ$_4$திவிஷயமாகவும் m ஆஶ்ரிதர் விஷயமாகவும் சொல்லியிருக்குமவையென்னுதல்; அன்றிக்கே, "நின்னைப்பிரியேன்; பிரியிலுமாற்றேன்" என்றாற்போலே, கூடியிருந்தபோது சொன்னவை என்னுதல். (பேர்க்கவும் பேராவே) இவற்றை மறந்து பிழைக்கவென்று பார்த்தால், நெஞ்சில் நின்று பேர்க்கவும்

---

(திருவரங்கச்செல்வனார்) "வராஹாவதாரத்தில் பணிசெய்யப் பெற்றிலோம்" என்கிற நம் குறைதீரும்படி வழுவிலா அடிமை கொள்ளுகைக்காகக் கோயிலிலேவந்து பள்ளிகொண்டிருப்பவர். (செல்வனார் பேசியிருப்பனகள்) செல்வர் சொல்லுக்கஞ்சாரே, தம் சொல்லால் யாருக்கு என்ன விளைவு ஏற்படும் என்பதைக் கருத்தில் கொள்ளாமல் செல்வத்தில் விஞ்சியவர்கள் தோன்றியதெல்லாம் சொல்லிவிடுவரன்றோ. அதுபோலவே இவரும் பூ$_4$மிப்பிராட்டியைத் தூக்கி எடுக்கும்பொழுது அவளிடம் தமக்குள்ள அன்பு தோற்றப் பலவார்த்தைகள் சொல்லியிருக்கிறார். அடியாரை ரக்ஷிப்பது விஷயமாக ஸ்ரீவராஹசரம ஶ்லோகத்தையும், ஸ்ரீராமசரம ஶ்லோகத்தையும், கிருஷ்ணசரம ஶ்லோகத்தையும் சொல்லியிருக்கிறார். இவற்றை நம்பி நான் இவரிடம் ஈடுபட்டு இப்பொழுது அவஸ்தைப் படுகிறேன் என்று கருத்து. அன்றிக்கே தன்னோடு கூடியிருந்தபொழுது "நின்னைப் பிரியேன்; பிரியினும் தரியேன்" என்றாற்போலே பேசியிருப்பவற்றைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம், (பேர்க்கவும் பேராவே) இவ்வார்த்தைகளை மறந்து பிழைக்கலாம் என்று பார்த்தால், எவ்வளவு முயன்றாலும் நெஞ்சிலிருந்து இவற்றை நீக்க முடியவில்லை. இவற்றை

---

சொல்லுக்கஞ்சார்) என்றது-ஐஶ்வர்யவான்கள் வேண்டினதெல்லாம் சொல்லுவர்களென்றபடி. l முந்தினது விபூ$_4$தி விஷயம். பூ$_4$ம்யுத்$_3$த$_4$ரண நிமித்தமாக; பூ$_4$மிப்பிராட்டி விஷயமாக என்றபடி. m (ஆஶ்ரித விஷயம்) "अभयं सर्वभूतेभ्यः"



பேருகிறதில்லை. தாமுற்ற பேதெல்லாம் எண்ணாதே, தம்முடைய நன்மைகளே எண்ணி அவர் நம்மை மறந்தாலும், "கொடியவென்னெஞ்சம் அவனென்றே கிடக்கும்" என்னும்படியே நம்மால் மறந்து பிழைக்கப்போகிறதில்லையென்கிறாள். 8.

பதினோராம் திருமொழி—ஒன்பதாம் பாட்டு

**கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான்**
**திண்ணார்ந் திருந்த சிசுபாலன் தேசழிந்து**
**அண்ணாந் திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்த**
**பெண்ணாளன் பேணுமூர் பேரு மரங்கமே.**

**பதவுரை:** – **கண்ணாலம் கோடித்து**—கல்யாண முயற்சிகளையெல்லாம் நன்றாகச் செய்துமுடித்து, **கன்னிதன்னை**—கல்யாணப் பெண்ணான ருக்மிணிப்பிராட்டியை, **கைப்பிடிப்பான்**—பாணிக்$_3$ரஹணம் செய்துகொள்ளப்போவதாக, **திண் ஆர்ந்து இருந்த**—ஸம்ஶயமில்லாமல் நிச்சயமாக நினைத்திருந்த, **சிசுபாலன்**—சிசுபாலனானவன், **தேசு அழிந்து**—ஒளி அழிந்து, **அண்ணாந்திருக்கவே ஆங்கு**—ஆகாசத்தை நோக்கிக்கிடக்கும்படியாக நேர்ந்த அச்சமயத்திலே, **அவளை**—அந்த ருக்மிணிப் பிராட்டியை, **கை பிடித்த**—பாணிக்$_3$ரஹணம் செய்தருளினவனாய், **பெண்ணாளன்**—பெண்பிறந்தார்க்கெல்லாம் துணைவன் என்று ப்ரஸித்$_3$த$_4$னான பெருமான், **பேணும்** — விரும்பி எழுந்தருளியிருக்கிற, **ஊர்** — தி$_3$வ்யதே$_3$ஶத்தினுடைய, **பேரும்** — திருநாமமும், **அரங்கமே**—திருவரங்கமாம்.

---

நினைத்து நினைத்துத் துன்புறவேண்டியிருக்கிறது. ஸீதையாகிற பெண்ணுக்கை ஆப்புண்டு தாமுற்ற பேதெல்லாம் எண்ணாதே, தம்முடைய நன்மைகளையே எண்ணி அவர் நம்மை மறந்தாலும், "கொடிய என் நெஞ்சம் அவன் என்றே கிடக்கும்" [திருவாய் 6-4-7] என்கிறபடியே என்னால் மறந்து பிழைக்க முடியவில்லை என்கிறாள். 8.

---

(அப$_4$யம் ஸர்வபூ$_4$தேப்$_4$ய:) "मित्रभावेन संप्राप्तं" (மித்ர பா$_4$வேந ஸம்ப்ராப்தம்) என்றவை. 8.

அவ:— ஒன்பதாம் பாட்டு. என்னுடைமையடையக் கைக்கொண்டானென்றுள்; தாம் படுமவற்றைப் பாராதே பிறர்படுமவற்றையே பாராநின்ருனென்றுள்; நான் அவனை மறக்கவென்று புக்கவிடத்தில் எனக்கு அவன் கு$_3$ண சேஷ்டிதங்கள் மறக்கவொண்ணுதபடியாயிராநின்றதென் ருள்; ருக்மிணிப் பிராட்டியுடைய ப்ரதிப$_3$ந்த$_4$கததைப் போக்கி அவளுக்கு உதவினபடியை அநுஸந்தி$_4$த்து. 'இவ ளுக்கு உதவின இது பெண்பிறந்தார்க்கெல்லாம் உதவின படியன்றே' என்று அவ்வழியாலே த$_4$ரிக்கிருள், அர்ஜுந னுக்குச் சொன்ன வார்த்தையை நாமெல்லாரும் விஶ்வ ஸித்திருக்குமாபோலே a ஸர்வஸாத$_4$ாரணராயிருப்பார் ஒரு வனைக் குறிததுச் சொன்ன வார்தததை அவனோ(ரோ?)ட்டை யார்க்கெல்லாம் பொதுவிறே.

---

9. அவ:— இத்திருமொழியில் முதல் ஆறு பாட்டுக்களால் தன் உடைமைகளைக் கைக்கொண்டான் என்றுள். ஏழாம் பாட்டில்—பெண்ணுக்கை ஆப்புண்டு தாம் பட்டபாடுகளை எண்ணுமல் நான் படும் பாடுகளையே பார்த்து உகக்கிருன் என்றுள். சென்ற பாட்டில்—நான் அவனை மறந்து நிம்மதியாய் இருந்து பிழைக்கலாம் என்று பார்த்தாலும், அவனுடைய கு$_3$ணங்களும் செயல்களும் என்னுல் மறக்க இயலாதனவா யிருக்கின்றன என்றுள். ருக்மிணிப் பிராட்டியினுடைய தடை யைப் போக்கி, அவளுக்கு உதவின செயலை இப்பாட்டில் அனுஸந்தி$_4$த்து 'இவளுக்கு உதவின இச்செயல் எல்லாப் பெண் களுக்கும் உதவினபடியன்றே' என்று இவ்வழியாலே உயிர் தரிக்கிருள். அர்ஜுனனுக்குச் சொன்ன சரமஶ்லோகத்தை நாம் அனைவரும் நம்பி தரித்திருப்பது போன்றது இது. அனை வர்க்கும் பொதுவாயிருப்பவர்கள் ஒருவனைக் குறித்துச் சொன்ன வார்த்தை அவரைச் சார்ந்த அனைவர்க்கும் பொதுவன்றே.

---

ஒன்பதாம் பாட்டு. (கண்ணாலமித்யாதி$_3$) a ஒருவனுக்குச் செய்தால் எல்லீருக்கும் செய்ததாமோவென்ன அருளிச் செய்கிருர் (ஸர்வஸாத$_4$ாரணரித்யாதி$_3$) b தோழிப்புழுங்க



வ்யா:—(கண்ணாலம் கோடித்து)முன்பு நெடுநாள் தேடிற் றெல்லாம் b தோழிப்புழு(பொ?)ங்கலிலே நேர்ந்தானுய்த்து. (கன்னிதன்னைக் கைப்பிடிப்பான்) "புதுப்பூ மோக்கவேணும்" என்று ஆசைப்படுமாபோலே. (திண்ணார்ந்திருந்த சிசு பாலன்) நாம் ஆத்மாபஹாரத்தைப் பண்ணியிருக்குமா போலே. ஸர்வேஶ்வரனுடைமையைத் தன்னதென்று பு$_4$த்$_3$தி$_4$ பண்ணி த்$_3$ருட$_4$சித்தனுயிருந்தானுய்த்து. திண்ணார்ந்து— திண்மையுடையனுய். c (தேசழிந்தண்ணாந்திருக்கவே) d மண

---

வ்யா:— (*கண்ணாலம் கோடித்து*) சிசுபாலன் தான் நீண்ட நாளாகத் தேடின செல்வமனைத்தையும் கல்யாணத்திற்கு முன்பு தோழர்களுக்கு வைக்கும் விருந்தாகிற தோழிப் பொங் கலிலே செலவழித்து விட்டான். அவன் கல்யாணம் செய்து கொள்வதற்காகக் கோடித்தபடி இது. (*கன்னிதன்னைக் கைப் பிடிப்பான்*) "எவரும் மூகராத புதுப்பூவை முகரவேண்டும்" என்று ஆசைப்பட்டு அதற்காகப் பாடுபடுவாரைப் போலே, கன்னியாகிய ருக்மிணியைக் கைப்பிடிப்பதற்காகப் படாதபாடு பட்டான். (*திண்ணார்ந்திருந்த சிசுபாலன்*) எம்பெருமானு டையதான ஆத்மாவை நம்முடையதாக நினைத்து நாம் அநாதி காலமாக ஆத்மாபஹாரம் பண்ணியிருப்பதுபோலவே, ஸர்வேஶ வரனுடைய உடைமையான பிராட்டியைத் தன்னுடைமை என்றெண்ணி அதிலே உறுதிகொண்ட நெஞ்சினனுக இருந் தான். திண்ணார்ந்திருத்தல் - உறுதியுடையனுயிருத்தல். (*தேச ழிந்து அண்ணாந்திருக்கவே*) அடக்கத்தினுல் வரும் தேஜஸ் (ஒளி) அழிந்து தன்னை மணவாளப்பிள்ளையாக க$_3$ர்வம்கொண்டு பதர்க் கதிர்போலே, கவிழ்ந்து பார்க்கமாட்டாதே ஆகாசத்தை நோக்கிக்கொண்டிருந்தான். கண்ணன் கன்னியைக் கைப் பிடிப்பதற்கு முன்னர் சிசுபாலனின் நிலையைச் சொல்லுவ தாகக் கொள்ளும்பொழுது இத்தொடருக்கு இப்படிப் பொருள் கொள்ளவேண்டும். இத்தொடரை "ஆங்கவனைக்

---

லாவது - விவாஹத்தில் மூன்றும் நாள் அம்மானகத்தில் அவர்களெல்லாருங் கூடிப் பொங்கல் ப்ரஸாத$_3$ப்படுகை. c, d "தேசழிந்தண்ணாந்திருக்க" என்று விஶேஷிக்கை

வாளப்பிள்ளையாய் இறுமாந்து பதர்க்கதிர்போலே, கவிழ்ந்து பார்க்கமாட்டாதேயிருந்தபடி.

e (அண்ணாந்திருக்க) தன் தேஜஸ்ஸெல்லாமழிந்து, க்ருஷ்ணனாலே பரிபூ$_{4}$தனாய் ஒரு தி$_{3}$க்கிலும் பார்க்கமாட்டாதே இவ்விருப்பிலேயிருந்தானாய்த்து. (ஆங்கவளைக் கைப்பிடித்த) "முன்புள்ள சடங்குகள் அவன் செய்தானாகில் புநரபி அநுஷ்டி$_{2}$க்கவேணுமோ?" என்று தான் பாணிக்$_{3}$ரஹணம் பண்ணினானாய்த்து. f (பெண்ணாளன்) g அவளொருத்திக்குச் செய்ததன்றே; அஜ்ஜாதிக்காகச் செய்த

---

கைப்பிடித்த" என்ற மேல் தொடருடன் கூட்டி, கண்ணன் கன்னிதன்னைக் கைப்பிடித்த பின்னர் சிசுபாலனுடைய நிலையைச் சொல்லுவதாகக் கொள்ளும்பொழுது பொருள் வேறுபடுகிறது.

*(அண்ணாந்திருக்கவே)* தன் தேஜஸ் அனைத்தும் அழிந்து கண்ணனாலே அவமானப் படுத்தப்பட்டவனாய் எவர் முகத்திலும் விழிக்க வெள்கி ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும்படியாகக் கண்ணன் கன்னிதன்னைக் கைப்பிடித்தான் என்று கருத்து. *(ஆங்கவளைக் கைப்பிடித்த)* "பாணிக்$_{3}$ரஹணத்திற்கு முன்பு செய்யவேண்டிய பூர்வாங்க$_{3}$ங்களை சிசுபாலன் அனுஷ்டி$_{2}$த்து விட்டானாகையாலே மறுபடியும் அனுஷ்டி$_{2}$க்க வேண்டியதில்லை," என்று தான் பாணிக்$_{3}$ரஹணத்தை மட்டுமே பண்ணினானாயிற்று. *(பெண்ணாளன்)* இச்செயல் ருக்மிணிப் பிராட்டி ஒருத்திக்கு மட்டும் செய்த செயலோ? இச்செயலுக்குத் தோற்று நிற்கும் ஸ்த்ரீஜாதியிற் பிறந்த அனைவர்க்கும்

---

யாலே முன்பு அண்ணாந்திருந்தத்தை அருளிச்செய்கிறார் (மணவாளப்பிள்ளையித்யாதி$_{3}$)

e "அண்ணாத்தல்"-செயல்மாட்சி; f,g ருக்மிணிப்பிராட்டியைக் கைப்பிடித்தானாகில், "அவளையுடையவன்" என்னாதே "பெண்ணாளன்" என்று ஸாமாந்யமாகச் சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (அவளொருத்திக்கித்யாதி$_{3}$) பெண்ணாளன் பேணுமூரினுடைய பேருமரங்கமென்றபடி. h,i,j "பேரும்" என்கிற ஶப்$_{3}$த$_{3}$தாத்பர்யம்



செயலிறே. h (பேணுமூர்) அவன் விரும்பி வர்த்திக்கிற தே$_{3}$ஶம். i (பேருமரங்கமே) j அவ்வூரின் பேரும் பெரிய பிராட்டியார்க்கு ந்ருத்தஸ்தா$_{2}$நம். 9.

## பதினோராம் திருமொழி - பத்தாம் பாட்டு

செம்மை யுடைய திருவரங்கர் தாம்பணித்த
மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்
தம்மை யுகப்பாரைத் தாமுகப்ப ரென்னும்சொல்
தம்மிடையே பொய்யானால் சாதிப்பா ராரினியே?

**பதவுரை:— செம்மை உடைய** — (மனமொழிமெய்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருக்கையாகிற) ஆர்ஜவகு$_{3}$ணமுடைய, **திரு அரங்கர்**—ஸ்ரீரங்க$_{3}$நாத$_{2}$ர், **தாம் பணித்த**— (முன்பு) தம் வாயாலே அருளிச்செய்த, **மெய்ம்மை**— ஸத்யமானதும், **பெரு**—பெருமை பொருந்தியதுமான, **வார்த்தை** — சரமஶ்லோகரூபமான வார்த்தையை, **விட்டு சித்தர்**—(என் திருத்தகப்பனாரான) பெரியாழ்வார், **கேட்டு**— (கு$_{3}$ருமுக$_{2}$மாகக்) கேட்டு, **இருப்பர்**—(அதில் சொல்லியிருக்கிறபடி) நிர்ப்ப$_{4}$ரராயிருப்பர்; **தம்மை உகப்பாரை தாம் உகப்பர் என்னும் சொல்** — "தம்மை விரும்பினவர்களைத் தாமும் விரும்புவர்" என்ற பழமொழியானது, **தம்மிடையே**— தம்மிடத்திலேயே, **பொய் ஆனால்** — பொய்யாய்ப் போய் விட்டால், **இனி**—அதற்குமேல், **சாதிப்பார் ஆர்**—(அவர் தம்மை) நியமிப்பார் ஆர்? (யாருமில்லை).

---

ஆற்றிய செயலன்றோ இது என்று கருத்து. *(பேணுமூர்)* அவன் விரும்பி வாழ்கிற திவ்ய தேசம். *(பேரும் அரங்கமே)* அவன் பெண்ணாளனாக இருப்பதுபோலவே அவன் விரும்பி வாழும் ஊரும் ஸ்ரீரங்கம் [பெரிய பிராட்டியார் மகிழ்ந்து கூத்தாடுமிடம்] என்று பெயர் பெற்றிருக்கிறது. 9.

---

அவனும் பெண்ணாளன், ஊரின் பேரும் அரங்கமென்றாய், பிராட்டிக்கு ந்ருத்த ஸ்தா$_{2}$நமாகையாலே பெண்களுக்கெல்லாம் பொதுவென்றபடி. 9.

வ்யா:— நிக₃மத்தில் ; (செம்மையுடைய திருவரங்கர்) மநோவாக்காயங்கள் மூன்றும் மூன்றுபடியாய் இருப்பாரை ஒருங்கவிடுகைக்கு. தாம் மநோவாக்காயங்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருக்குமவர். a198. "ஸுஹ்ருத₃ம் ஸர்வபூ₄தாநாம்' (ஸுஹ்ருத₃ம் ஸர்வ பூ₄தாநாம்) என்கிறபடியே-ஸோப₄நமான ஹ்ருத₃யத்தை உடையராயிருப்பர்.

அவ :— இத்திருமொழியின் கடைசிப் பாட்டான இதில் தன் தகப்பனாரான பெரியாழ்வார் சரமஶ்லோகத்தின் அர்த்தத்தைக் கேட்டு அதில் ஊன்றியிருக்கும்படியை அநுஸந்தி₄த்து. "அவர் பெற்றெடுத்த பெண் பிள்ளையாய், அதனாலேயே எம்பெருமானை உகந்திருக்கும் என்னை, பெரியாழ்வாரோடு உள்ள தொடர்பையும், 'உகந்தாரை உகக்கவேண்டும்' என்ற உலக நீதியையும் மீறி எம்பெருமான் கைவிட்டானானால் அவனை எவரால் நிர்ப்பந்தப்படுத்த முடியும்? என்று கூறி இத்திருமொழியைத் தலைக்கட்டுகிறாள்.

*வ்யா:— (செம்மையுடைய திருவரங்கர்) "மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத் து₃ராத்மநாம்"* [தீயவர்களுக்கு மனம், வாக்கு, செயல் எனும் மூன்றும் வெவ்வேறுபட்டிருக்கும்] என்கிறபடியே மனம் மொழி செயல்கள் மூன்றும் மூன்று விதமாயிருக்கும் சேதனரைச் சேர்த்துக்கொள்வதற்காக. தாம் அம்மூன்றிலும் ஒரே விதமாயிருக்கையாகிற நேர்மைக் குணத்தை உடையவர். செம்மை—நேர்மை.

198. போ₄க்தாரம் யஜ்ஞதபஸாம்
ஸர்வலோகமஹேஶ்வரம் ।
ஸுஹ்ருத₃ம் ஸர்வபூ₄தாநாம்
ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம் ருச்ச₂தி ॥ [கீ₃தை 5-29]

[யஜ்ஞங்களையும், தவங்களையும் பூ₄ஜிப்பவனும், எல்லா உலகங்களுக்கும் மஹேஶ்வரனும், எல்லா ஜீவராசிகளுக்கும் நண்பனுமான என்னை அறிந்து ஶாந்தியை அடைகிறான்.] என்கிறபடியே அனைவர்க்கும் நன்மையை விரும்பும் நெஞ்சையுடையவர்.

நிக₃மத்தில்; "செம்மை"—அழகு. aமநோவாக்காயங்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருக்குமென்னுமத்தைக் காட்டுகிறார்



குற்றஞ்செய்தாரையும் விடமாட்டாதே. 149. "ந த்யஜேயம்" (நத்யஜேயம்) என்று வார்த்தை சொல்லுமவர், அதுதன்னை அர்த்த₂க்ரியாகாரியாக்கிக்கொண்டு கோயிலிலே சாய்ந்தருளினர். (தாம் பணித்த) நினைவும் சொலவும் செயலும் ஒருபடிப்பட்டவர் தாம் அருளிச்செய்த.

(மெய்ம்மைப் b பெருவார்த்தை) யதா₂ர்த்த₂முமாய். c சீரியதுமாய். d ஸுலப₄முமான வார்த்தையாய்த்து. அதாவது - "உன் காரியத்துக்கு நானுளேன்; நீ ஒன்றுக்கும் கரையாதே; உன் ஸர்வப₄ரத்தையும் என் தலையிலே ஸமர்ப்பித்து நிர்ப்ப₄ரனாயிரு" என்று திருத்தேர்த்தட்டிலே நின்று அருளிச்செய்த வார்த்தை. e "பிள்ளை அர்ஜுநனுக்கன்றோ

[491-ம் பக்கத்தில் 149 வது ப்ரமாணத்தின்படி] குற்றம் செய்தவர்களையும் விடமாட்டேன் என்று வார்த்தை சொல்லுகிறவர் அவ்வார்த்தையைச் செயல்படுத்திக்கொண்டு திருவரங்கம் பெரியகோயிலிலே பள்ளிகொண்டருளினர். (*செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த)* நினைவும் சொல்லும் செயலும் ஒருபடிப்பட்டிருப்பவர் தாமே அருளிச்செய்த.

(மெய்ம்மைப் பெருவார்த்தை) உண்மையானதாய், சிறப்பு மிக்கதாய், அனைவர்க்கும் அநுஷ்டி₂க்க எளியதான வார்த்தையாயிற்று. அதாவது— 'உன் காரியத்தைச் செய்ய நான் இருக்கிறேன். நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே; உன்னுடைய எல்லாச் சுமையையும் என் தலையிலே வைத்துக் கவலையற்றவனாயிரு" என்று திருத்தேர்த்தட்டிலே நின்று அருளிச்செய்த கிருஷ்ண சரமஶ்லோகம். "இந்த ஶ்லோகத்தைக் கண்ணன் அர்ஜுனனுக்கல்லவோ சொன்னான். இவருக்கென்ன பயன்?" என்னில்: அவன் அனைவர்க்கும் ஸமமாயிருப்பவனாகையாலே என் காரியம் என்னால் செய்யமுடியாது என்று நினைத்திருக்கும்

(ஸுஹ்ருத₃மித்யாதி₃) b, c "பெரு" என்கையாலே (சீரியதுமாய்) என்றது; b,d "வார்த்தை" என்கையாலே— ஸுலப₄தை. e "பிள்ளை" —க்ருஷ்ணன். f, g, h (இரண்டும்)

சொல்லிற்று; இவர்க்கென்?'' என்னில், அவன் ஸர்வஸம ஞகையாலே ''என்கார்யம் என்னுல் செய்யவொண்ணுது'' என்றிருப்பார்க்கெல்லார்க்குமாக அடியிலே சொன்ன வார்த்தையிறே; ஆகையாலே இவர் கேட்டிருக்கக் குறை யில்லை. (கேட்டிருப்பர்) அவ்வார்த்தையைக் கேட்டபின்பு உபாயத்வேந விலங்கின துரும்பு நறுக்கியறியார்; ப்ராப்ய த்வேந வேண்டிற்றெல்லாம் செய்வர்.

(தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்னும் சொல்) நாட்டு வார்த்தை;– ''நீ ஆர்க்கு நல்லை'' என்ருல், f ''நல்லார்க்கு நல்லன்'' என்ருெரு வழக்குச்சொல் உண்டு; g ''நல்லார்க குத் தீயாருண்டோ'' என்றும் உண்டு; h இவை இரண்டும் (தம்மிடையே பொய்யானல் சாதிப்பாராரினியே) தாமே

---

அனைவருக்குமாக முதலிலே சொன்ன வார்த்தையன்ருே இந்தச் சரமஶ்லோகம். ஆகையாலே இவர் அதைக்கேட்டு அதன்படி நடக்கத் தட்டில்லை. (கேட்டிருப்பர்) அவ்வார்த்தையை ஆசார்ய முகமாகக் கேட்டு அதன்படி நடப்பர். அவ்வார்த்தையைக் கேட்ட பின்பு உபாயம் என்னும் எண்ணத்துடன் வழியிலே குறுக்கிடும் ஒரு துரும்பைக்கூட நறுக்கியறியார். ப்ராப்யம் (ஸ்வயம்ப்ரயோஜனம்) என்னும் எண்ணத்தோடு செய்ய வேண்டுவதையெல்லாம் செய்வர்.

(தம்மை உகப்பாரைத் தாமுகப்பர் என்னும் சொல்) ''நீ யார்க்கு நல்லவன்'' என்று கேட்டால் ''நல்லவர்க்கு நல்லவன்'' என்று பதில் சொல்லும் உலக வழக்கொன்றுண்டு. ''நல்லவ ருக்குத் தீயவன் உண்டோ?'' என்று இதையே எதிர்மறையாகச் சொல்லும் வழக்குமுண்டு. இவ்விரண்டு நாட்டு வார்த்தை களும் இங்கு 'சொல்' என்னும் பதத்திற்குப் பொருளாகின்றன. (தம்மிடையே பொய்யானல் சாதிப்பார் ஆர்இனியே?)

---

என்றது — அந்வயவ்யதிரேகத்தாலே சொன்ன லோக வார்த்தையான (நல்லார்க்கு நல்லன்) என்றதும், (நல்லார்க் க்குத் தீயாருண்டோ) என்றதும்,. ஆக, இரண்டு வார்த்தை.



இத்தை அந்யதா₂கரிக்கப் புக்கால், ''இங்ஙனே செய்யக் கடவதல்ல'' என்று தம்மை நியமிக்க வல்லாருண்டோ? உண்டானுல் தான் செய்வதென்? ''உம்மை உகந்தவரை நீரும் உகக்கவேணும்'' என்று கட்டியடித்து i உகப்பிக்கவோ? 11.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

பதிஞேராம் திருமொழி முற்றிற்று.

## பன்னிரண்டாம் திருமொழி
## மற்றிருந்தீர்கள் ப்ரவேஶம்

அவ:– உமேல் சொல்லி என்? b ப₄க₃வத்₃விஶ்லேஷத் தால் நொந்து, இவள் தனக்குத் தஞ்சமாக நினைத்திருப்பது இரண்டாய், அவ்விரண்டிலும் தான் அதிஶங்கைபண்ணி,

---

உலகுக்கு வரம்பு கட்டவேண்டிய தாமே இவ்வுலக வழக்கை வேறுபடுத்தத் தொடங்கினல் ''இப்படிச் செய்யக்கூடாது'' என்று தமக்குக் கட்டளையிட வல்லாருண்டோ? கட்டளையிட வல்லார் இருந்தால்தான் என்ன செய்வது? ''உம்மை உகந்த வர்களை நீரும் உகக்கவேண்டும்'' என்று தம்மைக் கட்டியடித்து உகப்பிக்க முடியுமோ?

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்

பதினென்றும் திருமொழி வ்யாக்₂யான விவரணம் நிறைவுற்றது.

## பன்னிரண்டாம் திருமொழி – வ்யாக்யான விவரணம்
### மற்றிருந்தீர்கள் ப்ரவேஶம்.

மேலே பல சொல்லி என்? எம்பெருமானைப் பிரிந்து நொந்த இவள் தனக்குத் தஞ்சமாக நினைத்திருப்பது இரண்டு; 'அடியார்களைக் கைவிடமாட்டேன்' என்று அவன் சொன்ன

---

யுமென்றபடி. i (உகப்பிக்கவோ) நியமிப்பாருண்டானலும் வலிய உகப்பிக்கப்போமோ என்றபடி. 11.

ஜீயர் திருவடிகளே சரணம்

c"அத்தலையாலே பேறு" என்று அறுதியிட்டு, "அது பார்த்திருக்கவொண்ணாது அத்தலையில் ஸ்வாதந்த்ர்யத்தாலே; ஆனாலும், கேவலம் ஸ்வாதந்த்ர்யமேயன்றிக்கே ஆஶ்ரிதபாரதந்த்ர்யமென்றும் ஒன்றுண்டு அவனுக்கு; ஆனபின்பு பெரியாழ்வாரளவிலும் அவனுக்கு அந்த ஸ்வாதந்த்ர்யம் ஜீவியாது; அவர் ஸம்ப$_3$ந்த$_4$ங்கொண்டு நமக்குப் பெறுகைக்கு ஒரு தட்டில்லை" என்று d அத்$_4$யவஸித்திருந்த இவள் e பின்னையும்

---

வார்த்தை ஒன்று. அது தப்பினாலும் தப்பாத பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பு இரண்டு. இவ்விரண்டுமே ப$_2$லிக்குமோ? என்று பத்தாம் திருமொழியில் ஐயமுற்று "அவனாலேயே பேறு" என்று உறுதிபூண்டு 'அதையும் முழுவதும் நம்பமுடியாது அவன் ஸ்வதந்த்ரனாகையாலே; ஆனாலும், அவனுக்கு ஸ்வாதந்த்ர்யம் மாத்திரம் அல்லாமல் அடியார்க்கு வசப்பட்டிருக்கையாகிற மற்றொரு கு$_3$ணமுமுண்டு; ஆகையால் அவனடியாரான பெரியாழ்வார் விஷயத்தில் அவனுக்கு அந்த ஸ்வாதந்த்ர்யம் நிலைநில்லாது, ஆகையால் அவருடைய ஸம்ப$_3$ந்த$_4$ங்கொண்டு நாம் அவனைப் பெறத் தடையில்லை" என்று பத்தாந்திருமொழியின் கடைசியில் நிஶ்சயித்திருந்தாள் இவள்; இப்படி ப்ரத$_2$மபர்வமான எம்பெருமானைவிட்டு, சரமபர்வமான பெரியாழ்வாரைப் பற்றிடவள் பதினோராம் திருமொழியில் மறுபடியும் எம்பெருமானைப் பற்றக் காரணம் என்ன? எனில்: ப்ரத$_2$மபர்வமான அவனை விடுவதற்குக் காரணமான ஸ்வாதந்த்ர்யமே மற்றொரு கோணத்தில் பார்க்கும்போது

---

அரு:—மற்றிருந்தீர் ப்ரவேஶம். a (மேற்சொல்லியென்) மேல் பல சொல்லுகிற ப்ரமேயமேதென்றபடி. b, c, d (ப$_4$க$_3$வத்$_3$ விஶ்லேஷத்தால்) என்று தொடங்கி, (அத்$_4$யவஸித்திருந்த இவள்) என்னுமளவும் கார்க்கோடல் ப்ரமேயம். c இரண்டிலும் அதிஶங்கை பண்ணினால் ப்ரத$_2$மபர்வத்தை விடுகைக்கு ஹேதுவேது, சரமபர்வத்தைப் பற்றுகைக்கு ஹேதுவேதென்ன; இரண்டு ஹேதுவையும் அருளிச்செய்கிறார் (அத்தலையாலேயித்யாதி$_3$) d (அத்$_4$யவஸித்திருந்த இவள்) என்றது. "நல்லவென் தோழி" [10-10] என்கிற



"அவன்தான் f கு$_3$ணாதி$_4$கனுமாய் g ஸவிபூ$_4$திகனுமாயிருப்பானொருவனாகையாலே. ஆஶ்ரிதவிஷயத்தில் தன் ஸ்வாதந்த்ர்யம் நடத்துகையாவது இவற்றை இழக்கை; இவற்றையிழக்கக் காரியம் செய்யான். இனித்தான் அவன் ஸ்வாதந்த்ர்யம் நமக்குப் பேற்றுக்கு உடலித்தனை போக்கி இழவுக்கு உடலோ? காரியம் செய்வானாக நினைத்தபோது அதுக்கு நிவாரகரில்லையித்தனையன்றோ?" என்று அதனையும் பெரியாழ்வார் வயிற்றிற் பிறப்போபாதி h பேற்றுக்கு உடலாக அத்$_4$யவஸித்தாள்;

---

அவனைப் பற்றுவதற்கும் காரணமாகிறதாகையாலே அவனைப் பற்றினாள். எப்படியெனில்: 'அவனோ கு$_3$ணங்கள் மிக்கவன். இவ்வுலகனைத்தும் அவனுடைய உடைமைப் பொருள். அப்படிப்பட்டவன் தன் ஸ்வாதந்த்ர்யத்தாலே இவற்றைக் கைவிட்டான் என்றால் அவனுடைய கு$_3$ணங்களுக்குங் குறையாம்; உடைமையை இழக்கவேண்டியும் வரும்; உடையவன் உடைமையை இழக்கக் காரியம் செய்யமாட்டானே; ஆகையால் அவனுடைய ஸ்வாதந்த்ர்யம் நாம் அவனைப் பெறுவதற்கு உறுப்பாகுமேயன்றி நாம் அவனை இழப்பதற்கு உறுப்பாகுமோ? நம் காரியம் செய்யவேண்டுமென்று நினைத்தபோது அதை எவரும் தடைசெய்யமுடியாதபடி ஸ்வதந்த்ரனாயிருப்பது நம் பேற்றுக்கு உடலன்றோ' என்று இக்கோணத்திலே ஆராய்ந்து அவனது ஸ்வாதந்த்ர்யத்தையும், பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பைப்போலே பேற்றுக்கு உறுப்பானது

---

பாட்டைக் கடாக்ஷித்து. e, h இப்படி சரமபர்வத்தைப் பற்றினவள் திரியவும் "தாமுகக்க"விலே ப்ரத$_2$மபர்வத்தைப் பற்றுவானென்னென்ன; விடுகைக்கு ஹேதுவான ஸ்வாதந்த்ர்யந்தானே அவஸ்தா$_2$பே$_4$த$_3$த்தாலே பற்றுகைக்குடலாய்த் தோற்றப் பற்றினாளென்னுமத்தை அருளிச்செய்கிறார் (பின்னையும் அவன்தானித்யாதி$_3$)

f "பாசிதூர்த்துக்கிடந்த" [11-8] இத்யாதி$_3$யைப்பற்ற (கு$_3$ணாதி$_4$கனுமாய்) என்றது. g "பொங்கோதம்"[11-3] இத்யாதி$_3$யைப்பற்ற (ஸவிபூ$_4$திகனுமாய்) என்றது. h (பேற்றுக்

i இப்படி அத்4யவஸித்திருக்கச் செய்தேயும் அவன் சடக்கென வந்து தன் ஆற்றாமை பரிஹரிக்கக் i2கண்டிலள்; ஆனாலும், அவன் வருமளவும் க்ரமப்ராப்தி பார்த்து ஆறியிருக்கவல்ல ப்ரக்ருதியன்றே; கடுகப்பெற்றுக்கொடு நிற்க வேண்டும்படியிறே இவளுடைய த்வரை; தன் ஸ்வரூபத்தோடு சேர்ந்த செயலாகிறது அவன் வரப்பார்த்திருக்கையே; அவ்வளவல்லவே இவளுக்கு இப்போது ஓடுகிறது; ஸ்வரூபஹாநி வரப்பொறுத்ததே; "தன் ஸ்வரூபத்தோடு சேராதாகிலும் அத்தைப்பொறுத்து அவன் முகத்திலே விழிக்கவேணும்" என்று பார்த்தது. அதுக்குக் கால்நடை தாராதபடி ப3லஹாநி மிக்கது; இனி, தன் த3ஶையை

---

என்று உறுதிபூண்டு "தாமுகக்கும்" [11] என்ற சென்ற திருமொழியிலே அவனைப் பற்றினாள்

இப்படி உறுதிபூண்டு அவனைப் பற்றியபோதிலும் அவன் விரைவில் வந்து தன்னையணைத்துப் பிரிவுத்துன்பத்தைப் போக்கக் கண்டிலள். அவன் வந்து அருளாவிடினும் அவன் வருமளவும் பொறுத்திருப்பது இவளுக்கு ஸ்வரூபமாயினும், அப்படி முறை பார்த்துப் பொறுத்திருக்கக்கூடிய தன்மையுடையவளல்லளே இவள். அவனை மிகவிரைவில் பெறவேண்டும் என்னும் ப்ராப்யத்வரையாகிற வேகத்தையுடையவளாயிற்றே இவள். அவன் வரப்பார்த்திருப்பது தன் ஸ்வரூபத்துக்குச் சேர்ந்த செயலானாலும், இவளுடைய ப்ராப்யத்வரை இவளை இப்போது அப்படிப் பொறுத்திருக்க ஒட்டுகிறதில்லையே. ஆக, இப்படி ப்ராப்யத்வரையாலே ஸ்வரூபஹாநி வந்த பின்பு தன் ஸ்வரூபத்தோடு சேராத செயல்களையும் செய்து அவன் முகத்திலே விழிக்கவேணும் என்று பார்த்தாள். அப்படி தானே சென்று அவன் முகத்திலே விழிப்பதற்குக் காலால் நடக்கமுடியாதபடி இவளுக்கு ப3லக்குறைவு மிகுந்தது, இனி, தனது இத்தகைய வருந்தத்தக்க நிலையைக்

---

குடலாக அத்4யவஸித்தாள்) என்றது — "பெருவார்த்தை" என்றத்தைப்பற்ற அருளிச்செய்வர். i ஆனால் "தம்மை உகப்பாரை" [11-10] என்று வெறுப்பானென்? என்ன



அநுஸந்தி4த்தார்க்கு ஈஶ்வரனோபாதியும் பெரியாழ்வாரோபாதியும் தன் காரியம் செய்யவேண்டுமென்றாய்த்துத் தான் நினைத்திருப்பது. தனக்குக் கால்நடைதாராதாய்த்து; அவன் தன் த3ஶையறிந்துவந்து முகங்காட்டுவானொருவனன்றிக்கே இருந்தான்; இனி, தன் கண்வட்டத்திலே நின்று தன் த3ஶையையறிந்து கால் நடைதருவார்க்குத் தன் காரியம் செய்கை ப4ரமிறே. "அவன் வர்த்திக்கையாலே ப்ராப்யமான தே3ஶபரிஸரத்திலே என்னைக் கொடுபோய் நீங்கள் போகடப்பாருங்கோள்" என்கிறாள்.

## பன்னிரண்டாம் திருமொழி — முதற்பாட்டு

மற்றிருந் தீர்கட் கறியலாகா
  மாதவ னென்பதோ ரன்புதன்னை
உற்றிருந் தேனுக் குரைப்பதெல்லா
  மூமைய ரோடு செவிடர்வார்த்தை
பெற்றிருந் தாளை யொழியவேபோய்ப்
  பேர்த்தொரு தாயில் வளர்ந்தநம்பி
மற்பொருந் தாமற் களமடைந்த
  மதுரைப் புறத்தென்னை யுய்த்திடுமின்.

---

கண்டுவருந்தியவர்கள் ஈஶ்வரனைப்போலவும், பெரியாழ்வாரைப் போலவும் தன் காரியத்தைச் செய்யவேண்டும் என்றாயிற்று இவள் நினைத்திருப்பது. தனக்கோ காலால் நடந்துசென்று அவனையடைய முடியவில்லை. அவனோ தனது வருந்தத்தக்க நிலையை அறிந்து வந்து முகம் காட்டுகின்றவனாக இல்லை. ஆகையால் தன் அருகில் நின்று தனது இந்த நிலையையுமறிந்து காலில் ப3லமுள்ளவர்களுக்குத் தன் கார்யம் செய்வது கடமை என்று நினைக்கிறாள் இவள். அவர்களைப்பார்த்து "அவன் வாழ்கையாலே நான் அடையத்தக்க மதுரைப்புறம், ஆய்ப்பாடி முதலான இடங்களுக்கு என்னைக் கொண்டுபோய்ச் சேருங்கள்" என்கிறாள் இத்திருமொழியில்.

---

அருளிச்செய்கிறார் (இப்படி அத்4யவஸித்தித்யாதி3.) ஆகையாலே வெறுத்தாளென்றபடி.

**பதவுரை:— மற்று இருந்தீர்கட்கு** — (என்னுடைய நிலைக்கு) மாறுபாடாக இருக்கின்ற உங்களுக்கு, **அறியல் ஆகா**— அறியமுடியாதது ம், **மாதவன் என்பது ஓர் அன்பு தன்னை** —மாதவன் விஷயமான காதலை, **உற்றிருந்தேனுக்கு**— அடைந்திருக்கிற எனக்கு, **உரைப்பது எல்லாம்**— நீங்கள் சொல்லுவதெல்லாம், **ஊமையரோடு செவிடர் வார்த்தை**— ஊமையும் செவிடனுங்கூடி வார்த்தை சொல்லிக்கொள்வதுபோல் வீணானது; (இப்போது எனக்குச் செய்யத்தக்கது எதுவென்றால்;) **பெற்றிருந்தாளை ஒழிய போய்** மெய்ந்நொந்து பெற்ற தாயான தேவகியைவிட்டொழித்து, **பேர்த்து ஒரு தாய் இல்**—வேறொரு தாயாகிய யசோதையின் வீட்டிலே, **வளர்ந்த**- வளர்ந்தவனும், **மல் பொருந்தா மல் களம் அடைந்த** — மல்லயுத்3த4பூ4மியிலே மல்லர்கள் வந்துசேர்வதற்கு முன்னே தான் முற்பாடனாய்ப் போய்ச் சேர்ந்திருப்பவனுமான, **நம்பி**—கண்ணபிரானுடைய, ( நக3ரமாகிய ) **மதுரை** — மது4ராபுரியினுடைய, **புறத்து**—ஸமீபப்ரதேசத்திலே, **என்னை**—என்னை, **உய்த்திடுமின்**—கொண்டு சேர்த்து விடுங்கள்.

**அவ:—**முதற்பாட்டு. a**"அத்தலையாலே பேறென்று அறுதியிட்டால், அவன் வருமளவும் க்ரமப்ராப்தி பார்த்து ஆறியிருக்கவேணுங்காண், நீ இங்ஙனே பதறலாகாதுகாண்" என்ன; " என் த3ஶையை அறியாதே சில சொல்லுகிற உங்களுக்கும் எனக்கு வார்த்தைசொல்ல ப்ராப்தியில்லை; உங்கள் வார்த்தையைச் செவிதாழ்த்துக் கேட்கைக்கும் எனக்கு ப்ராப்தியில்லை" என்கிறாள்.**

---

1. *அவ:—* "அவனாலே பேறு—என்று உறுதி பூண்டால் அவன் வருமளவும் முறை பார்த்துப் பொறுத்திருக்க வேணுமே; நீ இப்படிப் பதறக்கூடாது காண்" என்று அருகிலிருந்தவர்கள் கூற, "என் வருந்தத்தக்க நிலையை அறியாமல் சில வார்த்தைகளைச் சொல்லுகிற உங்களுக்கும் என்னோடு பேசத்தகுதியில்லை, உங்கள் வார்த்தையைக் காதுகொடுத்துக் கேட்க எனக்கும் தகுதியில்லை" என்கிறாள் இப்பாட்டில்,



வ்யா:— b ( மற்று ) c வேறாயிருந்தீர்கட்கு என்னுதல்; d " மற்று - உரைப்பதெல்லாம் " என்று மேலே கொடுபோய் அந்வயித்தல். e ( இருந்தீர்கட்கறியலாகா ) ஏகதே3ஶவாஸமே போராது காணுங்கோள். எனக்கு ஓடுகிற த3ஶையறிகைக்கு, நானிருந்த தே3ஶத்திலே நீங்களுமிருந்திகோளென்று. எனக்கு ஓடுகிற த3ஶை உங்களால் அறியப்போகாது. f 199, "भक्त्या शास्त्राद्धि जनार्दनम्" (ப4க்த்யா ஶாஸ்த்ராத்3-

---

*வ்யா :—(மற்றிருந்தீர்கட்கு)* என்னினும் வேறாயிருந்த உங்களுக்கு; ப்ராப்யத்வரையுடைய என்னைப்போலல்லாமல் உபாயத்தில் உறுதிபூண்ட உங்களுக்கு என்றபடி. அன்றிக்கே "மற்று" என்பதை "உரைப்பதெல்லாம்" என்று மேலே கொண்டுபோய்க் கூட்டியும் பொருள் கொள்ளலாம். (இருந்தீர்கட் *கறியலாகா*) நான் இருக்கும் இடத்தில் வாழ்வது கொண்டே என்னுடைய மனநிலையை உங்களால் அறியமுடியாதுகிடீர். நான் இருக்கும் இடத்திலே நீங்கள் இருக்கும் ஒரே காரணத்தால் எனது நிலையை உங்களால் அறியமுடியாது என்கிறாள்.

**199. மாயாம் ந ஸேவே ப4த்3ரம் தே**
**ந வ்ருத2ாத4ர்மமாசரே ।**

---

முதற்பாட்டு. (மற்றித்யாதி3) a ஊமையரோடு செவிடர் வார்த்தை என்றத்தைப்பற்ற அவதாரிகை அருளிச்செய்கிறார் ( அத்தலையிலேயித்யாதி3) b மற்று—வேறு; c வேறாயிருக்கை - தன்னைப்போலே த்வராநிஷ்ட2ராயிருக்கையன்றிக்கே, அத்4யவஸாயநிஷ்ட2ராயிருக்கை. a (என்னித்யாதி3) " என் த3ஶையையறியாதே சில சொல்லுகிற உங்கள் நிலையும் என் நிலையும் பார்த்தால், உங்களுக்கும் எனக்கும் வார்த்தை சொல்ல ப்ராப்தியில்லை " என்று வாக்யத்துக்குத் தாத்பர்யம். a,d,e (கேட்கைக்கும் எனக்கு ப்ராப்தியில்லை) என்றதுக்குச் சேரவேண்டுகையாலே இரண்டாமர்த்த2த்துக்கு அநுகு3ணமாக "இருந்தீர்கட் கறியலாகா" என்றது. f ஓரிடத்தேயிருந்தாலும் ப4க்தி

வேத$_3$மி ஜநார்த்த$_3$நம்) என்னக்கடவதிறே. 199. "मायां न सेवे" (மாயாம் ந ஸேவே) இத்யாதி$_3$. ஜ "ஶாஸ்த்ரததில் வாஸனை உனக்கும் எனக்கும் ஒக்கும். பு$_3$த்$_3$தி$_4$யோக$_3$த்தி லும் எனக்குக் குறையில்லை, இங்ஙனே இருக்கச் செய்தே உனக்கு அர்த்த$_2$ம் உள்ளபடி ப்ரகாஶியாநின்றது; எனக்கு நீ சொல்லக் கேட்கவேண்டி இராநின்றது; இதுக்கடியென்?" என்ன; "நான் வஞ்சநபரனல்லேன். ச$_2$லத$_4$ர்மங்கள் அநுஷ்டி$_2$த்தறியேன். ஶுத்$_3$த$_4$ஸ்வப$_4$ாவனாயிருப்பன்; நீ கற்ற வரியடைவுகொண்டு அறிய விரும்புதி; நான் அங்ஙனன்றிக்கே ப$_4$க்திஸஹக்ருதஶாஸ்த்ரங்கொண்டு அறியவிருப்பன்;

---

ஶுத்$_3$த$_4$ப$_4$ாவம் க$_3$தோ ப$_4$க்த்யா
ஶாஸ்த்ராத்$_3$ வேத$_3$மி ஜநார்த்த$_3$நம் ||
[ப$_4$ார-உத்$_3$ 68.5]

[வஞ்சனையில் நான் ஈடுபடுவதில்லை. உனக்கு மங்க$_3$ளமுண்டாகுக! வஞ்சிக்கும் த$_4$ர்மங்களையும் நான் அநுஷ்டி$_2$க்கமாட்டேன். பரிஶுத்$_3$த$_4$ ஸ்வப$_4$ாவனாயிருப்பேன். ப$_4$க்தியோடு கூடிய சாஸ்திரத்தாலே ஜனார்த்த$_3$னனை அறிகிறேன் நான்.] என்று மஹாப$_4$ாரதத்தில் சொல்லப்பட்டதன்றோ. த்$_4$ருதராஷ்ட்ரன் ஸஞ்ஜயனைப் பார்த்து "உன்னைப்போலே நானும் ஶாஸ்த்ரம் படித்தவனே; எனக்கு அறிவிலும் குறைவில்லை, அப்படியிருந்தபோதிலும் உனக்கு நல்ல அர்த்த$_2$ம் உள்ளபடி தோன்றுகிறது, எனக்கு நீ சொல்லக் கேட்டுக்கொள்ள வேண்டியுள்ளது, இதற்குக் காரணமென்ன?" என்று கேட்க, ஸஞ்ஜயன் இந்த ஶ்லோகத்தில் "நான் வஞ்சனத்தில் ஈடுபடுவதில்லை, கபட த$_4$ர்மங்களைக் கடைப்பிடிக்கமாட்டேன். பரிஶுத்$_3$த$_4$மான தன்மையுடையவனாயிருக்கிறேன். நீ கற்ற ஶாஸ்த்ரங்களைமட்டுங் கொண்டு அர்த்த$_2$ங்களை அறிய விரும்புகிறாய். நான் அப்படியல்லாமல் ப$_4$க்தியோடுகூடி ஶாஸ்த்ரத்

---

யில்லாவிட்டால் அறியப்போகாதென்னுமதுக்கு ப்ரமாணம் அருளிச்செய்கிறார் (ப$_4$க்த்யா ஶாஸ்த்ராதி$_3$த்யாதி$_3$) ஜ த்$_4$ருதராஷ்ட்ரனுக்கு ஸஞ்ஜயன் சொல்லுகிறான் (ஶாஸ்த்ரத்தில் இத்யாதி$_3$).



ஸித்$_3$த$_4$ாஞ்ஜனமிட்டுப் பத$_3$ார்த்த$_2$ த$_3$ர்ஶநம் பண்ணுவாரைப் போலேகாண் என்படி" என்றானிறே.

(மாதவனித்யாதி$_3$) ப்$_3$ரஹ்மசாரி எம்பெருமானை ஆசைப் பட்டேனாகில்தான் ஆறியிரேனோ? மாதவன் விஷயமான அன்பென்னுதல்; மாதவனாகிற அன்பென்னுதல். "அன்பு" என்றும் "அன்புக்கு ஆஶ்ரயம்" என்றும் தோற்றாதே. அன்புதானென்னலாயாய்த்திருக்கிறது. ҍ 200. "तेन ते तमनुव्रताः" (தேந தே தமநுவ்ரதா:) என்கிறபடியே தான் முந்துற

---

தைக் கொண்டு அறிய முயல்கிறேன். கண்காணாமல் இருக்கும் பொருள்களை வெறுங் கண்ணாலே காண முயல்வாரைப் போன்றது உனது நிலை. அஞ்சனமையிட்டுக் காண்பாரைப் போன்றது எனது நிலை" என்று கூறினானன்றோ.

(மாதவனென்பதோரன்புதன்னை) ப்$_3$ரஹ்மசாரி நாராயணனை ஆசைப்பட்டிருந்தேனானால் நான் ஆறியிருக்கலாம். ஸ்ரீமந் நாராயணனையன்றோ ஆசைப்பட்டேன். (மாதவனென்பதோர் அன்பு; மாதவனைப்பற்றி அன்பு என்றோ, மாதவனாகிற அன்பு என்றோ பொருள் கொள்ளலாம். இரண்டாவது பொருளில் "அன்பு" என்றும் "அன்புக்கிருப்பிடம்" என்றும் வேறாகத் தோற்றாமல் மாதவன் அன்பே வடிவெடுத்தவன் என்னும்படி இருக்கிறான் என்று கருத்து.

200. ஸர்வேஷாம் ஹி ஸ த$_4$ர்மாத்மா
வர்ணாநாம் குருதே த$_3$யாம் |
சதுர்ணாம் ஹி வயஸ்த$_2$ாநாம்
தேந தே தமநுவ்ரதா: || [ரா-அ 17-16]

[த$_4$ர்மஸ்வரூபியான அந்த ராமபிரான், நான்கு வர்ணத்தவர்களுக்கும், (குழந்தைப்பருவம், பா$_3$ல்யம், யௌவநம், முதுமை என்னும்) நான்கு பருவத்திலிருப்பவர்களுக்கும் மற்றெல்லாருக்கும் அருள்புரிகிறான். ஆகையால் அவனிடத்திலே அவர்

---

ҍ அவனை அன்புதானாக இப்போது சொல்லுகைக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் (தேந தே தமித்யாதி$_3$)

இத்தலையிலே அன்பைப் பண்ணி, பின்னையாய்த்து இத்தலையில் அன்பை விளைத்தது. i "கோலமலர்ப்பாவைக்கன்பாகிய என்னன்பேயோ" என்னுமாபோலே. j ஸர்வப்ரகாரத்தாலும் விலக்ஷணமான விஷயத்தையிறே இவள்தான் ஆசைப்பட்டது; அப்படிப்பட்ட வைலக்ஷண்யமுள்ளது ஸ்ரிய:பதிக்கிறே. அவன் பக்கலிலேயாய்த்து இவள் அன்பைப் பண்ணிற்று.

(அன்புதன்னை k உற்று) அவனை l கிட்டி என்னுதல்; அவன் விஷயமான பக்தியை மறுபாடுருவவுடையேனாய் என்னுதல். "நிறந்தனூடு புக்கு" என்னுமாபோலே. (இருந்தேனுக்கு) இப்படி m அவனை / (யொழிய)ச் செல்

---

களும் அன்பு பூண்டிருக்கிறார்கள்] என்கிறபடியே எம்பெருமான அடியார்களிடம் தான் முதலில் அன்பு செலுத்தி, அதற்குப் பின்பு அவர்களிடம் அன்பை விளைக்கிறானன்றோ. "கோலமலர்ப்பாவைக்கு அன்பாகியவென் அன்பேயோ" [திருவாய் 10-10-7] என்கிறபடியே எல்லா வகைகளிலும் சிறப்புள்ள விஷயத்தையல்லவோ இவள்தான் ஆசைப்பட்டது. அப்படிப்பட்ட சிறப்புள்ளது லக்ஷ்மீநாதனுக்கன்றோ. அந்த மாதவனிடமேயாயிற்று இவள் அன்பு செலுத்தியது.

*(அன்புதன்னையுற்று)* அன்பு வடிவமான மாதவனைக்கிட்டி என்றோ, மாதவன் விஷயமான அன்பாகிற பக்தியைப் பரிபூர்ணமாக உடையவளாய் என்றோ பொருள் கொள்ளலாம். "நிறந்தனூடுபுக்கு எனதாவியை நின்று நின்று உருக்கிஉண்கின்ற" [திருவாய் 5-10-1] என்றதுபோல் பரிபூர்ணமான பக்தி

---

i (அன்புதானென்னலாயிருக்கும்) என்றதுக்கு ப்ரமாணம் (கோலமலர்ப்பாவைக்கு இத்யாதி) j முந்தின அர்த்தத்திலே "மாதவன் விஷயமான அன்பு" என்று விசேஷிக்கிறதென்னென்ன (ஸர்வப்ரகாரேத்யாதி) k,l "உற்று"-கிட்டி. m (அவனைச் செல்லாமை) - அவனையொழியச் செல்லாமை.

---

/ அரும்பதவுரைக்குப் பாடமில்லை.



லாமையுண்டானால் அவனிருந்தவிடத்திலே சென்று கிட்டவிறேயடுப்பது; அதுக்குக் கால்நடை தாராதபடி இருக்கிற எனக்கு. (உரைப்பதெல்லாம்) அங்கேசென்று கிட்ட ஆசையுடைய எனக்கு. நான் சென்று சேராமைக்குறுப்பாகச் சொல்லும் வார்த்தையெல்லாம். (மற்று-உரைப்பதெல்லாம்) அவனோடு கிட்டாமைக்குச் சொல்லும் வார்த்தையெல்லாம். n (ஊமையரோடு செவிடர் வார்த்தை) என் தசையை அறியாத உங்களுக்குத் தோற்றினபடி சொல்லுகைக்குப் பரிகரமில்லை. எனக்குக் கேட்கைக்குப் பரிகரமில்லை. ஊமைக்கு வ்யவஹாரயோக்யதையில்லை; செவிடர்க்குக் கேட்கைக்கு யோக்யதையில்லை.

"உனக்கோடுகிற தசை ஒருவருக்குமறியவொண்ணாதென்று சொல்லுவானென்? உனக்கு இத்தசையை

---

யையுடையவளாய் என்றபடி. *(இருந்தேனுக்கு)* இப்படி அவனை விட்டு தரிக்கமாட்டாமை உண்டான பின்பு அவனிருக்குமிடத்தைச் சென்று அடைவதன்றோ தக்கது. அதற்குக் காலால் நடந்து செல்ல இயலாமல் இருந்தவிடத்திலேயே இருக்கிற எனக்கு; *(உரைப்பதெல்லாம்)* அவனிடம் சென்றடைய ஆசையுடைய எனக்கு, நான் அவனை அடையாமலிருப்பதற்குறுப்பாகச் சொல்லும் வார்த்தையெல்லாம். *(மற்று உரைப்பதெல்லாம்)* அவனை அணுகாமலிருப்பதற்குச் சொல்லும் வார்த்தைகளெல்லாம், *(ஊமையரோடு செவிடர்வார்த்தை)* என் நிலையை அறியாத உங்களுக்கு வாய்வந்தபடி பேசுவதற்கு வாயில்லை, அதைக் கேட்க எனக்குக் காது இல்லை. "செவிடரோடே ஊமையர் வார்த்தை" என்று கூட்டிப் பொருள்கொள்ள வேண்டும். ஊமைக்குப் பேசத் தகுதியில்லை; அதுபோன்ற நிலை உங்களுடையது. செவிடர்க்குக் கேட்கத் தகுதியில்லை; அதுபோன்ற நிலை என்னுடையது என்கை.

"உன்னுடைய நிலை எவராலும் அறியமுடியாது என்று எப்படிச் சொல்லுவது? உனக்கு இந்நிலையை விளைத்தவன் இதை

---

n "செவிடரோடே ஊமையர் சொல்லுமாபோலே" என்று அந்வயிப்பது.

விளைந்தவன் தனக்குத் தெரியாதோ ?'' என்ன, தாய் செல்லாமையறியாதவனோ கலந்தார் செல்லாமையறியப் புகுகிறான்? (பெற்றிருந்தாளையொழிய) o அநந்தவ்ரத மநுஷ்டி2த்துப் பின்னைப் பிள்ளை முகத்திலே விழிக்கவேணு மென்று க்லேசப்பட்டுப் பெற்று, பின்னைப்போகவிட்டு இழந்திருந்தாளாய்த்து. (போய்ப் பர்த்து) இவள் இரக்கத் தாலே இழவு பொறுக்கமாட்டாமே கண்ணுங் கண்ணீரு மாகவிருந்தாள்; அவன முலைச்சுவடறியாமையாலே கால் தாழவும் மாட்டாதே போனான். (பேர்த்தொரு தாய் இல் வளர்ந்த) வேறொரு தாய் க்3ருஹத்திலே வளர்ந்தானாய்த்து. பெற்றவள் இழவோடேயிருக்க, அவளுக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி தாயானமையில் ஒரு வாசி தோற்றாதபடி யாய்த்து வளர்ந்தது. அவள்தானும் "திருவிலேனொன்றும்

---

அறியமாட்டானோ?" என்று அருகிலிருப்பவர்கள் கேட்க. "தாயின் ஆற்றாமையை அறியாதவன் காதலியின் ஆற்றாமையை அறி வனோ?" என்கிறாள் மேலே—(*பெற்றிருந்தாளை ஒழியவே*) பிள்ளை பெறவேணுமென்று அநந்த வ்ரதம் (1. அநந்தனைக் குறித்து விரதம், 2. அளவற்ற விரதம்) அனுஷ்டி2த்து, மிகுந்த வருத்தப்பட்டு இவனைப் பெற்று, பெற்றவன்றோ இவனைப் போகவிட்டு இழந்திருந்தாளன்றோ தேவகி; அதைச் சொல்லுகிறாள். (*போய்ப் பேர்த்து*) தேவகி கண்ணனைப் பிரியும் வருத்தத்தைப் பொறுக்க மாட்டாமல் 'பெற்றமனம் பித்து' என்கிறபடியே அவனுக்கு இரங்கிக் கண்ணும் கண்ணீருமாக இருந்தாள். கண்ணனோ ஒரு நாளும் இவளிடம் முலைப்பால் குடித்தறியாதவனாகையாலே 'பிள்ளைமனம் கல்' என்கிறபடியே அவள் நிலைகண்டு இரங்காமல் ஒருகணமும் தாமதிக்காமல் சென்றுவிட்டான். (*பேர்த்து ஒரு தாய் இல்வளர்ந்த*) வேறொரு தாயான யசோதையின் வீட்டிலே வளர்ந்தானாயிற்று. பெற்றவளான தேவகி வருந்தியிருக்க, பெறாதவளான யசோதைக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி அவளையே பெற்றவளாகக் கொண்டு வளர்ந்தான். தேவகியும் "திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வ நங்கை

---

o (அநந்தவ்ரதம்) - சாடு; அநந்தமான வ்ரதமென்று



பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாளே" என்றாளிறே. "தொல்லையின்பத்திறுதிகண்டாள்" என்னக் கடவதிறே.

(பெற்றிருந்தாளையித்யாதி3) p தன்னையொழியச் செல்லாமையுடையாரை நலிகை அவனுக்கு ஸத்தாப்ரயுக்த மாய்த்து. q "தாய்முலையித்யாதி3"; இதிறே ஊடினார் வார்த்தை. r முலைகொடுத்தல்லது த4ரியாதாளாய்த்து; தனக்கு ஜீவநஹேதுவாய்த் தான் வந்து முலையுண்ணுமை யாலே முலைக்கண் நெறித்து அவளிருக்க, தன் மௌக்3த்4யம் தோற்றத் தனக்கு விநாஶத்தைப் ப2லிக்குமதான விஷத்தையுண்டு. அத்தாலே "பா4வப3ந்த4முடையார்க்கும் பா4வதோ3ஷமுடையார்க்கும் வாசியறியாதானொருவன்காண்

---

யசோதை பெற்றாளே" [பெரு-திரு 7-5] என்றாளன்றோ. "அசோதை தொல்லையின்பத்திறுதி கண்டாள்" [பெருதிரு 7-8] என்கிறபடியே பேரின்பத்தின் எல்லையைக் கண்டாளன்றோ யசோதை.

(*பெற்றிருந்தாளையொழியவே போய்........*) தன்னைப் பிரிந்து உயிர்த4ரிக்க முடியாதவர்களை வருத்துவது அவனுக்கு இயற்கைக் குணமாயிற்று. "தாய் முலைப்பாலில் அமுதிருக்கத் தவழ்ந்து தளர்நடையிட்டுச் சென்று பேய் முலைவாய்வைத்து நஞ்சையுண்டு பித்தனென்றே பிறரேச நின்றாய்" [பெருதிரு 6-4] என்றன்றோ ஊடிய நிலையில் குலசேகரநாயகியும் அருளிச் செய்தாள். "முலைகொடுத்தாலல்லது த4ரிக்கமாட்டாதவள் யசோதைப் பிராட்டி. குழந்தையான கண்ணனுக்கும் தாய்ப் பாலே உயிர்த4ரிக்கக் காரணம். அவன் வந்து முலையுண்ணு மையாலே முலைக் கடுப்பாலே அவள் வருந்தியிருக்கத் தன் சிறுபிள்ளைத்தனம் தோற்றத் தன்னை அழிப்பதற்காகப் பூதனை கொடுத்த விஷப்பாலையுண்டு அதனாலே 'அன்புடையவர் களுக்கும், நினைவில் வஞ்சனையுடையவர்களுக்கும் வேற்றுமை யறியாதவனன்றோ இவன்' என்று கண்டாரிகழும்படி நின்றா

---

த்4வநி. p.q தன்னையொழியச் செல்லாமை யுடையாரை உபேக்ஷித்து நலிவுபண்ணுமென்னுமதுக்கு ப்ரமாணம் (தாய்முலையித்யாதி3) r சந்தைக்கு அர்த்த2ம் (முலைகொடுத் தல்லதித்யாதி3).

இவன்'' என்று கண்டார் இகழும்படி நின்றான். (நம்பி) சாலப் பூர்ணனாய்த்து.

§ (மற்பொருந்தா இத்யாதி3) † தன்னுடம்போடே அணைய வேணும் என்னும் ஆசையுடைய நானிருக்க, இத்தனை போது புறப்பட்டு முரட்டு மல்லரோடே அணைகைக்குப் போகா நிற்கும். மல்லரானவர்கள் மற்பொருகைக்கு யுத்3த4பூ4மியிலே சென்று கிட்டுங்காட்டில், தான் யுத்3த4பூ4மியிலே சென்று கிட்டுமாய்த்து; அவன் மல்லருடம்போடே அணைவதற்கு முன்னே இடையிலே நான்சென்று கிட்டிக் கொள்ளும்படி என்னை மதுரையின் பரிஸரத்திலே கொடு போய்ப் பொகடுங்கோள். 1.

---

னன்றே என்றானன்றே அவன். (நம்பி) இத்தன்மையையே தனக்கு நிறைவாகக் கொண்டிருக்கிறான் அவன்,

(மற்பொருந்தா மற் களமடைந்த) தன் உடம்போடே அணைய வேணும் என்னும் பெருங்காதலுடைய நானிருக்க, என்னை விட்டு இந்நேரம் புறப்பட்டு முரட்டு மல்லர்களோடே அணைவதற்குப் போர்க்களத்திற்குப் போயிருப்பான். (மற்பொருந்தா மல்) என்னிடம் பொருந்தாமல் என்று பொருள். அன்றிக்கே, (மற்பொருந்தா மற்களம்) என்று பிரித்து, 'மல்லர்கள் மல்யுத்3த4ம் செய்வதற்கு மற்போர்க்களத்திலே வந்தடைவதற்குள் தான் அந்தக் களத்திலே சென்று அடைவானாயிற்று' என்றும் பொருள் கொள்ளலாம். (மதுரைப்புறத்தென்னையுய்த்திடுமின்) அவன் மல்லர் உடம்போடே அணைவதற்கு முன்னம் நடுவிலே நான் சென்று அவனை அணுகலாம்படி வடமதுரைப் பக்கத்திலே என்னைக் கொண்டுபோய் விடுங்கள். 1.

---

§ மல்-மிடுக்கு, §,† "மற்பொருந்தாமற் களமடைந்த" என்றதுக்கு இரண்டு பொருள்; மற்பொருந்தா - என்னிடத்திலே பொருந்தாதே, மற்களம் - மல்லருடைய யுத்3த4பூ4மியையடைந்தவனென்னுதல்; அன்றிக்கே, மல்லாலே பொருந்தாதேயிருக்கிற களமடைந்தவனென்னுதல். அதாவது - அவர்கள் கிட்டுவதற்கு முன்னே என்றபடி. மல் பொருந்தாமல்-மல்லரானவர்கள் பொருந்துவதற்கு முன்னே யென்னுதல்; மல்லரோடே பொருந்துவதற்கு முன்னே யென்னுதல். "களம்" - யுத்3த4பூ4மி. 1.



## பன்னிரண்டாம் திருமொழி — இரண்டாம் பாட்டு

**நாணி யினியோர் கருமமில்லை**
**நாலய லாரு மறிந்தொழிந்தார்,**
**பாணியா தென்னை மருந்துசெய்து**
**பண்டு பண்டாக்க வுறுதிராகில்,**
**மாணி யுருவா யுலகளந்த**
**மாயனைக் காணில் தலைமறியும்,**
**ஆணையால் நீரென்னைக் காக்கவேண்டில்**
**ஆய்ப்பாடிக் கேயென்னை யுய்த்திடுமின்.**

பதவுரை:— **இனி** — இனிமேல், **நாணி** — வெட்கப்பட்டு, **ஓர் கருமம் இல்லை** — ஒரு பயனுமில்லை, **நால் அயலாரும்** — ஊரிலுள்ளாரெல்லாரும், **அறிந்தொழிந்தார்** — (எனது செய்தியை) அறிந்துகொண்டார்கள்; (ஆதலால் இனி வெட்கப்பட்டுப் பயனில்லை). **பாணியாது** — காலதாமதமின்றி, **மருந்துசெய்து** — வேண்டும் பரிஹாரங்களைச் செய்து, **என்னை** —, **பண்டு பண்டு ஆக்க உறுதிர் ஆகில்** — இப்போதைய விரஹாவஸ்தைக்கு முற்பட்டதான ஸம்ச்லேஷ தசைக்கும் முற்பட்டதான பகவத்விஷய வாஸனையையே அறியாத தசையிலிருந்த நிறத்தைப் பெற்றவளாகச் செய்ய நினைப்பீர்களாகில், **நீர்** — நீங்கள், **என்னை** —, **ஆணையால்** — ஸத்யமாக, **காக்கவேண்டில்** — காப்பாற்ற விரும்புகிறீர்களாகில், **என்னை** —, **ஆய்ப்பாடிக்கே** — திருவாய்ப்பாடியிலே, **உய்த்திடுமின்** — கொண்டு சேர்த்து விடுங்கள், (அவ்விடத்தில்) **மாணி உரு ஆய் உலகு அளந்த மாயனை காணில்** — (மாவலியினிடத்தில்) வாமநரூபியாய்ச் சென்று (த்ரிவிக்ரமனாகி) உலகங்களையெல்லாம் அளந்து கொண்ட பெருமானை ஸேவிக்கப்பெற்றால், **தலை மறியும்** — (இந்த நோயானது) தலை மடங்கும்.

---

2. அவ:—"நீ எது செய்தாலும், இப்படித் துணிவுடன் அவனிருக்குமிடம் தேடிப்போவது அவனுக்குக் குற்றத்தை

அவ:— இரண்டாம் பாட்டு. எல்லாம் செய்தாலும், இப்படித் துணிந்து முடுக நிற்குமது அவனுக்கு அவத3யா வஹம்; நீ அவனுக்கு அவத்3யத்தை விளைக்கக்கடவையோ? a உன்னுடைய ஸ்தரீதவததை நோக்கவேண்டாவோ? என்ன;

வ்யா:— b (நாணியினியோர் கருமமில்லை) c நாணி நான் என்னுடைய $c_2$ ஸ்தரீத்வத்தை நோக்குகிற இத்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? d நாணுகையாவது-லஜ்ஜிக்கை யிறே. லஜ்ஜித்து மீளவேண்டுவது இன்னமும் சிலநாளி ருந்து அவ்வஸ்துவை லபி4க்கவேணுமென்றிருப்பார்க்கே;

---

விளைக்கும்படியிருக்கும். நீ அவனுக்குக் குற்றத்தை விளைக்க லாமோ? உன்னுடைய பெண்மைக்குரிய நாணத்தோடு இருக்க வேண்டாமோ?'' என்று அருகிலிருந்தவர்கள் கேட்க, ''நாணத் தால் எப்பயனுமில்லை; என்னைத் திருவாய்ப்பாடிக்குக் கொண்டு செல்லுங்கள்'' என்கிறாள்.

*வ்யா:—(நாணியினியோர் கருமமில்லை)* நாணங் கொண்டு நான் என்னுடைய பெண்மையைப் பாதுகாக்கிற இதனால் என்ன பயனுண்டு?—நாணுகையாவது—அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் பெண்களுக்குரிய நான்கு கு3ணங்களி லொன்றான நாணத்தையுடைத்தாயிருக்கை. அதாவது—தகாத கார்யத்தைச் செய்ய வெட்கப்படுவது. இப்படி வெட்கப் பட்டுத் தகாத கார்யத்தைச் செய்யாமல் மீளவேண்டுவது இன்னும் சிலநாள் உயிரோடிருந்து நாயகனை அடையவேண்டும் என்று நினைத்திருப்பார்க்கேயன்றோ. இவளுக்கு உயிர்வாழ் வதில் ஆசையில்லையாகையாலே நாணம் அடியோடு போயிற்று.

---

இரண்டாம் பாட்டு. (நாணியித்யாதி3) a (உன்னுடைய ஸ்த்ரீத்வத்தை நோக்கவேண்டாவோ) உன்னுடைய ஸ்த்ரீ த்வத்தையும் நோக்கவேண்டாவோவென்றபடி. b ''நாணி யினி'' என்கிறவிடத்திலே இனிக்கு நாலு தாத்பர்யம். c அதாவது - அவன் வந்து முகங்காட்டாத பின்பு நாணி நான் என்னுடைய ஸ்த்ரீத்வத்தை நோக்குகிற இத்தால் என்ன ப்ரயோஜநம் உண்டு? என்னுதல். $c_3$(ஸ்த்ரீத்வத்தை)



e லஜ்ஜைபோகையாவது - முடிகையிறே. f முடியுமளவானு லும் ஜீவித்திருப்பார் செய்யுமது செய்யப்போமோ? ஸத்தை கிடக்கிலிறே லஜ்ஜை நோக்கலாவது; ஸத்தையழியா நிற்கச்செய்தே நோக்குவதொரு லஜ்ஜையுண்டோ? த4ர்மியை அநுப3ந்தி4த்திறே லஜ்ஜையிருப்பது; த4ர்மிலோபம் பிறக்கு மளவானால் இனி நோக்குகையென்றொரு பொருளுண்டோ? (இனி) g இவள்தான் ஆமளவும் நோக்கிப்பார்த்தாள்போலே காணும்.

---

பிரிவுத்துன்பத்தாலே 'இனி உயிர்வாழ முடியாது' என்னும் நிலை வந்தபின்பும், உயிர்வாழ ஆசைப்படுபவர்கள்போலே நாண மடைவதால் பயனில்லை. அந்நிலை வந்தபின்பு உயிர்வாழ ஆசை யில்லாத நான் நாணத்தை அடையமுடியுமோ? என்னுடைய ஸத்தை இருந்தாலன்றோ நான் வெட்கப்படமுடியும், ஸத்தை அழிந்துகொண்டிருக்கும்போது நாணத்தை நான் எப்படிக் காக்கமுடியும்? நாணத்தையுடைய த4ர்மியாகிற என்னை யொட்டியேயன்றோ த4ர்மமாகிற நாணம் இருக்கமுடியும். த4ர்மியாகிற எனக்கே *அழி*வுநேர இருக்கும்போது த4ர்மமாகிற நாணத்தை எப்படிக் காக்கமுடியும்? *(இனி)* இவளும் தன் னுடைய நாணத்தை ஆனவளவும் காக்கப் பார்த்தாள் என்பது இப்பத3த்தால் விளங்குகிறது

---

என்றது ஸத்தையை என்றபடி. e நாணமில்லாதபோது ஸ்த்ரீத்வத்தை நோக்கவொண்ணாதோவென்ன; (லஜ்ஜை போகையாவது முடிகையிறே) என்று மேலே இருக்கிற வாக்யத்தை இவ்விடத்திலே யோஜித்துக் கொள்வது. d அன்றிக்கே, முடியுமளவான பின்பு லஜ்ஜிக்கவேண்டா வென்னுதல்; இத்தை அருளிச்செய்கிறார் (நாணுகையாவது இத்யாதி3) f முடியும் அவஸ்தை2யானாலும் பரிஹரிக்க வேண்டாவோவென்ன அருளிச்செய்கிறார் (முடியுமளவித் யாதி3) f, g (முடியுமளவானாலும்) என்று தொடங்கி, (இவள்தான் ஆமளவும்)என்ற வாக்யத்தளவும் உத்தரோத்தர விவரணம். g அன்றிக்கே, ஜீவிக்கையிலுண்டான நைராஸ் யந்தோற்ற ''இனி நாணிக்கருமமில்லை'' என்கிறாளாதல்;

h இனியொரு காரியமில்லை என்கைக்கு இப்போது உனக்கு வந்ததென்னென்ன; (நாலயலாருமித்யாதி3) இது தான் பிறரறியாமைக்கே தான் பரிஹரிக்கப் பார்க்கிறது; இதறியாதார் சிலருண்டாய், பரிஹரிக்கவேணுமே. i இவள் தான் முந்துற அறியாமே பரிஹரித்து, அநந்தரம் அதுக்கு அசலிலுள்ளாரறியாமல் பரிஹரிதது. இப்படிப் போராநிறகச் செய்தே ஓரசலறிந்து, மற்றவசலறிந்து. அவ்வளவிலடங்காதே அவ்வூரிலவர்களறிந்து அதுதான் புறவெள்ளமிட்டு, அவ்வழியாலே எங்குள்ளார்களும் அறிந்தார்களாய்த்து.

---

''நாணங்கொண்டு இனி ஒரு பயனில்லை என்று சொல்லுகைக்கு இப்போது உனக்கு என்ன வந்துவிட்டது? என்று சிலர் கேட்கச் சொல்லுகிறுள்—(நாலயலாருமறிந் தொழிந்தார்) பிரிவுத்துன்பத்தால் நான் படும் பாட்டைப் பிறரறியாயல் பாதுகாக்க வேணுமாளுல் நாணமடைவதால் எனக்குப் பயனுண்டு. தனது நிலையை அறியாதார் சிலர் இருந்தால்தான் அவர்கள் அறியாதபடி பாதுகாக்க முடியும், முதலில் அப்படி ஊரிலுள்ளவர்கள் அனைவரும் அறியாதிருந்தபோது தனக்கு நெருங்கிய தாய்மார், தோழிமார் அறியாதபடி பாதுகாத்தாள், அருகிலிருந்தமையாலே அவர்கள் ஊகித்து அறிந்துவிட்டார்கள், அப்போதும் தனக்கு அந்தரங்க3மல்லாத ஊரிலுள்ளார் அறியாதபடி பாதுகாத்தாள். அப்போது ஊரிலுள்ள ஒருவருக்கு இது தெரிந்துவிட்டது, அவரிடமிருந்து மற்ருெருவருக்குத் தெரிந்துவிட்டது. அத்தோடு நில்லாமல் ஊரிலுள்ளார் எல்லோரும் அறிந்துவிட்டார்கள். அது வெளியூர்களிலும் பாய்ந்து அவ்வழியாலே எல்லா ஊரிலுள்ளவர்களும் அறிந்துவிட்டார்கள். இனி நாணங்கொண்டு மறைத்துவைப்பதால் என்ன

---

இத்தையருளிச்செய்கிறர் (இவள்தான் இத்யாதி3) இதுக்கு முந்தின அர்த்த2த்தைப் பற்ற ப்ரகாராந்தரேண பே4த3முண்டு; அங்கு-ப்ரகாஶம்; இங்கு-ஸ்வக3தம்.

h அன்றிக்கே, ''நாலயலாருமறிந்தொழிந்தார், இனி-நாணி-ஓர் கருமமில்லை'' என்னுதல்; இத்தையருளிச்செய்கிறர் (இனியொரு காரியமில்லையித்யாதி3) i (இவள்தான்



j (அறிந்தொழிந்தார்) இவள்தான் திருக்கோட்டியூர் நம்பியைப் போலே ''ப4க3வத்3விஷயம் ஒருவரால் அறியலாகாது'' என்று j1 மறைத்துக்கொடுபோருமவளொருத்தி போலேகாணும்.

நம்பிதாம் ஒருதிண்ணையிலே ஒருவரும் அறியாதபடி ப4க3வத்3கு3ணுநுஸந்தா4நம் பண்ணியிருப்பர்; எம்பெருமாளுர் எழுந்தருளி ''நம்பிமடமேது?'' என்றுகொண்டு தண்டனிட்டவாறே. அங்குள்ளார், ''எம்பெருமாளுர், நம் திருக்குருகைப்பிரானகத்தை நோக்கித் தண்டனிடாநின்ருர்'' என்றபின்பிறே நம்பியுடைய ப்ரப4ாவம் அங்குள்ளார் அறிந்தது. ஆழ்வானும் ஆண்டானும் ஓராறுமாஸம் ஸேவித்

---

பயன்? (அறிந்தொழிந்தார்) இவள்தான் திருக்கோட்டியூர் நம்பி ப4க3வத்3 விஷயத்தைக் கண்டவர் அறிந்துவிடக்கூடாது என்று மறைத்துக்கொண்டு போந்தது போலே தனது நிலையை மறைத்துக்கொண்டிருந்தாள் என்று விளங்குகிறது. அவர் மறைத்த அர்த்த2ம் எம்பெருமாளுராலே பலருக்கும் வெளியானதுபோல், இவள் மறைத்ததும் ஊரெல்லாம் அறியும்படி ஆயிற்று.

திருக்கோட்டியூர் நம்பி தமது ஊரில் தம் திருமாளிகைத் திண்ணையிலே ஒருவரும் அறியாதபடி ரஹஸ்யத்ரயங்களைக் கொண்டுஎம்பெருமானுடைய கு3ணங்களை அனுஸந்தி4த்துக் கொண்டிருப்பர்.பெரிய நம்பியின் நியமனத்தாலே அவரிடம் அவ் வர்த்த2ங்களைக் கேட்பதற்காக எம்பெருமாளுர் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளி ''நம்பியின் மடம் எது?'' என்று கேட்டு அவர்கள் காட்டின தி3க்கை நோக்கி தண்டனிட்டவுடனே அங்குள்ளவர்கள் 'யதிராஜர் நம்மூர் நம்பியாகிற திருக்குருகைப் பிரான் அகத்தை நோக்கித் தண்டனிடுகிருரே!'' என்ற பின் பல்லவோ நம்பியின் பெருமையை அவ்வூரிலுள்ளார் அறிந்தது; நம்பி அர்த்த2ங்களை மறைத்துப்போவார் ஒருவர் என்பதற்கு மேலும் இரண்டு ஐதிஹ்யங்கள் உண்டு, கூரத்தாழ்வானும்

---

முந்துற) தாயார் முந்துற. j, j1 அறிந்துவிட்டாரென்கை

திருந்த k ஸந்நிவேஶத்தைக்கண்டு போரும்போது ஒரு வார்த்தை கேட்டுப் போருவர்கள; ஆழ்வான் ஒருவிசை ஆறுமாஸம் ஸேவித்து நின்று போரப்புகா நிற்கச்செய்தே, ஆழ்வானை, "நம்மாழ்வார் 'அடியேனுள்ளான்' என்றபடி கண்டாயே" என்று பணித்தாராம்; "அடியேன் க்ருதார்த்த2னே" என்று போந்தானும்; l "என்னுள்ளான்" என்று அஹமர்த்த2த்தை நிஶ்சயிக்கிறவிடத்திலே, "அடியேன்" என்று ஶேஷத்வத்தை நிரூபகமாகச் சொல்லுகிற

முதலியாண்டானும் ஒவ்வொரு சமயங்களிலே ஆறுமாதம் நம்பிக்கு ஶுஶ்ரூஷை செய்து ஒவ்வோரர்த்த2ங்களைப் பெற விரும்பினர். அவர்கள் ஶுஶ்ரூஷை செய்த ஆறுமாதமும் வாய்திறவாமலிருந்து அவர்கள் விடைகொள்ளும்போது அவர்களுக்கு ஒவ்வொரு வாக்யம் சொன்னார் நம்பி என்பது ப்ரஸித்3த4மன்றோ. (1) முதலியாண்டான் எம்பெருமானார் நியமனத்தாலே நம்பியிடம் சரமஶ்லோகார்த்த2ம் கேட்பதற்காக ஓர் ஆறுமாதம் ஶுஶ்ரூஷை செய்து நம்பி வாய்திறவாமையாலே விடைகொள்ளும்போது "சரமஶ்லோகார்த்த2த்தை எம்பெருமானாரிடமே கேட்டுக்கொள்ளும்" என்று ஒரே வார்த்தை அருளிச்செய்தார். (2) எம்பெருமானார் கோ3ஷ்டி2யிலே ஒரு முறை ஜீவாத்மாவுக்கு அந்தரங்க3 நிரூபகம் ஶேஷத்வமா? ஜ்ஞாநாநந்த3ங்களா? என்னும் விசாரம் எழுந்தது. இதன் நிர்ணயத்தை ஆசார்யன் மூலமாகப் பெறவேணும் என்று திருவுள்ளம் பற்றிய எம்பெருமானார் கூரத்தாழ்வானைத் திருக்கோட்டியூர் நம்பியிடம் அனுப்பினார். ஆழ்வான் நம்பியிடம் ஆறுமாதம் ஶுஶ்ரூஷை செய்த பின்பும் நம்பி ஒருவார்த்தையும் அருளிச்செய்யாமையாலே அவரிடம் விடைகொள்ளும்போது நம்பி ஆழ்வானைப் பார்த்து "நம்மாழ்வார் 'அடியேனுள்ளான்' [திருவாய் 8-8-2] என்றபடி கண்டாயே" என்று அருளிச்செய்து அனுப்பினாராம். எம்பெருமானார் கேட்டனுப்பிய கேள்விக்குப்

யாலே-மறைத்தது தோற்றுகிறது. k (ஸந்நிவேஶம்)-க3ம்பீ4ரம். l "அடியேன்" என்றால் ஶேஷத்வம் தோற்றும்படியென்னென்ன அருளிச்செய்கிறார் (என்னித்யாதி3.)



திறே. m ஜ்ஞாநாநந்த3 லக்ஷணமுமாய், ஜ்ஞாநகு3ணகமுமாய், அசித்3வ்யாவ்ருத்தமுமாயிருக்குமென்னுமிடத்தை n மூன்றும் பத3த்தாலே நிரூபியாநிற்கச்செய்தே, முன்பே o பாட3க்ரமத்தாலே ஶேஷத்வத்தையிட்டுச் சொல்லவேண்டும்படியிறே ஶேஷத்வம் ஸ்வஸ்வரூபமாயற்றபடி.

பதில் வந்துவிட்டது என்று உணர்ந்த ஆழ்வானும் 'அடியேன் பா4க்3யஶாலி' என்று மகிழ்ந்து எம்பெருமானாரிடம் சென்று விண்ணப்பித்தாராம். கேட்ட கேள்விக்கு இங்கு சொல்லப்பட்ட பதில் யாதெனில்: "அடியேனுள்ளான் உடலுள்ளான்" என்பது திருவாய்மொழிப் பாசுரம். "உடலுள்ளான்" என்று உடலைத் தனியே எடுத்துவிட்டபடியாலே "அடியேனுள்ளான்" என்னும் பத3ம் ஆத்மஸ்வரூப மாத்திரத்தைச் சொல்லுகிறது. ஜ்ஞானம் ஆத்மஸ்வரூபத்துக்கு அந்தரங்க3 நிரூபகமென்றால் ஆழ்வார் ஜீவாத்மா ஜ்ஞானஸ்வரூபி என்பது தோற்ற "என்னுள்ளான்" என்றே அருளியிருப்பர். அப்படியல்லாமல் ஆத்மா ஶேஷபூ4தன் என்பது தோற்ற "அடியேன்" என்று ஆழ்வார் தேகத்தைக்காட்டிலும் வேறான ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லுகையாலே, 'ஜ்ஞானானந்தங்களைக் காட்டிலும் ஶேஷத்வமே ஆத்மாவுக்கு அந்தரங்க3 நிரூபகம்' என்று விளக்கினார் என்பது நம்பியின் திருவுள்ளம். இவ்வர்த்த2ம் திருமந்த்ரத்திலும் காட்டப்பட்டது. அதாவது—திருமந்த்ரத்தில்—முதற்பத3மான ப்ரணவத்தின் மூன்றாமக்ஷரமான மகாரம் 'ஆத்மாவானது ஜ்ஞாநாநந்த3ங்களை நிரூபகமாகக்கொண்டதாய், ஜ்ஞானத்தை கு3ணமாகவும் கொண்டதாய், அசேதனத்தைக் காட்டிலும் வேறுபட்டிருக்கும்' என்று சொல்லுவதற்கு முன்னமே, முன்னிரண்டு அக்ஷரங்கள் 'ஆத்மா எம்பெருமானுக்கு அநந்யார்ஹஶேஷமாயிருக்கும்' என்று உணர்த்துவதன் மூலம் 'ஜ்ஞானானந்தங்களைக் காட்டிலும் ஶேஷத்வமே ஆத்மாவுக்கு அந்தரங்க3 நிரூபகம்' என்று விளக்கப்பட்டதன்றோ.

"நீ உன் ஸ்வருபத்தை ரக்ஷிப்பதினின்றும் நீங்கினாலும் உன் விஷயத்தில் நாங்கள் அப்படி நீங்கமாட்டோம்; எங்

m ஶேஷத்வம்போலே ஜ்ஞாநாநந்த3ங்களும் நிரூபகமன்றோ என்ன அருளிச்செய்கிறார் (ஜ்ஞாநாநந்தே3த்யாதி3) n (மூன்றாம்பத3ம்)-மகாரம். o (பாட23க்ரமம்) அகார உகார

"நீ கைவாங்கினாயென்ன. உன்னிடையாட்டத்திலே நாங்கள் கைவாங்கப் பாரோமே; ஆந்தனையும் ஹிதம் சொல்லி நோக்கத் தேடுவுதோமிறே, எங்களுக்கு உன் பக்கலுண்டான நசையாலே" என்ன; என்னை மெய்யே நோக்கப் பார்க்கிறிகோளாகில், தன்னுடைமை பெறுகைக்காகத் தன்னை இரப்பாளனாக்கினவனை என் கண்ணுக்கு இலக்காக்கப் பாருங்கோள். பாணித்தல் - தாழ்த்தல். தாழாதே எனக்கு வேண்டும் பரிஹாரம் பண்ணி. p (பண்டு பண்டாக்கவுறுதிராகில்) ஸம்ஶ்லேஷிப்பதற்கு முன்புத்தைப் பூர்த்தி எனக்குண்டாக்கப் பார்த்திகோளாகில். q கலக்கப் புக்கவன்று தொடங்கி மெலிவுக்கேயிறே க்ருஷி பண்ணிற்று.

---

களுக்கு உன்னிடமிருக்குப் அன்பாலே முடிந்தவரை உனக்கு நன்மை சொல்லி உன் ஸ்வரூபத்தை ரக்ஷிக்கமுயல்வோமன்றோ" என்று அருகிலுள்ள தாய்மார் முதலானோர் கூற. "என்னை உண்மையில் ரக்ஷிக்க நினைத்தீர்களாகில், தன் உடைமையான இவ்வுலகைப் பெறுவதற்காகத் தன்னை யாசகனாக்கிக்கொண்ட வாமனனை என் கண்ணுக்குக் காட்ட முயலுங்கள்' என்கிறாள் மேலே—(*பாணியாது என்னை மருந்துசெய்து*) காலம் தாழ்த்தாமல் எனக்குச் செய்யவேண்டிய பரிஹாரங்களைப் பண்ணி. பாணித்தல் — காலம் தாழ்த்தல். மருந்துசெய்தல் — (காதல்) நோயைத் தீர்க்கப் பரிஹாரம் செய்தல். (*பண்டு பண்டாக்க உறுதிராகில்*) எம்பெருமானோடு கலப்பதற்கு முன்னம் அவனைப்பற்றி அறியாமலிருந்தபோது இருந்த நிறத்தை எனக்கு உண்டாக்க நினைத்தீர்களாகில். முதல் 'பண்டு' என்னும் பதம் தற்போதுள்ள பிரிவு நிலைக்கு முற்பட்ட கலந்து நின்ற நிலையைக் குறிக்கிறது. இரண்டாவது 'பண்டு' என்னும் பதம் அதற்கும் முற்பட்டதாய், நாயகனைப்பற்றி அறியாதிருந்த நிலையைக் குறிக்கிறது. நாயகனோடு கலவி ஏற்பட்டவன்று தொடங்கி, பிரிவு மாறி மாறி வருகையாலே கலவி நிலையும் இவளது மெலிவுக்கே அடிகோலிற்றன்றோ. ஆகையால் "அதற்கும் முற்பட்ட கன்னி நிலையில் எனக்கிருந்த பொலிவு மறுபடியும் உண்டாகவேண்டும் என்று நினைத்திருந்தீர்களாகில்" என்று கூறுகிறாள்.

---

மகாரமென்கிற அடைவிலே. p 'பண்டு'—விஶ்லேஷத்துக்குப் பூர்வமான ஸம்ஶ்லேஷம்- அதுக்குப்பண்டு—



(மாணியுருவாய்) "உண்டு" என்று இட்டபோதோடு "இல்லை" என்று தள்ளிக் கதவையடைத்தபோதோடு வாசியற முகமலர்ந்துபோம்படி இரப்பிலே தகணேறின வடிவையுடையனாய். (உலகளந்த மாயனைக்காணில்) த்ரைலோக்யத்தையும் அளந்துகொண்ட ஆஶ்சர்யபூ4தனைக் காணில். கு3ணஜ்ஞானத்தாலே ஜீவித்திருக்கும் அவஸ்தை2 இல்லையென்றது. r (தலைமறியும்) தொடருகிற பாம்பைத் திரியவிடுவிக்குமாபோலே.

(ஆணையித்யாதி3) உங்களாணையே! நீர் என்னை நோக்க வேண்டில் என்னுதல்; நான் தெரிந்திருந்து உங்களுடைய

---

(*மாணியுருவாய்*) ப்3ரஹ்மசாரியான வாமனனின் உருவோடு. யாசிப்பதற்காக அவதரித்தானாகையாலே "பி4க்ஷையுண்டு" என்று சொன்னாலும் "பி4க்ஷையில்லை" என்று தள்ளிக் கதவடைத்தாலும் வேற்றுமையில்லாமல் முகமலர்ச்சியோடே செல்லும்படி யாசிக்கும் தொழிலிலே தழும்பேறிக் கிடக்கும் ப்3ரஹ்மசாரிவடிவை எடுத்தான். (*உலகளந்த மாயனைக் காணில்*) மூவுலகையும் அளந்துகொண்ட வியத்தற்குரியவனைக் கண்டால்தான். "கோவிந்தன் குணம்பாடி ஆவிகாத்திருப்பேனே" [நாச்-திரு 8-3] என்கிறபடியே அவனுடைய கு3ணானுஸந்தா4னத்தாலே உயிர்வாழும் நிலை எனக்கு இப்போது இல்லை. அவனை நேரே கண்டால்தான் உயிர்த4ரிக்கமுடியும் என்கிறாள். (*தலைமறியும்*) பிரிவாற்றாமையால் வந்த எனது நோய் தீரும். துரத்தி வருகிற பாம்பைத் திருப்பியடிப்பதுபோலே எனது நோய் தலைமடங்கும் என்றபடி.

(*ஆணையால் நீரென்னைக் காக்கவேண்டில்*) உங்கள்மேல் ஆணை! நீங்கள் என்னை ரக்ஷிக்கவேண்டியிருந்தால். "ஆல்"

---

கந்யகாவஸ்தை2. q ஸம்ஶ்லேஷாவஸ்தை2யை அபேக்ஷியாதே அதுக்குப் பூர்வாவஸ்தை2யை அபேக்ஷிப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (கலக்கப்புக்கவன்று இத்யாதி3) r "தலைமறியும்"–ஆற்றாமையால் வந்த வ்யாதி4 திரும்பும். 2.

ஆஜ்ஞாநுவர்த்தநம் பண்ணும்படியாக என்னை நோக்கப் பார்க்கில் என்னுதல். (ஆய்ப்பாடிக்கே என்னை உய்த்திடுமின்) அவன் தீம்புக்குப் பெற்ற தாய் பெருநிலைநிற்கும் ஊரிலே என்னைக்கொண்டுபோய்ப் பொகடப்பாருங்கோள். "அங்ஙனம் தீமைகள் செய்வர்களோ நம்பீ! ஆயர் மடமக்களை" என்றிறே அவள் சொல்லுவது; இத்தையிறே "அஞ்சவுரப்பாள் அசோதை ஆணாடவிட்டிட்டிருக்கும்" என்கிறது. "உந்தமடிகள் முனிவர் உன்னை நானென்கையிற் கோலால், நொந்திட மோதவுங்கில்லேன்" என்னுமவள் ஸந்நிதியில். "படிறுபலசெய்திப்பாடியெங்கும் திரியாமே— என்பிள்ளையைப் போக்கினேன்" என்று அவன் தீம்புசெய்யப்பெறாததுக்கு வயிறு பிடிக்கிறாளிறே.

---

என்னும் சொல் அசை. அன்றிக்கே, பிரிவுநோயால் கலங்கியிருக்கும் நான் தெளிவுபெற்று உங்களுடைய ஆணையைக் கேட்டு நடக்கும்படியாக என்னை ரக்ஷிக்கப் பார்ப்பீர்களானால் என்றும் பொருள்கொள்ளலாம். (*ஆய்ப்பாடிக்கே என்னை உய்த்திடுமின்*) கண்ணன் செய்யும் துடுக்குச் செயல்களுக்கு, பெற்ற தாயான யசோதை துணைநிற்கும் ஊரான ஆய்ப்பாடியிலே என்னைக் கொண்டுபோய்ப் போடமுயலுங்கள். "அங்ஙனம் தீமைகள் செய்வர்களோ நம்பீ! ஆயர்மடமக்களை" [பெரிய-திரு 10-7-11] என்றல்லவோ யசோதை சொல்லுவது. தீம்பைக் கொண்டே அவனை "நம்பீ!" (*பூர்ணனே!*) என்று விளித்தாளன்றோ. யசோதையின் இத்தன்மையையே "அஞ்சவுரப்பாள் அசோதை ஆணாடவிட்டிட்டிருக்கும்" [நாச்-திரு 3-9] என்று இவளும் அருளிச்செய்தாளன்றோ. "உந்தம் அடிகள் முனிவர் உன்னை நான் என் கையிற்கோலால் நொந்திட மோதவும் கில்லேன்" [பெரியதிரு 10-4-8] என்னும் அந்த அசோதையின் முன்பே என்னைக் கொண்டுபோய் விடுங்கள். "படிறு பல செய்து இப்பாடியெங்கும் திரியாமே — என் பிள்ளையைப் போக்கினேன்" [பெரியாழ்-திரு 3-2-6] என்று கண்ணன் தீம்பு செய்யப் பெறாததற்கு வருந்துகிறாளன்றோ இவள். அப்படிப்பட்ட அவள் முன்னிலையில்



(அஞ்சவுரப்பாளசோதை) இவன் தீம்பிலே புண்பட்ட பெண்கள், "இவன் தான்றோன்றியல்லனே, இவனுக்கொரு தாயுண்டே, அவளுக்கு அறிவிப்போம்" என்று முறைப்படச் சென்றால் அஞ்சும்படி பொடியாள். அவன் தீம்பிலே ஸுதஸாகமாகப் பணைக்கும்படியாகவாய்த்துப் பொடிவது. சிரித்துக்கொண்டு, "அங்ஙனம் தீமைகன் செய்வர்களோ நம்பீ" என்னும்; இவன் இங்கிதஜ்ஞனாய் "இளவாய்ச்சியர் கண்ணினுள் விடவே செய்து விழிக்கும்" என்றபடியே- அப்போதே அவ்விடந்தன்னிலே நின்றவர்களும் தானும் அறிந்ததாகச் சில தூர்த்த க்ருத்யங்களைப் பண்ணும்; (ஆணாடவிட்டிட்டிருக்கும்) அவனை ஆணாட்டமடிக்க விட்டு ஆநந்தநிர்ப்பரையாயிருக்கும். "என்மகனுக்குத் தோற்றுச் சிலர் வந்து முறைப்படப்பெறுவதே!" என்று பெரும்பேறு பெற்றாளாய், க்ருதார்த்தையாயிருக்கும். 2.

---

அவனுடைய தீம்புக்கு இலக்கான என்னைக்கொண்டுபோய்ப் போட்டால் அவளாவது திருப்தியடைவாள் என்று கருத்து.

[இனி நாச்-திரு 3-9க்கு இங்கும் விளக்கம் எழுதப்படுகிறது.]

(*அஞ்ச உரப்பாள் அசோதை*) இவனுடைய தீம்புக்கு இலக்கான பெண்கள் "இவன் தான்தோன்றியல்லனே; இவனுக்கு ஒரு தாய் உண்டே; அவளுக்கு இவன் தீம்புகளை அறிவிப்போம்" என்று முறையிடச் சென்றால், இவன் அஞ்சும்படி அசோதை அதட்டமாட்டாள். அவன் தீம்பிலே நூறுமடங்காக வளரும்படியாகவாயிற்று அவனை அதட்டுவாள். இவனுடைய தீம்பைத் தான் உகப்பது தோற்றச் சிரித்துக்கொண்டு "அங்ஙனம் தீமைகள் செய்வர்களோ நம்பீ!" என்று கூறுவாள். இவனும் இவளுடைய குறிப்பை அறிந்தவனாய் "இளவாய்ச்சியர் கண்ணினுள் விடவேசெய்து விழிக்கும் பிரான்" [திருவாய் 1-7-5] என்கிறபடியே அப்போதே அவ்விடத்திலேயே முறையிட வந்தவர்களும் தானும் அறியும்படி தூர்த்தருடைய (*விடருடைய*) சில செயல்களைப் பண்ணுவான். (*ஆணாட விட்டிட்டிருக்கும்*) அவனை ஆணாட்டம்

## பன்னிரண்டாம் திருமொழி—மூன்ரும் பாட்டு

**தந்தையும் தாயுமுற் ருரும்நிற்கத்**
**தனிவழி போயிஞ ளென்னும்சொல்லு**
**வந்தபின் னைப்பழி காப்பரிது**
**மாயவன் வந்துருக் காட்டுகின்ருன்**
**கொந்தள மாக்கிப் பரக்கழித்துக்**
**குறும்புசெய் வானேர் மகனைப்பெற்ற**
**நந்தகோ பாலன் கடைத்தலைக்கே**
**நள்ளிருட்க ணென்னை யுய்த்திடுமின்.**

பதவுரை:— **தந்தையும்**—"தகப்பஞரும், **தாயும்**—தாய் மாரும், **உற்ருரும்**—மற்றுமுள்ள உறவினரும், **நிற்க**—இருக்கும்போது, **தனி வழி போயிஞள் என்னும் சொல்லு**—(இவள்) தான்தோன்றியாகத் தெருவிலே புறப்பட்டாள்" என்கிற வார்த்தையானது, **வந்த பின்னை**—உலகில் பரவின பிறகு, **பழிகாப்பு அரிது**—அப்பழியைத் தடுப்பது முடியாது; (நான் தனிவழி போகாதிருக்கவும் முடியவில்லை; ஏனென்ருல்) **மாயவன்**—ஆச்சர்யசேஷ்டிதங்களையுடையஞன கண்ணபிரான், **வந்து**—எதிரே வந்து, **உரு காட்டுகின்ருன்**—தன் வடிவைக்காட்டி இழுக்கின்ருனே; (இப்போது நீங்கள் செய்யவேண்டியதென்னவென்ருல்) **கொந்தளம் ஆக்கி பரக்கழித்து குறும்புசெய்வான் ஓர் மகனைப்பெற்ற**—(பெண்ணைச்) சண்டையிட்டுப் பழி விளைத்து, குறும்புசெய்யும் பிள்ளையைப் பெற்றவஞன, **நந்தகோபாலன்**—நந்த$_3$கோ$_3$பருடைய, **கடைத்தலைக்கே**—திருமாளிகை வாசலிலே, **நள்ளிருட்கண்**—நடுநிசியிலே, **என்னை உய்த்திடுமின்**—என்னைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுங்கள்.

---

அடிக்கவிட்டு ஆனந்த$_3$த்தால் நிறைந்தவளாயிருப்பள். "என் மகனுக்குத் தோல்வியுற்று, சிலர் வந்து முறையிடப் பெறுவதே!" என்று பெரும்பேறு பெற்றவளாய், பிறவிப்பயன் அடைந்தவளாயிருப்பள். 2.



அவ:— மூன்ரும் பாட்டு. இவளும் நம்மோபாதி பெண் பிறந்தாளொருத்தியன்ருே; இவளைவிடாய். தமப்பஞய் நியமிக்கைக்கு ஶக்தஞயிருக்கச்செய்தே நியமியாதேயிருக்கிற ஸ்ரீநந்த$_3$கோ$_3$பன் வாசலிலே கொடுபோய்ப் பொகடுங்கோள் என்கிருள்.

வ்யா:— (தந்தையும் தாயும் உற்ருரும் நிற்க) உபழி விளைந்தால் பழி பரிஹரிக்கை பணியுடைத்து; நீங்கள்தான் பழி பரிஹரியாமலிருக்க வல்லவர்களல்லிகோள்; இனி அதுவும் பிறக்கக்கொள்ளப் பின்னைநின்று மிறுக்குப்படாதே. உ$_2$ ஏற்கவே பரிஹரிக்கப் பாருங்கோள். b எனக்கு விளம்ப$_3$ம் பொறுக்கலாய்த் தாழ்க்கிறேனல்லேன்; உங்

---

3. *அவ:*— இந்த யசோதையும் நம்மைப்போலே பெண்ணுய்ப் பிறந்தவள்; இவள் கண்ணனை ஒழுங்காக வளர்க்காததுபற்றிக் குற்றஞ்சொல்லிப் பயனில்லை. அவனை அடக்கி வளர்க்கவேண்டிய கடமையுடைய தகப்பஞய், அடக்கி வளர்ப்பதற்கு ஶக்தியுமுடையவஞயிருந்தபோதிலும் அடக்கி வளர்க்காமலிருக்கிற ஸ்ரீ நந்த$_3$கோ$_3$பன் வாசலிலே கொண்டுபோய் என்னைக் கிடத்துங்கள் என்கிருள்.

*வ்யா:*— (*தந்தையும் தாயும் உற்ருரும் நிற்க......பழி காப்பரிது*) பழி விளைந்துவிட்டால் அப்பழியைத் தடுப்பது முடியாது. நீங்கள் என்னைப் பெற்ற தந்தையும், தாயும், உற்ருருமாயிருக்கையாலே 'பழி விளைந்தால் விளைந்துவிட்டுப் போகட்டும்' என்று உங்களால் இருக்கமுடியாது. இனி, பழி விளைந்தபின்பு சிரமப்படாமல் விளைவதற்கு முன்பே தவிர்க்கப் பாருங்கள். "இவ்வளவுநாள் பொறுத்த நீ மேலும் சிலநாள் பொறுத்துக்கொண்டிருந்து பழிவிளையாமல் பார்த்துக்கொள்ளக் கூடாதோ?" என்று கூறுவீர்களாகில், என்ஞல் காலதாமதத்

---

மூன்ரும் பாட்டு. (தந்தையுமித்யாதி$_3$) உ, உ$_2$ "பழி காப்பரிது" என்றத்தைப் பற்ற அருளிச்செய்கிருர் (பழி விளைந்தாலென்று தொடங்கி, ஏற்கவே என்னுமளவாக.) b நீ தனிவழி போஞலன்ருே பழிசொல்லுவது, இவ்வள

களைப் பார்த்துக் கால் தாழ்க்கிறேனித்தனை; அதுதான் இனிச்செய்யப்போகாது; ஆனபின்பு, ஏற்கவே பரிஹரிக்கப் பாருங்கோள். c க$_4$டகரையொழியத் தனியே புறப்பட்டுப் போகைக்கு மேற்பட்ட பழியில்லை. “தாய் தமப்பன் உறவு முறையாரென்கிற இவர்களைவிட்டுத் தனிவழி போயினாள்; நாயகன் பின்னே போகையுமன்றிக்கே தானே தனியே போயினாள்” என்கிற இந்தச் சொல்லு நாட்டிலே வார்த்தையானால், பின்னைப் பரிஹரிக்கப்போகாது. d 201. ‘वयोऽस्या ह्यतिवर्तते’’ (வயோऽஸ்யா ஹ்யதிவர்த்ததே) என்னக்கடவ

---

தைப் பொறுக்கமுடிந்தமையாலே இவ்வளவுநாள் பொறுத்துக் கொண்டிருக்கவில்லை; உங்களைப் பார்த்தே பொறுத்துக் கொண்டிருக்கிறேன்; என்னால் இனிப் பொறுக்க முடியாது. ஆகையால் பழி வருவதற்கு முன் தடுக்கப்பாருங்கள். *(தனி வழி போயினாளென்னும் சொல்லு வந்த பின்னைப் பழி காப்பரிது)* நாயகனோடு கூட்டி வைக்கவேண்டியவர்களை உதறித்தள்ளித் தனியே புறப்பட்டுப் போவதைக் காட்டிலும் பெரிய பழி வேறொன்றில்லை. “தாய், தந்தை, உறவினர் ஆகிய அனைவரையும் விட்டுத் தனிவழியே போனாள். அதிலும் நாயகன் பின்னே போகாமல் தானே தனியே போனாள்” என்கிற இந்தப் பழிச்சொல் நாட்டிலே பரவினால் அதற்குப்பின் அதைப் போக்கடிக்க முடியாது *(வந்தபின்னைப் பழிகாப்பரிது)*

**201. ந மே து$_3$:க்க$_2$ம் ப்ரியா தூ$_3$ரே**
**ந மே து$_3$:க்க$_2$ம் ஹ்ருதேதி வா।**
**ஏததே$_3$வா நுஶோசாமி**
**வயோऽஸ்யா ஹ்யதிவர்த்ததே ॥** *[ரா-யு 5-5]*

[எனக்கு இனியவள் வெகுதூரத்திலிருக்கிறாளென்று நான் துன்புறவில்லை; அவள் அபஹரிக்கப்பட்டாள் என்றும் நான்

---

வும் தாழ்த்த நீதான் மேலும் தாழ்த்தாலோவென்ன அருளிச்செய்கிறார் (எனக்கு இத்யாதி$_3$) c தானே போகை பழியோவென்ன ஸ்வாபதே$_3$ஶம் (க$_3$டகரை இத்யாதி$_3$) d பரிஹரிக்கப்போகாமைக்கு த்$_3$ருஷ்டாந்தம் அருளிச்செய்



திறே. e “மேலும் இப்பேற்றையன்றோ பெறவிருக்கிறது” என்று வரும் நாளை நினைத்து ஆறியிருக்கப்போகாது. “முன்பு இழந்ததும் இப்பேற்றையாகாதே!” என்று வெறுக்க வேணும்.

இதுதான் பழியென்று பு$_3$த்$_3$தி$_4$பண்ணிப் பரிஹரிக்கவும் வேணுமென்றிருந்தாயாகில், முதலிலே இது பிறவாதபடி க்ரமப்ராப்தி பார்த்துப் பொறுத்து எங்களுக்காக இருந்தாலோவென்ன; (மாயவன் வந்துருக்காட்டுகின்றான்) ஒரு தாய்தமப்பனைப் பார்த்து ஆறியிருக்கலாம்படியோ அவனுடைய ஸௌந்த$_3$ர்யஶீலாதி$_3$கள் வந்து நலிகிறபடி. நானும் ஆந்தனையும் பாராநின்றேன், அவன் உருவெளிப்

---

துன்புறவில்லை, அவளுடைய வயது கடந்து செல்கின்றதே என்பதற்கே துன்புறுகிறேன்.] என்று ஸ்ரீராமபிரான் நடந்து போன இழப்பை ஈடுகட்ட முடியவில்லை என்று வருந்தினான்றோ. அத்தகைய நிலை வாராமல் பார்த்துக்கொள்ளுங்கள் என்கிறாள். “பிராட்டியை மீட்ட பின்பு அவளோடு ஸம்ஶ்லேஷத்தைப் பெறத்தானே போகிறோம்” என்று பெருமாள் ஆறியிருக்கவில்லையே. பத்துமாதம் இப்பேற்றையிழக்கத் தானே செய்தோம் என்று வெறுத்தாரன்றோ. அதுபோல் வெறுக்கவேண்டிய நிலை வராமல் பார்த்துக்கொள்ளுங்கள் என்று கருத்து.

“இது பழி என்று அறிந்து இதைப் போக்கிக்கொள்ளவும் வேணும் என்று நினைத்திருந்தாயானால், முதன்முதலில் இப்பழி விளையாதபடி உடையவன் வரப்பார்த்து எங்களுக்காகப் பொறுத்திருக்கக் கூடாதோ” என்று தாய்தந்தையருக்குக் கருத்தாகக் கொண்டு கூறுகிறாள்— *(மாயவன் வந்துருக்காட்டுகின்றான்)* அவனுடைய ஆஶ்சர்யமான வடிவழகும், நீர்மை முதலான கு$_3$ணங்களும் என்முன் வந்து என்னைத் துன்புறுத்துகிறபடியைப் பார்த்தால், ஒரு தாய் தகப்பனைப்பார்த்து

---

கிறார் (வயோஸ்யா ஹி இத்யாதி$_3$) e பெருமாள்தான் வெறுப்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (மேலும்

பாட்டிலே முற்பாடனுகாநின்ருன். f 202. "दृष्ट्वा स्थित्वा बहिर्गुरुं" ( த்$_3$ருஷ்ட்வா ஸ்தி$_2$த்வா ப$_3$ஹிர்கு$_3$ரும் ) என்கிற விடத்துக்கு ப$_4$ட்டரருளிச்செய்யும்படி; — "திருவாய்ப்பாடியில் க்ருஷ்ண ஸம்ஶ்லேஷத்தில் இவளைப்போலே புதியாரில்லை" என்று. அதாவது - கு$_3$ருத$_3$ர்ஶநம் பண்ண வல்லளானுளே.

---

என்னுல் பொறுத்திருக்க முடியுமோ? ஆஶ்சர்யமான வடி வழகையும் கு$_3$ணங்களையுமுடைய மாயவன் உருவெளிப் பாட்டாலே என்முன்னே தோன்றுகின்ருனே.

202. காசிச்சாவஸத$_2$ஸ்யாந்தே ஸ்தி$_2$த்வா த்$_3$ருஷ்ட்வா
ப$_3$ஹிர்கு$_3$ரும் ।
தந்மயத்வேந கே$_3$ாவிந்த$_3$ம் த$_3$த்$_4$யெள மீலிதலோசநா ॥
தச்சித்த விமலாஹ்லாத$_3$ க்ஷீணபுண்யசயா தத$_2$ா ।
தத$_3$ப்ராப்திமஹாது$_3$:க்க$_2$ விலீநாஶேஷ பாதகா ॥
சிந்தயந்தீ ஜக$_3$த்ஸூதிம் பரப்$_3$ரஹ்மஸ்வரூபிணம் ।
நிருச்ச்$_2$வாஸதயா முக்திம் க$_3$தாந்யா கே$_3$ாபகந்யகா ॥
[வி-பு 5-13.20...22]

[கண்ணன் குழலூதுவதைக் கேட்ட ஒரு இடைப்பெண் வீட்டுக்கு வெளியே வந்து தந்தையைப்பார்த்து, வாசலிலேயே நின்றவளாய், கண்ணை மூடிக்கொண்டு கிருஷ்ணனையே நினைப்பவளாய் அவனை தியானித்தாள். அவனிடத்தில் நெஞ்சு சென்றதினுலே உண்டான பேரானந்த$_3$த்தாலே புண்ணியம் முழுவதும் கழியப்பெற்ருள்; அவனை நேரே அடையப்பெருத பெருந்துன்பத்தாலே பாபங்களெல்லாம் அழியப்பெற்ருள்; (காரணமான புண்யபாபங்களை அனுப$_4$வித்துத் தீர்த்தபடியாலே) மூச்சடங்கப் பெற்றவளாய் முக்தியடைந்தாள் அவள்.] என்கிற சிந்தயந்தியைப்போலே, தாய் தந்தையரைப் பார்த்துப் புறப்படமாட்டாதபடி அளவுபட்டதோ என்னுடைய அன்பு? இவ்விடத்தில் "திருவாய்ப்பாடியில் கண்ணனேடே கலந்தாரில் சிந்தயந்தியைப்போலே புதியவர் இல்லை" என்று ப$_4$ட்டர் அருளிச்செய்வராம். அதாவது; தாய் தந்தையரை அவளால் பார்க்கமுடிந்தது; அக்காட்சி கண்ணனை நோக்கி ஓடுவதற்குத் தடையாகவும் ஆயிற்று.

---

இப்பேற்றையித்யாதி$_3$) f உருவெளிப்பாடானுலும் ஆறியிருந்தவிடமுண்டோவென்ன அருளிச்செய்கிருர் (ஸ்தி$_2$த்வா த்$_3$ருஷ்ட்வேத்யாதி$_3$) புதியளாகையாலே என்றபடி.



g 203. "ययौ च काचित् प्रेमान्धा" (யயெள ச காசித் ப்ரேமாந்த$_4$ா) என்கிறதிறே. ஒருத்தி போனுளென்கிறது; வழிகாட்டினுர் ஆரென்ருல்; ப்ரேமத்தாலே நெஞ்சு இருண்டது; அந்த இருட்சி வழிகாட்டப்போனுள். h 204. "गुरवः किं करिष्यन्ति" (கு$_3$ரவ: கிம் கரிஷ்யந்தி) இத்யாதி$_3$.

"தூவலம் புரியித்யாதி$_3$"—பலவகைப்பட்டஅரண்களிலே பெண்களைக் கொடுபுக்குக் கட்டிக்கொடு கிடந்தார்கள்;

---

203. யயெள ச காசித் ப்ரேமாந்த$_4$ா
தத்பார்ஶ்வமவிலம்பி$_3$தம் । [வி-பு 5-18-19]

[ஒரு இடைப்பெண் அன்பினுலே நெஞ்சிருண்டவளாய், (அந்த இருட்சி வழிகாட்டக்) குழலூதும் கண்ணனுக்கருகே விரைந்து சென்ருள்] என்று சொல்லப்பட்ட மற்ருெரு ஆய்ச்சி கண்ணனிடம் காதலாலே சுற்றுப்புறத்தைப் பார்க்கவும் இயலாதவளாய் ஓடினுளன்ருே. இவளை நோக்கும்போது சிந்தயந்தி புதியவளே என்று கருத்து. கண்ணனிடம் காதலாலே கண் இருண்டுபோனுள் என்று ஒருத்தியைச் சொல்லிற்றே; அவளுக்கு வழி காட்டினுர் ஆர்? என்ருல், காதலாலே நெஞ்சு இருண்டது; அந்த இருட்சி வழி காட்டப்போனுள்.

204. கு$_3$ருஞ்மக்$_3$ரதோ வக்தும் கிம் ப்$_3$ரவீஷி ந ந: க்ஷமம் ।
கு$_3$ரவ: கிம் கரிஷ்யந்தி த$_3$க்$_3$த$_4$ாநாம் விரஹாக்$_3$நிநா ॥
[வி-பு 5-18-22]

[பெரியவர்களுக்கு முன்னுல் இவ்விஷயத்தை நம்மால் சொல்ல முடியாதென்று சொல்லுகிருய்? பிரிவாகிற நெருப்பால் வெந்து கிடக்கும் நம்மை நம் பெரியவர்கள் என்ன செய்து விடுவார்கள்?] என்று பெரியவர்களை உதறிச்சென்ற ஆய்ச்சியின் நிலையிலே நின்று ஆண்டாள் பேசுகிருள்.

---

g பழையளானுல் கு$_3$ருத$_3$ர்ஶநம் பண்ணுமல் போனவிடமுண்டோ? என்ன அருளிச்செய்கிருர் (யயெள ச காசித் இத்யாதி$_3$) h ஆறியிருக்கப் போகாமைக்கு ப்ரமாணம்

உறவுமுறையாரிட்ட அரணையும் கடந்து, காத்துக்கிடக்கிறவர்களையும் உறக்கிச் செவியிலே வார்த்தை சொல்லவல்லதொரு i தூதுபோனன். குழலோசை செவிப்பட்ட அநந்தரம் முலைகள் உணர்ந்து, பெண்களை எழுப்பி, ''குழலோசை வந்தது; நாம் போதுங்கொல்'' என்ன; அவர்கள், '' காத்துக்கிடக்கிறவர்கள் உணருங்கிடாய் '' என்ன; '' ஆனல் நீங்கள், அவர்களுறங்கினல் வாருங்கோள், நாங்கள் முன்னே போகிறோம் '' என்றன. j [குதுகலிப்ப] என்று இவற்றைச் சேதநஸமாதி,யாலே சொல்லும்போது

---

''தூவலம்புரியுடைய திருமால் தூயவாயில் குழலோசை வழியே, கோவலர் சிறுமியர் இளங்கொங்கை குதுகலிப்ப உடலுளவிழ்ந்தெங்கும் காவலும் கடந்து'' [பெரியாழ்-திரு 3-6-1] என்னும் பாசுரம் இங்கு அனுஸந்தி,க்கத்தக்கது. இதன் கருத்தாவது:—கண்ணன் இவர்களைக் கடத்திச் சென்றுவிடுவான் என்னும் ப,யத்தாலே பலவகையான அரண்களைக் காவலாக இட்டுப் பெண்களை அவற்றின் நடுவே வைத்துக் காவல் புரிந்தார்கள் ஆயர்கள். ஆனல் கண்ணனுடைய குழலோசையோ உறவினரிட்ட அரண்களையெல்லாம் கடந்து காத்துக்கிடக்கிறவர்களையும் உறங்கச்செய்து கோபிகளின் செவியில் புகுந்து தூதாக அமைந்தது. குழலோசை காதில் புகுந்தவுடன் கோபிகைகளுடைய முலைகள் உணர்ந்து அவர்களை எழுப்பி ''குழலோசை வந்தது; நாம் போவோமா'' என்று கூறின. அவர்கள் ''நமக்குக் காவலாகக் கிடக்கிறவர்கள் விழித்துக்கொண்டு விடுவார்களே'' என்றார்கள். அதற்கு அவை ''அப்படியானல் நீங்கள் அவர்கள் உறங்கினபிறகு வாருங்கள்; நாங்கள் முன்னே போகிறோம்'' என்றன. 'குதுகலிப்ப' என்னும் சொல்லிலிருந்து அசேதனமாய் அவயவமான இவை ஆர்வத்தாலே சேதனரை ஒத்தவையாகி அவர்களுக்கும் முற்படத் துடித்தன என்று தோன்றுகிற

---

(ஶ்ரவ: இத்யாதி,) i (தூதுபோனன்) - போகவிட்டான். j''அசேதநங்களான முலைகள், எழுப்புகை முதலானவற்றைச் செய்யவற்று'' என்கைக்கு ஜ்ஞாபகஶப்,த,மேதென்ன



அங்ஙனே ஆகவேணுமிறே. [இளங்கொங்கை] சொற்கேளா ப்ரஜைகளாய்த்து. [காவலும் கடந்து] க்ஷுத்,ர பாஷாணங்கள் கிடக்க, மேலே நீர் போமாபோலே, நீர் வெள்ளமானல் மலைமேலும் ஓடும்; அப்படியே இட்ட அணையை ஒன்றாக நினையாமைக்கு ஹேது-கௌதூஹலத்தின் மிகுதியிறே. அப்படியே தாய்தமப்பனை k நாக்கு வளைக்கப் பண்ணின வடிவழகிருக்கிறபடி.

(கொந்தளம்) சிலுகிடுகை. பரக்கழிக்கை - பழி விளைக்கை. (குறும்பு செய்வானோர் மகனைப்பெற்ற) ஸ்ரீநந்த,கோ,பர், தம்முடைய ராஜ்யத்திலே வன்னியமடிக்கைக்காக நோன்புநோற்றுப் பிள்ளைபெற்றாராய், அதுகண்டிகோளே அவன் இவனை நியமியாதே இருக்கிறபடி. (நந்தகோபாலன் கடைத்தலை) என்றால் ப்ரஸித்,த,மிறே - ப,ட்டர் அருளிச்

---

தன்றோ. [இளங்கொங்கை] தாய் சொல் கேளாத குழந்தைகள் போலாயின. [காவலும் கடந்து] ஆற்றில் நீர் பெருகும்போது சிறு கற்களின் மேலே நீர் ஓடுவதுபோலே நீர் வெள்ளமிடும்போது மலைமேலும் ஓடுவதைக் காண்கிறோம். அப்படியே இவர்களும் இட்ட காவலை ஒரு பொருட்டாக நினைக்காமைக்குக் காரணம் ஆர்வத்தின் மிகுதியன்றோ. இப்படியே எம்பெருமானுடைய வடிவழகு இவளை, தாய் தகப்பனையும் உதா,ஸீனப்படுத்தச் செய்தது.

*(கொந்தளமாக்கிப் பரக்கழித்து)* சண்டையிட்டுப் பழி விளைத்து. *(குறும்பு செய்வானோர் மகனைப்பெற்ற)* ஸ்ரீ நந்த,கோ,பர் தம் ராஜ்யத்தில் குறும்பு செய்வாரை அடக்குவதற்காக நோன்புநோற்றுப் பிள்ளையைப் பெற்றார். இப்படி நோன்புநோற்றுப் பெற்ற பிள்ளையாகையாலே, அவர் இவனை அடக்காமலிருக்க இவனும் அடங்காத பிள்ளையாய், பெண்களிடம் குறும்பு செய்பவனாக ஆகிவிட்டான். *(நந்தகோபாலன் கடைத்தலைக்கே)* நந்தகோபாலன் கடைத்தலை

---

அருளிச்செய்கிறார் (குதுகலிப்ப இத்யாதி,) k (நாக்கு வளைக்க) பழிசொல்ல; அபஹஸிக்கப்பண்ணின என்றும்.

செய்வரென்று; இவனாலே புண்பட்ட பெண்களடையக் கட்டணங்களும் கையும் 1 பசும் துவலுமாயாய்த்து அவர் வாசல். விஷம் தீர்ப்பார் வாசல்போலே. (நள்ளிருட்கணென்னை யுய்த்திடுமின்) நடுவான இருளிலே கொடுபோய்ப் பொகடுங்கோள். நீங்கள் வெளியிலே கொடுபோய்ப் பொகட்டு, அவன் பித்ராதிகளுக்கு லஜ்ஜித்துப் புறப்பட மாட்டாதிராமே, இருளிலே கொடுபோய்ப் பொகடுங்கோள். இருளன்ன மாமேனியாகையாலே தன் நிறத்தோடு விகல் பிக்கலாம் இருளிலே புறப்பட்டு அவன் அணைக்கலாம்படி.

(மகனைப்பெற்ற நந்தகோபாலன்) இவனைப் பெறுகைக்கு நோன்புநோற்றவனிறே. தாம் பண்ணின துஷ்கர்மபலம் தானே அநுபவிக்கும்படி அவன் வாசலிலே பொகடுங்

---

என்றால் அது எப்படியிருக்கும் என்று பட்டர் அருளிச் செய்வாராம். அதாவது:— கண்ணனாலே புண்பட்ட பெண்கள் அனைவரும், நடக்க முடியாமையாலே கட்டணத்திலே (Stretcher) தூக்கிவரப்பெற்று பசலைமீதூர்ந்து நந்தகோபாலன் வாசலிலே வரிசையாகக் காணப்படுவார்களாம். விஷம் தீர்ப்பார் வாசலிலே விஷ ஜந்துக்களால் கடிபூண்டவர்கள் வரிசையாகக் கிடப்பதுபோலே. (*நள்ளிருட்கண் என்னை உய்த்திடுமின்*) நட்டநடு இரவிலே கொண்டுபோய்ப் போடுங்கள். நீங்கள் வெளிச்சத்திலே கொண்டுபோய்ப் போட்டால் அவன் தாய் தந்தையர் முகத்தில் விழிக்க லஜ்ஜைகொண்டு வெளியில் வராமலிருந்து விடுவான். அப்படியாகாமல் இருளிலே கொண்டுபோய்ப் போடுங்கள். ''இருளன்னமாமேனி'' [பெரிய திருவ 26] என்கிறபடியே தன் நிறத்தையொத்த இருளிலே புறப்பட்டு அவன் என்னை அணைக்கலாம்படி நள்ளிருளிலே கொண்டுபோய் என்னை விடுங்கள்.

(*மகனைப்பெற்ற நந்தகோபாலன்*) இவனைப்பெறுவதற்கு நோன்பு நோற்றவனன்றோ அவன். அந்தத்தீய செயலின் பயனை அவனே அனுபவிக்கும்படி அவன் வாசலிலே என்னை

---

1 (பசும் துவல்) - வைவர்ண்யம். 3.



கோள். அங்கே பொகடச்செய்தே பின்னையும் உங்களுக்குப் பழி வரவிராதேகொள்ளுங்கோள். வெளியிலே கொடு போய்ப்பொகட்டு அவன் உறவுமுறையார்க்கு லஜ்ஜித்துப் புறப்படமாட்டாதே இருக்கும்; அவ்வளவிலே நான் முடிவன்; பின்னையும் உங்களுக்குப் பழிவாராதபடி பரிஹரிக்கப் பாருங்கோள். 3.

## பன்னிரண்டாம் திருமொழி—நாலாம் பாட்டு

அங்கைத் தலத்திடை யாழிகொண்டான்
அவன்முகத் தன்றி விழியேனென்று
செங்கச்சுக் கொண்டுகண் ணாடையார்த்துச்
சிறுமா னிடவரைக் காணில்நாணும்,
கொங்கைத் தலமிவை நோக்கிக்காணீர்
கோவிந்த னுக்கல்லால் வாயில்போகா
இங்குத்தை வாழ்வை யொழியவேபோய்
யமுனைக் கரைக்கென்னை யுய்த்திடுமின்.

---

பதவுரை:— **அம் கைத்தலத்திடை** — அழகிய திருக்கைத்தலத்திலே, **ஆழி கொண்டானவன்** — திருவாழியை ஏந்தியிருப்பவனான கண்ணபிரானுடைய, **முகத்து அன்றி விழியேன் என்று**—முகத்தில் தவிர (மற்ற பேருடைய முகத்தில்) விழிக்கமாட்டேனென்று, **செம் கச்சு ஆடை கொண்டு**—நல்ல கஞ்சுகமாகிற ஆடையினாலே, **கண் ஆர்த்து**—கண்களை மூடிக்கொண்டு, **சிறு மானிடவரை காணில் நாணும்** — க்ஷுத்ர மநுஷ்யர்களைக் கண்டால்

---

இடுங்கள். அங்கே போடும்போதும் உங்களுக்குப் பழிவராதபடி நள்ளிருளிலே போடுங்கள். வெளிச்சத்தில் போய்க் கிடத்தினால், நந்தகோபாலன் உறவினரைக் காண வெள்கி வெளியில் வராமலிருந்துவிடுவான். கண்ணனைக் காணமுடியாததோடல்லாமல், அவனைப்பெற்றவனையும் காணமுடியாமையாலே நான் உயிர் துறப்பேன். அப்படி உங்களுக்குப் பழிவராதபடி நந்தகோபாலன் வாசலிலே என்னை நள்ளிருளிலே கொண்டுபோய்ப் போடுங்கோள். 3.

வெட்கப்படாநின்ற, **கொங்கைத்தலம் இவை**—இக்கொங்கைகளை, **நோக்கி காணீர்**—(தாய்மார்களே!) நீங்கள் உற்றுநோக்குங்கள்; (இக்கொங்கைகளானவை) **கோவிந்தனுக்கு அல்லால்**—கண்ணபிரானைத் தவிர்த்து, **வாயில் போகா**—மற்றொருவருடைய வீட்டு வாசலை நோக்கமாட்டா; (ஆகையாலே) **இங்குத்தை வாழ்வை ஒழியப்போய்**—நான் இவ்விடத்திலே வாழ்வதையொழித்து, **என்னை யமுனை கரைக்கே உய்த்திடுமின்** — என்னை யமுனா நதிக்கரையிலேயே கொண்டு போட்டுவிடுங்கள்.

**வ்யா:— நாலாம் பாட்டு.** (அங்கையித்யாதி) **முலைகளினுடைய ஸங்கல்பவாக்யம் இருக்கிறபடி. பூவேளைக்காரரைப்போலேயாய்த்து முலைகளின்படி. ராஜாக்கள் தலையில் பூமாறில் குத்திக்கொள்வார் சிலருண்டு; அப்படியே கையில் திருவாழியொழிந்தவன்று அவன்தானே வரிலும் வேண்டேன். வெறும்புறத்திலே ஆலத்திவழிக்க வேண்டும்படி அழகிய கையிலே கல்பகதரு பணைத்துப் பூத்தாற்**

---

4. *அவ:—* அநந்யார்ஹசேஷபூதையான என்னை இவ்விடத்திலிருந்து யமுனா நதிக்கரைக்குக் கொண்டுபோய் விடுங்கள் என்கிறாள்.

*வ்யா:—(அங்கைத் தலத்திடை ஆழிகொண்டான் அவன் முகத்தன்றி விழியேன்)* முலைகள் சேதன ஸமாதியாலே (அறிவுள்ளவைபோலே) ஸங்கல்பிக்கும் வாக்யம் இது. "விழியேன்" என்று உத்தமபுருஷனில் (தன்மையில்) இவற்றின் வாக்யம் அமைந்துள்ளது. அரசர்களின் படையில் 'பூவேளைக்காரர் படை' என்று ஒன்றுண்டு. அரசரின் தலையில் பூக்களுக்கு ஊறு நேர்ந்தாலும் தங்களை அழித்துக்கொள்வார்கள் அவர்கள். அதுபோலே இம்முலைகளும் 'கையில் திருவாழியோடு கூடிய அவன் முகத்திலன்றி வேறிடம் நோக்கமாட்டோம்' என்று ஸங்கல்பித்துக்கொண்டிருப்பவை. 'திருவாழியைக் கைவிட்டு அவனே வந்தாலும் வேண்டேன்' என்பவை. *(அங்கைத் தலத்திடையாழி)* வெறுங்கையே த்ருஷ்டிபரிஹாரம் செய்யவேண்டும்படி மிக அழகியதாயிருக்கும். கற்பகமரம் தழைத்துப் பூத்



**போலேயாய்த்துக் கையில் திருவாழி இருப்பது. a வெறும்புறத்திலே கொல்லவற்றாய்த்துத் திருக்கைதான்; அதுக்கு மேலே திருவாழியையும் தரித்தான். ப்ரதிகூலரைக் கை கழியப்போய்க் கொல்லும்; அநுகூலரைக் கைமேலே இருந்து கொல்லும்;**

(செங்கச்சித்யாதி)**சிவந்த கச்சைக்கொண்டு bகண்ணை மறைத்ததாய்த்து முலைகள்.** c (சிறுமானிடவரை) d **பெருமானிடவருமுண்டுபோலே காணும். e 205 "மாநுஷீம் தநு-**

---

தாற்போலே அக்கையிலே திருவாழியை ஏந்தியிருக்கும்போது அதன் அழகை வாய்கொண்டு வர்ணிக்கமுடியாது. அன்றிக்கே வெறுங்கையே இவளை அழிக்கக் கூடியதாயிருக்க, அதற்குமேல் திருவாழியையும் தரித்திருக்கிறானென்றால் அழியச் சொல்லவேணுமோ? என்று வெறுப்பதாகவும் கொள்ளலாம். "கருதுமிடம் பொருது—கைந் நின்ற சக்கரத்தன்" [திருவாய் 10-6-8]என்று திருவாழி எதிரிகளைக்கையைவிட்டுப்புறப்பட்டுப் போய் அழிக்கும்; அன்புடையாரைக் கைமேலிருந்து அழிக்கும்.

*(செங்கச்சு ஆடைகொண்டு கண் ஆர்த்து)* சிவந்த கச்சாகிற ஆடைகொண்டு தங்களது காம்பை மறைத்துக்கொண்டன இம்முலைகள், இதற்குக் காரணத்தைச் சொல்லுகிறது மேலே. *(சிறுமானிடவரைக் காணில் நாணும்)* ஸம்ஸாரி ஜீவர்களைக் கண்டால் இவை லஜ்ஜிக்கும். "சிறுமானிடவர்' என்கையாலே பெருமானிடவரான புருஷோத்தமனை வேறுபடுத்திக் காட்டுகிறது.

205. **அவஜாநந்தி மாம் மூடா மாநுஷீம் தநுமாச்ரிதம்।**
**பரம் பாவமஜாநந்தோ மம பூதமஹேச்வரம்॥**
[கீதை 9-11]

---

நாலாம் பாட்டு. (அங்கை இத்யாதி) a கீழே திருவாழியைச் சொல்லுமிடத்தில் பரிவுதோற்றச் சொல்லி, வெறுப்பிலேயாக்கித் தாத்பர்யாந்தரம் (வெறும்புறத்திலே யித்யாதி) "விழியேன்" என்றது உத்தமம்.

b "கண்" - முலைக்கண், c, d "சிறுமானிடவர்" என்று- ஸம்ஸாரிகளைச் சொல்லுகையாலே, ஈச்வரனை (பெரு

माश्रितं परं भावं"(மாநுஷீம் தநுமாஶ்ரிதம் பரம் ப$_{4}$ாவம்)என்னக் கடவதிறே. (காணில் நாணும்) சமைய வளர்ந்த முலைகளானவை உள்ளே குடிபுகும். f206."स्वानि गात्राणि लज्जया"(ஸ்வாநி க$_{3}$ாத்ராணி லஜ்ஜயா) ஒருவர்க்கொருவர் அம்பேற்றுப் பெறப்படுகிற ராஜ்யம், g இவர்கள் கையிலே படுகிற பாடிறே இது.

---

[பூ$_{4}$தங்களுக்கெல்லாம் மேலான ஈஶ்வரனாய், மனிதவுருக்கொண்டிருக்கும் என்னை, என்னுடைய மேலான நிலையை அறியாமல் மூட$_{4}$ர்கள் அவமதிக்கிறார்கள்.] என்று இவனும் மனிதனாக அவதரித்தவனன்றோ. (*காணில் நாணும்*) பருத்து வளர்ந்த முலைகள் நாணத்தாலே சுருங்கிப்போகும்,

**206 & 207.**

**உச்யமானோऽபி ப$_{4}$ரதோ மயா லக்ஷ்மண! தத்த்வத:।**
**ராஜ்யமஸ்மை ப்ரயச்சே$_{2}$தி ப$_{3}$ாட$_{4}$மித்யேவ வக்ஷ்யதி॥**
**ததே$_{2}$ாக்தோ த$_{4}$ர்மஶீலேந ப்$_{4}$ராத்ரா தஸ்ய ஹிதே ரத:।**
**லக்ஷ்மண: ப்ரவிவேஶேவ ஸ்வாநி க$_{3}$ாத்ராணி லஜ்ஜயா॥**

[''லக்ஷ்மணா! 'ராஜ்யத்தை லக்ஷ்மணனுக்குக் கொடு' என்று என்றால் ப$_{4}$ரதன் சொல்லப்பட்டானாகில், 'அப்படியே தருகிறேன்' என்றே உண்மையில் சொல்லுவான்''; தரும நெறி தவறாத தமயனால் இப்படிச் சொல்லப்பட்டவனும், தமயனின் நன்மையிலே ஈடுபட்டவனுமான லக்ஷ்மணன் வெட்கத்தாலே உடல் குன்றிப்போனான்] என்கிறபடியே இளையபெருமாள் நாணத்தாலே ஒடுங்கினானன்றோ. உலகத்திலே உடன்பிறந்தார் ஒருவரோடொருவர் அரசுக்காக விற்போர் செய்யாநிற்க, இந்த ஸஹோத$_{3}$ரர்கள் கையிலே இவ்வரசு என்னபாடுபடுகிறது!

---

மானிடவர்) என்கிறது. e ஈஶ்வரனுக்கு மானுஷத்வமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (**மாநுஷீம் தநுமித்யாதி$_{3}$**) (பரம் ப$_{4}$ாவம்) பெருமை; பெரிய மானிடவரென்கைக்கு ப்ரமாணம். f லஜ்ஜையாலே ஒடுங்கினபேருண்டோவென்ன இளையபெருமாள் ஒடுங்கினாரென்கிறார் (**ஸ்வாநி க$_{3}$ாத்ராணி** இத்யாதி$_{3}$) g (இவர்கள்) என்றது- இளையபெருமாளையும், ப$_{4}$ரதாழ்வானையும்.



h " ப$_{4}$ரதனைக் கொல்லுவன், குத்துவன் " என்றாற்போலே இளையபெருமாள் முனிதல்தீரச் சில வார்த்தை சொல்ல; பெருமாள், பலபடிகளாலும் மாற்றிப் பார்த்தார்; பின்னையும் மீண்டிலர்; h$_{2}$ 207. "बाढमित्येव वक्ष्यति" (ப$_{3}$ாட$_{4}$மித்யேவ வக்ஷ்யதி) என்று - " அதுவோ? பிள்ளைக்கு ராஜ்யஶ்ரத்$_{3}$தை$_{4}$யோடுகிறது; 'பிள்ளாய்! நீ அத்தைத் தவிர்' என்று நான் சொன்னவாறே, தலைச்சுமையோபாதி பொகட்டுப்போகிறான்" என்றவாறே, இளையபெருமாளைக் கண்டுவிட்டதில்லை. i 208. " गात्रैः शोकाभिकर्शितैः " (க$_{3}$ாத்ரை: ஶோகாபி$_{4}$கர்ஶிதை:) என்கிறபடியே, அவற்

---

அரசு துறந்து ராமனோடு கூடவந்த லக்ஷ்மணன் ப$_{4}$ரதன் சித்ரகூடத்தை நோக்கி வருவதைக் கண்டவுடன் ராமனிடம் பரிவாலே " ப$_{4}$ரதனைக் கொல்லுவேன், குத்துவேன் " என்று தன் கோபம் தீரச் சில வார்த்தை சொல்ல, ஸ்ரீராமபிரான் ப$_{4}$ரதனுடைய நற்குணங்களை எவ்வளவு சொல்லியும் லக்ஷ்மணன் கேளாமையாலே, " அப்படியானால் உனக்கு அரசில் ஆசைபோல் தோன்றுகிறது. 'அப்பா! அரசை நீ லக்ஷ்மணனிடம் கொடுத்துவிடு' என்று நான் சொன்னவுடன் தலைச் சுமையைப் போடுவதுபோலே ப$_{4}$ரதன் அரசை உன்னிடம் விட்டுவிடுவான். நீ அயோத்திக்குப் போ. நான் ப$_{4}$ரதனுடன் மேலே செல்கின்றேன் " என்று சொன்னவுடன் லக்ஷ்மணன் கூனிக் குறுகி ஒடுங்கினானன்றோ.

(*கொங்கைத்தலமிவை*) [பக்கம் 413ல் உள்ள 127-வது ப்ரமாணத்தின்படி] ஸீதாப்பிராட்டி பிரிவால்நொந்த தன் உடம்

---

h ப$_{4}$ரதாழ்வான் ஊரினின்றும் வர, இளையபெருமாளெதிர்க்க, அவ்வளவிலே பெருமாள், அவன் விரோதி$_{4}$யாய் வரவில்லை என்று சில சொல்லாநிற்கச்செய்தேயும் கேளாமையாலே "ஆனால் ப$_{4}$ரதனை நாம் கூட்டிக்கொண்டு போகிறோம்" என்றவாறே நடுங்கினாரென்றபடி. h$_{2}$ (ப$_{3}$ாட$_{4}$**மித்யேவ வக்ஷ்யதி**) என்றது-ப$_{4}$ரத$_{3}$ாழ்வானை நாமழைத்தால்

றைக்கொண்டே அணையவேணும். j "அல்லாதார் செய்த படிசெய்ய, இச்சிறு ப்ரஜைகள் கண்ணில் கண்ணநீரைப் பாரிகோள்" என்னுமாபோலே. k (இவைநோக்கிக் காணீர்) l அவனை நினைத்து இவை வீங்கினபடி பாரிகோள்.

m (கோவிந்தனுக்கல்லால் வாயில்போகா) பசுக்களின் பின்னே போய்த் தீம்பிலே கைவளரும் க்ருஷ்ணனுக்கல்லது. வழியேபோய் வழிவந்து ஏகத$_3$ாரவ்ரதனாயிருக்கும் சக்ர

---

போடு ஸ்ரீராமபிரானைத் தழுவ ஆசைப்பட்டதுபோலே இக் கொங்கைத் தலத்தைக் கொண்டே அணைய ஆசைப்படுகிறாள். (*இவை நோக்கிக் காணீர்*) பிராட்டி அனுமனுக்கு விரஹம் தின்ற தன் உடம்பைக் காட்டினாற் போலே இவளும் விரஹத்தாலே நலிவுபடும் தன் கொங்கைத் தலத்தைத் தாய்மார் தோழிமார்களுக்குக் காட்டுகிறாள். "யார் எது சொன்னாலும் சொல்லட்டும். என்னுடைய இக் குழந்தைகள் கண்ணீர் விடுவதைப் பாருங்கள்; இக் கண்ணீரைத் துடைக்கவாவது ஏதாவது செய்யுங்கள்" என்று குழந்தைகளைக் காட்டி யாசிப்பாரைப் போலே யாசிக்கிறாள். (*இவை நோக்கிக் காணீர்*) அவனை நினைத்துப் பருத்து வளர்ந்திருப்பதைப் பாருங்கள்.

(*கோவிந்தனுக்கல்லால் வாயில் போகா*) பசுக்களின் பின்னேபோய் மேன்மேலே தீம்பு செய்யும் கண்ணனுக்கல்லாது முறையான வழியிற் சென்று மனைவி ஒருத்தியையன்றி வேறெவரையும் கண்ணாலும் நோக்காத ஏகத$_3$ார விரதனை சக்ரவர்த்தித் திருமகன் முக$_2$த்திலும் இவை விழியா.

---

"ஓம்" என்று சொல்லி வருவரென்றபடி. i "கொங்கைத் தலமிவை நோக்கிக் காணீர்" என்றது - எப்படியிருக்கிறதென்ன; பிராட்டி திருவடிக்குக் காட்டினாற்போலேயிருக்கிறதென்கிறார் (க$_3$ாத்ரைரித்யாதி$_3$) j (அல்லாதார்) என்ற வாக்யம் தாத்பர்யாந்தரமாதல். தாத்பர்யபே$_4$த$_3$முண்டான பக்ஷத்தில் முந்தின தாத்பர்யத்திலே. k,l "நோக்கிக்காணீர்" என்றதுக்கர்த்த$_2$ம் (அவனை நினைத்தித்யாதி$_3$).



வர்த்தித்திருமகனுக்கு வழி போகாது. n 209. "मम" (மம) அஶ்வஹ்ருத$_3$யமறிகைக்குத் தன்னைத் தான் மதித்தபடியாலே "मम" (மம) என்கிறான். [து] o இற்றைக்கு முன்பின்றிக்கே இற்றைக்கே உள்ளதொரு விஶேஷமாய்த்து இது. 209. "अश्वाः" (அஶ்வா:) என் கருத்திலே நடந்துபோனவை. 209. "निवृत्तस्य" (நிவ்ருத்தஸ்ய) பெருமாளை எழுந்தருளு

---

மற்ற க்ஷுத்$_3$ர புருஷர்கள் எடுத்துக் கழிக்கவும் தகுதியற்றவர்களாகையாலே இங்கு இப்படியே பொருள்கொள்ள வேண்டும். (*போகா*) நான் விரும்பினாலும் இவை என் வழி நடப்பதில்லை.

**209. மம த்வஶ்வா நிவ்ருத்தஸ்ய ந ப்ராவர்த்தந்த வர்த்மநி।**
**உஷ்ணமஶ்ரு ப்ரமுஞ்சந்தோ ராமே ஸம்ப்ரஸ்தி$_2$தே**
**வநம் ॥** [*ரா-அ* 69-1]

[ராமன் காடு சென்றவுடன் திரும்பிய என்னுடைய குதிரைகள் உஷ்ணமான ஶோகக் கண்ணீரை விடாநின்றுகொண்டு வழி தவறிச் சென்றன.] என்று ஸுமந்த்ரன் பெருமாளைப் பிரிந்த குதிரைகள் தன் வழியே வரவில்லை என்று கூறியதுபோலே கூறுகிறாள். [மம அஶ்வா:] என் குதிரைகள், குதிரைகள் நெஞ்சறியும் அஶ்வ ஶாஸ்த்ரவித்தமனான என் குதிரைகள் என் வழி வரவில்லையே என்று வியப்புறுகிறான் ஸுமந்த்ரன். [து]இது வரை என் வழி நடந்து வந்த இவை இப்போதுதான் இப்படித் தறிகெட்டுநடக்கின்றன. [அஶ்வா:] "அஶூ-வ்யாப்தௌ" என்கிற த$_4$ாதுவில் அஶ்வஶப்$_3$த$_3$ம் எழுந்ததாகையாலே என் நெஞ்சறிந்து விரைந்து ஓடிய குதிரைகள் என்று பொருள்படுகிறது. [நிவ்ருத்தஸ்ய] பெருமாளைக் கூட்டிக்கொண்டு போகும்போது ஒழுங்காக நடந்தன. அவரில்லாமல் திரும்பும் இப்போதுதான் வழி தவறி

---

m n,o "கோவிந்தன் வழியொழிய என்வழியே வரவில்லை" என்கிறது ஏப்படியிருக்கிறதென்ன; பெருமாளைவிட்டுத் திரும்புகிறபோது ஸுமந்த்ரர் "குதிரைகள் என்வழியே வரவில்லை" என்றாற்போலேயிருக்கிறதென்கிறார் (மமஇத்யாதி$_3$) o துஶப்$_3$தா$_3$ர்த்த$_2$ம் (இற்றைக்கித்யாதி$_3$) p "யமுனை"

வித்துக் கொடுபோகிறபோது போய்த்தின. 209. "न प्रावर्त्तन्त वर्त्मनि" (ந ப்ராவர்த்தந்த வர்த்மநி) வழிசெய்து கிடக்கிற பெருவழியைவிட்டுக் காடுபாயத் தொடங்கிற்றின.

(இங்குத்தையித்யாதி) அடிச்சுவடு உருவெளிப்பாடாய் அநுபவிக்கலாம் இங்குத்தை ஸம்ருத்தியை விட்டு அடிச்சுவட்டைக் கண்ணாலே கண்டநுபவிக்கலாம் தேசத்திலே கொடுபோய்ப் பொகடுங்கோள். தூயபெருநீர் யமுனையிறே. தானுமவனுமாய் ஜலக்ரீடை பண்ணி விளையாடக் காணும் நினைவு. 4.

## பன்னிரண்டாம் திருமொழி—ஐந்தாம் பாட்டு

ஆர்க்குமென் னோயி தறியலாகா(து)
அம்மனை மீர்! துழ திப்படாதே
கார்க்கடல் வண்ணனென் பானொருவன்
கைகண்ட யோகம் தடவத்தீரும்;

---

நடக்கின்றன, [ந ப்ராவர்த்தந்த வர்த்மநி] செப்பனிடப் பட்ட பெரிய வழியை விட்டு, காட்டு வழியில் பாயத் தொடங்கின.

*(இங்குத்தை வாழ்வை ஒழியவேபோய் யமுனைக்கரைக் கென்னை உய்த்திடுமின்)* எம்பெருமானுடைய அடிச்சுவடு மானஸ ஸாக்ஷாத்காரத்திலே உருவெளிப்பாடாய் அனுபவிக்கப்படும் இப்போதுள்ள வாழ்வில் எனக்குத் திருப்தியில்லை. அந்த அடிச்சுவட்டைக் கண்ணாலே கண்டனுபவிக்கலாம்படி யமுனைக்கரையிலே என்னைக் கொண்டுபோய்ப் போடுங்கள். "தூய பெருநீர் யமுனைத்துறைவன்" [திருப்பாவை 5] என்று இவளாலேயே கொண்டாடப்பெற்ற யமுனையன்றோ. தானும் அவனுமாய் ஜலக்ரீடை (நீர் விளையாட்டு) விளையாட நினைக்கிறாள் போலும்!

---

என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (தூயபெருநீர் இத்யாதி). 4.



நீர்க்கரை நின்ற கடம்பையேறிக்
காளிய னுச்சியில் நட்டம்பாய்ந்து
போர்க்கள மாக நிருத்தம்செய்த
பொய்கைக் கரைக்கென்னை யுய்த்திடுமின்.

பதவுரை:— **அம்மனைமீர்**—தாய்மார்களே! **என்**—என்னுடைய, **இதுநோய்**—இந்த வியாதியானது, **ஆர்க்கும்**—எப்படிப்பட்டவர்களுக்கும், **அறியல் ஆகாது**—அறியமுடியாதது; **துழதிப்படாதே**—(நீங்கள் கண்டபரிஹாரம் செய்து) துக்கப்படாமல், **நீர் கரைநின்ற**—காளிங்க மடுவின் கரையிலிருந்த, **கடம்பைஏறி**—கடம்ப மரத்தின்மேல் ஏறி, **காளியன் உச்சியில்**—காளிய நாகத்தின் படத்தின்மேலே, **நட்டம் பாய்ந்து**—ஒரு நர்த்தன வகையாகப் பாய்ந்து, **போர்க்களம் ஆக**—அப்பொய்கைதானே யுத்தகளமாம்படியாக, **நிருத்தம் செய்த**—நர்த்தனம்செய்யப்பெற்ற, **பொய்கை கரைக்கு**—மடுவின் கரையிலே, **என்னை உய்த்திடுமின்**—என்னைக் கொண்டுபோய்ப் போடுங்கள். **கார் கடல் வண்ணன் என்பான் ஒருவன்**—நீலக்கடல்போன்ற திருநிறத்தனான கண்ண பிரான், **தடவ**—(தனது திருக்கைகளால்) தடவினால், **தீரும்**—(இந்த நோய்) தீர்ந்துவிடும்; **கைகண்ட யோகம்**—(இது தான்) கைமேலே பலிக்கக்கூடிய உபாயம்.

அவ:—அஞ்சாம்பாட்டு. (ஆர்க்குமித்யாதி) 'நோவறிந்து அதுக்கீடாகப் பரிஹாரம் பண்ணவேணுமிறே' என்று அதிலே துக்கப்படத் தொடங்கினார்கள்; உறவுமுறையாரென்னு உங்களுக்கு என் நோவு அறியப்போகாது என்கிறாள்.

---

5 அவ:— இவள் படுகிற பாட்டைக் கண்ட தாய்மார் இவளுடைய நோய் இன்னதென்று அறிந்து, அதற்குத் தக்க பரிஹாரத்தைச் செய்யவேணும் என்று அதற்காகச் சிரமப்படத் தொடங்கினார்கள். 'என்னோடு உறவு உள்ளது என்கிற காரணத்தாலேயே உங்களால் என் நோயை அறிந்துவிட முடியாது' என்கிறாள்.

வ்யா:—(ஆர்க்குமித்யாதி$_3$)a இந்நோவு விளைத்தவனுக்கும் இவ்வளவென்று பரிச்சே$_2$தி$_3$க்கவொண்ணாது. b "இசைப் பின்றி நீரணங்காடும் இளந்தெய்வமன்றிது" என்னக்கடவதிறே. c 210. "यस्यामतं तस्य मतं" (யஸ்யாமதம் தஸ்ய மதம்)

---

*வ்யா:—(ஆர்க்கும் என் நோயிது அறியலாகாது)* தாய்மாரான உங்களுக்கு மட்டுமா? இந்நோயை விளைத்தவனாய், பெருந் தெய்வமான அவனுக்கும் இதை 'இவ்வளவு' என்று அளவிட்டறிய இயலாது. "இதுமிக்க பெருந்தெய்வம் இசைப் பின்றி நீர் அணங்காடும் இளந்தெய்வமன்றிது" [திருவாய் 4-6-2] என்று நம்மாழ்வாரும் அருளினாரன்றோ.

**210. யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத$_3$ ஸ:।**
**அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம் ॥**

[கேந 2-3]

[எவனுக்கு ப்$_3$ரஹ்மம் (அளவிட்டு) அறியப்படவில்லையோ, அவனுக்கு (அது) அறியப்பட்டதாகிறது. எவனுக்கு (ப்$_3$ரஹ்மம்) அறியப்பட்டதாகிறதோ, அவன் (அதை) அறியவில்லை. (அளவிட்டு) அறிந்தவர்களுக்கு அறியப்படாததாகவும், (அளவிட்டு) அறியாதவர்களுக்கு அறியப்பட்டதாகவுமிருக்கிறது (ப்$_3$ரஹ்மம்)] என்னும் வேத$_3$வாக்யத்தில் தன் பெருமை அறிய இயலாதவர்களாகச் சொல்லப்பட்டவர்களில் அவனும் சேர்ந்த

---

அஞ்சாம் பாட்டு. (ஆர்க்குமித்யாதி$_3$) a "ஆர்க்கும்" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் (இந்நோவு விளைத்தவனுக்குமித்யாதி$_3$) b,c அவர்களுக்கும் அவனுக்கும் அறியப் போகாதென்னுமத்தை ப்ரமாணத்$_3$வயத்தாலே அருளிச் செய்கிறார் (இசைப்பின்றி நீரித்யாதி$_3$) அதாவது—தே$_3$வதாந்தரமடியாக வந்ததோ? என்று கலங்குகையாலே என்றபடி. c ஸர்வஜ்ஞனன்றோ ஸர்வேஶ்வரன், அவனுக்குப் பரிச்சே$_2$தி$_3$க்கவொண்ணாதோ? என்ன அருளிச் செய்கிறார் 210. "यस्यामतं" (யஸ்யாமதம்இத்யாதி$_3$) c$_2$,c$_3$ (புக்கானிறே அவனும்) என்றது "सो अङ्ग वेद यदि वा न वेद" (ஸோ அங்க$_3$ வேத$_3$ யதி$_3$ வா ந வேத$_3$) என்கையாலே



என்றதுக்குள்ளே c$_2$ புக்கானிறே அவனும். c$_3$ தன்னைப் பரிச்சே$_2$தி$_3$த்தாலிறே என் நோயைப் பரிச்சே$_2$தி$_3$க்கலாவது.

(என்னேய்) d ஸ்ரீப$_4$ரதாழ்வான் மோஹித்த அத்தைக் காணா, அவனருகுநின்ற மந்த$_2$ரை கைகேயிக்கு மோஹிக்கவொண்ணாதிறே. e 211 "अस्य राजकुलस्याद्य त्वदधीनं हि जीवितं" (அஸ்ய ராஜகுலஸ்யாத்$_3$ய த்வத$_3$தீ$_4$நம் ஹி ஜீவிதம்) "பெருமாள் காடேறப் போனார், சக்ரவர்த்தி துஞ்சினான். இனி நீ நோக்குமித்தனையிறே எங்களை" என்கிறார்களல்லர்; "உன் முகத்தில் பயிற்பைக்கண்டு, போனவர் உன்னையிழக்க மாட்டாமையாலே மீள்வர்" என்னுமிது பற்றாசாகவிறே நாங்கள் ஜீவித்திருப்பது. 212. "पुत्र व्याधिर्न ते कच्चित्" (புத்ர வ்யாதி$_4$ர் ந தே கச்சித்)—நின்றாற்போலே நில்லா

---

வனன்றோ. "தாம் தம் பெருமை அறியார்" [பெரியதிரு 5-2-1] எனப்படும் அவன் தன்னை அளவிட்டறிய முடிந்தாலன்றோ, தான் விளைத்த என் நோயை அளவிட்டறிய முடியும்?

*(என் நோய்)* எனக்கேயுரிய இந்நோய் உங்களுக்கு வர முடியுமோ? ஸ்ரீப$_4$ரதாழ்வான் மயங்கி விழுந்ததைக் கண்டதால் மாத்திரம் அவனுக்கு அருகிலிருந்த கைகேயிக்கும் கூனிக்கும் ராம விரஹத்தால் மயக்கம் வந்துவிடுமோ?

**211 & 212.**

**புத்ர வ்யாதி$_4$ர் ந தே கச்சித் ஶரீரம் பரிபா$_3$த$_4$தே।**
**அஸ்ய ராஜகுலஸ்யாத்$_3$ய த்வத$_3$தீ$_4$நம் ஹி ஜீவிதம் ॥**

[ரா-அ 87-8]

[பிள்ளாய் ப$_4$ரதா! ஏதேனுமொரு வியாதி உன் திருமேனியை வருத்துகிறதா? இன்று இந்த ராஜகுலத்தின் வாழ்வு உன்னைப் பற்றியன்றோ இருக்கிறது] என்கிறபடியே கோசலையான தாய் த$_4$ரித்து நின்று கேள்வி கேட்கும் நிலையிலிருந்தாளேயொழிய மயங்கி விழவில்லையே. 'இந்த ராஜகுலத்தின் வாழ்வு உன்னைப்

---

என்றபடி. ஆகையாலே (தன்னைப் பரிச்சே$_2$தி$_3$த்தாலிறே) என்று கூட்டி நிர்வஹிப்பது.

d "என்னேய்" என்கையாலே - "அவர்களுக்கில்லை" என்னுமதுக்கு ஸம்வாத$_3$மாக அருளிச்செய்கிறார் (ஸ்ரீப$_4$ர

**f ரஸவாதி$_3$கள் போமாபோலே மோஹித்துக்கொண்டு நிற்கக் கண்டார்கள். "பிள்ளாய்! உனக்கோடுகிற நோயென்?" என்று கேட்கிறார்கள். ராமவிரஹம் ஸர்வஸாத$_4$ாரண மாய்த்து; தங்களுக்கும் உண்டாயிருக்க "உனக்கோடுகிற த$_3$சையென்?" என்று கேட்கும்படியாய்த்து இவன் மோஹித்த சடக்கு. g தங்களளவிலேயாகிலிறே இவனுக்கும் அதுவேயென்று நினைத்திருக்கலாவது.**

---

பற்றியிருக்கிறது'' என்றதற்கு, "பிள்ளாய் ப$_4$ரதா! ஸ்ரீராமபிரான் காடு சென்றுவிட்டார். தசரத சக்ரவர்த்தி மரணமடைந்தார். இனி நீயே அரசனாயிருந்து எங்களை ரக்ஷிக்க வேணும்'' என்று பொருள் கொள்வது பொருந்தாது; ராமனை அரசாள அழைத்துவர அனைவரும் செல்லும்போதன்றோ இந்நிகழ்ச்சி நடந்துள்ளது. ஆகையால், "ப$_4$ரதா! உன் முகம் தன்னைப் பிரிந்ததால் வெளுத்திருப்பதைப் பார்த்து, காடு சென்ற ராமபிரான், நீடித்துப் பிரிந்தால் உன்னை இழக்க நேரிடும் என்று உணர்ந்து நாடு திரும்புவதற்கு நீ உயிரோடு சென்றால்தான் வாய்ப்புண்டு; அதை எதிர்பார்த்தே இந்த ராஜகுலம் உன்னைக்கொண்டு உயிர் வாழவிருக்கிறது'' என்றே இதற்குப் பொருள் கொள்ளவேண்டும். "உன்னை எந்த வியாதி வருத்துகிறது?'' என்னும் ஶ்லோகத்தின் முற்பாதிக்குப் பொருள் என்ன? எனில்: "ராம லக்ஷ்மணர்கள் சடை தரித்துக் கங்கை தாண்டிச் சென்றுவிட்டார்கள்'' என்று கு$_3$ஹன் கூறியவுடன், ரஸவாதி$_3$கள், ரஸகு$_3$ளிகை கொடுத்தாற்போலே உடனே மயங்கி விழுந்தான் ஸ்ரீப$_4$ரதாழ்வான். அப்போது தாய்மார் சார்பாகக் கோசலை "பிள்ளாய்! உன்னை எந்த நோய் வருத்துகிறது?" என்று கேட்கிறாள். ராமபிரானின் பிரிவு தங்களுக்கும் உள்ளதொன்றாகையாலே, அதனால் இவன் மயங்கினான் என்று அறியமாட்டாதவர்களானார்கள் தாய்மார்கள். தங்களை ராம விரஹம் மயக்கமடையச் செய்தாலன்றோ. இவனுக்கும் அந்நோயே என இவர்கள் அறியமுடியும்.

---

தாழ்வானித்யாதி$_3$) e அவன் மோஹித்தானோ? என்ன அருளிச்செய்கிறார் (**அஸ்ய ராஜகுலேத்யாதி$_3$**) f ரஸவாதி$_3$கள் ரஸகு$_3$ளிகை கொடுத்தாற்போலே. அது ப$_2$லிக்குமோ ப$_2$லியாதோவென்று தாங்கள் பற்றின த்$_3$ரவ்யம் தக்குமக்கு ஶீக்$_4$ரமாக ஒளிப்பர்கள்.



h 213. "अपि वृक्षाः'' (அபி வ்ருக்ஷா:) என்னுமாபோலே, மரங்களும் வாடாநிற்க h$_2$ இவனைக் கேட்கவேண்டாவிறே. i ஒரு வ்யக்திக$_3$தமான விஶேஷமுண்டானால் அந்த வ்யக்தி தன்னையே கேட்டறியவேணுமிறே. (என்னோய்) j "தெய்வ நன்னோய்'' என்னுமாபோலே, இவள்தனக்கும் ஆத$_3$ரவிஷயமாய் உத்$_3$தே$_3$ஶ்யமாயிருக்கிறதுகாணும் இந்நோய் தான்.

---

213. விஷயே தே மஹாராஜ ராமவ்யஸநகர்ஶிதா: ।
அபி வ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குரகோரகா: ॥
[ரா-அ 59-4]

[மஹாராஜரே! உம்முடைய தே$_3$ஶத்தில் ராமனுக்கு நேர்ந்த துன்பத்தாலே வருந்துகின்ற மரங்களும், பூவோடும், முளையோடும், மொட்டோடும் கூட மிகவும் வாடின.] என்கிறபடியே ஸ்ரீராமனைப் பிரிந்து தாவரங்களான மரங்களும் வாடாநிற்க, ப$_4$ரதாழ்வான் மயங்கி விழுந்தது வியப்பல்லவே. தங்களுக்கேற்படாத மயக்கம் இவனுக்கு விளைகையால், அவனையே கௌஸல்யை (முன் எடுத்த ஶ்லோகத்தில்) கேட்கிறாள். ஆண்டாள் தாய்மாரைக்குறித்து "என்நோய்'' என்பதும் அத்தகையதேயாகும். (என்நோய்) "தெய்வ நன்னோயிது'' [திருவிருத்தம் 53] என்கிறபடியே ப$_4$க$_3$வத்$_3$விஷய காமத்தால் விளைந்ததாகையாலே என்னாலும் விரும்பப்படும் நோய்.

---

e அன்றிக்கே, பெரியாழ்வார் ஸம்ப$_3$ந்த$_4$முடையவர்களன்றோ, ஆனபின்பு அவர்களுக்கு அறியவொண்ணாதோவென்ன (**அஸ்யேத்யாதி$_3$**) என்னவுமாம். g கெடுக்கைக்கு ஹேத்வந்தரம் (தங்களளவிலேயாகிலிறே) என்று. h தங்களைப் பற்ற அவனுக்கு அதி$_4$கமாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (**அபி வ்ருக்ஷா: இத்யாதி$_3$**) h$_2$ (இவனைக் கேட்க) இவனுக்குச் சொல்லவேணுமோ? என்றபடி. i இவன் றன்னையே கேட்கவேணுமோ, தங்களுக்குத் தெரியாதோவென்ன அருளிச்செய்கிறார் (ஒரு வ்யக்திக$_3$தமான இத்யாதி$_3$) j "என்னோயிது'' என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (தெய்வநன்னோயித்யாதி$_3$)

(அம்மனைமீர்) பெற்ற ப்ராப்திகொண்டறிவோம் என்றால் அறியப்போமோ ? k உங்களுக்கும் இப்போதாகப் பாகம் பிறந்தது முன்பு ப$_3$ாலைகளாயன்றோ ? (துழதிப்படாதே) து$_3$:க்க$_2$ப்படாதே. (துழதி) து$_3$:க்க$_2$ம். இது l நீங்களறிந்த வகையாலே பரிஹரிக்கப் பார்த்திகோளாகில் உங்களுக்கு து$_3$:க்க$_2$மே l$_2$ ஶேஷித்துவிடுவது.

"நீ கைவாங்கினுயென்று நாங்களும் கைவாங்கமாட்டோமே, நாங்கள் உன்னையிழக்கமாட்டோமே, நீ பரிஹாரமாக நினைத்திருந்ததென்?" என்ன; கேள் என்று சொல்லு

---

*(அம்மனைமீர்)* என்னைப் பெற்றவள் என்னும் உறவிருப்பதால் மாத்திரம் எனக்கு விளைந்த இந்நோயை அறிந்துவிட முடியுமோ? *(அம்மனைமீர்)* நீங்களும் இப்போது வயது முதிர்ந்தமையாலே அவன் வரப்பார்த்திருக்கச் சொல்லுகிறீர்கள். என்னைப்போல் சிறுவயதிலிருக்கும்போது நீங்களும் ப்ராப்யத்வரையாலே துடித்தவர்கள்தானே என்றும் கருத்துரைக்கலாம். *(துழதிப்படாதே)* துன்பப்படாதே. துழதி— துன்பம். என் துன்பத்தை நீங்களறிந்த குறிபார்ப்பது முதலான பரிஹாரங்களைக் கொண்டு நீக்கப்பார்த்தால் என்னை இழக்க நேரிடுமாகையாலே உங்களுக்குத் துன்பமே எஞ்சிநிற்கும்.

"நீ உன்னை ரக்ஷித்துக்கொள்வதினின்றும் மீண்டதால் நாங்கள் மீளமாட்டோமே. நாங்கள் உன்னை இழக்கமாட்டோமே; எங்கள் பரிஹாரம் ஆகாதெனிலும், நீ நினைத்திருக்கும் பரிஹாரத்தைச் சொன்னால் செய்கிறோம்" என்று தாய்மார் சொல்ல, கூறுகிறாள் மேலே *(கார்க்கடல் வண்ணன்*

---

k தாத்பர்யாந்தரம் (உங்களுக்குமித்யாதி$_3$) (ப$_3$ாலைகளாய்) நீங்களும் ப$_3$ால்யத்திலே த்வரையையுடையராயன்றோ இருத்திகோள் ; ஆகையாலே என்விஷயமாக து$_3$:க்க$_2$ப்பட வேண்டாவோ ? என்றபடி. l நீங்களறிந்த வகையாவது; தே$_3$வதாந்தரமடியாக வந்ததோ என்றறிந்த வகை என்றபடி, l$_2$ (ஶேஷித்து விடுவது) ஆகையாலே கைவாங்குங்கோளென்றபடி.



கிறாள் (கார்க்கடலித்யாதி$_3$) கருங்கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையனாயிருப்பான் ஒருவனுண்டு; நோவுக்கு நித$_3$ானத்தைச் சொல்லிச் செல்லுகிறாளாய்த்து. m பரிஹாரத்தை இவர்கள்தாங்களும் m$_2$ அடியேபிடித்து இவள் தன் பக்கலிலே கேட்டறியவேண்டும்படியாய்த்துக் கலங்கின படி. ஒருவன்) நீங்களும் பரிஹாரத்திலே இழியுமத்தனை போக்கி, உங்களுக்கும் அடி ஆராயப்போகாதாய்த்து. (கார்க்கடல் வண்ணனென்பானொருவன் - n தடவத்தீரும்) o கைகண்டிருந்திறே இவள்தான் சொல்லுகிறது. p(யோகம்)

---

*என்பானொருவன்)* கருங்கடல்போலே கண்டார் களைப்பையாற்றும் திருமேனியையுடைய ஒருவனே என்னை இப்பாடுபடுத்துகிறான் என்கிறாள். தனது நோய்க்கு ஆதி$_3$காரணமாயிருப்பவன் யாரென்று சொல்லி, மேலே பரிஹாரத்தைச் சொல்லுகிறாளாயிற்று. "இவர்கள் இவனே இவள் நோய்க்குக் காரணமென அறியார்களோ?" எனில்: இவள் படுகிற பாட்டைக் கண்டு கலங்கியிருக்கையாலே, இவளது நோய்க்கு ஆதிகாரணம் இவனே என்பதையும், அதற்குப் பரிஹாரத்தையும் இவள் சொல்லியே இவர்கள் அறியவேண்டியுள்ளது. *(ஒருவன்)* நீங்களும் நான் சொல்லுகிற பரிஹாரத்தைச் செய்யலாமேயொழிய, நோய்க்குக் காரணமான அவனை அளவிட்டு அறிந்துவிட முடியாது. பரிஹாரம் யாதெனில்? *(கார்க்கடல் வண்ணன் என்பானொருவன் — தடவத்தீரும்)* நோய்க்குக் காரணமான அவன் எனது உடலைத் தடவினால்தான் இந்நோய்தீரும். இதை எப்படி அறிந்தாய்? எனில் *(கைகண்ட யோகம்)* ஏற்கனவே நான் கைகண்ட மருந்து இது. *யோகம்*— ஔஷத$_4$ப்ரயோக$_3$ம். அன்றிக்கே, *"யோக$_3$: ஸந்நஹநோபாய"* என்கிற நிக$_4$ண்டுவின்படி 'யோகம்' என்று உபாயத்தைச் சொல்லுகிறதாய், பலரும் கைகண்ட உபாயம் என்பதாகவும் கொள்ளலாம். "ஏற்கனவே நான் சொன்ன வார்த்தைகள்

---

m நித$_3$ாநம் இவள் சொல்லவேணுமோ, தாங்களேயறியார்களோவென்ன அருளிச்செய்கிறார் (பரிஹாரத்தை இத்யாதி$_3$) m$_2$ (அடியேபிடித்து) நித$_3$ாநமே பிடித்து.

q ப்ரயோக3ம். இவள்முன்பு சொல்லிப்போரும் வார்த்தை
களிலே ஒன்றிறே இப்போது சொல்லுகிற பரிஹாரமு
மென்னவொண்ணுது; r கைகண்ட உபாயம்; யோகம் -
உபாயம். s 214. "कौन्तेय प्रतिजानीहि" (கௌந்தேய ப்ராதி
ஜாநீஹி) இவ்வர்த்த2த்தில் நம்மைப் பார்த்திருக்கவேண்டுவ
தில்லைகாண், நீ ப்ரதிஜ்ஞைபண்ணு. 215. "प्रतिज्ञां कुरु"
(ப்ரதிஜ்ஞாம் குரு) என்கிறபடியே. (மே) நம்மையறியாயோ
நீ? 214. "न मे भक्तः प्रणश्यति" (ந மே ப4க்த: ப்ரணஶ்யதி)
நம்மைப்பற்றினுர்க்கு ஒரு காலமும் அநர்த்த2ம் வாராது
காண்; 216. "अग्निना सिञ्चेत्" (அக்3நிநா ஸிஞ்சேத்)

---

ப2லிக்காததுபோலே இதுவும் ப2லிக்காது என்று எண்ண
வேண்டா; இது பலரும் கைகண்ட உபாயம்'' என்கிருள். இதற்கு
ப்ரமாணமென்ன? எனில்: [பக்கம் 242ல் 73வது ப்ரமாணத்
தின்படி] எம்பெருமானது அடியார்கள் அழியமாட்டார்கள்
என்னும் விஷயத்தை உறுதிப்படுத்துவதற்காக எம்பெருமான்
தான் ப்ரதிஜ்ஞை பண்ணுமல் அர்ஜுனனையே ப்ரதிஜ்ஞை
செய்யச் சொன்னுனன்றே.

215. கௌந்தேய த்வமேவாஸ்மிந்நர்த்தே2 ப்ரதிஜ்ஞாம் குரு [கீ3தாபா4ஷ்யம் 9-3]

[குந்திபுத்திரனே! நீயே இவ்விஷயத்தில் ப்ரதிஜ்ஞை செய்.]
என்று பா4ஷ்யகாரரும் அவ்விடத்தில் பா4ஷ்யமிட்டாரன்றே.
"என்னுடைய ப4க்தன்" என்கையால் 'எனது பெருமையை
அறியாயோ நீ' என்று உணர்த்துகிருன். "என்னைப் பற்றின
வர்களுக்கு எப்போதும் தீங்கு வாராது; அத்தீங்கு

216. அக்3நிநா ஸிஞ்சேத் [சாஸ்த்ரஜ்ஞவழக்கு]

[நெருப்பாலே நனைக்கக்கடவன்] என்று கூறுவதுபோல் என்
றும் நடைபெற இயலாத ஒன்று' என்கிருன். இவ்வர்த்
த2த்தைப் பேயாழ்வாரும்.

---

n...r "தடவத்தீரும்; இது கைகண்டயோக3ம்" யோக3ம்-
ப்ரயோக3மாதல்; உபாயமாதல். s,t ஸ்வாபதே3ஶத்திலே
ப4க3வத் ஸமாஶ்ரயணம் தப்பாத உபாயமென்னுமதுக்கு
ப்ரமாணத்3வயமருளிச்செய்கிருர் (கௌந்தேய ப்ரதிஜாநீஹி



போலே அஸங்க3தம். t [ஆரே துயருழந்தார் இத்யாதி,]
ப4க3வத்ஸமாஶ்ரயணம் பண்ணினுரில் 217. "अवश्यमनु-
भोक्तव्यं" (அவஶ்யமநுபே4ாக்தவ்யம்) என்கிற பாபப2லங்கள்
அநுப4வித்தாருண்டென்று கேட்டறிவாருண்டோ? துயருழந்
தாரில், துன்புற்ருருண்டோ—துன்புற்ருராரோ? பாபங்களைப்
பண்ணிவைத்து நம்மை ஆஶ்ரயித்துப் பின்னும் அதி
னுடைய ப2லாநுப4வம் பண்ணினுருண்டென்று கேட்டறி
வாருண்டோ? ப4க3வத்ஸமாஶ்ரயணம் பண்ணினுரில்
முன்பு கைவந்தபடி திரிந்தார்களேயாகிலும். அவன் திரு

---

"ஆரே துயருழந்தார்? துன்புற்ருர் ஆண்டையார்?
காரே மலிந்த கருங்கடலை—நேரே
கடைந்தானைக் காரணனை நீரணைமேல்பள்ளி
அடைந்தானை நாளும் அடைந்து" [மூன்-திருவ 27]

என்று அருளினுரன்றே. இதன் கருத்து பின்வருமாறு:—
(காரணனை அடைந்து ஆரே துயருழந்தார்) எம்பெருமானைத்
தஞ்சமாக அடைந்தவர்களில் [பக்கம் 129ல் 43வது ப்ரமாணத்
தின்படி] பாபங்களின் ப2லனுக எம்பெருமானைவிட்டு விலகி
ஸம்ஸார நரகிலேயே வீழ்ந்திருந்தார் உண்டு என்று கேட்
டறிவார் உண்டோ? (துன்புற்ருர் ஆண்டையார்) இங்கிருக்
கும் சில நாளிலும் திரக்கழிய அபசாரம்செய்து மற்ற தெய்
வங்களைத் தஞ்சமாகக்கொண்ட ஹிரண்யராவணுதி3களைப்
போலே தண்டனை பெற்றவர் எவரேனும் உண்டோ?
"ஸம்ஸாரத்தில் பிறந்து பாபங்களைப் பண்ணிவைத்தும் எம்
பெருமானை ஆஶ்ரயித்தபின்பு விபீ4ஷணப்ரஹ்லாத3ாதி3களைப்
போலே வாழ்ந்துபோனவர்கள் உண்டேயொழிய ஹிரண்ய
ராவணுதி3களைப்போலே பாபப2லனுக அழிந்து போனவர்கள்
இல்லை" என்பது இவ்விரு ப்ரமாணங்களின் திரண்ட பொருள்.
முன்பு பாபப2லமாக ஸம்ஸாரத்தில் உழன்றவர்களானுலும்,
அவனை அடைந்தபின்பு "நாட்டிலுள்ள பாபமெல்லாம் சும்
மெனுதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே" [பெரியாழ்
திரு 5-4-3] என்கிறபடியே பாபங்கள் அடியோடு கைவிட்டு

---

இத்யாதி3) t (ஆண்டையார்) ஆஶ்ரயித்த பழையார்;

வடிகளிலே தலைசாய்த்தவாறே இவைதானே யஸவாஸநமாகக் கழிந்துநிற்றல், அன்றிக்கே உகவாதார் மேலே ஏறிடுதல். அன்றியே தன்மேலே ஏறிட்டுக்கொள்ளுதல் செய்யுமித்தனை.
218. "उरसा प्रतिजग्राह" (உரஸா ப்ரதிஜக்3ராஹ) போலே.

(நீர்க்கரையித்யாதி2) இங்கேயிருந்து எனக்குப் பரியாதே. அவனுக்குப் பரியலாம் தே3ஶத்திலே கொடுபோய்ப் பொகடுங்கோள். (நீர்க்கரைநின்ற கடம்பையேறி) v முத

---

ஒடும்; அல்லது ராமபிரான் வருணன்மேல் தொடுத்த அம்பை அவனுக்கு வேண்டாதவர்கள்மேலே விட்டதுபோலே இப்பாபங்களையும் இவனுக்கு விரோதி4கள்மேல் ஏற்றுவான்; அல்லது,

218. விஸ்ருஷ்டம் ப4க3த3த்தேந தத2ஸ்த்ரம் ஸர்வக4ாதுகம்।
உரஸா த4ாரயாமாஸ (ப்ரதிஜக்3ராஹ) பார்த்த2ம்
ஸஞ்சூ2ாத்3ய மாத4வ: ॥ [ப4ார-தி 33-18]

[ப4க3த3த்தனாலே விடப்பட்டதும், எல்லாவற்றையும் ஸம்ஹரிப்பதுமான அந்த ப2ாணத்தை, அர்ஜுனனை மறைத்து, மாத4வன் மார்பினாலே த4ரித்தான்.] என்கிறபடியே ப4க3த3த் தன் அர்ஜுனன்மேல் விட்ட அம்பைத் தன் மார்பில் ஏற்று அர்ஜுனனைக் காத்ததுபோலே, இப்பாபங்களையும் தானே ஏற்றுக்கொள்வான். ஆகையால், "என்னுடைய ப4க்தன் அழியமாட்டான்" என்ற வார்த்தை பழுதாகாத வார்த்தையேயாகும்.

"கைகண்ட யோகத்திற்கு நாங்கள் செய்யவேண்டியது என்ன?" என்று கேட்கக் கூறுகிருள் — (*நீர்க்கரை நின்ற... உய்த்திடுமின்*) இங்கேயிருந்து என்னிடம் பரிவாலே தகாத பரிஹாரங்களைச் செய்து விபரீதப2லனை விளைக்காமல், அவனுக்குப் பரிந்து நான் பல்லாண்டு பாடவேண்டிய தே3ஶத்திலே என்னைக்கொண்டுபோய்ப் போடுவதே நீங்கள் செய்யவேண்டியது என்கிருள். (*நீர்க்கரை நின்ற கடம்பை ஏறி*) அடுத்து

---

(துயருழந்தார்) பாபம் பண்ணினர். u ஸவாஸநமாகக் கழிந்துநின்றது-ஆர்த்த விஷயம்,

v (முதலிலே தொடங்கி என்றது-சாடு. அதாவது-கடம்பிலே ஏறினதும் ப4யாவஹமென்றபடி. w அது எப்படி



லிலே தொடங்கி ப4யாவஹமாயிருப்பதொன்ருய்த்து. wமுதலிலே விஷஜலம் த4ாரகமாக முளைத்து வளர்ந்ததிறே. ஆரவாரத்தைப் பண்ணிக்கொண்டு சென்று காளியனைக் கிளப்பி. அவன் கிளம்பினவாறே அவன் தலையிலக்காகப் பாயலாம்படி கடம்பிலே உயரவேறினுனய்த்து. (காளியனுச்சியில் நட்டம் பாய்ந்து) பாய்கிறபோதே காளியன் x தலைகாலாகப் பாய்ந்தான்.

y (போர்க்களமித்யாதி3) "இதுக்கு ப4ட்டரருளிச்செய்ய நான் கேட்டேன்" என்று அருளிச்செய்வர்;— "காளியன் தலையிலே க்ருஷ்ணன் பாய்ந்தான்" என்று கேட்டார் கேட்ட

---

விஷப்பாம்பின் வாயில் விழுந்தது இருக்கட்டும்; அதற்கு உறுப்பாக விஷநீர்க்கரையிலே முளைத்திருக்கையாலே விஷமேறிய கடம்பின்மேலே ஏறினனே; அது நமக்கு எத்தனை ப4யத்தை விளைக்கிறது. பெரிய ஒலியைச் செய்துகொண்டு உறங்கிக்கிடந்த காளியநாகத்தை விழித்தெழச்செய்து, அவன் கிளம்பினவுடன் அவன் தலையே குறியாகப் பாய்வதற்காக விஷநீரில் ஊறிமுளைத்த கடம்பமரத்தின் மிகவுயர்ந்த கிளையில் ஏறினன். (*காளியன் உச்சியில் நட்டம் பாய்ந்து*) பாயும்போதே தலைகாலாகப் (1. காளியன் தலையிலே தன்கால் பதியும்படி. 2. தலைகீழாக) பாய்ந்தானன்றே.

(*போர்க்களமாக நிருத்தம் செய்த பொய்கைக் கரைக்கு*) பொய்கையையோ, காளியன் தலையையோ போர்க்களம் என்ற கூறுவது பொருந்தாது. ஆகையால் பொய்கைக் கரையே போர்க்களமானதாகக் கூறவேண்டும். இது எப்படி? என்று ப4ட்டர் பொருள் அருளியதை நம்பிள்ளை தாமே கேட்டிருந்ததைப் பின்வருமாறு அருளிச்செய்வர் என்கிருர் பெரியவாச்சான்பிள்ளை. அதாவது — கண்ணன் காளி

---

யென்ன (முதலிலே) என்று. x(தலைகாலாக)சாடு; தலையிலே காலாக என்று அர்த்த2ம்; அவன் தலைகீழாகவென்று த்4வநி.

y "போர்க்களமாக" கேட்டார் கேட்டவிடங்களிலே படுகளப்பட்டு ஈடுபடும்படி. z உத்2தே3ஶ்ய விஷயத்தில்

விடங்களிலே அழவிழுந்ததாய்த்து; பொய்கையளவும் கால் நடை தந்துபோய்ப் புகவல்லாரில்லையாய்த்திறே. z அநந் தாழ்வான், எம்பெருமானாரைக் காணவேணும் என்று வாராநிற்கச்செய்தே, வடகரையளவிலே வந்தவாறே "திரு நாட்டுக்கு எழுந்தருளினார்" என்று சில ஏகாங்கிகள் தலைகளை யும் சிரைத்து ஏறினார்கள்; அவர்களைக்கண்டு ஸ்ரீநம்பி குஹ தா$_3$ஸர், மரத்திலேயேறி விழுவதாக ஏறினாராய், "தெளிந்து ஏறின நீ சாவமாட்டாய்காண், போந்திழி" என்றாரும்.

---

யன் மடுவுக்குச் சென்றிருக்கிறான் என்று கேட்டவுடன் அவனைத் தடுக்க ஆய்ப்பாடியில் உள்ள அனைவரும் பொய்கைக் கரைக்கு ஓடிவந்தனர். "காளியன் தலையிலே கண்ணன் விழ்ந் தான்" என்பதைக் கேட்டவுடன், கேட்டவர்கள் கேட்ட விடங்களிலேயே மயங்கி விழுந்தார்கள். பொய்கையை அடை யும் வரையில் த$_4$ரித்து நின்று கண்ணனைத் தடுக்கக் கூடியவர் எவருமில்லாமல், பொய்கைக்கரை முழுவதும் பிணக்காடா யிருக்கும் போர்க்களம்போலே காட்சியளித்தது என்பது ப$_4$ட்டர் நிர்வாஹம். மிகவும் வேண்டியவர்களுக்கு ஆபத்து என்று கேட்டால் உடனே உயிர்துறக்க வேண்டுமேயொழியத் தற்கொலை முயற்சி செய்வது தகாது என்பதற்கு மற்றோர் ஐதிஹ்யமும் அருளிச்செய்வர். அதாவது— எம்பெருமானாரு டைய கடைசிக்காலத்தில் அநந்தாழ்வான் அவரைக் காண வேணும் என்று திருமலையிலிருந்து வடதிருக்காவேரியின் வடக்குக்கரைக்கு வந்துவிட்டார். அப்போது எம்பெருமானார் சிஷ்யர்களான சில ஏகாங்கிகள் "எம்பெருமானார் திருநாட்டுக்கு எழுந்தருளினார்" என்று சொல்லிக்கொண்டு மழித்ததலையினராய்க் கரையேறுவதைப் பார்த்தார். அநந்தாழ்வானுடன் கூடவந்த நம்பிகுஹதாஸர் அவர்களிடம் அச்செய்தியைக் கேட்டவுடன் தற்கொலை செய்துகொள்ளத் துணிவுகொண்டு கீழேவிழுவதற் காக அருகிலிருந்த மரத்தின்மேல் ஏறினாராம். அதைக்கண்ட அநந்தாழ்வான் "எம்பெருமானார் பிரிந்தார் என்று கேட்ட வுடன் மயங்கிவிழாமல் தெளிந்திருந்து மரமேறும் நீர் மரத்தி லிருந்து விழுந்தாலும் சாவமாட்டீர்; ஆகையால் கீழே இறங் கும்" என்று கூறினார் என்பது அவ்வைதிஹ்யம்.

---

ஆபத்து ஈடுபடுத்துமென்னுமதுக்கு ஸம்வாத$_3$மாக ஓரை திஹ்யமருளிச் செய்கிறார் (அநந்தாழ்வானித்யாதி$_3$)



(பொய்கைக்கரைக்கு என்னை உய்த்திடுமின்) a இங்கே தெளிவோடேயிருந்து க்லேஶப்படாதே மோஹித்துக்கிடக்க லாம் தே$_3$ஶத்திலே பொகடுங்கோள். 5.

## பன்னிரண்டாம் திருமொழி—ஆறும் பாட்டு

கார்த்தண் முகிலும் கருவிளையும்
காயா மலரும் கமலப்பூவும்
ஈர்த்திடு கின்றன வென்னைவந்திட்டு
இருடீகே சன்பக்கல் போகேயென்று
வேர்த்துப் பசித்து வயிறசைந்து
வேண்டடி சிலுண்ணும் போதீதென்று
பார்த்திருந் துநெடு நோக்குக்கொள்ளும்
பத்த விலோசனத் துய்த்திடுமின்.

பதவுரை:— **கார்**—மழை காலத்திலுண்டான, **தண்**—குளிர்ந்த, **முகிலும்**—மேக$_4$மும், **கருவிளையும்**—கருவிளைப் பூவும், **காயா மலரும்**—காயாம்பூவும், **கமலம் பூவும்**—தாம ரைப்பூவுமாகிற இவைகள், **வந்திட்டு**—எதிரே வந்து நின்று, **இருடீகேசன்பக்கல் போகு என்று என்னை ஈர்த்திடு கின்றன**—"கண்ணபிரான்பக்கலில் நீயும் போ" என்று

---

(பொய்கைக் கரைக்கு என்னை உய்த்திடுமின்) கார்க்கடல் வண்ணன் என்னைத் தொட்டுத்தடவும் கைகண்ட யோகத்தைப் பெறலாம்படி அந்தப் பொய்கைக்கரையிலே என்னைக்கொண்டு போய்ப் போடுங்கள் என்பது முன்னம் உரைத்த பொருள்: அன்றிக்கே, இங்கே தெளிவுடன் இருந்து துன்புறாமல், அங்கு சென்று அவனுக்கு நேர்ந்த ஆபத்தைக் கேட்டவுடன் ஆய்ப்பாடி மக்கள்போலே மயங்கிவிழலாம்படி அக்கரையிலே கொண்டுபோய்ப் போடுங்கள் என்பதாகவும் கொள்ளலாம். 5.

---

a "நீர்க்கரை" இத்யாதி$_3$க்குக் கீழே ஒரு தாத்பர்யமருளிச் செய்து, தாத்பர்யாந்தரமருளிச் செய்கிறார் (இங்கே தெளி வோடேயித்யாதி$_3$) 5.

என்னை வலிக்கின்றன; (ஆகையாலே.) "வேர்த்து—(பசுமேய்க்கிற ஶ்ரமத்தாலே) வேர்வையடைந்து, பசித்து—பசியினால் வருந்தி, வயிறு அசைந்து—வயிறு தளர்ந்து, வேண்டு அடிசில் உண்ணும்போது ஈது என்று—"வேண்டிய ப்ரஸாத$_3$ம் உண்ணவேண்டிய காலம் இது" என்று, பார்த்திருந்து — ரிஷி பத்னிகளின் வரவை எதிர்பார்த்திருந்த, நெடுநோக்குக்கொள்ளும் — நெடுங்காலம் கடாக்ஷித்துக்கொண்டிருக்குமிடமான, பத்தவிலோசனத்து—பக்தவிலோசனமென்கிற ஸ்த$_2$ானத்திலே, உய்த்திடுமின்—(என்னைக்) கொண்டு சேர்த்துவிடுங்கள்.

வ்யா:— (கார்த்தண் முகிலும்) கார்காலத்தில் குளிர்ந்த முகிலும். a கருவிளைப்பூவும், காயாமலரும். மேக$_4$த்தை த்$_3$ருஷ்டாந்தமாகச் சொல்லப்புக்கவள், ஒன்றும் போராமையாலே பலவற்றிலேயும் கூதிர்பொறுக்குகிறாள். (கமலப்பூவும்) அவயவ ஶோபை$_4$க்கு. (ஈர்த்திடுகின்றனவென்னை

6 அவ:—கண்ணன் ரிஷிபத்னிகள் சோறுபார்த்திருந்த இடமான பத்தவிலோசனத்திலே என்னைக் கொண்டுபோய்ச் சேருங்கள் என்கிறாள்.

வ்யா:— (கார்த்தண்முகிலும் கருவிளையும் காயாமலரும்) கார்காலத்தில் குளிர்ந்த மேக$_4$மும், கருவிளை என்னும் காக்கணம் பூவும், காயாப்பூவும். மேக$_4$ம் ஒன்றை மாத்திரம் எம்பெருமான் திருமேனிக்கு த்$_3$ருஷ்டாந்தமாகச் சொல்லப்புகுந்தவள் அது ஒன்றுமாத்திரம் உபமானமாகப் போராமையால் திருமேனிக்கு உபமானமாகத் தக்க பல பொருள்களையும் பொறுக்கிச் சேர்க்கிறாள். (கமலப்பூவும்) திருமேனியின் ஸமுத$_3$ாய ஶோபை$_4$க்குப் பலவற்றை உபமானமிட்டவள் - கண் கை கால் செங்கனி வாய் முதலான பல அவயவங்களின் ஶோபை$_4$க்குத் தாமரைப்பூ ஒன்றை உபமானமாக இடுகிறாள். (ஈர்த்திடுகின்றன என்னை

ஆறும் பாட்டு. (காரித்யாதி$_3$) a "கருவிளை" - காக்கணம், b, c "இருடீகேசன்" என்றதுக்கு, (ஹ்ருஷீ



வந்திட்டு) பற்றியிழாநின்றன. என்சொல்லியென்னில்: b' இருடீகேசன்பக்கல் போகேயென்று) b$_2$ 219. "लक्ष्मणेन गतां गतिं" (லக்ஷ்மணேந க$_3$தாம் க$_3$திம்) என்கிறபடியே - கரணங்கள் c உடையவன் பக்கலிலே போனால் அவற்றின்பின்னே போகையிறே உள்ளது. d 220. "यस्यात्मा शरीरं" (யஸ்யாத்மா ஶரீரம்) அன்றோ. e 221. "करणाधिपाधिपः" (கரணாதி$_4$-

வந்திட்டு) என் எதிரே வந்து நின்று என்னை வலியப்பற்றி இழுக்கின்றன. என்ன சொல்லி இழுக்கின்றன? எனில்—(இருடீகேசன் பக்கல் போகேயென்று)

219. அத்$_3$யைவாஹம் க$_3$மிஷ்யாமி லக்ஷ்மணேந க$_3$தாம் க$_3$திம் [ரா-உ 107-3]
[நான் இன்றே லக்ஷ்மணன் சென்ற அடிச்சுவட்டைப் பின்பற்றிச் செல்வேன்] என்று இராமபிரான் அவனுடைய அன்புக்குப் பாத்திரமான இளையபெருமாள் சென்ற வழியைப் பின்தொடர்ந்ததுபோலே, உன்னுடைய இந்த்$_3$ரியங்கள் அவற்றையுடையவனான எம்பெருமானிடம் போனபின்பு நீயும் அவற்றின் பின்னே போவதுதானே தக்கது என்று சொல்லி இழுக்கின்றன.

220. யஸ்யாத்மா ஶரீரம் [ப்$_3$ருஹ 5.7.22]
[எந்தப் பரமாத்மாவுக்கு ஆத்மா ஶரீரமோ...]

காணீந்த்$_3$ரியாண்யாஹுஸ் தேஷாமீஶோ யதோ ப$_4$வாந். ஹ்ருஷீகேஶ இதி க்$_2$யாத:) என்கிற வசநத்தைப் பற்ற (உடையவன் பக்கலிலே) என்றது. d ஆத்மாவன்றோ அவற்றுக்கு உடையவனென்ன அருளிச்செய்கிறார் (யஸ்யாத்மா ஶரீரமித்யாதி$_3$) அதாவது - இவன் அவனுக்கு ஶரீரமென்றபோதே இவனுடைய ஶரீரத்துக்கும் உடையவன் அவனிறே என்றபடி. e இவனுக்கு ஸ்வாமியான வழியாலும் அவனே உடையவனென்கிறார் (கரணாதி$_4$பாதி$_4$ப: என்னக்கடவதிறே) என்று. f "ஆகையாலே, பரமஶேஷியைக் கண்டால்" என்று கூட்டுவது. b$_2$ (லக்ஷ்மணேந க$_3$தாம் க$_3$திம்) என்கிறபடியே கரணவத் பரதந்த்ரரான

பாதி4ப:) என்னக்கடவதிறே. f பரமசேஷியைக கண்டால் பின்னை f2 த்3வாரசேஷிகளளவிலே நில்லாதிறே அவை.

(வேர்த்தித்யாதி3) நானே சென்று முறைகெடப் பற்றினேனாகாமே முறையே சென்று பற்றினேனாகப் பாருங்

---

221. ஸ காரணம் கரணாதி4பாதி4ப:

ந சாஸ்ய கஶ்சிஜ்ஜநிதா ந சாதி4ப:॥ [ஶ்வே 6-9]

[இந்த்3ரியங்களுக்கு அதி4பதியான ஜீவனுக்கும் அதி4பதியான அவனே காரணபுருஷன்; அவனைப் பிறப்பித்தவனும் ஒருவனுமில்லை; அவனுக்கு அதி4பதியும் ஒருவனுமில்லை] என்கிறபடியே இந்த்3ரியங்களோடு அவற்றை உடைய ஜீவாத்மாவோடு வித்தியாசமின்றி அனைத்துக்கும் அந்தர்யாமியாய் ஸ்வாமியாயிருப்பவனன்றோ எம்பெருமான், 'ஹ்ருஷீகாணீந்த்3ரியாண்யாஹு: தேஷாமீஶோ யதோ ப4வாந்। ஹ்ருஷீகேஶ இதி க்2யாத:' [இந்த்3ரியங்கள் ஹ்ருஷீகம் எனப்படுகின்றன. அவற்றிற்கு நீர் தலைவனாயிருக்கையால் ஹ்ருஷீகேஶன் எனப்படுகிறீர்] என்கிற நிர்வசனத்தின்படியே ஸ்வாமிக்கும் ஸ்வாமியான எம்பெருமானைக்கண்டால் அந்த இந்த்3ரியங்கள் தங்களுடைய ஸ்வாமியான ஜீவனிடத்திலே நிலைத்து நிற்கமாட்டாவன்றோ.

(வேர்த்துப்பசித்து.........உய்த்திடுமின்) என் ஸ்வரூபத்தக்குத் தகாதபடி பெண்ணான நான் வலியச்சென்று அவனைப்

---

இளையபெருமாள் போனவழியே பெருமாள் போனாற் போலே, நீயும் உன் கரணங்கள் போனவழியே போவென்றபடி. b "இருடீகேசன்" என்கையாலே - கரணம்போனது ஸித்3த4ம்; f2 த்3வாரசேஷி - சாடு. இந்த்3ரிய த்3வாராசேஷியான அவனளவில் நில்லாதென்று அர்த்த2ம்; ராஜாவைக் கண்டால் வாசல் ப்ரத4ாநியளவில் நில்லாதென்று த்4வநி; பரமசேஷியான ஈஶ்வரனைக் கண்டால் அந்தர்யாமித்வேந த்3வாரசேஷிகளான அக்3நீந்த்3ராதி3 தே3வதைகள் பக்கலிலும் நில்லாதென்றும் த்4வனிக்கிறது.



கோள். என் செல்லாமை பரிஹரிக்கைக்காகவன்றிக்கே, g அவன் செல்லாமை பரிஹரிக்கப்போனேனாம்படி பண்ணப் பாருங்கோள். (வேர்த்து) பசுக்களைக் கொண்டுபோனால் காதம் இருகாதம் அவ்வருகே கைகழியவிட்டு, அங்கே ரிஷிகளுடைய ஆஶ்ரமங்களிலே h சேமம் வேண்டிவிட்டு அவர்கள் க்ரியாப்ரத4ாநராயிருந்தவாறே, பத்நீஶாலைகளிலே வேண்டிப் போகவிடும்; அவர்கள் சேமம் கொடுத்துவிட்

---

பற்றினேன் என்னும் பழிவராதபடி அவன் விரும்பும் பொருளை அவனுக்கு அளிப்பதற்காகச் சென்றேன் என்று அனைவரும் நினைக்கும்படியான இடத்துக்கு என்னைக் கொண்டுபோய்ச் சேருங்கள் என்கிறாள். 'அவனை விட்டுப் பிரிந்து நான் படும் பாட்டைப் போக்கிக்கொள்வதற்காக அங்கு சென்றேன்' என்னும் பழிவராதபடி 'அவன் பசியைத் தணிப்பதற்காக அவன் சோறு பார்த்திருக்குமிடத்துக்கு நான் சென்றேன்' என்னும் புகழ் வரும்படி அவன் அடிசில் பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும் பத்தவிலோசனத்துக்கு என்னைக் கொண்டுசெல்லுங்கள்; (வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசில் உண்ணும்போது ஈதென்று பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும்) கண்ணன் பசு மேய்ப்பதற்காக அவற்றைக் காட்டுக்கு நெடுந்தூரம் ஓட்டிக்கொண்டு போவான். அவற்றை ஓரிடத்தில் மேயவிட்டு, தனக்கும் மற்றுள்ள இடைப்பிள்ளைகளுக்கும் நடந்த களைப்பாலே வேர்வை பெருகி பசியினால் வருத்தமுற்று வயிறு தளர்ந்து போகையாலே, "விரும்பி உண்ணும் உணவு கொள்ளவேண்டிய காலமிது" என்று எண்ணி அருகிலிருக்கும் ரிஷிகளின் ஆஶ்ரமத்திற்குச் சோறுவேண்டி ஆள் அனுப்புவான். அவர்கள் இவனை மதியாமல் தங்களுடைய யாக3 கார்யங்களிலே ஈடுபட்டிருப்பார்கள். அவர்கள் க்ரியா ப்ரத4ாநராயிருந்தவாறே அவர்கள் பத்னிகள் இருக்கும் இடத்துக்குச் சோறு வேண்டி ஆள் அனுப்புவான். அவர்கள் அன்புடன் சோறு அனுப்ப, அன்போடிட்ட அந்தச் சோற்றைப்

---

g (அவன் செல்லாமை) பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளுகை. h (சேமம்) - தளிகை. i (வேண்டடிசில்) -

டால் அதின் வடிவு பார்த்துத் திருமேனியெங்கும் வேர்த்துப் பசித்துத் தடுமாறி i வேண்டடிசிலாய்த்து. j ப்ரயோஜநாந்தர பரரிடுமவற்றைக் $j_2$ குழியிலே கால்கழுவிருரோபாதியாக வாய்த்துக்கொள்வது. k பெரியாழ்வார் பெண்பிள்ளையிடு மதுபோலே; "இன்றுவந்தித்தனையும் அமுதுசெய்திடப் பெறில் நான் ஒன்று நூறுபிரமாக் கொடுத்துப் பின்னுமாளும் செய்வன்" என்னுமாபோலே. l பெரியாழ்வார் மகளாயிழந்திராதே ஒரு பட்டை சோற்றைக் கொண்டுபோயாகிலும் கிட்டுவோமென்கிறாள். m (பத்தவிலோசனத்துய்த்திடு

---

பார்த்தவுடன் மிக விரும்பி, திருமேனி முழுதும் வேர்த்துப் பசித்துத் தடுமாறி அதை உண்பானுகையாலே, அது "வேண்டடிசில்" (விரும்பியிட்டசோறு) எனப்படுகிறது. ரிஷிகள் ஒரு பயன் கருதி யாகங்களிலே இடும் ஹவிர்பாகத்தை. பித்ருகார்யங்களிலே வரிக்கப்பட்ட ஸ்வாமிகள் குழியிலே கால்கழுவிக் கடமைக்காக உண்பதுபோலே ஏற்றுக்கொள்வான் எம்பெருமான். ரிஷிபத்னிகள் அன்பினாலே இட்ட சோற்றை மிகவிரும்பி ஏற்றுக்கொள்வான். "இன்று வந்தித்தனையும் அமுது செய்திடப் பெறில் நான் ஒன்று நூறாயிரமாக் கொடுத்துப் பின்னுமாளும் செய்வன்" [நாச். திரு 9-7] என்று பெரியாழ்வார் திருமகள் அன்பினாலே இட்டது போன்றது ரிஷி பத்னிகள் இட்டசோறு. பெரியாழ்வார் திருமகளாயிருந்து வைத்துப் பேற்றை இழந்து போகாமல் ரிஷி பத்னிகளைப் போலே ஒரு பட்டை சோற்றை எடுத்துக்கொண்டு அவன் சோறு பார்த்திருக்குமிடமான பத்தவிலோசனத்துக்குப் போவோம் என்கிறாள். *(பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்*

---

வேண்டியிட்ட சோறு; வேண்டடிசில் - ராக$_{3}$ப்ராப்தமாய் வந்த அடிசில். j, k ப்ரயோஜந ப்ரயுக்தமானத்தையும் ராக$_{3}$ ப்ராப்தமானத்தையும் கொள்ளும் ப்ரகாரமேதென்ன அருளிச்செய்கிறார் (ப்ரயோஜநாந்தரபரரித்யாதி$_{3}$ வாக்ய த்$_{3}$வயத்தாலே) $j_2$ (குழியிலித்யாதி$_{3}$) குழியில் கால்கழுவினர்-பித்ருக்கள் நிமித்தமாக வரிக்கப்பட்டாற்போலே தானும் விதி$_{4}$ப்ரேரிதனுகக் கொள்ளுமென்றபடி. m (பத்தம்)-சோறு;



மின்) சோறு பார்த்திருந்தவிடமாய்த்து. "பத்தம்" என்று சோற்றுக்குப்பேர். "விலோசநம்" பார்வை. சோறு பார்த்திருக்குமிடத்திலே என்றபடி. 6.

## பன்னிரண்டாம் திருமொழி—ஏழாம் பாட்டு

வண்ணந் திரிவும் மனங்குழைவும்
　மான மிலாமையும் வாய்வெளுப்பும்
உண்ண லுறுமையு முள்மெலிவும்
　ஓதநீர் வண்ணனென் பானொருவன்
தண்ணந் துழாயென்னும் மாலைகொண்டு
　சூட்டத் தணியும் பிலம்பன்றன்னைப்
பண்ணழி யப்பல தேவன்வென்ற
　பாண்டி வடத்தென்னை யுய்த்திடுமின்.

**பதவுரை:— வண்ணம் திரிவும்**—(என்னுடைய) மேனி நிறத்தின் மாறுபாடும், **மனம் குழைவும்**—மனத்தளர்ச்சியும், **மானம் இலாமையும்**—மானங்கெட்டுப்போனபடியும், **வாய் வெளுப்பும்**—வாய் வெளுத்துப்போனபடியும், **உண்ணல் உருமையும்**—ஆஹாரம் வேண்டியிராமையும், **உள் மெலிவும்**—அறிவுசுருங்கிப்போனதுமாகிய இவையெல்லாம், (எப்போது தணியுமென்றால்) **ஓதம் நீர் வண்ணன் என்பான் ஒருவன்**—கடல் வண்ணனென்று ப்ரஸித்$_{3}$த$_{4}$னுய் ஒப்பற்ற

---

*ளும பத்தவிலோசனத்துய்த்திடுமின்)* 'சோறு வருகிறதா' என்று நெடுங்காலம் பார்த்திருந்த இடமான பத்தவிலோசனத்துக்கு என்னைக் கொண்டுபோய்ச் சேருங்கள். 'பத்தம்' என்று சமைத்த சோற்றுக்குப் பெயர். விலோசனம் என்று பார்வைக்குப் பெயர். சோறு பார்த்திருந்தவிடம் என்று பொருள் 6.

---

(விலோசநம்) - பார்வை. l பெரியாழ்வார் மகளாயிருந்து வைத்து இத்தை இழந்திராதே ரிஷிபத்நிகளைப்போலே நாமும் பட்டை சோற்றைக்கொண்டு கிட்டுவோம் என்றபடி. 6.

வனை கண்ணபிரானுடைய, **தண் அம் துழாய் என்னும் மாலை கொண்டு சூட்ட**—குளிர்ந்து அழகிய திருத்துழாய் மாலையைக்கொண்டுவந்து சூட்டுமளவில், **தணியும்**—நீங்கும்; (அத்திருத்துழாய் மாலை உங்களால் இங்கே கொண்டு வந்து கொடுக்க முடியாதாகில்) **பலதேவன்**—பலராமன், **பிலம்பன் தன்னை**—ப்ரலம்பா3ஸுரனை, **பண் அழிய**—எலும்பு மூட்டுகள் உருக்குலையும்படி, **வென்ற**—கொன்று முடித்த இடமாகிய, **பாண்டிவடத்து**—பாண்டீ3ரமென்னும் ஆலமரத்தினருகில், **என்னை உய்த்திடுமின்**—என்னைக்கொண்டுபோய்ச் சேர்த்துவிடுங்கள்.

அவ:— **ஏழாம் பாட்டு. உனக்கு இஸ்வபா4வாந்யதா2பா4வம் எத்தாலே தீரக்கடவதென்ன**, a அது **இன்னதென்கிறாள்;** b **அவன் வெற்றி மாலையிட்டு நிற்கிறவிடத்திலே என்னைக் கொடுபோய்ப் பொகடுங்கோள் என்கிறாள்.**

வ்யா:— (வண்ணம் திரிவும்) **நிறத்தினுடைய அந்யதா2பா4வமும், லாபா4லாப4ங்களுக்கு இடையக்கடவதல்லாத நெஞ்சினுடைய நெகிழ்ச்சியும், எல்லாவளவிலுமுண்டான ஸ்த்ரீத்வாபி4மாநம் வாஸனையோடே குடிபோகையும்,**

---

*7. அவ:—* அவனைப் பிரிந்ததால் உனக்கு விளைந்துள்ள **இந்த வேறுபாடுகள் எதனால் தீரும்? என்று தாய்மார் முதலானோர் கேட்க, அவனுடைய திருத்துழாய் மாலையைச் சூட்டினாலேயே தீருமாகையாலே** அவன் வெற்றிமாலை இட்டிருக்கிற இடத்திலே என்னைக் கொண்டுபோய்ச் சேருங்கள் என்கிறாள்.

*வ்யா;— (வண்ணம் திரிவும்)* பிரிவினாலே நிறம் வெளுத்துப் போனதும். (மனம் குழைவும்) ஒன்றைப் பெற்றதாலோ ஒன்றைஇழந்ததாலோ தளராத நெஞ்சின் தளர்ச்சியும். (மானம் இலாமையும்) என்ன நேர்ந்தாலும் அழியாத பெண்மைக்குரிய அச்சம், மடம், நாணம் முதலானவை அடியோடு நீங்கியதும்.

---

ஏழாம் பாட்டு. (வண்ணமித்யாதி3) a (அதின்னதென்கிறாள்) என்றது-இன்னத்தாலே என்கிறாளென்றபடி. b இதினுடைய உபபாத3நம் (அவன் வெற்றிமாலையித்யாதி3).



**"வாய்ப்புறம் வெளுத்து" என்கிறபடியே போ4க்3யத்3ரவ்யங்களைக் குறைக்கையினாலே வாயிலுண்டான வெளுப்பும், வேறேயொன்றும் தா4ரகமாயிருப்பதில்லாமையாலே** ஶரீரத்**திலே பிறந்த** ப3லஹாநியும், **இவையெல்லாவற்றுக்கும் அடியான** c **ஜ்ஞாநஸங்கடமும்.** (ஓத நீர் வண்ணனென்பானொருவன்) **இவையெல்லாம் இப்படிபண்ணி வேறுபடுத்தின வடிவழகிருக்கிறபடி. ஓதம் கிளர்ந்த கடல்போலே** ஶ்ரமஹரமான **வடிவையுடையானொருவன்.** (ஒருவன்) **இதர விஸஜாதீயன்.**

(தண்ணந்துழாய் இத்யாதி3) d **அவன் தான் இதர விஸஜாதீயனாய் இருக்குமாபோலேயாய்த்து அம்மாலையின்**

---

*(வாய் வெளுப்பும்)* "வாய்ப்புறம் வெளுத்து" [நாச்-திரு 1-8] என்கிறபடியே வெற்றிலை முதலான போ4க்3யப் பொருளைத் தவிர்க்கையாலே வாயிலுண்டான வெளுப்பும். *(உண்ணலுறாமையும்)* உண்ணும்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணனாயிருக்கையாலே அவனைப் பிரிந்தபோது வேறேயொன்றைக்கொண்டு த4ரிக்கமுடியாதாகையாலே உண்ணாமையால் *ஶரீரத்தில்* விளைந்த ப3லக்குறைவும். காரணத்தைச் சொன்னது காரியத்தைக் காட்டுகிறது. *(உள்மெலிவும்)* இவையெல்லாவற்றுக்கும் காரணமான அறிவு சுருங்கிப்போனதும். "உள்" என்று ஜ்ஞானத்தைச் சொல்லுகிறது. (ஓத *நீர் வண்ணன் என்பானொருவன்)* இப்படியெல்லாம் வேறுபாட்டை விளைத்த வடிவழகு இருக்கிறபடி. அலையெறியும் கடல்போலே கண்டார் களைப்பை ஆற்றும் வடிவையுடையவன் ஒருவன். (ஒருவன்) மற்றுள்ள அனைவரைக் காட்டிலும் சிறந்தவன்.

*(தண் அந்துழாய் என்னும் மாலைகொண்டு சூட்டத் தணியும்)* அவன் மற்ற அனைவரைக் காட்டிலும் சிறந்தவனா

---

c ஜ்ஞாநம் உள்ளேயிருக்கையாலே "உள்" என்று ஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது, ஜ்ஞாநஸங்கடம்—ஜ்ஞாநஸங்கோசம். d இடையர்க்குக் கருமுகை மாலையாயிருக்கத்

படியும்; அத்தைக் கொடுவந்து ஸ்பர்ஶிப்பிக்க இது தணியும். (பிலம்பனித்யாதி$_3$) ப்ரலம்பா$_3$ஸுரன், கட்டழிந்து, ஸந்தி$_4$ப$_3$ந்த$_4$ங்கள் குலைந்து ஶிதி$_2$லனாம்படியாக நம்பி மூத்தபிரான் வென்ற e பாண்டீ$_3$ரவடத்திலே கொடுபோய்ப் பொகடப் பாருங்கோள். இளையபெருமாள் இந்த்$_3$ரஜித்$_3$வத$_4$ம் பண்ண, அந்த வெற்றி - பெருமாளதானாப்போலேயாய்த்து இங்கும் நம்பிமூத்தபிரானுடைய வெற்றியும் க்ருஷ்ணனதாயிருந்ததிறே. f அவன் வீராபி$_4$ஷேகமும் விஜயாபி$_4$ஷேக

---

யிருப்பதுபோலே இந்தத் திருத்துழாய்மாலையும் குளிர்ச்சியிலும் அழகிலும் மற்ற மாலைகளைக் காட்டிலும் சிறப்புற்றிருக்கிறபடி. அவன் திருமேனிபட்ட அதைக்கொண்டுவந்து சூட்டினால் முற்கூறிய எல்லா வேறுபாடுகளும் நீங்கும். *(பிலம்பன் தன்னைப் பண்ணழியப் பலதேவன் வென்ற பாண்டிவடத்து என்னை உய்த்திடுமின்)* போரிடவந்து ப்ரலம்ப$_3$ன் என்னும் அஸுரன் எலும்புமூட்டுகள் குலைந்து அழியும்படியாக, கண்ணனுடைய அண்ணனான ப$_3$லராமன் அவ்வஸுரனை வென்ற பாண்டீ$_3$ரமென்னும் ஆலமரத்தினருகில் அவனுடைய வெற்றி மாலையை எனக்குச் சூட்டலாம்படி கொண்டுபோய்ச் சேருங்கள். வெற்றி ப$_3$லராமனுடையதாயிருக்க, கண்ணன் வெற்றி மாலை சூடியிருப்பதாகக் கூறுவது பொருந்துமோ? எனில்: இளைய பெருமாள் இந்த்$_3$ரஜித்தைக் கொன்றபோது அந்த வெற்றி ஸ்ரீராமபிரானுடையதானாற்போலே இங்கும் ப$_3$லராமனுடைய வெற்றி கண்ணனுடையதாயிருக்கக் குறையில்லை. *(பாண்டிவடம்)* இந்த ஆலமரத்தினருகில் கன்றுகளை மேய்க்கும்போது போரிட வந்த ப்ரலம்பா$_3$ஸுரனை ப$_3$லராமன் கொன்றான் என்பது புராணம். *(வென்ற பாண்டிவடத்து என்னை உய்த்திடுமின்)* அவன் வீராபி$_4$ஷேகமும் விஜயாபி$_4$ஷேகமும் பண்ணி வெற்றி

---

திருத்துழாயென்பானென்? என்ன அருளிச்செய்கிறார் (அவன் தானித்யாதி$_3$) e (பாண்டிவடம்) வடம்-ஆலாய், பாண்டீ$_3$ர வடமென்று பேரையுடைத்தான கன்றுகள் மேய்க்கிற ப்ரதே$_3$ஶம். f அவதாரிகையில் சொன்ன தாத்பர்யம் தவிரவும், தாத்பர்யாந்தரம் (வீராபி$_4$ஷேகம்) என்று.



மும்பண்ணி மாலையிடும்போது அவன் தனியே நில்லாமே நானுமொக்கநின்று மாலையிடும்படியாக என்னை அங்கே கொடுபோய்ப் பொகடுங்கோள். 7.

## பன்னிரண்டாம் திருமொழி—எட்டாம் பாட்டு

**கற்றினம் மேய்க்கவும் மேய்க்கப்பெற்றான்**
**காடுவாழ் சாதியு மாகப்பெற்றான்**
**பற்றி யுரலிடை யாப்புமுண்டான்**
**பாவிகாள்! உங்களுக் கேச்சுக்கொலோ?**
**கற்றன பேசி வசவுணாதே**
**காலிக ளுய்ய மழைதடுத்துக்**
**கொற்றக் குடையாக வேந்திநின்ற**
**கோவர்த் தநத்தென்னை யுய்த்திடுமின்.**

பதவுரை:— (கண்ணபிரான்) **கன்று இனம்**—கன்றுகளின் திரள்களை, **மேய்க்கவும் மேய்க்கப்பெற்றான்**—மேய்ப்பதையே தொழிலாகப் பெற்றவனுமானான்; **காடு வாழ் சாதியும் ஆகப் பெற்றான்** — (வீட்டை விட்டுக்கழிந்து) காட்டிலேயே தங்கிவாழும்படியான இடைச்சாதியிலும் பிறக்கப்பெற்றான்; **பற்றி**—(வெண்ணெய்களவில்) பிடிபட்டு, **உரலிடை**—உரலிலே, **ஆப்புமுண்டான்** — கட்டுப்படவும் பெற்றான்; (எளிமையின் எல்லைநிலமான இச்செயல்கள்) **பாவிகாள்**—கு$_3$ணத்தையும் குற்றமாகக் கொள்ளும் பாவிகளே! **உங்களுக்கு** — உங்களுக்கு, **ஏச்சுக்கொலோ**—தூ$_3$ஷணத்துக்கோ உறுப்பாயிற்று? (இதுவரையில் நீங்கள் இழிவாகச் சொன்னவை நிற்க; இனியாகிலும்) **கற்றன பேசி வசவு உணாதே**—நீங்கள் கற்ற கல்விகளைப் பேசி

---

மாலை சூடும்போது அவன் தனியே நில்லாமல் நானும் கூட நின்று வெற்றிமாலை சூடும்படியாக என்னை அங்கு கொண்டு போய்ச் சேருங்கள் என்றும் கருத்துரைக்கலாம். 7.

---

வீராபி$_4$ஷேகம் அபி$_4$மந்யுவினது; விஜயாபி$_4$ஷேகம் அர்ஜுனனது, அபி$_4$மந்யுவிற்கு விஜயாபி$_4$ஷேகமில்லையிறே. 7.

(என்னிடத்தில்) வசவு கேட்டுக்கொள்ளாமல், **காலிகள் உய்ய மழை தடுத்து**—பசுக்கள் பிழைக்கும்படி பெருமழையைத் தடைசெய்து, **கொற்றக் குடை ஆக**—வெற்றிக் குடையாக [குறையற்ற குடையாக] **ஏந்தி நின்ற**—(கண்ணபிரானால்) த$_4$ரிக்கப்பட்ட, **கோவர்த்தனத்து**—கோ$_3$வர்த்த$_4$ன மலையினருகே, **என்னை உய்த்திடுமின்**—என்னைக் கொண்டுபோய்ச் சேர்த்து விடுங்கள்.

**வ்யா:— எட்டாம் பாட்டு.** a (கற்றினமித்யாதி$_3$) **"கெடுவாய்! நீ இங்ஙனே கிடந்து படாநிற்கிறதென்?. பசுக்களை மேய்க்கை நித்யஸூரிகளுக்கு ஓலக்கம் கொடுத்ததென்னலாம்படி கன்றுகளின் பின்னே அவற்றினுடைய ரக்ஷணத்துக்காகத் திரிவானொரு பா$_3$லனுமாய், ஓரூரிலே தங்குகையுமின்றிக்கே பசுக்களுக்கு நீரும் புல்லுமுள்ளவிடத்தே**

8. *அவ:—* அவனுடைய கு$_3$ணங்களை தோ$_3$ஷங்களாக ஏறிட்டு என்னிடம் வசவு கேட்காமல் அவன் குன்றெடுத்து ஆநிரைகாத்த கோ$_3$வர்த்த$_4$நத்துக்கு என்னைக்கொண்டுபோய்ச் சேருங்கள் என்கிறாள். இவள் படுகிற பாட்டைக்கண்டு அவனிடம் தோ$_3$ஷங்களை ஏறிட்டாலாவது இவள் தன் ஈடுபாட்டை விட்டுவிடுவாள் என்று நினைத்து அருகிலுள்ளார் அவனிடம் தோ$_3$ஷங்களைச்சொல்ல, அவர்களைப் பார்த்து இவள் சொல்லும் பதிலாயிருக்கிறது இப்பாட்டு.

*வ்யா:— (கற்றினம் மேய்க்கவும் மேய்க்கப் பெற்றான் காடுவாழ் சாதியுமாகப் பெற்றான் பற்றி உரலிடை யாப்புமுண்டான்)* "கெடுவாய்! இவனிடம் ஈடுபட்டு நீ இப்படி எதற்காகப் படாதன படுகிறாய்? நித்யஸூரிகள் ஸபைக்குத் தலைமை வகிப்பதுபோல் எண்ணிக்கொண்டு பசுக்களை மேய்க்கிறவனாய், கன்றுகளின் பின்னே அவற்றை ரக்ஷிப்பதற்காகத் திரிகின்ற சிறுவனல்லவோ இவன். ஓர் ஊரிலே நிரந்தரமாகத் தங்காமல் பசுக்களுக்கு நீரும் புல்லும் நிறைந்திருக்கும் காடுகளைத் தேடிச்

எட்டாம் பாட்டு. (கற்றினமித்யாதி$_3$) a "மேய்க்கவும்" மேய்க்கிலும். b கற்றினம் மேய்க்கை தொடக்கமானவை



**தங்குவானொருத்தனாய். எளியராயிருப்பார் செய்வுத்தைச் செய்து எளிய த்$_3$ரவ்யங்களை பு$_4$ஜித்து இப்படி திரிவானொருவன்காண்! அவனைப் பெறுகைக்கோ நீ இப்படி படுகிறது" என்ன;** (கற்றினமித்யாதி$_3$) **b வானிளவரசாயிருக்குமவன் " திவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி" என்கிறபடியே பசுக்களை மேய்க்கையையுகந்தான்; c அதுதன்னிலும் ஸ்வரக்ஷணத்தில் அந்வயமில்லாத கன்றுகளை மேய்க்கையே மிகவும் பெருப்பேறு பெற்றானாக நினைத்திருந்தான்; இவனுக்கொரு ஜந்மமில்லைகாணென்னும் d இழவுதீரப் பசுக்க**

சென்று ஒரு நாளைக்கு ஒரு காட்டில் தங்கும் சாதியைச் சேர்ந்தவனன்றோ இவன். சாதி, செல்வம் முதலானவற்றில் தாழ்ந்தவர்கள் செய்யும் மாடுமேய்க்கும் தொழிலைச் செய்ததோடல்லாமல், வெண்ணெய் திருடுவது முதலான எளிய செயல்களைச் செய்து அந்த எளிய உணவுகளையுண்டு இப்படித் திரிகிறவனன்றோ இவன். இவனைப் பெறுவதற்கோ நீ இவ்வளவு பாடுபடுவது?" என்று அருகுநிற்பவர்கள் கூற, அவர்கள் சொல்லுவதை அனுவதித்துப் பதில் சொல்லுகிறாள்—*(கற்றினம் மேய்க்கவும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ் சாதியுமாகப்பெற்றான்)* "வானிளவரசு' . [பெரியாழ். திரு 3-6-3] என்கிறபடியே நித்யஸூரிகளால் ரக்ஷிக்கப்படும் இளவரசனாயிருப்பவன் "திவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி செங்கனிவாயெங்கள் ஆயர்தேவே" [திருவாய் 10-3-10] என்கிறபடியே திருவாய்ப்பாடியிலே அவதரித்து, பசுக்களை மேய்ப்பதைப் பரமபதத்தைக் காட்டிலும் உகந்தான். "கன்றுமேய்த்தினிதுகந்த காளாய்"[திருநெடு 16] என்கிறபடியே பசுக்களைப்போலே ஓரளவுக்குத் தங்களை ரக்ஷித்துக்கொள்ளவும் தெரியாத கன்றுகளை மேய்ப்பதாலேயே மிகவும் பெருப்பேறு பெற்றதாக நினைத்திருந்தான். 'பரமபத$_3$த்தில் ஒருதான்தோன்றியாய், பிறப்பினால் வந்த ஏற்றமில்லாதவனாயிருக்

ஏச்சாகையன்றிக்கே கு$_3$ணாதி$_4$க்யத்துக்கு உடலாக அருளிச்செய்கிறார் (வானிளவரசித்யாதி$_3$) c "கன்றுமேய்த்தினிதுகந்த" என்றத்தைப்பற்ற (கன்றுகளை மேய்க்கையே மிகவும் பெருப்பேறித்யாதி$_3$) d. (இழவுதீர) "ஜந்மமில்லை

ளுக்குப் புல்லும் தண்ணீருமுள்ள காட்டைத்தேடி அங்கே தங்கும்படியான ஜன்மமாகவும் பெற்ருன்.

(பற்றியித்யாதி3) வெண்ணெயைத் தனக்கு த4ாரகமாகக்கொண்டு அதுதானும் நேர்கொடு நேர்கிடையாமே களவுகண்டு பு4ஜிக்கப்புக்கு, அதுவும் தலைக்கட்டமாட்டாமே ஓரப3லை கையிலகப்பட்டு, அவள் வரவிழுத்து ஒன்ருேடே கட்டக்கட்டுண்டு. 222. "संसारबन्धस्थितिमोक्षहेतुः" (ஸம்ஸாரப3ந்த4 ஸ்தி2திமோக்ஷஹேது)வான தான் ப்ரதிக்ரியை பண்ணமாட்டாதே நின்ருன். ⊖ சக்ரவர்த்தித் திருமகன்

---

கிருன்' என்னும் குறைதீர, பசுக்களுக்குப் புல்லும் தண்ணீருமுள்ள காட்டைத் தேடி அங்கு தங்கும்படியான பிறப்பையும் பெற்றிருக்கிருன். இவையெல்லாம் இப்படி கு3ணமாயிருக்க இவற்றை தே3ாஷமாக்குவதே!

*(பற்றி உரலிடை ஆப்புமுண்டான்)* முன்சொன்னவற்றைக் காட்டிலும் மஹாகு3ணமான இதையுமா தே3ாஷமாக்குவது? அன்புடையவர்கள் தொட்ட வெண்ணெயைத் தனக்கு உயிர் தரிக்கும் உணவாகக்கொண்டு அவ்வுணவு நேரே கிடைக்காமையாலே அதைத் திருடி உண்ணப்புகுந்து, அதையும் உண்டுமுடிக்க முடியாமல் ஒரு பெண்பிள்ளை கையிலே அகப்பட்டு அவள் இவனைப் பிடித்திழுத்து ஓர் உரலோடே கட்டக்கட்டுண்டு,

222. ப்ரதா4நக்ஷேத்ரஜ்ஞபதிர் கு3ணேஶ:
ஸம்ஸாரப3ந்த4ஸ்தி2தி மோக்ஷஹேது: [ஶ்வே 6-16]

[ப்ரக்ருதிக்கும், ஜீவனுக்கும் ஸ்வாமியாய், கு3ணங்கள் நிறைந்தவனுய், ஸம்ஸாரக்கட்டு நிலைநிற்பதற்கும் விடுபடுவதற்கும் காரணமாயிருப்பவன் பரமாத்மாவே.] என்கிறபடியே ஜீவர்கள் ஸம்ஸாரத்தில் கட்டப்படுவதற்கும் விடுபடுவதற்கும் காரணமான தான் அந்த உரலிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள இயலாதே நின்ருன். இதையா நீங்கள் தே3ாஷமாகச் சொல்லுவது? ஸ்ரீராமபிரான் காட்டுக்குச்சென்ற

---

தான்தோன்றி" என்கிற இழவுதீர. ⊖ கட்டுண்டது கு3ணமானபடி எப்படியென்ன அருளிச்செய்கிருர் (சக்ரவர்த்தித்



காடேறப் போனவிடத்திலே பிதாவாலே உபேக்ஷிக்கப்பட்டானென்று உகவாதார்க்குச் சொல்லலாயிருப்பதொன்றுண்டிறே; அதுவுமில்லையாய்த்து இவனுக்கு. (பாவிகாள்) மஹாபாபத்தைப் பண்ணினிகோளோ? (உங்களுக்கு ஏச்சுக்கொலோ) உங்களுக்கு கு3ணமே குற்றமாகைக்கு நீங்கள் ஶிஶுபாலன் பிறந்த முஹூர்த்தத்திலேயோ பிறந்தது? f எங்கள் வர்க்க3த்திலுள்ளார் "எத்திறம்" என்னுமது உங்களுக்கு ஏச்சுக்குடலாவதே!

(கற்றன) நீங்கள் உங்களுக்கு ப்ரதிபந்நங்களைச் சொல்லி என் வாயாலே தக்கன கேளாதே. பண்ணின உபகாரமறியாத பசுக்களும் தத்ப்ராயரான இடையரும் உஜ்ஜீவிக்கும்படி மழையால் வந்த நலிவைப் பரிஹரிக்கைக்

---

விடத்திலே அவனுக்கு வேண்டாதவர்களால் "தந்தையால் நாட்டைவிட்டுக் காட்டுக்கு விரட்டப்பட்டவன்" என்று குறை சொல்லவாவது இடமிருந்தது. அதுவுமில்லையே இவன் விஷயத்தில். *(பாவிகாள்)* எத்தகைய மஹாபாபத்தைப் பண்ணினீர்களோ இப்படி கு3ணத்தையும் தே3ாஷமாக ஏறிடுவதற்கு? *(உங்களுக்கு ஏச்சுக் கொலோ)* உங்களுக்கு கு3ணமே குற்றமாகத் தோன்றுவதைப்பார்த்தால் நீங்கள் சிசுபாலன் பிறந்த முஹூர்த்தத்தில் பிறந்திருப்பதாகத் தோன்றுகிறதே. எங்கள் குடியிலே பிறந்தவர்கள் "எத்திறம்" [திருவாய் 1-3-1] என்று இந்த மஹாகு3ணத்தைக்கண்டு மயங்காநிற்க, உங்களுக்கு இதுவே ஏச்சுக்குக் காரணமாவதே!

*(கற்றனபேசி வசவுணுதே காலிகளுய்ய மழைதடுத்துக் கொற்றக் குடையாக ஏந்தி நின்ற)* இவனை வைவதற்காக நீங்கள் கற்ற வித்தைகளெல்லாம் கொண்டு தோன்றினதையெல்லாம் சொல்லி உங்கள் வசவுகளுக்கு என்வாயாலே பதில் வசவைக் கேட்கவிராதீர்கள். பண்ணின உதவியையும் அறி

---

திருமகனித்யாதி3) f "உங்களுக்கு ஏச்சுக்கொலோ" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் (எங்கள் வர்க்க3த்திலுள்ளாரித்யாதி3)

காக மலையையெடுத்துப் பிடித்துக்கொண்டு நின்றானாய்த்து; தன்னைப்பேணாதே பரரக்ஷணம் பண்ணுமிதுவே யாத்ரையா யிருப்பானொருவன். (காலிகளித்யாதி$_3$) தலைக்காவலாக வைத்த இந்த்$_3$ரன்தானே பா$_3$த$_4$கனாக, அவனால் வந்த நலிவைப் பரிஹரிக்கைக்காக ரக்ஷணத்துக்கு (பரிகரமாகக் கொண்டு) அவன் கோ$_3$வர்த்த$_4$நத்தை த$_4$ரித்துக்கொண்டு நின்றான்; அவன் தனியேநில்லாமே நானும் ஒருதலை தாங்கும்படி என்னை அங்கே கொடுபோய்ப் பொகடப்பாருங்கோள். 8.

## பன்னிரண்டாம் திருமொழி—ஒன்பதாம் பாட்டு

**கூட்டி லிருந்து கிளிஎப்போதும்**
**கோவிந்தா! கோவிந்தா! என்றழைக்கும்**
**ஊட்டக் கொடாது செறுப்பனாகில்**
**உலகளந் தான்!என்று உயரக்கூவும்**
**நாட்டில் தலைப்பழி யெய்திஉங்கள்**
**நன்மை யிழந்து தலையிடாதே**
**சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்துதோன்றும்**
**துவரா பதிக்கென்னை யுய்த்திடுமின்.**

---

யாத பசுக்களும் அவற்றைப்போன்ற இடையரும் வாழ்ந்து போகும்படி மழையால் அவர்களுக்கு வந்த துன்பத்தைப் போக்குவதற்காக அருகிலிருந்த மலையை எடுத்துக் குடையாகப் பிடித்துக்கொண்டிருந்தவனன்றோ இவன்; தன்சிரமத்தைப் பாராமல் பிறரை ரக்ஷிப்பதையே த$_4$ாரகமாக இருப்பவனன்றோ இவன்! *(காலிகளுய்ய மழைதடுத்துக் கொற்றக்குடையாக ஏந்தி நின்ற கோவர்த்தனத்தென்னை உய்த்திடுமின்)* மூவுலகுக்கும் காவல் தலைவனாக வைத்த இந்திரனே இவர்களைத் துன்புறுத்தத் தொடங்க, அவனால் வந்த துன்பத்தைப் போக்குவதற்காக அவர்களை ரக்ஷிப்பதற்கு, அருகிலிருந்து கோ$_3$வர்த்த$_4$ன மலையையே மழையைத்தடுக்கும் குடையாகக் கொண்டு த$_4$ரித்து நின்றான். அவன் தனியே நின்று அம்மலையைத் தாங்காமல், நானும் ஒருகை கொடுத்துத் தாங்கும்படி என்னை அங்கு கொண்டுபோய்ச் சேருங்கள். 8.



பதவுரை:— **கிளி** — (நான் வளர்த்த) கிளியானது, **கூட்டில் இருந்து**—கூட்டில் இருந்துகொண்டு, **எப்போதும்**—எல்லாக் காலமும், **கோவிந்தா கோவிந்தா என்று அழைக்கும்**—கோவிந்தா கோவிந்தா என்று கூவாநின்றது; **ஊட்ட கொடாது**—உணவு கொடாமல் (பட்டினி கிடக்கும்படி), **செறுப்பன் ஆகில்** — துன்பப்படுத்தினேனாகில், **உலகு அளந்தான் என்று** — உலகளந்த பெருமானே! என்று, **உயர கூவும்**—உரக்கக் கூவாநின்றது! (இந்தத் திருநாமங்கள் என்காதில் விழும் போதே நான் மோஹித்து விழாநின்றேன்; ஆகையால்), **நாட்டில்** — இவ்வுலகில், **தலை பழி எய்தி** — பெருத்த அபவாத$_3$த்தைச் சம்பாதித்து, **உங்கள் நன்மை இழந்து** — உங்களுடைய நல்லபேரைக் கெடுத்துக்கொண்டு, **தலை இடாதே**—(பிறகு ஒருவரையும் முகம் நோக்கமாட்டாமல்) தலை கவிழ்ந்து நிற்கவேண்டாதபடி, **சூடு உயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும்**—தலையுயர்ந்த மாடங்களால் சூழப்பட்டு விளங்குகின்ற, **துவராபதிக்கு**—த்$_3$வாரகையிலே, **என்னை உய்த்திடுமின்** — என்னைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுங்கள்.

வ்யா:— (கூட்டிலித்யாதி$_3$) இவள் விரஹத்தாலே த$_4$ரிப்பற்று நோவுபடுகிற ஸமயத்திலே, வளர்த்த கிளியானது முன்பு கற்பித்துவைத்த திருநாமத்தை, இவளுக்கு ஸாத்மியாத த$_3$சையிலே சொல்லிக்கொண்டு அங்கே

---

9. *அவ:*— உங்களுக்குப் பழிவராமலிருக்கவேண்டுமானால் என்னை த்$_3$வாரகைக்குக் கொண்டுபோய்ச்சேருங்கள் என்கிறாள்.

*வ்யா:— (கூட்டிலிருந்து கிளி எப்போதும் கோவிந்தா கோவிந்தா என்று அழைக்கும்)* இவள் எம்பெருமானைப்பிரிந்து உயிர்த$_4$ரிக்கமாட்டாமல் துன்புறுகிறபோது, இவள் வளர்த்த கிளியானது இவள் அதற்கு முன்பு கற்பித்துவைத்த திருநாமங்களை இவளுக்கு அவை கேட்கப்பொறாத இந்நிலையில் சொல்லிக்கொண்டு அங்குமிங்கும் திரியத்தொடங்கிற்று. "இது

யிங்கே திரியத்தொடங்கிற்று; "இதுதான் ஸ்வைரமாக
ஸஞ்சரிக்கும்போதன்றோ நம்மை நலிகிறது" என்று பார்த்
துக் கூட்டிலே பிடித்து அடைத்தாள்; அங்கேயிருந்து
"கோவிந்தா கோவிந்தா" என்னத் தொடங்கிற்று.
(கோவிந்தா கோவிந்தா) a நாராயணாதி$_3$ நாமங்களும் உண்
டிறே; b இவள்தான் "நாராயணனே நமக்கே பறைதரு
வான்" என்று c கற்பித்துவைக்குமிறே; அது மர்ம
மறிந்து உயிர்நிலையிலே நலியாநின்றது. இவன்தான், பசுக்
களை விட்டுக்கொண்டு தன்னைப்பேணாதே அவற்றினுடைய
ரக்ஷணத்துக்காக அவற்றின் பின்னேபோம் தனிமையிலே

---

தான் இஷ்டப்படி திரிவதாலன்றோ திருநாமம் சொல்லி
நம்மைத் துன்புறுத்துகிறது" என்று எண்ணிக் கிளியைப்
பிடித்துக் கூட்டிலே அடைத்தாள். அங்கேயிருந்துகொண்டு
"கோ$_3$விந்த$_3$ா கோ$_3$விந்த$_3$ா" என்று கூவத்தொடங்கிற்று.
*(கோவிந்தா கோவிந்தா)* நாராயணன் முதலான நாமங்களும்
உண்டே அவனுக்கு; இவளும் "நாராயணனே நமக்கே பறை
தருவான்" [திருப்பாவை 1] என்று நாராயண நாமத்தைக்
கற்பித்து வைப்பாளன்றோ. பரத்வத்தைச் சொல்லும் அந்த
நாமங்களில் ஒன்றை அது சொல்லவில்லை; ஸௌலப்$_4$ய
ஸௌசீல்யங்களைக் காட்டும் இந்த நாமத்துக்கே இவள் ஈடு
படுவாள் என்னும் மர்மமறிந்து கோ$_3$விந்த$_3$ நாமத்தைப் பல
கால் சொல்லி இவளுடைய உயிர்நிலையைத் துன்புறுத்தத்
தொடங்கிற்று. இக்கண்ணன் "கோ$_3$விந்த$_3$ன்" [பசுக்களை
அடைபவன்] என்னும் தன் பெயருக்கேற்ப, பசுக்களை
மேயவிட்டுத் தன்னைப் பேணிக்கொண்டிராமல் பசுக்களின்
ரக்ஷணத்துக்காக அவற்றின் பின்னே செல்லும் தனிமை
யிலேயேயாயிற்று இவள் நெஞ்சுருகிக் கிடப்பள். இப்போது

---

ஒன்பதாம் பாட்டு. (கூட்டிலித்யாதி$_3$) a (நாமங்களு
முண்டிறே) "அத்தைச் சொல்லவில்லை" என்று பூரிப்
பது. b அத்தைச் சொல்ல அறியுமோவென்ன அருளிச்
செய்கிறார் (இவள்தான் இத்யாதி$_3$) c (கற்பித்து வைக்குமிறே)



யாய்த்து இவள்தான் நெஞ்சுருகிக் கிடப்பது; இப்போது
அந்த மர்மமறிந்து சொல்லாநின்றதாய்த்து.

"இது சோற்றுச் செருக்காலேயிறே இப்படிச் சொல்லு
கிறது. அத்தைக் குறைக்கவே தவிருகிறது" என்று பட்டி
னியே விட்டுவைத்தாள்; "ஊணடங்க வீணடங்கும்"
என்றிறே இவள் நினைவு. விண்ணப்பம் செய்வார்கள் மிடற்
றுக்கு எண்ணெயிட்டுப் பட்டினிவிட்டு மிடற்றில் கனமாற்றிப்
பாடுமாபோலே. உயரப்பாடுகைக்கு உடலாய்விட்டது.
அவன் திருவடிகளைப் பரப்பினவிடமெங்கும் இது த்$_4$வநி
யைப் பரப்பாநின்றது. d க்ருஷ்ணாவதாரத்தை விட்டு அவ்

---

அந்த மர்மமறிந்து கோவிந்தநாமத்தைச் சொல்லாநின்ற.
தாயிற்று.

*(ஊட்டக்கொடாது செறுப்பனாகில் உலகளந்தான் என்று உய
ரக் கூவும்)* அதற்கு உணவுகொடாமல் பட்டினிபோட்டுத் துன்
புறுத்தினால், "உலகளந்த பெருமானே" என்று உரக்கக்கூவா
நின்றது. கோவிந்தநாமத்தைச் சொன்னவுடன் "இது வயிறார
உண்ட கொழுப்பாலேயே இப்படித் திருநாமம் சொல்லி
நம்மைத் துன்புறுத்துகிறது. உணவைக் குறைத்தால் திருநாமம்
சொல்லாமலிருக்கும்" என்று அக்கிளியைப் பட்டினி போட்
டாள். "ஊணடங்க வீணடங்கும்" என்னும் உலகவழக்கை
நினைத்து இப்படிச் செய்தாள். ஆனால் இது நேர் விபரீதமா
யிற்று. அரையர்கள் அத்$_4$யயனோத்ஸவத்தின்போது கழுத்
துக்கு எண்ணெயிட்டு, பட்டினி கிடந்து, தொண்டையை
லேசாக்கிப் பாடுவதுபோலே உரக்கப்பாடுவதற்குக் காரணமாய்
விட்டது. *(உயரக்கூவும்)* அவன் மேலே திருவடிகளைப்
பரப்பின இடமெல்லாம் இது தன் குரலைப் பரப்பத்தொடங்
கிற்று. கோ$_3$விந்த நாமமொழியச் சொல்லாதது க்ருஷ்ணாவ
தாரத்தை விட்டு வேறோரவதாரத்துக்குப் போகும்போதும்

---

"அத்தைத் தவிர்ந்து" என்று கூட்டிக்கொள்வது.
d கோவிந்தனையொழியச் சொல்லாதது வாமனனைச் சொல்லு

வருகே போந்ததாகில் அத்தோடு போலியான ஸ்ரீவாமநாவதாரத்தைச் சொல்லியாய்த்து நலிவது.

(நாட்டிலித்யாதி,) நாட்டிலே தலையான பழியை ப்ராபித்து. "நாட்டார்க்கு து,:க்க,நிவர்த்தகமாய் நமக்கு தா,ரகமான திருநாமம் இவளுக்கு மோஹஹேதுவாகா நின்றது. இது என்னுய்த் தலைக்கட்டக் கடவதோ!" என்று நாட்டிலே தலையாயிருப்பதொரு பழியை ப்ராபித்து. (உங்கள் நன்மையிழந்து e தலையிடாதே) "அவன் தானே வருமளவும் பார்த்திருந்திலள். இவள் தானே போவதாக வொருப்பட்டாள்" என்று உங்கள் நன்மையையிழந்து f கவிழ்தலையிடாதே.

---

க்ருஷ்ணவதாரத்தைப் பலவகையிலும் ஒத்ததான ஸ்ரீவாமனாவதாரத்தைச்சொல்லி நான் மயங்கும்படி என்னைத் துன்புறுத்திற்று.

*(நாட்டில் தலைப்பழி எய்தி)* நாட்டிலே பெருத்ததான பழியை அடைந்து. "உலகில் உள்ள மற்றவர்களுக்குத் துன்பத்தைப் போக்கடிப்பதாய். நம்மையெல்லாம் உயிர்த,ரிக்கச் செய்வதான திருநாமம் இவளுக்கு மயக்கத்தை விளைக்கின்றது; இது எதுவாய் முடியப்போகிறதோ!" என்று நாட்டிலே பெருத்த பழியை அடைந்து. *(உங்கள் நன்மை இழந்து தலையிடாதே)* உங்கள் நல்ல பெயரைக் கெடுத்துக்கொண்டு தலைகவிழ்ந்து நிற்கவேண்டாதபடி "தன் ஸ்வரூபத்துக்குச்சேர அவள் தானே வரும் வரையில் காத்திராமல் இவள் தானே நாயகன் இருக்குமிடம் செல்லத் தொடங்கினாள்" என்னும் பழி ஏற்பட்டு, உங்கள் குடிப்பெருமையையிழந்து தலைகவிழ்ந்து நிற்கவேண்டாதபடி. "தலையிடாதே" என்றது எவரையும் முகம் நோக்க முடியாதபடி லஜ்ஜையாலே தலைகவிழ்ந்து கிடப்பதைச் சொல்லுகிறது.

---

வானென்னென்ன அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணவதாரத்தை இத்யாதி,).

e,f "தலைவிடாதே" - லஜ்ஜித்துக் கவிழ்தலையிடாதே. g,h "சூட்டு" என்று லக்ஷணையாலே நெற்றியாய், மேல்



g (சூட்டித்யாதி,) h நெற்றிகள் உயர்ந்து தோன்றுநின்றுள்ள மாடங்களால் சூழ்ந்து தோன்றுநின்றுள்ள ஸ்ரீமத்,த,வாரகையிலே கொடுபோய்ப் பொகடுங்கோள். பதினாறுயிரத்தொரு மாளிகையாகவெடுத்து, i என்னை அதிலே வைத்து. அவன் அவர்களோடொக்க அநுப,விக்கும்படியாக, என்னை அங்கே கொடுபோய்ப் பொகடுங்கோள். 9.

## பன்னிரண்டாம் திருமொழி — பத்தாம் பாட்டு

மன்னு மதுரை தொடக்கமாக
வண்துவ ராபதி தன்னளவும்
தன்னைத் தமருய்த்துப் பெய்யவேண்டித்
தாழ்குழ லாள்துணிந் ததுணிவைப்
பொன்னியல் மாடம் பொலிந்துதோன்றும்
புதுவையர் கோன்விட்டு சித்தன்கோதை
இன்னிசை யாற்சொன்ன செஞ்சொல்மாலை
ஏத்தவல் லார்க்கிடம் வைகுந்தமே.

---

*(சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்துதோன்றும் துவராபதிக்கென்னை உய்த்திடுமின்)* 'சூட்டு' என்று நெற்றியைச் சொல்லுவதாய், மேல்தளங்களின் கொடுங்கையைச் சொல்லுகிறது. நெற்றிகள் உயர்ந்து விளங்கும் மாடங்களால் சூழ்ந்து தோன்றுகிற சிறப்புடைய த்,வாரகையில் என்னைக் கொண்டு போய்ப் போடுங்கள். அங்கு பதினாறுமாயிரவர் தேவிகளுக்கும் அத்தனை திருமாளிகைகள் இருப்பதுபோலே, எனக்கொரு மாளிகை கட்டி என்னை அதிலே வைத்து அவர்களைப்போலே என்னையும் அவன் அநுப,விக்கலாம்படியாக என்னை த்,வாரகாபுரிக்குக் கொண்டுபோய்ச் சேருங்கள். 9.

---

தளங்களின் கொடுங்கையைச் சொல்லுகிறது. h நெற்றியாலே - உயர்ந்த புலிமுகத்தாலே. (உயர்ந்த நெற்றி)- புலிமுகம். i (என்னை அதிலே வைத்தவன்) என்றது - முன்பே வைத்தவன் என்றபடி. 9.

**பதவுரை:— தாழ் குழலாள்**—தாழ்ந்த கூந்தலையுடையளாய், **பொன் இயல் மாடம் பொலிந்து தோன்றும் புதுவையர் கோன் விட்டுசித்தன் கோதை** — பொன் மயமான மாடங்களினால் விளங்கித்தோன்றுகின்ற ஸ்ரீவில்லி புத்தூரிலுள்ளார்க்குத் தலைவராகிய பெரியாழ்வாருடைய (திருமகளான) ஆண்டாள், **மன்னு மதுரை தொடக்கம் ஆக வண் துவராபதி தன் அளவும்**—ஸ்ரீமதுரை முதற்கொண்டு ஸ்ரீத்3வாரகை வரைக்கும் (சொல்லப்பட்ட) சில தி3வ்ய தே3ஶங்களில். **தன்னை** — ஆண்டாளாகிற தன்னை, **தமர்**— தன் உறவினர், **உய்த்து பெய்ய வேண்டி**—கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டி, **துணிந்த துணிவை**—கொண்ட உறுதி விஷயமாக, **இன் இசையால் சொன்ன**—இனிய இசையுடன் அருளிச்செய்த, **செம் சொல் மாலை** - அழகிய சொல் மாலையாகிய இத்திருமொழியை, **ஏத்தவல்லார்க்கு** - ஓதவல்லவர்களுக்கு, **இடம்**—வாழுமிடம், **வைகுந்தம்**—பரமபத3மேயாம்.

**வ்யா:— நிக3மத்தில்.** (மன்னுமதுரையித்யாதி3) **அவ்வளவு போலே பூ4மியுள்ளது. உ "மதுரைப்புறத்து". என்று**

---

10. *அவ:*— நான் தன்னை தி3வ்யதே3ஶங்களில் கொண்டு போய்ச் சேர்க்கும்படி தன் உறவினர்க்கு உரைத்த உறுதியைச் சொல்லும் இத்திருமொழியை அநுஸந்தி4ப்பவர் அர்ச்சிராதி3 மார்க்க3த்தாலே ஸ்ரீவைகுண்ட2த்தையடைவர் என்று ப2லம் சொல்லித் தலைக்கட்டுகிறாள்.

*வ்யா:— (மன்னு மதுரை தொடக்கமாக வண்துவராபதி தன்னளவும்)* அவன் பிறப்பிடமாய் ப4க3வத் ஸம்ப3ந்த4ம் மாறாத மதுரை முதலாக, அவன் பதினாறுமாயிரம் தே3விகளுக்குத் தன்னைக்கொடுத்த த்3வாரகையளவும். முதற்பாட்டில் "மதுரைப் புறத்து" என்று தொடங்கி, ஒன்பதாம் பாட்டில்

---

நிக3மத்தில். உ " அவ்வருகு பூ4மியில்லை " என்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச்செய்கிறார் (மதுரைப்புறத்து இத்யாதி3)



**தொடங்கி. " துவராபதிக்கு — உய்த்திடுமின் " என்கிறாளிறே. தன்னை உறவுமுறையார் உய்த்துப் பெய்து கொடுபோய்விடவேண்டி.** ( தாழ்குழலாள் துணிந்த துணிவை ) **தன் மயிர்முடியைப் பேணாமையிலே தோற்று அவன் தன் வழிவரும்படியிருக்கிற இவள்தான் துணிந்த துணிவை.**

(பொன்னியல்இத்யாதி3) **ஸ்ரீமத்3த்3வாரகையில் மாளிகையோடொக்குமாய்த்து இவ்வூரும். இனித்தான் பண்மிக்கு**

---

"துவராபதிக்கு என்னை உய்த்திடுமின்" என்னுமளவும் கூறுகிறாளாகையாலே இவளைப் பொறுத்தவரையில், அவனுடைய ஸம்ப3ந்த4ம் பெற்ற தி3வ்யதே3ஶங்கள் அடங்கியதே பூ4மி என்று நினைத்திருக்கிறாள். *(மன்னு மதுரை)* "மன்னு வடமதுரை" [திருப்பாவை 5] என்று திருப்பாவையில் இவளே அருளினாளன்றோ. "ப4க3வத் ஸம்ப3ந்த4ம் மாறாத தே3ஶம். முன்பு ஸித்3தா4ஶ்ரமமாய் ஸ்ரீவாமனன் நெடுங்காலம் தபஸ் பண்ணி, ஶத்ருக்4நாழ்வான் வன்னியமறுத்துப் படைவீடு செய்து, ஸர்வேஶ்வரன் எப்போதும் இப்படி அவதரித்துப் போருவதொரு தே3ஶம்" என்று தொடங்கி திருப்பாவை மூவாயிரப்படியில் அருளிச்செய்தது இங்கு அனுப4விக்கத்தக்கது. *(வண்துவராபதி)* "பதினாறுமாயிரவர் தேவிமார் பார்த்திருப்ப........பொதுவாக உண்பதனை" [நாச். திரு 7-9] என்று பதினாறுயிரம் தேவியர்க்குத் தன்னைக் கொடுத்துக்கொண்டிருக்கும் இடம் என்று இவளே அருளிச்செய்தாளன்றோ. *(தன்னைத் தமருய்த்துப் பெய்ய வேண்டி)* தானே சென்று நடக்கமாட்டாத தன்னை உறவு முறையார் தூக்கியெடுத்துக்கொண்டு போய்விடவேண்டி. *(தாழ்குழலாள் துணிந்த துணிவை)* அவனைப் பெருமையாலே தன் மயிர் முடியைப் பேணி, சீவி முடித்து எடுத்துக்கட்டாமல் தாழ்குழலாளாயிருக்கும் தன்மையிலே தோற்று அவன் தன் வழி வரும்படியாக இவள் கொண்ட உறுதியை

*(பொன்னியல்மாடம் பொலிந்துதோன்றும் புதுவையர்கோன் விட்டுசித்தன் கோதை)* பொன்மயமான மாடங்களினால் விளங்கித் தோன்றுகின்ற ஸ்ரீவில்லிபுத்தூரில் உள்ளவர்களுக்குத் தலைவரான பெரியாழ்வாருடைய திருமகளாரான ஆண்டாள். செல்வம்

b ப4ாவப3ந்த4ம் வழிந்து புறப்பட்ட சொல்லென்று தோன்றி யிருக்கிறவற்றை அப்4யஸிக்கவல்லவர்கள், தனக்குக் கால் நடை தாராத த3ஶையிலே தே3ஶிகரைப் பார்த்து நீங்கள் என்னைக் கொடுபோங்கோள் என்னவேண்டாதே. அவன் அனுமதிப்படியே ஆதிவாஹிகக3ணம் நடத்த அர்ச்சிராதி3 மார்க்க3த்தாலே போய் ஸ்ரீவைகுண்ட2த்திலே அநுப4விக்கப் பெறுவர். 10.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

பன்னிரண்டாம் திருமொழி முற்றிற்று.

---

மிக்க த்3வாரகையில் உள்ள மாளிகைகள் போலேயிருக்கும் மாளிகைகளையுடையது இவ்வூர் என்று கருத்து. (*இன்னிசையால் சொன்ன செஞ்சொல்மாலை ஏத்தவல்லார்க்கு*) இனிய பண்கள் நிறைந்து, அன்புநிறைந்து வழிந்து புறப்பட்ட சொல்லாகையாலே செம்மைமிக்க சொல்மாலையாயிருக்கும் இத்திருமொழியைக் கற்றுச் சொல்ல வல்லவர்களுக்கு. (*இடம் வைகுந்தமே*) பிரிவுத்துன்பத்தாலே தனக்குக் கால் நடக்கமுடியாத நிலையிலே, தனக்கு வேண்டியவர்களைப் பார்த்து "என்னை நீங்கள் அவனுகந்த தே3ஶங்களுக்குக் கொண்டுபோய்ச் சேருங்கள்" என்று இவளைப்போல் சொல்லவேண்டாதபடி, அவனால் அனுமதிக்கப்பெற்ற ஆதிவாஹிகர் கூட்டம் அழைத்துச்செல்ல, அர்ச்சிராதி3மார்க்க3த்தாலே சென்று ஸ்ரீவைகுண்ட2த்திலே அவனையும் அவனடியார்களையும் அனுப4விக்கப்பெறுவர். 10.

ஆண்டாள் திருவடிகளே ஶரணம்

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்

பன்னிரண்டாம் திருமொழி விவரணம் முற்றிற்று.

---

b சொல்லுக்குச் செம்மை - ப4ாவப3ந்த4த்தோடே சொல்லுகை. 10.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.



## பதின்மூன்றும் திருமொழி

## கண்ணனென்னும் — ப்ரவேஶம்

அவ— aஇவள் த3ஶையை அநுஸந்தி4த்தார்க்குக் கால் நடை தந்து போகலாம்படியாயிராதிறே; வருந்திப்போனார்களேயாகிலும் இவளை ஒரு கட்டணத்திலே கிடக்கலாம்படி bபண்ணிக்கொடு போகவும்வேணுமே; cஎன்த3ஶையையறிந்து பரிஹரிக்கப் பார்த்திகோளாகில் அங்கே ஸ்பர்ஶமுள்ள

---

## பதின்மூன்றும் திருமொழி—வ்யாக்யான விவரணம்

### கண்ணனென்னும் ப்ரவேஶ விவரணம்

சென்ற திருமொழியில் அவன் உகந்த வடமதுரை முதலான இடங்களுக்குத் தன்னைக் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டும் என்று தாய்மார் முதலானாரை வேண்டினாள், இவள் படும் பாட்டைக் கண்டு அனுஸந்தி4க்குமவர்களுக்கு இவளை அழைத்துச் செல்லுமளவுக்குக் காலில் ப3லமிருக்காதன்றோ; சிரமப்பட்டுப் போகநினைத்தாலும், இவளை ஒரு படுக்கையிலே கிடக்க வைத்துத் தூக்கிக்கொண்டு போகவேண்டுமே; அப்படித் தூக்கிக்கொண்டுபோக நினைத்தாலும், போய்ச் சேருமளவும் இவள் உயிர் த4ரித்து நிற்கும் என்று சொல்லமுடியாது. ஆகையால் அவர்கள் இவளைக் கொண்டுசெல்லத் தயங்கினார்கள். அப்போது அவர்களைப்பார்த்து இவள் "அவனைப்பிரிந்து நான் படும்பாட்டை அறிந்து என்னை உயிர்த4ரிக்கச் செய்யவேண்டுமென்று எண்ணினீர்களேயானால், அவன் திருமேனியோடு தொடர்புள்ளதொன்றைக் கொண்டுவந்து அதற்கு என்னோடு

---

அரு:— ...ணன் ப்ரவேஶே, aகீழில் திருமொழியிலே— அவன் ஸம்ப3ந்த4முள்ள தே3ஶத்திலே கொடுபோங்கோளென்றவள், இத்திருமொழியிலே "வாட்டம் தணிய வீசீர்" என்றதுக்குக் கருத்தென்னென்ன அருளிச்செய்கிறார் (இவள் த3ஶையையித்யாதி3) b, c (பண்ணிக் கொடு போகவும் வேணுமே) "அத்தாலே அவர்கள் கொடுபோகாநிற்க, அவர்களைப்பார்த்து (என் த3ஶையையறிந்து)"

தொன்றைக் கொடுவந்து என்னை ஸ்பர்ஶிப்பித்து என் ஸத்தையை நோக்கப்பாருங்கோளென்கிறாள்.

d "நீதான் மெய்யே நோவுபட்டாயோ? e இப்படி நோவு படக்கடவதோ? உன் குடியை நோக்கவேண்டாவோ? அவனுக்கு வரும் பழியைப் பரிஹரிக்கவேண்டாவோ?" என்ன, "நீங்கள் f ஒரு ப்ரயோஜநத்துக்காகச் சொல்லும் வார்த்தை என் த₃ஶைக்குச் சேருவதொன்றல்ல; என்னை உண்டாக்க வேணுமென்னும் நினைவு உங்களுக்குண்டாகில் அவன் பக்கல் உள்ளதொன்றைக் கொடுவந்து என்னை ஸ்பர்ஶிப்பித்து நோக்கப்பாருங்கோள்" என்கிறாள்.

---

தொடர்பை ஏற்படுத்தி என் உயிர் போகாமல் காக்க முயலுங்கள்'' என்கிறாள் இத்திருமொழியில்.

இவள் நிலையைக்கண்ட தாய்மார் முதலானோர் "கண்ணனைக் காண்பதிலேயே போதுபோக்கும் நீ உண்மையில் துன்பப்பட முடியுமோ? பிரிவினால் துன்புற்றாலும் இப்படி உயிர்த₄ரிக்க முடியாதபடி துன்புறலாமா? அவன் வரப் பார்த்திருக்கும் உன் குலப்பண்பை நீ பாதுகாக்கவேண்டாமா? 'இவளை இப்படித் துடிக்கவிட்டான்' என்று அவனுக்கு விளையும் பழியை நீ தவிர்க்கவேண்டாமா'' என்று இவளை வினவ, "நீங்கள் உங்கள் குடிக்கு விளையும் பழியை நீக்குவதற்காகச் சொல்லும் வார்த்தை அவனைப் பெற்றல்லது த₄ரிக்கமுடியாத என்னுடைய ப்ராப்யத்வரைக்குப் பொருந்தியதல்ல; என்னை அழியாமல் காக்கவேண்டும் என்னும் எண்ணம் உங்களுக்கு இருந்ததாகில் அவனுடைய திருமேனி ஸம்ப₃ந்த₄ம் பெற்றதொரு பொருளைக் கொண்டுவந்து அதைக்கொண்டு என்னைத் தொடச்செய்து என்னைப் பாதுகாக்கப் பாருங்கள்'' என்று கூறுகிறாள் இத்திருமொழியில்.

---

என்று கூட்டி நிர்வஹிப்பது, d "காட்சிப்பழகிக்கிடப்பேனை'' என்றத்தைக் கடாக்ஷித்து (நீதான் மெய்யே நோவு பட்டாயோ) என்றது, e "புண்ணில் புளிப்பெய்தாற்போல" இத்யாதி₃யைப்பற்ற (இப்படி நோவுபடக்கடவதோ) என்றது. f (ஒரு ப்ரயோஜநம்)—பழிபரிஹரிக்கை.



## பதின்மூன்றுந்திருமொழி—முதல் பாட்டு

கண்ண னென்னுங் கருந்தெய்வம் காட்சிப் பழகிக் கிடப்பேனைப்
புண்ணிற் புளிப்பெய் தாற்போலப் புறநின் றழகு பேசாதே
பெண்ணின் வருத்த மறியாத பெருமா னரையிற் பீதக
வண்ண வாடை கொண்டென்னை வாட்டம் தணிய வீசீரே.

பதவுரை:—**கண்ணன் என்னும்**—ஸ்ரீக்ருஷ்ணனென்கிற, **கரு தெய்வம்**-கரியதொரு பரதே₃வதையினுடைய, **காட்சி**—காட்சியிலே, **பழகிக் கிடப்பேனை**—பழகிக்கிடக்கிற என்னைக் குறித்து, (ஓ தாய்மார்களே! நீங்கள்) **புறம் நின்று**—வேறாக இருந்துகொண்டு. **புண்ணில் புளி பெய்தால்போல**—புண்ணில் புளி ரஸத்தைச் சொரிந்தாற்போல், **அழகு பேசாதே**—நன்மை சொல்வதைத் தவிர்ந்து. **பெண்ணின் வருத்தம் அறியாத பெருமான் அரையில்**—பெண் பிறந்தாருடைய வருத்தத்தை அறியாதவனான கண்ணபிரானுடைய திருவரையில் சாத்திய, **பீதக வண்ண ஆடை கொண்டு**—பீதாம்ப₃ரத்தைக்கொண்டு வந்து, **வாட்டம் தணிய**—(என்னுடைய) விரஹதாபம் தீரும்படி. **என்னை வீசீர்**—என்மேல் வீசுங்கள்.

வ்யா:— g(கண்ணனென்னும் கருந்த₃தெய்வம்) h"க்ருஷ்ணன்'' என்றால் தன்னை உகப்பார்க்கு இஷ்டவிநியோக₃ார்ஹமாக்கி வைக்குமென்றிறே h₂ ப்ரஸித்₃தி₄; இப்போது அது

---

1. அவ:—அவன் திருவரையில் சாத்திய பீதாம்ப₃ரத்தைக் கொண்டுவந்து என் வாட்டம் தணியும்படியாக வீசுங்கள் என்கிறாள்.

வ்யா:— (கண்ணன் என்னும் கரும் தெய்வம்) கண்ணன் என்று பெயர்பெற்ற கொடிய தெய்வம், "கண்ணன்'' என்றால் தன்னை விரும்பினவர்களுக்குத் தன்னைக் கையாளாக்கிவைத்

---

முதற்பாட்டில்:—(கண்ணன் இத்யாதி₃) g...pகண்ணனென்னும் கருந்தெய்வத்துக்கு ப்ரகாரபே₄தே₃ந தாத்பர்யங்கள் அருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனென்றால் இத்யாதி₃

தவிர்ந்து, மநுஷ்யத்வே பரத்வமே ஸித்3தி4த்துவிட்டது. i க்ருஷ்ணனென்றால் $i_2$ நாம் நினைத்திருந்தவை எல்லாம் போய், தான் பிறரைக் கும்பிடுகொள்ளத் தொடங்கினான். j நம்மைப் பெறுகைக்குத் தான் நம்வாசலிலே அவஸர ப்ரதீக்ஷனாய்த் துவளுகையெல்லாம்போய், முகம்தோற்றாமே நின்று வயிறு வளர்த்துப் போவாரோபாதியானான். கால் தறையிலே பாவாதபடி நின்று முகத்தை மாறவைத்து ஹவிஸ்ஸைக் கொண்டுபோம் தேவதைகளோபாதியானான். k க்ருஷ்ணனென்றால் உகப்பார்க்கு ப4வ்யனென்று சொல்லு

---

தவன் என்றல்லவோ உலகில் பிரஸித்3தி4; இப்போது அது மாறி, மனிதனாகப் பிறந்த நிலையிலும் எவர்க்கும் எட்டாத பர தெய்வம் என்றேயாய்விட்டது, "கண்ணன்' என்றால் அன் பினாலே தன் தே3விமாரைக் கும்பிடுபவன் என்றே நினைத்திருந் தோம். இப்போது அந்த ப்ரணயித்வம் எல்லாம் போய் தான் அவர்களைக் கும்பிடுகொள்ளத் தொடங்கினான். 'கண்ணன்" என்றால் அன்புடைய தே3விமார் நோக்குப் பெறுவதற்காக அவர்கள் வாசலிலே சமயம் பார்த்துக்கொண்டு காத்திருப் பவன் என்று நினைத்திருந்தோம். இப்போது அந்நிலைபோய், கண்ணுக்குக் காணாமல் நின்று தங்கள் வயிற்றை நிறைத்துக் கொண்டு போகும் தெய்வங்கள் போல் ஆனான்; இந்த பூ4மியில் கால் படவும் அருவருப்புக்கொண்டு பூ4மிக்குமேலே நின்று தமது முகத்தையும் காட்டாமல் தங்களுக்குரிய ஹவிர்பா4க3த் தைக் கொண்டுபோகும் இந்த்3ராதி3தே3வதைகளைப் போலே யானான். "கண்ணன்' என்றால் அவனை ஆசைப்பட்டிருப்பவர் களுக்கு வசப்பட்டிருப்பவன் என்று உலகில் புகழ் ஏற்பட்டு

---

வாக்யங்களாலே) $i_2$ (நாம் நினைத்திருந்தவை) – தன்னை அவன் கும்பிடுகை. j "தெய்வம்" என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (நம்மைப் பெறுகைக்கு இத்யாதி3) $g_2$ தெய்வம்—பரத்வமாதல்; தே3வதைகளினுடைய ஸ்வபா4வ மாதல், i முந்தினது (க்ருஷ்ணனென்றால் இத்யாதி3 தொடங்கினானென்னுமளவும்) j பிந்தினது (நம்மை என்று தொடங்கி, ஆனானென்னுமளவும்) k முந்தின விவரணம்



வது ஒரு $k_2$ ஶப்3த3மாத்ரமாய், $k_3$ முன்புத்தை நிலையே அர்த்த2மாய்விட்டது. l ஸ்வரூபம் மாறாடிலால் ஸ்வபா4வமும் மாறாடினாலாகாதோ ? m இந்நிறம் எப்போதுமொக்கப் படு குலையடிக்குமது தவிருகிறதில்லை; n க்ருஷ்ண ஶப்3தா3ர்த்த2ம் மெய்யாய்விட்டது. o இவன் ப4வ்யனென்னுமது வடயக்ஷ ப்ரஸித்3தி4போலே ஆய்த்து. p உகப்பார்க்கு எளியனென்னுமது $p_2$ விக்ருதியாய், $p_3$ ப்ரக்ருதிவத் பா4வித்தே விட்டான்.

---

விட்டதேயொழிய அவதரிப்பதற்கு முன்பிருந்த பரத் வமே உண்மையாகிவிட்டது. (கருந்தெய்வம்) "கண்ணன்" என்னும் பத3த்தால் காட்டப்படும் ஆஶ்ரிதபாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபம் (தனித்தன்மை) மாறியதுபோலே கருமையாகிற ஸ்வபா4வமும் (பொதுத்தன்மையும்) மாறியிருக்கக்கூடாதோ? இந்தக் கருமைநிறம் எப்போதும்போலே என்னைப் படாதபாடு படுத்துவது மாறவில்லை. க்ருஷ்ணன் (கரியவன்) என்னும் பெயர் மெய்யாய்விட்டது. புறப்போலுள்ளும் கரியவனாகவே இருக்கிறான். இவன் அடியார்க்கு வசப்பட்டவன் என்னும் பிரஸித்3தி4 மூடநம்பிக்கையுள்ளவர்கள் 'ஆலமரத்தில் பிசாசு உள்ளது' என்று கூறும் பிரஸித்3தி4போலே பொய்யாய்விட்டது. ஆசைப்பட்டவர்களுக்கு எளியவன் என்பது வெறும் வெளி வேஷமாய் அதை இதுநாள் வரையில் தனது இயற்கைத்தன்மை போலே நடித்துக் காட்டிவிட்டான் இக்கண்ணன்.

---

(க்ருஷ்ணனென்றால் இத்யாதி3) $h_2$, $k_2$ "என்னும்" என் கிறது—ப்ரஸித்3தி4யாதல்; ஶப்3த3மாத்ரமாதல், $k_3$ (முன் புத்தை நிலை) பரத்வம். l கருமையைப்பற்ற அருளிச்செய் கிறார் (ஸ்வரூபம் மாறாடினால் இத்யாதி3) ஸ்வரூபம்–ஆஶ்ரித பாரதந்த்ர்யம், m விவரணம் (இந்நிறம் இத்யாதி3) n இத் தால் ப2லிதம் (க்ருஷ்ண ஶப்3தா3ர்த்த2ம் இத்யாதி3) k, o, p (க்ருஷ்ணன் என்றால் உகப்பார்க்கு) என்ற வாக்யவிவரணம் (இவன் ப4வ்யனித்யாதி3 வாச்யத்3வயமும்) $p_2$ (விக்ருதியாய்) விகாரமாய் - வேறாயென்றபடி. $p_3$ (ப்ரக்ருதிவத்) ஸ்வபா4வம் பரத்வமென்றபடி.

(காட்சிப் பழகிக் கிடப்பேனை) முன்பு கண்ட காட்சியை ஸ்மரித்து அது கைம்முதலாக ஜீவித்துக்கிடப்போமென்றால் அதுவுமொண்ணுதபடி அவ்வழி புல்லெழுந்து போய்த்து. (கிடப்பேனை) ''‘கிடந்த கிடையிலே q பாடோடிக்கிடந்தாளாகாதே!’ என்று அகளங்க நாட்டாழ்வான் வார்த்தை'' என்றருளிச்செய்வர். r இப்போது அவனை அணைக்கவல்ல இவளுக்குத் தேட்டம். இடம்வலம் கொள்ளுகையாய்த்து. s 223 “யே து” (யே து) t சக்ரவர்த்தி-போக்கை அநுமதி

---

(காட்சிப் பழகிக் கிடப்பேனை) அவனோடு முன்பு பழகிய காட்சிகளை நினைத்து அதுகொண்டு உயிர்த₄ரிப்போமென்று பார்த்தால் அது என்னுடைய விரஹவேதனையை அதிகப்படுத்தி என்னைப் படுக்கையிலே இடத்திவிட்டதாகையாலே அந்த வழியும் படைஅற்றுப் போயிற்று. (கிடப்பேனை) ‘கிடக்கும்போதும் மறுபக்கம் புரளமுடியாதபடி ஒரு பக்கமாகவே படுத்துக்கிடக்கும் என்னை’ என்னும் கருத்துத்தோன்ற ‘கிடந்த கிடையிலே பாடோடிக் (ஒரு பக்கமாகவே படுத்துக்) கிடந்தாளாகாதே'' என்று அகளங்கநாட்டாழ்வான் பொருள் கூறியது இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது. இப்போது எம்பெருமானை அணைப்பதுகூட முக்கியமல்ல; இடம் வலமாகப் புரளுவதே தேவை என்னும் நிலையாயிற்று.

223. யே து ராமஸ்ய ஸௌஹ்ருத3ஸ்
ஸர்வே தே மூட₄சேதஸ:।
ஶோகபா₄ரேண சாக்ராந்தா:
ஶயநம் ந ஜஹுஸ்தத3ா॥ [ரா. அ 41-20]

[ராமனுடைய நண்பர்கள் அனைவரும் ஶோகபா₄ரத்தால் அமுக்கப்பட்டு அறிவு மழுங்கியவர்களாய், படுக்கையைவிட்டுப்

---

q (பாடோடி) என்றது - ஒரு பார்ஶ்வத்திலே பெருமல் கிடக்கை; r ப₂லிதம் (இப்போது இத்யாதி₃) s இப்படி பாடோடிக்கிடந்தபேருண்டோ ? என்ன; பெருமாளுடைய தோழன்மார் கிடந்தாரென்கிறார் (யே து இத்யாதி₃) t துஶப்₃த₃ார்த்த₂ம் (சக்ரவத்தி இத்யாதி₃) t₂ லோகத்திலே



பண்ணினன்; ஸ்ரீகௌஸலையார் மங்க₃ளாஶாஸநம் பண்ணிவிட்டார்; அவ்வளவன்றிக்கே, t₂ பத்தொன்பதாம் ப₄ாஷையாய்த்துத் தோழன்மார்படி. 223. “रामस्य सुहृदः” (ராமஸ்ய ஸௌஹ்ருத₃:) u தாய்தமப்பனுக்கு மறைத்தவையும் வெளியிடும்படி உட்புக்கவர்களிறே தோழன்மாராகிறார். v தங்களைப் பேணுதே அவனுக்கே நன்மையெண்ணிப் போந்தவர்கள் படுகுலைப்பட்டார்களென்கிறது. 223. “सर्वे ते” (ஸர்வே தே) ஒரு விபூ₄தியாக w ஸாம்யாபத்தி பெற்றிருக்குமா

---

புறப்படவில்லை] என்னும் ஶ்லோகத்தில் ஸ்ரீராமபிரான் காட்டுக்குப்போக முற்பட்டபோது அவனுடைய நண்பர்களுடைய நிலை இப்படியே இருந்ததன்றோ. [யே து] தந்தை த₃ஶரத₂ சக்ரவர்த்தி இராமபிரான் காடு செல்ல அனுமதித்தார். தாயான ஸ்ரீகௌஸல்யை காடு செல்லும் ராமபிரானுக்குப் பல்லாண்டு பாடி வழியனுப்பினுள். இந்நாட்டில் பதினெட்டு ப₄ாஷைகள் இருக்க, சிலர் பத்தொன்பதாவது ப₄ாஷையில் பேசுவதுபோலே, மாதாபிதாக்கள் போலல்லாமல் தோழன்மார் செய்தது தனி வழியாயிருந்தது, [ராமஸ்ய ஸௌஹ்ருத₃:] ராமனுடைய தோழர்கள். தாய்க்கும் தகப்பனுக்கும் மறைத்தவற்றைக்கூட வெளியிடலாம்படி அந்தரங்க₃ராயிருப்பவர்களன்றோ தோழர்கள், ஆகையாலே அவர்கள் இப்பாடு பட்டார்கள் என்று கருத்து. ‘ஸௌஹ்ருத₃:’ என்னும் பத₃த்துக்கு ரூடி₄ப் (இடுகுறி) பொருள் கொள்ளப்பட்டது. அன்றிக்கே ‘ஸௌஹ்ருத₃:’ என்பதற்கு நல்ல நெஞ்சுடையவர்கள் என்று வ்யுத்பத்திப்படி பொருள் கொள்ளும்போது, தங்களுடைய நலம் கருதாது ராமபிரானுக்கே நன்மை எண்ணிப் போந்தவர்களாகையாலே அவர்கள் இப்பாடுபட்டார்கள் என்று கருத்து. [ஸர்வே தே] அவர்கள்

---

உள்ளது பதினெட்டு ப₄ாஷையாகையாலே எல்லாரையும் பற்ற இவர்களுடைய வ்யாவ்ருத்தி தோற்றுகைக்காக (பத்தொன்பதாம் ப₄ாஷையென்கிறது.) u. v கீழ் - தாய் தமப்பனில் ஸௌஹ்ருத்துக்கு ரூடி₄யாக அருளிச்செய்து, அவயவார்த்த₂ விவக்ஷயா தாத்பர்யாந்தரம் (தங்களை இத்யாதி₃) w (ஸாம்யாபத்தி) ராமவிஶ்லேஷத்தில் எல்

போலே; 223 "मूढचेतसः" (மூட,சேதஸ:) ஸுஹ்ருத்துக்களாகில் எழுந்திருந்து காலைக்கட்டி மீளாதொழிவானென்னென்னில்; அறிவுகலந்தால் செய்யுமத்தை நெஞ்சில் வெளிச்செறிப்பில்லாதபோதும் செய்யப் போகாதிறே. அறிவு கெடுகைக்கு ஹேதுவென்னென்னில்; 223 "शोकभारेण चाक्रान्ताः" (ஶோகப,ாரேண சாக்ராந்தா:) மலை அமுக்கினாற்போலே ஶோகம் அமுக்காநிற்கச்செய்வதென்? 223. "शयनं न जहुस्तदा" (ஶயநம் ந ஜஹுஸ்தத,ா) படுக்கையை விட்டெழுந்திருந்தார்களாகில் மீட்டுக் கொடுபுகுந்த வாசியன்றோ: x தாந்தாமே படுக்கையிற் கிடந்து போந்தவர்களன்றே.

---

அனைவரும் நித்யவிபூ,தியில் உள்ள நித்யமுக்தர்கள் அனைவரும் பரமாத்மாவிடம் ஈடுபாட்டில் ஒத்திருப்பதுபோலே, இந்த ராமனுடைய நண்பர்கள் ஒருவர்கூட விட்டுப்போகாமல் மயங்கி விழுவதிலே ஒத்திருந்தார்கள். ['மூட,சேதஸ:'] மயங்கிய நெஞ்சையுடையவர்கள். இவர்கள் ராமனுடைய நண்பர்களாகில் எழுந்திருந்து அவன் காலில் விழுந்து காட்டுக்குப் போகாமல் தடுத்துக் கூட்டிவரக் கூடாதோ? எனில்: அறிவோடு இருந்திருந்தால் அதைச் செய்திருப்பார்கள்; ராமன் காட்டுக்குப் போகிறான் என்று கேட்டவுடன் அறிவு மயங்கிவிட்டபடியாலே அதைச் செய்யவில்லை என்று கருத்து. இப்படி அறிவு அழிந்து போவதற்குக் காரணம் என்ன? எனில்—*[ஶோகப,ாரேணச ஆக்ராந்தா:]* துக்கமாகிற சுமையாலே ஆட்கொள்ளப்பட்டவர்கள்; மலை அமுக்கினாற்போலே துக்கம் அமுக்கும்போது அறிவு மழுங்கிப்போகாமல் என்ன செய்வது? *[ஶயநம் ந ஜஹுஸ்தத,ா]* அப்போது படுக்கையைவிட்டு எழுந்திருக்கவில்லை. படுக்கையைவிட்டு எழுந்திருந்தார்களாகில் இவர்கள் வார்த்தையை ராமன் தட்டமாட்டானாகையாலே ராமனைத் திருப்பிக்கொண்டுவந்தது போலேயாகும். ஆனால் இவர்களில் ஒருவரும் படுக்கையைவிட்டு எழுந்திருக்கமுடியவில்லையே.

---

லார்க்கும் து,:க்க,மொத்திருக்கை. x படுக்கையிலே கிடந்தவர்களெல்லாம் எழுந்திருக்கவில்லையோ லோகத்தில்? என்ன (தாந்தாமே இத்யாதி,) அதாவது — ஶோகப,ாரத்தாலே கிடந்தவர்களாகையாலே ஸ்வவஶமல்லவென்றபடி.



(புண்ணில்) புண்ணின் விவரத்திலே புளியை ப்ரவேஶிப்பித்தாற்போலே. (புறம் நின்று) வாசலுக்குப் புறம்பு ஒன்று சொல்லாதேகொள்ளுங்கோள் என்கிறாளல்லள்; என்னையும் அவனையும் சேர்க்கும் கூற்றிலே நின்று வார்த்தை சொல்லுமதொழிய மீட்கும் கூற்றிலே நின்று வார்த்தை சொல்லாதே. என்னையும் அவனோடே சேர்க்கைக்கீடான வார்த்தை சொல்லுகையன்றிக்கே, எனக்கு அவன்பக்கல் ப்ராவண்யத்தைக் குலைக்கைக்கீடான வார்த்தை சொல்லாதே y அழகு சொல்லாதே. இப்போது மீட்கப் பார்க்கிறவர்கள் அவனுடைய ஸௌந்த,ர்யத்தைச் சொல்லுகிறார்களன்றே; "இப்போது. இவ்வாற்றாமையைப் பரிஹரித்தால் மேல்வரும் y₂ நன்மைகளைப் பாராய்" என்று அவற்றைச் சொல்லா

---

*(புண்ணில் புளிப்பெய்தாற்போல)* புண்ணின் துளையில் புளிரஸத்தை ஊட்டியதுபோலே; கடுமையான எரிச்சல் உண்டாகும்படி என்று கருத்து. *(புறம்நின்று அழகு பேசாதே)* இங்கு 'புறம்' என்றது வாசலுக்கு வெளியே என்று பொருளல்ல. ஆகையால் 'என் வாசலுக்கு வெளியே நின்று ஒரு வார்த்தை சொல்லாதீர்கள்' என்று இத்தொடருக்குப் பொருளன்று. இங்கு ஆண்டாளையும் கண்ணனையும் சேர்ப்பது அகம்; அவளைக் கண்ணனிடமிருந்து மீட்பது புறம். என்னை அவனோடு சேர்ப்பதற்கு வார்த்தை சொல்ல வேண்டுமேயொழிய எனக்கு அவனிடம் உள்ள அன்பை அழித்து அவனிடமிருந்து என்னை மீட்பதற்கு உரிய வார்த்தை சொல்லக்கூடாது என்று கருத்து. *(அழகு பேசாதே)* இங்கும் 'அழகு' என்பது அவனுடைய ஸௌந்த,ர்யமல்ல; இவளுக்கு அவர்கள் நினைக்கும் நன்மையேயாகும். இவளை அவனிடமிருந்து மீட்கப் பார்க்கிறவர்கள் அவனுடைய ஸௌந்த,ர்யத்தைச் சொல்லமாட்டார்களன்றோ. "இப்போது நீ அவனிடம் கொண்டிருக்கும் ஈடுபாட்டைத் தவிர்ந்தால் மேலே வரும் நன்மைகளைப் பாராய்" என்று எனக்கு நன்மைகளைச் சொல்லாதீர்கள் என்று கருத்து.

---

y, y₂ "அழகு" - நன்மை.

நில்லாதே. (பேசாதே) இது ஶப்3த3மாத்ரமாய் அர்த்த2 ஸ்பர்ஶியன்றென்றிருக்கிருள்.

நீங்கள் இதில் படுகிற நேர்த்தியைச் செயலிலே நேரப் பாருங்கோள்,—(பெண்ணின் வருத்தமித்யாதி3) "உங்களிரண்டு தலைக்கும் ஒத்த உகப்புக்கு நாங்கள் சில யத்நம் பண்ணும்படி இருந்ததோ?" என்ன; z உகப்பு ஒத்தாலும் ஆணும் பெண்ணுமென்கிற வாசியில்லையோ?; "முலையெழுந்தார்படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே" என்று ப4ட்டரருளிச்செய்தாராக ப்ரஸித்3த4மிறே. a ஸாந்தீ3பிநி

(பேசாதே) நீங்கள் எது பேசினாலும் வெறுஞ் சொல்லாக என் காதில் விழுமேயொழிய அதன் பொருள் என் நெஞ்சில் படாது என்று கருத்து.

இப்படிப் புறம்நின்று அழகு பேசுவதில் படுகிற ச்ரமத்தை நீங்கள் என் நோய்திரப் பரிஹாரம் செய்வதில் பயன்படுத்துவது நல்லது என்கிருள் பாட்டின் பிற்பாதியாலே. (பெண்ணின்வருத்தமறியாத பெருமான்) "நீங்கள் இருவரும் ஒருவரையொருவர் விரும்புகிறீர்கள். அதற்கு நாங்கள் செய்யவேண்டிய சில முயர்சிகள் உண்டோ" என்று தாய்மார் முதலானுர் கேட்க, "விருப்பம் இருவருக்குப் ஒத்திருந்தாலும் அவன் ஆண், நான் பெண் என்கிற வேற்றுமையுள்ளதே அவன் பெண்ணின் வருத்தமறியாத பெருமானுயன்றோ இருக்கிறுன்" என்று பதில் கூறுகிருள். "முலையெழுந்திருக்கும் பெண்களின் வருத்தம் மோவாயில் தாடி மீசை முளைத்திருக்கும் ஆண்களுக்குத் தெரியாதன்றோ" என்று பட்டர் அருளிச் செய்தார் என்பது ப்ரஸித்3த4மன்றோ. ஸாந்தீ3பினியாகிற ஆசார்யரிடம் கண்ணன் அனைத்தையும் கற்றவன். அண்டினவர்களிடம் இரக்கம் காட்டவேண்டும் என்பதையும் அவசியம் கற்றிருப்பான்; இவள் அவன் சிறிது தாழ்த்ததைப் பொறுக்க மாட்

z (உகப்பு ஒத்தாலும்) அவன் என்த3ஶை அறியானென்றபடி. a ஆனால் ஸர்வஜ்ஞனன்றோ அறியானேவென்று வ்யாக்2யாதா ஈடுபட்டு அருளிச்செய்கிருர் — (ஸாந்தீ3பினி



யுஶிஷ்யனையிறே பிறர்மிடியறியானென்கிறது. b (பெருமாள்) c 224. "हीनो यदनया प्रभुः" (ஹீநோ யத3நயா ப்ரபு4:) என்கிறபடியே.

d அவனுக்கு நம்மையொழியச் செல்லுவதானாலும், நமக்கு அவனையொழியச் செல்லாதே; நம் ஸத்தை நோக்க வேணுமே; பே4ாக3த்துக்காகிலிறே அவர் வேண்டுவது;

டாமல் தன் ப்ராப்யத்வரையாலே அவனைப் பெண்ணின் வருத்தமறியாத பெருமான் என்கிருள் என்று கொள்ள வேண்டும் (பெருமான்)

224. து3ஷ்கரம் க்ருதவாந் ராமோ ஹீநோ யத3நயா ப்ரபு4:
த4ாரயத்யாத்மநோ தே3ஹம் ந ஶோகேநாவஸீத3தி ॥
[ரா ஸு 15.53]

[இப்பிராட்டியைப் பிரிந்துவாழும் பெருமானுன ராமபிரான் தன் தே3ஹத்தை த4ரித்துநிற்கிருரென்பதாலும், வருத்தத்தாலே வாடி அழியவில்லை என்பதாலும் ராமபிரான் அரிய காரியத்தைச் செய்தவராகிருர்] என்று ஸ்ரீராமபிரான் பிராட்டியைப் பிரிந்தபோது ப்ரபு4வாயிருந்தான் என்று அனுமன் சொன்னாற்போலே, இவள் தன்னைப் பிரிந்தபோது கண்ணன் பெருமானுயிருந்தான் என்கிருள்.

(பெருமான் அரையில்பீதகவண்ண ஆடைகொண்டு என்னை வாட்டம் தணிய வீசீரே.) அவன் பெருமானுகையாலே நம்மைப் பிரிந்தும் காலம் கழிக்கக்கூடும். நமக்கு அவன் இல்லாமல் உயிர்த4ரிக்கமுடியாது. நம் ஸத்தையே அவனதீ4நமன்றோ. அவன் வராவிட்டாலும் நம் ஸத்தையைக் காத்துக்கொள்ள

இத்யாதி3) ஸாந்தீ3பினியிடத்திலே எல்லாம் கற்றுக்கேட்டு ஸர்வஜ்ஞனுயிருக்கச்செய்தேயும் வெறுப்பாலே அறியானென்கிருள். b, c இவளைப் பிரிந்து அவன் பெருமானுயிருக்கிறது எப்படியிருக்கிறதென்னு; பெருமாள் பிராட்டியைப் பிரிந்து ப்ரபு4வாயிருந்தாற்போலே என்கிருர் (ஹீநோ யத3நயா இத்யாதி3) dமேலுக்கவதாரிகை அருளிச்

ஸத்தை நோக்குகைக்கு அங்குத்தை ஸம்ப$_3$ந்த$_4$முள்ள தொன்று அமையுமே; அத்தைக்கொண்டு வந்து என்னை ஆச்வஸிப்பியுங்கோள். e அவன்தான் இத்தனைபோது பசுக்களையும் விட்டுக்கொண்டு போகாநிற்குமே; e$_2$ பிறரை நலிகைக்காகத் தான் காட்டுக்குப்போகைக்கு உடைதோலுடுத்திறேபோவது; "கறையினார் துவருடுக்கை" என்கிற படியே திருப்பீதாம்ப$_3$ரத்தை இட்டுவைத்துப்போமே.

(அரையில் பீதகவண்ணவாடைகொண்டு) "மேலிட்ட உத்தரீயமாணலாகாதோ?" என்று நஞ்சீயர்கேட்க; "ஸ்வேத$_3$

---

ஒரு வழி இருக்கிறது. அனுப$_4$வத்துக்குத் தான் ப்ரபு$_4$வான அவன் வேணும், நம்முடைய ஸத்தையைக் காத்துக்கொள்வதற்கு அவனோடு தொடர்பு பெற்றதொரு பொருளே போதும். அதைக் கொண்டுவந்து என்மேல் வீசினீர்களானால் என் வாட்டம் தவிர்ந்து நான் உயிர்த$_4$ரித்திருப்பேன் என்கிறாள். அத்தகைய பொருள் எது? அதை நாங்கள் கொண்டுவர முடியுமோ? என்னும் கேள்வி எழ. "அரையில் பீதகவண்ண வாடை" என்கிறாள். அவன்தான் பசுக்களைமேய்த்துக் கொண்டு போகும் சமயமன்றோ இது. அப்படிப் போகும் போது "கறையினார் துவாடுக்கை, கடையாவின் கழிகோற் கைச் சறையினார்" [திருவாய் 4-8-4] என்கிறபடியே பெண்களைத் தன்டால் ஈர்த்துத் துன்புறுத்துவதற்காகத் திருப்பீதாம்ப$_3$ரத்தை ஆய்ப்பாடியில் இட்டுவைத்து, தோலுடையை உடுத்துப் போவானன்றோ. அந்தத் திருப்பீதாம்ப$_3$ரத்தைக்கொண்டு வந்து என் வாட்டம் தணிய வீசுங்கள் என்கிறாள்.

*(அறையில் பீதகவண்ண ஆடை கொண்டு)* "கண்ணன் மேலே சாத்தின பீதாம்ப$_3$ரத்தைக்கொண்டு வீசச்சொல்லாமல்

---

செய்கிறார் (அவனுக்கு நம்மை இத்யாதி$_3$) e பீதகவாடை சாத்திக்கொண்டன்றோ இருப்பது, அத்தைக் கொணடுவரப் போமோவென்ன அருளிச்செய்கிறார் (அவன்தானித்தனை போதித்யாதி$_3$) e$_2$ பிறரை நலிகைக்காக - பெண்களை நலிகைக்காக. 1.



க$_3$ந்த$_4$லுப்$_3$தை$_4$ போலேகாண்" என்றருளிச்செய்தாராம். (என்னையித்யாதி$_3$) என்னையும் அவனையும் சேர்த்து போ$_4$க$_3$த்திலே நிறுத்துங்கோளென்றால் அது இப்போது உங்களால் செய்யப்போகாதிறே. ஆனாலும். வாட்டத்தை அகஞ்சுரிப்படுத்தலாமே; அத்தைச் செய்யப் பாருங்கோள்; அவனுடைய திருப்பீதாம்ப$_3$ரத்தைக் கொடுவந்து என்மேலே பொகட்டு என் ஸத்தையை நோக்கப் பாருங்கோள். 1.

## பதின்மூன்றுந்திருமொழி — இரண்டாம் பாட்டு

பாலா லிலையில் துயில்கொண்ட
பரமன் வலைப்பட் டிருந்தேனை
வேலால் துன்னம் பெய்தாற்போல்
வேண்டிற் றெல்லாம் பேசாதே
கோலால் நிரைமேய்த் தாயனாய்க்
குடந்தைக் கிடந்த குடமாடி
நீலார் தண்ணந் துழாய்கொண்டென்
நெறிமென் குழல்மேல் சூட்டீரே.

---

அரையில் சாத்திய பீதாம்ப$_3$ரத்தைக்கொண்டு வீசச்சொன்னதற்குக் கருத்து என்ன' என்று நஞ்ஜீயர் ப$_4$ட்டரைக் கேட்க, "உத்தம நாயகியானவள் தன் நாயகன் வியர்வை மணத்தை விரும்பியிருப்பாள், இவள் உத்தம நாயகியாகையாலே கண்ணனுடைய வியர்வை மணத்தை விரும்பி, அரையில் சாத்திய பீதாம்ப$_3$ரத்தைக்கொண்டு வீசச்சொல்லுகிறாள்' என்று ப$_4$ட்டர் அருளிச்செய்தாராம். *(என்னை வாட்டம் தணிய வீசீர)* "'என்னையும் அவனையும் சேர்த்து ஒருவரையொருவர் அனுப$_4$விக்கும்படிச் செய்யுங்கள்' என்று சொன்னால், உங்களால் அது இயலாது. ஆனாலும் எனது வாட்டத்தைத் தணிப்பதற்கு வழியுண்டே; அதைச் செய்ய முயலுங்கள். அவனுடைய திருவரைப் பீதாம்ப$_3$ரத்தைக்கொண்டுவந்து அதன் தொடர்பை எனக்கு ஏற்படுத்தி, என்னை உயிர்த$_4$ரிக்கச் செய்யுங்கள்" என்கிறாள். 1.

பதவுரை:— பால் ஆலிலையில்—பால் பாயும் பருவத்தையுடைய ஆலந்தளிரிலே, **துயில் கொண்ட**—கண் வளர்ந்தருளின, **பரமன்**—பெருமானுடைய, **வலை**—வலையிலே, **பட்டிருந்தேனை** — அகப்பட்டுக் கொண்டிருக்கிற என்னைக் குறித்து, **வேலால் துன்னம் பெய்தால்போல்**—வேலாயுதத்தை யிட்டுத் துளைத்தாற்போல் [கொடுமையாக], **வேண்டிற்று எல்லாம் பேசாதே**—உங்களுக்குத் தோன்றினபடியெல்லாம் சொல்வதைத் தவிர்ந்து, **ஆயன் ஆய்**—இடைப்பிள்ளையாய், **கோலால்** — (இடைச்சாதிக்கு உரிய) கோலைக்கொண்டு, **நிரை மேய்த்து** — பசுக்கூட்டங்களை மேய்த்தவனாய், **குடந்தை கிடந்த** — திருக்குடந்தையில் திருக்கண்வளர்ந்தருளுமவனாய், **குடம் ஆடி** — குடக்கூத்தாடினவனுமான கண்ணபிரானுடைய, **நீல் ஆர் தண் அம் துழாய் கொண்டு** — பசுமை பொருந்திக் குளிர்ந்து அழகிய திருத்துழாயைக் கொண்டுவந்து, **நெறி மென்**—நெறிப்புக் கொண்டதாயும் மிருதுவாயுமிருந்துள்ள, **என் குழல்மேல்**—என் கூந்தலிலே, **சூட்டீர்**—சூட்டுங்கள்.

வ்யா: இரண்டாம் பாட்டு. a (பாலாலித்யாதி3)
225. "कथं त्वयं शिशुः शेते लोके नाशमुपागते। शाखायां वटवृक्षस्य पल्लवे" (கத2ம் ந்வயம் ஶிஶு:ஶேதே லோகே நாஶமுபாக3தே। ஶாகா2யாம் வடவ்ருக்ஷஸ்ய பல்லவே) என்கிற

2: அவ:—அவனுடைய திருத்துழாய் மாலையைக் கொண்டு வந்து என் கூந்தலில் சூட்டுங்கள் என்கிருள்.

*வ்யா:—(பாலாலிலையில் துயில்கொண்ட)*

225. கத2ம் ந்வயம் ஶிஶு: ஶேதே லோகே நாஶமுபாக3தே।
ஶாகா2யாம் வடவ்ருக்ஷஸ்ய புல்லவே துஶிஸ்மித:॥
[பா4ர-ஆர 188-94]

[உலகமெல்லாம் நாசமடைந்தபிறகும், ஆலமரக்கிளையிலுள்ள இளந்தளிரில், இனிய புன்முறுவலுடன் கூடிய இக்குழந்தை எப்படிப் படுத்துக்கொண்டிருக்கிறது?] என்கிறபடியே, பால்



படியே - பால்பாயும் பருவத்தையுடைத்தான இளந்தளிரிலே; "இளந்தளிரில் கண்வளர்ந்த" என்னக்கடவதிறே. (துயில் கொண்ட) யஶோதைப் பிராட்டியுடைய தொட்டிலிலே ரக்ஷகமுண்டான இடத்தில் கண்வளர்ந்தருளுமாபோலே கண்வளர்ந்தருளினுனாய்த்து. ஸப்ரமாத3மான ஸ்த2லத்திலே ஆலிலையிலே. (பரமன்) b அக4டிதக4டநா ஸாமர்த்2யத்தில் வந்தால் யஶோத3ாஸ்தநந்த4யமும் ஒப்பன்று வடத3ள ஶாயிக்கு. (வலைப்பட்டிருந்தேனை) பெரியாழ்வார் மகளிறே.

பாலப் பருவத்தையுடைய ஆலிளந்தளிரிலேயன்றோ கண் வளர்ந்தான், "ஆலின் மேலோர் இளந்தளிரில் கண்வளர்ந்த ஈசன்" [பெரியதிரு 2-10-1] என்றாரன்றோ திருமங்கையாழ்வாரும். (துயில்கொண்ட) யசோதைப் பிராட்டி பாதுகாப்புடன் தொட்டிலிலே கண்வளரச் செய்தபோது துயில்கொண்டாற்போலே. நிராதாரமாயிருக்கையாலே காண்பார் 'என் வருகிறதோ' என்று பயப்படும்படியிருக்கிற இவ்வாலிலையில் பயமற்றுத் துயில்கொண்டான் என்கிருள். (பரமன்) சேராதவற்றையெல்லாம் சேர்த்துவைக்கும் அகடித கடநா ஸாமர்த்யத்திலே ஒப்பற்றவன் யசோதையின் குழந்தையான கண்ணன் ஒருத்தி மகனாய்ப் பிறந்தவுடன் ஓரிரவில் ஒருத்தி மகனாய்ப் போய்ச்சேர்ந்தான். சிறு குழந்தையாயிருக்கும் போதே பூதனை சகடாசுரன் முதலான பல அசுரரை அழித்தான். சிறுவனாயிருக்கும்போது சோலைசூழ் குன்றெடுத்தான். ஆனால் வடதளஶாயியான ஆலிலைப் பெருமானே "பாலன் தனதுருவாய் ஏழுலகுண்டு ஆலிலையின் மேலன்று நீவளர்ந்த மெய்யென்பர்—ஆலன்று, வேலை நீருள்ளதோ விண்ணதோ மண்ணதோ" [முதல் திருவ 69] என்று அவதரிக்கும்போதே அனுகூலரானவரும் நிராதாரமாக இவன் ஆலிலையிலே கண் வளருகிறபடியைக் கண்டு அஞ்சும்படியாக அவதரித்தான். ஆகையால் கண்ணனும் அகடிதகடநாஸாமர்த்யத்திலே ஆலிலைப் பெருமானுக்கு ஒப்பல்ல, *(வலைப்பட்டிருந்தேனை)*

இரண்டாம் பாட்டு (பாலால் இத்யாதி3) a "பாலாலிலை"—பாலமான ஆலிலை என்றபடி. b யஶோதா3ஸ்த

பரிவரில்லாத இடத்திலே சாய்ந்தானென்று அதிலே நெஞ்சை வைத்திருக்கையாலே கால்வாங்கிப் போகமாட்டாதே சிறைப்பட்டிருந்தேனே.

c (வேலால் இத்யாதி$_{3}$) d ஸ்வப்ரயோஜநபரராயிருப்பார்க்குச் சொல்லுமாபோலே சிலவற்றைச் சொல்லாதே. வேலால் துன்னம் பெய்தாற்போலென்னுதல்; வேல் உள்ளே கிடக்கத் துன்னம் பெய்தாற்போல என்னுதல்.

---

ப$_{4}$யப்பட வேண்டாத இடங்களிலெல்லாம் ப$_{4}$யப்பட்டு எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடும் பெரியாழ்வார் மகளன்றோ இவள். ஆகையாலே "மிகவும் ப$_{4}$யப்படவேண்டிய ஆலந்தளிரிலே பரிந்து பல்லாண்டு பாடுவார் இல்லாத இடத்திலே வந்து சாய்ந்தான்" என்று இவ்வாலிலைப் பெருமானிடத்திலே நெஞ்சை வைத்திருக்கையாலே, நெஞ்சை வேறிடத்துக்குச் செலுத்தமுடியாமல் அங்கேயே வலைப்பட்டிருந்ததாகக் கூறுகிறாள்.

*(வேலால் துன்னம் பெய்தாற்போல்)* 'ஆல்' என்பதை மூன்றும் வேற்றுமை விகுதியாகக்கொண்டு 'வேலைக்கொண்டு துளையிட்டாற்போலே' என்று பொருள்கொள்ளலாம் — அன்றிக்கே, ஆல் என்பதற்கு மேல் அல்லது இடம் என்று பொருள்கொண்டு, வேலின் மேலே துளையிட்டாற்போல் என்றும் பொருள்கொள்ளலாம். உடலில் பாய்ந்த வேல் உள்ளே கிடக்க, அதன் மேலே துளையிட்டாற்போல் என்றபடி.

---

நந்த$_{4}$யத்துக்கு அக$_{4}$டிதக$_{4}$டநாஸாமர்த்$_{2}$யம் - பிறந்தவுடனே பேய்கையும், பூதநாதி$_{3}$ நிரஸநமும். c, d எடுத்த பத$_{3}$த்துக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் (ஸ்வப்ரயோஜநபரர் இத்யாதி$_{3}$.) ஸ்வப்ரயோஜநப்ரர் "உங்களுக்கொன்றும் ப$_{2}$லியாது" என்றால் திரும்புவர்கள்; இவள் ப்ரப்ரயோஜநபரையாகையாலே எது சொன்னாலும் திரும்பாளென்றபடி. c (வேலால்) "ஆல்" என்று மேலும் இடமுமாய் வேலின் மேல் புரைந்தாற்போலே என்று இரண்டாம் அர்த்த$_{2}$ம்.



e புண்ணிலே புளியை ப்ரவேஶிப்பித்தால் எரியுமித்தனையிறே; இதாகிறது புண்ணைப் பெருப்பிக்குமித்தனையிறே. f எனக்கோடுகிற த$_{3}$ஶையறியாதே உங்களுக்கு ப்ரதிபந்நங்களைச் சொல்லாதே.

g (கோலாலித்யாதி$_{3}$) h "அவனுக்கு என்வருகிறதோ" என்று அஞ்சின எனக்கு அவனுக்கு h$_{2}$ ரக்ஷையுள்ளவளவும் சொல்லிப் பரிஹரிக்க வேண்டாவோ?; i அவன்தானே

---

சென்ற பாட்டில் "புண்ணில் புளிப்பெய்தாற்போல" என்று கூறினாள். அதைக்காட்டிலும் கடுமையான துன்பத்தை விளைக்கையாலே இங்கு "வேலால் துன்னம் பெய்தாற்போல்' என்கிறாள். புண்ணில் புளியைச் சொரிந்தால் எரிவதுதான் செய்யும். வேலால் துளையிட்டால் புண்ணைப் பெரிதாக்கிக் கடுந்துன்பத்தை விளைக்கும். அவனுக்குப் பரிவாரில்லை என்று துணுக்குறும் எனது நிலையை அறியாமல் உங்களுக்குத் தோன்றியபடியெல்லாம் பேசுவது எனக்குக் கடும் துன்பத்தை விளைக்கிறது என்றபடி.

***(கோலால் நிரைமேய்த்தாயனாய்)*** "ஆலிலையில் துயில் கொண்ட அவனுக்கு என்வருகிறதோ?" என்று துணுக்குற்ற எனக்குப் பசுக்களைக் கோலெடுத்து மேய்த்து ரக்ஷித்த அக்கண்ணன் தனக்குத்தானே ரக்ஷகனுமாவான் என்று சொல்லி, என் அச்சத்தைப் போக்கவேண்டாவோ? அவனுடைய ரக்ஷை குறித்து என்னுடைய அச்சத்தை அவன் தானே ரக்ஷகனாக செய்கை சொல்லியன்றோ போக்கவேணும்.

---

e பா$_{3}$த$_{4}$கத்வம் கீழேயும் சொல்லிற்றே, இங்கு வாசியேதென்ன அருளிச்செய்கிறார் (புண்ணிலே இத்யாதி$_{3}$) f (எனக்கோடுகிற த$_{3}$ஶையறியாதே) என்றது அவனுக்குப் பரிவரில்லையென்று எனக்கோடுகிற த$_{3}$ஶையறியாதே என்றபடி. g, h$_{2}$ (ரக்ஷையுள்ளவளவும்) என்றது-பசுக்களை ரக்ஷிக்கையாலே அவன்தனக்கும் அவன்தானே ரக்ஷகனென்றிருக்கிறானென்றபடி. g, h, i (அவனுக்கென்வரு

ரக்ஷகனுன செயலைச் சொல்லியன்ரே என்னைப் பரிஹரிப்பது. க்ஷத்ரியனாய்ப் பிறந்து கையிலே வில்லைப் பிடித்து ரிஷிகளை நோக்கும் அவனைப்போலல்ல. (குடந்தைக் கிடந்த குடமாடி) "சீரார்குட மிரண்டேந்திச் செழுந்தெருவே ஆராரெனச் சொல்லியாடும்" என்கிறபடியே அவன் தன் வடிவழகை எல்லாரும் அநுப4விக்கலாம்படி ஸர்வஸ்வதா3நம் பண்ணிக்குடமாடின ஆயாஸந்தீரத் திருக்குடந்தையிலே வந்து சாய்ந்தானுய்த்து.

(நீலார்தண்ணந்துழாய்கொண்டு) பசுமைமிக்கிருந்துள்ள திருத்துழாயைக்கொண்டு. இதுக்குப் பசுமையாவது-அநந்யப்ரயோஜநர் இடுமதாகை. அதாவது - பெரியாழ்வார் இடுகை. j வாயாலே மங்க3ளாஶாஸநம் பண்ணக் கையாலே

---

க்ஷத்ரியனாகப் பிறந்து கையிலே வில்லைப்பிடித்து அரக்கராலே துன்புற்ற ரிஷிகளை ரக்ஷிக்கும் ராமனைப் போலல்லாமல், இடையனாகப் பிறந்து கையிலே கோலைக்கொண்டு பசுக்களையும் ரக்ஷிக்கும் எளிமையுடையவனன்ரே இவன். (*குடந்தைக் கிடந்த குடமாடி*) "சீரார் குடமிரண்டேந்திச் செழுந் தெருவே ஆராரெனச் சொல்லி ஆடும்" [சிறிய திருமடல்] என்கிறபடியே அவன் தன் வடிவழகை அனைவரும் கண்டு சுவைக்கலாம்படி முற்றூட்டாகக் கொடுத்து, குடமாடின களைப்புத் தீரத் திருக்குடந்தையிலே வந்து பள்ளிகொண்டானாயிற்று.

(*நீலார் தண்ணந்துழாய்கொண்டு என்நெறிமென்குழல்மேல் சூட்டீரே*) பசுமை மிகுந்திருக்கும் திருத்துழாயைக்கொண்டு என்னுடைய கேசபாசங்களின்மேல் சூட்டுவீர்களாக. இத்துழாய்க்குப் பசுமையாவது—வேறுபயன் கருதாதவர்கள் இடுவ

---

கிறதோ) என்ற வாக்யம் "பாலாலிலை" இத்யாதி3க்குத் தாத்பர்யமாய், "கோலால்நிறை" இத்யாதி3யிலே நோக்காகத் தாத்பர்யாந்தரம் (அவன் தானே ரக்ஷகனுன இத்யாதி3)

j பெரியாழ்வாரிடுமது அநந்யப்ரயோஜநமென்னுமதுக்கு ஜ்ஞாபகமேதென்ன அருளிச்செய்கிருர் (வாயாலேயித்



இடுகையிறே. மிக்க சீர்த்தொண்டரிட்ட பூந்துளவிறே. தொண்டர்; சீர்த்தொண்டர்; மிக்க சீர்த்தொண்டர். தொண்டராகிருர்-கூழாட்பட்டவர்கள்; சீர்த்தொண்டராகிருர்-உபாஸகர்; மிக்க சீர்த்தொண்டராவார்-பெரியாழ்வார்போல்வார். ப்ரயோஜநாந்தரபரரிடுவது - 226. "देहि मे ददामि ते" (தே3ஹி மே த3தா3மி தே) என்கிற பா4வதோ3ஷத்தாலே பொறியெழுந்து வெந்துகிடக்கும். k (நெறிமென்குழல்மேல்) l நெறித்து ம்ருது3வான குழலென்னுதல். m அன்றிக்கே, பேணுக்குழலென்னுதல். 2.

---

தாயிருக்கை. அதாவது—பெரியாழ்வார் போல்வார் இடுகை—வாயாலே பல்லாண்டுபாட, கையாலே இடப்பெறுவதாகை என்றபடி. "மிக்க சீர்த்தொண்டரிட்ட பூந்துளவின்வாசம்" [பெரியதிரு 11-1-9] என்ருரன்ரே திருமங்கையாழ்வாரும். தொண்டர், சீர்த்தொண்டர், மிக்க சீர்த்தொண்டர் என்று அன்புடையவர்கள் மூவகைப்படுவர். தொண்டராகிருர்—"கூழாட்பட்டு நின்றீர்கள்" [திருப்பல்லாண்டு 3] என்று பெரியாழ்வார் அருளியபடியே, ஒரு தாழ்ந்த பயனுக்காக அன்பு செய்பவர்கள். சீர்த்தொண்டராகிருர் — மோக்ஷத்துக்கு உபாயமாக நினைத்து ப4க்திசெய்யும் உபாஸகர், மிக்கசீர்த்தொண்டராகிருர்—மோக்ஷத்தையும் நினையாது அவனுக்குப் பரிந்து பல்லாண்டு பாடும் பெரியாழ்வார்போல்வார். வேறு பயன் கருதுமவர்கள் இடும் துளவம்

**226. தே3ஹி மே த3தா3மி தே** *[யஜுர் 5.3]*

[தே3வதையே! நீ எனக்குப் பலனைக்கொடுப்பாயாக; நான் உனக்கு ஹவிஸ்ஸைத் தருகிறேன்.] என்கிறபடியே வேறுபயன் கருதுகையாகிற அவர்களுடைய நினைவிலுள்ள குற்றத்தாலே பொசுங்கி வெந்துகிடக்கும். (*நெறிமென் குழல்மேல்*) நெறிப்புக்

---

யாதி3) k,l நெறித்தல் - செறிந்திருத்தல்; கூச்சுக் கூச்சாக நிற்றல். k, m இரண்டாமர்த்த2த்துக்கு "மென்குழல்" என்று - அல்பமான குழலென்ருய், அத்தாலே - (பேணுக்குழல்) என்று பா3லிக்கிறது. 2.

## பதின்மூன்றுந்திருமொழி — மூன்றும் பாட்டு

**கஞ்சைக் காய்ந்த கருவில்லி**
**கடைக்க ணென்னும் சிறைக்கோலால்**
**நெஞ்சூ டுருவ வேவுண்டு**
**நிலையும் தளர்ந்து நைவேனை**
**அஞ்சே லென்னா னவனொருவ**
**னவன்மார் வணிந்த வனமாலை**
**வஞ்சி யாதே தருமாகில்**
**மார்வில் கொணர்ந்து புரட்டீரே.**

**பதவுரை:— கஞ்சை**—கம்ஸனை, **காய்ந்த**—தொலைத்தவனும், **கருவில்லி**—பெரிய வில்போன்ற புருவத்தையுடையவனுமிருக்கிற கண்ணபிரானுடைய, **கடைக்கண் என்னும்**—கடைக்கண்ணாகிற, **சிறைக்கோலால்**—சிறகையுடைய அம்பாலே, **நெஞ்சு ஊடுருவ**-நெஞ்சு முழுவதும், **(ஏ)வேவுண்டு**-(எய்யப்பெற்று) வெந்து போகப்பெற்று, **நிலையும் தளர்ந்து**—நிலைமை குலைந்து. **நைவேனை** — வருந்துகின்ற என்னை நோக்கி, **அஞ்சேல் என்னான் அவன் ஒருவன்**—'பயப்படாதே' என்றொரு வார்த்தையும் சொல்லாதவனாய் விஜாதீயனான, **அவன்**—அப்பெருமான், **மார்வு அணிந்த**—(தனது) திருமார்பில் சாத்தியருளின, **வனமாலை**—வனமாலையை, **வஞ்சியாதே**—மோசம் பண்ணாமல், **தரும் ஆகில்**—கொடுத்தருள்வனாகில், **கொணர்ந்து**—(அம்மாலையைக்) கொண்டுவந்து, **மார்வில்**—(என்னுடைய) மார்பிலே, **புரட்டீர்**—(நெஞ்சினுள் வெப்பம் தீருமாறு) புரட்டுங்கள்.

---

கொண்டதாய், மென்மைமிக்க குழலில் சூட்டுங்கள். அல்லது 'மென்' என்று உறைவைக் காட்டுவதாய்'பேணுதகுழல்' என்றும் பொருள்கொள்ளலாம். 2.

3. **அவ:— அவனுடைய கடைக்கண் என்னும் அம்பு பட்டு வெந்துகிடக்கும் என் நெஞ்சம் குளிரும்படி அவன் மார்பில் அணிந்த வனமாலையை எனது மார்பில் இட்டுப் புரட்டுங்கள் என்கிறாள்.**



வ்யா:— மூன்றும் பாட்டு. (கஞ்சைக்காய்ந்த) **"வில்விழவு" என்று ஒரு வ்யாஜத்தையிட்டு அழைத்துத் தப்பு விளைந்ததென்று மாதுலனாய்க் கண்ணநீர் விழவிட்டு இழவு கொண்டாடியிருப்பானாகக் கம்ஸன்கோல. அவன் தன்னோடே போம்படி பண்ணினான்.** a (கருவில்லி) **ஆண்பிள்ளை; அன்றியே, பெண்பிறந்தாரை நலிகைக்கு வில்போலேயிருக்கிற புருவத்தையுடையவன்.** (கடைக்கணென்னும்) b **முழுக்கப் பார்ப்பது அந்யபரரையிறே; சோலையைப் பார்ப்பாரைப்**

---

வ்யா:—(கஞ்சைக்காய்ந்த) 'வில்விழா' என்று ஒரு பேரை வைத்து அந்த விழாவுக்காகக் கண்ணனை அழைத்துவரச்செய்து அதில் கண்ணனைக் கொல்லுவதற்காக, குவலயாபீடம், சாணூர முஷ்டிகர்கள் முதலான பலரை நியமித்துவைத்து, இப்படிக் கண்ணன் அழிந்தால் "ஐயோ! தவறாக என் மருமகனைக் கொன்றுவிட்டார்களே" என்று பரிவுள்ள மாமன்போல் கண்ணீர்விட்டு வருத்தம் கொண்டவன்போலே நடிக்கவேண்டும் என்னும் மனோரத₂த்துடன் கம்ஸன் இருக்க, அவனது நினைவு அவனோடே போகும்படி அவனைத் தொலைத்தானாயிற்று. (கருவில்லி) பெரிய வில்லையுடைய ஆண் பிள்ளை. வில்விழாவுக்கு வந்தானாகையாலே வில்லேந்தி வந்தவனாக வர்ணிக்கிறாள். அன்றிக்கே, என்போல் பெண்ணாகப்பிறந்தவர்களைத் துன்புறுத்துவதற்காகவே பெரிய வில்போல் இருக்கிற புருவத்தை உடையவன் என்றும் பொருள் கொள்ளலாம். *(கடைக்கணென்னும்)* காதலுடையவர்கள் தம்முடைய காதலுக்கு விஷயமாயில்லாதவர்களையே முழுநோக்காகப் பார்ப்பார்கள். காதலுக்கு விஷயமானவர்களைக் கடைக்கண்ணாலேயே பார்ப்பார்கள்; ஒரு சோலைக்குச் சொந்தக்காரன் இது தன்னுடையது என்று பெருமிதமும் இனிமையும் தோற்ற, கடைக்கண்ணால் பார்ப்பதுபோலே.

---

மூன்றும் பாட்டு (கஞ்சையித்யாதி₃) a கருமை-பெருமையாய், பெரியவில்லி என்று முந்தினது. b கடைக்கண்ணாகவேணுமோ, முழுக்கண்ணாகப் பார்க்கவொண்ணாதோவென்ன அருளிச்செய்கிறார் (முழுக்கப் பார்ப்பதித்யாதி₃) நாயகியாகையாலே, மஹாப்ரபு₄வானவன் மானவிச்

போலேயாய்த்து அநந்யபரரைப் பார்ப்பது. 227. "दास्यः खलु मुक्तकण्ठमपरान् पश्यन्ति न स्वीकृतान्" (தாத்3ருஶ்ய: க2லு முக்தகண்ட2மபராந் பஶ்யந்தி ந ஸ்வீக்ருதாந்) என்னக் கடவதிறே. d புருவத்தை வில்லாகவும் கண்ணை அம்பாகவும் சொல்லக்கடவதாயிருக்குமிறே.

---

227. தாத்3ருஶ்ய: க2லு முக்தகண்ட2மபராந்
பஶ்யந்தி ந ஸ்வீக்ருதாந்

[ அப்படிப்பட்ட உத்தமநாயகிகள் கணவனைக்காட்டிலும் வேறுபட்டவர்களையே முழுநோக்குடன் பார்க்கிறார்கள்; கைப்பிடித்தவர்களை அப்படி நோக்குவதில்லை; (கடைக்கண்ணாலேயே காண்கிறார்கள் என்றபடி)] என்று சொல்லப்படுகிறதன்றோ. *(கருவில்லி கடைக்கண் என்னும் சிறைக்கோலால்)* புருவத்தை வில்லாகவும் கண்ணை அம்பாகவும் கவிகள் வர்ணிப்பதுண்டன்றோ.

*(சிறைக்கோலால்)* சிறகையுடைய கழியாகிற அம்பால். கழிசிறை (1 அம்பு 2 து3ஷ்டன்) வரும்போது தெரியாது. இலக்கானவர்கள் விழுவதைக்கொண்டு தெரிந்துகொள்ள வேண்டும். கண்ணால் பார்த்தால் தடுக்கலாம். காணாதிருக்கப் பாய்கையாலே தடுக்கவொண்ணாதபடியிருக்கை. இவன்

---

சோலையைக் கடைக்கண்ணாலே போ4க்3யமாகப் பார்க்குமாபோலே சற்றே கடைக்கண்ணாலே பார்க்கை. c கீழ்ச் சொன்ன இரண்டுக்கும் ப்ரமாணம் அருளிச்செய்கிறார்—(தாத்3ருஶ்ய இத்யாதி3) (தாத்3ருஶ்ய:) என்றதுக்கு, கீழ் க்3ரந்த2ாதி3 தெரியாமையாலே, (பஶ்யந்தி) என்கிற த3ர்ஶநகர்த்ருத்வாநுகு3ணமாக "தாத்3ருஶ்ய:" என்றதுக்கு ஸ்திரீகளைச் சொல்லுகிறதென்று அருளிச்செய்வர். (அபராந் - ஸாத4ாரணாந். முக்தகண்ட2ம் பஶ்யந்தி; ஸ்வீக்ருதாந் அஸாத4ாரணாந் முக்தகண்ட2ம் ந பஶ்யந்தி) என்றபடி. d "வில்லி" என்றால் புருவத்தையுடையவனென்று சொல்லுமோவென்ன அருளிச்செய்கிறார் (புருவத்தையித்யாதி3).



(சிறைக்கோலால்) சிறகையுடைய கோலால். e கழிசிறை e, வரும்போது தெரியாது; பட்டுக்கொடு நிற்கக் காணுமித்தனை. கண்கண்டிருக்கவொண்ணாதபடியிருக்கை. "நோக்குகிறோம்" என்று நோக்கிலிறே கண்ணுக்கு எட்டாத படி போகலாவது. (நெஞ்சூடுருவ) தோற்புரையே போமதல்ல; நெஞ்சிலேபட்டு அவ்வருகேபோய்த்தது. (நிலையும் தளர்ந்து) ஏவுண்டதினேற்றம் எவ்வளவுபோருமென்னில்; நாலடிபோய் விழுகையன்றிக்கே. f நின்ற நிலையிலே விழும்படியாகவாய்த்து அவனுடைய நோக்குவித்3யை இருப்பது. "ஸத்3வித்3யாநிஷ்ட2ர், த3ஹரவித்3யாநிஷ்ட2ர்" என்னுமாபோலே அவனுடைய நோக்குவித்3யாநிஷ்ட2ரிறே இவர்கள். (நைவேனை) ஸந்தி4ப3ந்த4ங்கள் குலைந்து ஶிதி2லையாய்க் கிடக்கிற என்னை.

---

முழுநோக்காகப் பார்த்தால் அப்பார்வைக்கு இலக்காகாதபடி விலகலாம். கடைக்கண்ணாலே நோக்குகையாலே கண்ணுக்கு எட்டாதபடி போகவும் இயலவில்லை. (நெஞ்சூடுருவ) தோலில் மாத்திரம் மேலெழத் தைப்பதல்ல. நெஞ்சிலேபட்டு அதையும் ஊடுருவிச்சென்றது கடைக்கண் என்னும் அம்பு. (நெஞ்சூடுருவவேவுண்டு) நெஞ்சு ஊடுருவும்படி ஏவுண்டு என்றும் வேவுண்டு என்றும் பிரிக்கலாம், ஏவுண்டு என்பது அம்பு என்று சொன்னதற்குப் பொருத்தமாயிருக்கும்.

*(ஏவுண்டு நிலையும் தளர்ந்து)* ஏவுண்டதின் ப2லம் எவ்வளவு? எனில்: நாலடி நடந்து விழவுமொண்ணாமல் நின்ற நிலையிலே விழும்படியாக ஆயிற்று—ஏவுண்ட இவளுடைய ப2லமும் இவளை விழச்செய்த அவனுடைய நோக்கு வித்3யையின்

---

e கழிசிறை-சாடு. சிறகையுடைய கழி- அர்த்த2ம்; க்ஷாத்3ரன் - த்4வநி. கழிசிறை - கழுகினுடைய சிறகென்றபடி. e2 "கடைக்கண் என்னும் சிறைக்கோலால்" என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் (வரும்போதித்யாதி3)
f (நின்றநிலையிலே) என்றது-நோக்குக்கு விஷயபூ4தையான தான் நின்ற நிலையிலே என்றபடி.

g (அஞ்சேலென்னன்) தன்முகமான அம்புதைத்த உறைப்புத் தான் அறிந்தால் "அஞ்சாதேகொள்" என்று வந்து அணைக்கவேண்டாவோ? h (அவனொருவன்) i தன் கையில் அம்பு பட்டவன் படுகிற நோவுகண்டு பொறுக்க மாட்டாதே. 228. "सञ्जातबाष्पः" (ஸஞ்ஜாதபா₃ஷ்ப:) என்று கண்ணநீர் விழவிட்டானுமொருவன்; இது தானே போதுபோக்காக இருக்கிற இவனுமொருவன்.

---

சக்தியுமிருப்பது "ஸத்₃வித்₃யாநிஷ்டு₂ன், து₃ஹரவித்₃யாநிஷ்டு₂ன் என்று உபாஸகர் பலவகைப்பட்டிருப்பர். அந்த ரீதியில் இவர்களை நோக்கு வித்₃யாநிஷ்டு₂ர் என்பது பொருத்தம். *(கைவேனே)* எலும்புகூட்டுக்கள் குலைந்து கலகலத்துப்போய்கிடக்கிறஎன்னை.

*(அஞ்சேலென்னன்)* தன்முகமான (1 தன் முகத்திலுள்ள கண்ணாகிற; 2 தன் மூலமான) அம்பு தைத்தகடுமையைத் தான் அறிந்தானாகில் "அஞ்சாமலிரு" என்று ஓடிவந்து அணைக்கவேண்டாமோ? *(அவனொருவன்)* தன் கையில் அம்புபட்டு வீழ்ந்து கிடக்கிற வாலி படுகிற துன்பங்கண்டு பொறுக்கமுடியாமல்

228. இத்யேவமார்த்தஸ்ய ரகு₄ப்ரவீர:
ஶ்ருத்வா வசோ வால்யநுஜஸ்ய தஸ்ய |
ஸஞ்ஜாதபா₃ஷ்ப: பரவீரஹந்தா
ராமோ முஹூர்த்தம் விமநா ப₃பூ₄வ ||
*[ரா·கி 24-24]*

[மிகவருந்தியவனும், வாலியின் தம்பியுமான அந்த ஸுக்₃ரீவனின் வார்த்தையைக் கேட்டு, வீரர்களான எதிரிகளையும் அழியச்செய்யும் ராமன் கண்ணீர்வரப்பெற்றவனாய், முஹூர்த்த நேரம் மனம் வெதும்பினான்.] என்கிறபடியே கண்ணீர்விட்ட கருணைக்கடலான ஸ்ரீராமபிரானுமொருவன்; தன் கண் அம்பு பட்டுத் துடிப்பவர்களைக் கண்டு மகிழ்வதையே போது போக்காகக்கொண்டு அவர்களை 'அஞ்சேல்' என்று கூறாத கருணையற்ற இக்கண்ணனும் ஒருவனே!

---

g,h i "அஞ்சேலென்னனவனொருவன்" என்றபோதே - அஞ்சேலென்னும் ஒருவனான சக்ரவர்த்தித்திருமகனில் வ்யாவ்ருத்தி (தன் கையில் இத்யாதி₃)



(அவன் மார்வணிந்த வனமாலை) ஒருமாலை பெறவேணுமென்றல்ல இவளுக்கு நிர்ப்ப₃ந்த₄ம்; அவன் மார்விலே ஆசைப்பட்டு இட்ட மாலைவேணுமென்றாய்த்து. (வஞ்சியாதே தருமாகில்) j நீங்கள்சென்று அறிவிக்கக்கொள்ள. தன்னுடைய ஸ்மிதத்தாலும் வீக்ஷணத்தாலும் நீங்கள் சென்ற காரியத்தை மறப்பித்து வஞ்சியாதே தருமாகில்; k உங்களையும் என்னைப்படுத்திற்றுப் படுத்தாதே தருமாகில்; (மார்வில் கொணர்ந்து புரட்டீரே) புண்பட்டவிடத்தே பரிஹரிக்க வேணுமிறே; நெஞ்சூடுருவ வேவுண்டிறே கிடக்கிறது; l அவன் l, தன்னுடனே பரிமாற நினைத்து ஆசைப்பட்டதெல்லாம் மாலையிலிட்டுச் சொன்னபடி என்தான்! 3.

---

(அவன் மார்வணிந்த வனமாலை) ஏதோ ஒரு மாலையைப்பெற்றால் இவளுக்குப் போதாது; அவன் மார்பிலே ஆசைப்பட்டு இட்ட மாலையே வேண்டும் என்பதே இவள் விருப்பம். *(வஞ்சியாதே தருமாகில்)* நீங்கள் சென்று எனது நிலையை அறிவித்தபின்பு, என்னைத் தன்னுடைய புன்முறுவலாலும் கண்வீச்சாலும் ஏமாற்றியதுபோலே, உங்களையும் அவற்றாலே நீங்கள் சென்ற கார்யத்தை மறக்கச்செய்து ஏமாற்றாமல் தருவானாகில்; என்னைப் படுத்தின பாடெல்லாம் உங்களையும் படுத்தாமல் தருவானாகில் என்று கருத்து. *(மார்வில் கொணர்ந்து புரட்டீரே)* நெஞ்சூடுருவவேவுண்டு துடிக்கும் என்னுடைய புண்பட்ட மார்பிலே அவன் மார்பிலணிந்த வனமாலையை இட்டுப் புரட்டுவீர்களாக. புண்பட்ட இடத்திலன்றோ மருந்து தடவ வேண்டும். அவன் மார்போடு அணைத்துப் பரிமாறுவதற்கு

---

j,k இத்தால் ப₂லிதம் (உங்களையும்) என்றது. அதாவது - தன்னையும் ஸ்மிதவீக்ஷணாதி₃களாலேயிறே வஞ்சித்ததென்றபடி. g (அஞ்சேல்) அஞ்சாதே l₂ தன்னுடனேயென்றது - ஆண்டாளை; l அவன்தன்னுடனே என்றது ஈஶ்வரனோடே என்னவுமாம். மாலையிலிட்டு ஸம்ஶ்லேஷத்தை மறைத்துச் சொன்னபடி என்தான்! என்றபடி. 3.

## பதின்மூன்றாந்திருமொழி — நான்காம் பாட்டு

**ஆரே யுலகத் தாற்றுவார் ஆயர் பாடி கவர்ந்துண்ணும்**
**காரே றுழக்க வுழக்குண்டு தளர்ந்தும் முறிந்தும் கிடப்பேனை**
**ஆரா வமுத மனையான்ற னமுத வாயி லூறிய**
**நீர்தான் கொணர்ந்து புலராமே பருக்கி யிளைப்பை நீக்கீரே.**

**பதவுரை:**— **ஆயர்பாடி**— திருவாய்ப்பாடி முழுவதையும், **கவர்ந்து உண்ணும்** — கொள்ளைகொண்டு அநுப4விக்கிற, **கார் ஏறு** ஒரு கறுத்த காளைபோன்ற கண்ணன், **உழக்க**— துன்புறுத்த, **உழக்குண்டு** — (அதனால்) துன்பப்பட்டு, **தளர்ந்தும் முறிந்தும் கிடப்பேனை**—பலவகையான நலிவுகளையடைந்து நொந்துகிடக்கிற என்னை, **உலகத்து** - இவ்வுலகத்திலே, **ஆற்றுவார்**—தேறுதல் சொல்லி ஆறச் செய்பவர், **ஆரே**—ஆருண்டு? (யாருமில்லை;) (நாங்களிருக்கிறோமே அம்மா! உனக்கு என்னசெய்யவேணும்? என்று தாய்மார் கேட்க;) **ஆரா அமுதம் அனையான்தன்**— எவ்வளவநுப4வித்தாலும் திருப்தி பிறவாத அம்ருதம் போன்ற கண்ணபிரானுடைய, **அமுதம் வாயில்**—அம்ருதம் சுரக்கிற திருவாயில், **ஊறிய**—ஊறிக்கிடக்கிற, **நீர்தான்**— ரஸத்தையாவது, **கொணர்ந்து**—கொண்டுவந்து, **புலராமே பருக்கி**—எனது உடல் உலர்ந்துபோகாதபடி அதை நான் பருகும்படிபண்ணி, **இளைப்பை நீக்கீர்**—(எனது) ஆயாஸத்தைப் பரிஹரிக்கப்பாருங்கள் (என்கிறாள்.)

---

ஆசைப்பட்டதெல்லாம் மாலையிலிட்டுச் சொன்ன நயம் சுவைக்கத்தக்கது. 3.

4. *அவ:*— மாதவன்தன் வாயமுதத்தை என்னைப் பருகச் செய்து என் இளைப்பை நீக்குவீர்களாக என்கிறாள்.

***வ்யா:—(ஆரே உலகத்து ஆற்றுவார்)*** [பக்கம் 18ல் 14வது ப்ரமாணத்தின்படி] தன் ஸ்வரூபத்தை நோக்கி ஆறியிருந்த ஸீதாபிராட்டியால்தான் எனக்கு ஆறுதல் சொல்லமுடியுமோ?



வ்யா:— நாலாம் பாட்டு (ஆரேயுலகத்தாற்றுவார்) 14. "तत्तस्य सदृशं भवेत्" (தத் தஸ்ய ஸத்3ருஶம் ப4வேத்) என்றிருப்பார்க்குத்தான் ஆற்றப்போமோ? a 229. "रामस्य व्यवसायज्ञा" (ராமஸ்ய வ்யவஸாயஜ்ஞா) என்றும், b 230 "एतद्व्रतं मम (ஏதத்3வ்ரதம் மம) என்றும், c 231. "अवगाह्यार्णवं स्वप्स्ये" (அவகா3ஹ்யார்ணவம் ஸ்வப்ஸ்யே) என்றும் சொல்லுகிறபடிகளை அறிந்திருக்குமவளாகையாலே த4ரித்திருந்தாள், d 'ஆஶாலேஶமுடையாரை ஒருநாளும்

---

229. ராமஸ்ய வ்யவஸாயஜ்ஞா லக்ஷ்மணஸ்ய ச தீ4மத:।
நாத்யர்த்த2ம் க்ஷுப்4யதே தே3வீ க3ங்கே3வ
ஜலதா3க3மே ॥ [ரா.ஸு 19.4]

[ராமனுடையவும், பு3த்3தி4மானான லக்ஷ்மணனுடையவும் உறுதியை அறிந்தவளாகையாலே, தே3வியானவள், மழைகாலத்திலும் தெளிந்திருக்கும் க3ங்கை3யைப்போலே, சிறிதும் கலங்கவில்லை.] என்றும், [பக்கம் 492ல் 151வது ப்ரமாணத்தின்படியும்,

231. அவகா3ஹ்யார்ணவம் ஸ்வப்ஸ்யே
ஸௌமித்ரே! ப4வதா விநா।
கத2ஞ்சித் ப்ரஜ்வலந் காம:
ஸ மாம் லுப்தம் ஜலே த3ஹேத் ॥ [ரா. யு 5.93]

[லக்ஷ்மணா! (உன்னைப் பார்ப்பதால் ஸீதையின் நினைவு வருகிறபடியால்) உன்னை விட்டுவிட்டு ஸமுத்3ரத்தில் இறங்கித் தூங்கப்போகிறேன். மிகவும் ஜ்வலிக்கும் அந்தக் காமாக்3னியானது ஜலத்தில் தூங்கும் என்னைக் கஷ்டப்பட்டே த3ஹிக்கும்.] என்றும் தன்னை அண்டியிருப்பவர்களை ரக்ஷிப்பதையே விரதமாகக் கொண்ட இராமபிரானுடைய கு3ணங்களை அறிந்திருப்

---

நாலாம் பாட்டு. (ஆரேயித்யாதி3) a,b,c பிராட்டி தான் த4ரிக்கைக்கு ஹேதுவேதென்ன அருளிச்செய்கிறார் (ராமஸ்ய வ்யவஸாயஜ்ஞேத்யாதி3) c,b,d (அவகா3ஹ்யார்ணவம் ஸ்வப்ஸ்யே) என்றது - ப்ரணயித்வத்தைப் பற்ற

விடேன்' என்றும். 'அவர்களை விடவேண்டிற்ருகில் நானுளேனுகேன்' என்றுமிறே அவர் சொல்லிவைப்பது; e 232. "अप्यहं जीवितं जह्याम्" (அப்யஹம ஜீவிதம் ஜஹ்யாம்) என்றிருக்குமவரிறே.

229. "लक्ष्मणस्य च धीमतः" (லக்ஷ்மணஸ்ய ச தீ4மத:) அவர் தம்முடைய சொல்லாலே மாயாம்ருக3த்தின் பின்னே "அது மாயை" என்றறியாதே பிடிக்கவொருப்பட்டபோதும்

---

பவளாகையாலே அவள் த4ரித்திருந்தாள். "சிறிது அன்புடையவர்களையும் ஒருநாளும் கைவிடமாட்டேன்" என்றும், "அவர்களைக் கைவிடவேண்டிவந்தால் நான் உயிர்த4ரிக்கமாட்டேன்' என்றுமன்ரோ ராமபிரான் அடிக்கடி சொல்லியிருப்பது.

232. அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்
த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணாம்।
ந து ப்ரதிஜ்ஞாம் ஸம்ஶ்ருத்ய
ப்3ராஹ்மணேப்4யோ விஶேஷத:॥ [ரா. ஆ 10-19]

[ஸீதே! நான் உயிரையும், லக்ஷ்மணனோடுகூட உன்னையும் விடுவேனேயொழிய, செய்த ப்ரதிஜ்ஞையை விடமாட்டேன்; அதிலும் விஶேஷமாக ப்3ராஹ்மணர்களுக்குக் கொடுத்த ப்ரதிஜ்ஞையைவிடேன்.] என்று இவளிடமே சொன்னவனன்ரோ. ஆகையால் ஸீதை த4ரித்திருக்கக் குறையில்லை. இக்கண்ணன் அப்படிப்பட்டவனல்லன் என்று கருத்து.

229. "*ராமஸ்ய வ்யவஸாயஜ்ஞா*" என்னும் ஸ்ரீராமாயண ஶ்லோகத்தில் "*லக்ஷ்மணஸ்ய ச தீ4மத:*" (அறிவாளியான லக்ஷ்மணனுடைய உறுதியையும் அறிந்தவள்) என்று சொன்னதின் கருத்தாவது — ஸ்ரீராமபிரான் பிராட்டியான தன்னுடைய சொல்லுக்கு வசப்பட்டு மாயமானை மாய மாரீசன் என்று அறியாமல், பின்னே சென்று பிடிக்க முற்பட்ட

---

வாலகையாலே த4ரிக்கைகுக்குடலாயிருக்குமதொழிய, (**ஏதத்3 வ்ரதம் மம**) என்றது த4ரிக்கைக்குடலாமோவென்ன அருளிச்செய்கிருர் (ஆஶாலேஶமித்யாதி3) b(**மித்ரப4ாவேந**) இத்யாதி3. e சொல்லிவைத்ததெங்கேயென்ன அருளிச்



"இது மாயாம்ருக3ம்" என்று சொல்லும்படி அவ்வளவிலும் தெளிந்திருக்கும் இளையபெருமாள் படியை அறிந்திருக்கையாலும். 229. "नात्यर्थं क्षुभ्यते देवी" (நாத்யர்த்த2ம் க்ஷுப்4யதே தே3வீ) அவர் தலையாலே சுமக்கும்படி வல்லபை4யாய்ப் போந்தவளாகையாலே f க்ஷோப4ஹேதுக்களுண்டாயிருக்கச்செய்தேயும் க்ஷுபி4தையாய்த்திலள், g ஸத்தாநாஶம் பிறக்குமளவாயிருக்கச்செய்தேயும் த4ரித்திருந்தாள்; 229. "गङ्गेव जलदागमे" (க3ங்கே3வ ஜலத3ாக3மே) நிரந்தரமாக வர்ஷத4ாரை விழாநிற்கச்செய்தேயும் க3ங்கை3 தெளிந்திருக்குமாபோலே.

h (ஆயர்பாடி இத்யாதி3) i ராமாவதாரத்தில் கு3ணஜ்ஞானத்தாலே த4ரித்திருந்தாற்போலே இருக்கப்போமோ.

---

போதும் 'இது மாயமான்' என்று சொல்லும்படி அந்நிலையிலும் தெளிவுடையவராயிருக்கும் அறிவாளியான இளையபெருமாளுடைய உறுதியை அறிந்திருக்கையாலும் பிராட்டி கலங்கவில்லை என்று கருத்து. "நாத்யர்த்த2ம் க்ஷுப்4யதே தே3வீ' [ஸீதாபிராட்டி சிறிதும் கலங்கவில்லை] என்றதின் கருத்தாவது—ராமபிரான் தலையில் வைத்துக் கொண்டாடும்படி அவனுக்கு இனியவளாயிருந்தவளாகையாலே, கலங்குவதற்குக் காரணங்கள் இருந்தபோதிலும் சிறிதும் கலங்கவில்லை. அதனாலேயே உயிர்போகும் நிலையிலிருந்தபோதிலும் உயிர்த4ரித்திருந்தாள் என்கை "க3ங்கே3வ ஜலத3ாக3மே' (மழை காலத்தில் க3ங்கைபோலே) என்றதின் கருத்தாவது — இடைவிடாமல் மழைவிழும் மழைகாலத்திலும் க3ங்கை3 சிறிதும் கலங்காமல் தெளிந்திருப்பதுபோலவே பிராட்டி சிறிதும் கலங்காமலிருந்தாள் என்றபடி.

(**ஆயர்பாடி கவர்ந்துண்ணும் காரேறு உழக்க உழக்குண்டு**) ராமாவதாரத்திலே அவனுடைய கு3ணங்களை அனுஸந்தி4த்து ஸீதாபிராட்டி த4ரித்திருந்தது போலலே இருக்கமுடியுமோ

---

செய்கிருர் (அப்யஹமித்யாதி3) f, g (க்ஷோப4ஹேதுக்களுண்டாயிருக்கச்செய்தேயும்) என்றதின் விவரணம் (**ஸத்தாநாஶமித்யாதி3**)

க்ருஷ்ணனுடைய தீம்பிலே புண்பட்டவர்களுக்கு? பஞ்சலக்ஷங்குடி உண்டிறே திருவாய்ப்பாடி; அஞ்சுலக்ஷங்குடியிற் பெண்கள் பக்கல் பண்ணும் வ்யாமோஹத்தையெல்லாம் ஒருமடை செய்து ஒருத்தி பக்கலிலே பண்ணினால் பிழைக்கப் போமோ? (தளர்ந்தும் முறிந்தும் கிடப்பேனை) அவன் கண்ணற்றுக் துகைத்துப் பரிமாற, அத்தாலே ஸந்தி4ப3ந்த4ங்கள் குலைந்து "இனியொரு அவயவியாக்கிக்காணவொண்ணாது" என்னும்படி மங்கிக்கிடக்கிற என்னை.

j (ஆராவமுதமனையான்) k இவளுடைய விஶல்யகரணியும் ஸந்தா4நகரணியும் இருக்கிறபடி. (தன் அமுத

---

கண்ணனுடைய துஷ்டத்தனத்தாலே புண்பட்டவர்களுக்கு? திருவாய்ப்பாடியில் அஞ்சு லக்ஷம் குடியுண்டு. அவற்றில் உள்ள பெண்கள் அனைவரிடமும் பண்ணும் காதலையெல்லாம் ஒருமுகமாக என் ஒருத்தியிடம் பண்ணினால் என்னால் எப்படிப் பிழைக்கமுடியும்? *(தளர்ந்தும் முறிந்தும் கிடப்பேனை)* கறுத்த காளை போன்ற அவன் அஞ்சு லக்ஷம் குடியில் பெண்களுடைய மனங்களை அபஹரித்து அவர்களைத் துன்புறுத்துவதுபோலே என் மனத்தையும் கருணையற்றுத் துகைத்துப்பரிமாற, அதனாலே எலும்பு பூட்டுக்கள் குலைந்து 'இனி இவளை ஓர் உருவாகக் காணமுடியாது'' என்று சொல்லும்படி நைந்து கிடக்கிற என்னை.

*(ஆராவமுதமனையான் தன் அமுதவாயில் ஊறிய நீர்)* ஸ்ரீராமாயணத்தில் அனுமன் கொண்டுவந்த ஸஞ்ஜீவி மலையில் விசல்யகரணி, ஸந்தா4நகரணி என்று இரண்டு மூலிகைகள் உண்டு விசல்யகரணி ராக்ஷஸர்களால் அடிபட்ட வாநரசேனை

---

h,i "காரேறுழக்க உழக்குண்டு" என்றதுக்குத் தாத்பர்யம் (ராமாவதாரத்திலித்யாதி3) கவர்ந்து - க்3ரஹித்து. கவர்ந்துண்கை - பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களுடைய மநஸ்ஸை அபஹரித்து அவர்களை அநுப4விக்கை, "உழக்க"- துவக்க. j k "அமுதமனையான்" என்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் (இவளுடையவித்யாதி3) திருப்பவளத்துநீர் இவ



வாயிலித்யாதி3) "மார்வில் கொணர்ந்து புரட்டீர்" என்றது l எல்லாம் பெற்றதில்லையேயாகிலும், அவனுடைய ஓரோ அவயவத்திலுள்ளத்தைக் கொடுவந்தாகிலும். (புலராமே m பருக்கி) இது சருகாய்ப்போகாமே அந்நீரைக் கொடுவந்து தெளித்துப் பருகும்படி பண்ணி. உமிழ்நீர் மருந்தாகத்தீருங்காணும் என்நோய். (இளப்பை நீக்கீரே) அவ்யவதா4நேந என் த3ஶைக்கு அவனைக்கொடுவரவேணு

---

களின் உடம்பினுள் தைத்திருந்த அம்புகளை எடுத்துவிட்டது. ஸந்தா4நகரணி அம்புகள் தைத்த புண்களை ஆற்றிவிட்டது. இவள் தனக்கு ஆராவமுதமனையானான கண்ணன் விசல்யகரணியாகவும் அவனுடைய அமுதவாயிலூறிய நீர் ஸந்தா4நகரணியாகவும் ஆகவேண்டும் என்று விரும்புகிறாள். அன்றிக்கே ஆராவமுதமனையான் என்கையாலே கண்ணனையே விசல்யகரணியாகவும் ஸந்தா4நகரணியாகவும் நினைக்கிறாள் என்றும் கொள்ளலாம். *(தன் அமுதவாயில் ஊறிய நீர்தான் கொணர்ந்து)* "மார்வில் கொணர்ந்து புரட்டீர்" என்று முன்பாட்டில் சொன்னபடி பல அவயவங்களின் ஸம்ப3ந்த4முடைய மாலையைக் கொண்டுவர முடியவில்லையாகிலும், அவனுடைய வாயாகிற ஓர் அவயவத்திலுள்ள நீரையாவது கொண்டு வாருங்கள் என்கிறாள். *(புலராமே பருக்கி)* என் உடல் சருகாய் உலர்ந்து போகாதபடி அந்நீரைக்கொண்டுவந்து தெளித்து அதை நான் பருகும்படி பண்ணி. பாம்புகடி முதலானவற்றுக்கு உமிழ்நீர் மருந்தாவது போலே, இவள் தன் நோயும் கண்ணனுடைய வாயில் ஊறிய உமிழ்நீர் மருந்தாகத்தீரும் என்கிறாள். *(இளைப்பை நீக்கீரே)* எனது நிலைக்கு அவனையே கொண்டுவர

---

ளுக்கு இரண்டு கரணியும்.- விஶல்யகரணி - உள்ளில் வேதனையைப் போக்குகிறது; ஸந்தா4நகரணி - மேலே ஸமாதா4நம்பண்ணி அவயவங்களைப் பொருந்தப்பண்ணுகிறது. l (எல்லாம் பெற்றதில்லையேயாகிலும்) என்றது - எல்லா அவயவங்களோடு ஸ்பர்ஶித்த மாலை கிடையாவிட்டாலும், ஏகாவயவ ஸ்பர்ஶமான திருப்பவள ஜலத்தையாகிலும் கொண்டுவாருங்கோளென்றபடி. m "பருக்கி"

மிறே; அது செய்யவொண்ணாத பின்பு இத்தாலே என் இளைப்பைப் பரிஹரித்துக்கொண்டு நிற்கப்பாருங்கோள். n வாய் மருந்திட்டுத்தீர்க்கவேண்டும் நோயிறே இது. 4.

## பதின்மூன்றாந்திருமொழி— ஐந்தாம் பாட்டு

அழிலும் தொழிலு முருக்காட்டா
    னஞ்சே லென்னா னவனொருவன்
தழுவி முழுசிப் புகுந்தென்னைச்
    சுற்றிச் சுழன்று போகானால்
தழையின் பொழில்வாய் நிரைப்பின்னே
    நெடுமா லூதி வருகின்ற
குழலின் துளைவாய் நீர்கொண்டு
    குளிர முகத்துத் தடவீரே.

பதவுரை:— அழிலும்—அழுதாலும், தொழிலும்—தொழுதாலும், உரு காட்டான்—தன் வடிவைக் காட்டாதவனாயும், அஞ்சேல் என்னான் அவன் — (உருவைக் காட்டாவிடிலும்) 'அஞ்சேல்' என்ற சொல்லும் சொல்லாதவனாயுமுள்ள, ஒருவன்—ஒரு மஹாநுபாவன் [கண்ணன்], புகுந்து—

---

வேண்டும். அது செய்யமுடியாமையாலே, இந்த நீரையாவது கொண்டு வந்து என் இளைப்பையாவது நீக்குங்கள் என்கிறாள். விஷக்கடிக்கு வாய் மருந்திட்டுத் தீர்ப்பது போலே இவளுடைய நோயும் கண்ணனுடைய வாய்மருந்திட்டுத்தீர்க்க வேண்டும்படி இருக்கிறதன்றோ. 4.

---

தெளித்தென்னுதல்; பருகும்படி பண்ணி என்னுதல். n வாய்மருந்தாவது - விஷய ப்ரவணரான வைத்₃யர்கள், ஆரேனும் ராஜதா₃ராதி₃களுக்குப் பாம்பு முதலானவை கடித்தால் தத்பரிஹாரார்த்த₂மாக அவர்கள் வாயிலே உமிய வேணுமென்றால், அவர்கள் ஜீவித்தாலமையுமென்று அவர்களும் அநுமதி பண்ணினால் அவர்கள் அப்படியே உமிவர்கள்; அத்தைச் சொல்லுகிறது. 4.



இங்கே வந்து, என்னை தழுவி முழுசி—என்னை நெருக்கி யணைத்து, சுற்றிச் சுழன்று—முன்னும் பின்னும் சூழ்ந்து கொண்டிருந்து, போகான்—போகாமலிருக்கிறான்; ஆல்!— ஐயோ! தழையின் பொழில் வாய்—பீலிக் குடைகளாகிற சோலையின் கீழே, நிரை பின்னே—பசுக்கூட்டங்களின் பின்புறத்திலே, நெடுமால்—பெருங்காதலுடைய கண்ண பிரான், ஊதி வருகின்ற—ஊதிக்கொண்டு வரப்பெற்ற, குழலின் துளைவாய்—புல்லாங்குழலின் த்₃வாரங்களிலுண்டாகிற, நீர்கொண்டு—நீரைக்கொணர்ந்து, முகத்து—என்னுடைய முகத்திலே, குளிர தடவீர்—குளிர்த்தியாகத் தடவுங்கள்.

அவ:— அஞ்சாம் பாட்டு. (அழிலுமித்யாதி₃) a எனக்கே கூறுயிருக்குமது கிடையாதாகில், b வெறுந்தரையிலே போகிறவற்றையாகிலும் கொடுவந்து ஆஶ்வஸிப்பிக்கப் பாருங்கோள் என்கிறாள்.

வ்யா:— (c அழிலும் d தொழிலும் e உருக்காட்டான்) f ஏதேனுமொன்றை ப்ரயோகி₃க்கிலும் உருக்காட்டுகிறிலன்;

---

5 அவ:—"நாயகியான எனக்கேயுரியதான வாயமுதம் கிடைக்காதாகிலும், அவன் குழலூதும்போது அக்குழலின் துளைகளின் வழியாக வெறுந்தரையிலே வீணாகப்போகின்ற நீரையாவது கொண்டுவந்து என்முகத்தில் குளிரத்தடவுங்கள்" என்கிறாள்.

வ்யா:—(அழிலும் தொழிலும் உருக்காட்டான்) கண்ணீர் விட்டழுதாலும் தொழுதாலும் தன் வடிவைக்காட்டாதிருக்கிறான். ஸ்வாபதே₃ஶத்தில் 'அழிலும்' என்றது ப₄க்தலக்ஷ

---

அஞ்சாம் பாட்டு. (அழிலுமித்யாதி₃) a (எனக்கே கூறுயிருக்குமது) என்றது - வாக₃ம்ருதத்தை. b வெறுந் தரையிலே போகிறவை-குழலின் துளைவாய் நீர். c அழுகை-ப₄க்தி. d தொழுகை-ப்ரபத்தி. g ப்ரபத்தியை-ப்₃ரஹ்மாஸ்த்ரமென்கிறது. e உரு-வடிவும், அழகும். c. f (அழிலும்)

g ப்3ரஹ்மாஸ்த்ர ப்ரயோகம் பண்ணிலும் உருக்காட்டுகிறிலன். (அழிலும்) h கண்ண நீர் விழுந்தவளவிலும் தன்னைக் காட்டுகிறிலன. (தொழிலும்) i அதுக்கவ்வருகேயொரு நிலை நின்றாலும் தன்னைக் காட்டுகிறிலன். (தொழிலுமுருக் காட்டான்) தொழுதார்க்கு ஸ்வம்மோதான் இவ்வஸ்து? 233. "भक्तानां" (ப4க்தாநாம்) என்றிருக்கிற வடிவைக் காட்டுகிறிலன். அவனுடைய ஆத்மாபஹாரமிருக்கிறபடி, j 234. "चोरेणात्मापहारिणा" (சோரேணாத்மாபஹாரிணா) என்

ணங்களில் ஒன்றாகையாலே ப4க்தியைச் சொல்லுகிறது. 'தொழிலும்' என்றது நமஸ்காரபர்யாயமான ப்ரபத்தியைச் சொல்லுகிறது. ஸ்வரூபவிருத்3த4மான ஸாத4னப4க்தியை அனுஷ்டி2த்தாலும் தன் வடிவைக்காட்டுகிறானல்லன். ப்3ரஹ்மாஸ்த்ரம் போலே தப்பாத உபாயமான ப்ரபத்தியை அனுஷ்டி2த்தாலும் தன் வடிவைக்காட்டுகிறானல்லன். (அழிலும்) அழுது ஆகாத்தியம் செய்தாலும் தன்னைக்காட்டுகிறானல்லன். (தொழிலும்) அதற்கும மேற்பட்டதாய், அவன் தொழ வேண்டிய நான் அவனைத்தொழுவதாகிற ஸாஹஸகார்யத்தைச் செய்தாலும் தன் வடிவைக்காட்டுகிறானல்லன். (தொழிலும் உருக்காட்டான்) [பக்கம் 229ல் 70வது ப்ரமாணத்தின்படி] தன் வடிவு ப4க்தர்களுக்காக ஆனது என்று ஶாஸ்த்ரம் சொன்னதைக் காட்டுகிறவிதம் இதுதானோ?

234. யோऽந்யதா2 ஸந்தமாத்மாநமந்யதா2 ப்ரதிபத்3யதே।
கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா ||
[பா4ர. உத் 42-35]

என்றதுக்கு ப4க்தியாக்கி, (ஏதேனுமொன்றை) என்றது- அதினுடைய ஸ்வரூப விரோதி4த்வம் தோற்றுகைக்காக. f, h "ஏதேனும்" என்ற வாக்ய விவரணம் (கண்ணநீர்) என்றது. g i "ப்3ரஹ்மாஸ்த்ரம்" இத்யாதி3 வாக்யவிவரணம் (அதுக்கவ்வருகே) என்றது. k இத்தால் ப2லிதம் (ப4க்தி ப்ரபத்திகள்) என்றது. j தன் விக்3ரஹத்தைக் காட்டாதிருந்தால் அது ஆத்மாபஹாரமாமோவென்ன; ஏதேனு



னக்கடவதிறே k ப4க்திப்ரபத்திகள் இரண்டுக்கும் வாசி யறுத்தார்களும், l விக்3ரஹமே உத்3தே3ஶ்யமென்னுமிடத்தை வெளியிட்டார்களும் ஆழ்வார்களிறே. m இப்ப4க்திதான் கர்த்தவ்யமாய் ஸாத4நபு3த்3த்4யா பண்ணுகையன்றிக்கே தன்னடையே தவிரவொண்ணாதாய் வருமதென்றும், விக்3ர

[ப4க3வானுடைய உடைமையாயிருக்கும் ஆத்மாவை, எவனொருவன் தனக்குச் சொந்தமாக நினைக்கிறானோ, ஆத்மாவை அபஹரிப்பவனான அந்தத் திருடனால் செய்யப்படாத பாபம் எது] என்று ஜீவனுக்கு ஆத்மாபஹாரத்தை ஶாஸ்த்ரம் சொன்னது போலே, ப4க்தர்களுடையதான தன் ஆத்மாவை (திருமேனியை) அபஹரிப்பதைச் செய்கிறானே! ப4க்திப்ரபத்திகளிரண்டும் தனித்தனி உபாயங்களாக ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டபோதிலும் தங்களுடைய ப4க்தியே ப்ரபத்தி என்றும், ப்ரபத்தியே ப4க்தி என்றும் சொல்லலாம்படி இவற்றினிடையே வேற்றுமையைப் போக்கினவர்களன்றோ ஆழ்வார்கள். எம்பெருமானுடைய ஸ்வரூபமும் திருமேனியும் உத்3தே3ஶ்யங்கள் என்று ஶாஸ்த்ரங்கள் சொன்னபோதிலும் ஸ்வரூபத்தையும் அதிலுள்ள கு3ணங்களையுங்காட்டிலும், திருமேனியும் அதிலுள்ள கு3ணங்களும் மிகவும் உத்3தே3ஶ்யங்கள் என்று அறுதியிட்டவர்களும் ஆழ்வார்களேயன்றோ. அதனாலேயே இங்கு "அழிலும் தொழிலும்" என்று ப4க்திப்ரபத்திகள் இரண்டுமே தனக்கு வாசியற உள்ளது என்றும், 'உருக்காட்டான்" என்று விக்3ரஹமே தனக்கு உத்3தே3ஶ்யமென்றும் அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள் தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளான ஆண்டாள் தமப்பனார்களின் ஸித்3தா4ந்தத்தை வெளியிடுகிறாள். ஶாஸ்த்ரங்கள் சொன்ன ப4க்தி மோக்ஷத்தின் பொருட்டு

மாக, பிறரத்தைக் கொள்ளுகை ஆத்மாபஹாரமென்னுமதுக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் (சோரேணேத்யாதி3) l ஸ்வரூபகு3ணங்களிருக்க "உருக்காட்டான்" என்பானென்னென்ன அருளிச்செய்கிறார் (விக்3ரஹமே, இத்யாதி3). m ப4க்திதான் உபாயமாகாதோ, ஸ்வரூபகு3ணங்கள்தான் உத்3தே3ஶ்யமன்றோவென்ன அருளிச்செய்கிறார் (இப்ப4க்தி

ஹத்துக்கவ்வருகு தேட்டமன்றென்றும் அறியும்படி பண்ணினர்கள் இவர்களிறே. n ஆகையாலிறே காமிநிகள் பாசுரத்தை ஆசைப்பட்டு அம்முக₂த்தாலே அநுப₄விக்கிறது.

( அஞ்சேலென்னன் அவனொருவன் ) o பிள்ளைகாள்! பிறர்படியறியாதொழிகிருர் வேணுமாகில்; தன்படி அறியாமை இல்லையே; 'நம்மைப் பிரிந்தார் த₄ரிக்கமாட்டார்கள்' என்று கடுகவந்து அணைத்துக்கொண்டு நிற்கவேண்டாவோ இவனுக்கு? (அவனொருவன்) p ராமாவதாரத்தில் வ்யா

ஸாத₄னமாக அனுஷ்டி₂க்கவேண்டியதொன்று. இவ்வாழ்வார்களின் ப₄க்தி அப்படிப்பட்டதன்று. அவனை அனுப₄விக்கப்பெருத ஆற்ருமையாலே வருவதொன்று. ஶாஸ்த்ரங்கள் ஸ்வருபகு₃ணங்களை உத்₃தே₃ஶ்யமாகச் சொல்லியிருந்தபோதிலும், பொங்கும் பரிவுடையவர்களுக்குத் திருமேனிக்கு மேலே வேறொன்றும் தேவையில்லை என்று உலகமறியும்படி செய்தவர்களும் இவ்வாழ்வார்களேயன்ரே. அதனாலேயன்ரே இவர்கள் நாயகீ பா₄வத்திலே நின்று, அவனைக் காமுற்ற தலைமகள் பேச்சாலே பேசி அவனை அனுப₄விக்கின்ருர்கள். ஆண்களாகப் பிறந்து பெண்ணுடையுடுத்துப் பேசிய அவர்கள் நிலை அதுவானுல், பெண்ணாய்ப் பிறந்து 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்னும் இவளைப்பற்றிச் சொல்லவேண்டாவன்ரே.

*(அஞ்சேலென்னன் அவனொருவன்)* தோழிகளே! தன்னைப் பிரிந்தவர்கள் படுகிற பாட்டை இவன் அறியாமலிருப்பது ஒருபுறமிருக்கட்டும். தன் ப்படியை (1 திருமேனியை 2 தன்மையை) யாவது இவன் அறிந்திருக்கவேண்டுமே! 'நம்மைப் பிரிந்தவர்கள் உயிர்த₄ரிக்கமாட்டார்கள்' என்று தன் திருமேனியின் தன்மையை அறிந்திருந்தானுகில் இவன் விரைவில் வந்து என்னை அணைத்துக்கொண்டிருக்கவேண்டாமோ? ( அவனொருவன் )

தானித்யாதி₃. n இதுக்கு நியாமகமேதென்ன அருளிச்செய்கிருர் (ஆகையாலிறே) என்று.

p ராமாவதார வ்யாவ்ருத்தி மூன்ரும் பாட்டிற் சொல்லுகிறதென்றபடி. o 'உருக்காட்டான்'' என்றத்தைக் கடா



வ்ருத்தி சொல்லிற்று; q க்ருஷ்ணுவதாரந் தன்னையும் வ்யாவர்த்திக்கிறது காணும் இப்போது r ''கண்ணனென்னும் $r_2$ கருந்தெய்வம்'' என்கையாலே - s ஒருக்திமாத்ரமாய், முதன்மையே யாய்த்து நிலைநின்றுபோருவது.

(தழுவி) தனக்குப் பிரிவாலுண்டான விடாயெல்லாம் மாறும்படி ஸர்வாங்க₃ஸம்ஶ்லேஷத்தைப் பண்ணி. 235.

மூன்ரும் பாட்டில் ''அஞ்சேலென்னன் அவனொருவன்'' என்னுமிடத்தில் மனத்துக்கினியானை ராமனைக்காட்டிலும் கண்ணனுடைய கு₃ணக்கேடு சொல்லிற்று. இங்கு இப்பத₃த்தாலே ''தன்படியையும் தான் அறியவில்லை'' என்று கண்ணனுகப் பிறந்ததும் பயனற்றுப் போயிற்று என்று காட்டுகிறது. ''கண்ணன் என்னும் கருந்தெய்வம்' [நாச். திரு 13-1] என்று பிறருக்குத் தன் கண்ணழகைக் காட்ட வந்த கண்ணன் என்பது வெறும் பெயராய், தெய்வத்துக்குரிய மேன்மையே நிலைநிற்பதாயிற்று என்று கூறினுளன்ரே இத்திருமொழியின் தொடக்கத்திலேயே.

*(தழுவி)* எனக்கு எம்பெருமானைப் பிரிந்ததாலுண்டான விரஹதாபமெல்லாம் போம்படி என்னுடைய எல்லா அங்க₃ங்களையும் அணைத்துக்கொண்டு.

235. ஸோ(அ)ப்யேநம் த்₄வஜவஜ்ராப்₃ஜ
க்ருதசிஹ்நேந பாணிநா ।
ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்ய ச ப்ரீத்யா
ஸுகா₃ட₄ம் பரிஷஸ்வஜே ॥ [வி. பு 5.18.2]

க்ஷித்து, ''அஞ்சேலென்னன்'' என்றதுக்குத் தாத்பர்யம் (பிள்ளைகாள்) என்றது. q (க்ருஷ்ணுவதாரந்தன்னையும் வ்யாவர்த்திக்கிறது) என்றதுக்குத் தாத்பர்யம் - க்ருஷ்ணுவதாரம் ஸௌலப்₄யைகவிஷயமாகையாலே அத்தையும் வ்யாவர்த்திக்கிறதென்றபடி. r உபபாத₃நம் (கண்ணனென்னும்) என்று. $r_2$ (கருந்தெய்வமென்கையாலே) என்றதுக்கு - ''தெய்வம்'' என்று சொல்லுகையாலே என்றபடி. s (ஒருக்திமாத்ரமாய்) என்றது கண்ணனென்று பேர்

"ஸுகா₃ட₄ம் பரிஷ்வஜே" (ஸுகா₃ட₄ம் பரிஷ்வஜே) என்கிற படியே அக்ரூரனைக் கண்டதில்லை என்னக்கடவதிறே. t (முழுசி) அத்தைவிடா ஓரவயவத்திலே நின்று சுழி சுழிக்குமாய்த்து. (புகுந்தென்னைச் சுற்றிச்சுழன்று) இது விட்டுப் புறம்பு போகமாட்டாமையாலே சூழச்சூழ (வந்து) அங்கே வாராநிற்கும். u (போகானல்) இதுதனக்குப் போக்குவிட்டல்லது த₄ரிக்கவொண்ணாமையாலே புறப்பட்டுப் போகாநிற்கும்; இதுவாய்த்து ஸம்ஶ்லேஷ க்ரமமிருக்கும்படி இப்படி செய்கிறிலனென்னுதல். அன்றிக்கே, உருவு வெளிப் பாட்டாலே நலிந்து விட்டுப் போகிறிலனென்னுதல்.

---

[அந்த க்ருஷ்ணப₄க₃வானும், இந்த அக்ரூரனை, கொடி, வஜ்ரம், தாமரை இவைகளால் அடையாளம் செய்யப்பட்ட திருக்கையால் தொட்டு, இழுத்து, அன்புடன் நன்றாகத் தழுவிக்கொண்டான்.] என்று அக்ரூரன் இருக்குமிடமே தெரியாதபடி அவனைத் தழுவிக்கொண்டதுபோலவே தன்னைத் தழுவிக்கொள்ளவேண்டும் என்று ஆசைப்படுகிறாள் (முழுசி) அணைத்து முடித்தவுடன் மூக்காலே உச்சிமோந்து அந்தக் கேசபாசத்திலே அகப்பட்டு மீளமுடியாமல் இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறாள். (புகுந்து என்னைச் சுற்றிச் சுழன்று) உச்சிமோந்தபின்பு இவளைவிட்டு வேறொன்றிலும் ஈடுபடமுடியாமையாலே சுற்றிச் சுற்றி வந்து அருகேயே நிற்கவேண்டும் என்று ஆசைப்படுகிறாள். (போகானல்) இப்படி ஸம்ஶ்லேஷரஸத்தை அநுப₄வித்த பின்பு சிறிது இடைவெளியில்லாவிடில் த₄ரித்திருக்க முடியாதாகையாலே ஸம்ஶ்லேஷிக்கும்போது சிறிது விலகிச் செல்வதுமுண்டு. இவை அனைத்தும் ஸம்ஶ்லேஷத்தின்போது வரிசையாக நடக்கும் க்ரமங்கள். இப்படியெல்லாம் நடக்க வேண்டும் என்று ஆசைப்பட்ட எனக்கு இப்படிச் செய்யாமல் இருக்கிறானே என்று வருந்துகிறாள். அப்படியல்லாமல், நினைவின் முதிர்ச்சியாலே உருவு வெளிப்பாட்டாலே இப்படியெல்லாம்

---

மாத்ரமாயென்றபடி. t "முழுசி" என்றது - மூக்காலே முழுசி என்றபடி. u போகான் - போகிறானில்லை. ஆல் - அசை. இது பூர்வாவஸ்தை₂.



(தழைபின் பொழில்வாய் நிரைப்பின்னே) "தழைகளும் தொங்கலும் ததும்பி' என்கிறபாட்டின் படியாய்த்து வந்து தோற்றும்போதிருப்பது. தழை-பீலி, பசுக்கள் வரும்போது முற்குழையிலே வாராதே v கடைக்குழையிலேயாய்த்து வருவது. பகலில் w பசுக்களின் பின்னேபோன விடாயெல்லாம் தீரும்படி. சோலை செய்துகொண்டாய்த்து வருவது. x பெருங்குளம் கலங்கினாற்போலே காணும்! y அத்தனை

---

செய்து, நேரே இப்படியெல்லாம் அநுப₄விக்கவேண்டும் என்னும் ஆற்றாமையை எனக்கு விளைத்து என்னைத் துன்புறுத்தி என்னை விட்டுப் போகாமலுமிருக்கிறான் என்றும் பொருள் சொல்லலாம்.

(தழையின் பொழில்வாய் நிரைப்பின்னே) "தழைகளும் தொங்கலும் ததும்பி" [பெரியாழ் திரு 3-4-1] என்கிறபாட்டின் படியாயிற்று கண்ணன் வந்து தோன்றும்போது இருப்பது. தழை— மயில்தோகைப்பீலி. தழையின் பொழிலாவது—ஏராளமான பீலிகளை ஒரு பீலித்தோட்டம்போலே தலையில் வைத்துக்கொண்டு வருவதைக் காட்டுகிறது. "நிரைப்பின்னே" என்றது ஆநிரைகளின் பின்னால் என்றபடி. பசுக்கள்வரும் போது பசுக்களுக்கு முன்னால் முதல் வரிசையில் வாராமல், அவையனைத்தையும் மேய்ப்பவன் என்பது தோன்றக் கடைசி வரிசையிலேயே கண்ணன் வருவது வழக்கம். பகலில் இப்படிப் பசுக்களின் பின்னேபோன களைப்பெல்லாம் தீரும்படி மயில் பீலிக் குடைகளைச் சோலை போலே தலையில் வைத்துக்கொண்டாயிற்று மாலையில் பெண்களைக் காணவருவது. (நெடுமால்) வரும்

---

v y (கடைக்குழையிலேயாய்த்து வருவது) என்ற இவ் வாக்யத்துக்கு ஶேஷமாக (அத்தனைபோதும் பெண்கள் அலமாப்புக் காண்கைக்காக) என்று மேலேயிருக்கிற வாக்யத்தைக் கூட்டி நிர்வஹிப்பது. w தழைப் பின்னே வருவானென்னென்ன அருளிச்செய்கிறார் (பசுக்களினித்யாதி₂) x "நெடுமால்" என்றதுக்கு வ்யாமோஹத்திலே நோக்காகத் தாத்பர்யம் (பெருங்குளமித்யாதி₂) அத்தனை போதும் பெண்களலமாப்புக் காண்கைக்காகப் பிரிந்து

போதும் பெண்கள் படும் அலமாப்புக் காண்கைக்காக. z "ஒரு தாய்தமப்பனுக்குப் பிறக்கையாலே, அவர்கள் சொல் லிற்றுச் செய்யப் போனேன்; பிரியேன்; பிரியில் த4ரியேன்" என்று, இவர்கள்தானே சென்று அணுக்க வேண்டும்படி தன் வ்யாமோஹமெல்லாம் குழலின் த்4வநி யிலே தோற்றும்படியாகவாய்த்துக் குழலூதுவது. (குழலின் துளைவாய் நீர்கொண்டு) இது தன்னையும் $z_2$ புதைத்துவிட வேண்டும்படிபோலே காணும் இவளுக்கு. (குளிர முகத்துத் தடவீரே) அந்நீரைத் கொடுவந்து தடவி என் இளைப்பை நீக்கிக்கொடுநிற்கப்பாருங்கோள். 5.

---

போது தனக்கு இப் பெண்களிடமுள்ள காதலெல்லாம் தோன் றும்படி பெருங்குளம் கலங்கினாற்போலே வருவான். பக லெல்லாம் இவனைப் பிரிந்து பெண்கள் படும் துன்பத்தைக் காண்பதற்காகவே இவன் மாலையில் ஆநிரையின் பின்னே கடைசி வரிசையில் வந்தபோதிலும், வாயாலே "நான் ஒரு தாய்தகப்பனுக்குப் பிறந்தவன் அல்லவா? அவர்கள் சொன்னபடி பகலெல்லாம் பசுமேய்க்கப்போனேன். இனி உங்களைப் பிரியமாட்டேன். பிரிந்தால் உயிர் த4ரிக்கமாட்டேன்" என்று கூறி வருவான் (ஊதிவருகின்ற) இவர்கள் தாமே சென்று வருகின்ற அவனை அணைக்கவேண்டும்படி தன் காதலெல்லாம் குழலின் ஒலியிலே விளங்கும்படியாயிற்று குழலூதி வருவது. (குழலின் துளைவாய் நீர்கொண்டு) இக்குழலிலிருந்து கீழே விழும் வாயமுதத்தையும் ஒரேயடியாக விட்டால் எனக்குத் தாங்காது; புதைத்த (1.குறைவாக 2விரலாலே மூடி)விடவேண்டும் (குளிர முகத்துத் தடவீரே) அந்தக் குழலமுதத்தைக் கொண்டு வந்து என் முகத்தில் தடவி என் களைப்பை நீக்கப்பாருங்கள் என்கிறாள். 5.

---

வரும்போது குளம் கலங்கினாற்போலே வருமென்றபடி. z கலக்கத்தின் கார்யத்தை அருளிச்செய்கிறார் (ஒரு தாய் தமப்பனித்யாதி3) $z_2$ வாய்நீர் தன்னையும் ஒருகாலே விட்டால் ஸாத்மியாமையாலே (புதைத்து) என்கிறது. புதைத்து விடுகை - சாடு. அல்பமாக விடுகை-அர்த்த2ம். விரலாலே புதைத்து விடுகை - த்4வநி. 5.



## பதின்மூன்றுந்திருமொழி—ஆறும் பாட்டு

நடையொன் றில்லா வுலகத்து
 நந்த கோபன் மகனென்னும்
கொடிய கடிய திருமாலால்
 குளப்புக் கூறு கொளப்பட்டுப்
புடையும் பெயர கில்லேன்நான்
 போட்கன் மிதித்த வடிப்பாட்டில்
பொடித்தான் கொணர்ந்து பூசீர்கள்
 போகா வுயிரென் னுடம்பையே.

**பதவுரை:— நடை ஒன்று இல்லா உலகத்து** — (ஏற்கனவே) வரம்புகளெல்லாம் குலைந்துகிடக்கிற இவ்வுலகத்தில், **நந்தகோபன் மகன் என்னும்** — 'ஸ்ரீநந்த3கோ3பர் மகன் என்று ப்ரஸித்3த4ஞய், **கொடிய**—இரக்கமற்றவஞய், **கடிய** — சுயநலக்காரஞன, **திருமாலால்** — ஸ்ரிய:பதியாலே [கண்ணஞலே], **நான்** — அப3லையான நான், **குளப்புக் கூறு கொளப்பட்டு**—மிகவும் துன்பப்படுத்தப்பட்டு, **புடை பெயரவும் கில்லேன்** — அப்படி இப்படி அசைவதற்கும் சக்தியற்றவளாய் நின்றேன்; (ஆனபின்பு) **போட்கன்**—சுணைகேடஞன அக்கண்ணபிரான், **மிதித்த அடிப்பாட்டில்**—திருவடி பட்டு மிதித்த இடத்திலுண்டான, **பொடி தான்**—ஸ்ரீபாத3தூ4ளியையாவது, **கொணர்ந்து**—கொண்டுவந்து, **போகா உயிர் என் உடம்பை**—விட்டுப் பிரியாதவுயிரை உடைய என் உடம்பிலே, **பூசீர்கள்**—பூசுங்கள்.

---

*அவ:*—சுணைகேடஞன அக்கண்ணன் திருவடிப்பொடியையாவது கொண்டுவந்து நான் உயிர்தரிக்கும்படி என் உடம்பில் பூசுங்கள் என்கிறாள்.

*வ்யா:— (நடையொன்றில்லா உலகத்து)* நடையாவது வரம்பு. ஏற்கனவே இவ்வுலகத்தில் 'யார் எதைச் செய்யலாம், எதைச் செய்யக்கூடாது' என்னும் வரம்பு பெரும்பாலும் குலைந்து கிடக்கின்றது. இக் கண்ணன் பிறந்தபின்பு இவன்

வ்யா:— ஆறும் பாட்டு. a (நடையொன்றில்லாவுல கத்து) b லோகத்தில் மர்யாதை3யெல்லாம் குலைந்தாய்த்துக் கிடப்பது; அதுக்கு மேலே ஒன்று பத்தாய்க் குலைந்ததாய்த்து இவனைத் தோற்றி; அதுவெல்லாம் நிலைநின்றதாங்கிடீர் இவ்வளவிலே வந்து என்முகத்திலே விழிக்கப்பெறில். (நந்தகோபன் மகனென்னும்) அவன் வயிற்றிலே இவனொரு வன் எங்ஙனே வந்து தோற்றினபடி ? "எம்பெருமான் நந்தகோபாலா எழுந்திராய்" என்று அவர்கள் பேற்றுக்குப் பரிகரமாக நினைத்திருப்பதும் இவரை. "நந்தகோபாலன் கடைத்தலைக்கே நள்ளிருட்கணென்னையுய்த்திடுமின்" என்று ஆற்றாமை கரைபுரண்டால் பொகடச் சொல்லுவதும் அவர்

என்போன்றவர்களைப் படுத்தும் பாட்டினுலே வரப்பு மீறல் கள் பலமடங்காகி அடியோடு குலைந்துவிட்டன. நான் அசையவும் முடியாது இருக்கும் இப்போதாவது என்முன் தோன்றினால் எல்லா வரப்புகளும் நிலைநின்றதாகுமே. *(நந்தகோபன் மகன் என்னும்)* அவன் வயிற்றிலே இப்படிப் பட்டவன் எப்படிப் பிறந்தான் ? ப்ரணய கலஹமில்லாத போது "எம்பெருமான் நந்தகோபாலா எழுந்திராய்' [திருப் பாவை-17] என்று இவரைத் தான் கண்ணனைப் பெறுவதற்கு உறுப்பாக நினைத்திருப்பாளாகையாலே; ஊடும்போதும் "அவருக்கு இப்படி ஒரு பிள்ளையா ?" என்று அவர் தொடர் பைச் சொல்லி இகழ்கிறாள். 'நந்தகோபாலன் கடைத்தலைக்கே நள்ளிருட்கண் என்னை உய்த்திடுமின்" [நாச். திரு. 12-3] என்று ஆற்றாமை கரைபுரளும்போது "அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும் எம்பெருமான் நந்தகோபாலா" [திருப்பாவை 17] என்று அனைவர்க்கும் தா4ரக போஷக போ4க்3யங்களை அளிக்கும் பரமதா4ர்மிகனான நந்தகோபாலன் வாசலிலேயன்றோ தன்னைப் போகச் சொல்லுவது. ஒரு புல் மிதிபடுவதையும் பொறுக்கமாட்டாத சிறியாத்தான் என்

ஆறும் பாட்டு. (நடையித்யாதி3) a, b "நடை - இல்லா, நடையொன்றில்லா" என்று பிரித்துத் தாத்பர்யம் (லோகத்திலித்யாதி3) a "நடை-நெறி".



வாசலிலே. ஸ்ரீநந்த3கோ3பர்தாம், சிறியாத்தானைப்போலே பரமதா4ர்மிகராயிறேயிருப்பது.

c (கொடிய)— அவ்வளவல்ல; d ஸ்வகார்யபரன். (கடிய) பிறர் நோவறியான். (திருமாலால்) e பெற்றவர்களும் அங்ஙனேயாய் f வளர்த்தவர்களும் இங்ஙனேயானால் நாம்

னும் ஆசார்யரைப்போலே ஸ்ரீநந்தகோபரும் பரம கருணை யுடையவராயன்றோ இருப்பது.

(கொடிய) 'நந்தகோபன் மகன்' என்ற இடத்தில் நந்தகோ பனைக் கொண்டாடி ஒரு பொருள் அருளியதுபோலே 'அவனுக்குப் பிள்ளையான இவன் இப்படியிருப்பது அதிசய மல்ல' என்று நந்தகோபனையும் இகழ்ந்து ஒரு பொருளைத் திருவுள்ளம்பற்றி இங்கு 'கொடிய' என்று 'கொடுமையில் அவனையும் விஞ்சிவிட்டான் இவன்' என்று கூறுவதாகப் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம் அருளிச்செய்கிறார். சுயநலமனப்பான்மையில் நந்தகோபனையும் விஞ்சிவிட்டான் இக்கண்ணன் என்று கருத்து. கண்ணனிடம் உள்ள வெறுப்பு அவனைப் பெற்றவர்மீதும் பாய்கிறது. *(கடிய)* சுயநலக்காரர் களிலும் சிலர் பிறரைத் துன்புறுத்தாமல் சுயநலம் பேணு வார்கள். இவன் அப்படியல்லன். பிறர் எவ்வளவு துன்புற் றாலும் அதை அறியாமல் சுயநலம் பேணுவான் என்று கருத்து. *(திருமாலால்)* "அஞ்ச உரப்பாள் அசோதை ஆணாட விட் டிட்டிருக்கும்" [நாச். திரு. 3-9] "பெற்றதாய் வேம்பேயாக வளர்த்தாளே" [நாச். திரு. 13-7] என்கிறபடியே யசோதை யும், அவளுக்குத் துணைபோகும் நந்தகோபனும் அவனை இப்படிக் கொடியனாகவும் கடியனாகவும் பெற்றுவிட்டார்கள். அதுக்குமேலே "வண்டார் பூமாமலர் மங்கை மணநோக்க

c (கொடிய) - ஸ்வார்த்த2பரன். d (அவ்வளவல்ல) - அவனளவல்ல." e நந்த3கோ3பரைக் கொண்டாடினவளவன் றிக்கே வெறுப்பும் ஓரர்த்த2மாக்கி அருளிச்செய்கிறார் (பெற்றவர்களுமித்யாதி3) f "மணநோக்கமுண்டான்" என்று- அவள் நோக்கு இவனுக்கு ஊணாகையாலே பிராட்டியை

இவனை வெறுக்கிறதென் ? g இழவேயாய்ப் போருகிற ப்ரகரணமாகையாலே பேற்றுக்குப் பரிகரமாகச் சொல்லாமவற்றையெல்லாம் இழவுக்குப் பரிகரமாகச் சொல்லுகிறாள். h "அருளாத திருமாலார்க்கு" என்னக்கடவதிறே. i இதுக்கு " புருஷகாரமாக அநுஸந்திக்கிறார் " என்று முன்புள்ள முதலிகள் அருளிச்செய்யும்படி; பிள்ளானை " இதுக்குக் கருத்தென் ? " என்று நான் கேட்டேன்; "இப்படி நம்மை நலிகைக்கு குருகுலவாஸம் பண்ணிற்று அவளோடே யன்றோ" என்று பணித்தார்; இத்தை பட்டர்க்கு விண்ணப்பம் செய்தேன்; " பேற்றுக்கு அடி அவளென்றிருந்தால் இழவுக்கும் அடி அவளென்று வெறுத்து வார்த்தைசொல்லத் தட்டுண்டோ !" என்றார் என்று நஞ்சீயரருளிச்செய்யும்படி.

---

முண்டானே" [பெரிய திரு. 8.10-1] என்று தன் நோக்கையே உணவாக ஊட்டி இவனை வளர்த்த பெரிய பிராட்டியும் இவனைக் கொடுமையும் கடுமையும் மிக்கவனாக வளர்த்துவிட்டாளாகையாலே இவனை வெறுத்துப் பயனில்லை என்கிறாள். பிரிவுத் துன்பத்தாலே வெறுத்துப் பேசுகிற ப்ரகரணமாகையாலே, இவனைப் பெறுவதற்குப் புருஷகாரமாயிருப்பவர்களையெல்லாம் பிரிந்ததற்குக் காரணமாகச் சொல்லி வெறுக்கிறாள். "அருளாத திருமாலார்க்கு" [திருவாய் 1-4-7] என்று நம்மாழ்வாரும் இப்படியே பெரிய பிராட்டியாரை வெறுத்தாரன்றோ. இத்திருவாய்மொழித் தொடரை விவரிக்கும்போது "திருமால்—என்று பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக அநுஸந்திக்கிறார்' என்று பூர்வாசார்யர்கள் அருளிச்செய்வது வழக்கம். "அவன் அருளாமையைக் கூறும்போது புருஷகாரமாக அநுஸந்திப்பது பொருந்தவில்லையே; இதற்குக் கருத்தென்ன?" என்று நஞ்சீயர் பிள்ளானைக் கேட்டாராம். அதற்குப் பிள்ளான் "இப்படி மிகவும் நம்மைத் துன்புறுத்துவதற்கு

---

(வளர்த்தவர்களும்) என்கிறது. g இவர்களை வெறுக்கலாமோவென்ன அருளிச்செய்கிறார் (இழவேயாயித்யாதி) h இப்படி வெறுத்தவிடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (அருளாத திருமாலித்யாதி) i (அதுக்கு) - பேற்றுக்கு.



j (குளப்புக் கூறு கொளப்பட்டு) கீழே "உழக்க உழக்குண்டு" என்றதிறே; புறம்பு போக்கில்லாமையாலே, துகைத்தவிடந் தன்னிலே துகைக்குமித்தனையாய்த்து.

k (புடையும் பெயரகில்லேன்) இப்போது இவளுக்கு அவனைக் காண்கையன்றுய்த்துத் தேட்டம்; தான் l இடம் வலங்கொள்ளலாய்த்து. m (நான்) n 236. "नैव दंशान्न मशकान्" (நைவ தம்ஶாந் ந மஶகாந்) o அவனும் புடைபெயரு

---

குருகுலவாஸம் பண்ணினது அவளிடமேயன்றோ என்று அவளையும் வெறுக்கிறார்' என்று பதிலுரைத்தாராம். இதை பட்டரிடம் நஞ்சீயர் விண்ணப்பிக்க, "அவனைப்பெறுவதற்குக் காரணம் அவள் என்று இருக்குமிவர் அவனைப் பெறுமைக்கும் அவளே காரணமென்று வெறுத்து வார்த்தை சொல்லத் தட்டில்லையன்றோ" என்று அப்பொருளை ஆமோதித்தார் என்று நஞ்சீயர் அருளிச்செய்தார் என்று பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம். (குளப்புக்கூறு கொளப்பட்டு) "காரேறுழக்க உழக்குண்டு' என்று நாலாம்பாட்டில் கட்டுக்கடங்காத காளை போன்ற அவன் தன்னைத்துகைத்துத் துன்புறுத்தியதைக் கூறினாள். இங்கு—இவளுக்கு வேறு புகலிடமில்லாமையாலும், இக்காளைக்குத் துன்புறுத்துவதற்கு வேறு ஆளில்லாமையாலும் அக்காளை ஏற்கனவே மிதித்த இடத்தில் மறுபடி மிதித்துக் தன் குளம்பாலே பிளந்தபடியைக் கூறுகிறது.

*(புடையும் பெயரகில்லேன்)* இப்போது இவளுக்கு அவனைக் காண்பதுகூடத் தேவையில்லை; இடம் வலமாகப் புரண்டு படுத்தால் போதும் என்னும் நிலையாயிற்று. (நான்) [பக்கம் 114ல் 33வது ப்ரமாணத்தின்படி] ராமன் ஸீதைக்காகப் பட்ட

---

j "குளப்புக்கூறு"—துகைத்துக் குளப்பில் கூறு கொள்ளப் பட்டது. மிதித்தவிடத்திலே மிதிக்கப்பட்டதென்றபடி.

m, n " நான் " என்கையாலே - அவனன்றோ இப்படி பட ப்ராப்தமென்கிறது (நைவ தம்ஶாந் ந மஶகாந்) என்று. k,l ' புடையும் பெயரகில்லேன் " - இடம்வலம் கொள்ளமாட்டேன். o " ந மஶகாந் " என்றவநந்தரம்

கிறிலனென்று சொன்னுருண்டாகில் இவள் நோவுபடாள் போலே. p அது செய்யாத p$_2$ போட்கனுய்த்து இவன். q நம்மை இப்படி நோவுபடுத்திவைத்து இன்னமும் சிலரை நோவுபடுத்தப் போகாநிற்குமாய்த்து.

(போட்கனித்யாதி$_3$) அங்குப் போகிறவிடத்தில் அவர்களை வசீகரிக்கும்போது இப்பொடிகொண்டு காரியமில்லையிறே அவனுக்கு; நான் சொல்லுகிறவற்றைச் செய்யுங்கோள்;-பொடிபடத் தீரும். அவ்வடிப்பாட்டிற் பொடியைக் கொணர்ந்து பூசப்பாருங்கோள். அவனது ஒருவழியா

பாட்டை நான் இக்கண்ணனுக்காகப்படுகிறேன். கண்ணனும் இடம் வலம் கொள்ளமுடியாமல் நோவுபடுகிறன் என்ற வார்த்தையாவது காதில் விழுந்தால் அதுகொண்டு இவள் நோவுபடாமலிருப்பாள் போலும்! ஆனால் அக்கண்ணனே ராமனைப் போலே அப்படி நோவுபடாத சுணைகேடனுயிற்றே. நம்மை இப்படித் துன்புறுத்தினது போதாதென்று இன்னும் சிலரை நோவுபடுத்துவதற்கும் பாரித்துக்கொண்டு போகின்றவனன்றே இவன்.

(*போட்கன் மிதித்த அடிப்பாட்டில் பொடித்தான்கொணர்ந்து பூசீர்கள்*) அப்படிப் போகும்போது அவர்களை வசீகரிப்பதற்கு 'மையலேற்றி மயக்க உன்முகம் மாயமந்திரம் தான்கொலோ" [நாச். திரு 2-4] என்று கூறப்படும் அம்மான்பொடியே (சொக்குப் பொடியே) போதும். அவன் மிதித்த அடிச்சுவட்டின் பொடி அவனுக்குத் தேவையில்லை. எனக்கே உயிர்த$_4$ரிப்பதற்கு அது மிகத் தேவையாயிருக்கிறது. ஆகையால் நான் சொல்லுகிறபடி, அப்பொடிபடத் தீரும் என் நோய்க்கு அவ

"என்று" என்று கூட்டுவது. இத்தால் - அவன் நோவுபடுகிறதறியாமையாலே நோவுபடுகிறளென்றபடி. p அன்றிக்கே, அதுதான் அவனுக்கில்லை என்று பரிஹாராந்தரம் (அது செய்யாத போட்கனுய்த்திவனித்யாதி$_3$) p$_2$ "போட்கன்"—சுணைகேடன். q இத்தை விவரிக்கிறார் (நம்மை இப்படியித்யாதி$_3$).



யிருக்குமிறே; இவளுக்கு அதுதானேயிறே வழி. r (போகாவயிரென்னுடம்பையே) ஶஸ்த்ர விஷாதி$_3$கள் s த$_4$ாரகமாவதே இவ்வுடம்புக்கு! t அந்யார்த்த$_2$மாக நோக்கியிருக்கவேண்டுவார்க்கும் தாந்தாம் முடிய விரகுண்டோ நினைத்தபடி? u 237. "विषस्य दाता" (விஷஸ்ய த$_3$ாதா) இவ்

னுடைய அடிச்சுவட்டில் பொடியைக் கொண்டுவந்து பூசப் பாருங்கள். (*அடிப்பாட்டில் பொடி*) பெண்களிருக்குமிடம் தேடி அவர்களைத் துன்புறுத்தச் செல்லும் வழியே அவனுடைய வழி. அவனுடைய அடிச்சுவட்டில் பொடியைத் தேடிப்போகும் இவளுடைய வழியும் அதுவேயாகும். (*போகா உயிர் என்னுடம்பையே*) நான் விரும்பினாலும் என்னுயிர் என் உடம்பை விட்டுப்போக மறுக்கின்றது. ஆகையால் யாராவது ஆயுதத்தையாவது விஷத்தையாவது கொண்டு என் உயிரைப் போக்குவதே எனக்கு அமுதத்தை அளிப்பதுபோன்ற அறச்செயலாகும். நீயே போக்கிக்கொள்ளக் கூடாதோ? எனில், என்னுடைய உடம்பு அவனுடையதாகையால் விரும்பினாலும் இதை முடித்துக்கொள்வதற்கும் எனக்கு ஸ்வாதந்த்ர்யமில்லை. அவனுக்காக நான் த$_4$ரித்துக்கொண்டிருந்தேயாகவேண்டும்.

237. ஸா ஜீவிதம் க்ஷிப்ரமஹம் த்யஜேயம்
விஷேண ஶஸ்த்ரேண ஶிதேந வாபி।
விஷஸ்ய த$_3$ாதா ந ஹி மேऽஸ்தி கஶ்சித்
ஶஸ்த்ரஸ்ய வா வேஶ்மநி ராக்ஷஸஸ்ய ||
[ரா. ஸு 28-16]

[அப்படிப்பட்ட நான் கூர்மையான ஆயுத$_4$த்தாலேயோ, விஷத்தாலேயோ உயிரை விடப்போகிறேன். (ஆனல்) ராக்ஷஸன்

r "என்னுடம்பைவிட்டு உயிர்போகா" என்று ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம். s (த$_4$ாரகமாவதே) அபேக்ஷிதமாகவேணுமோ இவ்வுடம்புக்கு? என்றபடி. t ஶஸ்த்ராதி$_3$களை அபேக்ஷிக்கவேணுமோ, தானே முடியவொண்ணுதோவென்ன அருளிச்செய்கிறார் (அந்யார்த்த$_2$மாகவித்யாதி$_3$) இத்தால் - ஒருத்தர் தரச்செய்கையன்றிக்கே தானே முடியவொண்ணுதென்று

வளவிலே விஷத்தைத் தந்து நோக்குவானொரு உத₃ாரனைக் கிடையாதோ? 237. "ஶஸ்த்ரஸ்ய வா" (ஶஸ்த்ரஸ்ய வா) ஶஸ்த்ரம் தருவாரைப் பெற்றதாகில்தான் பொல்லாதோ? 6.

பதின்மூன்றுந்திருமொழி—ஏழாம் பாட்டு

வெற்றிக் கருளக் கொடியான்தன் மீமீ தாடா வுலகத்து
வெற்ற வெறிதே பெற்றதாய் வேம்பே யாக வளர்த்தாளே
குற்ற மற்ற முலைதன்னைக் குமரன் கோலப் பணைத்தோளோடு
அற்ற குற்ற மவைதீர அணைய வமுக்கிக் கட்டீரே.

---

வீட்டில் எனக்கு விஷத்தையோ, ஆயுத₄த்தையோ தருவார் ஆருமில்லை] என்கிறபடியே ஸீதாபிராட்டி அஶோகவனத்திலே இருக்கும்போது தன்னைத்தான் முடித்துக்கொள்வதற்கு விஷத்தையாவது ஆயுத₄த்தையாவது தரும் தா₄ர்மிகரில்லையே என்று குறைப்பட்டாளன்றோ.

238. ந சாஸ்ய மாதா ந பிதா ந சாந்ய:
ஸ்நேஹாத்₃ விஶிஷ்டோஸ்தி மயா ஸமோ வா।
தாவத் த்வஹம் தூ₃த ஜிஜீவிஷேயம்
யாவத் ப்ரவ்ருத்திம் ஶ்ருணுயாம் ப்ரியஸ்ய ||
[ரா. ஸு 36-30]

[அந்த ராமபிரானுடைய தாயும், தந்தையும் வேறு எவரும் என்னைக்காட்டிலும் அதிகமாகவோ, எனக்கு ஸமமாகவோ அவரிடம் அன்புடையவரல்லர். தூதனே! என் இனியவர் என்னை மீட்கச் செய்யும் முயற்சியைக் கேள்விப்படும் வரையிலேயே நான் உயிர்வாழ விரும்புகிறேன்] என்கிறபடியே தான் உயிர் வாழ்வதே ஸ்ரீராமபிரான் தனக்காக முயற்சி எடுப்பதைக் கேட்பதற்காகவே என்று அனுமனிடம் உணர்த்தினளன்றோ. 6.

---

தாத்பர்யம். இவ்விடத்திலே 238. "ந சாஸ்ய மாதா" (ந சாஸ்ய மாதா) இத்யாதி₃யைக் கண்டுகொள்வது. ர இப்படி அபேக்ஷித்தபேருண்டோவென்ன அருளிச்செய்கிறார் (விஷஸ்ய தா₃தா) என்று. 6.



பதவுரை:— கருளன் வெற்றி கொடியான் தன் மீமீது ஆடா உலகத்து—பெரிய திருவடியை வெற்றிக்கொடியாக வுடைய எம்பெருமானுடைய ஆணையை மீறிச் செல்லக் கடவதல்லாத இவ்வுலகத்தில், பெற்ற தாய்—அவனைப் பெற்ற தாயாகிய யசோதையானவள் (தனது புத்திரனை), வெற்ற வெறிதே—ஒருவர்க்கும் பயனின்றியே, (பயனில்லை யென்கிற மாத்திரமேயோ?) வேம்பு ஆகவே—வேப்பங்காய் போல் கைக்கும்படியாகவே, வளர்த்தாள்—வளர்த்தவா நன்றுள்; குற்றம் அற்ற—(அவனைத் தவிர்த்து வேறொருவனை விரும்புகையாகிற) குற்றம் இல்லாத, முலை தன்னை—(என்னுடைய) ஸ்தநங்களை, குமரன்—யௌவனத்தோடு கூடிய அப்பெருமானுடைய, கோலம் பணை தோளோடு—அழகியதாயும், கற்பகக் கிளைபோன்றதாயுமுள்ள திருத்தோள்களோடே, அற்ற குற்றம் அவை தீர—(என்னைக் கைவிட்டு) அவற்றுக்கே அற்றுத் தீர்ந்த குற்றம் தீரும்படி, அணைய அமுக்கி கட்டீர்-அமுக்கியணைத்துக் கட்டி விடுங்கள்.

அவ:—ஏழாம் பாட்டு. (வெற்றியித்யாதி,) 239. "ந ஜீவேயம் க்ஷணமபி" (ந ஜீவேயம் க்ஷணமபி) என்று - மேல்விழுந்து வந்தணைந்திலனாகிலும் எனக்குப் உ பரபு₃த்₃த்₄யதீ₄னமாகவா கிலும் அவனை அணையப்பெறில் அமையும். ஆனபின்பு அத்தைச் செய்யுங்கோளென்கிறாள்.

வ்யா:— b (வெற்றியித்யாதி₃) c தன் ஆஜ்ஞையாலே ஸர்வத்தையும் கீழ்ப்படுத்தி விஜயத்₄வஜமெடுத்திறேயிருப்

---

7. அவ:— பக்கம் 116-ல் 37-வது பிரமாணத்தின்படி தானே மேல்விழுந்து என்னை வந்து அணைக்கவில்லையானாலும் நீங்கள் கொண்டுபோய் அவன் தோளோடு என் மார்பகங்கள் அணையும்படி கட்டிவைத்தாலும் போதும். ஆகையால் அதைச் செய்யுங்கள் என்கிறாள்.

---

ஏழாம் பாட்டு. (வெற்றியித்யாதி₃) a "கட்டீரே" என்கையாலே (பரபு₃த்₃த்₄யதீ₄நம்) என்கிறது. b,c "வேம்பேயாக

பது; ேச அம்மர்யாதை₃, குலேயவன்று ஒரு காரியம் பார்க்கிறது; ஈச்வராஜ்ஞை தான் நின்றவளவும் வரநடக்கிறதிறே; "அகல்விசும்பும் நிலனும் இருளார்வினைகெடச் செங்கோல் நடாவுதிர்" என்றும், 240. भीषास्माद्वातः पवते (பீ₄ஷாஸ்மாத்₃ வாத₃: பவதே) என்றும், 241. 'मेघोदयस्सागरसन्निवृत्तिः'

---

வ்யா:— *(வெற்றிக்கருளக் கொடியான்தன் மீமீதாடா உலகத்து)* தன் ஆணைக்கு அனைத்தும் எப்போதும் கட்டுப்பட்டு நிற்கிறது தோற்ற வெற்றியைப் பறைசாற்றும் கருடக்கொடியை உடையவனுயன்றே இருப்பது. அந்தத் தன்னுடைய ஸ்வாதந்த்ர்யமும், என்னுடைய பாரதந்த்ர்யமும் அழியாமல் காரியம் செய்கிருனேயொழிய, தன்னுடைய ஆஶ்ரித பாரதந்த்ர்யமோ, ப்ரணயித்வமோ (அன்புக்கு வசப்பட்டிருக்கையோ) தோற்றப்படி ஒரு காரியம் செய்வதில்லை. அவன் ஸர்வேஶ்வரனுகையாலே அவனுடைய ஆணை, அன்புக்குரியவளாயிருந்தபோதிலும் தன்னையும் கட்டுப்படுத்தவே செய்கிறது என்கிருள். "அகல் விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர் ஈங்கோர் பெண்பால் பொருளோ எனுமிகழ்வோ இவற்றின் புறத்தாள் என்றெண்ணோ' [திருவிருத்தம் 33] என்று பராங்குச நாயகியும் அருளிச்செய்தாளன்றே.

240. பீ₄ஷாஸ்மாத்₃ வாத₃: பவதே பீ₄ஷோதே₃தி ஸூர்ய:।
பீ₄ஷாஸ்மாத₃க்₃நிஶ்சேந்த்₃ரஶ்ச ம்ருத்யுர் தா₄வதி
பஞ்சம:॥ [தை- ஆந 8-1]

[இந்தப் பரமாத்மாவினிடம் ப₄யத்தினல் காற்று அடிக்கிறது, இவனிடம் ப₄யத்தால் சூரியன் உதிக்கிருன்; இவனிடம் ப₄யத்திலேயே அக்₃நியும், இந்திரனும், ஐந்தாமவனன யமனும் (தங்கள் தங்கள் காரியங்களிலே) விரைகின்றுர்கள்] என்று வேத₃மும், பக்கம் 450 ல் 136-வது பிரமாணத்தின் படி வேத₃த்தை விளக்கவந்த ஶாஸ்த்ரங்களும் இவனுடைய ஆணை

---

வளர்த்தாளே" என்னுமளவுக்கும் தாத்பர்யம் (தன் ஆஜ்ஞையாலே) என்று. ேச மர்யாதை₃ குலைகை - அவனுடைய ஸ்வாதந்த்ர்யமும் இவளுடைய பாரதந்த்ர்யமும்



(மேகோ₄த₃யஸ்ஸாகரஸந்நிவ்ருத்தி:) என்றும் சொல்லுகிறபடியே—தன் ஆஜ்ஞைதான் ஒருவரால் அதிக்ரமிக்கவொண்ணுதபடியிறே நடத்துவது; ௭ (மீமீதாடாவுலகத்து) தன் மேன்மைக்குமேலே போகக்கடவதன்றிக்கேயிருக்கிற லோகத்திலே. "மீது" என்று-மேல், கருளக்கொடியான்தன் மேன்மைக்குமேலே ஒன்றில்லாத லோகத்திலே.

(வெற்றவெறிதே) ப்ரயோஜந நிரபேக்ஷமாகப் பிறர்க்கு அநர்த்த₂த்தை விளைப்பாருண்டாகாதே!. பராநர்த்த₂மேயோ இதுக்கு? மற்றதுமேதேனும் ப்ரயோஜநமுண்டோ? (பெற்ற தாய்) "நந்தகோபன் மகனென்னும்" என்று - பெற்ற தகப்பனை வெறுத்தாள் - கீழிற்பாட்டில்; இங்கு - பெற்ற தாயாரை

---

எவராலும் மீறவொண்ணுதது என்று முழங்கினவன்றே. *(மீமீதாடா உலகத்து)* 'மீது' என்பது 'மீ' என்று கிடக்கிறது, மேல் என்று பொருள். முதலாவதான 'மீது' என்னும் சொல் மேன்மையைக் குறிக்கிறது. இரண்டாவதான 'மீது' என்னும் சொல் 'மேலே' என்று பொருள்படுகிறது. ஆக, கருடக்கொடியுடையவனுடைய மேன்மைக்கு மேலே இவ்வுலகில் எதுவும் செயல்படமுடியாது என்று கருத்து,

*(வெற்ற வெறிதே பெற்றதாய்)* தனக்கு ஒரு பயனுமில்லாமல் பிறர்க்குத் தீங்கு விளைக்கவே ஒரு தாய் பிள்ளையைப் பெறுவதே! 'வெற்ற வெறிதே' என்னும் வீப்ஸையாலே (மீமிசையாலே) பிறர்க்குத் தீங்கு புரிவது தவிர வேறு நல்ல பயன் எதுவும் இதற்குக் கிடையாது என்று கருத்து. *(பெற்ற தாய்)* "நந்தகோபன் மகனென்னும்" என்று சென்ற பாட்டில் இவனைப் பெற்ற தகப்பனை வெறுத்தாள், இங்கு பெற்ற தாயை வெறுக்கிருள். இங்கு 'பெற்றதாய்' என்றதன் கருத்தாவது—தகப்பனன நந்தகோபனை வெறுப்பதுகூட நியாயமல்ல. ஏராளமான பசுக்கள், எருமைகள், ஆயர்கள் முதலானவர்

---

குலைகை. ௭ முந்தின "மீ" என்றது - மேன்மையை; இரண்டாவது - மேலென்றபடி. "மீது" என்று மேலாக்கி மேன்மையைச் சொல்லுகிறது.

வெறுக்கிருள். e அவனை வெறுக்கிறதென்? அவனுக்கு ரக்ஷ்யவர்க்கம் பரப்புண்டே. பசுக்களை நோக்கவேணுமிறே அவனுக்கு; ரக்ஷணத்திலே அந்யபரனே அவன்; f நம்மோபாதி யன்றோ அவனும்; g அவனை நோக்குகையே பணியாயிருக்கு மிவளைச் சொல்லீர்; இவள் அவனைக் கட்டுவது அடிப்பதாக, அவனும் அழுவது முலையுண்பதாகப்புக்கவாறே, இவள் பெற்றவளாகாதே என்றிருந்தோம்; இப்போதைச் செயலைப் பார்த்தவாறே "வளர்த்துக்கொள்ளியாகாதே!" என்று

களை ரக்ஷிக்கவேண்டிய பொறுப்பு அவனுக்குண்டு. அவற்றை ரக்ஷித்துக் கார்யத்தில் ஈடுபட்டிருப்பதாலே இக்கண்ணனை அடக்காமல் விட்டுவிட்டது குற்றமல்ல நாம் இவனுடைய அநுபவத்திலே ஈடுபட்டிருக்கையாலே இவனோடு கூடியிருந்த போது இவனைத் திருத்தாமல் விட்டதுபோல் நந்தகோபனும் ரக்ஷணகார்யத்தில் ஈடுபட்டிருக்கையாலே இவனை அடக்காமல் விட்டுவிட்டான். இவனை நல்லபடி வளர்ப்பதைத் தவிர வேறு வேலையில்லாத தாயான இவளையே குற்றம் சொல்லவேண்டும். இவள் இவனைக் கட்டுவதையும், அடிப்பதையும் அவனும் அழுவதையும் இவளிடம் முலைப்பாலுண்பதையும் பார்த்து இவனைப் பெற்றதாய் என்றே நினைத்திருந்தோம். இவள் இவனை வளர்த்திருக்கும் அழகைப் பார்க்கும்போது இவள் ஒரு வளர்த்துக்கொள்ளி (பிள்ளையாகக்கொண்டு வளர்த்த செவிலித்தாய்) என்று தெளிவாகத் தெரிகிறது. பெற்றதாய் என்று விபரீத லக்ஷணையாய், மாறுபட்ட பொருளான செவிலித்

e (அவனை)-நந்தகோபனை. f (நம்மோபாதி) என்றது- கீழில் வாக்யத்துக்கு அநுகூணமாக, நமக்கு உத்தேஶ்ய வஸ்துவிலே பராக்காயிருக்குமாபோலே அவரும் தமக்கு உத்தேஶ்யமான பசுக்களின் மேலே பராக்காயிருப்ப ரென்னுதல். அன்றியே மேலில் வாக்யத்துக்கு அநுகூணமாக, நாம் அவனை வளர்க்காதாப்போலே அவரும் அவனை வளர்க்கவில்லை என்னுதல். g "பெற்றதாய்" என்றுவைத்து, "வளர்த்தாள்" என்றதுக்குக் கருத்தென்? என்ன அருளிச் செய்கிருர் (அவனை இத்யாதி.)



தோற்றியிராநின்றது. (வேம்பேயாக) வேம்பும் கரும்புமாக வளர்க்கையன்றிக்கே, வெறும் வேம்பேயாக வளர்த்தாள். அவன் வேம்பானது வளர்த்த பொல்லாங்கு என்றிருக்கிருள். அவனை இன்னாதாகிறதென்? இவளன்றே இப்படி வளர்த்தாள்.

"அவன் வாராதொழிகிருன்; h இழவுன்னது; நடுவே பெற்றதாயை இன்னாதாகிறதென்?" என்ன (குற்றமித்யாதி,) என்பக்கல்தான் குற்றமுண்டோ? (குற்றமற்ற முலை) அவன் வேம்பானல், "வேம்பின் புழு வேம்பன்றியுண்ணாது" என்றிருக்கும் முலை; i அவரைப் பிராயந்தொடங்கித் துவரைப்பிரானை ஆதரித்தெழுந்த என் தடமுலை; கோவிந்

தாயைக் குறிக்கிறது, (வேம்பேயாக வளர்த்தாளே) பிறர்க்கு வேம்பும் கரும்பும் போன்று நன்மை தீமைகளைக் கலந்து செய்கையன்றிக்கே கசக்கும் வேம்புபோலே பிறர்க்குத் தீமையே செய்பவனை வளர்த்துவிட்டாளே. அவன் இப்படி வெறும் வேம்பேயானது இவள் வளர்த்ததனால் வந்தது என்று நினைக்கிருள். அவனைச் சொல்லிக் குற்றமில்லை. இவ்வளவும் இவள் வளர்த்ததால் வந்தது என்று கருதுகிருள்.

"அவன் வராமல் போனல் போகிருன். நஷ்டம் உன்னுடையதன்றோ, இடையிலே பெற்ற தாயை நிந்திப்பதால் பயனென்ன? உன்மேல் குற்றமேதோ இருப்பதால்தானே அவன் வரவில்லை' என்று அருகிலுள்ளோர் கூற உரைக்கிருள்— (குற்றமற்ற முலை) என்மேல் என்ன குற்றமுண்டு? அவன் வேப்பேயானலும் "வேம்பின் புழு வேம்பன்றி உண்ணாது" [பெரிய திரு 11-8-7] என்கிறபடியே அவனையல்லதறியா திருக்கும் முலையன்றோ என்னுடையது. "அவரைப் பிராயந் தொடங்கி என்றுமாதரித்தெழுந்த என் தடமுலைகள் துவரைப்பிரானுக்கே சங்கற்பித்துத் தொழுதுவைத்தேன்" [நாச் திரு. 1-4] "கொங்கைத் தலமிவை நோக்கிக் காணீர்

h "இழவு உன்னது" என்றதுக்குத் தாத்பர்யம் - உன் குற்றத்தாலேயன்றோ இழந்தாயென்றபடி. i அவனே என்று இருக்கிறதுக்கு ப்ரமாணத்வயம் (அவரைப் பிராய

தனுக்கல்லால் வாயில்போகாமுலை. j அநஸூயை, பிராட்டியைப் பார்த்து "ஸ்த்ரீக்குப் பரதே3வதை ப4ர்த்தாவே கிடீர்" என்ன; "அதுகொடு காரியமென்? பெருமாள் கு3ணவாந்களாய்க் கெட்டேன்; நமக்கு அவர் பக்கலுண்டான நிருபாதி4க ஸ்நேஹம் ஸோபாதி4கமாய்த் தோற்றுநின்றதிறே. கு3ணங்களை வ்யதிரேகித்து அந்த த4ர்மியை ப்ரதிபத்தி பண்ணவொண்ணாமையாலே". k க்ரமப்ராப்தி பார்த்து

---

கோவிந்தனுக்கல்லால் வாயில் போகா" [நாச் திரு. 12-4] என்று இவளே அருளிச் செய்தாளன்றோ. நாயகனுடைய கு3ணத்தைப்பார்த்து உண்டாகும் கு3ணக்ருதப4க்தியைக் காட்டிலும் அவனுடைய ஸ்வாமித்வஸ்வரூபத்தைப்பார்த்து உண்டாகும் ஸ்வரூபக்ருத ப4க்தி சிறந்தது என்று உணர்ந்தவளன்றோ இவள். அத்ரியின் பத்னியான அநஸூயை தன் ஆஶ்ரமத்துக்கு வந்த ஸீதாபிராட்டியைப் பார்த்து, "ஒரு பெண்ணுக்குப் பரதெய்வம் அவளுடைய கணவனே" என்று கூற, அதற்கு ஸீதாபிராட்டி "என் கணவரான பெருமாள் கு3ணஶாலியாகையாலும், அந்த கு3ணங்களைவிட்டுப் பிரித்து அவரைக் காண முடியாதாகையாலும் பார்ப்பவர்களுக்கு 'ராமபிரான் கு3ணஶாலியாகையாலே ஸீதை அவனைப் பரதெய்வமாகக் கொண்டிருக்கிறாள்' என்று சொல்லும்படி இருக்கிறது. எனக்குப் பெருமாளிடம் இருக்கும் இயற்கையான அன்பு அவருடைய கு3ணத்தால் செயற்கையாக உண்டானது என்று தோன்றும்படி உள்ளது. பெருமாள் கு3ணஶாலியாயிருக்கையால் எனக்கு அவரிடமுள்ள இயற்கை அன்பு வெளிப்படாமல் போயிற்று. அவருடைய கு3ணத்தால் எனக்குண்டான நஷ்டமிது" என்று தனக்குள்ள ஸ்வரூபக்ருத ப4க்தியை அருளிச்செய்தாளன்றோ. (குற்றமற்றமுலை) முலைக்குக் குற்றமாவது "அவன் வருகிறபோது வருகிறான்" என்று ஆறியிருக்கை, அப்படி ஆறியிருக்கக் கூடியதோ இம் முலை?

---

மித்யாதி3.) j அவன் எப்படியிருந்தாலும் விடாதே தீர்ந்தமைக்கு ஸம்வாத3மாக ஓரைதிஹ்யமருளிச்செய்கிறார் (அநஸூயையித்யாதி3). k குற்றமறுகையாவது - வந்தபோது



ஆறியிருக்கவற்றோ இம்முலை? (குமரன்) இம்முலைக்குத்தக்க பருவத்தையுடையவன். (கோலப் பணைத் தோளோடு) l நெஞ்சாய்த்துப் பொய்யாயிருப்பது; தோளுக்குக் குற்றமில்லை; அணைத்தே நிற்கவேண்டும்படியாயிருக்கும். m இவளோடே கைசெய்துவைத்தபடி— இப்போதும் "கோலப்பணைத் தோள்" என்னும்படியிறே.

n (அற்ற குற்றமவை தீர) அத்தோளோடே அற்றதாய்த்து இம்முலைகள். இங்கே குடியிருப்பாய், அங்கே க்ருத

---

அவனைப் பிரிந்ததால் படாதபாடு படுவதன்றோ இது என்பதாகவும் பொருள்கொள்ளலாம். "இதன் துன்பத்தைப் போக்குவதற்கு நாங்கள் செய்ய வேண்டியதென்ன?" என்று கேட்க, அதைக் கூறுகிறாள் மேலே—*(குமரன்)* இம்முலைக்குத்தக்க யௌவனப் பருவத்தை உடையவன். *(கோலப்பணைத் தோளோடு)* பெற்ற தாய் வேம்பேயாக வளர்க்கையாலே நெஞ்சு நிறையப் பொய்யா யிருந்தபோதிலும் தோளழகுக்குக் குறைவில்லை. அணைந்தாலல்லது உயிர்தரிக்க முடியாதபடியாயிருக்கும். பிரிந்திருக்கும் இப்போதும் 'கோலப்பணைத் தோள்' என்று கூறும்படியன்றோ இவளோடே கண்ணன் கைசெய்து (1 கையாலே அணைத்து 2 அலங்கரித்து) வைத்திருக்கிறான்.

*(அற்றகுற்றமவைதீர)* அந்தத் தோளுக்கே அற்றுத் தீர்ந்தவையாயிருப்பவை இம்முலைகள். என்னுடன் கூடியிருந்தபோதிலும், ஈடுபாடு முழுவதும் அத்தோளிடம் கொண்டிருப்

---

வருகிறானென்று ஆறியிராமை என்று இரண்டாமர்த்த2த்தை அருளிச்செய்கிறார் (க்ரமப்ராப்தி இத்யாதி3). l "வேம்பு". என்கையாலே-நெஞ்சில் பொய் தோற்றுகிறது. m விஶ்லேஷித்தவள் தோளழகு சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (இவளோடே கைசெய்தித்யாதி3). கைசெய்கை-சாடு. ஸம்ஶ்லேஷிக்கை-அர்த்த2ம். அலங்கரிக்கை-த்4வநி.

ஸங்கேதமாயாய்த்திருக்கிறது இவை. o என்னைக்கூடாதே அங்கே அற்ற குறை தீரும்படி. (அணைய அமுக்கிக் கட்டீரே) அணையவென்றால் அவன் தான் இருய்க்கும்போலேகாணும். உஷையையும் அநிருத்$_3$த$_4$னையும் கூட விலங்கிட்டாற்போலே. அத்தோளையும் இம்முலைகளையும் கூட விலங்கிட்டு வைப்பாரைக் கிடையாதோ? p ஆனவளவுமிறே மீட்கப்பார்ப்பது. ஸத்தாஹாநி பிறக்குமளவில் பின்னைச் சேர்க்கை பித்ராதி$_3$கள் தங்களுக்கே ப$_4$ரமாயிருக்குமிறே. 7.

---

பலையாயிற்று இவை. இப்படி என்னோடு பொருந்தாமல் அத்தோளுக்கு அற்றுத்தீர்ந்து, அதைப் பிரிந்திருப்பதாலுள்ள குறைதீர என்று கருத்து.

(அணைய அமுக்கிக்கட்டீரே) அணைய என்பதோடு நில்லாமல் அமுக்கி என்றும் கூறுகையாலே 'அவன் அணைய மறுத்தாலும் நிர்ப$_3$ந்த$_4$ப்படுத்தி அவனுடைய தோளோடு அமுக்கிகட்டுங்கள்' என்னும் கருத்துத் தோன்றுகிறது. வாணனின் மகளான உஷையையும், கண்ணனின் பேரனான அநிருத்$_3$த$_4$னையும் (பு$_3$ராணஸாரன்) ஒன்றாக விலங்கிட்டுச் சிறையில்வைத்ததுபோலே அத்தோளையும் என் முலையையும் சேர்த்து விலங்கிட்டு வைப்பார் இல்லையோ? என்கிறாள். இவளையும் அவனையும் பிரிக்கப்பார்த்த தாய்மார் அணைய அமுக்கிக் கட்டுவார்களோ? எனில்; முடிந்தவரையில் பிரிக்கப் பார்த்தாலும், இனியும் பிரித்தால் இவள் உயிர் துறப்பாள் என்னும் நிலை வந்தபிறகு இவர்களைச் சேர்த்து வைப்பது தாய் தந்தையர்களுக்கே பொறுப்பாகி விடுமன்றோ; ஆகையாலே அணைய அமுக்கிக் கட்டக் குறையில்லை. 7.

---

n அற்ற குற்றமவை தீர-அவனுக்கே அற்ற முலைகளை, விஶ்லேஷத்தால் வந்த குற்றந்தீரவென்று ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம்.
o என்னைக் கூடாதே-என்னைப்போலே விஶ்லேஷித்திராதே.
p நிஷேதி$_4$க்கிறவர்கள் கட்டுவர்களோவென்ன அருளிச்செய்கிறார் (ஆனவளவுமித்யாதி$_3$.)



## பதின்மூன்றாந்திருமொழி—எட்டாம் பாட்டு

உள்ளே யுருகி நைவேனை யுளளோ விலளோ வென்னாத
கொள்ளை கொள்ளிக் குறும்பனைக் கோவர்த் தனனைக் கண்டக்கால்
கொள்ளும் பயனொன் றில்லாத கொங்கை தன்னைக் கிழங் கோடும்
அள்ளிப் பறித்திட் டவன்மார்வி லெறிந்தென் னழலைத் தீர்வேனே.

**பதவுரை:— உள்ளே உருகி நைவேனை**—உள்ளுக்குள்ளேயே கரைந்து நைந்துபோகிற என்னைப்பற்றி, **உளளோ இலளோ என்னாத**—'இருக்கிறாளா? செத்தாளா?' என்றும் கேளாதவனாய், **கொள்ளை கொள்ளி**—என் ஸர்வஸ்வத்தையும் அபஹரித்துக்கொண்டவனாய், **குறும்பனை**—(பெண்கள் திறத்திலே) பொல்லாங்கு செய்யுமவனான, **கோவர்த்தனனை**—கண்ணபிரானை. **கண்டக்கால்**—(ஒருகால்) நான் காணப்பெற்றேனாகில், **கொள்ளும் பயன் ஒன்று இல்லாத**—(ஆட்டுக்கழுத்தில் முலைபோலே) உபயோகமற்றதான, **கொங்கைதன்னை**—(என்னுடைய இந்த) முலையை, **கிழங்கோடும் அள்ளி பறித்திட்டு**—வேர்முதலோடே பறித்துப் பிடுங்கி, **அவன் மார்வில் எறிந்து**—அந்தக் கிருஷ்ணனுடைய மார்பிலே எறிந்துவிட்டு, **என் அழலை**—என் துக்கத்தை, **தீர்வேன்**—போக்கிக்கொள்ளப்பெறுவேன்.

**வ்யா:—எட்டாம் பாட்டு. (உள்ளே உருகி நைவேனை) a அகவாயிலோட்டமறியாமேதான் இருக்கிறானோ? b ஆறு**

---

8. *அவ:*— என்னைப் புறக்கணித்திருக்கும் அவனைக் கண்டால் பயனற்ற என் கொங்கைகளைப் பிடுங்கி அவன் மார்பில் எறிந்து என் துன்பத்தைப் போக்கிக் கொள்வேன் என்கிறாள்.

---

எட்டாம் பாட்டு—(உள்ளேயித்யாதி$_3$) a உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்தறியுமவனாகையாலே அகவாயில் ஓட்டமறியுமிறே என்றபடி. b "நைவேனை" என்பானென்?

களும் குளங்களும் நிரம்பினால் மிக்க நீராய்த்து வழிந்து போவது; அப்படியே செயலாலும் சொல்லாலும் அறியலாய். b$_2$ விகல்பமாய் அகவாய் ஸௌஹார்த்யம் பேச்சுக்கு நிலமல்ல. (உளளோ இலளோவென்னாத) ப்ரணயித்வம் குடிபோனால் நீர்மையும் குடிபோகவேணுமோ?, (கொள்ளை கொள்ளி) என்பக்கல் தூதுவிட்டதென்றா தவிர்ந்தான். என்னிடையாட்டமாராயாதொழிந்தால் ஆகாதோ?; என்னை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணவேணுமோ?. (குறும்பனை) ஸ்ரீநந்த$_3$கோ$_3$பன் தம்முடைய விஷயத்திலே குறும்படித்து மூலையடியே திரிகைக்கு ஒரு பிள்ளை பெற்றுவிட்டானாய்த்தது. (கோவர்த்தனனை)

---

வ்யா:— *(உள்ளே உருகி நைவேனை)* "உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்தறிதியென்றே [*திருமாலை 34*] என்கிறபடியே அனைத்தையும் அறியும் ஸர்வாந்தர்யாமியாகையாலே, நான் உள்ளே உருகி நைவதை அறியாமல் என்னைப் புறக்கணித்திருக்கிறன் என்று கூறமுடியாதே. *(நைவேனை)* 'இன்னபடி நைகிறேன்' என்று சொல்லவொண்ணாதோ? எனில்; ஆறுகளும் குளங்களும் நிரம்பினால் மிகுதியாயிருக்கும் நீர்மட்டும் வழிந்து போவதுபோலே, என்னுடைய நைவினால் உள்ளே ஏற்பட்ட துன்பம் வார்த்தையினாலும் செயலாலும் வெளிப்படுவது கொண்டு நான் நைந்திருக்குமளவை ஓரளவுக்குப் புரிந்து கொள்ளலாமேயொழிய என்னுடைய நைவு முழுவதையும் பேசி முடிப்பதற்கு இடமேயில்லை. *(உளளோ இலளோ என்னாத)* அவனுக்கு என்னிடம் அன்புதான் நீங்கிவிட்டதென்றால், ஓர் பெண்ணிடம் காட்டவேண்டிய இரக்கங்கூடவா நீங்கவேண்டும்? இரக்கத்தால் 'இருக்கிறாளா இல்லையா?' என்று விசாரிப்பதைக்கூடச் செய்யவில்லையே. *(கொள்ளை கொள்ளி)* என்னிடம் இரக்கமற்று விசாரிக்காமலிருப்பதோடு நின்றானா? என்னிடமிருப்பதனைத்தையும் கொள்ளைகொள்வதையுமன்றோ செய்துவிட்டான், இது அடுக்குமோ? *(குறும்பனை)* ஸ்ரீநந்த$_3$கோ$_3$பர் தம்முடைய திருவாய்ப்பாடியிலே குறும்பு

---

இன்னபடியென்று சொல்லவொண்ணாதோ? என்ன அருளிச்செய்கிறார் (ஆறுகளுமித்யாதி$_3$) b$_2$ விகல்பமாய்-



பெண்களை வெறுந்தரையாக்கும்; பசுக்களை ஒன்று நூறுயிரமாக்கும். (கண்டக்கால்) அவன் பசுக்களின் பின்னே கைகழியப் போகையாலே காண்கைதான் அரிது; வருந்திக் காணப்பெற்றதாகில்.

(கொள்ளும்பயன் ஒன்றில்லாத) அவன் பசுக்களின் பின்னே போகையாலே இம்முலைகள்கொண்டு கொள்ளுவதொரு ப்ரயோஜநமில்லையாய்த்து. c (கிழங்கோடும்) விவேகமுடையராய் இருப்பார் d 'இதுக்கோராஶ்ரயமாயிருப்பதொரு ஆத்மவஸ்துவுண்டு, அதுதான் நித்யம், அழியாததொன்று" என்றிருப்பார்களிறே; 242. "அச்சேத்₃ய அதா₃ஹ்ய"

---

செய்துகொண்டு கண்டபடி திரிவதற்கு ஒரு பிள்ளையைப் பெற்றுவிட்டாரே! *(கோவர்த்தனனை)* பசுக்களை வளர்ப்பவனை பெண்களை வாழமுடியாதபடி தரைப்படுத்துவான்; பசுக்களை ஒன்று நூறுயிரமாக வளர்ப்பான், *(கண்டக்கால்)* அவன் பசுக்களின் பின்னே கண்டபடி திரிகையாலே அவனைக் காண்பது அரிது; மிக முயன்று காண முடிந்தால். **(கொள்ளும் பயனொன்றில்லாத)** அவன் நம்மை அநாதரித்துப் பசுக்களின் பின்னே போகையாலே, அவனுக்கே அற்றுத் தீர்ந்த இம்முலைகளைக்கொண்டு அடைவதொரு பயன் இல்லாமல் போயிற்று. **(கொங்கைதன்னைக் கிழங்கோடும்)** இங்கு கொங்கைக்குக் கிழங்கு (வேர்முதல்) என்று சொல்லப்படுவது இவளுடைய ஆத்மவஸ்துவேயாகும். ஸ்வாபதே$_3$ஶத்தில் கொங்கை எனப்படுவது பரமாத்மாவுக்கு போ$_4$க்$_3$யமான ப$_4$க்தியே யாகையாலே, அதற்கு இருப்பிடமாயிருப்பது ஆத்மவஸ்து என்பது காணத்தக்கது. அறிவுடையவர்கள் "பல அவயவங்களை உடைய இவ்வுடலுக்கு ஆதா$_4$ரமாயிருக்கும் ஆத்மா ஒன்றுண்டு; அது நித்தியமானது ' அழியாதது என்று கூறுகிறார்களன்றோ.

**242. அச்சே$_2$த்$_3$யோऽயமதா$_3$ஹ்யோऽயமக்லேத்$_3$யோऽ-**
**ஶோஷ்ய ஏவச ।**
**நித்யஸ் ஸர்வக$_3$த: ஸ்தா$_2$ணுரசலோऽயம் ஸநாதந: ॥**
[கீ$_3$தை 2-24]

---

அதி$_4$கமாய். c, d கிழங்கோடு-கொங்கையாகிற ப$_4$க்திக்கு

(அச்சே₂த்₃யம் — அத₃ா ஹ்யம்) என்று e சொல்லுகிற அது தன்னோடே பறித்தெறியப் பார்க்கிறாள். (அவன் மார்வி லெறிந்து) அவன் மார்விலே கிடக்கிலும் தன்னைப்படுத் திற்றுப் படுத்தும் அவனையுமென்று இவற்றை உபேக்ஷித்துப் பறித்தெறியும்போதும் விழுந்தறை அவன் மார்வாகவேணும். f (என்னழலைத் தீர்வேனே) g அவன்றானே விரும்பிவந்து அணைக்கும்போதிறே போ₄க₃த்துக்கு உடலாவது; இப்போது ஓடுகிற க்லேஶத்தைத் தவிர்க்கலாமிறே. 8.

---

[ஸர்வவ்யாபியான ஆத்மா வெட்டமுடியாதது; கொளுத்தமுடியாதது; நனைக்கமுடியாதது; காயவைக்கமுடியாதது. ஆகை யாலேயே ஆத்மாவானது நித்யமாயும், நிலையானதாயும், அசையாததாயும், பழைமையானதாயுமிருப்பது] என்கிறபடியே கையால் பிடித்தெறிய முடியாத அவ்வாத்மாவோடுகூடச் சேர்த்துத் தன் கொங்கையைப் பறித்து எறியப்பார்க்கிறாள். இவள் பிரிவுத் துன்பத்தின் மிகுதியிருக்கிறபடி இது. *(அவன் மார்வில் எறிந்து)* தான் இதனால் பட்டபாடெல்லாம் அவனும் படவேண்டும் என்னும் கருத்தாலே, இது தனக்கு வேண்டிய தில்லை என்று கொங்கையைப்பறித்து எறியும்போதும் கீழே எறிவேன் என்னாமல் "அவன் மார்பில் எறிவேன்" என்கிறாள். *(என் அழலைத் தீர்வேனே)* அவனே விரும்பிவந்து அணைத்தால் தான் பேரானந்தமடையலாம். இப்படி என்னைவிட்டுப் பிரிந்து என் கொங்கைகளை மாத்திரம் அவன் மார்பில் எறிந்து அணையச் செய்யும்போது நான் படுகிற துன்பம் தீர்வதாகிற பயனே கிடைக்கும் என்று கருத்து. (8)

---

ஆஶ்ரயமான ஆத்மாவோடு. e (சொல்லுகிற அதுதன்னோடே பறித்தெறியப் பார்க்கிறாள்) என்றது இப்படிச் சொல்லப்படுகிற வஸ்துதன்னைப் பறித்தெறியப்பார்க்கிறாளென்றபடி, f, g அவன் மார்விலே எறிந்தால் ஸுக₂ஹேது வாமத்தனையன்றோ, "என்னழலைத் தீர்வேன்" என்கிறதென்? என்ன அருளிச்செய்கிறார் (அவன்றானே இத்யாதி₃.) 8.



## பதின்மூன்றாம்திருமொழி — ஒன்பதாம் பாட்டு

கொம்மை முலைக ளிடர்தீரக் கோவிந் தற்கோர் குற்றேவல்
இம்மைப் பிறவி செய்யாதே யினிப்போய்ச் செய்யும் தவந்
தானென்
செம்மை யுடைய திருமார்வில் சேர்த்தா னேலும் ஒருநான்று
மெய்ம்மை சொல்லி முகம்நோக்கி விடைதான் தருமேல்
மிகநன்றே.

பதவுரை — **கொம்மை முலைகள்** — (எனது) கிளர்ந்து பருத்த முலைகளினுடைய, **இடர் தீர** — குமைச்சல் தீரும்படி, **கோவிந்தற்கு** — கண்ணபிரானுக்கு, **ஓர் குற்றேவல்** — அந்தரங்கமான கைங்கர்யத்தை, **இம்மைப் பிறவி** — இந்த ஜந்மத்திலே, **செய்யாதே** — செய்யப்பெறாமல், **இனி** — இந்தப்பிறவி கழிந்தபின்பு, **போய்** — வேறொரு தேசவிசேஷத்திலேபோய், **செய்யும்** — செய்யக்கூடியதான, **தவந்தான் என்** — தபஸ்ஸு ஏதுக்கு? **செம்மையுடைய திருமார்வில்** — [அன்பர்கள் அணைவதற்கென்றே ஏற்பட்டிருக்கையாகிற] செவ்வையையுடையதான (தனது) திருமார்பிலே, **சேர்த்தானேலும்** — (என்னை அவன்) சேர்த்துக்கொண்டானாகில், **நன்று** — நல்லது; **ஒரு நான்று** ஒருநாள், **முகம் நோக்கி** — என் முகத்தைப்பார்த்து, **மெய்ம்மை சொல்லி** — உண்மையே சொல்லி, **விடைதான் தரும் ஏல்** — "நீ எனக்கு வேண்டாம் போ" என்று தள்ளிவிட்டமை தோன்ற விடைகொடுப்பானாகில், **மிக நன்று** — அது மிக நல்லது.

அவ:- ஒன்பதாம் பாட்டு. (கொம்மையித்யாதி₃) "கிழங்கோடும் அள்ளிப்பறித்திட்டு" என்கிறதென? அது தனக்கு ஆஶ்ரயமாயிருப்பதோராத்மவஸ்து உண்டானால் அதுக்கவ் வருகே போய்ப் பெறலாவதோரநுப₄வமுண்டே. அத்தைப்

---

9. அவ:— "கொங்கை தன்னைக் கிழங்கோடும் அள்ளிப் பறித்திட்டு" என்று கடுமையாகச் சொல்லலாமோ? கொங்கைக்கு ஆதாரமான ஓர் ஆத்மவஸ்து உளதென்றால்; அதற்

a பெறப் பார்த்தாலோ? என்ன: பெற்ற இவ்வுடம்போடே அநுப,விக்கவேணுமென்று ஆசைப்பட்ட நான் அத்தைவிட்டு அவ்வருகேபோய் ஸாத,நாநுஷ்டா,நம் பண்ணவோ?.

வ்யா: - (கொம்மை முலைகள்) சமைய வளர்ந்து. க்ஷாம காலத்திலே ப்ரஜைகள் "சோறு, சோறு" என்று அலைக்குமா போலே. "எனக்கு அடைத்த விஷயத்தைக்காட்டு காட்டு" என்று நெருக்குகிற இவற்றினிடரானது தீரும்படி. இவற்றி னிடர் தீர்ந்ததாவது கோவிந்தனுக்காளாலாய்த்து. அல்லாத போது. இவளுக்கு நெஞ்சடையாமித்தனை. (கோவிந்தற்கு) ஸ்ரீவைகுண்ட,நாத,னுக்காகவொண்ணாது; பசுக்களின் பின்னே திரியுமவனுக்காகவேணும், (ஓர் குற்றேவல்) முலை

கும் அந்தர்யாமியான ப,க,வானைப்பற்றிய அநுப,வமுண்டே; ஸாத,நாநுஷ்டா,னம் செய்து அதை அடையப் பார்க்கலாமே என்று அருகிலுள்ளார் கூற, இப்போது பெற்றிருக்கும் இவ்வுடம்போடு அநுப,விக்கவே ஆசைப்பட்ட எனக்கு, இவ்வுடம்பைவிட்டு, அதிலும் வேறுபட்ட வேறொரு உடம்பை எடுத்துக்கொண்டு ஒரு பயனைப் பெறுவதற்கான ஸாத,நாநுஷ்டா,னம் பண்ணுவது தேவையில்லை என்கிறாள்.

வ்யா:—(கொம்மைமுலைகள் இடர்தீர) பூர்ணமாக வளர்ந்த குழந்தைகள் பஞ்சகாலத்தில் தாயை "சோறுபோடு சோறு போடு" என்று அலைக்கழிப்பதுபோலே, "எனக்குரிய கோவிந்த,னுடைய திருமார்பைக் காட்டு காட்டு" என்று என்னை அலைக்கழிக்கிற கிளர்ந்தெழுந்த இம்முலைகளுடைய துன்பம் தீரும்படி. கோ,விந்த,னுக்காளுல்தான் இவற்றின் இடர் தீர்ந்ததாகும். இல்லாவிடில் இவளுக்கு நெஞ்சடையே (1. பா,த,கமே; 2. நெஞ்சடைப்பதே) ஆகும். (கோவிந்தற்கு) ஸ்ரீவைகுண்டநாதனுக்கு ஆகவொண்ணாது. பசுக்களின் பின்னே திரியும் கண்ணனுக்கேயாகவேணும். (ஓர் குற்றேவல்) ஆணுரு வைக் கொண்டவர்களால் செய்ய முடியாத கைங்கர்யம். முலையெடுத்த பெண்ணாலேயே செய்யத்தக்க ஒப்பற்ற கைங்கர்யம். முலையாலே அணைப்பதைக் கைங்கர்யம் என்னலாமோ?

ஒன்பதாம் பாட்டு-(கொம்மை முலையித்யாதி) a (பெறப்



யெழுந்தவளுடைய குற்றேவலிறே. b தந்தாமுக்கு அடைத்த கரணங்களைக்கொண்டு பண்ணும் கைங்கர்யமிறே தான் — குற்றேவலாவது.

(இம்மைப் பிறவிசெய்யாதே) 243 "गात्रैः शोकाभिकर्शितैः" (கா,த்ரைஶ் ஶோகாபி,கர்ஶிதை:-ஸம்ஸ்ப்ருஶேயம்) என்னுமாபோலே இவ்வுடம்போடே அணைய ஆசைப்பட்டுப் பெறுதே. இனி அவ்வருகே போய் ஒரு ஶரீரபரிக்,ரஹம் பண்ணிப் பெறும் பேருகிறது -பஞ்சாக்,நி மத்,யஸ்த,ராய் நின்று தபஸ்ஸுபண்ணுவாரோபாதி என்றிருக்கிறாள்.

(செய்மையுடைய திருமார்வில்) அணைக்கப்புக்கால் இருயாத மார்வாய்த்து. (சேர்த்தானேலும்) அம்மார்வோடே சேர்த்தணைக்கையாய்த்துப் பேருவது; அது செய்திலனேயா

எனில்: அவரவர்க்குரிய அவயவங்களைக்கொண்டு செய்யும் கைங்கர்யத்தையன்றோ குற்றேவல் என்பது.

(இம்மைப்பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவம் தானென்) 413-ம் பக்கம் 127-வது ப்ரமாணத்திற்போலே] இவ்வுடம்போடே கண்ணனை அணைவதற்கு ஆசைப்பட்டு அது கிடைக்கப்பெருமல். இனி, பரமபத,த்துக்குச் சென்று வேறொரு ஶரீரத்தைப்பெற்று, பரமபத,நாத,னை அணைத்துக் கொள்வது நாலு புறமும் நாலு அக்,னிகளும் மேலே ஸூர் யனும் ஆக ஐந்து அக்,னிகள் கொளுத்த, நடுவில் நின்று தவம் புரிந்து முனிவர்கள் பயன்பெறுவதுபோலே என்று நினைக்கிறள்.

(செம்மையுடைய திருமார்வில்) அணைக்கப்புகுந்தால் மறுக் காத நேர்மையுடைய திருமார்பாயிற்று. (சேர்த்தானேலும்) மிக நன்று என்டதிலிருந்து 'நன்று' என்பதைக் கூட்டிக் கொள்ளவேணும். வகுத்த ஸ்வாமியான அவனுடைய மார் போடே சேர்த்து அணைக்கையே இவளுக்குப் பயனாகையாலே

பார்த்தாலோவென்ன) என்று ஶங்கை. b முலையாலே குற்றேவலுண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (தந்தாமுக்கு இத்யாதி,) c, d "ஒருநான்று மெய்ம்மைசொல்லி" என்று

கிலும், c (ஒரு நான் று மெய்ம்மைசொல்லி) d என்றுமொக்கப்
பொய்யே சொல்லவேணுமென்னும் நிர்ப்பந்தமுண்டோ?;
ஒருநாள் மெய்சொன்னுலாகாதோ?. e இப்போது பொய்
சொல்லுகையாவது- அருகேயிருக்கச்செய்தே e, பிரியநினைக்
கை. அகவாய் அங்ஙனே செல்லாநிற்க; "நின்னைப் பிரியேன்,
பிரியிலும் ஆற்றேன்'' என்ருற்போலே சொல்லுகை. (முகம
நோக்கி விடைதான் தருமேல்) நேர்கொடு நேர்முகம்
பார்த்து "எனக்கு உன்பக்கல் ஆதரம்போராது; உன்னை
உபேக்ஷித்தேன்; நீபோ'' என்று நம்போக்கை அநுமதிபண்
ணுமாகில், அது மிகவும் நன்று.

---

'நன்று' என்கிருள். 'ஏலும்' என்பதால் அது நடைபெருது
என்னும் ஐயப்பாடு தோற்றுகிறது அப்படிச் செய்யாவிட்
டாலும் வேருென்றைச் செய்தானுகில் மிக நல்லது என்
கிருள் மேலே — (ஒருநான்று மெய்ம்மைசொல்லி)'' ஏலாப்
பொய்களுரைப்பானை'' [நாச் திரு-14-3] என்கிறபடியே
இவன் எப்போதும் பொய் சொல்லுவதையே வழக்கமாகக்
கொண்டவனுனாலும் ஒருதரங்கூட மெய் சொல்லக்கூடாது
என்ற நிர்பந்தமில்லையன்ருே? ஒருநாளாவது மெய் சொல்லட்
டுமே. இவன் எப்போதும் சொல்லும் பொய் என்னவென்ருல்
இவளோடு கூடியிருக்கும்போது நெஞ்சினுல் பிரிய நினைத்துக்
கொண்டே "உன்னைப் பிரியேன், பிரியில் தரியேன்'' என்ருற்
போன்ற வார்த்தைகளைச் சொல்லுவது. இப்படியல்லாமல் ஒரு
நாளாவது உண்மையைச் சொல்லி— (முகம் நோக்கி விடைதான்
தருமேல் மிக நன்றே) அக்கம் பக்கம் பார்த்து அலைக்கழிக்
காமல் முகத்தை நேரே பார்த்து, "எனக்கு உன்னிடம்
அன்பில்லை. உன்னைக் கைவிட்டேன். நீ போ'' என்று நம்
இஷ்டப்படி விலக விட்டானுகில் அது மிகவும் நன்று.

---

கூட்டித் தாத்பர்யம்(என்றுமொக்கவித்யாதி,) e இவள் பொய்
சொன்னுனைகச் சொல்லுகிறது எத்தை? என்ன அருளிச்
செய்கிருர் (இப்போதித்யாதி,) அதாவது-பண்டு ஸம்ச்லே
ஷித்த ஸமயத்திலென்றபடி,



(சேர்த்தானேல் - நன்று. விடைதான் தருமேல் - மிக
நன்று) தன் மார்வோடே அணையும்படி ஸம்ச்லேஷிப்பித்
தானுகில். நன்று - அழகிது; "நீ வேண்டாபோ'' என்று
முகத்தைப்பார்த்து அநுமதி பண்ணிவிடுமாகில் மிகவும்
நன்று. f கலக்கவேணுமென்று ஆசைப்பட்டால் பின்னையு
மிருந்து நோவுபட்டு ஸம்ச்லேஷத்தை ஆசைப்படுகைக்குட
லிறே. நீ வேண்டாவென்ருல் முடிந்துபிழைக்கலாமே. பிராட்டி
யுடைய g இரண்டாம் பிரிவுபோலே இருப்பதொன்றிறேயிது.9.

---

(சேர்த்தானேல் நன்று. விடைதான் தருமேல் மிக நன்று)
தன் மார்போடே என் மார்பு அணையும்படி ஆரத்தழுவினுனுகில்
நல்லது. "நீ தேவையில்லை போ'' என்று முகத்தைப்பார்த்து
என்னைப்போகவிட்டானுகில் மிகவும் நல்லது. இது எப்படி?
எனில்; "இவனை அணைக்க ஆசைப்பட்டு இவனுல் அணைக்க
வும் பெற்ருலும் பின்பொருநாள் இவனைப் பிரிவது நிச்சய
மாகையாலே மறுபடியும் பிரிவாலே துன்புற்று அணைக்க
ஆசைப்பட்டு இவ்வண்ணமே முடிவில்லாத துன்பம் தொட
ரும். 'நீ போ' என்று உதறிவிட்டால் உயிரைவிட்டு இத் துன்
பத்திலிருந்து அடியோடு விடுதலையடையலாமாகையாலே
அதுவே மிக நன்று'' என்று கருத்து ஸீதாப்பிராட்டியை. பூர்ண

---

f கலக்கையை அபேக்ஷியாமல் பிரிவை அபேக்ஷிப்பானென்?
என்ன அருளிச்செய்கிருர் (கலக்கவேணுமென்றித்யாதி,)
அதாவது—ஸம்ச்லேஷத்தை அபேக்ஷிக்கை. g (இரண்டாம்
பிரிவு) கேவலது:க்கமேயாய், முடிவுக்கு ஹேதுவாய்த்
தென்றபடி.

"கொம்மை முலைகள்'' என்று தொடங்கி, "திருமார்
விற்சேர்த்தானேல் நன்று; அதுசெய்யாதே, ஒரு நான்று
மெய்ம்மை சொல்லி முகம்நோக்கி விடைதான் தருமேல்
மிகவும் நன்று'' என்று அந்வயம். "ஒருநான்று மெய்ம்மை
சொல்லி, திருமார்வில் சேர்த்தானேல் நன்று'' என்று
கீழோடே கூட்டுதல்; e, இந்தப்பக்ஷத்தில் (பிரிய நினைக்கை)
என்றதுக்கு ஸ்வாரஸ்யமுண்டு, 9.

## பதின்மூன்றுந்திருமொழி — பத்தாம் பாட்டு

**அல்லல் விளைத்த பெருமானை யாயர் பாடிக் கணிவிளக்கை
வில்லி புதுவை நகர்நம்பி விட்டு சித்தன் வியன்கோதை
வில்லைத் தொலைத்த புருவத்தாள் வேட்கை யுற்று மிகவிரும்பும்
சொல்லைத் துதிக்க வல்லார்கள் துன்பக் கடலுள் துவளாரே.**

பதவுரை:— **வில்லை தொலைத்த** — வில்லைத் தோற்கடித்த, **புருவத்தாள்** — புருவங்களை உடையவளாய், **வில்லி புதுவை நகர் நம்பி விட்டு சித்தன் வியன்கோதை** — ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத் தலைவரான பெரியாழ்வாருடைய மகளாய், ஆஶ்சர்ய குணசாலினியான ஆண்டாள், **அல்லல் விளைத்த பெருமானை** — (திருவாய்ப்பாடி முழுதும்) தீங்குவிளைத்து அதனால் பெருமைபெற்றவனும், **ஆயர் பாடிக்கு அணி விளக்கை** — திருவாய்ப் பாடிக்கு மங்களதீபம் போன்று ப்ரகாஶகனுமான கண்ணபிரானை, **வேட்கையுற்று** — ஆசைப்பட்டு, **மிக விரும்பும் சொல்லை** — ஆராத காதல் தோற்ற அருளிச்செய்த இப்பாசுரங்களை, **துதிக்க வல்லார்கள்** — புகழ்ந்து ஓதவல்லார்கள், **துன்பம் கடலுள்** — ஸம்ஸார ஸமுத்ரத்தில், **துவளார்** — துவண்டு நோவு படமாட்டார்கள்.

**வ்யா:— நிகமத்தில்.** (அல்லல் விளைத்த பெருமானை) **244. "बहवो नृप कल्याणगुणाः पुत्रस्य सन्ति ते"** (பஹவோ ந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே) **என்று - திருவயோத்யை ராமகுணங்களிலே** a **கையடியுண்டு மற்றொன்றறியாதிருக்குமாபோலேயாய்த்துத் திருவாய்ப்பாடியிலுள்ளார் க்ருஷ்ணன் தீம்பிலே** a **கையடியுண்டார்களாயிருக்கும்படி. ஊரைமுலையடியே நடந்து "வெண்ணெய் பெண்கள் இவை களவுபோய்த்து" "பாலும் பதின்குடங் கண்டிலேன்" என்று சொல்லும்படி** * **பெரிய ஆரவாரத்தைப் பண்ணியாய்த்து வர்த்திப்பது.** (ஆயர்பாடிக்கு c அணிவிளக்கை) **இவன் தீம்புக்கு இலக்காகாதபோது ஊராக இருண்டாய்த்துக்**

---

கர்ப்பிணியாயிருக்கும்போது ஒரு வண்ணான் சொன்னானென்று மறுபடியும் அவளோடுசேர இடமில்லாதபடி ஸ்ரீ ராமபிரான் அவளைக் காட்டில் விடச்செய்து வந்ததுபோன்ற பிரிவு இது. 9.

10. *அவ:*— இப்பதிகம் கற்றவர்கள் தன்னைப்போல் துன்பப்படாமல் இன்பமேபெறுவர் என்று பலம் சொல்லிப் பதிகத்தைத் தலைக்கட்டுகிறாள்.

---

பத்தாம்பாட்டு. நிகமத்தில் a(கையடியுண்டு)-ஈடுபட்டு.



---

*வ்யா:*—(அல்லல் விளைத்த பெருமானை)

**தே தமூசுர் மஹாத்மாநம் பௌரஜாநபதைஸ் ஸஹ।
பஹவோ ந்ருப ! கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே ॥**
[ரா. அ 2-26]

[நகரத்திலும், கிராமங்களிலும் உள்ள ஜனங்களுடன் கூடிய அவர்கள் மஹாத்மாவான அந்த தசரதரிடம் (பின்வருமாறு) சொன்னார்கள்: "அரசே! உம்முடைய புத்திரனிடம் பல கல்யாணகுணங்கள் இருக்கின்றன"] என்கிறபடியே திருவயோத்தியிலுள்ளார் அனைவரும் ராமனுடைய குணங்களிலே ஈடுபட்டு வேறொன்றை அறியாதிருந்ததுபோலே திருவாய்ப்பாடியிலுள்ளவர் அனைவரும் கண்ணன் செய்யும் குறும்புகளிலே ஈடுபட்டிருப்பார்கள். ராமன் குணத்தினால் மனத்துக்கினியானாய் இருந்ததுபோலே, கண்ணன் ஊரில் கண்டபடி திரிந்து "வெண்ணெய், பெண்கள் களவு கண்டான்" "பாலும் பதின்குடம் கண்டிலேன்" [பெரிய திரு. 10-7-2] என்று சொல்லும்படி பெரிய அல்லல்களை விளைத்துக்கொண்டு வாழ்ந்து, அதனால் பெருமைபெற்றானன்றோ, (*ஆயர்பாடிக்கணி விளக்கை*) இப்படிக் கண்ணன் அல்லல் விளைத்த பெருமானாயிருப்பதாலேயே ஆயர்பாடிக்கு ஒரு மங்கள தீபமாக ப்ரகாஶித்தான். இவன் குறும்பு செய்யாதபோது ஊரே இருண்டுகிடக்கும்போலும்! (*அணிவிளக்கை*) இவன் குறும்புகளெல்லாம் அவர்களுக்குக் கரும்பாய் இனிக்கையாலே ஆய்ப்பாடியிலுள்ளார்க்கு இவன் அலங்காரமானான், ராமகுணங்

---

b (வார்த்தைபண்) வார்த்தை ப்ரகாரத்துக்கு, அடியாக-ஹேதுவாக. ப்ரபந்தங்களிலே சொல்லுகிற ஸ்ரீஸூக்தி

---

* (பா) பெரியாழ்வார் b வார்த்தை பண்ணடியாய்த்து.

கிடப்பது. ராமகு₃ணங்கள் வேம்பாய் d இவன் தீம்புகள் கரும்பாய், ப்ரகாஶத்தையும் பண்ணவாய்த்துத்திரிவது.

(வில்லிபுதுவை இத்யாதி₃) இவளுடைய விருப்பத்தில் ஊற்றமாய்த்துச் சொல்லித் தலைக்கட்டப்பார்க்கிறது இவ்வளவான ப்ராவண்யாதிஶயத்துக்கெல்லாம் வாய்த்தலை பெரியாழ்வார் வயிற்றிற்பிறப்பாய்த்து.

(வில்லைத்தொலைத்த புருவத்தாள்) தன்னோடு ஸாம்யங் கொண்டாடியிருக்குமவையெல்லாம் அழிக்கும்படியாய்த்து அவயவஶோபை₄யிருக்கும்படி. வில்தான் ஒப்பாகப் போராதபடியான புருவத்தை உடையவள். (வேட்கையுற்று மிகவிரும்புஞ்சொல்லை) அபி₄நிவேஶமானது விஞ்சி. அது தான் "என்றனளவன்றால் யானுடைய அன்பு" என்கிற படியே — ஆஶ்ரயத்தளவல்லாதபடி அபி₄நிவேஶத்தை உடைய

கள் அங்கு வேம்பாயின. இவனுடைய குறும்புகள் அவ்வூருக்கே விளக்குப்போலே ஒளியைக் கொடுக்கும்படி திரிந்தான்.

(வில்லி புதுவைநகர் நம்பி விட்டுசித்தன் வியன்கோதை ......வேட்கையுற்று மிக விரும்பும் சொல்லை) இவளுடைய விருப்பத்தின் உறுதியே இப்பதிகமாக நடந்து இப்போது நிறைவுறவிருக்கிறது. இப்படிப்பட்ட மிகுந்த விருப்பத்துக்குக் காரணம் பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பேயாகும் என்கிறாள் (வில்லைத்தொலைத்த புருவத்தாள்) வில் உபமானமாக நிற்கவொண்ணாதபடியான புருவத்தையுடையவள். ஒப்பென்று புகழ்பெற விரும்பும் வில்போன்ற பொருள்களையெல்லாம் அழிக்கும்படியாயிற்று இவளுடைய அவயவஶோபை இருக்கிறது. (வேட்கையுற்று மிக விரும்பும் சொல்லை) இவளுடைய காதலானது பெருகி "என்றனளவன்றால் யானுடையவன்பு" [இர-திருவ-100] என்கிறபடியே அதற்கு இருப்பிடமான ஆத்மாவினளவையும் கடந்து பெருங்காதலாகப் பரிணமித்து அதன் காரணமாகச் சொன்ன அவளு

களுக்கு ஹேதுவாய்த்து அவன் வ்யாபாரமென்றபடி.

c d (இவன் தீம்புகள் கரும்பாய், ப்ரகாஶத்தையும்) என்ற



ளாய்ச்சொன்ன அவளுடைய பாசுரத்தை. "ப₄க₃வத₃நுப₄வம் வழிந்து புறப்பட்ட சொல்" என்று தோற்றும்படியிருக்கை. (சொல்லைத் துதிக்கவல்லார்கள்) * இவன் இப்போதாக இவளுடைய விருப்பத்தை ஸம்பாதி₃க்கவென்றால் செய்யப்போகாதே; அப்படி ப₄ாவப₃ந்த₄முடையளாய்ச் சொன்ன அவளுடைய பாசுரத்தைச் சொல்ல அமையும். (துன்பக்கடலுள் துவளாரே) ஸம்ஸாரமாகிற து₃:க்க₂ஸாக₃ரத்திலே ம்ருது₃வாயிருப்பதொரு கொழுந்தை அக்₃நியிலே இட்டாற்போலே துவண்டு நோவுபடாதே. இவள்பட்ட க்லேஶமே க்லேஶமாக இவள் பாசுரமாத்ரத்தைச் சொன்னவர்கள் இவளாசைப் 10.
பட்ட பொருள் பெறுவர்கள்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

பதின்மூன்றும் திருமொழி முற்றிற்று

டைய பாசுரத்தை, 'எம்பெருமானைப்பற்றிய அனுப₄வம் வழிந்து வெளிப்பட்ட சொல்' என்று தோற்றும்படி இருக்கிறது. (சொல்லைத்துதிக்கவல்லார்கள்) ஸம்ஸாரி ஜீவன் இப்போது இவளுடைய விருப்பத்தை எவ்வளவு முயன்றாலும் பெறமுடியாது. அப்படிப் பெருங்காதலுடையவளாகச் சொன்ன அவளுடைய பாட்டைச் சொன்னால் போதும். (துன்பக்கடலுள் துவளாரே) ஸம்ஸாரமாகிற துன்பக்கடலிலே கிடக்குமிவர்கள் மென்மைமிக்கதொரு கொழுந்தை நெருப்பில் இட்டதுபோலே துவண்டு துன்புறாமல், தாயாகிய இவள்பட்ட துன்பம் தங்களுக்கும் சேர்த்துப்பட்டதாகையாலே தாங்கள் துன்பப்படவேண்டிய அவஶ்யமில்லாமல் இவள் சொன்ன பாசுரத்தைமட்டும் சொன்னவர்கள் இவள் ஆசைப்பட்ட 10,
ப₄க₃வத₃னுப₄வத்தைப் பெறுவர்கள்,

ஆண்டாள் திருவடிகளே ஶரணம.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

பதின்மூன்றும் திருமொழி வ்யாக்யான விவரணம் நிறைவுற்றது.

ஸமுச்சயத்துக்குச்சேர "அணி விளக்கு" என்று பத₃த்தைப் பிரித்துக்கொள்வது. e (இவன்பேர்க்க) இச்சேதனன் இப்பா 10.
சுரத்தைக் கற்றானென்றால்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

* (பா) e இவன் பேர்க்க.

## பதினாலாந்திருமொழி பட்டிமேய்ந்து – ப்ரவேசம்

அவ:— a ப்ராப்யப்ராபகங்களை நிஷ்கர்ஷித்து, அந்த ப்ராப்யத்தை அப்போதே லபிக்கப்பெறுமையாலே கண்ணுஞ் சுழலையிட்டுக் காமன் காலிலே விழுந்து, அநந்தரம் சிற்றிலிழைத்து, பனிநீராடி, கூடலிழைத்து, குயில்வார்த்தை கேட்டு, ஸாக்ஷாத்கரிக்கவேணுமென்னும் ஆசைபிறந்து, அப்போதே கிடையாமையாலே ஸ்வப்நாநுபவத்தாலே தரித்து, அதுதான் வஶதாமாயிராமையாலே அவ்வநுப

## பதினாலாந்திருமொழி பட்டிமேய்ந்து–ப்ரவேசவிவரணம்

ஆண்டாளுக்குத் திருப்பாவைதொடங்கி சென்ற திருமொழியளவும் பலவிதமான மனப்பரிபாகங்கள் ஏற்பட்டு பக்தி முற்றியபடி சொல்லப்பட்டது. இத்திருமொழியில் அது பரமபக்தியாகப் பரிணமித்து, பகவத்ப்ராப்தி ஏற்பட்டு நிறைவடைந்தபடி பேசப்படுகிறது. திருப்பாவையிலே "நாராயணனே நமக்கே பறைதருவான்" என்று தொடங்கி, நடுவில் சிறப்பாக பாகவதர்களை அனுபவித்து, இறுதியில் 'கறவைகள்' என்னும் பாட்டிலே ப்ராபகத்தையும், 'சிற்றஞ்சிறுகாலே' என்னும் பாட்டிலே ப்ராப்யத்தையும் அறுதியிட்டு, இவ்வண்ணமாக ப்ராப்யப்ராபகங்களை நிர்ணயித்தாள், அந்த ப்ராப்யத்தை அப்போதே அடையப்பெறுமையாலே மயங்கி, நாச்சியார் திருமொழியின் (1) முதற்பதிகமான 'தையொரு திங்க'ளில் காமன் காலிலே விழுந்து நோன்பு நோற்றாள், (2) 'நாமமாயிரம்' என்னும் அடுத்த பதிகத்தில் சிற்றிலிழைத்துப் பெறப்பார்த்தாள். (3) 'கோழியழைப்பதன்முன்னம்' என்னும் அடுத்த பதிகத்தில் பனிநீராடியும், 'தெள்ளியார் பலர்" (4) என்னும் அடுத்தபதிகத்தில் கூடலிழைத்தும், 'மன்னுபெரும்புகழ்' (5) என்னும் அடுத்த பதிகத்தில் குயில் வார்த்தை கேட்டும் பெறப்பார்த்தாள். இவற்றால் அவனை நேரே காணவேணும் என்னும் ஆசை பிறந்து, அப்போதே அப்படிக்காண முடியாமையாலே, 'வாரணமாயிரம்' (6) என்னும் அடுத்தபதிகத்தில் கண்ணனோடு மணம்புரிந்து கொண்டதாகத்

அரு:—பட்டிப்ரவேசே a. திருப்பாவையில் ப்ரமேயம் (ப்ராப்ய ப்ராபகங்களையித்யாதி) b "நல்லவென்தோழி"



வத்துக்கு தேசிகரான ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானை வார்த்தை கேட்டு, மேகதர்சநத்தாலே நொந்து அம்மேகங்களை வார்த்தைகேட்டு, ராமாவதாரத்துக்கு அங்குநின்றும் வந்த திருவடிதன்னையே தூதுவிட்டாற்போலே அம்மேகங்கள் தன்னையே தூதுவிட்டு, அவ்வர்ஷாவில் பதார்த்தங்கள் அவனுக்கு ஸ்மாரகமாய் பாதிக்கவொருப்பட்டபடி சொல்லி, அவைதான் முருகநின்று நலிந்தமைசொல்லி, பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பிலும், அவன் 245 "ந த்யஜேயம்" (ந த்யஜேயம்) என்ற வார்த்தையிலும் அதிசங்கைபண்ணி, "அவன் வார்த்தை பொய்யானாலும் b பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பு

தான் சனவில் அனுபவித்ததைக் கூறி தரித்தாள். அது கனவிலனுபவமாய், தெளிவாயிராமையாலே 'கருப்பூரம் நாறுமோ' (7) என்னும் அடுத்தபதிகத்தில் பகவதநுபவத்திற்கு வழிகாட்டும் ஸ்ரீபாஞ்சஜன்யாழ்வானை வார்த்தை கேட்டாள். அடுத்ததான "விண்ணீல மேலாப்பு" (8) என்னும் பதிகத்தில் அவனைப் போன்ற நிறமுடைய மேகங்களைக்கண்டு நொந்து, அவற்றை வார்த்தை கேட்டு, ராமாவதாரத்தில் பெருமாளிடமிருந்து வந்த அநுமனையே ஸீதாப்பிராட்டி தூது விட்டதுபோலே திருவேங்கடத்திலிருந்து வந்த அம்மேகங்களையே தூதுவிட்டு, அடுத்ததான "சிந்தூரச்செம்பொடி" (9) என்னும் பதிகத்தில் அந்த மழைகாலத்தில் தோன்றிய பொருள்கள் அனைத்தும் அவனை நினைவுபடுத்தித்தன்னை நலியத் தொடங்கியதைச் சொல்லி, "கார்க்கோடல் பூக்காள்" (10) என்னும் அடுத்த பதிகத்தில் அப்பொருள்கள் தன்னை முழுவதுமாக நலிந்தமையைச் சொல்லி, "குமரனார் சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே" [10-4] என்னும் பாசுரத்தில் பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பும், [49]ம் பக்கத்திலுள்ள 149வது பிரமாணமான] ஸ்ரீராம சரமச்லோகமும் தன் விஷயத்தில் பொய்யாகிவிடுமோ என்று ஐயமுற்று, அப்பதிகத்தின் இறுதியில் "நல்ல என்தோழி" [10-10] என்று தொடங்கும் பாட்டில் "வில்லிபுதுவைவிட்டு சித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் அது

இத்யாதியைப் பற்ற (பெரியாழ்வாரித்யாதி.) c (அவன் படியாலும் இழக்கவேண்டாவென்று தெளிந்து) என்றது

நமக்குத் தப்பாது ப₄லிக்கும்'' என்று அத்₄யவஸித்து. c அவன்படியாலும் இழக்கவேண்டாவென்று தெளிந்து d பின்னையும் இழவோடே தலைக்கட்டி, அதுவும் ப₄லியாமையாலே தானே போகவொருப்பட்டுத் தனக்குக் கால்நடை தாராதபடி ப₃லஹாநியிக்குக் கால்நடை தருவாரை ''என்னை அத்தே₃ஶத்திலே கொடுபோய்ப் பொகடுங்கோள்'' என்றும், ''அது மாட்டிகோளாகில் அவனோடு ஸ்பர்ஶமுள்ளதொரு பதா₃ர்த்த₂த்தைக் கொடுவந்து என்னை ஸ்பர்ஶிப்பித்து ஆஶ்வஸிப்பியுங்கோள்'' என்றும் நின்றது-கிழ;

---

காண்டுமே'' என்னும் பகுதியாலே, ''அவன் வார்த்தை பொய்யானாலும் பெரியாழ்வாரோடுள்ள தொடர்பு நமக்குத் தப்பாமல் பேற்றைத்தரும்'' என்று உறுதிபூண்டாள். அடுத்ததான ''தாமுகக்கும்'' (11) என்னும் பதிகத்தில் ''செம்மையுடைய திருவரங்கர் தாம்பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டு சித்தர்கேட்டு இருப்பர்'' [11-10] என்னும் பாசுரத்தாலே 'அவன் மெய்ம்மையுடையவனாகையாலே அதைப்பார்த்தாலும் நான் பேற்றை இழக்கவேண்டியதில்லை' என்று தெளிந்து, அப்போதும் அவன் விரைந்துவந்து முகங்காட்டாமையாலே ''சாதிப்பார் ஆர் இனியே'' [11-10] என்று வருத்தத்தோடே அப்பதிகத்தைத் தலைக்கட்டினாள். இப்படித் தான் தப்பாதென்று உறுதிபூண்டிருந்த பெரியாழ்வார் ஸம்ப₃ந்த₄மும் விரைவில் ப₄லிக்கக்காணாமையாலே தானே அவனிருக்குமிடம் செல்லத் தொடங்கி, தான் நடக்கமுடியாதபடி வலிமை குறைந்திருக்கையாலே, நடக்கக்கூடியவர்களை நோக்கி ''என்னை அவனிருக்குமிடத்துக்குக் கொண்டுபோய்ச் சேருங்கள்'' என்று ''மற்றிருந்தீர்கட்கு'' (12) என்னும் பதிகத்திலும், ''அதைச் செய்யாவிடிலும் அவனுடைய ஸ்பர்ஶமுள்ளதொரு பொருளைக்கொண்டு வந்து என்மேல் படச்செய்து என்னை உயிர்தரிக்கச் செய்யுங்கள்'' என்று 'கண்ணனென்னும்' (13) என்னும் பதிகத்திலும் அருளிச்செய்தாள்.

---

''செம்மையுடைய-மெய்ம்மைப் பெருவார்த்தை'' என்றதைப்பற்ற. d (பின்னையும் இழவோடே தலைக்கட்டி) என்றது-''தம்மையுகப்பாரை'' இத்யாதி₃யைப்பற்ற.



e முதல்தன்னிலே அவனே ரக்ஷகனென்று அத்₄யவஸித்திருக்கும் குடியிலே பிறக்கச்செய்தேயும் தானே நோற்றுப் பெறவேண்டும்படியிறே இவளுக்குப் பிறந்த விடாய். இப்படிப்பட்ட விடாயை உடையளாய் இவள்தான் ப்ராப்ய ப்ராபகங்கள் அவனே என்னுமிடம் நிஷ்கர்ஷித்து. அநந்தரம் பெற்றல்லது நிற்கவொண்ணாதபடியாயாய்த்துப் பிறந்த த₃ஶை.

f இவ்வளவாற்றாமை பிறக்கச்செய்தேயும் ''அவ்வருகில் பேறு ஸாத்₄மிக்கும்போது இன்னம் இதுக்கவ்வருகே ஒரு பாகம் பிறக்கவேணும்; ஆமத்தில் சோறுபோலே ஆக

---

பிறக்கும்போதிருந்தே எம்பெருமானே தஞ்சமென்று உறுதிபூண்டிருக்கும் ப்ரபன்ன குலத்திலே இவள் பிறந்திருந்த போதிலும் தன் ஸ்வரூபத்துக்குத் தகாதபடி தானே நோன்பு நோற்று அவனைப் பெறவேண்டும்படியன்றோ இவளுக்கு அவனிடம் உண்டான பெருங்காதல். இப்படிப்பட்ட பெருங்காதலையுடையவளாய் திருப்பாவையில் ''ப்ராப்யமும் ப்ராபகமும் அவனே'' என்று நிஶ்சயித்து. அதற்குப்பின் அவனைப் பெற்றாலல்லது உயிர்த₄ரிக்க முடியாதபடியாயிற்று இவளுக்குண்டான நிலை;

இவ்வளவு பெருங்காதல் இவளுக்கு உண்டாயிருந்த போதிலும் எம்பெருமானுடைய எண்ணம் வேறுவிதமாயிருந்தது. ''இவளுக்குத் தன்னுடைய அனுப₄வமாகிற பேறு பொருந்த வேண்டுமானால் இதற்குமேலும் காதல் வளர வேண்டும். உணவு ஜீர்ணமாவதற்கு இயலாத அஜீர்ணதசை

---

e ப்ரபந்நகுலத்திலே பிறந்தவளுக்கு இத்தனை ஸ்வயத்நங் கூடுமோ, கீழில் திருமொழிகளில் ப்ரமேயமெல்லாவற்றையும் நிக₃மிக்கிறதுக்குக் கருத்தென்னென்ன அருளிச்செய்கிறார் (முதல் தன்னிலே இத்யாதி₃,)

f இத்தனை ஆற்றாமை பிறந்தால் முகங்காட்டாதிருப்பானென்? என்ன அருளிச்செய்கிறார் (இவ்வளவாற்றாமை

வொண்ணாது; பரமபக்தி பர்யந்தமாகப் பிறப்பித்து முகங்காட்டவேணும்'' என்று அவன் தாழ்க்க: அநந்தரம் ஆற்றாமை கரைபுரண்டு பெறில் ஜீவித்தும் பெறாவிடில் முடியும்படியுமாய், நிர்ப்பந்தித்தாகிலும் பெறவேண்டும்படியாக; ''என்னவாவறச் சூழ்ந்தாய்'' என்கிறபடியே வந்து முகங்காட்டி விஷயீகரிக்க; பிறந்தவிடாயும் அதுக்கநுரூபமாகப் பெற்றபேறும் $f_2$ ஓராஶ்ரயத்திலிட்டுப் பேசவொண்ணாதபடி அளவிறந்திருக்கையாலே, ''கண்டீரே'' என்று கேட்கிறவர்கள் பாசுரத்தாலும், ''கண்டோம்'' என்று உத்தரம் சொல்லுகிறவர்கள் பாசுரத்தாலும் தனக்குப் பிறந்த விடாயையும் பெற்றபேற்றையும் அந்யாபதேஶத்தாலே தலைக்கட்டுகிறாள்.

யிலே சோறிட்டால் உயிருக்கே அழிவு ஏற்படுவதுபோலே பேரின்பத்தை ஜீரணித்துக்கொள்ளவல்ல மிகப்பெருங்காதலாகிற பரமபக்தி இவளுக்குப் பிறந்தாலல்லது இவளால் பேரின்பத்தோடு பொருந்தமுடியாது. ஆகையால் அந்தப் பரம பக்தியைப் பிறக்கச்செய்தேதான் முகங்காட்ட வேண்டும்'' என்னும் கருத்தாலே அவன் தாமதம் செய்தான். அதற்குப்பின் இவளுடைய காதல்கரைபுரண்டு, அவனைப்பெற்றால் உயிர்தரிப்பதும், பெறாவிட்டால் அழிவதுமாம்படியான நிலைவிளைந்து, அவனை நிர்ப்பந்தம் செய்தாவது பெறவேண்டும்படியாயிற்று இப்படிப் பரமபக்தி பிறந்தவுடன் ''என் அவாவறச் சூழ்ந்தாய்'' [திருவாய் 10-10-10] என்று பரமபக்தி விளைந்த ஆழ்வாருக்கு முகங்காட்டியதுபோலே இவளுக்கும் முகங்காட்டி ஆட்கொண்டான் அவன். பிறந்தபரமபக்தியும் அதற்குத்தக்கபடி பெற்றபேரின்பமும் ஒருவர் பாசுரமாகப்பேச முடியாதபடி அளவற்றதாயிருக்கையாலே இத்திருமொழியில் ஒவ்வொருபாட்டிலும் முன்பாதியில் ''கண்டீரே'' என்று கேட்கிறவர்கள் பேச்சாகவும் பின்பாதியில் ''கண்டோம்'' என்று பதில் சொல்லுகிறவர்கள் பேச்சாகவும் முறையே தமக்குப்பிறந்த பரமபக்தியையும், பெற்ற பேரின்பத்தையும் இருவர் பேச்சாகப்பேசி நாச்சியார் திருமொழியாகிற இப்ரபந்தத்தை நிறைவுபடுத்துகிறாள்.

இத்யாதி.) $f_2$ ஆஶ்ரயத்தில் ஒருத்தியாகப்பேச. g ஸித்தஸாதந நிஷ்டையானவளுக்கு ஆற்றாமை ஸாதநமாகாதோ



g இங்குப்பிறந்த பக்தியில் ஸாதநவ்யபதேஶத்தைத் தவிர்த்துவித்தனை போக்கி ஆசையையும் குறைக்கவொண்ணாதே: h அது குறைந்ததாகில் முதலிலே ப்ராபகஸ்வீகாரந்தான் $h_2$ பிறவாதே. i இனி $i_2$ இதினுடைய அருமையாலே செய்து தலைக்கட்ட அரிதென்னுமத்தைப்பற்றவும், ஸ்வரூபஜ்ஞநமுடையவனுக்கு ஸ்வரூபத்துக்கு அநநுரூபமென்

இவள் ப்ரபன்னகுலத்தைச் சேர்ந்தவளாயிருக்க பரமபக்தியளவும் பிறந்தபின்பே இவளுக்கு எம்பெருமான் முகங்காட்டினானென்றால் இவள் ஸாதநபக்தி நிஷ்டை என்று ஆகிவிடாதோவெனில்: ஸாதநபக்தி நிஷ்டர்களுக்கும் மேலே இவளுக்கு பக்தி இருந்தபோதிலும், அது ஆற்றாமையால் விளைந்த பக்தியேயொழிய அவனைப் பெறுவதற்கு ஸாதனம் என்ற எண்ணத்தோடு அனுஷ்டிக்கப்பட்ட பக்தியல்ல. ஆகையால் இவளுடையது ஸாதனபக்தியல்ல. இவள் ஸித்தஸாதன நிஷ்டையான ஶரணாகதையானாலும் இவளுக்குக் கரைபுரண்ட ஆசையுமுண்டு. ப்ரபன்னர்கள் அனைவர்க்கும் எம்பெருமானை ப்ராபகமாகப் பற்றும்போது அவனிடத்தில் ஆசையும் இருந்தே தீரவேண்டும். ஆசையில்லாவிடில் அவனைப்பற்றவே இயலாது. அப்படியானால் அந்த பக்தியைக்கொண்டே பேற்றைப் பெறலாமேயெனில் ஸாதனபக்தியை அங்கங்களோடே அனுஷ்டித்து முடிப்பது என்பது செயற்கரியது. மேலும் எம்பெருமானுக்கும் தனக்கு

வென்ன அருளிச்செய்கிறார் (இங்குப் பிறந்த இத்யாதி.) h ஆசை பிறவாவிட்டால் வரும் ஹாநியேதென்ன அருளிச்செய்கிறார் (அது குறைந்தால் இத்யாதி.) $h_2$ (பிறவாதே) ஸாதநமான இந்த பக்திதானே உபாயமாகையாலே என்றபடி. i இப்படிப்பட்ட பக்திதான் த்யாஜ்யமாகைக்கும் உபாதேயமாகைக்கும் ஹேதுவேதென்ன அருளிச்செய்கிறார் (இனி இதினுடைய இத்யாதி.) ஸ்வயத்நத்தாலே வருமது த்யாஜ்யம், வஸ்து வைலக்ஷண்யத்தாலே வரும் பக்தி உபாதேயமென்றபடி. $i_2$ அன்றிக்கே, ஶாஸ்த்ரங்கள்

ஹுமத்தைப் பற்றவும் தவிர்த்ததித்தனைபோக்கி வஸ்துவினுடைய குணாதிக்யத்தையும் தவிர்த்ததன்றே; j ஸமஸ்த கல்யாண குணாத்மகமாயிருந்துள்ள விஷயமே உபாயமாகிறது: அக்குணங்கள்தான் ப்ராப்யமாகையும் தவிராதே. 126 "ஸோऽஶ்நுதே" (ஸோஶ்நுதே) என்கிறபடியே-அவ்வருகு போனாலும் அநுபாவ்யமாகிறது இக்குணங்களிறே.

பிறந்த பக்தியும் அந்த பக்திக்கு அநுரூபமாகப் பெற்ற பேறும் ஓர் ஆஶ்ரயத்திற்கிடக்குமவையல்லாமையாலே

---

முள்ள பர்த்ருபார்யா ஸம்பந்தத்தை உணர்ந்தவனுக்கு, கணவனின் போகத்துக்குக் கூலிகேட்கும் மனைவியின் செயல் போலே ஸ்வரூபத்துக்குத்தகாதது. ஆகையால் பக்தியை உபாயமாக்குவது விலக்கத்தக்கதேயொழிய உயர்வற உயர்நலமுடையவன் விஷயத்திலே பக்தி விலக்கத்தக்கதன்று. ப்ரபன்னனுக்கு எல்லாக் கல்யாணகுணங்களையும் உடையவனான எம்பெருமானே உபாயமாகிறான். அந்த குணங்களே ப்ராப்யமுமாகின்றன. [407-ம் பக்கத்தில் 126 ப்ரமாணப்படி] பரமபதம் சென்றாலும் குணங்களே அனுபவிக்கத்தக்கவையாகின்றனவன்றோ.

தனக்குப்பிறந்த பரமபக்தியும், அந்த பக்திக்குப் பொருத்தமாகத் தான்பெற்ற பேரின்பமும் ஒரு சேதனனிடம்

---

இத்தை த்யாஜ்யமென்று நிஷேதித்திருக்க ப்ரீதிரூபத்வம் சொல்லுகிறபடி என்னென்ன அருளிச்செய்கிறார் (இதினுடையவென்று.) அதாவது — அவன் குணாதிக விஷயமாகையாலே ப்ரீதிரூபத்வம் கூடுமென்றபடி. j குணாதிக்யம் எல்லா அவஸ்தைகளிலுமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (ஸமஸ்தகல்யாண குணாத்மக இத்யாதி.)

k தானன்றோ சொல்லுகிறாள், இது அந்யாபதேஶமானபடி எப்படியென்ன அருளிச்செய்கிறார் (திருவாய்ப்பாடி இத்யாதி.) அதாவது—"விருந்தாவனத்தேகண்டமை விட்டுசித்தன் கோதைசொல்" என்கையாலே - அவர்களவஸ்தையை ப்ராப்தையான ஆண்டாள் சொன்னாளென்னலாமிறே.



"கண்டீரே" என்று-கேட்கிறவர்கள் பாசுரத்தாலும், "கண்டோம்" என்று-சொல்லுகிறவர்கள் பாசுரத்தாலுமாகத் தான் பெற்றபேற்றைச்சொல்லித் தலைக்கட்டுகிறது. k திருவாய்ப்பாடி வ்ருத்தாந்தத்தைச்சொல்லுகையாலே அந்யாபதேஶமாகையும் தவிராது; ஆனாலும் "விட்டுசித்தன் கோதை சொல்" என்கிறதுவும் தவிர்க்கவொண்ணாது.

## பதினாலாம் திருமொழி—முதல் பாட்டு

பட்டி மேய்ந்தோர் காரேறு பலதே வற்கோர் கீழ்க்கன்றாய்
இட்டீ றிட்டு விளையாடி இங்கே போதக் கண்டீரே
இட்ட மான பசுக்களை யினிது மறித்து நீரூட்டி
விட்டுக் கொண்டு விளையாட விருந்தா வனத்தே கண்டோமே

**பதவுரை:—ஓர் கார் ஏறு** — (கண்ணபிரானென்கிற) கறுத்த காளையொன்று, **பட்டி மேய்ந்து** — காவலில்லாமல் இஷ்டப்படி திரிந்துகொண்டும், **பலதேவற்கு**—பலராமனுக்கு **ஓர் கீழ் கன்று ஆய்**—ஒப்பற்ற தம்பியாய், **இட்டீறிட்டு**-ஸந்தோஷத்துக்குப் போக்கு வீடாகப் பலவகையான கோலாஹலங்களைப் பண்ணி, **விளையாடி**—விளையாடிக்கொண்டும், **இங்கே போத**—இப்படிவர, **கண்டீரே**—பார்த்தீர்களோ? **இட்டம் ஆன**—(தனக்கு) இஷ்டமான, **பசுக்களை**—பசுக்களை, **இனிது**—இனிமையாக, **மறித்து** —பேர் சொல்லி

---

இவ்வுலகில் காணக்கூடியதல்லாமையாலே "கண்டீரே" என்று ஒவ்வொரு பாட்டிலும் முற்பாதியில் கேட்கிறவர்கள் பேச்சாலே அவனைக் கண்டாலல்லது தரிக்கவொண்ணாத தனது பரமபக்தியையும். "கண்டோமே' என்று பிற்பாதியில் பதில் சொல்லுகிறவர்கள் பேச்சாலே தான்பெற்ற பேரின்பத்தையும் சொல்லி இத்திருமொழியை நிறைவுபடுத்துகிறாள்.. திருவாய்ப்பாடியில் ஓர் ஆய்ச்சி பாவனையில் பேசுகையாலே இது அந்யாபதேஶமாகிறது. கடைசிப்பாட்டில் "விட்டுசித்தன் கோதைசொல்" என்கையாலே இப்படிப் பாடியவள் ஆண்டாள் என்பதும் வெளிப்படுகிறது.

அழைத்து, நீர் ஊட்டி-தண்ணீர் குடிப்பித்து, விட்டுக் கொண்டு-(இப்படியாக அழைத்து) போகவிட்டுக்கொண்டு, விளையாட-(அப்பெருமானை) விளையாடவிட்டு, விருந்தாவனத்தே-ப்ருந்தாவனத்திலே, கண்டோம்-பார்த்தோம்.

அவ-முதற்பாட்டு (பட்டிமேய்ந்து) இத்யாதி. "வானிளவரசாய். "விண்ணாட்டவர் மூதுவர்" என்று சொல்லுகிறவர்கள் நியமிக்க அவர்களாலே நியாம்யனாய், அவர் சூட்டு நன்மாலைகள் தூயனவேந்தித் தங்கள் ஸ்வரூபாநுரூபமாம்படி போதுபோக்கியிருக்கிறவனவிலே. "திருவாய்ப்பாடியிலே வெண்ணெய் திரளாநின்றது" என்றும், "நப்பின்னைப் பிராட்டி ப்ராப்தயௌவனையானாள்" என்றும் கேட்டு அவ்விருப்பு உண்டதுருக்காட்டாதே இங்கே வந்தவதரித்து. ப்ருந்தாவனத்திலே ஸ்வைரஸஞ்சாரம்பண்ணி அதனாலே நன்னிறம்பெற்றுத் திரிகிறபடி.

1. அவ:— "விண்ணாட்டவர்மூதுவர்" [திருவிருத்தம்-2] என்று சொல்லப்படும் நித்யஸூரிகள் வயதுமுதிர்ந்த மந்திரிகள்போலேயிருந்து 'வானிளவரசு" [பெரியாழ் திரு 3-6-3] என்கிறபடியே விண்ணாட்டுக்கு இளவரசன்போலேயிருக்கும் பரமபதநாதனை நியமிக்க, அவர்களுக்கு வசப்பட்டவனாய், அவர்கள் "சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி" [திருவிருத்தம் 21] என்னும் பாட்டில் சொல்லுகிறபடியே தங்களுடைய சேஷத்வஸ்வரூபத்துக்குத்தக்கபடி அவனுக்குத் திருமஞ்சனம் செய்து தூபம் ஸமர்ப்பிக்கும் வேளையிலே "திருவாய்ப்பாடியில் அகங்கள்தோறும் வெண்ணெய் திரண்டுகிடக்கிறது" என்றும், "நப்பின்னைப்பிராட்டி யௌவனப் பருவத்தை யடைந்தாள்" என்றும் கேள்விப்பட்டு, பரமபதத்தில் இருப்பில் திருப்தியில்லாமல் இவ்விபூதியில் கண்ணனாய் வந்தவதரித்து ஸ்ரீ பிருந்தாவனத்திலே இஷ்டப்படி திரிந்து அதனாலே பொலிவு பெற்று, காளைபோலே திரிந்ததைக் கூறுகிறது இப்பாட்டு.

அரு:—முதற் பாட்டு. b "பட்டி"-களவு, b, c பட்டி மேய்கையாலே, "கார்" என்கையாலே வானிளவரசில் வ்யாவ்ருத்தி. ஐ "வானிளவரசாய்" என்று நாரதாதிகள் சொல்லக்கேட்டென்றபடி.



வ்யா:— b (பட்டிமேய்ந்து) c பரமபதத்தில் கட்டுண்டிருப்பாரோபாதியாய், ஸ்வைரஸஞ்சாரம் பண்ணுவது அவதரித்துப் போந்தவிடத்தேயாய்த்து. d "'வானிளவரசு' என்கிறபடியே-திருவநந்தாழ்வான் மடியிலும், ஸ்ரீ ஸேநாபதியாழ்வான் பிரம்பின் கீழிலும், பெரியதிருவடி சிறகின்கீழிலுமாய்த்து இத்தத்வம் வளருவது" என்றாய்த்து பட்டரருளிச்செய்வது. e ஆனை கருப்பந்தோட்டத்தைப் புக்கால் திரியுமாபோலேயாய்த்து இவனும் ஊரை எமுலையடியே திரியும்படி. f பரமபதத்தில் நூல்பிடித்துப் பரிமாறுவதுபோலன்றிக்கே, "வெண்ணெய் களவுபோய்த்து. பெண்கள் களவு

வ்யா:—(பட்டிமேய்ந்தோர்காரேறு) பரமபதத்திலே இருந்தபோது கட்டுண்ட காளைபோலே இருந்தான். கண்ணனாய் அவதரித்துத் திருவாய்ப்பாடிக்கு வந்தபின்பே இஷ்டப்படி திரிந்து நிறம்பெற்றுப் பொலியும் காளைபோன்றவனானான். "வானிளவரசு" என்று பெரியாழ்வார் அருளிச்செய்தபடியே பரமபதநாதன் திருவனந்தாழ்வான் மடியிலும் விஷ்வக்ஸேனராகிய ஸேனை முதலியார் பிரம்பின்கீழும், பெரிய திருவடியாகிய கருடனின் சிறகின்கீழும் வளரும் இளவரசனாகவேயிருப்பான்" என்று பட்டர் அடிக்கடி அருளிச்செய்வர். ஆகையால் பரமபதத்தில் இவன் கட்டுண்ட காளைபோலேயிருப்பான். இங்கு கண்ணனாய் அவதரித்தபின்பு இப்படி அடக்குவாரில்லாமல் யானை கருப்பந்தோட்டத்தில் புகுந்து திரிவதுபோலே திருவாய்ப்பாடியெங்கும் தீம்பு செய்துகொண்டு இஷ்டப்படி திரிந்து நிறம்பெற்ற காளைபோல் ஆனான். ஸ்வரூபவிரோதமான எச்செயலுமில்லாத பரமபதத்தில் ஒரே ஒழுங்காகச் செயல்படுவதுபோலல்லாமல் இத்திருவாய்ப்பாடியில் "கண்ணனாலே வெண்ணெய் களவிடப்பட்டது, பெண்கள்

d ஸூரிகளுக்குப் பரதந்த்ரனாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (வானிளவரசென்கிறபடியே இத்யாதி.)

e ஸ்வைரஸஞ்சாரம் பண்ணுவது என்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் (ஆனையித்யாதி.) e, f (முலையடியே திரியும்படி) என்னுமத்தை உபபாதிக்கிறார் (பரம

போய்த்து'' என்னும்படியாக வாய்த்து மர்யாதை3களை அழித்துக்கொண்டு திரியும்படி. (ஓர்காரேறு) அபி4மத லாப4த்தாலே அத்3விதீயனாய்த் தன்னிறம் பெற்று மேனாணித் திருக்குமிருப்பு; பரமபத3த்தில் உடம்பு வெளுத்துப்போலே காணுமிருப்பது!

(பலதேவற்கோர் g கீழ்க்கன்றாய்) h வாஸனை இருக்கிறபடி. i பெண்களளவிலே தீம்புசெய்து திரியுமவன் இவனளவிலே ப4வ்யமாயிருக்கும். தனக்கு அபி4மதமான விஷயங்களிலே சேரவிடுகைக்கு i2 க4டகனாகையாலே அவன் நினைவின்படியேயாய்த்துத் திரியும்படி.

---

கடத்திச் செல்லப்பட்டார்கள்'' என்று எங்கு பார்த்தாலும் பேச்சாகும்படியாயிற்று வரம்புகளை அழித்துக்கொண்டு இவன் திரியும்படி. இதையே 'பட்டிமேய்ந்து' என்கிறாள். *(ஓர்காரேறு)* தன் விருப்பம்பெற்று இஷ்டப்படி திரிகையாலே ஒப்பற்றதாய், தன்னிறம்பெற்று, செருக்கோடுதிரியும் காளைபோன்றவனானான். பரமபத3த்தில் உடம்பு வெளுத்திருந்தான்போலும்!

*(பலதேவற்கோர்கீழ்க்கன்றாய்)* மூத்தவனான ப3லதே3வனுக்கு இளையவனாய். அவனால் நியமிக்கப்படுபவனாயிருந்தான். இவன் இஷ்டப்படி திரிவதற்காகத் திருவாய்ப்பாடியில் அவதரித்திருந்தாலும் பரமபத3த்தில் திருவனந்தாழ்வானாலே மடியில்வைத்துக் குலாவப்படும் இளவரசனாக வளர்ந்த வாஸனையாலே இங்கும் திருவனந்தாழ்வானவதாரமான ப3லராமனுக்கு வசப்பட்டிருந்தான், பெண்கள் விஷயத்தில் தீம்பு செய்து திரிகிறவன் இவன் விஷயத்தில் அடங்கியிருந்தான். மேலும் தனக்கு இனியவர்களான ஆய்ச்சிகள் ப்ரணயரோஷத்தாலே முகங்கொடுக்காமலிருக்கும்போது இந்த ப3லராமனே அவர்களைத் தன்னோடு சேரவிடும் க4டகனாயிருந்தபடியாலும் அவன் நினைவுக்கு அடங்கித்திரிந்தான்.

---

பத3த்திலித்யாதி3) g, h ஸ்வைரஸஞ்சாரம் பண்ணப்போந்த விடத்தே இவர்க்குப் பரதந்த்ரராகவேண்டுகிறதென்னென்ன அருளிச்செய்கிறார் (வாஸனையிருக்கிறபடி)என்று; வாஸனை- பரமபத3த்தில் வாஸனை. g (கீழ்க்கன்று) தம்பி. i ஹேத்வந்தரம் (பெண்களளவிலேயித்யாதி3).



j பெருமாளும் பிராட்டியுமாய்ப் பள்ளிகொண்டருளும்போது இளையபெருமாள் கையும் வில்லுமாயுணர்ந்து நின்று நோக்கி, 246 ''रममाणाः'' (ரமமாணா:) என்கிறபடியே இருவருமான கலவியில் பிறக்கும் ஹர்ஷத்தில் மூவராகச் சொல்லலாம்படி அந்வயித்து அவர்களுடைய ஸம்ஶ்லேஷத்துக்கு வர்த்த4காராயிருக்குமாபோலே, j1 க்ருஷ்ணன் தீம்பாலே ஏறுண்ட பெண்கள் நெஞ்சில் மறத்தைத் தன் இன்சொல்லாலே பரிஹரித்து, 247. ''रामेणाश्वासिता गोप्यः'' (ராமேணாஶ்வாஸிதா

---

ஸ்ரீ ராமாவதாரத்தில் பெருமாளும் பிராட்டியுமாகக் காட்டில் பள்ளிகொண்டிருக்கும்போது இளையபெருமாள் விழித்திருந்து வில்லும்கையுமாய் நின்று அவர்களைப்பாதுகாத்து,

246. ரம்யமாவஸத2ம் க்ருத்வா ரமமாணா வநே த்ரய: ।
தே3வக3ந்த4ர்வஸங்காஶாஸ் தத்ர தே ந்யவஸந்
ஸுக2ம் ॥ [ரா-ப3ா-1.31]

[தேவகந்தர்வர்களைப் போல் விளங்குபவர்களும், வனத்தில் அம்மிப்பவர்களுமான (ராமன், லக்ஷ்மணன், ஸீதை ஆகிய) மூவரும், ஓர் பர்ணசாலையைக் கட்டி அதிலேயே ஸுகமாக வசித்தனர்.] என்கிறபடியே பெருமாளும் பிராட்டியும் சேர்ந்திருக்கையாலே பிறக்கும் ஆனந்த3த்தில் இவருக்கும் பங்கு உண்டு என்று சொல்லலாம்படி கலந்துகொண்டு அவர்களுடைய சேர்த்தியின்பத்தை வளர்த்ததுபோலே, இந்த ப3லராமனும் கண்ணன்தீம்பாலே புண்பட்ட பெண்கள் நெஞ்சிலுண்டான கோபத்தை,

247. ஸந்தே3ஶைஸ் ஸாமமது4ரை:
ப்ரேமக3ர்ப்பை4ரக3ர்விதை: ।
ராமேணாஶ்வாஸிதா கே3ாப்யோ
ஹரிணா ஹ்ருதசேதஸ: ॥ [வி. பு. 5-24-20]

---

i2 j இவர் க4டகராகக் கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (பெருமாளுமித்யாதி3) அதாவது — இளையபெருமாளைப் போலே இவர்க்கு க்ருஷ்ணனிடத்திலே ஸர்வேஶ்வரத்வ ப்ரதிபத்தியுண்டாகையாலே கூடும். j1 இவன் சேரவிடும்

கோ3ாப்ய:) என்கிறபடியே - அவர்களை ஆஶ்வஸிப்பித்துப் பொருந்தவிடுகையாலே இவனளவில் ப1வ்யனாய்த்திருப்பது. k இவன்தான் அவன் நினைவின்படியே திரியுமவனாய், ஓரளவில் நியமிக்கவும் கடவனாய்த்திருப்பது. l "தன் நம்பியோடப் பின்கூடச் செல்வான்" என்னக்கடவதிறே. m இவன்தான் ஓரடி பிற்படவிறே பாம்பின் வாயிலே விழுந்தது.

---

[ஹரியினால் (கிருஷ்ணனால்) அபஹரிக்கப்பட்ட நெஞ்சை யுடைய கோ3பிகள் நயம் நிறைந்து இனியவையும், அன்பு நிறைந்தவையும், க3ர்வமற்றவையுமான செய்திகளாலே ஆறுத லடைவிக்கப்பட்டனர்] என்கிறபடியே தன்னுடைய இனிய சொற்களாலே போக்கி அவர்களை ஆறுதலடையச் செய்து கண்ண னோடு சேரவிடுகையாலே, பலராமனிடத்தில் கண்ணன் அடங் கியேயிருப்பான், அவன் மூத்தவனாயிருப்பதற்குச் சேர கண்ணன் பலராமனின் நினைவின்படி நடப்பவனானாலும் உண்மையில் ஶேஷபூ1தனை அவனுக்கு ஶேஷியாகையாலே ஒவ்வொரு சமயம் அவனை நியமிக்கவும் செய்வான். 'பலதேவனென்னும் தன் நம்பியோடப் பின்கூடச்செல்வான்' [பெரியாழ் திரு. 1-7-5] என்று கண்ணன் பொதுவாக ப3லராமனுக்கு அடங்கிநடப்பவன் என்று பெரியாழ்வாரும் அருளிச் செய்தாரன்றோ. ப3லராமனும் கண்ணன் அபாயங்களிலே சிக்கிக்கொள்ளாதபடி அவனை எப் போதும் கண்காணித்துக்கொண்டிருப்பதே வழக்கமன்றோ; ப3லராமன் ஒருநாள் சிறிது பிரிந்தபோது கண்ணன் காளியன் என்னும் பாம்பின் வாயில் விழுந்தானன்றோ.

---

ப்ரகாரத்தைக் காட்டுகிறார் (க்ருஷ்ணன் தீம்பாலே யித்யாதி3) k ஆனால் வரவுக்கு நியாமக(த்வ)மில்லையோ வென்ன அருளிச்செய்கிறார் (இவன்தானித்யாதி3) l க்ருஷ் ணன் நியாமகனாயிருக்குமதுக்கு ப்ரமாணம் காட் டாமல் நியாம்யனாயிருக்குமதுக்கு ப்ரமாணம் காட்டுகிறார் (தன்னம்பியோடவித்யாதி3) m நியாம்யனன்றிக்கேயிருந் தால் வரும் ஹாநியேதென்ன அருளிச்செய்கிறார் (இவன் தான் ஓரடியித்யாதி3) n "இட்டீறு" - செருக்கால் வந்த



n (இட்டீறிட்டு) இச்சேதநன் முக்தனானால் ப4க3வத3நு
ப4வத்தால் வந்த ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு 248. "[Devanagari]
[Devanagari]" (ஏதத் ஸாம கா3யந்நாஸ்தே) என்று-ஸாம
கா3நம் பண்ணுமாபோலே அவன்தான் இங்கே வந்தவ
தரித்து இப்பரிமாற்றத்தைப் பெறுகையாலே வந்த ஹர்ஷத்
துக்குப் போக்குவிட்டுப் பண்ணும் வ்யாபாரமிருக்கிறபடி.
o கீழே "ஏறு" என்று-ஜாத்யுசிதமாகப் பண்ணும் வ்யாபார
மிருக்கிறபடி. '249. '[Devanagari]' (அவாக்யநாத3ர:) என்கிற

---

(இட்டீறிட்டு) செருக்கைக்காட்டும் ஶப்3த3ம் முதலான செயல்களைச்செய்து, இந்த லீலாவிபூ4தியிலுள்ள ப3த்3த4சேத னன் இதிலிருந்து விடுபட்டு முக்தனாகி, பரமபத3ம் சென்றால் எம்பெருமானை அனுப4விப்பதாலுண்டான ஆனந்த3த்தை வெளிப்படுத்திக்கொண்டு.

248\. ஏதத் ஸாம கா3யந்நாஸ்தே l ஹா வுஹா வுஹா வு l
அஹமந்நமஹமந்நமஹமந்நம் l அஹமந்நாதோ3ऽ-
ஹமந்நாதோ3ऽஹமந்நாத3: ll [தை. ப்4ருகு3 10-6]

[முக்தாத்மா (பரமாத்மாவையடைந்து) இந்த ஸாமத்தைப் பாடிக்கொண்டிருக்கிறான்,-ஹா வுஹா வுஹா வு; நான் (பரமாத் மாவுக்கு) அன்னமாயிருப்பவன்; அன்னமாயிருப்பவன்; அன்ன மாயிருப்பவன். நான் (பரமாத்மாவின் ப்ரீதியாகிற) அன்னத்தை பு4ஜிப்பவன்; அன்னத்தை பு4ஜிப்பவன், அன்னத்தை பு4ஜிப் பவன்.] என்கிறபடியே ஸாமகா3னம் செய்வதுபோலே எம்பெரு மான் இங்கேவந்து அவதரித்துத் தனது ஸௌலப்4ய ஸௌஶீல்யாதி3கள் நிறம்பெறும்படி இங்குள்ளாரோடு பரிமா றப்பெறுகையாலே அந்த ஆனந்த3த்தை வெளிப்படுத்திக் கொண்டு செய்யும் ஶப்3த3ம் முதலான செயல்களைச் சொல்லு கிறது முதலடியில் 'காரேறு' என்று இடைச்சாதிக்குப் பொருத்தமான செயல்களைச் செய்ததைக் கூறுகையாலே புநருக்தியில்லை.

"249. அவாக்யநாத3ர: [சா2ந். 3-14-2]

---

வ்யாபாரம். இட்டீறிடுகை-ஶப்3தி3க்கை. o ஆனால் ஏக ஶப்3த3த்தாலே சொல்லுவானென்னென்ன (கீழே) என்று.

தத்த்வம் 'இட்டீறிட்டு' என்னும்படியிருப்பதே! என்று சிறியாத்தான் போர வித்3த4ராயிருக்கும்'' என்று அருளிச்செய்வர். (விளையாடி) அச்செருக்குக்குப் போக்குவிட்டுப் பண்ணும் லீலையைச் சொல்லுகிறது, இதுதானேயிறே ப்ரயோஜநம். (இங்கேபோத) அங்கேபோனாலும் பெறவரிய பரிமாற்றத்தை அவன் இங்கே பரிமாறக் காணப்பெற்றாருண்டோ ?

கண்டவர்கள் பாசுரமாயிருக்கிறதுமேல் p (இட்டமான பசுக்களை) q யுவாக்களானவர்கள் அபி4மதவிஷயத்திலும் க4டகரை விரும்பியிருக்குமாபோலே, இவனும் பசுக்களை யாய்த்து விரும்புவது. r ஆகள் போகவிட்டுக் குழலூத வேணுமே. s ''நீ தாழ்த்ததென்?'' என்று மாதாபிதாக்கள்

---

[(க்3ராப்பீ3ர்யத்தாலே) ஒருவரிடமும் பேசாதவனாகவும், (ஒரு வஸ்துவினிடமும்) ஆத3ரம் அற்றவனாகவுமுள்ளவன் பரமாத்மா] என்று சொல்லப்படும் மதிப்புடைய பரதத்த்வம் 'இட்டீறிட்டு விளையாடும்' என்று சொல்லும்படியாவதே! என்று கூரத்தாழ்வானுடைய ஶிஷ்யரான 'சிறியாத்தான்' என்னும் ஆசார்யர் மிகவும் ஈடுபடுவர்'' என்று நம்பிள்ளை அருளிச்செய்வர்என்பர். (விளையாடி) முற்கூறிய செருக்கை வெளிப்படுத்தும் லீலா வ்யாபாரங்களைச் சொல்லுகிறது. அவதாரமெடுத்ததற்கு லீலையன்றோ பயன். (இங்கே போதக்கண்டீரே) பரமபத3ம் சென்றாலும் அநுப4விக்கமுடியாத செயல்களை அவன் இங்கே செய்ததைக் காணப்பெற்றாருண்டோ? இதுவரை கேட்பவர்கள் பாசுரம்.

இனி, பிற்பாதி கண்டவர்கள் பாசுரமாயிருக்கிறது, மேல் பாட்டுக்களிலும் இட்படியே (இட்டமான பசுக்களை) இவனுக்கு இனியவர்கள் பெண்களன்றோ; பசுக்களை இனியவையாக இங்கு சொல்லுவதற்குக் கருத்தென்ன? எனில்; யௌவன வயஸ்ஸையுடைய காதலர்சள் தங்கள் காதலிகளைக் காட்டிலும் அவர்களோடு தம்மைச் சேரவிடுபவர்களை விரும்பி

---

p. q பசுக்களோ இஷ்டம், பெண்களன்றோவென்ன அருளிச்செய்கிறார் (யுவாக்களித்யாதி3) r, s பசுக்கள் க4டகராகையை த்3விவித4மாக அருளிச்செய்கிறார் (ஆகள் போக இத்யாதி3) p, s இவை இஷ்டமென்கைக்கு ஹேத்வந்தரம்



கேட்டால் ''பசுக்களின் பின்னேபோனேன்'' என்று சொல்லலாம்படி தனக்கு ஒதுங்க நிழலாயிருக்குமிறே அவை. (இட்டமான பசுக்களை) t 'திவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி'' என்கிறபடியே பரமபத3த்திலுங்காட்டில் பசுக்களை மேய்க்குமத்தையாய்த்து விரும்பியிருப்பது. அவ்விருப்பிலும் வாய்வெருவிக்கிடப்பதுவும் கனாக்காண்பதும் இப்பசுக்களையாய்த்து.

u (இனிதுமறித்து) v இருவராகக்கலந்து பரிமாறாநின்றால் எதிர்த்தலையினுடைய நாமக்3ரஹணம் பண்ணினால்

---

யிருப்பதுபோலே இக்கண்ணனும் பசுக்களையே கோ3பிகளைக் காட்டிலும் விரும்பியிருப்பான். ''ஆகள் போகவிட்டுக் குழலூதுபோயிருந்தே'' [திருவாய்மொழி 6-2-2] என்கிறபடியே பசுக்களைக் காதலிமார்கள் இருக்குமிடத்துக்குப் போகவிட்டுப் பசுக்களை அழைப்பதற்குக் குழலூதுவதுபோலே காதலிகளை அழைப்பானன்றோ கண்ணன். இப்படிக் காதலிகளோடு சேரவிடும் க4டகர்களாயிருப்பதுமட்டுமல்ல, கண்ணன் ஆயர்சிறுமிகளோடு விளையாடி நேரங்கழித்து வரும்போது, 'தாமதித்ததற்குக் காரணமென்ன' என்று தாய் தந்தையர் கேட்டால் ''பசுக்கள் நெடுந்தூரம் சென்றுவிட்டன. அவற்றை மறித்து ஓட்டிவரச் சென்றதில் தாமதமாயிற்று'' என்று காரணம் சொல்லுவதற்கு வாய்ப்பாயிருக்கையாலும் இப்பசுக்கள் மிக இனியவையாயுள்ளன. (இட்டமான பசுக்களை) ''திவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி செங்கனிவாய் எங்கள் ஆயர் தேவே'' [திருவாய்மொழி 10-3-10] என்கிறபடியே பரமபத3த்தைக் காட்டிலும் பசுக்களை மேய்ப்பதையன்றோ இவன் விரும்பியிருப்பான். பரமபத3த்திலிருக்கும்போதும் இவன் விரும்பி வாய்வெருவிக்கிடப்பதும், பகற்கனவு காண்பதும் க்ருஷ்ணாவதாரத்தில் மேய்த்த இப்பசுக்களையேயன்றோ!

(இனிதுமறித்து) இனிமையாகப் பேர்சொல்லியழைத்து. நாயகனும் நாயகியும் கலந்து பரிமாறும்போது ஒருவரை மற்

---

(நீ தாழ்த்ததென்னித்யாதி3) t இந்த ஹேதுத்3வயத்தாலே இந்த இஷ்டதையின் சரமாவதி4யைக் காட்டுகிறார் (திவத்திலும்) என்று.

அது ப்ரீதியாயிருக்குமாபோலேயாய்த்து இவற்றின் பேரைச் சொல்லி அழைத்தால் அவற்றுக்கு ப்ரியமாயிருக்கும்படி. w லோகத்திலே சேதநர் அஸங்க்$_{2}$யேயராயிருக்கச்செய்தேயும் எல்லாருடையவும் நாமரூப வ்யாகரணம் பண்ணுமாபோலே. x (நீரூட்டி) y அவற்றுக்குத் தண்ணீர் பருகுகை அபேக்ஷிதமானால் தான் அரைமட்டு நீரிலே இழிந்து, பின்னே கையைக் கட்டிக் குனிந்து நின்று தண்ணீர் பருகிக்காட்டுமாய்த்து இவன்; பின்னை அவையும் கூடக்குடிக்கும். z 'தடம் பருகு

---

ஒருவர் பேர்சொல்லி அழைத்தால் அது அழைக்கப்பட்டவருக்கு மிக இனிமையாயிருப்பதுபோலே, பசுமேய்க்கும் போது பசுக்களின் பேர்சொல்லி யழைத்தால் அவற்றுக்கு மிகவும் இனிமையாயிருக்குமன்றோ. பசுக்கள் ஆயிரக்கணக்கில் இருக்கும்போது ஒவ்வொன்றையும் பேர் சொல்லி அழைக்க முடியுமோ? எனில், லீலாவிபூதியிலுள்ள கணக்கற்ற சேதனர் அனைவர்க்கும் நாமரூப வ்யாகரணம் பண்ணின (ஸ்ருஷ்டிகாலத்தில் பெயரையும் உருவையும் கொடுத்த) இவனுக்கு இது அரிதன்றே. (நீரூட்டி) அவற்றுக்கு நீர்குடிக்க வேண்டியிருந்தால், அருகிலிருக்கும் அதிக ஆழமில்லாத நீர் நிலையிலே இறங்கி, அவை வாயாலே குடிக்கவேண்டியிருக்கையாலே தன் கைகளை முதுகில் கட்டிக்கொண்டு குனிந்து நின்று வாயாலே தண்ணீரை உறிஞ்சி அவை தண்ணீர் பருகக் கற்றுக்கொடுப்பான் இவன். அதன்பின் அவையும் கூடக்குடிக்கும். ''தடப்பருகு கருமுகில்'' [பெரிய திரு. 2-5-3] என்று திருமங்கையாழ்வாரும் இவன் தண்ணீர் குடிக்கும்போது மேகம் குளத்தில் நீர் பருகுவது போலிருக்கும் என்றாரன்றோ.

---

u, v ''இனிது மறித்து'' என்றதுக்கு- அவற்றுக்கினிதாம்படி அழைத்து என்றுக்கித் தாத்பர்யம் (இருவராகவித்யாதி$_{3}$) w ''பசுக்களை'' என்று ப$_{3}$ஹுவசநமாயிருக்க, எல்லாவற்றையும் மறிக்கக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (லோகத்திலேயித்யாதி$_{3}$) x y ''நீரூட்டி'' என்ற காரயித்ருத்வத்துக்குத் தாத்பர்யம் (அவற்றுக்கு இத்யாதி$_{3}$) z, a அவன் குடிக்குமென்னுமதுக்கும், அத்தைக்கண்டு அவை குடிக்கு



கருமுகி'லிறே. a 250. 'स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते'' (ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்தத$_{3}$நுவர்த்ததே) காரயித்ருத்வமிருக்கிறபடி. b 'கன்று மேய்த்து'' இத்யாதி$_{3}$. தடாகத்திலே ஒரு மேக$_{4}$ம்படிந்தாற்போலேயாய்த்திருப்பது.

(விட்டுக்கொண்டு விளையாட) அபி$_{4}$மத ஸித்$_{3}$தி$_{4}$யாலே தன் மேன்மை பாராதே. திருக்குழல் பேணாதே. திருப்பரியட்டம் பேணாதே, ஸ்வைரஸஞ்சாரம் பண்ணாநிற்கும்;

---

250. யத்$_{3}$ யத$_{3}$ாசரதி ஶ்ரேஷ்ட$_{2}$ஸ் தத் ததே$_{3}$வேதரோ ஜந: ।
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ் தத$_{3}$நுவர்த்ததே ॥
[கீ$_{3}$தை. 3-21]

[ஜ்ஞானியானவன் எந்தெந்தக் கர்மங்களை அனுஷ்டி$_{2}$க்கிறானோ அந்தக் கர்மங்களையே (ஞானமற்ற) மற்ற மனிதனும் அனுஷ்டி$_{2}$க்கிறான். அந்த ஞானி கர்மங்களை எவ்வளவாக அனுஷ்டி$_{2}$க்கிறானோ, அவ்வளவையே லோகமும் அநுஷ்டி$_{2}$க்கிறது.] என்று கீ$_{3}$தையில் அருளிச்செய்தபடியே நீர் குடிப்பதையுங் கூடத் தான் அநுஷ்டி$_{2}$த்துப் பசுக்களையும் அனுஷ்டி$_{2}$க்கச் செய்கிறான். நீர்குடிக்கக்கூட அறியாத கன்றுகளை இப்படிக் குடித்துக்காட்டிக் குடிக்கச்செய்ய வேண்டுமேயொழிய வேறுவகையில் நீரூட்ட முடியாதன்றோ. ''கன்று மேய்த்தினிதுகந்தகாளாய்'' [திருநெடும் 3-16] என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்தபடியே, நீர்குடிக்கவும் அறியாத கன்றுகளை மேய்ப்பதில் மிகவும் உகந்திருப்பானன்றோ இவன்.

(விட்டுக்கொண்டு விளையாட) பசுக்களை மேயவிட்டுக் கொண்டிருக்கும்போது விளையாட முடியுமோ? எனில், பரமபத$_{3}$த்திலிருக்கும்போதும் தான் ஆசைப்பட்டது கிடைக்கையாலே, தன் மேன்மையைப் பாராமலும், தன் திருக்குழல்களைப்பேணா

---

மென்னுமதுக்கும் ப்ரமாணத்$_{3}$வயம் அருளிச்செய்கிறார் (தடம்பருகித்யாதி$_{3}$.) b பசுமேய்க்கை இனிதாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (கன்றுமேய்த்து இத்யாதி$_{3}$)

c அவைமேய்ந்து தண்ணீரும் பருகுகையாலே பின்னைத்தனக்கொரு கர்த்தவ்யாம்ஶமில்லை; நிரபேக்ஷனுக்கிறே லீலையில் அந்வயமுள்ளது. இந்த லீலைதானேயிறே ப்ரயோஜநமும். (விருந்தாவனத்தே கண்டோமே) d ஸ்ரீவைகுண்டத்திலே கண்டாற்போலேயிருப்பதொன்றிறே திருவாய்ப்பாடியிலே காணுங்காட்சி. செருக்கராயிருக்கும் ராஜாக்கள் போகத்துக்கு ஏகாந்தமான ஸ்தலங்களிலே மாளிகை சமைத்து அபிமதவிஷயங்களும் தாங்களுமாய் புஜித்தாற்போலே இருப்பதொன்றிறே ஸ்ரீ ப்ருந்தாவனத்தில் பரிமாற்றம். 1.

## பதினலாம் திருமொழி—இரண்டாம் பாட்டு

அனுங்க வென்னைப் பிரிவுசெய் தாயர் பாடி கவர்ந்துண்ணும்
குணுங்கு நாறிக் குட்டேற்றைக் கோவர்த் தனனைக் கண்டீரே
கணங்க ளோடு மின்மேகம் கலந்தாற் போல வனமாலை
மினுங்க நின்று விளையாட விருந்தா வனத்தே கண்டோமே.

---

மலும் தன்திருப்பரியட்டத்தை அழுக்குப்போகத்துவைத்து உடுத்தாமலும் இஷ்டப்படி திரிவான். அவை புல்மேய்ந்து தண்ணீரும் பருகின பின்பு தனக்குச் செய்யவேண்டியது ஒன்றுமில்லை. அந்நிலையில் விளையாடுவது தவிர வேறில்லையே. அவதாரத்தின் பயனும் இந்த விளையாட்டேயன்றோ. (விருந்தர வனத்தே கண்டோமே) திருவாய்ப்பாடியிலும் இத்தகைய காட்சியைக் காணமுடியாதாகையாலே, அதுவும் ஸ்ரீவைகுண்டத்தில் காட்சிபோலேயேயிருக்கும், மதிப்புடைய அரசர்கள் தமக்கு இனிய மனைவியரோடு அனுபவம் பெறுவதற்காக ஏகாந்தமான இடங்களில் மாளிகைகட்டி அவர்களும் தாங்களும் தனியே அனுபவிப்பது போலிருப்பதன்றோ ஸ்ரீப்ருந்தா வனத்தில் இவன் அடைந்த அனுபவம். 1

---

c மேய்க்கிறவனுக்கு விளையாட்டுக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (அவைமேய்ந்து இத்யாதி) d பலவேளையில் வைகுண்டத்திலே காணவேண்டாவோவென்ன அருளிச்செய்கிறார் (ஸ்ரீவைகுண்டத்திலே இத்யாதி) 1



பதவுரை:— **அனுங்க**—நான் வருந்தும்படியாக, **என்னை பிரிவு செய்து**—என்னைப் பிரியவிட்டுப்போய், **ஆயர்பாடி**—திருவாய்ப்பாடியை, **கவர்ந்து**—ஆக்ரமித்து, **உண்ணும்**—அநுபவிக்கின்றவனாய், **குணுங்கு நாறி**—வெண்ணெய் நாற்றம் நாறுபவனாய், **குட்டேற்றை**—இளைய காளை போன்ற வனுமான, **கோவர்த்தனனை**—பசுக்களை வளர்க்கும் கண்ணபிரானை, **கண்டீரே?**—; **மின் மேகம்**—மின்னலும் மேகமும், **கலந்தாற்போல**—ஒன்றோடொன்று சேர்ந்தாற்போலே, **வனமாலை மினுங்க நின்று**-(கறுத்த திருமேனியிலே மின்னல் போன்ற) வனமாலை திகழப்பெற்று, **கணங்களோடு**—(தோழன்மாருடைய) கூட்டங்களோடுகூட, **விளையாட**—விளையாடாநிற்க, **விருந்தாவனத்தே கண்டோம்.**

**வ்யா:— இரண்டாம் பாட்டு. a (அனுங்க) நான் ஜீவியாதபடியாகப் பிரிவை விளைத்து. b "பிரியேன், பிரியிலாற்றேன்" என்று சொல்லிவைத்திறே பிரிவது. இன்னம் ஒருகால் காணலாமோவென்னும் ஆசையாலே ஜீவிக்கவும் வேண்டி**

---

2. *அவ.*—வைஜயந்தி என்னும் வனமாலையை தரித்து மின்னலோடுகூடிய மேகம்போலே திகழ்கின்றவனாய், தோழன்மாரோடு விருந்தாவனத்தில் விளையாடுபவனைக் கண்டோம் என்கிறாள்.

வ்யா:—(அனுங்க) நான் அழியும்படியாக என்றோ, நான் வருந்தும்படியாக என்றோ பொருள் கொள்ளலாம். (அனுங்க என்னைப் பிரிவுசெய்து) நான் உயிர்வாழ முடியாதபடி என்னைப் பிரிந்து. கலந்திருக்கும்போது "உன்னைப் பிரியமாட்டேன், பிரிந்தால் தரிக்கமாட்டேன்" என்று சொல்லிவிட்டன்றோ பிரிவது. இதனால் "இன்னம் ஒருமுறை காணலாமோ" என்னும் ஆசையாலே உயிர் வாழவும் வேண்டியிருக்கும்.

---

இரண்டாம் பாட்டு (அனுங்க இத்யாதி) a "அனுங்க" -நடுங்க, "அனுங்க" என்று-விநாஶமாதல், நோவுபாடாதல். b அனுங்கவேண்டுவானென்னென்ன அருளிச்செய்கிறார் (பிரியேனித்யாதி) c இரண்டாமர்த்தத்திலே நோக்காகத்

முடியவும் பெறுதே நோவுபடுகிறபடி. (என்னை) c பிரிவே எருவாகப் பணைக்கைக்குத் தான் என்றிருந்தானே என்னையும்? d (ஆயர்பாடி கவர்ந்துண்ணும்) பட்டிமேயும்படிதன்னைச் சொல்லுகிறது. அகங்களில் சிறை செய்துவைத்து அவற்றையேயாய்த்து விரும்பி அமுதுசெய்வது. தன்னை ஆசைப்பட்டாரை உபேக்ஷித்துப்போந்தான். இப்போது ஆசைப்பட்டிறே நோவுபடுகிறது.

(குணங்குநாறி) முடைநாற்றம் அநுப$_4$விக்கவேணும் போலே காணும் இவள் தான் ஆசைப்பட்டிருப்பது. e 251 "दीक्षित" (தீ$_3$க்ஷிதம்) திருமேனியிலே பூசின வெண்ணெயும், போர்த்தவுறுப்புத்தோலும், யஜமாநவேஷம் தோற்றும் படியாக இருக்கும்படி. "व्रतसंपन्न" (வ்ரதஸம்பந்நம்) ரிஷி

---

ஆகையால் பிரிவுத் துன்பத்தால் அழியவும் முடியாது. இப்படி அழிவதொத்த சித்ரவதையை 'அனுங்க' என்கிருள். (என்னை) தன்னைப்போலே நானும் பிரிவே எருவாக வளர்ச்சியடைவேன் என்று நினைத்தானே? (ஆயர்பாடி கவர்ந்துண்ணும்) "பட்டி மேய்ந்து" என்று சென்ற பாட்டில் சொன்னதை விளக்குகிருர். தன்னை ஆசைப்பட்ட என்னைப்போன்ற பெண்களைப் பிரிவாலே துன்புறுத்தி, அத்தனை ஆசையில்லாத ஆயர்பாடிப் பெண்களைக் கவர்ந்துகொண்டுபோய், தன் அகங்களிலே சிறை செய்துவைத்து அவர்களையே விரும்பி அனுப$_4$விப்பான். நானும் இப்படி ஆசைப்படாமலிருந்தால் நோவுபட்டிருக்க வேண்டாமே என்று கருதுகிருள்.

(குணுங்குநாறி) கண்ணனிடம் வீசும் வெண்ணெயின் முடைநாற்றம் அனுப$_4$விக்க வேண்டுமென்றே இவள் ஆசைப் பட்டிருப்பாள்போலும். இப்படி ஆசைப்பட்டார் வேறுசில ருண்டோ? எனில்,

---

தாத்பர்யம் (பிரிவேயித்யாதி$_3$) d "ஆயர்பாடி"- ஆயர்பாடி யிலுள்ள பெண்களை. f "குட்டேறு" இளரிஷப$_4$ம். e இப்படி ஜாத்யுசிதமான நாயகவேஷத்தை ஆசைப்பட்ட பேருண் டோவென்ன அருளிச்செய்கிருர் (தீ$_3$க்ஷிதமித்யாதி$_3$.)



சொன்ன அளவன்றிக்கே. அவன் ஒரு பட்டினி விடச் சொல்லுமாகில் தாம் இரண்டு பட்டினிவிடுவர். 'वराजिनधर' (வராஜிநத$_4$ரம்) நல்ல பரியட்டங்கள் சாத்துமதின்றிக்கே, வராஜிநத$_4$ரராயிருப்பர். "शुचि" (ஶுசிம்) 'ஒருவரையும் ஸ்பர்ஶிக்கலாகாது. பிராட்டி யொருத்தியையும் செய்யலாவ தில்லையிறே' என்றால் அவள்தன்னை ஸ்பர்ஶிக்கிலும் அடுத் தடுத்து முழுகாநிற்பர்; இதுக்கெதிர்த்தட்டிறே "கறையினர் துவருடுக்கை" இத்யாதி$_3$. அவன் விரும்பாத ப்$_3$ரஹ்மசாரி நிறத்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? இப்படியே குணுங்கு நாற்றமாய்த்து இவளுகப்பது. f (குட்டேற்றை) அபி$_4$மத

---

251. தீ$_3$க்ஷிதம் வ்ரதஸம்பந்நம் வராஜிநத$_4$ரம் ஶுசிம்!
குரங்க$_3$ஶ்ருங்க$_3$பாணிம் ச பஶ்யந்தீ த்வாம்
ப$_4$ஜாம்யஹம்!! [ரா, அ. 16-23]

[தீ$_3$க்ஷைகொண்டவரும், விரதத்துடன் கூடியவரும், உயர்ந்த மான்தோலை அணிந்தவரும், பரிஶுத்$_3$த$_4$மானவரும், மான் கொம்பைக் கையிற்கொண்டவருமான உம்மைக்காணும் நான் உம்மிடமே ப$_4$க்திசெலுத்துகிறேன்.] என்கிறபடியே ஸீதை பெருமாள் யாக$_3$த்துக்காக தீ$_3$க்ஷைகொண்டிருக்கும்போது, திருமேனியிலே பூசிய வெண்ணெயும். போர்த்த மான்தோலு மாக யாக$_3$ம்செய்யும் யஜமான வேஷத்துடன் இருப்பதையும், ஆசார்யரான வஸிஷ்ட$_2$ர் ஒருநாள் பட்டினி கிடக்கச் சொன்னால் இரண்டுநாள் பட்டினிகிடப்பதையும், பட்டுப் பீதாம்ப$_3$ரங்களைக் களைந்து மேலான மான்தோலை உடுத் திருப்பதையும், வஸிஷ்ட$_2$ர் 'பிராட்டியைத்தவிர வேறெவரையும் தொடக்கூடாது' என்று கூறினால் பிராட்டியைத் தொட நேர்ந்தாலும் மறுபடியும் மறுபடியும் முழுகுவதையும் விரும்பி, இப்படிப்பட்ட யாக$_3$தீ$_3$க்ஷிதனை ராமனைக் காண ஆசைப் பட்டாளன்றோ. "கறையினர் துவருடுக்கை கடையாவின் கழி கோல் கைச் சறையினர் கவராத தளிர் நிறத்தால் குறைவிலமே" [திருவாய் 4-8-4] என்று இதற்கு நேர் எதிர்த்தட்டான கண்ண னின் அநாசார வேஷத்தைப் பராங்குசநாயகியும் விரும்பி "அவன் விரும்பாத என் கன்னி நிறத்தால் என்ன பயன்?" என்று ளன்றோ; அதுபோலவே இவளும் கண்ணனுடைய முடைநாற்

லாப4த்தாலே மேனுணித்திருக்கும்படி. (கோவர்த்தனனை) பெண்களை வெறுந்தறையாக்கி, பசுக்களை அபி4வ்ருத்3த4 மாக்கும்-ஒன்று நூறுயிரமாக்கும்.

(கணங்களோடு) தன்னேராயிரம் பிள்ளைகளோடே. (மின்னித்யாதி3) மின்னும் மேக4மும், சேர்ந்தாற்போலே யாய்த்து, ஶ்யாமமான திருமேனிக்குப் பரபா4க3மாய் உஜ்ஜ்வலமான வநமாலையசைந்து வரும்படியாக. g மாலை யிடுவான் இவனுக்கு ப4வ்யனுயிறேயிருப்பது. h "கர்ப்ப4 தா3ஸர்" என்னுமாபோலே. (விளையாடவிருந்தாவனத்தே கண்டோமே) இம்மாலையிட்டால் விக்ருதராயிருக்கும் திரு வாய்ப்பாடியிலே காண்கையன்றிக்கே, ஸ்ரீப்3ருந்தா3வநத் திலே ஸ்வைரஸஞ்சாரம் பண்ணி விளையாடக் கண் டோம். 2

---

றத்தையே விருப்புகிருள். (குட்டேற்றை) ஆயர்பாடி கவர்ந் தண்டு. விருப்பியது பெறுகையாலே செருக்குடனிருக்கும் இளங்காளை போன்றவனை. (கோவர்த்தனனை) பசுக்களை வளர்ப் பவனை என்று பொருள். பெண்களை ஒன்றுமில்லாமல் செய்து பசுக்களை ஒன்று நூறுயிரமாக வளர்ப்பவன் என்றபடி.

இனி, பதில் சொல்லுகிறவர்கள் பாசுரம்: (கணங்களோடு) "தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு வருவான்" [பெரியாழ் திரு. 3-1-1] என்று தகப்பனுரான பெரியாழ்வார் அருளிச்செய்தபடியே தன்னையொத்தவர்களான தோழர்கூட் டங்களோடு. (மின்மேகம் கலந்தாற்போல வனமாலை மினுங்க நின்ற) மின்னலும் மேக4மும் ஒன்று சேர்ந்தாற்போலே இருக்

---

g, h மாலாகாரர் என்னுமல் "மாலையிடுவான்" என்பா னென்னென்ன அருளிச்செய்கிருர் (க3ர்ப்ப4த3ாஸரித்யாதி3) (மாலையிடுவான்) இத்யாதி3 வாக்யத்3வயத்துக்குத் தாத் பர்யம்-தானும் மாலாகாரர் மகளாகையாலே தானிட்ட மாலையும் சாத்திக்கொண்டு அவன் விளையாடும் என் றிருக்கிருள் என்றருளிச்செய்வர். (2)



## பதினுலாம் திருமொழி மூன்றும் பாட்டு

மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணுளனை
ஏலாப் பொய்களுரைப்பானை யிங்கே போதக் கண்டீரே
மேலால் பரந்த வெயில்காப்பான் வினதை சிறுவன்
சிறகென்னும்
மேலாப் பின்கீழ் வருவானை விருந்தா வனத்தே கண்டோமே.

பதவுரை:—மால் ஆய் பிறந்த நம்பியை- (பெண்கள் பக் கலுண்டான) அன்பே ஒருவடிவாய்க் கொண்டு பிறந்த தென்னலாம்படியானவனுய், மாலே செய்யும் மணுளனை— அன்பையே செய்கின்ற மணவாளப் பிள்ளையாய், ஏலா பொய்கள் உரைப்பானை - பொருந்தாத பொய்களைச் சொல்லுமவனுன கண்ணபிரானை, இங்கே போதக் கண் டீரே-; மேலால்-மேலே, பரந்த-பரவின, வெயில்-வெய் யிலை, காப்பான்-(திருமேனியில் படாமல்) தடுப்பதற்காக, வினதை சிறுவன் சிறகு என்னும் மேலாப்பின் கீழ் வருவானை-

---

றது கரியதிருமேனிக்கு வர்ணச்சேர்த்தியழகை அளிக்கும் ஒளிவீசும் வனமாலையானது மார்பிலே அசையவரும் அழகு. (வனமாலை மினுங்கநின்று) வடமதுரையிலே வீடுதேடிச் சென்று மாலைகேட்ட இவனுக்கு மாலையிடுவான் (மாலாகாரர்) மிகவும் வசப்பட்டு நின்று மாலையளித்தாராகையாலே, அது ஒளி வீசுகிறபடி. கருவிலே திருவுடைய பிறவி யடிமையான அவரைப்போலே மாலாகாரரான பெரியாழ்வார் திருமகளாகையாலே தானிட்ட மாலை யையும் அவன் விரும்பிச் சாத்திக்கொண்டு விளையாடுவான் என்று கருதுகிருள். (விளையாட விருந்தாவனத்தே கண் டோமே) இம்மாலையைச் சாத்திக்கொண்டு வந்தால் திருவாய்ப் பாடியில் பெண்கள் மயங்கி விழுவர்களாகையாலே அங்கு விளை யாட நேரமிராது. அப்படியல்லாமல் த4ரித்து நின்று விளையாட வல்ல தோழன்மாரோடு இஷ்டப்படி திரிந்து லீலா ரஸமனுப4 விப்பதை ஸ்ரீப்3ருந்தா3வனத்திலே கண்டோம். 2

கருடனுடைய சிறகாகிற மேற்கட்டியின் கீழ் எழுந்தருளா நின்ற அப்பெருமானை, விருந்தாவனத்தே கண்டோம்—.

வ்யா:- மூன்றும் பாட்டு a (மாலாய்ப் பிறந்த) பெண்கள் பக்கல் வ்யாமோஹந்தான் ஒரு வடிவு கொண்டாற்போலே யாய்த்திருப்பது. b 252 "सत्यं ज्ञानं" (ஸத்யம் ஜ்ஞாநம்) என்னுமாபோலே. (நம்பியை) இதோருபலக்ஷணமாத்ர மாய், சொல்லிச்சொல்லாத கு₃ணங்களால் பூர்ணனாயிருக்கை.

---

3. அவ –க₃ருட₃ன் தன் சிறகால் வெய்யில்படாதபடி காத்து வர, கீழே எழுந்தருளுகின்ற பெருமானை ஸ்ரீவிருந்தாவனத்திலே கண்டேன் என்கிறாள்.

வ்யா —(மாலாய்ப் பிறந்த) பெண்களிடம் பெரும் காதலே ஒரு வடிவெடுத்தது என்று சொல்லும்படி இருப்பவன்.

252. ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்₃ரஹ்ம | யோ வேத₃
நிஹிதம் கு₃ஹாயாம் பரமே வ்யோமந் |
ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ
ப்₃ரஹ்மணா விபஶ்சிதேதி ॥ [தை-ஆ-1-1]

[ஸத்யமும், ஜ்ஞாநமுமே வடிவாயிருப்பதும், அளவற்றதுமான ப்₃ரஹ்மத்தை எவனொருவன் ஹ்ருத₃யகு₃ஹையிலுள்ளதாக அறிகிறானோ, அவன் பரமபத₃த்தில் ஸர்வஜ்ஞனான ப்₃ரஹ்மத் தோடுகூட எல்லாக் கல்யாண கு₃ணங்களையும் அநுப₄விக்கிறான்] என்று வேத₃ம் பரநிலையிலே ஜ்ஞானம் முதலான கு₃ணங்களே வடிவெடுத்தவன் என்று இவனைச் சொல்லிற்று. அதுபோலே இவள் அவதார நிலையிலே இவன் அன்பே வடிவெடுத்தவன் என்கிறாள். திருப்பாவையிலும் "மாலே!" [26] என்று இவனை அழைத்தாளன்றோ இவள். (நம்பியை) அன்பே வடிவெடுத்த வன் என்று ஒரு கு₃ணத்தைச் சொன்னது உபலக்ஷணமாய், சொல்லாத அனந்தகல்யாண கு₃ணங்களால் நிறைந்திருப்பவன்

---

மூன்றும் பாட்டு. (மாலாயித்யாதி₃) a, b மால் - ஈஶ்வ ரன்; த₄ர்மியை த₄ர்மமாகச் சொன்னவிடமுண்டோ? என்ன அருளிச்செய்கிறார் (ஸத்யம் ஜ்ஞானமித்யாதி₃)



c (மாலே செய்யும்) 253 "तेन ते तमनुव्रताः" (தேந தே தமநுவ்ரதா:) என்னுமாபோலே தன்னுடைய வ்யாமோஹத் தைக் காட்டியாய்த்து இத்தலைக்கு வ்யாமோஹத்தை விளைப் பித்தது. (மணாளனை) தன்னுடைய செவ்விகொள்ள இட்டுப் பிறந்தான் அவன் போலேகாணும்!

d (ஏலாப்பொய்களுரைப்பானை) ஒற்று மஞ்சளும் மாளி கைச் சாந்துமாய் வந்தால் "இதெல்லாமெங்கிலும் பெற்றாய்" என் என்றுகேட்டால் "மற்றுண்டோ, நான் புறம்பறிவேனோ?" என் னும். e மெய்சொல்லுகை தேட்டமாகில் ராமாவதாரத்திலே

---

என்றபடி. (651ம் பக்கத்தில் உள்ள 200வது ப்ரமாணத்தின்படி) தன்னுடைய பெருங்காதலைக் காட்டியே இவர்களுக்குத் தன் னிடம் பெருங்காதலை விளைத்தான் என்கிறாள். (மணாளனை) தன்னுடைய பெண்மையை அநுப₄விக்கப் பிறந்த மணவாளன் இவனே என்கிறாள்.

(ஏலாப்பொய்கள் உரைப்பானை) பொருந்தாத பொய்கள் பலவற்றைச் சொல்லுகிறவனை. கண்ணன் ஸம்போ₄க₃ சின்னங் களான ஒற்று மஞ்சளும் மாளிகைச் சந்தனமும் தன் திருமே னியில் விளங்கும்படி வருவதைக்கண்டு ஓர் ஆய்ச்சி "இவ் வடையாளங்களை எவளிடமிருந்து பெற்றாய்?" என்று கேட் டால், "உன்னைத்தவிர வேறொருத்தியிடமிருந்து பெறமுடி யுமோ, நான் வேறொருத்தியை அறிவேனோ?" என்று பச்சைப் பசும்பொய்யைப் பேசுவான். மெய்யே பேசிக் கேட்கவேண்டு மென்றால் ராமாவதாரத்துக்கன்றோ போகவேண்டும்.

254. ப்ரியவாதீ₃ ச பூ₄தாநாம் ஸத்யவாதீ₃ ச ராக₄வ: [ரா. அ. 2-32]

---

c மாலேசெய்யும் - தன்பக்கலிலே மாலை உண்டாக்குகை. d "ஏலா" -ஏரா; தகுதியன்றிக்கே என்றபடி. e "பொய் களுரைப்பான்" என்கைக்கு, பொய் தேட்டமாயிருக்குமோ, மெய்யன்றோ தேட்டம் என்ன, அருளிச்செய்கிறார் (மெய்

போகவலையயாதோ ? 254. " सत्यवादी च" (ஸத்யவாதீ3, ச) என்னக்கடவதிறே. f 255. "यथादृष्टार्थवचनञ्च" (யதா2ர்த்2ருஷ்டார்த்த2வசநஞ்ச) என்னக்கடவதிறே. g உபாயமாய் பூ4து ஹிதமுமாயிருக்கும். h இரண்டுவார்த்தை சொல்லாமை யாலே அப்போதே மெய்யாயிருக்கும்-பெருமாள் வார்த்தை. இவன் வார்த்தை h2 விழுக்காட்டில் மெய்யாயிருக்கும் ராமாவதாரத்தில் மெய்யும் க்ருஷ்ணாவதாரத்தில் பொய்யு மிறே ஆஶ்ரிதர்க்குத் தஞ்சம்.

---

[ராமன் எல்லாப் பிராணிகளுக்கும் இனியதைச் சொல்லுவார்; ஸத்யத்தையே சொல்லுவார்.] என்று மெய் சொல்லுகிறவ னுகப் புகழ்பெற்றவன் ராமபிரானேயன்றோ.

255, யதா2ர்த்2ருஷ்டார்த்த2வசநஞ்ச [கண்டபடியே உரைக்கையும் மெய்யாகும்] என்பதல்லவோ மெய்யின் லக்ஷணம். பெருமாளுடைய வார்த்தை உள்ளதை உள்ளபடி சொல்லுவதாய், அனைவர்க்கும் நன்மை பயப்பதாக வும் இருக்கும். முன்னுக்குபின் முரணாக இரண்டு வார்த்தை சொல்லாதவன் ஸ்ரீராமன் என்று பிரஸித்3த4மாகையாலே அவ னுடைய வார்த்தை உடனடியாக மெய்யாயிருக்கும். கண்ண னுடைய வார்த்தையோவெனில் முன்னுக்குப்பின் முரணா யிருக்கையாலே பொய்போல் தோற்றினபோதிலும் அதனால் நன்மையே விளைகையாலே கார்யகாலத்தில் மெய்யாயிருக்கும். ஆகையாலே ராமாவதாரத்தின் மெய்யும், க்ருஷ்ணாவதாரத்தின் பொய்யும் அடியார்க்குத் தஞ்சமாயிருக்கும்.

---

சொல்லுகை இத்யாதி3) f க்ருஷ்ணன் பொய்சொல்லு வானோ? என்ன அருளிச்செய்கிறார் (யதா2ர்த்2ருஷ்டார் த்த2 வசநமித்யாதி3) g க்ருஷ்ணன் வார்த்தை பொய்யா கிலும் உபாயபூ4தனுடைய வார்த்தையாகையாலே ஹித முமாயிருக்குமென்றபடி. h பொய்யும் மெய்யும் ஹித மாம்படி எப்படி? என்ன அருளிச்செய்கிறார் (இரண்டு வார்த்தை இத்யாதி3) h2 (விழுக்காட்டிலே) கார்யத்திலே.



ஏகரூபனாய், இரண்டு வார்த்தை சொல்லாதே ஆஶ்ரித ரக்ஷணம்பண்ணும் அவன்; தன்னை அழியமாறிப் பொய் சொல்லி ரக்ஷிக்கும் இவன், பகலை இரவாக்குவது, ஆயுத மெடேனென்று ஆயுத4மெடுப்பது, எதிரிகள்மர்மங்களைக் காட்டிக்கொடுப்பதாயிறே ரக்ஷிப்பது. (பொய்களுரைப் பானை) ஒன்றுபோலேயிருப்பது நூறாயிரம் பொய்யாய்த்துச் சொல்லுவது. இவன் பொய் தேட்டமாயிறே " இங்கே போதக்கண்டீரே" என்கிறது.

(மேலாலித்யாதி3) i "மேலே பரந்த வெய்யிலை நோக்கு கைக்காக i2 'விநதை சிறுவன்' என்றபடி என்தான் ஆண்

---

ஸ்ரீராமன் மனம்மெய்மொழிகளில் ஒருபடிப்பட்டவனாய் முன்னுக்குப்பின் முரணாக வார்த்தை சொல்லாமல் அடியார் களை ரக்ஷிப்பான். தன் பெருமையைக் குறைத்துக்கொண்டு பொய்சொல்லியும் அடியார்களை ரக்ஷிப்பான் கண்ணன். பா4ரதப் போரிலே பகலை இரவாக்கியும், ஆயுத4மெடுக்கமாட்டேன் என்று சொல்லி ஆயுத4மெடுத்தும், து3ர்யோத4னன் முதலான எதிரிகளின் மர்ம ஸ்தா2னங்களைக் காட்டிக்கொடுத்தும் பாண் ட3வர்களைக் காத்தானன்றோ. (பொய்கள் உரைப்பானை) ஒன்றல்ல இரண்டல்ல; உண்மைபோலே இருக்கும் நூறாயிரம் பொய்களையும் சொல்லுவான் கண்ணன். (இங்கே போதக்கண்டீரே) இவனுடைய பொய் மிகவும் உத்3தே3ஶ்ய மானது என்று விளங்குகிறது.

இனி பதில் சொல்லுவார் பாசுரம் (மேலால்பரந்த வெயில் காப்பான் விநதை சிறுவன் சிறகென்னும் மேலாப்பின் கீழ் வருவானை) "மேலே பரவிநிற்கும் வெய்யில்படாமல் காப்ப தற்காகத் தன் சிறகுகளை மேற்கட்டியாக விரித்து நிற்கும் க3ருட3னை அவன் தனக்கும் ஶேஷபூ4தன் என்பது தோற்ற 'விநதை சிறுவன்' என்று ஆண்டாள் பேரிட்டு அழைப்பது என்ன ஆச்சரியம்!" என்று நம்பிள்ளை மிகவும் ஈடுபட்டு

---

i "தன்னுடைய ஸ்வாமித்வமும் அவனுடைய தா3ஸத்வமும் தோற்ற 'சிறுவன்' என்றபடிபாரீர்" என்று நம்பிள்ளை ஈடுபடுவர். i2 (விநதை சிறுவனென்றபடி என்தான்) என்

டாள்!'' என்றருளிச்செய்வர் வித்,த,ராய். அவனுக்குக் குடையிடுவான் இவளுக்கு பவ்யனுயிறேயிருப்பது. ''க,ர்ப்ப, த,ாஸன்'' என்னுமாபோலே. ‡ (மேலாப்பின் கீழ் வருவானை) பெரியவுடையார்மேல் வெயிலே படாதபடி ஸம்பாதி மறைத்தாற்போலே, இவனையும பெரிய திருவடி சிறகின் கீழே நின்று விளையாடக்கண்டோம். 3

---

அருளிச் செய்வராம். எம்பெருமானுக்குக் குடையிடுகிறவன் இவளுக்கும் பிறவியடிமையாய் வசப்பட்டிருப்பவனேயன்றோ. மேலும், தன் தாயாராகிற விநதையை அவளுடைய சக்களத்தியான கத்,ரு அடிமையாக்கி வெய்யிலிலே நிற்கவைத்தபோது அந்த வெய்யில் படாதபடி தன்சிறகாலே அவளை (விநதையைப்) பாதுகாத்துக்கொண்டு கருடன் நின்றதாக மஹாப,ாரதத்தில் செய்தியுண்டு அதையும் 'விநதை சிறுவன்' என்னும் தொடராலே உணர்த்துவதாகவும் ஈடுபடுவர். (மேலாப்பின்கீழ் வருவானை விருந்தாவனத்தே கண்டோமே) ஜடாயுவின்மேல் வெய்யில் படாதபடி அவனுடைய தமையனரான ஸம்பாதி மறைத்ததுபோலே இவனையும் க,ருட,ன் தன் சிறகுகளை மேற்கட்டியாக அமைத்து வெய்யில் படாதபடி மறைத்து நிற்க, அச்சிறகின் கீழே நின்று விளையாடுவதை ஸ்ரீப்,ருந்த,ாவனத்திலே கண்டோம். 3.

4. அவ:— அலங்கரிக்கப்பட்ட யானைக்கன்றுபோலே வேர்த்து நின்று விளையாடும் கண்ணனை ஸ்ரீப்,ருந்த,ாவனத்திலே கண்டேன் என்கிருள்.

---

றதுக்குத் தாத்பர்யம்-ஆண்டாள் . பரிவளாகையாலே, பெரியதிருவடி தம்முடைய தாயாரைக் கத்,ரு வானவள் வெய்யிலிலே வைத்தபோது, அவ்வெய்யில் தட்டாதபடி தம்முடைய சிறகாலே கவித்துக்கொண்டு தாயாரை நோக்கினதாக மஹாப,ாரதத்திலே சொல்லுகையாலே அது தோற்றச் சொன்னபடி என்தான்! என்று வித்,த,ராகிருர் என்றருளிச்செய்வர். ‡ சிறகென்னும் மேலாப்பு-சிறகாகிற மேற்கட்டி. 3



## பதினூலாம் திருமொழி நாலாம் பாட்டு,

கார்த்தண் கமலக் கண்ணென்னும் நெடுங்கயிறு படுத்தி என்னை
ஈர்த்துக் கொண்டு விளையாடு மீசன் றன்னைக் கண்டீரே
போர்த்த முத்தின் குப்பாயப் புகர்மால் யானைக் கன்றேபோல்
வேர்த்து நின்று விளையாட விருந்தா வனத்தே கண்டோமே.

பதவுரை:— கார் — காளமேக,த்திலே, தண் - குளிர்ந்த, கமலம் - தாமரை பூத்தாற் போன்றுள்ள, கண் என்னும் — திருக்கண்கள் என்கிற, நெடு கயிறு - பெரியபாசத்திலே, என்னை படுத்தி - என்னை அகப்படுத்தி, ஈர்த்துக்கொண்டு - (தான் போமிடமெங்கும் என்னெஞ்சையும் கூடவே) இழுத்துக்கொண்டுபோய், விளையாடும் ஈசன்றன்னைக் கண்டீரே? —; போர்த்த முத்தின் குப்பாயம் - போர்வையாகப் போர்த்த முத்துச் சட்டையையுடையதாய், புகர் - தேஜஸ்ஸை யுடையதாய். மால் - பெரிதான, யானை கன்று போல் — யானைக்குட்டிபோலே, வேர்த்து நின்று விளையாட - வேர்வையுற்று நின்று விளையாட. விருந்தாவனத்தே கணடோம்-.

வ்யா:— நாலாம் பாட்டு (கார்த்தண் சமலக்கண்ணென்னும்) மேக,த்திலே ஶ்ரமஹரமான தாமரை பூத்தாற்போலேயாய்த்துத் திருக்கண்களிருப்பது. வடிவுதானே ஆகர்ஷகமாயிருக்கச்செய்தே அதுக்குமேலே அவயவஶோபை,யும் துவக்கவற்று. 256 ''मेघश्यामं'' (மேக,ஶ்யாமம்) என்னும்படியிறே

---

வ்யா:—(கார்த்தண் கமலக்கண் என்னும்) கறுத்த மேகத்திலே கண்டார் களைப்பையாற்றும் தாமரைகள் பூத்தாற்போலேயாயிற்று, கறுத்த திருமேனியில் சிவந்த திருக்கண்கள் இருப்பது. மழைபெய்யும் மேகம்போலே திருமேனியே கண்டார் நெஞ்சையும் கண்ணையும் ஈர்ப்பது. அதற்குமேலே அவயவமான கண்ணின் அழகும் காண்பாரை ஈடுபடுத்துகிறது. பக்கம் 603-இல் உள்ள 184-வது ப்ரமாணத்

வடிவுதான் இருப்பது. ''கைகேயி வயிற்றிலே பிறந்த தாப மாறுங்கிடீர் குளிர்ந்த வடிவிலே விழிக்கப்பெற்றேனாகில்'' என்றாணிறே. (கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறுபடுத்தி) திருக்கண்களாகிற பாசத்திலே அகப்படுத்தி. (கமலக்கண்ணென்னும்) விகாஸம், செவ்வி, குளிர்த்தி, பரிமளம் தொடக்கமானவற்றை உடைத்தாய், அகவாயில் அநுக்3ரஹத்துக்கு ப்ரகாஶந்தைப் பண்ணுமதுவுமாய்த்துத் திருக்கண். (நெடுங்கயிறு) போனவிடமெங்கும் போய்த்தப்பாதபடி அகப்படுத்தவற்றாயத்திருப்பது. தப்பாதபடி வளைத்து, குளிர நோக்கி, என்னை அநந்யார்ஹையாம்படி பண்ணி. என் கார்யம் என் புத்3த்4யதீ4நமல்லாதபடி என்னைத் தன் பக்கலிலே இழுத்துக் கொண்டு. இதுவே லீலையாயிருக்கும் நிரபேக்ஷன். a (காரித்யாதி3) b வடிவழகைக்காட்டித் திருக்

---

தின்படி திருமேனியே கண்டாரை ஈர்க்கவல்லதாய் இருப்பதன்றே. ''கைகேயி வயிற்றில் பிறந்ததாலுண்டான கொதிப்பு ஸ்ரீராமபிரானின் அழகிய வடிவிலே விழிக்கப்பெற்றால்தான் ஆறும்'' என்று ஸ்ரீபரதாழ்வான் கூறினானன்றே. (கமலக்கண் என்னும் நெடும் கயிறுபடுத்தி) திருக்கண்களாகிற நீண்ட வலையிலே அகப்படுத்தி, (கமலக்கண் என்னும்) மலர்த்தி, அழகு, குளிர்த்தி, நறுமணம் முதலான கு3ணங்களாலே தாமரையை யொத்ததாய் நெஞ்சிலே உள்ள அருளை வெளிப்படுத்துவதாயுள்ளன திருக்கண்கள். (நெடுங்கயிறு) எங்கு சென்றாலும் தொடர்ந்துவந்து நான் தப்ப முடியாதபடி அகப்படுத்தவல்ல நீண்ட பாசக்கயிறாயாயிற்றிருப்பது இக்கண்கள். (நெடுங்கயிறுபடுத்தி என்னை ஈர்த்துக்கொண்டு விளையாடும் ஈசன்) நீண்ட வலையாலே நான் தப்பமுடியாதபடி வளைத்துக் குளிரநோக்கி என்னை ஆட்படுத்தி என் காரியம் என் நினைவின்படி நடவாதபடி என்னைத் தன்னிடம் இழுத்துக்

---

நாலாம் பாட்டு. (காரித்யாதி3) a, b ''கார்'' என்றதுக்குத் தாத்பர்யபே4த3த்தையும் காட்டாநின்றுகொண்டு



கண்களால் நோக்கிக் கொண்டிறே இவன் திரிவது. என்னைக் கண்ணழகாலே துவக்கி நான் ''அது அது'' என்று வாய் வெருவும்படி பண்ணி, இதுதானே தனக்குப் போதுபோக்காகக்கொண்டு நிரபேக்ஷனாயிராநின்றான்.

c (போர்த்த இத்யாதி3) d முத்துச்சட்டையிட்டாற்போலே குருவெயர்ப்பரும்பிப் புகரையுடைத்தான யானைக்கன்றுபோலேயாய்த்து வேர்த்து நின்று விளையாடும்போதிருப்பது. (வேர்த்து நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே) முதலிலே வேர்க்கக்கடவதன்றிக்கே இருக்கும் பரமபத3த்திலுமன்றிக்கே, தாய்தமப்பனுக்கஞ்சி வேர்க்கவும் மாட்டாதே ப்ரபு4வாய் மாலையிட்டிருக்கும் திருவாய்ப்பாடியிலும் காண்கையன்றிக்கே. ஸ்ரீப்3ருந்தா3வநத்திலே காணப் பெற்றோம். 4

---

கொண்டு இதுவே விளையாட்டாயிருக்கும் ஸ்வதந்த்ரன். (கார்த்தண்......ஈசன்) வடிவழகைக்காட்டித் திருக்கண்களால் நோக்கிப் பெண்களை வலைப்படுத்திக்கொண்டன்றோ இவன் திரிவது. அந்த ரீதியில் என்னையும் தன் அழகாலே ஈடுபடுத்தி நான் ''அது அது'' என்று வாய்வெருவும்படிபண்ணி இது தானே தனக்குப் போதுபோக்கான விளையாட்டாகக்கொண்டு எவரையும் பொருட்படுத்தாத ஸ்வாமியாயிராநின்றான்.

(போர்த்தமுத்தின் குப்பாயப் புகர்மால் யானைக்கன்றே போல் வேர்த்துநின்று விளையாட) கண்ணன் விளையாடும்போது சிறு வியர்வைத்துளிகள் அரும்பியிருப்பதைப் பார்த்தால் ஒளிமிக்க யானைக்கன்றுக்கு முகத்திலே முத்துச்சட்டை இட்டாற்போலே இருக்கிறது. (வேர்த்து நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே) வேர்ப்பதற்கு இடமேயில்லாத பரமபத3த்திலுமல்லாமல், தந்தை தாய்க்கு பயப்பட்டு வேர்த்துநின்று விளையாட முடியாமல் ராஜகுமாரனாய் மாலையிட்டிருக்கும் திருவாய்ப்பாடியிலுமல்லாமல் வேர்த்துநின்று விளையாடக்கூடிய ஸ்ரீப்3ருந்தா3வனத்திலே கண்டோம். 4

---

ஸ்வாபதே3ஶத்திலே மீளவும் அருளிச்செய்கிறார் (வடிவழகையித்யாதி3) c, d ''குப்பாயம்''-சட்டை. 4

## பதினாலாம் திருமொழி ஐந்தாம் பாட்டு.

**மாத வன்என் மணியினை வலையில் பிழைத்த பன்றிபோல்**
**ஏது மொன்றும் கொளத்தாரா வீசன் றன்னைக் கண்டீரே**
**பீதக வாடை யுடைதாழப் பெருங்கார் மேகக் கன்றேபோல்**
**வீதி யார வருவானை விருந்தா வனத்தே கண்டோமே.**

**பதவுரை:— மாதவன்** - லக்ஷ்மீபதியாய், **என் மணியினை** - எனக்கு நீலரத்னம்போலே மிக இனியனாய், **வலையில் பிழைத்த பன்றிபோல்**-வலையில் நின்றும் தப்பிப் பிழைத்ததொரு பன்றிபோல (செருக்குற்று), **ஏதும் ஒன்றும்**-(தன் பக்கலுள்ள) யாதொன்றையும், **கொள தாரா** - பிறர் கொள்ளும்படி தராதவனான (ஒருவர் கைக்கும் எட்டாதவனான) **ஈசன் தன்னைக் கண்டீரே?—; பீதக ஆடை** - திருப்பீதாம்பரமாகிற, **உடை** - திருப்பரியட்டமானது, **தாழ** - தாழ்ந்து விளங்க, **பெரு கார்மேகம் கன்றுபோல்** - பருத்துக் கறுத்ததொரு மேகக்குட்டிபோலே, **வீதி ஆர வருவானை** - திருவீதி நிறைய எழுந்தருளும் பெருமானை, **விருந்தாவனத்தே கண்டோம்—.**

**வ்யா:— அஞ்சாம் பாட்டு.** (மாதவனென்மணியினை) **தன்னுடைய ரஸிகத்வம் எனக்கு முடிந்தாளலாம்படி பவ்யனாயிருக்கிறவனை. உ** (வலையில் பிழைத்த பன்றிபோல்)

---

5. *அவ:*—மின்னலோடுகூடிய கார்மேகக் குட்டிபோலே **பீதாம்பரம் தரித்து வீதியார** வருகின்றவனை **ஸ்ரீ ப்ருந்தாவனத்திலே கண்டோம் என்கிறாள்.**

*வ்யா:*—**(மாதவன் என்** மணியினை) **மாதவன்**—**லக்ஷ்மீநாதன். மங்கையர் திலகமான ஸ்ரீ தேவியைத் தனக்கென உடையவனாகையாலே** பரமரஸிகன் **என்று உணர்த்தப்படுகிறது. 'என் மணியினை' என்கையாலே அந்த ரஸிகத்தன்மை மணிபோலே முந்தானையில் முடிந்து ஆளலாம்படி எனக்கு வசமாயிருக்கப்பெற்றவனை என்கிறது. (வலையில் பிழைத்த**



**முதலிலே அகப்படாதத்தை அகப்படுத்தலாம், அகப்பட்டுத் தப்பினத்தைப் பின்னை அகப்படுத்தப்போகாதிறே. ஆசைக்கு அகப்படாதொழிந்தால் பின்னை அகப்படுத்தப் பரிகரமில்லை.** (ஏதுமொன்றுமித்யாதி,) **தன்பக்கலுள்ளதொன்றும் தாராதே " இத்தலையிலுள்ளதெல்லாம் தன்னது" என்றிருப்பான் ஒருவன்.**

(பீதகவாடையுடைதாழ) **திருப்பீதாம்பரமானது தாழ்ந்தலைந்துவர.** (பெருங்கார்மேகக் கன்றேபோல்) **பெருத்துக்**

---

**பன்றிபோல்)** வலையில் சிக்குண்டு அதினின்றும் தப்பிப்பிழைத்ததொரு பன்றிபோலே. வலையில் சிக்காத பன்றியைச் சிக்க வைக்கலாம்; சிக்கித் தப்பிப்போனதை மறுபடியும் வலைவைத்துப் பிடிக்கமுடியாதன்றோ. இவனும் எட்டினோடிரண்டெனும் கயிறு" [திருச்சந் 83] என்கிறபடியே பக்தியாகிற வலையில் அகப்படுபவனானாலும், இவர்களுடைய பக்தியைப் பரமபக்தியாக வளர்ப்பதற்காக அந்த வலையிலிருந்து தப்பிப் பிழைத்து இவர்களுக்கு அகப்படாமலே இருப்பானன்றோ. அப்போது இவனை எவ்வுபாயத்தாலும் பிடிக்கமுடியாதன்றோ. **(ஏதும் ஒன்றும் கொளத்தாரா ஈசன்)** தன்னிடமுள்ள எதையும் இவர்களுக்குத்தாராமல் இவர்களிடமுள்ளதனைத்தையும் தன்னுடையது என்று அபிமானித்திருப்பவனன்றோ.

(பீதகவாடை உடைதாழ) திருப்பீதாம்பரமாகிற ஆடையானது தாழ்ந்து அலைந்துவர. (பெரும் கார்மேகக்கன்றே போல்) பெரியதாய், கறுத்ததாய் முழுவதும் நீராலே நிறைந்திருப்பதொரு மேகக்குட்டிபோலே, பீதகவாடையின்னலையும் அதோடுகூடிய திருமேனி கார்மேகத்தையும் ஒத்திருக்கும்படி. 'கன்று' என்று கண்ணனுடைய பருவத்தைக் கருதிச் சொல்லு

---

அஞ்சாம் பாட்டு. (மாதவனித்யாதி,) உ "எட்டினோடிரண்டெனும் கயிறு" என்கிறபடியே, "வலை" என்று-

கறுத்து அகவாயிலுள்ளதடங்கலும் நீராலே நிறைந்திருப்ப தொரு மேகக்கன்றுபோலே, b(வீதியார வருவானை) அம்மேக மானது ஆகாஶப்பரப்படங்கலும் தனக்கிடமாக்கிக்கொண்டு வருமாபோலேயாய்த்து வீதியெல்லாம் தனக்கிடமாகப் பண்ணிக்கொண்டு வரும்படி. (விருந்தாவனத்தே கண்டோமே) ஊரொப்பாகக்காணுமிடத்திலன்றிக்கே நமக்கே யானவிடத்திலே காணப்பெற்றோம்.

---

கிறது, (வீதிஆர வருவானை) அந்த மேக3மானது ஆகாஶம் முழுவதையும் அடைத்துக்கொண்டு வருவதுபோலே இவனும் வீதிமுழுவதையும் அடைத்துக்கொண்டு வருகின்றான்.

258 பஶ்சாத்3க3வாம் கோ3பஸுதை: பரீதோ
வேணுஸ்வநாநந்தி3தவிஶ்வசேதா: |
ஸம்பூர்ய வீதி2ம் ஸவிலாஸமாயாத்
கோ3பாலபா3ல: குலதை3வதம் ந: ||
[க்ருஷ்ணகர்ணாம்ருதம்]

[பசுக்களின் பின்னே, இடைப்பிள்ளைகளால் சூழப்பெற்றவனாய், வேணுகானத்தினாலே எல்லாருடைய நெஞ்சையும் ஆநந்திப்பிப் பவனாய், வீதியை நிறைத்துக்கொண்டு நம் குலதைவமான கோபாலன் அழகாக வருவானாக.] என்று சொல்லப்பட்ட தன்றோ. (விருந்தாவனத்தே கண்டோமே) ஊரிலுள்ளார் அனை வரும் காணலாம்படியான திருவாய்ப்பாடியிலல்லாமல் நம்மோடு விளையாடுவதற்காகவே ஏற்பட்ட ஸ்ரீ ப்3ருந்தா3வனத்திலே காணப்பெற்றோம்.

---

கயிற்றைச்சொல்லுகிறது. b ஆர-நிறைய. 258 "पश्चाद्गवां गोपसुतैः परीतो वेणुस्वनानन्दितविश्वचेताः । संपूर्य वीथिं सविलासमायात् गोपालबालः कुलदैवतं नः ॥" (பஶ்சாத்3க3வாம் கோ3பஸுதை: பரீதோ வேணுஸ்வநாநந்தி3தவிஶ்வசேதா: | ஸம்பூர்ய வீதி2ம் ஸவிலாஸமாயாத் கோ3பாலபா3ல: குலதை3வதம் ந: ||) இத்யேதத3நுஸந்தே4யம்.



## பதினாலாம் திருமொழி ஆறாம் பாட்டு.

தரும மறியாக் குறும்பனைத் தன்கைச் சார்ங்க மதுவேபோல்
புருவ வட்ட மழகிய பொருத்த மிலியைக் கண்டீரே
உருவு கரிதாய் முகஞ்செய்தா யுதய பருப்ப தத்தின்மேல்
விரியும் கதிரே போல்வானை விருந்தா வனத்தே கண்டோமே

பதவுரை:— தருமம் அறியா - இரக்கமென்பது அறியாத வனாய், குறும்பனை - குறும்புகளையே செய்யுமவனாய், தன் கை சார்ங்கம் அதுவேபோல் - தனது திருக்கையிலுள்ள சார்ங்கவில்லைப்போன்ற, புருவவட்டம் - திருப்புருவவட்டங்க ளாலே, அழகிய - அழகுபெற்றவனாய், பொருத்தமிலியை - (அவ்வழகை அன்பர்கட்கு அநுப4விக்கக்கொடுத்துப்) பொருந்திவாழப் பெறாதவனான பெருமானை, கண்டீரே? —; உருவு கரிது ஆய் - திருமேனியில் கருமை பெற்றும், முகம் செய்து ஆய் - ஒளியில் செம்மை பெற்றும் (இருப்பதனாலே), உதயபருப்பதத்தின் மேல் விரியும் கதிர் போல்வானை - உதய பர்வதத்தின் மேலே விரிகின்ற சூரியன் போல் விளங்கும அப்பெருமானை, விருந்தாவனத்தே கண்டோமே—.

வ்யா:- ஆறும்பாட்டு (தருமமறியா) ஆந்ருஶம்ஸ்ய மிருக்கும்படி முதலிலே வ்யுத்பத்தி பண்ணியறியான்;

---

6. அவ:— உத3யகி3ரியின் மேல் உதி3க்கும் ஸூர்யன் போலே கறுத்த திருமேனியில் செம்மைமிக்க ஒளியோடு வரு கின்றவனை ஸ்ரீ ப்3ருந்தா3வனத்திலே கண்டோமென்கிறாள்.

வ்யா;—(தருமமறியா) இங்கு தருமமாவது இரக்கம். இரக்கத்தில் அரிச்சுவடிகூடத் தெரியாதவன்.

257. ஆந்ருஶம்ஸ்யம் பரோ த4ர்மஸ் த்வத்த ஏவ
மயா ஶ்ருத: [ரா-ஸு-38-41]

a 257. "आनृशंस्यं परो धर्मः त्वत्त एव मया श्रुतः" (ஆந்ருஶம்ஸ்யம் பரோ தர்ம: த்வதத ஏவ மயா ஶ்ருத:) நீர் வரவிட்ட ஆளின்வாயிலே கேட்டவார்த்தையன்றே; அதுக்கு முன்னம் தம்முடைய வாயாலே அருளிச்செய்ய என் செவியாலே கேட்டதன்றோ?, இருவருமாகக் கலந்து ஓடமேற்றிக் கூலிகொள்ளுமளவிலே " நீர் விரும்பியிருப்பதென்ன?" என்று கேட்க. "பிறர் நோவுபடக் கண்டால் பொறுக்கமாட்டோம. அதுவே காண் நாம் விரும்பியிருப்பது" என்றார். இருவரும் ஒன்றை நினைத்துக்கிடக்கிறார்கள். "இக்கலவிக்குப் பிரிவுவரில் செய்வதென்?" என்று கேட்டாள் அவள்; "நம்மைப் பிரிந்து நோவுபடவிடோங்காண் நாம்" என்றருளிச்செய்தாரானார் அவர்.

---

[இரக்கமே மேலான தர்மம் என்று உம்மிடமிருந்து என்னால் கேட்கப்பட்டது.] என்று ஸீதாப்பிராட்டி இரக்கத்தையே மேலான தர்மமாக ஸ்ரீ ராமபிரான் தன்னிடம் கூறியதாக அருளினளன்றோ. இதன் கருத்தாவது: "நீர் தூதுவிட்ட அனுமன மூலமாகக் கேட்ட வார்த்தையல்லவே இது; நாம் இருவரும் சேர்ந்திருக்கையில் உம் வாயாலே அருள என் காதாலே கேட்டதன்றோ. நாமிருவரும் கலந்து நான் எதைக் கேட்டாலும் நீர் தர ஸித்தமாயிருந்த சமயத்திலே 'எல்லா குணங்களிலும் எந்த குணத்தை நீர் மிகச் சிறந்ததாகக் கருதியிருக்கிறீர்?' என்று நான் கேட்க, 'பிறர் துன்புறுவது கண்டால் நாம் பொறுக்க மாட்டோம். இந்த இரக்கமே நாம் மிகச் சிறந்த தர்மமாக நினைத்திருப்பது' என்றார். இவர்கள் இருவருக்கும் உட்கருத்தாவது— "நாமிருவரும் சேர்ந்திருக்கும் இச்சேர்த்திக்குப் பிரிவு வந்தால் என் செய்வது?" என்பது பிராட்டி கேள்வியின் உட்கருத்து. "இரக்கத்தையே மேலான குணமாக நினைத்திருக்கும் நான் நீ என்னைப்பிரிந்து துன்புறும்

---

ஆரும்பாட்டு (தருமமித்யாதி) a தர்மமறிந்தபேர் தானுண்டோவென்னப் பெருமாளறிவரென்கிறார் (ஆந்ரு



मया श्रुतः" மயா ஶ்ருத:) "இது ஶ்ரவணமாத்ரமேயாய்ப் போமித்தனையோ? அநுஷ்டாந பர்யந்தமாகக்கடவதன்றோ" என்று கேளீர். b (குறும்பனை) ராஜபுத்ரர்களாகவேண்டாவோ ஆந்ருஶம்ஸ்யமுடையாராயிருக்கும்போது?

c (தன்கை இத்யாதி,) d புறம்பு ஒப்பில்லை. கையிலே வில்லிருந்தால், 'முகத்திலேயிருக்கக்கடவது கையிலேயிருந்ததீ!' என்னும்படியிருக்கும்; புருவத்தைக்கண்டால், 'முகத்திலேயிருக்கக்கடவதோ வில். கையிலேயன்றோயிருப்பது'

---

படி விடமாட்டேன் என்பது ஸ்ரீ ராமபிரான் பதிலின் உட்கருத்து. "*மயா ஶ்ருத:*" [என்னால் கேட்கப்பட்டது] என்று பிராட்டி கூறியதன் கருத்தாவது:— 'இது நீர் வாயால் சொல்லி நான் காதால் கேட்டது மாத்திரமேயாய் ஆகிவிடுமோ? அனுஷ்டானம்வரை உமக்கு இது வராதோ" என்று கேட்பாயாக என்று அனுமனுக்கு உணர்த்துகிறாள் பிராட்டி. (குறும்பனை) சக்ரவர்த்தித் திருமகனான ஸ்ரீ ராமபிரானுக்கு இரக்கத்தைப்பற்றித் தெரியுமேதவிர, குறும்பனான (1. துஷ்டனான 2. இடையனான) உனக்குத் தெரியுமோ?

(தன்கைச்சார்ங்கம் அதுவேபோல் புருவவட்டமழகிய) இவனுடைய புருவத்துக்கு வெளியிலுள்ள எதுவும் ஒப்பாகாது. இவன் கையில் உள்ள வில்லே அதற்கு ஒப்பாகும். கையிலே வில்லிருந்தால் "முகத்திலே இருக்கவேண்டியது கையிலே இருந்ததே" என்று சொல்லவேண்டியிருக்கும். கையில் வில்லில்லாமலிருக்கும்போது புருவத்தைக்கண்டால்

---

ஶம்ஸ்யம் பரோ தர்ம: இத்யாதி,) b குறும்பன் - சாடு. வன்னியன் - அர்த்தம்; இடையன் த்வநி. c, d "தன்கைச் சார்ங்கம்" என்பானென், வேறு வில்லில்லையோ? என்ன

என்னும்படியாயிருக்கும். e ஸர்வகா3த்ரஸௌந்த3ர்யமிருக்கும்படி. (பொருத்தமிலியை) இவ்வழகுண்டானால் ப்ரயோஜனமென்? உகந்தார்பக்கல் ரஸம்தொங்கிலும் தொங்கான். (கண்டீரே) அவன் நம்மோடு பொருந்திற்றிலனென்று நமக்கு அவன் பக்கல் ஆசையற்றிராதே. தன்னோடு பொருந்தாமை காண வாய்த்து இவளாசைப்படுகிறது.

f (உருவித்யாதி3) கண்டார் கண்குளிரும்படி இருண்ட வடிவை உடைத்தாய், யௌவநத்தால் வந்த புகராடுகை யாலே g முகம்செய்தாய், உத3யபர்வதத்திலே தோற்றுகிற

"முகத்திலேயோ வில் இருப்பது; கையிலேயன்றோ வில் இருக்க வேண்டும்" என்று சொல்லவேண்டியிருக்கும். அழகாலும் வளைவாலும், பிறரை வருத்தும் தன்மையாலும், ஆக இப்படி எல்லாப்படியாலும் புருவம் வில்லை ஒத்திருக்கிறது. (பொருத்த மிலியை) வெளியே புருவவட்டம் அழகியதாயிருக்கிறதே யொழிய உள்ளே அன்பில்லாமையாலே பொருத்தமற்றவனா யிருக்கிறனே! அன்பிலாதவனுடைய இவ்வழகால் என்ன பயன்? அவனை உகந்திருக்கும் நான் அவனிடம் அன்பைக் காட்டினாலும் அவன் நம்மிடம் அன்பைக் காட்டுவதில்லையே. (கண்டீரே) அவன் நம்மோடு பொருந்தாத பொருத்தமிலியா யிருப்பதால் நமக்கு அவனிடம் ஆசையில்லாமல் போக வில்லையே! "கண்டீரே" என்பதால் பொருத்தமில்லாத அவன் தன்னோடு பொருந்தாமையைக் காணவே இவள் ஆசைப்படு கிறாள் என்று விளங்குகிறது.

இனி விடையளிப்பார் பாசுரம்:- (உருவுகரிதாய் முகம் செய்தாய்......விரியும் கதிரேபோல்வானை) கண்கொண்டு காண

அருளிச்செய்கிறார் (புறப்பு ஒப்பில்லையென்று) e ஸர்வகா3 த்ரஸௌந்த3ர்யம்) வடிவுமாத்ரமன்றிக்கே கார்யத்தாலுமென்ற படி. g (முகம்செய்கை) - தேஜஸ்ஸு ஒருமுகமாயிருக்கை, f "உருவுகரிதாய், முகம் செய்தாய்" என்கிற இரண்டு



ஆதி3த்யனைப்போலேயிருக்கிறவனை. h 259. "स्वयैव प्रभया मेरुमुदये विमलो रविः" (ஸ்வயைவ ப்ரப4யா மேருமுத3யே விமலோ ரவி:) திருவபி4ஷேகத்துக்கிடாக ஒப்பித்து ஸிம்ஹாஸனத்திலே எழுந்தருளியிருக்கிற ஸமயமாகையாலே எல்லோரோடும் i நப்பின்னதின சொல்லைச் சொல்லித் தண்ணளியோடே

லாம்படியும் கண்டார் கண்குளிரும்படியும் இருண்ட வடிவை யுடையதாய், ஒளியால் செம்மைமிக்கதாயிருப்பது உதய ஸூர்யன். இவனும் இருளன்னமாமேனியை உடையவனாய் யௌவனத்தாலும், செங்கமலம்போன்ற கண் கை கால் வாய் போன்ற அவயவங்களாலும், திருவாப4ரணங்களாலும் செம்மைமிக்க ஒளியுடையவனாயிருப்பான். ஆகையால் பசுமை நிறைந்த ஸ்ரீ ப்3ருந்தா3வனத்திலே இவன் வரும்போது உத3ய கி3ரியிலே உதி3க்கும் ஸூர்யனைப்போலேயிருக்கிறான் என்று கருத்து.

259. தத3ாஸநவரம் ப்ராப்ய வ்யதீ3பயத ராக4வ: |
ஸ்வயேவ ப்ரப4யா மேருமுத3யே விமலோ ரவி: ||
(ரா-அ. 3-36)

[அந்த மேலான ஆஸநத்தை அடைந்தவுடன் உதிக்கும் சூரியன் தன் ஒளியாலே மேருமலையை ஒளிவிடச் செய்வது போல் அதை ஒளிவிடச்செய்தான் ராமன்.] என்று ஸ்ரீ ராமா யணத்திலும் ஸ்ரீ ராமபிரானை உத3ய ஸூர்யனாகக் கூறினா ரன்றோ வால்மீகி. பட்டாபி4ஷேகம் செய்துகொள்வதற்குத் தக்கபடி திருவாப4ரணங்களணிந்து ஸிம்ஹாஸனத்திலே எழுந் தருளியிருக்கிற காலமாகையாலே தன்னை வந்து காணும்

விஶேஷணமும்-கதிருக்கு விஶேஷணம். இத்தால்-ப்3ருந்தா3 வநத்தில் நெருஞ்சிற்பூ பொன்போலே இருக்கையாலும் திரு மேனி கறுத்திருக்கையாலும் உத3யகி3ரியிலே கறுத்த ஆதி3த் யன் உதி3த்தாற்போலே இருக்கிறதென்றபடி. h உதயகி3ரி யிலாதி3த்யனை ஒப்பாகச்சொன்ன விடமுண்டோவென்ன அருளிச்செய்கிறார் (ஸ்வயேவ ப்ரப4யேத்யாதி3) i (நப்பின்னத்

யிருந்தபடி. j 260. "तत्र गोविन्दमासीनं प्रसन्नादित्यवर्चसं (தத்ர கோவிந்த,மாஸீநம் ப்ரஸந்நாதி,த்யவர்ச்சஸம்) என்கிற படியே. (விருந்தாவனத்தே கண்டோமே) திருவாய்ப்பாடியில் மத்,யாஹ்நத்திலாதி,த்யனைப்போலேயாய்த்திருப்பது. 6.

## பதினலாம் திருமொழி ஏழாம்பாட்டு.

பொருத்த முடைய நம்பியைப் புறமபோ லுள்ளும் கரியானை
கருத்தைப் பிழைத்து நின்றஅக் கருமா முகிலைக் கண்டீரே
அருத்தித் தாரா கணங்களால் ஆரப் பெருகு வானம்போல்
விருத்தம் பெரிதாய் வருவானை விருந்தா வனத்தே
கண்டோமே.

பதவுரை:— பொருத்தம் உடைய நம்பியை — பொருத்த முடைய ஸ்வாமியாய், புறம்போல் உள்ளும் கரியானை —

---

அனைவரிடமும் சிரித்துப் பேசிக்கொண்டு இருந்த கருணைமிக்க காகுத்தனைக் குறித்து வால்மீகி சொன்ன உவமையை ஸ்ரீப்ருந்தாவநத்திலே ஆயர் சிறுமியர்க்கு முகம்கொடுத்துக் கொண்டிருக்கும் கண்ணனுக்கு இடுகிருள் ஆண்டாள்.

**260. தத்ர கோ,விந்த,மாஸீநம் ப்ரஸந்நாதி,த்யவர்ச்சஸம்**
[குளிர்ந்த சூரியனைப்போன்ற ஒளியை உடையவனாய் அங்கு எழுந்தருளியிருக்கும் கோவிந்தனை (உபாஸித்தார்கள்)] என்று கண்ணனையே குளிர்ந்த ஸூர்யனாகச் சொன்னவர்களும் உண்டன்றே. (விருந்தாவனத்தே கண்டோமே) நடுப்பகலில் ஸூர்யன்போலே எவர்க்கும் காணவொண்ணாத படி கண்ணைக்கூசவைக்கும் திருவாய்ப்பாடியிலல்லாமல் பெண்களுக்குக் கண்குளிரக் காட்சியளிக்கும் ஸ்ரீப்ருந்தாவனத்திலே கண்டோம். 6.

---

தின்சொல்) சிரித்து விநோதம் சொல்லுகை. இத்தாஸ்ரூபஸாம்யமுமன்றிக்கே ஸௌலப்ய குணஸாம்யமும் சொல்லுகிறது. j (ஆதித்ய வர்ச்சஸம்) என்கிறபடியே விருந்தாவநத்தே கண்டோமென்று பூரிப்பது. 6



உடம்புபோலே உள்ளமும் கறுத்திராநின்றவனாய், கருத்தை பிழைத்து நின்ற - நான எண்ணும் எண்ணத்தைத்தப்பி கிற்பவனாய், அக் கரு மா முகிலை - கறுத்துப் பெருத்த முகில் போன்றவனான அக்கண்ணபிரானை, கண்டீரே?—: அருத்தி—(காம்யபலன்களை விரும்புமவர்களாலே) விரும்பப் படுகிற, தாரா கணங்களால் — நக்ஷத்ர ஸமூஹங்களாலே, ஆரப் பெருகு - மிகவும் நிறைந்திருந்துள்ள, வானம்போல் - ஆகாயம் போலே, விருத்தம் பெரிது ஆய் - பெருங்கூட்டமாய். வருவானை - எழுந்தருளாநின்ற அப்பெருமானை, விருந்தாவனத்தே கண்டோம் —;

வ்யா - ஏழாம் பாட்டு a (பொருத்தமுடைய நம்பியை) b "பொருத்தமிலி" என்பது நாட்டில் பொருந்தாதாரளவில் நிற்குமதன்றே? c (நம்பியை) பொருத்தத்திலேயும் ஒரு குறை சொல்லலாமோ அவனை? (புறமபோலுள்ளுங்கரி

---

அவ:—நக்ஷத்ர ஸமூஹத்தோடுகூடிய பெரிய ஆகாயம் போலே தோழன்மார் நடுவிலே வருகிறவனை ஸ்ரீப்ருந்தாவனத்திலே கண்டோமென்கிருள்.

வ்யா:—(பொருத்தமுடைய நம்பியை) இவனைப் 'பொருத்தமிலி' என்று சென்ற பாசுரத்தில் சொன்னுள். 'இங்கு அப்படி நான் சொன்னது தவறு. பொருத்தமில்லாமை என்பது நாட்டில் உள்ளுக்கும் வெளிக்கும் பொருத்தமில்லாத மற்றவர்களுக்குப் பொருந்துமேயொழிய உள்ளும் வெளியும் ஒருபடிப் பட்டிருக்கும் பொருத்தமுடைய இவனுக்குப் பொருந்துமோ? என்கிருள். (நம்பியை) பொருத்தத்திலும் ஒரு குறை சொல்ல முடியாதபடி நிறைவுடைய நம்பியன்றே இவன் என்கிருள்.

---

ஏழாம்பாட்டு (பொருத்தமித்யாதி) a. b வெறுப்பாயிருக்கச்செய்தே "பொருத்தமுடையன்" என்னலாமோ, "பொருத்தமிலி" என்னவேண்டாவோ? என்ன (பொருத்தமிலி இத்யாதி) நாட்டாரைப்பற்றவும் பொருத்தமிருக்கையாலே வ்யங்க்யமாக "பொருத்தமுடையன்"

யானை) ஏகரூபனுயிருப்பானொருவனுய்த்து. d சக்ரவர்த்தித்
திருமகனைப்போலே அகவாயொருபடியாய்ப் புறவாயொரு
படியாயிருப்பானொருவனல்லன். e (கருத்தையிதயாக்,)
புறம்பும் உள்ளுமிருக்கிறபடி. கலக்கிற ஸமயத்திலே "பிரி
யேன், பிரியில் த₄ரியேன்" என்று சொல்லிவைக்குமிறே நெஞ்
சாலே பிரிவைநினைத்திருக்கசெய்தேயும். அத்தை இவள் மெய்
யென்று அத்₄யவஸித்திருக்கச்செய்தேயும் இவள் நினைவைத் தப்பி
தப்பிக்கொடுநிற்கும். (அக் கருமாமுகிலை) நினைவைத் தப்பி
ஞனென்று விடவொண்ணுதபடியிருக்குமாய்த்து வடிவழகு.

---

அப்படி நிறைந்த பொருத்தம் எதில் இருக்கிறது? எனில்:
(புறம்போல் உள்ளும் கரியானை) வெளியே கறுத்தவனு
யிருப்பதுபோலே உள்ளத்திலும் கறுத்தவனுயிருக்கும்
நிறைந்த பொருத்தம் இவனுக்குத்தவிர வேறொருவனுக்
குண்டோ? சக்ரவர்த்தித் திருமகனைப்போலே உள்ளே இரக்கம்
மிக்கவனுகையாலே வெளுத்தவனுய். வெளியிலே கறுத்தவனுய்
உள்ளொன்று புறம்பொன்ருயிருப்பவனே இவன்? இவ்விடத்
தில் ஆண்டாள் துதிப்பதுபோல் நிந்தையின் எல்லையைத்
தொட்டுவிடுகிருள் என்பது சுவைக்கத்தக்கது. (கருத்தைப்
பிழைத்து நின்ற) புறம்போல் உள்ளும் கரியானுயிருப்பதை
விளக்குகிருள். "எனது நினைவைத் தப்பிக்கொண்டு நிற்கிற'
என்று பொருள். அதாவது:—இவளோடு கூடிநின்ற காலத்
திலே "உன்னைப் பிரியமாட்டேன்; பிரிந்தால் உயிர்த₄ரிக்க
மாட்டேன்" என்று கண்ணன் சொல்லிவைப்பான் கறுத்த
நெஞ்சாலே பிரிவை நினைத்துக்கொண்டே. அதை இவள்
உண்மையென்று உறுதிபூண்டிருக்கும்போதே அவள் எண்
ணத்தைப் பொய்யாக்கிப் பிரிந்துவிடுவான். (அக்கருமாமுகிலைக்
கண்டீரே) 'இப்படி நம் எண்ணத்தைப் பொய்யாக்கிவிட்
டானே' என்று இவனைக் கைவிட முடியாதபடி செய்கிறது
இவனுடைய கார்மேகம்போன்ற வடிவழகு.

---

என்கிறது. c "நம்பி" என்றதுர்-வ்யங்க்₃யம். d சக்ரவர்த்தித்
திருமகனுக்கு, புறம்பு ஶ்யாமமாய் உள்ளு த₄யை
யுண்டாயிருக்கும். e "கருத்து": நினைவு; பிழைத்து - தப்பி.



f (அருத்தி இத்யாதி₃) g அர்த்தி₂த்வத்தை விளைப்பதாய்,
ஸ்ப்ருஹணீயமாயிருந்துள்ள h தாராக₃ணங்களாலே i மிகவும்
நிறைந்துள்ள ஆகாஶம் போலே. j (விருத்தம் பெரிதாய்
வருவானை; தேஜ:பதா₂ர்த்த₂ங்களினுடைய திரள்போலே
யாய்த்துத் தன்னோடொத்த தரத்தையுடையரான தோழன்
மார் நடுவே வரும்படி. விருத்தமென்றது—ப்₃ருந்த₃மென்ற
படியாய். மநுஷ்ய ஸமூஹத்தைச் சொன்னபடி. k அன்றியே
'ஆரப்பருகும்' என்று பாட₂மானபோது- மிக்க விருப்பத்தை

---

இனி விடை சொல்லுவார் பாசுரம்: (அருத்தித்தாராகணங்களால்
ஆரப்பெருகுவானம்போல்) காம்யப₂லன்களை விரும்புகிறவர்
களால் விரும்பப்படுகிற நக்ஷத்ரக்₃ரஹ ஸமூஹங்களாலே
மிகவும் நிறைந்துள்ள ஆகாயம்போலே. (விருத்தம் பெரிதாய்
வருவானை) "தன்னேராயிரம் பிள்ளைகள்" [பெரியாழ்திரு
3-1-1] என்று தன்னைப்போன்ற பெருமையுடைய தோழன்
மார் நடுவே இவன் வரும்போது சோதிமயமான நக்ஷத்ர
ஸமூஹத்தோடு கூடிய ஆகாயம்போலிருக்கிறது. விருத்தம்
என்றது விருந்தம் என்றபடியாய் 'ப்₃ருந்த₃ம்' என்று வட
மொழியில் சொல்லப்படும் கூட்டத்தைச் சொல்லுகிறது.
இங்கு பெரிய தோழன்மார் கூட்டத்தோடு வருபவன் என்றபடி
அன்றிக்கே, 'ஆரப்பருகு வானம்போல்' என்று பாட₂மான
போது (அருத்தித்து ஆரா கணங்களால் ஆரப்பருகும் வானம்

---

f, h தாராக₃ணம்-நக்ஷத்ரக₃ணம். g சேதநர் ப்ரயோஜ
நார்த்த₂மாக நவக்₃ரஹங்களையும அபேக்ஷிக்கையாலே
(அர்த்தி₂த்வத்தை விளைப்பதாய்) என்கிறது. f, i "பெருகு
வானம்" என்று முந்தினபாட₂ம். f, h, k தாராக₃ணமென்று-
நக்ஷத்ர ஸமூஹமாதல்; க₃ணமென்று-மநுஷ்ய ஸமூஹ
மாதல்; அப்போது, அருத்தித்து ஆராதேயிருக்கிற மநுஷ்ய

யுடையராய்க் கொண்டு மநுஷ்யர்களுடைய திரளாலே அபி4நிவிஷ்டமாய்க்கொண்டு பார்க்கப்படாநின்றுள்ள மேக4ம் போலேயென்றுகிறது. 1 261 “न ततर्प समायान्तं पश्यमानो नराधिप:” (ந ததர்ப்ப ஸமாயாந்தம் பஶ்யமாநோ நராதி4ப:) என்னக்கடவதிறே. (விருந்தாவனத்தே) அத்திரளின் நடுவே m சோலைபார்ப்பாரைப்போலே காண்கையன்றிக்கே, ஏகாந்தமாகக் காணப்பெற்றோம். 7.

போல்) என்றது ‘மிக்க விருப்பத்தை யுடையவர்களாய், மனுஷ்ய க3ணங்களாலே பேராவலுடன் பார்க்கப்படும் மேக4ம் போலே’ என்று பொருள்படுகிறது,

261. க4ர்மாபி4தப்தா: பர்ஜந்யம் ஹ்லாத3யந்தமிவ ப்ரஜா: |
ந ததர்ப்ப ஸமாயாந்தம் பஶ்யமாநோ நராதி4ப: ||
[ரா-அ 3-30]

[கோடையால்வாடிய குடிகள் களிப்பூட்டும் மேக4த்தைக் காண்பதுபோலே, எதிர்வரும் ராமனைக்கண்ட தசரதன் திருப்தியடையவில்லை] என்று ராமன் வருவதைக்கண்டு தசரதன், கோடையில் மேகத்தைக்கண்ட மனிதர்கள்போலே த்ருப்தியடையாமல் பார்த்துக்கொண்டிருந்தான் என்று வால்மீகியும் கூறினான்றே. (விருந்தாவனத்தே கண்டோமே) தன்னோராயிரம் பிள்ளைகளோடு திருவாய்ப்பாடியில் காணும்போது ஒரு பெரிய சோலையை முழுவதும் காண்பதுபோலே மேலெழுந்தவாரியாகவே காணவேண்டியிருக்கும். அப்படியல்லாமல் பெண்களுக்கு ஏகாந்தமான (தனியிருப்பான) ஸ்ரீப்3ருந்த3ாவனத்திலே வருகையாலே கண்களார நன்றாகக் காணப்பெற்றோம். 7

றென்றபடி. l பார்க்கிறவர்களுக்கு மேக4ங்கள் போ4க்3யமாமாப்போலே இவனும் போ4க்3யமாயிருக்குமோவென்ன அருளிச்செய்கிறார் (ந ததர்ப்ப ஸமாயாந்தம் இத்யாதி3) m (சோலையித்யாதி3) சோலைபார்க்கை - சோலையை ஸமுத3ாயேந மேலெழப் பார்க்கை. அப்படியன்றிக்கே ஏகாந்தத்திலே ஸாவயவமாகக் காணப்பெற்றோமென்றபடி. j விருத்தம் - வ்ருத்தம். 7



## பதினாலாம் திருமொழி-எட்டாம் பாட்டு

வெளிய சங்கொன் றுடையானைப் பீதக வாடை யுடையானை
அளிநன் குடைய திருமாலை யாழி யானைக் கண்டீரே
களிவண் டெங்கும் கலந்தாற்போல் கமழ்பூங் குழல்கள் தடந்
தோள்மேல்
மிளிர நின்று விளையாட விருந்தா வனத்தே கண்டோமே.

பதவுரை:—வெளிய சங்கு ஒன்று உடையானை - வெளுத்த ஸ்ரீ பாஞ்சஜந்யமொன்றை உடையவனாய், பீதக ஆடை உடையானை - பீதாம்பரத்தை உடையாகக்கொண்டவனாய், நன்கு அளி உடைய - நன்றாக க்ருபையை உடையனாய், திரு மாலை - ஆழியானை - திருவாழியாழ்வானை உடையனாய், ஶ்ரிய:பதியான கண்ணனை, கண்டீரே?—; களி வண்டு - (மது4பானத்தாலே) களித்துள்ள வண்டுகளானவை, எங்கும்-எப்புறத்திலும், கலந்தாற்போல் - பரம்பினாற்போலே, கமழ் பூ குழல்கள் - பரிமளிக்கின்ற அழகிய திருக்குழல்களானவை, தடந்தோள் மேல் - பெரிய திருத்தோள்களின் மேலே, மிளிர நின்று விளையாட - (தாழ்ந்து) விளங்கநின்று விளையாட, விருந்தாவனத்தே கண்டோம்—;

வ்யா:- எட்டாம்பாட்டு (வெளியசங்கித்யாதி3) கடல் போலே ஶ்யாமமான திருமேனிக்குப் பரபா4க3மான வெண்மை யுடையதாய், ஒப்பின்றிக்கேயிருக்கிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தை

அவ:—வண்டுகளை நிகர்த்த பூங்குழல்கள் திருத்தோள்களின்மேலே விளங்கநின்று விளையாடும் கண்ணனை ஸ்ரீப்3ருந்த3ாவனத்திலே கண்டோமென்கிறாள்.

வ்யா:—(வெளிய சங்கொன்றுடையானை) கடல்போலே கறுத்ததிருமேனிக்கு வர்ணச்சேர்த்தியழகை அளிக்கும் வெண்மையுடைய ஒப்பற்ற ஸ்ரீ பாஞ்ஜன்யமாகிற சங்கைச

யுடையனுயிருக்கிறவன். "கையிலோர் சங்குடை மைந் நிறக்கடல்" என்னக்கடவதிறே. திருப்பீதாம்ப3ரமும் சிவப் பாலே திருமேனிக்குப் பரபா4கமாயிருக்குமிறே. a (அளிநன குடைய) அகவாயில் தண்ணளி மிக்கிருக்கும். அதுக்கு நிப3ந் த4நம்:—(திருமாலை) பிராட்டியோட்டை வாஸநை. (ஆழி யானை) b பாஞ்சஜந்யத்தோடே சொல்லில் கண்ணெச்சிலா மென்று, பிரித்து அநுப4விக்கிருள்.

---

யுடையவனுயிருப்பவனை. 'கையிலோர் சங்குடை மைந்நிறக் கடல்" [பெரியதிரு. 7-10-2] என்று இவ்வர்ணச் சேர்த்தி யழகை அனுப4வித்தாரன்றே திருமங்கையாழ்வாரும். (பீதக வாடையுடையானை)திருப்பீதாம்ப3ரமும் தன் சிவப்புநிறத்தாலே கரியதிருமேனிக்கு வர்ணச்சேர்த்தியழகை அளிக்குமன்றே. (அளிநன்குடைய) நெஞ்சிலே கருணைமிகுந்திருக்கும். அதற்குக் காரணம் என்னவெனில்—(திருமாலை) பெரியபிராட்டியாரோடு பழக்கமே காரணம். (ஆழியானை) "கூராராழிவெண்சங்கேந்தி" [திருவாய் 6-9-1] "சங்கு சக்கரங்கள்" [திருவாய் 7-2-1] என்றாற்போலே சங்கையும் சக்கரத்தையும் சேர்த்து அனுப4 விக்காமல் பிரித்துச் சொல்லுவானேன்? என்னில்: திருவாழி யையும் திருச்சங்கையும் சேர்த்துச் சொன்னால் கண்ணெச்சில் (த்3ருஷ்டிதோ3ஷம்) விளையும் என்று பிரித்து அனுப4விக்கிருள்.

---

எட்டாம் பாட்டு. (வெளியசங்கித்யாதி3) a "அளி" - க்ருபை. b "கூராராழி வெண்சங்கு" என்னுமாபோலே கூட அநுஸந்தி4யாமல் பிரித்து அநுஸந்தி4ப்பானென் னென்ன அருளிச்செய்கிருர் (ஸ்ரீபாஞ்சஜந்யேத்யாதி3)



(களிவண்டித்யாதி3) மது4பான மத்தமான வண்டுகள் பரம்பினாற்போலே பரிமளிதமாய், த3ர்ஶநீயமாயிருக்கிற திருக் குழல்களானவை திருத்தோள்களிலே நின்று அலைய. (மிளிர நின்று விளையாட) திருக்குழலைப் பேணியிருக்கும் திருவாய்ப் பாடியிலன்றிக்கே ஸ்ரீப்3ருந்தா3வநத்திலே காணப் பெற்றோம். 8.

## பதினாலாம்திருமொழி - ஒன்பதாம் பாட்டு

**நாட்டைப் படையென்று அயன்முதலாத் தந்த நளிர்மா**
**மலருந்தி**
**வீட்டைப் பண்ணி விளையாடும் விமலன் றன்னைக் கண்டீரே**
**காட்டை நாடித் தேனுகனும் களிறும் புள்ளு முடன்மடிய**
**வேட்டை யாடி வருவானை விருந்தா வனத்தே கண்டோமே.**

பதவுரை:— **நாட்டை படை என்று** - உலகங்களை ஸ்ருஷ்டியென்று, **அயன் முதலா** - பிரமன் முதலான ப்ரஜா பதிகளை. **தந்த** - உண்டாக்கின, **நளிர் மா மலர் உந்தி வீட்டை பண்ணி**—குளிர்ந்த பெரிய மலரை உடைத்தான திருநாபி4யாகிற வீட்டை உண்டாக்கி, **விளையாடும்**— இப்படியாக லீலாரஸமனுப4விக்கிற, **விமலன் தன்னை**-பரம

---

இனி பதிலுரைப்பார் பாகரம் — (களிவண்டு எங்கும் கலந் தாற்போல் தடந்தோள்மேல் கமழ்பூங்குழல்கள்)தேனைக்குடித்து மயங்கிய வண்டுகள் எங்கும் பரவியிருப்பதுபோல் இருக்கிறது கண்ணனுடைய மணம் மிக்க அழகிய கேஶபாஶங்கள் பருத்த தோள்கள்மேல் அலைவது. (மிளிர நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே) திருவாய்ப்பாடியிலே இக் காட்சியைக் காணமுடியாது. ஏனெனில்: யஶோதைப்பிராட்டி கண்ணனுடைய திருக்குழலை வாரிப்பின்னிப் பூச்சூட்டி முடித் திருப்பாள். ஆகையால் குழல்கள் தோள்களிலே வண்டுகள் போல் ஒளிவீசி அலையும்படி விளையாடும் கண்ணனை ஸ்ரீப்3ருந்தா3 வனத்தில் காணப்பெற்றோம் என்கிருள். 8

பாவநஞன பெருமானை, கண்டீரே?—; தேனுகனும்-தே₄நு
காஸுரனும், களிறும்-குவலயாபீட₂ யானையும். புள்ளும் —
ப₃காஸுரனும், உடன் மடிய - உடனே மாளும்படியாக,
காட்டை நாடி வேட்டை ஆடி வருவானை—காட்டிற்சென்று
வேட்டையாடி வரும் அப்பெருமானை, விருந்தாவனத்தே
கண்டோம்—.

வ்யா:— ஒன்பதாம் பாட்டு (நாட்டையித்யாதி₃) சிறி
திடம் தானே கைதொட்டு ஸ்ருஷ்டித்து. இவ்வருகுண்டா
னவற்றை ஸ்ருஷ்டியென்று சதுர்முக₂ன் தொடக்கமான ப்ர
ஜாபதிகளை உண்டாக்கின, உ ஶ்ரமஹரமாய் இவ்வருகு கார்ய

---

அவ:— காட்டிலே பல அஸுரர்களாகிற து₃ஷ்ட
ம்ருக₃ங்களை வேட்டையாடிவரும் கண்ணனை ஸ்ரீப்₃ருந்த₃ாவனத்
திலே கண்டோம் என்கிருள்.

வ்யா:—(நாட்டைப்படை என்று அயன் முதலாத்தந்த)
பிரமனை உள்ளடக்கிய அண்டம் வரையிலுள்ள ஸமஷ்டி
ஸ்ருஷ்டியைத் தானேசெய்து, 'இதற்குமேல் உள்ள வ்யஷ்டி
ஸ்ருஷ்டியை நீ படைப்பாயாக' என்று பிரமனை நியமித்து,
அவன் மூலமாக ப்ரஜாபதிகளை உண்டாக்கி, இப்படியாகப்
படைக்கும் அனைவரையும் படைத்த. (நளிர்மாமலர்
உந்தி வீட்டைப்பண்ணி விளையாடும்) குளிர்ந்திருக்கை
யாலே களைப்பைப் போக்குவதாய், அண்டம் முதலான
கார்யப் பொருள்களுக்கெல்லாம் காரணமாயிருக்கத்தக்க
பரப்பையுடையதாய், அன்றலர்ந்த தாமரையை யுடையதான

---

ஒன்பதாம் பாட்டு. (நாட்டையித்யாதி₃) c தனியே
ஒருவனைப்படையென்று சொல்லிற்றதுக்குச்சேர "அயன்
தன்னை" என்று பாட₂மாக வேணுமல்லது, "அயன் முதலா"
என்றபோது "படையுங்கோள்" என்று ப₃ஹுவசநமாக
வேணும்; அது இயலுக்குச்சேராது; ஆகையாலே "அயன்



வர்க்க₃த்துக்கெல்லாம் காரணமாகப்போகும் பரப்பையுடைத்
தாய், செவ்விப்பூவையுடைத்தான திருவுந்தியிலே ப்₃ரஹ்மா
வுக்கு இருப்பிடத்தைப் பண்ணிக்கொடுத்து, இதுதானே
தனக்கு ப்ரயோஜனமாகக்கொண்டு லீலாரஸமநுப₄விக்கிற.
(விமலன்) இதொழிய ப்ரயோஜநாந்தரஸ்ரதையைக் கணிசி
யாமையால் வந்த ஶுத்₃தி, b "படை" என்கிற ஏகவசநம் -
b₃ தனியே யென்கிறது. c "'அயன்றன்னைத் தந்த' என்று

---

திருநாபீ₄கமலத்திலே பிரமனுக்கு இருப்பிடத்தைப்பண்ணிக்
கொடுத்து, இந்த ஸ்ருஷ்டி முதலானவற்றையே தனக்கு பய
னுகக்கொண்டு லீலாரஸம் அனுப₄விக்கிற. (விமலன்) இந்த லீலா
ரஸமொன்றையே கருதி. அந்த அயன் முதலானவர்கள் தன்னை
விரும்பாமல் தங்களுடைய பதவி முதலானவற்றை விரும்பி நிற்
பதைக் கருத்திற்கொள்ளாமையால் வந்த பரிஶுத்₃தி₄யைச்
சொல்லுகிறது. "அயன் முதலாத் தந்த" என்று சொன்னதுக்குப்
பொருத்தமாகப் 'படையுங்கள்' என்று பன்மையாகச் சொல்
லாமல் "படை" என்று ஒருமையாகச் சொல்லலாமோ எனில்:
பிரமனால் தூண்டப்பட்டே ப்ரஜாபதிகள் ஸ்ருஷ்டிக்கிருர்க
ளாகையாலே, நேரே நியமிக்கப்படுபவன் பிரமனே என்பதைக்
கருதி "படை" என்று ஒருமையாகச் சொல்லிற்று.

---

தன்னை" என்ருல் அழகிதென்றபடி. b "அயன் முதலாத்
தந்த" என்றதுக்கு அநுகு₃ணமாக "படையுங்கோள்"
என்று ப₃ஹுவசநமாகச் சொல்லாமல் ஏகவசநமாய்ச்
சொல்லுவானென்னென்ன (படையென்கிற இத்யாதி₃)ஸ்ரு
ஷ்டிக்கு ப்ரயோஜக 'கர்த்தா ப்₃ரஹ்மாவாய், அவனுடைய
நியோக₃மடியாக இவர்கள் செய்கிருர்களாகையாலே ஈச்வர
நியோக₃ம் அவர்களுக்கு இல்லை என்று நினைத்து ஏகவசநப்ர
யோக₃ம் பண்ணுகிறதென்று இவ்வாக்யத்துக்கு தாத்பர்யம்
அருளிச்செய்வர். 262 "ब्रह्मो (तत्रो,त्पन्नः स तेनोक्तः प्रजा:

பாட,மானபோது 'இவ்வருகுண்டான கார்யவர்க்க,த்தை யடைய நீ உண்டாக்கு' என்று சதுர்முக,ளைத் தந்த என்ருகப் பெரில் அழகிது' என்று போர விரும்பியருளிச்செய்வர்.

ஸ்ருஷ்டித்துவிட்டோமாகில் மேலுள்ளது தானே செய்து கொள்ளுகிறனவென்று விடுகையன்றிக்கே. தானே கை தொட்டு வன்னியமறுத்துக் கொடுக்கும்படி சொல்லுகிறது

---

262. தத்ர ஸுப்தஸ்ய தே,வஸ்ய நாபெ,ள
பத்,மமபூ,ந்மஹத் ।
தஸ்மிந் பத்,மே மஹாப,ாக! வேத,வேத,ாங்க,பாரக,:॥
ப்,ரஹ்மோத்பந்நஸ் ஸ தேநோக்த: ப்ரஜா: ஸ்ருஜ
மஹாமதே ॥ [நரஸிம்ஹபுராணம்]

[பெரியோனே! அந்த நாராயணன் அங்கு தூங்கும்போது நாபி யில் பெரியதோர் தாமரை உண்டாயிற்று. அதில் வேத, வேத,ாங்க,ங்களைக் கரை கண்ட பிரமன் தோன்றினன். நாரண ஞல் அப்பிரமன் "பேரறிவாளனே! ஜீவர்களைப் படைப்பாய்" என்று சொல்லப்பட்டான்] என்று சொல்லப்பட்டதன்றே, "அயன்தன்னைத் தந்த" என்றும் பாடமுண்டு. அப்போது " அண்டத்துக்குள்ளிருக்கும் கார்யப்பொருள் முழுவதையும் நீ படை' என்று நியமித்து நான்முகனைப் படைத்தவன் என்று ஒருமைக்குப் பொருத்தமாகப் பொருள்படுகையால் இப்பாடம் மிகவும் அழகியது" என்று நம்பிள்ளை மிகவும் விரும்பி அருளிச்செய்வாராம்.

இனி பதில் சொல்லுவார் பாசுரம்:- தானே நேராகவும், பிரமன் முதலானுர் மூலமாகவும் நாட்டைப் படைத்துவிட்டு மேலே அதைக் காப்பாற்றுவது அதற்கு விரோதிகளைப் போக்கு வது முதலான காரியங்களை அந்த நாட்டிலுள்ளார் தமக்குத் தாமே செய்து கொள்ளட்டும் என்று விட்டு விடாமல், அந்நாட்டுக்கு உடையவனுய், அதைப் படைத்த வனை தானே வந்தவதரித்து நேரே நின்று நாட்டுக்கு விரோதிகளைப் போக்கித் தீரும்படியை இதில் கூறுகிறது.

---

ஸ்ருஜ மஹாமதே" (ப்,ரஹ்மோ(த்த்ரோ) த்பந்நஸ் ஸ தேநோக்த: ப்ரஜா:ஸ்ருஜ மஹாமதே) என்னக்கடவதிறே. b, (தனியே என் கிறது) என்றது - ப்ரஹ்மா ஒருவனைச் சொல்லுகிறதென்ற படி. a 'நளிர்' - குளிர்த்தி. d "நாடி-தேடி. e 'களிறு'-யானை 9



மேல்—(காட்டையித்யாதி,) பையல்கள் கிடந்த தூறுகளெல் லாம் d புக்குத்தேடி. தே,நுகன், e குவலயாபீட,ம், ப,காஸுரன் இவர்களுடைய ஏகோத்,யோக,த்திலே நிரஸ்தர்போலேயிருக்க வாய்த்து அழியச்செய்தது. (விருந்தாவனத்தே) 15 "भर्तारं" (ப,ர்த்தாரம்) என்கிறபடியே அணைக்கைக்கு ஏகாந்தமான 9
விடத்திலே காணப்பெற்ரும்,

## பதினுலாம்திருமொழி பத்தாம் பாட்டு

பருந்தாள் களிற்றுக் கருள்செய்த பரமன் றன்னை பாரின்மேல்
விருந்தா வனத்தே கண்டமை விட்டு சித்தன் கோதைசொல்
மருந்தா மென்று தம்மனத்தே வைத்துக் கொண்டு வாழ்வார்
கள்
பெருந்தா ளுடைய பிரானடிக்கீழ்ப் பிரியா தென்று மிருப்பாரே

பதவுரை:—பரு தாள் களிற்றுக்கு — பருத்த கால்களை யுடைய க,ஜேந்த்,ராழ்வானுக்கு, அருள் செய்த — க்ருபை

---

(காட்டைநாடி தேனுகனும் களிறும் புள்ளும் உடன்மடிய வேட்டையாடி வருவானை) காட்டிலே வேட்டையாடும்போது காட்டுமிருகங்கள் ஒளிந்திருக்கும் புதர்களெல்லாம் தேடுவது போலே, இங்கும் திருவாய்ப்பாடி ஸ்ரீப்,ருந்த,ாவனம் முதலான காடுகளில் ஆஸுரப்ரக்ருதிகள் பதுங்கியிருந்த இடமெல்லாம் சென்று தேடி, தே,னுகன், குவலயாபீட,ம் என்னும் யானை, கொக்குவடிவு எடுத்து வந்த ப,காஸுரன் ஆகிய அனைவரும் ஒருசால் செய்த முயற்சியினுலேயே அழிந்தார்கள் என்று தோற்றும்படி விரைவில் அழியச்செய்து வேட்டையாடிவிட்டு வருகின்றவனை. (விருந்தாவனத்தே கண்டோமே) பலர்கூடி யிருக்கும் திருவாய்ப்பாடியிலல்லாமல் [36ம் பக்கத்திலுள்ள 15 வது பிரமாணத்தின்படி] அவனை ஆசைப்பட்ட நாம் அணைக்கலாம்படி தனியே இருக்கும் ஸ்ரீப்,ருந்த,ாவனத்திலே காணப் பெற்ரும் என்கிருள். 9.

பண்ணின, **பரமன் தன்னை** — திருமாலை, **பாரின் மேல்** — இந்நிலத்திலே, **விருந்தாவனத்தே கண்டமை** - ஸ்ரீ ப்3ருந்தா3 வனத்திலே ஸேவிக்கப்பெற்றமையைப்பற்றி, **விட்டு சித்தன் கோதை சொல்** — பெரியாழ்வார் திருமகளான ஆண்டாள் அருளிச்செய்த இப்பாசுரங்களை, **மருந்து ஆம் என்று** — (பிறவிநோய்க்கு) மருந்தாகக்கொண்டு, **தம் மனத்தே** — தங்கள் சிந்தையிலே, **வைத்துக்கொண்டு**- அநுஸந்தி4த்துக் கொண்டு, **வாழ்வார்கள்** — வாழுமவர்கள். **பெரு தாள் உடைய பிரான் அடி கீழ்** — பெருமைபொருந்திய திருவடிகளையுடைய எம்பெருமானுடைய திருவடிகளின் கீழ், **என்றும்** — எந்நாளும், **பிரியாது இருப்பார்** — பிரியாமல் (நித்யாநுப4வம் பண்ணப்) பெறுவர்கள்.

**வ்யா:— நிக3மத்தில்** (பருந்தாளித்யாதி3) **பருத்துப்பெரிய காலையுடைத்தாய்; ஶரீரம் பெருத்ததனையும் பாடாற்ற அரி தாயிருக்குமிறே: அப்படிப்பட்ட ஆனையானது தன்னிலமல் லாத வேற்று நிலத்திலே புக்கு முதலையின் வாயிலே அகப்**

---

10 *அவ*:— இந்தத் திருமொழியை அனுஸந்தி4த்தவர் கள் என்றும் எம்பெருமானுக்குப் பிரியாவடிமை செய்து கொண்டிருப்பார்கள் என்று ப2லம் சொல்லிப் பிரபந்தத்தை நிறைவுபடுத்துகிருள்.

*வ்யா:*— (பருந்தாள் களிற்றுக்கு அருள் செய்த) பருத்துப் பெரிய காலையுடையதான யானைக்குத் துன்பம் தீரும்படி அருள் செய்ததைக் காட்டுகிறது. யானைக்குத்தகுந்த வாதம் என்பது போலே இந்த யானையின் ஶரீரம் மிகப்பெருத்திருக்கையாலே, அந்த ஶரீரத்தில் உண்டான துன்பமும் பொறுக்கமுடியாத படி பெரியதாயிருக்குமன்றோ?(பரமன் தன்னை) அப்படிப்பட்ட யானையானது தன் நிலமல்லாத நீர்நிலையிலே புகுந்து முதலை



**பட்டு இடர்பட, அதினுடைய ஆர்த்தத்4வநி செவிப்பட்ட அநந்தரம் ஆயுத4ாப4ரணங்களை அக்ரமமாக த4ரித்துக் கொண்டு மடுவின்கரையிலே அரைகுலையத்தலைகுலைய வந்து, அதுபட்ட புண்ணாறும்படி முகங்கொடுத்து, ரக்ஷகத்வத்தில் தன்னை யெண்ணினுல் பின்னையொருவர் இல்லாதபடியா யிருக்கிறவனை; ஐ 263 "परमापदमापन्नः" (பரமாபத3மாபந்ந:)**

---

யின் வாயிலே அகப்பட்டுத் துன்பமுற்று "ஆதிமூலமே" என்று கதற, அந்தக் கூக்குரலைக்கேட்டவுடன் ஆயுத4ங்களை யும் ஆப4ரணங்களையும் முறைகெட த4ரித்துக்கொண்டு அந்த மடுவின் கரையிலே அரைகுலையத்தலைகுலைய (த4ரித்த வஸ்த்ரம் அவிழும்படியாகவும் தலையில் முடி சீர்குலையும்படியாகவும் ) வந்து அந்த க3ஜேந்த்3ராழ்வான் பட்டபுண் ஆறும்படி வாயாலே வேதுகொண்டு, ரக்ஷகர்களை எண்ணுகிறவர்களுக்குத் தன்னைக் காட்டிலும் வேறொரு ரக்ஷகன் இல்லை என்று சொல்லும்படியா யிருக்கிறவனை.

**263. பரமாபத3மாபந்நோ மநஸாऽசிந்தயத் ஹரிம் |**
**ஸ து நாக3வர: ஸ்ரீமாந் நாராயணபராயண: ||**

[விஷ்ணு த4ர்மம் 69-47]

[ஶ்லாக்4யமான ஆபத்தை அடைந்தவனும், கைங்கர்யஸ்ரீயை உடையவனும், நாராயணனையே மேலான க3தியாகக்கொண்ட வனுமான அந்த க3ஜேந்த்3ராழ்வான் மனத்தினாலே ஹரியை நினைத்தான்] என்னும் ப்ரமாணம் இங்கு அநுஸந்தி4க்கத் தக்கது. இந்த க3ஜேந்த்3ர வ்ருத்தாந்தத்தை ஆண்டாள் இங்கு அநுஸந்தி4ப்பதற்குக் கருத்து என்ன எனில்: அந்த ஆனைக்கு

---

நிக3மத்தில். (பருந்தாளித்யாதி3) ஐ இப்போது ஆனைக்கு அருள் செய்ததைச் சொல்லுவானென்னென்ன அருளிச் செய்கிருர் (பரமாபத3மாபந்ந இத்யாதி3)

என்னுமாபோலே. இதினுடைய விடாயடைய தனக்குப் பூர்வ க்ஷணத்திலுண்டானபடியும் அதினிடரைப் பரிஹரித்தாற் போலே தன்னிடரைப் பரிஹரித்தபடியும் சொல்லுகிறது.

(பாரித்யாதி3) ஸ்ரீவைகுண்ட2த்திலன்றிக்கே பூ4மியிலேயாய், அதுதன்னிலும் திருவாய்ப்பாடியிலன்றிக்கே ஸ்ரீப்3ருந்தா3வநத்தே கண்டமையை. (விட்டுச்சித்தன் கோதை சொல்) காட்சிக்குக் b கைம்முதலிருந்தபடி. (மருந்தா

---

விளைந்த அத்தனைதுன்பமும் தனக்கு எம்பெருமானைப் பிரிந்ததால் உண்டாயிற்று என்றும், அந்த ஆனையின் துன்பத்தைப் போக்கியதுபோலே தனக்கும் எம்பெருமான் முகம் காட்டித் துன்பத்தைப் போக்கினுன் என்றும் உணர்த்துவதற்காகக் கூறுகிருள்.

(பாரின்மேல் விருந்தாவனத்தே கண்டமை)ஸ்ரீவைகுண்ட2த்திலல்லாமல், இந்த லீலா விபூ4தியிலேயாய், அதிலும் பலருக்குப் பொதுவான திருவாய்ப்பாடியிலல்லாமல் அன்புடையார்க்கே தன்னைக் கொடுத்துக்கொண்டிருந்த ஸ்ரீப்3ருந்தா3வனத்திலே கண்டதை. (விட்டுசித்தன் கோதை சொல்) இப்படி இவள் கண்டகாட்சிக்கு இவளிடமிருந்த கைம்முதல் பெரியாழ்வார் வயிற்றில் பிறந்தமையேயாகும் என்று கருத்து. "விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே" [நாச்-திரு 10-10]என்று முன்னமே கூறினுளன்றே.

---

b 265 "उक्त्या धनञ्जयविभीषणलक्ष्यया ते प्रत्याय्य लक्ष्मणमुनेर्भवता वितीर्णम् । श्रुत्वा वरं तदनुबन्धमदावलिप्ते नित्यं प्रसीद भगवन् मयि रङ्गनाथ ॥" (உக்த்யா த4நஞ்ஜயவிபீ4ஷண லக்ஷ்யயா தே ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநேர் ப4வதா விதீர்ணம் । ஶ்ருத்வா வரம் தத3நுப3ந்த4 மதா3வலிப்தே நித்யம் ப்ரஸீத3 ப4க3வந் மயி ரங்க3நாத2 ॥)



மென்று) இதுதான் ஸம்ஸார பே4ஷஜமென்று தந்தாமுடைய ஹ்ருத3யத்திலே வைத்துக்கொண்டு, 264 "न बिभेति कुतश्चन" (ந பி3பே4தி குதஶ்சந) என்கிறபடியே இருக்குமவர்கள். c பரம ப்ராப்யமாய், நிரதிஶய போ4க்3யமாயிருந்துள்ள திருவடிகளை

---

265. உக்த்யா த4நஞ்ஜயவிபீ4ஷணலக்ஷ்யயா தே
ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநேர் ப4வதா விதீர்ணம் ।
ஶ்ருத்வா வரம் தத3நுப3ந்த4 மதா3வலிப்தே
நித்யம் ப்ரஸீத3 ப4க3வந் மயி ரங்க3நாத2 ॥
[ஸ்ரீதேசிகர் அருளிய ந்யாஸதிலகம் 23]

[அரங்கநகரப்பனே! அர்ஜுனனையும், விபீ4ஷணனையும் லக்ஷ்யமாகக் கொண்ட சரமஶ்லோகங்களைச் சொல்லி நம்பிக்கையூட்டி, எம்பெருமானருக்கு தேவரால் அளிக்கப்பட்ட வரத்தைக் கேட்டு அவ்வெம்பெருமானருடைய ஸம்பந்தமாகிற மத3த்தால் க3ர்வங்கொண்டிருக்கும் என் விஷயத்தில் எப்போதும் அருள் பாலிக்கவேணும்.] என்று ஸ்ரீவேதா3ந்ததே3ஶிகரும் ஆசார்ய நிஷ்டை2யை அருளிச்செய்தது இங்கு அநுஸந்தி4க்கத்தக்கது. (மருந்தாம் என்று தம்மனத்தே வைத்துக்கொண்டு வாழ்வார்கள்) இதுவே ஸம்ஸாரத்துக்கு மருந்து என்று தம்முடைய நெஞ்சிலே உறுதியாகக்கொண்டு

264. ஆநந்த3ம் ப்3ரஹ்மணோ வித்3வாந் ந பி3பே4தி
குதஶ்சந । [தை-ஆ-9]

[ப்3ரஹ்மத்தின் ஆநந்தத்தை அறிந்தவன் எதனிடமும் பயப்படமாட்டான்] என்கிறபடியே எதிலும் பயமற்றுவாழ்கிறவர்கள். (பெருந்தாளுடைய பிரான் அடிக்கீழ்) அடையத்தக்க வஸ்துக்களில் மிகச்சிறந்ததாய். இனியபொருள்களிலும் தலைமைபெற்று

---

என்கிற ஶ்லோகம் கைம்முதலுக்கு ஸம்வாத3ம். c "பெருந்

உடையவன் திருவடிகளிலே. (பிரியாதென்றுமிருப்பாரே) சிலரை "கண்டீரே" என்று கேட்க வேண்டாதே, என்று மொக்கத் தங்கள் கண்ணாலேகண்டு நித்யாநுபவம் பண்ணு மிதுவே யாத்ரையாகப்பெறுவர்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்

நாச்சியார்திருமொழி பதினாலாம் திருமொழி வ்யாக்யானம் முற்றிற்று.

நாச்சியார்திருமொழி வ்யாக்யானம் முற்றிற்று.

---

இருப்பதான திருவடியிணையை உடையவனுடைய திருவடிகளில் குற்றேவல் செய்துகொண்டு. "உனக்கே நாம் ஆட்செய்வோம்" (29) என்று திருப்பாவையிலும் அருளினளன்றே. (பிரியாதென்றுமிருப்பாரே) என்னைப்போலே சிலரை 'கண்டீரே' என்று கேட்டுக் காணவேண்டாதபடி, என்றும் கண்ணாலே கண்டு எப்போதும் அனுபவிப்பதையே போதுபோக்காகப் பெறுவர்.

*ஆண்டாள் திருவடிகளே சரணம்*

*பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.*

நாச்சியார்திருமொழி பதினாலாம்திருமொழி வ்யாக்யான விவரணம் நிறைவுற்றது.

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய நாச்சியார்திருமொழி வ்யாக்யான விவரணம் முற்றிற்று.

---

தாள்" என்கையாலே ப்ராப்யாதிக்யமும் போக்யதையும் சொல்லுகிறது.

ஜீயர் திருவடிகளே சரணம்.

நாச்சியார்திருமொழி அரும்பதவுரை முற்றிற்று.

# ப்ரமாண அநுக்ரமணிகை (அட்டவணை)

## ப்ரமாணங்களும், பக்கங்களும்

190, 191, 192, 193-622, 194-626, 195-628; 196,
197-632, 198-640, 199-649, 200-651, 201-670;
202-672; 203, 204-673, 205-679, 206, 207-680,
208-681; 209-683; 210-686; 211, 212-687; 213-689;
214, 215, 216-692; 217-693; 218-694, 219, 220;
221-699, 222-710, 223-726; 224-731; 225-734;
226-739; 227-742; 228-744; 229, 230, 231-247;
232-748, 233, 234-754; 235-757; 236-765; 237-767;
238-768; 239 769, 240, 241-770; 242-779; 243-783;
244-786; 245-791; 246, 247-801; 248, 249-803;
250-807; 251-810; 252-814: 253-815; 254, 255-816;
256-819; 257-825; 258-824; 259-829; 260-830,
261-834; 262-840, 263-843; 264, 265-845.

---

## பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 207 | 2. 3 | யமளார்ஜுநௌ | யமளார்ஜுநயோ: |
| 372 | 1 | (விட்டுப்போனவரி) | அவ:—எட்டாம்பாட்டு. அவ்வழகு இத்தாலே என்கிறாள். |



